***"துன்று பிணியோர், துறந்தோர், அடங்காதோர், கன்றுசின மனத்தோர், கல்லாதவர், இளையோர் ஒன்றும் முறைமை உணராதவர், மகளிர் என்றுமிவர் மந்தணத்தின் எய்தப் பெறாதாரே"***

*என்ற பாரதப்பாடலாலும் அறியலாம். (உத். கிரு. தூ: 52)*

## *6078. 'பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர்,*
## *தண்டல் இல் மந்திரத் தலைவர், சார்க!' எனக்*
## *கொண்டு உடன் இருந்தனன்-கொற்ற ஆணையால்*
## *வண்டொடு காலையும் வரவு மாற்றினான்.*

***கொற்ற ஆணையான்*** *- வெற்றிமிக்க ஆணைச் சக்கரத்தை உடைய இராவணன்;* ***வண்டொடு காலையும்*** *- வண்டுகளையும் காற்றையும் கூட;* ***வரவு மாற்றினான்*** *- ஆலோசனை மண்டபத்துக்குள் வாராதபடி தடை விதித்தான்; (அதன் பின்)* ***பண்டிதர்*** *- கல்வி மேம்பாடுடைய அறிஞர்களும்;* ***பழையவர்*** *- நீண்ட நாள்கள் பழகிய பழமையோரும்;* ***கிழவர்*** *- நெருங்கிய உறவுடைய சுற்றத்தினரும்;* ***பண்பினர்*** *- நல்ல பண்புடைய நட்புடையவர்களும்;* ***தண்டல் இல் மந்திரத் தலைவரும்*** *- தன்னைப் பிரிந்து என்றும் நீங்குதல் இல்லாத நல்ல ஆலோசனைகளைக் கூற வல்ல அமைச்சர்களும்;* ***சார்க என*** *- மந்திராலோசனை மண்டபத்துக்கு வருக என்றுகூறி;* ***கொண்டு உடன் இருந்தனள்*** *- அவர்களை உடன் கொண்டு அமர்ந்தான்.*

*கிழவர் - நெருங்கிய உறவினர். கொற்ற ஆணை - வெற்றி தரும் கட்டளையாம்.*

## *6079. ஆன்று அமை கேள்வியர் எனினும், ஆண்தொழிற்கு*
## *ஏன்றவர் நண்பினர் எனினும், யாரையும்,*
## *வான் துணைச் சுற்றத்து மக்கள் தம்பியர*
## *போன்றவர் அல்லரை, புறத்துப் போக்கினான்.*

***வான் துணைச் சுற்றத்து*** *- தனக்கு நல்ல துணையாக இருக்கும் சுற்றத்தினருள்ளும்;* ***ஆன்றமை கேள்வியரெனினும்*** *- நிறைந்த கல்வி கேள்வியுள்ளவர்கள் என்றாலும்;* ***ஆண் தொழிற்கு ஒன்றவர் நண்பினர் எனினும்*** *- ஆண்மைத் தொழில் செய்வதற்குரிய நட்புடையவர் என்றாலும்;* ***மக்கள், தம்பியர் போன்றவர் அல்லரை*** *- தனது மக்கள் தம்பிமார்கள் போன்றவர் அல்லாதாரை;* ***யாரையும்*** *- வேறு எவரையும்;* ***புறத்துப் போக்கினான்*** *- அந்த மண்டபத்தை விட்டு வெளியே போகச் செய்தான்.*

*இராவணன் என்ற எழுவாய் வரவழைத்துப் பொருள் கொள்ளப்பட்டது. ஆன்று - நிறைந்து அமை - பொருந்திய ஆண்தொழில் -போர்த்தொழில் என்றவர் - ஏற்றவர் (தகுதி உள்ளவர்) 'யாவரையும்' என்றது யாரையும் எனநின்றது விகாரம்.*

***6080. திசைதொறும் நிறுவினன், உலகு சேரினும்***
***பிசை தொழில் மறவரை; பிறிது என் பேசுவ-***
***விசையுறு பறவையும், விலங்கும், வேற்றவும்,***
***அசைதொழில் அஞ்சின, சித்திரத்தினே?***

***உலகு சேரினும்*** *- எல்லா உலகங்களிலும் உள்ளவர் எல்லோரும் எதிர்த்து வந்தாலும்;* ***பிசை தொழில் மறவரை -*** *பிசைந்து ஒழிக்க வல்ல வீரர்களை;* ***திசை தொறும் நிறுவினன்*** *- எல்லாத திசைகளிலும் நிறுத்தி வைத்தான்;* ***விசை உறு பறவையும்*** *- (அதனால்) விரைந்து செல்லும் பறவைகளும்;* ***விலங்கும்*** *- மிருகங்களும்;* ***வேற்றவும்*** *- மற்றவையும்;* ***சித்திரத்தினே*** *- சித்திரத்தில் உள்ளவை போல;* ***அசை தொழில் அஞ்சின*** *- சிறிதே அசைவதற்கும் அஞ்சினவாயின;* ***பிறிது என் பேசுவ*** *- (என்றால்) வீரர்களின் காவல் திறத்தை வேறு என்ன பேசுவதற்கிருக்கிறது.*

*"வேற்றவும்" என்பது பறவையும், விலங்கும் அல்லாத மானிடர் முதலியவர்களை. பேசுவ - பேசுவது என்னும் பொருளுடையது. சித்திரத்தினே - சித்திரத்தைப் போல 'இன்' உவமைப் பொருள் தந்து நின்றது.*

*இராவணன் உரை*

***6081. 'தாழ்ச்சி இங்கு இதனின்மேல் தருவது ஏன், இனி?***
***மாட்சி, ஓர் குரங்கினால் அழிந்த, மாநகர்;***
***ஆட்சியும், அமைவும், என் அரசும் நன்று!' எனா,***
***சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்:***

***மாட்சி ஓர் குரங்கினால் அழிந்த மாநகர்*** *- (இராவணன்) எனது பெருமை ஒரு குரங்கினால் சிறந்த இலங்கை நகர் அழிந்தது என்றால்,* ***இதனின் மேல்*** *- இதை விடவும்;* ***இங்கு தாழ்ச்சி தருவது இனி என்*** *- இங்கு எனக்கு தாழ்வைத்தருவது வேறு என்ன இருக்கிறது?* ***ஆட்சியும் அமைவும் என் அரசும் நன்று*** *- எனது ஆட்சி பலமும் அமைந்துள்ள தகுதியும் எனது அரச பதவியும் நன்றாயிருக்கிறது!* ***எனா, சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்*** *- என்று தனது அமைச்சர்களை நோக்கிக் கூறுவானாயினான்.*

*ஆட்சி - ஆட்சி புரியும் திறம். அமைவு-பொருந்திய சிறப்பு அரசு - அரச பதவியை உணர்த்தும். சூழ்ச்சியின் கிழவர் - ஆலோசனையில் வல்ல அமைச்சர்கள்.*

***6082. 'சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்
கெட்டது, கொடி நகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்கணும்;***

***இட்டது இவ் அரியணை இருந்தது, என் உடல்.***

***குரங்கு சுட்டது*** *- ஒரு குரங்கு சுட்டது;* ***எரி சூறை ஆடிட*** *- நெருப்பு சூறையாட (கொள்ளை கொள்ள);* ***கொடி நகர் கெட்டது*** *- கொடிகள் கட்டப்பட்டுள்ள இலங்கை மாநகரமே அழிந்தது;* ***கிளையும் நண்பரும் பட்டனர்*** *- உறவினர்களும், நண்பர்களும் இறந்தனர்;* ***பரிபவம் எங்கணும் பரந்தது*** *- அவமானம் எங்கும் பரவியது;* ***இட்டது இவ்வரியணை*** *- இங்கு இடப்பட்ட இந்தச் சிங்காதனத்திலே;* ***என் உடல் இருந்தது*** *- (நேர்ந்த தீமையைத் தடுக்க இயலாத) எனது உடல் (பலனின்றி) இருந்தது.*

*எரி - நெருப்பு. சூறையாடல் - கொள்ளை இடுதல். பரிபவம் - அவமானம்.*

***6083. 'ஊறுகின்றன கிணறு உதிரம்; ஒண் நகர்
ஆறுகின்றில தழல்; அகிலும் நாவியும்
கூறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு
நாறுகின்றது; நுகர்ந்திருந்தம், நாம் எலாம்.***

***கிணறு உதிரம் ஊறுகின்றன*** *- இலங்கை மாநகரில் உள்ள கிணறுகளில் நீருக்குப் பதிலாக இரத்தம் ஊறுகின்றன;* ***ஒள் நகர் அழல் ஆறு கின்றில*** *- (இலங்கையில் அனுமன் வைத்த) தீ இன்னும் ஆறவில்லை;* ***அகிலும் நாவியும் கூறும்*** *- அகிலும், கத்தூரியும் கமழ்வது என்று கூறுகின்ற;* ***மங்கையர் நறுங்கூந்தலின்*** *- இலங்கை வாழ் பெண்களின் மணம் மிக்க கூந்தல் யாவும்;* ***சுறு நாறுகின்றது*** *- சுறு நாற்றம் நாறுகின்றது;* ***நாம் எலாம் நுகர்ந்து இருந்தம்*** *- அதனை நாம் எல்லோரும் அனுபவித்து இருந்தோம்.*

*சுறு நாற்றம்-கூந்தலில் நெருப்புப் பிடிப்பதால் எழும் துர்நாற்றம். இருந்தம் - இருந்தோம். தன்மைப்பன்மை வினைமுற்று. ஒள் நகர்- ஒளி பொருந்திய நகரம் (இலங்கை) அகில் -அகிற்புகை. நாவி- கஸ்தூரிக் கலவை.*

***6084. 'மற்று இலது ஆயினும், "மலைந்த வானரம்
இற்று, இலதாகியது" என்னும் வார்த்தையும்
பெற்றிலம்; பிறந்திலம் என்னும் பேர் அலால்,
முற்றுவது என்? இனி, பழியின் மூழ்கினாம்!'***

***மற்று இலது ஆயினும்*** - வேறு எதுவும் நாம் செய்யவில்லை எனினும், ***மலைந்த வானரம்*** - இங்கு வந்து போர் செய்த ஒரு குரங்கு (அனுமன்) ***இற்று இலதாகியது*** - செத்து ஒழிந்து போயிற்று; ***என்னும் வார்த்தையும் பெற்றிலம்*** - எனப் பிறர் கூறும் பேச்சைக் கூடக் கேட்கப் பெற்றிலோம்; ***பிறந்திலம் என்னும் பேர் அலால்*** - பிறந்தும் பிறவாதவரானோம் என்ற பெயரைத்தவிர, ***பழியின் மூழ்கினோம்*** - பழியாகிய கடலிலே மூழ்கி விட்ட நாம்; ***இனி முற்றுவது என்*** - இனி என்ன செய்து முடிக்கப் போகிறோம்.

*ஒரு குரங்கை ஏவி, நமக்குத் தீமை விளைவித்த பகைவர் வாழும் இடம் சென்று வென்று வரவில்லை என்றாலும் என்பான், 'மற்றிலதாயினும்' என்றான். முற்றுதல்- செய்து முடித்தல். மலைதல்- போர் செய்தல்.*

*படைத்தலைவன் கூற்று*

***6085. என்று அவன் இயம்பலும், எழுந்து இறைஞ்சினான்,***
***கன்றிய, கருங் கழல், சேனை காவலன்;***
***'ஒன்று உளது உணர்த்துவது; ஒருங்கு கேள்!' எனா,***
***நின்றனன், நிகழ்த்தினன், புணர்ப்பின் நெஞ்சினான்:***

***என்று அவன் இயம்பலும்*** - என்று இராவணன் கூறவும்; ***கன்றிய*** - இராவணனுடைய பேச்சினால் வருந்திய; ***சேனை காவலன்*** - படைத்தலைவனான பிரகத்தன்; ***புணர்ப்பின் நெஞ்சினான்*** - சூழ்ச்சி மனமுடையவனுமாகிய அவன்; ***எழுந்து இறைஞ்சினான்*** - எழுந்து இராவணனை வணங்கி; ***ஒன்று உளது உணர்த்துவது*** - உனக்குத் தெரிவிப்பது ஒன்று உண்டு; ***ஒருங்கு கேள் எனா*** - அதை முழுவதும் கேட்பாயாக என்று கூறி; ***நின்றனன் நிகழ்த்தினன்*** - நின்று கூறுவானானான்.

*படைத்தலைவன் ஆதலால் முதலில் பேசினான். பிரகத்தன் என்பது அவன் பெயர். கருங்கழல் - வலிய வீரக்கழல். புணர்ப்பு- சூழ்ச்சி. கன்றுதல் -மனம் வருந்துதல். ஒருங்கு-முழுவதும்.*

***6086. ' "வஞ்சனை மனிதரை இயற்றி, வாள் நுதல்,***
***பஞ்சு அன மெல் அடி, மயிலைப் பற்றுதல்***
***அஞ்சினர் தொழில்" என அறிவித்தேன்; அது***
***தஞ்சு என உணர்ந்திநிலை-உணரும் தன்மையோய்!***

***உணரும் தன்மையோய்*** - நன்மை தீமைகளை உணரும் தன்மை உடையவனே! ***மனிதரை வஞ்சனை இயற்றி*** - மானிடர்களான இராம, இலக்குவர்களை வஞ்சித்து;

***வாள் நுதல்*** - - *ஒளி பொருந்திய நெற்றியையும்;* ***பஞ்சு அன மெல்லடி மயிலை*** - *செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்ட மெல்லிய பாதங்களையும் உடைய மயில் போன்ற சீதாபிராட்டியை;* ***பற்றுதல்*** - *கவர்ந்து வருதல்;* ***அஞ்சினர் தொழில் என*** - *அம்மனிதர்களுக்குப் பயந்தவர்கள் செய்யும் காரியம் என்று;* ***அறிவித்தேன்*** - *முன்பே தெரிவித்தேன்;* ***அது தஞ்சு என உணர்ந்த நிலை*** - *அது ஏற்றுக்கொள்ளத்தக்கது என்று நீ உணரவில்லை.*

*உணரும் தன்மை - நல்லதும், கெட்டதும் தெரிந்து கொள்ளும் தன்மை என்பதைக் குறித்தது.*

***6087. 'கரன் முதல் வீரரைக் கொன்ற கள்வரை,***
***விரி குழல் உங்கை மூக்கு அரிந்த வீரரை.***
***பரிபவம் செய்ஞ்ஞரை, படுக்கலாத நீ,***
***"அரசியல் அழிந்தது" என்று அயர்தி போலுமால்.***

***கரன் முதல் வீரரை*** - *கரன், தூடணன், திரிசிரா முதலிய வீரர்களை;* ***கொன்ற கள்வரை*** - *கொன்றழித்த கள்வர்களும்;* ***விரிகுழல் உங்கை*** - *விரிந்த கூந்தலை உடைய நின் தங்கையான சூர்ப்பனகையினது;* ***மூக்கு அரிந்த வீரரை*** - *மூக்கை அறுத்து பங்கப்படுத்திய வீரர்களும் ஆகிய;* ***பரிபவம் செய்ஞ்ஞரை*** - *உன்னை அவமானப்படுத்திய அந்த மானிடர்களை;* ***படுக்கலாத நீ*** - *(கொன்று ஒழித்திருக்க வேண்டும்) இதுவரையும் கொன்றழிக்காத நீ;* ***அரசியல் அழிந்ததென்று*** - *அரசியல் அழிந்து போனதென்று;* ***அயர்தி போலும்*** - *சோர்வடைகிறாய் போலும்.*

*முதல் மூன்று வரிகளில் இராமன் இலக்குவர் செய்த தீமை பெரிதென்பதைக் கூறி, அவர்கள் கொல்லப்பட வேண்டியவர்களே என விளக்கினான். தவ வேடத்துக்குச் சிறிதும் பொருந்தாத செயல் செய்தவரென்பதால் 'கள்வர்' என்றான். 'விரிகுழல் உங்கை' என்பதால் சூர்ப்பனகை ஏற்கனவே கணவனை இழந்தவள் என்பது குறித்தது. அவர்கள் இருக்குமிடம் சென்று அழிக்காமல் அரசியல் அழிந்தது என்று கூறிச் சோர்வடைதல் தகுமோ என்றான்.*

***6088. 'தண்டம் என்று ஒரு பொருட்கு உரிய தக்கரைக்***
***கண்டவர், பொறுப்பரோ, உலகம் காவலர்?***
***வண்டு அமர் அலங்கலாய்! வணங்கி வாழ்வரோ,***

***விண்டவர் உறு வலி அடக்கும் வெம்மையோர்?*** ***வண்டு அமர் அலங்கலாய்*** - *வண்டுகள் தங்கியிருக்கும் மலர் மாலை அணிந்த (வெற்றி மாலையை உணர்த்தும்)* ***தண்டம் என்று ஒரு பொருட்கு*** - *தண்டனை என்ற ஒரு செயலுக்கே;* ***உரிய தக்கரை*** - *உரியவர்களான கள்வர்களை (ராமலக்குவரை)* ***உலகம் காவலர்*** - *நாடாளும் மன்னர்கள்;* ***கண்டவர் பொறுப்பரோ*** - *பார்த்தும் அவர்களைப்*

*பொறுத்துக் கொள்வார்களோ;* ***விண்டவர் உறு வலி*** *- பகைவர்களின் மிகுந்த வலிமையை;* ***அடக்கும் வெம்மையோர்*** *- அடக்கும் வலிமை உடையவர்கள்;* ***வணங்கி வாழ்வரோ*** *- அப்பகைவரை வணங்கி வாழ்வார்களோ? (வாழமாட்டார்கள்).*

*தண்டம் - தண்டனை. தக்கர்-கள்வர். வெம்மை-ஆற்றல் வலிமையுமாம் என்பது கருத்து.*

***6089. 'செற்றநர், எதிர் எழும் தேவர், தானவர்,***
***கொற்றமும் வீரமும் வலியும் கூட்டு அற,***
***முற்றி மூன்று உலகுக்கும் முதல்வன் ஆயது.***
***வெற்றியோ? பொறைகொலோ? விளம்ப***

***வேண்டுமால்.*** ***செற்றனர் எதிர் எழும்*** *- சினம் கொண்டவர்களாக எதிர்த்துப் போருக்கு எழுந்து வரும்;* ***தேவர், தானவர்*** *- தேவர்களையும், அசுரர்களையும்;* ***கொற்றமும் வீரமும் வலியும்*** *- அவர்களின் வெற்றியும், வீரமும், வலிமையும்;* ***கூட்டு அற முற்றி*** *- ஒரு சேர அழியச் செய்து முடித்து;* ***மூன்று உலகுக்கும்*** *- விண்ணுலகம், மண்ணுலகம், கீழுலகம் ஆகிய மூன்று உலகங்களுக்கும்;* ***முதல்வன் ஆயது*** *- நீயே (ஒப்பற்ற) தலைவனாக ஆனது;* ***வெற்றியோ*** *- பகைவர் மேல் படை எடுத்துச் சென்ற வெற்றியினாலா?* ***பொறை கொலோ*** *- பொறுத்திருந்ததாலா?* ***விளம்ப வேண்டும்*** *- நீயே கூறுவாயாக.*

*செற்ற-சினந்த. தானவர்-தனு வழி வந்த அசுரர்கள். முற்றுதல்-முடித்தல்.*

***6090. 'விலங்கினர் உயிர் கெட விலக்கி, மீள்கலாது,***
***இலங்கையின் இனிது இருந்து, இன்பம்***
***துய்த்துமேல்,-***
***குலம் கெழு காவல!- குரங்கின் தங்குமோ?***
***உலங்கும் நம்மேல் வரின், ஒழிக்கற்பாலதோ?***

***குலம் கெழு காவல!*** *- நமது குலம் விளங்கத் தோன்றிய அரசே!* ***விலங்கினர் உயிர் கெட விலக்கி*** *- மாறுபட்ட பகைவர் பால் சென்று உயிர் அழியக் கொன்று நீக்கி;* ***மீள் கலாது*** *- திரும்பி வருதலைச் செய்யாமல்;* ***இலங்கையில் இனிதிருந்து*** *- இலங்கை மாநகரிலே இனிது வீற்றிருந்து;* ***இன்பம் துய்த்து மேல்*** *- இன்பத்தை நுகர்ந்திருப்போமானால்;* ***குரங்கின் தங்குமோ*** *-குரங்குகளின் அளவில் நிற்குமோ?* ***உலங்கும் நம் மேல்வரின்*** *- கொசுக்களும் நம்மேல் படை எடுத்து வருமாயின்,* ***ஒழிக்கற் பாலதோ*** *- அதனை விலக்கி வெற்றி பெரும்பான்மை நமதோ?*

*விலங்குதல் - மாறுபடுதல், விலக்கி - நீக்கி. உலங்கு - கொசு.*

**6091. 'போயின குரங்கினைத் தொடர்ந்து போய், இவண்**
**ஏயினர் உயிர் குடித்து, எவ்வம் தீர்கிலம்;**
**வாயினும் மனத்தினும் வெறுத்து வாழ்துமேல்.**

**ஓயும், நம் வலி' என, உணரக் கூறினான்.**

**போயின குரங்கினைத் தொடர்ந்து போய்** - இலங்கை பாழாகச் செய்து சென்ற குரங்கைத் தொடர்ந்து சென்று; **இவண் ஏயினர் உயிர் குடித்து** - இங்கு அந்தக் குரங்கை ஏவிய மனிதர்களின் உயிரைப் பருகி; **எவ்வம் தீர்கிலம்** - நமக்கு நேர்ந்த பழியைப் போக்கோமாய்; **வாயினும் மனத்தினும்** - சொல்லிலும் நினைப்பிலும்; **வெறுத்து வாழ்து மேல்** - வெறுப்பைக் காட்டி வாழ்வோமாயின்; **நம் வலி ஓயும்** - நமது வலிமை குறைவாகும்; **என உணரக் கூறினான்** - என்று, உணருமாறு கூறினான்.

எவ்வம்-பழி வாய் சொல்லையும், மனம் நினைப்பையும் உணர்த்தும். ஓய்தல்-குறைதல்.

*மகோதரன் பேசுதல்*

**6092. மற்று அவன் பின்னுற, மகோதரப் பெயர்க்**
**கல் தடந் தோளினான், எரியும் கண்ணினால்**
**முற்றுற நோக்கினான், 'முடிவும் அன்னதால்;**

**கொற்றவ! கேள்' என, இனைய கூறினான்:**

**மற்று அவன் பின் உற** - படைத்தலைவன் இவ்வாறு கூறியபின்பு; **மகோதரப் பெயர்** - மகோதரன் என்னும் பெயர் உடையவனும்; **கல் தடம் தோளினன்** - மலை போன்ற பெரிய தோள்களை உடையவனும்; **எரியும் கண்ணினால்** - கோலத்தீ மூண்டெழும் கண்களை உடையவனும் ஆகிய அமைச்சன் எழுந்து; **முற்றுற நோக்கினான்** - நடந்த செயல் முழுதையும் ஆய்ந்து; **கொற்றவ** -அரசே; **முடிவும் அன்னதால்** - படைத் தலைவன் கூறியதே முடிந்த முடிபு எனினும்; **கேள்** - நான் உரைப்பதையும் கேட்பாயாக; **என இனைய கூறினான்** - என்று பின்வருமாறு கூறலானான்.

மற்று - வினை மாற்றுப் பொருளில் வந்த அசை. 'அவன்' என்று படைத்தலைவனை கல்-மலை, முற்றுற-முற்றும் உற.

**6093. 'தேவரும் அடங்கினர்; இயக்கர் சிந்தினர்;**
**தா வரும் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்;**
**யாவரும், "இறைவர்" என்று இறைஞ்சும் மேன்மையர்**
**மூவரும் ஒதுங்கினர்-உனக்கு, மொய்ம்பினோய்!**

***மொய்ம்பினோய் உனக்கு*** - *வலிமை மிக்கவனே! உனக்கு;* ***தேவரும் அடங்கினர்*** - *தேவர்களும் அஞ்சி அடங்கி விட்டனர்;* ***இயக்கர் சிந்தினர்*** - *இயக்கர்கள் வலிமை இழந்து விட்டார்கள்;* ***தாவரும் தானவர்*** - *கேடில்லாத அசுரர்களும்;* ***தருக்குத் தாழ்ந்தனர்*** - *ஆணவம் அடங்கினர்;* ***யாவரும் இறைவர் என்று இறைஞ்சும்*** - *எல்லோரும் 'கடவுளர்' என்று வணங்கும்;* ***மேன்மையர் மூவரும்*** - *பெருமை மிக்க அரி, அரன், அயன் என்னும் மும்மூர்த்திகளும்;* ***உனக்கு ஒதுங்கினர்*** - *உன்னை எதிர்த்து நிற்க இயலாது விலகிப் போனார்கள்.*

*தேவரும், இயக்கரும், தானவரும் இராவணனது திக்கு விஜயத்தின் போது தோற்று அடங்கி விட்ட செய்தி உத்தர காண்டத்தில் கூறப்பட்டுள்ளது. தருக்கு, மொய்ம்பு-வலிமை.*

### *6094. 'ஏற்றம் என் பிறிது, இனி-எவர்க்கும் இன் உயிர்*
### *மாற்றுறும் முறைமை சால் வலியின் மாண்பு அமை*
### *கூற்றுவன், "தன் உயிர் கொள்ளும் கூற்று" எனத்*
### *தோற்று, நின் ஏவல் தன் தலையில் சூடுமால்?*

***எவர்க்கும் இன்னுயிர் மாற்றுறும்*** - *எத்தகைய வலியவர்களின் இனிய உயிரையும் மாற்றி அழிக்கும்;* ***முறைமை சால் வலியின் மாண்பமை கூற்றுவன்*** - *இயல்பு வாய்ந்த வலிமையின் பெருமையமைந்த எமனும்;* ***தன்னுயிர் கொள்ளும்*** - *தனது உயிரைக் கவரும்;* ***கூற்று எனத் தோற்று*** - *எமன் என்று தோல்வியுற்று;* ***நின் ஏவல் தன் தலையில் சூடும்*** - *உனது கட்டளையைத் தன் தலைமேல் தாங்கிச் செய்வான்;* ***என்றால் இனி பிறிது ஏற்றம் என்*** - *இனி இதை விடவும் வேறு பெருமை என்ன இருக்கிறது?*

### *6095. 'வெள்ளிஅம் கிரியினை விடையின் பாகனோடு*
### *அள்ளி, விண் தொட எடுத்து, ஆர்த்த ஆற்றலாய்!*
### *சுள்ளியில் இருந்து உறை குரங்கின் தோள் வலிக்கு*
### *எள்ளுதி போலும், நின் புயத்தை, எம்மொடும்?*

***வெள்ளி அம்கிரியினை*** - *பனியால் வெண்மை நிறத்தை உடைய அழகிய கைலாய மலையை;* ***விடையின் பாகனோடு அள்ளி*** - *அம்மலையில் வாழும் காளை வாகனத்தை உடைய சிவபெருமானுடன் அள்ளி;* ***விண் தொட எடுத்து*** - *விண்ணைத் தொடும்படி தூக்கி நிறுத்தி;* ***ஆர்த்த ஆற்றலாய்*** - *ஆர்ப்பரித்த ஆற்றல் மிக்கவனே;* ***சுள்ளியில் இருந்து உறை*** - *மரத்தின் சுள்ளிகளிலே வசிக்கும்;* ***குரங்கின் தோள் வலிக்கு*** - *ஒரு குரங்கின் தோளாற்றலுக்கு;* ***நின்புயத்தை எம்மொடும்*** - *உனது தோள்*

*வலிமையை எங்களது ஆற்றலுடன் சேர்த்து;* ***எள்ளுதி போலும்*** *- இகழ்ந்து பேசுவாய் போலும்.*

*வெள்ளியங்கிரி - கைலாயமலை. அள்ளுதல் - கையில் எடுத்தல். இருந்து உறை - தங்கி வாழும். 'எள்ளுதி போலும்' என்ற இடத்தில் 'போல்' என்பது உரையசை. ஒப்பில் போலி என்பர்.*

***6096. 'மண்ணினும், வானினும், மற்றும் முற்றும் நின***
***கண்ணினும் நீங்கினர் யாவர், கண்டவர்?***
***நண்ண அரும் வலத்தினர் யாவர், நாயக!***
***எண்ணிலர் இறந்தவர் எண்ணில் ஆவரோ?***

***நாயக*** *- எமது தலைவனே!* ***மண்ணினும் வானினும்*** *- மண்ணுலகிலும், விண்ணுலகிலும்;* ***மற்றும் முற்றும்*** *- மற்றும் வேறுலகங்கள் முழுவதிலும்;* ***நின் கண்ணினும் நீங்கினார் யாவர் கண்டவர்*** *- உனது கண்ணுக்குப் புலப்படாதிருப்பவரைக் கண்டவர்கள் யார்?* ***நண்ணரும் வலத்தினர் யாவர்?*** *- அவ்வாறு கண்டவருள்ளும் உன்னால் நெருங்கமுடியாத வலிமை உடையவர் யாருண்டு;* ***எண்ணிலர்*** *- உன்னை மதித்து எண்ணிப் பார்க்காதவர்களாய்;* ***இறந்தவர்*** *- போரிட்டு முடிந்தவர்கள்;* ***எண்ணில் ஆவரோ?*** *- இத்தனை பேர் என எண்ண முடிந்தவரோ?*

*'கண்' என்பதைக் கண்ணோட்டம் எனக் கொண்டு, மண்ணிலும், விண்ணிலும் மற்றும் முற்றும் வாழ்பவர் உனது கண்ணோட்டத்தால் வாழ்பவரே எனவும் பொருள் கூறலாம். எண்ணல்- மதித்தல். வலம்- வலிமை.*

***6097. 'இடுக்கு இவண் இயம்புவது இல்லை; ஈண்டு எனை***
***விடுக்குவையாம் எனின், குரங்கை வேர்அறுத்து,***
***ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு, உன் பகை***
***முடிக்குவென் யான்' என முடியக் கூறினான்.***

***இடுக்கு இவண் இயம்புவதில்லை*** *- இங்கே சொல்லத் தகுந்த துன்பம் எதுவும் இல்லை;* ***ஈண்டு எனை விடுக்குவை யாம் எனின்*** *- இப்போது என்னைப் போருக்குச் செல்ல விடுவாயானால்;* ***குரங்கை வேர் அறுத்து*** *- குரங்கினத்தையே வேருடன் அழித்து;* ***ஒடுக்கரு மனிதரை உயிர் உண்டு*** *- அடக்குவதற்கரிய அம்மானிடரை உயிர் குடித்து;* ***உன் பகை முடிக்குவன் யான் என*** *- உனது பகையை முடிப்பேன் யானே;* ***என முடியக் கூறினான்*** *- என்று முடிவாகக் கூற வேண்டியவற்றைக் கூறினான்.*

*இடுக்கு - துன்பம் ஒடுக்க அரும் - அடக்க அரிய மனிதர். இராம, இலக்குவர். ஈண்டு-இப்போது.*

*வச்சிரதந்தன் பேச்சு*

***6098. இச் சிரத்தவன் உரைத்து இறுக்கும் ஏல்வையின்,***
***வச்சிரத்துஎயிற்றவன் வல்லை கூறினான்.***
***அச் சிரத்தைக்கு ஒரு பொருள் இன்று, ஆயினும்,***
***பச்சிரத்தம் பொழி பருதிக் கண்ணினான்.***

***இச்சிரத்தவன்*** *- இந்தத் தலைமை பொருந்திய மகோதரன்;* ***உரைத்து இறுக்கும் ஏல்வையின்*** *- இவ்வாறு கூறி முடிக்கும் சமயத்திலே;* ***பச்சிரத்தம் பொழி*** *- பச்சை இரத்தம் பொழிகின்ற;* ***பருதி கண்ணினான்*** *- சூரியனைப் போன்ற கண்களை உடையவனாகிய;* ***வச்சிரத்து எயிற்றவன்*** *- வச்சிரதந்தன் என்பவன்;* ***அச்சிரத்தைக்கு*** *- அவன் கூறும் அந்த உறுதி*

*மொழிகளுக்கு;* ***ஒரு பொருள் இன்று ஆயிலும்*** *- ஒரு பயனும் இல்லை என்றாலும்;* ***வல்லை கூறினான்*** *- விரைந்து கூறுவானானான்.*

*சிரத்தவன் - தலைமை வாய்ந்தவன் என்றது மகோதரன். ஏல்வை-சமயம். சிரத்தை-உறுதி இங்கு உறுதி மொழியை உணர்த்தும். பச்சைரத்தம் - பச்சிரத்தம் எனத் திரிந்தது. வச்சிரம் போன்ற பற்களை உடையவன் என்பதால் வச்சிரதந்தன் எனப்பட்டான்.*

***6099. ' "போய் இனி, மனிசரைக் குரங்கைப் பூமியில்***
***தேயுமின், கைகளால்; தின்மின்" என்று எமை***
***ஏயினை இருக்குவது அன்றி, என், இனி***

***ஆயும் இது? எம்வயின் அயிர்ப்பு உண்டாம்கொலோ?***

***இனி, போய்*** *- இனிச் சென்று;* ***மனிசரை, குரங்கை*** *- அந்த மனிதர்களையும், குரங்குகளையும்;* ***பூமியில் கைகளால் தேயுமின்*** *- நிலத்தோடு சேர்த்து கைகளால் தேய்த்துக் கொல்லுங்கள்;* ***தின் மின்*** *- அவர் உடல்களைத் தின்னுங்கள்;* ***என்று*** *- என்றுகூறி;* ***எமை ஏயினை இருக்குவதன்றி*** *- எங்களை ஏவி விட்டு, வாளா இருப்பதல்லாது;* ***என் இனி ஆயும் இது*** *- என்ன ஆராய்ச்சி வேண்டியுள்ளது?* ***எம் வயின்*** *- எங்கள் மேல்;* ***அயிர்ப்பு உண்டாம் கொலோ*** *- ஏதேனும் சந்தேகம் உண்டோ?*

*போயினி என்பதை இனிப் போய் என இயைக்க. இப்போதே ஏயினை-ஏவி முற்றெச்சம். இருக்குவது - இருப்பது இனி-இனி மேலாவது என்பதும் பொருந்தும்.*

***6100. 'எவ் உலகத்தும் நின் ஏவல் கேட்கிலாத்***
***தெவ்வினை அறுத்து, உனக்கு அடிமை செய்த யான்***
***தவ்வின பணி உளது ஆகத்தான்கொலோ.***

***இவ் வினை என்வயின் ஈகலாது?' என்றான்.***

*__எவ்வுலகத்தும்__ - எந்த உலகத்தில் வாழ்பவராயினும்; __நின் ஏவல் கேட்கிலா__ - உனது கட்டளைப்படி கேட்டு நடவாத; __தெவ்வினை அறுத்து__ - பகைவர்களை அடியோடு அழித்து; உனக்கு __அடிமை செய்த யான்__ - இது வரை உனது அடியவனாகப் பணி செய்த நான்; __தவ்வின பணி உளது ஆகத்தான் கொலோ__ - தவறி விட்ட பணி இருப்பதென்பதாலோ; __இவ்வினை -__ இந்தப் போர் புரியும் செயலை; __என் வயின் ஈகலாது__ - என்னிடம் தராமல் விட்டது; என்றான்.*

*தவ்வுதல்-தவறுதல். ஈகலாதது என்பது ஈகலாது என்று தொகுக்கப்பட்டது விகாரம். 'இவ்வினை' என்றது இராம, இலக்குவர்களையும், வானர சேனையையும் அழித்து வர அனுப்பும் பணி.*

*துன்முகன் உரை*

***6101. 'நில், நில்' என்று, அவன்தனை விலக்கி, 'நீ இவை***
***என் முனும் எளியர்போல் இருத்தியோ?' எனா,***
***மன் முகம் நோக்கினன், வணங்கி, வன்மையால்,***
***துன்முகன் என்பவன், இனைய சொல்லினான்:***

*__துன்முகன் என்பவன் நில் நில் என்று அவன்தனை விலக்கி__ - துன்முகன், நில் நில் என்று அந்த வச்சிரதந்தனை விலக்கி; __நீ இவை என்முனும் எளியர் போல் இருத்தியோ__ - (இராவணனை வணங்கி) நீ இத்தகைய சொற்களை எனக்கு முன்னால் எளியவரைப் போலக் கூறி இருக்கப் போமோ? __எனா, மன்முகம் நோக்கினன் வணங்கி__ - என்று கூறி, அரசனான அவனை வணங்கி, நோக்கி; __வன்மையால்__ - தனது வலிமை புலப்பட (சினம் கொண்டு), __இனைய சொல்லினான்__ - இவ்விதமாகப் பேசலானான்.*

*அவன்-வச்சிரதந்தன், மன் - அரசன் (இராவணன்) என்றது பின்னர் கூறுவனவற்றை. 'அடியவர் முன் தலைவர் குறை புலப்பட பேசுதல் கூடாது' என்பதால் 'என்முனும் எளியர் போல் இருத்தியோ' என்றான்.*

***6102. 'திக்கயம் வலி இல; தேவர் மெல்லியர்;***

***முக்கணான் கயிலையும் முரண் இன்றாயது;***
***மக்களும் குரங்குமே வலியர் ஆம் எனின்,***
***அக்கட, இராவணற்கு அமைந்த ஆற்றலே!***

***திக்கயம் வலியில*** - *(இராவணனுக்கு) திக்கு யானைகள் வலிமை இல்லாதவாயின;* ***தேவர் மெல்லியர்*** - *தேவர்களும் தோற்று மெலிந்தனர்;* ***முக்கணான் கயிலையும்*** - *முக்கண் மூர்த்தியான சிவபிரான் வாழும் கைலாயமலையும்;* ***முரண் இன்று ஆயது*** - *வலிமை இல்லாதது ஆயிற்று;* ***மக்களும் குரங்குமே*** - *மனிதர்களும் குரங்குகளுமே;* ***வலியர் ஆம் எனின்*** - *வலிமை உடையவர்கள் என்றால்;* ***இராவணனுக்கு அமைந்த ஆற்றல்*** - *இலங்காதிபனான இராவணனுக்கு அமைந்த வலிமை;* ***அக்கட*** - *ஆச்சரியப்படத்தக்க தொன்றே.*

*திக்கு + கயம் - திக்கயம். முரண் - வலிமை. 'அக்கட' என்பது அதிசயம் என்ற பொருள் கொண்ட திசைச்சொல் தெலுங்குச் சொல் என்பர்.*

***6103. 'பொலிவது, பொதுவுற எண்ணும் புன் தொழில்***
***மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்***
***வலியினர்எனில், அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ-***
***ஒலி கழல் ஒருவ !-நம் உயிருக்கு அன்பினால்?***

***ஒலிகழல் ஒருவ*** - *ஒலிக்கின்ற கழல் பூண்ட ஒப்பற்ற தலைவனே;* ***பெலிவறு*** - *எதிர்காலத்தில் நிகழப்போகும் காரியங்களை;* ***பொது உற*** - *நடுவு நிலை பொருந்த;* ***என்னும் புண்தொழில்*** *-ஆராயும் இழிந்த செயல்;* ***மெலியவர் கடன்*** - *வலிமையில்லாதவர்களின் கடமையாகும்;* ***நமக்கு இறுதி வேண்டுவோர்*** - *நம் முடிவை விரும்பும் பகைவர்;* ***வலியினர் எனின்*** - *வலிமை உடையவர் என்றால்;* ***நம் உயிருக்கு அன்பினால்*** - *நமது உயிர்மேல் வைத்த அன்பினால்;* ***அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ*** - *அவர்களுக்கு எதிர்படாமல் ஒதுங்கி வாழ்வோமோ?*

*ஒருவன்-ஒப்பற்றவன் (இராவணன்) பொலிவது-எதிர்கால நிகழ்ச்சி. பொது உற-நடு நிலை பொருந்த.*

***6104. 'கண்ணிய மந்திரக் கருமம் காவல்!-***
***மண் இயல் மனிசரும், குரங்கும், மற்றவும்,***
***உண்ணிய அமைந்தன; உணவுக்கு உட்குமேல்,***
***திண்ணிய அரக்கரின் தீரர் யாவரே?***

***காவல*** - *அசுரர் குல காவலனே!* ***கண்ணிய மந்திரக் கருமம்*** - *நாம் கருதிய மந்திராலோசனை ஆகிய காரியம்;* ***மண்ணியல் மனிசரும*** ் - *நிலத்திலே நடந்து திரியும் இயல்புடைய மனிதர்களும்;* ***குரங்கும்*** - *குரங்குகளும்;* *மற்றவும்* - *பிறவற்றையும் பற்றியதாகும்;* ***உண்ணிய அமைந்த*** - *அவையெல்லாம் நாம் தின்பதற்கு அமைந்தவையாகும்;* ***உணவுக்கு உட்குமேல்*** - *உணவுப்பொருளுக்கு நாம் பயந்தோம் என்றால்;* ***திண்ணிய அரக்கரில்*** - *வலிமை மிக்க அரக்கராகிய நம்மைவிட;* ***தீரர் யாவரே*** - *வீரர்கள் யாருள்ளார்?*

*கண்ணுதல்-கருதுதல். உட்குதல்-அஞ்சுதல் அரக்கர்களில் தீரர் யாவரே என்றது இகழ்ச்சி குறிப்பாம்.*

***6105.*** ் ***'எரி உற மடுப்பதும், எதிர்ந்துளோர் படப்***
***பொரு தொழில் யாவையும் புரிந்து, போவதும்***
***வருவதும், குரங்கு; நம் வாழ்க்கை ஊர் கடந்து,***
***அரிதுகொல், இராக்கதர்க்கு ஆழி நீந்துதல்?***

***வருவதும்*** - *நாம் வாழும் ஊராகிய இலங்கை மாநகருக்கு வருவதும்;* ***எரி உற மடுப்பதும்*** - *ஊருக்குத் தீ இடுவதும்;* ***எதிர்ந்துளோர் பட*** - *எதிர்த்தவர் இறக்கும்படி;* ***பொருதொழில்*** - *போர் புரியும் தொழில்கள்;* ***யாவையும் புரிந்து*** - *எல்லாவற்றையும் செய்து;* ***போவதும்*** - *ஊரைக் கடந்து தப்பிப் போவதும்;* ***குரங்கு*** - *ஒரு குரங்கு செய்யும் செயலாயிற்று;* ***கடந்து நம் வாழ்க்கை ஊர்*** - *நாம் வாழும் ஊரைக்கடந்து;* ***இராக்கதர்க்கு*** - *அரக்கர்களாகிய நமக்கு;* ***ஆழி நீந்துதல்*** - *கடலை நீந்திக் கடப்பதென்பது;* ***அரிது கொல்*** - *செய்ய இயலாத அரிய செயலோ?*

***6106. 'வந்து, நம் இருக்கையும், அரணும், வன்மையும்,***
***வெந் தொழில் தானையின் விரிவும், வீரமும்,***
***சிந்தையின் உணர்பவர் யாவரே சிலர்,***
***உய்ந்து தம் உயிர்கொடு இவ் உலகத்துள் உளார்?***

***வந்து நம் இருக்கையும்*** - *இலங்கைக்கு வந்து நாம் வாழும் நமது இருப்பிடங்களையும்;* ***அரணும்*** - *இலங்கைக்குப் பாதுகாப்பான அரண்களையும்;* ***வன்மையும்*** - *நமது வலிமையையும்;* ***வெந்தொழில்*** - *கொடிய போர்த்தொழில் வல்ல;* ***தானையின் விரிவும்*** - *சேனையின் பரப்பையும்;* ***வீரமும்*** - *அதன் ஆற்றலையும்;* ***சிந்தையின் உணர்பவர்*** - *மனத்தினால் அறிய வல்லவர்கள்;* ***உய்ந்து தம் உயிர் கொடு*** - *நம்மிடம் பகைத்து பிழைத்து உயிருடன் சென்றவர்கள்;* ***இவ்வுலகத்துள் உளார்*** - *இவ்வுலகத்திலே இருப்பவர்கள்;* ***யாவரே சிலர்*** - *சிலரேனும் யார் இருக்கிறார்கள்?*

*வந்து - இலங்கைக்கு வந்து. இருக்கை - இருப்பிடம் வெம்தொழில்- கொடிய போர்த்தொழில். கொண்டு என்பது கொடு என விகாரமாயிற்று.*

## *6107. 'ஒல்வது நினையினும், உறுதி ஓரினும், வெல்வது விரும்பினும், வினையம் வேண்டினும், செல்வது அங்கு; அவருழைச் சென்று, தீர்ந்து அறக் கொல்வது கருமம்' என்று உணரக் கூறினான்.*

***ஒல்வது நினையினும்*** *- பொருந்தும் விதத்தை நினைத்துப் பார்த்தாலும்;* ***உறுதி ஓரினும்*** *- நமக்கு உறுதி பயப்பனவற்றை ஆராயினும்;* ***வெல்வது விரும்பினும்*** *- நாம் வெற்றியடைய விரும்பினாலும்;* ***வினையம் வேண்டிலும்*** *- அந்த வெற்றிக்குரிய வினையத்தை வேண்டினாலும்;* ***செல்வது அங்கு*** *- செல்ல வேண்டியது அங்கேதான்;* ***அவர் உழை சென்று*** *- அந்தப் பகைவர் இருக்குமிடம் சென்று;* ***தீர்ந்து அறக் கொல்வது கருமம்*** *- அவர்கள் இறந்து அழியும்படி கொல்வதே செய்யவேண்டிய செயலாகும்;* ***என்று உணரக் கூறினான்*** *- என்று இராவணன் உணரும்படி கூறினான்.*

*ஒல்வது-பொருந்துவது. உறுதி-நன்மை. வினையம்-சூழ்ச்சித்திறம். கருமம்-செய்யத்தக்க காரியம்.*

*மகா பார்சுவன் கூற்று*

## *6108. காவலன் கண் எதிர், அவனைக் கை கவித்து, 'யாவது உண்டு, இனி நமக்கு?' என்னச் சொல்லினான்; 'கோவமும் வன்மையும் குரங்குக்கே' எனா,- மாபெரும்பக்கன் என்று ஒருவன் வன்மையான்.*

***மாபெரும் பக்கன் என்று ஒருவன்*** *- மகா பார்சுவன் என்னும் பெயர் கொண்ட ஒருவன்;* ***வன்மையான்*** *- ஒப்பற்ற வலிமை மிக்கவன்;* ***காவலன் கண் எதிர்*** *- அரசனான இராவணன் கண் எதிரிலேயே;* ***அவனை கை கவித்து*** *- துன்முகனை நீ கூறியது போதுமெனக் கை கவித்து;* ***யாவது உண்டு இனி நமக்கு*** *- (ஒரு குரங்கு செய்த காரியத்துக்கு வருந்தி ஆலோசனை செய்வதென்றால்) இனி நமக்கு என்ன பெருமை இருக்கும்?* ***கோவமும் வன்மையும் குரங்குக்கே*** *- கோவமும் வலிமையும் குரங்குக்கே உரியதோ? நமக்கில்லையோ?* ***என்னச் சொல்லினான்*** *- எனவும் கூறலானான்.*

*மகாபார்சுவன் என வான்மீகி கூறியதை 'மாபெரும் பக்கன்' எனச் செய்துள்ளார் கம்பர். அவன் - துன்முகன். கைகவித்தல் - கை அமர்த்தல், கோவம்-கோபம் எதுகைக்கு ஏற்ப கோவம் என்றாயிற்று.*

***6109. 'முந்தினர், முரண் இலர் சிலவர், மொய் அமர்***
***நந்தினர்தம்மொடு நனி நடந்ததோ?***
***வந்து ஒரு குரங்கு இடு தீயின் வன்மையால்,***
***வெந்ததோ, இலங்கையோடு அரக்கர் வெம்மையும்?***

***முந்தினர் முரண் இலர் சிலவர்*** - *போருக்கு முன்னால் சென்ற சிலர் வலிமை இல்லாதவராதலின்;* ***மொய் அமர் நந்தினர்*** - *நெருங்கிய போரிலே கேடடைந்தனர்;* ***தம்மொடு நனி நடந்ததோ*** - *அவர்களோடு அரக்கர் வலிமை நீங்கியதாகுமோ;* ***வந்து ஒரு குரங்கு*** - *ஒரு குரங்கு இங்கு வந்து;* ***இடுதீயின் வன்மையால்*** - *நகருக்கு வைத்த தீயின் கொடுமையால்;* ***இலங்கையோடு*** - *இலங்கை மாநகரத்துடனே;* ***அரக்கர் வெம்மையும் வெந்ததோ*** - *அரக்கர்களின் வலிமையும் வெந்து ஒழிந்ததோ?*

*நந்தல்-கேடுறுதல்.*

***6110. 'மானுடர் ஏவுவார்; குரங்கு வந்து, இவ் ஊர்-***
***தான் எரி மடுப்பது; நிருதர் தானையே,***
***ஆனவர் அது குறித்து அழுங்குவார்எனின்,***
***மேல் நிகழ்தக்கன விளம்ப வேண்டுமோ?***

***மானுடர் ஏவுவார்*** - *மானிடர்கள் குரங்கை ஏவி விடுவார்கள்;* ***குரங்கு வந்து*** - *அந்தக் குரங்கு இங்கு வந்து;* ***இவ்வூர்தான் எரி மடுப்பது*** - *இந்த ஊருக்குத் தான் தீயை வைப்பது;* ***நிருதர் தானையே ஆனவர்*** - *அதற்கு அசுரப்படையாய் இருப்பவர்கள்;* ***அது குறித்து அழுங்குவார் எனின்*** - *அதைப் பற்றி நினைத்து வருந்துபவர் என்றால்;* ***மேல் நிகழ்தக்கன*** - *இனிமேல் நிகழத்தக்கதா யிருப்பதை;* ***விளம்ப வேண்டுமோ*** - *நான் விரித்துக் கூற வேண்டுமோ?*

***6111. 'நின்று நின்று, இவை சில விளம்ப நேர்கிலென்;***
***நன்று இனி நரரொடு குரங்கை நாம் அறக்***
***கொன்று தின்றல்லது, ஓர் எண்ணம் கூடுமோ?'***
***என்றனன்-இகல் குறித்து எரியும் கண்ணினான்.***

***இகல் குறித்து எரியும் கண்ணினான்*** - *பகைவரை நினைத்து, கோபத்தால் நெருப்பென ஒளிரும் கண்ணினனான மாபக்கன்;* ***நின்று நின்று இவை சில நேர்கிலன்*** - *ஒருவர் பின் ஒருவராக நின்று இத்தகைய பேச்சுக்களைப் பேச நான் உடன்படேன்;* ***இனி நரரொடு குரங்கை*** - *இனி மனிதர்களுடன் அக்குரங்கை;* ***நாம் அறக்கொன்று*** - *நாம் சென்று அடியோடு கொன்றழித்து;* ***நன்று தின்று அல்லது*** - *நன்றாக தின்று*

*அல்லது;* ***ஓர் எண்ணம் கூடுமோ என்றனன்*** *- இதற்கு மாறுபட்ட ஒரு எண்ணம் தகுமோ? தகாது என்றான்.*

*குறித்தல் - நினைத்தல், 'நாம்' என்பது நாமம் என்பதன் விகாரம் என்று கொண்டு, 'நாமற' என்பதற்கு . குரங்குகள் என்ற பெயரே இல்லாமல் அழித்து என்றும் பொருள் கூறுவர்.*

*பிசாசன் முதலியோர் கூற்று*

***6112. 'திசாதிசை போதும் நாம், அரசன் செய் வினை***
***உசாவினன், உட்கினன்; ஒழிதும் வாழ்வு' என்றான்-***
***பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற பெய் கழல்***
***நிசாசரன், உருப் புணர் நெருப்பின் நீர்மையான்.***

***பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற*** *- பிசாசன் என்னும் பெயர் உடைய;* ***பெய்கழல் நிசாசரன்*** *- வீரக்கழல் அணிந்த அரக்கன்;* ***உருப்புணர் நெருப்பின் நீர்மையான்*** *- வடிவத்தில் அசுரன் எனினும் நெருப்பைப் போன்ற தன்மை உடையவன்;* ***அரசன் செய்வினை உசாவினன்*** *- அரசன் என்ன செய்யப் போகிறான் என்பதைக் கேட்டான்;* ***உட்கினன்*** *- ஒரு குரங்கால் இலங்கை அழிந்ததை எண்ணி நாணினான்;* ***நாம் திசை திசை போதும்*** *- நாம் எங்காவது வேறு வேறு திசைகளுக்குச் செல்வோம்;* ***ஒழிதும் வாழ்வு என்றான்*** *- சென்று நமது வாழ்வைப் போக்கிக் கொள்வோம் என்றான்.*

*பிசாசன்-நெருப்பின் நீர்மையான் - அரசன் செய்வினை உசாவினான். உட்கினன் திசா திசை போதும் வாழ்வு ஒழிதும் என்றான் என இயையும். இரவில் இயங்குவோர் என்ற கருத்தில் அரக்கரை நிசாசரர் என்பர்.*

***6113. 'ஆரியன் தன்மை ஈதுஆயின், ஆய்வுறு***
***காரியம் ஈதுஎனின், கண்ட ஆற்றினால்,***
***சீரியர் மனிதரே; சிறியம் யாம்' எனா,***
***சூரியன்பகைஞன் என்று ஒருவன், சொல்லினான்.***

***சூரியன் பகைஞன் என்று ஒருவன்*** *- சூரிய சத்துரு என்ற பெயர் கொண்ட அரக்கவீரன்;* ***ஆரியன் தன்மை ஈது ஆயின்*** *- மேலோனாகிய நம் மன்னன் தன்மை இதுவென்றால்;* ***ஆய்வுறு காரியம் ஈது எனின்*** *- நாம் எல்லாம் கூடி ஆராய்ச்சி செய்யும் காரியம் இது என்றால்;* ***கண்ட ஆற்றினால்*** *- இது கொண்டு ஆயும் நெறியினால்;* ***சீரியர் மனிதரே*** *- சிறந்தவர்கள் மனிதரே ஆவர்;* ***யாம் சிறியம்*** *- அரக்கராகிய நாம் சிறியவர்களே யாம்;* ***எனச் சொல்லினான்*** *- என்று வருந்திக் கூறலானான்.*

*ஆரியன்-மேலோன்; இங்கு இராவணனை உணர்த்தும். அற்ப மனிதர்களையும், குரங்கையும் அழிப்பதற்காக ஆராய்வது செயல் எனின், மனிதரே உயர்ந்தவராய் விடுவர்; அரக்கர் சிறியர் என்றாகிவிடுமே என்பது சூரியன் பகைஞனின் வருத்தம்.*

***6114. 'ஆள்வினை நிலைமையும், அரக்கர் ஆற்றலும்,***
***தாழ் வினை இதனின்மேல் பகரத் தக்கதோ?***
***சூழ் வினை மனிதரால் தோன்றிற்றாம்!' எனா,***
***வேள்வியின் பகைஞனும் உரைத்து, வெள்கினான்.***

***வேள்வியின் பகைஞனும்*** *- வேள்வியின் பகைஞன் என்ற பெயருடைய ஒரு அரக்கனும்;* ***சூழ்வினை*** *- இந்த மந்திராலோசனைக் கூட்டம்;* ***மனிதரால் தோன்றிற்றாம்*** *- மானிடர் காரணமாக நிகழ்ந்தது என்றால்;* ***ஆள்வினை நிலைமையும்*** *- அரக்கர்களாகிய நமது ஆட்சியின் மேன்மையும்;* ***அரக்கர் ஆற்றலும்*** *- அரக்கர்களாகிய நம் வலிமையும்;* ***தாழ்வினை இதனின் மேல்*** *- தாழ்ந்த செயல் இதை விடவும்;* ***பகரத்தக்கதோ*** *- வேறு சொல்லத் தகுந்ததுண்டோ;* ***என உரைத்து வெள்கினான்*** *- என்று கூறி வெட்கமுற்றான்;*

*வேள்வியின் பகைஞன் -'யக்ஞவிரோதி' என்பதன் தமிழாக்கம். இதற்கு மந்திராலோசனை செய்தல் வேண்டாத ஒன்று என்பது வேள்விப் பகைஞன் கருத்தாகும்.*

***6115. 'தொகை நிலைக் குரங்குடை மனிதர்ச் சொல்லி என்?***
***சிகை நிறச் சூலிதன் திறத்துச் செல்லினும்,***
***நகை உடைத்தாம்; அமர் செய்தல் நன்று' எனா,***
***புகைநிறக்கண்ணனும் புகன்று, பொங்கினான்.***

***புகை நிறக் கண்ணனும்*** *- மேல் குறிப்பிடப்பட்டவர்களேயன்றிப் புகைநிறக் கண்ணன் (தூம்ராட்சன்) என்னும் அரக்கனும்;* ***சிகை நிறச் சூலிதன் திறத்துச் செல்லினும்*** *- நம் தலைமுடி போல் சிவந்த நிறமுடையவனாய்த் திரிசூலம் ஏந்திய சிவனை எதிர்த்துப் போர் செய்வதுகூட;* ***நகை உடைத்தாம்*** *- நம் வீரப் பெருமை சிரிப்புக்கு இடமாகி விடும்;* ***தொகை நிலைக் குரங்குடை*** *- கூட்டமான குரங்குப் படையைக் கொண்டுள்ள;* ***மனிதர் சொல்லி என்*** *- மனிதர்கள் மேல் போர்செய்வது பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது?* ***அமர் செய்தல் நன்று*** *- இப்போது வேறு வழி இல்லாமையால் அந்த மனிதர்களோடு போர் செய்வதே நல்லது;* ***எனாப் புகன்று*** *- என்று சொல்லி;* ***பொங்கினான்*** *- ஆத்திரத்தால் பொங்கினான்.*

*தூம அட்சன் - புகை நிறக் கண்ணன். சிவபிரானை எதிர்த்துப் போர் செய்வதே தன் இனத்துக்குக் கேவலமாயிருக்க, குரங்குப் படை கொண்ட மனிதரோடு போர் செய்ய வேண்டி வந்ததே என்பது புகை நிறக் கண்ணன் பொங்கியதற்குக் காரணம்.*

*6116.* ***மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்,-***
***'இற்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,***
***உற்றன உற்றன உரைப்பது ஆயினார்-***
***புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினார்.***

***புற்று உறை அரவு என*** *- புற்றில் வாழும் நாகப்பாம்பைப் போல;* ***புழுங்கும் நெஞ்சினார்*** *- வெந்து புழுங்கும் மனம் உடையவரான;* ***மற்றையோர்களும்*** *- மற்றும் உள்ள அரக்க வீரர்களும்;* ***மற்று அவன் பின் உற*** *- அந்தத் தூம்ராட்சன் கூறிய பின்பு;* ***இற்று இதுவே நலம்*** *- இத்தகைய இதுவே நன்மையாகும்;* ***எண்ணம் மற்று இல்*** *- வேறு நினைப்பதற்கு எதுவுமில்லை;* ***என்று உற்றன உற்றன*** *- என்று அவரவர் கருத்தில் தோன்றியவாறு;* ***உரைப்பதாயினர்*** *- பேசலாயினார்கள்: குரங்குகளையும், மனிதர்களையும் கொல்லச் செல்வது நம் ஆற்றலுக்கு ஏற்றதல்ல என்று கூறிய தூம்ராட்சன் கருத்தே நல்லது. என்பார் 'இற்று இதுவே நலம்' என்றனர்.*

*கும்பகர்ணன் கூறுதல்*

**கலிவிருத்தம் (வேறுவகை)**

*6117.* ***வெம்பு இகல் அரக்கரை விலக்கி, 'வினை தேரா***
***நம்பியர் இருக்க!' என, நாயகனை முன்னா,***
***'எம்பி எனகிற்கில், உரைசெய்வல் இதம்' என்னா,***

***கும்பகருணப் பெயரினான் இவை குறித்தான்:***

***கும்பகருணப் பெயரினான்*** *- கும்பகர்ணன் என்ற பெயருடைய இராவணன் தம்பி;* ***வெம்பு இயல் அரக்கரை விலக்கி*** *- இதுவரை பேசிய கோபமும் வலிமையும் உள்ள அரக்கர்களை விலக்கி விட்டு;* ***வினை தேரா நம்பியர் இருக்க என*** *- பின் விளைவை அறியாது பேசுகின்ற இளையவர்களை இருக்க என நிறுத்தி விட்டு;* ***நாயகனை முன்னா*** *- அசுரர் குலத் தலைவனான இராவணனை நெருங்கி;* ***எம்பி எனகிற்கில்*** *- இவன் நம் தம்பி எனவும், நமக்கு நன்மை செய்வான் எனவும் கருதுவாயாயின்;* ***இதம் உரை செய்வல்*** *- உனக்கு நன்மையானவைகளைச் சொல்லுவேன்;* ***என்னா இவை குறித்தான்*** *- என்று பின்வருமாறு கூறலானான்.*

*வெம்புதல்-கொதித்தல். இகல்-வலிமை. தேரா-தெளியாத. இதம்-நன்மை.*

*6118.* ***'நீ அயன் முதல் குலம் இதற்கு ஒருவன் நின்றாய்;***
***ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து, அறிவு***
***அமைந்தாய்;***

***தீயினை நயப்புறுதல் செய்தனை தெரிந்தாய்;***

***ஏயின உறத் தகைய இத்துணையவேயோ?***

***நீ அயன் முதற் குலம் இதற்கு*** - *அண்ணா, நீ பிரமதேவன் முதல்வனாக உள்ள இந்தக் குலத்தில்;* ***ஒருவன் நின்றாய்*** - *ஒப்பற்றவனாய் நிலைத்திருக்கிறாய்;* ***ஆயிரம் மறைப்பொருள்*** - *ஆயிரமாயிரமான வேதங்களின் பொருளை எல்லாம்;* ***உணர்ந்து அறிவு அமைந்தாய்*** - *தெரிந்து நல்லறிவுடையவனாய் இருக்கிறாய்;* ***தீவினை நயப்புறுதல் செய்தனை தெரிந்தாய்*** - *இருந்தும் தீய செயல்களை விரும்பித் தெரிந்தே செய்தாய்;* ***ஏயின உறத்தகைய*** - *விதியால் ஏவப்பட்டனவாய் நம்பால் அடையக் கூடியவை;* ***இத்துணை வேயோ*** - *இவ்வளவுடையன மட்டுமோ?*

*அயன்முதற் குலம்-பிரமனை முதல்வனாக உடைய புலத்திய குலம். ஒருவன் நின்றாய்-ஒப்பற்ற ஒருவனாய் நிலைத்து நின்றாய். ஆயிரம் மறை-வேதங்கள் அளவில்லாதனவாதலின் இவ்வாறு கூறினான். தீவினை என்றது பிறனில் விழைந்ததை. "ஏ" ஐயோ என்ற இரக்கத்தை உணர்த்தும் குறிப்பு மொழி. "ஏ பாவம்" என்ற அருளிச் செயல் (திருவாய் மொழி 2-2-2) ஒப்பிடத்தக்கது. நாம் அடைய இருக்கும் துன்பம் இவ்வளவில் அடங்காது, இன்னும் எத்தனையோ உண்டு என்பதை 'இத்துணையவேயோ' என்பதுணர்த்தும்.*

***6119. 'ஓவியம் அமைந்த நகர் தீ உண, உளைந்தாய்,***
***"கோ-இயல் அழிந்தது" என; வேறு ஒரு குலத்தோன்***
***தேவியை நயந்து, சிறை வைத்த செயல் நன்றோ?***
***பாவியர் உறும் பழி இதின் பழியும் உண்டோ?***

***கோ இயல் அழிந்தது என*** - *நமது ஆட்சியின் தன்மை அழிந்து விட்டது என்று;* ***ஓவியம் அமைந்த நகர்*** - *சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட இலங்கை மாநகரத்தை;* ***தீ உண உளைந்தாய்*** - *(அனுமன் வைத்த) தீ உண்டமைக்கு மனம் வருந்தினாய்;* ***வேறு ஒரு குலத்தோன்*** - *அரக்கரினம் அல்லாத வேறு ஒரு குலத்தவனான இராமனுக்கு உரிய;* ***தேவியை நயந்து*** - *மனைவியான சீதையை விரும்பி;* ***சிறை வைத்த செயல் நன்றோ*** - *(கவர்ந்து வந்து) சிறையில் வைத்த உனது செயல் நல்லதோ?* ***பாவியர் உறும் பழி*** - *பாவம் செய்தவர் அடையும் பழிகளிலே;* ***இதின் பழியும் உண்டோ*** - *இதை விடவும் கொடிய பழி வேறு உள்ளதோ?*

*உளைதல்-வருந்துதல். 'நகர் தீ உண, கோவியல் அழிந்ததென உளைந்தாய்' எனக் கூட்டிப் பொருள் கொள்ளல் பொருந்தும், 'நன்றோ' என்பதன் ஓகாரம். நன்றன்று என்று எதிர்மறைப் பொருள் உணர்த்தும். 'உண்டோ' என்பதன் ஓகாரமும் எதிர்மறைப் பொருள். கற்றனன்; ஆயினும் அதற்குத் தக நின்றிலன் என்பது கம்பன் குறிப்பு.*

***6120. ' "நல் நகர் அழிந்தது" என நாணினை; நயத்தால்
உன் உயிர் எனத்தகைய தேவியர்கள் உன்மேல்
இன் நகை தரத் தர, ஒருத்தன் மனை உற்றாள்,
பொன் அடி தொழத் தொழ, மறுத்தல் புகழ்
போலாம்?***

***நல் நகர் அழிந்தது என நாணினை*** *- அழகிய நகரமாகிய இலங்கை அழிந்து போய் விட்டதே என்று நாணமுற்றாய்;* ***நயத்தால் உன் உயிர் எனத்தகைய தேவியர்*** *- உன் மீதுள்ள விருப்பத்தால் உன் உயிர் என்னும் தன்மையுடைய உனது மனைவிமார்கள்;* ***உன் மேல் இன் நகை தரத் தர*** *- உன்னை நோக்கி இனிய புன்முறுவலைச் செய்து நிற்க (அதைக் கருதாது நீ);* ***ஒருத்தன் மனை உற்றாள்*** *- வேறு ஒருவனுக்கு மனைவியாக அமைந்த சீதையை;* ***பொன் அடி தொழத் தொழ*** *- (உன் விருப்பத்துக்கு இசையச் செய்ய) அழகிய பாதங்களில் வீழ்ந்து பல முறை வணங்கவும்;* ***மறுத்தல்*** *- (அவள் இசையாது) மறுத்துரைத்தல்;* ***புகழ் போலாம்*** *- உனக்குப் புகழ்தரும் செயல் போலும்.*

*'தரத்தர, தொழத்தொழ' என்பன பலமுறை சிரிக்க, தொழ என்ற பொருளில் அடுக்கி வந்தனவாம், பிறர் செயலால் விளைந்த அழிவிற்கு நாணும் இராவணன் தன் செயலால் விளைந்துள்ள பழிக்கு நாணவில்லையே என்பது கும்பகருணனின் வருத்தம்.*

***6121. 'என்று ஒருவன் இல் உறை தவத்தியை, இரங்காய்,
வன் தொழிலினாய், மறை துறந்து, சிறை வைத்தாய்,
அன்று ஒழிவதாயின, அரக்கர் புகழ்; ஐயா!
புன் தொழிலினால் இசை பொறுத்தல் புலமைத்தோ?***

***ஐய!*** *- அரக்கர்குலத் தலைவனே!* ***ஒருவன் இல் உறை*** *- வேறு ஒருவனது இல்லத்தில் அவன் மனைவியாகத் தங்கி இருக்கின்ற;* ***தவத்தியை*** *- தவ ஒழுக்கமுள்ள ஒரு பெண்மணியை;* ***இரங்காய்*** *- (அவளுக்காகச் சிறிதும்) இரக்கப்படாது;* ***வன் தொழிலினாய்*** *- (அவனைக் கவர்ந்து வருதலாகிய) கொடிய செயல் செய்தவனாய்;* ***மறை துறந்து*** *- நீ கற்ற வேத நெறிகளை எல்லாம் கைவிட்டு;* ***என்று சிறை வைத்தாய்*** *- எந்த நாள் அசோக வனத்தில் சிறை வைத்தாயோ;* ***அன்று அரக்கர் புகழ் ஒழிவதாயின*** *-அந்த நாளே அரக்கர் புகழ் அழியலாயிற்று;* ***புன்தொழிலினால்*** *- அற்பமான காரியங்களைச் செய்வதால்;* ***இசை பொறுத்தல்*** *- புகழ் பெற நினைப்பது;* ***புலமைத்தோ*** *- அறிவுடைமை ஆகுமோ? தவத்தியை-இரங்காய், வன்தொழிலினாய் மறை துறந்து என்று சிறை வைத்தாய் அன்று அரக்கர் புகழ் அழிவதாயின என இயையும் பல வகையாலும் புகழ் சேர்ந்தமையை 'ஆயின' என்ற பன்மைச் சொல் குறித்தது.*

*ஒருவன்-இராமன் தவத்தி-சீதை. வன்தொழில்-வஞ்சனை செய்து கவர்ந்த செயல் 'மறை துறந்து' என்பதற்கு 'முறை துறந்து' என்பது பாடமாயின் அரச நீதியை விட்டு என்பது பொருளாகும். இசை-புகழ். தீய செயலால் புகழ் பெற நினைப்பது அறிவுடைமை அன்று என்பது கருத்து. பொறுத்தல் - தாங்குதல், சுமத்தல். "எளிதென இளில்லிறப்பான் எய்தும் எஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி" (குறள் 145) இங்கு நினைவு கூரத்தக்கது.*

***6122. 'ஆசு இல் பர தாரம்அவை அம் சிறை அடைப்பேம்;***
***மாசு இல் புகழ் காதலுறுவேம்; வளமை கூரப்***
***பேசுவது மானம்; இடை பேணுவது காமம்;***
***கூசுவது மானுடரை; நன்று, நம கொற்றம்!***

***ஆசு இல் பரதாரம் அவை*** *- ஒரு குற்றமும் இல்லாத வேறு ஒருவன் மனைவியை;* ***அஞ்சிறை அடைப்பேம்*** *- அழகிய சிறையிலே அடைத்து வைப்போம்;* ***மாசு இல் புகழ் காதல் உறுவேம்*** *- குற்றமற்ற புகழ் அடையவும் விரும்புவோம்;* ***வளமை கூர*** *- பெருமை மிக;* ***பேசுவது மானம்*** *- பேசுவதோ வீர உரைகள்;* ***இடை பேணுவது காமம்*** *- அதற்கிடையிலே விரும்புவது காமம்;* ***கூசுவது மானுடரை*** *- அஞ்சுவது மானிடர்களைப் பார்த்து;* ***நம் கொற்றம் நன்று*** *- நமது வெற்றி நன்றாய் இருக்கிறது.*

*ஆசு, மாசு-என்பன குற்றம் என்ற பொருள் உடையவையாம். பரதாரம் - வேறு ஒருவனது மனைவி. அம்சிறை-அழகிய சிறை. சிறையின் கொடுமையைக் குறித்து நின்றது. 'பரதாரம்' அவை எனப் பன்மையில் கூறியது. பல பெண்களை விரும்பியவன் என்பதைச் சுட்டிக் காட்டி நின்றது போலும். கொற்றம்-வெற்றி, வீரமுமாம். 'நன்று' இகழ்ச்சி குறித்து நின்றது.*

***6123. 'சிட்டர் செயல் செய்திலை; குலச் சிறுமை செய்தாய்;***
***மட்டு அவிழ் மலர்க் குழலினாளை இனி, மன்னா!***
***விட்டிடுதுமேல், எளியம் ஆதும்; அவர் வெல்ல,***
***பட்டிடுதுமேல், அதுவும் நன்று; பழி அன்றால்.***

***மன்னா சிட்டர் செயல் செய்திலை*** *- மன்னர் பெருமானே! நீ பெரியவர்கள் செய்யும் நல்ல காரியத்தைச் செய்தாயில்லை;* ***குலச் சிறுமை செய்தாய்*** *- நமது குலமாகிய புலத்திய மரபுக்கே சிறுமை உண்டாக்கும் செயலைச் செய்து விட்டாய்;* ***மட்டு அவிழ் மலர்க் குழலினாளை*** *- தேன் சிந்தும் மலர்களை அணிந்த கூந்தலை உடைய சீதையை;* ***இனி விட்டிடுது மேல்*** *- இனிமேல் இராமனிடம் செல்ல விட்டு விடுவோமானால்;* ***நாம் எளியம் ஆதும்*** *- நாம் வலிமையற்ற எளியவர்கள் என்றாகி விடும்;* ***அவர் வெல்லப்பட்டிடுது மேல்*** *- அந்த மானிடர்கள் போரில் நம்மை வெல்ல, நாம் இறந்து படுவோமாயின்;* ***அதுவும் நன்று பழி அன்று*** *- அதுவும் நல்லதே, நமக்குப் பழி உண்டாகாது.*

*சிட்டர் - மேலோர் சிறுமை - கேவலம். மட்டு - தேன். அவிழ்தல் - பெருகுதல். படுதல்-இறந்துபடுதல். அவர்-இராமன் முதலோர் பிறன் மனைவியைச் சிறை கொண்ட பழி போரில் வீரமரணம் எய்துவதால் நீங்கும் என கும்பன் கருதினான் என எண்ணத் தோன்றுகிறது. அறநெறி உரைக்க முற்பட்ட கும்பகருணன் இராவணன் முகத்தைப் பார்த்துப் பேசிக்கொண்டே வரும்போது தான் பேசுவது அவனுக்குப் பிடிக்கவில்லை என்ற உடனே அவனுக்கேற்பத் தன் கருத்தை மாற்றிக் கொள்வது போல இப்பாடல் அமைந்துள்ளது. "மலர்க்குழலினாளை இனி மன்னா! விட்டிடு", என்று சொல்லிய கும்பன் இராவணனுக்கு அது பிடிக்காமல் முகம் கோணவே அவன் கருத்திற்கேற்ப "விட்டிடுதுமேல் எளியம் ஆவம்" என்று அந்தச் சொல்லைத் தொடர்ந்து மாற்றியது போல் கவிதை அமைத்தது கம்பனின் கவித்துவத்தைக் காட்டும் இடம் என்பது மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

***6124. 'மரன் படர் வனத்து ஒருவனே சிலை வலத்தால்,***
***கரன் படை படுத்து, அவனை வென்று, களை கட்டான்;***
***நிரம்பிடுவது அன்று, அதுவும்; நின்றது, இனி நம்பால்***
***உரம் படுவதே; இதனின்மேல் உறுதி உண்டோ?***

***மரன் படர் வனத்து*** *- மரங்கள் அடர்ந்த காட்டிலே;* ***ஒருவனே*** *- இராமபிரான் ஒருவனாகவே;* ***சிலை வலத்தால்*** *- தனது வில்லின் வலிமையினால்;* ***கரன் படை படுத்து*** *- கரனுக்குத் துணையாக நின்ற சேனை முழுதும் அழித்து;* ***அவனை வென்று*** *- அந்தக் கரனையும் வெற்றி கொண்டு;* ***களை கட்டான்*** *- களையை எடுத்தான்;* ***நிரம்பிடுவது அன்று அதுவும்*** *- இராமனது ஆற்றல் அத்துடன் நிறைவடைவது அல்ல;* ***நின்றது இனி நம் பால் உரம் படுவதே*** *- இனி மிகுந்திருப்பது நம்மிடம் உள்ள பலம் அழிந்து படுவதே;* ***இதனின் மேல் உறுதி உண்டோ*** *- இதற்கு மேல் நமக்கு ஒரு நன்மை உள்ளதோ?*

*மரன்-மரம் (மகரத்துக்கு னகரம் போலியாக நின்றது) படர்தல்- அடர்ந்திருத்தல், மிக்கிருத்தலுமாம். ஒருவன்- இங்கு இராமன். களை கட்டான்-களை எடுத்தான். நெல்லுக்குப் புல் களையாதல் போலே, தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் அசுரர் களை எனப்பட்டனர்.*

***6125. 'வென்றிடுவர் மானுடவரேனும், அவர்தம்மேல்***
***நின்று, இடைவிடாது நெறி சென்று, உற நெருக்கித்***
***தின்றிடுதல் செய்கிலம்எனின், செறுநரோடும்***
***ஒன்றிடுவர் தேவர்; உலகு ஏழும் உடன் ஒன்று ஆம்.***

**வென்றிடுவர் மானுடவரேனும்** - அந்த மானிடர்கள் வெற்றி பெறுவரென்றாலும்; **அவர் தம் மேல் நின்று** - அவர்கள் மேல் படை கொண்டு சென்று; **இடைவிடாது நெறி சென்று** - இடையில் விலகாமல் அவர்கள் வரும் வழியே சென்று; **உற நெருக்கி** - அவர்களை மிகவும் துன்புறுத்தி; **தின்றிடுதல் செய்கிலம் எனின்** - கொன்று தின்று விடுவதை நாம் செய்யவில்லை என்றால்; **செறுநரோடும்** - அந்தப் பகைவராகிய மனிதருடனே; **தேவர் ஒன்றிடுவர்** - தேவர்களும் சேர்ந்து விடுவார்கள்; **உலகு ஏழும்** - ஏழுலகத்தில் உள்ளவர்களும்; **உடன் ஒன்று ஆம்** - அவர்களோடு சேர்ந்து விடுவார்கள்.

*மானுடவர்-மானிடர்; இங்கு ராம இலக்குவர்.*

***6126. 'ஊறு படை ஊறுவதன் முன்னம், ஒரு நாளே,***
***ஏறு கடல் ஏறி, நரர் வானரரை எல்லாம்***
***வேறு பெயராதவகை, வேரொடும் அடங்க***
***நூறுவதுவே கருமம்' என்பது நுவன்றான்.***

**ஊறுபடை** - அந்தப் பகைவர்களின் மிகுந்த படை; **ஊறுவதன் முன்னம்** - இங்குப் பெருகி வருவதற்கு முன்பே; **ஒரு நாளே ஏறு கடல் ஏறி** - ஒரே நாளில் இப்பெரிய கடலைக் கடந்து சென்று; **நரர் வானரரை எல்லாம்** - அந்த மனிதர்களையும், குரங்குப் படைகள் எல்லாவற்றையும்; **வேறு பெயராத வகை** - வேறு இடங்களுக்குப் பெயர்ந்து செல்ல இயலாதபடி; **வேரொடும் அடங்க நூறுவதே கருமம்** - வேருடன் முழுவதையும் அழித்தொழிப்பதே நாம் செய்ய வேண்டிய செயலாகும்; **என்பது நுவன்றான்** - எனக் கூறினான்.

*ஊறுபடை-பெருகி வரும் படை (நமக்கு இடையூறு செய்யும் படை என்பது பொருளாம்). நூறுதல் -அழித்தல். வேறு பெயராத வகை-எங்கும் தப்பித்துச் சென்று விடாதபடி. அடங்க -முழுவதும். ஏறுகடல்-பெரிய கடல். ஏறி-கடந்து சென்று.*

### *கும்பகர்ணன் பேச்சுக்கு இராவணன் இசைதல்*

***6127. 'நன்று உரை செய்தாய் !-குமர-!-நான் அது***
***நினைந்தேன்;***
***ஒன்றும் இனி ஆய்தல் பழுது; ஒன்னலரை எல்லாம்***
***கொன்று பெயர்வோம்; நமர் கொடிப் படையை***
***எல்லாம்,***
***"இன்று எழுக" என்க !' என இராவணன்***
***இசைத்தான்.***

**குமர ! நன்று உரை செய்தாய்** - (இராவணன் கும்பகர்ணனைப் பார்த்து) தம்பி ! நல்லதே சொன்னாய்; **நான் அது நினைந்தேன்** - நானும் அதைத்தான் நினைத்தேன்;

***ஒன்றும் இனி ஆய்தல் பழுது*** - *இனி ஒன்றும் ஆராய்வது தீமையாகும்;* ***ஒன்னலரைஎல்லாம்*** - *நமது பகைவர்கள் எல்லோரையும்;* **கொன்று பெயர்வோம்** - *அடியோடு அழித்து மீள்வோம்;* **நமதுகொடிப் படையை எல்லாம்** - *நம் அரக்கர்களின் கொடிகளைத் தாங்கிய படையை எல்லாம்;* **இன்று எழுக என்க** - *இன்றே போருக்கு எழுக என ஆணை இடுவாயாக;* **என இராவணன் இசைத்தான்** - *என்று இராவணன் கூறினான்;*

*நமர்-நம்மவர். எழுக என்க-போருக்கு எழுக எனக் கட்டளை இடுக என்பது பொருள். சிட்டர் செயல் செய்கிலை-குலச் சிறுமை செய்தாய் என்பன போன்ற கும்பகர்ணன் கூறிய உரைகளை விட்டுவிட்டு, "போருக்குப் புறப்படலாம்" நூறுவதுவேகருமம் என்பதனை மட்டும் கருத்தில் கொண்டு 'நன்றுரை செய்தாய்' என்ற இராவணனது பண்பைப் புலப்படுத்திய முறை நினைந்து போற்றத்தக்கது.*

## *இந்திரசித்து இராவணனைத் தடுத்து நானே சென்று வென்று வருவேன் எனல்*

***6128. என்று அவன் இயம்பியிடும் எல்லையினில், 'வல்லே***
***சென்று படையோடு, சிறு மானுடர் சினப் போர்***
***வென்று பெயர்வாய், அரச ! நீ கொல் ? என வீரம்***
***நன்று பெரிது!' என்று மகன் நக்கு, இவை நவின்றான்:***

***என்று அவன் இயம்பியிடும் எல்லையினில்*** - *என்று இராவணன் கூறிய சமயத்திலே;* **மகன் நக்கு** - *அவன் மகனாகிய இந்திர சித்து கோபமாகச் சிரித்து;* ***அரச*** - *அரச குல வேந்தனே!* **வல்லே படையோடு சென்று** - *விரைவாக படையுடனே சென்று;* ***சிறு மானுடர்*** - *அந்த அற்ப மனிதர்களுடன்;* **சினப்போர் வென்று** - *சினம் கொண்டு போரிட்டு வென்று;* **பெயர்வாய் நீ கொல்** - *திரும்பிப் பெயர்ந்து வருபவன் நீயோ?;* **என் வீரம் நன்று பெரிது** - *எனது வீரம் பெரிதும் நல்லது;* **என்று இவை நவின்றான்** - *என்று பின்வருமாறு கூறினான்.*

*நன்று பெரிது-குறிப்பு மொழி; இங்கு இகழ்ச்சிப் பொருள் தந்து நின்றது.*

***6129. 'ஈசன் அருள் செய்தனவும், ஏடு அவிழ் மலர்ப் பேர்***
***ஆசனம் உவந்தவன் அளித்தனவும், ஆய***
***பாசம் முதல் வெம் படை சுமந்து, பலர் நின்றார்;***

***ஏச உழல்வேன் ஒருவன் யானும் உளென் அன்றோ?***

***ஈசன் அருள் செய்தனவும்*** - *சிவபெருமான் அருளால் நமக்குத் தந்த ஆயுதங்களும்;* ***ஏடு அவிழ்*** - *இதழ்கள் மலர்ந்து விரிந்துள்ள;* **மணிப்பேராசனம்** - *தாமரை மலராகிய ஆசனத்தில்;* **உவந்தவன்** - *விரும்பி வீற்றிருப்பவனாகிய பிரமதேவன்;* **அளித்தனவும்**

***ஆய*** - *நமக்குக் கொடுத்த ஆயுதங்களும் ஆகிய;* ***பாசம் முதல் வெம்படை*** - *பாசம் முதலிய கொடிய ஆயுதங்களை;* ***சுமந்து பலர் நின்றார்*** - *கைகளில் சுமந்து கொண்டு வீரர்கள் பலர் இங்கு நிற்கிறார்கள்;* ***ஏச உழல்வேன் ஒருவன்*** - *உலகத்தவர் பழித்துப் பேச அதனால் வருந்தித்திரியும் ஒருவனாக;* ***யானும் உளன் அன்றோ*** - *நானும் இங்கு இருக்கிறேன் அல்லவா?* *ஈசன் - சிவபெருமான். ஏடு - இதழ். அவிழ்தல் - விரிதல் (மலர்தலுமாம்).*

## *6130. 'முற்றும் முதலாய் உலகம் மூன்றும், எதிர் தோன்றிச் செற்ற முதலோரொடு செறுத்தது ஓர் திறத்தும், வெற்றி உனது ஆக விளையாதுஒழியின், என்னைப் பெற்றும் இலை; யான் நெறி பிறந்தும் இலென்' என்றான்.*

***முற்றும் முதலாய் உலகம் மூன்றும்*** - *எல்லாப் பொருள்களும் நிறைந்த மூன்றுலகத்தில் உள்ளவர்களும்;* ***எதிர் தோன்றி*** - *எனக்கு எதிரிலே போர்க்களத்திலே நின்று;* ***செற்ற முதலோ ரொடு*** - *நமது பகைவர்களான தலைவர்களுக்குத் துணையாகச் சேர்ந்து கொண்டு;* ***செறுத்தது ஓர் திறத்தும்*** - *பகைத்துப் போரிட்ட போதும்;* ***வெற்றி உனதாக*** - *உனக்கே வெற்றி உரியதாக;* ***விளையாது ஒழியின்*** - *விளைவியாது போவேனானால்;* ***என்னைப் பெற்றும் இலை*** - *நீ என்னை உனக்கு மகனாகப் பெறவுமில்லை;* ***யான் நெறி பிறந்தும் இலென் என்றான்*** - *நான் உனக்கு முறையாகப் பிறந்த மகனுமல்லேன் என்றான்.*

*இந்திரசித்து இராவணனுக்குக் கூறிய வஞ்சினம்; இதனால் போருக்குத் தன்னையே அனுப்புமாறு வேண்டினான் எனலாம்.*

## *6131. 'குரங்கு பட, மேதினி குறைத்தலை நடப் போர் அரங்கு பட, மானுடர் அலந்தலை பட, பேர் இரங்கு படர் சீதை பட, இன்று இருவர் நின்றார் சிரம் குவடு எனக் கொணர்தல் காணுதி- சினத்தோய்!*

***சினத்தோய்*** - *பகைவர் பால் கோபம் மிக்கவனே!* ***குரங்கு பட*** - *குரங்குப் படை அடியோடு இறந்து பட;* ***மேதினி, குறைத்தலை நட போர் அரங்குபட*** - *தலையற்ற உடல் எங்கும் நடனம் ஆடுவதால் உலகம் முழுவதும் போர்க்களம் அரங்கு போல் காணப்பட;* ***மானிடர் அலந்தலை பட*** - *அந்த மானிடர்கள் மனம் கலங்கி நிற்க;* ***பேர் இரங்கு படர் சீதைபட*** - *சீதை பார்த்தவர்கள் இரங்கும் படி துன்பப்பட;* ***இன்று இருவர் நின்றார்*** - *நம் பகைவர்களாக நின்ற இருவரது;* ***சிரம் குவடு எனக் கொணர்தல் காணுதி*** - *தலைகளையும் மலை என நான் கொண்டு வருவதைக் காண்பாய்.*

*குறைத்தலை - தலையற்ற உடல். போர் அரங்கு - போர்க்களம். அலந்தலை-கலக்கம் (மயக்கமுமாம்).*

***6132. 'சொல்லிடை கழிக்கிலை, சுருங்கிய குரங்கு என்***
***கல்லிடை கிழிக்கும் உருமின் கடுமை காணும்***
***வில்லிடை கிழித்த மிடல் வாளி வெருவி, தம்***
***பல்லிடை, கிழித்து இரிவ கண்டு, பயன் உய்ப்பாய்.***

***சுருங்கிய குரங்கு*** *- உடல் சுருங்கி வற்றிய குரங்குகள்;* ***என்*** *- என்னுடைய;* ***கல் இடை கிழிக்கும்*** *- கற்பாறைகளையும் பிளக்கும்படியான;* ***உருமின் கடுமை காணும்*** *- இடி போன்ற கொடியதான;* ***வில் இடை கிழித்த*** *- வில்லிலிருந்து கிளம்பிச் செல்லும்;* ***மிடல் வாளி வெருவி*** *- வலிமை மிக்க அம்புக்குப் பயந்து;* ***தம் பல்லிடை கிழித்து*** *- பல்லை இளித்துக் கொண்டு;* ***இரிவ கண்டு*** *- மூலைக்கொன்றாக ஓடுவதைப் பார்த்து;* ***பயன் உய்ப்பாய்*** *- வெற்றியின் பயனை அனுபவிப்பாய்;* ***சொல்லிடை கழிக்கிலை*** *- இடையிலே வீணே பேசிக் காலத்தைக் கழிக்க வேண்டா.*

*கல் - மலை (பாறையுமாம்) "காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்" என்ற குறளில் (குறள் 440) உய்த்தல்-நுகர்தல் என்ற பொருளில் வந்துள்ளது.*

***6133. 'யானை இலர்; தேர் புரவி யாதும் இலர்; ஏவும்***
***தானை இலர்; நின்ற தவம் ஒன்றும் இலர்; தாமோ,***
***கூனல் முதுகின் சிறு குரங்கு கொடு வெல்வார்?***
***ஆனவரும் மானுடர்; நம் ஆண்மை இனிது***
***அன்றோ?***

***யானை இலர்*** *- நமது பகைவர்களுக்கு யானைப்படை இல்லை;* ***தேர், புரவி யாதும் இலர்*** *- தேர்ப்படை, குதிரைப்படை மற்ற எதுவுமே இல்லை;* ***ஏவும் தானை இலர்*** *- நம்மீது எய்வதற்கேற்ற படை பலமும் இல்லை;* ***நின்ற தவம் ஒன்றும் இலர்*** *- நிலைபெற்ற தவபலமும் ஒன்றும் இல்லை;* ***கூனல் முதுகின்*** *- கூனி வளைந்த முதுகை உடைய;* ***சிறு குரங்கு கொடு*** *- அற்பமான குரங்குகளைத் துணையாகக் கொண்டு;* ***வெல்வார் ஆனவரும் மானுடர் தாமோ?*** *- நம்மை வெல்பவரும் இந்த மனிதர்கள் தாமோ?* ***நம் ஆண்மை இனிது அன்றோ*** *- அரக்கர்களாகிய நமது ஆண்மை நன்றாயிருக்கிறது. 'இனிது அன்றோ' குறிப்பு மொழியாக இகழத்தக்கது என்னும் பொருள் தந்து நின்றது.*

***6134. 'நீரும், நிலனும், நெடிய காலும், நிமிர் வானும்,***

***பேர் உலகு யாவும், ஒரு நாள் புடைபெயர்த்தே,***
***யாரும் ஒழியாமை, நரர் வானரரை எல்லாம்,***
***வேரும் ஒழியாதவகை வென்று அலது, மீளேன்.'***

***நீரும் நிலனும், நெடிய காலும், நிமிர் வானும்*** - *நீரும், நிலமும் நெடிது வீசும் காற்றும் நிமிர்ந்துயர்ந்த ஆகாயமும் ஆகிய பஞ்ச பூதங்களுடனே;* ***பேர் உலகு யாவும்*** - *மிகப் பெரிதான உலகங்கள் யாவையும்;* ***ஒரு நாள் புடைபெயர்த்தே*** - *ஒரே நாளில் நிலைமாற்றி;* ***யாரும் ஒழியாமை*** - *எவரும் தப்பி விடாதபடி;* ***நரர் வானரரை எல்லாம்*** - *மனிதர்கள் குரங்குகள் எல்லாவற்றையும்;* ***வேரும் ஒழியாத வகை*** - *வேரும் கூட தப்பி விடாதபடி;* ***வென்று அலது மீளேன்*** - *வென்று அல்லது மீண்டு வரமாட்டேன்;*

*நிமிர்தல்-உயர்தல். வேருடன்-அடியோடு.*

*வீடணன் இந்திர சித்தைக் கடிந்து கூறுதல்*

***6135. என்று, அடி இறைஞ்சினன் எழுந்து, 'விடை ஈமோ,***
***வன் திறலினாய்!' எனலும், வாள் எயிறு வாயில்***
***தின்றனன் முனிந்து, நனி தீவினையை எல்லாம்***
***வென்றவரின் நன்று உணரும் வீடணன் விளம்பும்.***

***என்று அடி இறைஞ்சினன்*** - *என்று கூறி இராவணனது பாதங்களில் வீழ்ந்து வணங்கிப்பின்;* ***எழுந்து*** - *எழுந்து நின்று; (இராவணனைப் பார்த்து)* ***வன்திறலினாய்*** - *மிக்க வலிமை உடைய எந்தையே!* ***விடை ஈமோ*** - *எனக்கு விடை தருக;* ***எனலும்*** - *என இந்திரசித்து கூறி நிற்க;* ***நனி தீவினையை எல்லாம்*** - *மிகுந்த தீவினைகள் அனைத்தையும்;* ***வென்றவரின் நன்றுணரும்*** - *தங்கள் தவ பலத்தாலே வென்ற முனிவர்களைவிடவும் நன்மையை உணர்ந்த;* ***வீடணன்*** - *வீடணன் என்னும் பெயருடையவனான இராவணனது தம்பி;* ***வாள் எயிறு வாயில் தின்றனன்*** - *பற்களால் உதட்டைக் கடித்தவனாக;* ***முனிந்து*** - *இந்திர சித்தைக் கோபித்து;* ***விளம்பும்*** - *பின்வருமாறு கூறலானான்; இறைஞ்சினன், நின்றனன் இவை முற்றெச்சங்கள். வன்திறம் - மிக்க வலிமை வாள் எயிறு - வெண்மையான பற்கள். தவத்தாலும் ஞானத்தாலும் தீவினைகளை வென்றுயர்ந்தவராகிய மேலோரினும் மெய்யுணர்வு படைத்தவன் வீடணன் என்பதை "நனி தீ வினையை எல்லாம் வென்றவரின் நன்றுணரும் வீடணன்" என்றார்.*

***6136. 'நூலினால் நுணங்கிய அறிவு நோக்கினை***
***போலுமால்!-உறு பொருள் புகலும் பூட்சியோய்!***
***காலம், மேல் விளை பொருள், உணரும் கற்பு இலாப்***
***பால!-நீ இனையன பகரற்பாலையோ?***

***காலம் மேல் விளை பொருள் உணரும்*** - காலத்தையும் பின்னால் நிகழும் காரியத்தையும் உணர்கின்ற; ***கற்பு இலா பால!*** - அறிவற்ற சிறுவனே; ***நூலினால்*** - பல நூல்களையும் கற்ற நூலறிவினாலும்; ***நுணங்கிய அறிவு*** - நுணங்கிய அறிவாற்றலும்; ***நோக்கினை போலும்*** - எதிர்காலத்தை நோக்கும் திறமுடையாய் போலும்; ***உறுபொருள் புகலும் பூட்சி யோய்*** - நேர இருப்பதைக் கூறும் மனஉறுதியுடன் பேசுகிறாய்; ***நீ இனையன பகர்தற் பாலையோ*** - நீ இத்தகையவைகளைப் பேசுதல் தகுமோ?

*கற்பு-கற்றலினால் பெறும் அறிவு (கல்வியுமாம்) நூல்-நூலறிவு. நுணங்கிய-நுட்பமான. பூட்சி-மன உறுதி.*

***6137. 'கருத்து இலான், கண் இலான், ஒருத்தன் கைக்கொடு***
***திருத்துவான் சித்திரம் அனைய செப்புவாய்;***
***விருத்த மேதகையவர், வினைஞர், மந்திரத்து***
***இருத்தியோ?-இளமையால் முறைமை எண்ணலாய்!***

***இளமையால் முறைமை எண்ணலாய்*** - இளமைப்பருவம் காரணமாக, அரசியல் முறையை எண்ணிப் பார்க்காதவனே! ***கருத்து இலான்*** - ஓவிய ஞானமில்லாதவனும்; ***கண் இலான் ஒருத்தன்*** - கண் பார்வை இல்லாதவனுமான ஒருவன்; ***சித்திரம் கைக்கொடு*** - ஓவியம் ஒன்றைக் கையிலே எடுத்துக் கொண்டு; ***திருத்துவான் அனைய*** - இதனை நன்கு திருத்தி அமைப்பேன் என்பது போல்; ***செப்புவாய்*** - நீ பேசுகிறாய்; ***விருத்த மேதகையவர்*** - வயது முதிர்ந்த மேலான அறிஞரும்; ***வினைஞர்*** - சிறந்த வினையம் உடையவர்களும் இருக்கத் தகுந்த; ***மந்திரத்து இருத்தியோ*** - மந்திராலோசனை சபையில் நீ இருக்கத் தகுமோ?

***6138. 'தூயவர் முறைமையே தொடங்கும் தொன்மையோர்***
***ஆயவர் நிற்க; மற்று அவுணர் ஆதியாம்***
***தீயவர், அறத்தினால் தேவர் ஆயது***
***மாயமோ? வஞ்சமோ? வன்மையேகொலோ?***

***தூயவர்*** - தூய்மை உடையவர்களும்; ***முறைமையே தொடங்கும் தொன்மையோர்*** - முறையான நல்ல செயல்களையே செய்யும் முன்னோரும்; ***ஆயவர் நிற்க*** - ஆகிய அவர்கள் (தேவராகிய) நிற்க ***மற்று அவுணர் ஆதியாம் தீயவர்*** - அசுரர்கள் முதலான தீயவர்களும்; ***அறத்தினால்*** - தாம் செய்த அறச்செயல்களால்;

**தேவராயது மாயமேர்** - தேவர்களானது மாயத்தாலோ; **வஞ்சமோ** - அல்லது வஞ்சனையாலோ? **வன்மையே கொலோ** - தமது வலிமையினாலோ?

தூயவர் - உள்ளம். உரை, செயல் மூன்றிலும் தூயவர்கள், மற்று-வினை மாற்றுப் பொருள் தந்தது.

*6139.* **'அறம் துறந்து, அமரரை வென்ற ஆண்தொழில்-**
**திறம் தெரிந்திடின், அதுதானும் செய் தவம்**
**நிறம் திறம்பாவகை இயற்றும் நீதியால்,**
**மறம் துறந்து, அவர் தரும் வரத்தின் வன்மையால்.**

**அறம் துறந்து** - நீ அறத்தை விட்டு விலகி; **அமரரை வென்ற** - தேவர்களை வென்ற; **ஆண் தொழில் திறம்** - வீரத் தொழிலின் திறத்தை; **தெரிந்திடின்** - ஆராய்ந்து பார்த்தால்; **அதுதானும்** - அதுவும் கூட; **செய்தவம் நிறம் திறம்பாவகை** - சிறந்த தவத்தை பெருமை மாறாத வகையிலே; **இயற்றும் நீதியால்** - செய்து முடித்த தன்மையால்; **மறம் துறந்து** - கொடுமைக்குணம் விடுத்து; **அவர் தரும் வரத்தின் வன்மையால்** - அந்தத் தேவர்கள் தந்த வரத்தின் வலிமையினாலாம்.

ஆண்தொழில்-வீரச்செயல். திறம்புதல்-கெடுதல்.

*6140.* **'மூவரை வென்று, மூன்று உலகும் முற்றுறக்**
**காவலில்நின்று, தம் களிப்புக் கைம்மிக,**
**வீவது முடிவு என வீந்தது அல்லது,**
**தேவரை வென்றவர் யாவர், தீமையோர்?**

**மூவரை வென்று** - மும்மூர்த்திகளையும் வென்று; **மூன்று உலகம் முற்றுற** - மூன்று உலகங்கள் முழுதும்; **காவலில் நின்று** - ஆட்சி புரிதலை மேற்கொண்டும்; **தம் களிப்பு கைம்மிக** - தம் செருக்கு எல்லை கடந்து மிகுவதால்; **வீவது முடிவு என** - இவர்கள் அழிவது உறுதி என்று கூறும்படி; **வீந்த தல்லது** - அழிந்த தல்லது; **தேவரை வென்றவர் தீமையோர் யாவர்** - தேவர்களை வென்று வாழ்ந்த கொடியவர்கள் யாருளர்?

காவலில் நின்று-ஆட்சி புரிந்து வரும் காரியத்தை மேற்கொண்டு. களிப்பு-செருக்கு. கைம்மிக-எல்லை கடந்து செல்ல.

*6141.* **'வினைகளை வென்று, மேல் வீடு கண்டவர்**
**எனைவர் என்று இயம்புகேன், எவ்வம் தீர்க்கையான்?**
**முனைவரும் அமரரும், முன்னும் பின்னரும்,**
**அனையவர் திறத்து உளர் யாவர், ஆற்றினார்?**

***முனைவரும் அமரரும்*** - *முனிவர்களும் தேவர்களும்* ***; முன்னும் பின்னரும்*** - *முற்காலத்தும் பிற்காலத்தும்;* ***எவ்வம் தீர்க்கையான்*** - *குற்றமான செயல்களை விட்டு விட்டமையால்;* ***வினைகளை வென்று*** - *இருவினைகளையும் வென்று;* ***மேல் வீடு கண்டவர்*** - *மேலான பரமபதத்தை அடைந்தவர்கள்;* ***எனைவர் என்று இயம்புகேன்*** - *எத்தனை பேர் என்று சொல்லுவேன்;* ***அனையவர் திறத்து*** - *அந்த அசுரர் முதலானவர்களுள்;* ***யாவர் ஆற்றினார் உளர்*** - *வீட்டின்பம் பெற்றவர் யாருளர்?*

*முனைவர் - முனிவர்கள். எனைவர் - எவ்வளவினர். நல்வினை தீவினை இரண்டினுள் நல்வினையும் பிறப்புக்குக்காரணமாதலால் 'வினைகளை' வென்று என்றார். மேல்வீடு - உயர்ந்த வீட்டின்பம். எவ்வம்-குற்றம்.*

***6142. 'பிள்ளைமை விளம்பினை, பேதை நீ' என***
***ஒள்ளிய புதல்வனை உரப்பி, 'என் உரை***
***எள்ளலையாம்எனின், இயம்பல்ஆற்றுவென்,***

***தெள்ளிய பொருள்' என அரசற் செப்பினான்:*** ***பிள்ளைமை விளம்பினை*** - *சிறுபிள்ளைத்தனமாகப் பேசினாய்:* ***பேதை நீ*** - *நீ அறிவில்லாதவனாயினை;* ***என ஒள்ளிய புதல்வனை உரப்பி*** - *என்று, வலிமை மிக்க மகனான இந்திரசித்தை அதட்டி விட்டு;* ***என் உரை எள்ளலை ஆம் எனின்*** - *எனது சொற்களை ஏளனம் செய்யாது கேட்பாயாயின்;* ***தெள்ளிய பொருள்*** - *(நாம் கடைப்பிடிக்கக் கூடிய) தெளிவான கருத்துக்களை;* ***இயம்பல் ஆற்றுவென்*** - *சொல்லத் தொடங்குவேன்;* ***என அரசன் செப்பினான்*** - *என்று, அரசனாகிய இராவணனை நோக்கிக் கூறலானான்.*

*அரசன்-இராவணன்.*

*வீடணன் அறவுரை*

***6143. 'எந்தை நீ; யாயும் நீ; எம்முன் நீ; தவ***
***வந்தனைத் தெய்வம் நீ; மற்றும் முற்றும் நீ;***
***"இந்திரப் பெரும் பதம் இழக்கிறாய்' என***
***நொந்தனென் ஆதலின், நுவல்வது ஆயினேன்.***

***எந்தை நீ*** - *எனக்குத் தந்தையும் நீயே;* ***யாயும் நீ*** - *தாயும் நீயே;* ***எம் முன்நீ*** - *எனக்கு மூத்த தமையனும் நீயே;* ***தவ வந்தனைத் தெய்வம் நீ*** - *தவத்தால் நான் வந்தித்து வணங்குதற்குரிய தெய்வமும் நீயே;* ***மற்றும் முற்றும் நீ*** - *வேறு எல்லாம் நீயே;* ***இந்திரப் பெரும் பதம்*** - *இந்திர பதவிக்கு நிகரான பெரிய அரசபதவியை;*

***இழக்கின்றாய் என*** - இழக்கப் போகிறாயே என்று; ***நொந்தனென் ஆதலின்*** - மனம் வருந்தினேன் ஆதலால்; ***நுவல்வது ஆயினேன்*** - இவை சொல்லலானேன்.

எந்தை - எம் தந்தை. யாய் - தாய். எம்முன் - என்தமையன். இழக்கின்றாய் என்றது இழப்பாய் என்னும் பொருளில் வந்தது. உறுதி குறித்த காலவழுவமைதி.

***6144. 'கற்றுறு மாட்சி என்கண் இன்றாயினும்,***
***உற்று உறு பொருள் தெரிந்து உணர்தல் ஒயினும்,***
***சொற்றுறு சூழ்ச்சியின் துணிவு சோரினும்,***
***முற்றுறக் கேட்ட பின், முனிதி-மொய்ம்பினோய்!***

***கற்று உறுமாட்சி*** - நல்ல நூல்களைக் கற்று அறிந்த மாண்பு; ***என் கண் இன்று ஆயினும்*** - என்னிடம் இல்லை என்றாலும்; ***உற்று உறு பொருள்*** - ஆராய்ந்து மேலான பொருளை; ***தெரிந்து உணர்தல் ஒயினும்*** - தெரிந்துணர்ந்து கொள்ளுதல் இல்லையென்றாலும்; ***சொற்றுறு சூழ்ச்சியின்*** - சிறப்பித்துப் பேசப்படும் ஆராய்ச்சியின்; ***துணிவு சோரினும்*** - முடிவு தவறுமாயினும்; ***மொய்ம்பினோய்*** - வலிமை மிக்கவனே; ***முற்றுறக் கேட்டபின் முனிதி*** - என்னைக் கோபிப்பதானாலுமே நான் கூறுவன யாவும் கேட்டபின் கோபி.

சோர்தல் - தவறுதல். ஒய்தல் - விடுபடுதல் (இல்லையாதல்).

***6145. 'கோநகர் முழுவதும், நினது கொற்றமும்,***
***சானகி எனும் பெயர் உலகின் தம்மனை***
***ஆனவள் கற்பினால், வெந்தது அல்லது, "ஓர்***

***வானரம் சுட்டது" என்று உணர்தல் மாட்சியோ?*** ***கோநகர் முழுவதும்*** - நமது தலைநகரமாகிய இலங்கை நகர் முழுவதும்; ***நினது கொற்றமும்*** - உன்னுடைய வீர வெற்றியும்; ***சானகி எனும் பெயர்*** - சானகி என்ற பெயர் கொண்ட; ***உலகின் தம் அனை*** - உலகத்தின் தாயாகிய; ***ஆனவள் கற்பினால்*** - அந்தத்தேவியின் கற்பினனலால்; ***வெந்தது அல்லது*** - வெந்து ஒழிந்ததே அல்லாமல்; ***ஓர் வானரம் சுட்டது*** - ஒரு குரங்கு வந்து சுட்டது; ***என்று உணர்தல் மாட்சியோ*** - என்று நினைப்பது அறிவுடைமை ஆகுமோ?

கோநகர் - தலைநகரம். தம்மனை - தாய்.

***6146. 'எண்பொருட்டு ஒன்றி நின்று, எவரும் எண்ணினால்,***
***விண்பொருட்டு ஒன்றிய உயர்வு மீட்சியும்,***

***பெண்பொருட்டு அன்றியும், பிறிது உண்டாம்எனின்,***
***மண்பொருட்டு அன்றியும், வரவும் வல்லவோ?****

***எவரும் எண் பொருட்டு ஒன்றி நின்று*** *- யாரும் எண்ணும் பொருட்டாக மனம் ஒன்றி நின்று;* ***எண்ணினால்*** *- சிந்தித்தால்,* ***விண் பொருட்டு ஒன்றிய உயர்வும் மீட்சியும்*** *- வானளாவ வளர்ந்த உயர்வும் தாழ்வும்;* ***பெண் பொருட்டு*** *- பெண் காரணமாகவோ;* ***அன்றியும் பிறிது உண்டாம் எனின்*** *- அல்லது வேறு ஒரு காரணம் உண்டு என்றால்;* ***மண் பொருட்டு*** *- மண் காரணமாக உண்டாகும்;* ***அன்றியும் வரவும் வல்லவோ*** *- இவையல்லாது வேறு காரணத்தால் வரலாகுமோ? எண் - ஆய்வு. வல்லவோ - வல்லவையோ. ஒன்றிநின்று - ஒருமைப்பாட்டுன் நின்று. மீட்சி-தாழ்வு.*

***6147. ' "மீனுடை நெடுங் கடல் இலங்கை வேந்தன்முன்***
***தானுடை நெடுந் தவம் தளர்ந்து சாய்வது, ஓர்***
***மானுட மடந்தையால்" என்னும் வாய்மொழி-***
***தேனுடை அலங்கலாய்!-இன்று தீர்ந்ததோ?***

***தேனுடை அலங்கலாய்*** *- தேன் சிந்தும் மாலையை அணிந்த மன்னனே!* ***மீனுடை நெடுங்கடல்*** *- மீன் நிறைந்த பெரிய கடலால் சூழப்பட்ட;* ***இலங்கை வேந்தன்*** *- இலங்கைக்கு அரசனான இராவணன்;* ***முன் தான் உடை நெடுந்தவம்*** *- முன் தனக்குண்டான தவபலம்;* ***தளர்ந்து சாய்வது*** *- தளர்ந்து கெடுவது;* ***ஓர் மானுட மடந்தையால்*** *- ஒரு மானிடப் பெண்ணால்;* ***என்னும் வாய் மொழி*** *- என்ற தவறாத சாப மொழி;* ***இன்று தீர்ந்ததோ*** *- இன்று நீங்கி விட்டதோ? இல்லையே!*

*அலங்கல் - மாலை. வாய்மொழி - உண்மையான மொழி. இங்கே சாபத்தைக் குறித்தது.*

***6148. 'ஏறிய நெடுந் தவம் இழைத்த எல்லை நாள்,***
***ஆறிய பெருங் குணத்து அறிவன் ஆணையால்,***
***கூறிய மனிதர்பால் கொற்றம் கொள்ளலை;***
***வேறு இனி அவர்வயின் வென்றி யாவதோ?***

***ஏறிய நெடுந்தவம்*** *- நீ உயர்ந்த பெரிய தவத்தை;* ***இழைத்த எல்லை நாள்*** *- செய்த காலமாகிய அந்த நாள்;* ***ஆறிய பெருங்குணத்து அறிவன்*** *- அமைதியான சிறந்த குணத்தை உடைய பிரம தேவன்;* ***ஆணையால்*** *- கட்டளையினால்;* ***கூறிய மனிதர்பால்*** *- கூறப்பட்ட மனிதர்களிடம்;* ***கொற்றம் கொள்ளலை*** *- வெற்றிக்கு வரம் கேட்டுப்பெற வில்லை;* ***வேறு இனி அவர் வயின்*** *- இனி அந்த மானிடர்கள் பால்;* ***வென்றி ஆவதோ*** *- வெற்றியடைய முடியுமோ?*

*ஆறிய - ஆன்றவிந்தடங்கிய. அறிவன் - கடவுளாகிய பிரமன்.*

## *6149. 'ஏயது பிறிது உணர்ந்து இயம்ப வேண்டுமோ?*
## *நீ ஒரு தனி உலகு ஏழும் நீந்தினாய்; ஆயிரம் தோளவற்கு ஆற்றல் தோற்றனை*
## *மேயினைஆம்; இனி, விளம்ப வேண்டுமோ?*

***ஏயது*** *- (நீ மனிதரிடம் தோல்வி அடைய) நேர்ந்தது என்பதனை;* ***பிறிது உணர்ந்து*** *- வேறு காரணங்களை ஆராய்ந்துணர்ந்து;* ***இயம்ப வேண்டுமோ*** *- கூற வேண்டுமோ?* ***நீ ஒரு தனி*** *- நீ ஒப்பற்ற தனித்தலைவனாக (ஒருவனாக);* ***உலகு ஏழும் நீந்தினாய்*** *- ஏழுலகத்தையும் வென்றாய் (ஆனால்);* ***ஆயிரம் தோளவற்கு*** *- ஆயிரம் தோள்களை உடைய கார்த்த வீரியன் என்ற மானிட மன்னனுக்கு;* ***தோற்றனை*** *- தோற்று விட்டவனாய்;* ***மேயினை ஆம்*** *- ஆனாய் அல்லவா;* ***இனி விளம்ப வேண்டுமோ*** *- (மனிதருக்குத் தோற்பதை) இனிக் கூறவும் வேண்டுமோ?*

*ஏயது - நேர்ந்தது, பொருந்தியது. ஒருதனி - தன்னந்தனி. நீந்துதல் -கடத்தல் (இங்கு வெல்லுதல்). நீ மனிதர்களிடம் தோல்வி அடைவாய் என்பதற்கு கார்த்த வீரியனிடம் தோற்றதே சான்று என்பது குறிப்பு.*

## *6150. 'மேல் உயர் கயிலையை எடுத்த மேலைநாள்,*
## *நாலு தோள் நந்திதான் நவின்ற சாபத்தால்,*
## *கூல வான் குரங்கினால் குறுகும், கோள்; அது*
## *வாலிபால் கண்டனம்-வரம்பு இல் ஆற்றலாய்!*

***வரம்பில் ஆற்றலாய்*** *- எல்லையில்லாத வல்லமை உடையவனே!* ***மேல் உயர் கயிலையை*** *- நீ, ஓங்கி, உயர்ந்த கைலாய மலையை;* ***எடுத்த மேலை நாள்*** *- பேர்த்து எடுத்த அந்த நாளிலே;* ***நாலு தோள் நந்தி*** *- நான்கு தோள்களை உடைய நந்தி தேவன்;* ***தான் நவின்ற சாபத்தால்*** *- தான் கூறிய சாபத்தினாலே;* ***கூல வான் குரங்கினால்*** *- வாலுள்ள பெரிய குரங்கினால்;* ***குறுகும் கோள்*** *- தீங்கு நேரும்;* ***அது வாலி பால் கண்டனம்*** *- என்ற அதனை வாலியிடம் பார்த்தோமே.*

*கூலம் - வால். வான் - பெரிய. கோள் - தீமை. இராவணன் கைலாயத்தைப் பேர்த்து எடுக்க முற்பட்ட போது, நந்திதேவன் வந்து தடுக்க, அவரைக் 'குரங்கு போன்ற முகத்தை உடையவன்' என இராவணன் பரிகசித்ததால் சினம் கொண்ட நந்தி தேவன் "குரங்குகளால் உனக்கு அழிவு நேரும்" எனச் சபித்தார். இந்தச் செய்தி உத்தரகாண்டத்தில் கூறப்பட்டுள்ளது. வாலியினிடம் இராவணன் தோற்றது. அச்சாபத்தை நிறைவேற்றிவிட்டது என்பதை நினைவுபடுத்தி வீடணன் இராவணனைத் தெருட்டுகிறான்.*

***6151. 'தீயிடைக் குளித்த அத் தெய்வக் கற்பினாள்***
***வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?***
***"நோய் உனக்கு யான்" என நுவன்றுளாள் அவள்;***
***ஆயவள் சீதை, பண்டு அமுதின் தோன்றினாள்.***

***தீயிடைக் குளித்த*** - *நெருப்பிலே மூழ்கி உயிர்துறந்த;* ***அத்தெய்வக் கற்பினாள்*** - *அந்த தெய்வீகக் கற்புடைய வேதவதி;* ***வாயிடை மொழிந்த சொல்*** - *வாயால் கூறிய சாபமொழிகள்;* ***மறுக்க வல்லமோ*** - *மறுக்கும் வல்லமை உடையேமோ?* ***உனக்கு நான் நோய்*** - *'நான் உனக்கு நோயாவேன்';* ***என நுவன்றுளாள்*** - *என்று கூறியுள்ளாள்;* ***அவள் ஆயவள் சீதை*** - *அவளேதான் சீதை;* ***பண்டு அமுதில் தோன்றினாள்*** - *முன்பு பாற்கடலில் அமுதுடன் அவதரித்த இலக்குமியும் அவளே.*

*தவவாழ்வை மேற்கொண்டு, தனித்து வாழ்ந்த வேதவதியை இராவணன் திக்கு விஜயத்தின் போது பலாத்காரம் செய்ய, 'நான் உனக்கு நோயாவேன்' என்று கூறி யாகத் தீயில் விழுந்து உயிர் துறந்தாள். அந்த வேதவதியே சீதை; திருமகளின் அவதாரம். இந்த வரலாறு உத்தர காண்டத்தில் பேசப்படும்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம*** ஃ

***6152. சம்பரப் பெயருடைத் தானவர்க்கு***
***இறைவனைத் தனு வலத்தால்,***
***அம்பரத்து உம்பர் புக்கு, அமரிடைத்***
***தலை துமித்து, அமரர் உய்ய,***
***உம்பருக்கு இறைவனுக்கு அரசு அளித்து***
***உதவினான்-ஒருவன், நேமி***
***இம்பரில் பணி செய, தசரதப்***
***பெயரினான், இசை வளர்த்தான்;***

***தசரதப் பெயரினான் ஒருவன்*** - *தயரதன் என்னும் பெயருடைய ஒரு மன்னன்;* ***நேமி இம்பரில் பணி செய*** - *தனது ஆணை இவ்வுலகம் முழுதும் ஆட்சி புரியும் படியாக;* ***சம்பரப் பெயருடை*** - *சம்பராசுரன் என்ற பெயர் உடைய;* ***தானவர்க்கு இறைவனை*** - *அசுரர் குலத்து அரசனை;* ***தனு வலத்தால்*** - *தனது வில்லின் வலிமையால்;* ***அம்பரத்து உம்பர் புக்கு*** - *விண்வழியே வானுலகு சென்று;* ***அமரிடைத் தலை துமித்து*** - *தேவர்களைத் துன்புறுத்திய அவ்வரக்கனுடன் போரிட்டு அவன் தலையைத் துண்டித்து;* ***அமரர் உய்ய*** - *தேவர்கள் உய்யுமாறு;* ***உம்பருக்கு இறைவனுக்கு*** - *தேவர்களுக்கு மன்னனான இந்திரனுக்கு;* ***அரசு அளித்து*** - *(சம்பரனிடமிருந்து மீட்ட விண்ணுலகத்தின்) ஆட்சியைத் தந்து;* ***உதவினான்*** - *தேவர்களுக்கு உதவி செய்தான்;* ***இசை வளர்த்தான்*** - *அதனால் பெரும் புகழ் பெற்றான்.*

*அம்பரம் -விண். துமித்து -துண்டித்து. நேமி -ஆணை. இந்தச் செய்தி கையடைப் படலம் 9ம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது காண்க. ஐந்து சீராகப்பிரித்துக் கலித்துறையாகவும் இது முதலாக 6168 ஆம் பாடல் வரையுள்ளவற்றைக் கொள்ளவும் கூடும்.*

***6153. 'மிடல் படைத்து, ஒருவனாய், அமரர் கோன்***
***விடையதா வெரிநின் மேலாய்,***
***உடல் படைத்து அவுணர் ஆயினர***
***எலாம் மடிய, வாள் உருவினானும்,***
***அடல் படைத்து, அவனியை,***
***"பெரு வளம் தருக !" என்று அருளினானும்,***
***கடல் படைத்தவரொடும், கங்கை***
***தந்தவன் வழிக் கடவுள் மன்னன்,***

***மிடல் படைத்து*** *- (அந்தத் தயரதன்) மிகுந்த வலிமை கொண்டு;* ***ஒருவனாய்*** *- தனக்கெவரும் ஒப்பில்லாத ஒருவனாகவே;* ***அமரர் கோன் விடையதா*** *- தேவேந்திரனே காளையாக;* ***வெரி நின் மேலாய்*** *- அக்காளையின் முதுகின் மேல் அமர்ந்து;* ***உடல் படைத்து*** *- மாறுபாடு கொண்டு (அரக்கருடன் பகை கொண்டு);* ***அவுணர் ஆயினர் எலாம் மடிய*** *- அரக்கர்களான எல்லோரும் செத்தொழிய;* ***வாள் உருவினானும்*** *- வாளை உருவிப் போரிட்டவனான ககுத்தனும்;* ***அவனியை அடல் படைத்து*** *- உலகத்தை எல்லாம் வென்று;* ***பெருவளம் தருக*** *- நிறை வளம் தருக;* ***என்று அருளினானும்*** *- என்று கூறி உலகமக்களுக்கு அருள் செய்து உதவிய பிருதுவும்;* ***கடல் படைத்தவரொடும்*** *- கடலை உண்டாக்கிய சகரர்களுடனே;* ***கங்கை தந்தவன்*** *- கங்கையை மண்ணுலகுக்குக் கொண்டு வந்த பகீரதனும்;* ***வழிக் கடவுள் மன்னன்*** *- தோன்றிய குலத்திலே பிறந்த தெய்வத்தன்மை உடைய மன்னனாவான். மிடல் - வலிமை. அமரர்கோன் -தேவேந்திரன். விடை-காளை. வெரிந்-முதுகு. உடல்- மாறுபாடு. அவுணர் மடிய வாள் உருவியவன் ககுத்தன்; அவனியை வளம் தரச் செய்தவன் பிருது. கடல் படைத்தவர் சகரர்; கங்கையைக் கொணர்ந்தவன் பகீரதன். இவர்களெல்லாம் பிறந்த சூரியகுலத்தில் பிறந்தவன்தான் தசரதன். தெய்வத்தன்மை வாய்ந்தவன் என்றால், மானிடர்களைக் குறைவாக மதிப்பிடலாமோ என்று எடுத்துக் கூறினான்.*

***6154. 'பொய் உரைத்து உலகினில் சினவினார்***
***குலம் அறப் பொருது, தன் வேல்***
***நெய் உரைத்து, உறையில் இட்டு,***
***அறம் வளர்த்து, ஒருவனாய் நெறியில் நின்றான்,***
***மை உரைத்து உலவு கண் மனைவிபால்***
***வரம் அளித்து, அவை மறாதே,***

***மெய் உரைத்து, உயிர் கொடுத்து,***
***அமரரும் பெறுகிலா வீடு பெற்றான்.***

***பொய் உரைத்து*** *- பொய் கூறி வாழ்ந்தும்;* ***உலகினில் சினவினார் குலம்*** *- உலகிலே சினந்து எழுந்து தீமை செய்பவரும் ஆகிய அரக்ககுலத்தினர்;* ***அறப்பொருது*** *- அடியோடு அழியும்படி போர் செய்து;* ***தன் வேல் நெய் உரைத்து*** *- தனது வேலுக்கு நெய் பூசி;* ***உறையில் இட்டு*** *- உறையில் இட்டு வைத்து;* ***அறம் வளர்த்து*** *- அறநெறிகளை விரும்பி வளர்த்து;* ***ஒருவனாய் நெறியில் நின்றான்*** *- ஒப்பற்றவனாய் ஒழுக்க நெறியிலே நிலைத்து நின்றவன்;* ***மை உரைத்து உலவு கண்*** *- மை பூசப்பட்ட அசைகின்ற கண்ணை உடைய;* ***மனைவி பால்வரம் அளித்து*** *- மனைவியான கைகேயிக்கு இரண்டு வரங்களைக் கொடுத்து;* ***அவை மறாது மெய் உரைத்து*** *- அவற்றை மறுக்காமல் உண்மையை உரைத்து;* ***உயிர் கொடுத்து*** *- உயிரையும் தந்து;* ***அமரரும் பெறுகிலா*** *- தேவர்களும் அடைய இயலாத;* ***வீடு பெற்றான்*** *- பேரின்ப வீடான பரமபதத்தை அடைந்தான் (அந்தத் தயரதனாவான்).*

*'உரைத்து' என்பது 'பொய் உரைத்து' எனப் பேசி என்ற பொருளிலும் 'நெய் உரைத்து' என்பதில் பூசி என்ற பொருளிலும் 'மை உரைத்து' என்பதில் தீட்டி என்ற பொருளிலும் வந்தது. சினவுதல் - சினந்தெழுதல். பொய் உரைத்தலும், சினந்தெழுதலும் அரக்கருக்குரிய தாதலின் 'குலம்' என்பதற்கு அரக்க குலம் என்று பொருள் கொள்ளப்பட்டது. பிறழும் தன்மை உடைய கண்களை 'உலவு கண்' என்றார்.*

***6155. 'அனையவன் சிறுவர், எம் பெரும!***
***உன் பகைஞரானவரை அம்மா***
***இனையர் என்று உணர்தியேல்,***
***இருவரும் ஒருவரும் எதிர் இலாதார்;***
***முனைவரும் அமரரும், முழுது***
***உணர்ந்தவர்களும், முற்றும் மற்றும்,***
***நினைவு அருந் தகையர்; நம் வினையினால்***
***மனிதர் ஆய், எளிது நின்றார்.***

***எம்பெரும*** *- எங்கள் தலைவனே!* ***அனையவன் சிறுவர்*** *- அத்தகைய தயரதனது புதல்வர்கள்;* ***உன் பகைஞர் ஆனவரை*** *- உனக்கு பகைஞர் ஆயினர் அவர்களை;* ***இனையர் என்று உணர்தியேல்*** *- இத்தன்மை உடையவர்கள் என்பதை அறிய விரும்புவையேல்;* ***இருவரும் ஒருவரும் எதிரிலாதார்*** *- இராமன், இலக்குவன் ஆகிய இருவரும் ஒப்பாக எவருமில்லாதவர்;* ***முனைவரும் அமரரும்*** *- முனிவர்களும் தேவர்களும்;* ***முழுதுணர்ந்தவர்களும்*** *- முழுதும் உணர்ந்த ஞானிகளும்;* ***முற்றும் மற்றும்*** *- மற்றுமுள்ள உயிர்கள் எல்லாமும்;* ***நினைவு அரும் தகையர்*** *- நினைக்கவும் அரிய தன்மையர்;* ***நம் வினையினால் மனிதராய்*** *- நாம் செய்த தீவினையால் மனிதர்களாகி;* ***எளிது நின்றார்*** *- எளிதில் காண வந்து நின்றார்கள்.*

*வீடணன் இராவணனிடம் கொண்ட பெருமதிப்பால் அவரை 'எம்பெரும' என அழைத்தான். தசரத புத்திரர்களை இத்தகையர் என உணர்தல் அரிது என்பதனால் "அம்மா" என வியந்துரைத்தான். 'ஒருவரும் எதிரிலாதார்' ஒப்பாரும் மிக்காருமில்லாதவர் என்பது கருத்து.*

***6156. 'கோசிகப் பெயருடைக் குல முனித் தலைவன், "அக் குளிர் மலர்ப் பேர் ஆசனத்தவனொடு எவ் உலகமும் தருவென்" என்று அமையலுற்றான், ஈசனின் பெறு படைக்கலம், இமைப்பு அளவில் எவ் உலகில் யாவும் நாசம் உற்றிட நடப்பன, கொடுத்தன பிடித்துடையர்-நம்ப!***

***நம்ப** - விருப்பத்துக்குரியவனே! **அக்குளிர் மலர்ப்பேராசனத்தவனொடு** - அந்தக் குளிர்ந்த தாமரை மலரை ஆசனமாக உடைய பிரமனோடு; **எவ்வுலகமும் தருவென்** - எல்லா உலகங்களையும் படைப்பேன்; **என்று அமையலுற்றான் கோசிதப் பெயருடைக் குலமுனித்தலைவன்** - என்று தொடங்கியவனாய கோசிகன் என்ற பெயருடைய முனிவர் தலைவன் விசுவாமித்திரன்; **ஈசனின் பெறு படைக்கலம்** - சிவபிரானிடம் பெற்ற ஆயுதங்கள்; **இமைப்பளவில்** - கண்ணிமைக்கும் நேரத்தில்; **எவ்வுலகில் யாவும்** - எவ்வுலகிலும் வாழும் எல்லாவற்றையும்; **நாசம் உற்றிட நடப்பன** - நாசம் செய்யும்படி செல்வனவும்; **கொடுத்தன** - கொடுத்தனவும் ஆகியவற்றை; **பிடித்துடையர்** - கைக்கொண்டுள்ளனர்.*

*பிரமதேவன் போலவே எல்லா உலகங்களையும் எனது தவபலத்தால் இப்போதே படைப்பேன்' எனத் தொடங்கிய ஆற்றலுள்ளவர் விசுவாமித்திரர். நம்பன் - விரும்பத்தக்கவன். கோசிகன் -விசுவாமித்திரனின் மற்றொரு பெயர். விசுவாமித்திரர் திரிசங்கு மன்னனுக்காக எல்லா உலகங்களையும் படைக்கத் தொடங்கியது. இராம இலக்குவர்களுக்கு ஆயுதம் வழங்கியது ஆகிய செய்திகள் பாலகாண்டத்துள் கூறப்பட்டுள்ளன.*

***6157. 'எறும் வலிப் பொரு இல் தோள் அவுணரோடு அமரர், பண்டு, இகல் செய் காலத்து, உறு திறல் கலுழன்மேல் ஒருவன் நின்று அமர் செய்தானுடைய வில்லும், தெறு சினத்தவர்கள் முப்புரம் நெருப்புற உருத்து எய்த அம்பும், குறுமுனிப் பெயரினான், நிறை தவர்க்கு***

***இறை, தரக் கொண்டு நின்றார்.***

***எறும் வலிப் பொருவில் தோள்*** - *மிகுந்த வலிமை உடைய நிரற்ற தோளாற்றலும் உள்ள;* ***அவுணரோடு*** *- அசுரர்களுடன்;* ***அமரர் பண்டு இகல் செய்காலத்து*** *- முன்பு தேவர்கள் போர் செய்த காலத்திலே;* ***உறுதிறல் கலுழன் மேல்*** *- மிக்க வலிமை உடைய கருடன் மேல் அமர்ந்து;* ***ஒருவன் நின்று அமர் செய்தானுடைய வில்லும்*** *- ஒருவனாக எதிர்த்து நின்று போர் செய்த திருமாலின் வில்லும்;* ***தெறு சினத்தவர்கள்*** *- எவரையும் அழிக்கும் வன்மையும் சினமும் உடைய அரக்கர்கள் வாழும்;* ***முப்புரம் நெருப்பு உருத்து எய்த அம்பும்*** *- திரிபுரம் தீப்பற்றி அழிய, சிவபெருமான் சினந்தெய்த அம்பும்;* ***குறுமுனிப் பெயரினான்*** *- அகத்தியர் என்ற பெயர் கொண்ட முனிவரும்;* ***நிறை தவர்க்கு இறை தர*** *- நிறைந்த தவத்தை உடைய முனிவர்களுக்கெல்லாம் தலைவருமானவர் தர;* ***கொண்டு நின்றார்*** *- அவற்றைப் பெற்றுக் கொண்ட சிறப்புடையவர்கள்.*

*எறுழ்வலி-மிக்க வலிமை. கலுழன்-கருடன். குறுமுனி-அகத்தியர். அகத்தியர் இராமனுக்கு வில்லும் அம்பும் கொடுத்த செய்தி, ஆரண்ய காண்டம் அகத்தியப் படலத்துள் கூறப்பட்டுள்ளது.*

***6158. 'நாவினால் உலகை நக்கிடுவ; திக்கு***
***அளவிடற்கு உரிய; நாளும்,***
***மேவு தீ விடம் உயிர்ப்பன; வெயில்***
***பொழி எயிற்றன; அவ் வீரர்***
***ஆவம்ஆம் அரிய புற்று உறைவ;-***
***முற்று அறிவருக்கு அழிவு செய்யும்***
***பாவ காரியர் உயிர்ப் பதம் அலாது,***
***இரை பெறா-பகழி நாகம்.***

***பகழிநாகம்*** *- இராமனிடமுள்ள அம்புகளாகிய நாகங்கள்;* ***நாவினால் உலகை நக்கிடுவ*** *- நாவால் உலகை எல்லாம் நக்கும் திறனுடையன;* ***திக்கு அளவிடற்குரிய*** *- திசைகளை அளவிடுவதற்கு உரியன;* ***நாளும் மேவு தீவிடம் உயிர்ப்பன*** *- நாள்தோறும் பொருந்திய தீய விஷத்தை வெளிவிடுவன;* ***வெயில் பொழி எயிற்றன*** *- ஒளியை உமிழும் பற்களை உடையன;* ***அவ்வீரர் ஆவமாம் அரியபுற்று உறைவன*** *- அந்த வீரர்களாகிய இராம இலக்குவர்களின் அம்புக் கூடாகிய புற்றிலே தங்கி இருப்பன;* ***முற்று அறிவருக்கு*** *- முற்றுணர்ந்த மெய்யறிவினராகிய முனிவர்களுக்கு;* ***அழிவு செய்யும் பாவ காரியர்*** *- தீமை விளைவிக்கும் பாவிகளின்;* ***உயிர்ப்பதம் அலாது*** *- உயிராகிய உணவை அல்லாது;* ***இரை பெறா*** *- வேறு இரையைப் பெறாதனவாம்.*

*பகழிநாகம்-பகழியை நாகமாக உருவகித்தார். அதற்கேற்ப நாகத்தின் செயல்களாக நக்குதல்-விடமுயிர்த்தல் புற்றுறைதல் ஆகிய செயல்களைக் கூறுவதால்*

*முற்றுருவகம் ஆகும். ஆவம் - அம்பறாத்தூணி. இதனை அரிய புற்று என்றார், பதம் - உணவு பாவகாரியர்-பாவம் செய்பவர்கள் (தீயவர்). வெயில்-ஒளி அம்பைப் பாம்பாக உருவகம் செய்ததற்கேற்ப நாக்கும், பல்லும் கூறப்பட்டன. உலகை நக்கிடுவ- உலகத்தையே நாவினால் நக்கிக் கொல்லவல்லன.*

***6159. 'பேருமோ ஒருவரால், அவர்களால்***
***அல்லது? இவ் பெரியவேனும்,***
***நாரும் மூரியும் அறா; நம்முடைச்***
***சிலைகள்போல் நலிவ ஆமோ?***
***தாருவோ, வேணுவோ, தாணுவாய்***
***உலகினைத் தழுவி நிற்கும்***
***மேருவோ, மால் வரைக் குலம் எலாம்***
***அல்லவோ, வில்லும் மன்னோ?***

***வில்லும்** - அவர்கள் கைக்கொண்ட விற்களும்; **தாருவோ வேணுவோ** - மரமோ, மூங்கிலோ (அல்ல); **தாணுவாய் உலகினைத் தழுவி நிற்கும்** - தூணாக உலகத்தையே தாங்கி நிற்கின்ற; **மேருவோ மால்வரைக் குலமெலாம் அல்லவோ** - மேருமலையோ அல்ல பெரிய மலைகளையெல்லாம் சேர்த்தமைத்தன அல்லவோ? **இவ்அவர்களால் அல்லது** - இந்த வீரர்களான இராம. இலக்குவர்களை அல்லது; **ஒருவரால் பேருமோ** - வேறு ஒருவரால் அசைக்க இயலுமோ? **நாரும் மூரியும் அறா** - நாணும் வலிமையும் நீங்காதன; **பெரிய வேனும்** - (நமது விற்கள்) உருவத்தில் பெரியனவாயினும்; **நம்முடைச் சிலைகள் போல் நலிவ ஆமோ** - நம்முடைய விற்களைப் போல (அவை) நலிவன ஆமோ?*

*'வில்' உகரச் சாரியை பெற்று 'வில்லு" என வந்தது.*

***6160. 'உரம் ஒருங்கியது, நீர் கடையும்***
***வாலியது மார்பு; உலகை மூடும்***
***மரம் ஒருங்கிய; கராதியர், விராதனது***
***மால் வரைகள் மானும்***
***சிரம் ஒருங்கின; இனிச் செரு***
***ஒருங்கின-இனி, தேவர் என்பார்***
***பரம் ஒருங்குவது அலால், பிறிது***
***ஒருங்காதது ஓர் பகையும் உண்டோ?***

***நீர் கடையும் வாலியது மார்பு** - (இராமன் ஏவிய அம்பால்) பாற்கடலை ஒருவனாகவே கடைந்த வாலியின் மார்பு; **உரம் ஒடுங்கியது** - வலிமை ஒடுங்கிப் போயிற்று; **உலகை மூடும் மரம் ஒடுங்கிய** - உலகை மூடுமளவுக்கு ஓங்கி*

*வளர்ந்தமராமரங்கள் ஒடுங்கின;* ***கராதியர் விராதனது*** *- கரன் முதலியோருடையவும் விராதனுடையதுமான;* ***மால் வரைகள் மானும் சிரம் ஒருங்கின*** *- பெரிய மலைகளை ஒத்ததலைகள் ஒடுங்கின;* ***இனிச் செரு ஒடுங்கின*** *- இனி அசுரர் போர் செய்வது ஒடுங்கின;* ***இனி தேவர் என்பார்*** *- இனி, தேவர்கள் என்போரிடம்;* ***பரம் ஒருங்குவது அலால்*** *- நமது சுமை ஒடுங்குவதல்லாது;* ***பிறிது ஒருங்காததோர் பகையும் உண்டோ*** *- வேறு அவர்களுக்கு ஒடுங்காத பகைவர்களும் உண்டோ?*

*நீர் - இங்கே பாற்கடலைக் குறிக்கும். கராதியர் -கரன் முதலானோர். மானும்- ஒக்கும். பரம்-சுமை. அலால் - அல்லால் என்பதன் இடைக்குறை. ஒருங்குதல்- ஒடுங்குதல், அழிதல் என்ற பொருள் தந்து நின்றது.*

***6161. 'சொல் வரம் பெரிய மா முனிவர்***
***என்பவர்கள், தம் துணை இலாதார்,***
***"எல் வரம் பெரிய தோள் இருவரே***
***தமரொடும் உலகம் யாவும்***
***வெல்வர்" என்பது தெரிந்து, எண்ணினார்,***
***"நிருதர் வேர் முதலும் வீயக்***
***கொல்வர்" என்று உணர்தலால், அவரை***
***வந்து அணைவது ஓர் இயைபு கொண்டார்.***

***சொல்வரம் பெரிய*** *- எவரும் வியந்து கூறும் வரபலம் மிக்க;* ***மாமுனிவர் என்பவர்கள்*** *- சிறந்த முனிவர்கள் என்போர்;* ***தம் துணையிலாதார்*** *- தமக்கு வரும் துன்பங்களைப் போக்கும் துணைவர் இல்லாதவராய்;* ***எல் வரம் பெரியதோர்*** *- சிறந்த வரபலம் பெற்ற பெரிய தோள்களையுடைய;* ***இருவரே*** *- இராமனும் இலக்குவனுமாகிய இருவர் மட்டுமே;* ***தமரொடும் உலகம் யாவும் வெல்வர்*** *- தமரோடு உலகனைத்தும் வெல்ல வல்லவராவர்;* ***என்பது தெரிந்து*** *- என்பதைத் தெரிந்து கொண்டதால்;* ***எண்ணினார்*** *- நினைத்துப் பார்த்தவர்கள்; நிருதர் வேர்* ***முதலும் வீயக் கொல்வர்*** *- அரக்கர்கள் அடியோடு அழிந்து படுமாறு கொல்வார்கள்;* ***என்று உணர்தலால்*** *- என்று அறிந்துணர்வதால்;* ***அவரை வந்து அணைவதோர்*** *- அந்த வீரர்களைத் துணையாகக்கொண்டு அடைவதற்காக ஒரு;* ***இயைபு கொண்டார்*** *- தொடர்பு கொண்டார்கள்.*

*சொல்வரம்-வியந்து கூறும் வரபலம்.*

***6162. 'துஞ்சுகின்றிலர்களால், இரவும் நன்***
***பகலும், நிற் சொல்ல ஒல்கி,***
***நெஞ்சு நின்று அயரும் இந் நிருதர்;***
***"பேர் சனகி ஆம் நெடியது ஆய***
***நஞ்சு தின்றனர்கள்தாம் நண்ணுவார்***

***நரகம்" என்று எண்ணி, நம்மை***
***அஞ்சுகின்றிலர்கள்-நின் அருள் அலால்,***
***சரண் இலா அமரர் அம்மா!***

***பேர் சனகியாம் நெடியதாய நஞ்சு*** *- சானகி என்ற பெயரை உடைய கொடிய விடத்தை;* ***தின்றனர்கள் தாம்*** *- தின்றவர்களான இவ்வரக்கர்;* ***நரகம் நண்ணுவார்*** *- (இறந்து) நரகம் அடைவார்கள்;* ***என்று எண்ணி*** *- என்று நினைத்து;* ***நின் அருள் அலால் சரண் இலா அமரர்*** *- இதுகாறும் உனது அருளை அல்லாது வேறு புகலிடம் இல்லாத தேவர்கள்;* ***அஞ்சுகின்றிலர்கள்*** *- நமக்கு அஞ்சாதவராயினர்;* ***நிற்சொல்ல ஒல்கி*** *- இதனை உனக்குக் கூற அஞ்சி;* ***நெஞ்சு நின்று அயரும் இந்நிருதர்*** *- மனம் மயங்கி நின்று வருந்தும் இந்த அரக்கர்கள்;* ***இரவும் நன் பகலும்*** *- இரவும் பகலுமாகிய எப்போதும்;* ***துஞ்சுகின்றிலர்கள்*** *- உறங்காதவராய் உள்ளனர்.*

*துஞ்சுதல்-தூங்குதல். ஒல்கி-பயந்து. அயரும்-மயங்கும் (சோரும்) சனகி என்னும் பெரு நஞ்சு (9921) என்று பின்பும் கூறுவான்.*

***6163. 'புகல் மதித்து உணர்கிலாமையின், நமக்கு***
***எளிமை சால் பொறைமை கூர,***
***நகல் மதிக்கில மறுப் பொலிய***
***வாள் ஒளி இழந்து, உதயம் நண்ணும்***
***பகல் மதிக்கு உவமை ஆம் விபுதராம்,***
***இரவு கால் பருவ நாளின் அகல் மதிக்கு உவமை ஆயின***
***தபோதனர் உளார் வதனம் அம்மா?***

***தபோதனர் உளார்வதனம்*** *- தவச்செல்வர்களான முனிவர்களது முகங்களெல்லாம்;* ***புகல்மதித்து உணர்கிலாமையின்*** *- முன்பு, தங்களுக்குப் பாதுகாப்பு எதுவென மதித்து அறியாமையால்;* ***நமக்கு எளிமை சால்*** *- நமக்கு எளியவர்களாகவும்;* ***பொறைமை கூர*** *- மிகுந்த பொறுமை உள்ளவர்களாகவும்;* ***நகல் மதிக்கில*** *- மகிழ்ச்சி இல்லாதவர்களாகவும்;* ***மறுப்பொலிய வாள் ஒளி இழந்து*** *- கறை விளங்க, நல்ல ஒளியை இழந்து;* ***உதயம் நண்ணும்*** *- சூரியன் உதித்தபின் காணப்படும்;* ***பகல் மதிக்கு உவமையாம்*** *- பகலில் தோன்றும் மதியை ஒத்துக் காணப்பட்டன;* ***விபுதராம்*** *- தவமுனிவர்களாகிய அவர்கள் (முகங்கள்);* ***இரவு கால் பருவ நாளின்*** *- இரவுக்காலத்தில் பௌணர்மியில் தோன்றும்;* ***அகல் மதிக்கு உவமை ஆயின*** *- முழு மதிக்கு உவமை ஆயின.*

*புகல்-பாதுகாப்பான இடம். நகல் - மகிழ்ச்சி. பருவ காலம்-பௌர்ணமி நாள். வதனம்-முகம். தபோதனர்; விபுதர் -முனிவர்கள்.*

***6164. 'சிந்து முந்து உலகினுக்கு இறுதி புக்கு,
உரு ஒளித்து, உலைதல் செய்வார்,-
இந்துவின் திரு முகத்து இறைவி
நம் உறையுளாள் என்றலோடும்,-
அந்தகன் முதலினோர், அமரரும்
முனிவரும் பிறரும், அஞ்சார்
வந்து, தம் உலகமும் வானமும்
கண்டு உவந்து, அகல்வர் மன்னோ.***

***சிந்து முந்து உலகினுக்கு*** - *(நமக்குப் பயந்து) கடல் பொங்கி எழும் இந்த உலகத்துக்கு அப்பால்;* ***இறுதி புக்கு*** - *முடிவிடமான கடைசியில் சென்று;* ***உரு ஒளித்து*** - *தங்கள் வடிவத்தை ஒளித்து, வேற்றுருவத்தில் வாழ்ந்து;* ***உலைதல் செய்வார்*** - *வருந்தித் தவித்தவர்கள்;* ***இந்துவின் திருமுகத்து இறைவி*** - *மதியைப்போன்ற திருமுகத்தை உடைய தெய்வமகளான சீதாபிராட்டி;* ***நம் உறையுளாள்*** - *நமது உறைவிடமான இலங்கையில் இருக்கிறாள்;* ***என்றலோடும்*** - *என்று தெரிந்தவுடன்;* ***அந்தகன் முதலினோர்*** - *எமன் முதலானவர்களும்;* ***அமரரும் முனிவரும்*** - *தேவர்களும், முனிவர்களும்;* ***பிறரும்*** - *மற்றுமுள்ளவர்களும் (கின்னரர் முதலானோர்);* ***அஞ்சார்*** - *அச்சமில்லாதவர்களாக;* ***வந்து தம் உலகமும் வானமும் கண்டு*** - *வந்து, தங்கள் விண்ணுலகத்தையும் வானத்தையும் பார்த்து விட்டு;* ***உவந்து அகல்வர்*** - *மகிழ்ந்து செல்வதாயினர்.*

*சிந்து-கடல். முந்துதல்-பொங்குதல். இந்து-சந்திரன். அந்தகன்- எமன். பிறர் கின்னரர் முதலானோர்.*

***6165. 'சொலத் தகாத் துன்னிமித்தங்கள்
எங்கணும் வரத் தொடர்வ; ஒன்னார்,
வெலத் தகா அமரரும் அவுணரும்,
செருவில் விட்டன விடாத
குலத்த கால் வய நெடுங் குதிரையும்,
அதிர் குரல் குன்றும், இன்று
வலத்த கால் முந்துறத் தந்து, நம்
மனையிடைப் புகுவ மன்னோ.***

***சொலத்தகாத்துன்னிமித்தங்கள்*** - *சொல்லி முடியாத எத்தனையோ கெட்ட சகுனங்கள்;* ***எங்கணும் வரத் தொடர்வ*** - *எங்கும் தொடர்ந்து காணப்படுகின்றன;* ***ஒன்னார் வெலத்தகா*** - *பகைவர்களால் வெல்ல முடியாதவையான;* ***விடாத குலத்தகால் வயநெடுங்குதிரையும்*** - *நீங்காத சிறந்த குலப்பிறப்பை உடைய வலி சிறந்த நமது குதிரைகளும்;* ***அதிர் குரல் குன்றும்*** - *பகைவர் அஞ்சும்படி பிளிறும் குரல் வாய்ந்த மலை போன்ற நமது யானைகளும்;* ***அமரரும் அவுணரும்*** - *தேவர்களும்*

*அரக்கர்களும்;* **செருவில் விட்டன** *- செய்த போரில் பங்கு கொண்ட அவை;* **நம்மனையிடை** *- நமது இல்லங்களிலே;* **வலத்தகால் முந்துறத் தந்து புகும்** *- வலது காலை முன்னே வைத்துப் புகுகின்றன.*

*குலம்-நல்ல குடிப்பிறப்பு. வயம்-வலிமை. சொலத்தகா - வெலத்தகா என்பன சொல்லத்தகா, வெல்லத்தகா என்பதன் தொகுத்தல் விகாரம். யானையும், குதிரையும் வலக் காலை முன்னே தூக்கி வைத்து வீட்டுக்குள் புகுவது துர்நிமித்தம் என்பது உலக வழக்காகும். அடுத்தபாடல்களிலும் பல துன்னிமித்தங்கள் கூறப்படுகின்றன.*

***6166. 'வாயினும் பல்லினும் புனல் வறந்து***
***உலறினார், நிருதர்; வைகும்***
***பேயினும் பெரிய பேம் நரிகளும்***
***புரிதரும்; பிறவும் எண்ணின்,***
***கோயிலும் நகரமும், மட நலார்***
***குழலும், நம் குஞ்சியோடும்,***
***தீயின் வெந்திடுமலால் ஒரு***
***நிமித்தம் பெறும் திறனும் உண்டோ?***

**நிருதர் வாயினும் பல்லினும் புனல் வறந்து உலறினார்** *- அரக்கர்கள் வாயிலும் பல்லிலும் நீர் வறண்டு போய் பொலிவிழந்தனர்;* **வைகும் பேயினும் பெரிய பேம் நரிகளும் புரிதரும்** *- தங்கியிருக்கும் பேய்களும் அவற்றைவிடப் பெரியனவாகிய அச்சம் தரும் நரிகளும் பல்கிப் பெருகுகின்றன;* **பிறவும் எண்ணின்** *- வேறும் நினைப்போமாயின்;* **கோயிலும் நகரமும்** *- நமது அரண்மனையும், இலங்கைமாநகரமும்;* **மடநலார் குழலும்** *- இளம் பருவத்தினரான நமது மகளிரின் கூந்தலும்;* **நம் குஞ்சியோடும்** *- நமது தலைமுடியுடனே;* **தீயின் வெந்திடும்** *- நெருப்பிலே வெந்து கருகும்;* **அலால் ஒரு நிமித்தம்** *- இவையல்லாத ஒரு நல்ல நிமித்தம்;* **பெறும் திறனும் உண்டோ** *- பெறும் வகை நமக்குள்ளதோ?*

*வறந்து - வற்றிப்போய். உலறினார் - உலர்ந்து பொலிவிழந்தார். கண்ணும் முகமும் உலறி (சீவக. 2996) கோயில்-அரண்மனை குஞ்சி-ஆண்கள் தலைமயிர். பேம்-அச்சம், மடம். இளமை. நல்லார் என்பது 'நலார்' என நின்றது தொகுத்தல் விகாரம். 'உண்டோ' ஓகாரம் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது; இல்லை என்பது பொருள்.*

***6167. 'சிந்த மா நாகரைச் செரு முருக்கிய***
***கரன், திரிசிரத்தோன்,***
***முந்த மான் ஆயினான், வாலியே***
***முதலினோர் முடிவு கண்டால்,***
***அந்த மான் இடவனோடு, ஆழி மா***

***வலவனும், பிறரும், ஐயா!***
***இந்த மானிடவராம் இருவரோடு***
***எண்ணல் ஆம் ஒருவர் யாரே?***

***ஐயா*** *- தலைவனே!* ***சிந்த மாநாகரைச் செருமுருக்கிய*** *- சிறந்த தேவர்களை எல்லாம் சிதறும்படி போரில் வலிமை அழித்த;* ***கரன், திரி சிரத்தோன்*** *- கரனும் திரிசிரனும்;* ***முந்த மான் ஆயினான்*** *- முன்னே மாய மானாக வந்த மாரீசனும்;* ***வாலியே முதலினோர்*** *- கிட்கிந்தை மன்னனான வாலி முதலானவர்களும்;* ***முடிவு கண்டால்*** *- இராம லக்குவரால் இறந்தழிந்தார்கள் என்பதை அறிந்தால்;* ***அந்த மான் இடவனோடு*** *- மான் போன்ற உமையவளை இடப்புறத்தில் கொண்ட சிவபிரானும்;* ***ஆழிமாவலவனும்*** *- சக்கரப் படையை உடைய வல்லவரான திருமாலும்;* ***இந்த மானிடவராம்*** *- இந்த மனிதர்களாகிய;* ***இருவரோடு*** *- இராமன், இலக்குவன் என்ற இருவருடனே;* ***எண்ணலாம் ஒருவர் யாரே*** *- நிகராக எண்ணத் தகுந்த ஒருவர் யார் இருக்கிறார்கள்?*

*நாகர்-தேவர்கள். சிந்த-சிதறியோட. செரு-போர். முருக்கிய- வலிமையை அழித்த மான். இடவன்-மானை இடக்கரத்தில் ஏந்திய சிவன் எனவும் கொள்ள இடமுண்டு.*

***6168. 'இன்னம் ஒன்று உரை செய்தால்;***
***இனிது கேள், எம்பிரான்! இருவர் ஆய***
***அன்னவர் தம்மொடும் வானரத்***
***தலைவராய் அணுகி நின்றார்,***
***மன்னும் நம் பகைஞர் ஆம்***
***வானுளோர்; அவரொடும் மாறுகோடல்***
***கன்மம் அன்று; இது நமக்கு உறுதி***
***என்று உணர்தலும், கருமம் அன்றால்.***

***எம்பிரான்!*** *- எமது தலைவனே!* ***இன்னம் ஒன்று உரை செய்தால்*** *- இன்னும் ஒன்று கூறுவதானால்;* ***இனிது கேள்*** *- அதனை இனிதே கேட்பாயாக;* ***இருவராய அன்னவர் தம்மொடும்*** *- இருவரான ராம, இலக்குவர்களோடும்;* ***மன்னும் நம் பகைஞர் ஆம் வானுளோர்*** *- நிலைபெற்ற நமது பகைவர்களாகிய விண்ணுளோர்;* ***வானரத் தலைவராய் அணுகி நின்றார்*** *- வானரத் தலைவர்களாக நெருங்கி நின்றனர்;* ***அவரொடு மாறுகோடல்*** *- அவர்களோடு மாறுபாடு கொள்ளுதல்;* ***கன்மம் அன்று*** *- காரியம் ஆகாது;* ***இது நமக்கு உறுதி என்று உணர்தலும் கருமம் அன்று*** *- இவ்வாறு பகைத்துக் கொள்ளுதல் உறுதி என உணர்வதும் செய்யத் தக்கதல்ல.*

*தேவர்களே வானரர்களாக வந்தனர் என முன்னர் குறிக்கப்பட்டுள்ளது. (199) மாறுகோடல்-பகைத்துக் கொள்ளுதல்.*

*கலித்துறை*

***6169. 'இசையும் செல்வமும் உயர் குலத்து இயற்கையும்
எஞ்ச,
வசையும் கீழ்மையும் மீக்கொள, கிளையொடும்
மடியாது,
அசைவு இல் கற்பின் அவ் அணங்கை விட்டருளுதி;
இதன்மேல்
விசையம் இல்' எனச் சொல்லினன்-அறிஞரின்
மிக்கான்.***

***இசையும் செல்வமும்*** - *புகழும் செல்வமும்;* ***உயர் குலத்து இயற்கையும்*** - *உயர்ந்த நமது குல இயல்பும்;* ***எஞ்ச*** - *தாழ்ந்து கெட;* ***வசையும் கீழ்மையும் மீக்கொள*** - *பழியும் தாழ்வும் மேலோங்க;* ***கிளையொடும் மடியாது*** - *உற்றார் உறவினரோடு அழியாது;* ***அசைவு இல் கற்பின் அவ்வணங்கை*** - *தளர்தல் இல்லாத கற்பை உடைய தெய்வமகளான சீதையை;* ***விட்டருளுதி*** - *(இராமனிடம் சேர) விட்டருள்வாயாக;* ***இதன் மேல் விசையம் இல்*** - *இவ்வாறு விடுவதை விடச்சிறந்த வெற்றி வேறில்லை;* ***எனச் சொல்லினன் அறிஞரின் மிக்கான்*** - *என்று அறிஞரில் எல்லாம் சிறந்தவனான வீடணன் கூறினான்;*

*அறிஞரில் மிக்கான்-அறிவாளிகளில் சிறந்தவன் (வீடணன்) அறிவுடையார் ஆவது அறிவார் என்ற வள்ளுவர் கருத்தை நினைவு கூர்க. அசைவு + இல் + கற்பு-நிலை தடுமாறாது கற்பு. விசையம் - வெற்றி. நாம் செய்ய வேண்டியது சீதா பிராட்டியை இராமனிடம் செல்ல விடுவித்தலே. இதனால் நமக்குப் புகழ் உண்டு. மேற்போக்காகப் பார்த்தால் சீதையை விட்டு விடுவது இழிவு போல் தோன்றினும் இதைவிட வெற்றி வேறில்லை என்றதன் கருத்தை உன்னுக. இதைச் செய்யத் தவறினால் பழியும், தாழ்வுமே மேலோங்கும். அத்துடன் நமது சுற்றமெல்லாம் அழிந்து பட நேரிடும் என, இராவணனுக்கு வீடணன் எடுத்துக் கூறினான் என்க. 'விட்டிடுக' என்னாது 'விட்டருளுதி' எனச் சொன்ன வாசகம் கருதுக. மறைப்பொருள் உணர்ந்து அறிவு அமைந்த தமையனிடத்து இன்னமும் பாசமும் மரியாதையும் காட்டுகிறான் வீடணன்.*

*இராவணன் வீடணனைக் கடிந்து பேசுதல்*

***6170. கேட்ட ஆண்தகை கரத்தொடு கரதலம் கிடைப்பப்
பூட்டி, வாய்தொறும் பிறைக் குலம் வெண் நிலாப்
பொழிய, வாள் தடம் தவழ் ஆரமும் வயங்கு ஒளி மார்பும்
தோள் தடங்களும் குலுங்க, நக்கு, இவை இவை
சொன்னான்:***

***கேட்ட ஆண்தகை*** - *வீடணன் கூறிய மொழிகளைக் கேட்ட ஆண்மை மிக்கவனாகிய இராவணன்;* ***கரத்தொடு கரதலம் கிடைப்பப்பூட்டி*** - *கையோடு கை*

*பொருந்த விரல்களைக் கோத்துக்கொண்டு;* ***வாய்தொறும்*** *- பத்து வாய்களிலும் உள்ள;* ***பிறைக்குலம்*** *- பிறைச்சந்திரனைப் போன்ற பற்கள்;* ***வெண் நிலாப் பொழிய*** *- வெள்ளிய நிலவொளியைப் பொழிய;* ***வாள் தடம் தவழ் ஆரமும்*** *- வாளால் உளவாகிய விழுப்புண் தழும்பின் மீது தவழும் மார்பும்;* ***வயங்கு ஒளி மார்பும்*** *- விளங்கும் ஒளியுடைய மார்பும்;* ***தோள் தடங்கலும் குலுங்க நக்கு*** *- தோள்களாகிய மலைகளும் குலுங்கும் படி சிரித்து;* ***இவை இவை சொன்னான்*** *- பின்வருமாறு கூறலானான்.*

*கரதலம் - கை. இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பிறைக்குலம் - பிறைச்சந்திரனைப் போன்ற கோரைப் பற்கள். ஆண்டகை -ஆண்மை மிக்கவன். நக்கான் - (கோபச் சிரிப்பு) சிரித்தான். வாள்தடம் - போரிலே வாள்கள் பட்டு, விழுப்புண்ணான இடம். விழுப்புண் விளைத்த தழும்புகள் ஆரம் மறைத்தது. குலுங்கி சிரித்தபோது தழும்புகள் தெரிந்தன. பிறை உவமையாகுபெயராய்க் கோரைப்பற்களைக் குறித்தது.*

***6171. ' "இச்சை அல்லன உறுதிகள் இசைக்குவென்"***
***என்றாய்;***
***பிச்சர் சொல்லுவ சொல்லினை; என் பெரு விறலைக்***
***கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை; குறித்தது,***
***அச்சமோ? அவர்க்கு அன்பினோ?***
***யாவதோ?-ஐயா!***

***ஐயா ! இச்சை அல்லன உறுதிகள்*** *- நான் விரும்பத்தகாத உறுதிகளை;* ***இசைக்குவென் என்றாய்*** *- எனக்குச் சொல்வேன் என்றாய்;* ***பிச்சர் சொல்லுவ சொல்லினை*** *- பித்தர்கள் கூறுவதைக் கூறினாய்;* ***என் பெரு விறலை*** *- எனது பேராற்றலை;* ***கொச்சை மானிடர்*** *- அற்பமான மனிதர்கள்;* ***வெல்குவர் என்றனை*** *- வெல்லுவார்கள் என்று கூறினாய்;* ***குறித்தது*** *- இவ்வாறு குறிப்பிட்டுக் கூறியது;* ***அச்சமோ*** *- அந்த மனிதர்களிடம் கொண்ட அச்சத்தாலோ?* ***அவர்க்கு அன்பினோ*** *- அவர்களிடம் நீ கொண்ட அன்பு காரணமாகவா?* ***யாவதோ*** *- அல்லது வேறேதேனும் காரணம் கருதியோ?*

*பிச்சர்-பித்தர். விறல்-வலிமை, கொச்சை - இழிவு (அற்பம்) "தெள்ளிய பொருள் இயம்பலாற்றுவன்" என வீடணன் முன் கூறியதை நினைத்து 'உறுதிகள் இசைக்குவன் என்றாய்" என்றான் என்க. 'உறுதிகள் சொல்வதாகத் தொடங்கி பித்தர் போல் பிதற்றுகிறாயே' என வீடணன் கூறியதை எள்ளுகிறான்.*

***6172. ' "ஈங்கு மானுடப் பசுக்களுக்கு, இலை வரம்"***
***என்றாய்;***
***தீங்கு சொல்லினை; திசைகளை உலகொடும்***

***செருக்கால்***
***தாங்கும் யானையைத் தள்ளி, அத் தழல்***
***நிறத்தவனை***
***ஓங்கல் ஒன்றொடும் எடுக்கவும் வரம் கொண்டது***
***உண்டோ?***

***ஈங்கு மானுடப்பசுக்களுக்கு*** - இங்கே மனிதர்களாகிய இந்தப் பசுக்களைக் கொல்ல; **இலைவரம் என்றாய்** - நான் (பிரமனிடம்) வரம் பெறவில்லை என்று கூறினாய்; **தீங்கு சொல்லினை** - இதனால் பழுதானதையே கூறினாய்; **திசைகளை உலகொடும் செருக்கால் தாங்கும்** - எல்லாத் திசைகளையும் உலகத்தோடு தமது வலிமையால் தாங்கும்; **யானையைத் தள்ளி** - திக்கு யானைகளை வென்று விலக்கிட; **அத்தழல் நிறத்தவனை** - அந்தத் தீ நிறத்தவனான சிவபிரானை; **ஓங்கல் ஒன்றொடும்** - அவனிருக்கும் கைலை மலையோடும்; **எடுக்கவும் வரம் கொண்டதுண்டோ?** - பேர்த்து எடுப்பதற்கு வரம் கேட்டுப் பெற்றதுண்டோ?

*'மனிதர்பால் கொற்றம் கொள்ளலை' (6148) என்று வீடணன் கூறியதை எண்ணி, 'இலைவரம்' என்றாய் என்றான்.*

***6173. 'மனக்கொடு அன்றியும், வறியன வழங்கினை;***
***வானோர்***
***சினக் கொடும் படை செருக்களத்து என்னை என்***
***செய்த? எனக்கு நிற்க; மற்று, என்னொடு இங்கு ஒரு***
***வயிற்று உதித்த***
***உனக்கு மானிடர் வலியர் ஆம் தகைமையும்***
***உளதோ?***

**மனக்கொடு அன்றியும்** - மனம் கொண்டு சிந்தித்துப் பார்க்காமலேயே; **வறியனை வழங்கினை** - பொருளற்ற வெறும் சொற்களைக் கூறினாய்; **வானோர் சினக்கொடும்படை** - தேவர்களின் சினம்மிக்க கொடிய படைகள் எல்லாம்; **செருக்களத்து என்னை என்ன செய்த** - போர்க்களத்திலே என்னை என்ன செய்து விட்டன? **எனக்கு நிற்க** - எனக்கு இருக்கட்டும் ; **மற்று என்னொடு இங்கு ஒருவயிற்று உதித்த** - என்னுடனே இங்கே ஒரு வயிற்றிலே தோன்றிய; **உனக்கு** - (என் உடன்பிறந்தவனான) உனக்கு; **மானிடர்** - அந்த மனிதர்கள்; **வலியர் ஆம் தகைமையும் உளதோ** - வலிமை மிக்க தன்மையர் ஆவதுண்டோ?

*வறியன-பொருள் இல்லாத வெற்றுரை.*

***6174. 'சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை; பன் முறை***

***தோற்று,***
***வெல்லும் ஆற்றலும் ஒரு முறை பெற இலை;***
***விண்ணைக்***
***கல்லும் ஆற்றல் என் கிளையையும் என்னையும்***
***களத்தில்***
***கொல்லும் மாற்றலர் உளர் எனக் கோடலும்***
***கொண்டாய்.***

***சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை*** - *சொல்லத் தகுந்த சொற்களை நீ தெரிந்து சொல்லவில்லை;* ***பன்முறை தோற்று*** - *(நமது பகைவர்கள் என்னுடன் போர் செய்து) பலமுறை தோற்றும்;* ***வெல்லும் ஆற்றலும் ஒரு முறை இலை*** - *என்னை வெற்றி கொள்ளும் வலிமையை ஒருமுறையும் கூட அவர்கள் பெறவில்லை;* ***விண்ணைக்கல்லும் ஆற்றல்*** - *விண்ணுலகத்தையே பெயர்த்து எறியத்தக்க ஆற்றலுடைய;* ***என் கிளையையும் என்னையும்*** - *எனது உறவினர்களையும் என்னையும்;* ***களத்தில் கொல்லும் மாற்றலர்*** - *போர்க்களத்தில் கொல்லத்தக்க பகைவர்கள்;* ***உளர் எனக் கோடலும் கொண்டாய்*** - *உள்ளனர் என்று எண்ணிக் கொண்டாய்.*

*மாற்றம் - சொற்கள் ஒருமுறை பெறவிலை - பெறவில்லை. கல்லுதல்- தோண்டுதல் (கிளர்தல்) விண்-விண்ணுலகம். கிளை - உறவினர். கொல்லும் மாற்றலர் என்பது கொல்லும் ஆற்றலர் எனவும் பொருள் கொள்ள நின்றது.*

***6175. 'தேவரின் பெற்ற வரத்தினது என் பெருஞ்***
***செருக்கேல்,***
***மூவரில் பெற்றம் உடையவன்தன்னொடும், முழுதும்***
***காவலின் பெற்ற திகிரியான்தன்னொடும், கடந்தது***
***ஏவரின் பெற்ற வரத்தினால் ? இயம்புதி-***
***இளையோய் !***

***இளையோய்*** - *இளையவனே !* ***தேவரின் பெற்ற வரத்தினது*** - *தேவர்களிடம் நான் பெற்ற வரத்தினால் அமைந்தது;* ***என் பெரும் செருக்கேல்*** - *எனது பெரிய வலிமை என்பாயாயின்;* ***மூவரில்*** - *முதற் கடவுள் மூவரில்;* ***பெற்றம் உடையவன் தன்னொடும்*** - *காளையை ஊர்தியாக உடைய சிவபிரானுடனும்;* ***முழுதும் காவலின் பெற்ற*** - *உலகம் முழுவதையும் காக்கும் திறம்பெற்ற;* ***திகிரியான் தன்னொடும்*** - *சக்கரப் படையை உடைய திருமாலுடனும்;* ***கடந்தது*** - *(செய்த போரிலே) வெற்றி பெற்றது;* ***ஏவரின் பெற்ற வரத்தினால்*** - *ஏவரிடம் பெற்ற வரத்தால்;* ***இயம்புதி*** - *கூறுவாயாக.*

*வயதில் மாத்திரமல்லாது அறிவிலும் இளையவன் என்பது தோன்ற 'இளையோய்' என அழைத்தான். முதற்கடவுளர் மூவர் அரன் அரி அயன் என்போர். பெற்றம்-காளை. "காவலின் பெற்ற திகிரி என்றது 'சக்கரப்படை' உலகம் காக்க*

*வல்லது என்பதை உணர்த்தும். கடத்தல் என்றது எதிர்நின்று போர்செய்து வெல்லுதல் (புறநா.8)*

***6176. ' "நந்தி சாபத்தின் நமை அடும், குரங்கு" எனின், நம்பால்***
***வந்த சாபங்கள் எனைப் பல; அவை செய்த வலி என்?***
***இந்திராதியர், சித்தர்கள், இயக்கர், நம் இறுதி***
***சிந்தியாதவர் யார் ? அவை நம்மை என் செய்த ?***

***நந்தி சாபத்தின்*** *- நந்திதேவன் கொடுத்த சாபத்தால்;* ***நமை அடும் குரங்கு எனின்*** *- குரங்குகள் நம்மைக் கொல்லும் என்றால்;* ***நம்பால் வந்த சாபங்கள் எனைப்பல*** *- நம்மை வந்தடைந்த சாபங்கள் எத்தனை எத்தனை ?* ***அவை செய்த வலி என்*** *- அவை விளைவித்த துன்பம் என்ன;* ***இந்திராதியர்*** *- இந்திரன் முதலான தேவர்களும்;* ***சித்தர்கள், இயக்கர்*** *- சித்தர்களும் இயக்கர்களும் ஆகியோரில்;* ***நம் இறுதி சிந்தியாதவர் யார் ?*** *- நமது அழிவை நினைக்காதவர் எவருண்டு ?* ***அவை நம்மை என் செய்த*** *- அவை எல்லாம் நம்மை என்ன செய்துவிட்டன;*

*தனது வெற்றிக்கும், வலிமைக்கும் தேவர் தந்த வரம் காரணமல்ல என்றவன், அவர்களது சாபமும் தன்னை எதுவும் செய்யஇயலாது என்றான்.*

***6177. 'அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டுடை வரம் அறியேன் ;***
***இரங்கி யான் நிற்ப, என் வலி அவன்வயின் எய்த***
***வரம் கொள் வாலிபால் தோற்றனென்; மற்றும் வேறு உள்ள***
***குரங்கு எலாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி ?***

***அரங்கில் ஆடுவார்க்கு*** *- அம்பலத்திலே நடனமாடுகின்ற சிவபிரானுக்கு;* ***அன்பு பூண்டு உடை வரம் அறியேன்*** *- அன்பு கொண்டு அதனால் பெற்ற வரபலமுடையவன் என்பதனை அறியாதவனாய்;* ***இரங்கியான் நிற்ப*** *- வாலியுடன் செய்த போரில் மனம் கலங்கி நான்நிற்க;* ***என் வலி அவன் வயின் எய்த*** *- எனது வலிமை அவனிடம் செல்ல;* ***வரம் கொள் வாலிபால் தோற்றனென்*** *- எதிர்த்தவர் பலம் தனக்கு வரவேண்டும் என்று வரம் பெற்றிருந்த வாலியிடம் நான் தோல்வியுற்றேன்;* ***மற்றும் வேறுள குரங்கெலாம்*** *- இதனால் மற்றுமுள்ள குரங்குகள் எல்லாமே;* ***எனைவெல்லும் என்று எங்ஙனம் கோடி*** *- என்னை வென்று விடும் என்று எப்படிக் கொள்ளுவாய்?*

*வலி-பலம். வயின்-இடம். இராவணன் வாலிபால் தோற்று, வாலால், கட்டுண்ட செய்தி உத்தரகாண்டத்தில் உள்ளது.*

***6178. 'நீலகண்டனும் நேமியும் நேர் நின்று நேரின்,***
***ஏலும் அன்னவருடை வலி அவன்வயின் எய்தும்;***
***சாலும் நல் வரம் நினைந்து, அவன் எதிர் செலல்***
***தவிர்ந்து,***
***வாலிதன்னை, அம் மனிதனும், மறைந்து நின்று எய்தான்.***

***நீலகண்டனும்*** *- நீல நிறமான கழுத்தை உடைய சிவனும்;* ***நேமியும்*** *- சக்கராயுதத்தை உடைய திருமாலும்;* ***நேர் நின்று நேரின்*** *- நேருக்கு நேர் நின்று பொருதால்;* ***ஏலும் அன்னவருடை வலி*** *- எதிர்க்கும் அவர்களது வலிமையும்;* ***அவன் வயின் எய்தும்*** *- அந்த வாலியிடம் சேர்ந்து விடும்;* ***சாலும் நல்வரம் நினைந்து*** *- மிக்க அந்த நல்ல வரத்தை நினைத்தே;* ***அம்மனிதனும்*** *- நீ சொன்ன அந்த மனிதனாகிய இராமனும்;* ***அவன் எதிர் செலல் தவிர்ந்து*** *- அவனுக்கு எதிரிலே சென்று நின்று போரிடுவதைத் தவிர்த்து;* ***வாலிதன்னை*** *- அந்த வாலியை;* ***மறைந்து நின்று எய்தான்*** *- மறைந்து நின்று அம்பெய்து கொன்றான்.*

*நேமி-சக்கரம், இங்கு அப் படை கொண்ட திருமாலைக் குறித்து நின்றது. நேரின்-எதிர்த்தால் ஏலும்-எதிர்க்கும். எதிர்த்தவர் பலத்தில் பாதி வாலிபால் எய்தும் என்பதனை "கிட்டினார் பொரக்கிடைக்கின் அன்னவர் பட்ட நல்வலம் பாதி எய்துவான்" (3825) என்று முன்னும் கூறுதல் காணலாம்.*

***6179. 'ஊன வில் இறுத்து, ஓட்டை மா மரத்துள் அம்பு***
***ஓட்டி,***
***கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து, உயர் வனம் குறுகி,***
***யான் இழைத்திட இல் இழந்து, இன் உயிர் சுமக்கும்***
***மானுடன் வலி, நீ அலாது, யார் உளர் மதித்தார் ?'***

***ஊனவில் இறுத்து*** *- ஏற்கனவே ஊனமான வில்லை முறித்து;* ***ஓட்டை மாமரத்துள் அம்பு ஓட்டி*** *- ஓட்டை மரத்திலே அம்பு செலுத்தி;* ***கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து*** *- கூனி செய்த சூழ்ச்சியினால் ஆட்சியை இழந்து;* ***உயர்வனம் குறுகி*** *- உயர்ந்த மரங்கள் நிறைந்த வனம் அடைந்து;* ***யான் இழைத்திட இல் இழந்து*** *- நான் செய்த செயலால் மனைவியை இழந்து;* ***இன் உயிர் சுமக்கும்*** *- இன்னுயிரைச் சுமந்து திரியும்;* ***மானுடன் வலி*** *- ஒரு மனிதனுடைய வலிமையை;* ***நீ அலாது*** *- உன்னை அல்லாமல்;* ***யார் உளர் மதித்தார்*** *- மதித்தவர்கள் வேறு யாருள்ளார்? ஊனம் - குறைபாடு. மிதிலையில் வில்லை ஒடித்ததும், மராமரத்தை அம்பெய்து துளைத்ததும் இராமன் செய்த அரிய செயல்கள் எனப் பிறர் புகழ்ந்து கூற, அதனை இகழ்ந்து ஊனவில், ஓட்டைமரம் என இராவணன் பேசுவது அவனது வெறுப்பைக் காட்டுவதாகும். என்னால்*

*மனைவியை இழந்து, உயிர் சுமந்து திரியும் இராமனை உன்னை அன்றி மதித்தவர் வேறு யார் இருக்கிறார்கள் என்றான்.*

### *வீடணன் மேலும் உறுதி மொழி உரைத்தல்*

***6180. என்று தன் உரை இழித்து, 'நீ உணர்விலி என்னா,***
***'நன்று, போதும் நாம்; எழுக !' எனும் அரக்கனை நணுகா,***
***'ஒன்று கேள், இனம் உறுதி' என்று, அன்பினன், ஒழியான்,***
***துன்று தாரவன், பின்னரும், இனையன சொன்னான்:***

***என்று தன் உரை இழித்து*** *- என்றெல்லாம் தான் கூறிய நல்லுரைகளைப் பழித்து;* ***நீ 'உணர்விலி' என்னா*** *- நீ அறிவில்லாதவன் என்று வீடணனைப் பழித்து விட்டு;* ***நன்று போதும் நாம் எழுக*** *- அங்கு திரண்டு நின்ற அசுரர்களைப் பார்த்து நல்லது நாம் போரிடச் செல்வோம்;* ***எனும் அரக்கனை நணுகா*** *- என்று கூறிய இராவணனை நெருங்கி நின்று;* ***ஒன்று கேள் இனம் உறுதி என்று*** *- இன்னும் நான் கூறும் உறுதி ஒன்றினைக் கேள் என்று;* ***அன்பினன்*** *- அன்பு மிக்கவனாய்;* ***ஒழியான்*** *- இராவணனை விட்டு நீங்காதவனாய்;* ***துன்றுதாரவன்*** *- நெருங்கிய மலர்மாலை அணிந்த வீடணன்;* ***பின்னரும் இனையன சொன்னான்*** *- மறுபடியும் பின்வருமாறு கூறினான்.*

*உணர்விலி-அறிவில்லாதவன். போதும்-செல்வோம். என்னா- என்று நணுகா- நணுகி இரண்டும் செய்யா என்ற வாய்பாட்டு வினைஎச்சம். 'அன்பினன் ஒழியான்' என்ற தொடர்க்கு இவ்வளவு கேவலப்படுத்தப்பட்ட பின்னும் தலைமயனிடத்து அன்பு நீங்காதவனாய் என்று பொருள் கொள்ளலாம்.*

***6181. 'தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனித் தலைவன்,***
***அன்ன மானுடன் ஆகி வந்து, அவதரித்து அமைந்தான்,***
***சொன்ன நம்பொருட்டு, உம்பர்தம் சூழ்ச்சியின் துணிவால்;***
***இன்னம் ஏகுதி போலும்' என்று அடி தொழுது இரந்தான்.***

***தன்னின் முன்னிய பொருள் இலா*** - *தன்னை விடச்சிறந்த பொருள் வேறொன்றில்லாத;* ***ஒரு தனித்தலைவன்*** - *ஒப்பற்ற தலைவனாகிய திருமாலே;* ***உம்பர் தம் சூழ்ச்சியின் துணிவால்*** - *தேவர்களின் ஆலோசனை முடிவின்படி;* ***சொன்னநம் பொருட்டு*** - *அந்தத் தேவர்களெல்லாம் தீயவர் என்று கூறிய நம்மை அழிக்கும் பொருட்டு;* ***அன்ன மானுடன் ஆகி வந்து*** - *அந்த மானிடனான இராமனாக வந்து;* ***அவதரித்து அமைந்தான்*** - *அவதாரம் செய்து நம்முடன் போர் செய்ய அமைந்தான்;* ***இன்னம் ஏகுதி போலும்*** - *இதனைத் தெரிந்த பின்னும் போருக்குச் செல்வாய் போலும்;* ***என்று அடி தொழுது இரந்தான்*** - *என்று இராவணன் அடிகளில் வணங்கி யாசித்துக் கூறினான்.*

*முன்னிய-சிறந்த. ஒருதனித்தலைவன்-ஒப்பற்ற தலைவன்.*

*இராவணன் மறுமொழி*

***6182. அச் சொல் கேட்டு, 'அவன் ஆழியான் என்றனை ; ஆயின்,***
***கொச்சைத் துன்மதி எத்தனை போரிடைக் குறைந்தான் ?***
***இச்சைக்கு ஏற்றன, யான் செய்த இத்தனை காலம்,***
***முச்சு அற்றான்கொல், அம் முழுமுதலோன் ?' என முனிந்தான்.***

***அச்சொல் கேட்டு*** - *வீடணன் கூறிய அந்தச் சொற்களைக் கேட்டு;* ***அவன் ஆழியான் என்றனை*** - *அந்த இராமனை சக்கரப்படையை உடைய திருமாலின் அவதாரம் என்றாய்;* ***ஆயின் கொச்சைத் துன்மதி*** - *அப்படியானால் இழிந்த துர்புத்தி உடைய அவன்;* ***எத்தனை போரிடைக் குறைந்தான்*** - *என்னுடன் செய்த எத்தனை போர்களிலே தோற்றான்.* ***இச்சைக்கு ஏற்றன*** - *எனது விருப்பத்துக்கேற்றவைகளையே;* ***யான் செய்த இத்தனைகாலம்*** - *நான் செய்து கொண்டிருந்த இத்தனை காலமும்;* ***அம்முழு முதலோன்*** - *நீ முழு முதல்வன் எனக்கூறும் அவன்;* ***முச்சு அற்றான் கொல்*** - *மூச்சற்றவனாக இருந்தான் போலும்;* ***என முனிந்தான்*** - *என்று கூறி இராவணன் வீடணனைச் சினந்தான்.*

*ஆழியான் - சக்கரப்படையுடைய திருமால். கொச்சை-இழிந்த. துன்மதி-கெட்டபுத்தி. குறைந்தான்-தோல்வியுற்றான். இச்சை-விருப்பம். அற்றான் - இறந்தனனோ என்பது பொருள். முச்சு: மூச்சு என்பதன் குறுக்கல் விகாரம்.*

***6183. 'இந்திரன்தனை இருஞ் சிறை இட்ட நாள், இமையோர்***
***தந்தி கோடு இறத் தகர்த்த நாள், தன்னை யான்***

***முன்னம்***
***வந்த போர்தொறும் துரந்த நாள், வானவர் உலகைச்***
***சிந்த வென்ற நாள், சிறியன்கொல், நீ சொன்ன***
***தேவன்?***

***இந்திரன்தனை இருஞ்சிறை இட்டநாள்*** - *நான் தேவர்களுக்குத் தலைவனான இந்திரனைப் பெரியதொரு சிறையிலே அடைத்து வைத்த காலத்திலும்;* ***இமையோர் தந்திகோடு இறதகர்த்த நாள்*** - *அந்தத் தேவர்களது யானையான ஐராவதத்தின் தந்தங்கள் முறியும்படி தகர்த்த காலத்திலும்;* ***தன்னை யான் முன்னம்*** - *அந்தத் திருமாலை யான் இதற்கு முன்பு;* ***வந்த போர் தொறும் துரந்த நாள்*** - *வந்து நேர்ந்த போர்களில் எல்லாம் தோற்று ஓடுமாறு துரத்திய போதும்;* ***வானவர் உலகைச்சிந்த வென்ற நாள்*** - *தேவர் உலகத்தை அவர்கள் சிதறி ஓடுமாறு வென்ற நாளிலும்;* ***நீ சொன்ன தேவன்*** - *நீ கூறிய அந்தத் திருமாலாகிய தேவன்;* ***சிறியன் கொல்*** - *சிறியவனாய் இருந்தான் போலும்.*

*இருஞ்சிறை-பெரிய சிறை. தந்தி-யானை (இங்கு ஐராவதம் என்ற வெள்ளை யானை), கோடு-தந்தம்.*

***6184. 'சிவனும், நான்முகத்து ஒருவனும், திரு நெடு மாலாம்***
***அவனும், மற்று உள அமரரும், உடன் உறைந்து***
***அடங்க,***
***புவனம் மூன்றும் நான் ஆண்டுளது, ஆண்ட அப்***
***பொரு இல்***
***உவன் இலாமையினோ ? வலி ஒதுங்கியோ ?***

***உரையாய் ! சிவனும் நான்முகத்து ஒருவனும்*** - *சிவபெருமானும், நான்கு முகங்களை உடைய ஒருவனான பிரமனும்;* ***திருநெடுமாலாம் அவனும்*** *-திருமகள் நாயகனான திருமாலாகிய அவனும்;* ***மற்று உள அமரரும்*** - *மற்றும் உள்ள தேவர்கள் அனைவரும்;* ***உடன் உறைந்து அடங்க*** - *எனது ஆட்சியில் ஒரு சேர அடங்கி இருக்க;* ***புவனம் மூன்றும் நான் ஆண்டுளது*** - *மூன்று உலகங்களையும் நான் ஆட்சி செய்து வந்துள்ளது;* ***ஆண்ட அப்பொரு இல் உவன்*** - *மூவுலகத்தையும் ஆண்ட அந்த ஒப்பில்லாதவனான அவன்;* ***இலாமையினோ*** - *இல்லாமையினாலா; (அல்லது)* ***வலி ஒதுங்கியோ*** - *எனது வலிமைக்கு முன் நிற்கமாட்டாது ஒதுங்கி இருந்து விட்டதாலோ?* ***உரையாய்*** - *நீ கூறுவாயாக.*

*'ஆண்ட அப்பொருவில் வில்' எனப் பிரித்து கையாண்ட அந்தப் போரிட வல்ல வில்லை (சார்ங்கம்) உடையவன் எனக் கூறினும் பொருந்தும். உவன்: என்பது சுட்டு. (இடை) திருநெடுமால் என்ற சிறப்புக்குரிய பெயரை இராவணன் எள்ளுதற் குறிப்போடு சொல்லினான்.*

*6185. **'ஆயிரம் பெருந் தோள்களும், அத் துணைத் தலையும்,***
***மா இரும் புவி உள்ளடி அடக்குறும் வடிவும்,***
***தீய, "சாலவும் சிறிது" என நினைந்து, நாம் தின்னும்***
***ஓயும் மானுட உருவு கொண்டனன்கொலாம்- உரவோன் ?***

***ஆயிரம் பெருந்தோள்களும்*** *- ஆயிரம் பெரும்தோள்களையும்;* ***அத்துணைத்தலையும்*** *- அந்த அளவினதான தலைகளையும்;* ***மாஇரும் புவி*** *- பெரிய இந்த உலகம் முழுவதையும்;* ***உள்ளடி அடக்குறும் வடிவும்*** *- தனது ஓரடிக்குள்ளே அடக்கும் பெரியதொரு வடிவமும்;* ***தீய சாலவும் சிறிது என நினைந்து*** *- தீமை தருவன, மிகவும் சிறியவை என்று நினைத்து;* ***உரவோன்*** *- நீ சிறப்பித்துச் சொல்லும் அந்த வலியவன்;* ***நாம் தின்னும் ஓயும் மானுட உருவு*** *- நாம் தின்னத்தகுந்த வலிமையற்ற மனித வடிவத்தை;* ***கொண்டனன் கொல்*** *- கொண்டானோ?*

*திருமால் ஆயிரம் தோள்களும், ஆயிரம் தலைகளும், ஆயிரம் கைகளும், ஆயிரம் கண்களும் உடையவர் என்பதை "காலாயிரம் முடியாயிரம், ஆயிரம் கை பரப்பி" என்ற அட்டப்பிரபந்தப் பாடலாலும் புருஷ சூக்கத்தாலும் அறியலாம். உலகத்தை ஓரடிக்கீழ் ஒடுக்கிய பெருவடிவம் திருவிக்கிரம் அவதாரம். அத்தகைய பேருருவம் சிறியது - தீயது என நினைத்து, நாம் தின்னத்தக்க - வலிமையற்ற மனித வடிவைக் கொண்டவனையோ-நம்மை எல்லாம் கொல்ல வல்ல வலிமையுடையவன் என்று கூறினாய் என வீடணனை வெகுண்டும், இராமபிரானை இகழ்ந்தும் கூறினான்.*

*6186. **'பித்தன் ஆகிய ஈசனும் அரியும், என் பெயர் கேட்டு,***
***எய்த்த சிந்தையர், ஏகுழி ஏகுழி எல்லாம்,***
***கைத்த ஏற்றினும் கடவிய புள்ளினும், முதுகில்***
***தைத்த வாளிகள் நின்று உள, குன்றின் வீழ் தடித்தின்.****

***பித்தன் ஆகிய ஈசனும் அரியும்*** *- பித்தனாகிய சிவபெருமானும், திருமாலும்;* ***என் பெயர் கேட்டு*** *- எனது பெயரைக் கேட்டவுடன்;* ***எய்த்த சிந்தையர்*** *- (அச்சத்தால்) சோர்ந்த மனத்தினராய்;* ***ஏகுழி ஏகுழி எல்லாம்*** *- அவர் சென்ற சென்ற இடமெல்லாம்;* ***கைத்த ஏற்றினும்*** *- சிவன் செலுத்திச் சென்ற காளை மீதும்;* ***கடவிய புள்ளினும்*** *- திருமால் ஏறிச் சென்ற கருடன் மீதும்;* ***முதுகில் தைத்த வாளிகள் நின்று*** *- நான் எய்த பாணங்கள் முதுகில் தைத்து நின்ற வடுக்கள்;* ***குன்றின் வீழ் தடித்தின் உள*** *- மலைமீது விழுந்த இடிபோல் உள்ளன அன்றோ?*

*எய்த்த-சோர்ந்த. ஏகுழி-செல்லுமிடம். கைத்த ஏறு-செலுத்திய காளை. உகைத்த என்ற சொல் முதல் (எழுத்து) குறைந்து கைத்து என நின்றது. கடவிய புள்-செலுத்திய கருடன். தடித்து-இடி. வாளிகள். இங்கு அம்புகளால் ஆன வடுக்களைக் குறித்தது. இடி*

*விழுந்த மலையில் சிதைந்த இடிபாடுகள் காணப்படுவன போல அம்புபட்ட வடுக்கள் காணப்பட்டன என்பது கருத்து.*

***6187. 'வெஞ் சினம் தரு போரின் எம்முடன் எழ வேண்டா;***
***இஞ்சி மா நகர் இடம் உடைத்து, ஈண்டு இனிது இருத்தி ;***
***அஞ்சல் அஞ்சல் !' என்று, அருகு இருந்தவர் முகம் நோக்கி,***
***நஞ்சின் வெய்யவன் கை எறிந்து, உரும் என நக்கான்.***

**வெஞ்சினம் தரு போரின்** - *கொடிய சினத்தை உண்டாக்கும் போரிலே பங்குகொள்ள;* **எம்முடன் எழ வேண்டா** - *நீ எங்களோடு புறப்படவேண்டா;* **இஞ்சி மாநகர் இடம் உடைத்து** - *மதில் சூழ்ந்த மாநகராகிய இலங்கையில் நிறைய இடமிருக்கிறது;* **ஈண்டு இனிது**

**இருத்தி** - *இங்கு நீ இனிதே தங்கி இருப்பாயாக; அஞ்சல்* **அஞ்சல் என்று** - *அஞ்சாதே, அஞ்சாதே என்று கூறி ;* **நஞ்சின் வெய்யவன்** - *கொடிய விடத்தினும் கொடியவனான இராவணன்;* **அருகு இருந்தவர் முகம் நோக்கி** - *அருகில் இருந்த அமைச்சர் முதலானவர்களின் முகத்தைப் பார்த்து;* **கை எறிந்து** - *கையோடு கையைக் கொட்டி;* **உரும் என நக்கான்** - *இடி இடித்தது போலச் சிரித்தான்.*

*அஞ்சல்! அஞ்சல்! என்ற அடுக்குத் தொடர் எள்ளுதற் குறிப்புடையது. 'மாநகர் இடம் உடைத்து' போதுமான அளவு நிறைய இடம் இருக்கிறது என்றது ஏளனமாகக் கூறியதாம்.*

*வீடணன் மறுபடியும் கூறுதல்*

***6188. பின்னும் வீடணன், 'ஐய ! நின் தரம் அலாப் பெரியோர்,***
***முன்னை நாள், இவன் முனிந்திடக் கிளையொடும் முடிந்தார்;***
***இன்னம் உண்டு, யான் இயம்புவது ; இரணியன்என்பான்-***
***தன்னை உள்ளவா கேட்டி' என்று உரைசெயச் சமைந்தான் :***

**பின்னும் வீடணன்** - *இராவணன் கூறியதைக் கேட்டபின்பு வீடணன்;* **ஐய** - *தலைவனே;* **நின்தரம் அலாப் பெரியோர்** - *உன் அளவினர் அல்லாத பெரியோர் பலர்;*

***முன்னை நாள்*** - *மிக முற்பட்ட காலத்திலே;* ***இவன் முனிந்திட*** - *இந்தத் திருமால் கோபம் கொண்ட காரணத்தால்;* ***கிளையொடும் முடிந்தார்*** - *உற்றார் உறவினரோடு அழிந்தார்கள்;* ***இன்னம் உண்டு யான் இயம்புவது*** - *இன்னும் உனக்கு நான் சொல்ல வேண்டிய தொன்றுண்டு;* ***இரணியன் என்பான் தன்னை*** - *இரணியன் என்று சிறப்பித்துக் கூறப்படுபவனது செய்தியை;* ***உள்ளவா கேட்டி*** - *உள்ளபடியே நான் கூறக் கேட்பாயாக;* ***என்று உரை செயச் சமைந்தான்*** - *என்று கூறுவதற்கு அமைந்தான்.*

*நின்தரம்-உன்னளவு. உன்னைவிட அறிவு ஆற்றல்களில் மேம்பட்ட என்பது கருத்து. உள்ளவா-உள்ளவாறு என்பதன் விகாரம்.*

## இரணியன் வதைப் படலம்

எந்த விதத்திலாவது இராவணனுக்கு நல்லுரை கூறி நெறிப்படுத்த நினைத்த வீடணன், இரணியனது செய்தியைக் கூறலானான். இரணியன் காசிபருக்கு திதி வயிற்றில் பிறந்தவன். பொன்னிறமுடையவன் என்பதால் இரணியன் எனப்பெயர் பெற்றான். பிரமனை நோக்கித்தவம் செய்து எவராலும் தனக்குச் சாவு நேராதபடி வரம் பெற்றவன். இரணியனுக்கு ஒரு தம்பி, இரணியாட்சன்; திருமால் வராக அவதாரம் செய்து அவனைக் கொன்றார் என்பதால் திருமாலிடம் இரணியன் பகைமை பாராட்டலானான். தனது வரபலத்தால் தேவர்களையும் முனிவர்களையும் துன்புறுத்திவந்தான். தன்னையே தெய்வமாக வணங்கும்படி வாழ்ந்தான். இரணியனுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனைத் தக்க ஆசிரியரிடம் அனுப்பி, வேதம் முதலான கலைகளை கற்பிக்க முற்பட்டான். ஆசிரியன் 'இரண்யாயநம' என்று சொல்ல, பிரகலாதன் 'நமோ நாராயணாய' என்றான். அஞ்சிய ஆசிரியன், இரணியனிடம் தெரிவிக்க, மகனை அழைத்து வரச் செய்து இரணியன் பலவாறு நயந்தும் நலிந்தும் பிரகலாதன் கருத்தினை மாற்ற முயன்றான். பிரகலாதன் உறுதி காட்டினான். அவன் உயிரைப் பறிக்கும் முயற்சியிலும் இரணியன் இறங்கினான். இரணியன் கருத்து நிறைவேறவில்லை. இறுதியில், 'நீ கூறிய அரி எங்கே இருக்கிறான்' எனக் கேட்டான். 'அவன் தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான்' என்று பிரகலாதன் கூறினான். இந்தத் தூணில் நீ சொன்ன அரி இல்லாமல் போனால் உன்னைக் கொன்று தின்பேன் என்று கூறி, இரணியன் தூணைக் கையால் எற்ற, தூணிலிருந்து திருமால் நரசிங்கமாக வெளிப்பட்டு இரணியனைக் கொன்று, பிரகலாதனுக்கு அழிவற்ற பேற்றை உதவினார் என்பது இரணியன் வரலாறு. முதல் நூலாகிய வான்மீகத்தில் இந்த வரலாறு கூறப்படவில்லை என்பது கருதத்தக்கது.

இறைவனாகிய திருமாலை இகழ்ந்து, உலகினுக்குத் தீங்கு செய்து வாழ்வோர் எவராயினும் அழிந்து படுவர் என்பதை இராவணனுக்கு எடுத்துக் கூறி, அப்பரமனுக்குப் பணிந்து, அவனை அடைக்கலம் புகுந்தவர்கள் பிரகலாதனைப் போ(ல)ப் பெரும் பேறு பெறுவர் என்பதை இராவணனுக்கு உணர்த்த வீடணன் இந்த வரலாற்றைக் கூறியதாகக் கம்பர் அமைத்துள்ளார். உயர்ந்த குறிக்கோளும், சிறந்த கவிநயமும், இலக்கியச் சிறப்பும் வாய்ந்ததாக இப்படலம் அமைந்திருப்பதைக் கற்போர் மகிழ்ந்து போற்றுவர் எனலாம்.

### இரணியன் இயல்பும் ஏற்றமும்

***6189.*** ***'வேதம் கண்ணிய பொருள் எலாம் விரிஞ்சனே ஈந்தான்;***
***போதம் கண்ணிய வரம் எலாம் தரக் கொண்டு போந்தான்;***
***காதும் கண்ணுதல், மலர் அயன், கடைமுறை காணாப்***
***பூதம் கண்ணிய வலி எலாம் ஒரு தனி பொறுத்தான்.***

***வேதம் கண்ணிய பொருள் எலாம்*** - (இரணியனுக்கு) வேதங்கள் குறித்த எல்லாப் பொருள்களையும்; ***விரிஞ்சனே ஈந்தான்*** - பிரமதேவனே (குருவாக) அறிவித்தான்; ***போதம் கண்ணிய*** - சிறந்த ஞானத்தால் தான் கருதிய; ***வரம் எலாம்தர*** - எல்லா வரங்களையும் அப்பிரமனேதர; ***கொண்டு போந்தான்*** - பெற்றுக் கொண்டு வந்தான்; ***காதும் கண்ணுதல்*** - உயிர்களை எல்லாம் அழிக்கவல்ல நெற்றிக் கண்ணனாகிய சிவனும்; ***மலர் அயன்*** - தாமரை மலரில் உறையும் பிரமனும்; ***கடைமுறை காணாப் பூதம்*** - முடிவு காணமுடியாத ஐம்பெரும் பூதங்களும்; ***கண்ணியவலிஎலாம்*** - கொண்டுள்ள வலிமை எல்லாம்; ***ஒரு தனி பொறுத்தான்*** - தான் ஒருவனே தாங்குவனானான்.

*வேதம் கண்ணிய பொருள் - வேதங்களின் உட்பொருள் விரிஞ்சன் - பிரமன். வேதங்களைப் படைத்த வேதாவாகிய பிரம்மாவே இரணியனுக்கு வேத உண்மைகளை அறிவித்தான் என்ற சிறப்பை 'ஏகாரம்' உணர்த்தும். காதும்- அழிக்கும்; சங்கார காரணன் சிவன் என்பதை 'காதும் கண்ணுதல்' என்பது குறித்தது. கடைமுறை - கடைசி எல்லை. சிவன், பிரமன், பூதங்கள் கொண்டுள்ள வலிமையெல்லாம் இரணியன்தான் ஒருவனே பெற்றிருந்தான் என்றார். பொறுத்தல் - தாங்குதல்.*

***6190. 'எற்றை நாளினும் உளன் எனும் இறைவனும், அயனும்,***
***கற்றை அம் சடைக் கடவுளும், காத்து, அளித்து, அழிக்கும்***
***ஒற்றை அண்டத்தின் அளவினோ? அதன் புறத்து உலவா***
***மற்றை அண்டத்தும், தன் பெயரே சொல, வாழ்ந்தான்.***

***ஏற்றை நாளினும் உளன் எனும் இறைவனும்*** - எந்நாளும் அழியாது உள்ளவன் என்று கூறத்தக்க இறைவனான திருமாலும்; ***அயனும்*** - படைப்புக் கடவுளான பிரமதேவனும்; ***கற்றை அம் சடைக்கடவுளும்*** - அழகிய சடைக் கற்றையை உடையசிவனும்; ***காத்து, அளித்து, அழிக்கும்*** - முறையே படைத்து, காத்து, அழிக்கின்றதாகிய; ***ஒற்றை அண்டத்தின் அளவினோ*** - இந்த ஒரு அண்டத்தின் அளவில் மட்டுமோ?; ***அதன் புறத்து உலவா*** - இந்த அண்டத்துக்குப் புறத்திலும் எண்ணற்றனவாக உள்ள; ***மற்றை அண்டத்தும்*** - வேறு வேறு அண்டங்களிலும்; ***தன்பெயரே சொல*** - (வாழ்பவரெல்லாம்) தனது பெயர் ஒன்றினையே (புகழ்ந்து) பேசுமாறு; ***வாழ்ந்தான்*** - இரணியன் வாழ்ந்து வந்தான்.

*எற்றை நாளினும் - எந்த ஊழிக் காலத்தும் என்பது பொருள். இறைவன் எங்கும் நிறைந்திருப்பவன் என, திருமாலைச் சுட்டி நின்றது (விஷ்ணு என்ற வடமொழிச் சொல் இதே பொருளை உடையது)*

*6191. 'பாழி வன் தடந் திசை சுமந்து ஓங்கிய பணைக் கைப்*
*பூழை வன் கரி இரண்டு இரு கைக்கொடு பொருத்தும்;*
*ஆழம் காணுதற்கு அரியவாய், அகன்ற பேர் ஆழி*
*ஏழும் தன் இரு தாள் அளவு எனக் கடந்து ஏறும்.*

***பாழி வன் தடந்திசை*** *- அகன்ற, வலிய, பெரியதிசைகளை;* ***சுமந்து ஓங்கிய பணைக்கை*** *- சுமந்து உயர்ந்த பருத்த தும்பிக்கைகளில் எல்லாம்;* ***பூழை வன் கரி*** *- உள்துளை உடைய வன்மை மிகுந்த திக்குயானைகளில்;* ***இரண்டு இருகைக் கொடு பொருத்தும்*** *- இரண்டினைத் தனது இரண்டு கைகளிலும் கொண்டு மோத விடுவான்;* ***ஆழம் காணுதற்கு அரியவாய்*** *- ஆழத்தை அளந்தறிய இயலாதனவாகிய;* ***அகன்ற பேர் ஆழி ஏழும்*** *- விசாலமான ஏழு கடல்களையும்;* ***தன் இரு தாள் அளவென*** *- தனது இருபாதங்களின் அளவு உடையன என்னும்படி;* ***கடந்து ஏறும்*** *- கடந்து கரை ஏறுவான்.*

*6192.'வண்டல் தெண் திரை ஆற்று நீர் சில என்று மருவான்;*
*கொண்டல் கொண்ட நீர் குளிர்ப்பு இல என்று அவை குடையான்;*
*பண்டைத் தெண் திரைப் பரவை நீர் உவர் என்று படியான்;*
*அண்டத்தைப் பொதுத்து, அப் புறத்து அப்பினால் ஆடும்.*

***வண்டல் தெண் திரை ஆற்று நீர்*** *- வண்டலோடு கூடிய, தெளிந்த அலைகளையுடைய ஆற்று நீர்;* ***சில என்று மருவான்*** *- அளவில் சிறியதென்று அதன்பக்கம் செல்லான்;* ***கொண்டல் கொண்டநீர்*** *- மேகம் கொண்ட மழை நீரை;* ***குளிர்ப்பு இல என்று அவை குடையான்*** *- குளிர்ச்சி இல்லை என்று அதில் குளிக்க மாட்டான்;* ***பண்டைத் தெண் திரைப் பரவை நீர்*** *- பழமைவாய்ந்த தெளிந்த அலைகளை உடையகடல் நீர்;* ***உவர் என்று படியான்*** *- உப்புச்சுவையுடையது என்று குளிக்க மாட்டான்;* ***அண்டத்தைப் பொதுத்து*** *- அண்டத்தைத் துளை செய்து;* ***அப்புறத்து அப்பினால் ஆடும்*** *- பெரும்புறக் கடல் நீரால் நீராடுவான்.*

*"பண்டைத் தெண்திரைப் பரவை" கடலின் பழமையை உணர்த்தும் "தொன்று முதிர் பெளவம்" (புறம்-6) என்றது காண்க. பொதுத்தல் - துளைத்தல்.*

*6193. 'மரபின், மா பெரும்புறக்கடல் மஞ்சனம் மருவி,*
*அரவின் நாட்டிடை மகளிரோடு இன் அமுது அருந்தி,*

***பரவும் இந்திரன் பதியிடைப் பகற் பொழுது அகற்றி,***
***இரவின் ஓலக்கம் நான்முகன் உலகத்துள் இருக்கும்.***

***மரபின் மாபெரும் புறக்கடல்*** *- விதிப்படி பெரும் புறக் கடல் நீரிலே;* ***மஞ்சனம் மருவி*** *- (காலையிலே) நீராடி (முடித்துப்பின்);* ***அரவின் நாட்டிடை*** *- நாகலோகத்திலே;* ***மகளிரொடு இன் அமுது அருந்தி*** *- நாக கன்னியருடனே இனிய உணவை உண்டு;* ***பரவும் இந்திரன் பதியிடை*** *- எல்லோராலும் போற்றப்படும் இந்திரன் உலகத்திலே;* ***பகல் பொழுது அகற்றி*** *- பகல் பொழுதைக் கழித்து;* ***இரவின் ஓலக்கம் நான்முகன் உலகத்துள் இருக்கும்*** *- இரவு நேரத்திலே பிரமன் உலகமான சத்தியலோகத்திலே கொலுவீற்றிருப்பான்.*

***6194. 'சாரும் மானத்தில், சந்திரன் தனிப் பதம் சரிக்கும்;***
***தேரின் மேலின் நின்று, இரவிதன் பெரும் பதம் செலுத்தும்;***
***பேர்வு இல் எண் திசைக் காவலர் கருமமும் பிடிக்கும்;***
***மேரு மால் வரை உச்சிமேல் அரசு வீற்றிருக்கும்.***

***சாரும் மானத்தில்*** *- சந்திரன் ஏறிச் செல்லும் விமானத்திலே (அமர்ந்து);* ***சந்திரன் தனிப்பதம்*** *- சந்திரனுக்குரிய சிறந்த ஆட்சி நடத்தி;* ***சரிக்கும்*** *- உலாவுவான்;* ***தேரின் மேல் நின்று*** *- சூரியனுக்குரிய தேரின்மீது நின்று;* ***இரவிதன் பெரும்பதம் செலுத்தும்*** *- சூரியனுக்குரிய ஆட்சியை நடத்துவான்;* ***பேர்வு இல் எண் திசைக் காவலர்*** *- பெயர்தல் இல்லாத எட்டுத்திசைதிக்குக் காவலர்களின்;* ***கருமமும் பிடிக்கும்*** *- தொழிலையும் ஒருவனே இயற்றுவான்;* ***மேரு மால் வரை உச்சிமேல்*** *- பெரிய மேரு மலையினது உச்சியின்மேல்;* ***அரசு வீற்றிருக்கும்*** *- பேரரசனாக வீற்றிருப்பான்.*

*கருமம் - தொழில், மானம் - விமானம் எண்திசைக் காவலர் - அட்டதிக்குப் பாலகர்கள் (இந்திரன் - அக்கினி - யமன் - நிருதி - வருணன் - வாயு - குபேரன் - ஈசானன்)*

***6195. 'நிலனும், நீரும், வெங் கனலொடு காலும் ஆய், நிமிர்ந்த***
***தலனுள் நீடிய அவற்றின் அத் தலைவரை மாற்றி,***
***உலவும் காற்றொடு கடவுளர் பிறரும்ஆய், உலகின்***
***வலியும் செய்கையும் வருணன்தன் கருமமும், மாற்றும்.***

***நிலனும் நீரும்*** *- மண்ணும், தண்ணீரும்;* ***வெங்கனலொடு*** *- வெப்பம் மிக்க நெருப்புடனே;* ***காலும் ஆய்*** *- காற்றும் ஆகி;* ***நிமிர்ந்த தலனுள் நீடிய அவற்றின்*** *-*

*எங்கும் பரவிய இவ்வண்டத்திலே நிலைபெற்றுள்ள அவைகளின்;* ***அத்தலைவரை மாற்றி*** *- தலைவர்களாய் இருப்பவர்களை மாற்றி;* ***உலவும் காற்றொடு*** *- உலாவுகின்ற காற்றுடனே (வாயுதேவன்);* ***கடவுளர் பிறருமாய்*** *- மற்ற தெய்வங்களும்தானேயாக;* ***உலகின் வலியும் செய்கையும்*** *- உலகத்தின் வலிமையும் அதன் காரியமும்;* ***வருணன்தன் கருமமும்*** *- வருணனுக்குரிய தொழிலும்;* ***மாற்றும்*** *- (ஆகியவைகளை - ஒருவர் செய்வதை மற்றவர் செய்யுமாறு) மாற்றி விடுவான்.*

*வெம்மை + கனல் = வெங்கனல் தலன் = தலம் (அண்டம்) நீடிய - நிலைபெற்ற. அவற்றின் - அவ்வைம் பூதங்களின் நிமிர்ந்த - பரவிய.*

***6196. 'தாமரைத் தடங் கண்ணினான் பேர்அவை தவிர,***
***நாமம் தன்னதே உலகங்கள் யாவையும் நவில,***
***தூம வெங் கனல் அந்தணர் முதலினர் சொரிந்த***
***ஓம வேள்வியின், இமையவர் பேறு எலாம் உண்ணும்.***

***தாமரைத்தடங் கண்ணினான்*** *- செந்தாமரை மலர் போன்ற விசாலமான கண்களையுடைய திருமாலின்;* ***பேர் அவை தவிர*** *- திருநாமம் ஒன்றைத்தவிர;* ***உலகங்கள் யாவையும்*** *- எல்லா உலகத்தில் உள்ளவர்களும்;* ***நாமம் தன்னதே நவில*** *- தன்னுடையநாமம் ஒன்றினையே கூற;* ***தூம வெங்கனல்*** *- புகையுடன் கூடிய வெம்மையான யாகத் தீயிலே;* ***அந்தணர் முதலினர் சொரிந்த*** *- அந்தணர், முனிவர் ஆகியோர் பெய்த;* ***ஓம வேள்வியின்*** *- ஓமப் பொருள்களை உடையயாகத்திலே;* ***இமையவர் பேறு எலாம் உண்ணும்*** *- தேவர்களுக்குரிய அவி உணவை எல்லாம்தானே உண்பான்.*

*தாமரைத்தடம் கண்ணினன் - திருமால். பேர் எட்டெழுத்து மந்திரம் (ஓம் நமோ நாராயணாய நம:) என்பது. வேதங்களால் சிறப்பித்துப் பேசப்படும் இத்திரு மந்திரம் மிகப்பழங்காலத்திலிருந்தே தேவர் மக்கள் எல்லோரும் நாளும் ஓதிவந்த பெருமை உடையது. தேவர்களைக் குறித்துச் செய்யப்பட்ட யாகங்களில் சொரிந்த அவியுணவை எல்லாம் தானே நுகர்ந்தான். "அரணியன்றனகல்வேள்வி ஆகுதி செய்புவி அனைத்தும், இரணியன தெனும் வார்த்தை இந்நெடு நாள் கேட்டிலையோ" என்ற இரணியவதைப் பரணி நினைதற்குரியது இமையவர் பேறு - அவி உணவு.*

***6197. 'காவல், காட்டுதல், துடைத்தல், என்று இத் தொழில் கடவ***
***மூவரும் அவை முடிக்கிலர், பிடிக்கிலர் முறைமை;***
***ஏவர் மற்றவர்? யோகியர் உறு பதம் இழந்தார்;***
***தேவரும், அவன் தாள் அலால் அருச்சனை செய்யார்.***

***காவல், காட்டுதல், துடைத்தல் என்று*** - *காத்தல், படைத்தல், அழித்தல் என்று கூறப்படும்;* ***இத்தொழில் கடவ மூவரும்*** - *இந்த முத் தொழிலைப் புரிந்து வந்த பிரமன், திருமால், சிவன் ஆகிய மூவரும்;* ***அவை முடிக்கிலர்*** - *தமக்குரிய அத்தொழில்களைச் செய்து முடிக்க மாட்டாதவராய்;* ***முறைமை பிடிக்கிலர்*** - *தமக்குரிய முறையைக் கடைப்பிடிக்காதவர் ஆயினர்;* ***ஏவர் மற்றவர்*** - *(மும்மூர்த்திகளின் நிலையே இது வானால்) மற்றவர் எவர் அவனைவெல்லவல்லார்;* ***யோகியர் உறுபதம் இழந்தார்*** - *யோகிகள் எல்லோரும் கூட தமது பதவிகளை இழந்தனர்;* ***தேவரும் அவன்தாள் அலால்*** - *தேவர்கள் கூட, அவனுடைய பாதங்களைத் தவிர;* ***அர்ச்சனை செய்யார்*** - *வேறு எவரையும் பூசிக்க மாட்டார்.*

***6198. 'மருக் கொள் தாமரை நான்முகன், ஐம்முகன் முதலோர்***
***குருக்களோடு கற்று, ஓதுவது, அவன் பெருங் கொற்றம்;***
***சுருக்கு இல் நான்மறை, "தொன்று தொட்டு உயிர்தொறும் தோன்றாது***
***இருக்கும் தெய்வமும் இரணியனே! நம!" என்னும்.***

***மருக் கொள் தாமரை நான்முகன்*** - *மணம் கமழும் தாமரை மலரில் அமர்ந்திருக்கும் பிரமனும்;* ***ஐம்முகன் முதலோர்*** - *ஐந்து முகங்களை உடைய சிவனும் முதலானோர்;* ***குருக்களோடு*** - *தேவ குருவான பிரகஸ்பதியுடனே;* ***கற்று ஓதுவது அவன் பெருங் கொற்றம்*** - *நாளும் படித்தறிந்து துதிப்பது அவனுடைய வெற்றிச் செயல்களையே;* ***சுருக்கு இல் நான்மறை*** - *சுருங்குதலில்லாத (விரிந்த) நான்கு வேதங்களிலும்;* ***'தொன்று தொட்டு உயிர் தொறும்*** - *மிகப் பழங்காலமுதலே எல்லா உயிர்கள் தோறும்;* ***தோன்றாது இருக்கும் தெய்வமும்*** - *மறைந்து இருக்கின்ற தெய்வமும் கூட;* ***'இரணியனே நம' என்னும்*** - *இரணியனே நம என்று போற்றும்.*

*மரு - நறுமணம் தாமரை - திருமாலின் நாபியாகிய தாமரை என்றுமாம். ஐம்முகன் - ஐந்து முகங்களை உடைய சிவபிரான். குருக்கள் - தேவகுரு வேதங்களிலும் மற்றுள்ள உயிர்களிடமும் தொன்று தொட்டுத் தோன்றாது உறையும் தெய்வமும் இரணியனுக்கு அஞ்சி, அவனைப் புகழ்ந்து துதிக்கும் என்பது கருத்து.*

***6199. 'பண்டு, வானவர் தானவர் யாவரும் பற்றி,***
***தெண் திரைக் கடல் கடைதர, வலியது தேடிக்***
***கொண்ட மத்தினைக் கொற்றத் தன் குவவுத் தோட்கு அமைந்த***
***தண்டு எனக் கொளலுற்று, அது நொய்து எனத் தவிர்ந்தான்.***

***பண்டு வானவர் தானவர்*** - *முன்பு, தேவர்களும் அசுரர்களும்;* ***யாவரும் பற்றி*** - *ஆகிய எல்லோரும் பிடித்து;* ***தெண் திரைக் கடல் கடைதர*** - *தெளிந்த அலைகளை உடைய பாற்கடலை (அமுதம் வேண்டி) கடைவதற்கு;* ***வலியது தேடிக் கொண்ட மத்தினை*** - *வலிமை வாய்ந்ததாகத்தேடி கைக்கொண்டமத்தை (மந்தரமலை);* ***தன் கொற்ற குவவுத் தோட்கு*** - *தனது வெற்றி மிகுந்த திரண்ட தோளுக்கு;* ***அமைந்த தண்டு எனக் கொளலுற்று*** - *அமைந்த தண்டாயுதம் எனக் கொண்டுபின்;* ***அது நொய்து எனத் தவிர்ந்தான்*** - *அது அற்பமானது என்று விட்டு விட்டான்.*

*பண்டு - முற்காலத்தில் தானவர் - அரக்கர் கடல் - பாற்கடல் மத்து - மந்தரமலை குவவுத்தோள் - திரண்டு குவிந்த தோள். தண்டு - தண்டாயுதம் கொளல் உற்று - கொண்டு நொய்து - அற்பமானது (மிகச்சிறியது).*

***6200. 'மண்டலம் தரு கதிரவன் வந்து போய் மறையும்***
***எண்தலம் தொடற்கு அரியன தட வரை இரண்டும்,***
***கண்தலம் பசும்பொன்னவன் முன்னவன் காதில்***
***குண்டலங்கள்; மற்று என், இனிப் பெரு விறல்***
***கூறல்?***

***மண்தலம் தருகதிரவன்*** - *நிலவுலகத்து உயிரினங்களைத் தனது ஒளியால் காக்கும் சூரியன்;* ***வந்து போய் மறையும்*** - *உதித்து, சென்று மறைகின்ற;* ***எண்தலம் தொடற்கு அரியன*** - *எண்ணுதற்குரிய மனத்தாலும் தீண்டுதற்கு இயலாதனவான;* ***தடவரை இரண்டும்*** - *விசாலமான மலைகளான உதயகிரி அத்தமன கிரி என்னு மிரண்டும்;* ***கண் தலம் பசும் பொன்னவன்*** - *பசிய பொன் போன்ற கண்களை உடைய இரணியாட்சனது;* ***முன்னவன்*** - *- முன்னோனாகிய இரணியனுடைய;* ***காதில் குண்டலங்கள்*** - *காதிலணியும் காதணிகளாம்;* ***இனிப் பெரு விறல் கூறல்*** - *என்றால் அவனுடைய சிறந்த வீரத்தை எடுத்துக் கூறுவதற்கு;* ***மற்று என்*** - *வேறு என்ன வேண்டியுள்ளது?*

*தருகதிரவன் - ஒளியினால் காக்கும் சூரியன். எண்தலம் - எண்ணுதற்குக் கருவியாகிய மனம். இரண்யம் - பொன். அக்ஷம் - கண், பொற்கணான் - இரண்யாட்சன்.*

***6201. 'மயர்வு இல் மன் நெடுஞ் சேவடி மண்ணிடை***
***வைப்பின்,***
***அயரும், வாள் எயிற்று ஆயிர நனந் தலை அனந்தன்;***
***உயருமேல், அண்ட முகடு தன் முடி உற உயரும்;***
***பெயருமேல், நெடும் பூதங்கள் ஐந்தொடும் பெயரும்.***

***மயர்வு இல் மன்*** - *எதனாலும் மனம் சோர்வுறாத மன்னனாகிய இரணியன்;* ***நெடுஞ்சேவடி*** - *தனது நீண்ட பெரிய பாதங்களை;* ***மண்ணிடைவைப்பின்*** - *தரையிலே வைப்பானாயின்;* ***ஆயிரம் நனந்தலை அனந்தன்*** - *ஆயிரம் படங்களைக் கொண்ட (பூமியைத்தாங்கும்) ஆதிசேடன்;* ***அயரும்*** - *(பாதங்களின் கனம் தாங்காது) தளர்வான்;* ***உயருமேல்*** - *(அந்த இரணியன்) எழுந்து நிற்பானாயின்;* ***அண்டமுகடு தன் முடி உற உயரும்*** - *அண்டத்தின் மேல் முகடு தனது தலையில் பொருந்த உயர்வான்;* ***பெயரு மேல்*** - *அவன், இடத்தை விட்டு அசைவானாயின்;* ***நெடும் பூதங்கள்*** - *பெரியனவான பூதங்கள்;* ***ஐந்தொடு பெயரும்*** - *ஐந்தினோடும் பெயர்வான்.*

*மயர்வு - சோர்வு. நனந்தலை - பணாமுடி (படம்). வாள் - கூர்மை (ஒளியுமாம்).*

***6202. 'பெண்ணில், பேர் எழில் ஆணினில், அலியினில், பிறிதும்***
***உள் நிற்கும் உயிர் உள்ளதில், இல்லதில், உலவான்;***
***கண்ணில் காண்பன, கருதுவ, யாவினும் கழியான்;***
***மண்ணில் சாகிலன்; வானிலும் சாகிலன்;-வரத்தால்.***

***வரத்தால்*** - *இரணியன் தான் பெற்ற வரத்தின் வலிமையால்;* ***பெண்ணில் பேரெழில் ஆணினில்*** - *பெண்களாலோ, பேரழகு படைத்த ஆண்களாலோ;* ***அலியினில்*** - *இவையிரண்டுமல்லாத அலியினாலோ;* ***பிறிதும் உள்நிற்கும்*** - *வேறு, உலகத்தில் நிலை பெற்றுள்ள;* ***உயிர் உள்ளதில் இல்லதில்*** - *உயிருள்ளவைகளாலோ, உயிர் இல்லாதவைகளாலோ;* ***உலவான்*** - *சாகமாட்டான்;* ***கண்ணில் காண்பன*** - *கண்ணால் காணப்படுவனவாலும்;* ***கருதுவ*** - *எண்ணத்தில் நினைக்கப்படுவனவற்றாலும்;* ***யாவினும் கழியான்*** - *இவை எவற்றாலும் அழியமாட்டான்;* ***மண்ணில் சாகிலன்*** - *நிலத்திலும் சாகமாட்டான்;* ***வானிலும் சாகிலன்*** - *விண்ணிலும் சாகமாட்டான்.*

***6203. 'தேவர் ஆயினர் ஏவரும், திரிதரும் இயக்கர்***
***யாவரேயும், மற்று எண்ணவும் நினைக்கவும் இயன்ற,***
***கோவை மால், அயன், மான்இடன், யாவரும் கொல்ல,***
***ஆவி தீர்கிலன்; ஆற்றலும் தீர்கிலன்-அனையான்.***

***அனையான்*** - *அந்த இரணியன்;* ***தேவர் ஆயினர் ஏவரும்*** - *தேவர்கள் எவரும்;* ***திரிதரும் இயக்கர் யாவரேயும்*** - *நடமாடித் திரியும் இயக்கர் எவரும் பிறரால்;* ***மற்று எண்ணவும் நினைக்கவும் இயன்ற*** - *மற்றும் தியானிக்கவும் துதிக்கவும் முடிந்தவர்களான;* ***கோவை மால், அயன், மான்இடன்*** - *திரிமூர்த்திகள் என்ற வரிசையிலுள்ள மால், பிரமன், உமையாகிய பெண்ணை இடப்புறம் கொண்டுள்ள*

*சிவன்;* ***யாவரும் கொல்ல ஆவி தீர்கிலன்*** *- ஆகிய எவரும் கொல்ல உயிர்நீங்கான்;* ***ஆற்றலும் தீர்கிலன்*** *- வலிமையும் நீங்கமாட்டான்;*

*'எண்ணவும், நினைக்கவுமே இயன்றவர்' என்பதால் கண்களுக்குப் புலனாகாதவர் என்பது கருத்து. கோவை - வரிசை, நிரல். மான் + இடன்; மானை இடக்கையில் தரித்தவன் எனலும் ஆம்.*

***6204. 'நீரின் சாகிலன்; நெருப்பினும் சாகிலன்; நிமிர்ந்த***
***மாருதத்தினும், மண்ணின் மற்று எவற்றினும், மாளான்;***
***ஓரும் தேவரும் முனிவரும் பிறர்களும் உரைப்பச்***
***சாரும் சாபமும், அன்னவன்தனைச் சென்று சாரா.***

***நீரின் சாகிலன் நெருப்பினும் சாகிலன்*** *- தண்ணீரால் சாகமாட்டான் தீயாலும் சாகமாட்டான்;* ***நிமிர்ந்த மாருதத்தினும்*** *- மேல் நிமிர்ந்த காற்றினாலும்;* ***மண்ணின் மற்று எவற்றினும் மாளான்*** *- மண்ணுலகிலுள்ள வேறு எதனாலும் சாக மாட்டான்;* ***ஓரும் தேவரும் முனிவரும்*** *- ஆராய்ந்துணரும் தேவர்களும் தவவலிமை மிக்க முனிவர்களும்;* ***பிறர்களும் உரைப்ப*** *- மற்றவர்களும் சினந்து கூற;* ***சாரும் சாபமும்*** *- அதனால் வரும் சாபங்களும்;* ***அன்னவன் தனைச் சென்று சாரா*** *- அந்த இரணியனைச் சென்று அடையா.*

***6205. 'உள்ளில் சாகிலன்; புறத்தினும் உலக்கிலன்; உலவாக்***
***கொள்ளைத் தெய்வ வான் படைக்கலம் யாவையும் கொல்லா;***
***நள்ளின் சாகிலன்; பகலிடைச் சாகிலன்; நமனார்***
***கொள்ளச் சாகிலன்; ஆர் இனி அவன் உயிர் கொள்வார்?***

***உள்ளில் சாகிலன் புறத்தினும் உலக்கிலன்*** *- வீட்டுக்கு உள்ளேயும் சாகமாட்டான், வெளியிலும் சாகமாட்டான்;* ***உலவாக் கொள்ளைத் தெய்வவான் படைக்கலம்*** *- என்றும் அழியாது, தெய்வத்தன்மையுடைய படைக்கலங்கள்;* ***யாவையும் கொல்லா*** *- எவையும் அவனைக் கொல்லமாட்டா;* ***நள்ளின் சாகிலன் பகலிடைச் சாகிலன்*** *- இரவிலும் சாகான் பகலிலும் சாக மாட்டான்;* ***நமனார் கொள்ளச் சாகிலன்*** *- எமன் உயிரைக் கவரவும் இறக்கமாட்டான்;* ***ஆர் இனி அவனுயிர் கொள்வார்*** *- அவனது உயிரைக் கவரவல்லோர் யார் இருக்கிறார்கள்?*

*'உள், புறம்' என்பன வீட்டுக்குள்ளே, வெளியே என்னும் பொருளன, கொள்ளை - மிகுதி. நள் - இரவு.*

*6206.* ***'பூதம் ஐந்தொடும் பொருந்திய உணர்வினில் புணரா***
***வேதம் நான்கினும் விளம்பிய பொருள்களால்***
***விளியான்;***
***தாதை தன்னைத் தான் தனிக் கொலை சூழினும்,***
***சாகான்;***
***ஈது அவன் நிலை; எவ் உலகங்கட்கும் இறைவன்.***

***பூதம் ஐந்தொடும் பொருந்திய*** - *மண்முதலிய ஐந்து பூதங்கள் உடன் பொருந்திய;* ***உணர்வினில் புணரா*** - *சுவைமுதலான ஐம்புல உணர்வினால் புணர்க்கப்படாத;* ***வேதம் நான்கினும் விளம்பிய*** - *நான்கு வேதங்களாலும் சொல்லப்பட்ட;* ***பொருள்களால் விளியான்*** - *மந்திரங்களாலும் சாகான்;* ***தாதை தன்னைத்தான் தனிக் கொலை சூழினும் சாகான்*** - *தன் தந்தையே அவனைத் தனித்துக் கொலை செய்யநினைத்தாலும் சாகமாட்டான்;* ***ஈது அவன் நிலை*** - *இதுதான் அந்த இரணியனது நிலைமை;* ***எவ்வுலகங்கட்கும் இறைவன்*** - *எல்லா உலகங்களுக்கும் அவனே இறைவனாவான்;*

*வேதங்களில் கூறப்பட்ட மந்திரங்கள் புலன் உணர்வால் அறியக் கூடாதனவாம். மெய்யுணர்வால் மட்டுமே உணரத்தக்கன அவை. 'நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து மறை மொழிகாட்டுவிடும்' என்று குறள் கூறுமாறு இம்மந்திரச் சொற்கள் ஆக்கவும் அளிக்கவும் வல்லன.*

*இரணியனது மகன் பிரகலாதன் தன்மை*

*6207.* ***'ஆயவன் தனக்கு அரு மகன், அறிஞரின் அறிஞன்,***
***தூயர் என்பவர் யாரினும் மறையினும் தூயான்,***
***நாயகன் தனி ஞானி, நல் அறத்துக்கு நாதன்,***
***தாயின் மன்னுயிர்க்கு அன்பினன், உளன் ஒரு***
***தக்கோன்.***

***ஆயவன் தனக்கு அருமகன்*** - *அந்த இரணியனுக்கு அரிய ஒரு மைந்தன்;* ***அறிஞரில் அறிஞன்*** - *அறிவாளிகளில் சிறந்த அறிவாளி;* ***தூயர் என்பவர் யாரினும்*** - *தூயவர் என்று சொல்லப்படும் எவரைவிடவும்;* ***மறையினும் தூயான்*** - *வேதங்களை விடவும் தூயவன்;* ***நாயகன் தனி ஞானி*** - *எவ்வுயிர்க்கும் தலைவன், ஒப்பற்ற ஞானி;* ***நல் அறத்துக்கு நாதன்*** - *நல்ல அறங்களுக்குத் தலைவன்;* ***மன்னுயிர்க்குத் தாயின் அன்பினன்*** - *உலகத்து உயிர்களுக்குத் தாயினும் சிறந்த அன்புடையவனாய்;* ***உளன் ஒரு தக்கோன்*** - *மேலான தகுதியுடைய ஒருவனாக உள்ளான்.*

*'அருமகன் ஒரு தக்கோன் உளன்' என இயையும். ஆயவன் அத்தகையவனான இரணியன். தூயர் மன, மொழி, மெய்களால் தூயவர்களாய நல்லோர். தாயின் - தாயைவிடவும் (தாயினும் நல்லன்)*

*'அறிஞரில் தூயோன்' (6234) எனப் பின்னரும் பிரகலாதன் குறிக்கப்படுவான். வீடணனை அறிஞரின் மிக்கான் (6169), 'மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையான்' (6364) எனக் கம்பர் குறித்துள்ளமை ஒப்பிட்டு உணரத்தக்கது.*

*இரணியன் தன் மகனை வேதம் ஓதுமாறு கூறுதல்*

***6208. 'வாழியான்-அவன்தனைக் கண்டு, மனம் மகிழ்ந்து, உருகி,***
***"ஆழி ஐய! நீ அறிதியால், மறை" என அறைந்தான்-***
***ஊழியும் கடந்து உயர்கின்ற ஆயுளான், உலகம்***
***ஏழும் ஏழும் வந்து அடி தொழ, அரசு வீற்றிருந்தான்.***

***ஊழியும் கடந்து உயர்கின்ற ஆயுளான்*** *- உலக முடிவுக்காலமான ஊழிக்காலத்தையும் கடந்து நீண்ட ஆயுளை உடையவனும்;* ***உலகம் ஏழும் ஏழும்*** *- பதினான்கு உலகங்களும்;* ***வந்து அடிதொழ*** *- திரண்டு வந்து தனது பாதங்களில் வீழ்ந்து வணங்குமாறு;* ***அரசு வீற்றிருந்தான்*** *- எல்லா உலகங்களுக்கும் தானே மன்னனாக ஆட்சி செலுத்துபவனுமான இரணியன்;* ***வாழியான் அவன் தனைக் கண்டு*** *- நல்வாழ்வுக்குரிய நற்பேறு பெற்ற பிரகலாதனைப் பார்த்து;* ***மனம் மகிழ்ந்து உருகி*** *- மனம் மிக மகிழ்ந்து உள்ளம் உருகி;* ***ஆழிஐய நீ அறிதியால் மறை*** *- எனக்குப் பின் எனது ஆணையாகிய சக்கரத்தை இயக்கும் நீ எல்லா வேதங்களையும் கற்பாயாக;* ***என அறைந்தான்*** *- என்று கூறினான்;*

*ஆழி - ஆணையாகிய சக்கரம். தனக்குப் பின் அரசாள இருப்பவன் என்பதால் இரணியன் 'ஆழி ஐய' என அழைத்தான் என்க. மனம் மகிழ்ந்து உருகி - நெஞ்சு நெகிழ்ந்து உருகி தந்தைக்கு உரிய இயல்பான அன்பின் நெகிழ்ச்சி இரணியனுக்கும் இருந்தது என்பதைக் கவிச்சக்கரவர்த்தி இப்பாடலில் குறித்து இருக்கிறார்.*

***6209. 'என்று, ஓர் அந்தணன், எல்லை இல் அறிஞனை ஏவி,***
***"நன்று நீ இவற்கு உதவுதி, மறை" என நவின்றான்;***
***சென்று மற்றுஅவன்தன்னொடும் ஒரு சிறை சேர்ந்தான்;***
***அன்று நான்மறை முதலிய ஓதுவான் அமைந்தான்.***

***என்று, ஓர் அந்தணன்*** - என்று கூறிய இரணியன் ஒரு மறை வல்லோனான; ***எல்லை இல் அறிஞனை ஏவி*** - எல்லையில்லாத அறிவுடையவனை ஏவி; ***'நன்று நீ இவற்கு உதவுதி மறை'*** - நீ இவனுக்கு வேதங்களை நன்கு கற்றுக் கொடுத்து உதவுவாயாக; ***என நவின்றான்*** - என்று சொன்னான்; ***மற்று அவன் தன்னொடும் சென்று*** - பிரகலாதனுடன் அந்த மறைவல்லான் சென்று; ***ஒரு சிறை சேர்ந்தான்*** - ஓரிடத்தை அடைந்தான்; ***அன்று நான் மறை முதலிய*** - அன்றுமுதல் வேதம் முதலான எல்லாவற்றையும்; ***ஓதுவான் அமைந்தான்*** - கற்பித்திடத் தொடங்கினான்.

*தன் பிள்ளைக்குக் கற்றுத் தருபவன் சிறந்த தகுதி உள்ளவனாய் இருத்தல் வேண்டும் என்பதால் 'எல்லை இல் அறிஞன்' என ஆசிரியனைக் குறிப்பிட்டார். முன்னை வேதத்தின் முதற்பெயர் மொழிவது மொழிந்தேன் (6213), ஓத வேண்டுவதில்லை (6215) என்பன ஓதப் புகுந்த மாணவனாகிய பிரகலாதன் கூற்றுகள். ஓதாது உணர்ந்த அவனுக்கு, கற்று அறிந்த வேதியன் கற்பிக்க முயல்வது வீண்முயற்சி, ஆயினும், உலகியல் வழக்காலும் அரசன் கட்டளையாலும் கற்பிக்க முயன்றான் என்பது கருத்து. ஓதுவான் - கற்பிப்பதற்கு.*

***6210. 'ஓதப் புக்கு அவன், "உந்தை பேர் உரை"***
***எனலோடும்,***
***போதத் தன் செவித் தொளை இரு கைகளால்***
***பொத்தி,***
***"மூ தக்கோய்! இது நல் தவம் அன்று" என***
***மொழியா,***
***வேதத்து உச்சியின் மெய்ப் பொருட் பெயரினை***
***விரித்தான்.***

***ஓதப்புக்கு அவன்*** - கற்றுத்தரமுற்பட்ட ஆசிரியன் (பிரகலாதனை நோக்கி); ***'உந்தைபேர்உரை'எனலோடும்*** - உனது தந்தையின் பெயரான இரணியாய நம, எனக்கூறு என்றவுடன்; ***தன் செவித் தொளை போத*** - தனது இருகாதுத் துளைகளையும், நன்றாக; ***இரு கைகளால் பொத்தி*** - இரண்டு கைகளாலும் பொத்திக் கொண்டு; ***மூதக்கோய்*** - மூத்த அறிவுடைய பெரியோனே!; ***'இது நல்தவம் அன்று*** - இது சிறந்த தவநெறி ஆகாது; ***என மொழியா*** - என்று கூறி; ***வேதத்து உச்சியின்*** - வேதத்தின் முடிவான உபநிடதங்கள் கூறும்; ***மெய்ப்பொருட் பெயரினை*** - உண்மைப் பொருளான பரமனது பெயரை; ***விரித்தான்*** - விரித்துரைக்கலானான்.

*புக்கு, பொத்தி, மொழியா என்ற வினை எச்சங்கள் விரித்தான் என்ற வினை முற்றைக் கொண்டு முடிந்தன. வேதத்து உச்சியின் மெய்ப் பொருட்பெயர் என்றது 'ஓம் நமோ நாராயணாய" என்ற திருமந்திரத்தை, "வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கை" எனவரும் பெரியாழ்வார் திருமொழி (4, 3, 11) நினைவுகூரத்தக்கது.*

***6211. ' "ஓம் நமோ நாராயணாய !" என்று உரைத்து, உளம் உருகி,***
***தான் அமைந்து, இரு தடக் கையும் தலைமிசைத் தாங்கி,***
***பூ நிறக் கண்கள் புனல் உக, மயிர்ப் புறம் பொடிப்ப,***
***ஞான நாயகன் இருந்தனன்; அந்தணன் நடுங்கி,***

***ஞானநாயகன்*** - *ஞானம் மிக்க தலைவனாகிய பிரகலாதன்;* ***'ஓம் நமோ நாராயணாய'*** *- ஓம் நமோ நாராயணாய நம;* ***என்றுரைத்து*** *- என்னும் திருமந்திரத்தை உச்சரித்து;* ***உளம் உருகி*** *- மனம் நெகிழ்ந்து உருகி;* ***தான் அமைந்து*** *- தான் அடங்கி இருந்து;* ***இருதடக் கையும் தலைமிசை தாங்கி*** *- தனது இரு நீண்ட கைகளையும் தலையின் மீது சேர்த்து;* ***பூநிறக் கண்கள் புனல் உக*** *- தாமரை மலர் போன்ற இரு கண்களிலும் கண்ணீர் பெருக;* ***மயிர்ப் புறம் பொடிப்ப*** *- உடல் முழுதும் மயிர்சிலிர்க்க;* ***இருந்தனன்*** *- அமர்ந்திருந்தான்;* ***அந்தணன் நடுங்கி*** *- அதைக் கண்ட ஆசிரியனாகிய மறையவன் நடுக்க மெய்தி.*

*கருவிலே திருவுடையவனாகிய பிரகலாதன் இளமையிலேயே ஞானம் மிக்கவனாக, ஏனைய ஞானிகளுக்கெல்லாம் தலைவனாக விளங்கினான் என்பதால் 'ஞான நாயகன்" என்றார். பூ; தாமரை. பூவெனப் படுவது பொறிவாழ் பூவே ஆதலின் தாமரை எனப்பட்டது. நிறம்: அழகு. அந்தணன் நடுங்கி என்ற வினை எச்சம் அடுத்த பாடலில் வரும் என்றான் என்ற வினை கொண்டு முடியும்.*

***6212. ' "கெடுத்து ஒழிந்தனை, என்னையும் உன்னையும்; கெடுவாய் !***
***படுத்து ஒழிந்தனை; பாவி ! எத் தேவரும் பகர்தற்கு***
***அடுத்தது அன்றியே அயல் ஒன்று பகர, நின் அறிவில்***
***எடுத்தது என் இது? என் செய்த வண்ணம் நீ?" என்றான்.***

***கெடுவாய்*** *- கெடுமதி உடையவனே;* ***என்னையும் உன்னையும் கெடுத்து ஒழிந்தனை*** *- (நீ கூறிய உரையால்) நீ என்னையும் கெடுத்தாய் உன்னையும் கெடுத்தாய்;* ***பாவி படுத்து ஒழிந்தனை*** *- பாவியே! நம் இருவரையும் இறந்து ஒழியச் செய்துவிட்டாய்;* ***எத்தேவரும் பகர்தற்கு*** *- வேறு எந்தத் தேவர்களும் கூடச் சொல்லுவதற்கு;* ***அடுத்தது அன்றியே அயல் ஒன்று பகர*** *- பொருந்திய உனது தந்தை பெயர் அல்லாத வேறு ஒன்றைக் கூற;* ***நின் அறிவில் எடுத்தது என் இது*** *- உன் அறிவுக்குத் தோன்றிய என்ன செயல் இது;* ***என் செய்த வண்ணம் நீ என்றான்*** *- என்ன காரியம் செய்யத் துணிந்து விட்டாய் என்றான்.*

*கெடுவாய்- கெட்ட புத்தியுடையவனே. 'எல்லோரும்' கூறும் படி கூறாமல் வேறொருபேர் பகர்ந்ததால் என்னையும், ஏன் உன்னையுமே இரணியன்*

*தண்டிப்பானே! இருவரையும், கெடுத்தாயே' என்றான். எப்படி உன் அறிவில் இப்படிச் சொல்லத் தோன்றியது! என்ன காரியம் செய்து விட்டாய் என்று அஞ்சிக் கூறினான் ஆசிரியன் என்பது பொருள்.*

***6213. ' "என்னை உய்வித்தேன்; எந்தையை உய்வித்தேன்; இனைய***
***உன்னை உய்வித்து, இவ் உலகையும் உய்விப்பான் அமைந்து,***
***முன்னை வேதத்தின் முதற் பெயர் மொழிவது மொழிந்தேன்;***
***என்னை குற்றம் நான் இயம்பியது? இயம்புதி" என்றான்.***

***'என்னை உய்வித்தேன்*** *- என்னை உய்யச் செய்தேன்;* ***எந்தையை உய்வித்தேன்*** *- எனது தந்தையையும் உய்யச் செய்தேன்;* ***இனைய உன்னை உய்வித்து*** *- இத்தகைய உன்னையும் உய்யுமாறு செய்து;* ***இவ்வுலகையும் உய்விப்பான் அமைந்து*** *- இந்த உலகத்தையும் உய்விப்பதற்காக அமைந்து;* ***முன்னை வேதத்தின்*** *- பழமையான வேதங்கள் புகழ்ந்து கூறும்;* ***முதற்பெயர் மொழிவது மொழிந்தேன்*** *- முதற்பெயரென பரமன் திருப்பெயரைக் கூறினேன்;* ***என்னை குற்றம் யான் இயம்பியது*** *- நான் சொன்னதில் என்ன குற்றம் இருக்கிறது;* ***இயம்புதி என்றான்*** *- கூறுவாயாக என்றான். வேதமுதற்பெயர்பிரணவம். அதனால் சுட்டப்படும் பொருள் நாராயணன். அந்தப் புனிதமான பெயரைக் கூறிய நான் என்ன குற்றம் செய்தேன் என்றான்.*

***6214. ' "முந்தை வானவர் யாவர்க்கும், முதல்வர்க்கும், முதலோன்***
***உந்தை; மற்று அவன் திருப்பெயர் உரைசெயற்கு உரிய***
***அந்தணாளனேன் என்னினும் அறிதியோ? ஐய !***
***இந்த இப் பெயர் உரைத்து, எனைக் கெடுத்திடல்" என்றான்.***

***ஐய*** *- ஐயனே;* ***முந்தை வானவர் யாவர்க்கும்*** *- முற்பட்டவர்களான தேவர்கள் எல்லோருக்கும்;* ***முதல்வர்க்கும்*** *- அத் தேவர்களுக்கு முதல்வர்களான அயன் அரி, சிவன் ஆகியோருக்கும்;* ***முதலோன் உந்தை*** *- முதன்மை பெற்று விளங்குபவன் உனது தந்தையான இரணியன்;* ***மற்று அவன் திருப்பெயர்*** *- உனது தந்தையின் திருநாமத்தை;* ***உரை செயற்கு உரிய அந்தணாளனேன்*** *- சொல்லுதற்குரிய அந்தணனாக நான் உள்ளேன்;* ***என்னிலும் அறிதியோ*** *- இங்கு என்னை விட நீ எல்லாம்*

*தெரிந்தவனோ?;* **இந்த இப்பெயர் உரைத்து** *- இப்போது நீ சொன்ன இந்தப் பெயரைச் சொல்லி;* **எனைக் கெடுத்திடல் என்றான்** *- என்னைக் கெடுத்து விடாதே' என்றான்.*

***6215. 'வேத பாரகன் அவ் உரை விளம்பலும், விமலன்,***
***"ஆதி நாயகன் பெயர் அன்றி; யான் பிறிது அறியேன்;***
***ஓத வேண்டுவது இல்லை; என் உணர்வினுக்கு ஒன்றும்***
***போதியாததும் இல்லை" என்று, இவை இவை புகன்றான்:***

**வேதபாரகன் அவ்வுரை விளம்பலும்** *- வேதங்களை அறிந்த அந்தணனாகிய ஆசிரியன் இவ்வாறு கூறவும்;* **விமலன்** *- குற்றமற்றவனான பிரகலாதன்;* **ஆதி நாயகன் பெயர் அன்றி** *- எல்லா உலகங்களுக்கும் முதல் தலைவனான அப்பரமன் திருப் பெயர் அல்லாது;* **யான் பிறிது அறியேன்** *- நான் வேறெதுவும் அறியமாட்டேன்;* **ஓத வேண்டுவதில்லை** *- நான் கற்றுக் கொள்ள வேண்டியதும் (அப்பரமன் பெயரல்லாது) வேறில்லை;* **என் உணர்வினுக்கு** *- எனது அறிவுக்கு;* **ஒன்றும் போதியாததும் இல்லை** *- ஒன்றும் உணர்த்தப் படாத பொருள் இல்லை;* **என்று இவை இவை புகன்றான்** *- என்று மேலும் சில கூறுவானானான்.*

***6216. ' "தொல்லை நான்மறை வரன்முறைத் துணி பொருட்கு எல்லாம்***
***எல்லை கண்டவன் அகம் புகுந்து, இடம் கொண்டது, என் உள்;***
***இல்லை, வேறு இனிப் பெரும் பதம்; யான் அறியாத,***
***வல்லையேல், இனி, ஓதுவி, நீதியின் வழாத.***

**தொல்லை நான் மறை** *- பழமையான நான்கு வேதங்களும்;* **வரன் முறைத் துணி பொருட்கு எல்லாம்** *- மரபு பிறழாது துணிந்து கூறிய பொருள்களுக்கெல்லாம்;* **எல்லை கண்டவன்** *- முடிவான எல்லை கண்டவனாகியபரனே;* **என் அகம் புகுந்து இடம் கொண்டது** *- எனது உள்ளத்திலே புகுந்து விரும்பி உறைவது;* **என் உள்** *- எனக்குள்ளாகும்;* **வேறு இனிப் பெரும்பதம் இல்லை** *- இதைவிட வேறு சிறந்தபதம் எதுவுமில்லை;* **யான் அறியாதவல்லையேல்** *- நான் அறியாதவை ஏதேனும் நீ வல்லவனானால்;* **நீதியின் வழாத இனி ஓதுவி** *- நீதி நெறி பிறழாத ஒன்றை இனி எனக்குக் கற்றுக் கொடுப்பாயாக.*

*வரன்முறை - மரபுநெறி. துணி பொருள் - அறுதியிட்டு துணிந்துரைத்த பொருள். எல்லைகண்டவன். முடிவிடமாக அமைந்தவன். இடம் கொண்டது. விரும்பி வாழ்வது. அகம் - மனம். என் உள் - எனக்குள். பதம். நிலை (பதவி); பெயருமாம். நீதியின் வழாத - அறத்துக்கு மாறுபடாத. ஓதுவி-கற்பிப்பாயாக. வல்லையேல். வல்லவனாயின் என்றதால் அத்தகையவல்லமை உனக்கு இல்லை என்பது குறித்து நின்றது.*

***6217. ' "ஆரைச் சொல்லுவது, அந்தணர் அரு மறை அறிந்தோர்,***
***ஓரச் சொல்லுவது எப் பொருள், உபநிடதங்கள்,***
***தீரச் சொல் பொருள் தேவரும் முனிவரும் செப்பும்***
***பேரைச் சொல்லுவது அல்லது, பிறிதும் ஒன்று உளதோ?***

***அந்தணர் அருமறை*** *- வேதம் வல்ல அந்தணர்களின் அரிய வேதங்கள் எல்லாம்;* ***ஆரைச் சொல்லுவது*** *- யாரைச் சிறப்பித்துப் பேசுகிறதோ -* ***அறிந்தோர்*** *- கற்றுணர்ந்த சான்றோர்கள்;* ***ஓரச் சொல்லுவது எப்பொருள்*** *- ஓர்ந்து கூறுவது எந்தப் பொருளையோ -* ***உபநிடதங்கள் தீரச் சொல்பொருள்*** *- அதுவே எல்லா உபநிடதங்களும் முடிந்த முடிவாகக் கூறும் பொருள் ஆகும்;* ***தேவரும் முனிவரும்*** *- அதனை உணர்ந்த தேவர்களும் முனிவர்களும்;* ***செப்பும் பேரைச் சொல்லுவதல்லது*** *- கூறும் அந்த திருப்பெயரைக் கூறுவதைத் தவிர;* ***பிறிதும் ஒன்று உளதோ*** *- வேறு ஒன்றும் உள்ளதோ?*

*ஓரச் சொல்லுதல் - ஆய்ந்தறியும்படி கூறுதல். தீரச் சொல்லுதல் - முடிந்த முடிவாகக் கூறுதல். யாரை என்பது ஆரை என வழங்குவது உலக (மரூஉ) வழக்கு. பெயர் என்பதே பேர் என வழங்குவதும் மரூஉ வழக்கே*

***6218. ' "வேதத்தானும், நல் வேள்வியினானும், மெய் உணர்ந்த***
***போதத்தானும், அப் புறத்துள எப் பொருளானும்,***
***சாதிப்பார் பெறும் பெரும் பதம் தலைக்கொண்டு சமைந்தேன்;***
***ஓதிக் கேட்பது பரம்பொருள் இன்னம் ஒன்று உளதோ?***

*'****வேதத்தானும்*** *- வேதங்களை எல்லாம் கற்று அறிவதாலும்;* ***நல்வேள்வியினானும்*** *- நன்மை தரும் வேள்விகளைச் செய்து முடிப்பதனாலும்;* ***மெய் உணர்ந்த போதத்தானும்*** *- உண்மைப் பொருளை உணர்ந்து அறிந்த மெய்ஞ்ஞானத்தாலும்;* ***அப்புறத்துள எப்பொருளானும்*** *- இவைகளுக்கு அப்பாலுள்ள கர்மம், பக்தி, யோகம் போன்றவற்றினாலும்;* ***சாதிப்பார் பெறும் பெரும்பதம்*** *- சாதித்த மேலோர் அடையும்*

*பெரிய தொரு பேற்றினை;* ***தலைக் கொண்டு சமைந்தேன்*** *- பரமன் நாமத்தைக் கூறுதலை மேற் கொண்டு அடைந்துய்ந்தேன்;* ***ஓதி, கேட்பது பரம் பொருள்*** *- ஓதியும், ஓதக் கேட்கும் பயன் அடைவதற்குரிய மேலான பொருள்;* ***இன்னம் ஒன்று உளதோ*** *- இதைவிடவும் நன்மை பயப்பது வேறு ஒன்று உள்ளதோ? நற்பலன்தருவது வேள்வியாதலின் 'நல்வேள்வி' என்றார். சாதித்தல்; சித்தியடைதல். பெரும்பதம். பெரும்பேறு. தலைக் கொண்டு; மேற்கொண்டு. பரம்பொருள்; மேலான பொருள்.*

***6219. ' "காடு பற்றியும், கன வரை பற்றியும், கலைத் தோல்***
***மூடி முற்றியும், முண்டித்தும், நீட்டியும், முறையால்***
***வீடு பெற்றவர், 'பெற்றதின் விழுமிது' என்று உரைக்கும்***
***மாடு பெற்றனென்; மற்று, இனி என், பெற வருந்தி?***

***காடு பற்றியும்*** *- காட்டை இடமாகக் கொண்டும்;* ***கன வரை பற்றியும்*** *- பெரிய மலையை இடமாகக் கொண்டும்;* ***கலைத்தோல் மூடி முற்றியும்*** *- மான் தோலைப் போர்த்தும் உடுத்தியும்;* ***முண்டித்தும் நீட்டியும்*** *- தலையை மொட்டையடித்தும், முடியை வளர்த்தும்;* ***முறையால் வீடு பெற்றவர்*** *- தமக்குரிய முறையானதவ ஒழுக்கத்தால் வீடு பேற்றை அடைந்தவர்கள் எல்லாம்;* ***'பெற்றதின் விழுமிது' என்றுரைக்கும்*** *- பெற்ற பேற்றைவிட மேலானது என்று கூறுகின்ற;* ***மாடு பெற்றனன்*** *- பெரிய செல்வத்தைப் பெற்றுள்ளேன்;* ***மற்று இனி வருந்தி என் பெற*** *- உடலை வருத்தி நான் இனிப் பெறுவதற்கு என்ன இருக்கிறது?*

*கனவரை - பெரிய மலை. முற்றி மூடி - முழுமையாகப் போர்த்து 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' என்ற குறள் நினைதற்குரியது. முறை - அவரவர்க்குரியதவ ஒழுக்கம்.*

***6220. ' "செவிகளால் பல கேட்டிலர்ஆயினும், தேவர்க்கு***
***அவி கொள் நான்மறை அகப் பொருள் புறப்பொருள் அறிவார்;***
***கவிகள் ஆகுவார்; காண்குவார், மெய்ப்பொருள்;- காலால்***
***புவி கொள் நாயகற்கு அடியவர்க்கு அடிமையின் புக்கார்.***

***காலால்புவிகொள் நாயகற்கு*** *- தன் திருப்பாதங்களால் (அளந்து) உலகத்தைத் தனக்குரியதாக்கிக் கொண்ட தலைவனாகிய திருமாலுக்கு;* ***அடியவர்க்கு அடிமையின் புக்கார்*** *- அடியார்கள் எவரோ அவர்களுக்கு அடிமைபூண்டவர்கள்;*

***செவிகளால் பல கேட்டிலர் ஆயினும்*** - காதுகளால் பல நூல்களை கேட்கும் கேள்வி ஞானமில்லாதவரானாலும்; ***தேவர்க்கு அவிகொள்*** - தேவர்களுக்கு அவியுணவு அளிக்கும் (மந்திரங்களைத் தன்னிடம் கொண்ட); ***நான்மறை அகப் பொருள் புறப் பொருள் அறிவார்*** - நான்கு வேதங்களும் நுட்பமாகவும் வெளிப்படை யாகவும் கூறிய எல்லாப் பொருள்களையும் அறியவல்லாராவர்; ***கவிகள் ஆகுவார்*** - தெய்விகக் கவிஞர்களும் ஆவார்கள்; ***மெய்ப் பொருள் காண்குவர்*** - மெய்ப்பொருளைக் கண்டறிய வல்லவராவார்.

*மகாபலியினிடம் மூவடி மண் கேட்டுப் பெற்று, ஓரடியில் உலகம் முழுவதையும் உரிமையாக்கிக் கொண்டவன் என்பது 'காலால் புவிகொள் நாயகன்" எனக் கூறப்பட்டது. இவ்வாறு பொருள் உரைத்தல் பொருந்தாது. ஏனெனில் இது, வாமனா வதார சரிதை. இப்பாடல் பிரகலாதன் கூற்றாக வருகிறது. (கம்பன் கூற்றாகில் தவறில்லை.) நரசிங்காவதாரத்துக்குப் பிறபட்ட வாமனாவதார சரிதை நிகழ்ச்சியை நரசிங்காவதாரமே இன்னும் நிகழாதிருக்கிற போது முன்னர்க்கூறுதல் காலமலைவு என்னும் குற்றத்தை ஏறிட்டு வழுவாம் ஆதலின் தன் திருவடியாலே உலகத்தைத் தனக்கு அடிமையாக்கி ஆட்கொண்டருளும் நாயகன் என்று பொதுவாக இறைவன் ஆட்கொள்ளும் திறம்பற்றியதாகப் பொருள் உரைத்தலே சிறந்தது என்பது மகாவித்துவான்; மயிலம், பேராசிரியர். வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

***6221. ' "எனக்கும், நான்முகத்து ஒருவற்கும், யாரினும் உயர்ந்த***
***தனக்கும் தன் நிலை அறிவுஅரும் ஒரு தனித் தலைவன்***
***மனக்கு வந்தனன்; வந்தன, யாவையும்; மறையோய்!***
***உனக்கும் இன்னதின் நல்லது ஒன்று இல்" என உரைத்தான்.***

***மறையோய்*** - (வேதங்களைக் கற்ற) வேதியனே!; ***எனக்கும்*** - எனக்கும்; ***நான் முகத்து ஒருவற்கும்*** - நான்கு முகங்களை உடைய பிரமதேவனாகிய அந்த ஒருவனுக்கும்; ***யாரினும் உயர்ந்த தனக்கும்*** - எல்லோரை விடவும் மிக உயர்ந்து விளங்கும் தனக்குமே; ***தன் நிலை அறிவரும்*** - தனது நிலையை அறிவதற்கு அரிய; ***ஒரு தனித் தலைவன்*** - ஒப்பற்ற பெருந்தலைவனாகிய பரமன்; ***மனக்குவந்தனன்*** - எனது மனத்தில் கோயில் கொண்டான்; ***யாவையும் வந்தன*** - அதனால் எல்லாவகை ஞானங்களும் எளிதில் வந்தெய்தின; ***உனக்கும் இன்னதின் நல்லது ஒன்று இல் என உரைத்தான்*** - உனக்கும் இதை விடவேறு நல்லது எதுவுமில்லை என்று கூறினான்.

*ஒருதனித்தலைவன் என்பது "உன்னை நீ தானும் உணராதாய்" என்ற வில்லிபாரதப் பாடலையும் (வில்லி. கிருட்டிணன் தூது.36); தனக்கும் தன் தன்மை அறிவரியான் என்பதையும் (நம்மாழ்வார் 2892) நினைவுறுத்தும். மனக்கு - மனத்துக்கு என்பதன் தொகுத்தல் விகாரம். இன்னதின் - இதைவிடவும் ஒரு தனி - மீமிசைச் சொல்.*

*மறையவன் நிகழ்ந்ததை இரணியனுக்கு அறிவித்தல்*

***6222. 'மாற்றம் யாது ஒன்றும் உரைத்திலன், மறையவன்; மறுகி,
"ஏற்றம் என்? எனக்கு இறுதி வந்து எய்தியது" என்னா,
ஊற்றம் இல்லவன் ஓடினன் கனகனை உற்றான்,
தோற்ற வந்தது ஓர் கனவு கண்டனன் எனச் சொன்னான்:***

***மறையவன்*** *- ஆசிரியனாகிய அந்த வேதியன்;* ***மாற்றம் யாது ஒன்றும் உரைத்திலன்*** *- பிரகலாதன் கூறியன கேட்டு எந்த ஒரு மறு மொழியும் கூறவில்லை;* ***மறுகி*** *- மனம் கலங்கி;* ***ஏற்றம் ஏன்?*** *- இனி எனக்கு என்ன ஏற்றம் வரப் போகிறது?;* ***எனக்கு இறுதி வந்து எய்தியது*** *- எனக்கு அழிவு காலம் வந்து சேர்ந்தது;* ***என்னா*** *- என்று எண்ணியவனாக;* ***ஊற்றம் இல்லவன்*** *- மனத்துணிவு இல்லாத அவன்;* ***ஓடினன் கனகனை உற்றான்*** *- ஓடோடியும் சென்று இரணியனை அடைந்தான்;* ***தோற்ற வந்த தோர்*** *- பின்னால் நேர இருப்பதை உணர்த்த வந்த ஒரு;* ***கனவு கண்டனன் எனச் சொன்னான்*** *- கனவு கண்டவனைப் போல இரணியனிடம் சொல்லலானான்.*

*ஏற்றம் - ஆக்கம். ஊற்றம் - மனஉறுதி. கனகன் - இரணியன். தோற்ற வந்த தோர் கனவு; பின்னால் நேர இருக்கும் தீங்கைத் தெரிவிக்க வந்த ஒரு கனவு.*

***6223. "எந்தை ! கேள்: எனக்கு இம்மைக்கும் மறுமைக்கும் இயம்பச்
சிந்தையால் இறை நினைத்தற்கும் அடாதன செப்பி,
'முந்தையே நினைந்து, என் பொருள் முற்றும்?' என்று உரைத்து, உன்
மைந்தன் ஓதிலன், வேதம்" என்று உரைத்தனன், வணங்கி.***

***வணங்கி*** *- இரணியனை அடைந்த மறையவன் அவனை வணங்கி;* ***எந்தை கேள்*** *- எனக்குத் தந்தை போன்ற தலைவனே நான் உரைப்பதைக் கேட்பாயாக;* ***உன் மைந்தன்*** *- உனது மகன்;* ***எனக்கு இம்மைக்கும் மறுமைக்கும்*** *- எனக்கு இந்தப் பிறவியிலோ அடுத்த பிறவியிலோ;* ***இயம்பச் சிந்தையால் இறை நினைத்தற்கும்*** *- கூறுவதற்கும் ஒரு சிறிது மனத்தில் நினைப்பதற்கும்;* ***அடாதன செப்பி*** *- தகாதனவற்றைக் கூறி;* ***'முந்தையே நினைந்து என் பொருள் முற்றும்'*** *- முன்பே நினைத்து, எனக்கு வேதப் பொருள் அத்தனையும் முற்றுப் பெற்றுள்ளது;* ***என்று உரைத்து*** *- என்று கூறி;* ***வேதம் ஓதிலன்*** *- நான் கற்றுத் தரத் தொடங்கிய வேதத்தை ஓதாதவனானான்;* ***என்று உரைத்தனன்*** *- என்று, இரணியனிடம் கூறினான்.*

*இரணியன் மறையவன் உரையாடல்*

***6224. 'அன்ன கேட்டு, அவன், "அந்தண! அந்தணர்க்கு அடாத,***
***முன்னர் யாவரும் மொழிதரும் முறைமையின் படாத,***
***தன்னது உள் உறும் உணர்ச்சியால் புதுவது தந்தது,***
***என்ன சொல், அவன் இயம்பியது? இயம்புதி" என்றான்.***

***அன்னகேட்டு, அவன்*** - *மறையவன் கூறிய அவற்றைக் கேட்டு, இரணியன் மறையவனை நோக்கி;* ***அந்தண*** - *அந்தணனே;* ***அந்தணர்க்கு அடாத*** - *மறையவர்கள் கேட்கத் தகாததும்;* ***முன்னர் யாவரும் மொழிதரும் முறைமையில்படாத*** - *முன்பு யாரும் கூறுதற்குரிய முறைமையில் படாததும்;* ***தன்னது உள் உறும் உணர்ச்சியால்*** - *தனது உள்ளத்தே முகிழ்த்த உள்ளுணர்ச்சியினால்;* ***புதுவது தந்தது*** - *புதியதாகக் கூறியதுமான; என்ன சொல் அவன்* ***இயம்பியது*** - *என்ன சொல் அவன் சொன்னது?* ***இயம்புதி என்றான்*** - *நீ கூறுவாயாக என்றான்.*

*அன்ன - மறையவன் கூறிய அந்தச் சொற்கள். அடாத - தகாத முறைமையில் படாத - முறையோடு பொருந்தாத.*

***6225. 'அரசன் அன்னவை உரைசெய, மறையவன் அஞ்சி,***
***சிரதலம் கரம் சேர்த்திடா, "செவித் தொளை சேர்ந்த***
***உரகம் அன்ன சொல் யான் உனக்கு உரைசெயின், உரவோய்!***
***நரகம் எய்துவென்; நாவும் வெந்து உகும்' என நவின்றான்.***

***அரசன் அன்னவை உரை செய*** - *அரசனாகிய இரணியன் அவ்வாறு கூறினானாக;* ***மறையவன் அஞ்சி*** - *அந்தணன் பயந்து;* ***சிரதலம் கரம் சேர்த்திடா*** - *தலைமீது கரங்களைக் கூப்பி வணங்கி;* ***'செவித் தொளை சேர்ந்த*** - *காதுத் தொளைகளிலே புகுந்த;* ***உரகம் அன்ன சொல்*** - *பாம்புக் கொப்பான அந்தச் சொல்லை;* ***யான் உனக்கு உரை செயின்*** - *நான் உனக்குச் சொல்லு வேனாயின்;* ***உரவோய்*** - *வலிமை மிக்கவனே;* ***நரகம் எய்துவென்*** - *நான் நரகத்தை அடைவேன்;* ***நாவும் வெந்து உகும்*** - *எனது நா வெந்து அழியும்;* ***என நவின்றான்*** - *என்று கூறினான்.*

*'பேய் அரசு செய்தால் பிணம் தின்னும் சாத்திரங்கள்' என்பதற் கொப்ப மறையவன் நடத்தை அமைந்தது. பிரகலாதன் ஓதிய திருவெட்டெழுத்தைத் தான் சொன்னால் நரகம் கிடைக்கும், நாக்கு வெந்துபோகும் என்னும் நிலையை உன்னுக.*

*இரணியன் மைந்தனை அழைத்து நிகழ்ந்தன கேட்டல்*

***6226. ' "கொணர்க என் மைந்தனை, வல் விரைந்து"***
***என்றனன், கொடியோன்;***
***உணர்வு இல் நெஞ்சினன் ஏவலர் கடிதினின் ஓடி,***
***கணனின் எய்தினர், "பணி" என, தாதையைக்***
***கண்டான்-***
***துணை இலான்தனைத் துணை என உடையவன்***
***தொழுதான்.***

***கொடியோன்*** - *மிகக் கொடியவனாகிய இரணியன்;* ***கொணர்க என்மைந்தனை வல் விரைந்து என்றனன்*** - *என் மகனை, மிகவிரைவில் இங்கு அழைத்து வாருங்கள் என ஏவலர்களுக்கு உத்தரவிட்டான்;* ***உணர்வு இல் நெஞ்சினன் ஏவலர் கடிதினின் ஓடி*** - *நல்லுணர்வு இல்லாத நெஞ்சினனாகிய இரணியனின் ஏவலர்கள் விரைவாகச் சென்று;* ***கணனின் எய்தினர்*** - *ஒரு கணப் பொழுதில் பிரகலாதனை அடைந்தார்கள்;* ***பணி என*** - *அரசனது 'கட்டளை' என்று கூற;* ***துணை இலான் தனை*** - *தனக்குவமையும் ஒப்பும் இல்லாதவனான பரந்தாமனை;* ***துணை என உடையவன்*** - *தனக்கு துணை உடையவனான பிரகலாதன்;* ***தாதையைக் கண்டான் தொழுதான்*** - *தனது தந்தையான இரணியனைக் கண்டு வணங்கினான்.*

*உணர்வு - நல்ல அறிவு. வல்விரைந்து - மிக விரைவாக. கணனின் - கணப் பொழுதில். 'துணையிலான்' என்றது தனக்குவமையில்லாத பரமனை. 'துணையென உடையவன்' திருமாலையே உயிர்த்துணை எனக் கொண்ட பிரகலாதனை. செயல்களின் விரைவு பாடலில் புலப்படுகின்றது. ஏவலர் கடமைப்பாங்கும் பிரகலாதனின் பணிவும் தெள்ளிதின் உணர்த்தப்பட்டன.*

***6227. 'தொழுத மைந்தனை, சுடர் மணி மார்பிடைச்***
***சுண்ணம்***
***எழுத, அன்பினின் இறுகுறத் தழுவி, மாடு இருத்தி,***
***முழுதும் நோக்கி, "நீ, வேதியன் கேட்கிலன் முனிய,***
***பழுது சொல்லியது என்? அது பகருதி" என்றான்.***

***தொழுத மைந்தனை*** - *(தனது பாதங்களில் வீழ்ந்து) வணங்கிய மகனை;* ***சுடர்மணி மார்பிடை*** - *ஒளிமிக்க தனது மார்பிலே பூசப்பட்ட;* ***சுண்ணம் எழுத*** - *வாசனைப் பொடிபிரகலாதன் உடலிலே படும்படி;* ***அன்பினில் இறுகுறத் தழுவி*** - *அன்போடு, இறுகத் தழுவி;* ***மாடு இருத்தி*** - *தனக்குப் பக்கத்திலே இருக்கச் செய்து;* ***முழுதும் நோக்கி*** - *மகனைப் பாதாதிகேசமாக முழுவதும் பார்த்து;* ***நீ வேதியன் கேட்கிலன் முனிய*** - *மகனே! நீ ஆசிரியன் கேட்க இயலாதவனாக கோபம் கொள்ளும்படி;* ***பழுது சொல்லியது என்?*** - *தவறுபடக் கூறியது என்ன?;* ***அது பகருதி என்றான்*** - *அதைக்*

*கூறுவாயாக என்றான். சுடர் மணி மார்பு - இரணியன் பொன் நிறமுடையவன். ஒளிமிக்க ஆபரணங்களும் அணிந்துள்ளான். எனவே, அவன் மார்பு ஒளியுடைய மார்பு எனப்பட்டது. எழுத - பூச.*

## *பிரகலாதன் உரையின் சிறப்புக் கூற இரணியன் அதனைச் சொல்ல வேண்டல்*

***6228. ' "சுருதி ஆதியில் தொடங்குறும் எல்லையில் சொன்ன***
***ஒருவன், யாவர்க்கும் நாயகன், திருப் பெயர் உணரக்***
***கருதக் கேட்டிடக் கட்டுரைத்து, இடர்க் கடல் கடக்க***
***உரிய மற்று இதின் நல்லது ஒன்று இல்" என உரைத்தான்.***

***சுருதி ஆதியில் தொடங்குறும் எல்லையில்*** *- வேதம் முதலிலே ஆரம்பிக்கும் சமயத்தில்;* ***சொன்ன ஒருவன் யாவர்க்கும் நாயகன்*** *- சொன்ன ஒப்பற்ற ஒருவனும், எல்லா உயிர்களுக்கும் தலைவனும் ஆகிய திருமாலுடைய;* ***திருப்பெயர்*** *- சிறந்த திரு நாமமானது;* ***உணர, கருத, கேட்டிட*** *- அறியவும், நினைக்கவும், கேட்கவும் செய்து;* ***கட்டுரைத்து*** *- நாளும்இடை விடாது சொல்லி;* ***இடர்க் கடல் கடக்க உரிய*** *- துன்பக் கடலில் இருந்து கடந்து கரையேற உரியதாகும்;* ***மற்று இதின்*** *- வேறு இதை விடவும்;* ***நல்லது ஒன்று இல்*** *- நமக்கு நன்மைதருவது ஒன்றில்லை;* ***என உரைத்தான்*** *- என்று பிரகலாதன் கூறினான்.*

***6229. 'தேவர் செய்கையன் அங்ஙனம் உரைசெய, தீயோன்***
***"தா இல் வேதியன் தக்கதே உரைசெயத் தக்கான்;***
***ஆவது ஆகுக; அன்று எனின், அறிகுவம்" என்றே,***
***"யாவது, அவ் உரை? இயம்புதி, இயம்புதி!" என்றான்.***

***தேவர் செய்கையன்*** *- (அசுரனான இரணியனுக்கு மகனாகப் பிறந்தும்) தேவர்களைப் போன்ற சிறந்த ஒழுக்கத்தை உடையவனாகிய பிரகலாதன்;* ***அங்ஙனம் உரை செய*** *- அவ்வாறு கூற;* ***தீயோன்*** *- கொடிய இயல்புடைய இரணியன்;* ***தா இல் வேதியன்*** *- குற்றமில்லாத அந்தணனாகிய ஆசிரியன்;* ***தக்கதே உரை செயத்தக்கான்*** *- தகுதியானவைகளையே கூறத் தகுந்தவனாவான்;* ***ஆவது ஆகுக*** *- நடக்கவேண்டியது நடக்கட்டும்;* ***அன்று எனின் அறிகுவம்*** *- இவன் கூறும் சொல்நமக்கு நன்மை தராதது என்றாலும் அதை அறிவோம்;* ***என்றே*** *- என்றெண்ணியவனாக;* ***யாவது அவ்வுரை இயம்புதி இயம்புதி என்றான்*** *- நீ சொல்லும் அந்தப் பெயர் எது கூறுக கூறுக என்றான்.*

*'இயம்புதி இயம்புதி' விரைவு பற்றி வந்த அடுக்கு. தேவர் செய்கையன் - அரக்கர் குலத்தினன் ஆயினும் தேவர்களைப் போன்ற நடத்தை உடையவன் என்பது கருத்து; நீதியால் வந்ததொரு நெடுந்தரும் நெறியல்லால் சாதியால் வந்த சிறு நெறியறியான்' என வீடணனைப் பற்றி உரைப்பது நினைவு கூரத்தக்கது.(7625)*

*ஆசிரியன் சரியாகத்தான் சொல்லியிருக்கிறான் என்று இரணியன் கருதியதை 'தக்கதே உரைசெயத்தக்கான்" என்ற தொடர் உணர்த்துகிறது.*

## *எட்டெழுத்தின் பெருமையைப் பிரகலாதன் இயம்புதல்*

***6230. ' "காமம் யாவையும் தருவதும், அப் பதம் கடந்தால்,***
***சேம வீடு உறச் செய்வதும், செந் தழல் முகந்த***
***ஓம வேள்வியின் உறு பதம் உய்ப்பதும், ஒருவன்***
***நாமம்; அன்னது கேள்; நமோ நாராயணாய!***

***காமம் யாவையும் தருவதும்** - நாம் விரும்பும் நற்பேறுகள் எல்லாவற்றையும் தரவல்லதும்; **அப்பதம் கடந்தால்** - (விரும்பும் நிலையான) அப்பதவிகளைக் கடந்தபின்பு ; **சேமவீடு உறச் செய்வதும்** - என்றும் அழியாத நிலைத்த தன்மையுடைய பாதுகாப்புதவும் வீட்டின்பத்தைத் தருவதும்; **செந்தழல் முகந்த** - செம்மையான தீயால் முகந்து கொள்ளப்படும்; **ஓம வேள்வியின் உறுபதம்** - யாகத்தினால் அடையும் துறக்கம் முதலிய பதவிகளிலே; **உய்ப்பதும்** - நம்மைச் செலுத்துவதும்; **ஒருவன் நாமம்** - ஒப்பற்ற ஒருவனாகிய பரமனது திருநாமமே; **அன்னது கேள் நமோ நாராயணாய** - அதனைக் கேட்பாயாக ஓம்நமோ நாராயணாய நம என்பது அது.*

*காமம் - விரும்பும் நற்பேறுகள். சேமம் - பாதுகாப்பு. சேமவீடு - பரமபதம். "நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோ நாராயணமே" எனவெல்லாம் அருளிச் செயல் கூறுவதை நினைவு கூர்வோமாக. இம்மை, மறுமை இன்பங்களைத் தரவல்லது இத்திரு மந்திரமே என்பது கருத்து.*

***6231.' "மண்ணின்நின்று மேல் மலர் அயன் உலகு உற***
***வாழும்***
***எண் இல் பூதங்கள், நிற்பன திரிவன, இவற்றின்***
***உள் நிறைந்துள கரணத்தின் ஊங்கு உள உணர்வும்,***
***எண்ணுகின்றது இவ் எட்டு எழுத்தே; பிறிது இல்லை.***

***மண்ணின் நின்று** - இந்த மண்ணுலகு தொடங்கி; **மேல் மலர் அயன் உலகு உற** - மேலேயுள்ள பிரமதேவனுக்குரிய சத்தியலோகம் வரை எங்கும்; **வாழும் எண்இல் பூதங்கள்** - வாழுகின்ற எண்ணற்ற உயிரினங்களில்; **நிற்பன திரிவன** - நிலையியற் பொருள், இ யங்கியற் பொருள்; **இவற்றின்** - ஆகிய இவ்விரு வகைப் பொருள்களின்; **உள்நிறைந்துள** - உள்ளத்தே நிறைந்திருக்கின்ற; **கரணத்தின் ஊங்கு***

***உள உணர்வும்*** - *உயிர் உணர்வும் அதைக்கடந்து நிற்கும் மெய்யுணர்வும் (ஞானம்);* ***எண்ணுகின்றது*** - *நினைந்து போற்றுவது;* ***இவ்வெட்டெழுத்தே*** - *இந்த எட்டெழுத்து மந்திரத்தினையேயாம்;* ***பிறிது இல்லை*** - *இதுவல்லாத வேறு எதுவும் இல்லை.*

*மேல் மலர் அயன் உலகு - பிரம்ம தேவன் வாழும் சத்திய லோகம் பூதங்கள் - (பூதங்களின் கூட்டால் உருவாகும்) உயிர் வர்க்கம் கரணம் - உள்ளம், உரை, செயல் முதலியன*

***6232. ' "முக் கண் தேவனும், நான்முகத்து ஒருவனும் முதலா,***
***மக்கள்காறும், இம் மந்திரம் மறந்தவர் மறந்தார்;***
***புக்குக் காட்டுவது அரிது; இது பொதுவுறக் கண்டார்***
***ஒக்க நோக்கினர்; அல்லவர் இதன் நிலை உணரார்.***

***முக்கண் தேவனும்*** - *மூன்று கண்களை உடைய சிவ பெருமானும்;* ***நான் முகத்து ஒருவனும் முதலா*** - *நான்கு முகங்களை உடைய பிரமதேவன் முதலாக;* ***மக்கள் காறும்*** - *மண்ணுலகில் வாழும் மக்கள் இறுதியாக;* ***இம்மந்திரம் மறந்தவர்*** - *இவ்வெட்டு எழுத்து மந்திரத்தை மறந்தவர்கள்;* ***மறந்தார்*** - *தாம் அடைய இருந்த உறுதிப் பேறுகளை மறந்தவராவார்;* ***புக்குக் காட்டுவது அரிது இது*** - *இதன் பொருளை நுணுக்கமாக ஆராய்ந்து அறிவிப்பதென்பது இயலாத தொன்று;* ***பொதுவுறக் கண்டார்*** - *வேறுபாடின்றி எக்காலத்துக்கும் பொது நெறி நின்று யோகத்தால் அறிந்த மேலோரும்;* ***ஒக்க நோக்கினர்*** - *அவர் வழிநின்று பொருந்தி மெய்யுணர்ந்த ஞானிகளும்;* ***அல்லவர் இதன் நிலை உணரார்*** - *அல்லாத மற்றவர் இம்மந்திரத்தின் சீர்மையை அறிந்துணர மாட்டார்.*

*அறிவு கொண்டு ஆராயும் வெற்றறிவின் வலையிலே மந்திரப் பெருமை சிக்காது. ஞானியர், யோகியர் அனுபவித்தறிவது அதன் சீர்மை.*

***6233. ' "தோற்றம் என்னும் அத் தொல் வினைத் தொடு கடல் சுழிநின்று***
***ஏற்று நன் கலன், அருங் கலன் யாவர்க்கும், இனிய***
***மாற்ற மங்கலம், மா தவர் வேதத்தின் வரம்பின்***
***தேற்ற மெய்ப்பொருள், திருந்த மற்று இதின் இல்லை, சிறந்த.****

***தோற்றம் என்னும்*** - *தொடர்ந்து வரும் பிறவி என்ற;* ***தொடு கடல்*** - *ஆழமான பெரிய தொரு கடலில்;* ***தொல்வினைச் சுழிநின்று*** - *பழவினைகளாகிய சுழிகளில்*

*இருந்து;* ***ஏற்றும் நன்கலன்*** *- உயிர்களை (முத்திஎன்ற) கரையிலே சேர்க்கும் மரக்கலம்;* ***யாவர்க்கும் அருங்கலன்*** *- எல்லோருக்கும் அணியத் தகுந்த அரிய அணிகலன்;* ***இனிய மாற்ற மங்கலம்*** *- எத்தகையோர்க்கும் இன்பம் தரும் இனிய மங்கல மொழி;* ***மாதவர்*** *- மேலான தவமுனிவர்களுக்கு;* ***வேதத்தின் வரம்பின்*** *- வேதங்களுக்கு வரம்பாக;* ***தேற்ற மெய்ப் பொருள்*** *- தெளிந்துரைக்கப்படும் மெய்ப்பொருள்;* ***திருந்தமற்று இதின் சிறந்த இல்லை*** *- எத்தகையோரும் திருந்திய வாழ்வு வாழ இந்த எட்டெழுத்து மந்திரத்தைவிடச் சிறந்தது வேறு எதுவுமில்லை.*

*தோற்றம் - பிறப்பு. தொடர்ந்து வருதலின் 'தொடுகடல்' என்றார்; (சகரால்) தோண்டப்பட்டதால் தொடு கடல் என்றும் கொள்ளலாம். 'பிறவிப் பெருங்கடல்' என்ற குறள் ஒப்பிடத்தக்கது. தொல்வினை பழவினை நல்வினையும் பிறப்புக்குக் காரணமாதலின் 'இருள் சேர் இருவினை' என்ற குறள் உரை (10) நினைவு கூரத்தக்கது. பிறவிக் கடலில் தொல்வினை என்னும் சுழிகளில் வீழ்ந்து அழியாது முத்தியாகிய கரை சேர்ப்பது இந்த மந்திரமே என்பார் "நன்கலன்" என்றார். கலம் என்பதன் போலி கலன்: மரக்கலமரம். அருங்கலன் - அணிகலம். 'நலம் தரும்' சொல்லாதலால்' மாற்றமங்கலம்" என்றார்.*

***6234. ' "உன் உயிர்க்கும், என் உயிர்க்கும், இவ் உலகத்தினுள்ள***
***மன்னுயிர்க்கும், ஈது உறுதி என்று உணர்வுற மதித்துச்***
***சொன்னது இப் பெயர்" என்றனன், அறிஞரின் தூயோன்;***
***மின் உயிர்க்கும் வேல் இரணியன் தழல் எழ விழித்தான்.***

***அறிஞரில் தூயோன்*** *- அறிஞர்களில் தூய பேரறிவினனாகிய பிரகலாதன்;* ***உன் உயிர்க்கும்*** *- உன்னுடைய உயிருக்கும்;* ***என் உயிர்க்கும்*** *- என்னுடைய உயிருக்கும்;* ***இவ்வுலகத்திலுள்ள மன்னுயிர்க்கும்*** *- இவ்வுலகத்தில் வாழுகின்ற வேறு பல உயிர்களுக்கும்;* ***ஈது உறுதி என்று*** *- இதுதான் உறுதிபயப்பதென்று;* ***உணர்வு உற மதித்துச் சொன்னது*** *- எனதுள்ளத்தே முகிழ்த்த நல்லுணர்வால் ஆராய்ந்து கூறியது;* ***இப்பெயர்*** *- இந்தப் பரமனின் திருப்பெயராகும்;* ***என்றனன்*** *- என்று கூறினான்; (அதைக்கேட்ட) மின் உயிர்க்கும் வேல்* ***இரணியன்*** *- மின்னலைப் போல ஒளிரும் வேலை உடைய இரணியன்;* ***தழல் எழ விழித்தான்*** *- (சினத்தால்) கண்களில் நெருப்பெழ விழித்தான்.*

*'அறிஞரில் தூயோன்' என்றது பிரகலாதனை. அறிஞரின் அறிஞன் என்றும் தூயர் என்பவர் யாரினும் தூயான் என்றும் முன்னமே (6207) கூறியுள்ளார்.*

*இரணியன் பிரகலாதனை நோக்கிச் சினந்து கூறுதல்*

***6235. ' "இற்றை நாள் வரை, யான் உள நாள் முதல், இப் பேர்***

***சொற்ற நாவையும் கருதிய மனத்தையும் சுடும் என்***
***ஒற்றை ஆணை; மற்று, யார் உனக்கு இப் பெயர்***
***உரைத்தார்?***
***கற்றது ஆரொடு? சொல்லுதி, விரைந்து" எனக்***
***கனன்றான்.***

***இற்றை நாள் வரை*** *- இந்த நாள் வரையும்;* ***யான் உள நாள்முதல்*** *- நான் ஆட்சிக்கு வந்த நாள்முதலாக;* ***இப்பேர் சொற்ற நாவையும்*** *- இந்தப் பெயரைச் சொன்ன நாவையும்;* ***கருதிய மனத்தையும்*** *- நினைத்த மனத்தையும்;* ***சுடும் என் ஒற்றை ஆணை*** *- சுட்டு அழிக்கும் நிகரற்ற எனது தனியாணை;* ***மற்றுயார் உனக்கு இப்பெயர் உரைத்தார்*** *- இருந்தும், உனக்கு இந்தப் பெயரை யார் சொன்னார்கள்?;* ***கற்றது ஆரோடு*** *- எவரிடம் கற்றறிந்தாய்?;* ***சொல்லுதி விரைந்து*** *- சீக்கிரம் பதில் சொல்;* ***எனக் கனன்றான்*** *- என்று சினந்து கூறினான்.*

*யான் உள நாள் - தவபலத்தால் நான் ஆட்சி செய்யத் தொடங்கிய நாளிலிருந்து - "இப்பேர்" பிரகலாதன் கூறிய திரு நாமத்தை இன்னதெனச் சொல்லாமல் வெறுப்புத் தோன்ற 'இப்பேர்' என்றான். ஒற்றை ஆணை - ஒப்பற்ற ஆணை (ஏக சக்ராதிபத்யம்) 'மற்று' வினைமாற்றுப் பொருள். கனன்றான் - சினந்து கூறினான். தன் மகன் ஆதலின் குற்றத்தை அவன்மேல் ஏற்றாது பிறர்மேல் ஏற்றி, 'யார் உரைத்தார்', 'கற்றது ஆரொடு' என்று இரணியன் கூறியதாகக் கவிச்சக்கரவர்த்தி உரைத்த நயம் உணர்க. இவ்வாறு பின்னும் வரும் இதுமகாவித்துவான். வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

***6236. ' "முனைவர் வானவர் முதலினர், மூன்று உலகத்தும்***
***எனைவர் உள்ளவர், யாவரும், என் இரு கழலே***
***நினைவது; ஓதுவது என் பெயர்; நினக்கு இது நேர***
***அனையர் அஞ்சுவர்; மைந்த ! நீ யாரிடை அறிந்தாய்?***

***முனைவர் வானவர் முதலினர்*** *- தேவர்களுக்குத் தலைவர்களான மூவரும் மற்றுமுள்ள தேவர் முதலானோரும்;* ***மூன்று உலகத்தும் எனைவர் உள்ளவர் யாவரும்*** *- இந்த மூன்று உலகங்களிலும் வாழுகின்றவர்களான மற்ற எல்லோரும்;* ***நினைவது என் இரு கழலே*** *- எப்போதும் நினைந்து போற்றுவது எனது இரண்டு பாதங்களையேயாம்;* ***ஓதுவது என்பெயர்*** *- தினமும் ஓதுவதும் எனது பெயரையேயாம்;* ***நினக்கு இது நேர*** *- உனக்கு இந்தப் பெயரை நேர்ந்து சொல்ல;* ***அனையர் அஞ்சுவர்*** *- அந்த மூவரும், தேவரும், பிறகும் அஞ்சுவார்கள்;* ***மைந்த ! நீ யாரிடை அறிந்தாய்*** *- மைந்தனே! நீ இந்தப் பெயரை யாரிடம் அறிந்து கொண்டாய்?*

*நேர - உடன்பட்டுக் கூற. முனைவர் - முதல்வர் (அயன், அரி, சிவன் ஆகிய மூவர்). எனைவர் - எத்தனை பேர்.*

***6237. ' "மறம் கொள் வெஞ் செரு மலைகுவான், பல் முறை வந்தான்,***
***கறங்கு வெஞ் சிறைக் கலுழன்தன் கடுமையின், கரந்தான்;***
***பிறங்கு தெண் திரைப் பெருங் கடல் புக்கு, இனம் பெயராது,***
***உறங்குவான் பெயர் உறுதி என்று ஆர் உனக்கு உரைத்தார்?***

***மறம்கொள் வெஞ் செரு மலைகுவான்*** - *வீரம் மிக்க கொடிய போரை என்னுடன் செய்வதற்காக;* ***பல்முறைவந்தான்*** - *(நீ கூறிய அத்திருமால்) பலமுறை வந்தான்;* ***கறங்கு வெஞ்சிறை*** - *(எனக்குத், தோற்று) சுழன்று பறக்கின்ற வெம்மையான இறகுகளை உடைய;* ***கலுழன் தன் கடுமையின் கரந்தான்*** - *வாகனமாகிய கருடனது விரைந்து செல்லும் வேகத்தால் மறைந்தான்;* ***பிறங்கு தெண் திரை*** - *பெருகிவரும் தெளிந்த அலைகளைஉடைய;* ***பெருங்கடல் புக்கு*** - *பெரிய பாற்கடலிலே புகுந்து;* ***இனம் பெயராது*** - *இன்னும் அந்த இடத்தை விட்டு இடம் பெயராது;* ***உறங்குவான் பெயர்*** - *உறங்குபவனாகிய திருமாலின் பெயர்;* ***உறுதி என்று*** - *உறுதிப் பேறுதரவல்லது என்று;* ***ஆர் உனக்கு உரைத்தார்*** - *யார் உனக்குச் சொன்னார்கள்?*

*வெஞ்செரு - கொடியபோர். மலைகுவான் - போரிடுதற்காக (வானீற்று வினை எச்சம்). கறங்கு - காற்றாடி போலச் சுழன்று பறத்தல். கலுழன் - கருடன். இனம் - இன்னம் என்பதன் இடைக்குறை.*

***6238. ' "பரவை நுண் மணல் எண்ணினும், எண்ண அரும் பரப்பின்***
***குரவர் நம் குலத்து உள்ளவர் அவன் கொலக் குறைந்தார்;***
***அரவின் நாமத்தை எலி இருந்து ஓதினால், அதற்கு***
***விரவு நன்மை என் ? துன்மதி ! விளம்பு" என வெகுண்டான்.***

***துன்மதி*** - *கெடுமதி கொண்டவனே !* ***பரவை நுண்மணல் எண்ணினும்*** - *கடற்கரையில் உள்ள நுண்ணிய மணலை எண்ணினாலும்;* ***எண்ணஅரும் பரப்பின்*** - *எண்ணுதற்கரிய பரப்பினராக;* ***குரவர் நம் குலத்துள்ளவர்*** - *நம் குலத்து முன்னோர்களாக வாழ்ந்த பலரும்;* ***அவன் கொலக் குறைந்தார்*** - *அத்திருமால் கொல்ல அழிந்து அளவில் குறைந்தனர்;* ***அரவின் நாமத்தை*** - *தனக்குப் பகையான பாம்பின் பெயரை;* ***எலி இருந்து ஓதினால்*** - *எலி அமைதியாய் இருந்து ஓதுவதால்;* ***அதற்கு விரவும் நன்மை என்*** - *அந்த எலிக்கு வந்து சேரும் நன்மை என்ன?;* ***'விளம்பு' என வெகுண்டான்*** - *சொல்லு எனக்கோபித்துக் கூறினான்.*

*பரவை - கடல். குரவர் - முன்னோர். 'அரவின் நாமத்தை எலி' என்ற உவமையின்மூலம் இரணியன் நாராயணனை அரவு என்றும், தம்மை எலி என்றும் உவமைப்படுத்தி திருமாலின் வலிமையை உறுதிப்படுத்தியது போல் கூறினானாம்.*

***6239. ' "வயிற்றினுள் உலகு ஏழினோடு ஏழையும் வைக்கும்***
***அயிர்ப்பு இல் ஆற்றல் என் அனுசனை, ஏனம் ஒன்று ஆகி,***
***எயிற்றினால் எறிந்து, இன் உயிர் உண்டவன் நாமம்***
***பயிற்றவோ, நினைப் பயந்தது நான்?" எனப் பகர்ந்தான்.***

***வயிற்றினுள்*** *- தனது வயிற்றுக்குள்ளே;* ***உலகு ஏழொடு ஏழையும் வைக்கும்*** *- கீழுலகம் ஏழு, மேலுலகம் ஏழு ஆகிய பதினான்கு உலகங்களையும் வைக்கும்;* ***அயிர்ப்பு இல் ஆற்றல்*** *- ஐயத்துக்கிடமில்லாத வலிமை உடைய;* ***என் அனுசனை*** *- எனதுதம்பியான இரணியாட்சனை;* ***ஏனம் ஒன்று ஆகி*** *- பன்றி வடிவம் எடுத்து வந்து;* ***எயிற்றினால் எறிந்து*** *- தந்தங்களால் குத்தி;* ***இன்உயிர் உண்டவன் நாமம்*** *- அவனது இனிய உயிரை உண்டவனான அத்திருமாலின் பெயரை;* ***பயிற்றவோ நினைப்பயந்தது நான்?*** *- சொல்லுவதற்காக வா உன்னை நான் மகனாகப் பெற்றேன்?;* ***எனப்பகர்ந்தான்*** *- என்று கூறினான்.*

*அனுசன் - தம்பி பயிற்றுதல் - பலமுறை கூறுதல்.*

***"ஏனம் ஒன்றென எழுந்து வந்து எம் ஐயன்***

***ஆவி உண்டவனை இன்றுநீ***

***மானமின்றி எதிர் ஓதவோ உனை***

***வளர்த்த தென்றிவை கிளர்த்தியே"***

*என்ற இரணியவதைப் பரணி (335) ஒப்புநோக்கத்தக்கது.*

***6240. ' "ஒருவன், யாவர்க்கும் எவற்றிற்கும் உலகிற்கும் முதல்வன்,***
***தருதல், காத்து, அவை தவிர்த்தல் என்று இவை செயத் தக்கோன்,***
***கருமத்தால் அன்றிக் காரணத்தால் உள்ள காட்சி,***
***திருவிலி! மற்று இது எம் மறைப் பொருள் எனத் தெரிந்தாய்.***

***திருஇலீ*** - திருவில்லாதவனே (நல்ல பேறு இல்லாதவனே)!; ***ஒருவன்*** - ஒப்பற்ற ஒருவனாகிய நான்; ***யாவர்க்கும் எவற்றிற்கும்*** - இவ்வுலகில் வாழும் எல்லோருக்கும் எல்லாவற்றுக்கும்; ***உலகிற்கும் முதல்வன்*** - இந்த உலகுக்கும் முதல்வனாயுள்ளேன்; ***தருதல், காத்தல், அவை தவிர்த்தல் என்று இவை செயத் தக்கோன்*** - எல்லா உயிர்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் என்று கூறப்படும் முத் தொழிலையும் செய்யத்தக்கவன் நானே; ***கருமத்தால் அன்றி*** - (இதில் நேரில் காணும்) காட்சி அளவையினால் அல்லாது; ***காரணத்தால் உள்ள காட்சி*** - கருதுதல் அளவையாகிய அனுமானப்பிரமாண உணர்வால்; ***மற்று இது*** - அறிந்து உணரும் இதனை; ***எம்மறைப் பொருள் எனத் தெரிந்தாய்*** - எந்த வேதத்தில் கூறப்படும் பொருள் என்று தெரிந்து கொண்டாய்.

*தனக்குப் பின் தனது செல்வமனைத்தையும் துய்க்க வேண்டிய மகன் வீணாகப் பகைவன் பெயரைக் கூறி, செல்வத்தை இழக்கப் போகிறானே என்பதை உணர்த்துவான் 'திருவிலீ' எனப் பிரகலாதனை அழைத்தான் என்க. கருமம் - காட்சி காரணம் - அநுமானம் (கருதுதல்)*

***6241. ' "ஆதி அந்தங்கள் இதனின் மற்று இல்லை, பேர் உலகின்;***
***வேதம் எங்கனம், அங்கனம் அவை சொன்ன விதியால்,***
***கோது இல் நல்வினை செய்தவர் உயர்குவர்; குறித்துத்***
***தீது செய்தவர் தாழ்குவர்; இது மெய்ம்மை, தெரியின்.***

***பேருலகின்*** - மிகப் பெரிய இந்த உலகத்திலே; ***ஆதி அந்தங்கள்*** - வேதத்தின் ஆரம்பமுதல் முடிவு வரை கூறுவது; ***இதனின் மற்று இல்லை*** - இதைவிட வேறு எதுவுமில்லை; ***வேதம் எங்கனம்*** - வேதங்கள் எவ்வாறு எதனை அறிவுறுத்தியதோ; ***அங்கனம் அவை சொன்னவிதியால்*** - அவ்வாறு அவ்வேதங்கள் சொன்ன முறைப்படி; ***கோதுஇல் நல்வினை*** - குற்றமில்லாத நல்ல செயலை; ***செய்தவர் உயர்குவர்*** - செய்தவர்கள் உயர்வடைவார்கள்; குறித்துத் தீது செய்தவர் தாழ்குவர் - எண்ணித் தீமை செய்தவர் தாழ்வடைவார்கள்; ***இது தெரியின் மெய்ம்மை*** - ஆராய்ந்து பார்த்தால் இதுதான் உண்மை.

*சிறிதும் குற்றமில்லாத செயல்களை 'கோதில் நல்வினை' என்றார் குறித்தல் - மனத்தில் நினைத்தல் அறியாது தவறு செய்வாரைப் பெரியோர் மன்னிப்பர் அறிந்து செய்யும் தீமை மன்னிக்கக் கூடியதல்ல என்பதால் 'குறித்துத் தீது செய்தவர் தாழ்குவர்' என்றார். வேதங்கள் கூறும் நல்ல செயல்களைச் செய்வோர் உயர்வர் வேதங்கள் விலக்கிய தீய செயல்புரிவோர் தாழ்வர் என்பதே வேதம் ஆரம்பமுதல் இறுதி வரை கூறுவது. படைத்தல் முதலியவற்றைச் செய்து, நல்வினை தீவினைப்*

*பயன்களை அனுபவிக்கச் செய்ய, ஒரு தலைவன் (இறைவன்) வேண்டியதில்லை என்பது கருத்து. மெய்ம்மை - உண்மை.*

***6242. ' "செய்த மா தவம் உடைமையின், அரி, அயன், சிவன் என்று***
***எய்தினார் பதம் இழந்தனர்; யான் தவம் இயற்றி,***
***பொய் இல் நாயகம் பூண்டபின், இனி அது புரிதல்***
***நொய்யது ஆகும் என்று, ஆரும் என் காவலின் நுழைவார்.***

***செய்த மாதவம் உடைமையின்*** *- நான் செய்த சிறந்ததவம் இருப்பதால்;* ***யான்தவம் இயற்றி*** *- நான் தவம் செய்து, (அதன்பலனால்);* ***பொய்இல் நாயகம் பூண்டபின்*** *- பொய்மையில்லாத இந்த உலகத்துக்குத் தலைமை பூண்ட பின்பு;* ***அரி, அயன் சிவன் என்று எய்தினார்*** *- பிரமன், திருமால், சிவன் என்னும் மூவரும் (தாங்கள் அடைந்திருந்த);* ***பதம் இழந்தார்*** *- மேலான பதங்களை இழந்தனர்;* ***இனி அது புரிதல்*** *- இனித்தமது பதவியைக் காத்துக் கொள்ள தவம் செய்வதென்பது;* ***நொய்யது ஆகும் என்று*** *- (எனது ஆட்சியில்) சிதைந்து அழியும் என்று நினைத்து;* ***ஆரும் என் காவலில் நுழைவார்*** *- பிரமன் முதலிய எவரும் என் ஆளுகைக்கு உட்படுவாராயினர்.*

*பொய் இல் நாயகம் - என்றும் மாறாத தலைமை. தாம் செய்த தவத்தால் தலைமை எய்தினரே அன்றி அரி முதலோரும் இயல்பான*

*தலைவர்கள் அல்லர் என்பான்' செய்த மாதவம் உடைமையின் அரி அயன் சிவன் என்றெய்தினார்" என்றான் என்பதும் ஒரு பொருளாகும்.*

***6243. ' "வேள்வி ஆதிய புண்ணியம் தவத்தொடும் விலக்கி,***
***கேள்வி யாவையும் தவிர்த்தனென், 'இவை கிளர் பகையைத்***
***தாழ்வியாதன செய்யும்' என்று; அனையவர்தம்பால்***
***வாழ்வு யாது ? அயல் எவ் வழிப் புறங்கொண்டு வாழ்வார் ?***

***வேள்வி ஆதிய*** *- புனிதமான வேள்விகள் முதலானவையும்;* ***புண்ணியத்தவத்தொடும் விலக்கி*** *- புண்ணியச் செயலானதவம் புரிதலையும் பிறர் செய்யாதபடி விலக்கி;* ***கேள்வியாவையும்*** *தவிர்த்தனென் - நல்ல நூற் கேள்வி முதலியவற்றையும் நிகழாதபடி நான் தவிர்த்து விட்டேன்;* ***இவை கிளர் பகையை*** *- வேள்வி முதலான இவையெல்லாம் பொங்கி எழும் பகையை;* ***தாழ்வியாதன செய்யும்*** *- தாழ்ந்து பணியாதவாறு செய்யும்;* ***என்று*** *- என்பதால் (எவரும் தவம்*

*முதலியன செய்யாது தவிர்த்தேன்);* ***அனையவர் தம்பால் வாழ்வுயாது*** *- அயன் முதலானோர்க்கு (எனது ஆட்சியில்) அமைந்த நல்வாழ்வு யாது?;* ***அயல் எவ்வழி*** *- வேறு எந்த விதத்திலே (அவர்கள் எனக்கு மாறாக);* ***புறங் கொண்டு வாழ்வார்*** *- புறத்தே துணை பெற்று வாழ்வர்?*

*வேள்வி ஆகிய - வேள்வி முதலானவை. தவிர்த்தனென் - விலக்கினேன். புறம் கொண்டு - புறத்தே துணையைப் பெற்று. அயல் - வேறாக. கேள்வி: வேதம் முதலியவைகளைக் கேட்டல்.*

***6244. ' "பேதைப் பிள்ளை நீ; பிழைத்தது பொறுத்தனென்;***
***பெயர்த்தும்.***
***'ஏது இல் வார்த்தைகள் இனையன விளம்பலை;***
***முனிவன்***
***யாது சொல்லினன், அவை அவை இதம் என***
***எண்ணி,***
***ஓதி; போதி' என்று உரைத்தனன்-உலகு எலாம்***
***உயர்ந்தோன்.***

***பேதைப் பிள்ளை நீ*** *- நீ அறிவு நிரம்பப் பெறாத சிறுவன்; பிழைத்தது பொறுத்தனன் - செய்த பிழையைப் பொறுத்தேன்; பெயர்த்தும் ஏது* ***இல்வார்த்தைகள் இனையன இயம்பலை*** *- மறுபடியும் பகைவரைப் புகழ்ந்து பேசும் சொற்களான இவை போன்றவற்றைச் சொல்லாதே;* ***முனிவன் யாது சொல்லினன்*** *- ஆசிரியனாகிய முனிவன் என்ன சொல்லித் தருகிறானோ;* ***அவை அவை இதம் என எண்ணி*** *- அவையே நமக்கு நன்மை பயப்பன என நினைத்து;* ***ஓதி போதி என்று*** *- (ஆசிரியனுடன்) சென்று, கற்கத் தொடங்குவாயாக என்று;* ***உலகு எலாம் உயர்ந்தோன் உணர்த்தினன்*** *- எல்லா உலகங்களிலும் மேலாண்மை செலுத்தும் இரணியன் கூறினான்.*

*உலகெலாம் உயர்ந்தோன் - இரணியன் உலகெங்கும் புகழ் உயர்ந்து விளங்குபவன் என்பது பொருள். பிழைத்தது - தவறு செய்தது. முனிவன் -பாடம் கற்பிக்கவந்த அந்தணன். இதம் - நன்மை*

*பிரகலாதன் அறிவுரை*

**கலிவிருத்தம்**

***6245. ' "உரை உளது உணர்த்துவது; உணர்ந்து***
***கோடியேல்,-***
***விரை உள அலங்கலாய் ! - வேத வேள்வியின்***
***கரை உளது; யாவரும் கற்கும் கல்வியின்***
***பிரை உளது" என்பது மைந்தன் பேசினான்:***

***விரை உள அலங்கலாய்*** - *மணம் கமழும் மாலையணிந்தவனே;* ***உரை உளது உணர்த்துவது*** - *உனக்கு நான் உணர்த்தும் வார்த்தை ஒன்று உள்ளது;* ***உணர்ந்து கோடியேல்*** - *நான் கூறுவதை உணர்ந்து கொள்வாயேல் (கூறுவேன்);* ***வேத வேள்வியின் கரை*** *உளது - (என்உரை) வேத ஞானத்துக்கும் வேள்வியின் பலனுக்கும் முடிவிடமாயுள்ளது;* ***யாவரும் கற்கும் கல்வியின் பிரை உளது*** *- எல்லோரும் கற்கின்ற கல்வியாகிய பாலுக்கு பிரை போன்ற நிறை உள்ளது;* ***என்பது மைந்தன் பேசினான்*** *- என்பன போன்றவைகளை மகனாகிய பிரகலாதன் கூறினான்.*

*விரை - மணம். அலங்கல் - மாலை. பிரை - மோர்த்துளி. பாலை உறைய வைக்கும் பிரை போல யாவரும் கற்கும் கல்வியைச் செறிய வைக்கும் உரை உளது. எனது உரையான எட்டெழுத்து மந்திரம் வேத*

*ஞானத்துக்கும், வேள்விப் பயனுக்கும் முடிந்த முடிவான எல்லை நிலமாயுள்ளது என்றான். வேதம் - வேதத்தால் எய்தும் ஞானம். வேள்வி. வேள்வியால் எய்தும்பயன் இவைகளின் முடிவிடமாயிருப்பது பரமன் திருநாமம் என்பது கருத்து. விறகில் தீயினன் எனத் தொடங்கும் பாடலில் நன்பாலில் படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்... முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே என வரும் அப்பர் (திருமுறை5-பாட893) வாக்கை நினைந்து ஒப்பிடலாம்.*

***6246. ' "வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை; வேந்த! நின்***
***பித்து இன்றி உணர்தியேல், அளவைப் பெய்குவேன்;***
***'உய்த்து ஒன்றும் ஒழிவு இன்றி உணர்தற்பாற்று' எனா,***
***கைத்து ஒன்று நெல்லிஅம் கனியின் காண்டியால்.***

***வேந்த*** *- அரசனே;* ***'வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை*** *- விதையில்லாது விளைவது எதுவுமில்லை;* ***பித்து இன்றி*** *- (பொருளல்லவற்றைப் பொருள் என்றுணரும்) மயக்க உணர்வை விட்டு;* ***உணர்தியேல்*** *- (உண்மைப் பொருளை) உணர்வாயானால்;* ***அளவைப் பெய்குவேன்*** *- (மெய்ப்பொருளை அறியும்) வகையை விளக்கிக் கூறுவேன்;* ***உய்த்து*** *- (மெய்ப்பொருளிலே மனத்தைச்) செலுத்தி;* ***ஒன்றும் ஒழிவுஇன்றி*** *- சிறிதும் இடைவிடாமல்;* ***உணர்தற்பாற்று எனா*** *- உணரத்தக்கது என்று;* ***கைத்து ஒன்று நெல்லி அம் கனியின்*** *- உள்ளங்கையில் கொண்ட நெல்லிக் கனியைப் போல;* ***காண்டியால்*** *- (மெய்ப்பொருளை) காண்பாய் (என்றான்).*

*எல்லா உயிர்களுக்கும் ஆதார சக்தியாக விளங்கும் பரமனை அன்றி உலகம் நிலை பெறுதல் இயலாது என்பதை 'வித்தின்றி விளைவில்லை' என்ற உவமை கூறி விளக்கினான். பித்து - மருள் (மயக்க உணர்வு) அளவு - அறியும் வகை. பெய்குவேன் - விளக்கிக் கூறுவேன். ஒழிவின்றி - இடைவிடாமல்.*

***6247. ' "தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை -
தன்னுளே நின்று, தான் அவற்றுள் தங்குவான்,
பின் இலன் முன் இலன், ஒருவன்; பேர்கிலன்;
தொல் நிலை ஒருவரால் துணியற்பாலதோ ?***

***ஒருவன்*** - ஒப்பற்ற ஒருவனாகிய இறைவன்; ***தன்னுளே உலகங்கள் எவையும் தந்து*** - எல்லா உலகங்களையும் தன்னுள்ளே இருந்து தோன்றச் செய்து; ***அவை தன்னுளே நின்ற*** - அவ்வுலகங்களுக்குள் அந்தர்யாமியாய் நின்று; ***தான் அவற்றுள் தங்குவான்*** - தான் அவைகளுக்குள் எங்கும் நிறைந்து தங்கி இருப்பான்; ***பின் இலன்*** - அவனை அன்றிப்பின்னால் எதுவும் எஞ்சி இருப்பது இல்லாதவன்; ***முன் இலன்*** - தனக்கு முன்னும் தானன்றி எதுவும் இல்லாதவன்; ***பேர்கிலன்*** - தனது நிலையிலிருந்து என்றும் பிறழாதவன்; ***தொல்நிலை*** - அப்பரமனுடைய தொன்மையான நிலை; ***ஒருவரால் துணியற் பாலதோ*** - இத்தகையதென ஒருவரால் அளவிட்டுக் கூறும் தரத்ததோ.

*தன்னுள் இருந்து உலகையும், உயிரினங்களையும் தோன்றச் செய்கிறான் அவை, தனது விரிவிலே அடங்கி நிற்க - தான் அவைகளுக்குள்ளே எங்கும் நிறைந்து விளங்குகிறான். சரீர. சரீரிபாவம் (உடல் உயிர்க் கொள்கை) என்ற வைணவக் கோட்பாடு இங்கு கூறப்பட்டுள்ளது. சித்து - அசித்துக்களாகிய அனைத்தையும் உடலாக உடையவன் அவற்றின் உயிராகத் திகழ்பவன் என்பதே உடலுயிர்க் கொள்கை என்பர்.*

***"தன்னுளே திரைத் தெழும்தரங்க வெண் தடங்கடல் தன்னுளே திரைத்
தெழுந்தடங்குகின்ற தன்மைபோல் நின்னுளே பிறந்திறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே"***

***(திருச்: 10)***

*என்ற திருமழிசையாழ்வார் அருளிச் செயல் ஒப்பு நோக்கத்தக்கது. "பரமன், உலகைப் படைக்க வேறு காரணம் வேண்டாது தன்னிடமிருந்தே தோன்றச் செய்கிறான்" என்றதை 'தன்னுளே உலகங்கள் எவையும் தந்து" என்றார். உயிர்கள் வாழத் தான் இடமாய் நின்றும், அவ்வுயிர்களுக்குள் தான் அந்தர் யாமியாய்த் திகழ்பவன்' என்ற அரிய உண்மையைத் தெரிவிக்கிறது,"*

***6248. ' "சாங்கியம், யோகம் என்று இரண்டு தன்மைய,
வீங்கிய பொருள் எலாம் வேறு காண்பன;
ஆங்கு அவை உணர்ந்தவர்க்கு அன்றி, அன்னவன்
ஓங்கிய மேல் நிலை உணரற்பாலதோ ?***

***சாங்கியம்*** - ஆராய்ச்சியால்வரும் ஞானம்; ***யோகம்*** - ஞானத்தை அனுபவமாகச் செயற்படுத்தும் நிலை; ***என்று இரண்டு தன்மைய*** - என்று கூறும் இரண்டு வகை

*நெறிகள்;* ***வீங்கிய பொருள் எலாம்*** *- நிறைந்துள்ள உலகப் பொருள்களை எல்லாம்; வேறு* ***காண்பன*** *- வேறு படுத்துப் பகுத்து உணர்த்துவனவாம்;* ***ஆங்கு அவை உணர்ந்தவர்க்கன்றி*** *- அவற்றை அறிந்தவர்க்கல்லாது;* ***அன்னவன் ஓங்கிய மேல் நிலை*** *- அப்பரமனது உயர்வற உயர்ந்த மேலான் நிலை;* ***உணரற்பாலதோ*** *- உணர்ந்தறியும் தகைமையதோ?*

*மூலப்பகுதிமுதல் புருடன் வரை உள்ள தத்துவங்களின் இயல்பை விரித்துரைப்பது சாங்கிய நெறி. இயமம் முதலிய எண் வகைப் பயிற்சியை மேற்கொண்டு மனத்தை நெறி நிறுத்தி இறைவனை உணர்வது யோக நெறி. உலகப் பொருள்களையெல்லாம் பகுத்து உணர்த்தும் இவ்விருவகை நெறிகளையும் உணர்ந்தவர்களே இறைவனது மேலாம் நிலையை அறிவர். பிறர் உணர்ந்தறியார் என்க வீங்கிய - மிகுந்த, அன்னவன் - இறைவன். பாலதோ - ஓகாரம் எதிர்மறைப் பொருள்; உணரற் பாலதல்ல என்பது கருத்து. சாங்கியம், யோகம் என்ற இருவகை நெறிகளை அறிந்து உணர்ந்தவர்களே இறைவனது சிறந்த மேலாம் நிலையை உணரவல்லவர் என்பது கருத்து.*

***6249. ' "சித்து என அரு மறைச் சிரத்தின் தேறிய***
***தத்துவம் அவன்; அது தம்மைத் தாம் உணர்***
***வித்தகர் அறிகுவர்; வேறு வேறு உணர்***
***பித்தரும் உளர் சிலர்; வீடு பெற்றிலார்.***

***அருமறைச் சிரத்தின்*** *- அரிய வேதங்களின் உச்சியிலே அமைந்த;* ***சித்தெனத் தேறிய*** *- மெய்ப்பொருள் எனத் தெளிந்துரைத்த;* ***தத்துவம் அவன்*** *- பரதத்துவமாக விளங்குபவன் அவன்;* ***அது தம்மைத்தாம் உணர் வித்தகர் அறிகுவர்*** *- அதனை, தங்களைத் தாங்கள் உணர்ந்த ஞானிகள் நன்கு அறிவார்கள்;* ***வேறு வேறு உணர் பித்தரும் உளர் சிலர்*** *- இவ்வாறன்றி வேறுவேறாக பிறழ உணரும் பித்தர்களும் சிலர் உள்ளனர்;* ***வீடு பெற்றிலார்*** *- ஞானிகளும் யோகிகளும் அடையத்தக்க வீடு பேறான பரமபதப்பேற்றைப் பெறாதவராவர்.*

*'அருமறை' என்னாது அரிய நெறியைக் கூறும் வேதம். 'சித்து' என்றது மெய்ப்பொருளான பரம் பொருளை. அருமறைச்சிரம் வேதங்களின் உச்சி; வேதக் கருத்துகளை விளக்கும் உபநிடதம். பித்தர். மயக்க உணர்வுடையோர். "மறையாய நால்வேதத்துள்நின்ற மலர்ச்சுடரே" என்ற திருவாய் மொழி (2313) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6250. ' "அளவையான் அளப்ப அரிது; அறிவின் அப்***
***புறத்து***
***உளவை ஆய் உபநிடதங்கள் ஓதுவ;***
***கிளவி ஆர் பொருள்களான் கிளக்குறாதவன்***

### *களவை யார் அறிகுவார் ? மெய்ம்மை கண்டிலார்.*

***அளவையான் அளப்ப அரிது***- *(அந்தப் பரம் பொருளின் சிறப்பை( பொருள்களை அளந்து துணிதற்குரிய எந்தப் பிரமாணங்களாலும் அளந்தறிய இயலாது;* ***அறிவின் அப்புறத்து உளவை***- *அறிவால் உணர்ந்தறிய முடியாத படி உள்ளவைகளான வேதப் பொருள்களை;* ***ஆய் உபநிடதங்கள் ஓதுவ***- *ஆய்ந்து துணிந்த உபநிடதங்கள் ஓயாதுரைக்கின்றன;* ***கிளவியார் பொருள்களான்***- *சொல், பொருள் இவைகளின் துணை கொண்டு;* ***கிளக்குறாதவன்*** *- இத்தகையன் என்று கூறற்கியலாதவன்;* ***களவையார் அறிகுவர்*** *- மாயத்தை அறிபவர் யாருளர் ?* ***மெய்ம்மை கண்டிலர்*** *- அவனது மெய்நிலையை எவரும் கண்டவர் இல்லை.*

*அளவை - பொருள்களை அளந்து துணிவதற்குரிய அடிப்படைப் பிரமாணங்கள். உளவை - உள்ளவரை. 'சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து" (திருக்குறள் - உரைப்பாயிரம்) எனப்பரிமேலழகரும், "மொழியைக் கடக்கும் பெரும்புகழான்" எனத் திருவரங்கத் தமுதனாரும் (இராமானுச நூற்றந்தாதி 7) கூறியவை ஒப்பு நோக்கத் தக்கன. கனவு இங்கு மாயம். பரமனின் திறங்களை இக்காண்டத்தில், நாகபாசப் படலத்தில் கருடன் துதியாக வரும் பாடல்களில் (8252 8262) அற்புதமாகக் கம்பர் விளக்கியுள்ளார்.*

### *6251. ' "மூவகை உலகும் ஆய், குணங்கள் மூன்றும் ஆய்*
### *யாவையும் எவரும் ஆய், எண் இல் வேறுபட்டு,*
### *ஓவல்இல் ஒரு நிலை ஒருவன் செய்வினை*
### *தேவரும் முனிவரும்உணரத் தேயுமோ ?*

***மூவகை உலகும் ஆய்*** *- மேல், கீழ், இடை என்ற மூன்று வகையான உலகங்களும்தான் ஒருவனே ஆகி;* ***குணங்கள் மூன்றும் ஆய்*** *- சத்துவம், இராஜசம், தாமசம் என்னும் மூன்று வகையான குணங்களாகவும் ஆகி;* ***யாவையும் எவரும் ஆய்*** *- உலகப் பொருள்கள் எல்லாமும் எல்லோரும் தானே ஆகி;* ***எண்ணில் வேறுபட்டு*** *- எண்ணற்ற வேறுபாடுகளுடன் தோன்றியும்;* ***ஓவலில் ஒரு நிலை ஒருவன்*** *- நீங்குதலில்லாத ஒரே நிலையை உடைய ஒருவன்(இறைவன்);* ***செய்வினை*** *- செய்தருளும் செயல்கள்;* ***தேவரும் முனிவரும் உணர*** *- தேவர்களும், முனிவர்களும் உணருமாறு;* ***தேயுமோ*** *- அளவில் சுருங்கியதாய் விடுமோ? ஆகாது.*

*மூவகை உலகு - உலகிலுள்ள அவன், அவள், அது என்று சுட்டத்தகுந்த மூன்று வகையினதாகிய உயிரினங்கள் எனினுமாம். அந்த உயிரினங்களுக்குரிய சத்துவ குணம், ரஜோகுணம், தாமசகுணம் யாவையும் சித்து, அசித்துப் பொருள்கள் எல்லாம். யாவரும். எல்லோரும். எண்ணற்ற வேறுபாடுள்ளவன். அதே சமயத்தில் நீக்கமில்லாத ஒரே நிலையை உடையவன் என்பதை, "ஓவலில் ஒருநிலை ஒருவன்" என்றார்.*

*6252. ' "**கருமமும், கருமத்தின் பயனும், கண்ணிய**
**தரு முதல் தலைவனும், தானும், தான்; அவன்**
**அருமையும் பெருமையும் அறிவரேல் அவர்,**
**இருமை என்று உரைசெயும் கடல்நின்று ஏறுவார்.***

*__கருமமும்__ - நல்வினை, தீவினை ஆகிய இருவகை வினைகளும்; __கருமத்தின் பயனும்__ - அந்த வினைகளால் நேரும் பயனும்; __கண்ணிய தரு முதல் தலைவனும்__ - விரும்பிய அப்பயன்களை உயிர்களுக்குத் தரும் முதற் பொருளும்; __தானும்__ - வினைசெய்யும் கருத்தாவாகிய உயிரும்; __தான்__ - அனைத்தும் தானாக விளங்குபவன் இறைவனே; __அவன் அருமையும் பெருமையும்__ - அவ்விறைவனது அருமை பெருமைகளை; __அறிவரேல் அவர்__ - யார் அறிய வல்லவரோ, அவர்கள்; __இருமை என்றுரை செயும்__ - இம்மை, மறுமைகளாகிய இருமை என்று நூல்கள் கூறும்; __கடல் நின்று ஏறுவார்__ - பெருங்கடலைக் கடந்து கரை சேர்பவராவர்.*

*'கருமமும் கரும் பலனுமாகிய காரணன்' என்பது திருவாய்மொழி (3:5:10) "செய்வினையும் செய்வானும் அதன் பலனும் கொடுப்பானும், மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக் கொண்டே இவ்வியல்பு சைவநெறி என்ற பெரிய புராணப் பாடல் (3645) ஒப்பிடத்தக்கது.*

*6253. ' "**மந்திரம் மா தவம் என்னும் மாலைய,**
**தந்துறு பயன் இவை, முறையின் சாற்றிய**
**நந்தல் இல் தெய்வம் ஆய், நல்கும் நான்மறை**

**அந்தம் இல் வேள்விமாட்டு அவிசும் ஆம்-அவன்.***

*__மந்திரம்__ - அப்பரமனைத் தியானிப்பதற்குரிய மந்திரங்களும்; __மாதவம்__ - வேத மந்திரங்களால் செய்யப்படும் சிறந்த தவமும்; __என்னும் மாலைய__ - என்னும் இயல்புடைய (நற செயல்களும்); __தந்து உறு__ பலன் இவை - அச்செயல்கள் தரும் சிறந்த பயன்களும்; __முறையின் சாற்றிய__ - இவற்றை முறைப்பட அருளிய; __நந்தல் இல் தெய்வமாய் நல்கும்__ - குறையில்லாத தெய்வம் ஆகியும் வழங்குவான்; __நான் மறை அந்தமில் வேள்விமாட்டு__ - நான்கு வேதங்களும் விதித்தபடி குறைவின்றிச் செய்யும் யாகத்திலே பெய்யும்; __அவிசும் ஆம் அவன்__ - தேவர் உணவான அவி உணவும் அவனே ஆவான்.*

*6254. ' "**முற்பயப் பயன் தரும், முன்னில் நின்றவர்,**
**பிற்பயப் பயன் தரும், பின்பு போல் அவன்;**
**தற் பயன் தான் தெரி தருமம் இல்லை; அஃது**
**அற்புத மாயையால் அறிகிலார் பலர்.***

***முற்பயப் பயன்தரும்*** - *(அப்பரமன்) முன்னே அனுபவிப்பதற்குரிய முதிர்ந்த வினைப்பயனைமுன்னின்று தவுவான்;* ***முன்னில் நின்று*** *- ஆசிரிதர்களான அடியவர்க்கு முன் நின்று;* ***அவர் பிற்பயப் பயன் தரும்*** *- அவர்கள் பின்னே நுகர்தற்குரிய முதிராத வினைப் பயன்களை பின்னர் உதவுவான்;* ***பின்பு போல் அவன்*** *- பின்னே இருப்பது போலிருந்து அப்பரமனுதவும்;* ***தற்பயன்தான் தெரி*** *- தனது பயனைத் தானே தெரிந்து தரவல்ல;* ***தருமம் இல்லை*** *- கருமம் எதுவுமில்லை;* ***அஃது அற்புதமாயையால்*** *- அதனை அவனது அற்புத மாயையாலே;* ***அறிகிலார் பலர்*** *- பலர் அறிய முடியாதவராவர்.*

*உயிர்கள் அனுபவிப்பதற்குரிய முற்பயனைமுன்னும், பிற்பயனைப் பின்னும் துய்க்கச் செய்பவன் இறைவன் ஒருவனே சடப் பொருளான வினை தானே பயன்தர வல்லதல்ல என்றான். செய்வினைப் பயன் தானே பயன் தரும். அதைச் செய்ய ஒரு தெய்வம் வேண்டியதில்லை. என்று கூறிய இரணியன் உரையை மறுத்துப் பிரகலாதன் கூறுவதிதுவென்க. தருமம் - செயல் (கருமம்)*

***6255. ' "ஒரு வினை, ஒரு பயன் அன்றி உய்க்குமோ,***
***இரு வினை என்பவை இயற்றி இட்டவை;***
***கருதின கருதின காட்டுகின்றது,***
***தரு பரன் அருள்; இனிச் சான்று வேண்டுமோ ?***

***இருவினை என்பவை*** *- உயிர்கள் செய்த நல்வினையும் தீவினையும் ஆகிய இருவகை வினைகள் என்பவை;* ***இயற்றி***

***இட்டவை*** *- உயிர்கள் செய்து வைத்தனவாகும்; (அவற்றுள்)* ***ஒரு வினை ஒரு பயன் அன்றி*** *- ஒரு வினை ஒரு பயனைத் தருவதல்லது;* ***உய்க்குமோ*** *- வேறு பயன்களைத் தரவல்லவையோ;* ***கருதின கருதின காட்டுகின்றது*** *- அடியார்கள் விரும்பிய விரும்பிய பலன்களைத் தரவல்லது;* ***தருபரன் அருள்*** *- எல்லாம் தரவல்ல இறைவன் திருவருளே;* ***இனிச் சான்று வேண்டுமோ*** *- இனி இதற்கு வேறு சாட்சியும் வேண்டுமோ ?*

*'வேள்வியும் தவமுமாகிய நல்வினை இயற்றி உலக முதல்வனாக இருக்கிறேன்' என்று கூறிய இரணியனுக்கு, செய்யும் நல்வினையோ தீவினையோ தாமே பயன்தரவல்லன அல்ல. அவை உயிரற்ற சடப் பொருள்தானே எவ்வாறு பலன் தரும்; அடியார் கருதிய அத்தனைப் பயன்களையும் தரவல்லது இறைவன் திருவருளே என்றுணர்க என்றான் பிரகலாதன். உய்க்குமோ - செலுத்துமோ*

***6256. ' "ஓர் ஆவுதி, கடைமுறை வேள்வி ஓம்புவார்,***
***அரா-அணை அமலனுக்கு அளிப்பரேல்; அது***

***சராசரம் அனைத்தினும் சாரும் – என்பது***
***பராவ அரு மறைப் பொருள்; பயனும் அன்னதால்.***

**வேள்வி ஓம்புவார் கடைமுறை** - *வேத வேள்விகளைச் செய்து முடிப்பவர்கள் வேள்வியின் முடிவில்;* **ஒரு ஆவுதி** - *ஓர் அவியுணவினை; அராஅணை - பாம்பணையில் அறிதுயில் அமர்ந்திருக்கும்;* **அமலனுக்கு அளிப்பரேல்** - *திருமாலுக்குப் படைப்பாராயின்;* **அது சராசரம் அனைத்திலும் சாரும்** - *அந்த அவியுணவு உலகில் உள்ள சரம், அசரம் ஆகிய எல்லாவற்றையும் அடையும்;* **என்பது பராவ அரும்மறைப் பொருள்** - *என்பது பரவுதற்கு அரிய பெருமைமிக்க 'வேதங்கள் கூறும் பொருளாகும்;* **பயனும் அன்னதால்** - *அவியுணவே அல்லாது அந்த வேள்வியின் பயனும் அத்தன்மைத்தே யாகும்.*

*அமலன் - குற்றமற்றவன் "வேதமும் வேள்வியும் விண்ணும் இரு சுடரும் ஆதியும் ஆனான்" என்ற பெரியதிருமொழி (நாலாயிர.1786) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6257. ' "பகுதியின் உட் பயன் பயந்தது; அன்னதின்***
***விகுதியின் மிகுதிகள் எவையும், மேலவர்***
***வகுதியின் வசத்தன; வரவு போக்கது;***
***புகுதி இல்லாதவர் புலத்திற்று ஆகுமோ ?***

*பகுதி - மூலப் பிரகிருதி; அழிவில்லாதது, அளவற்றது; முக்குணமுடையது; உலகுக்கு முதற்காரணமானது; தோற்றமும் அழிவும் இல்லாதது. பரமன் திருவிளையாட்டுக்குக் கருவியாய் விளங்குவது மூலப் பிரகிருதி. இதனைப் பரிபாடல் தொண்டு என்னும். இந்த மூலப்பிரகிருதியிலிருந்து "மான்" முதலான தத்துவங்கள் தோன்றும் இதிலிருந்து பலவாய் விரிந்து தோன்றும் பொருள்கள் 'விகுதி' எனப்படும். விகுதி-வகை மூலப்பகுதியாகிய தத்துவம் உலகுக்குக் காரணமாய் - தன்னில் விரிந்த இருபத்துநான்கு தத்துவமாய் - திருமாலுக்கு உடலாய் விளங்கும் என்ற சரீர - சரீரிபாவம் வைணவ சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். வேதாந்தம், சைவசித்தாந்தம் போன்ற பிற தத்துவங்களும் இக்கருத்துடையனவே. ஐயரவர்கள் நூலகப் பதிப்பில் விரிவு காணலாம். பிரமன் இராமனை நோக்கிக் கூறும்,*

***"பகுதிஎன்றுளது யாதினும் பழையது பயந்த விகுதியால் வந்த விளைவு மற்று அதற்கு மேல்நின்ற புகுதி யாவர்க்கும் அரிய அப்புருடனும் நீ இம் மிகுதி உன்பெரு மாயையினால் வந்த வீக்கம்"***

*என்ற பாடல் (10051) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6258. ' "எழுத்து இயல் நாளத்தின் எண் இலா வகை,-***
***முழுத் தனி நான்முகன் முதல முற்று உயிர்-***

***வழுத்து அரும் பொகுட்டது ஓர் புரையின் வைகுமால்,***
***விழுத் தனிப் பல் இதழ் விரை இலா முகிழ்.***

***எழுத்து இயல் நாளத்தின்*** *- ஓவியத்தின் தன்மைவாய்ந்த அழகிய தண்டினையும்;* ***விழுத்தனிப்பல் இதழ்*** *- மேலான சிறந்த பல இதழ்களையும்;* ***விரை இலா முகிழ்*** *- உடைய திருமாலின் நாபியில் தோன்றிய மணம் கமழும் தாமரை மலரின்;* ***முழுத்தனி நான்முகன் முதல*** *- ஒப்பற்ற பிரமன் முதலாகிய;* ***எண்ணிலாவகை முற்றுயிர்*** *- எண்ணற்ற உயிரினம் முழுதும்;* ***வழுத்து அரும் பொகுட்டது ஓர்புரையின் வைகுமால்*** *- போற்றுதற்கரிய பொகுட்டிலே ஒரு பகுதியிலே வாழ்வதாகும்.*

*நாளம் - உள்தொளை உடைய தண்டு எழுத்து இயல். ஓவியத் தன்மை. முழுத்தனி - முழுதும் தனித்தன்மை உள்ள.*

***"பந்திக் கமலத் தடஞ்சூழ் அரங்கர் படைப்பழிப்புச் சிந்தித் திடுவதும்***
***இல்லைகண்டீர் அத்திசைமுகனோ(டு) உந்திக் கமலம் விரிந்தால் விரியும்***
***உகக்கடையில் முந்திக் குவியில் உடனே குவியுமிம் மூதண்டமே"***

*என்ற திருவரங்கத்து மாலை (19) இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.*

***6259. ' "கண்ணினும் கரந்துளன்; கண்டு காட்டுவார்***
***உள் நிறைந்திடும் உணர்வு ஆகி, உண்மையால்,***
***மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்-***
***எண்ணினும் நெடியவன் ஒருவன், எண் இலான்.***

***கண்ணினும் கரந்துளன்*** *- இறைவன் கண்ணுக்குள்ளும் (அதனால் காண முடியாதபடி) மறைந்திருக்கிறான்;* ***கண்டு காட்டுவார்*** *- தத்துவ உண்மைகளைத் தாமும் அறிந்து பிறருக்கும் கூறவல்ல மேலோர்களின்;* ***உள் நிறைந்திடும் உணர்வாகி உண்மையால்*** *- உள்ளத்தில் நிறைந்திருக்கும் மெய்ஞ்ஞான உணர்வாகி அவர்கள் உள்ளத்தே வாழ்ந்திருப்பதால்;* ***மண்ணினும்*** *- நிலத்திலே (அதன் பரப்பளவு பரத்திருந்தும்);* ***வானினும்*** *- வானத்திலே (அதன் உயர்வளவு உயர்ந்திருந்தும்);* ***மற்றை மூன்றினும்*** *- மற்றுள்ள நீர்,தீ, காற்று என்பவைகளில் அவற்றிற்குரிய குணங்களாய் நிறைந்தும்;* ***எண்ணினும் நெடியவன்*** *- நினைப்பவர் நினைப்பிலும் நெடியவனான;* ***ஒருவன் எண்ணிலான்*** *- ஒப்பற்ற ஒருவன், எண்ணற்றவடிவினனாக விளங்குகிறான்.*

*கரந்து - மறைந்து. "கரந்து எங்கும் பரந்துளன்" என்பது திருவாய்மொழி (1:1:10) உள் நிறைந்திடும் உணர்வு - உள்ளத்தே நிறைந்திருக்கும் ஞான உணர்வு "உள்குவார் உள்ளிற்றெல்லாம் உடன் இருந்து அறிதி" என்பது அப்பர் தேவாரம் (1189:3) "பூநிலாய ஐந்துமாய் புனற்கண் நின்ற நான்குமாய் தீநிலாய மூன்றுமாய் தெளிந்த காலிரண்டதாய் மீநிலாய தொன்றுமாகி வேறு வேறுதன்மையாய், நீநிலாய வண்ணம் நின்னையாவர் காணவல்லரே" என்ற திருச்சந்த விருத்தம் (1) காண்க.*

***6260. ' "சிந்தையின், செய்கையின், சொல்லின்,***
***சேர்ந்துளன்;***
***இந்தியம்தொறும் உளன்; உற்றது எண்ணினால்,***
***முந்தை ஓர் எழுத்து என வந்து, மும் முறைச்***
***சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான்.***

***சிந்தையின், செய்கையின், சொல்லின் சேர்ந்துளன்*** - *உயிர்களின் எண்ணத்திலும் செய்யும் செயல்களிலும் பேசும் பேச்சிலும் இறைவன் சேர்ந்து உறைபவனாவான்;* ***இந்தியம்தொறும் உளன்*** - *இந்திரியங்கள் தோறும் இருக்கிறான்;* ***உற்றது எண்ணினால்*** - *(அவன் எங்கும் நிறைந்திருக்கும்) இயல்பை எண்ணிப் பார்த்தால்;* ***முந்தை ஓர் எழுத்தென வந்து*** - *முன்பு ஒரு எழுத்தாகத் தோன்றி;* ***மும்முறைச் சந்தியும்*** - *அ,உ,ம என்னும் மூன்றெழுத்துக்களும்;* ***பதமுமாய்த்தழைத்ததன்மையான்*** - *நான்கு பதங்களுமாய் தழைத்த தன்மையன் ஆவான்.*

*இந்தியம், இந்திரியம் என்பதன் திரிபு. ஐந்து இந்திரியங்கள். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள். முந்தை ஓர் எழுத்து - 'ஓம்' என்னும் பிரணவம். அ,உ.,ம் என்ற மூன்றும் சேர்ந்ததே 'ஓம்' இதனைக் கூட்டெழுத்து என்பார். பதம் - ஓம் நமோ நாராயணாய என்பதாம்; பிரணவத்தின் விரிவே எட்டெழுத்து மந்திரம். "எட்டிழையும் மூன்று சரடுமாம் மங்கல சூத்திரம் போலே எட்டெழுத்தும், மூன்று பதங்களுமாயிருப்பது திருமந்திரம்" என்பர் மேலோர்.*

***6261. ' "காமமும் வெகுளியும் முதல கண்ணிய***
***தீமையும், வன்மையும், தீர்க்கும் செய்கையான்***
***நாமமும், அவன் பிற நலி கொடா நெடுஞ்***
***சேமமும், பிறர்களால் செப்பற்பாலவோ ?***

***காமமும் வெகுளியும் முதல*** - *காமம், கோபம் முதலாகிய;* ***கண்ணிய தீமையும் வன்மையும்*** - *மனம்கருதிய தீமைகளையும் கொடுஞ்செயல்களையும்;* ***தீர்க்கும் செய்கையான்*** - *அறவே தீர்க்கும் செய்கை உடைய அப்பரமனுடைய;* ***நாமமும்*** - *திருநாமத்தின் சிறப்பும்;* ***அவன் பிற நலி கொடா*** - *பிற உயிர் நலிதல் செய்யாதபடி;* ***நெடும் சேமமும்*** - *உயிர்களை நிலையாகக் காக்கும் சேமமும்;* ***பிறர்களால் செப்பற் பாலவோ*** - *அவனது திருவருளைப் பெறாத மற்றவர்களால் கூறத்தக்கதாமோ ? காமம், வெகுளி, மயக்கம் இவை மூன்றும் மனத்துக்குத் தீமை பயப்பனவாம். வன்மை - வன்செயல். நலி கொடா - நலியாதவாறு. நெடுஞ்சேமம் - நிலைத்த பாதுகாப்பு. "காமம், வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக்கெடும் நோய்" (360) என்பது குறள்.*

*6262. ' "**காலமும் கருவியும் இடனும் ஆய், கடைப்***
***பால் அமை பயனும் ஆய், பயன் துய்ப்பானும் ஆய்,***
***சீலமும் அவை தரும் திருவும் ஆய், உளன் -***
***ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்.***

***ஆலமும் வித்தும் ஒத்து*** - *பெரியதொரு ஆலமரமும் இவை மூன்றன் நாமம் கெடக்கெடும் நோய்" (360) என்பது குறள். அதன் விதையும் போல;* ***அடங்கும் ஆண்மையான்*** - *உலகமனைத்தும் தன்னுள் அடங்கியிருக்கும் படியான பேராண்மையுள்ளவன்;* ***காலமும் கருவியும் இடனுமாய்*** - *தொழிலைச் செய்தற்குரிய காலம் கருவி, களன் மூன்றுமாகி;* ***கடைப்பால் அமை பயனுமாய்*** - *தொழிலின் நிறைவில் அமையும் பயனுமாய்;* ***பயன் துய்ப்பானுமாய்*** - *அந்தப் பயனை அனுபவிப்பவனுமாய்;* ***சீலமும் அவைதரும் திருவுமாய் உளன்*** - *நல்லொழுக்கமும், அந்த ஒழுக்கத்தால் எய்தும் செல்வமுமாய் இருப்பவன் அப்பரமனே.*

*கடைப்பால் - இறுதியில். திரு செல்வம் "ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனான்" என முன்னும் (413) கூறியுள்ளது கருதுக. அங்குக் குறிக்கப்பட்டது வாமன அவதாரத்தை; எனினும், அதே தொடர் பரம்பொருள் இலக்கணமும் ஆகின்றது.*

*6263. ' "**உள்ளுற உணர்வு இனிது உணர்ந்த ஓசை ஓர்***
***தெள் விளி யாழிடைத் தெரியும் செய்கையின்,***
***உள் உளன்; புறத்து உளன்; ஒன்றும் நண்ணலான்;***
***தள்ள அரு மறைகளும் மருளும் தன்மையான்.***

***உள்ளுற*** - *(இசையில் வல்லவர்களின்) உள்ளத்திலே பொருந்திய;* ***உணர்வு இனிது உணர்ந்த ஓசை*** - *இசையுணர்வால் இனிதே உணரப் பட்ட ஓசையானது;* ***தெள்விளியாழிடை*** - *தெளிந்த இசைக்கு இடமாகிய யாழின் இடையிலே;* ***தெரியும் செய்கையின்*** - *வெளிப்படும் காரியத்தைப் போல;* ***உள் உளன் புறத்துளன்*** - *எல்லா உயிர்களிலும் உள்ளும், புறமும் உள்ளவனாவான்;* ***ஒன்றும் நண்ணலான்*** - *எனினும் அவைகளின் தன்மை தன்னை அடையாத தூய்மை உடையவன்;* ***தள்ள அரும் மறைகளும்*** - *ஒதுக்க இயலாத வேதங்களும் கூட;* ***மருளும் தன்மையான்*** - *அவனது தன்மையைக் கூறுவதற்குக் தடுமாறும் தன்மை உடையவன்.*

*6264. ' "**ஓம் எனும் ஓர் எழுத்துஅதனின் உள் உயிர்***
***ஆம் அவன், அறிவினுக்கு அறிவும் ஆயினான்;***
***தாம மூஉலகமும் தழுவிச் சார்தலால்,***
***தூமமும் கனலும்போல் தொடர்ந்த தோற்றத்தான்.***

***ஓம் எனும் ஓர் எழுத்து அதனின்*** - *'ஓம்' என்று கூறப்படும் பிரணவத்தின்;* ***உள் உயிராம் அவன்*** - *உள்ளே அமைந்த உயிராக இருக்கும் அப்பெருமான்;* ***அறிவினுக்கு அறிவும் ஆயினான்*** - *அறிவுக்கும் அறிவாகத் திகழ்பவனான்;* ***தாம மூவுலகமும்*** - *பரந்தாமம் என்னும் பரம பதத்துடன் மற்ற மூன்று உலகங்களிலும்;* ***தழுவிச் சார்தலான்*** - *கலந்து நிறைந்துள்ளமையால்;* ***தூமமும் கனலும் போல்*** - *புகையும் நெருப்பும் போல் (பிரியாது);* ***தொடர்ந்த தோற்றத்தான்*** - *தொடர்ந்து திகழும் தன்மையனாம்.*

*தாமம் - பரந்தாமம் (பரமபதம்). புகையும் அதற்குக் காரணமான நெருப்பும் சேர்ந்திருப்பது போல எங்கும் நிறைந்து விளங்குபவன் என்பதை தூமமும் கனலும் போல் தொடர்ந்த தோற்றத்தான்" என்றார்.*

***6265. ' "காலையின் நறு மலர் ஒன்றக் கட்டிய***
***மாலையின் மலர் புரை சமய வாதியர்***
***சூலையின் திருக்கு அலால், சொல்லுவோர்க்கு எலாம்***
***வேலையும் திரையும்போல் வேறுபாடு இலான்.***

***காலையின்*** - *(மலரும்) காலத்தே;* ***நறுமலர்*** - *மலர்ந்த மணமிக்க மலர்கள்;* ***ஒன்றக் கட்டிய*** - *நெருங்கிப் பொருந்துமாறு கட்டப்பட்ட;* ***மாலையின் மலர்புரை சமய வாதியர்*** - *மாலையில் உள்ள பல மலர்களை ஒத்துச் சமயம் பற்றி வாதம் செய்பவர்களின்;* ***சூலையின் திருக்கலால்*** - *மனஎரிவு காரணமான மாறுபாடு அல்லாமல்;* ***சொல்லுவோர்க்கு எலாம்*** - *அவன்தன்மை உணர்ந்து கூறும் ஞானிகளுக்கு எல்லாம்;* ***வேலையும் திரையும்போல்*** - *கடலும் அதனுள் எழுந்து அடங்கும் அலைகளும் போல;* ***வேறுபாடிலான்*** - *வேறுபாடில்லாதவனாவான்.*

*மாலையில் கட்டப்பட்ட மலர்கள் வேறு வேறு நிறம், மணம் உடையனவாயினும். மாலைக்கு அழகூட்டும் ஒருதன்மையில் ஒத்திருப்பனபோல, சமயங்கள் புறத்தோற்றத்தில் பல்வேறு வாதங்களால் வேறுபட்டாலும் அவை கூறும் நெறி-நிலை ஒன்றே. சமயம் என்பது பரம்பொருளை உணர்ந்து அனுபவத்தில் கரைய வைப்பதேயன்றி, வாத, ஆரவாரங்களுக்கு உரியது அன்று. அனுபவ ஞானிகள் பூசல் இடார். உண்மையை உணர்ந்தவர்கள் கடலும் அலையும் போல இறைவன் வேறுபாடற்றவன் என்பதை உணர்வர் என்பதனை "தன்னுளே திரைத்தெழும்தரங்க வெண் தடங்கடல், தன்னுளே திரைத்தெழுந்தடங்குகின்ற தன்மைபோல்" என்ற திருச்சந்த விருத்தத்தால் அறியலாம். (திவ்யப்.761.) ஆறுதல்- கடைதல். சூலைசூல் என்ற பகுதி ஐ என்ற பெயர் விகுதி பெற்றது.*

***6266. ' "இன்னது ஓர் தன்மையன் இகழ்வுற்று எய்திய***

***நல் நெடுஞ் செல்வமும், நாளும், நாம் அற***
***மன்னுயிர் இழத்தி ! என்று அஞ்சி வாழ்த்தினேன்,***
***சொன்னவன் நாமம்" என்று உணரச் சொல்லினான்.***

***இன்னது ஓர் தன்மையன்*** - *இத்தகைய பேரியல்புவாய்ந்த இறைவனை; இகழ்வுற்று - (அவன் பெருமை வலிமைகளை எண்ணாது) இகழ்ந்துபேசி;* ***எய்திய நல்நெடும் செல்வமும்*** - *தவபலத்தால் அடைந்துள்ள நன்மை தரும் நிறைந்த செல்வத்தையும்;* ***நாளும்*** - *பெற்றுள்ள வாழ் நாளையும்;* ***நாம் அற*** - *உனக்குள்ள நற்பெயருடனே இழந்து;* ***மன்உயிர் இழத்தி*** - *நிலைத்த உயிரை இழக்கப் போகிறாயேஎன்று;* ***அஞ்சி*** - *நான் பெரிதும் பயந்து;* ***சொன்னவன் நாமம் வாழ்த்தினேன்*** - *இதுவரை கூறிய அப்பரமனது திருநாமத்தை வாழ்த்தலானேன்;* ***என்று உணர சொல்லினான்*** - *என்று இரணியன் உணருமாறு பிரகலாதன் கூறினான்.*

*நா(ம)ம் அற-பெயரும் அழியும்படி நாமம் என்ற சொல் நாம் என விகாரமாயிற்று. சொன்னவன் என்னால் விவரித்துச் சொல்லப்பட்ட பரமன் நாமம். உணரும் வகையில் பிரகலாதன் சொல்லியும் இரணியன் உணரவில்லையே என்பது இரக்கத்துக்குரியது; அவ்வளவு ஆணவம்.*

## *இரணியன் சினந்து பிரகலாதனைக் கொல்லப்பணித்தல்*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***6267. 'எதிரில் நின்று, இவை இவை உரைத்திடுதலும்,***
***எவ் உலகமும் அஞ்ச,***
***முதிரும் வெங் கத மொழிகொடு மூண்டது,***
***முது கடற் கடு ஏய்ப்ப;***
***கதிரும் வானமும் சுழன்றன; நெடு நிலம்***
***கம்பித்த; கனகன் கண்***
***உதிரம் கான்றன; தோன்றின புகைக் கொடி;***
***உமிழ்ந்தது கொடுந் தீயே.***

***எதிரில் நின்று*** - *தனக்கு எதிரிலே நின்றுகொண்டு; இவைஇவை உரைத்திடுதலும் - பிரகலாதன் இவைகளைக் கூறவும்;* ***எவ்வுலகமும் அஞ்ச*** - *என்ன நேருமோஎன, எல்லா உலகத்தவரும் பயப்பட;* ***முதிரும் வெம் கத மொழி கொடு*** - *முதிர்ந்த கொடிய கோபம் உரையோடு;* ***முதுகடற் கடு ஏய்ப்ப மூண்டது*** - *பழமையான கடலின்கண் தோன்றிய ஆலகால விடத்தை ஒப்ப மூண்டது;* ***கதிரும் வானமும் சுழன்றன*** - *சூரியனும் வானமும் சுழலலாயிற்று;* ***நெடுநிலம் கம்பித்த*** - *பரந்த நிலம் முழுதும் நடுங்கலாயின;* ***கனகன்கண் உதிரம் கான்றன*** - *இரணியனது கண்கள் இரத்தம் சொரிந்தன;* ***புகைக் கொடி தோன்றின*** - *கோபத்தால் சிவந்த கண்களில் புகைப்படலம் தோன்றியது;* ***கொடுந்தீ உமிழ்ந்தது*** - *கண்கள் கொடிய தீயைக் கக்கின;*

*பிரகலாதன் கூறியவற்றைக் கேட்ட இரணியன் மிகுந்த சினம் கொண்டான். அவனுக்கு எதிரில் நின்று அஞ்சாது கூறிய மொழிகளால் இரணியன்பால் தோன்றிய மெய்ப்பாடுகள் இச்செய்யுளில் கூறப்பட்டன. கொடுந்தீயே என்பதில் ஏகாரம் அசைநிலை. வெம்கதம் - கொடிய கோபம். கம்பித்த - நடுங்கின. புகைக்கொடி - புகைப் படலம்.*

***6268. ' "வேறும் என்னொடு தரும் பகை***
***பிறிது இனி வேண்டலென்; வினையத்தால்,***
***ஊறி, என்னுளே உதித்தது; குறிப்பு***
***இனி உணர்குவது உளது அன்றால்;***
***ஈறு இல் என் பெரும் பகைஞனுக்கு***
***அன்பு சால் அடியென் யான்-என்கின்றான்;***
***கோறிர்" என்றனன்; என்றலும், பற்றினர்,***
***கூற்றினும் கொலை வல்லார்.***

**வேறும் என்னொடு தரும்பகை** - *(இவனைவிட) வேறாக எனக்குத் துன்பத்தைத் தருகின்ற பகை;* **பிறிது இனி வேண்டலென்** - *வேறு ஒன்று இனி எனக்கு வேண்டியதில்லை;* **வினையத்தால் ஊறி** - *தீவினையிலேயே ஊறித் திளைத்து;* **என்னுளே உதித்தது** - *(எனக்குப்பகை) எனக்குள்ளே தோன்றியதாயிற்று);* **குறிப்பு இனி உணர்குவது** - *இவனது உளக்குறிப்பைப் பற்றி இனிமேல் தெரியவேண்டியது;* **உளது அன்றால்** - *ஒன்றும் இல்லை;* **ஈறில் என் பெரும் பகைஞனுக்கு** - *முடிவே இல்லாத எனது பெரிய பகைவனான திருமாலுக்கு;* **அன்பு சால் அடியென்யான் என்கின்றான்** - *மிக்க அன்புடைய அடியவன் நான் என்றான்;* **கோறிர் என்றனன்** - *இவனைக் கொல்லுங்கள் என்றான்;* **என்றலும்** - *என்று இரணியன் கூறியவுடனே;* **கூற்றினும் கொலைவல்லார்** - *எமனைவிட கொலைத் தொழில் வல்லவீரர்கள்;* **பற்றினர்** - *பிரகலாதனைப் பற்றலாயினர்.*

*வீரர் பிரகலாதனைக் கொல்ல முயல்தலும், அவன் உய்தலும்*

***6269. 'குன்றுபோல் மணி வாயிலின் பெரும் புறத்து***
***உய்த்தனர், மழுக் கூர் வாள்***
***ஒன்று போல்வன ஆயிரம் மீது***
***எடுத்து ஓச்சினர்-"உயிரோடும்***
***தின்று தீர்குதும்" என்குநர், உரும் எனத்***
***தெழிக்குநர், சின வேழக்***
***கன்று புல்லிய கோள் அரிக் குழு எனக்***
***கனல்கின்ற தறுகண்ணார்.***

***உயிரொடும் தின்று தீர்குதும் என்குநர்*** - இவனை உயிரோடு தின்று தீர்ப்போம் என்று கூறுபவர்களும்; ***உரும் எனத் தெழிக்குநர்*** - இடியோசை போலப் பெருங்குரல் எடுத்து அதட்டுபவர்களும்; ***சினவேழக்கன்று புல்லிய*** - சினம் மிக்க யானைக் கன்று ஒன்றைப் பற்றிக் கொண்ட; ***கோள் அரிக் குழு என*** - கொல்லவல்ல சிங்கக் கூட்டம் போல; ***கனல்கின்ற தறுகண்ணார்*** - கோபத்தால் பொங்கும் கொடியவர்களும் ஆனவீரர்கள்; ***குன்று போல் மணிவாயிலின்*** - குன்றைப் போன்ற அழகிய அரண்மனை வாயிலுக்கு; ***பெரும்புறத்து உய்த்தனர்*** - அப்புறத்தே பிரகலாதனைக் கொண்டு சென்றனர்; ***மழு கூர்வாள்*** - மழுக்களும் கூரிய வாள்களும் ஆக; ***ஒன்று போல்வன ஆயிரம்*** - ஒன்றைப் போன்ற ஆயிரம் ஆயுதங்களை; ***மீதெடுத்து ஓச்சினர்*** - எடுத்துப் பிரகலாதன் மேல் வீசினார்கள்.

*தீர்குதும் - தீர்ப்போம். என்குநர் - என்போர். உரும் - இடி வேழம். தெழித்தல் - அதட்டுதல். அரிக்குழு - சிங்கக் கூட்டம்.*

***6270. 'தாயின் மன்னுயிர்க்கு அன்பினன்தன்னை,***
***அத் தவம் எனும் தகவு இல்லோர்***
***"ஏ" என் மாத்திரத்து எய்தன,***
***எறிந்தன, எறிதொறும் எறிதோறும், -***
***தூயவன்தனைத் துணை என உடைய***
***அவ் ஒருவனைத் துன்னாதார்***
***வாயின் வைதன ஒத்தன – அத்துணை***
***மழுவொடு கொலை வாளும்.***

***மன்னுயிர்க்குத் தாயின் அன்பினன்தன்னை*** - உலகத்து உயிரினங்களுக்கெல்லாம் தாயைப் போன்ற அன்புடைய பிரகலாதனை; ***அத்தவம் எனும் தகவு இல்லோர்*** - தவம் என்னும் பெரும் தகைமை இல்லாத அந்த வீரர்கள்; ***'ஏ' என் மாத்திரத்து*** - 'ஏ' எனக் கூறும் நேரத்திற்குள்; ***எய்தன எறிந்தன*** - எய்த அம்புகளும், எறிந்த வேல், மழு போன்றவைகளும்; ***எறிதொறும் எறிதோறும்*** - பலமுறையும் எறியும் போதெல்லாம்; ***தூயவன்தனை*** - தூய்மை வடிவான எம்பெருமானையே; ***துணை என உடைய அவ்வொருவனை*** - துணையாக உடைய அந்த ஒப்பற்ற ஒருவனான பிரகலாதனை; ***அத்துணை மழுவொடு கொலைவாளும்*** - வீரர்கள் எறிந்த அத்தனை மழுக்களும், வாட்களும்; ***துன்னாதார் வாயில் வைதன ஒத்தன*** - பகைவர்கள் வாயால் வைது கூறிய வசைச் சொற்களை ஒத்து எந்தத் தீமையும் செய்யாதனவாயின.

*தூயவன் - பரமன். துன்னாதார் - பகைவர் தகவு - தகைமை (மேன்மை) ஒருவன் - ஒப்பில்லாதவன். 'தாயினும் அன்பன்' என இறைவனைக் கூறுவர் மேலோர்; இங்குக் கம்பர் பிரகலாதனைக் குறிப்பிடுவது அவன் பெருமையைக் காட்டும் 'தாயின் நல்லான்' என்று இலக்குவன் குகனைக் கூறியது (1964) நினைக. பகவானுக்கு உரிய இயல்பு பாகவதனுக்கு ஆயிற்று.*

***6271. 'எறிந்த, எய்தன, எற்றின, குத்தின,***

***ஈர்த்தன, படை யாவும்***
***முறிந்து, நுண் பொடி ஆயின; முடிந்தன;***
***முனிவு இலான் முழு மேனி***
***சொறிந்த தன்மையும் செய்தில ஆயின;***
***தூயவன் துணிவு ஒன்றா***
***அறிந்த நாயகன் சேவடி மறந்திலன்***
***அயர்த்திலன், அவன் நாமம்.***

***எறிந்த எய்தன*** - *வீசி எறிந்த வேல் முதலியனவும், வில்லில் பூட்டி எய்த அம்பு முதலானவையும்;* ***எற்றின, குத்தின*** - *வெட்டியவாள் முதலியனவும், குத்திய ஈட்டி முதலானவையும்;* ***ஈர்த்தன படையாவும்*** - *பிளக்கும்படி ஓச்சிய மழு முதலியனவும் ஆகிய எல்லா ஆயுதங்களும்;* ***முறிந்து நுண் பொடி ஆயின முடிந்தன*** - *முறிந்து நுண்ணிய துகள்களாகி முடிந்துபோயின;* ***முனிவு இலான் முழுமேனி*** - *சினத்தை வென்றவனான அந்தப் பிரகலாதனுடைய முழுமையான திருமேனியை;* ***சொறிந்த தன்மையும் செய்திலவாயின*** - *சொரிந்த தன்மையும் செய்யாதனவாயின;* ***தூயவன் துணிவு ஒன்றா*** - *தூயவனாகிய பிரகலாதன் தன் துணிந்த முடிவில் ஒன்றியவனாக;* ***அறிந்த நாயகன்*** - *தான் தெளிந்து அறிந்த தலைவனான திருமாலின்;* ***சேவடி மறந்திலன்*** - *செம்மையான திருவடிகளை மறக்கவில்லை;* ***அவன் திரு நாமம் அயர்த்திலன்*** - *அப்பரமனது திருநாமத்தையும் மறந்தானில்லை;*

*தாக்கும் கருவிகளின் பல்வேறு வகைகளை அவற்றின் செயல் குறித்த பல வினைச் சொற்களால் குறித்தார் ஒன்றா - ஒன்றி. துணிவு ஒன்றா - தான் துணிந்த துணிவிலேயே ஒன்றிநின்று. செம்மை + அடி = சேவடி நிறத்தால்மட்டுமன்றி அடியவர் துயர் நீக்குதலில் பெருமளவு துயர் அறுமாதலின் பண்பிலும் செம்மை உடைய அடி என அறிதல் வேண்டும்.*

*6272.* ***' "உள்ள வான் படை உலப்பில யாவையும்***
***உக்கன - உரவோய்! - நின்***
***பிள்ளை மேனிக்கு ஓர் ஆனி வந்திலது; இனிச்***
***செயல் என்கொல், பிறிது ?" என்ன,***
***"கள்ள உள்ளத்தன் கட்டினன் கருவிகள்;***
***கதுமெனக் கனல் பொத்தித்***
***தள்ளுமின்" என உரைத்தனன்; வயவரும்,***
***அத் தொழில் தலைநின்றார்.***

***"உரவோய்*** - *வலிமைமிக்கவனே!;* ***உள்ளஉலப்பிலயாவையும் வான்படை*** - *எங்களிடம் உள்ள அளவற்ற சிறந்த படைக்கலங்கள் எல்லாமே;* ***உக்கன*** *-வீணே அழிந்து பொடிந்தன;* ***நின் பிள்ளை மேனிக்கு*** - *உனது மைந்தனது உடலுக்கு;* ***ஓர் ஆனி வந்திலது*** - *ஒருவிதத் துன்பமும் வரவில்லை;* ***பிறிது இனிச் செயல் என்கொல்*** - *வேறு,*

*இனி எங்கள் காரியம் என்ன ?;* ***என்ன*** *-என்று வீரர்கள் இரணியனைக் கேட்க;* ***கதும் எனக் கனல் பொத்தித் தள்ளு மின்*** *- விரைவாக நெருப்பை மூட்டி அதில் அவனைத் தள்ளுங்கள்;* ***என உரைத்தனன்*** *- என்று இரணியன் வீரர்களை நோக்கிக் கூறினான;* ***வயவரும்*** *- அந்த வீரர்களும்;* ***அத் தொழில் தலை நின்றார்*** *- அந்தக் காரியத்தைச் செய்யத் தலைப்பட்டார்கள்.*

*வான் படை - சிறந்த ஆயுதங்கள். உக்கன - பொடிந்தன. ஆனி - துன்பம் (ஹானி என்ற வடமொழிச் சொல்லின் சிதைவு). கதும் - விரைந்து. பொத்தி - மூட்டி. பரமன் அருளால் தப்பினான் என இரணியன் ஏற்கவில்லை; மாய மந்திரங்களால்தான் பிரகலாதன் கருவிகளைக் கட்டிவிட்டான் எனக் கூறுகிறான். ஆணவத் திரையின் மறைப்பு எப்போதும் உண்மை காணவிடாது.*

***6273. 'குழியில் இந்தனம் அடுக்கினர், குன்று என;***
***குடம்தொறும் கொணர்ந்து எண்ணெய்***
***இழுது நெய் சொரிந்திட்டனர்; நெருப்பு***
***எழுந்திட்டது, விசும்பு எட்ட;***
***அழுது நின்றவர் அயர்வுற, ஐயனைப்***
***பெய்தனர்; "அரி" என்று***
***தொழுது நின்றனன், நாயகன் தாள் இணை;***
***குளிர்ந்தது, சுடு தீயே.***

***குழியில் குன்றென இந்தனம் அடுக்கினர்*** *- தீமூட்டத் தொடங்கிய வயவர் பெரிய குழியிலே மலைபோல விறகுகளை அடுக்கினார்கள்;* ***எண்ணெய், இழுது, நெய்*** *- எண்ணெயும், வெண்ணெயும், நெய்யும்;* ***குடம் தொறும் கொணர்ந்து*** *- குடம் குடமாகக் கொண்டுவந்து;* ***சொரிந்திட்டனர்*** *- அடுக்கிய விறகின்மீது சொரிந்தார்கள்;* ***விசும்புஎட்ட நெருப்பு எழுந்திட்டது*** *- ஆகாயத்தைத் தொடும்படி நெருப்புமேலே எழுந்தது;* ***அழுது நின்றவர் அயர்வுற*** *- இதனைப் பார்த்துக் கொண்டிருந்த பலரும் அழுது சோர்வடையும்படி;* ***ஐயனைப் பெய்தனர்*** *- பேரறிஞனான பிரகலாதனை தீயிலிட்டனர்;* ***'அரி' என்று நாயகன்தாள் இணைதொழுது நின்றனன்*** *- திருமாலின் திருவடிகளைத் தியானித்து 'அரி' என்று கூறி வணங்கி நின்றான் பிரகலாதன்;* ***சுடு தீ குளிர்ந்தது*** *- சுடு நெருப்பு குளிர்ந்திருந்தது. (பிரகலாதனுக்கு எவ்வித ஊறுமில்லை).*

*இந்தனம் - விறகு. இழுது - வெண்ணெய். ஐ வியப்பாகும் என்பது தொல்காப்பியம். ஐயன் வியப்பின் நிலைக் களமாகிய தலைவன் (பிரகலாதன்)*

***6274. 'கால வெங் கனல் கதுவிய காலையில்,***
***கற்பு உடையவள் சொற்ற***
***சீல நல் உரை சீதம் மிக்கு அடுத்தலின், -***

***கிழியொடு நெய் தீற்றி,***
***ஆலம் அன்ன நம் அரக்கர்கள் வயங்கு***
***எரி மடுத்தலின், - அனுமன்தன்***
***கூலம் ஆம் என, என்புறக் குளிர்ந்தது,***
***அக் குரு மணித் திரு மேனி.***

***அக்குருமணித் திருமேனி*** - *அந்தப் பிரகலாதனுடைய அழகிய மணி போன்ற நிறத்தை உடைய திரு மேனியானது;* ***கால வெங்கனல் கதுவிய காலையில்*** - *ஊழித் தீயைப் போன்ற கொடிய நெருப்புப் பற்றத் தொடங்கிய பொழுதிலே;* ***கற்புடையவள் சொற்ற*** - *கற்பரசியான சீதாபிராட்டி கூறிய;* ***சீலநல்உரை*** - *ஒழுக்கம் மிக்க நல்ல சொற்கள்;* ***சீதம் மிக்கு அடுத்தலின்*** - *குளிர்ச்சி மிகுந்து நெருங்கியதாலே;* ***கிழியொடுநெய்தீற்றி*** - *துணியைச் சுற்றி அதன்மேல் நெய் சொரிந்து;* ***ஆலம் அன்னநம் அரக்கர்கள்*** - *விடத்தை ஒத்த தீயவரான நமது அரக்க வீரர்கள்;* ***வயங்கு எரிமடுத்தலின்*** - *ஒளிரும் நெருப்பை மூட்டியதால்;* ***அனுமன்தன் கூலம் ஆம் என*** - *அனுமன் வால் எவ்வாறு குளிர்ந்து நின்றதோ அது போல;* ***என்புறக் குளிர்ந்தது*** - *எலும்பினளவும் குளிர்ந்தது.*

*அல்லலுறும் போதும் அருளாளர் மேனி சுடச்சுடரும் பொன்போல் தெய்விகப் பொலிவோடு விளங்கும் என்பதைக் குருமணித் திருமேனி என்ற விழுமிய தொடரால் குறித்தார். பிராட்டியின் சொல்லால் அனுமனை நெருப்புச் சுடாமையும் குளிர்ந்தமையும் முன் (5931, 5932) பிணிவிட்டு படலத்தில் உணர்த்தப்பட்டன. இராவணன் அறிந்த செய்தி ஆதலின் அதனை உவமையாகக் கூறினன். காலம் - ஊழிக்காலம். கதுவ - பற்ற. கற்புடையவள் - சீதர்பிராட்டி, கூலம் - வால். என்புற - எலும்பினளவு. குரு - நிறம். மணி - நீலமணி. உரைசீதம் (உரையாகிய சீதம்) உருவகம்.*

***6275. ' "சுட்டது இல்லை நின் தோன்றலை,***
***சுடர்க் கனல் சுழி படர் அழுவத்துள்***
***இட்டபோதிலும்; என் இனிச் செயத் தக்கது ?"***
***என்றனர், இகல் வெய்யோர்.***
***"கட்டி, தீயையும் கடுஞ் சிறை இடுமின்;***
***அக் கள்வனைக் கவர்ந்து உண்ண***
***எட்டுப் பாம்பையும் விடுமின்கள்"***
***என்றனன், எரி எழு தறுகண்ணான்.***

***நின்தோன்றலை*** - *உன்மைந்தனான பிரகலாதனை;* ***சுடர்க்கனல் சுழிபடர் அழுவத்துள்*** - *சுடர் விட்டெரியும் நெருப்பு சுழித்து எழுகின்ற பெருங்குழிக்குள்;* ***இட்ட போதிலும்*** - *தள்ளி விட்ட போதும்;* ***சுட்டதில்லை*** - *(அப்பெருந்தீ அவனைச்) சுட்டதே இல்லை;* ***என்இனிச் செயத்தக்கது*** - *இனிநாங்கள் செய்யத்தகுந்த செயல் என்ன;* ***என்றனர் இகல்வெய்யோர்*** - *பகைமைமிக்க கொடியவர்களான வீரர்கள் என்று கூறினர்;* ***எரி எழுதறுகண்ணான்*** - *தீப்பொறிபரக்கும் கண்களைஉடைய இரணியன்*

*(அதைக் கேட்டுப்பின்);* ***கட்டித் தீயையும் கடுஞ்சிறை இடுமின்*** *- நமது ஆணையை மறுத்த அந்த தீக்கடவுளை, கால்கைகளைக் கட்டி சிறையிலே தள்ளுங்கள்;* ***அக்கள்வனைக் கவர்ந்து உண்ண*** *- அந்த வஞ்சகனைக் கவர்ந்து உண்ணும்படி;* ***எட்டுப்பாம்பையும்*** *- எட்டு நாகங்களையும்;* ***விடுமின்கள்*** *- கொண்டுவந்து விடுங்கள் என்றான்.*

*அழுவம் - பெருங்குழி. எட்டுப்பாம்புகள் கார்க்கோடகன், அனந்தன், குளிகன், சங்கபாலன், தட்சகன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்றும் எட்டு நாகங்களாம். சிலுவையில் அறையப்பட்ட ஏசுநாதரின் மேனியைத் தன்னரிய திருமேனி என இரட்சணிய யாத்திரிகம் குறித்த (இரட்சணிய சரிதைப்படலம் 342) ஒப்பிடத்தக்கது.*

***6276. அனந்தனே முதலாகிய நாகங்கள்,***
***"அருள் என்கொல் ?" என, அன்னான் நினைந்த மாத்திரத்து எய்தின, நொய்தினில்;***
***நெருப்பு உகு பகு வாயால்,***
***வனைந்ததாம் அன்ன மேனியினான் தன்மேல்,***
***வாள் எயிறு உற ஊன்றி,***
***சினம் தம் மீக்கொள, கடித்தன; துடித்திலன்,***
***திருப் பெயர் மறவாதான்.***

***அனந்தனே முதலாகிய நாகங்கள்*** *- அனந்தன் முதலான எட்டுப் பாம்புகளும்;* ***'அருள் என் கொல்' என்ன*** *- அருள் கொண்டு எங்களை அழைத்தது எதற்காக என்று கேட்டு;* ***அன்னான் நினைந்து மாத்திரத்து எய்தின*** *- அந்த இரணியன் நினைத்த மாத்திரத்திலே வந்து அடைந்தன;* ***நொய்தினில்*** *- விரைவாக (இரணியன் கட்டளைப்படி);* ***நெருப்பு உகு பகுவாயால்*** *- நெருப்பை உமிழும் பெரிய வாயினால்;* ***வனைந்த தாம் அன்ன மேனியினான் தன்மேல்*** *- அழகாகச் செய்து வைத்தது போன்ற பிரகலாதன் உடலின் மேல்;* ***வாள் எயிறு உற ஊன்றி*** *- கூரிய பற்கள் உறும்படி ஊன்றி;* ***சினம் தம் மீக் கொள கடித்தன*** *- கோபம் மேலோங்க கடித்தன;* ***திருப்பெயர் மறவாதான்*** *- பரமனது திருநாமத்தை மறவாத உள்ளத்தவனான பிரகலாதன்;* ***துடித்திலன்*** *- (எட்டுப்பாம்புகள் கடித்தும்) துடித்தானல்லன்.*

*'வனைந்தனைய திருமேனி வள்ளல்' (690) என இராமபிரானை முன் குறித்த தொடராலேயே இங்கே பிரகலாதனைக் கவிஞர் குறித்தார். இயற்கைப் படைப்பில் முழு அழகும் அமைதல் அருமை; ஆனால், செயற்கையில் அழகெலாம் முற்றிலும் அமையுமாறு செய்யமுடியும். சிற்பி ஒருவன் அழகுமுற்றுறச் செய்த பாவை போன்றவன் பிரகலாதன் பகுவாய் - பிளந்தவாய் வனைதல் - புனைதல் (அழகு படுத்துதல்) உற - பதிய. மீக்கொள - மேலோங்க.*

***6277. 'பக்கம் நின்றவை பயத்தினின் புயற் கறைப்
பசும் புனல் பகு வாயின்
கக்க, வெஞ் சிறைக் கலுழனும்
நடுக்குற, கவ்விய காலத்துள்,
செக்கர் மேகத்துச் சிறு பிறை நுழைந்தன
செய்கைய, வலி சிந்தி
உக்க, பற் குலம்; ஒழுகின, எயிற்று
இரும் புரைதொறும் அமிழ்து ஊறி.***

***அவை பக்கம் நின்று*** - *அந்தப் பாம்புகள் பிரகலாதனுக்கு அருகே நின்று;* ***பயத்தினில்*** - *(இரணியனது ஆணையை மீறினால் என்ன செய்வானோ) என்ற பயத்தினால்;* ***புயற்கறைப் பசும்புனல்*** - *மேகம் போல கரிய நச்சுக்கறை படிந்த பசிய இரத்தம்; ப* ***குவாயின் கக்க*** - *பிளவுபட்டவாயிலிருந்து சிந்த;* ***வெஞ்சிறைக் கலுழனும் நடுக்குற*** - *வெவ்விய இறகுகளை உடைய கருடனும் அஞ்சி நடுங்க;* ***கவ்விய காலத்துள்*** - *பிரகலாதனைக் கடித்துக் கவ்விய போது;* ***செக்கர் மேகத்துள்*** - *சிவந்த நிறமுடைய மேகத்திலே;* ***சிறு பிறை நுழைந்தன செய்கைய*** - *சிறிய பிறைச் சந்திரன் நுழைந்த செயலைப் போன்றன;* ***வலி சிந்தி*** - *தமது வலிமையை இழந்து;* ***உக்க பற்குலம்*** - *பற்களின் தொகுதி உதிர்ந்தன;* ***எயிற்று இரும்புரை தொறும்*** - *பற்களின் பெரிய துளைகள் தோறும்;* ***அமிழ்து ஊறி ஒழுகின*** - *அமுதம் ஊறி ஒழுகுவனவாயின.*

*புயல் - மேகம் (கரிய) பசும்புனல் - இரத்தநீர். கலுழன் - கருடன். செக்கர் - செந்நிறம். அவை, பக்கம் நின்று, வாயில் - புனல்கக்க கவ்விய காலத்துள் - செய்கைய - உக்க பற்குலம் - அமிழ்து ஒழுகின என இயையும். நாகங்கள் உகுத்த நஞ்சு அமுதாயிற்று அஷ்ட நாகங்களும் தெய்விகச் சன்னிதியில் பலம் இழந்து, பல்லும் இழந்தன.*

**கலிவிருத்தம்**

***6278. ' "சூழப் பற்றின சுற்றும் எயிற்றின்
போழக்கிற்றில' என்று புகன்றார்;
"வாழித் திக்கின், மயக்கின் மதம் தாழ்,
வேழத்துக்கு இடுமின்" என விட்டான்.***

***சுற்றும் சூழப்பற்றின*** - *(பாம்புகள் வலியிழந்து - பற்கள் உதிரப் பார்த்த வீரர்கள் இரணியனிடம் சென்று பிரகலாதனை) சுற்றிலும் சூழ்ந்து பற்றிய பாம்புகள்;* ***எயிற்றின் போழக் கிற்றில*** - *பற்களால் அவனுடலைப் பிளக்கும் வன்மை இலவாயின;* ***என்று புகன்றார்*** - *என்று கூறினார்கள் (அதைக் கேட்ட இரணியன்);* ***திக்கின் மயக்கின் மதம் தாழ் வேழத்துக்கு இடுமின்*** - *மயக்கம் உடையதும் மதம் கொண்டது மான திக்குயானைக்கு இடுங்கள்;* ***எனவிட்டான்*** - *என்று கூறி அனுப்பினான்.*

*கிற்றில - இயலாதனவாயின. ஆற்றலை உணர்த்தும் 'கில்' என்னும் இடைச்சொல்லைப் பகுதியாகக் கொண்டு 'கிற்றில' என்னும் வினைமுற்று உருவாகியது வாழி - அசை. திக்கின் வேழம் இங்கே கிழக்குத் திசைக்குரிய ஐராவதம் என்ற யானை. இங்கே குறித்த கிழக்கென்பது அடுத்த பாடலில் தெளிவாகும். மதம் தாழ் - மதம் மிகுந்து.*

***6279. 'பசையில் தங்கல் இல் சிந்தையர் பல்லோர்***
***திசையில் சென்றனர்; "செப்பினன்" என்னும்***
***இசையில் தந்தனர்-இந்திரன் என்பான்***
***விசையின் திண் பணை வெஞ் சின வேழம்.***

***பசையில் தங்கல் இல் சிந்தையர் பல்லோர்*** *- இரக்கம் எனும் பண்பிலே தங்காத மனத்தினரான வீரர்கள் பலர்;* ***திசையில் சென்றனர்*** *- (கிழக்குத்) திசை நோக்கிச் சென்றார்கள்;* ***'செப்பினன்'*** *- (இரணியன் யானையை அழைத்துவரக் கூறினான்;* ***என்னும் இசையில்*** *- என்ற சொல்லால், இந்திரன் உடனே அனுமதிதர);* ***தந்தனர்*** *- (யானையைக்) கொணர்ந்தார்கள்;* ***இந்திரன் என்பான்*** *- இந்திரன் என்பவனுக்குரியதும்;* ***விசையின் திண்பனை*** *- வலிய, பெரிய தந்தங்களைக் கொண்டதும்;* ***வெஞ்சின வேழம்*** *- மிக்க கோபத்தை உடையதுமான ஐராவதத்தை(க்கொணர்ந்தனர்).*

*பசை - இரக்கம். இசை - சொல். பணை - தந்தம். விசை - வலிமை.*

***6280. 'கையில், கால்களில், மார்பு, கழுத்தில்,***
***தெய்வப் பாசம் உறப் பிணி செய்தார்;***
***மையல் காய் கரி முன் உற வைத்தார்;***
***பொய் அற்றானும் இது ஒன்று புகன்றான்:***

***கையில் கால்களில்*** *- (பிரகலாதனுடைய) கைகளிலும் கால்களிலும்;* ***மார்பு, கழுத்தில்*** *- மார்பிலும் கழுத்திலும்;* ***தெய்வப் பாசம் உற*** *- தெய்வத்தன்மைஉள்ள பாசம் பொருந்தி இருக்க;* ***பிணி செய்தார்*** *- கட்டினார்கள்;* ***மையல் காய் கரிமுன்*** *- மயக்கம் கொண்ட கோபம் மிக்க அந்த யானையின்முன்;* ***உற வைத்தனர்*** *- நெருக்கமாக வைத்தார்கள்;* ***பொய் அற்றானும்*** *- (அப்போது) பொய்மை இல்லாதவனான பிரகலாதன்;* ***இது ஒன்று புகன்றான்*** *- (பின்வரும்) இந்த ஒரு சொல்லைச் சொல்லலானான்.*

*பாசம் - கயிறு. மையல் - மயக்கம். அரக்க வீரர்கள ் பிரகலாதனை கை, கால், மார்பு, கழுத்தில்கயிறு கொண்டு கட்டினர்.*

***6281. ' "எந்தாய் ! - பண்டு ஓர் இடங்கர் விழுங்க, -***
***முந்தாய் நின்ற முதல் பொருளே ! என்று,***
***உன் தாய் தந்தை இனத்தவன் ஓத,***
***வந்தான் என்தன் மனத்தினன்" என்றான்.***

***எந்தாய்*** - *என் தந்தையே!;* ***பண்டு ஓர் இடங்கர் விழுங்க*** - *முன்பொருநாள் ஒரு முதலை பற்றி விழுங்கத் தொடங்க;* ***முந்தாய்நின்று*** - *முந்தி வந்து காத்து நின்று;* ***முதல் பொருளே என்று*** - *உலகுக் கெல்லாம் முதல் பொருளாகத் திகழ்பவனே என;* ***உன்தாய்தந்தை இனத்தவன் ஓத*** - *உனது தாய், தந்தையின் இனத்தவனானவன் (கஜேந்திரன்) கூறி வேண்ட;* ***வந்தான்*** - *வந்து காத்தவனானபரமன்;* ***என்றன் மனத்தினன் என்றான்*** - *எனது மனத்திலே இருக்கிறான் என்றான்.*

*இடங்கர் - முதலை. முந்தாய் நின்ற - முன்வந்துநின்ற.*

***6282. 'என்னா முன்னம், இருங் களிறும் தன்***
***பொன் ஆர் ஓடை பொருந்த, நிலத்தின்,***
***அன்னானைத் தொழுது, அஞ்சி அகன்றது;***
***ஒன்னார் அத் திறம் எய்தி உரைத்தார்.***

***என்னாமுன்னம்*** - *என்று பிரகலாதன் சொல்வதற்கு முன்னே;* ***இருங்களிறும்*** - *பெரிய யானையான ஐராவதமும்;* ***தன்பொன்னார் ஓடை நிலத்தின் பொருந்த*** - *தனது பொன்மயமான நெற்றிப் பட்டம் நிலத்திலே பொருந்த;* ***அன்னானைத் தொழுது*** - *அத்தகைய பிரகலாதனை வணங்கி;* ***அஞ்சி அகன்றது*** - *(அவனைத் துன்புறுத்தப்) பயந்து சென்றது;* ***ஒன்னார்*** - *பகைவரான அசுர வீரர்கள்;* ***அத்திறம் எய்தி உரைத்தார்*** - *இரணியனை அடைந்து, அந்தச் செய்தியைக் கூறினர்.*

***6283. ' "வல் வீரைத் துயில்வானை மதித்து, என்***
***நல் வீரத்தை அழித்தது; நண்ணுற்று,***
***ஒல்வீர்! ஒற்றை உரக் கரிதன்னைக்***
***கொல்வீர்" என்றனன், நெஞ்சு கொதிப்பான்.***

***நெஞ்சு கொதிப்பான்*** - *(வீரர் கூறியது கேட்டு) மனம் குமுறிக் கொதிப்பவனான இரணியன்;* ***வல் வீரைத்துயில் வானைமதித்து*** - *வலிய கடலிலே தூங்கிக் கொண்டிருப்பவனைப் பெரிதாக மதித்து;* ***என் நல்வீரத்தை அழித்தது*** - *எனது நல்ல வீரத்தை இந்த யானை அழித்துவிட்டதே;* ***ஒல்வீர்*** - *வல்லவர்களே;* ***ஒற்றை உரக் கரிதன்னை நண்ணுற்று*** - *(துணையின்றி) ஒற்றையாக உள்ள அந்த வலிமைமிக்க யானையைத் தேடி;* ***கொல்வீர்*** - *கொல்வீராக என்றனன்.*

*வல்வீரை - வலிய கடல்.*

***6284. 'தன்னைக் கொல்லுநர் சாருதலோடும்,-***
***பொன்னைக் கொல்லும் ஒளிப் புகழ் பொய்யா***
***மன்னைக் கொல்லிய வந்தது - வாரா***
***மின்னைக் கொல்லும் வெயில் தின் எயிற்றால்.***

***தன்னைக் கொல்லுநர் சாருதலோடும்*** *- இரணியன் ஆணைப்படி தன்னைக் கொல்வதற்கு வீரர்கள் வந்ததும்;* ***வாரா மின்னைக் கொல்லும்*** *- வந்து, மின்னலை வெல்லத்தக்க;* ***வெயில்தின் எயிற்றால்*** *- வெய்யிலையும் தின்னும் ஒளிமிக்க தந்தங்களால்;* ***பொன்னைக் கொல்லும்*** *- பொன்னையும் ஒளி மழுங்கச் செய்யும்;* ***ஒளிப்புகழ்*** *- ஒளிபடைத்த புகழ்மிகுந்த;* ***பொய்யாமன்னை*** *- பொய்ம்மையில்லாத இளவரசனான பிரகலாதனை;* ***கொல்லியவந்தது*** *- கொல்லுவதற்கு வந்தது.*

*மின்னலையும், சூரியனையும் விட மிக்க ஒளியுடைய தந்தம் என்பதால் 'மின்னைக் கொல்லும் வெயில்தின் எயிறு" என்றார்.*

***6285. 'வீரன் திண் திறல் மார்பினில் வெண் கோடு***
***ஆரக் குத்தி அழுத்திய நாகம்,***
***வாரத் தண் குலை வாழை மடல் சூழ்***
***ஈரத் தண்டு என, இற்றன எல்லாம்.***

***வீரன்திண் திறல் மார்பினில்*** *- மெய்வீரனான பிரகலாதனுடைய வலிய, ஆற்றல்மிக்க மார்பில்;* ***வெண் கோடு ஆரக் குத்தி*** *- வெண்மை நிறமான தந்தங்கள் பொருந்துமாறு குத்தி;* ***அழுத்திய நாகம்*** *- அழுந்தும்படி செய்த அந்த யானை;* ***வாரத் தண்குலை வாழை*** *- விருப்பம் மிக்க குளிர்ந்த குலை தள்ளிய வாழை மரத்தினது;* ***மடல்சூழ் ஈரத்தண்டு என*** *- மடல்களால் சூழப்பட்ட ஈரமான தண்டு என்னும்படி;* ***எல்லாம் இற்றன*** *- எல்லாத் தந்தங்களும் ஒடிந்து சிதைந்தன. நாகம் - யானை; ஐராவதம், நான்கு தந்தங்களை உடையது. 'எல்லாம் இற்றன' என்றதால் அந்த நான்கு தந்தங்களும் முறிந்தன என்க.*

***6286. 'வெண் கோடு இற்றன, மேவலர் செய்யும்***
***கண் கோடல் பொறியின் கடிது ஏகி,***
***"எண் கோடற்கு அரிது" என்ன, வெகுண்டான்,***
***திண் கோடைக் கதிரின் தெறு கண்ணான்.***

***வெண் கோடு இற்றன*** - ஐராவதத்தின் வெண்மை மிக்க தந்தங்கள் முறிந்து சிதைந்தன; ***மேவலர்*** - அதைக் கண்ட பகைவர்களான அசுரவீரர்கள்; ***செய்யும் கண்கோடல் பொறியின்*** - கண்கள் இமைத்தலைச் செய்யும் கால அளவிலே; ***கடிது ஏகி*** - விரைவாக இரணியனிடம் சென்று; ***எண் கோடற்கு அரிது என்ன*** - நீ நினைத்தபடி பிரகலாதனது வலிய உயிரைக் கவர்வது எளிதல்ல என்று கூற; ***திண் கோடைக் கதிரின்*** - வலிய கோடைக் காலத்துச் சூரியனைப் போன்று; ***தெறுகண்ணான்*** - காயும் கண்களை உடைய இரணியன்; ***வெகுண்டான்*** - மிகுந்த சினம் கொண்டான்.

*கண்கோடல் பொறி - கண் இமைக்கும் கால அளவு (பொறி - அளவு). எண் - வலிமை.*

***6287. ' "தள்ளத் தக்கு இல் பெருஞ் சயிலத்தோடு***
***எள்ளக் கட்டி எடுத்து விசித்து,***
***கள்ளத்து இங்கு இவனைக் கரை காணா***
***வெள்ளத்து உய்த்திடுமின்" என விட்டான்.***

***கள்ளத்து இங்கு இவனை*** - கோபம் கொண்ட இரணியன் வீரர்களை நோக்கி வஞ்சகனான இவனை (பிரகலாதனை); ***தள்ளத்தக்கு இல் பெரும் சயிலத்தோடு*** - எவராலும் அசைக்க இயலாத பெரியதொரு மலையுடன்; ***எள்ளக் கட்டி*** - பார்த்தவர்கள் ஏளனம் செய்யும்படி சேர்த்துக்கட்டி; ***எடுத்து விசித்து*** - நன்றாகப் பிணித்து; ***கரை காணா வெள்ளத்து*** - கரைகாணமுடியாத கடலிலே; ***உய்த்திடுமின்*** - தள்ளி விடுங்கள்; ***என விட்டான்*** - என்று கூறி அனுப்பிவிட்டான்.

*சயிலம் - மலை விசித்து - பிணித்து (கட்டி). வெள்ளம் - கடல் உய்த்தல் - தள்ளுதல்.*

***6288. ' " ஒட்டிக் கொல்ல உணர்ந்து வெகுண்டான்;***
***விட்டிட்டான் அலன்" என்று விரைந்தார்,***
***கட்டிக் கல்லொடு, கால் விசையின் போய்,***
***இட்டிட்டார், கடலின் நடு; - எந்தாய்!***

***எந்தாய்*** - எந்தையே; ஒட்டிக் கொல்ல - (பிரகலாதனைக் கொன்றே தீர்வது எனச்) சபதம் செய்து கொல்ல; ***உணர்ந்து வெகுண்டான்*** - (பலவிதத்தில் அவன் தப்பியதை) உணர்ந்து சினந்தெழுந்தான்; ***விட்டிட்டான் அலன்*** - தன் மகனைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிடவில்லை; ***என்று விரைந்தார்*** - என்று நினைத்த வீரர்கள் விரைவாகச் சென்றார்கள்; ***கல்லொடு கட்டி*** - பிரகலாதனைக் கல்லோடு சேர்த்துக் கட்டி; ***கால்விசையின் போய்*** - காற்றுப் போல் வேகமாகப் போய்; ***கடலின் நடு இட்டிட்டார்*** - கடலில் நடுவே தள்ளிவிட்டார்.

*எந்தாய் என இராவணனை வீடணன் விளித்துப் பிரகலாதன் கதையைத் தொடர்கிறான். ஒட்டுதல் - சூளுரைத்தல் (சபதம் செய்தல்) கால் - காற்று.*

***6289. 'நடு ஒக்கும் தனி நாயகன் நாமம்***
***விடுகிற்கின்றிலன் ஆகலின், வேலை***
***மடு ஒத்து, அங்கு அதின் வங்கமும் அன்றாய்,***
***குடுவைத் தன்மையது ஆயது, குன்றம்.***

***நடு ஒக்கும் தனி நாயகன்*** *- எவ்வுயிர்க்கும் நடுவாய் நின்று அருள் சுரக்கும் இறைவனாகிய திருமாலின்;* ***நாமம் விடுகிற்கின்றிலன் ` ஆகலின்*** *- திருநாமத்தைத் தியானிப்பதை பிரகலாதன் விடவில்லை ஆதலால்;* ***வேலை மடு ஒத்து*** *- அந்தப் பெருங்கடல் ஒரு சிறிய மடுவை ஒத்த தாய்;* ***குன்றம்*** *- அவனைச் சேர்த்துக் கட்டிய அந்த மலை;* ***அங்கு அதின் வங்கமும் அன்றாய்*** *- அக்கடலில் செல்லும் மாக்கலம் என்பதற்கும் போதாததாய்;* ***குடுவைத் தன்மையது ஆயது*** *- ஒரு சுரைக் குடுவையின்தன்மை உடையதாய் ஆனது.*

*நடுஒக்கும் - நடு நிலை நிற்கும். தனி நாயகன் - ஒப்பற்ற தலைவன் மடு - குட்டை வங்கம் - மரக்கலம். குடுவை - சுரைக்குடுக்கை.*

***6290. 'தலையில் கொண்ட தடக் கையினான், தன்***
***நிலையின் தீர்வு இல் மனத்தின் நினைந்தான்-***
***சிலையில் திண் புனலில், சினை ஆலின்***
***இலையில் பிள்ளை எனப் பொலிகின்றான்.***

***தலையில் கொண்ட தடக்கையினான்*** *- பிரகலாதன் தலைமீது குவித்த அகன்ற கைகளை உடையவனாய்;* ***தன் நிலையில் தீர்வுஇல் மனத்தின்*** *- திருமாலைத் தியானிக்கின்ற தனது நிலையில் மாறாத மனத்திலே;* ***நினைந்தான்*** *- (அப்பரமனது திருநாமத்தையே) தியானித்தான்;* ***சிலையில் திண்புனலில்*** *- பெரிய கடலின்மீது கல்லிலே (மிதந்து);* ***சினை ஆலின் இலையில்*** *- கிளைகளை உடைய ஒரு ஆலமாமரத்து இலைமீது கிடந்த;* ***பிள்ளை எனப் பொலிகின்றான்*** *- சிறு பாலகனாகக் கிடந்த திருமாலைப் போல, பொலிந்து திகழ்ந்தான்.*

*பிரளயகாலத்திலே உலகனைத்தையும் தனது வயிற்றிலே வைத்துக் காத்து. ஒரு ஆலிலையின் மீது பாலகனாய்த்துயின்ற பரமனை உவமையாக்கிக் கடலிலே கல்லோடு மிதந்த பிரகலாதனைப் போற்றியுரைத்தார்.*

***6291. 'மோதுற்று ஆர் திரை வேலையில் மூழ்கான்,***
***மீதுற்று ஆர் சிலை மீது கிடந்தான்,***
***ஆதிப் பண்ணவன் ஆயிர நாமம்***
***ஓதுற்றான்-மறை ஒல்லை உணர்ந்தான்:***

***மறை ஒல்லை உணர்ந்தான்*** *- எல்லா மறைகளையும் விரைந்து ஓதாதுணர்ந்தவனான பிரகலாதன்;* ***திரை மோதுற்று ஆர் வேலையில் மூழ்கான்*** *- அலைகள் மோதுகின்ற அப்பெருங்கடலில் மூழ்காதவனாய்;* ***மீதுற்று ஆர் சிலைமீது*** *- மேலே பொருந்திய கல்லின்மீது;* ***கிடந்தான்*** *- மிதந்து கிடந்தான்;* ***ஆதிப்பண்ணவன்*** *- உலகுக்கு ஆதி மூர்த்தியாகிய திருமாலின்;* ***ஆயிரம் நாமம் ஓதுற்றான்*** *- ஆயிரம் திரு நாமங்களையும் கூறித் துதிக்கலானான்.*

*மறை உணர்ந்தான் - வேலையில் மூழ்கான் - சிலைமீது கிடந்தான் பண்ணவன் நாமம் ஓதுற்றான் என இயையும். மீதுற்று - மேலே பொருந்தி. "ஓத வேண்டுவதில்லை" என்று முன்பு (6215) ஆசிரியனிடம் கூறினான் அல்லவா?' ஓதாமலே - இறைவன் திருநாமத்தைக் கூறியதன் பயனாய் எல்லா மறைகளையும் எளிதில் உணர்ந்தான் என்க.*

*பிரகலாதன் திருமாலிடம் முறையிடுதல்*

***கலிவிருத்தம் (வேறு வகை)***

***6292. ' "அடியார் அடியேன் எனும் ஆர்வம் அலால்,***
***ஒடியா வலி யான் உடையேன் உளெனோ?***
***கொடியாய்! குறியாய்! குணம் ஏதும் இலாய்!***
***நெடியாய்! அடியேன் நிலை நேர்குதியோ?***

***கொடியாய்*** *- தீங்கு புரியும் கொடியவர்களுக்குக் கொடியோனே!;* ***குறியாய்*** *- இத்தகையவள் எனக் குறிப்பிட இயலாதவனே!;* ***குணம் ஏதுமிலாய்*** *- குணங்கள் எதுவுமில்லாதவனே; நெடியாய் - நீண்டவனே;* ***அடியேன் நிலை நேர்குதியோ*** *- அடியவனாகிய எனக்கு நேராக எதிர்ப்படுவாலோ?;* ***அடியார் அடியேன் எனும்*** *- உனது அடியவர்களுக்கு அடியவன் என்னும்;* ***ஆர்வம் அலால்*** *- ஆர்வமுள்ளவன் அல்லாது;* ***ஒடியா வலி*** *- என்னைத் துன்புறுத்துபவர் வெல்ல இயலாத வலிமை;* ***யான் உடையேன் உளனோ*** *- உள்ளவனாக நான் உடையவனோ?.*

*கூடாரை வெல்லும் சீர்மை உடையவன். கொடியவருக்குக் கொடியவன் என்பதால் 'கொடியாய்' என்றான். 'குறியாய்' என்றது எவராலும் இத்தகையன் எனக் குறிப்பிட இயலாதவன், என்று பொருள் உடையது. வாமனனாக வந்து உலகைக் காத்தவன் என்பதாலும் 'குறியாய்' என்றான் எனலும் பொருந்தும். (இப்பொருள் பிரகலாதன் கூற்றில் பொருந்தாமையை 6220 ஆம் பாடல் உரைக்குறிப்பால் அறிக.) நல்ல குணங்களுக்கெல்லாம் உறைவிடமான "குணபூரணன்" என்பதால்*

*தீயகுணம் சிறிது மில்லாதவன் என்பதை 'குணமேதுமிலாய்' என்பதுணர்த்தும்; 'குணமிலி' என இறைவனைக் குறிப்பதும் உண்டு.*

***6293. ' "கள்ளம் திரிவாரவர் கைதவம் நீ;***
***உள்ளம் தெரியாத உனக்கு உளவோ?***
***துள்ளும் பொறியின் நிலை சோதனைதான்-***
***வெள்ளம் தரும் இன் அமுதே!-விதியோ?***

**வெள்ளம் தரும் இன்னமுதே** - *பாற்கடல் தரும் இனிய அமுதம் போன்றவனே!;* **கள்ளம் திரிவார்** - *கள்ளமனத்துடன் திரிபவர்கள் எவரோ;* **அவர் கைதவம்நீ** - *அவருக்குப் புலப்படாது வஞ்சிப்பவன் நீ;* **உள்ளம் தெரியாத** - *மனத்துக்குப் புலனாகாதவை;* **உனக்கு உளவோ** - *உனக்கு எவையேனும் உள்ளனவாமோ?;* **துள்ளும் பொறியின் நிலை** - *ஒரு நிலையின்றித் துள்ளித் திரியும் ஐம்பொறிகளின் நிலைமை;* **சோதனைதான்** - *உனது சோதனைதான்;* **விதியோ** - *(உனது அடியவர்களுக்கு இச்சோதனை என்பது) வழக்கமான விதிதானோ?*

*கள்ளமனம் கொண்டு, ஒழுக்கக் கேடர்களாகத் திரிபவர்க்குப் புலப்படாதபடி தன்னை மறைத்துக் கொள்பவன் பரமன் என்பதால் 'கள்ளம் திரிவார் அவர் கைதவம் நீ' என்றார். "உள்குவார் உள்ளிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி" என்பது திருமாலை. உள்ளம் தெரியாத உனக்குளவோ' என்றது 'அனைத்தும் உணர்பவன்' என்பதைக் காட்டும் அடியவர்களைச் சோதிப்பதென்பது உனக்கு வழக்கமான ஒரு விதியாகக் கொண்டாயோ என" சோதனைதான் விதியோ" என்றான்.*

***6294. ' "வரு நான்முகனே முதல் வானவர் தாம்,***
***திரு நான்மறையின் நெறியே திரிவார்;***
***பெரு நாள் தெரிகின்றிலர்; பேதைமையேன்,***
***ஒரு நாள், உனை எங்ஙனம் உள்ளுவெனோ?***

**வரு நான்முகனே முதல் வானவர் தாம்** - *உனது உந்திக் கமலத்தில் வந்த பிரமன் முதலான தேவர்கள் எல்லாம்;* **திரு நான் மறையின்** - *சிறந்த வேதங்கள் கூறும்;* **நெறியே திரிவார்** - *ஒழுக்க நெறி நின்று வாழ்பவராவார்;* **பெரு நாள் தெரிகின்றிலர்** - *அத்தகையோரும் நெடுங்காலமாக உன்னைத் தேடிக் காணாதவரானார்;* **பேதைமையேன்** - *பேதைமைத் தன்மை உடைய நான்;* **ஒரு நாள்** - *ஒரே நாளில்;* **உனை எங்ஙனம் உள்ளுவெனோ** - *உன்னை எவ்வாறு நினைத்துப் போற்றுவேன்.*

*திருமாலின் நாபிக் கமலத்தில் தோன்றியவன் பிரமன் ஆதலின் 'வருநான்முகன்' என்றார். பிரமனும் மற்றுமுள்ள தேவர்களும் மறை நெறியில் நின்று - உயர் வாழ்வு*

*வாழும் தன்மையுடையவர்கள்; அத்தகையோரும் நெடுங்கால மாகத் தேடியும் உன்னைத் தெரிந்தவரல்லர் என்றால் சிறு மதியாளனாகிய நான் ஒரே நாளில் உன்னை உணர்ந்து நினைக்கவல்லவனோ என்பான் 'உனை எங்ஙனம் உள்ளுவெனோ" என்றான்.*

***6295. ' "செய்யாதனவோ இலை; தீவினைதான்***
***பொய்யாதன வந்து புணர்ந்திடுமால்,***
***மெய்யே; உயிர் தீர்வது ஓர் மேல்வினை, நீ,***
***ஐயா! ஒரு நாளும் அயர்த்தனையோ?***

***செய்யாதனவோஇலை தீவினைதான்*** *- உனது அடியவனாகிய நான் செய்யாத தீவினைகளே இல்லை (அவை);* ***மெய்யே*** *- உண்மையாக; பொய்யாதன - பொய்படாதனவாக (தவறாமல்);* ***வந்து புணர்ந்திடும்*** *- என்னை அடைந்து தீவினைப் பயனைத் துய்க்கச் செய்கின்றன;* ***உயிர்தீர்வது ஓர் மேல்வினை*** *- அத்தீவினைப் பயன்களை விட்டு நீங்குவதற்குரிய மேலான திருவருட் செயலை;* ***ஐயா*** *- பெருமானே!;* ***நீ ஒரு நாளும் அயர்த்தனையோ*** *- நீ தீவினைப் பயன் என்னைத் துன்புறுத்தும் இந்த ஒருநாள் மறந்தனையோ.*

*அடியவர்க்கு வரும் துன்பத்தைப் போக்க வந்து அருள் புரியும் நீ எனக்குத் திருவருள் புரிய மறந்தனையோ என்றான்.*

***6296. ' "ஆயப் பெறும் நல் நெறி தம் அறிவு என்று,***
***ஏயப் பெறும் ஈசர்கள் எண் இலரால்;***
***நீ அப்புறம் நிற்க, நினைக்கிலர்; நின்***
***மாயப் பொறி புக்கு, மயங்குவரால்.***

***ஆயப் பெறும் நல்நெறி*** *- ஆராய்ந்து கடைப் பிடிக்கப்படும் நல்ல நெறி;* ***தம் அறிவு என்று*** *- தமது அறிவுக்கு மட்டும் புலனாவதே என்று கருதி;* ***ஏயப்பெறும்*** *- பொருந்தி ஒழுகும்;* ***ஈசர்கள் எண்ணிலரால்*** *- தலைவர்களாகிய தேவர்கள் எண்ணற்றவராவர்;* ***நீ அப்புறம் நிற்க*** *- நீ அவர்களின் அறிவுக்கு எட்டாமல் நிற்க;* ***நினைக்கிலர்*** *- அதனால் உன்னை நினைக்க மாட்டாதவராயினர்;* ***நின் மாயப் பொறி புக்கு*** *- உனது மாய வலைக்குள்ளே புகுந்து சிக்கி;* ***மயங்குவரால்*** *- மயங்குபவராயினர்.*

*(தலைமை கொண்ட) தேவர்கள் என்பது குறிப்பு மொழி; எவ்வகையாலும் தலைமையுடையவர் என்றோ தேவர்கள் என்றோ கொள்ளத்தகாதவர் என்பது கருத்து. மாயப்பொறி - மாயவலை. பிரமன் போன்றோரும் மாயப் பொறி புக்கு மயங்கினாரன்றோ.*

*6297. ' "**தாமே தனி நாயகர் ஆய், 'எவையும்***
***போமே பொருள்' என்ற புராதனர்தாம்,***
***'யாமே பரம்' என்றனர்; என்ற அவர்க்கு***

***ஆமே? பிறர், நின் அலது, ஆர் உளரே?***

***தாமே தனி நாயகராய்*** - *தாங்களே நிகரில்லாத தலைவர்கள் என எண்ணி;* ***எவையும் போமே பொருள்*** - *எத்தகைய செயலும் எம்மால் செய்து முடிக்க இயலும்;* ***என்ற புராதனர்தாம்*** - *என்று கூறிய பழையோர் பலர்;* ***யாமே பரம் என்றனர்*** - *யாமே மேலான பரம்பொருள் என்றார்கள்;* ***என்ற அவர்க்கு*** - *என்று சொன்ன அவர்களுக்கெல்லாம்;* ***ஆமே*** - *எல்லாம் செய்யக்கூடியதாகுமோ?;* ***நின் அலது*** - *மேலான பரம் பொருள் நீயல்லாது;* ***பிறர் ஆர் உளரே*** - *மற்றவர் யாரிருக்கிறார்கள்?*

*6298. ' "**ஆதிப் பரம் ஆம் எனில், அன்று எனலாம்;***
***ஓது அப் பெரு நூல்கள் உலப்பு இலவால்;***
***பேதிப்பன; நீ அவை பேர்கிலையால்;***
***வேதப் பொருளே! விளையாடுதியோ?***

***ஆதிப்பரம் ஆம் எனில்*** - *முதற் பரம் பொருள் என்று ஒரு நூல் கூறினால்;* ***அன்று எனலாம்*** - *அதுபரம் பொருள் அல்ல என்று மற்றொரு நூல் கூறும்;* ***ஓது அப்பெரு நூல்கள்*** - *இவ்வாறு மாறுபட்டுக் கூறும் பெரிய நூல்கள்;* ***உலப்பு இலவால்*** - *அளவில்லாதனவாகும்;* ***பேதிப்பன*** - *வேறுபாடுகளைச் செய்வனவாகும்;* ***நீ அவை பேர்கிலையால்*** - *நீ அவற்றிலிருந்து பேர்வாயல்லை;* ***வேதப் பொருளே*** - *வேதங்களால் சிறப்பித்துப் பேசப்படும் பரம் பொருளே;* ***விளையாடுதியோ*** - *வேறுபாடுகளை வேடிக்கை பார்த்து விளையாடுகிறாயோ?*

*பிணக்கியாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர் கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞான மூர்த்தியினாய் (6.2.8) என்ற திருவாய் மொழி ஒப்பு நோக்கத் தக்கது.*

*6299. ' "**அம்போருகனார், அரனார், அறியார்;***
***எம் போலியர் எண்ணிடின், என், பலவா?***
***கொம்போடு, அடை, பூ, கனி, காய் எனினும்,***
***வம்போ, 'மரம் ஒன்று' எனும் வாசகமே?***

***அம்போருகனார்*** - தாமரை மலரில் உறையும் பிரமதேவனும்; ***அரனார் அறியார்*** - சிவபிரானும் கூட உன்னை அறிய மாட்டார்கள்; ***எம் போலியர்*** - (என்றால்) எம்மைப் போன்றவர்கள்; ***என் பலவா*** - பலவாறு நினைந்து பேச என்ன உள்ளது?; ***கொம்போடு*** - ஒரு மரத்தின் கிளைகளோடு; ***அடை, பூ, கனி, காய் எனினும்*** - இலை, பூ, கனி, காய் என்றாலும்; ***மரம் ஒன்று எனும் வாசகம்*** - 'மரம் ஒன்று' என்று கூறுவது; ***வம்போ*** - புதுமையானதோ? (அல்ல)

*அம்போருகம் - தாமரை. பலவா - பலவாறு. அடை - இலை வம்பு - புதுமை. உலகமும் அதில் வாழும் உயிர்களும் தனித்தனியே பார்க்கும் போது வெவ்வேறாகத் தோன்றினாலும், அனைத்தும் இறைவனுக்கு உறுப்புக்களாக உள்ளன." மேவுமுயிர் யாவுமுனை வாழுமிடமாகவுறை மேதகைமை ஓத வெளி தெனலாமோ"என்ற உரை ஒப்பிட்டுணரத் தக்கது.*

***6300. ' "நின்னின் பிறிதாய், நிலையின் திரியா,***
***தன்னின் பிறிது ஆயினதாம் எனினும்***
***உன்னின் பிறிது ஆயினவோ, உலகம்-***
***பொன்னின் பிறிது ஆகில, பொற் கலனே?***

***உலகம்*** - சித்து, அசித்துக்களான உலகப்பொருள்கள்; ***நின்னின் பிறிதாய்*** - உன்னிலிருந்து வேறுபட்டதாய்; ***நிலையில் திரியா*** - நிலைமாறாதனவாய்; ***தன்னின் பிறிதாயினதாம்*** - தமக்குள்ளேயும் வேறுவேறாக இருப்பவையாவும்; ***எனினும்*** - அவ்வாறு இருந்தன என்றாலும்; ***உன்னில் பிறிதாயினவோ*** - உன்னிலிருந்து வேறாகவோ உள்ளன? இல்லையே; ***பொற்கலன்*** - பொன்னால் செய்த அணிகலன்கள் பலவிதமாக இருந்தாலும்; ***பொன்னில் பிறிது ஆகில*** - பொன்னைவிட்டு வேறு ஒன்றாக ஆவதில்லை.

*பொன் ஆபரணங்கள் காதணி கழுத்தணி என்று பலவகைப்பட்டுக் காணப்பட்டாலும் பொன்னில் வேறாகா அதுபோல உலகப் பொருள்கள் அனைத்தும் பலவகையினவாயினும் உன்னில் வேறானவை அல்ல, சித்தும் அசித்துமான அவை ஈசனுக்கு உடல் ஈசன் உயிர் என்ற 'சரீரசரீரி' பாவம் வைணவத்தின் சிறந்த கொள்கையாகும்.*

***6301. ' "தாய் தந்தை எனும் தகை வந்தனைதான்,***
***நீ தந்தனை; நீ உறு நெஞ்சினென் நான்;***
***நோய் தந்தவனே! நுவல் தீர்வும்" எனா,***
***வாய் தந்தன சொல்லி, வணங்கினனால்.***

***நோய்தந்தவனே*** - நோயை எனக்குத் தந்த பெருமானே; ***தாய்தந்தை எனும்*** - பெற்றதாய், உற்றதந்தை என்றெல்லாம்; ***தகை வந்தனைதான்*** - பெற்றோர்களை

*வழிபடும் நெறிதான்;* ***நீதந்தனை*** *- நீயே உயிர்களுக்குக் கொடுத்தருளினை;* ***நீ உறு நெஞ்சினன் நான்*** *- நீ வாழும் மனத்தை உடையவன் நான்;* ***தீர்வும் நுவல்*** *- அதைத் தீர்க்கும் வழியையும் கூறுவாயாக;* ***எனாவாய்தந்தன சொல்லி*** *- என்று பல உண்மைகளை உரைத்து;* ***வணங்கினன்*** *- பிரகலாதன் திருமாலைத் தொழுதான்.*

*தகைவந்தனை - தக்க வழிபாடு. மெய்யுரை*

***6302. 'அத் தன்மை அறிந்த அருந் திறலோன்,***
***"உய்த்து உய்ம்மின், என் முன்" என, உய்த்தனரால்;***
***"பித்துண்டது பேர்வு உறுமா பெறுதும்;***
***கைத்தும், கடு நஞ்சின்" எனக் கனலா,****

***அத்தன்மை அறிந்த*** *- (பிரகலாதனைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் எறிந்தும் அவன் பிழைத்திருந்த) அந்தத் தன்மையை அறிந்தவனான;* ***அரும் திறலோன்*** *- பெறுதற்கரிய வலிமையுள்ள இரணியன்;* ***என்முன் உய்த்து உய்மின் என*** *- எனக்கு முன் அவனைக் கொண்டு வந்து விடுங்கள் என்று கூற;* ***உய்த்தனரால்*** *- வீரர்கள் பிரகலாதனை அவனிடம் சேர்த்தனர்;* ***பித்துண்டது*** *- (அப்போது இரணியன்) இவனுடைய பைத்தியம்;* ***பேர்வுறுமா பெறுதும்*** *- நீங்கப் பெறுவோம்;* ***கடு நஞ்சின் கைத்தும்*** *- கொடிய விஷத்தால் கொல்வோம்;* ***எனக் கனல்வான்*** *- என்று, வெகுண்டுரைத்தான்.*

*கைத்தல் - வெறுத்தல்; (இங்கே கொல்லுதல் என்னும் பொருளில் வந்தது.)*

***6303. 'இட்டார் கடு வல் விடம்; எண்ணுடையான்***
***தொட்டான் நுகரா, ஒரு சோர்வு இலனால்;***
***கட்டு ஆர் கடு மத்திகை, கண் கொடியோன்,***
***விட்டான்; அவன்மேல் அவர் வீசினரால்.***

***இட்டார் கடுவல்விடம்*** *- கடுமையான வலிய விடத்தை பிரகலாதனுக்குக் கொடுத்தார்கள்;* ***எண்ணுடையான் தொட்டான் நுகரா*** *- இறைவனைத் தியானித்தலை உடையவனான பிரகலாதன் விடத்தை வாங்கி உண்டும்;* ***ஒரு சோர்வு இலனால்*** *- சிறிதும் சோர்வில்லாதவனாய் இருந்தான்;* ***கண்கொடியோன்*** *- அதைக் கண்ட கருணையற்ற கொடியவனான இரணியன்;* ***கட்டு ஆர் கடு மத்திகை*** *- முடிச்சுக் களை உடைய குதிரைச் சம்மட்டி என்னும் படைக்கலத்தை;* ***விட்டான்*** *- அ னுப்பிவிட்டனனாக;* ***அவன்மேல் அவர் வீசினரால்*** *- பிரகலாதன்மீது வீரர்கள் அந்தச் சம்மட்டி வீசினர்.*

எண் உடையான் - எண்ணத்தில் இறைவனை உடையவன் (மனத்திலே பரமனைத் தியானித்து இருந்தவன் பிரகலாதன்). கண் கொடியோன் - கண்ணில் சிறிதும் கண்ணோட்டம் இல்லாத கொடிய இரணியன்; கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் (575) என்ற குறளை நினைக. கட்டு - முடிச்சு மத்திகை - குதிரைச் சம்மட்டி என்னும் ஆயுதம். விட்டான் - அனுப்பி வைத்தான். மத்திகை என்று ஒருமையில் கூறினாலும் பிரகலாதன் மீது எறிந்தவர் பலர் என்பதால் ` 'மத்திகைகள்' என்று கொள்வது பொருந்தும்.

***6304. 'வெய்யார், முடிவு இல்லவர், வீசிய போது,***
***"உய்யான்" எனும் வேலையினுள், "உறைவோன்***
***கை ஆயிரம் அல்ல; கணக்கு இல" என்று,***
***எய்யா உலகு யாவையும் எண்ணினனால்.***

**வெய்யார்** - கொடியவர்களான அரக்கர்கள்; **முடிவு இல்லவர்** - எண்ணி அளவிட முடியாத பலர்; **வீசிய போது** - குதிரைச் சம்மட்டிகளை தன் மீது எறிந்த போது; **உய்யான்** - (பிரகலாதன்) தப்பிப் பிழைக்க மாட்டான்; **எனும் வேலையினுள்** - என்று பார்த்தவர் கூறும் சமயத்திலே; **உறைவோன்** - எனது உள்ளத்திலே கோயில் கொண்டிருப்பவனாகிய திருமாலுக்கு; **கை ஆயிரம் அல்ல** - கைகள் ஆயிரம் என்னும் அளவினதல்ல; **கணக்கு இல என்று** - கணக்கில்லாதனவாம் என்று அறிந்தவனாய்; **எய்யா உலகு யாவையும் எண்ணினனால்** - எண்ணி அறியமுடியாத எல்லா உலகங்களிலும் நிறைந்த பரமனைத் தியானித்தான்.

வேலை - நேரம். திருமால் ஆயிரம் கைகளை உடையவர் என்பதை "காலாயிரம் முடியாயிரம் ஆயிரம் கைபரப்பி, மேலாயிரம் தலைநாகம் கவிப்ப, விண்பூத்த கஞ்சம் போல் ஆயிரம்கண் வளரும் பிரான்" என்று திருவரங்கக் கலம்பகம் கூறுவதாலும் அறியலாம் எய்யாமை - அறியாமை (தொல். சொல். உரி.44) இங்கே எண்ணி எல்லை அறியமுடியாமை.

*இரணியன்-பிரகலாதன் உரையாடல்*

***6305. ' "ஊனோடு உயிர் வேறு படா உபயம்***
***தானே உடையன், தனி மாயையினால்;***
***யானே உயிர் உண்பல்" எனக் கனலா,***
***வான் ஏழும் நடுங்கிட, வந்தனனால்.***

**ஊனோடு உயிர் வேறுபடா உபயம்** - உடலிலிருந்து உயிரைப் பிரிக்கமுடியாத உபாயம்; **தனி மாயையினால்** - தனியான மாயச் செயலாலே; **தானே உடையன்** - இவன்தானே உடையவனாயுள்ளான்; **யானே உயிர் உண்பல்** - இவனது உயிரை யானே உண்பேன்; **எனக்கனலா** - என்று கூறிக் கோபம் கொண்டு; **வான் ஏழும் நடுங்கிட** -

*வானமும் ஏழுலகமும் நடுங்கும்படி;* **வந்தனனால்** *- (இரணியன்) பிரகலாதனிடம் வந்தான்.*

*ஊன் - உடல். உபயம் - உபாயம் (தந்திரம்). மாயையினால் உயிர் வேறுபடா உபயம்தானே உடையன்' என இயையும்.*

**6306. 'வந்தானை வணங்கி, "என் மன் உயிர்தான்**
**எந்தாய்! கொள எண்ணினையேல், இதுதான்**
**உம் தாரியது அன்று; உலகு யாவும் உடன்**
**தந்தார் கொள நின்றதுதான்" எனலும்,**

**வந்தானை** *- வெகுண்டு வந்த இரணியனை;* **வணங்கி** *- பிரகலாதன் (தந்தையென்பதால்) தொழுது;* **'எந்தாய்** *- எனது தந்தையே;* **என் மன் உயிர்தான் கொள எண்ணினையேல்** *- எனது நிலையான உயிரைக்கவர நீ நினைப்பாயானால்;* **இதுதான்** *- இந்த எனது உயிரானது;* **உம்தாரியது அன்று** *- (நீயும் உனது வீரர்களும் ஆன) உங்கள் வழிப்பட்டதல்ல (வசப்பட்டதல்ல);* **உலகு யாவும் உடன் தந்தார்** *- எல்லா உலகங்களையும் தந்த அந்தப் பரமன்;* **கொள நின்றது தான் எனலும்** *- தான் விரும்பினால் எடுத்துக் கொள்ள இருப்பதாகும் என்று கூறியவுடன்.*

*'எனலும் என்றது அடுத்த பாடலுடன் முடிவு பெறுதலால் குளகம்' ஆகும். தாரியது - ழிப்பட்டது. தாரி - வழி(திசைச் சொல்லாகும்) தாரி - வழி என்ற பொருளில் தெலுங்கில் வழங்குவது.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**6307. ' "ஏவரே உலகம் தந்தார் ? என் பெயர் ஏத்தி**
**வாழும்**
**மூவரே ? அல்லர்ஆகின், முனிவரே ? முழுதும்**
**தோற்ற**
**தேவரே ? பிறரே ? யாரே ? செப்புதி, தெரிய"**
**என்றான்,**
**கோவம் மூண்டு எழுந்தும் கொல்லான், காட்டுமேல்**
**காட்சி கொள்வான்.**

**கோவம் மூண்டு எழுந்தும் கொல்லான்** *- இரணியன் கோபம் பொங்கி எழுந்த போதும் கொல்லாதவனாய்;* **காட்டு மேல் காட்சி கொள்வான்** *- உலகு தந்தானைப் பிரகலாதன் காட்டுவானாயின் காண விரும்பினவனாய்;* **'ஏவரே உலகம் தந்தார்** *- உலகத்தைப் படைத்தவர் யார்? என்பெயர் ஏத்திவாழும் - எனது பெயரைச் சொல்லி வணங்கி வாழுகின்ற;* **மூவரே** *- அரி, அயன், அரன் என்ற மும்மூர்த்திகளா;* **அல்லர்**

**ஆகின்** - அந்த மூவரும் அல்லர் என்றால்; **முனிவரே, முழுதும் தோற்ற தேவரே** - முனிவர்களா? எனக்கு முற்றிலும் தோற்ற தேவர்களா; **பிறரே யாரே தெரியச் செப்புதி** - மற்றவர்களா? யார் என்று நான் அறியக் கூறுக; **என்றான்** - என்றான்.

***6308. ' "உலகு தந்தானும், பல் வேறு உயிர்கள் தந்தானும், உள் உற்று,***
***உலைவு இலா உயிர்கள்தோறும், அங்கு அங்கே உறைகின்றானும்,***
***மலரினில் வெறியும் எள்ளில் எண்ணெயும்; மற்றும் கேளாய்!***
***அலகு இல் பல் பொருளும் பற்றி முற்றிய அரிகாண் - அத்தா!***

***அத்தா*** - *(பிரகலாதன் இரணியனை நோக்கி) தந்தையே!;* **உலகுதந்தானும்** - எல்லா உலகங்களையும் படைத்தளித்தவனும்; **பல்வேறு உயிர்கள் தந்தானும்** - இந்த உலகில் வாழுகின்ற பல்வேறு வகையான உயிர்களைப் படைத்தவனும்; **உலைவுஇலா உயிர்கள் தோறும் உள்உற்று** - அழிவற்ற அவ்வுயிர்கள் தோறும் உள்ளே பொருந்தி; **அங்கங்கே உறைகின்றானும்** - ஆங்காங்கு நிறைந்திருப்பவனும்; **மலரினில் வெறியும்** - மலரிலே நிறைந்த மணமும்; **எள்ளில் எண்ணெயும்** - எள்ளுக்குள் நிறைந்த எண்ணெயும் போல்; **அலகில் பல் பொருளும் பற்றி** - அளவிட முடியாத பலபொருள்களையும் தன்னிடம் கொண்டு; **முற்றிய அரி காண்** - எங்கும் நீக்கமின்றி நிறைந்திருப்பவன் அந்தத் திருமாலே; **மற்றும் கேளாய்** - மேலும் கேட்பாயாக.

*உள்உற்று - உள்ளே பொருந்தி (அந்தர் யாமியாய்). அங்கங்கே உறைதல் - எங்கும் நீக்கமின்றி நிறைந்திருத்தல்.*

***6309. ' " என் கணால் நோக்கிக் காண்டற்கு எங்கணும் உளன்காண், எந்தை;***
***உன்கண் நான் அன்பின் சொன்னால், உறுதி என்று ஒன்றும் கொள்ளாய்;***
***நின்கணால்நோக்கிக் காண்டற்கு எளியனோ- நினக்குப் பின்னோன்***
***பொன்கணான் ஆவி உண்ட புண்டரீகக் கண் அம்மான் ?***

**எந்தை** - எனது தந்தையே; உன்கண்நான் அன்பின் சொன்னால் - உன்னிடம் கொண்டுள்ள அன்பினால் நான் எடுத்துச் சொன்னால்; **உறுதி என்று ஒன்றும்**

***கொள்ளாய்*** - நான் சொல்வது உறுதியளிப்பது என்று ஒன்றும் மனத்தில் கொள்ளமாட்டாய்; ***நினக்குப்பின்னோன்*** - உனக்குப் பின் பிறந்த தம்பியான; ***பொற்கண்ணன் ஆவியுண்ட*** - இரணியாட்சன் உயிரையுண்ட; ***புண்டரீகக் கண் எம்மான்*** - தாமரைபோன்ற கண்களை உடைய எம்பெருமான்; ***நின் கணால் நோக்கிக் காண்டற்கு எளியனோ*** - உனது கண்களினால் நீ பார்த்து அறியுமளவுக்கு எளியவனோ; ***என் கணால் நோக்கிக் காண்டற்கு எங்கணும் உளன்காண்*** - எனது கண்களால் கண்டு அறிவதற்கு அப்பரமன் எங்கும் இருக்கிறான் என்பதை உணர்வாயாக;

*'பொற்கண்ணன்' என்பது இரணியாட்சன் என்பதன் தமிழாக்கம்.*

***6310. ' "மூன்று அவன் குணங்கள்; செய்கை மூன்று;***
***அவன் உருவம் மூன்று;***
***மூன்று கண், சுடர் கொள் சோதி மூன்று; அவன்***
***உலகம் மூன்று;***
***தோன்றலும் இடையும் ஈறும் தொடங்கிய***
***பொருள்கட்கு எல்லாம்***
***சான்று அவன்; இதுவே வேத முடிவு; இது சரதம்"***
***என்றான்.***

***மூன்று அவன் குணங்கள்*** - சாத்வீகம், இராசதம், தமோகுணம் என்று மூன்றும் அவன் குணங்களாகும்; ***செய்கை மூன்று*** - ஆக்கல், அளித்தல், அழித்தல் என்று மூன்றும் அவன் தொழில்களாகும்; ***அவன் உருவம் மூன்று*** - அயன், அரன், அரி என்னும் மூன்றும் அவன் உருவங்களாகும்; ***மூன்று கண் சுடர் கொள் சோதி மூன்று*** - ஒளிமிக்க சூரியன், சந்திரன், நெருப்பு ஆகிய ஒளிப்பொருள் மூன்றும் அவனது கண்களாகும்; ***அவன் உலகம் மூன்று*** - சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்றும் அவனது உலகங்களாகும்; ***தோன்றலும் இடையும் ஈறும்*** - தோற்றம், இடை, இறுதியாகிய மூன்று நிலைகளை உடைய; ***தொடங்கிய பொருள் கட்கு எல்லாம்*** - எல்லாப் பொருள்களுக்கும்; ***சான்று அவன்*** - சாட்சியாய் இருப்பவன் அப்பரமனே; ***இதுவே வேதமுடிவு*** - இதுவே வேதங்களின் முடிந்த முடிபு; ***இது சரதம் என்றான்*** - இது சத்தியம் என்றான்.,

*எங்கும் உள்ள, எல்லாம் வல்ல, எவ்வுயிர்க்கும் ஈசனாகிய பெருமானுடைய இயல்பை எடுத்துரைக்கும் பாட்டு. இது. முக்குணம், முத்தொழில், மூவுருவம் மூன்றுலகம். மூன்றுகண்கள் - உயிர்களின் மூன்றுநிலை கூறுவது கருதத்தக்கது.*

***6311. 'என்றலும், அவுணர் வேந்தன் எயிற்று அரும்பு***
***இலங்க நக்கான்,***
***"ஒன்றல் இல் பொருள்கள் எல்லாம் ஒருவன் புக்கு***
***உறைவன்-என்றாய் ;***
***நன்று அது கண்டு, பின்னர் நல்லவா புரிதும் ;***

***தூணில்***
***நின்றுளன்என்னின், கள்வன், நிரப்புதி நிலைமை"***
***என்றான்.***

***என்றலும்*** - என்றெல்லாம் இறைவன் இயல்பை பிரகலாதன் கூறலும்; ***அவுணர் வேந்தன்*** - அதுகேட்ட அசுரர் வேந்தனான இரணியன்; ***எயிற்றரும்பு இலங்க நக்கான்*** - அரும்பு போன்ற பற்கள் ஒளிரச் சிரித்தான்; (பின் பிரகலாதனை நோக்கி) ***ஒன்றல் இல் பொருள்கள் எல்லாம்*** - வெவ்வேறு வகைப்பட்ட எல்லாப் பொருள்களிலும்; ***ஒருவன் புக்கு உறைவன் என்றாய்*** - ஒருவனாகிய அவன் புரிந்து தங்கி உறைகிறான் என்றாய்; ***நன்று, அது கண்டு*** - நல்லது, முதலில் அதைப் பார்த்துவிட்டு; ***பின்னர் நல்லவாபுரிதும்*** - பின்பு அதற்கேற்ற நல்ல செயல்செய்வோம்; ***கள்வன் தூணில் நின்றுளன் என்னின்*** - அந்த வஞ்சகன் (எங்கு முளன் என்றாயே) இந்தத் தூணில் உளன் என்றால்; ***நிலைமை நிரப்புதி*** - அவன் எங்கும் நிறைந்துள்ள நிலை எனக்குப் புலப்படும்படி நிறைவு செய்வாயாக என்றான்.

*எயிற்றரும்பு - உருவகம். ஒன்றல் இல் பொருள் - ஒன்றுடன் ஒன்று ஒவ்வாத வெவ்வேறு பொருள்கள். நல்லவா - நல்லவாறு.*

***6312. ' "சாணினும் உளன்; ஓர் தன்மை, அணுவினைச்***
***சத கூறு இட்ட***
***கோணினும் உளன்; மா மேருக் குன்றினும் உளன் ;***
***இந் நின்ற***
***தூணினும் உளன்; நீ சொன்ன சொல்லினும் உளன் ;***
***இத் தன்மை***
***காணுதி விரைவின்" என்றான்; "நன்று" எனக்***
***கனகன் சொன்னான்.***

***சாணினும் உளன்*** - ஒரு சாண் அளவுடைய பொருளிலும் இருப்பான்; ***ஓர் தன்மை அணுவினை*** - பிரிக்க வியலாதபடி ஒன்று பட்டதன்மை ஒரு அணுவை; ***சத கூறிட்ட கோணினும் உளன்*** - நூறு பகுதிகளாகப் பிரித்த ஒரு பகுதியிலும் இருப்பான்; ***மா மேருக் குன்றிலும் உளன்*** - மிகப் பெரிய மேரு மலையிலும் இருப்பான்; ***இந்நின்ற தூணினும் உளன்*** - இங்கு நின்ற இந்தத் தூணிலும் இருப்பான்; ***நீ சொன்ன சொல்லினும் உளன்*** - நீ இப்போது சொன்ன இந்தச் சொல்லிலும் இருப்பான்; ***இத்தன்மை*** - (அப்பெருமானுடைய எங்கும் நிறைந்திருக்கும்) இந்தத் தன்மையை; ***விரைவின் காணுதி என்றான்*** - விரைவிலே காண்பாய் என்று பிரகலாதன் கூறினான்; ***நன்று எனக் கனகன் நக்கான்*** - நல்லது என்று கூறி இரணியன் (ஏளனமாக) சிரித்தான்.

*சாண் ஆகு பெயராய் அவ்வளவுடைய பொருளைக் குறித்து நின்றது. சத கூறு - நூறு கூறுகள். கோண் - நூற்றில் ஒரு பகுதி. "பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன், பரந்த அண்டமிதென நிலவிசும் பொழிவற, கரந்த சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள் தொறும் கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட கரனே"*

*பரமனின் எங்கும் நிறைந்திருக்கும் இயல்பினை இத் திருவாய் மொழியாலும் அறியலாம் (1.1.10)*

***6313. ' "உம்பர்க்கும் உனக்கும் ஒத்து, இவ் உலகு எங்கும் பரந்துளானை,***
***கம்பத்தின் வழியே காண, காட்டுதி; காட்டிடாயேல்,***
***கும்பத் திண்கரியைக் கோள் மாக் கொன்றென, நின்னைக்கொன்று, உன்***
***செம்பு ஒத்த குருதி தேக்கி, உடலையும் தின்பென்" என்றான்.***

*__உம்பர்க்கும் உனக்கும் ஒத்து__ - தேவர்களுக்கும், உனக்கும் மட்டும் மனம் ஒத்த நிலையிலே; __இவ்வுலகு எங்கும் பரந்துளானை__ - இந்த உலகமெங்கும் வியாபித்து இருப்பவனான அத்திருமாலை; __கம்பத்தின் வழியே காண__ - நான் இந்தத் தூணில் காணும்படி; காட்டுதி - எனக்கு நீ காட்டுவாயாக; __காட்டிடாயேல்__ - அவ்வாறு காட்ட மாட்டாயென்றால்; __கும்பத்தின் கரியை__ - மத்தகத்தை உடைய யானையை; __கோள் மா கொன்றென__ - வலியசிங்கம் கொல்வது போல்; __நின்னைக் கொன்று__ - உன்னை உடனே கொன்று; __உன் செம்பு ஒத்த குருதி தேக்கி__ - உனது செம்பு போன்ற சிவந்த நிறம் உடைய இரத்தத்தைக் குடித்து; __உடலையும் தின்பேன் என்றான்__ - உனது உடலையும் தின்பேன்.*

*கம்பம் - தூண். கும்பம் - மத்தகம். கோள் மா - வலியசிங்கம். செம்பு ஒத்தகுருதி - செம்பின் நிறத்தைப் போல சிவப்பு நிறமுடைய ரத்தம்.*

***6314. ' "என் உயிர் நின்னால் கோறற்கு எளியது ஒன்று அன்று; யான் முன்***
***சொன்னவன் தொட்ட தொட்ட இடம்தொறும் தோன்றான் ஆயின்,***
***என் உயிர் யானே மாய்ப்பல்; பின்னும் வாழ்வு உகப்பல்என்னின்,***
***அன்னவற்கு அடியேன் அல்லேன்" என்றனன், அறிவின்மிக்கான்.***

*__அறிவின் மிக்கான்__ - மெய்யறிவாகிய ஞானத்தில் மேம்பட்டவனாகிய பிரகலாதன்; __நின்னால் கோறற்கு__ - (இரணியனை நோக்கி) உன்னால் கொல்லப்படுவதற்கு; __என்னுயிர் எளியதொன்று அன்று__ - எனது உயிர் ஒன்றும் அத்தனை எளிமையான தொன்றல்ல; __யான் முன் சொன்னவன்__ - என்னால் முன்பே*

*சொல்லப்பட்ட அந்தப் பெருமான்;* ***தொட்ட தொட்ட இடம் தொறும்*** *- நீ தொட்டுக் காட்டும் இடம் தோறும்;* ***தோன்றான் ஆயின்*** *- வெளிப்பட மாட்டான் என்றால்;* ***என் உயிர் யானே மாய்ப்பல்*** *- எனது உயிரை நானே மாய்த்துக் கொள்வேன்;* ***பின்னும் வாழ்வு உகப்பல் என்னின்*** *- அதற்குப் பிறகும் உயிர் வாழ்வதை விரும்புவேனாயின்;* ***அன்னவற்கு அடியேன் அல்லேன் என்றனன்*** *- அந்தத் திருமாலுக்குரிய நல்ல தொண்டனாக மாட்டேன்.*

*நரசிங்கப்பெருமான் தோன்றிச் சிரித்தல்*

***6315. 'நசை திறந்து இலங்கப் பொங்கி, "நன்று, நன்று !"***
***என்ன நக்கு,***
***விசை திறந்து உருமு வீழ்ந்ததென்ன ஓர் தூணின்,***
***வென்றி***
***இசை திறந்து உயர்ந்த கையால் எற்றினான்;***
***எற்றலோடும்,***
***திசை திறந்து, அண்டம் கீறச் சிரித்தது, அச் செங்***
***கண் சீயம்.***

**நசை திறந்து இலங்கப்பொங்கி** *- இறைவனைக் காணலாம் என்ற விருப்பம் உள்ளத்தே மிகுந்து பொங்க;* ***நன்று நன்று என்ன நக்கு*** *- நல்லது நல்லது என ஏளனமாகச் சிரித்து;* ***விசை திறந்து உருமு வீழ்ந்ததென்ன*** *- மிகுந்த வேகத்துடன் இடி யேறு வீழ்ந்தது போல;* ***ஓர்தூணின்*** *- ஒரு தூணின் மீது;* ***வென்றி இசை திறந்து உயர்ந்தகையால்*** *- வெற்றிப்புகழ்சிறந்த உயர்ந்தகையால்;* ***எற்றினான்*** *- இரணியன் அறைந்தான்;* ***எற்றலோடும்*** *- அவ்வாறு அவன்*

*அறைந்த உடனே;* ***திசைதிறந்து*** *- திசைகளைப் பிளந்து;* ***அண்டம் கீற*** *- அண்டம் பிளந்து கிழியுமாறு;* ***அச்செங்கண் சீயம்*** *- (அந்தத் திருமாலாகிய) நரசிங்கம்;* ***சிரித்தது*** *- பெருஞ்சிரிப்புச் சிரித்தது.*

*நசை - விருப்பம். வென்றிஇசை - வெற்றிப்புகழ். தனக்கு எதிரே தோன்றத் தூணில் பார்க்கலாமே என்பது அவன் ஆசை. செங்கண் சீயம் - சிவந்த கண்களை உடைய சிங்கம் - மனித உடலும் சிங்கத்தலையும் உடைய நரசிங்க மூர்த்தியைத்தான் 'செங்கண்சீயம்' என்றார்.*

*பிரகலாதன் கொண்ட பெருமகிழ்ச்சி*

***6316. ' "நாடி நான் தருவென் என்ற நல் அறிவாளன்,***
***நாளும்***
***தேடி நான்முகனும் காணாச் சேயவன்***
***சிரித்தலோடும்,***

***ஆடினான்; அழுதான்; பாடி அரற்றினான்; சிரத்தில் செங்கை***
***சூடினான்; தொழுதான்; ஓடி, உலகு எலாம் துகைத்தான், துள்ளி.***

**நாடிநான்தருவன் என்ற நல்லறிவாளன்** - பரமனை நானே தேடி, உனக்குக் காட்டித் தருவேன் என்று கூறிய சிறந்த அறிவுடையவனாகிய பிரகலாதன்; **நாளும் தேடிநான்முகனும் காணா** - நாள்தோறும் தேடியும் பிரமன்முதலான தேவர்களும் காணாதபடி; **சேயவன்சிரித்த லோடும்** - நெடும் தொலைவில் உள்ளவனாகிய பெருமான் சிரித்தவுடனே; **ஆடினான் அழுதான் பாடி அரற்றினான்** - மிகவும் மகிழ்ந்து ஆடினான் அழுதான் பாடி அலறலானான்; **சிரத்தில் செங்கை சூடினான் தொழுதான்** - உச்சியின் மீது கைகளைக் கூப்பி வணங்கினான்; **உலகெலாம் துள்ளித் துகைத்தான்** - உலகெங்கும் துள்ளிக் குதித்துத் துகைக்கலானான்.

*நாடி - தேடி. தருவன் - காட்டிக் கொடுப்பேன். நல்லறிவு - மேலான ஞானம் (மெய்யறிவு) காணா - காணாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்) சேயவன் - தூரத்தில் உள்ளவன் அரற்றுதல் - அலறுதல். துகைத்தல் - மிதித்துக் குழப்புதல். மகிழ்ச்சி விளைக்கும் மெய்ப்பாடுகள் இப்பாடலில் மிகச் சிறப்பாக ஓதப்பட்டுள்ளன. 'சேயவன்' என்பதற்குச் செம்மையான பண்பு (கல்யாண குணம்) உடையவன் எனினும் பொருந்தும்.*

### *இரணியன் நரசிங்க மூர்த்தியைப் போருக்கு அழைத்தல்*

***6317. ' "ஆர் அடா சிரித்தாய் ? சொன்ன அரிகொலோ ? அஞ்சிப் புக்க***
***நீர், அடா ? போதாது என்று, நெடுந் தறி நேடினாயோ ?***
***போர் அடா ? பொருதிஆயின், புறப்படு ! புறப்படு !" என்றான் -***
***பேர் அடாநின்ற தாளோடு உலகு எலாம் பெயரப் பேர்வான்.***

**பேர்அடாநின்ற தாளோடு** - புகழ்பொருந்திய கால்களால்; **உலகு எலாம் பெயர்ப் பேர்வான்** - உலக மெல்லாம் பெயரும்படி பெயர்வானாகிய இரணியன்; **ஆரடா சிரித்தாய்** - (சிரிப்பொலி கேட்டு) தூணில் இருந்து சிரித்தவன் யாரடா?; **சொன்ன அரிகொலோ** - இச்சிறுவன் சொன்ன அரிதானோ?; **அஞ்சிப்புக்க நீர் அடா போதாது என்று** - எனக்குப் பயந்து போய் ஒளிந்து கொண்டிருந்த கடல் போதாதென்று; **நெடும் தறி நேடினாயோ** - இந்தப் பெரிய தூணையும் ஒளிந்து கொள்ளத் தேடினாயோ?; **போர் அடா பொருதி ஆயின்** - என்னுடன் போர் செய்ய முற்படுவாயாயின்; **புறப்படு புறப்படு என்றான்** - விரைவில் புறப்பட்டு வா என்றான்;

*அடா - ஏடா என்பதன் மரூஉ. தறி - 'தூண்' அடா நின்றதாள் என்பதற்கு பொருந்தி நிற்கக் காரணமான வலிமையுடன் என்பதும் பொருந்தும். தாள் - வலிமை புறப்படு புறப்படு - விரைவு பற்றி வந்த அடுக்கு. பேர்வான் - போரிடப் பெயர்ந்தான்.*

*நரசிங்க மூர்த்தி வெளிப்பட்டுப் பேருருக் கொள்ளல ◌ஃ*

***6318. 'பிளந்தது தூணும்; ஆங்கே பிறந்தது, சீயம்; பின்னை***
***வளர்ந்தது, திசைகள் எட்டும்; பகிரண்டம் முதல மற்றும்***
***அளந்தது; அப் புறத்துச் செய்கை யார் அறிந்து அறையகிற்பார்?***
***கிளர்ந்தது; ககன முட்டை கிழிந்தது, கீழும் மேலும்.***

***பிளந்தது தூணும்*** *- (இரணியன் திருமாலைப் போருக்கு அழைத்தவுடன்) அந்தத் தூண் இரண்டாகப் பிளந்தது;* ***ஆங்கே பிறந்தது சீயம்*** *- அங்கே நரசிங்கம் தோன்றியது;* ***பின்னை வளர்ந்தது*** *- பின்பு உடனே வளர்ந்தது;* ***திசைகள் எட்டும்*** *- எட்டுத் திசைகளையும்;* ***பகிரண்டம் முதலமற்றும் அளந்தது*** *- பேரண்டம் முதலிய அனைத்தையும் அளந்தது;* ***அப்புறத்துச் செய்கை*** *- அதற்கப்பாலும் வளர்ந்த செய்கையை;* ***யார் அறிந்து அறையகிற்பார்*** *- யார்தான் அறிந்து சொல்வதற்கு வல்லவர்;* ***கிளர்ந்தது*** *- மேலும் ஓங்கி வளர்ந்தது;* ***ககன முட்டை கிழிந்ததுகீழும் மேலும்*** *- (அதனால்) உலக உருண்டையாகிய முட்டை கீழேயும் கிழிந்தது மேலேயும் கிழிந்தது.*

*சீயம் - சிங்கம். செய்கை - செயல். ககனம் - உலகம். அறையகிற்பார் - கூறவல்லார்.*

***6319. 'மன்றல் அம் துளப மாலை மானுட மடங்கல் வானில்***
***சென்றது தெரிதல் தேற்றாம்; சேவடி படியில் தீண்ட***
***நின்றது ஓர் பொழுதின், அண்ட நெடு முகட்டு இருந்த முன்னோன்***
***அன்று அவன் உந்தி வந்தானாம் எனத் தோன்றினானால்.***

***மன்றல் அம் துளப மாலை*** *- மணம் கமழும் அழகிய துழாய் மாலை அணிந்த; மானுடமடங்கல் - நரசிங்கமாகிய திருமால்;* ***வானில் சென்றது*** *- ஆகாயத்தே வளர்ந்து சென்றதனை இவ்வளவென்று;* ***தெரிதல் தேற்றாம்*** *- தெரிந்து தெளியமாட்டோம்;* ***சேவடி படியில் தீண்ட*** *- செம்மையான திருவடிகள் நிலத்திலே தீண்ட;* ***நின்றது ஓர் பொழுதின்*** *- நின்ற அந்தச் சமயத்திலே;* ***அண்ட நெடு முகட்டிருந்த***

***முன்னோன்*** - *அண்டத்தின் உயர்ந்த சிகரத்திலே (சத்திய லோகத்திலே) இருந்த பிரமதேவன்;* ***அன்று அவன் உந்தி வந்தானாம் என*** - *(பிரமனைத் தோற்றுவித்த) அந்த நாளிலே அப்பெருமானது நாபியில் வந்தானெனும்படி;* ***தோன்றினான்*** - *காணப்பட்டான்.*

*மன்றல் - மணம். மடங்கல் - சிங்கம். தேற்றாம் - தெளியோம். படி - நிலம். முன்னோன் - பிரம தேவன். வானுற ஓங்கி வளர்ந்த நரசிங்கத்தின் உந்தி சத்தியலோகம் அளவும் உயர்ந்திருந்தமையால் பிரமன் உந்தியில் தோன்றியது போலக் காணப்பட்டான் என்பது குறிப்புத் தற்குறிப்பேற்ற அணி.*

***6320. ' "எத்துணை போதும் கை" என்று இயம்பினால், எண்ணற்கு ஏற்ற***
***வித்தகர் உளரே ? அந்தத் தானவர் விரிந்த சேனை,***
***பத்து நூறு அமைந்த கோடி வெள்ளத்தால் பகுதி செய்த***
***அத்தனை கடலும் மாள, தனித் தனி அள்ளிக் கொண்ட.***

***எத்துணை போதும் கை என்று இயம்பினால்*** - *கைகள் எத்தனை உள்ளன எனக் கூறத் தொடங்கினால்;* ***எண்ணற்கு ஏற்ற வித்தகர் உளரே*** - *எண்ணுவதற்குத் தகுதியான வித்தகர் யாரேனும் உள்ளனரோ?;* ***அந்தத் தானவர் விரிந்த சேனை*** - *அந்த இரணியனுடைய அரக்கரின் பரந்த படை;* ***பத்து நூறு அமைந்த கோடி*** - *ஆயிரம் கோடி அளவுடைய;* ***வெள்ளத்தால் பகுதி செய்த*** - *வெள்ளத்தால் பகுதி செய்யப்பட்ட;* ***அத்தனைகடலும் மாள*** - *அத்தனை சேனைக் கடலும் அழியும்படி;* ***தனித்தனி அள்ளிக் கொண்ட*** - *தனித்தனியாக அள்ளி எடுத்துக் கொண்டன (அக்கைகள்).*

*கை எத்துணை போதும் - கைகள் எந்த அளவுக்குப் போகும்? பத்து நூறு கோடி - ஆயிரம் கோடி. கடல் - சேனைக்கடல்; உருவகம். ஆயிரம் விரித்த கைம்மாயமள்ள, நூறாயிரங்கை ஆறறி கடவுள், அனைத்து மல்ல பல அடுக்கல் ஆம்பல், இனைத்தென எண்வரம் பறியாயாக்கையை" என்று பரிபாடல் (3வரி 42 - 45) கூறுவதனாலும் பெருமான் ஆயிரம் கையுடையான் என்பதை அறியலாம்.*

***6321. 'ஆயிரங்கோடி வெள்ளத்து அயில் எயிற்று அவுணர்க்கு, அங்கு அங்கு,***
***ஏயின ஒருவர்க்கு ஓர் ஓர் திருமுகம், இரட்டிப் பொன் தோள்,***
***தீ எனக் கனலும் செங் கண் சிரம்தொறும் மூன்றும், தெய்வ***
***வாயினில் கடல்கள் ஏழும், மலைகளும், மற்றும்,***

***முற்றும்.***

***ஆயிரம் கோடி வெள்ளத்து*** - *ஆயிரம் கோடி வெள்ளம் என்ற அளவினரான;* ***அயில் எயிற்று அவுணர்க்கு*** - *வேல் போன்ற பற்களை உடைய அந்த அரக்கர்களுக்கெல்லாம்;* ***அங்கு அங்கு ஒருவர்க்கு ஓர்ஓர் திருமுகம்*** - *ஆங்காங்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருமுகமாகவும்;* ***இரட்டிப் பொன்தோள்*** - *இரண்டு மடங்கு தோள்களாகவும்;* ***தீ எனக்கனலும் செங்கண்*** - *தீயென மிளிரும் சிவந்த கண்கள்;* ***சிரம் தொறும் மூன்றும் ஏயின*** - *தலைதோறும் மூன்றாகவும் காணப்பட்டன;* ***தெய்வ வாயினில்*** - *தெய்வத்தன்மை வாய்ந்த அந்த நரசிங்கத்தின் திருவாயிலே;* ***கடல்கள் ஏழும் மலைகளும்*** - *ஏழு கடல்களும், ஏழுமலைகளும்;* ***மற்றும் முற்றும்*** - *மற்றுமுள்ள யாவையும் கொள்ளும்.*

***6322. 'முடங்கு வால் உளை அவ் அண்டம் முழுவதும் முடிவில் உண்ணும்***
***கடம் கொள் வெங் காலச் செந் தீஅதனை வந்து அவிக்கும்; கால***
***மடங்கலின் உயிர்ப்பும், மற்று அக் காற்றினை மாற்றும்; ஆனால்,***
***அடங்கலும் பகு வாய் யாக்கை அப் புறத்து அகத்தது அம்மா !***

***முடங்கு வால் உளை*** - *வளைந்த அந்தத் தூய்மையான பிடரிமயிர்;* ***அவ்வண்டம் முழுவதும் முடிவில் உண்ணும்*** - *இந்த அண்டம் முழுவதையும் முழுதாக உண்ணும்;* ***கடம் கொள் வெங்காலச் செந்தீயதனை வந்து அவிக்கும்*** - *அனைத்தையும் அழிக்கும் கடமைபூண்ட ஊழித் தீயையும் அவித்து விடும்;* ***கால மடங்கலின் உயிர்ப்பும்*** - *காலனை ஒத்த அந்த நரசிங்கத்தின் மூச்சும்;* ***மற்று அக்காற்றினை மாற்றும்*** - *அந்த ஊழிக்காலக் காற்றினையும் வெல்லும்;* ***ஆனால் அடங்கலும்*** - *ஆனால் பிடரி மயிர், உயிர்ப்பு ஆகிய எல்லாம்;* ***பகுவாய் யாக்கை*** - *பிளவுபட்ட வாயை உடைய சிங்கத்தின் உடம்புக்கு;* ***அப்புறத்து அகத்தது அம்மா*** - *மேற்புறமும் உள்ளும் அமைந்திருந்தன.*

*முடங்குதல் - வளைதல். வால் - தூய்மை. உளை - பிடரிமயிர், கடம் - கடமை வெம் காலம் - ஊழிக் காலம். பகுவாய் - பிளந்துள்ள பெரிய வாய்.*

***6323. 'குயிற்றிய அண்டம் குஞ்சை இட்டிலா முட்டைக் கூட்டில்***
***பயிற்றிய பருவம் ஒத்த காலத்துள், - அமுது பல்கும்***
***எயிற்று வன் பகு வாயுள் புக்கு இருக்குந - இருக்கை எய்தி,***

***வயிற்றின் வந்து, அந்நாள், இந்நாள் வாழும்***
***மன்னுயிர்கள் மன்னோ.***

***அந்நாள் வயிற்றின் வந்து*** - *(ஊழிக் காலமாகிய) அந்தநாளிலே (திருமாலின்) வயிற்றிலே வந்திருந்து (பின்பு வெளிப்பட்டு);* ***இந்நாள் வாழும் மன்னுயிர்கள்*** - *இந்நாள் வரை உலகில் நிலை பெற்று வாழும் உயிர்களெல்லாம்;* ***குயிற்றிய அண்டம்*** - *அப்பரமனால் படைக்கப்பட்ட இந்த அண்டமானது;* ***குஞ்சை இட்டிலா முட்டைக் கூட்டில்*** - *குஞ்சுகளைத் தாராத முட்டைகளை உடைய கூட்டில்;* ***பயிற்றிய பருவம் ஒத்த காலத்துள்*** - *அவை குஞ்சு பொறிக்கத்தக்க பருவமாகிய காலத்திலே;* ***அமுது பல்கும் எயிற்றுவன் பகுவாயுள்*** - *நரசிங்கப் பெருமானது அமுதத்தைச் சுரக்கும் பற்களை உடைய வலிய பெரிய வாயினுள்ளே;* ***புக்கு இருக்கை எய்தி இருக்குந*** - *புகுந்து, தமக்குப் பாதுகாப்பான இருப்பிடத்தை அடைந்து இருப்பனவாயின.*

*அந்நாள் - ஊழிக்காலம். குயிற்றிய - படைக்கப்பட்ட. இட்டிலா - தராத. பல்குதல் - பெருகுதல்.*

***6324. 'நன்மையின் தொடர்ந்தார்க்கு உண்டோ, கேடு ?***
***நான்முகத்தோன் ஆதி***
***தொன்மையின் தொடர்ந்த வாய்மை அறத்தொடும்***
***துறந்திலோரை,***
***அன்வயித்து, ஓரும் தீய அவுணர் அல்லாரை,***
***அந் நாள்,***
***தன் வயிற்றகத்து வைத்துத் தந்தது, அச் சீயம்,***
***தாயின்.***

***நன்மையின் தொடர்ந்தார்க்கு*** - *நல்ல செயல்களையே தொடர்ந்து செய்து வந்தவர்களுக்கு;* ***கேடு உண்டோ*** - *எதனாலும் தீங்கு நேருவதுண்டோ?;* ***நான்முகத்தோன் ஆதி*** - *பிரமதேவன் முதலாக;* ***தொன்மையின் தொடர்ந்த*** - *பழைய காலத்திலிருந்தே கடைப்பிடிக்கப்பட்டு வருகின்ற;* ***வாய்மை அறத் தொடும் துறந்திலோரை*** - *வாய்மை, அறம் ஆகிய பண்புகளைவிடாத மேலோர்களை;* ***அன்வயித்து*** - *முறையாகச் சேர்த்து;* ***ஓரும் தீய அவுணர் அல்லாரை*** - *ஆராயும் தீயராகிய அரக்கர்கள் அல்லாத மற்ற நல்லவர்களை;* ***அந்நாள்*** - *அக்காலம் தொடங்கி;* ***தாயின் அச்சீயம் தன் வயிற்றகத்துவைத்துத் தந்தது*** - *தாயைப் போன்று அந்த நரசிங்க மூர்த்தி தனது வயிற்றுள்ளே வைத்துத் தந்தது.*

*தொடர்தல் - தொடர்ந்து செய்து வருதல். ஆதிதொன்மை - மிகப்பழங்காலம். துறந்திலோர் - விட்டு நீங்காதவர் அன் வயித்து - சேர்ந்து; பின்தொடர்ந்து பிரமன் முதலானோரைக் காத்தும், தீய அவுணரை மாய்த்தும் பரமன் உயிர்களைத் தொடர்ந்து வயிற்றில் வைத்துக் காத்த செயலைக் கூறி 'நல்லோர் கேடு அடைதலுண்டோ' என்ற*

*பொதுப் பொருளைச் சிறப்பித்துக் கூறியதால் "வேற்றுப் பொருள்வைப்பணி" ஆகும்.*

***6325. 'பேருடை அவுணர்தம்மைப் பிறை எயிற்று அடக்கும்; பேரா,***
***பாரிடைத் தேய்க்கும்; மீளப் பகிரண்டத்து அடிக்கும்; பற்றி,***
***மேருவில் புடைக்கும்; மாள, விரல்களின் பிசையும்; வேலை***
***நீரிடைக் குமிழி ஊட்டும்; நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்;***

**பேருடை அவுணர் தம்மை** - *அரக்கர் என்ற பெயர் உள்ளவரையெல்லாம்;* *பிறை எயிற்று அடக்கும் - (அந்த நரசிங்கம்) தனது பிறைச் சந்திரனைப் போன்ற பற்களால் சிதைத்து அடக்கும்;* **பேராப் பாரிடைத் தேய்க்கும்** - *பெயராத நிலத்திலே சிலரைத் தேய்த்து அழிக்கும்;* **மீளப் பகிரண்டத்து அடிக்கும்** - *மீண்டும் சிலரைப் பேரண்டத்திலே தூக்கி அடிக்கும்;* **பற்றி மேருவில் புடைக்கும்** - *சிலரைப் பிடித்து மேருமலையில் மோதும் படி அடிக்கும்;* **விரல்களில் மாளப் பிசையும்** - *சிலரை விரல்களாலேயே பிசைந்து கொல்லும்;* **வேலை நீரிடைக் குமிழி ஊட்டும்** - *சிலரைக் கடல் நீரிலே மூழ்கடித்துக் குமிழி எழச்செய்யும்;* **நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்** - *சிலரைத் தீயிலே சுருண்டு தீயும்படி நீட்டும்.*

*நீரிடைக் குமிழி ஊட்டும் - கடல் நீரிலே அழுத்திக் குமிழி எழச் செய்யும் சுரித்தல் - சுருண்டு தீய்தல்.*

***6326. 'வகிர்ப் படுத்து, உரக்கும்; பற்றி வாய்களைப் பிளக்கும்; வன் தோல்***
***துகிற் படுத்து உரிக்கும்; செந் தீக் கண்களைச் சூலும்; சுற்றிப்***
***பகிர்ப் படக் குடரைக் கொய்யும்; பசை அறப் பிசையும், பல் கால்;***
***உகிர்ப் புரைப் புக்கோர்தம்மை உகிர்களால் உறக்கும், ஊன்றி;***

**வகிர்ப்படுத்து உரக்கும்** - *சிலர் உடல்களைப் பிளந்து கிழிக்கும்;* **பற்றி வாய்களைப் பிளக்கும்** - *சிலரைப் பிடித்து வாய்களைப் பிளக்கும்;* **வன்தோல் துகிற்படுத்து உரிக்கும்** - *சிலரது உடல்களின் வன்மையான தோலை உரிக்கும்;* **செந்தீக் கண்களைச் சூலும்** - *தீப்பொறி பறக்கும் அரக்கர் தம் கண்களைத் தோண்டி எடுக்கும்;* **சுற்றிப் பகிர்ப்படக்குடரைக் கொய்யும்** - *சுற்றிலும்*

*துண்டுபடுமாறு சிலர் குடல்களைக் கொய்யும்;* ***பல்கால் பசை அறப்பிசையும்*** *- சிலர் உடல்களை ஈரப்பசை நீங்கப் பல தடவை பிசையும்;* ***உகிர்ப்புரைபுக்கோர்தம்மை*** *- தனது நகச் சந்துகளிலே புகுந்திருப் பவர்களை;* ***ஊன்றி உகிர்களால் உறுக்கும்*** *- நகத்தால் ஊன்றிச் சிதைக்கும்.*

*வகிர்ப்படுத்து - பிளந்து. உரக்கும் - கிழிக்கும். துகிற்படுத்தல். கசக்குதல். சூலுதல் - தோண்டி எடுத்தல். பகிர்பட - துண்டுபடும்படி உகிர்ப்பரை - நகச் சந்துகள். உறக்குதல் - கிள்ளிக் களைதல்.*

***6327. 'யானையும், தேரும், மாவும், யாவையும், உயிர்***
***இராமை,***
***ஊனொடும் தின்னும்; பின்னை, ஒலி திரைப் பரவை***
***ஏழும்***
***மீனொடும் குடிக்கும்; மேகத்து உருமொடும்***
***விழுங்கும், விண்ணில்;***
***தான் ஒடுங்காது என்று, அஞ்சி, தருமமும் சலித்தது***
***அம்மா !***

***யானையும் தேரும், மாவும், யாவையும்*** *- இரணியனது படையில் உள்ள யானை, தேர், குதிரை முதலிய எல்லாவற்றையும்;* ***உயிர் இராமை ஊனொடும் தின்னும்*** *- உயிர் இல்லாதபடி அவைகளின் உடலோடு தின்னும்;* ***பின்னை ஒலிதிரைப் பரவை ஏழும்*** *- பின்பு, ஓயாது ஒலிக்கும் அலைகளை உடைய ஏழுகடல்களையும்;* ***மீனொடும் குடிக்கும்*** *- அவைகளில் வாழும் மீன்களோடு குடிக்கும்;* ***விண்ணில் மேகத்து உருமொடும் விழுங்கும்*** *- ஆகாயத்து மேகங்களை எல்லாம் இடியோடு சேர்த்து விழுங்கும்;* ***தான் ஒடுங்காது*** *- இந்த நரசிங்கம் சினம் தணிந்து அடங்காது;* ***என்று அஞ்சி*** *- என்று பயங்கொண்டு;* ***தருமமும் சலித்தது*** *- அறக்கடவுளும் மனம் சலிப்படைந்தது;*

*அம்மா - வியப்படைச் சொல். தருமம் - தரும தேவதை (அறக்கடவுள்).*

***6328. 'ஆழி மால் வரையோடு எற்றும், சிலவரை; அண்ட***
***கோளச்***
***சூழ் இருஞ் சுவரில் தேய்க்கும், சிலவரை; துளக்கு***
***இல் குன்றம்***
***ஏழினோடு எற்றிக் கொல்லும், சிலவரை; எட்டுத்***
***திக்கும்***
***தாழ் இருட் பிழம்பின் தேய்க்கும், சிலவரைத் தடக்***
***கை தாக்கி.***

***சிலவரை ஆழிமால்வரையோடு எற்றும்*** - *சிலரை சக்கரவாள மலைமீது எறிந்து கொல்லும்;* ***சிலவரை அண்ட கோளச் சூழ் இரும் சுவரில் தேய்க்கும்*** - *சிலரை இவ்வண்ட கோளத்தைச் சூழ இருக்கும் பெரிய சுவரிலே தேய்த்துக் கொல்லும்;* ***சிலவரைத் துளக்கு இல் குன்றம் ஏழினொடு எற்றிக் கொல்லும்*** - *சிலபேரை, அசைதலில்லாத ஏழு மலைகளிலே மோதி எறிந்து கொல்லும்;* ***சிலவரைத் தடக்கை தாக்கி எட்டுத் திக்கும் தாழ் இருள் பிழம்பில் தேய்க்கும்*** - *சில பேரை பெரிய தனது கைகளாலே தாக்கி பெருந் திசைகளிலும் உள்ள தாழ்ந்த இருள் தொகுதியிலே தேய்த்துக் கொல்லும்.*

*ஆழிமால்வரை - சக்கரவாளகிரி. அண்ட கோளச் சூழ் இரும்சுவர் - அண்டப் பரப்பைச் சூழ்ந்துள்ள பெரிய புறச் சுவர். இவை புராண மரபில் வரும் கற்பனை இடங்கள். துளக்கில் குன்றம் - நிலைபெயராத ஏழு மலைகள். சிலவர் - சிலர் என்பதன் விரித்தல் விகாரம். கோளம். உருண்டை தாழ் இருள் - வினைத் தொகை. தடக்கை - பண்புத் தொகை.*

***6329. 'மலைகளின் புரண்டு வீழ, வள் உகிர் நுதியால், வாங்கி,***
***தலைகளைக் கிள்ளும்; அள்ளித் தழல் எழப் பிசையும்; தக்க***
***கொலைகளின் கொல்லும்; வாங்கி உயிர்களைக் குடிக்கும்; வான***
***நிலைகளில் பரக்க, வேலை நீர்களை நிரம்பத் தூர்க்கும்;***

***மலைகளின் புரண்டு வீழ*** - *(நரசிங்க மூர்த்தியால் வீசி எறியப்பட்ட அசுரரில் பலர்) மலைகளின் மீது புரண்டு விழ;* ***வள்உகிர் நுதியால் வாங்கி*** - *(அவர்களைத் தனது) கூர்மையான நகங்களின் முனையாலே இழுத்து எடுத்து;* ***தலைகளைக் கிள்ளும்*** - *நகத்தாலே அவர் தலைகளைக் கிள்ளும்;* ***அள்ளி, தழல் எழ பிசையும்*** - *தன் கைகளால் சிலரை அள்ளி எடுத்து நெருப்பு எழப்பிசையும்;* ***தக்க கொலைகளில் கொல்லும்*** - *அந்த அரக்கர்களின் கொலைத் தொழிலுக்குத் தக்கபடி அவர்களைக் கொல்லும்;* ***வாங்கி உயிர்களைக் குடிக்கும்*** - *கைகளில் எடுத்து, உடல்கள் விழ உயிர்களை மட்டும் குடிக்கும்;* ***வான நிலைகளில் பரக்க*** - *சிலரை எடுத்து வானப் பரப்பில் பரந்து விழவும்;* ***வேலை நீர்களை நிரம்பத் தூர்க்கும்*** - *சிலரை கடல் நீரில் விழவும் தூர்க்கும்.*

*வள் உகிர் - கூர்மையான நகம். நுதி - முனை. தக்க கொலை - அவ்வரக்கர் செய்த தீமைகளுக்குத் தகுந்த தண்டனை. தூர்த்தல் - மூடுதல் (அடைத்தல்)*

*தேய்க்கும், கொல்லும் எற்றும் பிளக்கும் என்றெல்லாம் நரசிங்க மூர்த்தியின் செயல்களை எதிர்காலத்தாலே கூறுவது செயல் நடந்து கொண்டிருக்கும் நிகழ் காலத்தை உணர்த்த என்க.*

*6330.* ***'முப் புறத்து உலகத்துள்ளும் ஒழிவு அற முற்றும் பற்றி,***
***தப்புதல் இன்றிக் கொன்று, தையலார் கருவும் தள்ளி,***
***இப் புறத்து அண்டத்து யாரும் அவுணர் இல்லாமை எற்றி,***
***அப் புறத்து அண்டம்தோறும் தடவின, சில கை அம்மா !***

***முப்புறத்து உலகத் துள்ளும்*** *- மூன்று உலகங்களிலுள்ளும்;* ***ஒழிவு அறமுற்றும் பற்றி*** *- மிஞ்சி இருக்காதபடி முழுவதையும் பிடித்து;* ***தப்புதல் இன்றிக் கொன்று*** *- அரக்கர்கள் எவரும் தப்பிவிடாதபடி எல்லோரையும் கொன்று;* ***தையலார் கருவும் தள்ளி*** *- அரக்க மாதர்களின் வயிற்றிலே தங்கிய கர்ப்பத்தையும் அழித்து;* ***இப்புறத்து அண்டத்து*** *- இப்புறம் உள்ள இந்த அண்டத்திலே;* ***யாரும் அவுணர் இல்லாமை எற்றி*** *- அரக்கர் எவரும் இல்லாதபடி அடித்துக் கொன்று;* ***அப்புறத்து அண்டம் தோறும்*** *- அப்பாலுள்ள அண்டங்கள் தோறும் சென்று;* ***தடவின சிலகை*** *- (நரசிம்ம மூர்த்தியின்) சிலகைகள் தடவலாயின.*

*முப்புறத்து உலகம் - சுவர்க்கம். மத்யம், பாதாளம் என்றும் மூன்று உலகங்கள். ஒழிவு அற - மிஞ்சுதல் இன்றி. தப்புதல் இன்றி - தப்பிவிடாதபடி. தள்ளி - சிதைத்து. அப்புறத்து அண்டம் - இவ்வண்டத்துக்கு அப்பாலுள்ளபுற அண்டம்.*

*6331.* ***'கனகனும், அவனில் வந்த, வானவர் களைகண் ஆன***
***அனகனும் ஒழிய, பல் வேறு அவுணர் ஆனவரை எல்லாம்***
***நினைவதன்முன்னம் கொன்று நின்றது - அந் நெடுங் கண் சீயம்.***
***வனை கழலவனும், மற்று அம் மடங்கலின் வரவு நோக்கி,***

***கனகனும்*** *- (இவ்வாறு நரமடங்கல் அரக்கர்களை எல்லாம் கொன்று நின்ற போது) அந்த இரணியனும்;* ***அவனில் வந்த*** *- அவனுக்கு மகனாக வந்து பிறந்த;* ***வானவர் களைகண் ஆன*** *- தேவர்களுக்கெல்லாம் பாதுகாவலனான;* ***அனகனும்*** *- குற்றமற்ற பிரகலாதனும்;* ***ஒழிய*** *- நீங்கலாக;* ***பல்வேறு அவுணர் ஆனவரை எல்லாம்*** *- மற்ற பல்வேறு வகைப்பட்ட அரக்கர்கள் எல்லோரையும்;* ***அந்நெடுங்கண் சீயம்*** *- அந்தப் பெரிய கண்களை உடைய நரசிங்கப் பெருமான்;* ***நினைவதன் முன்னம் கொன்று நின்றது*** *- நினைக்கும் நேரத்துக்கு முன்பே கொன்று நின்றது;* ***வனை கழலவனும்*** *- அழகிய வீரக் கழல்களை அணிந்தவனான அந்த இரணியனும்;* ***மற்று அம் மடங்கலின் வரவு நோக்கி*** *- அந்த நரமடங்கலான நரசிங்கப் பெருமானது*

*வருகையைப் பார்த்து...      களைகண் - பாதுகாப்பு (பற்றுக் கோடு). வனைகழல் - அழகிய கழல்கள் 'வரவு நோக்கி' என்பது அடுத்த பாடலில் வரும் "நின்றான்" என்பதைக் கொண்டு முடியும். இப்பாட்டு குளகம்.*

## *இரணியன் போருக்கு எழுதல்*

***6332. 'வயிர வாள் உறையின் வாங்கி, வானகம் மறைக்கும் வட்டச்***
***செயிர் அறு கிடுகும் பற்றி, வானவர் உள்ளம் தீய,***
***அயிர் படர் வேலை ஏழும் மலைகளும் அஞ்ச, ஆர்த்து, அங்கு***
***உயிருடை மேரு என்ன வாய் மடித்து, உருத்து நின்றான்.***

***வயிரவாள் உறையின் வாங்கி*** - *(நரசிம்மத்தின் வருகையைப் பார்த்த இரணியன்) உறுதியான வாளை உறையிலிருந்து வெளியே உருவி ஒரு கையில் பிடித்து;* ***வானகம் மறைக்கும்*** - *வானத்தையே மறைக்கும்படியான;* ***வட்டச் செயிர்அறு கிடுகும்பற்றி*** - *வட்ட வடிவமான குற்றமற்ற கேடயத்தை ஒரு கையில் பிடித்து;* ***வானவர் உள்ளம் தீய*** - *தேவர்கள் மனம் தீய்ந்து கெட;* ***அயிர்படர் வேலை ஏழும்*** - *நுண் மணல் படர்ந்த கரை உடைய ஏழுகடல்களும்;* ***மலைகளும் அஞ்ச ஆர்த்து*** - *மலைகளும் அஞ்சி நடுங்க ஆரவாரம் செய்து;* ***அங்கு உயிருடை மேரு என்ன*** - *அங்கே உயிர் கொண்டு உலவும் மேருமலை என்று கூறுமாறு;* ***வாய் மடித்து உருத்து நின்றான்*** - *வாயை மடித்து சினம் கொண்டு நின்றான்.*

*வயிரம் - திண்மை (உறுதி) கிடுகு - கேடயம். செயிர்அறு - குற்றமற்ற. அயிர் - நுண் மணல். படர் - படர்ந்த 'உயிருடை மேரு' - உயிரோடுள்ள மேரு.*

## *பிரகலாதன் ஆழிவேந்தை வணங்குவாய் எனல்*

***6333. 'நின்றவன்தன்னை நோக்கி, "நிலை இது கண்டு, நீயும்,***
***ஒன்றும் உன் உள்ளத்து யாதும் உணர்ந்திலை போலும் அன்றே;***
***வன் தொழில் ஆழி வேந்தை வணங்குதி ; வணங்கவே, உன்***
***புன் தொழில் பொறுக்கும்" என்றான் - உலகு எலாம் புகழ நின்றான்.***

***நின்றவன் தன்னை நோக்கி*** - சினந்து நின்ற இரணியனைப் பிரகலாதன் பார்த்து; ***நிலை இது கண்டு நீயும்*** - பெருமானின் வலிமை நிலையினைக் கண்டும் நீ; ***ஒன்றும் உன் உள்ளத்துயாதும் உணர்ந்திலை போலும் அன்றே*** - உனது உள்ளத்திலே இன்னும் எதுவும் உணரவில்லை போலும்; ***வன்தொழில் ஆழி வேந்தை*** - வன்மைமிக்க போர்த் தொழில் வல்ல சக்கரப்படையுடைய தலைவனை; ***வணங்குதி*** - (இப்போதாவது) வணங்குவாயாக; ***வணங்கவே உன் புன் தொழில் பொறுக்கும்*** - பணிந்து வணங்குவாயாயின் உனது அறியாது செய்த புன்மைகளைப் பொறுத்தருள்வான்; ***என்றான் உலகெலாம் புகழநின்றான்*** - உலகமெல்லாம் புகழும்படி நின்றவனான பிரகலாதன் இவ்வாறு கூறினான்.

*நிலை - எங்கும் நிறைந்த நிலை அரக்கர் பலரைக் கொன்று நின்ற நிலை எனலுமாம். ஆழி - சக்கரப்படை. முன்பு செய்த தவறுகளான புல்லிய செயல்கள். பரமனிடம் பரம பத்தி கொண்டிருந்தவன் என்பதால் பிரகலாதனை 'உலகெலாம் புகழ நின்றான்' என்றார். வேதங்களைக் கற்றுணர்ந்த நீ இறைவனது எல்லையில்லா வல்லமையை உணராதவனாய் இருக்கிறாயே என்பான் 'ஒன்றும் உன் உள்ளத்து யாதும் உணர்ந்திலை போலும்' என்றான்.*

## *பிரகலாதன் சொற்கேளாது இரணியன் நரசிங்கத்தை எதிர்த்தல்*

***6334. ' "கேள், இது; நீயும் காண, கிளர்ந்த கோள்***
***அரியின் கேழ் இல்***
***தோளொடு தாளும் நீக்கி, நின்னையும் துணித்து,***
***பின், என்***
***வாளினைத் தொழுவது அல்லால், வணங்குதல்***
***மகளிர் ஊடல்***
***நாளினும் உளதோ ?" என்னா, அண்டங்கள் நடுங்க***
***நக்கான்.***

***கேள் இது*** - (பரமனை வணங்கும்படி கூறிய பிரகலாதனைப் பார்த்து) நான் சொல்லும் இதனைக் கேள்; ***நீயும் காண*** - நீயும் (மற்றவர்களுடன்) நேரில் பார்த்துக் கொண்டிருக்க; கி***ளர்ந்த கோளரியின்*** - சினம் கொண்டெழுந்த, கொலைத் தொழில் வல்ல இந்தச் சிங்கத்தின்; ***கேழ்இல் தோளொடு தாளும் நீக்கி*** - ஒப்பற்ற தோள்களையும், கால்களையும் வெட்டிக் களைந்து; ***நின்னையும் துணித்து*** - உன்னையும் வாளால் துண்டித்து; ***பின்என் வாளினைத் தொழுவது அல்லால்*** - பிறகு எனது வாளைத் தொழுவதல்லாது; ***வணங்குதல்*** - பணிந்து வணங்குவதென்பது; ***மகளிர் ஊடல் நாளினும் உளதோ என்றான்*** - பெண்களுடன் ஊடல் புரியும் காலத்தும் உள்ளதோ என்று கூறிய இரணியன்; ***அண்டங்கள் நடுங்க நக்கான்*** - எல்லா அண்டங்களும் அஞ்சி நடுங்கும்படி சிரித்தான்.

*நீயும்காண - இந்தச் சிங்கத்தைப் புகழ்ந்து பேசுகின்ற நீயும் கண்ணாரக் காணும்படி என்பது பொருள். கோள் அரி - கொல்லவல்ல சிங்கம். கோள் என்பது கொள் என்பதனடியாகப் பிறந்த சொல்லாயின் இலக்குத்தப்பாத சிங்கம்*

*எனப்பொருள்படும். கேழ் - ஒப்பு. ஊடலைத் தீர்க்க, தலைவியைத் தலைவன் வணங்குதல் அகப் பொருளில் கூறப்படும். அத்தகைய ஊடல் காலத்திலும் வணங்காதவன் என்பது கருத்து. "மாதர் புலவியினும் வணங்காத மகுடம்" (3069) என இராவணனைக் கம்பர் கூறுவார்.*

*நரசிங்கம் இரணியன் மார்பைப் பிளத்தல்*

***6335. 'நகைசெயா, வாயும் கையும் வாளொடு நடந்த தாளும்***
***புகைசெயா, நெடுந் தீப் பொங்க உருத்து, எதிர் பொருந்தப் புக்கான்;***
***தொகை செயற்கு அரிய தோளால் தாள்களால் சுற்றிச் சூழ்ந்தான் -***
***மிகை செய்வார் வினைகட்கு எல்லாம் மேற்செயும் வினையம் வல்லான்.***

**நகை செயா** - *(இரணியன் சினம் மிகச்) சிரித்து;* **வாயும் கையும் வாளொடு நடந்த தாளும் புகை செயா** - *தனது வாயிலும், கைகளிலும் வாளுடன் நடந்த கால்களிலும் புகை தோன்ற;* **நெடும் தீப்பொங்க உருத்து** - *கண்களில் தீப்பொறி பரக்கச் சினந்து;* **எதிர் பொருந்தப் புக்கான்** - *நரசிங்கப் பிரானை எதிர்த்துப் போரிடச் சென்றான்;* **மிகை செய்வார் வினைகட்கெல்லாம்** - *தீங்கு செய்பவரின் செயல்களுக்கெல்லாம்;* **மேற் செயும் வினையம் வல்லான்** - *மேலாகச் செயல்படும் வினையத்தில் வல்லவரான பெருமான்;* **தொகை செயற்கு அரிய தோளால்** - *எண்ணி அளவிட இயலாத தனது அரிய தோள்களாலும்;* **தாள்களால் சுற்றிச் சூழ்ந்தான்** - *தாள்களாலும் அந்த இரணியனைச் சுற்றி வளைத்துக் கொண்டான்.*

*நகை செயா, புகை செயா என்பன செய்து என்னும் பொருள் கொண்ட செயா' என்ற வாய்பாட்டு வினை எச்சங்களாம். உருத்து - வெகுண்டு. மிகை - மிக்கவை. மிகுதியான் மிக்கவை செய்தாரை என்ற திருக்குறள் நினைக்கத்தக்கது. வினை - செயல். வினையம் - சூழ்ச்சித் திறம். தொகை செயல் - எண்ணல், சுற்றிச் சூழ்தல் - சுற்றி வளைத்துக் கொள்ளுதல். தவப் பெருக்கும் தான் இறவாவண்ணம் நிலைத்தற்கு வேண்டிய வகையில் ஆழ்ந்த அறிவுத் திறத்தால் திட்டமிட்டுப் பெற்ற வரங்களும், உடையவன் இரணியன் அத்தகையவனின் திட்டத்தையும் விழுங்கி மேம்படும் சூழ்ச்சித் திறம் உண்டு என்பதைப் புலப்படுத்தவே பெருமானை 'மிகை செய்வார் வினைகட்கெல்லாம் மேற்செயும் வினையம் வல்லான்' என்று கம்பர் குறிப்பிடுகிறார்.*

***6336. 'இருவரும் பொருந்தப் பற்றி, எவ் உலகுக்கும் மேல் ஆய்,***

***ஒருவரும் காணா வண்ணம் உயர்ந்ததற்கு உவமை கூறின்,***
***வெருவரும் தோற்றத்து, அஞ்சா, வெஞ் சின, அவுணன் மேரு***
***அரு வரை ஒத்தான்; அண்ணல் அல்லவை எல்லாம் ஒத்தான்.***

***இருவரும் பொருந்தப் பற்றி*** - *(நரசிங்கப் பிரானும் இரணியனும் ஆகிய) இருவரும் ஒருவருடன் மற்றவர் பொருந்தும் படி கட்டிப் பிடித்துக் கொண்டு;* ***எவ்வுலகுக்கும் மேல் ஆய்*** - *எல்லா உலகங்களுக்கும் மேலாக;* ***ஒருவரும் காணாவண்ணம்*** - *எவரும் காண இயலாதபடி;* ***உயர்ந்ததற்கு உவமை கூறின்*** - *உயர்ந்து சென்றதற்கு உவமை கூறுவதானால்;* ***வெருவரும் தோற்றத்து*** - *பிறர் அஞ்சும்படியான தோற்றமுடைய;* ***அஞ்சா வெஞ்சின அவுணன்*** - *எவருக்கும் அஞ்சாத, கொடியசினம் கொண்ட இரணியன்;* ***மேரு அருவரை ஒத்தான்*** - *அரிய மேருமலையை ஒத்துக் காணப்பட்டான்;* ***அண்ணல் அல்லவை எல்லாம் ஒத்தான்*** - *நரசிங்கப் பெருமான் மேரு அல்லாத வேறு எல்லா மலைகளையும் கடல்களையும் மற்றவைகளையும் போல விளங்கினான்.*

*பொருந்தப்பற்றி - ஒருவரோடொருவர் இறுகப் பிடித்து அல்லவை எல்லாம் - மேருமலை அல்லாத பிறமலைகள், கடல்கள், அண்டங்கள் முதலிய பிற வெல்லாம்.*

***6337. 'ஆர்ப்பு ஒலி முழக்கின், வெவ் வாய் வள் உகிர்ப் பாரம் ஆன்ற***
***ஏற்று அருங் கரத்தின், பல்வேறு எறி திரைப் பரப்பின் உற்ற***
***பாற்கடல் பரந்து பொங்கிப் பங்கயத்து ஒருவன் நாட்டின்***
***மேல் சென்றது ஒத்தான் மாயன்; கனகனும் மேரு ஒத்தான்.***

***ஆர்ப்பொலி முழக்கின்*** - *ஆர்ப்பரிக்கும் ஒலியின் முழக்கத்தாலும்;* ***வெவ்வாய்வள் உகிர்ப்பாரம் ஆன்ற*** - *வெம்மையான விளிம்பை உடையவெண்மையான நகங்களைப் பெரும் சுமையாக;* ***ஏற்று அரும் கரத்தின்*** - *ஏற்ற அரிய எண்ணற்ற கைகளை உடையதாலும்;* ***பல்வேறு எறிதிரைப் பரப்பின் உற்ற*** - *பலவேறு விதமானதாக மோதும் அலைப் பரப்பினை உடைய;* ***பாற்கடல் பரந்து பொங்கி*** - *பாற்கடலானது பரவிப் பொங்கி எழுந்து;* ***பங்கயத்து ஒருவன் நாட்டின்*** - *தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் வாழும் சத்தியலோகத்தின்;* ***மேற்சென்றது ஒத்தான் மாயன்*** - *மேலே சென்றதைப் போல மாயவன் விளங்கினான்;* ***கனகனும் மேரு ஒத்தான்*** - *அந்த இரணியனோ பாற்கடலால் சூழப்பட்ட மேருவை ஒத்துக் காணப்பட்டான்.*

*நரசிங்கத்தின் பெருமுழக்கத்துக்குக் கடலின் முழக்கமும், அப்பெருமானது எண்ணற்ற கைகளின் தொகுதிக்குக் கடலின் அலைப் பரப்பும் ஒப்பாயின.*

*"மாயன் முழக்கின், கரத்தின் என்று காரணம் கூறி, முழக்கமும், அலைகளும் உடைய பாற்கடல் பங்கயத்தொருவன் நாட்டின் மேற் சென்ற தொத்தான்" என்று கூறியது "ஏது உவமை" யாகும். இந்தப் பாடலின் முதலடி "ஆர்ப்பு" எனத் தொடங்கி, அடுத்த அடிகளில் ஏற்று, மேற்சென்று, பாற்கடல் என்ற எதுகையுடையதாயிருப்பதால் ரகரம் ஆசாக வந்து இன எதுகையாயிற்று.*

***6338. 'வாளொடு, தோளும், கையும், மகுடமும், மலரோன் வைத்த***
***நீள் இருங் கனக முட்டை நெடுஞ் சுவர் தேய்ப்ப, நேமி***
***கோளொடும் திரிவது என்னக் குல மணிக் கொடும் பூண் மின்ன,***
***தாள் இணை இரண்டும் பற்றிச் சுழற்றினன், தடக் கை ஒன்றால்.***

***வாளொடு தோளும் கையும் மகுடமும்** - இரணியன் கையில் ஏந்திய வாளும், தோளும், கைகளும், மகுடமும்; **மலரோன் வைத்த** - பிரமனால் படைக்கப்பட்ட; **நீள் இரும் ககன முட்டை** - நீண்ட பெரிய வானத்தை உடைய அண்டத்தின்; **நெடும் சுவர் தேய்ப்ப** - நீண்ட பெரிய சுவரிலே தேய்க்கவும்; **நேமி கோளொடு திரிவதென்ன** - வட்ட வடிவமான சூரியன் அதன் கோள்களுடன் திரிவது போல; **குலமணிக் கொடும் பூண்மின்ன** - பல மணிகள் பதித்து செய்யப்பட்ட அணிகலன்கள் மின்னவும்; **தடக்கை ஒன்றால்** - நரசிங்கப் பெருமான் தனது நீண்ட ஒரு கையினால்; **தாளிணை இரண்டும் பற்றி** - இரணியனது இரண்டு கால்களையும் பிடித்து; **சுழற்றினன்** - சுழற்றலாயினான்.*

*ககனமுட்டை - அண்ட மாகிய முட்டை. நேமி - வட்டம்; இங்கு வட்ட வடிவமான சூரியன். குலமணி - சாதிமணி.*

***6339. 'கழற்றிய காலத்து, இற்ற தூங்கு குண்டலங்கள் நீங்கி,***
***கிழக்கொடு மேற்கும் ஓடி விழுந்தன கிடந்த, இன்றும்***
***அழல் தரு கதிரோன் தோன்றும் உதயத்தோடு அத்தம் ஆன;***
***நிழல் தரும், காலை மாலை, நெடு மணிச் சுடரின் நீத்தம்.***

***சுழற்றிய காலத்து*** - நரசிங்கப் பெருமான் இரணியனைச்) சுழற்றிய அந்தக் காலத்திலே; ***இற்ற தூங்கு குண்டலங்கள் நீங்கி*** - அவ்விரணியன் காதுகளில் தொங்கிக் கொண்டிருந்த குண்டலங்கள் காது களைவிட்டு நீங்கி, இற்று; ***கிழக்கொடு மேற்கும் ஓடி விழுந்தன கிடந்த*** - (சுழற்றிய வேகத்தில்) கிழக்கிலும் மேற்கிலும் சென்று வீழ்ந்துகிடந்தன; ***இன்றும் அழல் தருகதிரோன்*** - இன்றும் வெப்பத்தை உமிழும் சூரியன்; ***தோன்றும் உதயத்தொடு*** - உதிக்கின்ற கீழ்த்திசையுடனே; ***அத்தமான*** - மறைகின்ற மேற்குத் திசையிலும்; ***நெடுமணிச் சுடரின் நீத்தம்*** - அக் குண்டலங்களில் பதித்த மணிகளின் ஒளி வெள்ளமே; ***காலை மாலை நிழல்தரும்*** - காலையும் மாலையும் (வானத்திலே) ஒளியைத் தருவனவாம்.

*தூங்கு குண்டலங்கள் - காதுகளில் தொங்கிய குண்டலங்கள் காலையும் மாலையும் கிழக்கிலும் மேற்கிலும் காணப்படும் செந்நிறமான ஒளிக்குக் காரணம் இரணியன் குண்டலத்துச் செம்மணிச் சுடரே என்றார் இது தற்குறிப்பேற்றவணி. நெடுமணி - சிறந்த மாணிக்கம்.*

***6340. ' "போன்றன இனைய தன்மை; பொருவியது இனையது" என்று***
***தான் தனி ஒருவன், தன்னை உரைசெயும் தரத்தினானோ ?***
***வான் தரு வள்ளல் வெள்ளை வள் உகிர் வயிர மார்பின்***
***ஊன்றலும், உதிர வெள்ளம் பரந்துளது, உலகம் எங்கும்.***

***இனைய தன்மை போன்றன*** - இப்பெருமானுடைய இவ்வியல்புகள் இன்னாருடைய தன்மையை ஒத்தன; ***இனையது பொருவியது*** - இன்னது ஒரு பொருள் இவனை ஒத்தது; ***என்று*** - என வெல்லாம்; ***தான் தனி ஒருவன் தன்னை*** - ஒப்பற்ற தனிப் பெரும் தலைவனான அப்பெருமானை; ***உரை செயும் தரத்தினானோ*** - எவரும் எடுத்துக் கூறும் தரம் உடையவனோ பரமன்; ***வான் தரு வள்ளல்*** - தன்னடியவர்க்கு வைகுந்த வாழ்வைத் தந்தருளும் வள்ளலான பெருமானது; ***வெள்ளை வள் உகிர்*** - வெண்மை நிறமான கூரிய நகங்கள்; ***வயிர மார்பின் ஊன்றலும்*** - இரணியனது உறுதி வாய்ந்த மார்பிலே ஊன்றியவுடனே; ***உதிர வெள்ளம்*** - அவன் உடலிலிருந்து பெருகிய ரத்த வெள்ளம்; ***உலகம் எங்கும் பரந்துளது*** - எல்லா உலகங்களிலும் பரவுவதாயிற்று. தாமோதரனைத் தனிமுதல்வனை ஞானமுண்டவனை ஆமோதரம் அறிய ஒருவர்க்கு?" என்பது நம்மாழ்வார் (திருவாய் மொழி 2:7:12) அருளிச் செயல். நரசிங்கமாக வந்தவன் தனக்குவமையில்லாத தனித் தலைவனான திருமால் என்பதனை "தான் தனி ஒருவன்" என்றும், இன்னதன்மையன் என எவரும் கூற இயலாதவன் இறைவன் என்பதனை "போன்றன இனையதன்மை பொருவியது இனையது என்று உரை செயும் தரத்தினானோ" என்றும் கூறினார்.

*'சரணமாகும் தன் தாள் அடைந்தார்க் கெலாம், மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்' என்ற திருவாய் மொழிக் கேற்க (9: 10: 5) "வான்தருவள்ளல்" என்றார்.*

***6341. 'ஆயவன்தன்னை, மாயன், அந்தியின், அவன் பொன் கோயில்***
***வாயிலில், மணிக் கவான்மேல், வயிர வாள் உகிரின் வாயின்,***
***மீ எழு குருதி பொங்க, வெயில் விரி வயிர மார்பு***
***தீ எழப் பிளந்து நீக்கி, தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்.***

***ஆயவன் தன்னை*** *- அந்த இரணியனை; அந்தியின் - மாலைப் பொழுதிலே;* ***அவன் பொன் கோயில் வாயிலில்*** *- அந்த இரணியனுடைய அழகிய அரண்மனையின் வாயிலிலே;* ***மணிக்கவான் மேல்*** *- தனது அழகிய மடியின் மீது (கிடத்தி);* ***வயிர வாள் உகிரின் வாயின்*** *- உறுதியுடைய ஒளி பொருந்திய தனது கை நகத்தின் முனையாலே;* ***மீ எழு குருதி பொங்க*** *- இரணியன் உடலிலிருந்து இரத்தம் மேலெழுந்து பொங்கிவர;* ***வெயில் விரி வயிரமார்பு*** *- ஒளியைப் பரப்பும் அவ்விரணியனது வைரம் பாய்ந்த மார்பினை;* ***தீஎழப் பிளந்து நீக்கி*** *- நெருப்பெழும்படி இருபிளவாகப் பிளந்து இரணியனைக் கொன்று;* ***தேவர்கள் இடுக்கண் மாயன் தீர்த்தான்*** *- தேவர்கள் அதுவரை பட்ட துன்பத்தை மாயைவல்ல திருமால் போக்கினான்.*

*மாயன் - ஆச்சரியப்படத்தக்க செயல்களை உடைய திருமால். இரணியன் பெற்ற வரங்களிடையே முரண்பாடின்றி வதைபுரிய வழி கண்ட மாயம் செய்தவனாதலின் 'மாயன்' என்றார். இரவிலும் பகலிலும் சாகக் கூடாது. வீட்டுக்குள்ளும் வெளியேயும் சாகக் கூடாது. விண்ணிலும் மண்ணிலும் சாகக்கூடாது பறவை, விலங்கு, மனிதர், தேவர், அரக்கர்களால் சாகக்கூடாது, எந்தப்டைக் கலத்தாலும் சாகக் கூடாது என்று பிரமனிடம் வரம்கேட்டுப் பெற்றவன் இரணியன் எனவே, மாலைப் போதில், வாயிற் படியில் கிடத்தி நரசிங்கப் பெருமான் நகத்தால் உடலைப் பிளந்து இரணியனைக் கொன்று, தேவர்களின் துன்பத்தைத் தீர்த்தார் என்பது கருத்து. இரணியன் பெற்ற வரங்களின் திறனை 6203-6206 ஆம் பாடல்களில் காண்க.*

*தேவர்கள் நரசிங்கத்தைக் கண்டு அஞ்சி நிற்றல்*

***6342. 'முக்கணான், எண்கணானும், முளரி ஆயிரம் கணானும்,***
***திக்கண் ஆம் தேவரோடு முனிவரும், பிறரும், தேடிப்***
***புக்க நாடு அறிகுறாமல் திரிகின்றார் புகுந்து மொய்த்தார்,***

***"எக் கணால் காண்டும், எந்தை உருவம்" என்று,***
***இரங்கி நின்றார்.***

***முக்கணான் எண்கணானும்*** - *மூன்று கண்களை உடைய சிவபிரானும் எட்டுக் கண்களை உடைய பிரமதேவனும்;* ***முளரி ஆயிரம் கணானும்*** - *தாமரை போன்ற ஆயிரம் கண்களை உடையவனான தேவேந்திரனும்;* ***திக்கண் ஆம் தேவரோடு முனிவரும் பிறரும்*** - *திசைகள் தோறும் சென்று திரிகின்ற தேவர்களும் முனிவரும் மற்றும் உள்ளவர்களும்;* ***தேடிப் புக்க நாடு அறிகுறாமல் திரிகின்றார்*** - *இரணியனுக்குப் பயந்து, தேடி வந்தாலும் அவர்கள் இருக்கும் நாடு எவருக்கும் தெரியாதபடி திரிந்தவர்கள்;* ***புகுந்து மொய்த்தார்*** - *(நரசிங்கத்தால் இரணியன் மாய்ந்தது தெரிந்து) வந்து திரண்டார்கள்;* ***எந்தை உருவம்*** - *எம் பெருமான் கொண்ட நரசிங்க வடிவத்தை;* ***எக்கணால் காண்டும்*** - *எந்தக் கண்களால் காண இயலும்?;* ***என்று இரங்கி நின்றார்*** - *என்று கூறி இரங்கி நின்றார்கள்.*

*திக்கு + கண் = திக்கண் - பலதிசைகள். சென்ற நாடு எதுவென, எவரும் அறியாதபடி திரிந்தனர் ஆதலின் "புக்கநாடு அறிகுறாமல் திரிகின்றார்" என்றார்.*

***6343. 'நோக்கினார் நோக்கினார் முன், நோக்குறு முகமும்***
***கையும்***
***ஆக்கையும் தாளும் ஆகி, எங்கணும் தானே ஆகி, வாக்கினால் மனத்தினால் மற்று அறிவினால்***
***அளக்க வாரா,***
***மேக்கு உயர் சீயம்தன்னைக் கண்டனர்,***
***வெருவுகின்றார்.***

***நோக்கினார் நோக்கினார் முன்*** - *நெருங்கிவந்து பார்த்துக் கொண்டு நின்ற தேவர், முனிவர் அனைவருக்கும் அவரவர்க்கு முன்னே;* ***நோக்குறு முகமும் கையும்*** - *பார்க்கத்தக்க முகமும், கைகளும்;* ***ஆக்கையும் தாளும் ஆகி*** - *திருமேனியும், கால்களுமாக ஆகி (தனித்தனியே காட்சிதந்த தோடு);* ***எங்கணும் தானே ஆகி*** - *எங்கும் நிறைந்திருப்பவன்தானே ஆகி;* ***வாக்கினால் மனத்தினால்*** - *வாக்கினால் கூற முடியாதவனாயும் மனத்தால் நினைக்க முடியாதவனாயும்;* ***மற்று அறிவினால் அளக்கவாரா*** - *மற்றும் அறிவாலும் உணர்ந்து அளந்தறிய இயலாதவனாகவும் உள்ள அப்பரமனாகிய;* ***மேக்குயர் சீயம் தன்னை*** - *மேலும் மேலும் உயர்ந்து விளங்கும் நரசிங்க மூர்த்தியின் பேருருவை;* ***கண்டனர் வெருவுகின்றார்*** - *கண்டு அஞ்சினார்கள்.*

*மனம், மொழிகளுக்கும், அறிவுக்கும் அளந்துணர இயலாத அப்பெருமானை எவ்வாறு காணமுடியும் என்று ஆவல் நிறைவேறியது. எனினும் சீற்றத் தோற்றமுடைய சிங்கப்பிரானைக் கண்டு அஞ்சினர். பரமனது நிலையை "வாக்கினால் மனத்தினால் மற்று அறிவினால் அளக்க வாரா மேக் குயர் சீயம்" என்றார். மேக்குயர் -*

*மேலோங்கி உயர்ந்து வளர்ந்துள்ள. பரமனின் எங்கும் நிறைந்திருக்கும் தன்மை 'எங்கணும் தானேயாகி' எனப்பட்டது.*

***6344. 'பல்லொடு பல்லுக்கு எல்லை ஆயிரக் காதப் பத்தி,***
***சொல்லிய வதனம் கோடி கோடி மேல் விளங்கித் தோன்ற,***
***எல்லை இல் உருவிற்று ஆகி இருந்ததை எதிர் நோக்கி,***
***அல்லி அம் கமலத்து அண்ணல் அவன் புகழ் விரிப்பதானான்:***

***பல்லொடு பல்லுக் கெல்லை*** *- நரசிங்கப் பெருமானுடைய ஒரு பல்லுக்கும் மற்றொரு பல்லுக்கும் எல்லை;* ***ஆயிரம் காதப்பத்தி*** *- ஆயிரம் காத தூரமாகும்;* ***சொல்லிய வதனம்*** *- கூறப்பட்ட அவரது திருமுகம்;* ***கோடி கோடி மேல்*** *- கோடியை கோடியால் பெருக்கியதற்கு மேலே அளவுடையதாக;* ***விளங்கித் தோன்ற*** *- விளங்கும்படி காட்சிதர;* ***எல்லை இல் உருவிற்று ஆகி*** *- எல்லை இல்லாத பேருருவம் உடையதாகி;* ***இருந்ததை எதிர நோக்கி*** *- இருந்ததனை எதிர் கொண்டு பார்த்து;* ***அல்லி அம் கமலத்து அண்ணல்*** *- அழகிய இதழ்களை உடைய தாமரையில் வீற்றிருப்பவனாய பிரமன்;* ***அவன் புகழ் விரிப்பதானான்*** *- அப்பெருமானது புகழை விரித்துப் புகழ்ந்து கூறலானான்.*

*பத்தி - தூரம். கோடி கோடி மேல் - கோடியைக் கோடியால் பெருக்கிய தொகை. நரசிங்கப் பெருமானின் ஒரு பல்லுக்கும் மற்றொரு பல்லுக்கும் இடையே உள்ள தூரம் ஆயிரம் காதம் என்றால், அந்தப் பற்களை உடைய முகம் - கை - கால் - திருமேனி எத்துணைப் பெரியன என்பதை ஊகித்து உணரலாம். எதிர் நோக்குதல் - நேருக்கு நேர் பார்த்தல். கமலத்து அண்ணல் - பிரமன். அல்லி - அக இதழ். விரிப்பதானான் - விரித்துப் பேசிப் போற்றுவான் ஆயினான்.*

*நரசிங்க மூர்த்தியைப் பிரமன் துதித்தல்*

***6345. ' "தன்னைப் படைத்ததுவும் தானே எனும் தன்மை***
***பின்னைப் படைத்ததுவே காட்டும்; பெரும் பெருமை***
***உன்னைப் படைத்தாய் நீ என்றால், உயிர் படைப்பான்***
***என்னைப் படைத்தாய் நீ எனும் இதுவும் ஏத்து ஆமோ ?***

***தன்னைப் படைத்ததுவும் தானே*** *- இறைவன் தன்னைத் தானே படைத்துக் கொண்டான்;* ***எனும் தன்மை*** *- என்று சமய நூல்கள் கூறும் உண்மையை;*

***பின்னைப்படைத்ததுவே காட்டும்*** - பின்பு நீ இந்த நரசிங்கமாக உன்னைப் படைத்துக் கொண்ட இதுவே காட்டுவதாகும்; ***பெரும் பெருமை*** - இந்தப் பெரிய பிரபஞ்சத்தை; ***உன்னைப் படைத்தாய் நீ என்றால்*** - உன்னிடத்திலிருந்து தோன்றச் செய்தாய் நீ என்னும் போது; ***உயிர் படைப்பான்*** - இந்த உலகிலுள்ள உயிர்களைப் படைப்பதற்காக; ***என்னைப் படைத்தாய் நீ*** - நீ (பிரமதேவனாகிய) என்னைப் படைத்தாய்; ***எனும் இதுவும் ஏத்து ஆமோ*** - என்ற இது உனது பேராற்றலை உணர்த்தும் புகழுரை ஆகுமோ?

*பெரும் பெருமை - பெரிய இந்தப் பிரபஞ்சம். படைப்பான் - படைப்பதற்காக. உன்னை - உன் - கண் (உன்னிடம்) வேற்றுமை மயக்கம். ஏத்து - புகழுரை*

***6346. ' "பல் ஆயிர கோடி அண்டம், பனிக் கடலுள்***
***நில்லாத மொக்குள் என, தோன்றுமால், நின்னுழையே;***
***எல்லா உருவமுமாய் நின்றக்கால், இவ் உருவம்***
***வல்லே படைத்தால், வரம்பு இன்மை வாராதோ?***

***பல்லாயிர கோடி அண்டம்*** - பல ஆயிரம் கோடி என்று கூறும் அண்டங்கள் அனைத்தும்; ***பனிக் கடலுள் நில்லாத மொக்குள் என*** - குளிர்ந்த கடலிலே தோன்றிய நிலையற்ற நீர்க்குமிழிகளைப் போல; ***நின்னுழையே தோன்றுமால்*** - உன்னிடத்திலிருந்தே தோன்றும்; ***எல்லா உருவமுமாய் நின்றக் கால்*** - இவ்வண்டத்திலுள்ள எல்லா வடிவாகவும் நீயே இருப்பாயானால்; ***இவ்வுருவம் வல்லே படைத்தால்*** - இந்த நரசிங்க வடிவத்தை (புதிய தொன்றாக) விரைந்து படைத்தாயென்றால்; ***வரம்பின்மை வாராதோ?*** - உனது படைப்புத் தொழிலில் வரம்பின்மை என்ற குற்றம் வராதோ.

*பல்லாயிர கோடி அண்டம் - பல ஆயிரம் கோடி அண்டங்கள் "நூற்றொரு கோடியின் மேற்படவிரிவன" என்பது திருவாசகம். நில்லாமொக்குள் - நிலைத்திராத நீர்க்குமிழி. நீலநிறக் கடலில் தோன்றும் நீர்க் குமிழிகள் போல, பல்லாயிரம் கோடி அண்டங்கள் நீல வண்ணனான உன்னிடமிருந்து தோன்றும் என்பார் "நின்னுழையே தோன்றுமால்" என்றார். நீயே உலகத்தில் காணும் எல்லாப் பொருளுமாக இருக்கிறாய். அப்படி இருக்கும் போது புதிய தொரு வடிவினை (நரசிங்க வடிவம்) படைத்துக் கொள்வாயானால் உனது படைப்புத் தொழிலில் வரம்பின்மை என்னும் குற்றம் வாராதோ என்றான். நியதி மாறாமல் இயங்குவன இறைவன் படைப்புகள். ஊழ், விதி, முறை என்பன தெய்வத்தைக் குறிக்கும் ஒரு பொருட் சொற்கள். இதுகாறும் படைப்பிலே இல்லா ஓர் உருவத்தை (நரசிம்மத்தை) படைத்தது நியதியிலிருந்து மாறுகிறது. எனவே, இது வரம்பின்மை ஆகாதோ? என்பது கருத்து. அடியவர்களைக் காக்க, வேண்டும் போது விரும்பிய வடிவம் கொள்ளவல்ல இறைவனுக்கு 'வரம்பின்மை' என்னும் குற்றம் வாராது என்க". 'உயிரளிப்பான், எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்ற திருவிருத்தம் (நாலாயிரப் 3580) ஒப்பு நோக்கத்தக்கதாகும்.*

***6347. ' "பேரை ஒரு பொருட்கே பல் வகையால் பேர்த்து எண்ணும்***
***தாரை நிலையை; தமியை; பிறர் இல்லை;***
***யாரைப் படைக்கின்றது ? யாரை அளிக்கின்றது ?***
***ஆரைத் துடைக்கின்றது ? - ஐயா ! - அறியேமால்,***

**ஒரு பொருட்கே** - *(பரம் பொருளான) ஒப்பற்ற ஒரு பொருளுக்கே;* **பேரை பல்வகையால்** - *அரன், அரி, அயன் என்னும் பலவகையான பெயர்களை;* **பேர்த்து எண்ணும்** - *மாற்றி வழங்குகின்ற;* **தாமரை நிலையை** - *ஒழுங்கான நிலையை உடையவனாவாய்; தமியை;* **பிறர் இல்லை** - *நீ ஒப்பற்ற தனியனாய் உள்ளாய்;* **எல்லாம் நீயாதலின்** *உன்னையன்றிப் பிறர் இல்லை;* **யாரைப் படைக்கின்றது யாரை அளிக்கின்றது யாரைத் துடைக்கின்றது ஐயா அறியேமால்** - *உனக்கு வேறாக நீ யாரைப் படைப்பது ? யாரைக் காப்பது ? யாரை அழிப்பது ! இறைவனே உனது மேலான தன்மை ஒன்றும் நாங்கள் அறிய மாட்டோம்.*

*தாரை நிலை - ஒழுங்கான நிலை. பரம்பொருளாகிய நீயே படைத்தல் முதலிய முத்தொழில் காரணமாக அயன் முதலான பெயர்களைக் கொண்டு விளங்கினாலும் அவை மூன்றும் உன்னுடைய தோற்றமே என்பதனை, 'பேரை ஒரு பொருட்கே பல்வகையால் பேர்த்தெண்ணும் தாரை நிலை' என்றார். "ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்; ஆதிக் கமலத் தலர் மிசையானும், சோதிக்கில் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்று" என்ற திருமந்திரம் (104) ஒப்பு நோக்கத் தக்கது. உயர்வற உயர்நலமுடைய உனது அலகிலா விளையாடல்களைத் தெரிந்துணரும் தகுதியுடையே மல்லேம் என்பார் "அறியேம்" என்றார். "ஆக்குமாறு அயனாம் முதல் ஆக்கிய உலகம் காக்குமாறு செங்கண் இறை கருணையங்கடலாம் வீக்குமாறு அரனாம் அவை வீந்த நாள் மீளப் பூக்கும் மாமுதல் எவன்? அவன் பொன்னடி போற்றி" என்ற வில்லி பாரதக் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒப்பிட்டுணரத் தக்கது.*

***6348. ' "நின்னுளே என்னை நிருமித்தாய்; நின் அருளால்,***
***என்னுளே, எப் பொருளும் யாவரையும் யான் ஈன்றேன்;***
***பின் இலேன்; முன் இலேன்; எந்தை பெருமானே !***
***பொன்னுளே தோன்றியது ஓர் பொற்கலனே போல்கின்றேன்.'***

**நின்னுளே** - *உனக்குள் இருந்து;* **என்னை நிருமித்தாய்** - *நீ என்னைத் தோன்றச் செய்தாய்;* **நின் அருளால்** - *உனது திருவருள் துணையால்;* **என்னுளே எப்பொருளும்** - *எனக்குள் இருந்து (அசித்) உயிரற்ற பொருள்களையும்;* **யாவரையும் யான்என்றேன்** - *உயிருள்ள (சித்) பொருள்களையும் யான் படைத்தேன்;* **பின் இலேன் முன் இலேன்** - *எனக்கென்று தனியான காரண, காரியம் எதுவுமில்லை;* **எந்தை பெருமானே** -

*எமக்கெல்லாம் தந்தையான எம்பெருமானே;* **பொன்னுளே தோன்றியதோர் பொற்கலனே போல்கின்றேன்** *- உன்னிலிருந்து தோன்றி நான்; பொன்னிலிருந்து தோன்றிய பொற்கலன் போன்றவனாவேன்.*

*இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையே அமைந்த தொடர்பு பொன்னுக்கும், அதனால் செய்யப்பட்டு அப்பொன்னினும் வேறாகாத அணி கலனுக்கும் இடையுள்ள சம்பந்தம் போன்றது. இதனை "அபேத சம்பந்தம்" எனச் சமய நூல்கள் கூறும் இப்பாடலின் கடைசி இரண்டடிகள் இந்த உண்மையைக் கூறுவதாம். பின் - காரியம் முன் - காரணம்.*

*உன்னையல்லாது எனக்கு ஆதியும் வேறில்லை. நான் சென்றடையும் அந்தமும் வேறில்லை என்பார் 'முன் இலேன் பின்இலேன்' என்றார் என்று கூறினும் அமையும்,*

*சிங்கப்பிரான் சீற்றம் தணிந்து தேவர்களுக்கு அபயம் அளித்தல்*

***6349. 'என்று ஆங்கு இயம்பி, இமையாத எண்கணனும்,***
***வன் தாள் மழுவோனும், யாரும், வணங்கினரால்***
***நின்றார், இரு மருங்கும்; நேமிப் பெருமானும்,***
***ஒன்றாத சீற்றத்தை உள்ளே ஒடுக்கினான்.***

***என்று ஆங்கு இயம்பி*** *- என்றெல்லாம் பலவாறு கூறித் துதித்து;* ***இமையாத எண்கணனும்*** *- இமைக்காத எட்டுக்கண்களை உடையவனான பிரமதேவனும்;* ***வன்தாள் மழுவோனும்*** *- வலிய போர்த் தொழில் வல்ல மழுவை ஆயுதமாக உடைய சிவபிரானும்;* ***யாரும் வணங்கினர்*** *- மற்றுமுள்ள தேவர்கள் எல்லோரும் நரசிங்க மூர்த்தியை வணங்கினார்கள்;* ***இரு மருங்கும் நின்றார்*** *- அப்பெருமானுக்கு இருபுறங்களிலும் வந்து குழுமி நின்றார்கள்;* ***நேமிப் பெருமானும்*** *- சக்கராயுதத்தை உடைய எம்பெருமானும்;* ***ஒன்றாத சீற்றத்தை*** *- தன் இயல்புக்கு ஒவ்வாத பெருஞ்சினத்தை;* ***உள்ளே ஒடுக்கினான்*** *- தனக்குள்ளே ஒடுங்குமாறு செய்தருளினான்.*

*தேவர்கள் இமையாநாட்டம் உடையவராதலின் 'இமையாத எண்கணன்' என்றார். எண்கண்ணன் - பிரமன். கருணையே இறைவனது இயல்பு. அப்பெருமானது இயல்புக்குச் சிறிதும் ஒவ்வாதது சினமாதலின் 'ஒன்றாத சீற்றம்' என்றார்.*

***6350."எஞ்சும், உலகு அனைத்தும் இப்பொழுதே" என்று***
***என்று,***
***நெஞ்சு நடுங்கும் நெடுந் தேவரை நோக்கி,***
***"அஞ்சன்மின்" என்னா, அருள் சுரந்த நோக்கினால்,***
***கஞ்ச மலர் பழிக்கும் கை அபயம் காட்டினான்.***

***உலகு அனைத்தும் இப்பொழுதே எஞ்சும்*** - *(நரசிங்கப்பிரானுடைய சீற்றத்தால் எல்லா உலகங்களும் இப்பொழுதே அழிந்து சிதையும்;* ***என்றென்று நெஞ்சு நடுங்கும் நெடுந்தேவரை நோக்கி*** *- என்றெண்ணி அச்சத்தால் மனம் நடுங்க நின்ற தேவர்களைப் பார்த்து;* ***அஞ்சன்மின் என்னா*** *- (நரசிங்கப்பிரான்) அஞ்சாதீர்கள் என்றுகூறி;* ***அருள் சுரந்த நோக்கினால்*** *- கருணை நிறைந்து பொங்கும் அருள் நோக்குடனே;* ***கஞ்ச மலர் பழிக்கும்கை*** *- தாமரை மலரையும் பழிக்கும்படியான அழகிய கையால்;* ***அபயம் காட்டினான்*** *- அபயக் குறிப்பைக் காட்டியருளினான்.*

*எஞ்சுதல் - குறைதல் (சிதைதல்). " அருள் சுரந்த நோக்கினால் அஞ்சன்மின் என்னா - கை அபயம் காட்டினான்" என இயையும். கஞ்சம் - தாமரை. தாமரைமலரை வென்று நிற்கும் அழகிய கையை "கஞ்சமலர் பழிக்கும் கை" என்றார்.*

*திருமகள் வருதலும் சிங்கப்பிரான் நோக்குதலும ்*

***6351. 'பூவில் திருவை, அழகின் புனை கலத்தை,***
***யாவர்க்கும் செல்வத்தை, வீடு என்னும் இன்பத்தை,***
***ஆவித் துணையை, அமுதின் பிறந்தாளை,***
***தேவர்க்கும் தம் மோயை, ஏவினார், பாற் செல்ல.***

***பூவில் திருவை*** *- செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை;* ***அழகின் புனைகலத்தை*** *- அழகு (தனக்கு மேலும் அழகு வேண்டி) அணியும் அணிகலன் போன்றவளை;* ***யாவர்க்கும்*** *செல்வத்தை - எல்லோருக்கும் செல்வத்தை வழங்கும் செல்வியாகத் திகழ்பவளை;* ***வீடு என்னும் இன்பத்தை*** *- பரமபதம் என்ற பேரின்ப வீட்டைத் தந்தருள்பவளை;* ***ஆவித்துணையை*** *- திருமாலின் உயிர்த்துணையாகப் பிரியாது இருப்பவளை;* ***அமுதில் பிறந்தாளை*** *- அமுதம் பிறந்த பாற்கடலில் பிறந்தவளை;* ***தேவர்க்கும் தம் மோயை*** *- தேவர்களுக் கெல்லாம் தாயாக விளங்குபவளை;* ***பாற் செல்ல ஏவினார்*** *- (சீற்றம் கொண்டு நின்ற சிங்கப்பிரான்) பக்கத்திலே சென்றருளப் பிரார்த்தித்து (பிரமன் முதலான தேவர்) அனுப்பினர்.*

*பூ - தாமரைப் பூ: பூ வெனப்படுவது பொறி வாழ் பூவே என்றபடி. திரு. திருமகள். அணிகலம் போன்றவள் பிராட்டி என்பார் "அழகின் புனைகலத்தை" என்றார். செல்வத்துக்கு உரிமை பூண்டுள்ள அதிதேவதை திருமகளே யாதலின் "யாவர்க்கும் செல்வத்தை" என்றார் உயிர்களுக்குப் பேரின்ப வீட்டை அருள்பவளும் பெரிய பிராட்டியே ஆதலின் 'வீடு என்னும் இன்பத்தை" என்றார் 'அகலகில்லேன்' எனப்பரமனை விட்டு நீங்காது உடன் உறைபவள் என்பதால் "ஆவித்துணையை" என்றார். 'தேவர்க்கும்' என்ற உம்மை மற்றுமுள்ள எல்லோர்க்கும் என்ற பொருள் தந்து நின்ற எச்சவும்மை, மோய் - தாய்*

***6352. 'செந் தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும்***

***நந்தா விளக்கை, நறுந் தாள் இளங் கொழுந்தை,***
***முந்தா உலகும் உயிரும் முறை முறையே***
***தந்தாளை, நோக்கினான், தன் ஒப்பு ஒன்று***
***இல்லாதான்.***

***தன் ஒப்பு ஒன்று இல்லாதான்*** - *தனக்கு உவமையில்லாத தனித் தலைவனாகிய எம்பெருமான்;* **செந்தாமரைப் பொகுட்டில்** - *செம்மை நிறமுடைய தாமரை மலரின் நடுவே;* **செம்மாந்து வீற்றிருக்கும்** - *மனமகிழ்வோடு அமர்ந்தருளும்;* ***நந்தா விளக்கை*** - *தூண்டாத விளக்குப் போன்றவளை;* ***நறுந்தாள் இளங்கொழுந்தை*** - *நறுமணம்கமழும் காம்போடு கூடிய இளங்கொழுந்து போன்றவளை;* ***முந்தா உலகும் உயிரும்*** - *இவ்வுலகையும் உயிர்களையும்;* ***முறை முறையே தந்தாளை*** - *வழி வழியாகத் தந்தருள்பவளை;* **நோக்கினான்** - *(கருணை நிறைந்த கண்களால்) பார்த்தருளினான்.*

*ஒப்பு - நிகர், தனக்கு வேறு எவரும் நிகரில்லாத தனிப் பெரும் தலைவனாகத் திகழ்பவன் திருமால் என்பதால் 'தன்' ஒப்பு ஒன்றில்லாதான்" என்றார். பொகுட்டு தாமரை மலரின் மையத்திலிருக்கும் கொட்டை. செம்மாந்து - மனம் மகிழ்ந்து (செம்மாப்பு - கம்பீரம் எனினுமாம்) நறும்தாள் - நறுமணம் கமழும் கொம்பு. இளங்கொழுந்து - இளந்தளிர் முந்தா- முந்திய (முற்பட) முறை முறையே- வழிவழியாகத் தொடர்ந்து., திருமாலை விட்டுப் பிரியாது - அப்பரமனது படைப்புக்கும் உறுதுணையாய் விளங்குபவள் என்பதால் 'உலகும் உயிரும் தந்தாள்' என்றார்.*

*6353.* ***'தீது இலாஆுக உலகு ஈன்ற தெய்வத்தைக்***
***காதலால் நோக்கினான்; கண்ட முனிக் கணங்கள்***
***ஓதினார், சீர்த்தி; உயர்ந்த பரஞ்சுடரும்,***
***நோதல் ஆங்கு இல்லாத அன்பனையே நோக்கினான்.***

***தீது இலாஆக*** - *எவ்வுயிர்க்கும் எந்தத் தீமையும் இல்லாதிருக்க;* **உலகு ஈன்ற தெய்வத்தை** - *இவ்வுலகனைத்தையும் ஈன்றுதவிய தெய்வத்தை;* ***காதலால் நோக்கினான்*** - *(சிங்கப்பிரான்) காதலோடு பார்த்தருளினான்;* ***கண்ட முனிக் கணங்கள்*** - *இதைப் பார்த்த முனிவர் கூட்டமெல்லாம்;* ***சீர்த்தி ஓதினார்*** - *எம்பெருமானுடைய மிகு புகழைக் கூறி வாழ்த்தினர்;* ***உயர்ந்த பரஞ்சுடரும்*** - *உயர்வற உயர்ந்த மேலான ஒளிமயமாக விளங்கும் பரமனும்;* ***ஆங்கு நோதல் இல்லாத*** - *அங்கே தனது தந்தையை இழந்தும் சிறிதும் மனவருத்தமில்லாதிருந்த;* ***அன்பனையே நோக்கினான்*** - *மெய்யன்புடைய பிரகலாதனையே பார்த்தான்.*

*தீமை எதுவும் இல்லாததாக உலகத்தை எல்லாம் படைத்துக்காத்து வருவதற்குப் பேருதவியாய் இருப்பவள் என்பதால் 'உலகீன்ற தெய்வம்' என்றார்.*

*கருதரிய கடலாடை உலகுபலவண்டம் கருப்பெறாது 'ஈன்ற கன்னி' என்றார் பிறரும். காதல் - பேரருள் சீர்த்தி - மிகுபுகழ் 'பயிலும் சுடரொளி மூர்த்தி' எனவும் 'பரஞ் சோதி' எனவும் 'பரஞ்சுடர் உடம்பாய்' எனவும் திருவாய் மொழி அருளிச் செய்தாங்கு 'உயர்ந்த பரஞ்சுடர்' என்றார். இறைவன் 'பேரொளி வடிவினன்' என்பது கருத்து தந்தையை இழந்த நிலையிலும் சிறிதும் மனம் வருந்துதல் இன்றி இருந்த பிரகலாதனை "நோதல் இல்லாத அன்பன்" என்றார். அன்பனையே ஏகாரம் பிரி நிலை.*

*பிரகலாதனை நோக்கி சிங்கப் பெருமான் இயம்பிய அருள்மொழி*

***6354. ' "உந்தையை உன்முன் கொன்று; உடலைப் பிளந்து அளைய,***
***சிந்தை தளராது, அறம் பிழையாச் செய்கையாய் !***
***அந்தம் இலா அன்பு என்மேல் வைத்தாய் !***
***அளியத்தாய் !***
***எந்தை ! இனி இதற்குக் கைம்மாறு யாது ?" என்றான்.***

***உந்தையை உன்முன் கொன்று*** *- (சிங்கப்பிரான் பிரகலாதனை நோக்கி) உனது தந்தையான இரணியனை உன்கண் எதிரே கொன்று;* ***உடலைப் பிளந்து அளைய*** *- அவனுடலை எனது கை நகங்களால் பிளந்து துழாவவும்;* ***சிந்தை தளராது*** *- சிறிதும் மனம் தளராமல்;* ***அறம் பிழையாச் செய்கையாய்*** *- அற நெறியில் நின்று தவறாத செயலை உடையவனே !;* ***அந்தமிலா அன்பு என்மேல் வைத்தாய்*** *- என்மீது முடிவில்லாத பேரன்புடையனாயிருந்தாய்;* ***அளியத்தாய்*** *- எனது ரட்சகத்துக்கு உரியவனே;* ***எந்தை*** *- என் அப்பனே;* ***இனி இதற்குக் கைம்மாறுயாது என்றான்*** *- என்பால் பேரன்பு பூண்ட உனக்கு செய்யக்கூடிய கைம்மாறு ஏது? என்று கூறியருளினான்.*

*அளைதல் - துழாவுதல் (கலக்குதல்) அறம் பிழையா - அறத்திலிருந்து பிசகாத. அளியத்தாய் - கருணை செய்யத்தக்கவன் (ரட்சிக்கத்தக்கவன்). பகவானுக்குக் கைம்மாறு செய்ய இயலாமை பக்தர்க்கு இயல்பு. இங்கு நேர்மாறாகப் பக்தனுக்குக் கைம்மாறு செய்ய இயலாமை குறித்துப் பகவான் இரங்குகிறான். பாகவத தர்மம் இது.*

***6355. ' "அயிரா இமைப்பினை ஓர் ஆயிரம் கூறு இட்ட***
***செயிரின் ஒரு பொழுதில், நுந்தையை யாம் சீறி,***
***உயிர் நேடுவேம்போல், உடல் அளைய, கண்டும்***
***செயிர் சேரா உள்ளத்தாய்க்கு, என் இனி யாம்***
***செய்கேம் ?***

**இமைப்பினை அயிரா ஓர் ஆயிரம் கூறிட்ட** - கண்ணிமைப் பொழுதை மிக நுண்ணியதாக ஆயிரம் கூறுசெய்த; **செயிரின் ஒரு பொழுதில்** - சிறிய பகுதியான அச்சிறிய நேரத்துக்குள்; **நுந்தையை யாம் சீறி** - உனது தந்தையான இரணியனை நான் சினம் கொண்டு; **உயிர் நேடுவேம் போல்** - கை நகங்களால் உடலைப் பிளந்து உயிர் இருக்குமிடத்தைத் தேடுவது போல; **உடல் அளைய** - உடல் முழுதும் துழாவுவதை; **கண்டும் செயிர் சேரா** - நேரில் பார்த்தும் என் மீது சிறிதும் பகைமை பாராட்டாத; **உள்ளத்தாய்க்கு** - பேரன்பு கொண்ட உள்ளத்தை உடையவனாயிருந்த உனக்கு; **என்இனியாம் செய்கேம்** - நான் என்ன கைம்மாறு செய்வேன்!

இமைப்பு - கண்ணை மூடித்திறக்கும் நேரம். அயிரா - நுண்ணிய. செயிர் - குறை. உன் தந்தையின் உடலைப் பிளந்து, அளைந்த போதும் என்னிடம் சிறிதும் பகை உணர்வின்றி, பேரன்பு கொண்டிருந்த மனத்தை உடையவனான உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன் என்றான்.

*6356.* ***' "கொல்லேம், இனி உன் குலத்தோரை, குற்றங்கள்***
***எல்லை இலாதன செய்தாரே என்றாலும்;***
***நல்லேம், உனக்கு எம்மை; நாணாமல், நாம் செய்வது***
***ஒல்லை உளதேல், இயம்புதியால்" என்று உரைத்தான்.***

**இனி உன் குலத்தோரை** - இனி மேல் உனது அசுரர் குலத்தே பிறந்தவர்களை; **குற்றங்கள் எல்லை இலாதன செய்தாரே என்றாலும்** - அவர்கள் அளவில்லாத குற்றங்களைச் செய்தவர்கள் என்று தெரிந்தாலும்; **கொல்லேம்** - அவர்களைக் கொல்ல மாட்டேன்; **உனக்கு எம்மை நல்லேம்** - உனக்கு எந்தப் பிறப்பிலும் நல்லவனாவேன்; **நாம் செய்வது ஒல்லை உளதேல்** - நான் உனக்கு ஏதேனும் விரைந்து செய்ய வேண்டியது இருந்தால்; **நாணாமல்** - நாணப்படாது; **இயம்புதியால் என்றுரைத்தான்** - கூறுவாயாக என்று பரமன் பணித்தான்.

எல்லை இலாதன - அளவற்றவை. எம்மை - எப்பிறப்பிலும்.

*பிரகலாதன் கேட்ட வரமும் சிங்கப் பெருமான் அருளும்*

*6357.* ***' "முன்பு பெறப்பெற்ற பேறோ முடிவு இல்லை;***
***பின்பு பெறும் பேறும் உண்டோ ? பெறுகுவெனேல்,***
***என்பு பெறாத இழி பிறவி எய்தினும், நின்***
***அன்பு பெறும் பேறு அடியேற்கு அருள்" என்றான்.***

**முன்பு பெறப் பெற்ற** - எம்பெருமானே ! உனக்கு அடியவனாகி யான் முன்பு பெற்றதாகிய; **பேறோ முடிவில்லை** - பேறுகளுக்கு எல்லையே இல்லை; **பின்பு**

**பெறும் பேறும் உண்டோ** - இனி மேலும் நான் பெற வேண்டிய பேறுகள் ஏதேனும் உண்டோ; **பெறுகுவெனேல்** - அப்படி ஏதேனும் வேண்டிப் பெறுவதென்றால்; **என்பு பெறாத இழி பிறவி எய்தினும்** - எலும்பில்லாத இழிந்த புழுவாகப் பிறந்தேன் என்றாலும்; **நின் அன்பு பெறும் பேறு** - உனது அன்பைப் பெற்று வாழும் பெரிய பேற்றினை; **அடியேற்கு அருள்** - உனது தொண்டனாகிய எனக்கு அருள்வாயாக என்றான்.

"என் பொழி யாக்கையுள் சேர்ப்பினும் அன்பொழியாமை அருள் மதி எனக்கே" என்ற திருவரங்கக்கலம்பகம் (1) ஒப்பு நோக்கத்தக்கது "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரம் தர வேண்டும்". என்பதை ஒப்பிடுக.

*6358.* ***'அன்னானை நோக்கி, அருள் சுரந்த நெஞ்சினன் ஆய்,***
***"என் ஆனை வல்லன்" என மகிழ்ந்த பேர் ஈசன்,***
***"முன் ஆன பூதங்கள் யாவையும் முற்றிடினும்,***
***உன் நாள் உலவாய், நீ, என் போல் உளை" என்றான்.***

**அன்னானை நோக்கி** - 'நின் அன்பு பெறும் பேறு அருள்' என்ற அத்தகைய பிரகலாதனை இறைவன் பார்த்து; **அருள் சுரந்த நெஞ்சினனாய்** - அருள் பொழியும் மனத்தை உடையவனாய்; **என் ஆனை வல்லன்** - என்னப்பன் மிகவும் வல்லமை உள்ளவன்; **என மகிழ்ந்த பேரீசன்** - என்று கூறி, மனம் மகிழ்ந்த பெரிய பெருமாள்; **முன் ஆன பூதங்கள்** - எல்லாவற்றுக்கும் முன்னதாக என்னால் படைக்கப்பட்ட மண் முதலான பூதங்கள்; **யாவையும் முற்றிடினும்** - எல்லாம் அழிந்துபட்டாலும்; **உன்நாள் உலவாய் நீ** - உனது வாழ்நாள் என்றும் நீ கெட மாட்டாய்; **என்போல் உளை என்றான்** - என்னைப் போல நீயும் என்றும் உள்ளவனாவாய் என்றான்.

'ஈசன், அன்னானை நோக்கி உன் நாள் உலவாய் என் போல் உளை என்றான்' என இயையும். 'அன்பு பெறும் பேறு அடியேற்கு அருள்' என வேண்டிய பிரகலாதனுடைய பக்திப் பெருமையை அறிந்த பரமன் அவனைப் பாராட்டி 'என் ஆனைவல்லன்' என்றான். 'ஆனை' என்பது அருமை பாராட்டிக் கூறுவதோர் சொல் என்பர். ஐம்பெரும் பூதங்கள் மிகப் பழமையானவையாய் எவற்றுக்கும் மூலம் என்பதால் 'முன் ஆன பூதங்கள்' என்றார். உன் நாள் - உனக்குரிய வாழ் நாள்.

*6359.* ***' "மின்னைத் தொழு வளைத்தது என்ன மிளிர் ஒளியாய்!***
***முன்னைத் தொழும்புக்கே ஆம் அன்றோ, மூஉலகும் ?***
***என்னைத் தொழுது ஏத்தி எய்தும் பயன் எய்தி,***
***உன்னைத் தொழுது ஏத்தி, உய்க, உலகு எல்லாம்.***

***மின்னைத் தொழு வளைத்ததென்ன*** - தோன்றி உடன் மறையும் மின்னலைத் தொழு மரத்தில் பிடித்து அகப்படுத்தி வைத்ததைப் போல; ***மிளிர் ஒளியாய்*** - ஒளிவிட்டு விளங்கும் உடலை உடையவனே; ***முன்னைத் தொழும்புக்கே*** - முன்பு நீ கொண்ட அடித் தொண்டுக்கே; ***மூவுலகும் ஆம் அன்றோ*** - உனக்கு மூன்று உலகங்களும் உரியதாகும் அல்லவா?; ***உலகு எல்லாம்*** - உலகில் உள்ளவர்கள் எல்லோரும்; ***என்னைத் தொழுது ஏத்தி*** - என்னை வணங்கித் துதித்து; ***எய்தும் பயன்*** - அடையும் எல்லாப் பயன்களையும்; ***உன்னைத் தொழுது ஏத்தி*** - உன்னை வணங்கித் துதித்து; ***எய்தி உய்க*** - அடைந்து உய்வு பெறுவார்கள் (என்றார்).

***6360. ' "ஏனவர்க்கு வேண்டின், எளிது ஒன்றோ ?-எற்கு அன்பர்***
***ஆன வர்க்கம் எல்லாம் நினக்கு அன்பர் ஆயினார்;***
***தானவர்க்கு வேந்தன் நீ என்னும் தரத்தாயோ ?***
***வானவர்க்கும் நீயே இறை-தொல் மறை வல்லோய் !***

***தொல் மறை வல்லோய்*** - பழமையான வேதங்களை எல்லாம் ஓதாதுணர்ந்த வித்தகனே; ***எற்கு அன்பர் ஆன வர்க்கம் எல்லாம்*** - எனக்கு அடியவர்களாக இருக்கும் அன்பர் கூட்ட மெல்லாம்; ***நினக்கு அன்பர் ஆயினார்*** - உன்னிடம் அன்பு கொண்ட உனது தொண்டர்கள் ஆவார்; ***தானவர்க்கு வேந்தன் நீ*** - நீ அசுரர் இனத்துக்கு அரசன்; ***என்னும் தரத்தாயோ*** - என்ற தரம் மட்டும் உடையவனோ?; (அல்ல) ***வானவர்க்கும் நீயே இறை*** - தேவர்களுக்கும் நீயே தெய்வம்; ***ஏனவர்க்கு வேண்டின்*** - உன்னையல்லாது மற்றெவரும் பெற விரும்பினால்; ***எளிது ஒன்றோ*** -நீயடைந்த பெருவாழ்வை அடைவதென்பது அத்தனை எளியதொன்றோ?

*வேறு எவரிடமும் கற்காது இறைவனால் மயர்வற மதி நலம் அருளப் பெற்றவன் பிரகலாதன். வர்க்கம். குழு (கூட்டம்). தரம் - தகுதி.*

***6361. ' "நல் அறமும் மெய்ம்மையும், நான்மறையும், நல் அருளும்,***
***எல்லை இலா ஞானமும், ஈறு இலா எப் பொருளும்,***
***தொல்லை சால் எண் குணனும், நின் சொல் தொழில் செய்ய,***
***மல்லல் உரு ஒளியாய் ! நாளும் வளர்க, நீ !"***

***மல்லல் உரு ஒளியாய்*** - வளம் மிக்க அழகிய ஒளிபடைத்த மேனியை உடையவனே; ***நல்அறமும் மெய்ம்மையும்*** - என்றும் நன்மை தரும் அறமும் வாய்மையும்; ***நான்மறையும், நல்அருளும்*** - நான்கு வேதங்களும், நலம் பயக்கும் திருவருளும்; ***எல்லைஇலா ஞானமும்*** - அளவில்லாத மெய்யுணர்வாகிய நல்ல

ஞானமும்; **ஈறு இலா எப்பொருளும்** - அழிவில்லாத எவ்விதமான பொருள்களும்; **தொல்லைசால் எண் குணனும்** - பழமை வாய்ந்த எட்டுக் குணங்களும்; **நின்சொல் தொழில் செய்ய** - (ஆகிய இவையெல்லாம்) உனது சொல்கேட்டுத் தொழில் செய்ய; **நாளும் வளர்க நீ** - நாளும் நாளும் நீ வளர்ந்து விளங்குவாயாக.

"வளர்க நீ" என்பது அடுத்த பாட்டில் வரும் "என்று வரம் அருளி" என்பதனோடு இயைந்து பொருள்படும். மெய்ம்மை - வாய்மை மெய்யுணர்வாகிய ஞானம் வரம்பற்றது என்பதால் 'எல்லை இலா ஞானம்' என்றார். எண் குணங்கள்; தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவுஇல் ஆற்றல் உடைமை, வரம்பு இல் இன்பம் உடைமை என்பனவாம்.

*பிரகலாதனுக்கு முடிசூட்ட ஆவன புரியுமாறு தேவர்களைப் பணித்தல்*

***6362. 'என்று வரம் அருளி, "எவ் உலகும் கைகூப்ப,***
***முன்றில் முரசம் முழங்க, முடி சூட்ட,***
***நின்ற அமரர் அனைவீரும் நேர்ந்து, இவனுக்கு***
***ஒன்று பெருமை உரிமை புரிக !" என்றான்.***

**என்றுவரம் அருளி** - என்று கூறி பிரகலாதனுக்கு வரம் தந்தருளி; **எவ்வுலகும் கை கூப்ப** - எல்லா உலகத்தவரும் இவனைக் கை கூப்பி வணங்குமாறு; **முன்றில் முரசம் முழங்க** - இந்த பிரகலாதனுடைய அரண்மனை முற்றத்திலே பலவகை மங்கல முரசுகள் முழங்க; **முடிசூட்ட** - மூவுலகுக்கும் முதல்வனாகப் பொன் முடிசூட்ட; **நின்ற அமரர் அனைவீரும்** - இங்கு நிற்கும் தேவர்களாகிய நீங்கள் எல்லோரும்; **நேர்ந்து** - மனம் இசைந்து; **இவனுக்கு ஒன்று பெருமை** உரிமை புரிக - இப்பிரகலாதனுக்கு பொருந்திய பெருமையுடன் முடிசூட்டும் உரிமைப் பணிகளைப் புரிவீராக; **என்றான்.**

முன்றில்; அரண்மனை முற்றம். ஒன்றுதல் - பொருந்துதல்.

*பிரகலாதன் முடிசூடி மூவுலகும் ஆளுதல்*

***6363. 'தே மன், உரிமை புரிய திசை முகத்தோன்***
***ஓமம் இயற்ற, உடையான் முடி சூட்ட,***
***கோ மன்னவன் ஆகி, மூஉலகும்***
***கைக்கொண்டான்-***
***நாம மறை ஓதாது ஓதி, நனி உணர்ந்தான்.***

***நாம மறை*** - *புகழ் மிகுந்த நான்கு வேதங்களையும்;* ***ஓதாது ஓதி*** - *முறையாக ஆசிரியனை அடைந்து பயிலாது, இறையருளால் தானே பயின்று;* ***நனி உணர்ந்தான்*** - *மிக நன்றாக உணர்ந்தவனான பிரகலாதன்;* ***தேமன் உரிமை புரிய*** - *தேவர்களுக்கு மன்னனான இந்திரன் முடி சூட்டு விழாவுக்குரிய பணிகளைப் புரிய;* ***திசை முகத் தோன்*** - *நான்கு திசைக்கும் உரிய நான்கு முகங்களை உடையபிரமன்;* ***ஓமம் இயற்ற*** - *விழாவுக்கான வேள்வியைச் செய்ய;* *உடையான் முடிசூட்ட* - *எல்லா உலகங்களையும் உடையவனாகிய சிங்கப்பிரான் (திருமால்) தனது திருக்கரத்தால் மணிமுடிசூட்ட;* ***கோமன்னவன் ஆகி மூவுலகும் கைக் கொண்டான்*** - *சக்கரவர்த்தியாகி மூன்றுலகங்களும் தனக்கே உரியதாகக் கைக் கொண்டு ஆட்சி செய்தான்.*

*வேதங்கள் புகழ் மிகுந்தவை யாதலின் 'நாமமறை' என்றார். நாமம் - புகழ். இறையருளால் தானே ஓதி நன்குணர்ந்தவன் என்பதை 'ஓதாது ஓதி நனிஉணர்ந்தான்' என்றார். தே மன் - தேவர்தலைவன். உலகம் முழுதுடையான் உவந்து முடிசூட்ட மூவுலகுக்கும் உரிமையுடையவனாய் ஆட்சி செய்தான் என்பதால் கோமன்னவனாகி மூவுலகும் கைக் கொண்டான் என்றார். கோமன்னவன் - அரசர்க்கு அரசன் (சக்கரவர்த்தி)*

*வீடணன் முடிவுரை*

***6364. 'ஈது ஆகும், முன் நிகழ்ந்தது; எம்பெருமான் ! என் மாற்றம்***
***யாதானும் ஆக நினையாது, இகழ்தியேல்,***
***தீது ஆய் விளைதல் நனி திண்ணம்' எனச் செப்பினான்-***
***மேதாவிகட்கு எல்லாம் மேலான மேன்மையான்.***

***மேதாவிகட்கு எல்லாம்*** - *அறிஞர்களுக்கெல்லாம்;* ***மேலான மேன்மையான*** - *மேம்பட்ட மேலோனாகிய வீடணன்;* ***ஈது ஆகும் முன் நிகழ்ந்தது*** - *முன்பு நிகழ்ந்த இரணியன் கதை இதுவாகும்;* ***எம்பெருமான்*** - *எமது தலைவனே !;* ***என் மாற்றம் யாதானும்*** - *என்னுடைய பேச்சு எதுவாயினும்;* ***ஆக நினையாது இகழ்தியேல்*** - *உனது நன்மைக்காவது என்று நினைக்காமல் இகழ்வாயானால்;* ***தீதாய் விளைதல்*** - *தீமை உண்டாவது;* ***நனி திண்ணம்*** - *மிகவும் உறுதியாகும்;* ***எனச் செப்பினான்*** - *என்று கூறினான்.*

*"நான் சொல்லும் உரை எதுவாயிருந்தாலும் உனக்கு நன்மை தருவதாகும் என்று நினைக்காமல் இகழ்ந்து ஒதுக்குவாய் என்றால் தீமையாகவே முடியும்" என்பான் "தீதாய் விளைதல் நனி திண்ணம்" என்றான்.*

## வீடணன் அடைக்கலப் படலம்

வீடணன் இராமபிரானை அடைக்கலம் அடைந்த செய்தியைக் கூறும் பகுதியாதலால் இப் பெயர் பெற்றது. இரணியன் கதையைக் கூறி, இராவணனைத் திருத்த முயன்ற வீடணனை இராவணன் சினந்து 'என் எதிரில் நில்லாதே' என வெறுத்துரைத்தான், வீடணன் இலங்கையை விட்டு வெளியேறினான். தன் அமைச்சர்கள் நால்வரும் கூறிய அறிவுரைப்படி இராமனைச் சரண் அடைந்தான். இராமபிரான் வீடணனை ஏற்றுக் கொள்வதற்கு முன் சுக்கிரீவன் முதலான வானரவீரர்களின் கருத்துகளைக் கேட்டு, பின் அனுமன் கூறிய கருத்தைக் கேட்டு 'பேரறிவாள நன்று' என அனுமனைப் பாராட்டி, சுக்கிரீவனையே வீடணனை அழைத்து வர அனுப்புகிறான். இராமனைச் சரணடைந்த வீடணனை இலங்கை வேந்தனாக முடிசூட்டி இராமன் ஏற்றுக் கொள்கிறான். "இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி' என்று இராமபிரானது திருவடிகளை முடியில் சூடி மகிழ்கிறான் வீடணன் என்பன இப்படலத்தில் கூறப்படும் செய்திகள்.

### *இராவணன் சினந்து வீடணனைத் துரத்துதல்*

**கலிவிருத்தம்**

***6365. கேட்டனன் இருந்தும், அக் கேள்வி தேர்கலாக்
கோட்டிய சிந்தையான், உறுதி கொண்டிலன், -
மூட்டிய தீ என முடுகிப் பொங்கினான் -
ஊட்டு அரக்கு ஊட்டிய அனைய ஒண் கணான்.***

**கேட்டனன் இருந்தும்** - வீடணன் கூறிய அறிவுரைகளை எல்லாம் இராவணன் கேட்டவனாயிருந்தும்; **அக்கேள்வி தேர்கலா** - அக்கேள்விப் பொருளைத் தேர்ந்தறியாத; **கோட்டிய சிந்தையான்** - நேர்மையின்றிச் சென்ற மனமுள்ளவனாதலால்; **உறுதி கொண்டிலன்** - வீடணன் கூறியவை தனக்குறுதி பயப்பதாகக் கொண்டிலன் ஆதலால்; **மூட்டிய தீ என** - நன்கு மூட்டப்பட்டு எரிகின்ற தீயைப் போல; **முடுகிப் பொங்கினான்** - விரைந்து வெகுண்டான்; **ஊட்டு அரக்கு ஊட்டிய அனைய** - உருகிய அரக்கு ஊட்டப்பட்டது போலச் சிவந்த; **ஒண்கணான்** - ஒளிமிக்க கண்களை உடையவனாயினான்.

கோட்டிய - கோடுதலைஉடைய (நேர்மையில்லாத). மூட்டிய - மூட்டப்பட்ட. உருகிய அரக்கு ஊட்டப்பட்டது போன்ற சிவந்த கண்களை உடையவன் என்பதனை "ஊட்டக் கூட்டிய அனைய ஒண்கணான்" என்றார். முடுகுதல் - விரைதல்.

***6366. ' "இரணியன் என்பவன் எம்மனோரினும்
முரணியன்; அவன்தனை முருக்கி முற்றினான்,
அரணியன்" என்று, அவற்கு அன்பு பூண்டனை -
மரணம் என்று ஒரு பொருள் மாற்றும் வன்மையோய் !***

***மரணம் என்று ஒரு பொருள்*** - *(சினந்த ராவணன் வீடணனைப் பார்த்து) மரணம் என்ற சொல்லின் பொருளையே;* ***மாற்றும் வன்மையோய்*** - *மாற்றிய வலிமை உடையவனே !;* ***இரணியன் என்பவன்*** - *இரணியன் என்ற பெயர் கொண்ட அவன்;* ***எம்மனோரினும் முரணியன்*** - *எம்மைப் போன்றவரினும் வலிமைமிக்கவன்;* ***அவன் தனை முருக்கி*** - *அத்தகைய அவனைக் கொன்று;* ***முற்றினான் அரணியன் என்று*** - *தீர்த்தவன் நமக்கு பாதுகாப்பானவன் என்று;* ***அவற்கு அன்பு பூண்டனை*** - *அந்தத்திருமாலுக்கு அன்பு கொண்டு வாழ்வாயாயினை.*

*இலங்கைப் போரில் பங்கு பெறாமல் உயிர் பிழைக்க வீடணன் நினைப்பதாக எண்ணுவதை 'மரணம்...மாற்றும் வன்மையோய்' என்ற தொடர் குறிக்கிறது. அரணியன் - பாதுகாப்பவன். முருக்கி முற்றுதல் - கொன்று தீர்த்தல். எம்மனோர் - எ(ந)ம்மைப் போன்றவர்.*

***6367. 'ஆயவன் வளர்த்த தன் தாதை யாக்கையை***
***மாயவன் பிளந்திட மகிழ்ந்த மைந்தனும்,***
***ஏயும் நம் பகைஞனுக்கு இனிய நண்பு செய்***
***நீயுமே நிகர்; பிறர் நிகர்க்க நேர்வரோ ?***

***ஆயவன்*** - *நீ கூறிய அத்தகையவனான பிரகலாதன்;* ***வளர்த்த தன் தாதை யாக்கையை*** - *தன்னைப் பெற்று வளர்த்த தந்தையான இரணியனது உடலை;* ***மாயவன் பிளந்திட*** - *மாயச் செயல்களை உடைய திருமால் பிளந்து வதைக்க;* ***மகிழ்ந்த மைந்தனும்*** - *அதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்த மகனான அப்பிரகலாதனும்;* ***ஏயும் நம் பகைஞனுக்கு*** - *பொருந்திய நமது பகைவனான இராமனுக்கு;* ***இனிய நண்பு செய் நீயுமே நிகர்*** - *இனிய நட்புள்ளவனாகிய நீயுமே சமமானவர்கள்;* ***பிறர் நிகர்க்க நேர்வரோ*** - *மற்றவர் எவரும் சமமாவார்களோ?*

***6368. 'பாழி சால் இரணியன் புதல்வன் பண்பு என,***
***சூழ்வினை முற்றி, யான் அவர்க்குத் தோற்றபின்,***
***ஏழை நீ என் பெருஞ் செல்வம் எய்தி, பின்***
***வாழவோ கருத்து ? அது வர வற்று ஆகுமோ ?***

***பாழிசால் இரணியன்*** - *வலிமைமிக்க இரணியனுடைய;* ***புதல்வன் பண்பு என*** - *புதல்வனான பிரகலாதனுக்குரிய குணத்தைப் போல;* ***சூழ்வினை முற்றி*** - *சூழ்ச்சியை நிறைவேற்றி முடித்து; (அதனால்)* ***யான் அவர்க்குத் தோற்றபின்*** - *நான் அந்த மனிதனுக்குத் தோல்வியடைந்தபின்பு;* ***ஏழை நீ என் பெருஞ்செல்வம் எய்தி*** - *இப்போது அறிவிலியாகிய நீ எனது பெரிய இலங்கையின் ஆட்சிச் செல்வத்தை*

*அடைந்து;* ***பின் வாழவோ கருத்து*** *- பின்னர் அரசனாக வாழலாம் என்பதோ உனது கருத்து?;* ***அது வர வற்று ஆகுமோ*** *- அது நடக்கக் கூடிய காரியம் ஆகுமோ?;*

*பாழி - வலிமை. வரவற்று - நிகழக் கூடியது.*

***6369. 'முன்புற அனையர்பால் அன்பு முற்றினை;***
***வன் பகை மனிதரின், வைத்த அன்பினை;***
***என்பு உற உருகுதி; அழுதி; ஏத்துதி;***
***உன் புகல் அவர்; பிறிது உரைக்க வேண்டுமோ ?***

***முன்புற அனையர் பால்*** *- இதற்கு முன்னேயே நீ அந்த மனிதர்களிடம்;* ***அன்பு பூண்டனை*** *- அன்பு பூண்டவனாய் இருந்தாய்;* ***வன் பகை மனிதரின்*** *- நமது வலிய பகைவர்களான அந்த மானிடர்களிடத்தில்;* ***வைத்த அன்பினை*** *- வைக்கப்பட்ட அன்புடையவனாக இருக்கிறாய்;* ***என்புற உருகுதி அழுதி ஏத்துதி*** *- எலும்பும் உருகும்படி அவர்களை நினைந்து உள்ளம் உருகுகிறாய் அழுகிறாய், துதிக்கிறாய்;* ***உன்புகல் அவர்*** *- உனக்குப் புகலிடம் அவர்களே என்றால்;* ***பிறிது உரைக்க வேண்டுமோ*** *- வேறு சொல்ல வேண்டுமோ?*

*முன்புற - முன்னதாக*

***6370. 'நண்ணின மனிதர்பால் நண்பு பூண்டனை;***
***எண்ணினை செய்வினை; என்னை வெல்லுமாறு***
***உன்னினை; அரசின்மேல் ஆசை ஊன்றினை;***
***திண்ணிது உன் செயல்; பிறர் செறுநர் வேண்டுமோ ?***

***நண்ணின மனிதர் பால்*** *- (இங்கு போரிடப்படை யெடுத்து வந்து) அடைந்த மானிடர்களிடம்;* ***நண்பு பூண்டனை*** *- நட்புடையவனாய் இருக்கிறாய்;* ***செய்வினை எண்ணினை*** *- (நீ செய்ய வேண்டிய செயல்களை) எண்ணி முடிவு செய்து விட்டாய்;* ***என்னை வெல்லுமாறு உன்னினை*** *- என்னைப் போரில் வெற்றி கொள்ள நினைத்தாய்;* ***அரசின் மேல் ஆசை ஊன்றினை*** *- இலங்கை ஆட்சியின் மேல் ஆசையில் ஊன்றி உள்ளாய்;* ***உன் செயல் திண்ணிது*** *- உனது செயல்கள் வன்மை மிக்கது;* ***பிறர் செறுநர் வேண்டுமோ*** *- வேறான பிற பகைவர்களும் வேண்டுமோ ?*

*ஊன்றுதல் - நிலைத்திருத்தல். செறுநர் - பகைவர். 'நீயே போதுமே வேறு பிற பகையும் வேண்டுமோ' என்பது கருத்து.*

***6371. 'அஞ்சினை ஆதலின், அமர்க்கும் ஆள்அலை;***
***தஞ்சு என மனிதர்பால் வைத்த சார்பினை;***

**வஞ்சனை மனத்தினை; பிறப்பு மாறினை;**
**நஞ்சினை உடன் கொடு வாழ்தல் நன்மையோ ?**

***அஞ்சினை ஆதலின்*** - *அந்த மானிடருக்கு நீ பயந்துவிட்டாய் ஆதலால்;* ***அமர்க்கும் ஆள் அலை*** - *அவருடன் போரிடுவதற்கும் ஏற்ற ஆளல்ல;* ***தஞ்சு என*** - *அடைக்கலம் என்று;* ***மனிதர் பால் வைத்த சார்பினை*** - *மனிதர்களிடம் கொண்ட பற்று உடையவனாய் விட்டாய்;* ***வஞ்சனை மனத்தினை*** - *வஞ்சகமுடைய மனத்தை உடையவனாயுள்ளாய்;* ***பிறப்பு மாற்றினை*** - *நமது அரக்கப் பிறப்புக் குரிய பண்பிலிருந்து மாறிவிட்டாய்;* ***நஞ்சினை உடன் கொடு*** - *கொடியவிடத்தை உடன் வைத்துக் கொண்டு;* ***வாழ்தல் நன்மையோ*** - *வாழ்வதால் நன்மை உண்டாகுமோ?*

*பகைவரைப் பற்றி அஞ்சாதவர்களே அமருக்கு உரியவர்கள் என்பதால் 'அஞ்சினை ஆதலின் அமர்க்கும் ஆள் அல்லை" என்றான். தஞ்சு - புகலிடம். அரக்கர்க்குரிய இயல்புகள் எதுவும் இல்லாத நீ உனது பிறப்பையே மாற்றிக் கொண்டாய் என்பான் "பிறப்பு மாற்றினை" என்றான். "நீதியால் வந்த தொரு நெடுந்தரும நெறியல்லால் சாதியால் வந்த சிறு நெறி அறியான்" என வீடணனைப் பற்றி கும்பகருணன் இராமபிரானிடம் கூறுவதாக வருவது (7625) நினைவு கூரத்தக்கது. நஞ்சை உடன் கொண்டு வாழ்வது எப்படி நன்மை தராதோ அது போல உன்னை உடன் கொண்டு வாழ்வதால் வருவது தீமையே என்பான் "நஞ்சினை உடன் கொடு வாழ்தல் நன்மையோ" என்றான்.*

***6372. 'பழியினை உணர்ந்து, யான் படுக்கிலேன், உனை;***
***ஒழி, சில புகலுதல்; ஒல்லை நீங்குதி;***
***விழி எதிர் நிற்றியேல், விளிதி' என்றனன் -***
***அழிவினை எய்துவான், அறிவு நீங்கினான்.***

***அழிவினை எய்துவான்*** - *தனக்கு அழிவை அடைவதற்கேற்ப;* ***அறிவு நீங்கினான்*** - *நல்லறிவு நீங்கப் பெற்ற இராவணன்; (வீடணனை நோக்கி) 'பழியினை உணர்ந்து - எனக்கு நேர இருக்கும் பழியை எண்ணி;* ***உனையான் படுக்கிலேன்*** - *உன்னை நான் கொல்ல மாட்டேன்;* ***சிலபுகலுதல் ஒழி*** - *(எனக்கு இது போன்ற அறிவுரைகள்) சில கூறுவதை விட்டு விடு;* ***ஒல்லை நீங்குதி*** - *சீக்கிரம் இங்கிருந்து நீங்கிப் போய்விடு;* ***விழி எதிர் நிற்றியேல்*** - *என்கண் எதிரில் நீ இனி நிற்பாயானால்;* ***விளிதி என்றனன்*** - *'சாவாய்' என்று கூறினான்.*

*அழிவை அடைவதற்குரிய விதியுடையவனாதலின் இராவணன்' அழிவினைஎய்துவான்' எனப்பட்டான். பேதைப் படுக்கும் இழவூழ் (372) என்னும் திருக்குறளின் கருத்தினை இணைத்து உணர்க. நிற்றியேல் நிற்பாயானால். விளிதி - சாவாய். எய்துவான் - முற்றெச்சம் (வினைமுற்று எச்சப் பொருள் தந்து நின்றது).*

*வீடணன் வானில் எழுந்து நீதி பல மொழிதல்*

***6373. என்றலும், இளவலும் எழுந்து, வானிடைச்***
***சென்றனன்; துணைவரும் தானும் சிந்தியா -***
***நின்றனன்; பின்னரும், நீதி சான்றன,***
***ஒன்று அல பலப்பல, உறுதி ஓதினான்;***

**என்றலும் இளவலும் எழுந்து** - *என்று இராவணன் கூறவும் அவன் தம்பியான வீடணன் உடனே எழுந்து;* **வானிடைச் சென்றனன்** - *வானத்தின் இடையே சென்றான்;* **துணைவரும் தானும்** - *தன் அமைச்சர்களும், தானுமாக;* **சிந்தியா நின்றனன்** - *என்ன செய்வதெனச் சிந்தித்து நின்றான்;* **பின்னரும்** - *வானில் எழுந்து நின்ற பிறகும்;* **நீதி சான்றன** - *நீதியுடன் அமைந்த உறுதியுரைகள்;* **ஒன்றல பலப்பல** - *ஒன்றல்லாதனவான பலவற்றை;* **உறுதி ஓதினான்** - *இராவணனுக்கு உறுதி பயப்பனவாகக் கூறினான்.*

*துணைவர் - அமைச்சர் நால்வர்.*

***6374. 'வாழியாய் ! கேட்டியால்: வாழ்வு கைம்மிக***
***ஊழி காண்குறு நினது உயிரை ஓர்கிலாய்,***
***கீழ்மையோர் சொற்கொடு கெடுதல் நேர்தியோ ?***
***வாழ்மைதான், அறம் பிழைத்தவர்க்கு, வாய்க்குமோ ?***

**வாழியாய் கேட்டியால்** - *அண்ணலே வாழி ! யான் கூறுவதைக் கேட்பாயாக;* **வாழ்வு கைம் மிக** - *உனது வாழ்க்கை நாளுக்கு நாள் மேம்பட;* **ஊழி காண்குறும்** - *ஊழிக் காலத்தின் எல்லையைக் காணஉள்ள;* **நினது உயிரை ஓர்கிலாய்** - *உனது உயிரின் சீர்மையை எண்ணாதிருக்கிறாய்;* **கீழ்மையோர் சொற்கொடு** - *கீழ்மக்களின் சொல்லைக் கேட்டு;* **கெடுதல் நேர்தியோ** - *கேட்டை அடைய முற்படுகிறாயா?;* **அறம் பிழைத்தவர்க்கு** - *அறநெறிகளைவிட்டு தவறி நடந்தவர்க்கு;* **வாழ்மைதான் வாய்க்குமோ** - *நல்ல வாழ்க்கை அமையுமோ?*

*கைம்மிக - மேம்பட ஓர்தல் - ஆய்ந்தறிதல். வரத்தால் பெற்ற வாழ்வை நினைத்துப் பார்க்க வேண்டாமா? என்பான்" ஓர்கிலாய்" என்றான். வாழ்மை - வாழ்க்கை. "அறநெறி பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்" என்ற சிலப்பதிகாரம் சிந்திக்கத்தக்கது.*

***6375. 'புத்திரர், குருக்கள், நின் பொரு இல் கேண்மையர்***
***மித்திரர், அடைந்துளோர், மெலியர், வன்மையோர்,***
***இத்தனை பேரையும், இராமன் வெஞ் சரம்***

*சித்திரவதை செயக் கண்டு, தீர்தியோ ?*

***புத்திரர் குருக்கள்*** *- உன் புத்திரர்கள், குருமார்களாகிய மேலோர்கள்;* ***பொருஇல் கேண்மையர்*** *- ஒப்பற்ற உறவினர்கள்;* ***மித்திரர்*** *- உனக்குரிய நண்பர்கள்;* ***அடைந்துளோர்*** *- உன்னை அடைந்து உன் ஆதரவில் வாழும் மக்கள்;* ***மெலியர் வன்மை யோர்*** *- வாழ்க்கையில் மெலிந்தவர்கள், வலிமை மிக்க வீரர்கள்;* ***இத்தனை பேரையும்*** *- இத்தனை பேரையும்;* ***இராமன் வெஞ்சரம்*** *- இராமபிரானுடைய கொடிய அம்புகள்;* ***சித்திரவதை செய*** *- சித்திரவதை செய்வதை;* ***கண்டு தீர்தியோ*** *- பார்த்துவிட்டு நீயும் அழியப் போகிறாயோ.*

*குருக்கள் - புரோகிதர் (குருமார்கள்) மித்திரர் - நண்பர்கள்'. தீர்தல் - அழிதல்.*

*வீடணன் இலங்கையை விட்டுப் போதல்*

***6376. 'எத்துணை வகையினும் உறுதி எய்தின,***
***ஒத்தன, உணர்த்தினேன்; உணரகிற்றிலை;***
***அத்த ! என் பிழை பொறுத்தருளுவாய்' என,***
***உத்தமன் அந் நகர் ஒழியப் போயினான்.***

***எத்துணை வகையினும்*** *- எத்தனை எத்தனை வகையுண்டோ அத்தனை வகையிலும்;* ***உறுதி எய்தின ஒத்தன*** *- உனக்கு உறுதி பயப்பதற்கொத்த நீதிகளை;* ***உணர்த்தினேன்; உணர கிற்றிலை*** *- எடுத்துக்கூறி உணர்த்தினேன்; நீ உணர்ந்தாயல்லை;* ***அத்த ! என் பிழை பொறுத்து அருளுவாய் என்*** *- எனது தந்தை போன்றவனே ! இதுவரை நான் ஏதேனும் பிழை செய்திருந்தால் அவைகளை எல்லாம் பொறுத்து அருள் வாயாக (என்று கூறிவிட்டு);* ***உத்தமன் அந்நகர் ஒழியப் போயினான்*** *- நல்ல குணங்களை உடைய உத்தமனாகிய வீடணன் அந்த இலங்கை நகரத்தை விட்டு நீங்கிச் சென்றான்.*

*அத்தன் - தந்தை (இங்கு இராவணனைத் தந்தை போலவே வீடணன் கருதியவன் என்பது புலப்படுகிறது). ஒத்தன - அறத்துக்குப் பொருந்துவனவான நீதிகள்.*

*வீடணன் இராவணனுக்குக் கூறிய நீதிகள் யாவும் இராவணனுக்கு நன்மை பயப்பன. 'சில புகலுதல் ஒழி' என்று வெறுத்துரைத்த இராவணனுக்கு மேலும் உறுதி உரைத்தமையால் 'பிழை பொறுத்தருள்வாய்' என்றான்.*

***6377. அனலனும், அனிலனும், அரன், சம்பாதியும்***
***வினையவர் நால்வரும், விரைவின் வந்தனர்:-***
***கனை கழல் காலினர், கருமச் சூழ்ச்சியர், -***

**இனைவரும் வீடணனோடும் ஏயினார்.**

**அனலனும், அனிலனும், அரன், சம்பாதியும்** - அனலன், அனிலன், அரன், சம்பாதி என்ற; **வினையவர் நால்வரும்** - நல்வினை உடைய நான்கு பேரும்; **விரைவில் வந்தனர்** - விரைந்து வீடணனிடம் வந்தனர்; **கனை கழல் காலினர்** - வீரக் கழல் அணிந்த கால்களை உடையவர்களும்; **கருமச் சூழ்ச்சியர்** - ஆராய்ந்து செயல்படும் தகுதி உடையவர்களும்; **இனைவரும்** - ஆகிய இத்தகைய அவர்கள்; **வீடணனோடும் ஏயினர்** - வீடணனுடன் சேர்ந்து கொண்டனர்.

ஆராய்ந்து செயல்படத்தக்க நற் பண்பு கொண்டவர்கள் என்பதால் 'கருமச் சூழ்ச்சியர்' என்றார்.

அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகிய நால்வரும் வீடணனுடைய அமைச்சர்கள். வீடணன் இலங்கை விட்டுப் போன போதும் அவனை விட்டுப் பிரியாதவர்களாக, அவனுடன் சேர்ந்து கொண்டனர் என்பதனை 'வீடணனோடும் ஏயினார்' என்றார்.

**6378. அரக்கனும், ஆங்கண் ஓர் அமைச்சர் நால்வரும்,**
**'குரக்கு இனத்தவரொடும் மனிதர், கொள்ளை நீர்க்**
**கரைக்கண் வந்து இறுத்தனர்' என்ற காலையில்,**
**'பொருக்கென எழுதும்' என்று எண்ணிப் போயினார்.**

**அரக்கனும்** - அரக்கரினத்தில் பிறந்தவனான வீடணனும்; **ஆங்கண் ஓர் அமைச்சர் நால்வரும்** - அவனுடைய அமைச்சர்கள் நால்வரும் அப்போது; **'குரக்கு இனத்தவரொடும்** - வானரப் படையுடனே; **மனிதர்** - மனிதர்களான இராமனும், இலக்குவனும்; **வந்து இறுத்தனர்** - வந்து தங்கியிருக்கிறார்கள்; **என்ற காலையில்** - என்னும் பொழுது; **பொருக்கென எழுதும்** - விரைந்து அங்கு எழுந்து போவோம்; **என்று எண்ணிப் போயினார்** - என்று எண்ணியவர்களாகச் சென்றனர்.

ஆங்கண் - அப்போது. 'கொள்ளை நீர்' - கடல். 'உத்தமன்' என முன்பு கூறியவர் நல்ல பண்புள்ளவனாயினும் அரக்கர் இனத்தில் பிறந்தவன் என்பதைக் குறிப்பிட வீடணனை 'அரக்கன்' என்றார்.

*வீடணன் வானரத்தானையைக் கண்டு வியத்தல்*

**6379. அளக்கரைக் கடந்து, மேல் அறிந்து, நம்பியும்,**
**விளக்கு ஒளி பரத்தலின், பாலின் வெண் கடல்**

***வளத் தடந் தாமரை மலர்ந்ததாம் என,***
***களப் பெருந் தானையைக் கண்ணின் நோக்கினான்.***

***அளக்கரைக் கடந்து*** *- அந்தக் கடலைக் கடந்து வடகரையை அடைந்து;* ***மேல் அறிந்து*** *- மேலே நடந்ததனை அறிந்து (முன்பு நடந்தது);* ***நம்பியும்*** *- இளவலாகிய வீடணனும்;* ***விளக்கொளி பரத்தலின்*** *- கடற்கரை முழுதும் விளக்குகளின் ஒளிபரந்திருப்பதால்;* ***பாலின் வெண் கடல்*** *- வெண்மை நிறமான பாற்கடல் மீது;* ***வளத்தடந்தாமரை*** *- அழகிய அகன்ற செந்தாமரை மலர்கள்;* ***மலர்ந்தாம் என*** *- மலர்ந்துள்ளது போல (காட்சிதந்த);* ***களப்பெரும் தானையை*** *- போர்க்களத்துக்குச் செல்லும் அந்தப் பெரிய வானரப் படையை;* ***கண்ணின் நோக்கினான்*** *- கண்களால் பார்த்தான்.*

*அளக்கர் - கடல். வளம் - அழகு. கடலைக் கடந்து, வட கரையை அடைந்த வீடணன் முன்பு நடந்ததை அறிந்து. பாற்கடலிலே தாமரை மலர்ந்தது போல, வெண்மை நிறம் உடைய வானரப் படை தங்கியுள்ள அவ்விடத்திலே விளக்கொளிபரவியிருத்தலைத் தனது கண்களால் பார்த்தான் என்பது கருத்து.*

***6380. 'ஊனுடை உடம்பின உயிர்கள் யாவையும்***
***ஏனைய ஒரு தலை நிறுத்தி எண்ணினால்,***
***வானரம் பெரிது' என, மறு இல் சிந்தையான்,***
***தூ நிறச் சுடு படைத் துணைவர்ச் சொல்லினான்:***

***ஊன் உடை உடம்பின*** *- (இவ்வுலகெங்கும் வாழும்) ஊன் மிக உடைய உடம்பினை உடைய;* ***உயிர்கள் யாவையும்*** *- உயிரினங்கள் எல்லாவற்றையும்;* ***ஏனைய ஒருதலை நிறுத்தி*** *- மற்றொரு பக்கம் நிற்கச் செய்து;* ***எண்ணினால்*** *- எண்ணுவோமானால்;* ***வானரம் பெரிது என*** *- வானரப் படையே அளவில் பெரியதாயிருக்கும் என்று;* ***மறு இல் சிந்தை யான்*** *- குற்றமற்ற மனமுடையவனாகிய வீடணன்;* ***தூநிறச் சுடு படை*** *- புலால்மணம் வீசு கொடிய படைக்கலங்களை உடையவர்களான;* ***துணைவர்ச் சொல்லினான்*** *- தனது அமைச்சர்களுக்குக் கூறினான்.*

*தூ - தசை (புலால்) நிறம் - (இங்கு) மணம்.*

***6381. 'அறம்தலை நின்றவர்க்கு அன்பு பூண்டனென்;***
***மறந்தும் நன் புகழ் அலால் வாழ்வு வேண்டலென்;***
***"பிறந்த என் உறுதி நீ பிடிக்கலாய்" எனாத்***
***துறந்தனென்; இனிச் செயல் சொல்லுவீர்' என்றான்.***

***அறம் தலை நின்றவர்க்கு*** *- அற நெறியிலே தலைசிறந்து விளங்கும் அந்த இராம, இலக்குவர்களிடம்;* ***அன்பு பூண்டனென்*** *- நான் மிக்க அன்புடையவனானேன்;*

***நல்புகழ் அல்லால்*** - *நல்ல புகழ் அல்லாமல்;* ***மறந்தும் வாழ்வு வேண்டலென்*** - *மறந்தும் கூட உயிர் வாழ்தலை விரும்பமாட்டேன்;* ***பிறந்த என் உறுதி*** - *(இராவணன்) என்னுடன் பிறந்த எனக்கு நன்மையான உறுதி தருபவைகளை;* ***நீ பிடிக்கலாய் என*** - *நீ கடைப்பிடிக்காதவனா யிருக்கிறாய் என்று கூறியதால்;* ***துறந்தனென்*** - *இராவணனை விட்டு நீங்கினேன்;* ***இனிச் செயல் சொல்லுவீர் என்றான்*** - *இனி, நான் செய்ய வேண்டிய நற்செயல் என்னவென்று கூறுங்கள் என, வீடணன் தனது அமைச்சர் நால்வரைக் கேட்டான்.*

*"புகழெனின் உயிரும் கொடுக்குவர். பழிஎனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்" என்று புறப்பாடலும் (புறநா.182) உயிரை விற்றுறு புகழ் பெற உழல்பவர்" என்ற பரணியும், (கலிங்கத்துப் பரணி 340). என்ற உரைகளை ஒப்பிடுக. கலிப் பகையாரை 'உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார்' என்று சேக்கிழார் (திருநாவுக். 30) கூறுவதும் நினையத்தக்கது.*

### *இராமனைக் காணுமாறு அமைச்சர்கள் கூற வீடணன் மகிழ்ந்து கூறுதல்*

***6382. 'மாட்சியின் அமைந்தது வேறு மற்று இலை;***
***தாட்சி இல் பொருள் தரும் தரும மூர்த்தியைக்***
***காட்சியே இனிக் கடன்' என்று, கல்வி சால்***
***சூட்சியின் கிழவரும், துணிந்து சொல்லினார்.***

***தாட்சியில் பொருள் தரும்*** - *தாழ்ச்சி இல்லாத மேலான ஞானத்தைத் தரும்;* ***தரும மூர்த்தியை*** - *அறமே வடிவமான இராமபிரானை;* ***காட்சியே இனிக்கடன்*** - *கண்டு தரிசிப்பதே இனி நமக்குரிய கடமை;* ***மாட்சியின் அமைந்தது*** - *மாண்பு பொருந்தியது (சிறப்புடையது);* ***வேறு மற்று இலை*** - *இதை விட வேறு எதுவுமில்லை;* ***என்று, கல்வி சால் சூழ்ச்சியின் கிழவரும்*** - *என்று, கல்விமிக்க, ஆலோசனை கூறுவதில் வல்ல அமைச்சர்களும்;,* ***துணிந்து சொல்லினார்*** - *தாம் எண்ணித் துணிந்த முடிவைக் கூறினர்.*

*தாழ்ச்சி, சூழ்ச்சி என்பன எதுகை நோக்கி தாட்சி, சூட்சி என வந்தன. சிறந்தது இராமனைத் தரிசிப்ப தொன்றே. அதை விடச் சிறந்தது வேறு எதுவுமில்லை என்பார் "தரும மூர்த்தியைக் காட்சியே இனிக்கடன் மாட்சியின் அமைந்தது வேறு மற்று இலை" என்றனர். கல்வி மிக்கவர்கள், ஆலோசனைத் திறம் உடையவர்கள் என்பதால் அமைச்சர்களை "கல்வி சால் சூழ்ச்சியின் கிழவர்" என்றார். கிழவர் - உரிமை உடையவர்கள்.*

***6383. 'நல்லது சொல்லினீர்; நாமும், வேறு இனி***
***அல்லது செய்துமேல், அரக்கர் ஆதுமால்;***

***எல்லை இல் பெருங் குணத்து இராமன் தாள் இணை***
***புல்லுதும்; புல்லி, இப் பிறவி போக்குதும்.***

***நல்லது சொல்லினீர்*** - *(அமைச்சர்கள் கூறியதைக் கேட்ட வீடணன்) நமக்கு நன்மையாவதொன்றையே நீங்கள் கூறினீர்கள்;* ***நாமும் வேறினி அல்லது செய்துமேல்*** *- நாமும் இராமபிரானைச் சென்று சேர்வதல்லாத வேறு செய்வோமாயின்;* ***அரக்கர் ஆதுமால்*** *-அரக்கத்தன்மையினர் ஆவோம்;* ***எல்லையில் பெருங் குணத்து*** *- எல்லையில்லாத நல்ல குணங்களை உடையவனான;* ***இராமன் தாளிணை புல்லுதும்*** *- இராமபிரானுடைய திருவடி இணைகளைச் சேருவோம்;* ***புல்லி இப்பிறவி போக்குதும்*** *- சேர்ந்து இந்தப் பிறவி நோயைப் போக்கிக் கொள்வோம்.*

*இராமபிரானைச் சென்று சேர்வதை விட்டு வேறு ஏதேனும் நாம் செய்வோமாயின் நாமும் அடாத செயல் செய்யும் அரக்கர்கள் ஆய்விட நேரிடும் என்றான். குணங்களால் உயர்ந்தவள்ளலான இராமனை "எல்லை இல் பெருங்குணத்திராமன்" என்றது, பிறப்பால் வந்த புன்மையைச் சார்பின் சிறப்பால் போக்குதற்கு வழி கண்டனன் ஆதலின்; 'இராமன் தாள் இணையைச் சார்ந்து இந்த அரக்கப் பிறவியை நீக்கிக் கொள்வோம்' என்றான்: இனத்தான் ஆம் இன்னான் எனப் படுஞ் சொல் (குறள் 453) என்றதை நினைக.*

***6384. 'முன்புறக் கண்டிலென்; கேள்வி முன்பு இலென்;***
***அன்பு உறக் காரணம் அறியகிற்றிலேன்;***
***என்பு உறக் குளிரும்; நெஞ்சு உருகுமேல், அவன்***
***புன் புறப் பிறவியின் பகைஞன் போலுமால்.***

***முன்புறக் கண்டிலேன்*** *- அந்த இராமபிரானை இதற்கு முன்பு நான் நேரில் பார்த்ததில்லை;* ***கேள்வி முன்பிலேன்*** *- அவனைப் பற்றி முன்பு கேள்விப்பட்டதுமில்லை;* ***அன்புஉறக் காரணம் அறிய கிற்றிலேன்*** *- அப்பெருமான் மீது அன்பு கொள்ளத் தக்க காரணம் எதுவும் அறிய முடியவில்லை;* ***என்பு உறக் குளிரும்*** *- என்பும் குளிர்கிறது;* ***நெஞ்சு உருகும்*** *- என்மனம் அவனை நினைந்து உருகுகிறது;* ***அவன் புன்புறப் பிறவியின் பகைஞன் போலுமால்*** *- அப்பெருமான் புல்லிய இந்தப் பிறவியை மாற்றவல்ல பிறவியின் பகைவன் போலும்.*

*முன்புற - இதற்குமுன்பு. புன்புறம் - புல்லியதாகிய உடம்பு. வீடணன், தான் இராம பிரானைக் கண்டதுமில்லை. அவரைப் பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை என்றான். ஆனால் 'அவனை நெருங்கநெருங்க நெஞ்சு உருகுகிறது; என்பும் குளிர்கிறது. என்கிறான்' எவரிடமும் பார்த்து, பழகித்தான் அன்பு செலுத்த இயலும். மாறாக இராமனிடம் அன்பு கொள்ளக் காரணம் தெரியவில்லை என்கிறான். அவன் அருளாலே அவன் தாள் வணங்கும் பக்தியின் மெய்ப்பாடுகள் குறிக்கப்படுதல் காண்க. இறைவன் அடி சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர் (குறள் 10) என்ற கருத்தினைப் 'புன்புறப் பிறவியின் பகைஞன் போலுமால்' என்ற தொடர் நினைவூட்டுகின்றது. இராமபிரானை முதலிற் கண்டபோது 'என்பு எனக்கு*

*உருகுகின்றது, இவர்கின்ற தளவு இல் காதல்' 3763) என்று அனுமன் கூறிய அனுபவச் சொற்கள் இங்கு நினையத்தக்கன. கண்ணப்பரின் நிலையும் இதுபோன்றதே (பெ.பு. 104)*

***6385. 'ஆதி அம் பரமனுக்கு அன்பும், நல் அறம்***
***நீதியின் வழாமையும், உயிர்க்கு நேயமும்,***
***வேதியர் அருளும், நான் விரும்பிப் பெற்றனென்-***
***போது உறு கிழவனைத் தவம் முன் பூண்ட நாள்.***

***போது உறு கிழவனை*** *- தாமரை மலரில் உறையும் பிரமனை நினைந்து;* ***தவம் முன் பூண்ட நாள்*** *- நான் முன்பு தவம் மேற்கொண்ட நாளிலே;* ***ஆதி அம்பரமனுக்கு அன்பும்*** *- உலகுக்கே ஆதியாக விளங்கும் பரம் பொருளிடம் அன்பும்;* ***நல்லறம் நீதியின் வழாமையும்*** *- நன்மை தரும் அறநெறியிலும் நீதி தவறாமல் நிற்றலும்;* ***உயிர்க்கு நேயமும்*** *- எல்லா உயிர்களிடமும் வேறு பாடில்லாத நேசமும்;* ***வேதியர் அருளும்*** *- வேதம் வல்ல சான்றோரின் கருணையும்;* ***நான் விரும்பிப் பெற்றனென்*** *- நான் விரும்பி பிரமனிடம் வரமாகப் பெற்றேன்.*

*பிரமனைக் குறித்துத் தவம் செய்த போது, உயிர்க்கு நேயம் ஆய எல்லா உயிர்களையும் நேசித்தல் (ஆன்ம நேயம் என்பர் ஜீவகாருண்யம்), வேண்டிப் பெற்றவரத்தின்படி வாழ்க்கை அமைந்ததென்பது கருத்து.*

***6386. 'ஆயது பயப்பது ஓர் அமைதி ஆயது;***
***தூயது, நினைந்தது; தொல்லை யாவர்க்கும்***
***நாயகன் மலர்க்கழல் நணுகி, நம் மனத்து***
***ஏயது முடித்தும்' என்று இனிது மேயினான்.***

***ஆயது பயப்பது*** *- அந்த பிரமன் தந்தவரம் நன்மை தருதற்குரிய;* ***ஓர் அமைதி ஆயது*** *- ஒரு நல்லகாலம் ஆயிற்று;* ***நினைந்தது தூயது*** *- நீங்கள் நினைந்து கூறியதே தூய்மையானது;* ***தொல்லை யாவர்க்கும் நாயகன்*** *-பழமையான, எல்லோருக்கும் தலைவனான இராமபிரானது;* ***மலர்க்கழல் நணுகி*** *-மலர் போன்ற பாதங்களை அடைந்து;* ***நம் மனத்து ஏயது முடித்தும்*** *- நமது மனத்துக்குப் பொருந்தியதனைச் செய்து முடிப்போம்;* ***என்று இனிது மேயினான்*** *- என்று கூறி இனிதே இருந்தான்.*

*ஆயது - அந்தப் பிரமன் தந்த வரம். ஓர் அமைதி - ஒரு தகுந்த சமயம். தொல்லை நாயகன் யாவர்க்கும் நாயகன் எனக் கூட்டி உணர்க. தொல்லை - பழமை. ஏயது - பொருந்தியது.*

***6387. 'இருளிடை எய்துவது இயல்பு அன்றாம்' என,***

***பொருள் உற உணர்ந்த அப் புலன் கொள்***
***கேள்வியார்,***
***மருளுறு சோலையின் மறைந்து வைகினார்;***
***உருளுறு தேரவன் உதயம் எய்தினான்.***

***இருளிடை எய்துவது*** - *இருள் நிறைந்த இந்த இரவு நேரத்திலே அங்கு சென்று அடைவது;* ***இயல்பு அன்றாம் என*** - *(புதியவர்களாகிய நமக்கு) இயல்பாகாது என்று;* ***பொருள் உற உணர்ந்த*** - *பொருள் பொருந்திய தன்மையை அறிந்து உணர்ந்தவர்களான;* ***அப்புலன் கொள் கேள்வியார்*** - *அறிவமைந்த கேள்வி ஞானம் உடைய வீடணன் முதலியோர்;* ***மருள்உறு சோலையின்*** - *இருள் நிறைந்த ஒரு சோலையிலே;* ***மறைந்து வைகினார்*** - *பிறர் எவரும் அறியாதபடி இரவுமுழுதும் மறைந்து தங்கியிருந்தார்கள்;* ***உருள் உறு தேரவன்*** - *ஒற்றையாழித் தேரை உடையவனாகிய சூரியன்;* ***உதயம் எய்தினான்*** - *உதயகிரியை அடைந்தான்.*

*பொருள் உற உணர்ந்த - உலகியல்பை உணர்ந்த. உருள்- சக்கரம் உருள் உடைத் தேரவன் - ஒற்றைச் சக்கரத் தேரை உடைய சூரியன்.*

*இராமபிரான் கடற்கரைப் பகுதிகளைக் காணல்*

***6388. அப் புறத்து, இராமன், அவ் அலங்கு வேலையைக்***
***குப்புறக் கருதுவான், குவளை நோக்கிதன்***
***துப்பு உறச் சிவந்த வாய் நினைந்து சோர்குவான்,***
***இப் புறத்து இருங் கரை மருங்கின் எய்தினான்.***

***அப்புறத்து*** - *அடுத்த பகுதியான அந்த இடத்திலே;* ***இராமன்*** - *இராமபிரான்;* ***அவ்அலங்கு வேலையை*** - *அந்த அலை வீசுகின்ற தென் கடலை;* ***குப்புறக் கருதுவான்*** - *தாண்டி, மறுகரை சேர நினைப்பவன்;* ***குவளை நோக்கிதன்*** - *குவளை மலர் போன்ற கண்களை உடைய சீதா பிராட்டியின்;* ***துப்பு உறச் சிவந்த வாய்*** - *பவளம் போன்ற சிவந்த வாயை;* ***நினைந்து சோர்குவான்*** - *எண்ணி, மனம் சோர்ந்தவனாக;* ***இப்புறத்து இருங்கரை*** - *கடலில் இப்புறமான வடபுறத்தின் பெரிய கரையின்;* ***மருங்கின் எய்தினான்*** - *பக்கத்தில் சென்று சேர்ந்தான்.*

*அலங்குதல் - அலைவீசுதல். குப்புறக்கருதுதல் - தாண்டி அப்பாற் செல்ல நினைத்தல். துப்பு - பவளம்.*

***6389. கானலும் கழிகளும், மணலும், கண்டலும்,***
***பானலும் குவளையும், பரந்த புன்னையும்,***
***மேல் நிறை அன்னமும் பெடையும், வேட்கை கூர்***
***பூ நிறை சோலையும், புரிந்து நோக்கினான்.+***

***கானலும்*** - கடற்கரைச் சோலையும்; ***கழிகளும்*** - உப்பங்கழிகளும்; ***மணலும்*** - கடற்கரை மணலும்; ***கண்டலும்*** - தாழைப்புதர்களும்; ***பானலும் குவளையும்*** - கருநெய்தலும், குவளை மலரும்; ***பரந்த புன்னையும்*** - கடற்கரையில் பரந்துள்ள புன்னை மரங்களும்; ***மேல்நிறை அன்னமும்*** - அந்தப் புன்னை மரங்களின் மேல் நிறைந்திருக்கும் அன்னப் பறவைகளும்; ***பெடையும்*** - பெண் அன்னங்களும்; ***வேட்கை கூர் பூநிறை சோலையும்*** - காண்போர் விரும்பும் மலர் நிறைந்த சோலைகளும்; ***புரிந்து நோக்கினான்*** - ஆகியவைகளை எல்லாம் இராமபிரான் விருப்பத்துடன் பார்க்கலானான்.

*கானல் - கடற்கரைச் சோலை. கண்டல் - தாழை. பானல் கரு நெய்தல்.*

***390. தரளமும், பவளமும், தரங்கம் ஈட்டிய***
***திரள் மணிக் குப்பையும், கனக தீரமும்,***
***மருளும் மென் பொதும்பரும், மணலின் குன்றமும்,***
***புரள் நெடுந் திரைகளும், புரிந்து நோக்கினான்.****

***தரங்கம் ஈட்டிய*** - கடல் அலைகள் தொகுத்துச் சேர்த்த; ***தரளமும் பவளமும்*** - முத்துக்களையும் பவளங்களையும்; ***திரள் மணிக்குப்பையும்*** - திரண்டுள்ள பலவகை மணிக் குவியல்களையும்; ***கனக தீரமும்*** - பொன்துகள் நிறைந்த கரைப் பரப்பையும்; ***மருளும் மென் பொதும்பரும்*** - பார்த்தவர்கள் அஞ்சும்படியான மெல்லிய சோலைகளையும்; ***மணலின் குன்றமும்*** - மணல் திடல்களையும்; ***புரள் நெடும் திரைகளும்*** - புரண்டு எழுகின்ற பெரிய அலைகளையும்; ***புரிந்து நோக்கினான்*** - இராமபிரான் விரும்பிப் பார்த்தான்.

*தரங்கம் - அலை. தீரம் - கரை. பொதும்பர் - சோலை. கடல் அலைகள் கொணர்ந்து ஒதுக்கிய தரளம் முதலியவை பிராட்டி நினைவை இராமபிரானுக்கு ஊட்டின. சீதையை நினையும் விருப்பத்தைப் புரிந்து நோக்கினான் என்றார். புரிதல்- விரும்புதல்.*

***6391. மின் நகு மணி விரல் தேய, வீழ் கணீர்***
***துன்ன அரும் பெருஞ் சுழி அழிப்ப, சோர்வினோடு***
***இன் நகை நுளைச்சியர் இழைக்கும் ஆழி சால்***
***புன்னை அம் பொதும்பரும் புக்கு, நோக்கினான்.****

***மின் நகுமணி விரல் தேய*** - மின்னலைப் பழிக்கும்படியான அழகிய விரல்கள் தேயவும்; ***வீழ் கணீர் துன்னரும் பெருஞ்சுழி அழிப்ப*** - கண்களில் இருந்து சிந்தும் கண்ணீர் அரிய பெரிய சுழிகளை அழிக்கவும்; ***இன் நகை நுளைச்சியர்*** - இனிய புன் முறுவலை உடைய வலைச்சியர்; ***சோர்வினொடு இழைக்கும்*** - மனச் சோர்வுடன் தரையில் எழுதும் கூடல் இழைத்துப் பார்த்ததால் ஏற்பட்ட; ***ஆழிசால் புன்னை***

***அம்பொதும்பரும்*** - சுழிகள் ஆங்காங்கு காணப்படும் புன்னைமரச் சோலைகளிலும்; ***புக்கு நோக்கினான்*** - இராமபிரான் சென்று பார்த்தான்.

*வீழ்கணீர் - சிந்தும் கண்ணீர் பெருஞ்சுழி - கூடற் சுழி. தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வருவானோ, மாட்டானோ என, தரையிலே சுழிகள் எழுதிப் பார்ப்பாள். தெள்ளியார் பலர் கை தொழும் தேவனார், வள்ளல் மாலிருஞ் சோலைமணாளனார், பள்ளி கொள்ளு மிடத்தடி கொட்டிடக் கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே" என்பது நாச்சியார் திருமொழி 4-1) தரையில் சுழி எழுதும் போது இரு கோடுகளும் சேர்ந்து கூடினால் தலைவன் வருவான் என்பது மகளிர் நம்பிக்கை என இலக்கிய மரபு பேசும். கூடலிழைத்தல் எனப் பெறும்.*

## *இயற்கைக் காட்சிகளால் இராமன் கவலை கொள்ளல்*

***6392. கூதிர் நுண் குறும் பனித் திவலைக் கோவை கால்,***
***மோதி வெண் திரை வர, முட வெண் தாழைமேல்,***
***பாதி அம் சிறையிடைப் பெடையைப் பாடு அணைத்து***
***ஓதிமம் துயில்வ கண்டு, உயிர்ப்பு வீங்கினான்.***

***கூதிர் நுண் குறும் பனித்திவலைக் கோவை, கால் மோதி வெண்திரை வர*** - குளிர்ந்த மிகச் சிறிய பனித் துளிகளின் தொகுதியுடன், காற்று வீசுவதால் வெண்மைநிற அலைஎழுவதால்; ***முடவெண் தாழை மேல்*** - வளைந்த வெண்மை நிறமான தாழை மரத்தின் மீது; ***பாதிஅம் சிறையிடை*** - தனது ஒரு பாதி இறகின்இடையே; ***பெடையைப் பாடு அணைத்து*** - பெண் அன்னத்தைப் பக்கத்திலே அணைத்துக் கொண்டு; ***ஓதிமம் துயில்வகண்டு*** - ஆண் அன்னங்கள் உறங்குவதைக் கண்டு; ***உயிர்ப்பு வீங்கினான்*** - இராமபிரான் பெருமூச் செறிந்தான்.

*பாடு - பக்கம். உயிர்ப்பு - பெரு மூச்சு. இணைபிரியாத அன்னங்களைக் கண்டு, பிரிவுத்துயரால் இராமபிரான் பெருமூச்செறிந்தான் என்க.*

***6393. அருந்துதற்கு இனிய மீன் கொணர, அன்பினால்***
***பெருந் தடங் கொம்பிடைப் பிரிந்த சேவலை,***
***வருந் திசை நோக்கி, ஓர் மழலை வெண் குருகு,***
***இருந்தது கண்டு நின்று, இரக்கம் எய்தினான்.***

***அருந்துதற்கு இனிய மீன் கொணர*** - உண்பதற்குச் சுவையான மீனைக் கொண்டு வர; ***அன்பினால்*** - பெண் குருகினிடம் கொண்ட பேரன்பால்; ***பெருந்தடங் கொம்பிடை*** - தான் வசிக்கும் பெரிய மரக்கிளையில் இருந்து; ***பிரிந்த சேவலை*** - பிரிந்து சென்ற ஆண் நாரையை; ***வரும் திசை நோக்கி*** - அது வருகின்ற திசையைப்

*பார்த்து;* ***ஓர் மழலை வெண் குருகு*** *- ஒரு இளமையான வெண்மை நிறம் கொண்ட பெண் நாரை;* ***இருந்தது கண்டு நின்று*** *- காத்திருந்ததைப் பார்த்து அங்குநின்று;* ***இரக்கம் எய்தினான்*** *- இராமபிரான் இரக்கம் கொண்டான்.*

***6394. ஒரு தனிப் பேடைமேல் உள்ளம் ஓடலால்,***
***பெரு வலி வயக் குருகு இரண்டும் பேர்கில,***
***திருகு வெஞ் சினத்தன, தெறு கண் தீ உகப்***
***பொருவன கண்டு, தன் புருவம் கோட்டினான்.***

***ஒருதனிப் பேடை மேல்*** *- தனியாக நின்ற ஒருபெண் நாரையிடம்;* ***உள்ளம் ஓடலால்*** *- மனம் செல்லுதலால்;* ***பெருவலி வயக்குருகு இரண்டும்*** *- பெரிய வலிமை மிக்க இரண்டு ஆண் நாரைகள்;* ***பேர்கில திருகு வெஞ்சினத்தன*** *- அந்த இடத்தை விட்டுப்பெயராதனவாய், மிகுந்த சினத்துடன்;* ***தெறுகண் தீஉக*** *- கண்கள் நெருப்புப் பொறிசிந்த;* ***பொருவனகண்டு*** *- அந்த ஆண் நாரைகள் தமக்குள் போரிடுவதைக் கண்டு;* ***தன் புருவம் கோட்டினான்*** *- இராமபிரான் கோபத்தால் தனது புருவத்தை வளைத்துப் பார்த்தான்.*

*ஒரு பெண் நாரையை அனுபவிப்பது யார் என்ற போட்டியில் ஆண் நாரைகள் போரிடுதல் அறமன்று என்பதால், சீதையைக் கவர்ந்து சென்று சிறை வைத்திருந்த இராவணனது கொடுஞ்செயல் நினைவுக்கு வர, இராமன் கோபம் கொண்டு புருவத்தை வளைத்தான் என்க.*

***6395. உள் நிறை ஊடலில் தோற்ற ஓதிமம்***
***கண்ணுறு கலவியில் வெல்லக் கண்டவன்,***
***தண் நிறப் பவள வாய் இதழை, தற் பொதி***
***வெண் நிற முத்தினால், அதுக்கி, விம்மினான்.***

***உள் நிறை ஊடலில்*** *- பெண் அன்னத்தின் உள்ளத்தில் நிறைந்த ஊடலில்;* ***தோற்ற ஓதிமம்*** *- தோற்று, பணிந்த ஆண் அன்னம்;* ***கண்ணுறு கலவியில்*** *- இரண்டு உடம்பும் ஒன்று பட்டு மகிழ்ந்த கலவி இன்பத்திலே;* ***வெல்லக் கண்டவன்*** *- ஆணன்னம் வெற்றி கொண்டதைக் கண்ட ராமபிரான்;* ***தண் நிறப்பவளவாய் இதழை*** *- குளிர்ந்த பவளம் போன்ற தனது வாயின் உதடுகளை;* ***தற் பொதி வெண் நிறமுத்தினால்*** *- அந்த இதழ்களால் மறைக்கப் பட்டுள்ள வெண்மையான முத்துப் போன்ற பற்களால்;* ***அதுக்கி விம்மினான்*** *- மெல்ல அழுத்தி விம்மினான். 'ஊடலில் தோற்றவர் வென்றார் அது மன்னும், கூடலில் காணப்படும்' என்னும் குறள் (1327) ஒப்பிடத்தக்கது.*

*சுக்கிரீவன் முதலியோர் சொற்களால் இராமபிரான் மெலிவு நீங்குதல்*

***6396. இத் திறம் எய்திய காலை, எய்துறும்***
***வித்தகர் சொற்களால் மெலிவு நீங்கினான்***
***ஒத்தனன் இராமனும், உணர்வு தோன்றிய***
***பித்தரின், ஒரு வகை பெயர்ந்து போயினான்.***

**இத்திறம் எய்திய காலை** - இராமன் இத்தன்மையை அடைந்த போது; **எய்துறும் வித்தகர்** - அங்கு வந்த சுக்கிரீவன், அனுமன் முதலிய அறிவு மேம்பட்ட வித்தகர்கள்; **சொற்களால்** - கூறிய ஆறுதல் மொழிகளால்; **மெலிவு நீங்கினான் ஒத்தனன் இராமனும்** - இராமபிரான் மெலிவு நீங்கப்பெற்றவனை ஒத்தவனாயினான்; **உணர்வு தோன்றிய பித்தரின்** - சிறிது நல்லுணர்வு தோன்றிய பித்தர்களைப் போல; **ஒருவகை பெயர்ந்து போயினான்** - அங்கிருந்து நீங்கி ஒருவாறு வேறிடம் சென்றான்.

*வீடணன் வருகை*

***6397. உறைவிடம் எய்தினான், ஒருங்கு கேள்வியின்***
***துறை அறி துணைவரோடு இருந்த சூழலில்,***
***முறை படு தானையின் மருங்கு முற்றினான்-***
***அறை கழல் வீடணன், அயிர்ப்பு இல் சிந்தையான்.***

**உறைவிடம் எய்தினான்** - இராமபிரான் தான் தங்கியிருக்கும் பாசறையை அடைந்தான்; **ஒருங்கு கேள்வியின் துறை அறிதுணைவனோடு** - ஒரு சேர, நல்ல நூல்களை கேட்டறிந்த துணைவர்களான சுக்கிரீவன் முதலியவர்களோடு; **இருந்த சூழலில்** - இராமபிரான் அமர்ந்திருந்த அந்த இடத்துக்கு; **அயிர்ப்பு இல் சிந்தையான்** - எவ்வித ஐயமுமில்லாத மனத்தினனாகிய; **அறை கழல் வீடணன்** - ஒலிக்கின்ற கழல் அணிந்த கால்களை உடைய வீடணன்; **முறை படுதானையின் மருங்கு முற்றினான்** - முறையாக அங்கு தங்கியிருந்த வானரப் பக்கத்திலே சேர்ந்தான். கேள்வியின் துறை - நூற்கேள்வியின் துறை. அரக்க இனத்தினனான வீடணன், வானர சேனைக்குப் பக்கம் செல்வதால் ஏதேனும் தவறுண்டாகுமோ என்ற ஐயம் எதுவுமின்றிச் சென்றான் என்பதை 'அயிர்ப்பில் சிந்தையான்' என்றது காட்டும்.

***6398. முற்றிய குரிசிலை, 'முழங்கு தானையின்***
***உற்றனர், நிருதர் வந்து' என்ன ஒன்றினார்,***
***'எற்றுதிர்; பற்றுதிர்; எறிதிர்' என்று, இடை***
***சுற்றினர்-உரும் எனத் தெழிக்கும் சொல்லினார்.***

***முற்றிய குரிசிலை*** - அங்கு வந்தடைந்த வீடணனை (பார்த்தவானர வீரர்கள்) ***முழங்கு தானையின் உற்றனர் நிருதர் வந்து என்ன*** - ஆரவாரம் மிக்க வானரப் படையில் அரக்கர் வந்து புகுந்தனர் என்று; ***ஒன்றினார்*** - வீரர்கள் எல்லாம் ஒன்றாகத் திரண்டனர்; ***எற்றுதிர் பற்றுதிர், எறிதிர் என்று*** - அடியுங்கள் பிடியுங்கள் ஆயுதங்களால் எறியுங்கள் என்று கூறி; ***உரும் எனத் தெழிக்கும் சொல்லினர்*** - இடியென அதட்டும் சொல்லினராகி; ***இடை சுற்றினர்*** - வீடணன் முதலியோரைச் சூழ்ந்து கொண்டனர்.

***6399. 'தந்தது தருமமே கொணர்ந்துதான்; இவன்***
***வெந் தொழில் தீவினை பயந்த மேன்மையான்,***
***வந்தனன் இலங்கையர் மன்னன் ஆகும்; நம்***
***சிந்தனை முடிந்தன' என்னும் சிந்தையார்.***

***தருமமே கொணர்ந்துதான் தந்தது*** - இந்த அரக்கர்களைத் தரும தேவதை தானே நம்மிடம் கொண்டு வந்து தந்தது; ***இவன் வெந்தொழில் தீவினை பயந்த மேன்மையான்*** - இவன், கொடுந்தொழில் செய்யவந்த தீயவினை பயந்த மேன்மையோன் ஆவான்; ***வந்தனன் இலங்கையர் மன்னன் ஆகும்*** - வந்தவனாகிய இவன் இலங்கை வேந்தனான இராவணனே ஆகும். ***நம் சிந்தனை முடிந்தன*** - இலங்கை வேந்தனை வெல்ல வேண்டும் என்ற நமது எண்ணம் நிறைவேறிவிட்டது; ***என்னும் சிந்தையார்*** - என்ற எண்ணம் கொண்டவர்களாக அந்த வானர வீரர் இருந்தனர்.

*இவன் கொடுந் தொழிலன் தீவினை பயனளிக்கப் பெற்றமையால் கொடுஞ் செயல் புரிவதில் மிக்கவனாவான் என்பதை 'வெந்தொழில் தீவினை பயந்தமேன்மையான்' என்றார். வந்த இவன் இலங்கை வேந்தன் இராவணனே; இராவணனை வெல்லுவது என்ற நம் விருப்பம் நிறைவேறியது என்பார்' நம் சிந்தனை முடிந்தன' என்றார். நமக்குச் சிரமமின்றி தரும தேவதையே நமக்கு இவனைத் தந்தது என்பார்' தருமமே கொணர்ந்து தந்தது' என்றார்.*

***6400. "இருபது கரம்; தலை ஈர்-ஐந்து" என்னும் அத்***
***திருவிலிக்கு அன்னவை சிதைந்தவோ?' என்பார்,***
***'பொரு தொழில் எம்மொடும் பொருதி, போர்' என்பார்,***
***ஒருவரின் ஒருவர் சென்று, உறுக்கி ஊன்றுவார்.***

***அத்திருவிலிக்கு*** - அந்த நற்பேறில்லாத தீவினையாளனுக்கு; ***இருபதுகரம் தலை ஈர் ஐந்து என்னும்*** - இருபது கைகளும், பத்துத் தலைகளும் உண்டு என்பார்களே;

***அன்னவை சிதைந்தவோ என்பார்*** - அவை எல்லாம் சிதைந்து அழிந்தனவோ என்பார்கள்; ***பொரு தொழில் எம்மொடு பொருதிபோர் என்பார்*** - போர்த் தொழில் வல்லவன் என்றால் எங்களோடு; ***போரிடவருக என்பார்கள் ஒருவரின் ஒருவர் சென்று*** - வானர வீரர்களில் ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு சென்று; ***உறுக்கி ஊன்றுவார்*** - சினந்து எதிர்க்கலாயினர்.

*திருவிலி - நல்வினைப் பயன் இல்லாதவன். உறுக்கி - வெகுண்டு.*

***6401. 'பற்றினம் சிறையிடை வைத்து, பாருடைக்***
***கொற்றவர்க்கு உணர்த்துதும்' என்று கூறுவார்;***
***'எற்றுவது அன்றியே, இவனைக் கண்டு, இறை***
***நிற்றல் என், பிறிது?' என நெருக்கி நேர்குவார்.***

***பற்றினம் சிறையிடை வைத்து*** - இவர்களைப் பிடித்துச் சிறையிலே அடைத்து வைத்து விட்டு; ***பாருடைக் கொற்றவர்க்கு உணர்த்துதும்*** - இவ்வுலகுக்கெல்லாம் அரசனான இராமபிரானுக்கு உணர்த்துவோம்; ***என்று கூறுவார்*** -; ***எற்றுவது அன்றியே*** - உடனே அடித்துக் கொல்லுவதல்லாமல்; ***இவனைக் கண்டு இறை நிற்றல் பிறிது என்*** - இவனைப் பார்த்து, சிறிது நேரம் நிற்பது ஏன் என்று; ***நெருக்கி நேர்குவார்*** - நெருக்கி எதிர்ப்பாராயினர்.

*பற்றினம் - பிடித்தவர்களாக பாருடைக் கொற்றவன் - உலகுக் கெல்லாம் நாயகனான இராமபிரான்.*

***6402. 'இமைப்பதன்முன் விசும்பு எழுந்து போய பின்,***
***அமைப்பது என், பிறிது? இவர் அரக்கர் அல்லரோ?***
***சமைப்பது கொலை அலால், தக்கது யாவதோ?***
***குமைப்பது நலன்' என முடுகிக் கூறுவார்.***

***இமைப்பதன் முன்*** - கண்ணை இமைப்பதற்குள்; ***விசும்பு எழுந்து போய பின்*** - இவர் ஆகாயத்திலே எழுந்து சென்ற பின்பு; ***அமைப்பது என் பிறிது*** - நாம் வேறு என்ன செய்ய முடியும்; ***இவர் அரக்கர் அல்லரோ*** - இவர்கள் அரக்கர்கள் அல்லவா?; ***சமைப்பது கொலை அலால்*** - நாம் செய்யத்தக்கது இவர்களைக் கொலை செய்வதே அல்லாமல்; ***தக்கது யாவதோ*** - தகுந்த செயல் வேறு யாதுள்ளது?; ***குமைப்பது நலன்என*** - உருத்தெரியாமல் இவர்களை அழிப்பதே நல்லதாகும் என்று; ***முடுகிக் கூறுவார்*** - விரைவாகக் கூறுவாராயினர்.

*சமைத்தல் - செய்தல். குமைப்பது - அழிப்பது.*

*அனுமன் ஏவலால் மயிந்தனும் துமிந்தனும் வருதல்*

***6403. இயைந்தன இயைந்தன இனைய கூறலும்,***
***மயிந்தனும் துமிந்தனும் என்னும் மாண்பினார்,***
***அயிந்திரம் நிறைந்தவன் ஆணை ஏவலால்,***
***நயம் தெரி காவலர் இருவர், நண்ணினார்.***

***இயைந்தன இயைந்தன*** - *வானர வீரர் தமக்குத் தோன்றியவைகளை எல்லாம்;* ***இனைய கூறலும்*** - *இவ்வாறு கூறியபோது;* ***மயிந்தனும் துமிந்தனும் என்னும் மாண்பினார்*** - *மயிந்தன், துமிந்தன் என்ற பெயர்களை உடைய மாண்புடையவர்கள்;* ***அயிந்திரம் நிறைந்தவன்*** - *அயிந்திரம் என்னும் இலக்கணத்தைக் கற்று நிரம்பியவனான அனுமானது;* ***ஆணை ஏவலால்*** - *உத்திரவுப்படி ஏவியதால்;* ***நயம் தெரி காவலர்*** - *நீதியைத் தெரிந்த காவலர்கள்;* ***இருவர் நண்ணினார்*** - *இரண்டு பேர் அங்கு வந்தடைந்தனர்.*

*அயிந்திரம் நிறைந்தவன் அனுமன். அயிந்திரம் இந்திரனால் செய்யப்பெற்ற வடமொழி இலக்கண நூல் என்பர்.*

***6404. விலக்கினர் படைஞரை; வேதம், நீதி நூல்,***
***இலக்கணம், நோக்கிய இயல்பர் எய்தினார்,-***
***'சலக் குறி இலர்' என, அருகு சார்ந்தனர்-***
***புலக் குறி அற நெறி பொருந்த நோக்கினார்.***

***படைஞரை விலக்கினர்*** - *(வந்த காவலர்களான மயிந்தனும், துமிந்தனும்) வானரப் படைவீரர்களை விலகும்படி செய்தார்கள்;* ***வேதம் நீதி நூல்*** - *வேதத்திலும், நீதி நூல்களிலும் கூறப்பட்ட;* ***இலக்கணம் நோக்கிய*** - *மனித இலக்கணங்களை நன்கறிந்த;* ***இயல்பர் எய்தினார்*** - *இயல்புடைய அக்காவலர்கள் விபீடணன் முதலியோரை நெருங்கினர்;* ***'சலக்குறி இலர்' என*** - *இவர்களிடம் வஞ்சகச் செய்கை எதுவும் இல்லை என்று;* ***அருகு சார்ந்தனர்*** - *அவர்களுக்குமிக அருகில் சென்றனர்;* ***புலக்குறி அற நெறி*** - *சிறந்த ஞானமுள்ளமைக்குரிய அடையாளத்தையும், அறநெறி நின்றவர் என்பதையும்;* ***பொருந்த நோக்கினர்*** - *பொருந்தியிருப்பதைப் பார்த்தனர்.*

*படைஞர் - (வானரப்) படைவீரர்கள். காவலர்களான மயிந்தனும் துமிந்தனும் வேதங்களிலும், நீதி நூல்களிலும் கூறப்பட்ட மனித இயல்புகளையும், நல்லார், பொல்லார் இலக்கணங்களையும் நன்றாகக் கற்றறிந்தவர்கள் என்பதை 'வேதம் நீதி நூல் இலக்கணம் நோக்கிய இயல்பர்" என்றார். சலக்குறி - வஞ்சகர் என்பதற்கான அடையாளம் புலக்குறி- ஞானம் உள்ளவர்கள் என்பதற்கான அடையாளம்.*

*மயிந்தன் வினாவும் அனலன் விடையும்*

***6405. 'யார்? இவண் எய்திய கருமம் யாவது?***
***போர்அது புரிதிரோ? புறத்து ஓர் எண்ணமோ?***
***சார்வு உற நின்ற நீர் சமைந்தவாறு எலாம்,***
***சோர்விலீர், மெய்ம் முறை, சொல்லுவீர்' என்றான்.***

***யார்? இவண் எய்திய கருமம் யாவது?*** - *(அனுமன் ஆணைப்படி வந்த காவலரில் மூத்தவனான மயிந்தன் வீடணன் முதலியோரை நோக்கி) நீங்கள் யார்? இங்கு வந்த காரியம் யாது?* ***போரது புரிதிரோ*** - *போர் செய்ய வந்தீர்களா?;* ***புறத்து ஓர் எண்ணமோ?*** - *அல்லது, அதுவல்லாத வேறு ஒரு எண்ணத்துடன் வந்தீர்களா?;* ***சார்வு உற நின்ற நீர்*** - *இந்த வானரப் படையைச் சார்ந்து நின்றிருக்கும் நீங்கள்;* ***சமைந்தவாறு எலாம்*** - *உங்கள் மனத்தில் நினைத்து வந்ததை எல்லாம்;* ***சோர்விலீர்*** - *மறதியில்லாமல்;* ***மெய்ம்முறை சொல்லுவீர் என்றான்*** - *உண்மையை மறைக்காது முறையாகக் கூறுங்கள் என்று மயிந்தன் கேட்டான்.*

*தொடர்ந்து வரும் 6410ஆம் பாடலில் "மயிந்தனும் அவ்வுரை மனத்து வைத்து" என்று கூறப்படுவதால் இங்குக் கேட்டவன் மயிந்தன் என்று கொள்ளப்பட்டது. மயிந்தனும், துமிந்தனும் சகோதரர்கள். சமைந்தவாறு-எண்ணியவாறு சோர்வு-மறதி; மனச் சோர்வுமாம். இப்படி அகப்பட்டுக் கொண்டோமே என்று சோர்வடையாதீர்கள் உண்மையைக் கூறுங்கள் என்பது கருத்து.*

***6406. 'பகலவன் வழி முதல், பாரின் நாயகன்,***
***புகல் அவன் கழல் அடைந்து, உய்யப் போந்தனன்-***
***தகவு உறு சிந்தையன், தரும நீதியன்,***
***மகன் மகன் மைந்தன் நான்முகற்கு, வாய்மையான்.***

**தகவு உறு சிந்தையன்** - *(மயிந்தன் வினவிய வினாவுக்கு, மறு மொழியாக, வீடணனுடைய அமைச்சர்களில் மூத்தவனான, அனலன்) தகைமை வாய்ந்த மனத்தை உடையவனும்;* **தரும நீதியன்** - *அறநெறி நின்ற, நீதியை உடையவனும்;* **நான்முகற்கு மகன் மகன் மைந்தன்** - *பிரம தேவனுக்குப் பேரனுக்கு மகனும்;* **வாய்மையான்** - *உண்மையாளனும் ஆனவீடணன்;* **பகலவன் வழி முதல்** - *சூரிய குலத்தில் தோன்றியவனும்;* **பாரின் நாயகன்** - *உலகுக் கெல்லாம் தலைவனும் ஆன இராமபிரானே;* **புகல்** - *எமக்குப் புகலிடம் ஆவான் என்று;* **அவன் கழல் அடைந்து** - *அப்பெருமானது திருவடிகளை அடைந்து;* **உய்யப் போந்தனன்** - *உய்வு பெற வந்துள்ளான் (என்று கூறினான்).*

*தகவு - நடுவுநிலைமை. நான்முகனுக்கு மகன் புலத்தியன்; அவன் மகன் விச்சிரவசு; அவன் மகன் வீடணன்.*

*பகலவன் - சூரியன். வழிமுதல் - வழித் தோன்றல். இராமபிரானது திருவடிகளுக்கே அடைக்கலமாகி அவனருளால் உய்வு பெற வந்தான் என்பதை 'புகல் அவன் கழல் அடைந்து உய்யப் போந்தனன்' என்றான். உலகனைத்துக்கும் தலைவனான திருமாலின் அவதாரம் ஆதலின் இராமனை "பாரின் நாயகன்" என்றான். நில மகளுக்குத் தலைவன் எனினும் பொருந்தும்.*

***6407. 'அற நிலை வழாமையும், ஆதி மூர்த்திபால்***
***நிறைவரு நேயமும், நின்ற வாய்மையும்,***
***மறையவர்க்கு அன்பும் என்று இனைய, மா மலர்***
***இறையவன் தர, நெடுந் தவத்தின் எய்தினான்.***

***அறநிலை வழாமையும்*** *- அற நெறியிலிருந்து தவறாமையும்;* ***ஆதிமூர்த்திபால் நிறைவருநேயமும்*** *- ஆதி மூர்த்தியான திருமாலிடம் நிறைந்த பக்தியும்;* ***நின்ற வாய்மையும்*** *- என்றும் மெய்மையில் நிலைத்து நிற்பதும்;* ***மறையவர்க்கு அன்பும்*** *- வேதங்களை அறிந்த சான்றோர்களிடம் அன்பும்;* ***என்று இனைய*** *- என்ற இத்தகை நல்ல பண்புகளை;* ***மாமலர் இறையவன்தர*** *- தாமரை மலரில் வாழும் பிரமதேவனே தந்துதவ;* ***நெடுந்தவத்தின் எய்தினான்*** *- நெடுங்காலம் செய்த தவத்தினால் அடைந்தவன் வீடணன்.*

*மாமலர் இறை - பிரம தேவன். வீடணன், அற நெறி தவறாமை, பரமனிடம் நிறைந்த பக்தி, வாய்மை, மறையவர்க்கு அன்பு என்ற இத்தகைய வரங்களை, தவம் செய்து பிரமதேவனிடம் வேண்டிப் பெற்றவனாவான்.*

***6408. ' "சுடு தியைத் துகிலிடைப் பொதிந்து, துன்மதி !***
***இடுதியே, சிறையிடை இறைவன் தேவியை;***
***விடுதியேல் உய்குதி; விடாது வேட்டியேல்,***
***படுதி" என்று உறுதிகள் பலவும் பன்னினான்.***

***சுடுதியை துகிலிடைப் பொதிந்து*** *- (இந்த வீடணன், இராவணனை நோக்கி) சுடும் தீயினை துணியிலே பொதிந்து வைப்பதைப் போல; துன்மதி - கெட்ட அறிவை உடையவனே (நீ);* ***சிறையிடை இறைவன் தேவியை இடுதியே*** *- இறைவனான இராமபிரானுடைய மனைவியை சிறையிலே வைத்தாயே;* ***விடுதியேல் உய்குதி*** *- பிராட்டியைச் சிறையிலிருந்து) விடுவிப்பாயானால் தப்பிப்பிழைப்பாய்;* ***விடாது வேட்டியேல் படுதி*** *- அவ்வாறு விடாமல் விரும்புவாயானால் இறந்து படுவாய்;* ***என்று உறுதிகள் பலவும் பன்னினான்*** *- என்றெல்லாம் பல உறுதியுரைகளை விரித்துக் கூறினான்.*

*'சுடு தீ' என்றது 'எதுகை' நோக்கி சுடுதி எனக்குறுகியது. செய்யுள் விகாரம். 'சுடு நெருப்பை துணியில் மூடிக்கட்டிவைத்தது போல சீதையைச் சிறை வைத்தாய். மடியில் நெருப்பைக் கட்டிவைத்தவன் மாய்வது போல நீ மாய்வது உறுதி' என அறிவுறுத்தினானென்க பன்னுதல் - விரித்துரைத்தல். வேட்டல் - விரும்புதல்.*

***6409. 'மறம் தரு சிந்தையன், மதியின் நீங்கினான்,***
***"பிறந்தனை பின்பு; அதின் பிழைத்தி; பேர்குதி;***
***இறந்தனை, நிற்றியேல்" என்ன, இன்னவன்***
***துறந்தனன்' என விரித்து, அனலன் சொல்லினான்.***

***மறம் தரு சிந்தையன்*** - *பாவச் செயல்களையே நினைந்து செய்யும் மனத்தினனும்;* ***மதியில் நீங்கினான்*** - *நல்லறிவு நீங்கப் பெற்றவனுமான இராவணன் வீடணனை நோக்கி;* ***பிறந்தனை பின்பு*** - *நீ எனக்குப் பின்பு பிறந்த தம்பியாவாய்;* ***அதின் பிழைத்தி*** - *அதனாலே பிழைத்தாய்;* ***பேர்குதி*** - *இப்போதே என் எதிரிலிருந்து போய்விடு;* ***நிற்றியேல் இறந்தனை*** - *இனி இங்கு நிற்பாயானால் இறந்து படுவாய்;* ***என்ன*** - *என்று கூற;* ***இன்னவன் துறந்தனன்*** - *இந்த வீடணன் இராவணனைவிட்டு நீங்கினான்;* ***எனவிரித்து அனலன் சொல்லினான்*** - *எனப் பலவாறு விரித்து வீடணனது முதல் அமைச்சனான அனலன் கூறினான்.*

*நல்லறிவு படைத்தவர்கள் இத்தகைய செயலைச் செய்யார் எனவே இதனைப் புரிந்த இராவணனை "மதியின் நீங்கினான்" என்றார்.*

*மயிந்தன் இராமபிரானிடம் சென்று தெரிவித்தல்*

***6410. மயிந்தனும் அவ் உரை மனத்து வைத்து, 'நீ***
***இயைந்தது நாயகற்கு இயம்புவேன்' எனா,***
***பெயர்ந்தனன்-'தம்பியும், பெயர்வு இல் சேனையும்,***
***அயிர்ந்திலிர் காமின்' என்று அமைவது ஆக்கியே.***

***மயிந்தனும் அவ்வுரைமனத்து வைத்து*** - *மயிந்தன் என்னும் வானர வீரன், அனலன் கூறியவைகளை எல்லாம் மனத்திற் கொண்டு;* ***நீ இயைந்தது நாயகற்கு இயம்புவேன் எனா*** - *நீ இங்கு வந்த இதனை தலைவனாகிய இராமனிடம் கூறுவேன் என்று;* ***தம்பியும், பெயர்வில் சேனையும் -*** *தனது தம்பியான துமிந்தனையும் போரில் பின் வாங்காத வானரப் படையினரையும்;* ***அயர்ந்திலிர் காமின் என்று*** - *சோர்வின்றி எச்சரிக்கையாகக் காவல் புரிந்திருங்கள் என்று கூறி;* ***அமைவது ஆக்கியே பெயர்ந்தனன்*** - *விழிப்புடன் இருக்குமாறு செய்து அங்கிருந்து இராமனிடம் சென்றான். இயைந்தது -இராமபிரானைச் சரண் அடையவந்தது. பெயர்வு இல் சேனை - போருக்குப் பின் வாங்காத படை அயர்தல்- சோர்தல். காமின் - காத்திருங்கள். வந்திருக்கும் புதியவர்கள் கூறியதெல்லாம் நல்லதே எனினும் நம்புவது எவ்வாறு என்பதால் இவர்கள் தப்பிச் செல்லாதபடி காவல் புரிந்திருங்கள் என்று தம்பியையும்,*

வானரப்படையினரையும் "அயர்ந்திலிர் காமின் என அமைவதாக்கிப் பெயர்ந்தனன் மயிந்தன்" என்றார்.

***6411. தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்,
மருவ அரும் பெருமையும் பொறையும் வாயிலாய்,
கருணை அம் கோயிலுள் இருந்த கண்ணனை,
அருள் நெறி எய்திச் சென்று, அடி வணங்கினான்.***

**தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்** - அறநெறியும், ஞான உணர்வும் தவ ஒழுக்கமும் ஆகிய மூன்றுமே மூன்று பக்கங்களில் அமைந்த மதில்களாகவும்; **மருவ அரும் பெருமையும் பொறையும் வாயிலாய்** - அடைவதற்கரிய பெருமையும் பொறுமையும் இரண்டு வாயில்கள் ஆகவும்; **கருணை அம் கோயிலுள்** - கருணையாகிய அழகிய கோவிலுக்குள்ளே; **இருந்த கண்ணனை** - அமர்ந்திருந்த அருட்கண்ணனாகிய இராமனை; **அருள் நெறி எய்திச் சென்று** - அவனது அருளாகிய நெறியிலே பொருந்திச் சென்று; **அடிவணங்கினான்** - மயிந்தன் இராமபிரானது திருவடிகளை வணங்கலாயினான்.

வேலி - மதிள். அறநெறியில் நின்று, தவஒழுக்கம் பூண்டு ஞான நிலையை எய்துவதே இறைவன் அருளைப் பெற்றுய்வதற்குரிய தாகும் என்பதால் 'கருணை' என்னும் கோயிலில் கோயில் கொண்ட பெருமானது திருக் கோவிலுக்கு மூன்று புறமும் அறம் முதலிய மூன்றும் மதில்கள் என்றார். பெருமையும், பொறுமையும் ஆகிய பண்புகளை வாயில்கள் என்றார். கருணை என்னும் பண்பே அப்பரமன் உறையும் திருக்கோயில் என்றார். அடியார்களின் குறையை நினைந்து அவன் மறுத்தாலும் அப்பரமனது கருணைப் பண்பு அடியவர்களை ஆட் கொள்ள வல்லது. இதனை "நீ மறந்தாய் எனினும் உனதருள் மறவாது" என்ற வள்ளலார் கூற்றும் புலப்படுத்தும். "கருணை நிறைந்து அகம் புறமும் துளும்பி வழிந்து, உயிர்க் கெல்லாம் கணைகண் ஆகி, தெருள் நிறைந்த இன்ப நிலை வளர்க்கின்ற' கண்களை உடையவன் இராமபிரான் என்பதால் "கண்ணன்" என்றார் போலும். கருணைக் கோயிலை அடைதற்கு அருள் நெறியே பற்றுக் கோடாக மயிந்தன் சென்றான் என்பதால் "அருள் நெறிஎய்திச் சென்று" என்றார். இப்பாட்டு உருவக அணியாகும். இராமபிரானை வருணித்த அருமைத் திருத்தொடர்கள் தமிழுக்கும் சமயத்துக்கும் அருங்கலமாதல் உணர்க.

***6412. 'உண்டு, உரை உணர்த்துவது, ஊழியாய்!' எனப்
புண்டரீகத் தடம் புரையும் பூட்சியான்,
மண்டிலச் சடை முடி துளக்கி, 'வாய்மையாய்!
கண்டதும் கேட்டதும் கழறுவாய்' என்றான்.***

***ஊழியாய்*** - ஊழியின் இறுதியிலும் அழியாதவனாய் என்றும் உள்ள பெருமானே; ***உண்டு, உரை, உணர்த்துவது என*** - அடியவனாகிய நான் உனக்குத் தெரிவிக்க வேண்டிய உரை ஒன்று உள்ளது என மயிந்தன் கூற; ***புண்டரீகத்தடம் பூத்த பூட்சியான்*** - தாமரை மலர்கள் மலர்ந்த தடாகம் போன்ற திருமேனி உடைய இராமபிரான்; ***மண்டிலச் சடைமுடி துளக்கி*** - வட்டவடிவமான தனது சடைமுடியை அசைத்து; ***வாய்மையாய்*** - உண்மையாளனே; ***கண்டதும் கேட்டதும்*** - நீ பார்த்தவைகளையும், கேட்டவைகளையும்; ***கழறுவாய் என்றான்*** - கூறுவாயாக என்றான்.

*உலகனைத்தும் அழியும் பேரூழிக்காலத்தும் தான் அழியாதிருப்பவன் இறைவன் என்பதால் இராமனை "ஊழியாய்" என்றான். "தாமரை நீள் வாசத்தடம் போல் வருவானே" என்ற திருவாய் மொழி (8.6.1) ஒப்பிடத்தக்கது. கார்க்கடல் கமலம் பூத்ததெனப் பொலிவான் '(6493) எனவும்,' வதனம் வாய் கண்கள் கை கால் எனப் புண்ட ரீகத் தடம் பூத்து (7530) எனவும் பின்னரும் கூறுவார். பூட்சி - உடல் (திருமேனி) மண்டிலம் - வட்டம். இராமபிரானுடைய நீல நிறத் திரு மேனி தாமரை இலை படர்ந்த தடாகம். அப்பெருமானது கண்கள், வாய், கைகள், கால்கள் சிவந்த தாமரை மலர்கள் எனவே தாமரை மலர்ந்த தடாகம் போன்ற திருமேனியுடையவன் என்பதை "புண்டரீகத்தடம் பூத்த பூட்சியான்" என்றார்.*

***6413. 'விளைவினை அறிந்திலம்; வீடணப் பெயர்***
***நளிர் மலர்க் கையினன், நால்வரோடு உடன்,***
***களவு இயல் வஞ்சனை இலங்கை காவலற்கு***
***இளவல், நம் சேனையின் நடுவண் எய்தினான்.***

***விளைவினை அறிந்திலம்*** - பின்னால் நேரப் போவதொன்றும் நாங்கள் அறியோம்; ***களவியல் வஞ்சனை*** - களவுத்தன்மையுடன் கூடிய வஞ்சகத்தையும் கொண்ட; ***இலங்கை காவலற்கு இளவல்*** - இலங்கை வேந்தனான இராவணனுடைய தம்பியான; ***வீடணப் பெயர்*** - வீடணன் என்ற பெயருள்ள; ***நளிர் மலர்க்கையினன்*** - குளிர்ந்த மலர் போன்ற கைகளை உடையவன்; ***உடன் நால்வரோடு*** - தன்னுடன் வந்த நான்கு பேருடனே; ***நம் சேனையின் நடுவண் எய்தினான்*** - நமது வானரப் படைக்கு நடுவே வந்தடைந்தான்.

*சீதாபிராட்டியை வஞ்சகத்தால் கொண்டு சென்று சிறை வைத்த இராவணனை "களவியல் வஞ்சனை இலங்கைக் காவலன்" என்றார். இவ்வாறு அமைச்சர் நால்வரோடும் இவன் இங்கு வந்திருப்பதால் பின்னால் நேருவதொன்றும் நாம் தெரிந்தோமில்லை என்பதனை "வினை விளைவு அறிந்திலம்" என்றான். நடுவண் - மையம்.*

***6414. ' "கொல்லுமின், பற்றுமின்" என்னும் கொள்கையான்,***
***பல் பெருந் தானை சென்று அடர்க்கப் பார்த்து,***
***யான்,***

***"நில்லுமின்" என்று, "நீர் யாவிர்? நும் நிலை***
***சொல்லுமின்" என்ன, ஓர் துணைவன் சொல்லினான்.***

***கொல்லுமின் பற்றுமின்*** *- கொல்லுங்கள் பிடியுங்கள்;* ***என்னும் கொள்கையான்*** *- என்ற கருத்துடையதாகி;* ***பல்பெருந்தானை*** *- பல்கி, பெரிதாயுள்ள வானர சேனை;* ***சென்று அடர்க்கப் பார்த்து*** *- சென்று தாக்கத் தொடங்கியதைப் பார்த்து;* ***யான் நில்லுமின் என்று*** *- நான் உடனே நில்லுங்கள் என்று வானர சேனையைத் தடுத்து;* ***நீர் யாவிர்? நும்நிலை சொல்லுமின் என*** *- வீடணன் முதலியோரை நோக்கி, நீங்கள் யார்? உங்களது நிலை என்ன சொல்லுங்கள் என்று கேட்க;* ***ஓர் துணைவன் சொல்லினான்*** *- வீடணனுடைய துணைவர்களில் ஒருவன் பின்வருமாறு கூறினான்.*

*அடர்த்தல் - தாக்குதல். ஓர் துணைவன் - துணையாக வந்த நால்வரிலே ஒருவனான அனலன்.*

***6415. ' "முரண் புகு தீவினை முடித்த முன்னவன்***
***கரண் புகு சூழலே சூழ, காண்பது ஓர்***
***அரண் பிறிது இல் என, அருளின் வேலையைச்***
***சரண் புகுந்தனன்" என முன்னம் சாற்றினான்.***

***முரண்புகுதீவினை முடித்த முன்னவன்*** *- அறத்துக்கு மாறானதாகப் புக்க தீயசெயலைச் செய்து முடித்த அண்ணனாகிய இராவணன்;* ***கரண்புகு சூழலே சூழ*** *- மனம் போன போக்கிலேயே போக (அதைப் பார்த்த வீடணன்);* ***காண்பதோர் அரண்பிறிதில் என*** *- நமக்குப் பாதுகாப்பு வேறெதுவும் காணப்படவில்லை என்று;* ***அருளின் வேலையை*** *- அருட்கடலாக விளங்கும் இராமபிரானை;* ***சரண்புகுந்தனன்*** *- அடைக்கலம் அடையப் புகுந்தான்;* ***என முன்னம் சாற்றினான்*** *- என்று முதலிலேயே கூறினான்.*

*முரண்-மாறுபாடு (அறத்துக்கு மாறானது) தீவினை-தீய செயல் சீதா பிராட்டியை வஞ்சித்துக் கவர்ந்து வந்தது சிறை வைத்து போன்ற தீய செயல்கள். கரண்-அந்தக் கரணம். இங்கே மனம். முரண்பட்ட தீவினை செய்த அண்ணன், மனம்போன போக்கில் செல்வதால் - இவனுடன் வாழ்தல் ஏற்றதல்ல. இராமபிரானைத் தவிர புகலிடம் வேறில்லை எனவே அருட்கடலான இராமனைச் சரண் அடைய வந்துள்ளான்.*

***6416. ' "ஆயவன், தருமமும், ஆதி மூர்த்திபால்***
***மேயது ஓர் சிந்தையும், மெய்யும், வேதியர்***
***நாயகன் தர, நெடுந் தவத்தின், நண்ணினன்;***
***தூயவன்" என்பது ஓர் பொருளும் சொல்லினான்.***

***ஆயவன்*** - *அந்தவீடணன்; தருமமும் - அறநெறி நின்று ஒழுகுவதும்;* ***ஆதி மூர்த்திபால் மேயதோர்சிந்தையும்*** - *ஆதி மூர்த்தியான திருமாலிடம் பக்தி கொண்டு சேர்ந்த மனமும்;* ***மெய்யும்*** - *வாய்மையில் நிலைத்து நிற்பதும்;* ***வேதியர் நாயகன் தர*** *-வேதம் வல்ல வேதியர்களுக்கெல்லாம் தலைவனான பிரமன் தந்த வரத்தால்;* ***நெடும் தவத்தின் நண்ணினன்*** - *தான் செய்த பெரும் தவத்தால் அடைந்தான்;* ***தூயவன்*** - *எனவே மனம், மொழி செயல்களால் தூய்மை நிறைந்தவன்;* ***என்பதோர் பொருளும் சொல்லினன்*** - *என்பதொரு பொருளையும் சொன்னான்.*

*நாம் ஏற்றுக்கொள்ளத் தக்கவன் என்ற குறிப்புத் தோன்ற "தூயவன்" எனக் கூறியது மயிந்தன் கருத்து எனலாம். வேதியர் நாயகன்-பிரமன்.*

***6417. ' "கற்புடைத் தேவியை விடாது காத்தியேல்,***
***எற்புடைக் குன்றம் ஆம் இலங்கை; ஏழை ! நின்***
***பொற்புடை முடித் தலை புரளும்-என்று ஒரு***
***நற் பொருள் உணர்த்தினன்" என்றும் நாட்டினான்.***

***கற்புடைத் தேவியை*** - *(மேலும் இராவணனை நோக்கி வீடணன்) கற்புக்கரசியான இராமபிரானுக்குரிய தேவியான சீதாபிராட்டியை;* ***விடாது காத்தியேல்*** - *இராமபிரானிடம் செல்லவிடாது சிறையில் வைத்துக் காத்தாயானால்;* ***இலங்கை எற்புடைக் குன்றமாம்*** - *(இலங்கையில் வாழும் நமது அரக்கர்களின் இனமெலாம் இறந்துபட) இலங்கைநகர் முழுவதும் எலும்புகளாலான குன்றுகளே நிறைந்திருக்கும்;* ***ஏழை*** - *அறிவற்றவனே! ;* ***நின் பொற்புடை முடித்தலை புரளும்*** - *உனது அழகிய மணிமுடியை அணிந்துள்ள பத்துத்தலைகளும் இராமனால் துண்டிக்கப்பட்டுத் தரையிலே புரளும்;* ***என்று ஒரு நற்பொருள் உணர்த்தினன்*** - *என்று இராவணனுக்கு நன்மை தரும் ஒரு பொருளையும் உணர்த்தினான்;* ***என்றும் நாட்டினான்*** - *என்றும் உறுதியாகக் கூறினான்.*

*எற்பு-எலும்பு. குன்றம்-மலை 'இலங்கை பாழாகி' எலும்பு மலைகளாய் விடும் என்றான்.*

***6418. 'ஏந்து எழில் இராவணன், "இனைய சொன்ன நீ***
***சாம் தொழிற்கு உரியை, என் சார்பு நிற்றியேல்;***
***ஆம் தினைப் பொழுதினில் அகறியால்-எனப்***
***போந்தனன்" என்றனன்; புகுந்தது ஈது' என்றான்.***

***ஏந்து எழில் இராவணன்*** - *மிகுந்த அழகை உடைய இராவணன்; (வீடணன் கூறியதைக் கேட்டு)* ***இனைய சொன்ன நீ*** - *இத்தகைய சொற்களைச் சொன்ன நீ;* ***என் சார்பு நிற்றியேல்*** - *இனி எனக்கருகில் நின்றாயாயின்;* ***சாம் தொழிற்கு உரியை*** - *செத்து*

*ஒழிவதற்கு உரியவனாவாய்;* ***ஆம் தினைப் பொழுதினில் அகறியால்*** *- சிறிது நேரத்தில் இங்கு நின்றும் அகல்வாயாக;* ***எனப் போந்தனன்*** *- என்று இராவணன் கூறினான்; வீடணன் இங்கு சரணடைய வந்தான்;* ***புகுந்தது ஈது என்றான்*** *- நிகழ்ந்தது இதுதான் என்று மயிந்தன் இராமனுக்குக் கூறினான்.*

*சாம் தொழில் - சாகும் தொழில், புகுந்தது - நிகழ்ந்தது. எந்தொழில் என்பதற்கு.*

### *இராமபிரான், வீடணன் அடைக்கலம் குறித்து நண்பர்களோடு ஆராய்தல்*

***6419. அப் பொழுது, இராமனும், அருகில் நண்பரை,***
***'இப் பொருள் கேட்ட நீர் இயம்புவீர்-இவன்***
***கைப்புகற்பாலனோ? கழியற்பாலனோ?-***
***ஒப்புற நோக்கி, நும் உணர்வினால்' என்றான்.***

***அப்பொழுது இராமனும்*** *- மயிந்தன் இவ்வாறு கூறியதைக் கேட்டபொழுது இராமபிரானும்;* ***அருகில் நண்பரை*** *- (தன்னைவிட்டுப் பிரியாது) பக்கத்தில் இருக்கும் சுக்கிரீவன் முதலான நண்பர்களை நோக்கி;* ***இப்பொருள் கேட்ட நீர்*** *- மயிந்தன் கூறிய இக்கருத்தைக் கேட்ட நீங்கள்;* ***இவன் கைப்புகற்பாலனோ*** *- இந்த வீடணன் நமது பக்கம் சேர்த்துக் கொள்ளத்தக்கவனா;* ***கழியற் பாலனோ*** *- கழித்து ஒதுக்கத்தக்கவனா;* ***ஒப்புற நும் உணர்வினால்*** *- உங்கள் மன உணர்வுக்கு ஒப்ப ஆராய்ந்து பார்த்து;* ***இயம்புவீர் என்றான்*** *- உங்கள் கருத்தை நீங்கள் கூறுமின் என்றான்;*

*இப்பொருள்-மயிந்தன் கூறிய வீடணன் சரண்புக வந்த செய்தி. கைப்புகல்-நம் பக்கம்சேர்தல். கழியல்-நீக்குதல் ஒப்புற-ஏற்ப. பிறர் கருத்தையும் கேட்டுச் செயற்படும் இராமபிரானுடைய குணநலம் புலப்படுகிறது.*

### *சுக்கிரீவன் உரை*

***6420. தட மலர்க் கண்ணனைத் தடக் கை கூப்பி நின்று,***
***'இடன் இது; காலம் ஈது' என்ன எண்ணுவான்,***
***கடன் அறி காவலன் கழறினான் அரோ-***
***சுடர் நெடு மணி முடிச் சுக்கிரீவனே:***

***கடன் அறிகாவலன்*** *- தனக்குரிய கடமையை அறிந்த கிட்கிந்தை மன்னனும்;* ***சுடர் நெடு மணிமுடிச் சுக்கிரீவன்*** *- ஒளிமிக்க நீண்ட மணிமுடியைத் தரித்துள்ள வானர வேந்தனுமான சுக்கிரீவன்;* ***தடமலர் கண்ணனை*** *- அகன்ற தாமரை மலர் போன்ற கண்களை உடையவனாகிய இராமபிரானை;* ***தடக்கை கூப்பி நின்று*** *- விசாலமான தனது இரண்டு கைகளையும் தலைமீது குவித்து வணங்கி நின்று;* ***இடன் இது காலம் ஈது*** *- வீடணன் வந்துள்ள இடம் இது. அவன் இங்கு வந்துள்ள தருணம்*

*இது; **என்ன எண்ணுவான்** - என்றெல்லாம் எண்ணிப் பார்த்தவனாய்; **கழறினான்** - இராமபிரானிடம் கூறுவானானான். தனக்குரிய கடமை இதுவென நன்றாக அறிந்தவன் என்பதால், 'கடனறிகாவலன்' என்றார். வீடணன் வந்த இடம் வந்த காலம் இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்த சுக்கிரீவனை 'இடம் இது காலம் ஈது என்ன எண்ணுவான்' என்றார். கழறுதல்-கூறுதல். எண்ணுவான்-எண்ணியவனாக (முற்றெச்சம்). தடமலர், தடக்கை என்பவற்றில் அமைந்த 'தட' அகன்ற என்னும் பொருள் உடையது.*

***6421. 'நனி முதல் வேதங்கள் நான்கும், நாம நூல்***
***மனு முதல் யாவையும், வரம்பு கண்ட நீ,***
***இனையன கேட்கவோ, எம்மனோர்களை***
***வினவிய காரணம்?-விதிக்கும் மேல் உளாய்!***

***விதிக்கும் மேல் உளாய்** - விதிக்கும் விதியாக அதற்கு மேம்பட்டு விளங்குபவனே! **தனி முதல் வேதங்கள் நான்கும்** - தனிச்சிறப்புடைய, முதன்மை வாய்ந்த நான்கு வேதங்களுக்கும்; **நாம நூல் மனுமுதல் யாவையும்** - புகழ் மிகுந்த நூல்களான மனு முதலிய எல்லாவற்றுக்கும்; **வரம்பு கண்ட நீ** - எல்லை கண்டறிந்துள்ள நீ; **எம்மனோர்களை வினவிய காரணம்** - எங்களைப் போன்றவர்களைக் கேட்பதற்கான காரணம்; **இனையன கேட்கவோ** - (கைப்புகற் பாலனோ, கழியற் பாலனோ) என்பதனைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவோ? என்றான்.*

*உயிர்களின் வினைகளுக்கேற்ப பயனைத் தருவது விதி என்பர். அந்த விதியைக் கூடமாற்றும் வித்தகன் இறைவன் 'விதிக்கு நாயகன்' என்றார். நாமம்-புகழ். மனுமுதலிய நூல்கள் புகழ் மிகுந்து விளங்குவனவாதலால் 'நாம நூல் மனு முதல் யாவையும்' என்றார். வரம்பு காணுதல்-முழுதும் கற்றுணர்தல். 'தென்சொற் கடந்தான் வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்தான்' (1741) என முன்னும் கூறினார். 'நான்மறையின் கனி' (2610) எனவும் மறைகளுக்கு இறுதியாவான் (4740) எனவும் முன்னர் வந்துள்ள தொடர்களை நினைக்க. எங்களைப் போன்றவர்களைக்கேட்டுத் தெரிந்து கொள்ளவோ கேட்டாய்? கேட்க வேண்டும் என்ற முறை பற்றிக் கேட்டாய் என்பான், "எம்மனோர்களை வினவிய காரணம் இனையன கேட்கவோ" என்றான்.*

***6422. 'ஆயினும், விளம்புவென், அருளின் ஆழியாய்!***
***ஏயினதுஆதலின், "அறிவிற்கு ஏற்றன,***
***தூய அன்று" என்னினும், "துணிவு அன்று" என்னினும்,***

***மேயது கேட்டியால்; விளைவு நோக்குவாய்.***

***அருளின் ஆழியாய்** - அருட்கடலாகத் திகழ்பவனே! **ஆயினும் விளம்புவென்** - ஆனாலும் நீ கேட்பதால்*

*சொல்லுகிறேன்;* ***ஏயினது ஆதலின்*** *- நீ கட்டளை இட்டாய் ஆதலால்;* ***அறிவிற்கு ஏற்றன*** *- எனது அறிவுக்குப் பொருந்தியவைகளை;* ***தூய அன்று என்னினும்*** *- உன் கருத்துக்கேற்ப தூய்மையானது அல்ல என்றாலும்;* ***துணிவுஅன்று என்னினும்*** *- துணிந்து முடிவானதல்ல என்றாலும்;* ***விளைவு நோக்குவாய்*** *- பின் விளைவை நினைந்து பார்க்கும் நீ;* ***மேயது கேட்டியால்*** *- எனது மனத்துக்குப் பொருந்துவதைச் சொல்லக் கேட்பாயாக (என்றான்).*

*நீ இட்ட கட்டளையை ஏற்றுச் செயல்படும் தொண்டன் என்பதால் நீ ஏவியதைச் செய்வேன் என்பான் 'ஏயது ஆதலின்' என்றான். எனது கருத்து நல்லதல்ல என்றாலும், முடிந்த முடிவுஅல்ல என்றாலும் அறிவுக்குப் பட்டதைச் சொல்வேன் என்றான்.*

***6423. 'வெம் முனை விளைதலின் அன்று; வேறு ஒரு***
***சும்மையான் உயிர் கொளத் துணிதலால் அன்று;***
***தம்முனைத் துறந்தது, தரும நீதியோ?***
***செம்மை இல் அரக்கரில் யாவர் சீரியோர்?***

***வெம்முனை விளைதலின் அன்று*** *- இந்த வீடணன் இராவணனை விட்டு நீங்கி வரக் காரணம் அவனுடன் கொடிய போர் விளைந்ததால் அல்ல;* ***வேறொரு சும்மையான்*** *-வேறான ஒரு பழிக்கத்தக்க செயலால்;* ***உயிர் கொளத் துணிதலால் அன்று*** *- இவனது உயிரை அபகரிக்க அந்த இராவணன் துணிந்ததாலும் அல்ல;* ***தம்முனைத் துறந்தது*** *- ஏற்றுக் கொள்ளத்தக்க காரணம் ஏதுமின்றி தனது அண்ணனான இராவணனை வீடணன் பிரிந்து நீங்கி வந்தது;* ***தரும நீதியோ*** *- அறத்தொடு பொருந்திய நீதியாகுமோ?* ***செம்மையில் அரக்கரில்*** *- நல்ல பண்பற்ற அரக்கர்களில்;* ***யாவர் சீரியோர்*** *- யார் சிறந்த மேலோர்கள் உள்ளனர்?*

*சுக்கிரீவனைக் கொல்லவும் வாலி முயன்றான் என்பதால், இராமனைத் துணை கொள்ள வேண்டியதாயிருந்தது. வீடணனுக்கு அத்தகைய நிலை இல்லை என்பது சுக்கிரீவன் கருத்து. நேரிடையாக பகைமை இல்லாதபோதும் அண்ணனைப் பிரிந்து வந்த வீடணன் செயல் அறமாகுமா என்பது சுக்கிரீவன் கேள்வி. அரக்கர்களிடையே நல்லவர்கள் இருக்கமுடியாது என்பதும் அவன் கருத்து.*

***6424. 'தகை உறு தம்முனை, தாயை, தந்தையை,***
***மிகை உறு குரவரை, உலகின் வேந்தனை,***
***பகை உற வருதலும், துறந்த பண்பு இது***
***நகையுறல் அன்றியும், நயக்கற்பாலதோ?***

***தகை உறு தம் முனை*** *- தகைமை உடைய தனது முன்னோனையும்;* ***தாயை தந்தையை*** *- தாயையும் தந்தையையும்;* ***மிகை உறு குரவரை*** *-சிறப்புடைய சான்றோர்களையும்;* ***உலகின் வேந்தனை*** *- உலகாளும் மன்னனையும்;* ***பகை உற வருதலும்*** *- பகைத்துக் கொண்டு வருவதும்;* ***துறந்த பண்பு இது*** *- பிரிந்து நீங்குவதுமான*

*இந்தத் தன்மை;* ***நகை உறல் அன்றியும்*** *- சிரிப்புக்கு இடமாவதே அல்லாது;* ***நயக்கற் பாலதோ*** *- விரும்பத்தக்க செயலாகுமோ?*

*தகுதியில் சிறந்த மேலான தமையன் முதலானோரைத் துறப்பது நகைப்பிறகிடமாகுமேயல்லாது விரும்பத்தக்க செயலாகாது என்கிறான்.*

***6425. 'வேண்டுழி இனியன விளம்பி, வெம் முனை***
***பூண்டுழி, அஞ்சி, வெஞ் செருவில் புக்கு உடன்***
***மாண்டு ஒழிவு இன்றி, நம் மருங்கு வந்தவன்***
***ஆண்தொழில், உலகினுக்கு ஆணி ஆம் அன்றே?***

***வேண்டுழி இனியன விளம்பி*** *- தனது அண்ணனுடைய உதவி வேண்டிய போது இனிதாகப் பேசிச் சேர்ந்திருந்து விட்டு;* ***வெம்முனைபூண்டுழி அஞ்சி*** *- அண்ணன் போர் மேற்கொண்ட காலத்தில் பயந்து போய்;* ***வெஞ்செருவில் புக்கு*** *- கொடிய போர்க்களம் புகுந்து;* ***உடன் மாண்டு ஒழிவின்றி*** *- அண்ணனுடன் இறந்தொழியாமல்;* ***நம்மருங்கு வந்தவன்*** *- நம் பக்கம் சேர வந்த இந்த வீடணனுடைய;* ***ஆண்தொழில்*** *- ஆண்மைத் தொழில்;* ***உலகினுக்கு ஆணியாமன்றே*** *- உலகுக்கே ஆணி போன்றதல்லவா?*

*ஆண்தொழில், உலகினுக்கு ஆணி எனக் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு.*

***6426. 'மிகைப் புலம் தருமமே வேட்ட போது, அவர்***
***தொகைக் குலம் துறந்து போய்ச் சார்தல் அன்றியே,***
***நகைப் புலம் பொதுவுற நடந்து, நாயக!***
***பகைப் புலம் சார்தலோ? பழியின் நீங்குமோ?***

***நாயக!*** *- தலைவனே! மிகைப்புலம் - தனது மேலான அறிவு;* ***தருமமே வேட்டபோது*** *- அறநெறியையே விரும்பிய போது;* ***அவர் தொகைக்குலம் துறந்து போய்*** *-அறத்துக்கு மாறுபட்ட அவர்களது தொகுதியான கூட்டத்தை விட்டு நீங்கி;* ***சார்தல் அன்றியே*** *- வேறிடம் செல்லுதலை விட்டு;* ***நகைப்புலம் பொதுவுற*** *- பொதுவாக எல்லோரும் பழித்து நகைப்பதற்கு இடமாக;* ***நடந்து பகைப்புலம் சார்தலோ*** *- நடந்து வந்து பகைவருடன் சேர்வதோ?* ***பழியின் நீங்குமோ*** *- இந்த வீடணன் பழியிலிருந்து நீங்குவானோ?*

*மகாபாரதத்தில் விதுரன் இருபாலும் சாராமல் தனித்து நின்றதை நினைக.*

***6427. 'வார்க்குறு வனை கழல் தம்முன் வாழ்ந்த நாள்,***
***சீர்க்கு உறவு ஆய், இடைச் செறுநர் சீறிய***
***போர்க்கு உறவு அன்றியே போந்த போது, இவன்***
***ஆர்க்கு உறவு ஆகுவன்?-அருளின் ஆழியாய்!***

***அருளின் ஆழியாய்!*** - *அருட்கடலாகத் திகழ்பவனே!* ***வார்க்குறு வனைகழல் தம்முன்*** - *உருக்கி வார்த்துச் செய்த கழல்களை அணிந்த அண்ணனோடு;* ***வாழ்ந்த நாள் சீர்க்கு உறவாய்*** - *அவனுடன் வாழ்ந்த நாளெல்லாம் செல்வத்தை அனுபவித்து உறவாக இருந்து விசட்டு;* ***இடைச்செறுநர் சீறிய*** - *இடையிலே பகைவர் சினந்து எழுந்தபோது;* ***போர்க்கு உறவு அன்றியே*** - *அந்தப் போர்க்காலத்தில் பங்கேற்கும் உறவு இல்லாது;* ***போந்த போது*** - *அண்ணனுக்கு பகைவர்களான நம்மிடம் சேர இங்கு வந்த போது;* ***இவன் ஆர்க்கு உறவாகுவன்*** - *இந்த வீடணன் வேறு யார்க்கு உறவாவான்?*

***6428. 'ஒட்டிய கனக மான் உருவம் ஆகிய***
***சிட்டனும், மருமகன் இழைத்த தீவினை***
***கிட்டிய போதினில், தவமும் கேள்வியும்***
***விட்டது கண்டும், நாம் விடாது வேட்டுமோ?***

***ஒட்டிய கனகமான் உருவம்*** - *இடையில் ஏற்றுக்கொண்ட பொன்மான் வடிவம்;* ***ஆகிய சிட்டனும்*** - *எடுத்த பெரியோனும் (மாரீசன்);* ***மருமகன் இழைத்த*** - *தனது மருமகனான இராவணன் செய்த;* ***தீவினை கிட்டிய போதினில்*** - *தீய செயல் நெருங்கிய சமயத்தில்;* ***தவமும் கேள்வியும் விட்டது கண்டும்*** - *தவத்தையும் வேதநெறியையும் விட்டு விட்டதைப் பார்த்தும்;* ***நாம் விடாது வேட்டுமோ*** - *இந்த வீடணனைத் தவமுடையவன் என்பதால் விடாது விரும்பலாமோ?*

*'சிட்டன்' என்பதற்குப் பெரியோன் என்பது பொருளாயினும் இங்கு இகழ்ச்சி தோன்ற நின்றது.*

***6429. 'கூற்றுவன்தன்னொடு எவ் உலகும் கூடி வந்து***
***ஏற்றன என்னினும், வெல்ல ஏற்றுளம்;***
***மாற்றவன் தம்பி நம் மருங்கு வந்து, இவண்***
***தோற்றுமோ? அன்னவன் துணைவன் ஆகுமோ?***

***கூற்றுவன் தன்னொடு எவ்வுலகும் கூடிவந்து ஏற்றன என்னினும்*** - *நமக்கு எதிராக எமனுடன் சேர்ந்து கொண்டு எல்லா உலகத்தவர்களும் கூடிநின்று எதிர்த்தார் என்றாலும்;* ***வெல்ல ஏற்றுளம்*** - *வெல்வது என்ற முடிவை ஏற்றுள்ளோம்;* ***மாற்றவன்***

***தம்பி*** - நமக்குப் பகைவனான இராவணனுடைய தம்பியாகிய இந்த வீடணன்; ***நம் மருங்கு வந்து*** - நமது பக்கம் வந்து சேர்ந்து; ***தோற்றுமோ*** - தோன்றுவானோ? ***அன்னவன் துணைவன் ஆகுமோ*** - அவன் நமக்கு வெற்றிதேடித் தரும் துணைவன் ஆவானோ?

*ஏற்றன - எதிர்த்தன. மாற்றவன்-பகைவன் (இராவணன்).*

***6430. ' "அரக்கரை ஆசு அறக் கொன்று, நல் அறம்***
***புரக்க வந்தனம்" எனும் பெருமை பூண்ட நாம்,***
***இரக்கம் இல் அவரையே துணைக் கொண்டு ஏற்றும்***
***ஏல்,***
***"சுருக்கும் உண்டு அவர் வலிக்கு" என்று தோன்றுமால்.***

***அரக்கரை ஆசு அறக் கொன்று*** - அரக்கர்களையெல்லாம் அடியோடு கொன்று; ***நல்லறம் புரக்க வந்தனம்*** - நல்ல அறத்தைக் காப்பதற்கு வந்தோம்; ***எனும் பெருமை பூண்ட நாம்*** - என்ற பெருமையைப் பூண்டுள்ள நாம்; ***இரக்கம் இல் அவரையே*** - இரக்கம் சிறிதுமில்லாத அவர்களையே; ***துணைக்கொண்டு ஏற்றுமேல்*** - துணையாகக் கொண்டு போரை ஏற்றுக்கொண்டோம் என்றால்; ***அவர் வலிக்கு சுருக்கம் உண்டு*** - நம்முடைய வலிமைக்கு குறைவுண்டு; ***என்று தோன்றும்*** - என்று தோன்றுமல்லவா?

*ஆசு அற-சிறிதுமின்றி (அடியோடு) புரக்க-காக்க. வந்தனம்- வந்தோம். அவர் என்ற சொல் இராம இலக்குவர்களைக் குறிக்கும். பகைவர் பார்வையில் அவர் என்று குறிக்கப்பட்டது. ஏற்றும் எல்-ஏற்றுக் கொண்டோம் என்றால் என்பது பொருள்.*

***6431. 'விண்டுழி, ஒரு நிலை நிற்பர்; மெய்ம் முகம்***
***கண்டுழி, ஒரு நிலை நிற்பர்; கைப் பொருள்***
***கொண்டுழி, ஒரு நிலை நிற்பர்; கூழுடன்***
***உண்டுழி, ஒரு நிலை நிற்பர்-உற்றவர்.***

***உற்றவர்*** - நம்மிடம் அடைக்கலம் அடைந்த இதே அரக்கர்கள்; ***விண்டுழி ஒரு நிலை நிற்பர்*** - நம்மைப் பிரிய நேர்ந்த போது ஒரு நிலையிலே நிற்பார்கள்; ***மெய்முகம் கண்டுழி*** - மெய்யாக நம்முகம் கண்ட போது; ***ஒரு நிலை நிற்பர்*** - ஒரு நிலையிலே நிற்பார்கள்; ***கைப்பொருள் கொண்டுழி*** - நாம் தரும் கைப்பொருள்களைப் பெற்றுக்கொண்ட போது; ***ஒரு நிலை நிற்பர்*** - வேறு ஒரு நிலையிலே நிற்பார்கள்; ***கூழுடன் உண்டுழி*** - நம்மோடு சேர்ந்து உணவுண்ணும் போது; ***ஒருநிலை நிற்பர்*** - ஒரு நிலையிலே நிற்பார்கள்.

*அரக்கர்களுக்கு நிலையான புத்தி இல்லை. சமயம்போல மாறிமாறி நிற்கும் நிலை உடையவர்கள் என்பது சுக்கிரீவன் கருத்து.*

***6432. 'வஞ்சனை இயற்றிட வந்தவாறு அலால்,***
***"தஞ்சு" என நம்வயின் சார்ந்துளான் அலன்;***
***நஞ்சினின் கொடியனை நயந்து கோடியோ?-***
***அஞ்சன வண்ண!' என்று, அறியக் கூறினான்.***

***அஞ்சன வண்ண** - மை போன்ற நிறத்தை உடையவனே! **வஞ்சனை இயற்றிட** - வஞ்சகம் செய்வதற்காக; **வந்தவாறு அலால்** - வந்திருப்பதே அல்லாமல்; **'தஞ்சு' என நம் வயின் சார்ந்துளான்அலன்** - அடைக்கலம் என்று நம்மிடம் அடைந்தவன் அல்லன்; **நஞ்சினில் கொடியனை** - விடத்தினும் கொடியனான இந்த அரக்கனை (வீடணனை); **நயந்துகோடியோ** - விரும்பி ஏற்றுக் கொள்வாயோ? **என்று அறியக் கூறினான்** - என்று தன் கருத்தை இராமபிரான் அறியும்படி சுக்கிரீவன் கூறினன்.*

*இராவணனிடம் மிகுந்த அன்புடைய தம்பி இவன். 'தஞ்சம்' என்று, நம்மிடம் வந்தது வஞ்சகச் செயலே என்பது சுக்கிரீவன் கருத்து. தஞ்சு-தஞ்சம்.*

*சாம்பன் கருத்து*

***6433. அன்னவன் பின்னுற, அலகு இல் கேள்வியின்***
***தன் நிகர் பிறர் இலாத் தகைய சாம்பனை,***
***'என்னை உன் கருத்து?' என இறை வினாயினான்:***
***தொன் முறை நெறி தெரிந்து, அவனும்***
***சொல்லுவான்.***

***அன்னவன் பின்னுற** - அந்த சுக்கிரீவன் தனது கருத்தைக் கூறி முடித்ததன்பின்; **அலகின் கேள்வியின்** - அளவற்ற கேள்வி ஞானத்திலே; **தன் நிகர் பிறர் இலா** - தனக்கு ஒப்பாக வேறு எவரையும் கூற இயலாத; **தகைய சாம்பனை** - பெருமைமிக்க சாம்பவந்தனை நோக்கி; **என்னை உன் கருத்து** - உனது கருத்து என்ன; **என இறை வினாயினான்** - என்று இறைவனான இராமபிரான் கேட்டான்; **தொன்முறை நெறி தெரிந்து** - பழமையான நெறிமுறைகளை நன்கு ஆராய்ந்து; **அவனும் சொல்லுவான்** - சாம்பவந்தனும் தனது கருத்தைக் கூறுவானாயினான்;*

*அன்னவன்-சுக்கிரீவன். பின்னுற-கூறியபின். பிரமதேவன் அம்சமாகத் தோன்றியவன், கல்வி கேள்விகளில் வல்லவன், தனக்கு எவரையும் நிகர் கூற இயலாதவன் என்பதால் "அலகில் கேள்வியின் தன் நிகர் பிறரிலாத்தகைய சாம்பன்" என்றார். தொன்மைக்காலமாகத் தொடர்ந்திருக்கும் நெறி, முறைகளை நன்கு*

*தேர்ந்தவனாதலின் "தொன் முறை நெறி தெரிந்து சொல்லுவான்" என்றார். இது முதல் ஆறுபாடல்கள் சாம்பவந்தன் கூற்றாகும்.*

***6434. 'அறிஞரே ஆயினும், அரிய தெவ்வரைச்***
***செறிஞரே ஆவரேல், கெடுதல் திண்ணமாம்;***
***நெறிதனை நோக்கினும், நிருதர் நிற்பது ஓர்***
***குறி நனி உளது என உலகம் கொள்ளுமோ?***

***அறிஞரே ஆயினும்** - அவர் கற்றறிந்த அறிஞர்களே ஆனாலும்; **அரியதெவ்வரை** - நம்புவதற்கரிய பகைவர்களை; **செறிஞரே ஆவரேல்** - சேர்ந்தவர் ஆவார் என்றால்; **கெடுதல் திண்ணமாம்** - அவர்களைச் சேர்த்துக் கொண்டவர்கள் கெடுவது உறுதியாகும்; **நெறிதனை நோக்கினும்** - வீடணனுடைய அற நெறியை ஆராய்ந்தாலும்; **நிருதர் நிற்பதோர் குறி** - அரக்கர்கள் நிற்பதாகிய ஒரு குறிக்கோளான அற நெறி; **நனி உளது என** - மிக உள்ளது என்று; **உலகம் கொள்ளுமோ** - உலகம் ஏற்றுக் கொள்ளுமோ?*

***6435. 'வெற்றியும் தருகுவர், வினையம் வேண்டுவர்,***
***முற்றுவர், உறு குறை முடிப்பர், முன்பினால்-***
***உற்றுறு நெடும் பகை உடையர். அல்லதூஉம்,***
***சிற்றினத்தவரொடும் செறிதல் சீரிதோ?***

***வெற்றியும் தருகுவர்** - வீடணனைப் போன்றவர்களை நம்முடன் சேர்த்துக் கொண்டால் வெற்றி தேடித்தரலாம்; **வினையம் வேண்டுவர்** - நமக்குத் தேவையான யோசனைகளையும் கூறுவர்; **முற்றுவர்** - நமது காரியங்களை முடித்தும் தருவர்; **உறு குறை முடிப்பர்** - வேறு ஏதேனும் குறைகள் இருந்தாலும் அதை மாற்றி நலம் புரிவர்; **முன்பினால்** - (ஆனால்) முன்பிருந்தே; **உற்றுறு நெடும் பகை உடையர்** - நம்முடன் அரக்கர்கள் பெரிய பகை உடையவராவர்; **அல்லதூஉம்** - அதுவும் அல்லாமல்; **சிற்றினத்தவரொடும்** - இவர்களை ஒத்த சிற்றினத்தவருடன்; **செறிதல் சீரிதோ?** - சேர்தல் சிறப்புடையதாகுமோ?*

*வினயம் - உபாயம் (யோசனைகள்) முற்றுதல் - நிறைவேற்றுதல். உற்றுறு நெடும்பகை - தொடர்ந்து வரும் நெடும்பகை. "சிற்றினம் அஞ்சும் பெருமை" என்ற குறள் (451) நினைவு கூரத்தக்கது.*

***6436. 'வேதமும் வேள்வியும் மயக்கி, வேதியர்க்கு***
***ஏதமும், இமையவர்க்கு இடரும், ஈட்டிய***
***பாதகர் நம்வயின் படர்வராம்எனின்,***

***தீது இலராய், நமக்கு அன்பு செய்வரோ?***

**வேதமும் வேள்வியும் மயக்கி** - *வேதங்களையும் வேள்விகளையும் நடைபெற விடாமல் கெடுத்து;* **வேதியர்க்கு ஏதமும்** - *வேதம் வல்ல அந்தணர்களுக்குத் துன்பத்தையும்;* **இமையவருக்கு இடரும்** - *தேவர்களுக்குத் தொல்லையும்;* **ஈட்டிய பாதகர்** - *தொடர்ந்து செய்து வந்த கொடிய பாதகர்களாகிய அரக்கர்;* **நம்வயின் படர்வராம்** - *நமது பக்கம் சேர்வார்கள் என்றால்;* **தீது இலராய்** - *நமக்குத் தீமை செய்யாதவர்களாய்;* **நமக்கு அன்புசெய்வரோ** - *நம்மிடம் அன்புடையவர் ஆவரோ?*

*வேதங்களை ஓதாமலும் வேள்விகளை நடத்தாமலும் அந்தணர்களுக்கும் முனிவர்க்கும் இடையூறு செய்தனர் என்பதை 'அரக்கர் என்றுளர் சிலர் அறத்தின் நீங்கினார் நெருக்கவும் யாம்படர் நெறியலாநெறி துரக்கவும் அருந்தவத்துறையுள் நீங்கினோம் (அகத்தியப்படலம் 12) என முனிவர்கள் இராமன்பால் முறையிட்டமையால் அறியலாம்.*

***6437. 'கைப் புகுந்து, உறு சரண் அருளிக் காத்துமேல்,***
***பொய்க் கொடு வஞ்சனை புணர்த்த போதினும்,***
***மெய்க் கொள விளியினும், "விடுதும்" என்னினும்,***
***திக்கு உறும், நெடும் பழி; அறமும் சீறுமால்.***

**கைப்புகுந்து** - *வீடணனைப் போன்றவர்கள் நமது பக்கம் வந்து சேர்ந்து;* **உறுசரண் அருளி** - *நாம் அவர்களுக்குப் பொருந்திய அடைக்கலம்கொடுத்து;* **காத்து மேல்** - *காப்பாற்றுவோமானால்;* **பொய்க்கொடு வஞ்சனை புணர்த்த போதினும்** - *பொய்மை யுடையவராய் கொடிய வஞ்சகம் செய்தாரென்றாலும்;* **மெய்க்கொடு** - *இவர்களது உண்மைத் தன்மை புலப்பட;* **விளியினும்** - *நம்மை வெகுண்டு மாறுபட்டாலும்;* **விடுதும் என்னினும்** - *(அதன் காரணமாக) நாம் அவர்களை விலக்கி விடுவோமென்றாலும்;* **நெடும் பழிதிக்குறும்** - *எல்லாத் திசையிலும் நமக்குப் பெரும் பழியுண்டாகும்;* **அறமும் சீறும்** - *அறக்கடவுளும் இவர்களுக்குப் புகல் தந்து காத்தற்கு நம்மைச் சீறும்.*

*கை-பக்கம். "நாடாது நட்டலின் கேடில்லை நட்டபின் வீடில்லை நட்பாள்பவர்க்கு" என்ற குறள் (791) நினைவு கூரத்தக்கது. "நல்லார் என நாம் விரும்பிக்கொண்டாரை அல்லார் எனினும் அடக்கிக் கொளவேண்டும்" என்ற நாலடியார் (221) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6438. 'மேல் நனி விளைவது விளம்ப வேண்டுமோ?***
***கானகத்து இறைவியோடு உறையும் காலையில்,***
***மான் என வந்தவன் வரவை மானும், இவ்***

***ஏனையன் வரவும்' என்று இனைய கூறினான்.***

***மேல் நனி விளைவது*** - இந்த வீடணனை நம் பக்கம் சேர்த்தோம் என்றால் அதனால் இனிமேல் ஏற்படும் விளைவின் தீயவிளைவை; ***விளம்ப வேண்டுமோ*** - நான் சொல்ல வேண் ***டுமோ? கானகத்து இறைவியோடு உறையும் காலையில்*** - கானகத்திலே சீதாதேவியுடன் நீங்கள் வசிக்கின்ற காலத்தே; ***மான் என வந்தவன் வரவை*** - பொன்மானாக வந்தவனான மாரீசனுடைய வருகையை; ***இவ்வேனையன் வரவும் மானும்*** - இந்த வேற்று வடிவினனான வீடணன் வருகையும் ஒக்கும்; ***என்று இனைய கூறினான்*** - என்று இத்தகைய சொற்களைச் சாம்பன் கூறினான்.

*மேல்-இனிமேல். ஏனையன்-வேற்றான் (மற்றவன்) மானும்- ஒக்கும்.*

*நீலன் கருத்து*

***6439. பால்வரு பனுவலின் துணிவு பற்றிய***
***சால் பெருங் கேள்வியன், தானை நாயகன்,***
***நீலனை, 'நின் கருத்து இயம்பு, நீ' என***
***மேலவன் விளம்பலும், விளம்பல் மேயினான்:***

***பால்வரு பனுவலின் துணிவு பற்றிய*** - பலவகைப்பட்ட நூல்களின் துணிந்த முடிபுகளை அறிந்த; ***சால்பெருங் கேள்வியன்*** - சிறந்த பெரிய நூல்களை எல்லாம் அவைகளைக் கற்றறிந்தவர்களிடம் கேட்டு அறிந்த கேள்வி ஞானம் மிக்கவனும்; ***தானை நாயகன் நீலனை*** - வானர சேனையின் தலைவனுமான நீலனை; ***நின் கருத்து இயம்பு நீ என*** - உனது கருத்து யாதெனக் கூறு என்று; ***மேலவன் விளம்பலும்*** - மேலோனாகிய இராமபிரான் கேட்டதும்; ***விளம்பல் மேயினான்*** - நீலன் கூற முற்பட்டான்.

*நூல்கள் பலவகைப்பட்டிருப்பன. ஆதலால் 'பால்வருபனுவல்' என்றார். பல சிறந்த நூல்களைக் கற்றறிந்த சான்றோர்களிடம் அவைகளைக் கேட்டறிந்த கேள்வி ஞானம் மிகுந்த நீலனை 'சாலப்பெரும் கேள்வியன்' என்றது கருதத்தக்கதாகும்.*

***6440.'பகைவரைத் துணை எனப் பற்றற்பால ஆம்***
***வகை உள; அன்னவை-வரம்பு இல் கேள்வியாய்!-***
***தொகையுறக் கூறுவென்; "குரங்கின் சொல்" என***
***நகையுறல் இன்றியே, நயந்து கேட்டியால்!***

***வரம்பில் கேள்வியாய்*** - எல்லையில்லாத பல நூல்களைக் கேட்டு உணர்ந்த கேள்வி ஞானம் மிக்கவனே! ***பகைவரைத் துணை என*** - பகைவர்களே என்றாலும் அவர்களையும் நமக்குத் துணை என்று; ***பற்றற்பாலவாம் வகை உள*** - ஏற்றுக்

*கொள்ளத்தக்க வகைகள் பல உள்ளன;* ***அன்னவை தொகையுறக் கூறுவென்*** *- அவைகளை இங்கு தொகுத்துக் கூறுவேன்;* ***குரங்கின் சொல் என*** *- ஒரு குரங்கு கூறும்சொல்தானே என்று;* ***நகையுறல் இன்றியே*** *- ஏளனமாகக் கருதி நகைக்காமல்;* ***நயந்து கேட்டி*** *- விருப்பம் கொண்டு கேட்டருள்வாயாக.*

***6441. 'தம் குலக் கிளைஞரைத் தருக்கும் போரிடைப்***
***பொங்கினர் கொன்றவர்க்கு எளியர் போந்தவர்,***
***மங்கையர் திறத்தினில் வயிர்த்த சிந்தையர்,***
***சிங்கல் இல் பெரும் பொருள் இழந்து சீறினோர்,***

***தருக்கும் போரிடை*** *- செருக்குக் கொண்டு செய்யும் போரிலே;* ***தம் குலக் கிளைஞரை*** *- தமது குலத்தில் பிறந்த உறவினர்களை;* ***பொங்கினர் கொன்றவர்க்கு*** *- சினந்து கொன்றவர்களுக்கு;* ***எளியர் போந்தவர்*** *- (எதுவும் செய்ய இயலாதவர்களாய் எளியராய் இங்கு வந்தவர்களுக்கும்;* ***மங்கையர் திறத்தினில் வயிர்த்த சிந்தையர்*** *- பெண்கள் திறத்திலே பகைமைகொண்ட மனத்தவர்க்கும்;* ***சிங்கல் இல் பெரும்பொருள்*** *- குறைவில்லாத பெருஞ்செல்வத்தை;* ***இழந்து சீறியோர்*** *- பகைவரிடம் இழந்து வெகுண்டவருக்கும் (ஆகிய இத்திறத்தோர்க்கு அடைக்கலம் தந்து ஏற்றுக் கொள்வதே நல்லது என்பது கருத்து)*

*பகைவர் பக்கமிருந்து வருவோரில் கொள்ளத்தக்கவர் இன்னார் என்று தரும் பட்டியல் மேலும் தொடர்கிறது. வரும் பாடல்களில் மேலும் தொடரும்.*

***6442. 'பேர் அபிமானங்கள் உற்ற பெற்றியோர்,***
***போரிடைப் புறங்கொடுத்து அஞ்சிப் போந்தவர்,***
***நேர் வரு தாயத்து நிரப்பினோர், பிறர்***
***சீரிய கிளைஞரை மடியச் செற்றுளோர்,***

***பேரபிமானங்கள்*** *- நாடு, மொழி, இனம் போன்ற பெரிய பற்றுக்களை;* ***உற்றபெற்றியோர்*** *- கொண்டிருக்கும் தன்மையினரும்;* ***போரிடைப் புறம் கொடுத்து*** *- பகைவருடன் செய்த போரிலே தோற்று, புறமுதுகு காட்டி;* ***அஞ்சிப் போந்தவர்*** *- பகைவர்களுக்குப் பயந்து வந்தவர்களும்;* ***நேர் வருதாயத்து*** *- நேரான பங்காளிகளால்;* ***நிரப்பினோர்*** *- பொருளை இழந்து வறுமை உற்றோரும்;* ***பிறர் சீறிய கிளைஞரை*** *- பிறருடைய சிறந்த உறவினர்களை;* ***மடியச் செற்றுளோர்*** *- மடியும் படி கொன்றவர்களும் ஆகியோர் சரணடைய வந்தால் ஏற்றுக் கொள்ளவேண்டும்.*

*இந்தக் காரணங்களால் வந்து அடைக்கலம் அடைந்தவர்களை ஏற்றுக் கொள்ளலாம் என்பது கருத்து.*

***6443. 'அடுத்த நாட்டு அரசியல் உடைய ஆணையால்***
***படுத்தவர் நட்டவர்,-பகைஞரோடு ஒரு***
***மடக்கொடி பயந்தவர் மைந்தர் ஆயினும்,***
***உடன் கொளத் தகையர், நம்முழை வந்து ஒன்றினால்.***

***அடுத்த நாட்டு அரசியலுடைய*** - *அடுத்த நாட்டு அரசனுடைய;* ***ஆணையால் படுத்தவர் நட்டவர்*** - *ஆணையாலே சிறைப்படுத்தப் பட்டவர்களின் நண்பர்களும்;* ***பகைவரோடு*** - *பகைவர்களுடனே;* ***ஒரு மடக்கொடி பயந்தவர்மைந்தர் ஆயினும்*** - *ஒரு பெண் பெற்றவரின் மக்களே என்றாலும்;* ***நம் முழை வந்து*** *ஒன்றினால் - நம்மிடம் வந்து நம்முடன் சேர்ந்தால்;* ***உடன் கொளத்தகையர்*** - *உடன் சேர்த்துக் கொள்ளத்தக்கவரே ஆவர்.*

***6444. 'தாம் உற எளிவரும் தகைமையார்அலர்,***
***நாம் உற வல்லவர், நம்மை நண்ணினால்,***
***தோம் உற நீங்குதல் துணிவர் ஆதலின்,***
***யாம் இவன் வரவு இவற்று என் என்று உன்னுவாம்.***

***தாம் உற எளிவரும் தகைமையார் அலர்*** - *தாமே வந்து நம்மைச் சேரும்படியான எளியதன்மை அல்லாதவராய்;* ***நாம் உறவல்லவர்*** - *பிறர் அஞ்சத்தக்க வலிமை உடையவராய்;* ***நம்மை நண்ணினால்*** - *(உள்ளவர்கள்) நம்மை அடைந்தால்;* ***தோம் உற நீங்குதல் துணிவர்*** - *நம்மைத் துன்புறுத்தி விட்டு நீங்கவே செய்வார்கள்;* ***ஆதலின் நாம் இவன் வரவு*** - *ஆகவே நாம் இந்த வீடணன் வருகையை;* ***இவற்று என் என்று உன்னுவாம்*** - *மேலே கூறிய வகைகளுள் எவ்வகையினது என எண்ணுவோம்.*

*வரும் தகைமை-எளியதன்மை நாம்-அச்சம். தோம்-துன்பம். இவற்று-இவ்வகையில்.*

***6445. 'காலமே நோக்கினும், கற்ற நூல்களின்***
***மூலமே நோக்கினும், முனிந்து போந்தவன்***
***சீலமே நோக்கி, யாம் தெரிந்து தேறுதற்கு***
***ஏலுமே?' என்று எடுத்து இனைய கூறினான்.***

***காலமே நோக்கினும்*** - *இந்த வீடணன் நம்முடன் சேர வந்திருக்கும் சமயத்தை ஆராய்ந்தாலும்;* ***கற்ற நூல்களின் மூலமே நோக்கினும்*** - *நாம் கற்ற நீதி நூல்களின் மூலம் ஆராய்ந்து பார்த்தாலும்;* ***முனிந்து போந்தவன்*** - *அண்ணனாகிய இராவணனுடன்*

*கோபித்து வந்தவனான இவனது;* ***சீலமே நோக்கி*** *- நல்லொழுக்கத்தை மட்டும் பார்த்து;* ***யாம் தெரிந்து தேறுதற்கு ஏலுமே*** *- நாம் இவன் பற்றி ஆராய்ந்து தேற இயலுமோ? (இயலாது என்பது கருத்து.)* ***என்று எடுத்து இனைய கூறினான்*** *- என்று இவ்வாறு எடுத்துரைத்தான் சேனைத்தலைவன்.*

*தெரிந்து தேறுதற்கு ஏறுமே என்பதில் ஏகாரம் எதிர்மறை. ஏலாது என்பது பொருள். போர் மூண்ட காலத்தில் அண்ணனை விட்டு விலகியவன் என்பதை "காலமே நோக்கினும்" என்றார். 'நூல்களின் மூலம்' நூல்களின் அடிப்படையில் ஆய்ந்தாலும் என்பது பொருள்.*

## *மற்றைய மந்திரக் கிழவர் கருத்து*

***6446. மற்றுள மந்திரக் கிழவர், வாய்மையால்,***
***குற்றம் இல் கேள்வியர், அன்பு கூர்ந்தவர்,***
***'பற்றுதல் பழுது' என, பழுது உறா ஒரு***
***பெற்றியின் உணர்வினார், முடியப் பேசினார்.***

***மற்றுள மந்திரக் கிழவர்*** *- வானரப்படையில் சுக்கிரீவன் சாம்பன், நீலன் இவர்களைத்தவிர வேறுமுள்ள அமைச்சர் முதலானோர்;* ***வாய்மையால்*** *- வாய்மையைக் கடைப்பிடிப்பவர்களாதலால்;* ***குற்றமில் கேள்வியர்*** *- குற்றமில்லாத நூற்கேள்வி உடையவர்களும்;* ***அன்பு கூர்ந்தவர்*** *- இராமபிரானிடம் மிகுந்த அன்புடையவர்களுமான அமைச்சர் படைத்தலைவர் முதலான மந்திரக்கிழவர்;* ***பற்றுதல் பழுது என*** *- இந்த வீடணனை நம்முடன் சேர்த்துக் கொள்ளுதல் தவறாகும் என்று;* ***பழுதுறா ஒரு பெற்றியின்*** *- குற்றமற்ற ஒத்த ஒரேதன்மையான;* ***உணர்வினார்*** *- உணர்வுடையவர்களான அவர்கள்;* ***முடியப்பேசினார்*** *- முடிவான தங்கள் கருத்தைக் கூறினர்.*

*மந்திரக்கிழவர் - ஆலோசனைக்குரிய அமைச்சர் முதலானோர். மந்திரக்கிழவர் அத்தனைபேரும் ஒத்த உணர்வினராக ஒரே தன்மையில் பேசினர் என்பதை பழுதுறா ஒரு பெற்றியின் என்றார். வீடணனை நம்முடன் சேர்த்துக் கொள்ளுதல் பெருந்தீங்காக முடியும் என்பதே முடிவான கருத்தாகப் பேசினார்.*

## *இராமபிரான் அநுமன் கருத்தைக் கேட்டல்*

***6447. 'உறு பொருள் யாவரும் ஒன்றக் கூறினார்***
***செறி பெருங் கேள்வியாய்! கருத்து என்? செப்பு' என,***
***நெறி தரு மாருதி என்னும் நேர் இலா***
***அறிவனை நோக்கினான், அறிவின் மேல் உளான்.***

***அறிவின் மேலுளான்*** - அறிவுக்கு மேலாக அறிவாக விளங்கும் இராமபிரான்; ***உறுபொருள் யாவரும்*** - வீடணனை ஏற்றுக் கொள்வதா இல்லையா என்ற பொருளைப் பற்றி எல்லோரும் ஒரே தன்மையாகக் கூறினார்கள்; ***செறிபெருங் கேள்வியாய்*** - செறிந்த நிறைந்த கேள்விச்செல்வம் உடையவனே! ***கருத்து என் செப்பு என*** - உனது கருத்து யாது கூறுக என்று கேட்டு; ***நெறி தருமாருதி என்னும்*** - நன்னெறியில் நிற்கும் மாருதி என்ற; ***நேரிலா அறிவனை*** - எவரும் நிகர் கூற இயலாத அறிவு கொண்டவனை; ***நோக்கினான்*** - இராமபிரான் குறிப்பாகப் பார்த்தான்.

*அறிவுக்கு மேல் அறிவாக இருப்பவன். உயிர்களின் அறிவு கொண்டு அறிய இயலாதபடி மேலோங்கி விளங்குபவன் என்பதால் இராமபிரானை "அறிவின் மேலுளான்" என்றார். அறிவின் மேலுளான் அறிவனை நோக்கினான் என்ற கவிநயம் கருதத்தக்கது. உறுபொருள்-உற்றபொருள். உறு என்னும் உரிச்சொல் மிகுதி என்னும் பொருள் உடையது. ஆகையால் மேற்கொள்ளுதற்கு மிகுதியும் உரியபொருள் என்பது கருத்து. அநுமனுக்கு நிகராக வேறு எவருமில்லை என்பதால் "நேரிலா அறிவன்" என்றார். 'நெறிதருமாருதி' நீதி நெறி தெரிந்த அனுமனைக் குறிப்பதாகும் எல்லோரும் ஒரே கருத்தினராக 'பற்றுதல் பழுது' என்றுகூறினார் நின் கருத்து யாது? என இராமபிரான் அனுமனைக் கேட்டான் என்பது கருத்து.*

*மாருதியின் கருத்து*

***6448. 'இணங்கினர் அறிவிலர்எனினும் எண்ணுங்கால்,***
***கணம் கொள்கை நும்மனோர் கடன்மைகாண்' என***
***வணங்கிய சென்னியன், மறைத்த வாயினன்,***
***நுணங்கிய கேள்வியன், நுவல்வதாயினான்:***

***இணங்கினர் அறிவிலர் எனினும்*** - நம்மை அடைக்கலமாக வந்து அடைந்தவர்கள் அறிவில்லாதவர் என்றாலும்; ***எண்ணுங்கால்*** - நினைத்துப் பார்த்தால்; ***கணம் கொள்கை*** - அவர்களை இனமாகக் கொண்டு சிறப்பித்தல்; ***நும்மனோர் கடன்மை காண்என*** - உங்களைப் போன்றவர்களுக்கு உரிய கடமையாகும் என்று; ***வணங்கிய சென்னியன்*** - வணங்கிய தலையை உடையவனாகவும்; ***மறைத்த வாயினன்*** - கைகளால் மறைத்த வாயினை உடையவனாகவும்; ***நுணங்கி கேள்வியன்*** - நுணுக்கமான கேள்விஞானம் உடையவனான அனுமன்; ***நுவல்வதாயினான்*** - சொல்லுவானானான்.

*நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது என்ற குறள் (419) நெறிக்கேற்ப அமைந்தவன் அனுமன் ஆகலால் அனுமனை 'நுணங்கியகேள்வியன் வணங்கிய வாயினன்' என்றார். ஒரு புறாவுக்கு அடைக்கலம் தந்து காத்த சிபி பிறந்த சூரிய குலத்தில் தோன்றிய உன்னைப் போன்றவர்களுக்கு உரியதொரு கடமை என்பதனை "நும்மனோர் கடன்மை" என்றார்.*

***6449. 'எத்தனை உளர், தெரிந்து எண்ண ஏய்ந்தவர்,***
***அத்தனைவரும், ஒரு பொருளை, "அன்று" என,***
***உத்தமர், அது தெரிந்து உணர, ஓதினார்;***
***வித்தக! இனி, சில விளம்ப வேண்டுமோ?***

***வித்தக*** - பேரறிவுடைய மேலோனே! தெரிந்து ***எண்ண ஏய்ந்தவர்*** - ஆராய்ந்து நினைந்து கூறவல்லவர்கள்; ***எத்தனை உளர்*** - இங்கு எத்தனை பேர் இருக்கிறார்களோ; ***அத்தனைவரும்*** - அத்தனை பேரும் ஒத்த கருத்தினராக; ***ஒரு பொருளை*** - நாம் கைக்கொள்ளத்தக்க தொன்றை; ***அன்று என*** - கொள்ளத்தக்க தன்று என்று; ***உத்தமர்*** - உத்தமமான குணமுடைய அவர்கள்; ***அது தெரிந்து உணர ஓதினார்*** - சொல்லவேண்டிய அதனை நன்கு தெரிந்து உணரும்படி கூறினர்; ***இனி சில விளம்ப வேண்டுமோ*** - நானும் இனிச் சிலவற்றைச் சொல்லியாக வேண்டுமோ?

*சுக்ரீவன் முதலிய அத்தனை பேரும் சிந்தித்துக் கூறத்தக்கவர்களே என்பதனை "தெரிந்து எண்ண ஏய்ந்தவர்" என்றான். அவர்கள் தெரிவித்த கருத்தினின்று மாறுபட்ட கருத்தினைக் கூறப்போகின்றான். எனினும், இராமபிரானிடத்து பேரன்பு கொண்டவர்கள் ஆதலின் அவர்கள் மிகுந்த மதிப்புக்குள்ளவர்கள் எனப் போற்றிப் பேசும் அனுமனின் உயர்வும் பணிவும் குறிக்கத்தக்கன. தெரிந்து - ஆராய்ந்து. அத்தனைவரும் - அந்த அனைவரும். உத்தமர் - நல்ல இயல்புடையவர்.*

***6450. 'தூயவர் துணி திறன் நன்று தூயதே;***
***ஆயினும், ஒரு பொருள் உரைப்பென், ஆழியாய்!***
***"தீயன்" என்று இவனை யான் அயிர்த்தல் செய்கிலேன்;***
***மேயின சில பொருள் விளம்ப வேண்டுமால்.***

***ஆழியாய்*** - சக்கரப்படையை உடைய திருமாலின் அவதாரமாக விளங்கியவனே! ***தூயவர் துணி திறன் நன்று*** - தூய மனமுடைய இவர்கள் எல்லோரும் துணிந்து கூறியவை நல்லதே; ***தூயதே ஆயினும்*** - குற்றமற்ற தூய கருத்துக்களே என்றாலும்; ***ஒரு பொருள் உரைப்பென்*** - நான் ஒரு கருத்தைக் கூறுகிறேன்; ***இவனை யான் தீயன் என்று அயிர்த்தல் செய்கிலேன்*** - இங்கு வந்துள்ள இந்த வீடணனை யான் தீயவன் என்று சிறிதும் சந்தேகப்படமாட்டேன்; ***மேயின சில பொருள்*** - அவ்வாறு ஐயப்படாமைக்குக் காரணமான சிலவற்றை; ***விளம்பவேண்டும்*** - யான் இப்போது கூறியாக வேண்டும்.

*'ஆழியாய்' என்பதற்கு ஆணையாகிய சக்கரத்தை உடையவனே என்பதும் ஒரு பொருளாகும். 'ஒரு பொருள்' என்பது, அவர்களெல்லாம் கூறியதற்கும் வேறான ஒருபொருள் என்னும் குறிப்புடையது. சுக்கிரீவன் முதலிய அத்தனை பேரும் மனத்தால் தூயர். அவர்கள் கொண்ட கருத்தும் நன்று தூயது. தன் கருத்து வேறானது என்பதைத் துணிவுடன் "தீயன் என்று இவனை நான் அயிர்த்தல் செய்திலேன்"*

*என்று தெளிவாகக் கூறினும் சுக்கிரீவன் முதலானோர் தூயர் உத்தமர் என்றெல்லாம் சிறப்பித்துக் கூறும் அனுமன் நிலை உணர்ந்து மகிழ்தற்குரியது.*

### *6451. 'வண்டு உளர் அலங்கலாய்! வஞ்சர் வாள் முகம்,*
### *கண்டது ஓர் பொழுதினில், தெரியும்; கைதவம்*
### *உண்டுஎனின், அஃது அவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ?*
### *விண்டவர் நம் புகல் மருவி வீழ்வரோ?*

***வண்டு உளர் அலங்கலாய்*** *- வண்டுகள் கிளறுகின்ற மலர் மாலை அணிந்துள்ள பெருமானே!* ***வஞ்சர் வாள்முகம்*** *- வஞ்சக எண்ணமுடையவர்களின் ஒளி பொருந்திய முகத்தை;* ***கண்டதோர் பொழுதினில்*** *- பார்த்த அந்த நேரத்திலே;* ***தெரியும்*** *- நன்றாகத்தெரிந்து கொள்ளலாம்;* ***கைதவம் உண்டெனில்*** *- உள்ளத்தே வஞ்சகம் இருக்குமானால்;* ***அஃது அவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ*** *- அதனை அவர்களால் புறத்தே தோன்றாமல் ஒளிக்க இயலுமோ?* ***விண்டவர் நம் புகல்*** *- பகைவர்கள் நம்மை அடைக்கலமாக;* ***மருவி வீழ்வரோ*** *- அடைந்து தாழ்தலை விரும்புவார்களோ?*

*வஞ்சகர் முகத்தைப் பார்த்த போதே தெரியும் என்பான் "வஞ்சர் வாள்முகம் கண்டதோர் பொழுதினில் தெரியும்" என்றான். வாள் (ஒளி) முகம் என்றது, வஞ்சகர் போலித்தனமாகக் காட்டக்கூடிய காட்சியை உணர்த்திற்று. வஞ்சகத்தை அவர்களால் மறைக்க முடியாதென்பதை 'கைதவம் ஆயினும் உண்டெனில் அஃது அவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ' என்றான். பகைவர் நம்மைப் புகல் அடைந்து தாழ்வதை விரும்பமாட்டார்கள் என்பது மாருதியின் வாதம். கைதவம்- வஞ்சகம்.*

### *6452. 'உள்ளத்தின் உள்ளதை, உரையின் முந்துற,*
### *மெள்ளத் தம் முகங்களே விளம்பும்; ஆதலால்,*
### *கள்ளத்தின் விளைவு எலாம் கருத்து இலா இருள்*
### *பள்ளத்தின் அன்றியே வெளியில் பல்குமோ?*

***உள்ளத்தின் உள்ளதை*** *- மனத்திலே இருப்பதை;* ***உரையின் முந்துற*** *- பேசுவதற்கு முன்னாலேயே; மெள்ளத்தம் முகங்களே* ***விளம்பும்*** *- மெதுவாகத்தமது முகங்களே கூறிவிடும் (காட்டிக்கொடுத்து விடும்);* ***கள்ளத்தின் விளைவு எலாம்*** *- வஞ்சகத்தின் விளைவுகள் எல்லாம்;* ***கருத்து இலா*** *- நல்ல கருத்து இல்லாத;* ***இருள் பள்ளத்தின் அன்றியே*** *- அறியாமையாகிய இருள் நிறைந்த பள்ளம் போன்ற முகம் அல்லாது;* ***வெளியில் பல்குமோ*** *- (அறிவொளி வீசுகின்ற) வெட்டவெளி போன்ற முகத்தில் வெளிப்பட்டுத் தோன்றுமோ?*

*"அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" (706) என்ற குறள் ஒப்பு நோக்கத்தக்கது. வஞ்சகர்களின் உள்ளத்தில் உள்ளதை*

உரைக்குமுன், முகமே உணர்த்திவிடும் என்பதாயிற்று. வஞ்சகத்தின் விளைவு- அறியாமை நிறைந்த இருட்பள்ளம் போன்ற முகத்திலே தோன்றுமேயல்லாது வெட்டவெளி போன்ற முகத்திலே காணப்படுமோ என்றான். கள்ளத்தின் விளைவை இருள் நிறைந்த முகமே காட்டிக் கொடுத்துவிடும் என்பது கருத்தாகும்.

***6453. 'வாலி விண் பெற, அரசு இளையவன் பெற,***
***கோலிய வரி சிலை வலியும் கொற்றமும்.***
***சீலமும் உணர்ந்து, நிற் சேர்ந்து, தெள்ளிதின்***
***மேல் அரசு எய்துவான் விரும்பி மேயினான்.***

**வாலிவிண் பெற** - வாலி விண்ணுலகு சேரவும்; அரசு இளையவன் பெற - அவன் தம்பியான சுக்கிரீவன் கிட்கிந்தை ஆட்சியைப் பெறவும்; **கோலிய வரி சிலை வலியும்** - வளைந்த நின் கட்டமைந்த வில்லாற்றல் பற்றியும்; **கொற்றமும் சீலமும்** - அதன் வெற்றியைப் பற்றியும், சீலத்தைப் பற்றியும்; **உணர்ந்து** - இந்த வீடணன் தெரிந்து உணர்ந்ததால்; **நிற் சேர்ந்து** - உன்னை அடைந்து; தெள்ளிதின் - தெளிந்த ஞானத்தால்; **மேல் அரசு எய்துவான்** - மேலானதாகிய வீட்டரசைப் பெறும் பொருட்டு; **விரும்பி மேயினான்** - விரும்பி இங்கு வந்தடைந்தான்.

மேல் அரசு எய்துவான் என்ற தொடர் எதிர்காலத்தில் இலங்கை அரசை அடைவதற்காக என்ற கருத்தையும் உட்கொண்டுள்ளது. தெளிந்த ஞானம் உடைமையால் வீட்டரசை விரும்பி வந்தானாவான் என்பதை "மேலரசு எய்துவான் விரும்பி வந்தனன்' என்றான். இராவணனையும் தோல்வியுறச் செய்த வாலியைக் கொன்று, சுக்கிரீவனுக்கு ஆட்சியை வழங்கிய ராமபிரான் இராவணனைக் கொன்று தனக்கு இலங்கை அரசைப்பெற உதவுவான் எனத் தெளிவாக உணர்ந்தே வந்தான் என்பதும் ஒரு பொருள். வைணவ மரபுக்கும் வீடணன் பண்புக்கும் அரசாட்சி ஆசையை முன்னிறுத்துதல் பொருந்தாது; எனினும், உலகியல் மட்டுமே கருதுவோர்க்கு அவ் ஆசைபற்றிய நினைவு இருக்கும் என்பதைக் கம்பன் சொல்லாட்சி புலப்படுத்துகிறது.

***6454. 'செறி கழல் அரக்கர்தம் அரசு சீரியோர்***
***நெறி அலது; ஆதலின், நிலைக்கலாமையும்,***
***எறி கடல் உலகு எலாம் இளவற்கு ஈந்தது ஓர்***
***பிறிவு அருங் கருணையும், மெய்யும், பேணினான்.***

**செறிகழல் அரக்கர்தம் அரசு** - செறிந்த கழலணிந்த கால்களையுடைய இவ்வரக்கர்களின் அரசாட்சி; **சீரியோர் நெறி அலது ஆதலின்** - சிறந்த மேலோர்கள் கூறிய நெறியில் நடைபெறாதது, ஆதலால்; **நிலைக்கலாமையும்** - அது நிலைபெறாதது என்பதனாலும்; **எறிகடல் உலகு எலாம்** - திரை எறியும் கடலால்

*சூழப்பட்ட உலகம் முழுவதையும்;* ***இளவற்கு ஈந்ததோர் பிறிவரும் கருணையும்*** *- தம்பியான பரதனுக்குத் தந்தருளிய நீங்காத கருணையையும்;* ***மெய்யும் பேணினான்*** *- நீ மேற்கொண்ட வாய்மை அறத்தையும் இந்த வீடணன் விரும்பியவனாவான்.*

*அரக்கர்களின் ஆட்சி வன்முறையைக் கொண்டதேயல்லாத நீதி அறம் போன்ற நன்னெறிகளைக் கொண்டதல்லவாதலால் மேலோர் கூறிய நெறிநில்லாத தென்பான். "சீரியோர் நெறி அலது" என்றான். போர் வெற்றிகளால் அமைந்ததாயினும் நன்னெறியில் இயங்காதது அரக்கரின் அரசு; ஆகவே வீடணன் அதனை நிலைபேறுடையதாகக் கருதமாட்டான். ஆட்சியில் பற்றில்லாதவனுக்கு ஆட்சியை வழங்கிய இராமபிரானது பெருங்கருணை வாய்மை இவைகளையே விரும்பி வந்தவன் வீடணன் என்பதனை "உலகெலாம் இளவற்கீந்ததோர் பிறிவருங்கருணையும் மெய்யும் பேணினான்" என்றான். இலங்கை அரசு வீடணனுக்கு வரவிருப்பது உறுதிதான். எனினும், அதனைப் பெரிதாக வீடணன் கருதான் என்பதும் ஆட்சி விருப்பம் இல்லாத பரதனுக்கு அதனை இராமன் அளித்தான் என்பதும் இணைத்து நோக்கத்தக்கவை. இணைத்து நோக்குதலால் விளையும் கருத்துகள் விரிக்கிற் பெருகும். 'பிரிவு' எதுகை நோக்கி பிறிவெனப்பட்டது.*

***6455. ' "காலம் அன்று, இவன் வரு காலம்" என்பரேல்,***
***வாலிதன் உறு பகை வலியது ஏறிய***
***தால், இனி அங்கு இவற்கு இறுதி ஆவதால்***
***மூலம் என் துணைவரைப் பிரிவு முற்றினான்.***

***காலம் அன்று இவன் வரும் காலம் என்பரேல்*** *- இவன் இங்கு வந்த காலம் சரியான காலமல்ல என்பார்களானால்;* ***வாலி தன் உறு பகை வலியது ஏறியதால்*** *- வலிமை மிக்கதான வாலியின் பகையைக் கடந்து நின்றது;* ***இனி அங்கு இவற்கு*** *- இனி இலங்கை அரக்கர்களுக்கும்;* ***இறுதி ஆவதால்*** *- அழிவு காலம் ஆயிற்று என்பதால்;* ***மூலம் என் துணைவரை*** *- தனக்கு மூலம் எனப்படும் துணைவர்களான இராவண, கும்பகருணர்களை;* ***பிரிவு முற்றினான்*** *- பிரிந்து வருவதை நிறைவேற்றினான் (எனவே இவன் வந்த காலம் பொருத்தமானதே).*

*'காலமே நோக்கினும்' வீடணன் அண்ணனைப் பிரிந்து வந்த காலத்தை ஆராய்ந்தாலும் பொருத்தமான காலமல்ல என்று கூறிய நீலனது கருத்தை (6445) மறுப்பது போல 'காலமன்று என்பரேல்' என்றான். ஏறுதல்-வெல்லுதல் (கடத்தல்) வாலியின் கொடிய பகையை வென்றது நின் வில்வலி என்பான் 'வலியது ஏறியதால்' என்றான். வாலியை வதைத்தவனுக்கு நம்மை அழிப்பது எளிய செயல் ஆகும் என, அவ்வரக்கர்களும் கருதுவர் எனவே அவர்களுக்கு அழியும் காலம் ஆயிற்று என்பான் 'இறுதி ஆவதால்' என்றான். மூலம்என்-மூலம் எனப்படும். முற்றுதல் - செய்துமுடித்தல்.*

***6456. 'தீத் தொழில் அரக்கர்தம் மாயச் செய் வினை***

***வாய்த்துளர், அன்னவை உணரும் மாண்பினால்***
***காய்த்தவர், அவர்களே கையுற்றார் நமக்கு;***
***ஏத்த அரும் உறுதியும் எளிதின் எய்துமால்.***

***தீத்தொழில் அரக்கர்*** - பாவச்செயல்களை உடைய அரக்கர்; ***தம் மாயச் செய்வினை வாய்த்துளர்*** - அவர்களுக்கே உரிய மாயச்செயல்களைப் புரிய வல்லவர்கள்; ***அன்னவை உணரும்*** - அவைகளை எல்லாம் தெரிந்து உணர்கின்ற; ***மாண்பினால் காய்த்தவர்*** - பெருமையினால் தேர்ந்தவர்களான வீடணனைப் போன்ற; ***அவர்களே நமக்கு கை உற்றார்*** - அவர்களே நமது பக்கம் சேர்ந்தார்கள்; ***ஏத்தரும் உறுதியும் எளிதில் எய்தும்*** - எனவே போற்றுதற்கரிய வெற்றி நமக்கு எளிதில் கிடைக்கும் எனலாம்.

*அரக்கர் மாயம் வல்லவர் ஆதலின் "மாயச்செய்வினை வாய்த்துளார்" என்றான். காய்த்தவர்-தேர்ந்தவர். வீடணனைப் போன்றவர்கள் நமது பக்கம் சேர்வதால் மாயம் வல்ல அரக்கர்களின் மாயம் அறிந்து வெற்றி கொள்ளுதல் எளிய செயலாகும் என்பது தோன்ற "அவர்கள் நமக்குக் கை உற்றார் ஏத்தரும் உறுதியும் எளிதில் எய்தும்" என்றான். 'கை உற்றார்' என்பதற்கு நமது கைகளுக்குள் அடங்கியவராயினர்' என்பதும் ஒரு பொருளாகும்.*

***6457. ' "தெளிவுறல் அரிது, இவர் மனத்தின் தீமை; யாம்***
***விளிவது செய்குவர்" என்ன வேண்டுதல்,***
***ஒளி உற உயர்ந்தவர் ஒப்ப, எண்ணலார்;***
***எளியவர்திறத்து இவை எண்ணல் ஏயுமோ?***

***தெளிவு உறல் அரிது இவர் மனத்தின் தீமை*** - இவர்களது மனத்தில் அடங்கியிருக்கும் தீமையைத் தெரிவது அரிய செயல்; ***விளிவது செய்குவர்*** - நம்மை இறக்கும்படி செய்துவிடுவார்கள்; ***என்ன வேண்டுதல்*** - என்றெல்லாம் கருதுவதும், பேசுவதும் செய்பவர்கள்; ***ஒளிஉற உயர்ந்தவர் ஒப்ப எண்ணலார்*** - அறிவுக்குப் பொருந்துமாறு உயர்ந்தவர்களை ஒத்து எண்ணாதவராவர்; ***எளியவர் திறத்து*** - நம்மை நாடி வந்த எளியவர்கள் விஷயத்திலே; ***இவை எண்ணல் ஒயுமோ*** - இப்படி எல்லாம் நினைப்பது பொருந்துவதாகுமோ?

*விளிவது - இறக்குமாறு. ஒளி-அறிவு. 'பாதகர் நம்வயின் படர்வராமெனின் தீதிலராய் நமக்கு அன்பு செய்வரோ' என்று கூறிய சாம்பன் கருத்தை (6436) மறுப்பது போல் அனுமன் இதனைக் கூறினான் என்க.*

***6458. ' "கொல்லுமின், இவனை" என்று அரக்கன் கூறிய***
***எல்லையில், "தூதரை எறிதல் என்பது***

***புல்லிது; பழியொடும் புணரும்; போர்த் தொழில்***
***வெல்லலம், பின்னர்" என்று இடை விலக்கினான்.***

**கொல்லுமின் இவனை** - *(நான் இலங்கையில் இராவணனது சபையில் இருந்தபோது,)* இவனைக் கொல்லுங்கள்; **என்று அரக்கன் கூறிய எல்லையில்** - என்று இராவணன் கூறிய சமயத்தில்; **தூதரை எறிதல் என்பது புல்லிது** - வந்த தூதுவர்களைக் கொல்லுவதென்பது அற்பத்தனமானது; **பழியொடும் புணரும்** - அதனால் நமக்குப் பழியும் உண்டாகும்; **பின்னர் போர்த்தொழில் வெல்லலம்** - பின்பு நடைபெறப்போகும் போரிலே வெல்ல இயலாது; **என்று இடை விலக்கினான்** - என்று கூறி இராவணன் ஆணையால் கொல்ல வந்தவர்களையும் இடையிலே விலக்கினான்.

***6459. ' "மாதரைக் கோறலும், மறத்து நீங்கிய***
***ஆதரைக் கோறலும், அழிவு செய்யினும்***
***தூதரைக் கோறலும், தூய்து அன்றாம்" என,***
***ஏதுவில் சிறந்தன எடுத்துக் காட்டினான்.***

**மாதரைக் கோறலும்** - அபலைகளான பெண்களைக் கொல்வதும்; **மறத்து நீங்கிய ஆதரைக் கோறலும்** - வீரமற்ற அறிவிலிகளைக் கொல்லுவதும்; **அழிவு செய்யினும்** - நமது அழிவுக்குரிய செயல்களைச் செய்தார்கள் என்றாலும்; **தூதரைக் கோறலும்** - தூது வந்தவர்களைக் கொல்வதும்; **தூய்து அன்றாம்** - தூய செயல் ஆகாது என்று; **ஏதுவில் சிறந்தன எடுத்துக்காட்டினான்** - சிறந்த காரணங்களை எடுத்துக்கூறி நிறுவினான்.

*அனுமனைக் கொல்லும்படி கூறக்காரணம் அவன் அசோகவனத்தை அழித்தது. வீரர்களைக் கொன்றது போன்ற அழிவுச்செயல்களைச் செய்ததே என்பதால் அழிவு செய்யினும் தூதரைக் கோறலும் என்றான். 'மறத்து நீங்கிய' என்பதனை மாதர், ஆதர் ஆகிய இரு திறத்தாருக்கும் கூட்டி உரைத்தல் பொருந்தும். ஆதர் - அறிவில்லாதவர். மாதர் - வீரமற்ற மகளிர். கோறல் - கொல்லுதல் தூய்து-தூயது. ஏது-காரணம். தூதரைக் கொல்லுதல் தூயதல்ல என்ற வீடணன் அதனோடு தொடர்புள்ள மாதர் ஆதர் என்பவர்களையும் சேர்த்துக் கூறினான் போலும்.*

***6460. 'எல்லியில் யான் இவன் இரண மாளிகை***
***செல்லிய போதினும், திரிந்த போதினும்,***
***நல்லன நிமித்தங்கள் நனி நிகழ்ந்தன;***
***அல்லதும் உண்டு, நான் அறிந்தது-ஆழியாய்!***

***ஆழியாய்*** - ஆணையாகிய சக்கரத்தை உடையவனே! ***எல்லியில் யான் இவன் இரண மாளிகை செல்லிய போதினும்*** - இரவு நேரத்தில் நான் இந்த வீடணனுடைய பொன்மாளிகைக்குச் சென்றபோதும்; ***திரிந்த போதினும்*** - இலங்கை முழுதும் சுற்றித் திரிந்த போதும்; ***நல்லன நிமித்தங்கள் நனி நிகழ்ந்தன*** - மிகுதியான நல்ல சகுனங்களே நிகழ்ந்தன; ***அல்லதும் நான் அறிந்தது உண்டு*** - அதுவுமல்லாமல் நான் தெரிந்து கொண்ட வேறு சில செய்திகளும் உண்டு.

*எல்லி-இரவுப்பொழுது. இரணம்-பொன். வீடணன் வாழ்ந்த மாளிகை பொன்மயமானது என்பதால் 'இரண மாளிகை' என்றான். அனுமன் இலங்கைக்குச் சென்றிருந்தபோது சீதையைத் தேடிப் பல இடங்களுக்கும் சென்ற போதும் வீடணனது மாளிகைக்கும் சென்ற போதும் தான் பார்த்த நல்ல நிமித்தங்களையும் நினைந்து பார்த்துக் கூறுகிறான் "நல்ல நிமித்தங்கள் நனி நிகழ்ந்தன' எனத்தன் மகிழ்ச்சி தோன்றப் பேசுகிறான் எனலாம் இலங்கையில் நான் அறிந்த வேறு பலவும் உண்டு என்பான் "அல்லதும் நான் அறிந்தது உண்டு" என்றான்.*

***6461. 'நிந்தனை நறவமும், நெறி இல் ஊன்களும்,***
***தந்தன கண்டிலேன்; தரும தானமும்,***
***வந்தனை நீதியும், பிறவும், மாண்பு அமைந்து,***
***அந்தணர் மனை எனப் பொலிந்ததாம்அரோ.***

***நிந்தனை நறவமும்*** - மேலோர்களின் நிந்தனைக்குரிய மதுவும்; ***நெறியில் ஊன்களும்*** - தீயநெறியால் வந்த ஊன் உணவுகளும்; ***தந்தன கண்டிலேன்*** - வீடணன் இல்லத்தில் பரிமாறப்படுவதைப் பார்த்திலேன்; ***தரும தானமும் வந்தனை நீதியும் பிறவும்*** - அறநெறிப்படி அமைந்த தானங்களும், தெய்வ வழிபாட்டு முறைகளும் வேறு நல்ல பழக்க வழக்கங்களும்; ***மாண்பு அமைந்து*** - வேறு பல மாண்புகளும் அமைந்து; ***அந்தணர் மனை எனப் பொலிந்தது*** - அந்தணர்களது இல்லத்தைப் போல இவன் இல்லம் பொலிந்து விளங்கியது.

*நிந்தனை-மேலோர்களால் வெறுத்துக் கூறப்படுதல். நெறிஇல் ஊன்-கொலை முதலிய தீய நெறியால் வந்த ஊன் உணவு வகைகள் தந்தன-இருக்கக்கண்டிலேன்-பார்த்திலேன். இலங்கையில் பிற அரக்கர் மாளிகைகளில் நறவும், ஊனும் நிறைந்து காணப்பட்டனவாதலின், மாறுபட்டு விளங்கிய வீடணன் மனையின் சிறப்பைக் கூறலானான் என்க.*

***6462. 'அன்னவன் தனி மகள், "அலரின்மேல் அயன்***
***சொன்னது ஓர் சாபம் உண்டு; உன்னைத் துன்மதி,***
***நன்னுதல்! தீண்டுமேல், நணுகும் கூற்று" என,***

***என்னுடை இறைவிக்கும் இனிது கூறினாள்.***

***அன்னவன் தனிமகள்*** - இந்த வீடணனுடைய ஒப்பற்ற மகளான திரிசடை என்பவள்; ***என்னுடை இறைவிக்கும்*** - என்னுடைய தெய்வமான சீதா பிராட்டிக்கும்; ***அலரின் மேல் அயன் சொன்னதோர் சாபம் உண்டு*** - தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் சொன்ன ஒரு சாபம் உண்டு; ***நன்னுதல் உன்னைத் துன்மதி தீண்டு மேல்*** - நல்ல நெற்றியை உடையவளே! உன்னைத் துன்மதியுடைய இராவணன் தீண்டுவானானால்; ***கூற்று நணுகும்*** - எமன் அவன் உயிரைக் கவர வருவான்; ***என இனிது கூறினாள்*** - என்று இனிதே கூறி, ஆற்றுவித்தாள்.

*'விரும்பாத எந்தப் பெண்ணை இராவணன் தீண்டினாலும் அவன் தலைவெடித்துச் சாவான்' என்பது இராவணனுக்கு பிரமன் தந்த சாபம். இந்த உண்மையை அறிந்திருந்த திரிசடை சீதாபிராட்டிக்குக் கூறி, ஆறுதல் அளித்தாள், வீடணன் மட்டுமின்றி அவன் மகளும் அறநெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்தவராவார் என வீடணன் குடும்பத்தினரையும் சிறப்பித்துப் பேசினான் என்க. துன்மதி-கெட்டபுத்தியை உடைய இராவணன். நன்னுதல்-நல்ல அழகிய நெற்றியை உடையவள் (சீதா பிராட்டி).*

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

***6463. ' "பெற்றுடைய பெரு வரமும், பிறந்துடைய***
***வஞ்சனையும், பிறவும், உன் கை***
***வில் தொடையின் விடுகணையால் வெந்து ஒழியும்"***
***எனக் கருதி, விரைவின் வந்தான்;***
***உற்றுடைய பெரு வரமும், உகந்து உடைய***
***தண்ணளியும், உணர்வும் நோக்கின்,***
***மற்று உடையர்தாம் உளரோ, வாள் அரக்கன்***
***அன்றியே தவத்தின் வாய்த்தார்?***

***பெற்றுடைய பெரு வரமும்*** - இராவணன் தவம் செய்து பெற்ற பெரிய வரங்களும்; ***பிறந்துடைய வஞ்சனையும்*** - அவன் பிறந்த போதே உடன் பிறந்த வஞ்சகம் முதலிய தீய குணங்களும்; ***பிறவும்*** - மற்றும் அவன் பெற்ற ஆட்சி,செல்வம் போன்றவையும்; ***உன் கை வில் தொடையின் விடுகணையால்*** - உனது கையில் தாங்கியுள்ள வில்லின் தொடையிலிருந்து விடும் அம்புகளால்; ***வெந்து ஒழியும் எனக் கருதி*** - வெந்து அழியும் என்று எண்ணி; ***விரைவில் வந்தான்*** - உன்னைச் சரண்புக விரைந்து இங்கு வந்தான்; ***உற்றுடைய பெருவரமும்*** - இந்த வீடணன் பெற்றுள்ள நல்ல பெரிய வரங்களும்; ***உகந்துடைய தண்ணளியும்*** - இவன் விரும்பி அடைந்துள்ள கருணைப்பண்பும்; ***உணர்வும் நோக்கின்*** -இவனுடைய ஞான உணர்வையும் ஆராய்ந்தால்; ***வாள் அரக்கன் அன்றியே தவத்தின் வாய்த்தார்*** - வாட்போரில் வல்ல அரக்கர் குலத்தவனான இந்த வீடணனைக் காட்டிலும் தவத்தில் சிறந்தவர் யாருண்டு? ***மற்று உடையர் தாம் உளரோ*** - இத்தகைய நல்ல பண்புகள் வாய்த்தவர் வேறு எங்கும் உளரோ?

*இராவணன் வரம் பல பெற்றான். அவன் பிறந்த போதே உடன் பிறந்தது வஞ்சகம் என்பான். "பிறந்துடைய வஞ்சகமும்" என்றான். வீடணன் உற்ற பெருவரம் தெய்வ பக்தியும் அந்தணர், முனிவர் ஆகியோரிடம் அன்பும் என்பனவாம். அரக்கன் என்பதால் நம்முடன் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்று கூறியவர்களை மறுத்துரைப்பவனைப் போல, இவனுக்குள்ள நல்ல பண்புகள் வேறு யாருக்குண்டு என்கிறான்.*

***6464. 'தேவர்க்கும், தானவர்க்கும், திசைமுகனே***
***முதலாய தேவ தேவர்***
***மூவர்க்கும், முடிப்ப அரிய காரியத்தை***
***முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்;***
***ஆவத்தின் வந்து, 'அபயம்!'' என்றானை***
***அயிர்த்து அகல விடுதிஆயின்,***
***கூவத்தின் சிறு புனலைக் கடல் அயிர்த்தது***
***ஒவ்வாதோ?-கொற்ற வேந்தே!***

***கொற்ற வேந்தே*** *- வெற்றியை உடைய வேந்தனே!* ***தேவர்க்கும் தானவர்க்கும்*** *- தேவர்களுக்கும், அசுரர்களுக்கும்;* ***திசை முகனே முதலாய தேவதேவர் மூவர்க்கும்*** *- பிரமன் முதலான தேவர்களுக்கெல்லாம் மேலான மும்மூர்த்திகளுக்கும்;* ***முடிப்பரிய காரியத்தை*** *- செய்து முடிக்க இயலாத செயல்களை எல்லாம்;* ***முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்*** *- நிறைவேற்றி முடிப்பதற்கு நீ முனைந்து நின்றாய்; (அத்தகைய நீ)-;* ***ஆவத்தின் வந்து அபயம் என்றானை*** *- தனக்கு ஆபத்து வந்த காலத்திலே 'அடைக்கலம்' என்று வந்த வீடணனை;* ***அயிர்த்து அகல விடுதி ஆயின்*** *- சந்தேகப்பட்டு ஏற்றுக் கொள்ளாது புறம் செல்ல விடுவாயானால்;* ***கூவத்தின் சிறு புனலை கடல் அயிர்த்தது ஒவ்வாதோ*** *- கிணற்றிலுள்ள சிறிய அளவுள்ள தண்ணீரை, கடல் அயிர்த்ததற்கு ஒப்பாகாதோ? ஆகும் என்பதாம்.*

*தேவர், அரக்கர், திசைமுகன் முதலான மூவர் ஆகிய இவர்களாலும் செய்ய இயலாத பெரிய செயல்களை யெல்லாம் செய்து நிறைவேற்ற நீ முனைந்து நிற்கிறாயே இத்தகைய பெருமை உடைய நீ ஆபத்துக்காலத்தில் அடைக்கலம் என வந்தவனைக் கைவிடலாமா என்பான் 'ஆவத்தில் அபயம் என்றவனை அயிர்த்து அகல விடுதியாயின்' என்றான். கிணற்று நீரைக் கடல் சந்தேகிப்பது போன்றது, நீ இவனைச் சந்தேகிப்பதாகும் என்றான். ஆவத்து-ஆபத்து.*

***6465. ' "பகைப் புலத்தோர் துணை அல்லர்" என்று***
***இவனைப்***
***பற்றோமேல், அறிஞர் பார்க்கின்,***
***நகைப் புலத்ததாம் அன்றே; நல் தாயம்***
***உளது ஆய பற்றால் மிக்க***

***தகைப் புலத்தோர் தந்தையர்கள், தம்பியர்கள்,***
***தமையர், இவர்தாமே அன்றோ,***
***மிகைப் புலத்து விளைகின்றது ஒரு பொருளைக்***
***காதலிக்கின், விளிஞர் ஆவர்?***

***பகைப்புலத்தோர் துணை அல்லர்*** - *பகைவர்களைச் சேர்ந்த இவர்கள் நமக்குத் துணை ஆகமாட்டார்கள்;* ***என்று இவனைப் பற்றாமேல்*** - *என்றெண்ணி, இந்த வீடணனை நாம் ஏற்றுக்கொள்ள வில்லை என்றால்;* ***அறிஞர் பார்க்கில்*** - *கற்றறிந்த அறிஞர்கள் பார்த்தார் என்றால்;* ***நகைப்புலத்தது ஆம் அன்றே*** - *அவர்களது சிரிப்புக்கு இடமாகுமல்லவா?* ***நல்தாயம் உளதாய பற்றால்*** - *நல்ல தாயத்தவர்களாக உள்ள பற்றினால்;* ***மிக்க தகைப்புலத்தோர்*** - *மிகுந்த அன்பு மிக்க தகுதி உடையவர்களான;* ***தந்தையர்கள் தம்பியர்கள் தமையர்*** - *தந்தை, தம்பி, தமையனாகிய;* ***இவர்தாமே அன்றோ*** - *இவர்கள் தாமே;* ***மிகைப்புலத்து விளைகின்ற ஒருபொருளை*** - *மேம்பாட்டுக்குரியதாய் விளைந்துள்ள ஒரு பொருளை;* ***காதலிக்கின் விளிஞர் ஆவார்*** - *விரும்புவார்களாயின் பகைவர் ஆவார்கள்.*

*விளிஞர்-பகைவர். தாயபாகம் பற்றிய சச்சரவுகளால் தாயத்தார் பகைவராவார்; வீடணனைப் போன்றவர்கள் கைவிடத்தக்கவரல்லர் என்பது கருத்து.*

***6466. 'ஆதலால், "இவன் வரவு நல் வரவே"***
***என உணர்ந்தேன், அடியேன்; உன்தன்***
***வேத நூல் எனத் தகைய திருவுளத்தின்***
***குறிப்பு அறியேன்' என்று விட்டான்-***
***காதல் நான்முகனாலும் கணிப்ப அரிய***
***கலை அனைத்தும் கதிரோன் முன் சென்று***
***ஓதினான், ஓத நீர் கடந்து, பகை கடந்து,***
***உலகை உய்யக் கொண்டான்.***

***காதல் நான்முகனாலும் கணிப்பரிய*** - *கலைகளில் விருப்பம் மிக்க பிரமனாலும் இவ்வளவினதென்று கணிக்க இயலாத;* ***கலை அனைத்தும்*** - *எல்லாக்கலைகளையும்;* ***கதிரோன் முன் சென்று ஓதினான்*** - *சூரியனுக்கு முன் சென்று அவனிடம் கற்றுத் தேர்ந்தவனும்;* ***ஓத நீர்கடந்து*** - *குளிர்ந்த நீர் நிறைந்த கடலைத்தாண்டி;* ***பகை கடந்து*** - *பகைவர்களாகிய இலங்கை அரக்கரை வென்று;* ***உலகை உய்யக்கொண்டான்*** - *இவ்வுலகத்தை உய்யுமாறு செய்தவனுமான அனுமன் (இராமனை நோக்கி);* ***ஆதலால் இவன் வரவு நல்வரவே என உணர்ந்தேன் அடியேன்*** - *ஆதலினால் இந்த வீடணனது வருகை நன்மையான வருகையே என நான் உணர்ந்தேன்;* ***வேத நூல் எனத் தகைய*** - *வேத நூல் என்று சொல்லத்தகுந்த;* ***உன்றன் திருஉளத்தின் குறிப்பு அறியேன்*** *-; உனது திருவுள்ளக் கருத்தை நான் அறியேன்;* ***என்று விட்டான்*** - *என்று கூறி முடித்தான்.*

*இராமன் திருவுள்ளத்தில் வேதக்கருத்துக்கள் நன்கு பதிந்திருந்ததால் 'வேத நூல் எனத்தகைய திருவுள்ளம்' என்றான். நான் இவன் வரவு நல்வரவே என*

உணர்ந்தேன். உனது திருவுள்ளம் என்ன நினைக்கின்றதோ அதை அறியேன் என்பான். "திருவுள்ளத்தின் கருத்தறியேன்" என்றான். ஓடுகின்ற கதிரவனுக்கு முன்னால் முகம் காட்டிப் பின்புறமாக ஓடிக்கொண்டே கதிரவனிடம் எல்லாக் கலைகளையும் கற்றவன் அனுமன்.

*அனுமன் கூறியது கேட்டு உவந்த இராமபிரான் கூற்று*

***அறுசீர் விருத்தம் (வேறுவகை)***

***6467. மாருதி அமுத வார்த்தை செவி மடுத்து, இனிது மாந்தி,
'பேர் அறிவாள! நன்று நன்று' எனப் பிறரை நோக்கி, 'சீரிது; மேல் இம் மாற்றம் தெளிவுறத் தேர்மின்' என்னா,
ஆரியன் உரைப்பதானான்; அனைவரும் அதனைக் கேட்டார்.***

***மாருதி அமுத வார்த்தை செவி மடுத்து*** - அனுமன் கூறிய அமுதம் போன்ற வார்த்தைகளை இராமபிரான் காதாரக் கேட்டு; ***இனிது மாந்தி*** - (இனிய அமுதருந்தியது போல) மனத்தால் அனுபவித்து; பேரறிவாள! ***நன்று நன்று என*** - பேரறிவுடையவனே நல்லது நல்லது என்று; ***பிறரை நோக்கி*** - மற்றவர்களை எல்லாம் பார்த்து; ***சீரிது*** - அனுமன் கூறியவை சிறந்த கருத்துக்கள்; ***மேல் இம்மாற்றம் தெளிவுறத் தேர்மின்*** - பின்னால் இவன் கூறிய மாற்றத்தை தெளிவாகத் தெரிந்து கொள்வீர்கள்; ***என்னா ஆரியன் உரைப்பதானான்*** - என்று மேலோனாகிய இராமன் கூறலானான்; ***அனைவரும் அதனைக் கேட்டார்*** - எல்லோரும் இராமபிரான் கூறியதைக் கேட்கலாயினர்.

*அனுமன் கூறிய சொற்களை அமுதம் உண்பவனைப் போல இனிது கேட்டு மகிழ்ந்தான் என்பதால் 'மாருதி அமுத வார்த்தை செவிமடுத்து இனிது மாந்தி' என்றார். மாந்தி-பருகி (குடித்து) அனுமன் கூறிய உரையால் அவனது பேரறிவை வியந்த ராமபிரான் 'பேரறிவாள' என அழைத்தான். ஆரியன்-மேலோனாகிய இராமபிரான். இனிவரும் 15 பாடல்கள் இராமபிரான் கூற்றாகும்.*

***6468. 'கருத்து உற நோக்கிப் போந்த காலமும்நன்று; காதல்
அருத்தியும் அரசின் மேற்றே; அறிவினுக்கு அவதி இல்லை;
'பெருத்து உயர் தவத்தினானும் பிழைப்பு இலன்" என்னும் பெற்றி***

***திருத்தியது ஆகும் அன்றே, நம்வயின் சேர்ந்த செய்கை?***

***கருத்து உற நோக்கி*** - *(வீடணன்) கருத்துடன் ஆய்ந்து பார்த்து;* ***போந்த காலமும் நன்று*** - *இங்கு வந்த சமயமும் நல்லதே;* ***காதல் அருத்தியும்*** - *அவன் கொண்டிருக்கும் பெரிய விருப்பமும்;* ***அரசின் மேற்றே*** - *இலங்கை அரசின் மேலான வீட்டரசே;* ***அறிவினுக்கு அவதி இல்லை*** - *(அதற்கேற்றபடி) இவனுடைய அறிவுக்கு எல்லையே இல்லை;* ***பெருத்து உயர்தவத்தினானும்*** - *பெரிய உயர்ந்த தவஒழுக்கத்தாலும்;* ***பிழைப்பு இலன்*** - *குறையுடையவன் அல்லன்; என்னும் பெற்றி* - ***என்னும் தன்மை*** *;* ***திருத்தியதாகுமன்றே நம் வயின் சேர்ந்த செய்கை*** - *நமது பக்கம் சேர்ந்த செய்கை ஒன்றே விளக்குமல்லவா?*

*'காலமே நோக்கினும் ஏலுமே' என நீலன் கூறியதை (6465) மறுப்பவன் போல் 'போந்த காலமும் நன்று' என்றது குறிப்பிடத்தக்கது. 'காதல் அருத்தியும்' அரசின் மேற்றே என்பதற்கு இலங்கை ஆட்சியின் மீதே என்றும் பொருள் கூற இடமுண்டு. எனினும் அது சிறப்புடைய கருத்தன்று. வீடணன் பேரறிவுக்கும், உயர்ந்த தவ ஒழுக்கத்துக்கும், ஞான உணர்வுக்கும் வெற்றரசு நாடியதாகக் கொள்ளல் பொருந்தாது. 'திருத்தியதாகும்' என்பதற்கு வீடணன் அரக்கப்பிறப்பில் இருந்து நீதியால் வந்த நெடுந்தரும நெறியினனாகத் திருந்தியதாகவும் கூறுதல் பொருந்தும்.*

***6469. 'மற்று இனி உரைப்பது என்னோ? மாருதி வடித்துச் சொன்ன***
***பெற்றியே பெற்றி; அன்னது அன்றுஎனின், பிறிது ஒன்றானும்,***
***வெற்றியே பெறுக, தோற்க, வீக, வீயாது வாழ்க,***
***பற்றுதல் அன்றி உண்டோ, அடைக்கலம் பகர்கின்றானை?***

***மற்று இனி உரைப்பதென்னே*** - *இனி வேறாக உரைப்பதற்கு என்ன உண்டு?* ***மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி*** - *அனுமன் ஆராய்ந்து கூறிய ஆலோசனையே மேலான ஆலோசனை;* ***அன்னது அன்று எனில்*** - *(வீடணனை ஏற்றுக் கொள்ளுதலாகிய அது அல்ல என்றால்;* ***பிறிது ஒன்றானும்*** - *அனுமன் சொன்னது நாம் செய்யத்தகாததாயினும்;* ***வெற்றியே பெறுக*** - *வீடணனை ஏற்றுக் கொள்வதால் வெற்றியே உண்டாகட்டும்;* ***தோற்க வீக வீயாது வாழ்க*** - *நாம் தோற்கட்டும் அழியட்டும் அழியாது வாழட்டும்;* ***அடைக்கலம் பகர்கின்றானை*** - *அபயம் என்று வந்தவனை நாம் ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறேதும் உள்ளதோ? இல்லையென்பதாம்.*

*அனுமன் கருத்தும் தனது கருத்தும் ஒன்றே என்பதால் வேறுதனியாக நான் கூற வேண்டியதில்லை என்பதால் "மற்று இனி உரைப்பது என்னோ" என்றான்.*

***6470. ‘இன்று வந்தான் என்று உண்டோ? எந்தையை யாயை முன்னைக்***
***கொன்று வந்தான் என்று உண்டோ? அடைக்கலம் கூறுகின்றான்;***
***துன்றி வந்து அன்பு செய்யும் துணைவனும் அவனே; பின்னைப்***
***பின்றும் என்றாலும், நம்பால் புகழ் அன்றிப் பிறிது உண்டாமோ?***

***அடைக்கலம் கூறுகின்றான்*** - *நம்மிடம் அடைக்கலம் என்று கூறி வந்த இவன்;* **இன்று வந்தான் என்றுண்டோ** - *இன்றுதான் வந்தான் என்று விலக்குதல் உண்டோ;* **எந்தையையாயை முன்னைக் கொன்று வந்தான் என்றுண்டோ** - *எனது தந்தையையும், தாயையும் முன்பு கொன்றுவிட்டு வந்த ஒருவனானாலும் விலக்குவதுண்டோ;* **துன்றி வந்து அன்பு செய்யும் துணைவனும் அவனே** - *நம்மை நெருங்கி வந்து நமக்கு அன்பு செய்கின்ற துணைவன் அவனே;* **பின்னைப் பின்றும் என்றாலும்** - *பின்பு நம்மிடம் மாறுபடுவான் என்ற போதிலும்;* **நம்பால் புகழ் அன்றி** - *இவனை ஏற்றுக்கொள்ளும் நமக்கு புகழ்தானே அல்லாது;* **பிறிது உண்டாமோ** - *வேறு பழி உண்டாகுமோ?*

*நம்மைச்சரண் அடைய வந்த வீடணன் இதற்குமுன்பு நமக்குப் பழக்கமில்லாதவனாய் இன்றுதான் வந்த புதியவன் என்றாலும் அதுகாரணமாக இவனை விலக்குதல் கூடாது என்பான். "இன்று வந்தான் என்றுண்டோ" என்றான். இவன் நல்ல பண்பும், தவமும் இல்லாத, எனது தாய் தந்தையரைக் கொன்றுவிட்டு வந்த கொடியவன் என்றாலும் விலக்குதல் கூடாது என்பதை "எந்தையை, யாயை முன்னர் கொன்று வந்தான் என்றுண்டோ" என்றான். நம்மைச் சேரவந்த இவனே அன்பு செய்யும் துணைவன். சிலகாலம் சென்று நம்முடன் மாறுபடுவானாயினும் இவனைச் சேர்த்துக்கொண்ட நமக்குப் புகழ்தானே தவிர, பழி எதுவும் வராது என்பான். 'பின்னைப் பின்றும் என்றாலும் நம்பால் புகழ் அன்றிப் பிறிது உண்டாமோ" என்றான். புகழ் அல்லாதது பழிதானே எனவே பிறிது என்றான்.*

***6471. 'பிறந்த நாள் தொடங்கி, யாரும், துலை புக்க பெரியோன் பெற்றி***
***மறந்த நாள் உண்டோ? என்னைச் சரண் என வாழ்கின்றானைத்***
***துறந்த நாட்கு இன்று வந்து துன்னினான் சூழ்ச்சியாலே***
***இறந்த நாள் அன்றோ, என்றும் இருந்த நாள் ஆவது!' என்றான்.***

***பிறந்தநாள் தொடங்கி*** - எவரும் தாம் பிறந்தநாள் முதலாக; ***துலை புக்கபெரியோன் பெற்றி*** - ஒரு புறாவுக்காகத் தானே தராசுக் கோலில் சென்றமர்ந்த பெரியோன் ஆகிய சிபிச் சக்கரவர்த்தியின் பெருமையை; ***யாரும் மறந்த நாள் உண்டோ*** - எவரேனும் மறந்த ஒரு நாளும் உள்ளதோ? இல்லை அன்றோ? ***என்னைச்சரண் என வாழ்கின்றானை*** - என்னை அடைக்கலம் என்று கூறி வந்து வாழ இருக்கும் இந்த வீடணன்; ***துறந்த நாட்கு*** - ஏற்றுக்கொள்ளாது விலக்கிய நாளைவிட; ***இன்று வந்து துன்னினான்*** - இன்று இங்கு வந்து நம்மை அடைந்த இவனுடைய; ***சூழ்ச்சியாலே*** - வஞ்சகச் செயல்களால்; ***இறந்த நாள் அன்றோ*** - நான் இறக்க நேர்ந்தால் அவ்வாறு இறந்த நாள் அல்லவா; ***என்றும் இருந்த நாள் ஆவது என்றான்*** - நான் என்றும் நிலை பெற்றிருந்த நாள் ஆவது என இராமன் கூறினான்.

*துலைபுக்க பெரியோன் - சிபிச்சக்கரவர்த்தி. இன்று வந்து நம்மைச் சேர்ந்த இவனுடைய சூழ்ச்சியாலே நான் இறக்க நேர்ந்தால் அந்த நாளே நிலைபெற்றிருக்கும் நாளாகும் என்பதை 'சூழ்ச்சியாலே இறந்த நான் அன்றோ என்றும் இருந்த நாள்' என்றான். சிபியை உலகம் மறந்த நாள் இல்லை. அந்த மன்னன் வழிவந்த நான் அடைக்கலம் என்று வந்தவனை ஏற்றுக்கொள்வது தானே முறை என்பது கருத்து.*

***6472. 'இடைந்தவர்க்கு, "அபயம், யாம்!" என்று
இரந்தவர்க்கு, எறி நீர்வேலை
கடைந்தவர்க்கு, ஆகி, ஆலம் உண்டவற்
கண்டிலீரோ?
உடைந்தவர்க்கு உதவான் ஆயின், உள்ளது ஒன்று
ஈயான் ஆயின்,
அடைந்தவர்க்கு அருளான் ஆயின், அறம் என்
ஆம்? ஆண்மை என் ஆம்?***

***இடைந்தவர்க்கு*** - (பாற்கடலைக் கடைந்த போது தோன்றிய நஞ்சுக்கு) அஞ்சி விலகி வந்தவர்களும்; ***அபயம் யாம் என்று இரந்தவர்க்கு*** - நாங்கள் உனக்கு அடைக்கலம் என்று கெஞ்சியவர்களும்; ***எறி நீர் வேலை கடைந்தவர்க்கு ஆகி*** - அலை எறியும் பாற்கடலைக் கடைந்தவர்களும் ஆன தேவர்களுக்காக; ***ஆலம் உண்டவற் கண்டிலீரோ*** - நஞ்சைத்தான் உண்டு, அவர்களைக்காத்த சிவபிரானை நீங்கள் கண்டதில்லையா? ***உடைந்தவர்க்கு உதவானாயின்*** - தோல்வியால் சிதைந்து நொந்தவர்களுக்கு உதவவில்லை என்றால்; ***உள்ளது ஒன்று ஈயானாயின்*** - தன்னிடம் உள்ள பொருளைக் கேட்டுவந்தவர்களுக்குத் தரவில்லை என்றால்; ***அடைந்தவர்க்கு அருளானாயின்*** - அடைக்கலம் என்று வந்தவர்களுக்குக் கருணைகாட்டி அருள் செய்யவில்லை என்றால்; ***அறம் என்னாம் ஆண்மை என்னாம்*** - அறத்தால் என்னபலன்? ஆண்மையால் என்ன பயன்?

*எறிநீர் வேலை - அலை பொங்கும்கடல். ஆலம்-நஞ்சு. உடைந்தவர் - பகைவருக்குத் தோற்று வந்தவர்கள். வலிமைக்குறைவால் தோல்வியைத்*

*தழுவியவர்களுக்கும் உதவவில்லை என்றாலும் வறுமையால் நாடிவந்து இரந்தவர்களுக்கு ஒரு பொருள் தரவில்லை என்றாலும், அடைக்கலம் என்று வந்தவர்களை ஏற்று அருளவில்லை என்றாலும் அறத்தாலும் ஆண்மையாலும் எந்தப் பயனுமில்லை என்பதை 'அறம் என்னாம்? ஆண்மை என்னாம்?" என்றான். அடைக்கலம் புகுந்த தேவர்களைக்காக்க, நஞ்சினை உண்ட சிவபெருமானை நீங்கள் அறியவில்லையா என்பான். "கண்டிலீரோ" என்றான். இடைதல் - அஞ்சுதல். உடைதல் -தோற்றல்.*

***6473. 'பேடையைப் பிடித்து, தன்னைப் பிடிக்க வந்து***
***அடைந்த பேதை***
***வேடனுக்கு உதவி செய்து, விறகிடை வெந் தீ மூட்டி,***
***பாடுறு பசியை நோக்கி, தன் உடல் கொடுத்த***
***பைம் புள்***
***வீடு பெற்று உயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிது***
***அன்றோ?***

**பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்கவந்து அடைந்த பேதை வேடனுக்கு** - *பெண்புறாவைப் பிடித்துக்கொண்டு அதன் ஜோடியான தன்னையும் பிடிக்கவந்திருந்த பேதைத்தன்மையுடைய வேடன் ஒருவனுக்கு;* **உதவி செய்து** - *குளிர்காலத்தில் குளிர் மாற்ற உதவியாக;* **விறகிடை வெந்தீ மூட்டி** - *விறகு பொறுக்கி வந்து வெப்பமான தீயை மூட்டிக் குளிரைப்போக்கி;* **பாடுறு பசியை நோக்கி** - *அவனது பெரும்பசியைப் பார்த்து;* **தன் உடல் கொடுத்த பைம்புள்** - *அந்தத்தீயில் வீழ்ந்து தனது உடலையே அவனுக்கு உணவாகக் கொடுத்த ஒரு ஆண்புறா;* **வீடு பெற்றுயர்ந்த வார்த்தை** - *பரமபதம் பெற்று உயர்ந்தது என்ற வார்த்தை;* **வேதத்தின் விழுமிது அன்றோ** - *வேதத்தைவிட மேலான தொன்றல்லவா?*

***6474. 'போதகம் ஒன்று, கன்றி இடங்கர் மாப் பொருத***
***போரின்,***
***"ஆதிஅம் பரமே! யான் உன் அபயம்!" என்று***
***அழைத்த அந் நாள்,***
***வேதமும் முடிவு காணா மெய்ப்பொருள் வெளி***
***வந்து எய்தி,***
***மா துயர் துடைத்த வார்த்தை மறப்பரோ,***
***மறப்பிலாதார்?***

**போதகம் ஒன்று** - *(கஜேந்திரன் என்ற பெயர் கொண்ட) யானை ஒன்று;* **கன்றி இடங்கர்மாப் பொருத போரின்** - *தாமரைப்பொய்கையில் சினம் கொண்ட முதலை*

*ஒன்று தனது காலைப் பற்றி இழுத்துச்செய்த போரிலே தளர்ந்துபோய்;* ***ஆதியம் பரமே யான் உன் அபயம்*** *- ஆதிமூலமாயுள்ள பரம்பொருளே நான் உனது அடைக்கலம்;* ***என்று அழைத்த அந்நாள்*** *- என்று அழைத்த அந்த நாளிலே;* ***வேதமும் முடிவு காணா மெய்ப்பொருள்*** *- வேதங்களும் தேடி முடிவுகாண முடியாத மெய்ப்பொருளாகிய பரமன்;* ***வெளிவந்தெய்தி*** *- அந்த யானைக்காக வடிவெடுத்து வெளிப்பட்டு அந்த யானையை அடைந்து;* ***மாதுயர் துடைத்த வார்த்தை*** *- முதலையைக் கொன்று யானைக்குற்ற துன்பத்தை மாற்றியருளினார் என்ற வார்த்தையை;* ***மறப்பிலாதார் மறப்பரோ*** *- மறதியில்லாத அடியார்கள் என்றும் மறப்பார்களோ? (மறக்கமாட்டார்கள்)*

*போதகம் - யானை. இடங்கர்மா-முதலை. மெய்ப்பொருளே யானைக்கு அடைக்கலம் தந்து காத்தார் என்னும் போது நம்மை அடைந்த வீடணனை ஏற்றுக்கொள்ளுதல் நமது கடமை அல்லவா என்பது கருத்து.*

***6475. 'மன்னுயிர் எல்லாம் தானே வருவித்து வளர்க்கும் மாயன்,***
***தன் அன உலகம் எல்லாம் தருமமும் எவையும் தானே***
***என்னினும், அடைந்தோர்தம்மை ஏமுற இனிதின் ஓம்பி,***
***பின்னும் வீடு அளிக்கும் என்றால், பிறிது ஒரு சான்றும் உண்டோ?***

***மன்னுயிர் எல்லாம்*** *- உலகத்தில் நிலைத்து வாழும் உயிர்களை எல்லாம்;* ***வருவித்து வளர்க்கும் மாயன்*** *- படைத்து, வளர்க்கின்ற பெருமான்;* ***தன் அன உலகம் எல்லாம்*** *- தன்னை ஒத்த உலகத்தை எல்லாம்;* ***தருமமும் எவையும் தானே என்னினும்*** *- அவ்வுலகத்துக்குத் தர்மமும் அவற்றின் பயனும் பிறவும் தானே என்றாலும்;* ***அடைந்தோர் தம்மை*** *- தன்னைச் சரண் அடைந்தவர்களை எல்லாம்;* ***ஏமுற இனிதின் ஓம்பி*** *- இன்பமுற இனிதே பாதுகாத்து;* ***பின்னும் வீடளிக்கும் என்றால்*** *- மறுமையில் வீட்டின்பத்தையும் தந்து காப்பான் என்றால்;* ***பிறிது ஒரு சான்றும் உண்டோ*** *- சரணடைந்தவர்களைக் காக்க வேண்டும் என்பதற்கு வேறு சான்றும் உள்ளதோ?*

*உயிர்களைப் படைக்கும் பிரமனுக்கும் அந்தர்யாமியாயிருந்து படைத்தலும் காத்தலும் செய்பவன் திருமாலே என்பதால் "மன்னுயிர் எல்லாம் வருவித்து வளர்க்கும் மாயன்" என்றார். உலகமும் உலகத்திலுள்ள தருமங்களும் அந்தத் தருமங்களின் பயனும் எல்லாம் தானேயாக விளங்குபவன் பரமன் என்பதால் 'தன் அன உலகமெல்லாம் தருமமும் எவையும்தானே" என்றார். 'சரணமாகும் தன் தாள் அடைந்தோர்க்கெலாம் மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" (நாலாயிரம்-3067) என்பது நம்மாழ்வார் அருளிச் செயல்.*

*6476.* ***'நஞ்சினை மிடற்று வைத்த நகை மழுவாளன், "நாளும்***
***தஞ்சு" என, முன்னம், தானே தாதைபால் கொடுத்து, "சாதல்***
***அஞ்சினேன்; அபயம்!" என்ற அந்தணற்கு ஆகி, அந் நாள்,***
***வெஞ் சினக் கூற்றை மாற்றும் மேன்மையின் மேன்மை உண்டோ?***

***நஞ்சினை மிடற்று வைத்த*** - *(அமுதம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்த தேவர்கள் விஷம் என அஞ்சி அடைக்கலமடைய) அந்த நஞ்சினால் தேவர்கள் நலியாதபடி உண்டு கண்டத்திலே நிறுத்தி வைத்த;* ***நகை மழுவாளன்*** *- ஒளியுடைய மழுவை ஆயுதமாகக் கொண்ட சிவபிரான்;* ***நாளும்தஞ்சு என*** *- வாழ்நாள் குறைவாக (மார்க்கண்டனுக்கு);* ***தாதைபால் கொடுத்து*** *- தந்தையான மிருகண்டு முனிவருக்கு வரம்தந்தும்;* ***சாதல் அஞ்சி அபயம் என்ற*** *- சாவுக்கு அஞ்சினேன் நான் உனக்கு அடைக்கலம் என்று சரணடைந்த;* ***அந்தணர்க்கு ஆகி*** *- மறையவனான மார்க்கண்டனுக்கு அருள்புரிய;* ***அந்நாள் வெஞ்சினக் கூற்றை*** *- அந்த நாளிலே மார்க்கண்டனது உயிரைக் கவரவந்த கொடிய சினத்தை உடைய எமனை;* ***மாற்றும் மேன்மையின்*** *- குறைத்துத் தந்த வாழ்நாளை என்றும் பதினாறாக மாற்றிய சிவபெருமானுடைய மேலான பண்பைவிட;* ***மேன்மை உண்டோ*** *- மேலானது வேறேதும் உண்டோ?*

*மிடறு-கழுத்து. நகை-ஒளி.*

*6477.* ***' "சரண் எனக்கு யார்கொல்? என்று சானகி அழுது சாம்ப,***
***"அரண் உனக்கு ஆவென்; வஞ்சி! அஞ்சல்!" என்று அருளின் எய்தி,***
***முரணுடைக் கொடியோன் கொல்ல,மொய்அமர் முடித்து, தெய்வ***
***மரணம் என் தாதை பெற்றது என்வயின் வழக்கு அன்று ஆமோ?***

***சரண் எனக்கு யார் கொல் என்று*** *- (இராவணனால் கவர்ந்து செல்லப்பட்டபோது) எனக்கு அடைக்கலமளித்துக் காப்பவர் யார் என்று கூறி;* ***சானகி அழுது சாம்ப*** *- சீதா பிராட்டி அழுது சோர்ந்திருக்க;* ***அரண் உனக்கு ஆவேன்*** *- நான் உனக்கு அரணாக நின்று காப்பேன்;* ***வஞ்சி அஞ்சல் என்று அருளின் எய்தி*** *-*

*வஞ்சிக் கொடி போல்பவளே அஞ்சாதே என்று கருணை கொண்டு வந்து;* ***முரணுடைக் கொடியோன் கொல்ல*** *- முரண்பட்ட மனம் கொண்ட கொடியவனான இராவணன் வாளால் வெட்டிக்கொல்ல;* ***மொய் அமர் முடித்து*** *- இராவணனுடன் நெருங்கிய போர் செய்து முடித்து;* ***தெய்வ மரணம் என் தாதை பெற்றது*** *- தெய்வீக மரணத்தை எனக்குத் தந்தையான சடாயு பெற்றது;* ***என் வயின் வழக்கன்றாமோ*** *- எனக்கு மட்டும் முறையற்றதாகுமோ? ஆகாது.*

*சரண்-அடைக்கலம் (புகலிடம்). சாம்ப-சோர்வுற, அரண்- பாதுகாப்பு அஞ்சல்-அஞ்சாதே. மொய் அமர்-நெருங்கிய போர். சடாயுவைப் பெரிய உடையார் என வைணவ உலகம் போற்றும். அந்தச் சடாயு பெற்ற தெய்வமரணம் நான் பெறுவது முறையாகுவதே என்றான் ராமபிரான். மானமே நேரிலும் சரணடைந்தோரைக் காப்பதே பேரறம் என்பது இராமன் கருத்தாதல் காண்கிறோம்.*

***6478. 'உய்ய, 'நிற்கு அபயம்!" என்றான் உயிரைத் தன் உயிரின் ஓம்பாக்***
***கய்யனும், ஒருவன் செய்த உதவியில் கருத்திலானும்,***
***மய் அற, நெறியின் நோக்கி, மா மறை நெறியில் நின்ற***
***மெய்யினைப் பொய் என்றானும், மீள்கிலா நரகில் வீழ்வார்.***

***உய்யநிற்கு அபயம் என்றான்*** *- நான் உய்யுமாறு உன்னைச் சரண்புகுந்தேன் என்று வந்த ஒருவனுடைய;* ***உயிரைத் தன் உயிரின் ஓம்பாக்கய்யனும்*** *- உயிரினைத் தன்னுயிராகக் கருதிப் பேணிக்காப்பாற்றாத கீழ்மகனும்;* ***ஒருவன் செய்த உதவியில் கருத்திலானும்*** *- ஒருவன் செய்த உதவியில் கருத்தில்லாது மறந்தவனும்;* ***மய்அற நெறியின் நோக்கி*** *- குற்றம் நீங்க, அறநெறியை அறிந்து;* ***மாமறை நெறியில் நின்ற*** *- சிறந்த வேத நெறிப்படி நின்றொழுகும்;* ***மெய்யினைப் பொய் என்பானும்*** *- உண்மை நெறியைப் பொய் என்று கூறுபவனும்;* ***மீள்கிலா நரகில் வீழ்வார்*** *- மீண்டு வரமுடியாத கொடிய நரகத்திலே வீழ்ந்து துன்புறுவார்.*

*மய்-மை, குற்றம். மை, கையன் என்பன எதுகை நோக்கி மய், கய்யன் என வந்தது. மீள்கிலா - மீளமுடியாத உலகத்தார் உண்டென்பதில் லென்பான்... அலகையா வைக்கப்படும்" என்ற குறள் (850) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6479. 'சீதையைக் குறித்ததேயோ, "தேவரைத் தீமை செய்த***
***பேதையைக் கொல்வேன்" என்று பேணிய விரதப் பெற்றி?***
***வேதியர், "அபயம்!" என்றார்க்கு, அன்று, நான்***

**விரித்துச் சொன்ன**
**காதையைக் குறித்து நின்ற அவ் உரை கடக்கல்**

***ஆமோ?*** **தேவரைத் தீமை செய்த பேதையை** - *தேவர்களைத் துன்புறுத்திய அறிவில்லாத இராவணனை;* **கொல்வேன் என்று பேணிய விரதப் பெற்றி** - *கொல்லுவேன் என்று நானே விரும்பி ஏற்றுக்கொண்ட இந்த விரதத்தின் தன்மை;* **சீதையைக் குறித்ததேயோ** - *சீதையை மீட்டு வருதலைமட்டும் குறித்ததொன்றோ? அல்ல;* **வேதியர் அபயம் என்றார்க்கு** - *அந்தணர்கள் என்னை அடைந்து அடைக்கலம் என்றவர்களுக்கு;* **அன்று நான் விரித்துச் சொன்ன** - *அவர்கள் சரணடைந்த போது நான் விவரித்துக் கூறிய;* **காதையைக் குறித்து நின்ற** - *செய்தியைப் பற்றி நின்ற;* **அவ்வுரை கடக்கலாமோ** - *(அஞ்சல் என்று கூறிய) அந்தச் சொல்லை நான் மீறலாமோ?*

*"அவதரித்துச் செய்த ஆணைத்தொழில்களெல்லாம் ஆசிரத விரோதிகளை அழிப்பதற்கே" என்ற வைணவச் சான்றோர் உரை நினையத்தக்கது. காதை - காதா (பாடல்) இங்கு செய்தியைக் குறித்தது.*

***6480. 'காரியம் ஆக! அன்றே ஆகுக! கருணையோர்க்குச்***
**சீரிய தன்மை நோக்கின், இதனின்மேல் சிறந்தது**
***உண்டோ?***
**பூரியரேனும் தம்மைப் புகல் புகுந்தோர்க்குப் பொன்றா**
**ஆர் உயிர் கொடுத்துக் காத்தார், எண் இலா அரசர்**
***அம்மா!***

***காரியம் ஆக அன்றே ஆகுக*** - *நாம் எடுத்த காரியம் முற்றுப் பெறட்டும்; அல்லது முடியாமல் போகட்டும்;* **கருணையோர்க்குச் சீரிய தன்மை நோக்கின்** - *கருணையாளர்க்குரிய சிறந்த தன்மையை ஆராய்ந்தால்;* **இதனின் மேல் சிறந்ததுண்டோ** - *அடைக்கலம் என்று வந்தவனை ஆதரித்துக் காக்கும் இதைவிட மேலானதொன்றுண்டோ?* **பூரியரேனும் தம்மைப் புகல் புகுந்தோர்க்கு** - *கீழ் மக்களாயினும் தங்களைச் சரணடைந்தவர்களுக்கு;* **பொன்றா ஆருயிர் கொடுத்துக் காத்தார்** - *அழியாத தங்களது ஆருயிரைத் தந்தும் காத்தவர்கள்;* **எண்ணிலா அரசர் அம்மா** - *எண்ணிலடங்காத மன்னர்கள் (இவ்வுலகிலுண்டு).*

*காரியம்-மேற்கொண்ட செயங். ஆக - ஆகட்டும் அன்றே ஆகுக-ஆகாமல் போகட்டும் சீரியதன்மை-சிறந்தபண்பு. பூரியர்- கீழ்மக்கள்.*

***6481.*** **'ஆதலான், "அபயம்!" என்ற பொழுதத்தே, அபய**
**தானம்**
**ஈதலே கடப்பாடு என்பது; இயம்பினீர், என்பால்**
**வைத்த**
**காதலான்; இனி வேறு எண்ணக் கடவது என்?**

***கதிரோன் மைந்த!***
***கோது இலாதவனை நீயே என்வயின் கொணர்தி'***
***என்றான்.***

**ஆதலான் 'அபயம்' என்ற பொழுதத்தே** - *(இந்த வீடணன் அடைக்கலம் என்று வந்திருக்கிறான் அவனை ஏற்றுக்கொள்ள மேலே கூறிய காரணங்கள் சாலும்) ஆதலால் இவன் அபயம் என்று வந்த அந்தச் சமயத்திலேயே;* **அபயதானம் ஈதலே கடப்பாடு என்பது** - *அபயதானம் தருவதே நமக்கரிய கடமை என்பதை;* **என்பால் வைத்தகாதலால் இயம்பினீர்** - *என்பாலுள்ள அன்பால் கூடாதென்று சொன்னீர்கள்;* **இனி வேறு என்ன கடவது என்** - *இனி இதற்கு மாறாக எண்ணுதற்கு வேறு என்ன இருக்கிறது;* **கதிரோன் மைந்த** - *சூரிய குமாரனான சுக்கிரீவனே!* **கோதிலாதவனை** - *குற்றமொன்றுமில்லாத இந்த வீடணனை;* **நீயே என்வயின் கொணர்தி என்றான்** - *நீயே சென்று என்னிடம் அழைத்துக்கொண்டு வருக என்றான்.*

*பொழுதத்து - பொழுதிலே. அபயதானம்-அடைக்கலமாகிய தானம். கடப்பாடு- கடமை. இயம்பினீர்-சொன்னீர்கள். கதிரோன்- சூரியன். கோதிலாதவன் - குற்றமில்லாதவன். அடைக்கலம் கொடுத்தற்குரிய காரணங்களைப் பலவாறு விரித்துக் கூறிய இராமபிரான் 'ஆதலால்' என்றது அந்தக்காரணங்களால் என்ற பொருள்தந்து நின்றது. 'அபயம்' என்று வந்தவனை அப்பொழுதே ஏற்றுகொள்வது அறம். இனி எண்ணுதற்கு எதுவுமில்லை நீயே சென்று அழைத்துவருக எனச் சுக்கிரீவனுக்குக் கூறினான். இராமபிரான். அவர்கள் முன்பு மறுத்துக்கூறியதும் கூட, இராமபிரானுக்கு இவனால் துன்பம் நேருமோ என பெருமானிடம் கொண்ட அன்பினால்தான் என்பதால் "என்பால் வைத்த காதலால் இயம்பினீர்" என்றான்.*

*சுக்கிரீவன் வீடணனை அழைத்துவரச் செல்லுதல்*

***6482. ஐயுறவு எல்லாம் தீரும் அளவையாய் அமைந்தது***
***அன்றே;***
***தெய்வ நாயகனது உள்ளம் தேறிய அடைவே தேறி. கைபுகற்கு அமைவது ஆனான், 'கடிதினின்***
***கொணர்வல்' என்னா,***
***மெய்யினுக்கு உறையுள் ஆன ஒருவன்பால்***
***விரைவின் சென்றான்.***

**ஐயுறவு எல்லாம் தீரும் அளவையாய்** - *(சுக்கிரீவன்) மனதிலெண்ணிய ஐயமெல்லாம் தீர்ந்து ஒளியத்தக்க பிரமாணமாக;* **அமைந்தது அன்றே** - *அமைந்ததொன்றாக;* **தெய்வநாயகனதுள்ளம்** - *தெய்வங்களுக்கெல்லாம் நாயகனாகிய இராமபிரானுடைய உள்ளம்;* **தேறிய அடைவே தேறி** - *தெளிந்த முறையே நானும்தெளிவு பெற்று;* **கைபுகற்கு அமைவதானான்** - *வீடணன் நம்பக்கம் சேருதற்கு உடன்படுவானானான்;* **கடிதினில் கொணர்வல் என்னா** - *விரைவில் அவனை இங்கு*

*அழைத்து வருவேன் என்று;* **மெய்யினுக்கு உறையுளான ஒருவன் பால் விரைவில் சென்றான்** *- உண்மைக்கு உறைவிடமான ஒப்பற்றவனாகிய வீடணனிடம் விரைந்து சென்றான்.*

*அளவை - பிரமாணம். அடைவு - முறைமை. அமைவது- உடன்படுவது. இலங்கையில் மெய்தங்குவதற்கு புகலிடமளித்தவன் வீடணன் என்பதால் "மெய்யினுக்கு உறையுள்" என்றார்.*

*சுக்கிரீவன் வருகையை அறிந்து வீடணன் எதிர் செல்லுதல்*

***6483. வருகின்ற கவியின் வேந்தை, மயிந்தனுக்கு இளைய வள்ளல்,***
***' "தருக!" என்றான்; அதனால், உன்னை எதிர் கொளற்கு அருக்கன் தந்த,***
***இரு குன்றம் அனைய தோளான் எய்தினன்' என்னலோடும்,***
***திரிகின்ற உள்ளத்தானும், அகம் மலர்ந்து, அவன் முன் சென்றான்.***

**வருகின்ற கவியின் வேந்தை** *- (வீடணனை அழைத்துச் செல்ல) வருகின்ற வானர வேந்தனான சுக்கிரீவன்;* **மயிந்தனுக்கு இளைய வள்ளல்** *- மயிந்தனுக்குத் தம்பியான துமிந்தன்;* **'தருக' என்றான்** *- (வீடணனிடம்) உன்னை அழைத்து வருமாறு இராமபிரான் கூறினான்;* **அதனால் உன்னை எதிர் கொளற்கு** *- அதனால் உன்னைச் சந்திப்பதற்கு;* **அருக்கன் தந்த** *- சூரியன் புத்திரனாக தந்த;* **இருகுன்றம் அனைய தோளான்** *- இரண்டு மலைகளை ஒத்த தோள்களை உடையவனான சுக்கிரீவன்;* **எய்தினன் என்னலோடும்** *- இங்கு வந்தான் என்றவுடன்;* **திரிகின்ற உள்ளத்தானும்** *- இராமபிரான் ஏற்றுக்கொள்வானோ மாட்டானோ என நினைத்து அலையும் மனத்தினனான வீடணன்;* **அவன் முன் சென்றான்** *- சுக்கிரீவனுக்கு முன்பு சென்றான்.*

*கவியின் வேந்து-சுக்கிரீவன். தருகஎன்றான்-தருகென்றான் என நின்றது. இராமன் தன்னை ஏற்றுகொள்வானோ? மாட்டானோ என்ற ஐயத்தால் ஒரு நிலையில் நில்லாது அலைந்த மனத்தை "திரிகின்ற உள்ளம்" என்றார், துமிந்தன் 'தருகென்றான்' என்று சொல்லக் கேட்டதும் வீடணன் மனம் மகிழ்ந்தது என்பதனை " அகம் மலர்ந்து" என்றார்.*

*சுக்கிரீவனும் வீடணனும் தழுவிக் கொள்ளுதல்*

***6484. தொல் அருங் காலம் எல்லாம் பழகினும், தூயர் அல்லார்***

***புல்லலர்; உள்ளம் தூயார் பொருந்துவர், எதிர்ந்த ஞான்றே;***
***ஒல்லை வந்து உணர்வும் ஒன்ற, இருவரும், ஒரு நாள் உற்ற***
***எல்லியும் பகலும் போல, தழுவினர், எழுவின் தோளார்.***

***தொல்அருங் காலமெல்லாம் பழகினும்*** - நீண்ட நெடுங்காலம் நெருங்கிப் பழகி வந்தாலும்; ***தூயர் அல்லார் புல்லர்*** - மனத்தூய்மையில்லாதவர்கள் ஒன்றுபடமாட்டார்; ***உள்ளம் தூயார் எதிர்ந்த ஞான்றே பொருந்துவர்*** - தூயமனம் கொண்ட மேலோர் சந்தித்த அப்போதே ஒன்றிவிடுவர்; ***ஒல்லை வந்து உணர்வும் ஒன்ற*** - விரைந்து வந்து, ஒத்த உணர்வுடன் சந்தித்த; ***இருவரும்*** - சுக்கிரீவன், வீடணன் ஆகிய இருவரும்; ***ஒருநாள் உற்ற எல்லியும் பகலும் போல*** - ஒருநாளில் பொருந்திய இரவும் பகலும் போல; ***எழுவின் தோளார் தழுவினர்*** - தூண் போன்ற தோளினராகிய அவர்கள் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டனர். தொல்பெருங்காலம் - பழமையான நீண்ட காலம். "நூறாண்டு பழகினும் மூர்க்கர்கேண்மை நீர்கொள் பாசிபோல் வேர்கொள்ளாதே" ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்கவேர் வீழ்க்கும்மே" என்றது இங்கு நினைவு கூறத்தக்கது. எல்லி-இரவு. எழு- தூண். வீடணன் கருமை நிறம் (இரவு); சுக்கிரீவன் வெண்மை நிறம் (பகல்). எனவே, "இருவரும் ஒருநாள் உற்ற எல்லியும் பகலும் போலத் தழுவினர்" என்பது பொருந்துவதாயிற்று, பொதுப்பொருள் கூறி, சிறப்புப்பொருளை விளக்குவதால் இது வேற்றுப் பொருள்வைப்பணி ஆயிற்று. "தூயரல்லார் புல்லலர் உள்ளம் தூயார் பொருந்துவர்" என்பது பொதுப்பொருள். "சுக்கிரீவனும் வீடணனும் தழுவினர்" என்பது சிறப்புப் பொருள்.

*வீடணனுக்கு இராமன் அடைக்கலம் தந்ததைச் சுக்கிரீவன் தெரிவித்தல்*

***6485. தழுவினர் நின்ற காலை, 'தாமரைக்கண்ணன் தங்கள்***
***முழு முதல் குலத்திற்கு ஏற்ற முறைமையால் உவகை மூள,***
***வழுவல் இல் அபயம் உன்பால் வழங்கினன்; அவன் பொற் பாதம்***
***தொழுதியால், விரைவின்' என்று கதிரவன் சிறுவன் சொன்னான்.***

***தழுவினர் நின்ற காலை*** - சுக்கிரீவனும் வீடணனும் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு நின்றபோது; ***தாமரைக் கண்ணன்*** - தாமரை மலர் போன்ற கண்களை உடைய ராமபிரான்; ***தங்கள் முழு முதல் குலத்துக்கு*** - தமது சிறந்த

*முதன்மை வாய்ந்த சூரிய குலத்தின் இயல்புக்கு;* ***ஏற்ற முறைமையால்*** *- பொருந்திய முறைப்படி;* ***உவகை மூள*** *- மனத்திலே மகிழ்ச்சி பொங்க;* ***உன்பால் வழுவல் இல் அபயம் வழங்கினன்*** *- உனக்குக் குறையிலாத அபயத்தை வழங்கினான் எனவே;* ***அவன் பொற்பாதம் -*** *அப்பெருமானது பொன்னடிகளை;* ***விரைவின் தொழுதியால்*** *- விரைந்து வணங்குவாயாக;* ***என்று கதிரவன் சிறுவன் சொன்னான்*** *- என்று வீடணனை நோக்கி சூரியன் மகனான சுக்கிரீவன் கூறினான்.*

*அடைக்கலம் என வந்தவரை ஏற்றருள் புரிதல் சூரிய குலத்தோருக்குரிய பண்பாதலின் "குலத்துக்கேற்ற முறைமையால்" என்றான். குலத்துக்கேற்ப வழங்கினான் எனினும் தான் விரும்பி வழங்கினானா என்பதற்கு விடையாக "உவகை மூள வழங்கினன்" என்றான். இந்த அபயம் எக்குறையும் இல்லாதது என்பான், வழுவல் இல் அபயம் (என்றும் மாறாதது) என்றான். பெறுதற்கரிய பேற்றினை விரைந்து பெறுக என்பான் 'விரைவின் தொழுதி" என்றான்.*

*வீடணன் கொண்ட மகிழ்ச்சி*

***6486. சிங்க ஏறு அனையான் சொன்ன வாசகம் செவி புகாமுன்,***
***கங்குலின் நிறத்தினான்தன் கண் மழைத் தாரை கான்ற:***
***அங்கமும் மனம்அது என்னக் குளிர்ந்தது; அவ் அகத்தை மிக்குப்***
***பொங்கிய உவகை என்னப் பொடித்தன, உரோமப் புள்ளி.***

***சிங்க ஏறு அனையான்*** *- ஆண் சிங்கத்தைப் போன்றவனான சுக்கிரீவன்;* ***சொன்ன வாசகம்*** *- கூறிய சொற்கள்;* ***செவிப்படாமுன்*** *- தனது காதுகளில் வீழ்வதற்கு முன்பே;* ***கங்குலின் நிறத்தினான் தன்*** *- இரவு இருள் போன்ற நிறம் உடைய வீடணனது;* ***கண் மழைத்தாரை கான்ற*** *- கண்கள் மழைத்தாரையொத்த நீரைப் பொழிந்தன;* ***அங்கமும் மனமதென்னக் குளிர்ந்தது*** *- அவனது உடல் முழுதும் மனம்போலக் குளிர்ந்தது;* ***அவ்வகத்தை மிக்குப் பொங்கிய உவகை என்ன*** *- அந்த மனத்தில் நிறைந்து பொங்கிய மகிழ்ச்சியைப் போல;* ***உரோமப்புள்ளி பொடித்தன*** *- மயிர்க்கூச்செறிந்தன.*

*மகிழ்ச்சியால் மனம் குளிர்ந்தது போல உடலும் குளிர்ந்தது என்பதும் உள்ளத்தே எழுந்த உவகையை உரோம புளகாங்கிதத்தால் உடல் வெளிப்படுத்தியது என்பதும் தண்ணீர் வழிந்தது என்பதும் உவகை மெய்ப்பாடுகளாம்.*

***6487. ' "பஞ்சு" எனச் சிவக்கும் மென் கால் தேவியைப்***

***பிரித்த பாவி***
***வஞ்சனுக்கு இளைய என்னை, "வருக!" என்று***
***அருள் செய்தானோ?***
***தஞ்சு எனக் கருதினானோ? தாழ் சடைக் கடவுள்***
***உண்ட***
***நஞ்சு எனச் சிறந்தேன் அன்றோ, நாயகன் அருளின்***

***நாயேன்?*** **பஞ்சு எனச் சிவக்கும்** - *தோழியர் செம்பஞ்சு ஊட்ட வேணும் என்று சொன்னவுடன் பொறாமல் சிவக்கின்ற;* **மென்கால் தேவியை** - *மென்மையான பாதங்களை உடைய சீதாதேவியை;* **பிரித்த பாவி வஞ்சனுக்கு** - *இராமபிரானிடமிருந்து பிரியச் செய்த பாவியும், வஞ்சகனுமான இராவணனுக்கு;* **இளைய என்னை** - *இளைய தம்பியாகிய என்னை;* **வருக என்றுஅருள் செய்தானோ** - *வருவானாக எனக்கூறி அருள்புரிந்தானோ;* **தஞ்சு எனக் கருதினானோ** - *என்னையும் அடைக்கலம் என்று கருதினானோ;* **நாயகன் அருளின் நாயேன்** - *அடியவனாகிய நான் பெருமானுடைய திருவருளால்;* **தாழ்சடைக் கடவுள் உண்ட** - *தாழ்ந்த சடையை உடைய கடவுளான சிவபெருமான் அன்று உண்ட;* **நஞ்சு எனச் சிறந்தேன் அன்றோ** - *நஞ்சு எவ்வாறு சிவன் உண்டதால் சிறந்ததாயிற்றோ அதுபோல நானும் சிறந்தேன் அன்றோ.*

*சீதாபிராட்டியின் மென்மையான பாதங்களைச் சிறப்பித்து "பஞ்சு என சிவக்கும் மென்கால்தேவி" என்றான். அனுக்கிரக தேவதை என்பதால் திருவடியை நினைத்தான் போலும். இணைபிரியாத தெய்வீக தம்பதிகளான இராமனையும், சீதையையும் சேர்ந்து வாழ விடாதபடி பிரித்த பாவச் செயலின் கொடுமை தோன்ற "பாவி வஞ்சன்" என்றார். அருள் செய்வானோ தஞ்செனக் கருதுவானோ என்றெல்லாம் திரிகின்ற உள்ளத்தனாகிய வீடணன் "உன்பால் அபயம் வழங்கினன்" எனக் கேட்டு மகிழ்ச்சி தோன்ற 'வருக என்று அருள் செய்தானோ தஞ்சு எனக் கருதினானோ' என வியந்துரைத்தான் என்க. நஞ்சாயினும் சிவபிரான் உண்டதால், நிலையான வாழ்வு பெற்றுச் சிறந்து விளங்குதல் போல, அரக்கனாகிய நானும் நாயகன் அருளால் சிறந்தேன் என மகிழ்ந்து கூறினான் என்க.*

***6488. 'மருளுறு மனத்தினான் என் வாய்மொழி மறுத்தான்;***
***வானத்து***
***உருளுறு தேரினானும், இலங்கைமீது ஓடும் அன்றே?***
***தெருளுறு சிந்தை வந்த தேற்றம் ஈது ஆகின்,***
***செய்யும்***
***அருள் இது ஆயின், கெட்டேன்! பிழைப்பரோ***
***அரக்கர் ஆனோர்?***

**மருள் உறு மனத்தினான்** - *காம மயக்கத்தை உடைய மனத்தினனான இராவணன்;* **என் வாய்மொழி மறுத்தான்** - *எனது வாய்மொழியை மறுத்துவிட்டான்.* **வானத்து உருள் உறு தேரினானும்** - *வானவீதியிலே ஒற்றையாழித் தேரை உடையவனாகிய*

*சூரியனும்;* ***இலங்கை மீது ஓடுமன்றே*** *- இனி இலங்கை மீது செல்வானல்லவா?* ***தெருள் உறு சிந்தை வந்த*** *- இராமபிரானுடைய தெளிந்த மனத்தில் இருந்து வந்த;* ***தேற்றம் ஈதாகின்*** *- உறுதியான எண்ணம் இதுவானால்;* ***செய்யும் அருள் ஈதுவாயின்*** *- எனக்குச் செய்யும் அருள் இதுவானால்;* ***அரக்கர ஆனோர் பிழைப்பரோ*** *- அரக்கர்கள் பிழைப்பார்களா?* ***கெட்டேன்*** *- நான் கெட்டேன்.*

*உருள் உறுதேர்-சூரியனது ஒற்றை யாழித்தேர். கெட்டேன்- அரக்கரது பேரழிவைப் புலப்படுத்தும் இரக்கக் குறிப்புச் சொல். சீதாபிராட்டியைத் தவறான நோக்கத்தால், வஞ்சகமாகக் கவர்ந்து சென்று சிறை வைத்தமையால் இராவணனை "மருள் உறுமனத்தினான்" என்றான். இராவணனது ஆணைக்கு அஞ்சி, இதுவரை ஒதுங்கிச் சென்ற சூரியன் இனிமேல் இலங்கைமீது நேராகச் செல்ல நேரும் என்பான். "உருளுறுதேரினானும் இலங்கை மீதோடு மன்றே" என்றான். இராமபிரானுடைய தெளிந்த மனத்தே தோன்றிய உறுதியான எண்ணம் எனக்குப் புகல் தந்து காப்பது என்ற இதுவானால் என்பான். "தெருள் உறு சிந்தை வந்த தேற்றம் ஈதாயின்" என்றான்.*

***6489. 'தீர்வு அரும் இன்னல் தம்மைச் செய்யினும், செய்ய சிந்தைப்***
***பேர் அருளாளர் தம்தம் செய்கையின் பிழைப்பது உண்டோ?-***
***கார் வரை நிறுவி, தன்னைக் கனல் எழக் கலக்கக் கண்டும்,***
***ஆர்கலி, அமரர் உய்ய, அமுது பண்டு அளித்தது அன்றே?***

***செய்ய சிந்தைப் பேரருளாளர்*** *- செம்மையான மனத்தையுடைய, மேன்மையான அருளாளர்கள்;* ***தீர்வு அரும் இன்னல் தம்மைச் செய்யினும்*** *- தமக்குத் தீராத இன்னல்களைப் பிறர் செய்தாலும்;* ***தம்தம் செய்கையின் பிழைப்பதுண்டோ*** *- தமக்கே உரிய நல்ல செய்கையிலிருந்து மாறுபடுவார்களோ;* ***கார்வரை நிறுவி*** *- கருமையான பெரிய (மந்தர) மலையை மத்தாக நாட்டி;* ***தன்னைக் கனல் எழக் கலக்கக் கண்டும்*** *- (பாற்கடல்) தன்னை நெருப்பு எழும்படி தேவாசுரர்கள் கலக்குவதைப் பார்த்தும்;* ***ஆர்கலி அமரர் உய்ய*** *-பாற்கடலானது தேவர்கள் உய்யுமாறு;* ***அமுது பண்டு அளித்ததன்றே*** *- தேவாமுதத்தை முன்பு கொடுத்ததல்லவா?*

*தீர்வரும்-தீர்க்கமுடியாத. கார்வரை-கரியமலை (மந்தரமலை). 'செய்ய சிந்தைப் பேரருளாளர்' என்றது இராமனைப் போன்றவர்களைச் சுட்டி நின்றது. தீர்த்தற்கரிய துன்பத்தைப் பிறர் செய்தாலும் அருளாளர்கள் தங்கள் செய்கையில் பிழையார். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்வர் என்பதால் 'செய்கையின் பிழைப்பதுண்டோ' என்றான். பாற்கடல் வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கி கனல் எழக் கடைந்த போதும், கடைந்த தேவர்கள் உய்வு பெற இராவணன் தம்பி என்றாலும் அடைக்கலம் தந்து காக்க முன்வந்தான் எனப்*

பாற்கடலுக்கு இராமனை உவமையாக்கிக் கூறினானென்க. இது எடுத்துக்காட்டுவமை.

***6490. 'துறவியின் உறவு பூண்ட தூயவர் துணைவன் என்னை***
***உறவு உவந்து அருளி, மீளா அடைக்கலம் உதவினானே!***
***அற வினை இறையும் இல்லா, அறிவு இலா, அரக்கன் என்னும்***
***பிறவியின் பெயர்ந்தேன்; பின்னும், நரகினின் பிழைப்பதானேன்.'***

**துறவியின் உறவுபூண்ட** - துறவறத்தைத் தமக்குரிய அறமாக ஏற்றுக்கொண்ட; **தூயவர் துணைவன்** - தூயமுனிவர்களின் துணைவனான ராமன்; **என்னை உறவு உவந்தருளி** - என்னை உறவாக மிகவும் உவந்தருளி; **மீளா அடைக்கலம் உதவினானே** - எனக்கு மீளாத அடைக்கலத்தைக் கொடுத்துதவினான்; **அறவினை இறையுமில்லா** - சிறிதும் அறச்செயல்களைச் செய்யாத; **அறிவு இலா** - நல்லறிவும் இல்லாத; **அரக்கன் என்னும் பிறவியின்** - அரக்கர் என்னும் பிறவியில் இருந்து; **பெயர்ந்தேன்** - பெயர்ந்து, உயர் பிறவியனானேன்; **பின்னும் நரகினின் பிழைப்பதானேன்** - மேலும் நரகத்தை அடைவதிலிருந்தும் தப்பிவிட்டேன். துறவி-துறவு. துறவியின் உறவு பூண்ட தூயவர் துணைவன்- இராமபிரான் "மாமுனிவர்க்குறவாகி வனத்திடையே வாழும் கோ" (2325) என்று முன்னும் கூறுதல் காண்க. இராமபிரான் எனக்கு அடைக்கலம் தருதலால் அசுரப்பிறப்பிலிருந்து பெயர்ந்து அமரனானேன் என்பான். அரக்கன் என்னும் பிறவியின் பெயர்ந்தேன். என்றான். இராமபிரானைச் சரண்புகுந்த நான் நரகத்தொல்லையிலிருந்தும் தப்பியவனாவேன் என்பான் 'நரகினில் பிழைப்பதானேன்' என்றான். குறையும்-சிறிதும்.

*இராமனிடம் விரைவில் செல்லுமாறு சுக்கிரீவன் கூறுதல்*

***6491. திருத்திய உணர்வு மிக்க செங் கதிர்ச் செல்வன் செம்மல்,***
***'ஒருத்தரை நலனும் தீங்கும் தேரினும், உயிரின் ஓம்பும்***
***கருத்தினன் அன்றே, தன்னைக் கழல் அடைந்தோரை; காணும்***
***அருத்தியன், அமலன்; தாழாது ஏகுதி, அறிஞ!'***

**என்றான். திருத்திய உணர்வின் மிக்க** - (இராமபிரானது சொற்களால்) திருந்திய நல்லுணர்வு மிகுந்தவனாகிய; **செங்கதிர்ச் செல்வன் செம்மல்** - சிவந்த கிரணங்களை உடைய சூரிய குமாரனாகிய சுக்கிரீவன்; **ஒருத்தரை நலனும் தீங்கும் தேரினும்** - (வீடணனை நோக்கி) இராமன் ஒருவரை நன்மை, தீமைகளை ஆய்ந்தறியினும்; **தன்னைக் கழல் அடைந்தோரை உயிரின் ஓம்பும்கருத்தினன்** - தன்னைச்சரண்' அடைந்தோரை உயிரினும் சிறந்தோராகக் கருதிப் பேணும் கருத்துடையவன் அல்லவா? **காணும் அருத்தியன் அமலன்** - உன்னைக்காணும் விருப்பம் உடையவன் அந்தக் குற்றமற்ற பெருமான் (ஆதலால்); **அறிஞ ! தாழாது ஏகுதி என்றான்** - அறிவு மிக்கவனே! காலம் தாழ்த்தாது அவனிடம் செல்வாயாக என்றான்.

முன்பு வீடணனை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று கூறியவன் சுக்கிரீவன் இராமபிரானது நல்லுரை கேட்டுத் திருந்திய நல்லுணர்வுடையவனானான் என்பதால் 'திருத்திய உணர்வின் மிக்க' என்றார். ஒருவர் செய்யும் நன்மை, தீமைகள் ஆய்ந்தறியும் இயல்புடைய இராமபிரான் தீமையே புரிபவனானாலும் தன்னைச் சரணடைந்தோரை உயிரினும் மேலாகக் கருதி ஆதரிக்கும் பண்புடையவன் என்பதை 'கழல் அடைந்தோரை உயிரின் ஓம்பும் கருத்தினன்' என்றார். உயிரின்-உயிரைவிட 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்ற குறளில் (131) இப்பொருள் வந்தது காண்க. அருத்தி- விருப்பம். தாழாது - காலம்தாழ்த்தாமல்.

**6492. மொய் தவழ் கிரிகள் மற்றும் பலவுடன் முடுகிச் செல்ல,**
**மை தவழ் கிரியும் மேருக் குன்றமும் வருவது என்ன,**
**செய் தவம் பயந்த வீரர், திரள் மரம் ஏழும் தீய**
**எய்தவன் இருந்த சூழல், இருவரும் எய்தச் சென்றார்.**

**மொய் தவழ் கிரிகள்** - வலிமை பொருந்திய மலைகள்; **மற்றும் பலவுடன் முடுகிச் செல்ல** - வேறுபலவும் தம்மைப்பின் தொடர்ந்து விரைந்து செல்ல; **மைதவழ் கிரியும்** - மேகங்கள் தங்கிய பெரியதொரு மலையும்;- **மேருக்குன்றமும்** - பொன்னிறமான மேருமலையும்; **வருவதென்ன** - சேர்ந்து வருவது போல; **செய்தவம் பயந்த வீரர்** - தாங்கள் செய்த தவத்தால் (இராமனைச் சரணடையும்) பயனைப் பெற்ற வீரர்களான வீடணனும், சுக்கிரீவனும்; **திரள் மரம் ஏழும் தீயஎய்தவன்** - திரண்டு நின்ற மராமரங்கள் ஏழும் தீய்ந்து போகும்படி அம்பெய்தவனான இராமபிரான்; **இருந்த சுழல் இருவரும் எய்தச் சென்றார்** - இருந்த இடத்துக்கு அந்த இருவரும் விரைந்து சென்றனர்.

மொய் - வலிமை. தவழ் - பொருந்திய. மைதவழ்கிரி - வீடணனுக்குவமை. மேருக்குன்றம்-சுக்கிரீவனுக்குவமை.

*வீடணன் இராமபிரான் திருவடிகளில் விழுந்து வணங்குதல்*

*6493.* ***மார்க்கடம் சூழ்ந்த வைப்பின் இளையவன் மருங்கு காப்ப,***
***நாற் கடல் உடுத்த பாரின் நாயகன் புதல்வன், நாமப்***
***பாற்கடல் சுற்ற, விற் கை வட வரை பாங்கு நிற்ப,***
***கார்க் கடல் கமலம் பூத்தது எனப் பொலிவானைக் கண்டான்.***

***மார்க்கடம் சூழ்ந்த வைப்பின்*** - *வானரவீரர்கள் சூழ்ந்து நின்ற இடத்தில்;* ***இளையவன் மருங்கு காப்ப*** - *இளையவனாகிய இலக்குவன் பக்கத்திலே நின்று பாதுகாக்க;* ***நாற்கடல் உடுத்த பாரின் நாயகன் புதல்வன்*** - *நான்கு கடல்களாலும் சூழப்பட்ட உலகத்தின் மன்னனான தயரனது புதல்வனாகிய இராமபிரான்;* ***நாமப் பாற்கடல் சுற்ற*** - *புகழ்மிக்க பாற்கடல் தன்னைச் சூழ்ந்திருக்க;* ***விற்கை வடவரை பாங்கு நிற்ப*** - *வில்லைத்தாங்கிய கையை உடைய மேருமலை பக்கத்திலே நிற்க;* ***கார்க்கடல் கமலம் பூத்ததென*** - *கரிய நிறக்கடல் ஒன்று, தாமரை மலர்கள் மேலே மலர்திருந்தது போல;* ***பொலிவானைக் கண்டான்*** - *பொலிந்து விளங்கும் இராமபிரானை வீடணன் பார்த்தான்.*

*மற்கடம்-வானரம் இங்கு எதுகை நோக்கி 'மார்க்கடம்' என வந்தது. வெண்மை நிறம் வாய்ந்த வானரங்கள் இராமபிரானைச் சூழ்ந்து நிற்பது பாற்கடல் சூழ்ந்திருப்பதைப் போன்றிருக்கிறது. வில்லேந்திக் காத்து நிற்கும் பொன்மேனியனான இலக்குவன் நிற்பது பொன்மலை நிற்பது போலத் தோன்றுகிறது. கருமை நிறமான கடல் ஒன்று. இடையிடையே தாமரை மலர்ந்திருக்கக் காணப்படுவது போல இராமபிரான் இடையே பொலிந்து காட்சி தர வீடணன் கண்டான் என்பது கருத்து. 'கண்ணும், திருவாயும் கையும் செய்ய கரியவனை' என்ற சிலப்பதிகார வரியும், கரம், கண், கை, கால் செய்யானை' என்ற அஷ்டபிரபந்தப்பாட்டும் நினைவு கூரத்தக்கது. இப்பாட்டு அழகானதொரு எழுத்தோவியமாகப் பொலிந்து விளங்குகிறது. நாமம்-புகழ்.*

*6494.* ***அள்ளி மீது உலகை வீசும் அரிக் குலச் சேனை நாப்பண்,***
***தெள்ளு தண் திரையிற்று ஆகி, பிறிது ஒரு திறனும் சாரா***
***வெள்ளி வெண் கடலுள் மேல்நாள் விண்ணவர் தொழுது வேண்ட.***
***பள்ளி தீர்ந்து இருந்தான் என்னப் பொலிதரு பண்பினானை;***

***அள்ளி மீது உலகை வீசும்*** - *உலகத்தையே கைகளால் அள்ளி எடுத்து மேலே வீசும்படியான ஆற்றலை உடைய;* ***அரிகுலச் சேனை நாப்பண்*** - *வானரச் சேனைக்கு மத்தியிலே;* ***தெள்ளு தண் திரையிற்றாகி*** - *தெளிந்த, குளிர்ந்த அலைகளை உடையதாய்;* ***பிறிது ஒருதிறனும் சாரா*** - *வெண்மை நிறமன்றி வேறு எந்த நிறமும் சேராத;* ***வெள்ளி***

**வெண்கடலுள்** - வெள்ளியைப் போல் ஒளிரும் வெண்மையான பாற்கடலிலே; **மேல்நாள் விண்ணவர் தொழுது வேண்ட** - முன்பொருநாள் தேவர்கள் எல்லாம் தொழுது வேண்டிக்கொள்ள; **பள்ளி தீர்ந்து எழுந்தான் என்ன** - உறக்கம் நீங்கி அவர்களுக்கு உதவுமாறு எழுந்திருந்த திருமாலைப் போல; **பொலிதரு பண்பினானை** - பொலிந்து விளங்கும் தன்மை உடையவனை.

வானரசேனையின் வலிமை தோன்ற 'அள்ளி மீது உலகை வீசும் அரிகுலச் சேனை' என்றார். விபவத்திலும், வியூகத்தைப் போன்றே இருந்தான் என்பது தோன்ற 'விண்ணவர் தொழுது வேண்டப் பள்ளி தீர்ந்து இருந்தான் என்னப் பொலிதரு பண்பினானை" என்றார். 'விபவத்துக்கு நாற்றங்கால் போலே வியூகம்' என்பர் ஆன்றோர். விபவம்: இராம, கிருஷ்ண அவதாரங்கள். வியூகம்-பாற்கடலில் பள்ளி கொண்ட நிலை.

*6495.* **கோணுதற்கு அமைந்த கோலப் புருவம்போல்
திரையும் கூட,
பூணுதற்கு இனிய முத்தின் பொலி மணல் பரந்த
வைப்பில்.
காணுதற்கு இனிய நீள வெண்மையில் கருமை
காட்டி.
வாணுதல் சீதை கண்ணின் மணி என
வயங்குவானை;**

**கோணுதற்கு அமைந்த** - வளைவதற்கு உரியதாய்; **கோலப் புருவம் போல்** - சீதாபிராட்டியின் அழகிய புருவங்களைப்போல; **திரையும் கூட** - கடல் அலைகளும் பொருந்த; **பூணுதற்கு இனிய முத்தின்** - அணிவதற்குரிய அழகிய முத்துக்களைப் போல; **பொலி மணல் பரந்த வைப்பில்** - விளங்குகின்ற மணல் பரந்துள்ள இடத்திலே; **காணுதற்கினிய நீல வெண்மையில்** - பார்ப்பதற்கு இனிமையுறக் காணப்படும் நீளமான வெண்மையின் மத்தியில்; **கருமை காட்டி** - கருமை நிறத்தைக் காட்டி; **வாணுதல் சீதை** - ஒளிபொருந்திய நெற்றியை உடைய சீதாபிராட்டியின்; **கண்ணின் மணி என** - கண்ணின் கரு மணி போல; **வயங்குவானை** - விளங்குகின்றவனை.

கோணுதல்-வளைதல். புருவத்துக்கு அலை உவமை. முத்துக்கு மணல் உவமை. முத்துக்கள் பொலிந்த மணல் என்றுமாம். பரந்த மணல் வெளி. கண்ணின் வெண் விழிக்கு உவமை. இராமபிரான் கண்ணின் கருமணிக்கு உவமை. சீதாபிராட்டிக்கு இராமன் கண்மணி அனையான் என்பதைப் புலப்படுத்தும்.

*6496.* **படர் மழை சுமந்த காலைப் பருவ வான், அமரர்
கோமான்**

***அடர் சிலை துறந்தது என்ன, ஆரம் தீர்***
***மார்பினானை;***
***கடர் கடை மத்தின் பாம்பு கழற்றியது என்னக்***
***காசின்***
***சுடர் ஒளி வலயம் தீர்ந்த சுந்தரத் தோளினானை;***

***பருவ வான்படர் மழை சுமந்த காலை*** - *கார் காலத்து மேகம் படர்ந்த மழை நீரைச் சுமந்து வந்த போது;* ***அமரர் கோமான் அடர் சிலை துறந்ததென்ன*** - *இந்திரவில்லை நீக்கி நின்றது போல;* ***ஆரம்தீர் மார்பினானை*** - *மணியாரம் பூணாத மார்பை உடையவனை;* ***கடர் கடை மத்தின்*** - *பாற்கடலைக்கடைந்த மத்தான மந்தரமலையில் பொருந்திய;* ***பாம்பு கழற்றியதென்ன*** - *பாம்பாகிய வாசுகியைக் கழற்றியது என்று கூறும்படி;* ***காசின் சுடர் ஒளிவலயம்*** - *மணிகள் பதித்த மிகுந்த ஒளியை உடைய வாகுவலயம்;* ***தீர்ந்த சுந்தரத் தோளினானை*** - *நீங்கிய அழகிய தோள்களை உடையவனை.*

*பருவவான் - கார்காலத்து மேகம். பல நிறம்கொண்ட தென்பதால் 'அடர்சிலை' என்றார். இந்திரவில் நீங்கிய மேகம் போல, மணியாரம் நீங்கிய மார்பனாக இராமன் காணப்பட்டான். பாம்பாகிய தாம்பு நீங்கிய மலை போன்ற தோள்களில் வாகுவலயம் இல்லாதிருந்தான். வாகுவலயமில்லாத நிலையிலும் தோள்கள் அழகுறத் திகழ்ந்தன என்பதால், 'சுந்தரத் தோள்' என்றார். தேனுடைய மலர் மகள் திளைக்கும் மார்பினில்,தானிடை விளங்கிய தகையின் ஆரம்தான், மீனொடு சுடர்விட விளங்கும் மேகத்து வானிடை வில்லென வயங்கித் தோன்றுமே. (கம்ப. 1217) சுந்தரத் தோள் அணி வலயம் தொல்லை நாள் மந்தரம் சுற்றிய அரவைமானுமே. (கம்ப. 1214) அணிந்த நிலையைக் கூறுவதும், அவையில்லாத நிலையை எடுத்துரைப்பதும் பொருந்துவதைக் காணலாம்.*

***6497. கற்றை வெண் நிலவு நீக்கி, கருணைஆம் அமிழ்தம்***
***காலும்***
***முற்றுறு கலையிற்று ஆய முழுமதி முகத்தினானை; பெற்றவன் அளித்த மோலி இளையவன் பெற, தான்***
***பெற்ற***
***சிற்றவை பணித்த மோலி பொலிகின்ற***
***சென்னியானை;***

***கற்றை வெண் நிலவு நீக்கி*** - *தொகுதியான நிலவொளியை நீக்கிவிட்டு;* ***கருணையாம் அமிழ்தம் காலும்*** - *கருணையாகிய அமுதைப் பொழிகின்ற;* ***முற்றுறு கலையிற்றாய*** - *நிறைந்த கலைகளை உடையதாகிய;* ***முழுமதி முகத்தினானை*** - *முழுமதியைப் போன்ற முகத்தை உடையவனை;* ***பெற்றவன் அளித்த மோலி*** - *தந்தையாகிய தயரதன் தந்த மணி மகுடத்தை;* ***இளையவன் பெற*** - *தம்பியாகிய பரதன் அ டைய;* ***தான் பெற்ற சிற்றவை பணித்த மோலி*** - *தான் பெற்ற, தனது சிறிய*

*தாயாராகிய கைகேயி கட்டளைப்படி அணிந்த சடைமுடி;* ***பொலிகின்ற சென்னியானை*** *- விளங்குகின்ற தலையை உடையவனை.*

*இராமனது முகம் முழுமதி போன்றது. ஆனால், மதிக்குரிய நிலவொளியை நீக்கி, கருணையாகிய அமுதத்தைப் பொழியும் முழுமதி போன்ற முகம் என்பது தோன்றக் 'கற்றை வெண்நிலவு நீக்கி, கருணையாம் அமுதம் காலும் முற்றுறு கலையிற்றாய முழுமதி முகம்' என்றார். இல்பொருள் உவமை. கருணைபொழிதல் மதியினுக்கில்லை. நிலவொளி இராமன் முகத்துக்கில்லை. முற்றுறு கலை-நிறைந்த கலை.*

***6498. வீரனை-நோக்கி, அங்கம் மென் மயிர் சிலிர்ப்ப, கண்ணீர்***
***வார, நெஞ்சு உருகி, 'செங் கண் அஞ்சன மலை! அன்றுஆகின்;***
***கார் முகில் கமலம் பூத்தது! அன்று, இவன் கண்ணன் கொல்லாம்;***
***ஆர் அருள் சுரக்கும் நீதி அற நிறம் கரிதோ?' என்றான்.***

***வீரனை நோக்கி*** *- மாவீரனான இராமபிரானை (வீடணன்) பார்த்து;* ***அங்கம் மென் மயிர் சிலிர்ப்ப*** *- உடல் முழுதும் ரோமம் புளகமெய்த;* ***கண்ணீர் வார*** *- கண்களில் கண்ணீர் பெருக;* ***நெஞ்சு உருகி*** *- உள்ளம் உருகி;* ***செங்கண் அஞ்சனமலை அன்று ஆகின்*** *- அழகிய கண்களை உடைய இவன் அஞ்சன மலை போன்றவன் அதுவல்ல என்றால்;* ***கார்முகில் கமலம் பூத்தது அன்று*** *- கருமை நிற மேகம் கமலம் பூத்தது போன்றவன். அதுவுமல்ல எனின்;* ***இவன் கண்ணன் கொல்லாம்*** *- இத்தன்மை உடைய இவன் திருமால் தானோ;* ***ஆர் அருள் சுரக்கும்*** *- நிறைந்த அருளைப் பொழியும்;* ***நீதி அற நிறம்*** *- நீதியை உடைய அறக்கடவுளின் நிறம்;* ***கரிதோ என்றான்*** *- கருமை நிறமோ என வியந்துரைத்தான்.*

*இராமபிரானைத் தரிசித்த மகிழ்ச்சியால் வீடணன் உடல் ரோம புளகாங்கிதம் எய்தினான் என்பதை 'அங்கம் மென் மயிர் சிலிர்த்து' என்றார். மகிழ்ச்சி மிகுதியால் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான் என்பதனை, "கண்ணீர் வார" என்றார். வார-பெருக. அழகான கண்களை உடைய அஞ்சனமலையோ என இராமனை நோக்கி வியந்து-அல்ல என்றான், நீலமேக மொன்று - தாமரை பூத்ததோ, அதுவுமல்ல. இவன் திருமாலேதான். நிறைந்த அருள் பொழியும் நீதியை உடைய தரும தேவதையின் நிறம் கருமையோ? என்று வியந்துரைத்தான்.*

***6499. 'மின்மினி ஒளியின் மாயும் பிறவியை வேரின் வாங்க,***
***செம் மணி மகுடம் நீக்கி, திருவடி புனைந்த***

***செல்வன்***
***தம்முனார், கமலத்து அண்ணல் தாதையார், சரணம்***
***தாழ,***
***எம்முனார் எனக்குச் செய்த உதவி'என்று***
***ஏம்பலுற்றான்.***

***மின்மினி ஒளியின் மாயும்*** *- மின்மினிப் பூச்சியின் ஒளியைப் போலத் தோன்றி மறையும்படியான;* ***பிறவியை வேரின் வாங்க*** *- பிறவி நோயை அடியோடு நான் போக்கிக் கொள்ளவே;* ***செம்மணி மகுடம் நீக்கி*** *- சிவந்த மணிகள் பதித்த மணி மகுடத்தைத் துறந்து;* ***திருவடி புனைந்த செல்வன் தம்முனார்*** *- இவனது திருவடிகளைச் சிரத்தில் சூடிக்கொண்ட செல்வத்தை எய்திய பரதனுக்கு முன்னோனான இராமன்;* ***கமலத்து அண்ணல் தாதையார்*** *- தாமரை மலரில் வாழும் பிரமதேவனுக்கும் தந்தையான இராமபிரானுடைய;* ***சரணம் தாழ*** *- திருவடிகளில் வீழ்ந்து நான் வணங்குமாறு;* ***எம்முனார் எனக்குச் செய்த உதவி*** *- என் முன்னவனாகிய இராவணன் எனக்குச் செய்த உதவி இதுவாகும்;* ***என்று ஏம்பலுற்றான்*** *- என்று கூறி மகிழ்ச்சியுற்றான். மின்மினிப் பூச்சியின் ஒளி தோன்றிய உடனே மறையும் தன்மை உடையது. 'பிறவி' என்பதும் இதுபோலத்தான் என்பான். 'மின்மினி ஒளியின் மாயும் பிறவி' என்றான். இராமபிரான் திருமாலின் அவதாரமாதலின் அவன் சரணம் தாழ, பிறவி நோய் அடியோடு தீரும் என்பான். 'பிறவியை வேரின் வாங்க' என்றான். தாதை உதவிய தரணிதன்னைத் தீவினை என்ன நீத்து வந்தவன் பரதன் என்பதால் 'மகுடம் நீக்கி திருவடி புனைந்த செல்வன்" எனப் பரதனைச் சிறப்பித்தான். 'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" என்பார் மேலோர். இராமபிரான் திருவடிகளைச் சிரத்தில் சூடி, மேலான செல்வம் எய்திய பரதனை. 'செல்வன்' என்றது குறிப்பிடத்தக்கதாகும். பிறவித் துன்பம் அடியோடு நீங்க, இராமபிரான் திருவடிகளை நான் சேரச் செய்த என் முன்னோன் எனக்குப் பேருதவி செய்தான் என்று கூறி மகிழ்ந்தவன், 'எம்முனார் எனக்குச் செய்த உதவி' என்றான்.*

***6500. 'பெருந் தவம் இயற்றினோர்க்கும் பேர்வு அரும் பிறவி நோய்க்கு***
***மருந்து என நின்றான் தானே வடிக் கணை தொடுத்துக் கொல்வான்***
***இருந்தனன்; நின்றது, என்னாம் இயம்புவது? எல்லை தீர்ந்த***
***அருந் தவம் உடையர் அம்மா, அரக்கர்! என்று அகத்துள் கொண்டான்.***

***பெருந்தவம் இயற்றினோர்க்கும்*** *- மிகப் பெரிய தவத்தைச் செய்த மேலோர்களுக்கும்;* ***பேர்வு அரும் பிறவி நோய்க்கு*** *- போக்க முடியாத பிறவியாகிய நோயைப் போக்கும்;* ***மருந்து என நின்றான்*** *- அரிய மருந்து என்னும்படி நின்ற*

*இராமபிரான்;* **தானே வடிக்கணை தொடுத்து** *- தானே கூர்மையான அம்புகளைத் தனது வில்லில் பூட்டி;* **கொல்வான் இருந்தனன்** *- அரக்கர்களை யெல்லாம் கொல்ல இருந்தான்;* **நின்றது என் நாம் இயம்புவது?** *- அவ்வாறு போரிடச் சித்தமாக நின்ற செயல்பற்றி நாம் என்ன கூற இருக்கிறது?* **அரக்கர் எல்லை தீர்ந்த அருந்தவம் உடையர்** *- இராமபிரானால் கொல்லப்பட இருக்கும் அரக்கர்கள் எல்லோரும் அளவற்ற சிறந்த தவத்தைச் செய்தவராவார்;* **என்று அகத்துட்கொண்டான்** *- என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டான். இராமபிரானை, வீடணன் பார்த்ததும் இவன் பிறவி நோயைப் போக்கும் பெருமான் என்பதால் இவனால் அழியும் அரக்கர் அரிய தவம் செய்தவராவார் என எண்ணினான் என்பது கருத்து. பிறவிப் பெருங்கடல் என்பார் (குறள் 10) வள்ளுவர். போக்கமுடியாததொன்று என்பதால் 'பெருந்தவம் இயற்றினோர்க்கும் பேர்வரும் பிறவி' என்றான். இறைவனடி சேர்ந்தவர்களே பிறவிக் கடலை நீந்துவாராதலின் இராமபிரான் 'பிறவி நோய்க்கு மருந்தென நின்றான்' என்றான். ' ஆச்ரித விரோதிகளைத் தானே தனது கைப்படக் கொன்று தீர்க்கும்' விரதமுடையவன் என்பதால் 'தானே வடிக்கணை தொடுத்துக் கொல்வான் இருந்தனன்' என்றான். எனவே அரக்கர்கள் பெருந்தவம் செய்தோராவார் என்பதை 'அரக்கர் எல்லை தீர்ந்த அருந்தவம் உடையர்' என்றான்.*

***6501. கரங்கள் மீச் சுமந்து செல்லும் கதிர் மணி முடியன், கல்லும்***
***மரங்களும் உருக நோக்கும் காதலன், கருணை வள்ளல்***
***இரங்கினன் நோக்கும்தோறும், இரு நிலத்து இறைஞ்சுகின்றான்;***
***வரங்களின் வாரி அன்ன தாள் இணை வந்து வீழ்ந்தான்.***

**கரங்கள் மீச்சுமந்து செல்லும் கதிர்மணிமுடியன்** *- இவ்வாறு எண்ணிய வீடணன் இருகைகளையும் உச்சி மீது சுமந்து செல்லும் ஒளிவீசும் முடியை உடையவனாய்;* **கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன்** *- கல்லும் மரங்களும் கூட உருகும் படி பார்க்கின்ற அன்புடையவனாய்;* **கருணை வள்ளல்** *- அருள் மிகுந்த வள்ளலாகிய இராமபிரான்;* **இரங்கினன் நோக்கும் தோறும்** *- இரக்கம் கொண்டு பார்க்கும் போதெல்லாம்;* **இருநிலத்து இறைஞ்சுகின்றான்** *- நிலத்திலே வீழ்ந்து வணங்குபவனாய்;* **வரங்களின் வாரியன்ன** *- அடியார்க்கு வேண்டும் வரம் வழங்கும் கடல் போன்றவனான இராமபிரானது;* **தாளிணை வந்து வீழ்ந்தான்** *- திருவடிகளில் வந்து வீழ்ந்தான்.*

*மீ-மேலே, வீடணன் எல்லையற்ற அன்புடையவன் என்பதால் 'கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன்' என்றார் 'தாவர சங்கமம் என்னும் தன்மைய யாவையும் இரங்கிடக் கங்கை எய்தினான்" என பரதனுடைய அன்பு நிலையை முன்பும் கூறுவது (கம்ப. 303) நினைவு கூரத்தக்கது. இராமபிரான் இரங்கிப் பார்க்கும்தோறும் தரையிலே வீழ்ந்து வணங்கிய வீடணனது நிலை அடிமைத்திறத்தை விளக்கிற்று.*

*வேண்ட முழுதும் தரும் வரங்களின் கடலாக விளங்கும் திருவடிகளை 'வரங்களின் வாரியன்ன தாளிணை'. என்றார். தாளிணை -இரண்டு திருவடிகள். 'நின்னில் சிறந்த நின்தாளிணை' என்ற பரிபாடல் ஒப்பு நோக்கத்தக்கது.*

***6502. 'அழிந்தது, பிறவி' என்னும் அகத்து இயல் முகத்துக்
காட்ட,
வழிந்த கண்ணீரின் மண்ணில் மார்பு உற
வணங்கினானை.
பொழிந்தது ஓர் கருணைதன்னால், புல்லினன் என்று
தோன்ற,
'எழுந்து, இனிதுஇருத்தி' என்னா, மலர்க்கையால்
இருக்கை ஈந்தான்.***

***அழிந்தது பிறவி என்னும்*** *- அரக்கப் பிறவி அழிந்தது என்று (வீடணன் நினைந்த);* ***அகத்தியல் முகத்துக் காட்ட*** *- மனத்தின் இயல்பினை முகம் காட்ட;* ***வழிந்த கண்ணீரின்*** *- கண்களில் பெருகிய கண்ணீரோடு;* ***மண்ணின் மார்புற வணங்கினானை*** *- தரையிலே மார்பு பொருந்த வணங்கிய வீடணனை;* ***பொழிந்ததோர் கருணை தன்னால்*** *- பெருகியதொரு கருணையாலே;* ***புல்லினன் என்று தோன்ற*** *- தழுவினான் என்று தோன்றுமாறு (அருளோடு பார்த்து);* ***எழுந்து இனிது இருத்தி என்னா*** *- எழுந்திருந்து, இனிதே அமர்வாயாக என்று;* ***மலர்க்கையால் இருக்கை ஈந்தான்*** *- தனது மலர் போன்ற கைகளாலே அவனுக்கு இருப்பிடம் தந்தான்.*

*இராமபிரானது தாளிணையில் வீழ்ந்த வீடணன் 'அரக்கப் பிறவி அழிந்தது' என நினைந்த அவனது மனத்தின் தன்மையை முகம் காட்டித்தர, கண்களில் பெருகிய கண்ணீரோடு, தரையிலே மார்பு படும்படி வணங்க, அவ்வாறு வணங்கிய வீடணனை, கருணை பொங்கப் பார்த்த இராமன் தழுவினான் என்று தோன்றுமாறு எழுந்து இங்கு இனிதே இருப்பாயாக என்று கூறித் தனது மலர் போன்ற கையால் இருப்பிடம் காட்டினான். அடுத்ததுகாட்டும் பளிங்கு போல் நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" (குறள் 76) என்ற குறளுரைக்கேற்ப 'அகத்தியல் முகத்துக்காட்ட' என்றது கருதத்தக்கது. 'பிறவி நோய்க்கு மருந்தென நின்றான்' என்று முன்பே நினைந்ததற்கேற்ப ' அழிந்தது பிறவி' எனக் கருதிக் கூறப்பட்டது பொருந்தும்.*

### *இராமபிரான் வீடணனுக்கு இலங்கை அரசை அளித்தல்*

***6503. ஆழியான் அவனை நோக்கி, அருள் சுரந்து, உவகை
கூர,
'ஏழினோடு ஏழாய் நின்ற உலகும் என் பெயரும்
எந் நாள்
வாழும் நாள், அன்றுகாறும், வாள் எயிற்று அரக்கர்***

***வைகும்***
***தாழ் கடல் இலங்கைச் செல்வம் நின்னதே; தந்தேன்'***
***என்றான்.***

***ஆழியான் அவனை நோக்கி*** - ஆணையாகிய சக்கரத்தை உடைய இராமபிரான் வீடணனைப் பார்த்து; ***அருள் சுரந்து*** - உள்ளத்திலே கருணை பொங்க; ***உவகை கூறி*** - மகிழ்ச்சி மிக; ***ஏழினோடு ஏழாய் நின்ற உலகும்*** - ஏழுடன் ஏழாகிய பதினான்கு உலகங்களும்; ***என் பெயரும் எந்நாள் வாழும் நாள் அன்று காறும்*** - எனது பெயரும் எத்தனை காலம் இருக்குமோ அக்காலம் வரை; ***வாள் எயிற்று அரக்கர் வைகும்*** - ஒளிபொருந்திய பற்களை உடைய அரக்கர்கள் வாழும்; ***தாழ்கடல் இலங்கைச் செல்வம்*** - ஆழமான கடல் நடுவே உள்ள இலங்கையின் அரசுச்செல்வம்; ***நின்னதே தந்தேன் என்றான்*** - உனக்கே உரிமையுடையதாகக் கொடுத்தேன் என்று கூறினான்.

*ஆழியான்-இராமன். சக்கரப் படையையுடைய திருமாலின் அவதாரம் என்பதால் இவ்வாறு கூறினார் என்றுமாம். உலகுள்ள காலம் வரை இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன் என்று தருவதற்குத் தகுதியுடையவன் என்பது தோன்ற 'ஆழியான்' என்றார். இதன் கண் கூறப்படும் நிகழ்ச்சி* ***'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்''*** *என்னும் புறத்திணையுள் அடங்கும். 'இராமபிரான் திருவருளே வீடணனுக்கு வேண்டுவது இலங்கை அரசோ வந்தேறியானது' என்பது பெரியோர் கருத்து. இலங்கை அரசனான இராவணனை வெல்லுவதற்கு முன்பே இலங்கையை இராமபிரான் வீடணனுக்குத் தந்தான் என்பது வெல்லுதல் உறுதியாதலால் என்க. இராமபிரானது பேராற்றலைக் காட்டும். அன்றுகாறும்-அந்த நாள்வரை. வாள்-ஒளி. இராமபிரானுக்கு அருள்சுரத்தல் இயல்பு. காத்தற்கடவுளின் அவதாரமாய் அடைக்கலம் அருளலால் எடுத்த பிறப்புக்கு உரிய வெற்றி கிட்டுதலின். இவ்விரண்டும் புலப்பட அருள் சுரந்து உவகை கூற என்றார்.*

***6504. தீர்த்தன் நல் அருளை நோக்கிச் செய்ததோ?***
***சிறப்புப் பெற்றான்***
***கூர்த்த நல் அறத்தை நோக்கிக் குறித்ததோ?***
***யாது கொல்லே?--***
***வார்த்தை அஃது உரைத்தலோடும், 'தனித் தனி***
***வாழ்ந்தேம்' என்ன***
***ஆர்த்தன, உலகில் உள்ள சராசரம் அனைத்தும்***
***அம்மா!***

***வார்த்தை அஃது உரைத்தலோடும்*** - இராமபிரான் (இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்) என்ற அந்த வார்த்தைகளைச் சொன்னவுடன்; ***உலகிலுள்ள சராசரம் அனைத்தும்*** - உலகத்தில் வாழும் சரம் அசரம் ஆகிய எல்லாவிதமான உயிரினங்களும்; ***தனித்தனி வாழ்ந்தோம் என்ன ஆர்த்தன*** - ஒவ்வொன்றும் தனித்தனியே நாம் வாழ்வு பெற்றோம் என ஆர்ப்பரித்தன; ***தீர்த்தன் நல் அருளை நோக்கிச் செய்ததோ*** - இராமபிரானது திருவருளை எண்ணி மகிழ்ச்சி அடைந்ததாலோ; ***சிறப்புப் பெற்றான்*** - இராமபிரானைச் சரணடைந்து மேலான

*சிறப்பைப் பெற்ற வீடணனுடைய;* ***கூர்த்த நல் அறத்தை நோக்கி*** *- மிகுந்த நல்லறத்தை எண்ணிப் பார்த்து;* ***குறித்ததோ யாது கொல்லோ*** *- செய்ததோ யாதென அறியோம்.*

*தீர்த்தன் - இராமபிரான்; தான் தூயனாய் இருப்பதோடு, தன்னை அடைந்தாரையும் தூயராக்கவல்லவன் என்பது பொருள். சரம் - இயங்கியற்பொருள். அசரம் - நிலையியற் பொருள். இராமபிரானுடைய அருட்பண்பை நோக்கி உலகம் 'வாழ்ந்தேம்' என மகிழ்ந்தது என்பதா? அந்தத் திருவருளைப் பெற்று உயர்ந்து சிறந்த வீடணன் நிலைக்கு மகிழ்ந்தது என்பதா? எனவே, 'யாது கொல்லோ' என்ற ஐயப்பாட்டால் கூறினார். இவ்விரண்டுமே உலகத்தவர் மகிழ்ந்து ஆரவாரம் செய்ததற்குக் காரணம் என்க.*

***6505. 'உய்ஞ்சனென் அடியனேன்' என்று ஊழ்முறை வணங்கி நின்ற***
***அஞ்சன மேனியானை அழகனும் அருளின் நோக்கி,***
***'தஞ்ச நல் துணைவன் ஆன தவறு இலாப் புகழான்தன்னை,***
***துஞ்சல் இல் நயனத்து ஐய! சூட்டுதி மகுடம்'***

***என்றான்.*** ***உய்ஞ்சனென் அடியேன் என்று*** *- அடியேன் உய்ந்தேன் என்று கூறி;* ***ஊழ்முறை வணங்கி நின்ற*** *- தனது நல்லூழால் முறைப்படி வணங்கி நின்ற;* ***அஞ்சன மேனியானை*** *- மை போன்ற நிறத்தை உடைய வீடணனை;* ***அழகனும் அருளின் நோக்கி*** *- பேரழகனாகிய இராமபிரானும் கருணையோடு பார்த்து;* ***தஞ்ச நல்துணைவன் ஆன*** *- நம்மை அடைக்கலம் அடைந்து நமக்கு நல்லதொரு துணைவனானவனும்;* ***தவறு இலாப் புகழான் தன்னை*** *- குற்றமற்ற புகழை உடையவனுமான இந்த வீடணனுக்கு;* ***துஞ்சல் இல் நயனத்து ஐய*** *- உறங்காத கண்களை உடையவனே!(இலக்குவனை அழைத்து)* ***சூட்டுதி மகுடம் என்றான்*** *- இலங்கைக்கு அரசனாதற்குரிய மணிமுடியை அணிவிப்பாயாக என்றான்.*

*'உய்ந்தனென்' என்பது எதுகை நோக்கி உய்ஞ்சனென் என வந்தது. ஊழ்-ஆகூழ். தஞ்சம் - அடைக்கலம். இராமபிரானுடன் கானகத்தில் வாழ்ந்த நாளெல்லாம் உணவும் உறக்கமும் இல்லாதிருந்தவன் இலக்குவன் எனவே 'துஞ்சல் இல் நயனத்து ஐய' என இராமபிரான் அழைப்பானாயினான். இலக்குவனை முடி சூட்டப்பணித்தது ஏன்? எனில் வீடணனை ஏற்றுகொள்ளலாகாது எனக் கூறிய சுக்கிரீவன் முதலியோரைப் போல இலக்குவன் எதுவும் பேசவில்லை என்றாலும் அவனுக்கும் உடன்பாடில்லை என உணர்ந்த இராமபிரான், வீடணனை அழைத்துவர, சுக்கிரீவனை அனுப்பியது போல, அவனுக்கு முடிசூட்ட இலக்குவனைப் பணித்தான் என்க.*

***6506. விளைவினை அறியும் மேன்மை வீடணன், 'என்றும் வீயா***
***அளவு அறு பெருமைச் செல்வம் அளித்தனை***

***ஆயின், ஐய!***
***களவு இயல் அரக்கன் பின்னே தோன்றிய கடமை தீர,***
***இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி'***
***என்றான்.***

**விளைவினை அறியும் மேன்மை வீடணன்** - மேலே நிகழ இருக்கும் நல்லவிளைவுகளை முன்னாலேயே தெரிந்து கொள்ளும் மேன்மை உடையவனாகிய வீடணன் இராமபிரானை நோக்கி; **ஐய என்றும் வீயா** - ஐயனே! என்றும் அழியாததாகிய; **அளவறு பெருமைச் செல்வம் அளித்தனை** - அளவற்ற பெருமை மிக்க செல்வத்தை எனக்குத் தந்தாய்; **ஆயின்** - ஆனால்; களவியல் **அரக்கன் பின்னே** - களவுத்தன்மையுடைய அரக்கனாகிய இராவணனுக்கு தம்பியாக; **தோன்றிய கடமைதீர** - பிறந்த அந்தத் தொடர்பு தீரும்படி; **இளையவற் கவித்தமோலி** - உனது தம்பியான பரதனுக்கு நீ அணிவித்த திருவடி நிலைகளான மகுடத்தை; **என்னையும் கவித்தி என்றான்** - எனக்கும் அணிவிப்பாயாக என்றான்.

இலங்கை அரசை நாடி இங்கு வீடணன் வந்தவனல்லன். இராமன் திருவருளே வீடணன் வேண்டுவது என்பதால் இலங்கைச் செல்வத்தை எனக்கு அளித்தாய் என்று கூற மாட்டான். அளவற்ற, அழியாத பெரிய செல்வம் என வீடணன் குறிப்பிட்டது இராமனைச் சரணடைந்து அவன் திருவருளைப் பெற்றதே என்பதால் 'என்றும் வீயா அளவறு பெருமைச் செல்வம் அளித்தனை' என்றான். இலங்கைச் செல்வம் என்றும் வீயாததோ, அளவற்றதோ பெருமைக்குரியதோ அன்று.

*இராமபிரான் வீடணனைத் தம்பியாகக் கொண்டு கூறுதல்*

*6507.* ***'குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; பின், குன்று சூழ்வான்***
***மகனொடும், அறுவர்ஆனேம்; எம்முழை அன்பின் வந்த***
***அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;***
***புகல் அருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான் நுந்தை.'***

**குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு** - குகனுடன் சேர்த்து நாங்கள் ஐந்து பேர் சகோதரர்கள் ஆனோம் இது முன்பு நிகழ்ந்தது; **பின் குன்று சூழ்வான் மகனொடும்** - அதன் பின் மேருமலையைச் சுற்றிவரும் சூரியனது மகனான சுக்கிரீவனுடன்; **அறுவர் ஆனேம்** - சகோதரர் ஆறுபேர் ஆயினோம்; **எம்முழை அன்பின் வந்த அகன் அமர் காதல் ஐய** - எங்களிடம் அன்பு கொண்டு வந்த உள்ளத்திலே நிறைந்த அன்புடையவனே; **நின்னொடும் எழுவர்ஆனேம்** - உன்னுடன் சேர்த்து

*சகோதரர்கள் ஏழுபேர் ஆயினோம்;* ***புகல் அரும் கானம்தந்து*** *- எவரும் புகுதற்கரிய கானக வாழ்வை எனக்குத் தந்து;* ***நுந்தை புதல்வரால் பொலிந்தான்*** *- உனது தந்தையாகிய தயரதன் புதல்வர்களால் நிறைவு பெற்றுவிட்டான்.*

*உன்னுடன் சேர்ந்து நாம் ஏழுபேர் ஆய்விட்டோம். தந்தை என்று கூறாமல் தயரதனை உனதுதந்தை என்று பொருள் பெற 'நுந்தை' என்றது நோக்கத்தக்கது. எனக்குக் கானக வாழ்வைத் தந்து மேலும் மூன்று புதல்வர்களை உன் தந்தை பெற்றுப் பொலிந்தார் என்பதை 'புதல்வரால் பொலிந்தான் நுந்தை' என்று கூறிய நயம் நோக்கத்தக்கது. அகனமர் காதல்-மனமார்ந்த நேயம்.*

## *வீடணன் இராமபிரானது திருவடி நிலைகளைச் சூடிக் கொள்ளுதல்*

***6508. 'நடு இனிப் பகர்வது என்னே? நாயக! நாயினேனை,***
***"உடன் உதித்தவர்களோடும் ஒருவன்" என்று***
***உரையாநின்றாய்;***
***அடிமையின் சிறந்தேன்' என்னா, அயிர்ப்பொடும்***
***அச்சம் நீங்கி,***
***தொடு கழல் செம் பொன் மோலி சென்னியில்***
***சூட்டிக் கொண்டான்.***

***நாயக! நடு இனிப் பகர்வது என்னே*** *- எனது தலைவனே! இடையிலே நான் என்ன சொல்ல இருக்கிறது;* ***நாயினேனை*** *- நாயினும் கடையனான அடியேனை;* ***உடன் உதித்தவர்களோடும்*** *- உனக்குத் தம்பிமார்களாய்ப் பிறந்த பரதன், இலக்குவன், சத்துருக்கன் ஆகியவருடன்;* ***ஒருவன் என்று உரையா நின்றாய்*** *- என்னையும் ஒரு தம்பி என்று கூறினாய்;* ***அடிமையில் சிறந்தேன் என்னா*** *- உனக்கு அடிமை செய்வதில் சிறந்தவன் ஆனேன் என்று கூறி;* ***அயிர்ப்பொடும் அச்சம் நீங்கி*** *- ஐயத்தோடு, அச்சமும் நீங்கப் பெற்றவனாய்;* ***தொடுகழல் செம்பொன் மோலி*** *- இராமபிரான் திருவடிகளில் தொடும் பாதுகைகளாகிய அழகிய மகுடத்தை;* ***சென்னியில் சூட்டிக்கொண்டான்*** *- தனது தலையிலே சூட்டிக்கொண்டான்.*

*'நின்னொடும் எழுவர் ஆனேம்' என்று இராமபிரான் கூறியதைக் கேட்ட வீடணன், தான் இராமபிரானுக்குத் தொண்டனாய் விட்ட மகிழ்ச்சியில் இராமனை 'நாயக' என்று அழைத்துத் தனது எளிமை தோன்றத்தன்னை 'நாயினேன்' எனக் குறிப்பிட்டான். தான் நினைத்து வந்ததற்கு மேலே உடன் பிறந்தவர்களோடு ஒருவனாக இராமன் கூறியதால் அதுவரை இருந்த ஐயமும் அச்சமும் நீங்கப் பெற்றான் என்பதனால் 'அயிர்ப்பொடும் அச்சம் நீங்கி' என்றார். "அடித்தலம் இரண்டையும் அழுத கண்ணினன், முடித்தலம் இவை என முடியில் சூடினான்' எனப் பரதனும் இவ்வாறே சூடிக்கொண்டதை முன்பும் (கிளை 136) கூறினார்.*

***6509. திருவடி முடியின் சூடி, செங் கதிர் உச்சி சேர்ந்த***
***அரு வரை என்ன, நின்ற அரக்கர்தம் அரசை நோக்கி,***
***இருவரும் உவகை கூர்ந்தார்; யாவரும் இன்பம் உற்றார்;***
***பொரு அரும் அமரர் வாழ்த்தி, பூமழை பொழிவதானார்.***

**திருவடி முடியில் சூடி** - இராமபிரானது பாதுகைகளை முடியிலே சூடிக்கொண்டு; **செங்கதிர் உச்சி சேர்ந்த அருவரை என்ன நின்ற** - செந்நிறக் கிரணங்களை உடைய சூரியனைத்தன் சிகரத்தில் கொண்ட அரியதொரு மலை என்னும்படி நின்றவனுமாகிய; **அரக்கர்தம் அரசை நோக்கி** - அரக்கர் குடிக்கே அரசனாகத்திகழும் வீடணனைப் பார்த்து; **இருவரும் உவகை கூர்ந்தார்** - இராமலக்குவராகிய இருவரும் மிக மகிழ்ந்தனர்; **யாவரும் இன்பம் உற்றார்** - அங்கிருந்த எல்லோரும் இன்பம் எய்தினர்; **பொருவரும் அமரர் வாழ்த்தி** - தமக்கு நிகர் வேறு எவருமில்லாத தேவர்கள் எல்லாம் வாழ்த்தி; **பூமழை பொழிவதானார்** - மலர்மாரி பொழியலானார்கள்.

தலைமீது இராமபிரானது பாதுகைகளை வைத்துக்கொண்டு நின்ற வீடணனுக்கு தனது சிரத்திலே சூரியனைக் கொண்டிருக்கும் மலை உவமை ஆயிற்று. மலை வீடணனுக்கும் செங்கதிர் பாதுகைகளுக்கும் உவமை. இருவரும் என்றது இராம இலக்குவர்களை. யாவரும் என்றது சுற்றும் நின்ற வானர சேனையை. வீடணர் இராமபிரானுடன் சேர்ந்துவிட்டதால் இராவணன் வீழ்ச்சி உறுதியாய் விட்டது என்பதால் தேவர்கள் மகிழ்ந்து. மலர்மழை சொரிந்து வாழ்த்தினர் என்க.

***6510. ஆர்த்தன-பரவை ஏழும், அவனியும், அமரர் நாடும்,***
***வார்த் தொழில் புணரும் தெய்வ மங்கல முரசும் சங்கும்: தூர்த்தன, கனக மாரி; சொரிந்தன, நறு மென் சுண்ணம்;***
***போர்த்தது வானத்து, அன்று, அங்கு, எழுந்தது துழனிப் பொம்மல்.***

**பரவை ஏழும் அவனியும் ஆர்த்தன** - ஏழுகடல்களும், மண்ணுலகமும், விண்ணுலகமும் ஆரவாரம் செய்தன; **வார்த்தொழில் புரியும் தெய்வ மங்கல முரசும் சங்கும்** - வாரால் கட்டப்பட்ட தெய்வீக மான மங்கல முரசுகள் முழங்கின; சங்குகளும் முழங்கின; **கனகமாரி தூர்த்தன** - வானவர் பொற்காசுகளை எங்கும் சொரிந்தனர்; **நறுமென் சுண்ணம்** - நல்ல மணமுள்ள மென்மையான வாசனைப்பொடிகள்; **வானத்து அன்று போர்த்தது** - வானத்தையே அன்று மூடிவிட்டது; **அங்குத் துழனிப்பொம்மல் எழுந்தது** - அங்கு மிகுந்த ஆரவாரம் எழலாயிற்று.

*வார்த்தொழில்-வாரால் கட்டப்பட்ட தொழில் முரசு தெய்வத்தன்மை வாய்ந்தது. மங்கலமானது என்பதால் 'தெய்வமங்கல முரசு' எனப்பட்டது. சுண்ணம் - மணப்பொடி. துழனிப் பொம்மல் - ஆரவாரத்தின் மிகுதி.*

***6511. 'மொழிந்த சொல் அமிழ்தம் அன்னாள் திறத்தினின் முறைமை நீங்கி***
***இழிந்த என் மரபும் இன்றே உயர்ந்தது' என்று ஏம்பலுற்றான்,***
***செழுந் தனி மலரோன்; பின்னை, 'இராவணன் தீமைச் செல்வம்***
***அழிந்தது' என்று, அறனும், தன் வாய் ஆவலம் கொட்டிற்று அன்றே.***

***செழும் தனி மலரோன்*** *- செழிப்பான சிறந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவன்;* ***மொழிந்த சொல் அமுதமன்னான் திறத்தினில்*** *- அமுதம் போன்ற மொழிகளைப் பேசும் சீதாபிராட்டி காரணமாக;* ***முறைமை நீங்கி*** *- அற நெறியிலிருந்து நீங்கி;* ***இழிந்த என் மரபும்*** *- தாழ்ந்து விட்ட எனது குலமும்;* ***இன்றே உயர்ந்தது*** *- இன்று இழிவு தீர்ந்து உயர்வடைந்தது;* ***என்று ஏம்பலுற்றான்*** *- என மகிழ்வடைந்தான்;* ***பின்னை, இராவணன் தீமைச் செல்வம்*** *- பின்பு, இராவணனுடைய தீமையான செல்வம்;* ***அழிந்தது என்று*** *- இன்றோடு அழிந்து தீர்ந்தது என்று; அறனும்* ***தன்வாய் ஆவலம் கொட்டிற்றன்றே*** *- அறக்கடவுளும் தனது வாயால் ஆரவாரம் செய்தது.*

*மலரோன்-பிரமன். 'ஏம்பலுற்றான்' என்பதற்கு 'இடரின் தீர்ந்தான்' என்ற பாடமும் பொருந்துவதே. அறன்-அறம் (தருமதேவதை) ஆவலம் கொட்டல்-ஆரவாரித்தல்.*

*வீடணனுடன் பாடி வீட்டை வலம் வர இராமன் பணித்தல்*

***6512. இன்னது ஓர் செவ்வித்து ஆக, இராமனும், 'இலங்கை வேந்தன்-***
***தன் நெடுஞ் செல்வம் தானே பெற்றமை பலரும் கேட்ப,***
***பல் நெடுந் தானை சூழ, பகலவன் சேயும் நீயும்,***
***மன் நெடுங் குமர! பாடிவீட்டினை வலம் செய்க!' என்றான்.***

**இன்னதோர் செவ்வித்தாக** - இவ்வாறு நிகழும் சமயத்தில்; **இராமனும்** - இராமபிரானும் (இலக்குவனை நோக்கி); **மன் நெடுங்குமர** - நிலைபெற்ற சிறந்த அரசகுமாரனே!; **இலங்கை வேந்தன்** - இலங்கை அரசனாகிய வீடணன்; **தன் நெடும் செல்வம்** - தனக்குரிய இலங்கையின் அரசுச் செல்வத்தை; **தானே பெற்றமை** - தானே பெற்றதனை; **பலரும் கேட்ப** - எல்லோரும் கேட்டுத் தெரிந்து கொள்ள; **பல் நெடும் தானை சூழ** - பெரிய சேனை சூழ்ந்து வர; **பகலவன் சேயும் நீயும்** - சூரிய குமாரனான சுக்கிரீவனும் நீயும்; **பாடி வீட்டினை வலம் செய்க என்றான்** - நமது வானரப்படை தங்கியுள்ள பாடிவீட்டை வலம் வருவீராக என்றான்.

செவ்வி-சந்தர்ப்பம் (சமயம்) தானையின் பெருமை புலப்பட "பல்நெடும்தானை" என்றார். பாடிவீடு-பாசறை. முடிசூடிய பின் நகர்வலம் வருதல் மரபு என்பதால் 'பாடி வீட்டினை வலம் செய்க' என்றான். மன்-மன்னன்.

*6513.* **அந்தம் இல் குணத்தினானை அடியிணை-முடியினோடும்**
**சந்தன விமானம் ஏற்றி, வானரத் தலைவர் தாங்க,**
**'இந்திரற்கு உரிய செல்வம் எய்தினான் இவன்' என்று ஏத்தி,**
**மந்தரத் தடந் தோள் வீரர், வலம் செய்தார், தானை வைப்பை.**

**அந்தம் இல் குணத்தினானை** - அளவில்லாத நற்குணங்களை உடைய வீடணனை; **அடியிணை முடியினோடு** - இராமபிரானுடைய பாதுகைகளாகிய திருமுடியுடனே; **சந்தன விமானம் ஏற்றி** - சந்தன மரத்தால் செய்த விமானத்திலே ஏறச் செய்து; **வானரத்தலைவர் தாங்க** - அந்த விமானத்தை வானரப் படைத்தலைவர்கள் தாங்கி வர; **இந்திரற்கு உரிய செல்வம்** - இந்திரனுடைய செல்வத்துக்கு நிகரான அரசுச்செல்வத்தை; **எய்தினான் இவன் என்று ஏத்தி** - வீடணன் பெற்றான் என்று போற்றி; **சுந்தரத்தடந் தோள் வீரர்** - அழகிய அகன்ற தோள்களை உடைய வீரர்களான இலக்குவனும் சுக்கிரீவனும்; **தானை வைப்பை வலம் செய்தார்** - வானரப்படை தங்கியுள்ள பாடி வீட்டைச் சுற்றி வலம் செய்தனர்.

வீடணன் நற்குணம் நிறைந்தவன் ஆதலின் "அந்தம் இல்குணத்தினான்" என்று சிறப்பிக்கப்பட்டான். அரசப் பதவிக்கேற்ப சிறந்த சந்தன மரத்தால் செய்யப்பட்ட விமானம். தானை வைப்பு-படைகள் தங்கியுள்ள பாசறை. இந்திரற்குரிய செல்வம் இந்திரனது செல்வத்துக்குச் சமமானது இலங்கையின் ஆட்சிச் செல்வம் என்னும் பொருள் உடையது.

*பெரியோர் மகிழ்ச்சி*

***6514. தேடுவார் தேட நின்ற சேவடி, தானும் தேடி***
***நாடுவான், அன்று கண்ட நான்முகன் கழீஇய நல் நீர்***
***ஆடுவார் பாவம் ஐந்தும் நீங்கி, மேல் அமரர் ஆவார்;***
***சூடுவார் எய்தும் தன்மை சொல்லுவார் யாவர்?***
***சொல்லீர்.***

**தேடுவார் தேட நின்ற சேவடி** - ஞானிகளும் அடியார்களும் தேடியும் காணாத பரமனது திருவடிகளை; **தானும் தேடி நாடுவான்** - தானும் தேடி அடைய விரும்பியவனாய்; **அன்று கண்ட நான்முகன்** - திருவிக்கிரமனாக வளர்ந்த திருமாலின் திருவடிகள் அப்போது கண்ட பிரமன்; **கழிஇய நன்னீர் ஆடுவார்** - அத்திருவடிகளைத் திருமஞ்சனம் செய்த நல்ல நீரிலே மூழ்குபவர்கள்; **பாவம் ஐந்தும் நீங்கி** - பாவங்கள் ஐந்தும் நீங்கப்பெற்றவராய்; **மேல் அமரர் ஆவார்** - விண்ணுலகத்துத் தேவர்கள் ஆவார் என்றால்; **சூடுவார் எய்தும் தன்மை** - அந்தத் திருவடிகளைத் தலையில் சூடிக் கொள்பவர்களின் சிறந்த தன்மையை; **யாவர் சொல்லுவார் சொல்லீர்** - யார் சொல்ல வல்லவர் சொல்லுங்கள்.

தேடுவார்-பரமனது பாதத்துணையைத் தேடும் பக்தரும், ஞானிகளுமாவார். தேடநின்ற சேவடி-அத்தகைய ஞானிகளும் இன்றும் அடைய இயலாத திருவடிகள் என்பது பொருள். அன்று-திருமால் திருவிக்கிரம் அவதாரம் செய்த காரணம்.

***6515. 'இற்றை நாள் அளவும், யாரும், இருடிகள்,***
***இமையோர், ஞானம்***
***முற்றினார், அன்பு பூண்டார், வேள்விகள் முடித்து***
***நின்றார்,***
***மற்று மா தவரும், எல்லாம், வாள் எயிற்று இலங்கை***
***வேந்தன்***
***பெற்றது ஆர் பெற்றார்!' என்று வியந்தனர்,***
***பெரியோர் எல்லாம்.***

**பெரியோர் எல்லாம்** - வீடணன் பெற்ற பெருமையை உணர்ந்த உலகத்துப் பெரியவர்கள் எல்லாம்; **இற்றை நாள் அளவும்** - இந்த நாள் வரையும்; **இருடிகள், இமையோர் யாரும்** - முனிவர்களும், தேவர்களும் எவரும்; **ஞானம் முற்றினார் அன்பு பூண்டார்** - ஞானத்தில் முதிர்ந்தவர்கள், பக்தி பூண்டு ஒழுகுபவர்கள்; **வேள்விகள் முடித்து நின்றார்** - சிறந்த வேள்விகளைச் செய்து நிறைவேற்றியவர்கள்; **மற்று மாதவரும் எல்லாம்** - மற்றும் சிறந்த தவமுடைய யாவரும் ஆகிய இத்தகைய யாவரும்; **வாள் எயிற்று இலங்கை வேந்தன்** - ஒளிபொருந்திய பற்களை உடைய இந்த இலங்கை வேந்தனான வீடணன்; **பெற்றது ஆர் பெற்றார்** - இந்தப் பேற்றினை யார் பெற்றார்கள்; **என்று வியந்தனர்** - என்று கூறி வியப்படைந்தார்கள்.

*இருடிகள்-முனிவர்கள் (ரிஷி என்ற வடசொல்லின் தமிழ் வடிவம்) இமையோர்-தேவர். ஞானம் முற்றினார்-ஞானத்தில் சிறந்த ஞானிகள் அன்பு பூண்டார்-பக்தி மிக்கவர்கள். அரக்கனாய்ப் பிறந்தும் சிறந்த பேறு பெற்றான் என்பதால் வீடணன் 'வாள் எயிற்று இலங்கை வேந்தன்' எனக் குறிப்பிட்டார்.*

## இலங்கை கேள்விப்படலம்

இராமபிரான் வீடணனிடம் இலங்கையின் படைபலம் அரக்கர்களின் வலிமை, இராவண சேனையின் அளவு போன்றவைகளைக் கேட்டு அறிந்ததைக் கூறும் பகுதியாதலின் இப்பெயர் பெற்றது.

இலங்கை வேந்தனாக முடி சூடி, தன்னை வந்து வணங்கிய வீடணனுக்கு இராமன் ஆசனம் தந்து அமரச் செய்கிறான். பிராட்டியின் நினைவால் வருந்துகிறான். சுக்கிரீவன் இராமனுக்கு ஆறுதல் கூறிப் பின் வீடணனுடன் கலந்து யோசித்து மேலே செய்ய வேண்டிய செயல்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டுகிறான். இராமன் மனம் தெளிந்து, வீடணனை அழைத்து வரச்செய்து, இலங்கையின் படைபலம் முதலியவைகளைப் பற்றிக் கேட்கிறான்.

வீடணனும் இலங்கையின் தோற்றம், படைபலம், மதிலின் சிறப்பு, காவல் புரியும் வீரர்களின் வலிமை, அரண்மனைக் காவலர்களின் சிறப்பு ஆகியவைகளை எடுத்துரைக்கிறான். இலங்கை நகரமே தீக்கிரையானதும். அவனுடைய போர்த்திறமையும் வீடணன் கூறக் கேட்ட இராமன், மகிழ்ந்து அனுமனைப் பாராட்டிப் பேசுகிறான். அனுமன் இராமனைத் தொழுதுவிட்டு ஒன்றும் பேசாது நிற்க, வானரவீரர்கள் அனுமனது வீரச் செயலை அறிந்து வியக்கின்றனர் என்பவை இந்தப் படலத்துள் கூறப்படும் செய்திகள்.

### *இராமபிரான் வீடணனுக்கு இடமளித்தல்*

**கலிவிருத்தம்**

***6516. வந்து அடி வணங்கிய நிருதர் மன்னவற்கு***
***அந்தம் இலாதது ஓர் உறையுள் அவ்வழித்***
***தந்தனன் விடுத்தபின், இரவி, 'தன் கதிர்***
***சிந்தின வெய்ய' என்று எண்ணி, தீர்ந்தனன்.***

***வந்து அடி வணங்கிய நிருதர் மன்னவற்கு*** - பாடி வீட்டை வலம் வந்தபின், வந்து இராமபிரானது திருவடிகளை வணங்கிய அசுரர் குலவேந்தனான வீடணனுக்கு; ***அந்தம் இல்லாததோர் உறையுள்*** - எல்லையற்ற பரப்பை உடைய ஒரு உறைவிடத்தை; ***அவ்வழித் தந்தனன் விடுத்தபின்*** - அந்தப் பாசறையிலே கொடுத்து அவனை அனுப்பி வைத்தபின்; ***இரவிதன் கதிர் சிந்தின வெய்ய என்று எண்ணி*** - சூரியன் தனது கதிர்கள் வெப்பம் மிக்கன என நினைத்து; ***தீர்ந்தனன்*** - தனது கிரணங்களைச் சுருங்கச் செய்தான் மறைந்தான்.

*தந்தனன் - தந்து முற்றெச்சம். இலங்கை வேந்தனான வீடணனை வெப்பமான கதிர்கள் வருத்தும் என்பதால் சூரியன் 'தன் கதிர் சிந்தின வெய்ய" என்று நினைத்து கதிர்களைச் சுருக்கிக் கொண்டு மறைந்தான் என்பது கருத்து. இது தற்குறிப்பேற்றவணி.*

*அந்தி மாலையின் தோற்றம்*

***6517. சந்தி வந்தனைத் தொழில் முடித்து தன் நெடும்
புந்தி நொந்து, இராமனும் உயிர்ப்ப, பூங் கணை
சிந்தி வந்து இறுத்தனன், மதனன்; தீ நிறத்து
அந்தி வந்து இறுத்தது; கறுத்தது அண்டமே.***

***சந்தி வந்தனைத் தொழில் முடித்து*** *- (சூரியன் மறைந்ததும் மாலை நேரம் என்பதால் இராமபிரான்) சந்தியாவந்தனம் செய்து முடித்து);* ***தன் நெடும் புந்தி நொந்து*** *- தனது நெடிய மனம் நொந்து;* ***இராமனும் உயிர்ப்ப*** *- இராமபிரானும் (சீதையைப் பிரிந்த துயரால்) பெருமூச்சு விட;* ***மதனன் பூங்கணை சிந்திவந்து*** *- மன்மதனும் மலரம்புகளை எய்து கொண்டு வந்து;* ***இறுத்தனன்*** *- அங்கு தங்கலாயினான்;* ***தீநிறத்து அந்திவந்து இறுத்தது*** *- நெருப்புப் போன்ற நிறத்தை உடைய அந்தி மாலை வந்தடைந்தது;* ***அண்டம் கறுத்தது*** *- (அதனால்) வானம் இருண்டு கறுத்தது.*

*சந்தி வந்தனை - சந்தியா காலத்தில் செய்யும் வழிபாடு (சந்தியாவந்தனம்) நெடுமை - இங்குப் பெருமை. புந்தி - மனம். மதனன் - மன்மதன்.*

***6518. மாத் தடந் திசைதொறும் மறைந்த வல் இருள்
கோத்தது, கருங் கடல் கொள்ளை கொண்டென;
நீத்த நீர்ப் பொய்கையில் நிறைந்த நாள்மலர்
பூத்தென, மீன் குலம் பொலிந்தது, அண்டமே.***

***மாத்தடந்திசை தொறும்*** *- (பகல் முழுதும் பரிதிக்குப் பயந்து) பெரியபரந்த திசைகள் தோறும் சென்று;* ***மறைந்த வல் இருள்*** *- மறைந்திருந்த வலிய இருளானது;* ***கருங்கடல் கொள்ளை கொண்டென*** *- கரிய கடல் நீர் உலகத்தைக் கொண்டது போல;* ***கோத்தது*** *- வந்து கவிந்து கொண்டது;* ***நீத்த நீர்ப் பொய்கையில்*** *- நிறைந்த நீரையுடைய பொய்கையிலே;* ***நிறைந்த நாண்மலர்பூத்தென*** *- நிறைந்த அன்றலர்ந்தமலர்கள் பூத்தது போல;* ***அண்டம் மீன் குலம் பொலிந்தது*** *- வானத்திலே விண்மீன்கள் விளங்கின.*

*நீத்தம் - வெள்ளம் நிறைந்த நீர் என்பது பொருள்.*

***6519. சில் இயல் கோதையை நினைந்து தேம்பிய
வில்லியைத் திரு மனம் வெதுப்பும் வெம்மையால்,
எல்லியைக் காண்டலும் மலர்ந்த ஈட்டினால்.
மல்லிகைக் கானமும், வானமும் ஒத்ததே.***

***சில் இயல் கோதையை நினைந்து*** - *சில வகைகளாக அழகு படுத்தும் கூந்தலையுடைய சீதா பிராட்டியை நினைத்து;* ***தேம்பிய வில்லியை*** - *வருந்துகின்ற வில்வீரனான இராமனை;* ***திருமனம் வெதுப்பும் வெம்மையால்*** - *அவனது அழகிய மனத்தை வெதுப்புகின்ற வெப்பத்தால்;* ***எல்லியைக் காண்டலும்*** - *இரவைக் கண்டவுடனே;* ***மலர்ந்த ஈட்டினால்*** - *மலர்ந்திருக்கும் தன்மையால்;* ***மல்லிகைக் கானமும் வானமும் ஒத்தது*** - *மல்லிகைக் காடும் விண்மீன்கள் பொலியும் வானத்தை ஒத்தது.*

*சில் இயல் கோதை - சீதை. முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்று ஐந்து வகையாக அலங்கரித்தலால் "சில் இயல் கோதை" என்றார். கோதை - மலர் மாலை உவமையாகு பெயராகச் சீதையை உணர்த்தியது. வில்லி - இராமன் (வில் வீரன் என்பது பொருள்), எல்லி, இரவு. ஈடு - தன்மை. செம்மையான நினைக்கும் மனமாதலின் "திருமனம்" என்றார்.*

***6520. ஒன்றும் உட் கறுப்பினோடு, ஒளியின் வாள் உரீஇ,***
***'தன் தனி முகத்தினால் என்னைத் தாழ்த்து அற***
***வென்றவள் துணைவனை இன்று வெல்குவேன்'***
***என்றது போல, வந்து எழுந்தது-இந்துவே.***

***ஒன்றும் உட் கறுப்பினோடும்*** - *பொருந்திய உள்ளத்தே பகைமையோடும்;* ***ஒளியின் வாள் உரீஇ*** - *ஒளியாகிய வாளை உருவிக் கொண்டு;* ***தன்தனி முகத்தினால்*** - *தனது ஒப்பற்ற முகத்தினாலே;* ***என்னைத் தாழ்த்து*** - *என்னைத் தாழ்ந்து போகச் செய்து;* ***அறவென்றவள்*** - *அடியோடு வெற்றி பெற்றவளாகிய சீதாபிராட்டியின்;* ***துணைவனை இன்று வெல்குவேன்*** - *துணைவனான இராமபிரானை இன்று நான் வெல்லுவேன்;* ***என்றது போல*** - *என்று கூறுவதுபோல;* ***இந்து வந்து எழுந்தது*** - *வானத்திலே சந்திரன் வந்து எழுந்தான்.*

*கறுப்பு - களங்கம் (பகைமை) உரீஇ- உருவி (சொல்லிசை அளபெடை). ஒளியின் வாள் - உருவகம். சீதையை வெல்ல வல்லமையற்ற சந்திரன், அவள் கணவனை இன்று வெல்வேன் என்றெழுந்தான் என்பது தற்குறிப்பேற்றம்.*

***6521. 'கண்ணினை அப்புறம் கரந்து போகினும்,***
***பெண் நிறம் உண்டுஎனின், பிடிப்பல் ஈண்டு' எனா,***
***உள் நிறை நெடுங் கடல் உலகம் எங்கணும்***
***வெண் நிற நிலவு எனும் வலையை வீசினான்.***

***கண்ணினை அப்புறம்*** - கண்ணுக்குப் புலனாகாதபடி அப்புறத்தில்; ***கரந்துபோகினும்*** - மறைந்து சென்றாலும்; **பெண் நிறம் உண்டெனில்** - சீதை என்னும் பெண்ணின் உடல் இருக்குமானால்; **பிடிப்பல் ஈண்டு எனா** - இப்போதே பிடிப்பேன் என்று; **உள் நிறை நெடுங்கடல்** - உள்ளே நிறைந்த நீரையுடைய கடல் சூழ்ந்த; **உலகம் எங்கணும்** - இவ்வுலகம் எங்கும்; **வெண் நிற நிலவு எனும்** - வெண்மை நிறமான நிலவொளி என்னும்; **வலையை வீசினான்** - வலையைச் சந்திரன் வீசினான்.

*கண்ணினை - கண்ணுக்கு; வேற்றுமை மயக்கம். நிலவை வலையாக உருவகம் செய்தார். 'இந்து'வலை வீசினான் என இயையும்.*

## *6522.* ***புடைக்கை வன் திரை எடுத்து ஆர்க்கும் போர்க் கடல்,***
***'உடைக் கருந் தனி நிறம் ஒளித்துக் கொண்டவன்,***
***அடைக்க வந்தான் எனை, அரியின் தானையால்;***
***கிடைக்க வந்தான்' எனக் கிளர்ந்தது ஒத்ததே.***

***புடைக்கை வன்திரை எடுத்து*** - பக்கங்களிலுள்ள கைகளாகிய வலிய அலைகளை வீசி; **ஆர்க்கும் போர்க் கடல்** - ஆரவாரம் செய்து போர்புரிய வரும் கடலானது; ***உடைக் கரும் தனிநிறம்*** - என்னுடைய கருமையான ஒப்பற்ற நிறத்தினை; **ஒளித்துக் கொண்டவன்** - தான் கவர்ந்து வைத்துக் கொண்டவனாகிய இராமன்; ***அரியின் தானையால்*** - வானரங்களின் படையைத் துணைகளாகக் கொண்டு; ***எனை அடைக்க வந்தான்*** - என்னைத் தடுத்து அணைகட்ட வந்தான்; **கிடைக்க வந்தான்** - எனது கைக்கு அகப்படும்படி இப்போது வந்துவிட்டான்; ***எனக் கிளர்ந்தது ஒத்தது*** - என்று பொங்கி எழுந்தது போல் இருந்தது.

*அரியின்தானை - வானரப் படை. அடைக்க - தடுத்து அணைகட்ட. அலைகளை வீசிக் கொண்டு, கரையோடு மோத வந்த கடலை, கைகளை வீசி இராமனுடன் போரிட வந்ததை ஒத்திருந்தது என்பதால் "போர்க்கடல்' என்றார். கிடைக்க வந்தான் என மகிழ்ந்து கிளர்ந்தெழுந்தது என்பது கருத்து. தற்குறிப்பேற்றம்.*

## *6523.* ***மேல் உகத் தொகுதியால் முதிர்ந்த மெய் எலாம்***
***தோல் உகுத்தாலென, அரவத் தொல் கடல்***
***வாலுகத்தால் இடைப் பரந்த வைப்பு எலாம்***
***பால் உகுத்தாலென, நிலவு பாய்ந்ததால்.***

**மேல் உகத் தொகுதியால்** - கடந்துபோன பல யுகங்களால்; ***முதிர்ந்த மெய் எலாம்*** - முதுமையடைந்த தன் உடலெல்லாம்; **தோல் உகுத்தால் என** - தோலை உரித்தது

போல; **அரவத் தொல்கடல்** - பெரிய ஒலியையுடைய பழைமை வாய்ந்த கடல்; **வாலுகத்தால் இடை பரந்த வைப் பெலாம்** - மணல் குன்றுகளால் இடையே பரந்த இடமெல்லாம்; **பால் உகுத்தால் என** - பாலைச் சொரிந்தது போல்; **நிலவு பாய்ந்தது** - நிலவு பாய்ந்து பரவியது.

முதிர்ந்த - முதிர்ச்சியுற்ற. அரவம் - ஓசை. தொல்கடல் - பழமையான கடல். வாலுகம் - மணற்குன்று. வைப்பு - இடம். உகுத்தல் - சொரிதல். உகத்தொகுதி - பலயுகங்களின் தொகுதி. விசும்பு தோல் உரித்தற்கு காரணம் கூறுவார் 'உகத் தொகுதியால் முதிர்ந்த மெய்" என்றார். மேலே இருந்து நிலவுதரையில் பாய்ந்தமைக்கு விசும்பு தோலுரித்ததையும் கரையெங்கும் நிலவொளி பரவியிருப்பதற்கு கடல் வாலுகத்தால் பாலைப் பொழிந்திருப்பதையும் உருவகம் செய்தார்.

**6524. மன்றல்வாய் மல்லிகை எயிற்றின், வண்டுஇனம்
கன்றிய நிறத்தது, நறவின் கண்ணது,
குன்றின்வாய் முழையின்நின்று உலாய கொட்பது,
தென்றல் என்று ஒரு புலி உயிர்த்துச் சென்றதால்.**

**மன்றல்வாய் மல்லிகை எயிற்றின்** - மணம் பொருந்திய மல்லிகை அரும்புகளாகிய பற்களையும்; **வண்டினம் கன்றிய நிறுத்தது** - வண்டினமாகிய கரிய கோடுகளை உடைய உடலையும்; **நறவின் கண்ணது** - தேனாகிய சிவந்த கண்களையும்; **குன்றின் வாய் முழையின் நின்று** - மலையிடத்தே உள்ள குகையிலிருந்து; **உலாய கொட்பது** - உலாவும் தன்மையுடையதுமாகிய; **தென்றல் என்று ஒரு புலி** - தென்றல் என்னும் ஒரு புலியானது; **உயிர்த்துச் சென்றது** - பெருமூச்சுவிட்டபடி வந்தது.

தென்றல் - புலி; மல்லிகை பல்; வண்டுகள் - புலியின் கருங்கோடுகள் - இது முற்றுருவகம். தென்றலின் வருகையைப் புலியின் வருகைக்கு உருவகித்துக் கூறியநயம் அறிந்து மகிழ்தற்குரியது. கன்றிய - கறுத்த. நறவு - தேன். முழை - குகை. கொட்பு - உழல்தல், திரிதல்.

**6525. கரத்தொடும் பாழி மாக் கடல் கடைந்துளான்
உரத்தொடும், கரனொடும், உருவ ஓங்கிய
மரத்தொடும் தொளைத்தவன் மார்பில், மன்மதன்
சரத்தொடும் பாய்ந்தது, நிலவின் தாரை வாள்.**

**கரத்தொடும்பாழிமாக்கடல் கடைந்துளான்** - தனது கைகளினாலே வன்மைமிக்க பெரிய பாற்கடலைக் கடைந்த வாலியினது; **உரத்தொடும் கரனொடும்** - மார்பையும், கரனையும்; **உருவ ஓங்கிய மரத்தொடும்** - உயர்ந்து வளர்ந்த வடிவத்தை

*உடைய ஏழுமரங்களையும்;* **தொளைத்தவன்** *- ஊடுருவிச் செல்லுமாறு அம்புதைய்த்த இராமபிரானுடைய;* **மார்பில்** *- மார்பிலே (இன்று);* **மன்மதன் சரத்தொடும்** *- மன்மதனுடைய அம்புகளோடு;* **நிலவின்தாரை வாள் பாய்ந்தது** *- நிலவின் கதிர்களாகிய வாளும் பாய்ந்தது.*

*சீதையைப் பிரிந்து பிரிவாற்றாமையால் வருந்திய, இராமபிரானை மன்மதனும் மலரம்புகளால் துன்புறச் செய்தான். பிரிந்தார்க்குப் பகையான நிலவும் துன்புறுத்தியது என்பது கருத்து.*

*இராமன் பிரிவுத் துயரால் வருந்துதல்*

***6526. உடலினை நோக்கும்; இன் உயிரை நோக்குமால்;***
***இடரினை நோக்கும்; மற்று யாதும் நோக்கலன்;***
***கடலினை நோக்கும்; அக் கள்வன் வைகுறும்***

***திடரினை நோக்கும்; தன் சிலையை நோக்குமால்.*** **உடலினை நோக்கும்** *- (அப்போது இராமபிரான்) சீதையின் பிரிவால் மெலிந்து போன தனது உடலைப் பார்த்தான்;* **இன் உயிரை நோக்கும்** *- தனது இனிய உயிர் போன்றவளாகிய சீதாபிராட்டியை மனதால் நினைத்தான்;* **இடரினை நோக்கும்** *- அப்பிராட்டிக்கு நேர்ந்த துன்பத்தை நினைத்தான்;* **மற்று யாதும் நோக்கலன்** *- வேறெதுவும் எண்ணாதவனாயிருந்தான்;* **கடலினை நோக்கும்** *- தன்னெதிரே உள்ள கடலைப் பார்ப்பான்;* **அக்கள்வன் வைகுறும்** *- சீதையைக் கவர்ந்து சென்ற கள்வனாகிய இராவணன் தங்கியிருக்கும்;* **திடரினை நோக்கும்** *- இலங்கையாகிய திட்டைப் பார்க்கிறான்;* **தன் சிலையை நோக்கும்** *- தன் கையிலிருக்கும் வில்லையும் பார்த்துக் கொள்கிறான்.*

*இராமபிரான் உடல் என்றால் சீதாபிராட்டி உயிர்; எனவேதான் தன் உடலைப் பார்த்தவன் இனிய உயிரான பிராட்டியை நினைவு கூர்ந்தான்; பின் பிராட்டிக்கு நேர்ந்த துன்பத்தை எண்ணுகிறான். தனக்கும் - சீதைக்கும் இடையே பரந்து கிடக்கும் கடலைப் பார்க்கிறான். அக்கடல் நடுவே, சீதையைக் கவர்ந்து சென்ற கள்வனாகிய இராவணன் தங்கியிருக்கும் இலங்கை என்னும் ஒரு திட்டைப் பார்க்கிறான். இராவணனைக் கொன்று, சீதையைச் சிறை மீட்க உதவச் சித்தமாயுள்ள தனது வில்லைப் பார்க்கிறான். சீதையைப் பிரிந்து வருந்தும் இராமபிரானது நிலையைப் படிப்பவர் உள்ளத்தில் நன்கு பதியும் படி - எளிய சொற்களால் - உணர்ச்சிப் பெருக்கை வெளியிடும் பாடல் இது. 'மால்' இரண்டிடத்தும் அசை நிலை. இராமபிரானது கண்களுக்கு இலங்கை மாநகர் ஒரு சிறிய திடலாகத்தான் தோன்றியதாம் சிலை - வில்.*

***6527. பணி பழுத்து அமைந்த பூண் அல்குல் பண்பினால்,***
***பிணி பழுத்து அமைந்தது ஓர் பித்தின் உள்ளத்தான்,***

***அணி பழுத்து அமைந்த முத்து அரும்பு செம்மணி***
***மணி பழுத்து அமைந்த வாய் மறக்க வல்லனோ?***

***பணி ப ழுத்து அமைந்த பூண்*** *- வேலைப்பாடு நிரம்பிப் பொருந்திய அணிகலன்களை அணிந்துள்ள;* ***அல்குல் பண்பினால்*** *- அல்குலையுடைய சீதா பிராட்டியின் சிறந்த பண்புகளை நினைத்துப் பார்ப்பதால்;* ***பிணி பழுத்து அமைந்ததோர்*** *- காமநோய் முதிர்ந்து அமைந்தமையால் உண்டானதொரு;* ***பித்தின் உள்ளத்தான்*** *- பித்துப் பிடித்தது போன்ற மனத்தை உடைய இராமபிரான்;* ***அணி பழுத்து அமைந்த*** *- அழகு பழுத்து அமைந்ததாகிய;* ***முத்து அரும்பு செம்மணி -*** *முத்துக்கள் அரும்பிய சிவந்த மணி போன்ற;* ***மணி பழுத்து அமைந்தவாய்*** *- அழகு நிறைந்து விளங்கும் சீதாபிராட்டியின் திருவாயினை;* ***மறக்க வல்லனோ*** *- மறக்கும் வல்லமை உடையவனோ? வல்லன்.*

*சீதாபிராட்டியின் சிறந்த குண நலங்களை எப்போதும் நினைத்திருப்பதால் காம நோய் முதிர்ந்து பித்துப் பிடித்தது போன்ற மனத்தை உடைய இராமபிரான் முத்தரும்பிய செம்மணி போன்ற அழகிய சீதா பிராட்டியின் வாயை மறக்கவல்லனல்லன்.*

*சுக்கிரீவன், இராமபிரானிடம் வீடணனோடு மேல் விளைவது குறித்து எண்ணுக எனல்*

***6528. ஆயது ஓர் அளவையின், அருக்கன் மைந்தன், 'நீ***
***தேய்வது என்? காரியம் நிரப்பும் சிந்தையை;***
***மேயவன்தன்னொடும் எண்ணி, மேல் இனித்***
***தூயது நினைக்கிலை' என்னச் சொல்லினான்.***

***ஆயதோர் அளவையின்*** *- (சீதையின் நினைவால் இராமன் வருந்திய) அத்தகைய நேரத்திலே;* ***அருக்கன் மைந்தன்*** *- சூரியகுமாரனான சுக்கிரீவன் (இராமபிரானை நோக்கி);* ***நீ தேய்வது என்*** *- (பெருமானே) நீ இவ்வாறு வருந்தித் தேய்வது என்ன பயனைக் கருதி;* ***காரியம் நிரப்பும் சிந்தையை*** *- செய்யவேண்டிய காரியங்களை எண்ணி நிறைவேற்றத் தக்க சிறந்த மனத்தை உடையவன் நீ (ஆதலின்);* ***மேயவன் தன்னொடும் எண்ணி*** *- நம்மை நாடி வந்துள்ள இலங்கை வேந்தனான வீடணனுடன் கலந்து சிந்தித்து;* ***மேல் இனித் தூயது நினைக்கிலை*** *- இனிமேல் நடக்க வேண்டிய நமக்கு நன்மைதரும் செயல்களை நினைக்காமலிருக்கிறாயே;* ***என்னச் சொல்லினான்*** *- என்று இராமபிரானிடம் கூறலானான்.*

*இராவணனைவென்று, சீதாபிராட்டியை மீட்கும் செயலை "தூயது" என்றான். இராமபிரான், செயற்கரியன செய்து முடிக்கும் மன வலிமை உடையவன் என்பதை "காரியம் நிரப்பும் சிந்தையை" என்றான்.*

***6529. அவ்வழி, உணர்வு வந்து, அயர்வு நீங்கினான்,***
***'செவ் வழி அறிஞனைக் கொணர்மின், சென்று' என, 'இவ்வழி வருதி' என்று இயம்ப, எய்தினான்-***
***வெவ் வழி விலங்கி, நல் நெறியை மேவினான்.***

***அல்வழி உணர்வு வந்து*** - அப்பொழுது, தன்னுணர்வு வரப்பெற்று; ***அயர்வு நீங்கினான்*** - மனத்துயர் நீங்கியவனான இராமபிரான்; ***செவ்வழி அறிஞனைக் கொணர்மின் சென்றென*** - நன்னெறி நின்று ஒழுகும் அறிஞனான வீடணனை அழைத்து வருக என வானர வீரர்களுக்குக் கட்டளை இட; ***இவ்வழி வருதி என்று இயம்ப*** - (சென்ற வானரவீரர்கள் வீடணனை அடைந்து) இராமபிரானிடம் வருக என்று கூற; ***வெவ்வழிவிலங்கி நல்நெறியை மேவினான்*** - தீய நெறியிலிருந்து நீங்கி, நல்லநெறியைக் கடைப் பிடிப்பவனாகிய வீடணன்; ***எய்தினான்*** - இராமபிரான் இருக்குமிடத்தை அடைந்தாள்.

*இராமபிரான் அனுமனுக்குச் 'சொல்லின் செல்வன்' என்றொரு பெயர் சூட்டிய திருவாயால் வீடணனை "செவ்வழி அறிஞன்" என்றது குறிப்பிடத்தக்கது. இராமபிரான் கூற்றாகப் போற்றிக் கூறியது போதாதென்று கவிக் கூற்றாகவும் 'வெவ்வழி விலங்கி நன்னெறியை மேவினான்" என்றது குறிப்பிடத்தக்கது.*

*இலங்கை பற்றி இராமன் வினவ வீடணன் விடை பகர்தல்*

***6530. 'ஆர்கலி இலங்கையின் அரணும், அவ் வழி***
***வார் கெழு கனை கழல் அரக்கர் வன்மையும்,***
***தார் கெழு தானையின் அளவும், தன்மையும்,***
***நீர் கெழு தன்மையாய்! நிகழ்த்துவாய்' என்றான்.***

***ஆர்கலி இலங்கையின் அரணும்*** - கடல் சூழ்ந்த இலங்கையின் மதில் முதலிய பாதுகாப்புப் பற்றியும்; ***அவ்வழி வார் கெழு கனைகழல் அரக்கர் வன்மையும்*** - அங்கு நீண்டு ஒலிக்கும் வீரக் கழல் அணிந்தவர்களான இராவணன் முதலிய அரக்கர்களின் வலிமைபற்றியும்; ***தார் கெழு தானையின் அளவும் தன்மையும்*** - வெற்றி மாலை பொருந்திய இலங்கைப் படையின் அளவு பற்றியும் தன்மை பற்றியும்; ***நீர் கெழு தன்மையாய்*** - நற்குணங்கள் உடையவனே; ***நிகழ்த்துவாய் என்றான்*** - கூறுவாயாக என, இராமபிரான் வீடணனைக் கேட்டான்.

*நீர்மை - நற்குணம் (தன்மையுமாம்) தார் - கொடிப்படை (அணிவகுப்பில் முதலில் வரும்) தூசிப் படையுமாம்.*

***6531. எழுதலும், 'இருத்தி' என்று இராமன் ஏயினான்,***
***முழுது உணர் புலவனை; முளரிக் கண்ணினான்***
***பழுது அற வினவிய பொருளைப் பண்பினால்***

***தொழுது உயர் கையினான், தெரியச் சொல்லினான்:***

***எழுதலும்*** - *(இராமன் கேட்டவைகளுக்கான விடை கூற வீடணன்) எழுந்தான், அவ்வாறு எழலும்;* ***முழுதுணர் புலவனை*** - *முற்றும் உணர்ந்த அறிஞனான வீடணனை;* ***'இருத்தி' என்று இராமன் ஏயினான்*** - *(உட்கார்ந்தே பேசலாம் என்ற எண்ணத்தால்) இருப்பாயாக என்று இராமபிரான் கூறினான்;* ***முளரிக் கண்ணினான்*** - *தாமரை மலர் போன்ற கண்களைஉடைய இராமபிரான்;* ***பழுதற வினவிய பொருளை*** - *குற்றம் நீங்கக் கேட்ட பொருள்களைப் பற்றியெல்லாம்;* ***பண்பினால் தொழுதுயர் கையினான்*** - *பண்போடு, தொழுதுயர்த்திய கைகளை உடையவனாக;* ***தெரியச் சொல்லினான்*** - *இராமபிரான் நன்கு தெரிந்து கொள்ள கூறுவானாயினான்.*

*போர் மேற்கொண்டு செல்லுதற்குமுன் பகைவனது வலிமையை ஆராய்ந்து அறிதல் வேந்தர்க்குரிய கடமை என்பதால் 'பழுதற வினவிய பொருள்' என்றார். சொல்லுதலில் கேட்பவர்க்குத் தெளிவு வேண்டுமென்பதால் "தெரியச் சொல்லினான்" என்றார்.*

*இலங்கையின் அரண்*

***6532. 'நிலையுடை வட வரை குலைய நேர்ந்து, அதன்***
***தலை என விளங்கிய தமனியப் பெரு***
***மலையினை மும் முடி வாங்கி, ஓங்கு நீர்***
***அலை கடல் இட்டனன், அனுமன் தாதையே.***

***அனுமன்தாதை*** - *அனுமானுடைய தந்தையாகிய வாயுதேவன் (காற்று);* ***நிலையுடைவடவரை*** - *நிலைத்ததன்மை கொண்ட வடமேருமலையை;* ***குலைய நேர்ந்து*** - *நிலைகுலைந்து சிதையும்படி செய்ய நினைத்து;* ***அதன் தலை என விளங்கிய*** - *அந்தவடமலையின் முடி என்று திகழ்ந்த;* ***தமனியப் பெருமலையினை*** - *பொன்மயமான பெரிய மேரு மலையை;* ***மும்முடிவாங்கி*** - *மூன்று சிகரங்களைப் பறித்து வாங்கி;* ***ஓங்கு நீர் அலைகடல் இட்டனன்*** - *நிறைந்த நீரையுடைய கடலிலே இட்டான். வடவரை - வடமேருமலை தமனியம் - பொன். மும்முடி - மூன்று சிகரங்கள். வாயுவுக்கும், ஆதி சேடனுக்கும் இடையே நிகழ்ந்த பலப் போட்டியில் ஆதி சேடன் தனது ஆயிரம் பணா மகுடங்களாலும் மேருமலையின் ஆயிரம் சிகரங்களையும் மூடிக் கவித்துக் கொண்டான். வாயு தேவன் அம்மலையின் மூன்று சிகரங்களைத் தனது வலிமையால் பறித்துக் கடலில் இட்டான். அந்த மலையே 'திரிகூடமலை' இலங்கை தோன்றிய வரலாறு இது. வாயுதேவன் என்று கூறாது 'அனுமன் தாதை' என்றது, அனுமனுடைய ஆற்றலால் இலங்கை எரியுண்டதை நினைவு கூர்ந்ததாகும்.*

***6533. 'ஏழு நூறு யோசனை அகலம்; இட்ட கீழ்***

**ஆழம் நூறு யோசனை; ஆழி மால் வரை,**
**வாழியாய்! உலகினை வளைந்த வண்ணமே**
**சூழும் மா மதில்; அது சுடர்க்கும் மேலதால்.**

***வாழியாய்*** *- நல்வாழ்வுடையவனே!;* ***ஏழு நூறு யோசனை அகலம்*** *- எழுநூறு யோசனை அகலமுடையதாகவும்;* ***இட்ட கீழ் ஆழம் நூறு யோசனை*** *- கீழ் ஆழம் நூறு யோசனை உடையதாகவும்;* ***சூழும் மாமதில்*** *- இலங்கை நகரைச் சூழ்ந்திருக்கும்படி கட்டப்பட்ட பெரிய மதில்;* ***ஆழி மால் வரை*** *- சக்கரவாளகிரி;* ***உலகினை வளைத்த வண்ணமே*** *- உலகத்தை வளைத்திருப்பதைப் போன்றதாகும்;* ***அது சுடர்க்கும் மேலதால்*** *- அம்மதில் சூரிய, சந்திரர்களுக்கும் எட்டாதபடி மேலே உயர்ந்ததாகும்.*

*வீடணன் இராமபிரானை 'வாழியாய்' என அழைத்துப் பேசுகிறான் என்றும் வாழ்ந்திருப்பவன் - நல்வாழ்வுடையவன்- அனைத்தையும் வாழவைப்பவன் என்றெல்லாம் கருதி 'வாழியாய்' என்றான்என்க. எழுநூறு யோசனை அகலமும், நூறு யோசனை ஆழமும் கொண்டதாக இந்த இலங்கையைச் சூழ்ந்துள்ள மதில் உலகை வளைத்திருக்கும் சக்கரவாள கிரியை ஒத்தது. சூரிய, சந்திரர்களாகிய சுடர்களுக்கும் எட்டாத உயரத்தில் இருப்பது என்பதால் 'சுடர்க்கு மேலதாய்' என்றான். ஆழி - சக்கரம் மால் - பெரிய*

***6534.** **'மருங்குடை வினையமும் பொறியின் மாட்சியும்,***
**இருங் கடி அரணமும், பிறவும், எண்ணினால்,**
**சுருங்கிடும்; என், பல சொல்லி? சுற்றிய**

**கருங் கடல் அகழது; நீரும் காண்டிரால்.** ***மருங்கு உடை வினையமும்*** *- அந்த மதிலிடத்தே அமைந்திருக்கும் வஞ்சக வேலைப்பாடுகளும்;* ***பொறியின் மாட்சியும்*** *- இயந்திரங்களின் சிறப்பும்;* ***இருங்கடி அரணமும்*** *- பெரிய காவலையுடைய மதிலும்;* ***பிறவும் எண்ணினால்*** *- மற்ற ஏற்பாடுகளையும் நினைத்துப் பார்த்தால்;* ***சுருங்கிடும்*** *- ஆயுட்காலம் போதாதபடி சுருங்கிவிடும்;* ***என் பல சொல்லி*** *- பலவற்றையும் சொல்வதால் என்ன பயன்?;* ***சுற்றிய கருங்கடல் அகழது*** *- சுற்றிலுமுள்ள கரிய பெரிய கடலே இலங்கையின் அகழியாயுள்ளது;* ***நீரும் காண்டிரால்*** *- நீங்களும் நேரில் காணலாம்.*

*பலவகையான இயந்திரங்களைக் கொண்டிருப்பதை "பொறியின் மாட்சி" என்றார். மிகுந்த காவலையுடைய மதிலை "இருங்கடி அரணம்" என்றார். இன்னும் எத்தனையோ வகையான பொறிகளும், படைக் கலங்களும் உண்டு என்பதை 'பிறவும்' என்றார்.*

*வாயில் முதலியவற்றைக் காப்போர்*

*6535. **'வட திசை வயங்கு ஒளி வாயில் வைகுவோர்,***
***இடை இலர், எண்-இரு கோடி என்பரால்;***
***கடையுக முடிவினில் காலன் என்பது என்?***
***விடை வரு பாகனைப் பொருவும் மேன்மையோர்.***

***வடதிசை வயங்கு ஒளி வாயில் வைகுவோர்*** *- இலங்கை நகரின் வடக்குத் திசையில் உள்ள ஒளி விளங்கும் வாயிலில் தங்கிக்; காவல் காப்பவர்கள்;* ***இடை இலர்*** *- எதற்கும் பின் வாங்காத வலிமை உள்ளவர்கள்;* ***எண் இரு கோடி என்பர்*** *- பதினாலு கோடி பேர் என்பார்கள்;* ***கடையுக முடிவினில்*** *- யுகாந்த காலமுடிவிலே;* ***காலன் என்பது என்*** *- உயிர்களையெல்லாம் கொல்லுகின்ற எமனைப் போன்றவர் என்று எப்படிச் சொல்வது?;* ***விடை வரு பாகனை*** *- காளை வாகனத்திலே வரும் சிவபிரானை;* ***பொருவும் மேன்மையோர்*** *- ஒத்த பெருமை மிக்கவராவார்.*

*பொன்னாலும் மணிகளாலும் பொலிந்து திகழும் வடதிசை வாயிலை 'வயங்கு ஒளிவாயில்" என்றார். எவருக்கும் பின் வாங்காத பெரு வலி படைத்த காவலர்களாதலின் 'இடை இலர்' என்றார். காலன் என்பதை விடக் காலகாலனான சிவன் என்பதே பொருந்தும் என்பது கருத்து. இடைதல் - பின் வாங்குதல்.*

*6536. **'மேல் திசை வாயிலின் வைகும் வெய்யவர்க்கு***
***ஏற்றமும் உள, அவர்க்கு இரண்டு கோடி மேல்;***
***கூற்றையும் கண்-பொறி குறுகக் காண்பரேல்,***
***ஊற்றுறு குருதியோடு உயிரும் உண்பரால்.***

***மேல்திசை வாயிலில் வைகும்*** *- இலங்கை மாநகரின் மேற்குத் திசை வாயிலைக் காவல் புரிந்து தங்கியுள்ள;* ***வெய்யவர்க்கு ஏற்றமும் உள*** *- கொடியவர்களுக்குச் சில தனியான மேன்மைகளும் உண்டு;* ***அவர்க்கு இரண்டு கோடி மேல்*** *- வடதிசை வாயிலில் உள்ளவர்களை விட இரண்டு கோடி அதிகம் (எனவே இவர்கள் 12 கோடி பேர்);* ***கூற்றையும் கண்பொறி குறுகக் காண்பரேல்*** *- எமனையும் கூட கண்ணைச் சிறிதே குறுக்கிப் பார்ப்பாரென்றால்;* ***ஊற்றுறு குருதியோடு உயிரும் உண்பர்*** *- ஊறுகின்ற இரத்தத்துடன் உயிரையும் உண்டு விடுவார்கள்.*

*வடதிசை வாயில் காவலர்களை விடவும், மேற்றிசைக் காவலர்களுக்குச் சில மேன்மைகள் உண்டு என்பார் 'வெய்யவர்க்கு ஏற்றமும் உள' என்றார். அவர்களை விட இரண்டு கோடி அதிகம் என்பதொரு ஏற்றம். அது தவிர இவர்கள் கண்களைச் சிறிதே திறந்து குறுக்கிப் பார்க்கும் பார்வையிலேயே கூற்றுவனுடைய இரத்தத்தோடு உயிரையும் உண்டு விடுவார்கள் என்பது கருத்து: கட்பொறி - கண்ணாகிய இந்திரியம். பரமன் கண்ணைச் சிறிது விழித்தாலும் பெருகும் கருணையால் உலகம் வாழும் 'செங்கண் சிறுச் சிறிதே எம் மேல் விழியாவோ" என்பது கோதையார் வாக்கு. அதுபோல வெய்யவர் சிறிதே விழித்தாலும்துன்பம் விளையும். மேலும் மேலும் ஊறும் இரத்தத்தை ஊற்றுறு குருதி" என்றார். கூற்று - எமன்; உடலையும் உயிரையும் கூறுசெய்பவன்.*

***6537. 'தென் திசை வாயிலின் வைகும் தீயவர்***
***என்றவர் எண்-இரு கோடி என்பரால்;***
***குன்று உறழ் நெடியவர் கொடுமை கூறி என்?***
***வன் திறல் யமனையும் அரசு மாற்றுவார்.***

**தென்திசை வாயிலின் வைகும் தீயவர்** - *தென்திசை வாயிலைக் காவல் புரியும் தீயவர்கள்;* **என்றவர் எண் இரு கோடி என்பரால்** - *என்று கூறப்படுபவர் பதினாறு கோடிப் பேர் என்பார்கள்;* **குன்று உறழ் நெடியவர்** - *மலைக்கு நிகரான நெடிய உடலினர்;* **கொடுமை கூறி என்** - *இவர்களது கொடியசெயலை என்னவென்று கூறுவது;* **வன்திறல் யமனையும்** - *வலிய திறத்தை உடைய எமனையும் கூட;* **அரசு மாற்றுவார்** - *ஆட்சியை மாற்றித் தாமே ஆள வல்லவராவார்.*

*வலிய அவர்களது கொடுஞ் செயல் கூறும் தரமல்ல என்பார் "கொடுமை கூறி என்" என்றார். 'அரசு மாற்றுவார்' என்பதற்கு அரசை அழிக்க வல்லவர் என்று கூறினும் பொருந்தும். மாற்றுதல் - அழித்தலாம்.*

***6538. 'கீட்டிசை வாயிலின் வைகும் கீழவர்***
***ஈட்டமும் எண்-இரு கோடி என்பரால்;***
***கோட்டு இருந் திசை நிலைக் கும்பக் குன்றையும்***
***தாள் துணை பிடித்து, அகன் தரையின் எற்றுவார்.***

**கீழ்த்திசை வாயிலின் வைகும் கீழவர்** - *கிழக்குத் திசையிலுள்ள வாயிலில் காவல் புரிந்திருக்கும் கீழ்மக்கள்;* **ஈட்டமும் எண்இரு கோடி என்பரால்** - *கூட்டமும் பதினாறுகோடி;* **கோட்டு** - *வலியதந்தங்களை உடைய;* **இருந்திசை நிலை** - *அகன்ற எட்டுத் திசைகளிலும் நிலைத்து நிற்கும்;* **கும்பக் குன்றையும்** - *மத்தகத்தையுடைய மலைபோன்ற திக்கு யானைகளையும்;* **தாள் துணை பிடித்து** - *அவற்றின் இரு கால்களையும் பிடித்துத் தூக்கி;* **அகன் தரையின் எற்றுவார்** - *தரையிலே மோதியடித்துக் கொல்லும் வல்லமை உடையவர்கள்;* **அகன்தரை** *-அகன்ற தரையிடம்.*

*'கீழ்த்திசை' என்பது எதுகை நோக்கி 'கீட்டிசை" எனத் திரிந்தது. கும்பம் - மத்தகம். திக்கு யானைகளின் கால்களைப் பிடித்து, மேலே தூக்கித் தரையில் மோதிக் கொல்லவும் வல்லவர்கள் என்பது கருத்து.*

***6539. 'விண்ணிடை விழித்தனர் நிற்கும் வெய்யவர்***
***எண்-இரு கோடியின் இரட்டி என்பரால்;***

***மண்ணிடை வானவர் வருவர் என்று, அவர்***
***கண் இலர், கரை இலர், கரந்து போயினார்.***

***விண்ணிடை விழித்தனர் நிற்கும் வெய்யவர்*** - வானத்திலே தேவர்கள் வரக்கூடும் என்பதால் உறங்காமல் கண் விழித்தவர்களாக நின்று காவல் புரியும் கொடியவர்; ***எண் இரு கோடியின் இரட்டி என்பரால்*** - பதினாறு கோடியின் இரண்டு மடங்கான முப்பத்திரண்டு கோடி என்பார்கள்; ***மண்ணிடை வானவர் வருவர் என்று*** - மண்ணுலகத்துக்கு தேவர்கள் வருவார் என்று கருதி; ***கண்ணிலர்*** - ஒரு சிறிதும் கண்ணோட்டம் இல்லாதவர்களாய்; ***கரந்து போயினார்*** - தமது வடிவத்தை மறைத்துக் கொண்டு, வேறு வடிவத்திலே உலாவுபவர்கள்; ***கரை இலர்*** - அளவற்றவராவர்.

*நான்கு திசையிலும் வாயில்களைக் காவல் காப்பவர்களைத்தவிர, விண்ணிலும் நின்று காவல் புரிந்தனர். கண் - கண்ணோட்டம். சிறிதும் கண்ணோட்டமில்லாத கொடியவர்கள் என்பதால் 'கண்இலர்' என்றார்; இரக்கம் சிறிதுமில்லாதவர்கள் என்பது பொருள். தேவர்கள் வருவார்கள் என்பதால் அவர்களுக்குப் புலனாகாதபடி வடிவத்தை மறைத்து, வேறு வடிவத்திலே இருந்தனர் என்பதால் 'கரந்து போயினார்' என்றார்.*

***6540. 'பிறங்கிய நெடு மதில் பின்னும் முன்னரும்,***
***உறங்கலர், உண் பதம் உலவை ஆதலால்,***
***கறங்கு எனத் திரிபவர் கணக்கு வேண்டுமேல்,***
***அறைந்துளது ஐ-இரு நூறு கோடியால்.***

***பிறங்கிய நெடுமதில்*** - விளங்கித் தோன்றும் அந்த நீண்ட மதிலின்; ***பின்னும் முன்னரும்*** - பின்புறத்திலும், முன்புறத்திலுமாக; ***உறங்கலர்*** - சிறிதும் உறங்காதவராய்; ***உண்பதம் உலவை ஆதலால்*** - அவர்கள் உண்ணும் உணவு காற்று ஆதலால்; ***கறங்கெனத் திரிபவர்*** - அந்தக் காற்றை நாடிக் காற்றாடி போலத் திரிவார்கள்; ***கணக்கு வேண்டுமேல்*** - அவர்களது எண்ணிக்கை வேண்டுமானால்; ***அறைந்துளது ஐயிரு கோடி*** - நூறு கோடி என்று சொல்லப்பட்டுள்ளது.

*பதம் - உணவு. உலவை - காற்று. கறங்கு - காற்றாடி. காற்றாடியைப் போலச் சுழன்று திரிந்த காவலர்களின் செயலுக்குக் காரணம் கூறுபவரைப் போல "உண்பதம் உலவை ஆதலால் கறங்கெனத் திரிபவர்" என்றார்.*

***6541. 'இப்படி மதில் ஒரு மூன்று; வேறு இனி***
***ஒப்ப அரும் பெருமையும் உரைக்க வேண்டுமோ?***
***மெய்ப் பெருந் திரு நகர் காக்கும் வெய்யவர்***
***முப்பது கோடியின் மும்மை முற்றினார்.***

**இப்படி மதில் ஒரு மூன்று** - இத்தகைய கட்டுக் காவலை உடைய மதில்கள் மூன்றாகும்; **வேறு இனி ஒப்பரும் பெருமையும்** - இதை விட வேறாக அந்த மதில்களின் ஒப்பற்ற பெருமையை; **உரைக்க வேண்டுமோ** - விரிவாகக் கூறவும் வேண்டுமோ?; மெய்ப் **பெரும் திருநகர்** - உண்மையான பெருமைமிக்க அந்த அழகிய இலங்கை நகரை; **காக்கும் வெய்யவர்** - காவல் காக்கும் கொடியவர்கள்; **முப்பது கோடியின் மும்மை முற்றினார்** - தொண்ணூறு கோடிபேர் என நிறைந்துள்ளனர்.

இப்படி, மேலே கூறியபடி, உண்மையாகவே இலங்கை பெருந்திருநகர் என்பார் 'மெய்ப் பெரு' என்றார். இலங்கை அழகிய நகராதலின் 'திருநகர்' என்றார். 'பிறந்த ஊர்' என்பதாலும் வீடணன் 'திருநகர்' எனச்சிறப்பித்துக் கூறினானென்க. முப்பது கோடியின் மும்மை - முப்பது கோடியின் மூன்று மடங்கு. முற்றுதல். நிறைதல்.

*6542. 'சிறப்பு அவன் செய்திடச் செல்வம் எய்தினார்,*
*அறப் பெரும் பகைஞர்கள், அளவு இல் ஆற்றலர்,*
*உறப் பெரும் பகை வரின் உதவும் உண்மையர்,*
*இறப்பு இலர், எண்-இரு நூறு கோடியே.*

**சிறப்பு அவன் செய்திட** - அந்த இராவணன் சிறப்புச் செய்ய; **செல்வம் எய்தினார்** - அவனால் செல்வம் அடைந்தவர்களும்; **அறப்பெரும் பகைஞர்** - அறத்துக்குப் பெரிய பகைவர்களாய் உள்ளவர்களும்; **அளவு இல் ஆற்றலர்** - அளவில்லாத வலிமை உடையவர்களும்; **உறப் பெரும் பகை வரின்** - அந்த இராவணனுடன் போரிடப் பெரும்பகைவர் வருவாராயின்; **இறப்பிலர்** - எப்போதும் இராவணனது கட்டளையை மீறாதவர்களுமானவர்கள்; **எண் இரு கோடியே** - பதினாறு கோடி பேராவார்.

சிறப்பு: பெருமை. இராவணனால் சிறப்புப் பெற்றுச் செல்வம் எய்தியவர்கள். "பகை உறவரின்" பகைவர் யாரேனும் இராவணனுடன் போரிட வந்தால்; உடனே அவனுக்கு உதவும் உண்மையானவர்கள் என்பதால் 'உதவும் உண்மையர்' என்றார்.

*கோயில் வாயிலின் காவலர்*

*6543. ' "விடம் அல, விழி" எனும் வெகுளிக் கண்ணினர்,*
*"கடன் அல, இமைத்தலும்" என்னும் காவலர்,*
*வட வரை புரைவன கோயில் வாயிலின்*
*இடம் வலம் வருபவர், எண்-எண் கோடியால்.*

**விடம் அல விழி எனும்** - இவை விடம் அல்ல விழிகள்தான் என்று கூறும்படி; **வெகுளிக் கண்ணினர்** - கோபம் மிக்க கண்களை உடையவர்கள்; **இமைத்தலும் கடன் அல** - கண்களை இமைப்பதும் நமது கடமையல்ல; **என்னும் காவலர்** - என்று கூறும்படி காவல் காப்பவர்கள்; **வட வரை புரைவன** - வட வரையான மேரு மலையைப் போன்றனவாகிய; **கோயில் வாயிலின்** - இராவணனுடைய அரண்மனை வாயிலில்; **இடம் வலம் வருபவர்** - இடதுசாரி, வலது சாரியாகத் திரிந்துவருகின்றவர்கள்; **எண்ணெண் கோடி** - அறுபத்து நான்கு கோடிப் பேராவர்.

கோபம் கொண்டு விழிக்கும் காவலர்களின் கண்கள் விடம் போன்ற கொடியவை என்பதால் 'விடம் அல விழி' என்றார். காவல் புரிபவர் கண்களை இமைத்தலும் கடமைதவறியதாகும் என்பதால் "கடன் அல இமைத்தலும்" என்றார். வடவரை - மேருமலை. கோயில் - அரண்மனை.

*6544. 'அன்றியும், அவன் அகன் கோயில் ஆய் மணி*
*முன்றிலின் வைகுவார் முறைமை கூறிடின்.*
*ஒன்றிய உலகையும் எடுக்கும் ஊற்றத்தார்;*
*குன்றினும் வலியவர்; கோடி கோடியால்.*

**அன்றியும் அவன் அகன் கோயில்** - அல்லாமலும் அந்த இராவணனுக்குரிய விசாலமான அரண்மனையில்; **ஆய்மணி முன்றிலின்** - ஆராய்ச்சி மணி கட்டப்பட்டுள்ள முற்றத்திலே; **வைகுவார் முறைமை கூறிடின்** - தங்கிக் காவல் புரிபவர்களின் தன்மையைக் கூறுவோமாயின்; **ஒன்றிய உலகையும்** - ஒன்றாக உள்ள உலகத்தை எல்லாம்; **எடுக்கும் ஊற்றத்தார்** - தமது கைகளால் தூக்கவல்ல ஆற்றல் உள்ளவர்களும்; **குன்றினும் வலியவர்** - மலையினும் வலிமைமிக்கவர்களும் ஆகிய வீரர்கள்; **கோடி கோடியே** - கோடி கோடிப் பேராவர்.

அரசர்கள் வாழுமிடமும் 'கோயில்' என்பது மரபு. ஆய்மணி - ஆராய்ச்சிமணி, அரசர்களின் அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணி கட்டுதல் உண்டென்பது 'வாயிற்கடைமணி நடு நா நடுங்க' எனவரும் சிலப்பதிகார உரையால் புலப்படும்.

*படைகளின் அளவு*

*6545. 'தேர் பதினாயிரம் பதுமம்; செம் முகக்*
*கார்வரை அவற்றினுக்கு இரட்டி; கால் வயத்து ஊர் பரி*
*அவற்றினுக்கு இரட்டி; ஒட்டகம்*
*தார் வரும் புரவியின் இரட்டி சாலுமே.*

***தேர் பதினாயிரம் பதுமம்*** - இராவணனது படையிலுள்ள தேர்கள் பதினாயிரம் பதுமமாகும்; ***செம்முகக் கார் வரை அவற்றினுக் கிரட்டி*** - சிவந்த புள்ளிகளைக் கொண்டமுகத்தையுடைய கரிய மலைபோன்ற யானைகளின் எண்ணிக்கை தேர்ப் படையிலும் இரண்டு மடங்கு (இருபதாயிரம் பதுமம்); ***கால் வயத்து ஊர் பரி*** - கால்கள் வலியனவாய் ஏறிச் செலப் பயன்படும் குதிரைகள்; ***அவற்றினுக்கு இரட்டி*** - யானைப்படையை விட இரண்டுமடங்கு (நாற்பதாயிரம் பதுமம்); ***ஒட்டகம் தார்வரு புரவியின்*** - ஒட்டகப் படை, மாலை யணிந்த குதிரைப் படையை விட; ***இரட்டி சாலுமே*** - இரண்டு மடங்கு நிறைந்ததாயிருக்கும் (எண்பதாயிரம் பதுமம்);

*'பதுமம்' என்பது ஒரு பேரெண்; கோடிக்கு மேற்பட்டது என்பர். சிவந்த - செம்புள்ளி வாய்ந்த முகத்தையுடைய யானைகள் கரிய மலை போன்ற வடிவுடையன வாதலின் 'செம்முகக் கார்வரை' எனப்பட்டது. தேர், கரி, பரி என்பதோடு காலாட்படை கூற வேண்டியிருக்க, அதனைக் கூறாது ஒட்டகப் படையைக் கூறியது கடற் கரை மணலில் நடக்க வல்லன வாதல் பற்றிப் போலும்.*

***6546. 'பேயனேன், என், பல பிதற்றி? பேர்த்து அவன்***
***மா இரு ஞாலத்து வைத்த மாப் படை***
***தேயினும், நாள் எலாம் தேய்க்கவேண்டுவது,***
***ஆயிர வெள்ளம் என்று அறிந்தது-ஆழியாய்!***

***ஆழியாய்*** - ஆணையாகிய சக்கரத்தை உடையவனே; ***பேயனேன்*** - பேய் போன்றவனாகிய நான்; ***என் பல பிதற்றி பேர்த்து*** - பலவும் திரும்பத்திரும்பக் கூறுவதால் என்ன பயன்?; ***அவன் மாயிரு ஞாலத்து*** - அந்த இராவணன் இப் பெரிய உலகத்திலே; ***வைத்த மாப்படை*** - நிறுத்தி வைத்துள்ள பெரியபடை; ***நாளெலாம் தேயினும்*** - உலகுள்ள நாள் வரை அழித்தாலும்; ***தேய்க்க வேண்டுவது*** - அழித்துக் கொண்டே இருக்க வேண்டியதாய் இருக்கும்; ***ஆயிர வெள்ளம் என்று அறிந்தது*** - எனத் தெரிந்தது ஆயிரம் வெள்ளம் அளவினதாகும்.

*வெள்ளம். ஒரு பெரிய அளவு; பதுமத்திலும் அதிகமானது. சக்கரவர்த்தி திருக்குமாரனாதலின் எங்கும் செல்லும் ஆணையுடைவன் என்பதால் 'ஆழியாய்' என்றான். சக்கரப் படையுடைய திருமால் என்ற நினைப்பிலே கூறியதுமாம். உலகமுள்ள நாளெலாம் அழித்தாலும் அழித்துக் கொண்டே இருக்கலாம் என்பதை 'நாளெலாம் தேயினும் தேய்க்க வேண்டுவது' என்றான்.*

*இராவணன் துணைவர் பெருமை*

***6547. 'இலங்கையின் அரண் இது; படையின் எண் இது;***
***வலங் கையில் வாள் சிவன் கொடுக்க வாங்கிய***

***அலங்கல் அம் தோளவன் துணைவர், அந்தம் இல்***
***வலங்களும் வரங்களும், தவத்தின் வாய்த்தவர்.***

***இலங்கையின் அரண் இது*** - *இலங்கை மதிலின் பெருமை இது;* ***படையின் எண் இது*** - *படைகளின் எண்ணிக்கை இது;* ***வலங்கையில் வாள்*** - *இராவணன் தனது வலது கையிலே தாங்கியுள்ளவாள்;* ***சிவன் கொடுக்க வாங்கிய*** - *சிவபிரான் தரப் பெற்றுக் கொண்ட;* ***அலங்கல் அம் தோளவன்*** - *வெற்றி மாலை சூடிய அழகிய தோள்களை உடைய இராவணனது;* ***துணைவர்*** - *தம்பிமார்கள்;* ***அந்தம் இல்வலங்களும்*** - *அழிவில்லாத வலிமைகளும்;* ***வரங்களும்*** - *பலவகையான வரங்களும்;* ***தவத்தின் வாய்த்தவர்*** - *தாம் செய்த தவ பலத்தாலே வாய்க்கப் பெற்றவராவர்.*

*தாம் செய்த தவ பலத்தாலே வாய்க்கப் பெற்றவராவர். சிவபிரான் தந்த 'சந்திரகாசம்' என்ற வாளை வலது கையில் கொண்டவன் என்று இராவணன் தவச் சிறப்பின் வழிவந்த வலிமையையும் குறிப்பிட்டான்.*

*கலித்துறை*

***6548. 'உகம் பல் காலமும் தவம் செய்து பெரு வரம்***
***உடையான்,***
***சுகம் பல் போர் அலால் வேறு இலன், பெரும் படைத்***
***தொகையான்,***
***நகம் பல் என்று இவை இல்லது ஓர் நரசிங்கம்***
***அனையான்.***
***அகம்பன் என்று உளன்; அலை கடல் பருகவும்***

***அமைவான்.*** ***உகம் பல் காலமும் தவம் செய்து*** - *பலயுகங்கள் தவம் செய்து;* ***பெருவரம் உடையான்*** - *பெரிய வரங்களைப் பெற்றிருப்பவனும்;* ***சுகம் பல்போரலால் வேறிலன்*** - *பல போர்களைச் செய்வதை விட வேறு இன்ப மில்லாதவனும்;* ***பெரும்படைத் தொகையான்*** - *பெரிய படையை உடையவனும்;* ***நகம் பல் என்றிவை இல்லதோர்*** - *நகம், பல் என்பவைகளைப் பெற்றிருக்காத ஒரு;* ***நரசிங்கம் அனையான்*** - *நரசிங்கத்தைப் போன்றவனும் ஆன;* ***அகம்பன் என்றுளன்*** - *'அகம்பன்' என்ற பெயர் கொண்ட ஒரு அரக்கர்தலைவன் உள்ளான்;* ***அலை கடல் பருகவும் அமைவான்*** - *அலைகளை உடைய கடல்நீர் முழுவதையும் குடிக்கவும் வல்லவன்.*

*அகம்பன் இராவணனுக்கு மாமன்முறைதான்.*

***6549. 'பொருப்பை மீதிடும் புரவியும், பூட்கையும், தேரும்,***
***உருப்ப விற் படை, ஒன்பது கோடியும் உடையான்,***

***செருப் பெய் வானிடைச் சினக் கடாய் கடாய் வந்து செறுத்த***
***நெருப்பை வென்றவன், நிகும்பன் என்று உளன், ஒரு நெடியோன்.***

***பொருப்பை மீதிடும்*** *- மலைகளையும் மீதிட்டுச் செல்லும்;* ***புரவியும் பூட்கையும் தேரும்*** *- குதிரைகளும், யானைகளும், தேர்களும்;* ***உருப்ப விற்படை*** *- சினம் மிக்க விற்படையினரான காலாட்படை வீரர்களும்;* ***ஒன்பது கோடியும் உடையான்*** *- ஒன்பது கோடியை உடையவனும்;* ***வானிடை செருப்பெய் சினக்கடாய்*** *- வானத்திலே போர்புரிந்த சினம்மிக்க ஆட்டுக் கடாவினை;* ***கடாய் வந்து செறுத்த*** *- வாகனமாகச் செலுத்தி வந்து போரிட்ட;* ***நெருப்பை வென்றவன்*** *- அக்கினி தேவனை வென்றவனும்;* ***நிகும்பன் என்று உளன் ஒரு நெடியோன்*** *- சிறந்த வீரனுமான நிகும்பன் என்பவனும் உள்ளான்.*

*இங்குக் கூறப்படும் நிகும்பனும், அடுத்த பாடலில் வரும் கும்பனும் கும்பகர்ணனுடைய பிள்ளைகள் என்று வான்மீகம் கூறும். மீதிடும் - தாண்டிச் செல்லும். உருப்ப - கோபம் கொண்ட கடாய் - செலுத்தி அக்கினி தேவனுக்கு ஆட்டுக்கடாவாகனம் என்பர். அந்த நெருப்புக் கடவுளையும் வென்றவன் நிகும்பன்.*

***6550. 'தும்பி ஈட்டமும் இரதமும், புரவியும், தொடர்ந்த***
***அம் பொன் மாப் படை ஐ-இரு கோடி கொண்டு அமைந்தான்,***
***செம் பொன் நாட்டு உள சித்தரைச் சிறையிடை வைத்தான்.***
***கும்பன் என்று உளன்; ஊழி வெங் கதிரினும் கொடியான்.***

***தும்பி ஈட்டமும், இரதமும் புரவியும்*** *- யானைக் கூட்டமும், தேர் குதிரை ஆகியவற்றுடன்;* ***தொடர்ந்த அம்பொன் மாப்படை*** *- சேர்ந்த அழகிய பொன் போன்ற அரிய பெரிய படை;* ***ஐயிரு கோடி கொண்டமைந்தான்*** *- பத்துக் கோடி பேரைக் கொண்டு அமைந்தவனும்;* ***செம்பொன் நாட்டுள சித்தரை*** *- செம்பொன் நாடாகிய தேவ உலகில் வாழும் சித்தர்களை;* ***சிறையிடை வைத்தான்*** *- போரில் வென்று சிறையிலே வைத்தவனுமான;* ***ஊழி வெங்கதிரினும் கொடியான்*** *- யுகாந்த காலத்துச் சூரியனை விடவும் கொடியவன்;* ***கும்பன் என்று உளன்*** *- கும்பன் என்பவனும் இருக்கிறான்.*

*தும்பி - யானை. செம்பொன் - சிவந்த பொன். பொன் நாடு- தேவர்கள் உலகம். சித்தர் என்பார் தேவர்களில் ஒருவகைப் பிரிவினராவர். சித்தர்களைவென்று சிறையில் வைத்தவன் கும்பன். 'ஊழிவெங்கதிர்" ஊழிக் காலத்தின் இறுதியில் உலகை அழிக்கத் தோன்றும் வெப்பம் மிக்க சூரியன். அந்தப் பரிதியை விடவும் கொடியவன் கும்பன் என்பது கருத்து.*

***6551. 'பேயை யாளியை யானையைக் கழுதையைப் பிணித்தது***
***ஆய தேர்ப் படை ஐ-இரு கோடி கொண்டு அமைந்தான்***
***தாயைஆயினும் சலித்திடு வஞ்சனை தவிரா***
***மாயையான் உளன், மகோதரன் என்று ஒரு மறவோன்.***

***பேயை யாளியை யானையை*** - *பேய்களையும், யாளிகளையும் யானைகளையும்;* ***கழுதையைப் பிணித்த தாய*** - *கழுதைகளையும் பூட்டியதாகிய;* ***தேர்ப்படை ஐயிரு கோடி கொண்டமைந்தான்*** - *தேர்ப்படைபத்துக் கோடியை யுடையவன்;* ***தாயை ஆயினும் சலித்திடு*** - *பெற்ற தாய் ஆனாலும் கலக்கம் செய்யவல்ல;* ***வஞ்சனை தவிரா மாயையான்*** - *வஞ்சம் நீங்காத மாயையை உடையவன்;* ***மகோதரன் என்று ஒரு மறவோன் உளன்*** - *மகோதரன் என்னும் பெயருடைய ஒரு வீரன் உள்ளான்.*

*வஞ்சிக்கத்தகாதவன் அன்னை; அத்தகைய தாயையும் வஞ்சிக்கத் தக்க மாயையில் தேர்ந்தவன் மகோதரன்; 'தாயையும்' என்பதன் உம்மை உயர்வு சிறப்பும்மை. யாவர்க்கும் தாயாகிய சீதாபிராட்டியிடம், மருத்தன் என்னும் அரக்கனை சனகன் வேடம்தாங்கி வரச் செய்து பிராட்டியை வஞ்சிக்க முற்பட்டதை நினைந்து 'தாயையாயினும் சலித்திடு வஞ்சன்' என்றார் போலும். அறத்துக்குப் புறம்பானது மறம் என்பதால் 'மறவோன்' என்ற சொல்லுக்குப் பாவி என்பதும் பொருந்தும்.*

***6552. 'குன்றில் வாழ்பவர் கோடி நால்-ஐந்தினுக்கு இறைவன்,***
***"இன்று உளார் பினை நாளை இலார்" என எயிற்றால்***
***தின்றுளான், நெடும் பல் முறை தேவரைச் செருவின்***
***வென்றுளான், உளன், வேள்வியின்பகைஞன், ஓர் வெய்யோன்.***

***குன்றில் வாழ்பவர்*** - *மலைகளிலே வாழும் அரக்கர்கள்;* ***கோடி நாலைந்தினுக் கிறைவன்*** - *இருபது கோடி பேருக்குத் தலைவனும்;* ***இன்றுளார் பினை நாளை இலாரென*** - *இன்று இருப்பவர்கள் பின்பு நாளைக்கு இருக்க மாட்டார்கள் என்னும்படி;* ***எயிற்றால் தின்றுளான்*** - *பற்களால் கடித்துத் தின்று தீர்க்க வல்லவனும்;* ***தேவரைச் செருவின்*** - *தேவர்களைப் போரிலே;* ***நெடும் பல்முறை வென்றுளான்*** - *பலமுறையும் வென்றவனும் ஆகிய;* ***வேள்வியின் பகைஞன்*** - *வேள்விப் பகைவன் என்ற பெயர் கொண்ட;* ***ஓர் வெய்யோன் உளன்*** - *ஒரு கொடியவன் இருக்கிறான்.*

*ஆங்காங்கு மலைகளிலே வாழ்கின்ற இருபது கோடி அரக்கர்களுக்குத் தலைவன். "இன்றிருப்பவர்கள் நாளைக்கு இல்லை" என்னும்படி எல்லோரையும் கொன்று தீர்க்கும் கொடியவன். தேவர்களைப் பலமுறை வென்றவன். 'வேள்விப் பகைஞன்' என்னும் கொடியவன். 'எக்ஞவிரோதி' என்ற வடமொழிப் பெயரின் தமிழ் வடிவம் இது. 'இன்றுளார் நாளை மாள்வர்' என்பதை இராவணன் கூற்றாகவும் (9125) கம்பர் கூறுவது கருதத்தக்கது 'நெடும் பல்முறை' என்பதற்கு 'பண்டு பல்முறை' என்பதொரு பாடம் உண்டு. அது பொருந்தும். எயிறு - பற்கள் நெடும் - நீண்ட வெய்யோன் - கொடியவன்.*

***6553. ' "மண் உளாரையும் வானில் உள்ளாரையும் வகுத்தால்,***
***உண்ணும் நாள் ஒரு நாளின்" என்று ஒளிர் படைத் தானை***
***எண்ணின் நால்-இரு கோடியன், எரி அஞ்ச விழிக்கும்***
***கண்ணினான், உளன், சூரியன்பகை என்று ஓர் கழலான்.***

***மண்ணுளாரையும் வானிலுள்ளாரையும்*** *- மண்ணுலகத்தில் உள்ளவர்களையும், விண்ணுலகத்தில் உள்ளவர்களையும்;* ***வகுத்தால் உண்ணும் நாள் ஒரு நாளின் என்று*** *- சேர்த்து வகைப்படுத்தி வைத்தால் அனைத்தையும் உண்ணும்நாள் ஒரு நாள் என்று கூறத்தக்க;* ***ஒளிர்படைத்தானை*** *- ஒளிவீசும் படைக்கலங்களை உடைய சேனை;* ***எண்ணின் நாலிரு கோடியன்*** *- எண்ணினால் எட்டிக் கோடி உடையவனாவான்;* ***எரிஅஞ்ச விழிக்கும் கண்ணினான்*** *- நெருப்பும் அஞ்சுமாறு விழிக்கும் கண்களை உடையவன்;* ***சூரியன் பகை என்றோர் கழலான் உளன்*** *- சூரியன் பகைஞன் என்ற பெயருடைய கழலணிந்த வீரன் ஒருவன் உள்ளான்.*

*பிறரை அஞ்சச் செய்யும் வெப்பத்தை உடையது நெருப்பு என்றால், அந்த நெருப்பும் அஞ்சும்படி விழிக்கும் கண்களை உடையவன் இந்தச் சூரியன் பகைஞன் (சூரிய விரோதி)*

***6554. 'தேவரும், தக்க முனிவரும், திசைமுகன் முதலா***
***மூவரும், பக்கம் நோக்கியே மொழிதர, முனிவான்,***
***தாவரும் பக்கம் எண்-இரு கோடியின் தலைவன்,***
***மாபெரும்பக்கன் என்று உளன், குன்றினும் வலியான்.***

**தேவரும் தக்க முனிவரும்** *- தேவர்களும், தகுதியுடைய முனிவர்களும்;* **திசைமுகன் முதலா மூவரும்** *- பிரமன் முதலான மும்மூர்த்திகளும்;* **பக்கம் நோக்கியே மொழிதர** *- (நேருக்கு நேராக*

*நின்று பேசுவதற்கு அஞ்சிப்) பக்கம் பார்த்தே பேசுமாறு;* ***முனிவான்*** *- கோபம் உடையவனும்;* ***தாவரும் பக்கம் எண் இரு கோடியின் தலைவன்*** *- மிகுந்த வலிமை கொண்ட சேனையின் பதினாலு கோடி பேருக்குத் தலைவனும்;* ***குன்றினும் வலியான்*** *- மலையை விட வலியவனுமான;* ***மாபெரும் பக்கன் என்றுளன்*** *- மாபெரும் பக்கன் என்னும் பெயருடைய ஒருவன் உள்ளான்.*

*தாவரும் - வலிமை மிக்க பக்கம் - சேனை. பெரும் பக்கன் படைத் தலைவர்களுள் முதன்மை வாய்ந்தவன்; அவனது வலிமையையும், தோற்றத்தையும் குறிப்பிட 'மலையினும் வலியன்' என்றான்.*

***6555. 'உச் சிரத்து எரி கதிர் என உருத்து எரி முகத்தன்,***
***நச் சிரப் படை நால்-இரு கோடிக்கு நாதன்,***
***முச் சிரத்து அயில் தலைவற்கும் வெலற்கு அரு***
***மொய்ம்பன்.***

***வச்சிரத்துஎயிற்றவன், உளன், கூற்றுவன் மாற்றான். உச்சிரத்து எரி கதிர் என*** *- தலைக்கு மேலே எரிகின்ற சூரியன் என்னும்படி;* ***உருத்து எரி முகத்தன்*** *- சினந்து எரியும் முகத்தை உடையவனும்;* ***நச்சிரப்படை நாலிரு கோடிக்கு நாதன்*** *- சிறந்த தலைமை வாய்ந்த எட்டுக் கோடி பேரைக் கொண்ட படைக்குத் தலைவனும்;* ***முச்சிரத்து அயில் தலைவற்கும்*** *- முக்கவட்டுச் சூலத்தைஉடைய சிவபிரானுக்கும்;* ***வெலற்கு அரு மொய்ம்பன்*** *- போரில் வெல்லுதற்கரிய வலிமை உடையவனும்;* ***கூற்றுவன் மாற்றான்*** *- எமனையும் எதிர்த்து நிற்கவல்ல பகைவனுமான;* ***வச்சிரத்தெயிற்றவன் உளன்*** *- வச்சிரதந்தன் என்னும் பெயர் கொண்டவன் இருக்கிறான்.*

*உச்சிரம் - தலைக்கு மேல் உச்சியில் எரிக்கும் சூரியன் வெப்பம் மிகுதியும் உடையவன். அந்தப் பரிதியை ஒத்து எரியும் முகத்தை உடையவன் என்பதை 'உருத்து எரி முகத்தன்' என்றார். முச்சிரம் - மூன்று கவடுகள். தலைவன் - சிவபிரான். 'கூற்றுவன் மாற்றான்' கூற்றுவனுக்குப் பகைவன். வச்சிரம் போன்ற பற்களை உடையவன் என்பதால் 'வச்சிரத்து எயிற்றவன்" என்றார் 'வச்சிரதந்தன்' என்பது பெயராகும்.*

***6556. 'அசஞ்சலப் படை ஐ-இரு கோடியன், அமரின்***
***வசம் செயாதவன், தான் அன்றிப் பிறர் இலா வலியான், இசைந்த***
***வெஞ் சமத்து இயக்கரை வேரொடும் முன்***
***நாள்***
***பிசைந்து மோந்தவன், பிசாசன் என்று உளன், ஒரு***
***பித்தன்.***

***அசஞ்சலப்படை ஐயிரு கோடியன்*** - *பகைவரைக் கண்டு நடுங்காத தன்மையினரான பத்துக் கோடி வீரர்களைக் கொண்ட படையை உடையவனும்;* ***அமரின் வசம் செயாதவன்*** - *போரில் வெல்லப்படாதவன்;* ***தானன்றிப் பிறர் இலாவலியன்*** - *தானேயல்லாது பிறர் எவருமில்லாத வலிமை உடையவனும்;* ***இசைந்த வெஞ்சமத்து*** - *தான் இசைந்து செய்த கொடிய போரில்;* ***இயக்கரை வேரொடும் முன்நாள் பிசைந்து மோந்தவன்*** - *இயக்கர்களை முன் ஒரு காலத்தில் வேருடன் அழியுமாறு கைகளால் பிசைந்து முகர்ந்து பார்த்தவனும்;* ***ஒரு பித்தன்*** - *போர் புரிவதே நோக்கமான பைத்தியம் பிடித்தவனுமான;* ***பிசாசன் என்று உளன்*** - *பிசாசன் என்பவன் உள்ளான்.*

*அசஞ்சலப்படை - பகைவரைக் கண்டு நடுங்காத சேனை. சஞ்சலம் என்ற சொல்லின் எதிர்ப்பதம் 'அசஞ்சலம்' என்பதாகும். பிறர் எவராலும் வெல்லப்படாதவன் என்பதால் 'வசம் செயாதவள்' என்றான். தான் பிறரை வெல்லவல்லவனே அல்லாது இவனை வெல்லவல்லார் பிறர் எவருமில்லை என்னும்படி வலிமை மிக்கவன் என்பதாம்.*

***6557. 'சில்லி மாப் பெருந் தேரொடும், கரி, பரி, சிறந்த***
***வில்லின் மாப் படை ஏழ்-இரு கோடிக்கு வேந்தன்,***
***கல்லி மாப் படி கலக்குவான், கனல் எனக் காந்திச்***
***சொல்லும் மாற்றத்தன், துன்முகன் என்று அறம்***
***துறந்தோன்.***

***சில்லிமாப் பெரும் தேரொடும்*** - *சக்கரத்தை உடைய பெரியதேர்ப் படையுடனே;* ***கரி, பரி, சிறந்த வில்லின் மாப்படை*** - *யானை, குதிரை, சிறந்த வில் வீரர்களையுடைய காலாட் படை என்ற;* ***ஏழ் இரு கோடிக்கு வேந்தன்*** - *பதினான்கு கோடிப் பேர் கொண்ட பெரும்படைக்குத் தலைவனும்;* ***கல்லி மாப்படி கலக்குவான்*** - *இந்தப் பெரிய பூமியையேதோண்டி எடுத்துக் கலங்கச் செய்பவனும்;* ***கனல் எனக் காந்திச் சொல்லும் மாற்றத்தன்*** - *தீயைப் போல்கனல் காந்தும்படி பேசும் பேச்சை உடையவனும்;* ***அறம் துறந்தோன்*** - *அறச் செயல்களை நீக்கியவனுமான;* ***துன்முகன் என்று*** - *துன்முகன் என்ற பெயருடைய ஒருவன் உள்ளான்.*

*சில்லி - தேர்ச் சக்கரம். இந்தப் பெரிய பூமியையும் தோண்டி, கலங்கச் செய்யும் வல்லமை பெற்றவன் என்பதால் 'கல்லி மாப்படை கலக்குவன்' என்றான். கனல் தெறிக்கப் பேசுபவன் என்பதைக் 'கனல் எனக்காந்திச் சொல்லும் மாற்றத்தன்' என்று குறித்தான்.*

***6558. 'இலங்கை நாட்டன்ன எறி கடல் தீவிடை உறையும்***
***அலங்கல் வேற் படை ஐ-இரு கோடிக்கும் அரசன்,***
***வலம் கொள் வாள் தொழில் விஞ்சையர் பெரும் புகழ்***

***மறைத்தான்,***
***விலங்குநாட்டத்தன் என்று உளன், வெயில் உக***
***விழிப்பான்.***

***இலங்கை நாட்டன்ன*** - *இலங்கை நாட்டைப் போன்று;* ***எரிகடல் தீவிடை உறையும்*** - *அலையெறியும் கடல் நடுவே அமைந்த தீவுகளிலே வாழ்கின்ற;* ***அலங்கல் வேற்படை*** - *மாலை சூடிய வேற்படை வீரர்கள்;* ***ஐயிரு கோடிக்கும் அரசன்*** - *பத்துக் கோடி பேருடைய படைக்குத் தலைவனும்;* ***வலம் கொள்வாள் தொழில்*** - *வலிமை மிக்க வாட்போரில் வல்ல;* ***விஞ்சையர் பெரும்புகழ் மறைத்தான்*** - *விஞ்சையரோடு போரிட்டு வென்று, அவர்களது புகழைமறையுமாறு செய்தவனும்;* ***வெயில் உக விழிப்பான்*** - *தீப்பொறி பறக்க விழிப்பவனும்;* ***விலங்கு நாட்டத்தன் என்று உளன்*** - *வீரூபாக்கன் என்ற பெயர் கொண்ட ஒருவன் உள்ளான்.*

*வாள் வேல் போன்றவைகளை மாலை சூட்டி அலங்கரிப்பதுண்டு. 'இவ்வே பீலியணிந்து மாலை சூட்டி' (புறம் 95) என்ற புறப்பாட்டாலும் இதை அறியலாம். விஞ்சையர் - தேவருள் ஒரு பிரிவினர் விலங்கு நாட்டத்தன் - விரூபாட்சன் என்பதன் தமிழ் ஆக்கமாகும்.*

***6559. 'நாமம் நாட்டிய சவம் எனின், நாள் என்றும் ஒருவர்***
***ஈம நாட்டிடை இடாமல், தன் எயிற்றிடை இடுவான்,***
***தாமம் நாட்டிய கொடிப் படைப் பதுமத்தின் தலைவன்,***
***தூமநாட்டத்தன் என்று உளன், தேவரைத் துரந்தான்.***

***நாமம் நாட்டிய சவம் எனின்*** - *பிறருக்கு அச்சத்தைத் தரும் வீரர்களின் பிணம் என்றால்;* ***நாள் என்றும் ஒருவர்*** - *அதனைச் சுடலைக்குக் கொண்டு செல்ல வேண்டிய நாளாயிற்றென்று ஒருவர்;* ***ஈம நாட்டிடை இடாமல்*** - *சுடுகாட்டிலே சென்று புதைக்க விடாமல்;* ***தன் எயிற்றிடை இடுவான்*** - *தன் வாயிலே பெய்து தின்பவனும்;* ***தாமம் நாட்டிய கொடிப் படை*** - *மாலை சூடி, கொடிகளை உடைய சேனை;* ***பதுமத்தின் தலைவன்*** - *பதுமம் என்ற அளவையுடையவற்றின் தலைவனும்;* ***தேவரைத் துரந்தான்*** - *தேவர்களைப் போரில் வென்று விரட்டியவனுமாய;* ***தூம நாட்டத்தன் என்றுளன்*** - *புகைக் கண்ணன் என்ற பெயருடைய ஒருவன் உள்ளான்.*

*ஈமநாடு - சுடுகாடு. தூமாட்சன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கமே; 'தூம நாட்டத்தன்' என்பது; புகைக்கண்ணன் எனலாம்.*

***6560. 'போரின் மத்தனும், பொரு வயமத்தனும், புலவர்***
***நீரின் மத்து எனும் பெருமையர்; நெடுங் கடற்***
***படையார்;***
***ஆரும் அத்தனை வலி உடையார் இலை; அவரால்***

***பேரும், அத்தனை எத்தனை உலகமும்; பெரியோய் !***

**பெரியோய்** - *பெருமைமிக்கவனே;* **போரின் மத்தனும் பொருவய மத்தனும்** - *போர்த் தொழில்வல்ல மத்தனும், போரில் வல்லவய மத்தனும் ஆகிய இருவரும்;* **புலவர் நீரின் மத்து எனும் பெருமையர்** - *தேவர்கள் பாற்கடலில் இட்ட மத்தாகிய மந்தரமலை என்று சொல்லும் பெருமை உடையவர்கள்;* **நெடுங் கடற்படையார்** - *நீண்ட பெரிய கடல் போன்ற படையை உடையவர்கள்;* **ஆரும் அத்தனை வலியுடையாரிலை** - *இவர்களுக்கு ஒப்பான வலிமை உடையவர்கள் யாருமே இல்லை;* **அவரால் அத்தனை எத்தனை உலகமும் பேரும்** - *இவர்களால் எத்தனை உலகங்கள் உண்டோ அத்தனையும் நிலை பெயர்ந்து கெட்டழிந்து போகும்.*

*'போரின் மத்தன், பொருவயமத்தன்' என்னுமிருவரும் இரட்டையர் போலும். பகைக்கடலைக் கலக்கும் மத்துப் போன்றவராதலின் இப் பெயர் பெற்றனர் போலும். புலவர் - தேவர்கள். நீர் - கடல் இங்கு பாற்கடலைக் குறித்தது. தேவர்களாகிய பாற்கடலைக் கடைந்து கலங்கச் செய்யும் மத்துப் போன்றவர் என்பது கருதத்தக்கது பேரும் நிலை பெயர்ந்து. பெருமை மலை போன்றதாகிய உடற் பெருமை என்பதால் 'பெருமையோர்' என்றான்.*

*சேனை காவலன் பிரகத்தன்*

***6561. 'இன்ன தன்மையர் எத்தனை ஆயிரர் என்கேன் -***
***அன்னவன் பெருந் துணைவராய், அமர்த் தொழிற்கு அமைந்தார்?***
***சொன்ன சொன்னவர் படைத் துணை இரட்டியின் தொகையான்.***
***பின்னை எண்ணுவான், பிரகத்தன் என்று ஒரு பித்தன்;***

**அன்னவன் பெருந்துணைவராய்** - *அந்த இராவணனுக்குப் பெரிதும் துணைநிற்பவராய்;* **அமர்த் தொழிற்கு அமைந்தார்** - *போர்த் தொழிலுக்கென அமைந்தவர்கள்;* **இன்ன தன்மையர்** - *இத்தகைய (முன்னர்க் கூறிய) ஆற்றல் மிக்கவர்;* **எத்தனை ஆயிரம் என்கேன்** - *எத்தனையாயிரம் பேருள்ளனர் எனக் கூறுவேன்;* **சொன்ன சொன்னவர் படை** - *முன்னே நான் சொன்னவர்களின் விவரித்துக் கூறிய படையினும்;* **துணை இரட்டியின் தொகையான்** - *இரண்டு மடங்கு எண்ணிக்கை உடையவனும்;* **பின்னை எண்ணுவான்** - *(எண்ணித்துணியாது) துணிந்த பின் எண்ணுபவனும் ஆன;* **பிரகத்தன் என்று ஒரு பித்தன்** - *பிரகத்தன் என்ற பெயருடைய ஒருவன் போரிடுவதில் பித்துடையவன் உள்ளான்.*

*இரட்டி - இரண்டு மடங்கு. எத்தனை ... என்கேன் - எவ்வளவு என்று சொல்வேன்? பெரும்படை உடையவன் என்பதால் தன்னம்பிக்கையால் முன்பு சிந்திக்காது*

*பின்பு நினைப்பவன், துணிந்தபின் எண்ணுபவன் என்றான். பிரகத்தன் என்பவன் இராவணனது படைத்தலைவன்; போர் புரிவதில் பித்துடையவன் என்பதால் 'ஒரு பித்தன்' என்றான்.*

***6562. 'சேனை காவலன்; இந்திரன் சிந்துரச் சென்னி***
***யானை கால் குலைந்து ஆழி ஓர் ஏழும் விட்டு அகல,***
***ஏனை வானவர் இருக்கை விட்டு இரியலுற்று அலைய,***
***சோனை மாரியின் சுடு கணை பல முறை துரந்தான்.***

***சேனை காவலன்*** *- இந்தப் பிரகத்தன் இராவணனுடைய சேனைக்குக் காவலன் ஆவான்;* ***இந்திரன் சிந்துரச் சென்னியானை*** *- தேவேந்திரனுடைய சிந்தூரம் அப்பிய மத்தகத்தை உடைய ஐராவதமானது;* ***கால்குலைந்து ஆழியோர் ஏழும் விட்டகல*** *- கால்கள் தடுமாறி ஏழுகடல்களையும் தாண்டிப் பயந்தோடவும்;* ***ஏனைவானவர்*** *- மற்றுமுள்ள தேவர்கள் அத்தனைபேரும்;* ***இருக்கைவிட்டு இரியலுற்று அலைய*** *- தங்கள் இருப்பிடங்களை விட்டு ஓடி அலைந்து திரியவும்;* ***சோனை மாரியின்*** *- விடாது பெய்யும் மழையைப் போல;* ***சுடுகணை பலமுறை துரந்தான்*** *- சுடுகின்ற அம்புகளைப் பலமுறையும் செலுத்தியவனாவான்.*

*சிந்துரச் சென்னியானை - சிந்தூரம் பூசிய மத்தகத்தை உடைய யானையாகிய ஐராவதம். என்ற வெள்ளையானை: யானைகளின் மத்தகத்தில் சிந்தூரம் அணிவிப்பது வழக்கம். இதனை 'சிந்தூரத் திலக நுதல் சிந்துரத்தின் மருப் பொசித்த செங்கண் மாலே' என்ற வில்லிபாரதத்தாலும் (கிருஷ்ணன் தூதுச் சருக்கம்) அறியலாம். குலைந்து தடுமாறி ஐராவதம் அஞ்சி ஓடியது என்பதால் இந்திரன் அஞ்சியகன்றது பெறப்படும். ஏனைவானவர். இந்திரனைத் தவிர, மற்றுமுள்ள தேவர்கள். சோனை மாரி - விடாது பெய்யும் மழை.*

*கும்பகருணன் வலிமை*

***6563. 'தம்பி, முற்பகல் சந்திரர் நால்வரின் தயங்கும்***
***கும்ப மாக் கிரிக் கோடு இரு கைகளால் கழற்றி***
***செம் பொன் மால் வரை மதம் பட்டதாம் எனத் திரிந்தான்.***
***கும்பகன்னன் என்று உளன், பண்டு தேவரைக் குமைத்தான்.***

***தம்பி*** - அந்த இராவணனுடைய தம்பி; ***முற்பகல் சந்திரர் நால்வரின் தயங்கும்*** - முதல் நாளைய பிறைச் சந்திரர் நால்வர் சேர்ந்தது போல விளங்கும்; ***கும்ப மாகிரிக் கோடு*** - மத்தககத்தையுடைய பெரிய மலை போன்ற யானையான ஐராவதத்தின் தந்தங்களை; ***இரு கைகளால் கழற்றி*** - தனது இரண்டு கைகளாலும் வாங்கி; ***செம்பொன் மால்வரை*** - செம்பொன் மலையான பெரியமேருமலை; ***மதம் பட்டதாமெனத் திரிந்தான்*** - மதம் கொண்டு அலைந்தது எனும்படி எங்கும் திரிந்தவன்; ***பண்டு தேவரைக் குமைத்தான்*** - முன்பு தேவர்களையெல்லாம் அடியோடு அழித்த; ***கும்பகன்னன் என்று உளன்*** - கும்பகன்னன் என்ற பெயருடைய வீரன் உள்ளான்.

*முற்பகல் அமாவாசைக்குப் பின் முதல் நாள், 'சந்திரர் நால்வர்' என்றது பிறைச் சந்திரர் நான்கு பேர் சேர்ந்தது போல விளங்கும் நான்கு தந்தங்களை. கும்பம் - மத்தகம். இந்திரனுடைய ஐராவதம். அந்த யானையின் தந்தங்களை எவ்வித முயற்சியுமின்றி சுலபமாகக் கைப்பற்றினான் என்பதைக் கழற்றி என்றான். 'மேருமலை மதம் கொண்டு திரிந்தது போலத் திரிந்தான்' என்பது இல் பொருள் உவமை குமைத்தல் - அழித்தல்.*

## *இராவணனது புதல்வர்களின் ஆற்றல்*

***6564. 'கோள் இரண்டையும் கொடுஞ் சிறை வைத்த அக் குமரன்***
***மூளும் வெஞ் சினத்து இந்திரசித்து என மொழிவான்;***
***ஆளும் இந்திரற்கு அன்னவன் பிணித்ததன் பின்னை.***
***தாளினும் உள, தோளினும் உள, இனம் தழும்பு.***

***கோள் இரண்டையும்*** - *(கோள்கள் ஒன்பதிலும் முதன்மை வாய்ந்த) சூரியன், சந்திரன் என்னும் இரண்டினையும்;* ***கொடுஞ் சிறைவைத்த அக்குமரன்*** - *கொடிய சிறையிலே வைத்த இராவணனது மகனான;* ***மூளும் வெஞ்சினத்து*** - *மூண்டெழும் கொடிய வெகுளியை உடைய;* ***'இந்திரசித்து' என மொழிவான்*** - *இந்திரசித்து எனக் கூறப்படுபவன்;* ***ஆளும் இந்திரற்கு*** - *விண்ணுலகத்தை ஆளும் தேவேந்திரனுக்கு;* ***அன்னவன் பிணித்ததன் பின்னை*** - *இந்திரசித்து அவனை வென்று கட்டிவைத்த பின்பு;* ***இனம் தழும்பு தாளினும் உள தோளினும் உள*** - *இந்திரனுடைய கால்களிலும் தோள்களிலும் இன்னும் தழும்புகள் உள்ளன.*

*இந்திரனுடன் போரிட்டு வென்றமையால் 'இந்திரசித்து' எனப் பெயர் கொண்டான் இராவணன் மகனான மேகநாதன். இரு கோள்களையும் சிறை வைத்த இராவணன் மகன் என்பதால் "சிறை வைத்தவன் குமரன்" என்ற பாடம் சிறந்தது என்பர் வை.மு.கோ. 'இரு கோளும் சிறைவைத்தாற்கு இளையேன்' என்ற சூர்ப்பனகையின் கூற்று இதற்குச் சான்றாகும். இந்திரனைப் பிணித்தமையால்*

*அவனுடைய தாளிலும், தோளிலும் தழும்பு இன்னும் மாறாமல் இருக்கிறது என இந்திரசித்தன் ஆற்றலைக் கூறுவான் 'சதமகனைத் தளையிட்டு' எனவும் 'இருகாலில் புரந்தரனை இருஞ்சிறையின் இடுவித்து' எனவும் சூர்ப்பனகையின் கூற்றில் வைத்து முன்பும் இந்திரனைப் பிணித்த செய்தியைக் கூறியுள்ளார் (கம்ப.2842, 2843)*

***6565. 'தன்னையும் தெறும் தருமம் என்று இறை மனம் தாழான்,***
***முன்னவன் தரப் பெற்றது ஓர் முழு வலிச் சிலையான்***
***அன்னவன்தனக்கு இளையவன், அப் பெயர் ஒழித்தான்***
***பின் ஓர் இந்திரன் இலாமையின்; பேர் அதிகாயன்.***

***தன்னையும் தெறும் தருமம் என்று*** *- அறத்துக்கு மாறாக நடப்பவர்களை அழிக்கும் அறக்கடவுள் தன்னையும் அழிக்கும் என்று;* ***இறை மனம் தாழான்*** *- சிறிதும் மனத்திலே கருதாமல் விரைந்து பாவச் செயல் புரிபவன்;* ***முன்னவன் தரப் பெற்றதோர்*** *- முன்னவனாகிய பிரமதேவன் தரப் பெற்றதாகிய ஒரு;* ***முழுவலிச் சிலையான்*** *- முழுமையான வலிமையை உடையவில்லை உடையவன்;* ***அன்னவன் தனக்கு இளையவன்*** *- அந்த இந்திரசித்துக்குத் தம்பி;* ***பின் ஓர் இந்திரன் இலாமையின்*** *- இந்திரசித்து வென்ற இந்திரனைத் தவிர வேறு ஒரு இந்திரன் இல்லாமையால்.* ***அப்பெயர் ஒழித்தான்*** *- அந்தப் பெயரை நீக்கினவனாய்;* ***பேர் அதிகாயன்*** *- அதிகாயன் என்னும் பெயர் கொண்டவனாய் உள்ளான்.*

*'முன்னவன்' - படைப்புத் தொழிலுக்குரியவன் என்பதாலும் இராவணன் குடிக்கு முதல் தலைவன். என்பதாலும் பிரமனை 'முன்னவன்' என்றான் "பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி" (கம்ப. 2770) என்ற சூர்ப்பணகை உரையாலும் பிரமாவின் வழிவந்தவன் இராவணன் என்பது புலனாகும்.*

***6566. 'தேவராந்தகன், நராந்தகன், திரிசிரா என்னும்***
***மூவர் ஆம்,-"தகை முதல்வர் ஆம் தலைவரும் முனையின்,***
***போவராம்; தகை அழிவராம்" எனத் தனிப் பொருவார்***
***ஆவராம்-தகை இராவணற்கு அரும் பெறல் புதல்வர்.***

**தேவராந்தகன், நராந்தகன் திரிசிரா என்னும் மூவராம்** - தேவராந்தகன், நராந்தகன் திரிசிரா என்ற மூவருடனும்; **தகை முதல்வராம் தலைவரும் முனையின் போவராம்** - தகைசிறந்த முதல் தலைவர்களான பிரமன், திருமால், சிவன் ஆகிய மூவரும் போரிட்டால் தோற்றுப்போவார்; **தகை அழிவராம்** - தமக்குரிய பெருமையை இழந்துவிடுவர்; **எனத் தனிப் பொருவா ராவராம்** - என்று உலகம் கூறுமாறு போரிட்டு வெல்லவல்ல; **தகை இராவணற்கு** - தகை சிறந்த இராவணனுக்கு; **அரும் பெரும் புதல்வர்** - (இந்திரசித்து, அதிகாயன் என்பவரைத்தவிர) அரிய, பெருமைமிக்க புத்திரர்களாவர்.

தேவர் அந்தகன் - தேவர்களுக்கு எமன், நர அந்தகன் - நரர்களுக்கு எமன். நரர் - மனிதர். திரிசிரா - மூன்று தலைகளை உடையவன். மும்மூர்த்திகளும் இவருடன் போரிட்டால் தோல்வியுற்றுத் தமது பெருமையை இழந்துவிடுவர் மூவராம், முதல்வராம், அழிவராம், ஆவராம் என, வந்த சொல்லே திரும்பி வந்து செய்யுளுக்கு இனிய ஓசை தந்தது கூறி மகிழ்தற்குரியது. இது சொற்பொருட்பின் வருநிலை அணியாகும். மும்மூர்த்திகளையும் வெல்ல வல்லவர் இம்மூவர் என்பது கருத்து.

*இராவணன் திறம்*

***6567. 'இனைய தன்மையர் வலி இஃது; இராவணன் என்னும்***
***அனையவன் திறம் யான் அறி அளவு எலாம் அறைவென்:***
***தனையன், நான்முகன் தகை மகன் சிறுவகு; தவத்தால்,***
***முனைவர் கோன் வரம், முக்கணான் வரத்தொடும் உயர்ந்தான்.***

**இனைய தன்மையர் வலி இஃது** - இராவணனது துணைவர், தம்பி, மக்கள் ஆகிய இத்தன்மையோர் வலிமை இது; **இராவணன் என்னும் அனையவன் திறம்** - இராவணன் என்ற பெயர் உடைய அவனது திறத்தை; **யானறி அளவெலாம் அறைவென்** - யான் அறிந்திருக்கும் அளவுக்கு எல்லாம் எடுத்துக் கூறுவேன்; **நான்முகன் தகைமகன் சிறுவற்குத் தனையன்** - பிரம தேவனது தகுதிமிக்க மகனான புலத்தியனுக்கு மகனான விச்சிரவசுவின் மகனாகும்; **தவத்தால்** - இராவணன் செய்த தவத்தினாலே; **முனைவர் கோன் வரம்** - அந்தணர் தலைவனான பிரமன் தந்தவரம்; **முக்கணான் வரத் தொடும் உயர்ந்தான்** - மூன்று கண்களை உடைய சிவபெருமான் தந்த வரம் இவைகளால் உயர்ந்தவனானான்.

பிரமனுக்கு மகன் புலத்தியன்; அவன் மகன் விச்சிரவசு; அவன் மகன் இராவணன். முனைவர் கோன் - அந்தணர் தலைவன் (நான்முகன்) பிரமன்

*தந்தவரம் முக்கோடி வாழ்நாள். முக்கணான் தந்த வரம் "யாராலும் வெலப்படாய் எனக் கொடுத்தவாள்" (சந்திரகாசம்)*

***6568. 'எள் இல் ஐம் பெரும் பூதமும் யாவையும் உடைய***
***புள்ளிமான் உரி ஆடையன் உமையொடும்***
***பொருந்தும்***
***வெள்ளி அம் பெருங் கிரியினை வேரொடும் வாங்கி,***
***அள்ளி விண் தொட எடுத்தனன், உலகு எலாம்***
***அனுங்க.***

***எள்இல் ஐம்பெரும் பூதமும்*** *- எவரும் சிறிதென இகழாத மண், நீர், கால், தீ என்ற ஐந்து பெரிய பூதங்களும்;* ***யாவையும் உடைய*** *- இவற்றின் வேறுபாட்டால் உண்டான பிற எல்லாப் பொருள்களையும் உடையவனாகிய;* ***புள்ளிமான் உரி ஆடையன்*** *- புள்ளிகளை உடைய புலியின் தோலை ஆடையாக அணிந்துள்ள சிவபிரான்;* ***உமையொடும் பொருந்தும்*** *- உமாதேவியுடன் தங்கியிருக்கும்;* ***வெள்ளி அம் பெருங் கிரியினை*** *- வெள்ளியங்கிரியாகிய பெரிய மலையினை;* ***வேரொடும் வாங்கி அள்ளி*** *- வேரோடு பேர்த்து அள்ளி;* ***உலகெலாம் அனுங்க*** *- எல்லா உலகங்களும் வருந்தும்படி;* ***விண் தொட எடுத்தனன்*** *- விண்ணைத் தொடும்படி எடுத்தவன்.*

*எள்ளில் - இகழ்தல் இல்லாத (சிறிதென்று எவரும் இகழ்ந்து கூறமுடியாத என்பது பொருள்). புள்ளி மான் இங்கே வேங்கைப் புலியைக் குறித்தது. தாருக வனத்து முனிவர்கள் வேள்வித் தீயில் உருவாக்கி ஏவிய புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாகக் கொண்டவர் சிவபிரான். அனுங்குதல் - வருந்துதல்.*

***6569. ஆன்ற எண் திசை உலகு எலாம் சுமக்கின்ற யானை***
***ஊன்று கோடு இற, திரள் புயத்து அழுத்திய***
***ஒண்மை***
***தோன்றும் என்னவே, துணுக்கமுற்று இரிவர்,***
***அத் தொகுதி***
***மூன்று கோடியின்மேல் ஒரு முப்பத்து மூவர்.***

***ஆன்ற எண் திசை*** *- விசாலமான எட்டுத் திசைகளிலும் நின்று;* ***உலகெலாம் சுமக்கின்ற யானை*** *- உலகத்தை எல்லாம் சுமக்கின்ற திக்கு யானைகளின்;* ***ஊன்று கோடு இற*** *- தனது மார்பில் ஊன்றிய தந்தங்கள் முறியும்படி;* ***திரள்புயத்து அழுத்திய ஒண்மை*** *- அதனைத்தன் திரண்ட தோள்களிலே அழுந்தச் செய்த மிக்க வலிமை;* ***தோன்றும் என்னவே*** *- காணப்படும் என்ற மாத்திரத்தில்;* ***அத்தொகுதி மூன்று கோடியின் மேல்*** *- தொகுதியான மூன்று கோடிக்கு மேல்;* ***ஒரு முப்பத்து மூவர்*** *-*

மூப்பத்து மூன்று பேராக இருக்கும் தேவர்கள்; **துணுக்கம் உற்று இரிவர்** - நடுங்கிக் கொண்டு விலகி ஓடுவார்கள்.

ஆன்ற - விசாலமான (நிறைந்த என்பதும் ஒரு பொருள்). ஒண்மை நிறைவு, ஒளி, மிகுதி என்ற பொருள் கொண்ட சொல் இங்கே வலிமை குறித்தது. திக்கு யானைகளுடன் போரிட்டு அவற்றின் முறிந்த தந்தங்களைத் தனது மார்புக்குக் கவசமாக அணிந்து கொண்டவன் இராவணன் என்பது உத்தர காண்டத்தில் கூறப்பட்டுள்ள செய்தி.

***6570. 'குலங்களோடும் தம் குல மணி முடியொடும் குறைய,***
***அலங்கல் வாள்கொடு காலகேயரைக் கொன்ற***
***அதன்பின்.***
***"இலங்கை வேந்தன்" என்று உரைத்தலும், இடி***
***உண்ட அரவின்***
***கலங்குமால் இனம், தானவர் தேவியர் கருப்பம்.***

**கால கேயரை** - இராவணன் கால கேயர்கள் என்னும் தானவர்களை; **குலங்களோடும்** - அவர்களின் குலமக்களோடு; **தம் குலமணிமுடியொடும் குறைய** - மணிகள் பதிக்கப் பெற்ற மகுடங்களோடு, தலை குறையும்படி; **அலங்கல் வாள் கொடு** - வெற்றிமாலை சூட்டியவாளைக் கொண்டு; **கொன்ற அதன் பின்** - கொன்ற அதற்குப் பிறகும்; **இலங்கை வேந்தன்** - இலங்காதிபன்; **என்று உரைத்தலும்** - என்று கூறக் கேட்ட அளவிலே; **தானவர் தேவியர் கருப்பம்** - தானவர்களது மனைவி மார்களின் கருப்பம்; **இடியுண்ட அரவின்** - இடியோசை கேட்டு அஞ்சும் பரம்பைப் போல; **இனம் கலங்குமால்** - இன்னும் கலங்கும்.

இராவணன் கால கேயரை வென்ற செய்தி கூறப்படுகிறது. குல மணி முடி - நல்ல சாதி மணிகளால் அலங்கரிக்கப்பட்ட மகுடம். குறைய - அழிய. 'கொன்ற அதன் பின்' என்பதற்கு கொன்று பல நாட்களாகிய அதன் பின் என்பது பொருள். கால கேயர் தானவர் ஆதலின் தானவர் தேவியர் இடி யோசை கேட்ட நாகம் போல அஞ்சி நடுங்க அந்த அச்சத்தால் அவர்கள் கருப்பம் கலங்கியது இனம் - இன்னும்.

***6571. 'குரண்டம் ஆடு நீர் அளகையின் ஒளித்து உறை***
***குபேரன்,***
***திரண்ட மாடும், தன் திருவொடு நிதியமும்,***
***இழந்து,-***
***புரண்டு, மான் திரள் புலி கண்டது ஆம் என,***
***போனான்-***
***இரண்டு மானமும், இலங்கை மா நகரமும் இழந்து.***

***குரண்டம் ஆடு நீர் அளகையின்*** - கொக்குகள் விளையாடித் திரியும் நீர் நிலைகளை உடைய அளகாபுரியில்; ***ஒளித்து உறை குபேரன்*** - இராவணனுக்கு அஞ்சி ஒளிந்து வாழ்ந்து கொண்டிருந்த குபேரன்; ***திரண்டமாடும் தன் திருவொடு நிதியமும் இழந்து*** - தனக்குரிய திரண்ட செல்வத்தையும் வெற்றித் திருமகளையும், சங்க நிதி, பதுமநிதி என்பவைகளையும் இராவணனிடம் இழந்து போய்; ***இரண்டு மானமும் இலங்கை மாநகரமும் இழந்து*** - தன் மானம், விமானம் என்று இரண்டு மானமும், இலங்கை மாநகரத்தையும் இழந்து; ***மான்திரள் புலிகண்டதாம் என*** - புலியைக் கண்ட மான் கூட்டம் அஞ்சி ஓடுவது போல; ***புரண்டு போனான்*** - இராவணனிடம் தோற்று புரண்டு ஓடிப் போயினான்.

*குரண்டம் - கொக்கு. அளகாபுரி குபேரனுடைய நகரம் நீர்நிலைகளில் கொக்குகள் விளையாடி மகிழும் என்பதை 'குரண்டம் ஆடு நீர் அளகை" என்றான். மாடு. செல்வம். நிதி. சங்க நிதி, பதும நிதி என்னுமிரண்டும் குபேரனுக்குரிய அளவற்ற செல்வமாம். தன் மானத்தையும் விமானத்தையும் இழந்து போனான் என்பதை 'இரண்டு மானமும் இழந்து' என்றான். இராவணன் குபேரனை வென்ற செய்தி இங்குக் கூறப்பட்டது.*

***6572. ' "புண்ணும் செய்தது முதுகு" என, புறங்கொடுத்து ஓடி,***
***"உண்ணும் செய்கை அத் தசமுகக் கூற்றம் தன் உயிர்மேல்***
***நண்ணும் செய்கையது" எனக் கொடு, நாள்தொறும், தன் நாள்***
***எண்ணும் செய்கையன், அந்தகன், தன் பதம் இழந்தான்.***

***உண்ணும் செய்கை அத் தசமுகக் கூற்றம்*** - உயிரை உண்ணும் படியான செயலை உடைய பத்து முகங்களை உடைய இராவணன் என்னும் கூற்றமானது; ***தன் உயிர் மேல் நண்ணும் செய்கையதெனக் கொடு*** - தன்னுயிரையும் கவர வருதல் செய்யும் என்றுஎண்ணி; புண்ணும் ***செய்தது முதுகு என*** - எனது முதுகையும் புண் செய்து விட்டது என்று; ***புறம் கொடுத்து ஓடி*** - புறமுதுகு காட்டி ஓடித் தப்பித்து; ***நாள் தொறும் தன்நாள் எண்ணும் செய்கையன்*** - தனது இறுதி நாளைப் பற்றி நாள் தோறும் நினைக்கும் செய்கையனாய்; ***அந்தகன் தன் பதம் இழந்தான்*** - எமன் தனது தென்திசைக் காவல் பதவியையும் இழந்தான்.

*எமனுக்கும் இறுதியைச் செய்யும் எமனாக இராவணன் விளங்கினான் என்பதால் "தசமுகக் கூற்றம்" என்றான். இராவணனால் அடியுண்டு புறம் காட்டி ஓடிய எமன் 'தசமுகக் கூற்றம் இனி வரும் நாள் நமது இறுதி நாள்' என்று நாட்களை எண்ணிக் கொண்டிருந்தான் என்பது செய்தி இராவணனால் உயிர்களைக் கொல்லும் தனது தொழிலை இழந்தான் என்பதால் 'அந்தகன் தன் பதம் இழந்தான்."*

*என்றான். தென்திசையில் இராவணன் வாழ்தலால், அங்குச் செல்ல அஞ்சிய அந்தகன் தென் திசைக் காவலை இழந்தான் எனவுமாம்.*

***6573. 'இருள் நன்கு ஆசு அற, எழு கதிரவன் நிற்க; என்றும்***
***அருணன் கண்களும் கண்டிலா இலங்கை, பண்டு***
***அமரில், பருணன்தன் பெரும் பாசமும் பறிப்புண்டு, பயத்தால்***
***வருணன் உய்ந்தனன், மகர நீர் வெள்ளத்து மறைந்து.***

***இருள் நன்கு ஆசற*** *- இருள் நன்றாக விலகும்படி;* ***எழு கதிரவன் நிற்க*** *- கீழ்த்திசையில் எழும் சூரியன் இருக்கட்டும்;* ***என்றும் அருணன் கண்களும்*** *- சூரியனுடைய தேரில் சாரதியாக முன்னால் அமர்ந்திருக்கும் அருணனது கண்களும் கூட;* ***கண்டிலா இலங்கை*** *- பார்த்திராதது இலங்கை நகர்;* ***பண்டு அமரில்*** *- முன்பு இராவணனுடன் செய்த போரிலே;* ***பருணன்தன் பெரும் பாசமும் பறிப்புண்டு*** *- திறமை உடையவன் என்றாலும் தனது படையாகிய பாசம் பறிக்கப்பட;* ***பயத்தால்*** *- இராவணனைப்பற்றிய அச்சத்தினாலே;* ***மகர நீர் வெள்ளத்து*** *- மகாமீன்களை உடைய கடல் நீரிலே;* ***மறைந்து வருணன் உய்ந்தனன்*** *- மறைந்து வருணன் தப்பிப் பிழைத்தான்.*

*இராவணன் வருணனை வென்றது கூறப்பட்டுள்ளது. இராவணனுடன் நிகழ்ந்த போரில் தோற்றுத் தனது படையான பாசத்தைப் பறி கொடுத்து விட்டுக் கடலில் சென்று மறைந்தான். வருணன் என்பது கருத்து. பருணன் - திறமுள்ளவன். ஆசற - சிறிதும் இல்லாதபடி.*

***6574. 'என்று உலப்புறச் சொல்லுகேன், இராவணன் என்னும்***
***குன்று உலப்பினும் உலப்பு இலாத் தோளினான் கொற்றம்?***
***இன்று உலப்பினும், நாளையே உலப்பினும், சில நாள்***
***சென்று உலப்பினும் நினக்கு அன்றி, பிறர்க்கு என்றும் தீரான்.***

***இராவணன் என்னும்*** *- இராவணன் என்ற பெயரை உடைய;* ***குன்று உலப்பினும்*** *- மலை அழிந்தாலும்;* ***உலப்பிலாத் தோளினான் கொற்றம்*** *- அதனுடன் மாறு கொண்டும் அழியாது தோள்களை உடையவனது வெற்றியை;* ***என்று உலப்புறச் சொல்லுகேன்*** *- என்று நான்முடிவாகச் சொல்லுவேன்;* ***இன்று உலப்பினும் நாளையே உலப்பினும்*** *- இராவணன் இன்று இறப்பான் ஆயினும், நாளையே*

*இறப்பானாயினும்;* ***சிலநாள் சென்று உலப்பினும்*** *- அல்லது இன்னும் சில நாட்கள் கழிந்த பின் இறந்தானாயினும்;* ***நினக்கு அன்றிப் பிறர்க்கு என்னும் தீரான்*** *- உனக்கு அல்லாமல் வேறு எவருக்கும் அழிந்து தீரான்.*

*இராவணன் மலையுடன் மோதியதால் மலை அழிந்ததேயன்றித் தோள்கள் அழியவில்லை என்பான் 'உலப்பிலாத் தோளினான்' என்றான். பிறர் எவராலும் அழிவில்லாத இராவணன் உன்னால் மட்டுமே கொல்லப்படுபவனாவான் என்பதை 'நினக்கு அன்றிப் பிறர்க்கு என்றும் தீரான்' என்றான். தீரான் - அழியான்.*

## *இலங்கையில் அனுமன் புரிந்த வீரச்செயல்கள்*

***கலித்துறை (வேறுவகை)***

***6575. 'ஈடு பட்டவர் எண்ணிலர் தோரணத்து, எழுவால்;***
***பாடு பட்டவர் படு கடல் மணலினும் பலரால்;***
***சூடு பட்டது, தொல் நகர்; அடு புலி துரந்த***
***ஆடு பட்டது பட்டனர்; அனுமனால் அரக்கர்.***

***தோரணத்து*** *- அசோக வனத்தின் வெளியே அமைந்த கட்டுவாயிலில்;* ***எழுவால் ஈடுபட்டவர் எண்ணிலர்*** *- அனுமானது இரும்புத் தடியால் வலிமை இழந்தவர் பல பேர்;* ***பாடுபட்டவர்*** *- அடிபட்டு அழிந்து போன அரக்கர்கள்;* ***படுகடல் மணலினும் பலரால்*** *- கடற்கரை மணலைவிட எண்ணற்றவராவார்;* ***தொல்நகர் சூடுபட்டது*** *- பழமையான இலங்கை மாநகரம் அனுமன் வைத்த தீயால் சூடுபட்டழிந்தது;* ***அனுமனால் அரக்கர்*** *- அனுமனுடைய வலிமையால் இலங்கை அரக்கர்கள்;* ***அடுபுலிதுரந்த ஆடுபட்டது பட்டனர்*** *- கொல்லவல்ல புலி துரத்த ஆட்டுக் கூட்டம் என்ன பாடுபடுமோ அந்தப் பாடுபட்டனர்.*

*தோரண கம்பத்திலே ஈடுபட்டவர் வலிமை இழந்தவர். பாடுபட்டவர் - துன்புற்றவர்கள். அனுமனால் விரட்டப்பட்ட அரக்கர்களுக்கு, புலியால் விரட்டப்பட்ட ஆடுகள் உவமையாகும்.*

***6576. எம் குலத்தவர், எண்பதினாயிரர், இறைவர்,***
***கிங்கரப் பெயர் கிரி அன்ன தோற்றத்தர், கிளர்ந்தார்;***
***வெங் கரத்தினும் காலினும் வாலினும் வீக்கி.***
***சங்கரற்கு அழி முப்புரத்தவர் எனச் சமைந்தார்.***

***எம் குலத்தவர் எண் பதினாயிரர்*** *- எமது அரக்கர் குலத்தில் பிறந்தவர்கள் எண்பதினாயிரம் பேர்களும்;* ***இறைவர்*** *- அவர்களுக்குத்தலைவர்களான;* ***கிங்கரப்***

***பெயர் கிரியன்ன தோற்றத்தர்*** - கிங்கார் என்னும் பெயருடைய மலை போன்ற தோற்றத்தவரும் ஆகி; ***கிளர்ந்தார்*** - அனுமனுடன் போரிடப் பொங்கி எழுந்தவர்களை; **வெங்கரத்தினும்** - அனுமான் தனது வலிய கைகளினாலும்; ***காலினும், வாலினும்*** - கால்களாலும் வாலினாலும்; ***வீக்கி*** - இறுகப் பிணித்தமையால்; ***சங்கரற்கு அழி*** - சிவ பெருமானாலே அழிந்துபோன; ***முப்புரத்தவர் எனச் சமைந்தார்*** - திரிபுரத்து அரக்கர்களைப் போல முடிந்தனர்.

*கிங்கார்களை அனுமன் கைகளாலும் கால்களாலும் வாலாலும் பிணித்து அழித்தான் என்க. சிவபிரானால் அழிந்த திரிபுரத்தவர் அனுமனால் அழிந்த கிங்கரருக்கு உவமையாம். சமைதல் - அழிதல்.*

***6577. 'வெம்பு மாக் கடற் சேனை கொண்டு எதிர் பொர வெகுண்டான்,***
***அம்பும் ஆயிரத்து ஆயிரம் இவன் புயத்து அழுத்தி.***
***உம்பர் வானகத்து ஒரு தனி நமனைச் சென்று உற்றான்.***
***சம்புமாலியும், வில்லினால் சுருக்குண்டு-தலைவ!***

***தலைவ*** - தலைவனே!; ***சம்பு மாலியும்*** - சம்புமாலி என்ற அரக்கர் தலைவனும்; **வெம்பும் மாக்கடல் சேனைகொண்டு** - சினம் மிக்க பெரியகடல் போன்ற படையைக் கொண்டு; **எதிர் பொர வெகுண்டான்** - அவனை எதிர்த்துப் போர் செய்யச் சினம் கொண்டு வந்தான்; **அம்பும் ஆயிரத்து ஆயிரம்** - ஆயிரம் ஆயிரம் அம்புகளை விட்டு; **இவன் புயத்து அழுத்தி** - இந்த அனுமன் புயத்திலே அழுந்தச் செய்து; **வில்லினால் சுருக்குண்டு** - அவன் கை வில்லினாலேயே அனுமனால் சுருக்கிடப்பட்டு; **உம்பர் வானத்து** - தேவர்கள் வாழும் விண்ணுலகுக்கு; **ஒருதனி நமனைச் சென்று உற்றான்** - தனி ஒருவனாக எமனைச் சென்று அடைந்தான்.

*வெம்பு - வெகுளும்.*

***6578. 'சேனைக் காவலர் ஓர் ஐவர் உளர், பண்டு தேவர்***
***வானைக் காவலும் மானமும் மாற்றிய மறவர்.***
***தானைக் கார்க் கருங் கடலொடும், தமரொடும், தாமும்,***
***யானைக் கால் பட்ட செல் என, ஒல்லையின் அவிந்தார்.***

***சேனைக்காவலர் ஓர் ஐவர் உளர்*** - இராவணனது சேனையின் காவலர் ஐந்து பேர் உள்ளனர் (பஞ்சசேனாதிபதிகள்); **பண்டு தேவர் வானை** - முன்பு தேவர்களின்

*வானுலகத்தை;* ***காவலும் மானமும் மாற்றிய மறவர்*** *- பாதுகாப்பையும், மானத்தையும் மாற்றியவீரர்கள்;* ***தானைக் கார்க் கரும் கடலொடும்*** *- படையாகிய கரிய பெரிய கடலுடனே;* ***தமரொடும் தாமும்*** *- தமது உறவினருடனே தாங்களும் (அனுமனுடன் போரிட வந்தவர்கள்);* ***யானைக் கால்பட்ட செல்என*** *- யானையினது கால்களில் மிதிபட்ட கறையானைப் போல;* ***ஒல்லையின் அவிந்தார்*** *- விரைந்து அழிந்து போயினர்.*

***6579. 'காய்த்த அக் கணத்து, அரக்கர்தம் உடல் உகு கறைத் தோல்,***
***நீத்த எக்கரின், நிறைந்துள கருங் கடல்; நெருப்பின்***
***வாய்த்த அக்கனை, வரி சிலை மலையொடும் வாங்கி,***
***தேய்த்த அக் குழம்பு உலர்ந்தில, இலங்கையின் தெருவில்.***

***காய்த்த அக்கணத்து*** *- (அனுமனை) சினமடையச் செய்த அந்தக் கணத்திலே;* ***அரக்கர்தம் உடல் உகு*** *- அந்த அரக்க வீரர்களின் உடலில் இருந்து சிந்தும்;* ***கறைத்தோல்*** *- இரத்தமும் அவர்களின் உடல் தோல்களும்;* ***நீத்த எக்கரின்*** *- கடற்கரையிலுள்ள மணல் திட்டுக்களைப் போல;* ***நிறைந்துள கருங்கடல்*** *- எங்கும் கரிய கடலாக நிறைந்துள்ளனவாயின்;* ***நெருப்பின் வாய்த்த அக்கனை*** *- நெருப்பென வெகுண்டு வந்த இராவணன் மகனான அட்சய குமாரனை;* ***வரி சிலை மலையொடும் வாங்கி*** *- கட்டமைந்த வில்லாகிய மலையோடு இழுத்து வாங்கி;* ***தேய்த்த அக்குழம்பு*** *- காலால் தேய்த்த அக்குழம்பு;* ***இலங்கையின் தெருவில் உலர்ந்தில*** *- இலங்கை வீதியிலே இன்னும் உலரவில்லை. "விண்ணொடு மண்காணத் தேய்த்தான்" என, இச்செய்தி சுந்தரகாண்டத்துள் (5705) கூறப்பட்டுள்ளது. 'எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது' (5721) என இந்திரசித்து வாய்மொழியாகவும் வரும். அட்சய குமாரனை உருத் தெரியாமல் தேய்ந்த அக்குழம்பு இலங்கை வீதியிலே இன்னும் உலராமல் இருக்கிறது என்பான் 'இலங்கையின் தெருவில் உலர்ந்தில' என்றான்.*

***6580. 'சொன்ன மா மதில் இலங்கையின் பரப்பினில் துகைத்துச்***
***சின்னம் ஆனவர் கணக்கு இலர்; யாவரே தெரிப்பார்?***
***இன்னம் ஆர் உளர், வீரர்? மற்று, இவன் சுட எரிந்த***
***அன்ன மா நகர் அவிந்தது, அக் குருதியால் அன்று.***

***சொன்னமாமதில்*** - ஏற்கனவே கூறியபடி அமைந்த பெரிய மதில்களால்; ***இலங்கையின் பரப்பினில்*** - இலங்கை நகரின் பரப்பினுள்; ***துகைத்துச் சின்னமானவர்*** - அனுமன் காலால் துகைக்கப்பட்டுச் சின்ன பின்னமான அரக்கர்; ***கணக்கிலர் யாவரே தெரிப்பார்*** - கணக்கற்றவர் என்பதையார் தெரிந்துரைக்கவல்லார்; ***இன்னம் யாருளர்வீரர்*** - இன்னும் இலங்கையிலே வீரர்கள் யாருள்ளனர்?; ***மற்று இவன் சுட எரிந்த*** - இந்த அனுமன் வைத்த தீயினால் எரிந்த; ***அன்ன மாநகர்*** - அந்தப் பெரிய இலங்கை நகரம்; ***அக்குருதியால் அவிந்தது*** - அனுமனால் சின்னமானவர்கள் சிந்திய இரத்தத்தால் அணைந்து போயிற்று.

*சொன்ன - ஏற்கனவே விவரித்துக் கூறிய சொன்ன - சொர்ணம் பொன்மதில் என்றுமாம் துகைத்து - காலால் மிதித்து 'மற்று' வினை மாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல். இலங்கையில் அனுமனால் கொல்லப் படாது தப்பியவரே இல்லை என்பது உயர்வு நவிற்சி.*

*இலங்கை எரிதலும் அதை அயன் படைத்தலும்*

***6581. 'விலங்கல் வெந்தவா வேறு இனி விளம்புவது எவனோ-***
***அலங்கல் மாலையும் சாந்தமும் அன்று தான் அணிந்த***
***கலங்களோடும், அச் சாத்திய துகிலொடும், கதிர் வாள்***
***இலங்கை வேந்தனும், ஏழு நாள் விசும்பிடை இருந்தான்!***

***அலங்கல் மாலையும் சாந்தமும்*** - அணிந்த மாலையும்; பூசிய சந்தனமும்; ***அச் சாத்தியதுகிலொடும்*** - அணிந்திருந்த அந்த ஆடையோடும்; ***கதிர்வாள் இலங்கை வேந்தனும்*** - ஒளிரும் வாளை உடைய இலங்கை வேந்தனான இராவணனும்; ***ஏழுநாள் விசும்பிடை இருந்தான்*** - ஏழுநாட்கள் வானிலேயே தங்கியிருந்தான் என்றால்; ***விலங்கல் வெந்தவா*** - இலங்கைக்கு ஆதாரமாயிருந்த திரிகூடமலை அனுமன் வைத்த தீயால் வெந்ததை; ***வேறுஇனி விளம்புவது எவனோ*** - இனித்தனியாக விளம்பவும் கூடுமோ?.

*சிவபிரான் தந்தவாள் இருந்தும் இலங்கையைத் தீக்கு இரையாக்கிய அனுமனை இராவணனால் எதுவும் செய்ய முடியவில்லை என்பதை 'கதிர்வாள் இலங்கை வேந்தன்' என்பதுணர்த்தும். கலம் - அணிகலம்.*

***6582. 'நொதுமல் திண் திறல் அரக்கனது இலங்கையை நுவன்றேன்;***

***அது மற்று அவ்வழி அரணமும் பெருமையும்***
***அறைந்தேன்:***
***இது மற்று அவ்வழி எய்தியது; இராவணன் ஏவ,***
***பதுமத்து அண்ணலே பண்டுபோல் அந் நகர்***
***படைத்தான்.***

***நொதுமல் திண் திறல் அரக்கனது*** *- வலிய, திண்ணிய, ஆற்றலை உடைய அரக்கனான இராவணனது;* ***இலங்கையை நுவன்றேன்*** *- இலங்கையின் வரலாறு பற்றிக் கூறினேன்;* ***அதுமற்றவ்வழி அரணமும்*** *- அதுவல்லாது இலங்கையின் மதிலைப் பற்றியும்;* ***பெருமையும் அறைந்தேன்*** *- இராவணனது பெருமையும் சொன்னேன்;* ***இது மற்றவ் வழி எய்தியது*** *- இந்த அனுமனது செய்தி அங்குநடந்தது (அதனையும் சொன்னேன்);* ***இராவணன் ஏவ*** *- இராவணன் கட்டளை இட;* ***பதுமத்து அண்ணலே*** *- தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவனே;* ***பண்டுபோல் அந்நகர் படைத்தான்*** *- முன்பு போலத் திகழும்படி அந்த நகரத்தைப் படைத்தான். நொதுமல் - வலிமை. இராவணது வலிமையும், திறமையும் தோன்ற 'நொதுமல் திண்திறல் அரக்கன்' என்றான். இலங்கையின் தோற்றம், அமைப்பு போன்றவற்றைக் கூறினேன் என்பதை 'இலங்கையை நுவன்றேன்' என்றான் 'இது' என்பது இந்த அனுமன் செயல். பதுமத்து அண்ணல் - தாமரையில் வீற்றிருக்கும் தலைவன் (பிரமன்)*

*வீடணன் தான் போந்த காரணம் கூறுதல்*

*6583.* ***'காந்தும் வாளியின் கரன் முதல் வீரரும், கவியின்***
***வேந்தும், என்று இவர் விளிந்தவா கேட்டு அன்று;***
***அவ் இலங்கை***
***தீந்தவா கண்டும், அரக்கரைச் செருவிடை முருக்கிப்***
***போந்தவா கண்டும், நான் இங்குப் புகுந்தது-***
***புகழோய்!'***

***புகழோய்*** *- புகழ்மிக்கவனே;* ***நான் இங்குப் புகுந்தது*** *- நான் உன்னைச் சரண்புகுந்து இங்கு வந்தது;* ***காந்தும் வாளியின்*** *- உனது எரிக்கும் அம்புகளால்;* ***கரன்முதல் வீரரும்*** *- கரனும் அவனுக்குத் துணையாக வந்த வீரர்களும்;* ***கவியின் வேந்தும்*** *- வானர சேனையின் அரசனான வாலியும்;* ***என்றிவர் விளிந்தவா கேட்டன்று*** *- ஆகிய இவர்களெல்லாம் மடிந்ததைக் கேட்டதனால் அல்ல;* ***அவ்விலங்கை தீந்தவா கண்டும்*** *- அந்த இலங்கை உன்னருள் பெற்ற அனுமன் ஒருவனாலே அழிந்தது கண்டும்;* ***அரக்கரைச் செருவிடை முருக்கிப் போந்தவா கண்டும்*** *- இலங்கை அரக்கர்களை எல்லாம் போரிலே அனுமன் அழித்துத் திரும்பி வந்ததை நேரில் கண்டதாலுமேயாம்.*

*இராமபிரான் தனது பண்பாலும் செயலாலும் புகழுக்கு உரியவனாகத் திகழ்வதால் 'புகழோய்' என வீடணன் அழைத்தான். காந்துதல் - எரித்தல் ஒளிர்தலுமாம்.*

*இராமன் அனுமனைப் புகழ்ந்துரைத்தல்*

***6584. கேள் கொள் மேலையான் கிளத்திய பொருள் எலாம் கேட்டான்,***
***வாள் கொள் நோக்கியை, பாக்கியம் பழுத்தன்ன மயிலை,***
***நாள்கள் சாலவும் நீங்கலின், நலம் கெட மெலிந்த***
***தோள்கள் வீங்கி, தன் தூதனைப் பார்த்து, இவை சொன்னான்:***

***கேள் கொள் மேலையான்*** *- தன்னுடன் நட்புக்கொண்ட வீடணன்;* ***கிளத்திய பொருள் எலாம் கேட்டான்*** *- கூறிய பொருள்களை எல்லாம் கேட்ட இராமபிரான்;* ***வாள் கொள் நோக்கியை*** *- வாள் போன்ற கண்களை உடையவளும்;* ***பாக்கியம் பழுத்தன்ன மயிலை*** *- புண்ணியம் பழுத்துப் பயன் தந்தது போன்ற மயிலைப் போன்றவரும் ஆகிய சீதாபிராட்டியை;* ***நாள்கள் சாலவும் நீங்கலின்*** *- பல நாட்கள் பிரிந்தமையால்;* ***நலம் கெட மெலிந்த தோள்கள் வீங்கி*** *- அழகு கெட மெலிந்து போன தோள்கள் வீங்கி;* ***தன் தூதனைப் பார்த்து இவை சொன்னான்*** *- தன் தூதனான அனுமானைப் பார்த்துப் பின்வருமாறு கூறலானான்.*

*கேள்- நட்பு. மேலையான்- வீடணன்; மேன்மையுடையவன் (மேலோன்); பொருள் - கருத்து. புண்ணியத்தின் பயனை 'புண்ணியம் பழுத்தன்ன' என்றான். தோள்கள் பிராட்டியின் பிரிவினால் அழகு கெட்டு மெலிந்திருந்தன வாதலின் 'நலம் கெடமெலிந்த தோள்கள்" என்றார். அனுமன் செயல் கேட்டுப் பூரித்த தோள்களை' வீங்கி என்றார் வீங்குதல் - பருத்துப் பூரித்தல்.*

***6585. 'கூட்டினார் படை பாகத்தின் மேற்படக் கொன்றாய்;***
***ஊட்டினாய், எரி ஊர் முற்றும்; இனி, அங்கு ஒன்று உண்டோ?***
***கேட்ட ஆற்றினால், கிளிமொழிச் சீதையைக் கிடைத்தும்***
***மீட்டிலாதது, என் வில் தொழில் காட்டவோ?-வீர!***

***வீர*** *- வீரம் மிக்கவனே!;* ***கூட்டினார் படை பாகத்தின் மேற்படக் கொன்றாய்*** *- இலங்கையில் இராவணன் கூட்டிவைத்திருந்த படையில் பாதிக்கு மேல் நீயே*

*கொன்று தீர்த்தாய்;* ***எரி ஊர் முழுதும் ஊட்டினாய்*** *- இலங்கை நகர் முழுவதும் தீமூட்டி அழியச் செய்தாய்;* ***இனி, அங்கு ஒன்று உண்டோ*** *- இனி அங்கு நான் செய்ய வேண்டியது ஏதேனும் ஒன்று உள்ளதோ?;* ***கேட்ட ஆற்றினால்*** *- வீடணன் கூறக் கேட்ட செய்திகளால்;* ***கிளிமொழிச் சீதையை*** *- கிளி போன்ற மொழிகளை உடைய சீதா தேவியை;* ***கிடைத்தும் மீட்டிலாதது*** *- நேரில் பார்க்கக் கிடைத்தும் கூட நீ மீட்டு வராதது;* ***என் வில் தொழில் காட்டவோ*** *- நான் எனது வில்லாற்றலைக் காட்ட வேண்டும் என்பதற்காகவோ?*

*கூட்டினார் - திரட்டி வைத்தவர்கள். பாகம் - பாதி. மேற்பட - மேலாக. சீதையை நேரில் காணக் கிடைத்தும் பேராற்றல் உள்ள நீ மீட்டுவரக்கூடிய வலிமை இருந்தும், மீட்டு வராதது என் வில்தொழில் காட்டவோ என இராமபிரான் அனுமனைப் புகழ்ந்தான். கிளி மொழி - உவமைத் தொகை.*

***6586. 'நின் செய் தோள் வலி நிரம்பிய இலங்கையை நேர்ந்தோம்;***
***பின் செய்தோம் சில; அவை இனிப் பீடு ஒன்று பெறுமோ?-***
***பொன் செய் தோளினாய் !-போர்ப் பெரும் படையொடும் புக்கோம்;***
***என் செய்தோம் என்று பெரும் புகழ் எய்துவான் இருந்தோம்?***

***பொன் செய் தோளினாய்*** *- பொன்னாலமைந்தது போன்ற தோள்களை உடையவனே;* ***நின் செய் தோள் வலி நிரம்பிய*** *- உனது தோள்கள் புரிந்த ஆற்றலே எங்கும் நிறைந்துள்ள;* ***இலங்கையை நேர்ந்தோம்*** *- இலங்கையை நாங்கள் அடைந்தோம்;* ***பின் செய்தோம் சில*** *- எங்கள் வலிமையைக் காட்டி பின் சில போர்கள் செய்தோம்;* ***அவை இனிப் பீடு ஒன்று பெறுமோ*** *- அப்படி நாங்கள் செய்யும் போர் முதலிய வீரச் செயல்கள் ஒரு பெருமை பெறுமோ?;* ***போர்ப் பெரும் படையொடும் புக்கோம்*** *- போர்த் தொழில் வல்ல பெரும்படையுடன் நாங்கள் புகுந்துள்ளோம்;* ***என் செய்தோம் என்று*** *- என்ன பெரிய செயலைச் செய்து விட்டோம் என்று;* ***பெரும்புகழ் எய்துவான் இருந்தோம்*** *- பெரிய புகழ் அடைய இருந்தோம்.*

*கிடைத்தற்கரியது பொன்; பெருமைக்குரிய அனுமன் தோள்களை 'பொன் செய்தோள்' என்றார். இலங்கையில் எல்லா இடங்களிலும் அனுமானது தோளாற்றலைப் பற்றிய பேச்சாகவே இருப்பதால் 'நின் செய்தோள் வலி நிரம்பிய இலங்கை' என்றார். உனக்குப் பின் சென்று நாங்கள் என்ன பெருமை அடையப் போகிறோம் என்பதை 'இனிப் பீடு ஒன்று பெறுமோ' என்றார்; இனி நாங்கள் எதைச் செய்து புகழ் எய்த இருக்கிறோம் என அனுமனைப் புகழ்ந்தான் என்பது கருத்து.*

***6587. 'என்னது ஆக்கிய வலியொடு அவ் இராவணன் வலியும்***
***உன்னது ஆக்கினை; பாக்கியம் உருக் கொண்டது***

***ஒப்பாய்!***
***முன்னது ஆக்கிய மூஉலகு ஆக்கிய முதலோன்***
***பின்னது ஆக்கிய பதம் நினக்கு ஆக்கினென்;***
***பெற்றாய்.'***

***பாக்கியம் உருக் கொண்டது ஒப்பாய்*** - புண்ணியமே வடிவு கொண்டது போன்றவனே; ***என்னது ஆக்கியவலியொடு*** - எனக்கே உரியதான வலிமையோடு; ***அவ்விராவணன் வலியும்*** - அந்த இராவணனது வலிமையையும்; ***உன்னது ஆக்கினை*** - உனக்கே உரியது ஆக்கிக் கொண்டாய்; ***முன்னது ஆக்கிய மூவுலகு*** - முன்னால் படைக்கப்பட்ட மூன்றுலகங்களையும்; ***ஆக்கிய முதலோன்*** - படைத்த பிரமதேவனுக்காக; ***பின்னது ஆக்கிய பெரும் பதம்*** - ஏற்பட்ட பதவியாகிய பிரமபதத்தை; ***நின்னது ஆக்கினென் பெற்றாய்*** - உனக்கு உரியதாக்கினேன்; பெற்று உயர்வாயாக.

*கரன், திரிசிரா போன்றவர்களை வெற்றிகொண்ட இராமபிரானது வலிமையை 'என்ன தாக்கிய வலி' என்றார். கைலையை எடுத்தது, திக்கு யானைகளை வென்றது போன்ற இராவணனது பலத்தை 'அவ் விராவணன் வலிமையும்' என்றார். இலங்கையைத் தீக்கிரையாக்கியது மற்றும் போர் வென்றது போன்ற அனுமனது வலிமையை 'உன்னதாக்கினை' என்றார். மூவுலகங்களையும் படைத்த முதல்வன் பிரமன். அவனுக்குரிய பதவி பிரமபதம்; அதனை உனக்குத் தந்தேன் பெறுவது உறுதி என்பதால் 'பெற்றாய்' என இறந்த காலத்தால் கூறினார்.*

***6588. என்று கூறலும், எழுந்து, இரு நிலன் உற இறைஞ்சி,***
***ஒன்றும் பேசலன் நாணினன், வணங்கிய உரவோன்;***
***நின்ற வானரத் தலைவரும் அரசும், அந் நெடியோன்***
***வென்றி கேட்டலும், வீடு பெற்றார் என வியந்தார்.***

***என்று கூறலும்*** - என்று இராமபிரான் கூறியதும்; ***எழுந்து, நிலன்உற இறைஞ்சி*** - அனுமன், எழுந்து, நிலத்தோடு படும் படி கீழே வீழ்ந்து இராமனை வணங்கி; ***ஒன்றும் பேசலன்*** -ஒன்றுமே பேசாதவனாக; ***நாணினன் வணங்கிய உரவோன்*** - தன்னை இராமன் புகழ்வதற்கு நாணப்பட்டவனாய் வலிமைமிக்கவனான அனுமன் மீண்டு வணங்குவானானான்; ***நின்ற வானரத் தலைவரும் அரசும்*** - அங்கு நின்ற மற்றை வானரப்படைத் தலைவர்களும் சுக்கிரீவனும்; ***அந் நெடியோன் வென்றி கேட்டதும்*** - அந்த நெடியவனாகிய அனுமானது வெற்றியை வீடணன் கூறக் கேட்டதும்; ***வீடு பெற்றார் எனவியந்தார்*** - வீட்டின்பத்தைப் பெற்றவர்களைப் போல வியந்து நின்றனர்.

*'நிலன் உற இறைஞ்சி' நெடுஞ்சாண் கிடையாகத் தரையிலே வீழ்ந்து வணங்கி, 'அஷ்டாங்க நமஸ்காரம்' எட்டு உறுப்புக்களும் தரையிலேபடத் தெய்வத்தையும், சான்றோர்களையும் வணங்க வேண்டும் என்பர். இராமபிரானது புகழ் மொழிகளைக்*

கேட்டு வெட்கமுற்றான் ஆதலின் 'நாணினன்' என்றார் 'தம் புகழ் கேட்டார் போல் தலை சாய்த்து மரம் துஞ்ச' என்ற கலித் தொகை (கலி 119) நினைவு கூரத்தக்கது - 'உரவு' அறிவின் திண்மையை உணர்த்தும்; அத்தகைய திண்மை உடையவன் ஆதல் பற்றி அனுமனை 'உரவோன்' என்றார் 'நெடியோன்' என்றது, கடலைத் தாண்டியது, அரக்கர்களை அழித்தது, இலங்கை நகரை எரித்தது போன்ற செயல்களை எண்ணிக் கூறியதாகும். வீடு பேறடைந்தார் அந்தப் பேரின்பத்தினை எண்ணி வியத்தல் போல் அனுமன் வெற்றியைக் கேட்டு வானரத்தலைவர்களும், வானர வேந்தனான சுக்ரீவனும் வியந்தனர் என்பது கருத்து.

## வருணனை வழி வேண்டு படலம்

இராமபிரான் கடலைக் கடந்து இலங்கை செல்வதற்குரிய வழிபற்றி - வீடணனுடன் சிந்திக்கலானான். கடலரசனான வருணனை வழி வேண்டினால் தருவான் என வீடணன் கூறியபடி, வருண மந்திரம் ஜெபித்திருந்ததும், அதற்கு வருணன் வாராமையால் இராமபிரான் சினம் கொண்டு கடலின் மேல் அம்பு விடுதலும், அதனால் கடல் பட்டபாடும் இராமபிரான் பிரம்மாத்திரம் ஏவ, அதனால் நிகழ்ந்த மாறுபாடுகளும் வருணன் தோன்றிப் பணிவுரை பகர்தலும் இராமபிரானை வருணன் அடைக்கலம் வேண்டுதலும் இராமபிரான் சினம் தணிந்து காலந்தாழ்த்தமைக்குக் காரணம் கேட்டறிதலும் அம்புக்கு இலக்கு யாதெனக் கேட்க வருணன் கூறுதலும் இராமன் அம்பு அவுணர்களை அழித்தலும் இராமபிரான் வழி வேண்ட, வருணன் சேதுகட்டச் சொல்லுதலும் இராமபிரான் சேது கட்டப் பணித்தலும் இப்படலத்துள் கூறப்படும் செய்திகளாகும்.

### *கடல் கடக்க இராமன் வழி கேட்டல்*

***6589. 'தொடக்கும் என்னில் இவ் உலகு ஒரு மூன்றையும் தோளால்
அடக்கும் வண்ணமும், அழித்தலும், ஒரு பொருள் அன்றால்;
கிடக்கும் வண்ண வெங் கடலினைக் கிளர் பெருஞ் சேனை
கடக்கும் வண்ணமும் எண்ணுதி-எண்ணு நூல் கற்றாய்!'***

***எண்ணுநூல்கற்றாய்*** - மதிக்கத்தக்க நல்ல நூல்களைக் கற்றுணர்ந்தவனே! **தொடக்கும் என்னில்** - இந்தக் கடல் நமது கட்டுக்கு உட்படுமானால்; **இவ்வுலகு ஒரு மூன்றையும்** - இந்த மூன்று உலகங்களையும்; **தோளால் அடக்கும் வண்ணமும்** - நமது தோள்களாலே அடக்கும் வண்ணமும்; **அழித்தலும் ஒரு பொருள் அன்றால்** - அழிப்பதும் ஒரு பொருட்டல்ல; **கிடக்கும் வண்ண வெங்கடலினை** - எதிரே பரந்து கிடக்கின்ற நீலநிறமுள்ள இந்தக் கொடியகடலை; **கிளர் பெருஞ்சேனை** - கிளர்ந்து எழும் நமது பெரிய சேனை; **கடக்கும் வண்ணமும் எண்ணுதி** - கடந்து இலங்கை செல்வதற்குரிய வழியைப் பற்றி நினைப்பாயாக.

பலநூல்களைக் கற்றுணர்ந்தவன் என்பதால் வீடணனை 'எண்ணும் நூல் கற்றாய்' என இராமன் அழைத்தான். கடல் நமக்குக் கட்டுப்பட்டுவிட்டால் மூவுலகத்தையும் அழிப்பது பொருட்டல்ல. எனவே, நமது படை இந்தப் பெரிய கடலைக் கடப்பதற்குரிய வழியைச் சிந்திப்பாயாக என்பான் 'கடக்கும் வண்ணமும் எண்ணுதி' என்றான் இதனை வீடணன் கூற்றாகக் கொண்டு பொருள் செய்வாரும் உளர். அளவிலா நூல் கற்றவனே என இராமனை விளித்து இந்தக் கடலைக் கட்டுப்படுத்திவிட்டால் இராக்கதரை வெல்லுதல் ஒரு பொருட்டன்று; எனவே, கடலைக் கடக்கும் வழிபற்றிச் சிந்திப்பாயாக' என்று வீடணன் கூறியதாகப் பொருள் கொள்வர்.

*வீடணன் கடல் கடக்க வழி கூறுதல்*

***6590. 'கரந்து நின்ற நின் தன்மையை, அது, செலக்
கருதும்;
பரந்தது, உன் திருக் குல முதல் தலைவரால்;
பரிவாய்
வரம் தரும், இந்த மாக் கடல்; படை செல, வழி
வேறு
இரந்து வேண்டுதி, எறி திரைப் பரவையை' என்றான்.***

***இந்த மாக்கடல்*** - *நமக்கெதிரே உள்ள இந்தப் பெரிய கடல்;* ***உன் திருக்குல முதல் தலைவரால் பரந்தது*** - *உனது சிறந்த குலமான சூரிய குலத்திலே தோன்றிய முதல் தலைவரான சகரர்களால் தோண்டப்பட்டுப் பரந்திருப்பதாகும்;* ***கரந்து நின்ற நின்தன்மையை*** - *தெய்வ வடிவை மறைத்து மானிட வடிவம் கொண்டு நின்ற உனது தன்மையை;* ***அது செலக்கருதும்*** - *அக்கடல் தெய்வம் முழுதும் கடைபோக அறியும்;* ***பரிவாய் வரும் தரும்*** - *நமக்குப் பரிவுடனே வரம் அளிக்கும் எனவே;* ***படை செல வழி*** - *நமது படை கடலைக் கடந்து செல்வதற்குரிய வழியை;* ***எறிதிரைப் பரவையை*** - *பொங்கும் அலைகளை உடைய இந்தக் கடலை;* ***வேறு இரந்து வேண்டுதி என்றான்*** - *தனியே இருந்து, சரணடைந்து இரந்து வேண்டிக் கொள்வாயாக என்றான். குலமுதல்தலைவர். சகரர். சகரர்கள் தோண்டியதால் 'சாகரம்' எனப் பெயர் பெற்றது என்பர். கடல் தெய்வத்தைப் பிரார்த்திப்பதற்குத் தனியே இருந்து வேண்டவேண்டுமாதலின் 'வேறு இரந்து வேண்டுதி' என்றான்.*

*இராமன் கடற்கரையை அடைதல்*

***6591. 'நன்று, இலங்கையர் நாயகன் மொழி' என
நயந்தான்,
ஒன்று தன் பெருந் துணைவரும் புடை செல,
உரவோன்,
சென்று வேலையைச் சேர்தலும், விசும்பிடை, சிவந்த
குன்றின் மேல்நின்று குதித்தன, பகலவன் குதிரை.***

***நன்று இலங்கையர் நாயகன் மொழி*** - *இலங்கையர் வேந்தனான வீடணன் கூறிய மொழி நல்லதே;* ***என நயந்தான்*** - *என்று விரும்பி உடன்பட்ட இராமபிரான்;* ***ஒன்றுதன் பெரும் துணைவரும்*** - *நெருங்கியதனது சிறந்த துணைவர்களும்; புடைசெல - இருபக்கமும் நெருங்கிவர;* ***உரவோன் சென்று வேலையைச் சேர்தலும்*** - *வலிமை மிக்கவனாகிய இராமபிரான் கடற்கரையை அடைதலும்;* ***சிவந்த குன்றின்***

**மேல்** நின்று - சிவந்த நிறம் வாய்ந்த உதயகிரியின் மேலிருந்து; **பகலவன் குதிரை** - சூரியனுடைய தேரிலே பூட்டப்பட்ட குதிரைகள்; **விசும்பிடைக் குதித்தன** - வானத்திலே குதித்துச் செல்வனவாயின.

'உரவோன்; அறிவுத்திண்மையுடையவன் - என இராமனைக் குறிப்பிட்டார். சூரியோதயத்தாலே கீழ்த்திசையிலுள்ள உதயகிரி சிவந்திருந்ததாதலின் 'சிவந்த குன்றின் மேல்' என்றார்.

*இராமன் புல்லில் அமர்ந்து, வருண மந்திரத்தைத் தியானித்தல்*

***6592. கொழுங் கதிர்ப் பகைக் கோள் இருள் நீங்கிய கொள்கை,***
***செழுஞ் சுடர்ப் பனிக் கலை எலாம் நிரம்பிய திங்கள்***
***புழுங்கு வெஞ் சினத்து அஞ்சனப் பொறி வரி அரவம்***
***விழுங்கி நீங்கியது ஒத்தது, வேலை சூழ் ஞாலம்.***

**வேலை சூழ் ஞாலம்** - கடல் சூழ்ந்த இந்த உலகமானது; **கொழுங்கதிர்ப்பகை** - செழுமைமிக்க சூரியனுடைய கிரணங்களுக்குப் பகையாகிய; **கோளிருள் நீங்கிய கொள்கை** - (இரவெல்லாம்) நிறைந்திருந்த இருள்நீங்கிய தன்மை; **செழுஞ்சுடர் பனிக் கலைஎலாம்** - செழுமையான ஒளியை உடைய குளிர்ந்த எல்லாக்கலைகளும்; **நிரம்பியதிங்கள்** - நிறைந்திருக்கும் சந்திரனை; **புழுங்கு வெஞ்சினத்து** - மனம் புழுங்கிக் கொடியசினத்தைஉடைய; **அஞ்சனப் பொறி வரி அரவம்** - அஞ்சனம் போன்ற புள்ளிகளையும் வரிகளையும் கொண்ட பாம்பாகியராகு; **விழுங்கி நீங்கிய தொத்தது** - விழுங்கி உமிழ்ந்ததை ஒத்துக்காணப்பட்டது.

அஞ்சனப்பொறி - உவமைத் தொகை. கலை- சந்திரனுடைய ஒளிக்கற்றை. கொள்கை - தன்மை.

***6593. 'தருண மங்கையை மீட்பது ஓர் நெறி தருக !' என்னும்***
***பொருள் நயந்து, நல் நூல் நெறி அடுக்கிய புல்லில்,***
***கருணைஅம் கடல் கிடந்தனன், கருங் கடல் நோக்கி;***
***வருண மந்திரம் எண்ணினன், விதி முறை வணங்கி.***

**தருண மங்கையை மீட்பதோர்** -இளமைப் பருவத்தினளான சீதையை இராவணனுடைய சிறையிலிருந்து மீட்டுக் கொண்டு வருதற்குரிய ஒரு; **நெறி தருக என்னும் பொருள் நயந்து** - வழியைத் தருவாயாக என்னும் பொருளை விரும்பி; **நல்நூல் நெறி அடுக்கிய புல்லில்** - நல்ல நூலாகிய வேதத்தின் கூறிய நெறிப்படி

*அடுக்கப்பட்ட தருப்பைப் புல்லில்;* ***கருங்கடல் நோக்கி*** *- கருமை நிறமான கடலைப் பார்த்தபடி;* ***கருணையங்கடல் கிடந்தனன்*** *- கருணைக் கடலான இராமபிரான் படுத்தபடி இருந்தவன்;* ***விதிமுறை வணங்கி*** *- வருணனைத் தொழவேண்டியமுறைப்படி தொழுது; -* ***வருண மந்திரம் எண்ணினான்*** *- வருண மந்திரத்தைத் தியானித்தவனாக இருந்தான்.*

*மாறாத இளமையுடைய சீதாபிராட்டியை 'தருண மங்கை' என்றார். தருணம் - இளமை. வேதமந்திரங்களைக் கூறி அதன்படி அடுக்கப்பட்ட தருப்பைப்புல் ஆதலின் 'நல்நூல் நெறி அடுக்கியபுல்' என்றார். நல்நூல் - வேதம். வருணனை வணங்கவேண்டிய விதிமுறைப்படி வணங்கியதை 'விதிமுறை வணங்கி' என்றார். கருங்கடல் - பண்புத்தொகை. எண்ணுதல் - இடைவிடாது நினைத்தல் (தியானித்தல்) 'கருங்கடல் நோக்கிக் கருணையங்கடல் கிடந்தான்' என்ற சொல்லமைப்பின் நயம் தேர்க.*

## *ஏழுநாள் சென்றும் வருணன் வாராமையால் இராமன் சினத்தல்*

***6594. பூழி சென்று தன் திரு உருப் பொருந்தவும், பொறை தீர்***
***வாழி வெங் கதிர் மணி முகம் வருடவும், வளர்ந்தான்;***
***ஊழி சென்றன ஒப்பன, ஒரு பகல்; அவை ஓர்***
***ஏழு சென்றன; வந்திலன், எறி கடற்கு இறைவன்.***

***பூழி சென்று தன் திருவுருப் பொருந்தவும்*** *- கடற்கரைப் புழுதியெல்லாம் இராமபிரானுடைய திருமேனியில் பொருந்தவும்;* ***பொறை தீர் வாழி வெங்கதிர் மணிமுகம் வருடவும்*** *- குற்றம் நீங்கிய வெம்மை வாய்ந்த சூரியனுடைய கிரணங்கள் அழகிய முகத்தைத் தடவவும்;* ***வளர்ந்தான்*** *- இராமபிரான் தருப்பையின் மீது கண்களை மூடியவனாகப் படுத்திருந்தான்; ஒரு* ***பகல் ஊழி சென்றன ஒப்பன*** *- ஒருநாள் கழிவது பல ஊழிகள் செல்வன போன்றிருந்தது சென்றும்;* ***அவை ஓர் ஏழு சென்றன*** *- அத்தகை நாட்கள் ஏழு சென்றன;* ***எறிகடற்கு இறைவன் வந்திலன்*** *- அலையெறியும் கடல் அரசனான வருணன் வந்தானல்லன்.*

*வருடுதல்- தடவுதல். ஒரு பகல் கழிவது ஒரு ஊழிக்காலம் கழிவது போலிருந்தது "ஒரு பகல் பற்பல ஊழிகளாய் விடும்' என்ற திருவிருத்தம் நினைவு கூறத்தக்கது. இப்படிப்பட்ட ஏழு நாள்கள் சென்றும் வருணன் வந்திலன்.*

***6595. 'ஊற்றம் மீக் கொண்ட வேலையான், "உண்டு", "இலை", என்னும்***
***மாற்றம் ஈக்கவும் பெற்றிலம், யாம்' எனும் மனத்தால்,***
***ஏற்றம் மீக்கொண்ட புனலிடை எரி முளைத்தென்னச்***

***சீற்றம் மீக்கொண்டு சிவந்தன, தாமரைச் செங் கண்.***

***ஊற்றம் மீக் கொண்ட வேலையான்*** *- செருக்கு மேலோங்கப் பெற்ற இந்தக் கடல் வேந்தன்;* ***உண்டு, இலை என்னும் மாற்றம் ஈக்கவும் பெற்றிலம் யாம்*** *-உண்டு, இல்லை என்று சொல்லக் கேட்கவும் பெற்றோமில்லையாம்;* ***எனும் மனத்தால்*** *- என்ற எண்ணத்தால்;* ***ஏற்றம் மீக் கொண்ட புனலிடை*** *- பெருகிப் பொங்கி வரும் தண்ணீரிலே;* ***எரி முளைத்தென்ன*** *- நெருப்புத் தோன்றியது போல;* ***சீற்றம் மீக் கொண்டு*** *- சினம் மேலோங்க;* ***தாமரைச் செங்கண் சிவந்தன*** *- இராமபிரானுடைய தாமரை மலர் போன்ற செம்மையான கண்கள் கோபத்தால் சிவந்தன.*

*வேலையான் - கடல் வேந்தன். கருணைக் கடலான இராமபிரானுக்குக் கோபம் இயற்கையல்ல என்பதால் பொங்கி எழும் புனலிடையே நெருப்பு முளைத்தது போல், கருணை நிறைந்த உள்ளத்திலே சினம் கொண்டான் என்றார். நீரிலே நெருப்பு முளைக்காது எனவே இது இல்பொருளுவமையாம்.*

***6596. 'மாண்ட இல் இழந்து அயரும் நான், வழி, தனை வணங்கி,***
***வேண்ட, "இல்லை" என்று ஒளித்ததாம்' என, மனம் வெதும்பி,***
***நீண்ட வில்லுடை நெடுங் கனல் உயிர்ப்பொடும் நெடு நாண்***
***பூண்ட வில் எனக் குனிந்தன, கொழுங் கடைப் புருவம்.***

***மாண்ட இல் இழந்து அயரும் நான்*** *- மாண்புமிக்க இல்லாளாகிய சீதாபிராட்டியை இழந்து வருந்தும் நான்;* ***வழிதனை வணங்கி வேண்ட*** *- அந்த பிராட்டியை மீட்டு வரச் செல்லவழியை வணங்கி வருணனை வேண்டவும்;* ***இல்லை என்று ஒளித்ததாம் என*** *- வழிவிடுதற்கில்லை என்பதால் வருணன் வராது ஒளிந்தனனோ என்று;* ***மனம் வெதும்பி*** *- இராமபிரான் மனம் வெதும்பினானாக;* ***நீண்ட வில்லுடை நெடுங்கனல் உயிர்ப்பொடும்*** *- நீண்ட ஒளியை உடைய நெருப்பைப் போன்ற பெருமூச்சுடனும்;* ***நெடு நாண் பூண்டவில் என*** *- நீண்ட நாண் பூட்டிய வில்லைப் போலவும்;* ***கொழுங்கடைப் புருவம் குனிந்தன*** *- செழுமையான புருவங்கள் வளைந்தன.*

*சினத்தாலும் புருவங்கள் வளைதலுண்டு என்பதால் 'புருவம் குனிந்தன' என்றார். 'மாண்டஇல்' என்பதற்கு மாண்புடைய மனைவி என்பது பொருள் 'மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்' என்ற புறப்பாடலில் (புறம் - 191) இப்பொருளில் வந்தது நினைதற்குரியதாம். இல்லை என்று சொல்லும் குறிப்புத் தோன்ற ஒளிந்து கொண்டான் என்னும் பொருள்பட 'இல்லை என்று ஒளித்ததாம்'*

*என்றார். புருவம் வளைந்தது வில் வளைவதை நினைவு படுத்தும். நீண்டவில்-நெடிய ஒளி. நாண் பூண்ட வில் - நாண் பூட்டியவில்.*

***6597. 'ஒன்றும் வேண்டலர்ஆயினும், ஒருவர்பால் ஒருவர்***
***சென்று வேண்டுவரேல், அவர் சிறுமையின் தீரார்;***
***இன்று வேண்டியது எறி கடல் நெறிதனை மறுத்தான்;***
***நன்று, நன்று !' என, நகையொடும் புகை உக,***
***நக்கான்.***

***ஒன்றும் வேண்டலர் ஆயினும்*** *- ஒருவர், எவரிடமும் எதையும் வேண்டாதவர் என்றாலும்;* ***ஒருவர் பால் ஒருவர் சென்று*** *வேண்டுவரேல் - ஒருவரிடம் ஒருவர்சென்று ஒரு பொருளை வேண்டுவாராயின்;* ***அவர் சிறுமையின் தீரார்*** *- அவ்வாறு வேண்டியவர் சிறுமையிலிருந்து நீங்க மாட்டார்;* ***இன்று வேண்டியது*** *- இன்று நான் வருணனை வேண்டியதாகிய;* ***நெறிதனை எறிகடல் மறுத்தான்*** *- இலங்கைக்குச் செல்லும் வழியைத் தர அலைபொங்கும் கடல் வேந்தன் மறுத்துவிட்டான்;* ***நன்று நன்று என*** *- நல்லது நல்லது என்று;* ***நகையொடு புகை உக*** *- சிரிப்போடு, கோபத்தால் புகையும் தோன்ற;* ***நக்கான்*** *- இராமபிரான் கோபச்சிரிப்புச் சிரித்தான்.*

*பொதுப் பொருளைக் கூறிச் சிறப்புப் பொருளை விளக்குவதால் இது வேற்றுப் பொருள் வைப்பணியாகும்.*

***6598. ' "பாரம் நீங்கிய சிலையினன், இராவணன் பறிப்பத்***
***தாரம் நீங்கிய தன்மையன், ஆதலின், தகைசால்***
***வீரம் நீங்கிய மனிதன்" என்று இகழ்ச்சி மேல்***
***விளைய,***
***ஈரம் நீங்கியது, எறி கடல் ஆம்' என இசைத்தான்.***

***பாரம் நீங்கிய சிலையினன்*** *- பெருமையில்லாத வில்லையுடையவன்;* ***இராவணன் பறிப்பத்தாரம் நீங்கிய தன்மையன்*** *- இராவணன் கவர்ந்து கொண்டமையால் மனைவியை நீங்கிய தன்மையினன்;* ***ஆதலின், தகை சால் வீரம் நீங்கியமனிதன்*** *- ஆதலால், தகுதி நிறைந்ததான வீரம் நீங்கிய மானிடன்;* ***என்று இகழ்ச்சி மேல் விளைய*** *- எனக்கருதி, மேலும் இகழ்ச்சி தோன்ற;* ***எறிகடல்*** *- அலையெறியும் கடலுக்கு அரசனான வருணன்;* ***ஈரம் நீங்கியதாம் என இசைத்தான்*** *- என்னிடம் இரக்கம் இல்லாதவனானான் என்று மீண்டும் இராமன் கூறினான்.*

*பாரம் - பெருமை. தகை சால் வீரம் - பெருமை மிகுந்த வீரம். கரனுடன் இராமன் செய்த போரில் வில்முறிந்து போக, பரசுராமன் வில்லை இராமனுக்குக்*

*கொடுத்தவன் வருணன் என்பதால் வில்லைப் பற்றித் தெரிந்தவன் என்பதால் 'பாரம் நீங்கிய சிலை' என நினைத்திருக்கலாம் என இராமன் நினைந்தான். முன்பு நினைத்தவுடன் வந்தவன், இப்போது ஏழு நாட்களாகியும் வராமைக்குக் காரணமாக இராமன் இவ்வாறு கருதினான் என்க.*

***6599. 'புரந்து கோடலும், புகழொடு கோடலும், பொருது***
***துரந்து கோடலும், என்று இவை தொன்மையின்***
***தொடர்ந்த;***
***இரந்து கோடலின், இயற்கையும் தருமமும் எஞ்சக்***
***கரந்து கோடலே நன்று; இனி நின்றது என், கழறி?***

***புரந்து கோடலும்*** *-(ஒருவரிடமிருந்து ஒரு பொருளைப் பெற விரும்பினால்) அவர்களைப் பாதுகாத்து அவரிடமிருந்து வேண்டிய பொருளைப் பெற்றுக் கொள்வதும்;* ***புகழொடு கோடலும்*** *- பொருளை வைத்திருப்பவருடன் போர் செய்து, வெற்றி பெற்று, புகழோடு அப்பொருளைப் பெற்றுக் கொள்ளுவதும்;* ***பொருது துரந்து கோடலும்*** *-போரிட்டு வென்று, பகைவனைத் துரத்திவிட்டுப் பொருளைக் கைப்பற்றிக் கொள்வதும்;* ***என்று இவை தொன்மையின் தொடர்ந்த*** *- என்ற இவையெல்லாம் தொன்மைக் காலம் முதல் தொடர்ந்து வருவனவாம்;* ***இரந்து கோடலின்*** *- (இருந்தும், நான் வருணனை வேண்டி வழிபெற விரும்பினேன்) அப்படி இரந்து பெறுவதைவிட;* ***இயற்கையும் தருமமும் எஞ்ச*** *- எனது இயற்கைக்கும், அறத்துக்கும் குறைவு உண்டாகும்படி;* ***கரந்து கோடலே நன்று*** *- நமக்கு வேண்டிய வழியைக் கவர்ந்து கொள்வதே இனி நல்லது;* ***இனி நின்றது என் கழறி*** *- இனி வேறு பேசி என்ன பயன் (வருணனைப் பலவாறு குறை கூறி என்னபயன்).*

*புரந்து - பாதுகாத்து. ஒரு பொருளை ஒருவரிடமிருந்து பெற விரும்பினால் அவர்களை ஆதரித்துக் காப்பதால் அவராகத் தரப்பெறுவது 'புரந்து கோடல்; பகைவருடன் போர் செய்து வென்று, அவர்க்குரியதை புகழுடன் பெறுவது 'புகழொடு கோடல்; வலிமையால் பகைவனை விரட்டிவிட்டு வேண்டிய பொருளை அடைவது துரந்து கோடல். இவை மூன்றும் தொடர்ந்து வரும்முறை. இதைவிட்டு இயற்கையும், அறமும் சார்ந்த இரந்து பெறும் முறையை மேற்கொண்டேன்; வருணன் வரவில்லை. இனி இயற்கைக்கும் அறத்துக்கும் மாறான தெனினும் நமக்கு வேண்டிய வழியைக் கவர்ந்து பெறுவதே ஏற்றது என்பான் "கரந்து கோடலே நன்று" என்றான்.*

***6600. ' "கானிடைப் புகுந்து, இருங் கனி காயொடு***
***நுகர்ந்த***
***ஊனுடைப் பொறை உடம்பினன்" என்று கொண்டு***
***உணர்ந்த***
***மீனுடைக் கடல் பெருமையும், வில்லொடு நின்ற***

***மானுடச் சிறு தன்மையும், காண்பரால், வானோர்.***

***கானிடைப் புகுந்து*** - *நாட்டை விட்டுவிட்டு காட்டுக்கிடையிலே சென்று வாழ்ந்து;* ***இரும் கனியொடு காய் நுகர்ந்த*** - *பெரிதான பழங்களையும் காய்களையும் உண்டதனால்;* ***ஊனுடைப் பொறை உடம்பினன்*** - *உண்டான தசையையும் பெரிய உடலையும் உடையவன் நான்;* ***என்று கொண்டு உணர்ந்த*** - *என்று கருதி, கேவலமாக என்னை உணர்ந்த;* ***மீனுடைக் கடற் பெருமையும்*** - *மீன்களை உடைய கடலின் பெருமையையும்;* ***வில்லொடு நின்ற மானுடச் சிறுதன்மையும்*** - *(படைத்துணையேதுமின்றி கையில் வில்லேந்தி நின்ற மானுடத்தின் சிறுமையையும்;* ***வானோர் காண்பரால்*** - *தேவர்கள் காணட்டும்.*

*நாடாளும் மன்னர் குலத்தில் பிறந்தும் - நாட்டில் வாழாமல் காட்டில் வாழ நேர்ந்தமையால் 'கானிடைப் புகுந்து' என்றார். கனியையும் காய்களையும் தின்று பருத்த உடல்தானேயன்றி வலிமையில்லை என்பதை 'கனியொடு காய் நுகர்ந்த ஊனுடைப் பொறை உடம்பினன்' என்றார். மானுடத்தின் சிறுமையையும், கடலரசனுடைய பெருமையையும் தேவர்கள் பார்க்கட்டும் என்பான் மீனுடைக் கடற் பெருமையும், மானுடச் சிறுதன்மையும் வானோர் காண்பர்" என்றான். வெகுளியில் பிறந்த இச்சொற்கள் எள்ளுதற் குறிப்புடையன.*

***6601. 'ஏதம் அஞ்சி, நான் இரந்ததே, "எளிது" என இகழ்ந்த***
***ஓதம் அஞ்சினோடு இரண்டும் வெந்து ஒரு பொடி ஆக,***
***பூதம் அஞ்சும் வந்து அஞ்சலித்து உயிர்கொண்டு பொரும,***
***பாதம் அஞ்சலர் செஞ்செவே படர்வர், என் படைஞர்.***

***ஏதம் அஞ்சி நான் இரந்ததே*** - *தீமைக்குப் பயந்து நான் வருணனை இரந்து வேண்டியதனையே கொண்டு;* ***எளிதென இகழ்ந்த*** - *எளியவன் என்று இகழ்ந்து வராத;* ***ஓதம் அஞ்சினோடு இரண்டும்*** - *ஐந்துடன் இரண்டாகிய ஏழு கடல்களும்;* ***வெந்து ஒரு பொடியாக*** - *எனது அம்பால் வெந்து தூள்தூளாகவும்;* ***பூதம் அஞ்சும் வந்து அஞ்சலித்து*** - *ஐம்பெரும் பூதங்களும் வந்து என்னை வணங்கி;* ***உயிர் கொண்டு பொரும*** - *உயிர் கொண்டு வாழ வேண்டி அழுது தேம்பவும்;* ***பாதம் அஞ்சலர்*** - *நடந்து செல்ல அஞ்சாதவர்களாய்;* ***என் படைஞர் செஞ்செவே படர்வர்*** - *எனது வானரப் படை வீரர்கள் செம்மையாகக் கடலிடையிலே செல்வார்கள்.*

*அம்பெய்து கடலை வற்றச் செய்தால் கடலில் வாழும் மீன் முதலியவை அழிய நேரிடும் என்ற தீமைக்குப் பயந்து, என்பதை 'ஏதம் அஞ்சி' என்றான். ஏதம் - தீமை. ஏழு கடலும் என் அம்பால் தூளாக, ஐம்பெரும் பூதங்களும் அஞ்சி உயிர் பிழைத்துவாழ என்னை வணங்கி அழுது தேம்ப - கடல் நீர் சுண்டித் தரை*

*வெளிப்பட்டால் என் படைவீரர்கள் செம்மையாக நடந்து செல்வர் என்பது பொருள். செஞ்செவே - செம்மையாக.*

***6602. 'மறுமை கண்ட மெய்ஞ் ஞானியர் ஞாலத்து வரினும்,***
***வெறுமை கண்ட பின், யாவரும் யார் என விரும்பார்;***
***குறுமை கண்டவர் கொழுங் கனல் என்னினும்***
***கூசார்;***
***சிறுமை கண்டவர் பெருமை கண்டு அல்லது தேறார்.'***

***மறுமை கண்ட மெய்ஞ் ஞானியர்*** *- மறுமை இன்பமான முத்தி இன்பத்தை அனுபவித்த உண்மையான ஞானிகள்;* ***ஞாலத்து வரினும்*** *- இந்த உலகத்துக்கு வந்தார்களாயினும் அவரிடம்;* ***வெறுமை கண்டபின்*** *- தாம் விரும்பும் சிறப்பியல்பின்மை கண்டால்;* ***யாவரும் யார் என விரும்பார்*** *- எவரும் அந்த ஞானிகளை யார் என்று கேட்டறிந்து போற்றவிரும்பமாட்டார்;* ***குறுமை கண்டவர்*** *- ஒருவாறு உருவம் சிறிதாயிருப்பதைப் பார்த்தவர்கள்;* ***கொழுங்கனல் என்னினும் கூசார்*** *- அச்சிறிய வடிவுடையவர்கள் செழுமையான நெருப்பை ஒத்த திறம் வாய்ந்தவர் என்றாலும் அவர்களுக்கு அஞ்சமாட்டார்;* ***சிறுமை கண்டவர்*** *- உருவத்திலே சிறுமையைப் பார்த்தவர்கள்;* ***பெருமை கண்டு அல்லது தேறார்*** *- பெருமை, வலிமைகளைக் கண்டாலல்லது தெளிவு பெறமாட்டார்.*

*'மறுமை கண்ட மெய்ஞ்ஞானியர்' என்போர் முத்திப் பேறடைந்த உண்மைமிக்க ஞானிகளாவார். அத்தகைய மேலோர் இவ்வுலகத்துக்கு வர நேர்ந்தாலும் அவர்களிடம் ஏதேனும் சிறப்பியல்புகள் இருந்தால் மட்டுமே உலகத்தார் மதிப்பர்; இல்லையென்றால் 'யார்' என்றே கண்டு கொள்ள மாட்டார்கள். ஒருவரது சிறிய உருவத்தைப் பார்த்தவர்கள் - அச்சிறிய வடிவில் கொழுந்து விட்டெரியும் கனல் போன்ற ஆற்றலும் ஞானமும் இருப்பதை அறிந்து போற்றார். சிறுமை கண்டவர் பெருமை. வலிமைகளைக் கண்டால் அல்லது தெளிவடைந்து போற்றார்; இது பிறிது மொழிதலணியாம். உலகத்தார் இயல்பைக் கூறி வருணன் தன்னை மதித்து வராமைக்குக் காரணம் இதுவென இராமபிரான் கூறலானான்.*

## *இராமபிரான் கடலின் மேல் அம்பு விடுதல்*

***6603. திருதி என்பது ஒன்று அழிதர, ஊழியில் சினவும்***
***பருதி மண்டிலம் எனப் பொலி முகத்தினன், பல***
***கால்,***
***'தருதி, வில்' எனும் அளவையில், தம்பியும் வெம்பிக்***
***குருதி வெங் கனல் உமிழ்கின்ற கண்ணினன்***
***கொடுத்தான்.***

***திருதி என்ப தொன்று அழிதர*** - மனவடக்கம் என்ற ஒன்று குறைந்திருப்பதால்; ***ஊழியில் சினவும் பரிதி மண்டிலம் என*** - ஊழிக் காலமுடிவில் சினந்து தோன்றும் சூரிய மண்டிலம் என்று கூறும்படியாக; ***பொலிமுகத்தினன்*** - பொலிந்து தோன்றும் முகத்தினனான இராமபிரான்; ***பலகால் தருதி வில் எனும் அளவையின்*** - பலமுறை 'வில்லைத்தா' என்று கேட்ட அளவிலே; ***தம்பியும் வெம்பி*** - தம்பியான இலக்குவனும் வெகுளியால் வெம்பி; ***குருதி வெங்கனல் உமிழ்கின்ற கண்ணினன்*** - குருதியோடு, கொடிய தீப்பொறி உமிழும் கண்களை உடையவனாய்; ***கொடுத்தனன்*** - இராமபிரானிடம் வில்லைக் கொடுத்தான். வருணனை நினைத்துத் தவம் புரிந்த போதிருந்த மனவடக்கம் இப்போதில்லாமை பற்றி 'திருதி என்பதொன்று அழிதர' என்றார். திருதி - அடக்கம், குறைதல். கோபத்திலும் இராமன் முகம் பொலிவது தவ, ஒழுக்கங்களால் ஆகும். விரைந்து கடல் மீது அம்பு செலுத்த வேண்டும். என்பதால் 'பல்கால் தருதி வில்' என்றான். பல தடவை கேட்டமையால் பல தடவைபொறுத்தமையும் தெளிவாகிறது. கொடிய நெருப்பை உமிழும் கண்ணினனான இலக்குவன் என்பதை 'குருதி வெங்கனல் உமிழ்கின்ற கண்ணினன்' என்றார்.

### *6604. வாங்கி வெஞ் சிலை, வாளி பெய் புட்டிலும் மலைபோல்*
### *வீங்கு தோள்வலம் வீக்கினன்; கோதையை விரலால்*
### *தாங்கி, நாணினைத் தாக்கினன்; தாக்கிய தமரம்,*
### *ஓங்கு முக்கணான் தேவியைத் தீர்த்துளது ஊடல்.*

***வெஞ்சிலை வாங்கி*** -இலக்குவன் கொடுத்த கொடியவில்லை கைகளில் வாங்கி; ***வாளி பெய்புட்டிலும்*** - அம்புகள் பெய்துள்ள அம்பறாத் தூணியையும்; ***மலைபோல் வீங்கு தோள்வலம் வீக்கினன்*** -மலை போன்ற பெரிய தோளின் வலது பக்கம் கட்டினான்; ***கோதையை விரலால் தாங்கி*** - விரல்களுக்கிடும் உறையையும் விரல்களில் அணிந்து; ***நாணினைத் தாக்கினன்*** - வில்லின் நாணை இழுத்துப் பிடித்தான்; ***தாக்கியதமாம்*** - அவ்வாறு தாக்கியதால் உண்டான நாண் ஒலி; ***ஓங்குமுக்கணான் தேவியை*** - பெருமையில் ஓங்கிய முக்கண் மூர்த்தியான சிவபிரானது தேவியான உமாதேவியை; ***ஊடல் தீர்த்துளது*** - சிவபிரானுடன் கொண்ட ஊடலைத் தீர்த்தது.

*பகைவரை அழித்தொழிக்கவல்ல கொடுமையுள்ள வில்லை 'வெஞ்சிலை' என்றார். அம்பறாத் துணியை 'வாளிபெய் புட்டில்' என்றார். கோதை - உடும்புத் தோல். உடும்புத் தோலாலான விரல்களுக்கிடும் உறை இங்கு "கோதை" எனப்பட்டது தமரம் - ஓசை. வில்லின் நாணைத் தாக்கியதால் எழுந்த ஓசை. சிவபிரானுடன் ஊடல் கொண்டு விலகியிருந்த உமாதேவி நாண் ஒலி கேட்ட அச்சத்தால் சிவபெருமானைத் தழுவிக் கொண்டாள் எனவே ஊடல் தீர்ந்தது. என்பதால் 'தாக்கிய தமரம் முக்கணான் தேவியை ஊடல் தீர்த்துளது' என்றார். பௌராணிகம் இலக்கியக் கற்பனைக்குக் களனாயிற்று.*

*6605. மாரியின் பெருந் துளியினும் வரம்பு இல, வடித்த,*
*சீரிது என்றவை எவற்றினும் சீரிய, தெரிந்து, பார் இயங்கு இரும் புனல் எலாம் முடிவினில் பருகும்*
*சூரியன் கதிர் அனையன சுடு சரம் துரந்தான்.*

***மாரியின் பெருந்துளியினும் வரம்பில*** - மழையின் பெரியதுளிகளை விட அளவற்றவையும்; ***வடித்த சீரிது என்றவை எவற்றினும் சீரிய*** - கூர்மையானவையும் சிறந்தவை எனக் கூறப்படும் எல்லாவற்றையும் விடச் சிறந்தவையும் ஆகிய அம்புகளை; ***தெரிந்து*** - தேர்ந்து எடுத்து; ***பார்இயங்கு இரும்புனல் எலாம்*** - நிலத்தில் பரந்துள்ள நீரெல்லாவற்றையும்; ***முடிவினில் பருகும் சூரியன் கதிர் அனையன*** - ஊழிக் காலத்தின் இறுதியில் பருகுகின்ற சூரிய கிரணங்களைப் போன்றவையும் ஆகிய; ***சுடு சரம் துரந்தான்*** - வெப்பம் மிக்க அம்புகளைக் கடல் மீது எய்தான்.

*இராமன் எய்த அம்புகளின் மிகுதியை உணர்த்த 'மாரியின் பெருந்துளியினும் வரம்பில' என்றார். வடித்த - நன்கு கூராக்கப்பட்ட சிறந்தவை என்று சொல்லப்படும் ஆயுதங்கள் எவற்றிலும் சிறந்தவை என்பதைச் சீரிதென்றவை எவற்றினும் சீரிய' என்றார். நிலமெங்கும் பரந்து நிறைந்திருக்கும் ஆற்று நீர், கடல் நீர் மற்றுமுள்ள எல்லா வகை நீரையும் 'பார் இயங்கு இரும்புனல் எலாம்' என்றார்.*

*6606. பெரிய மால் வரை ஏழினும் பெரு வலி பெற்ற*
*வரி கொள் வெஞ் சிலை வளர் பிறையாம் என வாங்கி,*
*திரிவ நிற்பன யாவையும் முடிவினில் தீக்கும்*
*எரியின் மும் மடி கொடியன சுடு சரம் எய்தான்.*

***பெரிய மால் வரை ஏழினும்*** - பெரிய, கரிய மலைகளான ஏழையும் விட; ***பெரு வலி பெற்ற*** - மிகுந்த வலிமையை உடைய; ***வரி கொள் வெஞ்சிலை*** - கட்டமைந்த கொடிய வில்லை; ***வளர் பிறையாம் என வாங்கி*** - வளர்பிறைச் சந்திரன் எனக் கூறுமாறு நாணால் வளைத்து; ***திரிவ நிற்பன யாவையும்*** - சரம், அசாம் ஆகிய எல்லாவற்றையும்; ***முடிவினில் தீக்கும்*** - யுகமுடிவிலே தீய்த்து அழிக்கின்ற; ***எரியின் மும்மடி கொடியன*** - நெருப்பை விட மூன்று மடங்கு கொடியனவான; ***சுடு சரம் எய்தான்*** - சுடு சரங்களை இராமபிரான் கடலின் மீது எய்தான்.

*மால்வரை ஏழு - ஏழு பெரிய மலைகள் கைலை, இமயம், மந்தரம் விந்தம் நிடதம் ஏமகூடம், நீலகிரி என்பனவாம் "இச்சிலை கிடக்க மலை ஏழையும் இறானோ" என முன்பு (1152) கூறியது காண்க.*

*இராமன் அம்புகளால் கடல்பட்டபாடு*

*6607. மீனும் நாகமும் விண் தொடும் மலைகளும் விறகா,*
*ஏனை நிற்பன யாவையும் மேல் எரி எய்த,*

***பேன நீர் நெடு நெய் என, பெய் கணை நெருப்பால்***
***கூனை அங்கியின் குண்டம் ஒத்தது, கடற் குட்டம்.***

***மீனும் நாகமும் விண் தொடும் மலைகளும் விறகா*** - கடலில் உள்ள மீன்களும், நாகங்களும் விண்ணைத் தொடும் மலைகளும் விறகாகவும்; ***ஏனை நிற்பன யாவையும்*** - மற்றும் அங்கு நிற்கும் மரங்களும்; ***மேல் எரி எய்த*** - கடல்மீது நெருப்புப்பற்றி எரிதலால்; ***பேன நீர் நெடு நெய் என*** - நுரையோடு கூடிய கடல் நீர் எல்லாம் நெய்யாகவும்; ***பெய்கணை நெருப்பால்*** - இராமன் கடல்மீது விட்ட அம்புகளாகிய தீயினால் ; ***கடற்குட்டம்*** - அக் கடலாகியபள்ளம்; ***கூனை அங்கியின் குண்டம் ஒத்தது*** - வளைந்த நெருப்பெரியும் யாக குண்டத்தை ஒத்திருந்தது.

*கடற்குட்டம் அங்கியின் குண்டம் ஒத்தது என்பது கருத்து. பேனம் - நுரை கூனை - வளைவு. குட்டம் - பள்ளம் (குட்டை) கடலை இழித்துக் குட்டம் என்றார். உருவகத்தை உறுப்பாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணி; உருவகம் எனினுமாம்.*

***6608. பாழி வல் நெடுங் கொடுஞ் சிலை வழங்கிய பகழி,***
***ஏழு வேலையும் எரியொடு புகை மடுத்து ஏகி,***
***ஊழி வெங் கனல் கொழுந்துகள் உருத்து எழுந்து ஓடி,***
***ஆழி மால் வரைக்கு அப் புறத்து இருளையும் அவித்த.***

***பாழிவல் நெடுங் கொடுஞ்சிலை*** - இராமபிரானுடைய பெரிய, வலிய நெடிய, கொடிய வில்; ***வழங்கிய பகழி*** - வழங்கிய அம்புகள்; ***ஏழு வேலையும் எரியொடு புகைமடுத்து ஏகி*** -ஏழு கடல்களிலும் நெருப்புடன் புகையை நிறைத்துக் கொண்டு சென்று; ***ஊழிவெங்கனல் கொழுந்துகள்*** - ஊழிக்காலத்தில் தோன்றும் வெம்மையான தீயினது கொழுந்துகளைப் போல;, ***உருத்து எழுந்து ஓடி*** - சினந்து எழுந்து ஓடி; ***ஆழிமால் வரைக்கு அப்புறத்து*** - சக்கரவாள கிரிக்கும் அப்புறத்துள்ள; ***இருளையும் அவித்த*** - இருட்டையும் அணைத்தன (நீக்கின). பாழி - பெரிய அம்புகள். ஏழு கடல்களையும் நெருப்பாலும் புகையாலும் நிரப்பிக் கொண்டு சென்றனவாதலின் 'எரியொடு புகை மடுத்தேகி' என்றார், யுகாந்த காலத்துப் பெரு நெருப்பின் கொழுந்துகள் போல, அம்புகள் சினந்து சீறி எழுந்து ஓடின என்றார். உருத்து - சினந்து ஆழிமால்வரை - சக்கரவாள கிரி. ஏழு கடல்களுக்கு அப்பால் சக்கரவாள கிரியும், அக்கிரிக்கு அப்பால் இருள் சூழ்ந்த இடமும் உள்ளன என்பது புராணக் கொள்கை. அத்தொலைவிலுள்ள இருளையும் இராமபிரானது அம்புகள் நீக்கின என்றார்.

***6609. மரும தாரையின் எரியுண்ட மகரங்கள் மயங்கிச்***
***செரும, வானிடைக் கற்பக மரங்களும் தீய,***

***நிருமியா விட்ட நெடுங் கணை பாய்தலின்,***
***நெருப்போடு***
***உருமு வீழ்ந்தெனச் சென்றன, கடல்-துளி உம்பர்.***

***மருமதாரையின் எரியுண்ட மகரங்கள்*** *- அம்பு தைத்தலால் உயிர் நிலையில் எரியுண்ட மகரமீன்கள்;* ***மயங்கிச் செரும*** *- மயக்கமுற்று நெருங்கவும்;* ***வானிடைக் கற்பக மரங்களும் தீய*** *- விண்ணுலகத்திலுள்ள கற்பக மரங்களும் தீய்ந்து போகவும்;* ***நிருமியாவிட்ட நெடுங்கணை பாய்தலின்*** *- இராமபிரான் சங்கற்பித்து விட்ட நெடிய அம்புகள் பாய்தலால்;* ***நெருப்போடு உருமு வீழ்ந்தென*** *- நெருப்புடன் இடியும் சேர்ந்து விழுந்தது போல்;* ***கடல் துளி உம்பர் சென்றன*** *- கடல்நீர் விண்ணுக்குச் சென்றது.*

*மருமதாரை - உயிர் நிலை பெற்ற இடம் (மர்மஸ்தானம்) மகரம் - சுறாமீன். செரும - நெருங்க. நிருமியா விட்ட - தொகுத்து விட்ட சங்கற்பித்துவிட்ட என்பதுமாம். மருமதாரை மறைந்து வாழும் இடமுமாம். கடலின் அடிப்பகுதியில் மறைந்து வாழும் சுறாமீன்கள் எரியுண்டு மயங்கி மேற்பரப்பிலே நெருங்கிப் பரந்தன விண்ணுலகத்துக் கற்பக மரங்கள் தீய்ந்து கருகிய இராமபாணம் கடலிலும், விண்ணிலும் சென்றுதாக்கி நிலைகுலையச் செய்தன எனவுமாம்.*

***6610. கூடும் வெம் பொறிக் கொடுங் கனல்***
***தொடர்ந்தெனக் கொளுந்த,***
***ஓடும் மேகங்கள் பொரிந்து இடை உதிர்ந்தன; உம்பர்***
***ஆடும் மங்கையர் கருங் குழல் விளர்த்தன-***
***அளக்கர்க்***
***கோடு தீந்து எழ, கொழும் புகைப் பிழம்பு மீக்***

***கொள்ள.*** **கூடும் வெம்பொறிக் கொழுங்கனல்** *- வெப்பமான தீப்பொறிகளோடு கூடிய கொழுந்துவிட்டெரியும் நெருப்பு;* **தொடர்ந்தெனக் கொளுந்த** *- தொடர்ந்து பற்றிக் கொளுத்துவதாலே;* **ஓடும் மேகங்கள் பொரிந்து இடை உதிர்ந்தன** *- வானத்திலே ஓடுகின்ற மேகங்கள் பொரிந்து போய் இடையே உதிர்ந்தன;* **அளக்கர்கோடு தீந்து எழ** *- கடல் நீர் கொதித்து கடலெல்லையைக் கடந்து மேலே பரந்து செல்ல;* **கொழும்புகைப் பிழம்பு மீக்கொள** *- அதனாலே கொழுவிய புகைத் தொகுதி மேல் சென்று சூழ;* **உம்பர் ஆடும் மங்கையர்** *- விண்ணுலகத்திலே நாட்டியமாடும் நடன மங்கையரின்;* **கருங்குழல் விளர்த்தன** *- கரிய கூந்தலும் வெளிறிப் போயின.*

*வெம்பொறிகூடும் என இயைக்க.*

***6611. நிமிர்ந்த செஞ் சரம் நிறம்தொறும் படுதலும்,***

***நெய்த்தோர்***
***உமிழ்ந்து உலந்தன மகரங்கள் உலப்பு இல; உருவத்***
***துமிந்த துண்டமும் பல படத் துரந்தன, தொடர்ந்து***
***திமிங்கிலங்களும் திமிங்கிலகிலங்களும் சிதறி.***

***நிமிர்ந்த செஞ்சரம்*** *- வளைதலில்லாது நிமிர்ந்துள்ள செம்மையான அம்புகள்;* ***நிறந்தொறும் படுதலும்*** *- மார்புகள் தோறும் சென்று படுதலால்;* ***நெய்த்தோர் உமிழ்ந்து உலந்தன*** *- இரத்தம் சிந்தி இறந்தனவான;* ***மகரங்கள் உலப்பில*** *- சுறாமீன்கள் அளவில்லாதனவாம்;* ***உருவத் துமிந்த துண்டமும்*** *- இராமபாணம் ஊடுருவித்துண்டித்த துண்டங்களும்;* ***பலபடத்துரந்தன*** *- பலவாக எங்கும் சிதறலாயின;* ***தொடர்ந்து திமிங்கிலங்களும் திமிங்கில கிலங்களும் சிதறி*** *- தொடர்ந்து அம்புகள் பாய்வதால் திமிங்கிலங்களும், திமிங்கிலகிலங்களும் சிதறி (எங்கும் துண்டுகள் பரந்தன).*

*செஞ்சரம் - செம்மையான அம்புகள்; தீயை உமிழ்தலால் சிவந்த அம்பு எனினும் அமையும். நெய்த்தோர் - இரத்தம். உலத்தல் - வற்றுதலுமாம். உலப்பில - அளவற்றன. சிதறித் துரந்தன என இயைந்து பொருள் படும். திமிங்கிலம் - மீன்களை விழுங்கும். ஒருவகைப் பெரியமீன். அதையும் தின்னவல்ல மிகப் பெரியமீன் திமிங்கில கிலம் ஓசனை உலப்பிலாத உடம்பு அமைந்து உடைய என்னத் தேசமும் நூலும் சொல்லும் திமிங்கிலகிலங்கள்' என்று (4777) முன்பும் திமிங்கிலகிலம் குறிக்கப்பட்டது. மிகப் பெரிய பேச்சிலும் நூல்களிலும் பதிவாகியுள்ளன என்பது அந்தப் பாடலின் செய்தி; நேரிலே கண்டவரில்லை என்பது குறிப்புப் போலும்.*

***6612. நீறு மீச்செல, நெருப்பு எழ, பொருப்பு எலாம் எரிய,***
***நூறும் ஆயிர கோடியும் கடுங் கணை நுழைய,***
***ஆறு கீழ்ப் பட, அளறு பட்டு அழுந்திய அளக்கர்***
***சேறு தீய்ந்து எழ, காந்தின சேடன்தன் சிரங்கள்.***

***நூறும் ஆயிர கோடியும் கடுங்கணை நுழைய*** *- நூறும், ஆயிரமும் கோடியுமாக விரைந்து பாயும் அம்புகள் கடலில் நுழைவதால்;* ***நீறு மீச்செல நெருப்பெழ*** *- சாம்பல் மேலே செல்லும்படி நெருப்பு மேலோங்கி எழுதலால்;* ***பொருப் பெலாம் எரிய*** *- மலைகளெல்லாம் தீப்பற்றி எரிந்தன;* ***ஆறு கீழ்ப்பட*** *- அம்புகள் கீழேயும் நுழைவதால் பாதாளத்துக்கு வழி உண்டாக;* ***அளறுபட்டு அழுந்திய அளக்கர்*** *- கீழே சேறுபட்டு அழுந்தியிருந்த கடல்;* ***சேறு தீய்ந்து எழ*** *- சேறும் தீய்ந்து கருகி மேலே எழுதலால்;* ***காந்தின சேடன்தன் சிரங்கள்*** *- பூமியைச் சுமக்கும் ஆதிசேடனுடைய ஆயிரம் தலைகளும் வெதும்பின.*

*கருங்கணை - விரைந்து செல்லும் அம்புகள் ஆயிரம் தலைகளும் வெதும்பின. மீச்செய - மேலே செல்ல. அளறு - சேறு. சேடன் - ஆதிசேடன்.*

***6613. மொய்த்த மீன் குலம் முதல் அற முருங்கின, மொழியின்
பொய்த்த சான்றவன் குலம் என, பொரு கணை எரிய;
உய்த்த கூம்புடை நெடுங் கலம் ஓடுவ கடுப்ப,
தைத்த அம்பொடும் திரிந்தன, தாலமீன் சாலம்.***

***பொருகணை எரிய*** - இராமபிரானுடைய போர்த் தொழில் வல்ல அம்புகள் கொழுந்து விட்டு எரிவதால்; ***மொழியின் பொய்த்த சான்றவன் குலம் என*** - வழக்கில் பொய்ச் சாட்சி கூறியவன் குலத்தோடு அழிந்து படுவது போல; ***மொய்த்த மீன் குலம் முதல் அற முருங்கின*** - நெருங்கிய மீன் கூட்டமெல்லாம் அடியோடு அழியலாயின; ***தாலமீன் சாலம்*** - பனைமீன்களின் வரிசையானது; ***தைத்த அம்பொடு திரிந்தன*** - உடலில் தைத்த அம்போடு திரிவன; ***உய்த்த கூம்புடை நெடுங்கலம்*** - கடலில் செலுத்தப்பட்ட கூம்புகளை உடைய நெடிய மரக்கலங்கள்; ***ஓடுவ கடுப்ப*** - ஓடுவதை ஒத்திருந்தன.

*மொய்த்த - நெருங்கித் திரண்ட; இராமபிரானது அம்புகள் பட்டு எரிவதால் மீன்கள் எல்லாம் கூட்டம் கூட்டமாக அடியோடு இறந்து அழிந்தன என்பதற்கு வழக்கில் பொய்ச் சாட்சி கூறியவன் குலத்தோடு அழிவதைக் கூறினார். பொய்க்கரி கூறுவதன் தீமையை இங்கு எடுத்தியம்புவது நினைவு கூர்தற்குரியது. சாலம் - வரிசை.*

***6614. சிந்தி ஓடிய குருதி வெங் கனலொடு செறிய,
அந்தி வானகம் கடுத்தது, அவ் அளப்ப அரும் அளக்கர்;
பந்தி பந்திகளாய் நெடுங் கணை படர,
வெந்து தீந்தன, கரிந்தன, பொரிந்தன, சில மீன்.***

***சிந்தி ஓடிய குருதி வெங்கனலொடு செறிய*** - அம்பு தைத்தலால் மீன் முதலியவற்றினிடமிருந்து சிந்தி ஓடிய இரத்தம் வெவ்விய நெருப்புடன் செறிவதால்; ***அந்தி வானகம் கடுத்தது*** - அந்தி வானத்தை ஒத்திருந்தது; ***அவ்வளப்படும் அளக்கர்*** - அந்த அளவிடமுடியாத கடல்; ***பந்தி பந்திகளாய்*** - வரிசை வரிசையாக; ***நெடுங்கணை படர*** - நீண்ட அம்புகள் பரந்து படர்ந்தமையால்; ***சிலமீன் வெந்து தீந்தன கரிந்தன பொரிந்தன*** - மீனினமெல்லாம் வெந்து, தீய்ந்து, கரிந்து பொரிந்து போயின.

*கடுத்தது - ஒத்திருந்தது. பந்தி - வரிசை அளக்கர் - கடல். கடல்மீது சிந்தி ஓடிய இரத்தத்தோடு, வெப்பமான நெருப்பும் செறிந்திருப்பதால் அந்தப் பெரிய கடல் முழுவதும் அந்திவானைப் போலக் காணப்பட்டது. பந்தி பந்தியாய் - அடுக்குத் தொடர்.*

***6615. வைய நாயகன் வடிக் கணை குடித்திட, வற்றி,***
***ஐய நீர் உடைத்தாய், மருங்கு அருங் கனல் மண்ட,***
***கை கலந்து எரி கருங் கடல் கார் அகல் கடுப்ப,***
***வெய்ய நெய்யிடை வேவன ஒத்தன, சில மீன்.***

***வையநாயகன் வடிக்கணை குடித்திட*** - *உலகின் நாயகனாகிய ராமபிரான் எய்த கூர்மையான அம்புகள் கடல் நீரைக் குடித்து விடுவதால்;* ***வற்றி, ஐயநீர் உடைத்தாய்*** - *கடல் தண்ணீர் வற்றிப் போக சிறிதளவு நீரே கடலில் இருக்க;* ***மருங்கு அருங்கனல் மண்ட*** - *பக்கங்களில் எல்லாம் அணைப்பதற்கரிய நெருப்புப் பற்றி எரிய;* ***கைகலந்து எரி கருங்கடல்*** - *எல்லாப் பக்கங்களிலும் நெருப்பு கலந்து எரியும் கருங்கடல்;* ***கார் அகல் கடுப்ப*** - *கரிய சட்டியான வாணலியை ஒத்திருக்க;* ***வெய்ய நெய்யிடை வேவன ஒப்பன சிலமீன்*** - *சிலமீன்கள் காய்ந்த நெய்யிலே வேகின்றதை ஒத்திருந்தன.*

*கணை குடித்தது போக மிஞ்சியிருந்த சிறிதளவு நீர் "ஐயநீர்" எனப்பட்டது. மண்டுதல் - எரிதல். கை கலந்து - பக்களில் கலந்து. கார் அகல் - கருப்பு நிறமான வாணலி. கடுப்ப, ஒப்ப - உவமை உருபுகள்.*

***6616. குணிப்ப அருங் கொடும் பகழிகள் குருதி வாய்***
***மடுப்ப,***
***கணிப்ப அரும் புனல் கடையுறக் குடித்தலின்,***
***காந்தும்***
***மணிப் பருந் தடங் குப்பைகள் மறி கடல் வெந்து,***
***தணிப்ப அருந் தழல் சொரிந்தன போன்றன, தயங்கி.***

***குணிப்ப அருங் கொடும் பகழிகள்*** - *அளவிட முடியாத கொடிய அம்புகள்;* ***குருதிவாய் மடுப்ப*** - *இரத்தம் தோய்ந்த தமது வாய் வழியே சென்று சேருமாறு;* ***கணிப்பரும் புனல்*** - *அளவிடமுடியாத கடல் நீரை;* ***கடையுறக் குடித்தலில்*** - *கடைபோகக் குடிப்பதாலே;* ***காந்தும் மணிப் பருந்தடங்குப்பைகள்*** - *கடலின் கீழே ஒளிவீசும் பெரிய, விசாலமான மணிகளின் குவியல்கள்;* ***மறிகடல் வெந்து*** - *அலைமறியும் கடல் எல்லாம் வெந்து போக;* ***தணிப்பருந்தழல் சொரிந்தன போன்றன தயங்கி*** - *தணிக்க இயலாத தணல் வெப்பம் சொரியக் கிடப்பது போல விளங்கிக் காணப்பட்டன.*

*குணிப்ப, கணிப்ப - அளவு என்னும் பொருள் கொண்ட சொற்களாகும் கடையுற - கடைபோக (முழுதும்). குப்பை - குவியல்.*

***6617. எங்கும் வெள்ளிடை மடுத்தலின், இழுதுடை இன மீன்***
***சங்கமும், கறி கிழங்கு என, இடை இடை தழுவி,***
***அங்கம் வெந்து பேர் அளற்றிடை அடுக்கிய கிடந்த;***
***பொங்கு நல் நெடும் புனல் அறப் பொரித்தன போன்ற.***

***எங்கும் வெள்ளிடை மடுத்தலின்*** - *அம்புகள் எங்கும் தண்ணீர் இல்லாது வெற்றிடமாக்கி விட்டதால்;* ***இழுதுடை இனமீன் சங்கமும்*** - *நிணத்தை உடைய மீன்களும் சங்குகளும்;* ***கறி, கிழங்கென இடைஇடை தழுவி*** - *காய்களும், கிழங்குகளும் இடையே கிடந்தது போல் இடையே கலந்து பொருந்தி;* ***அங்கம் வெந்து*** - *தம்முடல் முழுதும் வெந்து போய்;* ***அளற்றிடை அடுக்கிய கிடந்த*** - *சேற்றிலே அடுக்கடுக்காகக் கிடந்தவை;* ***பொங்கும் நல்நெடும் புனலற*** - *பொங்கி எழும் நிறைந்த நீர் முழுதும் வற்றிப் போக;* ***பொரிந்தன போன்ற*** - *பொரிந்து கிடந்தன போன்றிருந்தன.*

*வெள்ளிடை - வெற்றிடம். இழுது - நிணம் (கொழுப்பு). இனமீன் சங்கமும்' என்பது மீனும் சங்கமும் ஆம்.*

***6618. அதிரும் வெங் கணை ஒன்றை ஒன்று அடர்ந்து எரி உய்ப்ப***
***வெதிரின் வல் நெடுங் கான் என வெந்தன, மீனம்;***
***பொதுவின் மன்னுயிர்க் குலங்களும் துணிந்தன பொழிந்த***
***உதிரமும் கடல் திரைகளும் பொருவன, ஒருபால்.***

***அதிரும் வெங்கணை*** - *அதிர்ந்து வருகின்ற வெம்மைமிக்க அம்புகள்;* ***ஒன்றை ஒன்று அடர்ந்து எரி உய்ப்ப*** - *ஒன்றுடன் ஒன்று மோதுவதால் நெருப்பை உமிழ;* ***வெதிரின் வல் நெடுங்கான்என*** - *வலிய, பெரிய மூங்கில்காடு தீப்பற்றி எரிவது போல;* ***மீனினம் வெந்தன*** - *மீன் கூட்டமெல்லாம் தீயில் வெந்தன;* ***பொதுவின் மன்னுயிர்க் குலங்களும்*** - *கடலில் வாழுகின்ற பொதுவான உயிரினங்களின் குழுக்களும்;* ***துணிந்தன பொழிந்த*** - *அம்புகளால் துணிக்கப்பட, அதனால் பொழிந்த;* ***உதிரமும் கடல் திரைகளும்*** - *இரத்தமும் கடல் அலைகளும்;* ***ஒரு பால் பொருவன*** - *ஒரு பக்கம் மோதுவன வாயின.*

*அதிர்தல் - முழங்குதல். அடர்தல் - நெருங்குதல் (மோதுதல்).*

***6619. அண்ணல் வெங் கணை அறுத்திட, தெறித்து எழுந்து அளக்கர்ப்***
***பண்ணை வெம் புனல் படப் பட, நெருப்பொடும்***

***பற்றி,***
***மண்ணில் வேர் உறப் பற்றிய நெடு மரம், மற்றும்,***
***எண்ணெய் தோய்ந்தென எரிந்தன, கிரிக் குலம்***
***எல்லாம்.***

***அண்ணல் வெங்கணை அறுத்திட*** - *இராமபிரான் எய்த கொடிய அம்புகள் அறுப்பதாலே;* ***தெறித்து எழுந்து அளக்கர்ப் பண்ணைவெம்புனல்*** - *மேலே தெறித்து எழுந்த கடலாகிய நீர் நிலையின் கொதிக்கும் நீர்;* ***மண்ணின் வேர் உறப் பற்றிய நெடுமரம்*** - *மண்ணிலே வேரூன்றி வளர்ந்த நீண்ட மரங்களும்;* ***மற்றும் கிரிக்குலம் எல்லாம்*** - *மற்றும் மலைக் கூட்டங்கள் எல்லாமும்;* ***எண்ணெய் தோய்ந்தென எரிந்தன*** - *எண்ணெயில் தோய்ந்தன போல எரியலாயின.*

*அளக்கர்ப்பண்ணை - கடலாகிய நீர் நிலை. நெருப்பை அணைப்பது நீர் அந்த நீரும் இராமன் அம்புகளால் கொதித்து, அந்த நெருப்புக்கு எண்ணெய் போல எரிவதற்கு உதவியது என்பது கருத்து. வெம்புனல் பட, நெருப்பொடு பற்றி நெடுமரம், கிரிக்குலம் எரிந்தன என இயையும்.*

***6620. தெய்வ நாயகன் தெரி கணை, 'திசை முகத்து***
***ஒருவன்***
***வைவு இது ஆம்' என, பிழைப்பு இல மனத்தினும்***
***கடுக,***
***வெய்ய அந் நெருப்பு இடை இடை பொறித்து எழ,***
***வெறி நீர்ப்***
***பொய்கை தாமரை பூத்தெனப் பொலிந்தது, புணரி.***

***தெய்வ நாயகன் தெரிகணை*** - *தெய்வங்களுக் கெல்லாம் தலைவனான இராமபிரான் தெரிந்தெடுத்து எய்த அம்புகள்;* ***திசை முகத்து ஒருவன் வைவு இதாமென*** - *பிரமதேவன் கொடுத்த சாபம் இது என்று கூறும்படி;* ***பிழைப்பில மனத்தினும் கடுக*** - *தவறுதலின்றி மனத்தைவிட வேகமாகச் செல்ல;* ***வெய்ய அந்நெருப்பு இடையிடை பொறித்து எழ*** - *அதனால் வெம்மை நிறைந்த நெருப்பு இடையிடையே தீப்பொறிகளுடன் மேலே எழ;* ***புணரி*** - *அக்கடல்;* ***வெறி நீர்ப் பொய்கை*** - *மணம் மிக்க நீரையுடைய பொய்கை;* ***தாமரை பூத்தெனப் பொலிந்தது*** - *தாமரை மலர்களைப் பூத்தது போலப் பொலிந்தது. தெரிகணை - தெரிந்தெடுத்து எய்த அம்புகள். திசை முகத்தொருவன் - பிரமன். வைவு - சாபம். பிரமனின் சாபம் தவறாது சென்று சபிக்கப்பட்டவர்களை, அதன் பயனைத் துய்க்கச் செய்யுமாதலின் - இலக்கை நோக்கித் தவறாது சென்று பாயும் அம்புகளை 'வைவு இதாம் என' என்றார். தாமரை மலர்ந்த பொய்கை உவமானம் நெருப்புப் பற்றி எரியும் கடல் உவமேயம். கடுக - விரைந்து செல்ல.*

***6621. செப்பின், மேலவர் சீறினும் அது சிறப்பு ஆதல்***
***தப்புமே? அது கண்டனம், உவரியில்; 'தணியா***
***உப்பு வேலை' என்று உலகு உறு பெரும் பழி நீங்கி,***
***அப்பு வேலையாய் நிறைந்தது; குறைந்ததோ,***
***அளக்கர்?***

***செப்பின்*** - *சொல்லுவோமானால்;* ***மேலவர் சீறினும்*** - *மேலோர்கள் வெகுண்டாலும்;* ***அது சிறப்பாதல் தப்புமே*** - *அது நன்மையாவது தவறுமோ? (தவறாது);* ***அது கண்டனம்*** - *அதனை இப்போது நேரிலே பார்த்தோம்;* ***உவரியில் தணியா உப்பு வேலை என்று*** - *கடலில் குறையாத உப்பு நிறைந்திருத்தலால் 'உப்புக்கடல்' என்று;* ***உலகு உறு பெரும் பழி நீங்கி*** - *உலகம் இது வரை கூறிய பெரியபழி இன்று நீங்கி;* ***அப்பு வேலையாய் நிறைந்தது*** - *அம்புக் கடலாக நிறைந்திருந்தது;* ***அளக்கர் குறைந்ததோ*** - *கடல் குறைவுற்றதோ; (இல்லை)*

*மேலவர் - கல்வி அறிவு நிரம்பிய மேலோர். 'உவரியில் அது கண்டனம் என இயைத்துப் பொருள் கூறினும் அமையும். அப்பு - நீர் அம்பு என்பது வலிந்து அப்பு என ஆயிற்று. இரு பொருள் படக் கூறியதோர் நயம். நல்லோர் சினந்தாலும் நன்மை உண்டு என்பதைக் கடலால் தெரிந்து கொண்டோம் என்பது கருத்து.*

***6622. தாரை உண்ட பேர் அண்டங்கள் அடங்கலும் தானே***
***வாரி உண்டு அருள் செய்தவற்கு இது ஒரு***
***வலியோ?-***
***பாரை உண்பது படர் புனல்; அப் பெரும் பரவை***
***நீரை உண்பது நெருப்பு எனும் அப் பொருள்***
***நிறுத்தான்!***

***தாரை உண்ட பேரண்டங்கள் அடங்கலும்*** - *ஒன்றன் மேல் ஒன்றாக ஒழுங்குபட அமைந்துள்ள பெரிய அண்டங்கள் அனைத்தையும்;* ***வாரி உண்டு அருள் செய்தவற்கு*** - *ஊழிக் காலத்திலே அவை அழியாத படி அண்டங்களை எல்லாம் வாரி உண்டு காத்து அருள் செய்தவனாகிய எம்பெருமானுக்கு;* ***இது ஒரு வலியோ*** *-கடல் நீரை வற்றச் செய்த இது ஒரு வலிமையோ;* ***பாரை உண்பது படர்புனல்*** - *நிலத்தை உண்பது நிறைந்து பரவும் நீரான கடல்;* ***அப்பெரும் பரவை நீரை*** *-அந்தப் பெரிய கடலில் உள்ள தண்ணீரை;* ***உண்பது நெருப்பு*** - *உண்ணும் வலிமை உடையது நெருப்பு;* ***எனும் அப்பொருள் நிறுத்தான்*** - *என்று கூறும் அந்தப் பொருளை நிலை நாட்டி விட்டான்.*

*தாரை - ஒழுங்கு. அவையனைத்தும் ஒன்றின் மேல் ஒன்றாக ஒழுங்குற இருப்பதால் 'தாரையுண்ட பேரண்டங்கள்' என்றார். அடங்கலும் - முற்றிலும் (எல்லாமும்). அருள் செய்தவனுக்கு இது ஒரு வலிமையோ (அல்ல) என்றார் 'நிலத்தை நீர் உண்ணும்' நீரை நெருப்புண்ணும் நெருப்பைக் காற்று உண்ணும் காற்று*

*விசும்பிலடங்கும்' என்பது சமயநூல் கூறும் உண்மை 'அந்தப் பொருளை நிலை நாட்டி விட்டான்' என, வியந்து கூறுவது அறிந்து மகிழ்தற்குரியது.*

**கலிவிருத்தம்**

***6623. மங்கலம் பொருந்திய தவத்து மா தவர்,***
***கங்குலும் பகலும் அக் கடலுள் வைகுவார்,***
***அங்கம் வெந்திலர், அவன் அடிகள் எண்ணலால்;***
***பொங்கு வெங் கனல் எனும் புனலில் போயினார்.***

***மங்கலம் பொருந்திய தவத்து மாதவர்*** *- நன்மை பொருந்தியதாகிய சிறந்த தவத்தைச் செய்யும் மாமுனிவர்கள்;* ***கங்குலும் பகலும் அக்கடலுள் வைகுவார்*** *- இரவும், பகலும் எப்போதும் அந்தக் கடலிலே தங்கியிருப்பவர்கள்;* ***அங்கம் வெந்திலர்*** *- சுடுகணைகளாலே உடல் வேகப் பெற்றிலர்;* ***அவன் அடிகள் எண்ணலால்*** *- அப்பரமனுடைய திருவடிகளையே எப்போதும் எண்ணியிருப்பவர்களாதலால்;* ***பொங்கு வெங்கனல் எனும்*** *- பொங்கி எரியும் வெம்மைமிக்க நெருப்பு என்று கூறப்படும்;* ***புனலில் போயினார்*** *- நீரிலே செல்லலாயினர்.*

*தவத்தால் எல்லா நன்மைகளையும் எய்தலாகும் என்பதால் தவமுனிவர்களை 'மங்கலம் பொருந்திய தவத்து மாதவர்' என்றார் நீரிலும் நெருப்பிலும் நின்று தவம் செய்வது போலவே முனிவர்கள் கடலுள்ளும் தங்கித்தவம் செய்பவர் போலும். இராமன் அம்புகள் கடலை வற்றச் செய்து - மீனினங்கள் வெந்து கருகச் செய்த போதும் கடலுள் தவம் செய்வோர் அங்கம் வெந்திலர் என்றார்; அதற்குக் காரணம் கூறுபவரைப்போல "அவன் அடிகள் எண்ணலால்" கனல் என்னும் பெயர் கொண்ட புனலில் போயினார்' என்றார். பரமன் திருவடிகளையே தியானித்திருந்த அம்முனிவர்களை அம்பின் வெப்பம் தாக்கவில்லை. கனல் புனலாயிற்று என்ற நயம், கருதி மகிழ்தற்குரியது.*

***6624. தென் திசை, குட திசை, முதல திக்கு எலாம்***
***துன்றிய பெரும் புகைப் படலம் சுற்றலால்,***
***கன்றிய நிறத்தன கதிரவன் பரி***
***நின்றன; சென்றில; நெறியின் நீங்கின.***

***தென்திசை குட திசை முதல திக்கெலாம்*** *- தெற்கு, மேற்கு முதலான எல்லாத் திசைகளிலும்;* ***துன்றிய பெரும்புகைப்படலம் சுற்றலால்*** *- நெருங்கிய நிறைந்த புகைப்படலம் சுற்றிச் சூழ்தலால்;* ***கதிரவன் பரி*** *- சூரியனுடைய தேரில் பூட்டிய குதிரைகள்;* ***கன்றிய நிறத்தன*** *- தமக்குரிய பச்சை நிறம் நீங்கிக் கன்றிய நிறத்தை*

*உடையனவாய்;* ***நின்றன சென்றில நெறியின் நீங்கின*** *- வழி தவறிப் போய் மேற் கொண்டு செல்லாதனவாய் நின்றன.*

*படலம் - திரட்சி. சூரியனுடைய குதிரைகள் பச்சை நிறம் உடையவை என்பது புராணக் கொள்கை. புகைப்படலத்தால் எதையும் பார்க்க இயலாமையின் வழிதவறியும், மேலே செல்ல இயலாமலும் நின்றன என்பதனை 'நின்றன சென்றில நெறியின் நீங்கின' என்றார்! நின்றன சென்றில - செல்ல இயலாது நின்றன என்பது பொருள். நிறத்தன, சென்றில இவை முற்றெச்சம்; நின்றன என்பது கொண்டு முடிந்தன.*

***6625. 'பிறிந்தவர்க்கு உறு துயர் என்னும் பெற்றியோர்***
***அறிந்திருந்து, அறிந்திலர் அனையர் ஆம்' என,***
***செறிந்த தம் பெடைகளைத் தேடி, தீக் கொள,***
***மறிந்தன, கரிந்தன-வானப் புள் எலாம்.***

***பிறிந்தவர்க்கு உறு துயர்*** *- பிரிந்து வாழ்பவருக்கு உற்ற துன்பம்;* ***என்னும் பெற்றி*** *- என்னும் தன்மையை; அறிந்திருந்து- அத்துன்பத்தை அறிந்திருந்தாலும்;* ***அறிந்திலர் அனையர் ஆம்என*** *- அறியாதவரைப் போன்றவராவர்;* ***செறிந்த தம் பெடைகளைத் தேடி*** *- நிறைந்த தம் பெண் பறவைகளைத் தேடி வந்து;* ***தீக்கொள மறிந்தன கரிந்தன வானப்புள் எலாம்*** *- நெருப்புப் பற்றியதால், ஆண்பறவைகளெல்லாம் வீழ்ந்து கருகி மாண்டன.*

*துணையைப் பிரிந்தவர்கள் துன்பம் அனுபவிப்பார்கள் என்பதை இராமபிரான் அறியாதிருக்க முடியாது. அப்படி அறிந்த பெருமானே பெண் பறவைகள் இறந்து போகும்படி செய்து விட்டானே என்று சொல்லிக் கொண்டே தம் பேடுகளை நாடிச் சென்ற ஆண் பறவைகள் கனலில் வீழ்ந்து மாண்டன.- இது இச் செய்யுளில் கற்பனை செய்து உரைக்கும் செய்தி. 'பிரிந்தவர்' என்ற சொல் எதுகை நோக்கிப் 'பிறிந்தவர்' என வந்தது. மறிந்தன (வாய்): முற்றெச்சம். ஓர்-அசை.*

***6626. கமை அறு கருங் கடல், கனலி கைபரந்து,***
***அமை வனம் ஒத்த போது, அறைய வேண்டுமோ?***
***சுமையுறு பெரும் புகைப் படலம் சுற்றலால்,***
***இமையவர் இமைத்தனர்; வியர்ப்பும் எய்தினார்.***

***கமை அறு கருங்கடல்*** *- பொறுமையற்று எப்போதும் முழங்கிக் கொண்டிருக்கும் கரிய கடல்;* ***கனலி கை பரந்து*** *- இராமபிரான் எய்த அம்புகளால் உண்டான நெருப்பு பக்கங்களிலெல்லாம் பரவ;* ***அமை வனம் ஒத்த போது*** *- தீப்பிடித் தெரிந்த மூங்கிற் காட்டை ஒத்திருந்தபோது;* ***அறைய வேண்டுமோ*** *- அதைக்*

*கூற வேண்டுமோ?;* ***சுமை உறு பெரும்புகைப்படலம் சுற்றலால்*** *- சுமை பொருந்திய பெரிய புகைப்படலம் சூழ்ந்தமையால்;* ***இமையவர் இமைத்தனர்*** *- இமையா நாட்டம் கொண்ட தேவர்கள் கண்களை இமைக்கலாயினர்;* ***வியர்ப்பும் எய்தினர்*** *- உடம்பில் வியர்வையும் எய்தினார்கள்.*

*கமை - பொறுமை, கடல் எப்போதும் ஓய்வின்றி முழங்கிக் கொண்டே இருப்பதால் 'கமை அறு கருங்கடல்' என்றார். எங்கும் நெருப்பு பரவி எரிந்து கொண்டிருப்பது, மூங்கிற்காடு தீப்பிடித் தெரிவதை ஒத்திருந்தது என்பதை கனலி கை பரந்து அமைவனம் ஒத்தபோது' என்றார். அமை - மூங்கில்.*

***6627. பூச் செலாதவள் நடை போல்கிலாமையால்,***
***ஏச்சு எலாம் எய்திய எகினம் யாவையும்,***
***தீச் செலா நெறி பிறிது இன்மையால், திசை***

***மீச் செலா; புனலவன் புகழின் வீந்தவால்.***

***பூச்செலாதவள்*** *- பூமேல்கூட நடக்க முடியாதவளாகிய சீதையின்;* ***நடை போல்கிலாமையால்*** *- நடையை ஒத்தில்லாமையினால்;* ***ஏச்சு எலாம் எய்திய எகினம் யாவையும்*** *- பழிப்புக்கு ஆளாகிய அன்னப் பறவைகள் எல்லாம்;* ***தீச்செலா நெறி பிறிது இன்மையால்*** *- தீ செல்லாத வழி வேறு எதுவும் இல்லாமையாலே;* ***திசை மீச் செலா*** *- எல்லாத் திசைகளிலும் மேலே பறந்து செல்ல;* ***புனலவன் புகழின் வீந்தவால்*** *- அதனால், கடலரசனான வருணனது புகழ் எவ்வாறு அழிந்ததோ அதுபோல அழிந்தொழியலாயின.*

*பூச் செலாதவள் - சீதாபிராட்டியின் மென்மை குறித்தது. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் (குறள் 1120) என்ற வள்ளுவர் கற்பனையை ஒப்பிட்டுப் பிராட்டியின் திருவடி மென்மையை உணர்க. சீதையின் நடை போன்ற அழகிய நடை அன்னங்களுக்கில்லாமையால் பழிப்புக்கு அவை ஆளாயின என்பதை 'நடை போல்கிலாமையால் ஏச்செலாம் எய்திய எகினம்' என்றார். 'ஏச்சுச்சகிக்காத அன்னம் தீயில் வீழ்ந்து இறந்தது' என்பது கருத்து. நெருப்பின் வெம்மையால் கருகிய காட்சியைக் கற்பனை மெருகூட்டிக் கம்பர் கூறுகிறார். புனலவன் - கடலரசனான வருணன். இராம பிரானுடைய அம்புகளால் அவன் புகழ் அழிந்தது. அது போல அன்னங்கள் அழிந்தன என்றார். மீச்செலா - மேலே சென்று.*

***6628. பம்புறு நெடுங் கடல் பறவை யாவையும்,***
***உம்பரின் செல்லலுற்று, உருகி வீழ்ந்தன;***
***அம்பரம் அம்பரத்து ஏகல் ஆற்றல,***
***இம்பரில் உதிர்ந்தன, எரியும் மெய்யன.***

***பம்புறு நெடுங்கடல் பறவையாவையும்*** - எங்கும் பரந்துள்ள நீண்ட கடலில் வாழும் நீர்ப்பறவைகள் அனைத்தும்; ***உம்பரில் செல்லலுற்று*** - மேலே வானத்தில் செல்லத் தொடங்கி; ***உருகி வீழ்ந்தன*** - நெருப்பில் வெந்து உருத் தெரியாது உருகி விழுந்தன; ***அம்பரம் அம்பரத்து ஏகல் ஆற்றல*** - மேகங்கள் வானத்திலே செல்ல இயலாதனவாய்; ***எரியும் மெய்யன*** - உடலெல்லாம் தீயில் வெந்து எரிய; ***இம்பரில் உதிர்ந்தன*** - தரையில் உதிர்ந்து விழுந்தன.

*பம்புதல் - பரந்திருத்தல்; ஒலித்தலுமாம். உம்பர் - வானம.ீ உருகி - உருத்தெரியாதபடி உருகிப் போய். அம்பரம் - மேகம்; வானம். இம்பர் - நிலம்.*

***6629. பட்டன படப் பட, படாத புட் குலம்,***
***சுட்டு வந்து எரிக் குலப் படலம் சுற்றலால்,***
***இட்டுழி அறிகில, இரியல் போவன,***
***முட்டை என்று எடுத்தன, வெளுத்த முத்து எலாம்.***

***சுட்டு வந்து எரிக்குலப் படலம் சுற்றலால்*** - சுட்டுக் கொண்டே வந்த நெருப்புப் படலம் எங்கும் சூழ்ந்து இருத்தலால்; ***பட்டன படப்பட*** -பறவைக் கூட்டம் தீயில் வெந்து இறப்பன இறந்து கொண்டே இருக்க; ***படாத புட்குலம்*** - இறக்காத பறவைக் கூட்டம்; ***இட்டுழி அறிகில*** - புகையும் நெருப்பும் சூழ்ந்திருத்தலால் தமது முட்டைகளை இட்ட இடத்தை அறியாதனவாய்; ***இரியல் போவன*** - பாதுகாப்பான வேறு இடத்துக்குச் செல்லுபவை; ***வெளுத்த முத்து எலாம்*** - வெண்மை நிறமான முத்துக்களை எல்லாம்; ***முட்டை என்று எடுத்தன*** - முட்டை என நினைத்து எடுப்பனவாயின.

*எரிக்குலப்படலம் - நெருப்பின் தொகுதி. இட்டுழி -(முட்டை) இட்ட இடம்.*

***6630. 'வள்ளலை, பாவிகாள், "மனிசன்" என்று கொண்டு***
***எள்ளலுற்று அறைந்தனம்; எண் இலாம்' என***
***வெள்ளி வெண் பற்களைக் கிழித்து, விண் உறத்***
***துள்ளலுற்று இரிந்தன-குரங்கு சூழ்ந்தில.***

***பாவிகாள்*** - பாவிகளே! வள்ளலை மனிசன் என்று கொண்டு - இராமபிரான் மனிதன் தானே என நினைத்து; ***எள்ளலுற்று அறைந்தனம்*** - ஏளனமாகப் பேசினோம்; ***எண் இலாம்*** - இராமபிரானுடைய பேராற்றலை அறியும் ஆராய்ச்சி இல்லாதவரானோம்; ***என வெள்ளி வெண் பற்களைக் கிழித்து*** - என்று கூறி வெள்ளி போன்ற வெண்மையான பற்களைக் காட்டி இளித்துக் கொண்டு; ***குரங்கு சூழ்ந்தில*** - நீரில் வாழும் குரங்குகள் அந்தக் கடலைச் சூழ்ந்து கொண்டிருக்காமல்; ***விண்உறத் துள்ளலுற்று இரிந்தன*** - வானத்தின் மீது துள்ளி விலகிச் செல்லலாயின.

*புனலை, கனலாகச் செய்த இராமபிரானைச் சாதாரண மனிதன்தானே என்று எண்ணி இத் துன்பத்தை அனுபவிக்க நேர்ந்ததே என்ற குரங்குகளின் தவிப்புத் தெரிகிறது. குரங்குகள் பற்களைக் காட்டி இளிப்பது இயல்பு என்பதால் 'பற்களைக் கிழித்து' என்றார்.*

***6631. தா நெடுந் தீமைகள் உடைய தன்மையார்,***
***மா நெடுங் கடலிடை மறைந்து வைகுவார்,***
***தூ நெடுங் குருதி வேல் அவுணர், துஞ்சினார்;***
***மீன் நெடுங் கிரி என மிதந்து, வீங்கினார்.***

***தூ நெடுங் குருதி வேல் அவுணர்*** *- தசையோடு கூடிய, இரத்தம் தோய்ந்த நீண்ட வேலையுடைய அவுணர்கள்;* ***தா நெடும் தீமைகள் உடைய தன்மையார்*** *- துயர் தரும் பெருந்தீமைகள் கொண்ட பண்புடையவர் என்பதால்;* ***மா நெடுங் கடலிடை மறைந்து வைகுவார்*** *- பெரிய நீண்ட கடலிலே மறைந்து வாழ்கின்றவர்கள்;* ***துஞ்சினார்*** *- இராமபிரானுடைய அம்புகளின் வெம்மையால் உயிர்துறந்தார்கள்;* ***மீ நெடுங்கிரியென*** *- கடலின் மீது கிடந்த மலைகளைப் போல்;* ***மிதந்து வீங்கினார்*** *- மிதந்து உடல் வீங்கலாயினர்.*

*தூ - தசை. தசையும், இரத்தமும் கொண்ட வேலை 'தூ நெடுங்குருதிவேல்' என்றார். தா - வருத்தம், துயரம். மா நெடுங்கடல் - பெரியகடல்.*

***6632. தசும்பு இடை விரிந்தன என்னும் தாரைய***
***பசும் பொனின் மானங்கள் உருகிப் பாய்ந்தன;***
***அசும்பு அற வறந்தன, வான ஆறு எலாம்;***
***விசும்பிடை விளங்கிய மீனும் வெந்தவே.***

***பசும் பொனின் மானங்கள்*** *- (இராமபிரான் அம்புகளால் எங்கும் தீ எரிய) வானத்தில் செல்லும் பொன்னால் அமைந்த விமானங்கள் எல்லாம்;* ***உருகிப் பாய்ந்தன*** *- தீயின் வெப்பத்தால் உருகிப் பொழிந்தவை;* ***தசும்பிடை விரிந்தன என்னும் தாரைய*** *- நீர்க்குடங்கள் உடைந்தால் நீர்தாரைதாரையாய் ஒழுகுவது போல் இருந்தன;* ***வான ஆறெலாம்*** *- விண்ணுலகிலுள்ள ஆகாய கங்கை முதலான ஆறுகள்;* ***அசும்பறவறந்தன*** *- ஈரம் சிறிது மின்றி வறண்டு போயின;* ***விசும்பிடை விளங்கிய*** *-ஆகாயத்திலே ஒளிர்ந்த;* ***மீனும் வெந்தவே*** *- விண்மீன்களும் வெந்தன.*

*மானம் - விமானம். தசும்பு - நீர்க்குடம். வானயாறு - ஆகாய கங்கை. அசும்பு. நீர்க்கசிவு (ஈரம்). மீன் - விண்மீன்.*

***6633. செறிவுறு செம்மைய, தீயை ஓம்புவ,***

***நெறியுறு செலவின, தவத்தின் நீண்டன, உறு சினம் உறப் பல உருவு கொண்டன,***
***குறுமுனி எனக் கடல் குடித்த-கூர்ங் கணை.***

***குறுமுனி எனக் கடல் குடித்த கூர்ங்கணை*** - குறுகிய வடிவினரான அகத்திய முனிவரைப் போல, கடல் நீரை எல்லாம் குடித்த (இராமபிரான் எய்த) கூரிய அம்புகள்; ***செறிவுறு செம்மைய*** - செறிவுற்று செம்மை வாய்ந்தன; ***தீயை ஓம்புவ*** - தீயை வளர்ப்பன; ***நெறியுறு செலவின*** - நெறியில் செல்லும் செலவினை உடையன; ***தவத்தின் நீண்டன*** - நெடியதவத்தை உடையன; ***உறுசினம் உற*** - மிக்க கோபம் கொண்டிருப்பதால்; ***பல உருவு கொண்டன*** - பல வடிவங்களைக் கொண்டன.

*குறுமுனி - அகத்தியர். ஓம்புதல். விரும்பிவளர்த்தல். உறுசினம். மிகுந்த கோபம். அம்புகள் குறுமுனிவரைப் போலக் கடல் நீரைக் குடித்தன எனக் கூறவந்தவர் குறுமுனிக்கும், அம்புக்கும்* ***சிலேடை*** *கூறினார். இது செம்மொழிச்சிலேடை.* ***அகத்தியர்*** *: செம்மை உடையவர்; வேள்வித்தீயை வளர்ப்பவர்; நன்னெறியில் செல்லுபவர்; நீண்டதவம் உடையவர்; சினத்தால் பல வடிவம் கொள்பவர்; கடலைக் குடித்தவர் அம்புகள்: தீயைப் போலச் செம்மை நிறம் உடையவை; தீயை வளர்ப்பவை; செலுத்தும் நெறியே செல்லுபவை; இராமன் கை தீண்ட தவம் உடையவை; கோபத்தால் பல வடிவம் கொள்பவை; கடல் நீரைப் பருகியவை.*

***6634. மோதல் அம் கனை கடல் முருக்கும் தீயினால்,***
***பூதலம் காவொடும் எரிந்த; பொன் மதில்***
***வேதலும், இலங்கையும், 'மீளப் போயின***
***தூதன் வந்தான்' எனத் துணுக்கம் கொண்டதால்.***

***மோதல் அம் கனைகடல்*** - அலைமோதுகின்ற முழங்கு கின்ற கடலில் பற்றி; ***முருக்கும் தீயினால்*** - முழக்கத்துடன் எரிகின்ற நெருப்பினால்; ***பூதலம் காவொடும் எரிந்த*** - கடலைச் சூழ்ந்துள்ள நிலமெல்லாம் அங்குள்ள சோலைகளோடும் எரிந்தது; ***பொன் மதில் வேதலும்*** - இலங்கைக்கு அரணாக அமைந்துள்ள பொன்னாலான மதிலும் வெந்து போகவும்; ***இலங்கையும்*** - இலங்கையில் வாழும் அரக்கர்கள் எல்லாம்; ***போயின தூதன் மீளவந்தான் என*** - இங்கு வந்து இலங்கைக்கு எரியூட்டிப் போன தூதன் மீண்டும் வந்தான் என்று; ***துணுக்கம் கொண்டதால்*** - திடுக்கிட்டனர். *கனைகடல் - ஒலிக்கும் கடல். முருக்கும் - எரியும். கா - சோலை. பூதலம். நிலம். தூதன் - இராம தூதனாகிய அனுமான். துணுக்கம். கொள்ளுதல்- திடுக்கிடுதல். இலங்கை நகரம் முழுதும் பாழ்படத்தீயால் எரித்த அனுமனது செயல் போல, அம்புகளால் எழுந்த தீயின் செயலும் இருப்பதால் தூதன் வந்தான் என, இலங்கை துணுக்கம் கொண்டது என்றார். 'இலங்கை' இடவாகு பெயர்; இலங்கையில் வாழ்பவர்களை உணர்த்தும்.*

***6635. அருக்கனில் ஒளி விடும் ஆடகக் கிரி,***
***உருக்கு என உருகின, உதிரம் தோய்ந்தன,***
***முருக்கு எனச் சிவந்தன; முரிய வெந்தன,***
***கரிக் குவை நிகர்த்தன, பவளக் காடு எலாம்.***

***அருக்கனில் ஒளிவிடும் ஆடகக் கிரி*** - *சூரியனைப் போல ஒளிவீசும் பொன்னிற மலையான திரிகூடமலையானது;* ***உருக்கு என உருகின*** - *தீயால் வெந்து, அரக்கு உருக்குப் போல உருகலாயின;* ***உதிரம் தோய்ந்தன*** - *அதனுடன் இரத்தமும் தோய்ந்தமையால்;* ***முருக் கெனச் சிவந்தன*** - *முருக்க மலர் போலச் சிவந்து தோன்றின;* ***பவளக் காடு எலாம்*** - *கடலில் உள்ள பவளக்காடுகளெல்லாம்;* ***முரிய வெந்தன*** - *அழியும்படி வெந்து போயினவாய்;* ***கரிக்குவை நிகர்த்தன*** - *கரிக்குவியல்களை ஒத்திருந்தன.*

*அருக்கன், சூரியன். ஆடகக் கிரி (இலங்கையின் நடுவே இருந்த திரிகூட மலை) உருக்கு. அரக்குருக்கு (அரக்குக் கட்டி) முருக்கு - முள் முருங்கை மலர். திரிகூட மலை மூன்று சிகரங்களைக் கொண்டது என்பதால் 'உருகின' எனப் பன்மையில் கூறினார். 'அருக்கனில்' என்பதன் இல், உருக்கு 'என' என்பதன் 'என' 'முருக் கென' என்பதன் 'என' என்பன உவமை உருபுகளாகும். பவளக்காடு - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.*

***6636. பேருடைக் கிரி எனப் பெருத்த மீன்களும்,***
***ஓர் இடத்து, உயிர் தரித்து, ஒதுங்ககிற்றில,***
***நீரிடைப் புகும்; அதின் நெருப்பு நன்று எனாப்***
***பாரிடைக் குதித்தன, பதைக்கும் மெய்யன.***

***பேருடைக் கிரி எனப் பெருத்த மீன்களும்*** - *பெருமையுடைய 'மலை' என்று கூறத்தக்க பெரிய மீன்களும்;* ***ஓரிடத்து, உயிர் தரித்து ஒதுங்க கிற்றில*** - *ஓரிடத்தில் இருந்து உயிரைக் காப்பாற்றி ஒதுங்கி வாழ இயலாதவை ஆயின;* ***நீரிடைப்புகும்*** - *நிலம் வெப்பத்தால் சூடாகத் தண்ணீருக்கிடையே செல்லும்;* ***அதின் நெருப்பு நன்றெனா*** - *அதைவிட நெருப்பே நல்லது என்று;* ***பாரிடைக் குதித்தன பதைக்கும் மெய்யன*** - *பதை பதைக்கும் உடம்பினை உடையனவாய் நீரிலிருந்து தரைக்குக் குதித்தன.*

*பேருடை - பெருமையுடைய. அதின் - அதைவிட மெய்யன - உடம்பை உடையன.*

***6637. சுருள் கடல் திரைகளைத் தொலைய உண்டு, அனல்***
***பருகிடப் புனல் இல பகழி, பாரிடம்***
***மருள் கொளப் படர்வன, நாகர் வைப்பையும்***

***இருள் கெடச் சென்றன, இரவி போல்வன.***

***சுருள் கடல் திரைகளைத் தொலைய உண்டு*** - இராமபிரான் எய்த அம்புகள் சுருண்டு விழும் கடல் அலைகள் அழியுமாறு அவற்றை உண்டு பின்; ***அனல் பருகிடப் புனல் இலபகழி*** - நெருப்பு உண்பதற்கு எங்கும் தண்ணீர் இல்லாமையால் அவ்வம்புகள்; ***பாரிடம் மருள் கொளப் படர்வன*** - நிலம் மருளும்படி எங்கும் செல்வனவாய்ப்பின்; ***இரவி போல்வன*** - சூரியனைப் போன்ற ஒளி உடையனவாய்; ***நாகர் வைப்பையும்*** - நாகர்கள் வாழும் நாக உலகத்தையும்; ***இருள் கெடச் சென்றன*** - அங்கு இருள் கெடும்படி சென்றடைந்தன.

*சுருள்கடல் - சுருண்டு விழும் அலைகளை உடைய கடல். தொலைய - அழிய. நகர் வைப்பு - நாகர் உலகம்.*

***6638. கரும் புறக் கடல்களோடு உலகம் காய்ச்சிய***
***இரும்பு உறச் செல்வன, இழிவ, கீழுற***
***அரும் புறத்து அண்டமும் உருவி, அப் புறம்***
***பெரும் புறக் கடலையும் தொடர்ந்து பின் செல்வ.***

***கரும்புறக் கடல்களோடு*** - கறுத்துத் தோன்றும் மேற்புறத்தைக் கொண்ட கடல்களோடு; ***உலகம் காய்ச்சிய இரும்புறச் செல்வன*** - உலகமும் காய்ச்சிய இரும்பை ஒத்துச் செல்லுவன; ***இழிவ கீழ்உற*** - கீழே பொருந்துமாறு இறங்குவனவாய்; ***அரும்புறத்து அண்டமும் உருவி*** - சக்கரவாளகிரிக்கு அப்பால் உள்ள செல்லுதற்கரிய புற அண்டத்தையும் ஊடுருவிச் சென்று; ***அப்புறம்*** - அதற்கு அப்பால் உள்ள; ***பெரும்புறக் கடலையும்*** - பெரும்புறக் கடலையும்; ***தொடர்ந்து பின் செல்வ*** - தொடர்ந்து பின் செல்வனவாயின.

*இலங்கைக்கு அருகில் எய்த அம்புகள் அப்பாலுள்ள புற அண்டத்தையும் கடந்து பெரும்புறக் கடலையும் தொடர்ந்து சென்றன என அம்பின் ஆற்றலைக் கூறினார். தீயால் கருகியதால் மேற்பரப்பு முழுதும் கறுத்துக் காணப்பட்ட கடலை 'கரும்புறக்கடல்' என்றார். கடல்களும், உலகமுமே' உருகிய இரும்பைப் போல் கீழே இறங்கின என்பதை 'காய்ச்சிய இரும்பு செல்வன இழிவ கீழுற' என்றார்.*

***6639. திடல் திறந்து உகு மணித் திரள்கள், சேண் நிலம்***
***உடல் திறந்து உதிரம் வந்து உகுவ போன்றன;***
***கடல் திறந்து எங்கணும் வற்ற, அக் கடல்***
***குடல் திறந்தன எனக் கிடந்த, கோள் அரா.***

***திடல் திறந்து உருமணித் திரள்கள்*** - *கடல் நடுவே உள்ள திட்டுகள் எல்லாம் அம்புகளால் பிளக்கப்பட்டு அங்கிருந்து சிந்தும் மணித் திரள்கள் எல்லாம்;* ***சேண் நிலம் உடல் திறந்து*** - *பெரிய நிலம் உடல் பிளந்து, அதனால்;* ***உதிரம் வந்து உகுவ போன்றன*** - *இரத்தம் சிந்துவன போல இருந்தன;* ***கடல் திறந்து எங்கணும் வற்ற*** - *இராமபிரானுடைய அம்புகள் கடலைப் பிளத்தலால் எங்கும் நீரில்லாது வற்றிவிட;* ***கோள் அரா*** - *(அக்கடலின் அடியில் வாழ்ந்த) வலிய நீர்ப் பாம்புகள்;* ***அக்கடல் குடல் திறந்தன எனக் கிடந்தன*** - *அக்கடலின் குடல்கள் கிடந்தன போலக் காணப்பட்டன.*

*திடல் - திட்டு. சேண் நிலம் - பரவிப் பெருகிய பூமி. கோள் அரா - குறிதப்பாமல் கொள்ளும் பாம்புகள். உருவ - சிந்த.*

## *6640. ஆழியின் புனல் அற, மணிகள் அட்டிய*
## *பேழையின் பொலிந்தன, பரவை; பேர்வு அறப்*
## *பூழையின் பொரு கணை உருவப் புக்கன,*
## *மூழையின் பொலிந்தன, முரலும் வெள் வளை.*

***ஆழியின் புனல் அற*** - *கடலின் நீர் அறவே வற்றிவிட;* ***பரவை மணிகள் அட்டிய பேழையின் பொலிந்தன*** - *அக்கடல் (அடியிலே மணிகள் கிடந்ததால்) மணிகள் சேர்த்து வைத்த பெட்டியைப் போல விளங்கியது;* ***முரலும் வெள் வளை பேர்வற*** - *(அக் கடலில் உள்ள) ஒலிக்கின்ற வெண்மை நிறமான சங்குகள் பெயர இயலாதபடி;* ***பூழையில் பொருகணை உருவ*** - *முகப்பிலுள்ள துளைகளில் அம்புகள் உருவியிருப்பதால்;* ***மூழையின் பொலிந்தன புக்கன*** - *அகப்பைகளைப் போல விளங்கிச் சென்றன.*

## *6641. நின்று நூறாயிரம் பகழி நீட்டலால்,*
## *குன்று நூறாயிரம் கோடி ஆயின;-*
## *சென்று தேய்வு உறுவரோ, புலவர் சீறினால்?-*
## *ஒன்று நூறு ஆயின, உவரி முத்து எல்லாம்.*

***நின்று நூறாயிரம் பகழி நீட்டலால்*** - *(இராமபிரான் போர்க்கோலம் கொண்டு) நின்று நூறாயிரம் அம்புகளை எய்தலால்;* ***குன்று நூறாயிரம் கோடி ஆயின*** - *கடலில் உள்ள குன்றுகள் எல்லாம் நூறாயிரம் கோடியாயின;* ***உவரிமுத்து எலாம்*** - *கடலில் உள்ள முத்துக்கள் எல்லாம்;* ***ஒன்று நூறாயின*** *-அம்பு பட்டு ஒன்று நூறாக ஆயின;* ***புலவர் சீறினால்*** - *அறிவுமிக்க சான்றோர்கள் சீறினாலும்;* ***சென்று தேய்வுறுவரோ*** - *(சீற்றத்துக்கு ஆளானவர்) சென்று தேய்வடைவார்களோ? (மாட்டார்).*

*நின்று - போர்க் கோலம் கொண்டு நின்று. புலவர் - சான்றோர்கள். இராமபிரான் நூறாயிரம் அம்புகளை எய்ய, கடலில் உள்ள குன்றுகள் நூறாயிரம் கோடிகளாயின;*

*அம்பு பட்டுச் சிதைந்த முத்துக்கள் ஒன்று நூறாக ஆயின. அறிவின் மிக்க மேலோர்கள் சினந்தாலும், சினத்துக்கு ஆளானவர் தேய்ந்து கெட மாட்டார்கள் என்ற பொதுப் பொருளை குன்றும், முத்தும் ஒன்று பல வாயின என்ற சிறப்புப் பொருளைக் கூறி விளக்குவதால் இது வேற்றுப் பொருள் வைப்பணி.*

***6642. சூடு பெற்று ஐயனே தொலைக்கும் மன்னுயிர்***
***வீடு பெற்றன; இடை மிடைந்த வேணுவின்***
***காடு பற்றிய பெருங் கனலின் கைபரந்து***
***ஓடி உற்றது நெருப்பு, உவரி நீர் எலாம்.***

***சூடு பெற்று ஐயனே தொலைக்கும்*** - *சினத்தால் சூடு பெற்று உயிர்களுக்குத் தலைவனான இராமபிரானே அம்பெய்து கொல்லும்;* ***மன்னுயிர் வீடு பெற்றன*** - *நிலைத்துவாழும் உயிரினங்கள் எல்லாம் அழிவில்லாத பேரின்ப வீட்டை எய்தின;* ***இடைமிடைந்த வேணுவின்காடு*** - *இடையிடையே நெருங்கியுள்ள மூங்கில்கள் நிறைந்த காட்டில்;* ***பற்றிய பெருங்கனலின்*** - *பற்றி எரியும் பெருந்தீயைப் போல;* ***கை பரந்து ஓடி*** - *(அம்பின் நெருப்பு) பக்கங்களிலெல்லாம் பரவிச் சென்று;* ***உவரி நீரெலாம் உற்றது*** - *கடல் நீரை அடைந்தது.*

*'அம்பின் நெருப்பு கடல் நீரை அடைந்தது. மன்னுயிர் யாவும் வீடுபேறு எய்தின' என்பது கருத்து. இராமபிரானால் அம்பெய்து கொல்லப்பட்ட எல்லா உயிர்களும் 'வீடு பெற்றன' என்றார். வேணுவின்காடு - மூங்கில்காடு மூங்கில் காடு தீப்பிடித்தால் விரைவில் எங்கும் பரவுவது இயல்பு என்பதால் 'கனலின் கை பரந்தோடி' என்றார்.*

***6643. கால வான் கடுங் கணை சுற்றும் கவ்வலால்,***
***நீல வான் துகிலினை நீக்கி, பூ நிறக்***
***கோல வான் களி நெடுங் கூறை சுற்றினாள்***
***போல, மா நிலமகள் பொலிந்து தோன்றினாள்.***

***கால வான் கடுங்கணை*** - *எமனுக் கொப்பான விரையும் அம்புகள்;* ***சுற்றும் கவ்வலால்*** - *கடல் முழுவதையும் கவ்விக் கொண்டதால்;* ***மா நிலமகள்*** - *பெரிய நிலமாகிய பூமித்தாய்;* ***நீலவான் துகிலினை நீக்கி*** - *தான் உடுத்திருந்த நீலவானம் போன்ற ஆடையை நீக்கிவிட்டு;* ***பூ நிறக் கோல வான் களி நெடுங்கூறை*** - *பூ வேலைப்பாடுகளோடு கூடிய செந்நிறமான புத்தாடையை;* ***சுற்றினாள் போல*** - *தனது உடம்பில் சுற்றிக் கொண்டவளைப் போல;* ***பொலிந்து தோன்றினாள்*** - *பொலிவுடன் காணப்பட்டாள்.*

*நீலநிறமான கடல் நீர் வறண்டு போய் எங்கும் ஒளி சிறந்த சிவந்த அம்புகளே காணப்படுவதால் நிலமகள் நீல ஆடையை நீக்கி ஒளி நிறைந்த செந்நிறமான ஆடையை அணிந்து பொலிந்து தோன்றியது போலக் காணப்பட்டாள் என்று கூறியது நயம் துகில் - பட்டாடை. கூறை - புத்தாடை. மணமகள் அணியும் ஆடையை 'கூறைப் புடவை' என்று கூறுவர். அது செந்நிறமுடையது.*

***6644. கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலாக்***
***கொற்றவன் படைக்கலம் குடித்த வேலை விட்டு,***
***உற்று உயிர் படைத்து எழுந்து ஓடல் உற்றதால்,***
***மற்றொரு கடல் புக, வடவைத் தீஅரோ.***

***கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலாக் கொற்றவன்*** *- கற்றறிந்தவர்களுக்குள் கற்றவராய் விளங்கும் மேலோர்களின் உணர்வும்கூட காண இயலாத பெருமானாகிய இராமனது;* ***படைக்கலம் குடித்த வேலை விட்டு*** *- அம்புகள் நீர் முழுவதையும் குடித்து விட்ட கடலை விட்டு விட்டு;* ***வடவைத் தீ*** *- கடல் மத்தியிலே வாழும் வடவா முகாக்கினித்தீ;* ***மற்றொரு கடல் புக*** *- வேறு ஒரு கடலை அடைவதற்காக;* ***உற்று உயிர் படைத்து எழுந்து*** *- வலிமைபெற்று உயிர் கொண்டு எழுந்து;* ***ஓடல் உற்றதால்*** *- ஓடத் தொடங்கியது.*

*கற்றறிந்த ஞானிகளின் உணர்வுக்கும் எட்டாதவன் பரமன் என்பதால் 'கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலாக் கொற்றவன்' என்றார். "எங்கள் நான் மறைக்கும் தேவர் அறிவுக்கும் பிறர்க்கும் எட்டாச் செங்கண் மால்" என்று (408) முன்னும் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கது. வடவைத் தீ வாழும் கடல் நீரையெல்லாம் இராமபிரானது அம்புகள் குடித்துவிட்டதால், வேறு கடலுக்குச் செல்ல எழுந்து ஓடலுற்றது. 'கற்றவர் கற்றவர்' என இருமுறை கூறியது 'கற்றவருள்ளும் பெரிது கற்றவர் என ஞானியரைக்' குறித்தது.*

***6645. வாழியர் உலகினை வளைத்து, வான் உறச்***
***சூழ் இரும் பெருஞ் சுடர்ப் பிழம்பு தோன்றலால்,***
***ஊழியின் உலகு எலாம் உண்ண ஓங்கிய***
***ஆழியின் பொலிந்தது, அவ் ஆழி, அன்ன நாள்.***

***உலகினை வளைத்து*** *- உலகத்தை எல்லாம் சுற்றி வளைத்துக் கொண்டு;* ***வான் உறச் சூழ் இரும் பெரும் சுடர்ப் பிழம்பு*** *- விண்ணை அளாவிச் சூழ்ந்த பெரிய தீயின் ஒளிப் பிழம்பு எங்கும்;* ***தோன்றலால்*** *- காணப்படுதலால்;* ***அவ்வாழி*** *- அந்தக் கடல்;* ***அன்ன நாள் ஊழியின் உலகெலாம் உண்ண ஓங்கிய*** *- அந்த நாளிலே ஊழிக் காலத்தின் முடிவில் உலகனைத்தையும் உண்ண உயர்ந்த;* ***ஆழியின் பொலிந்தது*** *- ஊழிக் காலத்துப் பெருங் கடலைப் போல விளங்கியது.*

*வாழியர் - அசை, உலகை உண்ண ஓங்கிய ஆழியால் ஊறு நேருமோ என் அஞ்சி வாழ்த்தினார் எனலுமாம். இரும் பெரும் சுடர்ப் பிழம்பு - மிகப் பெரிய ஒளிப் பிழம்பு 'இரும்பெரும்' என்பது மீமிசைச்சொல்.*

***6646. ஏனையர் என்ன வேறு உலகின் ஈண்டினார்-***
***ஆனவர் செய்தன அறைய வேண்டுமோ-***
***மேல் நிமிர்ந்து எழு கனல் வெதுப்ப, மீதுபோய்,***
***வானவர் மலர் அயன் உலகின் வைகினார்?***

***மேல் நிமிர்ந்து எழுகனல் வெதுப்ப** - கடலை விட்டு மேலே நிமிர்ந்து எழுந்த நெருப்பு வெதுப்புவதால் (பயந்து); **வானவர் மீதுபோய்** - விண்ணுலகில் வாழும் தேவர்கள் தாம் வாழும் விண்ணுலகுக்கும் மேலே சென்று; **மலரயன் உலகின் வைகினார்** - பிரமதேவன் வாழும் சத்தியலோகத்தில் தங்கலாயினர் என்றால்; **ஏனையர் என்ன வேறுலகில் ஈண்டினார்** - தேவரினும் ஏனையோராகிய மண்ணுலகில் வாழ்பவர்கள்; **ஆனவர் செய்தன அறைய வேண்டுமோ** - என்போர் செய்த செயல்களைச் சொல்ல வேண்டுமோ?*

*ஈண்டினோர் - நிறைந்திருப்பவர். வேறுலகு - தேவருலகினும் வேறான மண்ணுலகு.*

*இராமன் சதுமுகன் கணை ஏவ-நிகழ்ந்த மாறுபாடுகள்*

***6647. 'இடுக்கு இனி எண்ணுவது என்னை? ஈண்டு இனி***
***முடுக்குவென் வருணனை' என்ன, மூண்டு எதிர்***
***தடுக்க அரும் வெகுளியான், சதுமுகன் படை***
***தொடுத்தனன்; அமரரும் துணுக்கம் எய்தினார்.***

***இடுக்கு இனி எண்ணுவ தென்னை** - இதனால் இனி வரப் போகும் துன்பங்களைப் பற்றி நினைப்பதால் என்ன பயன்?; **ஈண்டு இனி முடுக்குவென் வருணனை என்ன** - வருணனை இனி இங்கு விரைவில் வருமாறு செய்வேன் என்று; **மூண்டு எதிர் தடுக்கரும் வெகுளியான்** - பெருகி எழுகின்ற எதிர்த்து எவரும் தடுக்க இயலாத வெகுளியை உடைய இராமன்; **சதுமுகன் படை தொடுத்தனன்** - பிரமதேவனது கணையான (பிரம்மாஸ்திரத்தை வில்லில் தொடுத்து விடத் தொடங்கினான்; **அமரரும் துணுக்கம் எய்தினார்** - அதைக்கண்டு தேவர்களும் திடுக்கிட்டார்கள்.*

*இடுக்கு - துன்பம். முடுக்குதல் - விரைதல் மூண்டு - மேல் மேல் பெருகி தடுக்க அரும் வெகுளி - தடுப்பதற்கரிய கோபம். சதுமுகன்படை ஆற்றல் மிக்கது என்பதால் அதனால் நேரும் துன்பத்தை நினைத்துப் பயனென்ன? வருணன் விரைந்து*

*வரவேண்டுமானால் சதுமுகன் படையை எய்வதே தக்கது என்பதால் 'இடுக்கினி எண்ணுவதென்னை' என்று இராமபிரான் கூறினான் எனலுமாம்.*

***6648. மழைக் குலம் கதறின; வருணன் வாய் உலர்ந்து***
***அழைத்தனன்; உலகமும் அடைத்த, ஆறு எலாம்;***
***இழைத்தன நெடுந் திசை, யாதும் யார் இனிப்***
***பிழைப்பிலர் என்பது ஓர் பெரும் பயத்தினால்.***

***மழைக்குலம் கதறின*** *- (இராமபிரான் சதுமுகன் கணையை ஏவ மேகக் கூட்டங்களெல்லாம் கதறலாயின;* ***வருணன் வாய் உலர்ந்து அழைத்தனன்*** *- வருணன் வாய் வறண்டு கதறினான்;* ***உலகமும் ஆறெலாம் அடைத்த*** *- உலகிலுள்ள ஆறுகளெல்லாம் தூர்ந்து போயின; யார் இனிப் பிழைப்பவர் - சதுமுகன் படைக்குத் தப்பி இனி யார் பிழைப்பார்கள்;* ***என்பதோர் பெரும்பயத்தினால்*** *- என்பதொரு பெரிய பயத்தால் இவ்வளவு நடந்தது;* ***நெடுந்திசை இழைத்த*** *- நீண்ட திசைகளெல்லாம் நுணுகிப் பொடியாயின;*

*'பிழைப்பிலர்' என்பதைவிட 'பிழைப்பவர்' என்று பாடமே ஏற்றது மழைக்குலம் - மேகக் கூட்டம் உலர்ந்து - வறண்டு ஆறெலாம் - ஆறுகளெல்லாம் அடைத்த - தூர்ந்தன நெடுந்திசை - நீண்ட திசைகள் இழைத்த - தேய்ந்து நொறுங்கின.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***6649. அண்ட மூலத்துக்கு அப்பால் அழியும் கொதித்தது;***
***ஏழு***
***தெண் திரைக் கடலின் செய்கை செப்பி என்?***
***தேவன் சென்னிப்***
***பண்டை நாள் இருந்த கங்கை நங்கையும்***
***பதைத்தாள்; பார்ப்பான்***
***குண்டிகை இருந்த நீரும் குளுகுளு கொதித்தது***
***அன்றே.***

***அண்ட மூலத்துக்கு அப்பால் ஆழியும் கொதித்தது*** *- அண்டத்தின் அடிப்பகுதியில் உள்ள பெரும் புறக் கடலும் கொதித்தது (என்றால்);* ***ஏழு தெண்திரைக் கடலின் செய்கை செப்பிஎன்*** *- உலகத்திலுள்ள தெளிந்த அலைகளையுடைய ஏழுகடல்களின் செய்கையைச் சொல்ல என்ன இருக்கிறது?;* ***தேவன் சென்னிப் பண்டை நாள் இருந்த கங்கை நங்கையும் பதைத்தாள்*** *- சிவபிரானுடைய சென்னியில் வெகு காலமாக வீற்றிருந்த கங்கையாகிய பெண்ணும் பதைபதைத்தாள்;* ***பார்ப்பான் குண்டிகை இருந்த நீரும்*** *- அந்தணர் தலைவனான பிரமனது கமண்டலத்தில் இருந்த தண்ணீரும்;* ***குளு குளு கொதித்தது அன்றே*** *- குளு குளு வென ஒலித்துக் கொதிக்கலாயிற்று.*

*அண்டமூலம் - அண்டங்களின் அடிப்பகுதி. ஆழி - பெரும்புறக் கடல் தேவன் - சிவபெருமான். பார்ப்பான் - பிரமன். குண்டிகை - கமண்டலம். 'குளு குளு' என்பது ஒலிக்குறிப்பு; 'அனுகரணம்' என்பர். 'அன்றே' அசை கங்கை நங்கை - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.*

***6650. 'இரக்கம் வந்து எதிர்ந்த காலத்து, உலகு எலாம்***
***ஈன்று, மீளக்***
***கரக்கும் நாயகனைத் தானும் உணர்ந்திலன்; சீற்றம்***
***கண்டும்,***
***வரக் கருதாது தாழ்த்த வருணனின் மாறு***
***கொண்டார்***
***அரக்கரே? அல்லர்' என்னா, அறிஞரும் அலக்கண்***
***உற்றார்.***

***இரக்கம் வந்து எதிர்ந்த காலத்து*** - *(தனது திருவுள்ளத்திலே உயிர்களிடம்) இரக்கம் தோன்றிய காலத்திலே;* ***உலகெலாம் ஈன்று மீளக் கரக்கும் நாயகனை*** - *உலகங்கள் அனைத்தையும் படைத்து மறுபடியும் மறைத்துக் கொள்ளவல்ல உலக நாயகனை;* ***தானும் உணர்ந்திலன்*** - *நாம் அறிந்திருத்தல் போலத்தானும் அறியாதவனாயினான்;* ***சீற்றம் கண்டும் வரக்கருதாது*** - *இராமபிரானுடைய கோபத்தைப் பார்த்தபின்பும் வருவதற்கு நினைக்காமல்;* ***தாழ்த்த வருணனின்*** *-காலம் தாழ்த்த இந்த வருணனைவிடவும்;* ***மாறு கொண்டார் அரக்கரே அல்லர் என்னா*** - *இராமபிரானிடம் பகை கொண்ட அவர்கள் அரக்கர் அல்லர் (இந்த வருணன்தான் அரக்கன்) என்று கூறி;* ***அறிஞரும் அலக்கண் உற்றார்*** - *மற்றத்தேவர்கள் எல்லோரும் துன்பமுற்றார்கள்.*

*இறைவன் கருணையே உருவானவன் தனது கருணையால் உயிர்களைப் படைத்தும், கரந்தும், பின்பு மறைப்பதும் செய்யவல்லவன் திருமால். திருமாலின் அவதாரமான இராமபிரானை 'காக்கும் நாயகன்' என்றார். 'தானும்' உம்மை எச்சவும்மை. அலக்கண் - துன்பம் 'மாறு கொண்ட அரக்கரே நல்லர் என்பதும் ஒரு பாடம் வருணனைவிடப் 'பகை கொண்ட அரக்கர்களே நல்லவர்கள் என்பது அதன் பொருளாம்.*

***6651. 'உற்று ஒரு தனியே, தானே, தன்கணே, உலகம்***
***எல்லாம்***
***பெற்றவன் முனியப் புக்கான்; நடு இனிப் பிழைப்பது***
***எங்ஙன்?***
***குற்றம் ஒன்று இலாதோர்மேலும் கோள் வரக்***
***குறுகும்' என்னா,***
***மற்றைய பூதம் எல்லாம், வருணனை வைத மாதோ.***

***உற்று ஒரு தனியே தானே*** - *தான் ஒருவனே தனியாகப் பொருந்தியிருந்து;* ***தன்கணே உலகம் எல்லாம் பெற்றவன்*** - *தன்னிடமிருந்தே உலகங்கள் எல்லாவற்றையும் ஈன்றவன்;* ***முனியப்புக்கான்*** - *வெகுளத் தொடங்கினான்;* ***நடு இனிப் பிழைப்பது எங்ஙன்?*** - *இந்தக் கோபத்துக் கிடையே நாம் தப்பிப் பிழைப்பது எவ்வாறு;* ***குற்றம் ஒன்று இலாதோர் மேலும்*** - *குற்றம் எதுவும் செய்யாத நம்மீதும்;* ***கோள் வரக் குறுகும் என்னா*** - *தீங்கு வரக் கூடும் என்று கருதி;* ***மற்றைய பூதம் எல்லாம் வருணனைவைத*** - *மற்றைப் பூதங்கள் யாவும் வருணனைத் திட்டின.*

*'பரமன் தனது சங்கல்பத்தால் தான் ஒருவனே தன்னிடமிருந்து உலகங்களைப் படைக்கிறான்' என்பது சமய நூற் கொள்கை. ஐம் பெரும் பூதங்களில் ஒன்று நீர் அதற்குரியவன் வருணன். அவன் செய்த தவறு காரணமாக மற்றைப் பூதங்களுக்கும் தீங்கு நேரக் கூடும் என, அவை வருணனை வைதன. கோள் - தீங்கு.*

*வருணன் தோன்றிப் பணிவுரை பகர்தல்*

***6652. எழு சுடர்ப் படலையோடும் இரும் புகை நிரம்பி***
***எங்கும்***
***வழி தெரிவு அறிவு இலாத நோக்கினன் வருணன்***
***என்பான்,***
***அழுது அழி கண்ணன், அன்பால் உருகிய நெஞ்சன்,***
***அஞ்சித்***
***தொழுது எழு கையன், நொய்தின் தோன்றினன்,***
***வழுத்தும் சொல்லான்.***

***எழு சுடர்ப் படலையோடும்*** - *தொடர்ந்து எழுகின்ற தீச்சுடர்களின் திரள்களோடு;* ***இரும்புகை நிரம்பி*** - *நிறைந்த புகை நிரம்பி;* ***எங்கும் வழி தெரிவு அறிவிலாத*** - *எங்கும் வரும் வழியைத் தெரிந்து கொள்ள அறியாத;* ***நோக்கினன் வருணன் என்பான்*** - *நோக்கினை உடையவனான வருணன் என்பவன்;* ***அழுது அழிகண்ணன்*** - *அழுது அழுது அழகிழந்த கண்களை உடையவனாகவும்;* ***அன்பால் உருகிய நெஞ்சன்*** - *இராமபிரானிடம் கொண்ட அன்பினால் உருகிய உள்ளத்தை உடையவனாகவும்;* ***அஞ்சித் தொழுது ஏழு கையன்*** - *அஞ்சி, தொழுதபடி மேலே உயர்த்தியகைகளை உடையவனாகவும்;* ***வழுத்தும் சொல்லான்*** - *இராமபிரானைப் போற்றிப் புகழும் சொற்களை உடையவனாகவும்;* ***நொய்தின் தோன்றினன்*** - *விரைந்து (இராமபிரானுக்கு எதிரிலே வந்து) தோன்றினான்.*

*எழுசுடர் - மேலும் மேலும் எழுகின்ற தீச்சுடர் படலை - திரள். எங்கும் புகை நிறைந்திருத்தலால் கண்களால் பார்க்க இயலவில்லை நொய்தல் - விரைதல். வருணன், நோக்கினன் கண்ணன், நெஞ்சன், கையன் சொல்லன் தோன்றினன் என இயையும்.*

*6653.* ***'நீ எனை நினைந்த தன்மை, நெடுங் கடல் முடிவில்***
***நின்றேன்***
***ஆயினேன் அறிந்திலேன்' என்று அண்ணலுக்கு***
***அயிர்ப்பு நீங்க,***
***காய் எரிப் படலை சூழ்ந்த கருங் கடல்***
***தரங்கத்தூடே,***
***தீயிடை நடப்பான் போல, செறி புனற்கு இறைவன்***
***சென்றான்.***

***நீ எனை நினைந்த தன்மை*** - *பெருமானே! நீ என்னை வருமாறு நினைத்த தன்மையை;* ***நெடுங்கடல் முடிவில் நின்றேன் ஆயினேன்*** - *இந்தப் பெரிய கடலில் முடிவான இடத்திலே நின்றவனாகிய நான்;* ***அறிந்திலேன் என்று*** - *அறியாதவனானேன் என்று கூறிக் கொண்டு;* ***அண்ணலுக்கு அயிர்ப்பு நீங்க*** - *இராமபிரானுக்கு ஐயம் தீரும்படி;* ***காய் எரிப்படலை சூழ்ந்த*** - *எரியும் தீத்திரள் எங்கும் சூழ்ந்திருந்த;* ***கருங்கடல் தரங்கத்து ஊடே*** *-கரிய கடல் அலைகளுக்கு இடையிலே;* ***தீயிடை நடப்பான் போல*** - *நெருப்புக்கு இடையிலே நடந்து வருபவனைப் போல்;* ***செறி புனற்கு இறைவன் சென்றான்*** *-செறிந்த கடலுக்கு அரசனான வருணன் வரலானான். எரிப்படலை - நெருப்புத்திரள். புனற்கு இறைவன், அண்ணலுக்கு அயிர்ப்பு நீங்க, நினைத்த தன்மை அறிந்திலேன் என்று சென்றான் என இயையும். எரியும் நெருப்புத் திரள் சூழ்ந்த அலைகளுக் கிடையே நடந்து வருபவன் 'தீயிடை நடப்பான் போல'ச் சென்றான் என்றார். "தீப் பொதிந்தாமென மிதிக்கும் செய்கையன்' என இராவணனைக் கூறுதல் (3340) ஒப்பிடத்தக்கது. "நாம் நினைத்தும் வராததேன்' என்று இராமன் கருதிய ஐயத்தைப் போக்க" 'நீ என்னை நினைத்ததை நான் நீண்ட இக் கடலின் முடிவில் நின்றதால் அறியாதவனானேன்" என்று கூறியபடி வருணன் வந்தான்.*

*6654.* ***வந்தனன் என்ப மன்னோ, மறி கடற்கு இறைவன்;***
***வாயில்***
***சிந்திய மொழியன், தீந்த சென்னியன், திகைத்த***
***நெஞ்சன்,***
***வெந்து அழிந்து உருகும் மெய்யன், விழுப் புகைப்***
***படலம் விம்ம,***
***அந்தரின் அலமந்து, அஞ்சி, துயர் உழந்து,***
***அலக்கண் உற்றான்.***

***மறி கடற்கு இறைவன்*** - *அலைகள் மடிந்து விழும் கடலுக்கு அரசனான வருணன்;* ***வாயில் சிந்திய மொழியன்*** - *வாயிலிருந்து சிந்தும் சொற்களை உடையவனாயும்;* ***தீந்த சென்னியன்*** - *தீயினால் தீய்ந்து போன தலையை உடையவனாயும்;* ***திகைத்த நெஞ்சன்*** - *திகைப்புண்ட மனத்தை உடையவனாகவும்;* ***வெந்து அழிந்து உருகும்***

***மெய்யன்*** *- தீயால் வெந்து, உருவழிந்து, உருகுகின்ற உடலை உடையவனாகவும்;* ***விழுப்புகைப் படலம் விம்ம*** *- மிகுந்த புகைக் கூட்டம் எங்கும் நிறைந்து இருப்பதால்;* ***அந்தரின் அலமந்து*** *- கண் பார்வை இல்லாதவனைப் போலத் தடு மாறிக் கொண்டு;* ***அஞ்சித்துயர் உழந்து*** *- பயந்து கொண்டு துன்பத்தால் வருந்துபவனாய்;* ***அலக்கண் உற்றான் வந்தனன்*** *- வேதனைப்பட்டு வந்தான்.*

*என்ப, மன்னோ - அசைச் சொற்கள். விழுப்புகை - மிகுந்த புகை படலம் - திரள் அந்தர் - குருடர் மறிகடற்கு இறைவன் - மொழியன் சென்னியன் - நெஞ்சன் அந்தரின் அலமந்து, வந்தனன் என்று இயையும். அலக்கண் - துன்பம். வருணன் கண்ணிருந்தும் காண இயலாதபடி புகை நிறைந்து சூழ்ந்திருந்தமையால் குருடர் போலத் துன்புற்றதை அலக்கண் உற்றான் என்று குறித்தார். முன்பும் வழி தெரிவு அறிவிலாத நோக்கினன் என்றார். அச்சத்தால் தன்னையறியாது சிதைந்து வந்த மொழியாதலின் சிந்திய மொழியன் என்றார். அச்ச மெய்ப்பாட்டுக்கு இப்பாடல் நல்ல எடுத்துக்காட்டு.*

## *வருணன் இராமபிரானிடம் அடைக்கலம் வேண்டுதல்*

***6655. 'நவை அறும் உலகிற்கு எல்லாம் நாயக! நீயே சீறின்,***
***கவயம் நின் சரணம் அல்லால், பிறிது ஒன்று***
***கண்டது உண்டோ?***
***இவை உனக்கு அரியவோதான்; எனக்கு என வலி***
***வேறு உண்டோ?***
***அவயம், நின் அவயம்!' என்னா, அடுத்து அடுத்து***
***அரற்றுகின்றான்:***

***நவை அறும் உலகிற்கு எல்லாம் நாயக*** *- குற்ற மற்ற இவ்வுலகுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் பெருமானே!;* ***நீயே சீறின்*** *- (கருணைமிகுந்த மனத்தை உடைய) நீயே இவ்வாறு என் மீது சினம் கொண்டாயானால்;* ***கவயம் நின் சரணமல்லால்*** *- (எனக்குப் பாதுகாப்பான) கவசம் உனது பாதங்களே அல்லாமல்;* ***பிறிது ஒன்று கண்டதுண்டோ*** *- வேறு ஒன்றினை நான் பார்த்ததுண்டோ?;* ***இவை உனக்கு அரியவோதான்*** *- கடலுக்குத் தீயிட்டு, உலகை நடுங்கச் செய்யும் இச் செயல் உனக்கு அரியதொன்றே!;* ***எனக்கு என வலி வேறுண்டோ*** *- உனது வலிமையாய் வாழ்கின்ற எனக்கு எனத்தனியான வலிமை வேறுளதோ?;* ***அவயம் நின் அவயம் என்னா*** *- அடைக்கலம் உனக்கு அடைக்கலம் என்று;* ***அடுத்து அடுத்து அரற்றுகின்றான்*** *- அடுத்தடுத்துக் கூறி அரற்றுவானானான்.*

*நவை - குற்றம், கவயம், அவயம் என்பன கவசம், அபயம் என்பதன் திரிவுகள் 'தலைவனே சீறுவானாயின் அடிமைக்கு வேறு பாதுகாவல் ஏது' என்பான் 'நீயே சீறின் கவயம் பிறி தொன்றுண்டோ' என்றான். 'அபயம். அபயம்' என்று பலமுறை கூறி அரற்றினான் என்பதை 'அடுத்தடுத்து' என்றார்.*

***6656. 'ஆழி நீ; அனலும் நீயே; அல்லவை எல்லாம் நீயே;***
***ஊழி நீ; உலகும் நீயே; அவற்று உறை உயிரும் நீயே;***
***வாழியாய்! அடியேன் நின்னை மறப்பெனோ?***
***வயங்கு செந் தீச்***
***சூழுற உலைந்து போனேன்; காத்தருள்-சுருதி மூர்த்தி!***

***சுருதி மூர்த்தி*** *-மறைகளின் வடிவாய்த் திகழ்பவனே!;* ***ஆழிநீ அனலும் நீயே*** *- இந்தக் கடலும் நீதான்; கடலை எரித்த தீயும் நீயே;* ***அல்லவை எல்லாம் நீயே*** *- இவையிரண்டுமல்லாத வானும், மண்ணும், விசும்பும் ஆகிய அனைத்தும் நீயே;* ***ஊழிநீ உலகும் நீயே*** *- உலகத்தை அழிக்கின்ற கடையூழிக் காலமும் நீயே உன்னால் அழிக்கப்படும் உலகமும் நீயே;* ***அவற்று உறை உயிரும் நீயே*** *- அவ்வுலகத்துள் வாழும் எல்லா உயிரினங்களும் நீயே;* ***வாழியாய் அடியேன் நின்னை மறப்பனோ*** *- என்றும் வாழ்கின்ற பெருமானே அடியவனாகிய நான் உன்னை மறப்பேனோ?;* ***வயங்கு செந்தீச் சூழுற*** *- விளங்குகின்ற செந்நிறத் தீ என்னைச் சூழ்ந்து கொள்ள;* ***உலைந்து போனேன்*** *- (அதனால் நான்) அழிந்தே போனேன்;* ***காத்து அருள்*** *- அடியேனைக் காத்து அடைக்கலம் தந்தருள்வாயாக.*

*சுருதி - வேதம். 'திடவிசும் பெரி வளி நீர் நிலம் இவை மிசை, படர் பொருள் முழுவதுமாய் அவையவை தொறும், உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்ற திருவாய் மொழி நினைவு கூரத்தக்கது. கடலும் நீ. அக்கடலை அழித்த தீயும் நீ. கடையூழிக் காலமும் நீ. அக்காலத்து அழியும் உலகும் நீ அவ்வுலகத்தில் வாழும் உயிர்களும் நீ என்று வருணன் கூறியது பரமனது எல்லாமாயிருக்கும் தன்மையை உணர்த்தும், பரம் பொருள் என்றும் ஒரே தன்மையாய் நிலைத்து நிற்பது என்பதால் 'வாழியாய்' என்றான்.*

***6657. 'காட்டுவாய் உலகம்; காட்டிக் காத்து, அவை கடையில் செந் தீ***
***ஊட்டுவாய்; உண்பாய், நீயே; உனக்கும் ஒண்ணாதது உண்டோ?***
***தீட்டு வான் பகழி ஒன்றால் உலகங்கள் எவையும் தீய***
***வீட்டுவாய்; நினையின், நாயேற்கு இத்தனை வேண்டுமோதான்?***

***காட்டுவாய் உலகம்*** *- உலகங்களை யெல்லாம் படைப்பாய்;* ***காட்டிக் காத்து*** *- படைத்ததோடு அவற்றைக் காக்கவும் செய்வாய்;* ***அவை கடையில் செந்தீ ஊட்டுவாய்*** *- அவைகளை ஊழிக்காலத்து முடிவில் ஊழிக் காலப்பெருந்தீயூட்டி அழிப்பாய்;* ***உண்பாய் நீயே*** *- உலகனைத்தையும் உண்டு வயிற்றிலே வைத்துக் காப்பவனும் நீயே;* ***உனக்கும் ஒண்ணாததுண்டோ*** *- எல்லாம் வல்ல உனக்குச்*

*செய்ய இயலாத செயலும் உண்டோ?;* ***தீட்டுவான் பகழி ஒன்றால்*** *- தீட்டிக் கூர்மையாக்கப்பட்ட சிறந்ததொரு அம்பினாலேயே;* ***உலகங்கள் எவையும் தீய வீட்டுவாய்*** *- எல்லா உலகங்களும் தீய்ந்து போகும்படி அழிப்பாய்;* ***நினையின் நாயேற்கு*** *- நினைத்துப் பார்த்தால், நாய் போன்ற உனது அடியவனான எனக்கு;* ***இத்தனை வேண்டுமோதான்*** *- இத்தனை சினம் வேண்டுமோ?.*

*காட்டுதல் - படைத்தல். பிரமனாகப் படைப்பவனும், திருமாலாகக் காப்பவனும் சிவனாக அழிப்பவனும் ஒருவனே என்பதை 'காட்டி, காத்து, செந்தீ ஊட்டுவாய்" என்றது உணர்த்தும். செந்தீ ஊட்டிப் பின் உலகங்கள் அழியாதபடி, உண்டு பின் வயிற்றில் வைத்துக் காப்பவனும் இறைவனே என்பதனை "செந்தீ ஊட்டுவாய் உண்பாய் நீயே" என்பதுணர்த்தும். ஒரு அம்பால் உலகனைத்தையும் தீய்த்து அழிக்கவல்ல நீ எனக்காக இத்தனை சினம் கொள்ள வேண்டுமோ என்பான் 'நாயேற்கு இத்தனை வேண்டுமோ' என்றான். வான் பகழி - சிறந்த அம்பு. வீட்டுதல் - அழித்தல். மிகவும் எளிய அடியவன் நான் என்பதை 'நாயேன்' என்றான்.*

***6658. 'சண்ட வான் கிரண வாளால் தயங்கு இருட் காடு சாய்க்கும்***
***மண்டலத்து உறையும் சோதி வள்ளலே! மறையின் வாழ்வே!***
***பண்டை நான்முகனே ஆதி சராசரத்து, உள்ளப் பள்ளப்***
***புண்டரீகத்து வைகும் புராதனா! போற்றி, போற்றி!***

***சண்ட வான் கிரண வாளால்*** *- கொடிய, சிறந்த கிரணங்களாகிய வாளால்;* ***தயங்கு இருள் காட்டைச் சாய்க்கும்*** *- விளங்குகின்ற இருளாகிய காட்டை வெட்டிச் சாய்க்கின்ற;* ***மண்டலத்து உறையும் சோதி வள்ளலே*** *- சூரிய மண்டலத்தின் மத்தியிலே தங்கியிருக்கும் ஒளி வடிவான வள்ளலே;* ***மறையின் வாழ்வே*** *- வேதங்களின் வாழ்வாக விளங்குபவனே;* ***பண்டை நான்முகனே ஆதி*** *- பழமையான பிரமன் முதலாகிய;* ***சராசரத்து உள்ளப் பள்ளப் புண்டரீகத்து வைகும்*** *- நிற்பதனவும், இயங்குவனவுமான உயிர்களின் உள்ளமாகிய தாமரையிலே வசிக்கும்;* ***புராதனா போற்றி போற்றி*** *- பழமைமிக்கவனே போற்றி போற்றி. சண்டம் - கொடுமை. ஈண்டு வெப்பக் கொடுமையே உணர்த்தும். கிரணத்தை வாளாகவும், இருளைக் காடாகவும் கூறியது உருவகம். சூரிய மண்டலத்தின் மத்தியிலே இறைவன் உறைகிறான் என்பது புராணக் கொள்கை. மண்டலம் - பரிதிமண்டலம் உயிரினங்களின் உள்ளத்தாமரையில் உறைபவன் பரமன் ஆதலின் "சராசரத்து உள்ளப் பள்ளப்புண்டரீகத்து வைகும்" என்றான். உள்ளப் பள்ளம் - உள்ளமாகிய பள்ளம் என்றது உருவகம். புராதனன் - பழமையானவன். உள்ளப் பள்ளம் - உள்ளமாகிய பள்ளம் என்பதால் உருவகம்.*

***6659. ' "கள்ளமாய் உலகம் கொள்ளும் கருணையாய்! மறையில் கூறும்
எள்ளல் ஆகாத மூலத்து யாதுக்கும் முதலாய் உள்ள
வள்ளலே! காத்தி" என்ற மா கரி வருத்தம் தீர,
புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதனா! போற்றி, போற்றி!***

***கள்ளமாய் உலகம் கொள்ளும் கருணையாய்*** - *ஒருவரும் உணராதவாறு உலகத்தை எல்லாம் உதரத்தில் வைத்துக் காத்தருளிய கருணை மிக்கவனே;* ***மறையில் கூறும்*** - *வேதங்களில் விரித்துக் கூறப்படுகின்ற;* ***எள்ளல் ஆகாத மூலத்து*** - *எங்கும் இகழ்ந்து பேசமுடியாத மூலப்பகுதியிலிருந்து தோன்றிய;* ***யாதுக்கும் முதலாயுள்ள வள்ளலே*** - *எல்லா உயிர்களுக்கும் முதலாக உள்ள வள்ளலே;* ***காத்தி என்ற மாகரி வருத்தம் தீர*** - *என்னைக் காத்தருள்வாயாக என்று முறையிட்ட பெருமை மிக்க யானையின் துன்பம் தீர;* ***புள்ளின் மேல் வந்து தோன்றும்*** - *பறவையரசனான கருடன் மீதமர்ந்து வந்து தோன்றிய;* ***புராதனா போற்றி போற்றி*** - *பழமையோனே போற்றி போற்றி!*

*கள்ளமாய் - ஒருவரும் உணராதவாறு மூலத்து - மூலப்பகுதியிலிருந்து மாகரி - பெருமையுடைய யானை (கஜேந்திரன்) புள் - பறவை, ஈண்டுக்கருடன். வருத்தம் - முதலையால் பட்ட துன்பம். எவரும் உணரமுடியாதவாறு உலகத்துயிர்களை எல்லாம் காத்தருளும் கருணை உடையவன் இறைவன் என்பதை 'கள்ளமாய் உலகம் கொள்ளும் கருணையாய்' என்பதுணர்த்தும்.*

***6660. 'அன்னை நீ; அத்தன் நீயே; அல்லவை எல்லாம் நீயே;
பின்னும் நீ; முன்னும் நீயே; பேறும் நீ; இழவும் நீயே;
என்னை, "நீ இகழ்ந்தது" என்றது எங்ஙனே? ஈசன் ஆய
உன்னை நீ உணராய்! நாயேன் எங்ஙனம் உணர்வேன், உன்னை?'***

***அன்னை நீ அத்தன் நீயே*** - *எனக்குத் தாயும் நீ, தந்தையும் நீயே;* ***அல்லவை எல்லாம் நீயே*** - *தாயும் தந்தையுமல்லாத மற்ற எல்லா உறவும் நீயே;* ***பின்னும் நீ முன்னும் நீயே*** - *எல்லாவற்றுக்கும் அந்தமும் நீ ஆதியும் நீயே;* ***பேறும் நீ இழவும் நீயே*** - *எனக்குரிய நற்பேறுகளும் நீ இழப்பும் நீயே;* ***என்னை*** - *(இவ்வாறு எல்லா நிலையிலும் உன்னையே சார்ந்திருக்கும்) என்னைநோக்கி;* ***'நீ இகழ்ந்தது' என்றது எங்ஙனே*** - *'நீ என்னை இகழ்ந்தாய்' என்று கூறுவது எப்படிப் பொருந்துவதாகும்;* ***ஈசன் ஆய உன்னை நீ உணராய்*** - *எல்லாம்வல்ல இறைவனாகிய நீயே உன்னை உணராதவனாய் இருக்கிறாய்;* ***உன்னை நாயேன் எங்ஙனம் உணர்வேன்*** - *எனவே, அடியவனாகிய நான் உனது வல்லபத்தை எவ்வாறு உணர்வேன்?*

*அத்தன் - தந்தை. அல்லவை - பிற உறவுகள் 'பின்' என்றது பின் நிகழும் காரியத்தையும் 'முன்' என்றது காரியத்துக்கு முன் உள்ள காரணத்தையும் உணர்த்தும் என்பதும் ஒரு பொருள்; அதுவும் பொருந்தும். "அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய். ஒத்தொல்லாத பல் பிறப் பொழித்து நம்மை ஆட் கொள்வான்' என்ற திருச்சந்த விருத்தம் (115) ஒப்பு நோக்கத் தக்கது 'பேறும் நீ இழவும் நீயே' என்பது 'நல்குரவும் செல்வும்' நரகும் சுவர்க்கமுமாய் வெல் பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய், பல்வகையும் பரந்த பெருமான்' என்ற திருவாய் மொழி (2656)யுடன் ஒப்பிட்டு உணரத்தக்கது 'உன்னை நீதானும் உணராதாய் உன் வடிவம் தன்னை நீகாட்டத் தளைந்திடுவன் நான்' என்ற வில்லி பாரதம் (வில்லி. கிருட்டினன் தூது 362) ஒப்புநோக்கத்தக்கது. தன்னை உணராத தகைமை பெருமானுக்கு உண்டு எனக் கம்பர் பின்னும் குறித்துளார் (8784, 10063)*

***6661. பாய் இருள் சீய்க்கும் தெய்வப் பருதியைப் பழிக்கும் மாலை,***
***மா இருங் கரத்தால், மண்மேல் அடியுறையாக வைத்து,***
***'தீயன சிறியோர் செய்தால், பொறுப்பது பெரியோர் செய்கை;***
***ஆயிர நாமத்து ஐயா! சரணம்' என்று அடியில் வீழ்ந்தான்.***

*__பாய் இருள் சீய்க்கும்__ - எங்கும் பரவிய இருளைப் போக்குகின்ற; __தெய்வப் பருதியை__ - தெய்வத்தன்மை வாய்ந்த சூரியனையும்; __பழிக்கும் மாலை__ - பழித்துக் கீழானதென்று கூறச் செய்யும் ஒளிமிக்க மாலை ஒன்றை; __மாயிரும் கரத்தால்__ - தனது பெரிய கைகளால்; __மண் மேல் அடியுறையாக வைத்து__ - (ராமபிரானுக்கு முன்பு) தரைமீது காணிக்கையாக வைத்து; __தீயன சிறியோர் செய்தால்__ - சிறியவர்கள் அறியாமையினாலே தீமை செய்வார்களானால்; __பொறுப்பது பெரியோர் செய்கை__ - அத்தீமையைப் பொறுத்தருள்வது பெரியவர்களின் செய்கையாகும்; __ஆயிரம் நாமத்து ஐயா__ - ஆயிரம் திருநாமங்களை உடைய தலைவனே; __சரணம் என்று அடியில் வீழ்ந்தான்__ - அடியேன் உனக்கு அடைக்கலம் என்று கூறியபடி வருணன் இராமபிரானது திருவடிகளில் விழுந்தான்.*

*பாய்இருள் - பரவிய இருள் சீய்க்கும் - மாற்றும் (சிதைக்கும்). சிறந்த ஒளியினால் சூரியனையும் கீழ்ப்படுத்தும் மணியை 'பருதியைப் பழிக்கும் மாலை' என்றார். மாயிரும் கரம் - மிகப் பெரிய கைகள் (மீமிசைச் சொல்). அடியுறை - திருவடிகளுக்குப் பொருந்துவதாகிய காணிக்கைப் பொருள். "சீறுவாய் அல்லை ஐய சிறியவர் தீமை செய்தால், ஆறுவாய் நீ அலால் மற்று ஆர் உளர்' எனத் தாரை இலக்குவனிடம் கூறியது (4323) இங்கு நினையத் தக்கது. பரமனுக்கு ஆயிரம் திருநாமங்கள் உண்டு. பேராயிரம் உடையான்' என்று பேசுவார் "சேராதன உளரோ பெருஞ் செல்வர்க்கு வேதம் செப்பும், பேர் ஆயிரம் திண் பெரும்புயம் ஆயிரம் பெய்துளவத், தாரார் முடி ஆயிரம் குரு கூர்ச் சட கோபன் சொன்ன, ஆரா அமுதக் கவி ஆயிரம் அவ்*

*வரியினுக்கே' என்ற சடகோபரந்தாதி (45) ஒப்பு நோக்கத் தக்கது. சரணம் - அடைக்கலம்)*

*இராமபிரான் சினம் தணிந்து காலம் தாழ்த்தமைக்குக் காரணம் வினவுதல்*

***6662. பருப்பதம் வேவது என்னப் படர் ஒளி படராநின்ற***
***உருப் பெறக் காட்டி நின்று, 'நான் உனக்கு அபயம்' என்ன,***
***அருப்பு அறப் பிறந்த கோபம் ஆறினான், ஆறா ஆற்றல்***
***நெருப்பு உறப் பொங்கும் வெம் பால் நீர் உற்றது அன்ன நீரான்.***

***பருப்பதம் வேவது என்ன*** *- ஒரு மலையே நெருப்புப் பற்றி எரிவது போல;* ***படர் ஒளி படரா நின்ற உருப்பெறக் காட்டி நின்று*** *- பரவிய ஒளி படர்ந்து நின்று தனது வடிவத்தை நன்றாகக் காட்டி நின்று;* ***நான் உனக்கு அபயம் என்ன*** *- உனக்கு நான் அடைக்கலம் என்று வருணன் கூற;* ***அருப்பறப் பிறந்த கோபம் ஆறினான்*** *- இராமபிரான் மிகுதியாக உண்டான சினம் தணிந்தான்;* ***ஆறா ஆற்றல் நெருப்பு உற*** *- தணியாத வலிமை கொண்ட நெருப்புப் பொருந்தலால்;* ***பொங்கும் வெம்பால்*** *- பொங்கிய காய்ந்த பாலில்;* ***நீர் உற்றது அன்ன நீரான்*** *- நீர் தெளித்தால் தணிவது போன்ற தன்மையன் ஆயினான்.*

*பருப்பதம் - மலை. உருப்பெறக் காட்டல் - வடிவத்தை நன்றாகக் காட்டல். அரும்பு + அற என்பது அரும்பற என்றாகி, பின்னர் அருப்பற என்று வலித்தது. அரும்பு இங்கே முதனிலைத் தொழிற்பெயர் (அரும்புதல்). அரும்புதல் அளவுகூட இல்லாமல் கோபம் ஆறியது என்பதாம். மலையே வேவது போன்ற தோற்றத்தோடு வந்த வருணன் 'நான் உனக்கு அபயம்' என அபயக் குரல்தந்தான். அதனைக் கேட்டும், வருணனது வடிவத்தைக் கண்டும் பொங்கும் பாலில் நீர் தெளித்தால் தணிவது போல, இராமபிரான் சினம் அடங்கினான் என்க. நீரான் - தண்மையன்.*

***6663. 'ஆறினாம்; அஞ்சல்; உன்பால் அளித்தனம் அபயம், அன்பால்;***
***ஈறு இலா வணக்கம் செய்து, யாம் இரந்திட, எய்திடாதே,***
***சீறுமா கண்டு வந்த திறத்தினைத் தெரிவதாகக்***
***கூறுதி, அறிய' என்றான்; வருணனும், தொழுது***

**கூறும்:**

***ஆறினாம் அஞ்சல் உன்பால் அளித்தனம் அபயம்*** *- கோபம் தணிந்தேன், அஞ்சாதே உனக்கு அடைக்கலம் அளித்தேன்;* ***அன்பால் ஈறிலா வணக்கம் செய்து*** *- உன்னிடம் அன்பு கொண்டவனாய் உனக்கு முடிவில்லாத வணக்கம் செய்து;* ***யாம்***

***இரந்திட எய்திடாதே*** *- நான் பணிவுடன் கெஞ்சிக் கேட்க வராமல்;* ***சீறுமா கண்டு வந்த திறத்தினை*** *- சீற்றமிகக் கொண்டு நின்றதைக் கண்டு அதன் பிறகு இங்கு வந்த தன்மையை;* ***தெரிவதாகக் கூறுதி அறியஎன்றான்*** *- நான் தெரிந்து கொள்ளுமாறு கூறுவாயாக என்றான் இராமபிரான்;* ***வருணனும் தொழுது கூறும்*** *- அதைக் கேட்ட வருணன் இராமபிரானை வணங்கிக் கூறுவானானான்;*

*ஆறுதல் - தணிதல். அஞ்சல் - அஞ்சாதே பணிந்து வணங்கி வேண்டிய போது வராமல், சினந்து சீறிய போது வந்த தன்மைக்கு வியந்து 'சீறுமா கண்டு வந்த திறத்தினைக் கூறுதி' என்று இராமபிரான் கேட்க அதற்கு வருணன் மறுமொழி கூறினான் என்பது கருத்து தெரிவதாக - யாவரும் உணரும்படி. அறியக் கூறுதி - யானறிந்து கொள்ளக் கூறுக.*

***6664. 'பார்த்தனில் பொறையின் மிக்க பத்தினிக்கு உற்ற பண்பு***
***வார்த்தையின் அறிந்தது அல்லால், தேவர்பால் வந்திலேன், நான்;***
***தீர்த்த! நின் ஆணை; ஏழாம் செறி திரைக் கடலில் மீனின்***
***போர்த் தொழில் விலக்கப் போனேன்; அறிந்திலேன்***

***புகுந்தது ஒன்றும்.'*** **பார்த்தனில் பொறையின் மிக்க பத்தினிக்கு** *- நிலமகளைக் காட்டிலும் பொறுமைமிக்க பத்தினியான சீதா பிராட்டி;* ***உற்ற பண்பு வார்த்தையின் அறிந்ததல்லால்*** *- நேர்ந்ததனை இப்போது உனது வார்த்தையால் அறிந்தேனேயல்லாது;* ***தேவர் பால் வந்திலேன் நான்*** *- நான் தேவர்களிடம் வந்தேனல்லேன் (எனவே பிராட்டியின் நிலையை முன்பு அறியேன்);* ***தீர்த்த! நின் ஆணை*** *- தூய்மை மிக்கவனே! உன் மீது ஆணையாகக் கூறுகிறேன்;* ***ஏழாம் செறி திரைக் கடலில்*** *- அலைகள் மிகுந்து செறிந்துள்ள ஏழாவது கடலிலே;* ***மீனின் போர்த் தொழில் விலக்கப் போனேன்*** *- மீன்கள் தங்களுக்குள் பகை கொண்டு செய்த போரை விலக்கச் சென்றிருந்தேன்;* ***அறிந்திலேன் புகுந்தது ஒன்றும்*** *- ஆதலால் இடையில் நிகழ்ந்த செயல் ஒன்றினையும் அறியாதவனானேன்.*

*பார் - உலகம், இங்கு நிலமகளை உணர்த்தும். பார்தனில் என்றது எதுகை நோக்கி ஓசை இன்பத்துக்காக பார்த்தனில் என வலித்தது. வருணனுக்குச் சீதைக்கு நேர்ந்த துன்பமும் தெரியாது. இராமபிரான் வருமாறு வேண்டியதும் தெரியாது என்பதனை 'புகுந்தது ஒன்றும் அறிந்திலேன்' என்றான். நீ இப்போது கூறிய உனது வார்த்தையால்தான் தெரிந்தேன் என்பதனை 'வார்த்தையின் அறிந்த தல்லால்' என்றான்*

*ஒருவேளை தேவர்கள் எவரையாவது சந்தித்திருந்தால் அவர்கள் கூறக்கேட்டிருக்கலாம் என இராமன் கருதக் கூடும் என்பதால் 'தேவர் பால் வந்திலேன் என்றான். தீர்த்தன் - தூய்மையானவன். மீனின் போர்த் தொழில் - சுறா மீன்கள் தங்களுக்குள்ளே போரிட்ட செயல்.*

*இராமபிரான் அம்புக்கு இலக்கு யாதென வருணன் கூறுதல்*

***6665. என்றலும், இரங்கி, ஐயன், 'இத் திறம் நிற்க; இந்தப்
பொன்றல் இல் பகழிக்கு அப்பால் இலக்கம் என்?
புகறி'என்ன,
'நன்று' என வருணன்தானும், 'உலகத்து நலிவு தீர,
குன்று என உயர்ந்த தோளாய்! கூறுவல்' என்று
கூறும்:***

***என்றலும் இரங்கி ஐயன்*** *- என்று வருணன் கூறக் கேட்டதும் இராமபிரான் இரக்கம் கொண்டு வருணனை நோக்கி;* ***இத்திறம் நிற்க*** *- இது இவ்வாறு இருக்கட்டும் (இனி நடப்பதைப் பார்ப்போம்);* ***இந்தப் பொன்றல் இல்பகழிக்கு*** *- வில்லில் பூட்டிய இந்த அழிவில்லாத அம்புக்கு (வீணாகப் போகாமல்);* ***அப்பால் இலக்கம் என் புகறி என்ன*** *- இலக்கு யாதென்று கூறுவாயாக என்று வினவ;* ***நன்று என வருணன் தானும்*** *- நல்லது என்று வருணனும் ராமனை நோக்கி;* ***குன்றென உயர்ந்த தோளாய்*** *- மலை போன்ற உயர்ந்த தோள்களை உடைய பெருமானே;* ***உலகத்து நலிவு தீர*** *- இவ்வுலகத்தின் துன்பமெல்லாம் தீரும்படி;* ***கூறுவல் என்று கூறும்*** *- அம்புக்கு இலக்கம் யாதெனக் கூறுவேன் என்று சொல்லலானான்.*

*பொன்றுதல் - அழிதல். வருணன் மீது எய்வதற்கு வில்லில் பூட்டிய அம்பு வீணாகக் கூடாது. வருணன் 'அபயம்' என்று கூறிச் சரணடைந்து விட்டான் எனவே அம்புக்கு வேறு இலக்கு ஏதேனும் வேண்டும். பொன்றுதலில்லா அம்பு அல்லவா? பரசுராமனிடம் வில்லை வாங்கி அம்பு பூட்டி இலக்கம் கேட்டது போல (1298) 'பகழிக்கு அப்பால் இலக்கம் என்' என்று இராமபிரான் கேட்க, உலகத்தின் துன்பம் தீர, கூறுவேன் என்று கூறலானான். உலகத்தை நலிவு செய்து கொண்டிருந்த அரக்கர்கள் இராமனது அம்பால் அழிவர் என்பதால் "உலகத்து நலிவு தீர" என்றான்.*

***6666. 'மன்னவ! மருகாந்தாரம் என்பது ஓர் தீவின்
வாழ்வார்,
அன்னவர் சதகோடிக்கும் மேல் உளார், அவுணர்
ஆயோர்,
தின்னவே உலகம் எல்லாம் தீந்தன; எனக்கும் தீயார்;
மின் உமிழ் கணையை வெய்யோர்மேல் செல விடுதி'
என்றான்.***

***மன்னவ*** - உலகனைத்துக்கும் மன்னனாக விளங்குபவனே; ***மருகாந்தாரம் என்பதோர் தீவில் வாழ்வார்*** - மருகாந்தாரம் என்ற பெயர் கொண்ட கடல் நடுவே உள்ள தீவில் வாழ்பவர்கள்; ***அன்னவர் சத கோடிக்கு மேல் உளர்*** - அத்தகையோர் நூறு கோடிக்கு மேற்பட்ட எண்ணிக்கையினராக உள்ளனர்; ***அவுணர் ஆயோர் தின்னவே உலகமெல்லாம் தீந்தன*** - அரக்கர்களான அவர்கள் தின்பதால் உலகமெல்லாம் அழிந்து போயிற்று; ***எனக்கும் தீயார்*** - அவ்வரக்கர்கள் எனக்கும் தீங்கு செய்யும் தீயவர்கள்; ***மீன் உமிழ் கணையை*** - மின்னலைப் போல ஒளியை உமிழும் இந்த அம்பை; ***வெய்யோர் மேற்செல விடுதி என்றான்*** - அந்தக் கொடியவர்கள் மேல் செல்லுமாறு விடுவாயாக என்றான்.

*'உலகம்' இடவாகு பெயராக உலக மக்களை உணர்த்தியது. அரக்கர் தின்பதற்கு உரியது அவ்வுயிர்களின் உடல்களேயாம். தீயும் என்பது உறுதியாதலால் 'தீந்தது' என்று கூறினான் என்க; (கால, வழுவமைதி) தன்னை அடைக்கலமடைந்த வருணனுக்குத் தீயோர்தனக்கும் தீயோர் என்பது இராமனது கொள்கையாதலின் 'எனக்கும் தீயோர்' என்றான். அவுணர் - அசுரர். சதம் - நூறு.*

***6667. நேடி, நூல் தெரிந்துளோர்தம் உணர்விற்கும், நிமிர நின்றான்,***
***'கோடி நூறு ஆய தீய அவுணரைக் குலங்களோடும்***
***ஓடி நூறு' என்று விட்டான்; ஓர் இமை ஒடுங்கா முன்னம்,***

***பாடி நூறாக நூறி மீண்டது, அப் பகழித் தெய்வம்.***

**நேடி நூல் தெரிந்துளோர் தம்** - நல்ல ஞான நூல்களைத் தேடி, ஆராய்ந்து கற்றுத் தெளிந்த அறிவுடைய ஞானிகளது; **உணர்விற்கும் நிமிர நின்றான்** - ஞான உணர்வுக்கும் எட்டாது உயர்ந்து விளங்குபவனான இராமபிரான்; **கோடி நூறு ஆயதீய அவுணரை** - (தனது அம்பினை நோக்கி) நூறு கோடியினரான கொடிய அரக்கர்களை; **குலங்களோடும் ஓடி நூறு என்று விட்டான்** - அவர்களது குலங்களோடும் ஓடிச் சென்று அழிப்பாயாக என்று கூறி எய்தான்; **ஓர் இமை ஒடுங்கா முன்னம்** - ஒரு இமைப்பொழுது ஆவதற்கு முன்பே; **அப் பகழித் தெய்வம்** - அந்த அம்பாகிய தெய்வம்; **பாடி நூறாக நூறி மீண்டது** - அவ்வரக்கரூர் தூளாகும்படி அழித்துவிட்டு மீண்டு வந்தது.

*நேடுதல் - ஆராய்தல். நூல் - ஞான நூல். நிமிர - உயர்ந்து, ஞானிகளின் உணர்வுக்கு எட்டாதவன் "எங்கள் நான் மறைக்கும் தேவர் அறிவுக்கும் பிறர்க்கும் எட்டாச் செங்கண் மால்" (417) என்று முன்பும் கூறுவது கருதத்தக்கது. உணர்ந்துணர்ந்துணரிலும் இறைநிலை உணர்வரிது' (1.3.6) என்ற திருவாய்மொழியும் நினைவு கூரலாம். "கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலாக் கொற்றவன்' (56) எனவும் கம்பரே முன்னரும் கூறியுள்ளார். நூறு - அழித்திடு. இமை ஒடுங்கா முன்னம் - கண்ணை இமைத்து முடிப்பதற்குள். பிரமாத்திரம் ஆதலாலும் தீயோரை நூறிட எடுத்த அவதாரப் பெருமானுக்கு உரியது ஆதலாலும் அம்பினைப் பகழித் தெய்வம் என்றார். பாடி - ஊர்; இங்கு மருகாந்தாரம்.*

***6668. ஆய்வினை உடையர் ஆகி, அறம் பிழையாதார்க்கு எல்லாம்***
***ஏய்வன நலனே அன்றி, இறுதி வந்து அடைவது உண்டோ?***
***மாய் வினை இயற்றி, முற்றும் வருணன்மேல் வந்த சீற்றம்,***
***தீவினை உடையார்மாட்டே தீங்கினைச் செய்தது அன்றே.***

***ஆய்வினை உடையராகி*** - *ஆராய்ந்து புரியும் நல்ல செயல்களையே உடையவராகி;* ***அறம்பிழையாதார்க்கு எல்லாம்*** - *அறநெறியிலிருந்து தவறாது வாழும் நல்லவர்களுக்கு எல்லாம்;* ***ஏய்வன நலனே அன்றி*** - *எவ்விதத்தும் நன்மையே எய்துமே யல்லாது;* ***இறுதி வந்தடைவதுண்டோ*** - *அழிவு வந்து அடைவதுண்டோ? (இல்லை);* ***மாய் வினை இயற்றி*** - *அழியும்படியான செயலைச் செய்து;* ***வருணன் மேல் வந்த சீற்றம்*** - *வருணன் மீது வந்த இராமபிரானது வெகுளி (வருணனை எதுவும் செய்யாது);* ***தீவினை உடையார் மாட்டே*** - *தீய செயல்களைப் புரிந்துவந்த மருகாந்தாரத்து அரக்கர் பக்கம் சென்று;* ***தீங்கினைச் செய்ததன்றே*** - *அவர்களுக்குத் தீங்கை விளைவித்ததல்லவா?*

*அற நெறியில் நின்று ஒழுகும் நல்லோர்களுக்கு எவ்விதத்திலும் நன்மையே நடக்கும் என்ற பொதுப் பொருளைக் கூறி வருணன் உய்ந்தான் மருகாந்தாரத்து அரக்கர் அழிந்தனர் என்ற சிறப்புப் பொருளை விளக்குவதால் இது வேற்றுப் பொருள் வைப்பணியாகும். ஆய் வினை - ஆராய்ந்து செய்யும் நல்ல செயல்கள். மாய் வினை - மாய்ப்பதற்குரிய வினை.*

***6669. பாபமே இயற்றினாரை, பல் நெடுங் காதம் ஓடி,***
***தூபமே பெருகும் வண்ணம், எரி எழச் சுட்டது அன்றே,***
***தீபமே அனைய ஞானத் திரு மறை முனிவர் செப்பும்***
***சாபமே ஒத்தது அம்பு;-தருமமே வலியது அம்மா!***

***பாபமே இயற்றினாரை*** - *பாவம் மிக்க செயல்களையே புரிந்து வந்த அரக்கர்களை;* ***பல நெடும்காதம் ஓடி*** - *பலகாதங்களாகிய நெடும் தூரம் விரைந்து சென்று;* ***தூபமே பெருகும் வண்ணம்*** - *மருகாந்தாரத் தீவு முழுதும் புகை சூழும்படி;* ***எரி எழச் சுட்டது*** - *நெருப்பு எழும்படி சுட்டு அழித்தது;* ***தீபமே அனைய ஞான*** - *புற இருளை மாற்றும் விளக்குப் போன்று, அக இருளை மாற்றவல்ல தீபமாகிய ஞானம் மிக்க;* ***திருமுறை முனிவர் செப்பும்*** - *தெய்வத்தன்மை வாய்ந்த வேதங்களை அறிந்த முனிவர்கள்*

*கூறுகின்ற;* ***சாபமே ஒத்தது அம்பு*** *- சாப மொழியை ஒத்தது இராமபாணம்;* ***தருமமே வலியது அம்மா*** *- தருமம் எத்தனை வலிவுடையது.*

*"நிறை மொழிமாந்தர் பெருமை நிலத்து மறை மொழிகாட்டி விடும்' என்பது குறள் கூறும் உண்மை. அன்றே என்பது அசை. அம்மா - வியப்பிடைச் சொல். அதர்மத்தை விரைந்தழிக்கவல்ல தர்மமே வலிமை மிக்கது என்பார் 'தருமமே வலியது' என்றார்.*

*இராமன் வழி வேண்ட வருணன் சேதுகட்டச் சொல்லுதல்*

***6670. 'மொழி உனக்கு அபயம் என்றாய்; ஆதலான், முனிவு தீர்ந்தேன்;***
***பழி எனக்கு ஆகும் என்று, பாதகர் பரவை என்னும்***
***குழியினைக் கருதிச் செய்த குமண்டையைக் குறித்து நீங்க,***
***வழியினைத் தருதி' என்றான், வருணனை நோக்கி, வள்ளல்.***

***வள்ளல் வருணனை நோக்கி*** *- வேண்டுவார் வேண்டியதருளும் வள்ளலாகிய இராமபிரான் வருணனைப் பார்த்து;* ***மொழி உனக்கு அபயம் என்றாய்*** *- 'உனக்கு அடைக்கலம்' என்று ஒரு சொல் நீ சொன்னாய்;* ***ஆதலால் முனிவு தீர்ந்தேன்*** *- அதனாலே உன் மீது கொண்டிருந்த சினம் தீர்ந்தேன்;* ***பழி எனக்கு ஆகும் என்று*** *- இராமன் தனது மனைவியைக் கூடக் காப்பாற்றும் வலிமை இல்லாதவன் என்று உலக மக்கள் கூறும் பழிக்கு நான் ஆளாகட்டும் என்று;* ***பாதகர் பரவை என்னும் குழியினைக் கருதி*** *- பாதகர்களாகிய அரக்கர்கள் இலங்கைக்கு அரணாகக் கடல் என்ற குழி இருப்பதைக் கருதி;* ***செய்த குமண்டையைக் குறித்து*** *- செய்த கூத்தினைக் குறித்து;* ***நீங்க வழியினைத் தருதி என்றான்*** *- அது நீங்க, இலங்கை செல்லுதற்குரிய வழியைத் தருவாயாக என்றான்.*

*பாதகர் - இராவணன் முதலானோர் பாதகர் 'பரவை (கடல்) நமக்குப் பாதுகாப்பான 'நீரரண்' என்று நினைக்கலாம்; அது நமக்குத் தாண்ட முடிந்த ஒரு சிறிய 'குழி'தான் என்பது இராமபிரான் கருத்து. குமண்டை - மகிழ்ச்சிச் செருக்கால் செய்யும் ஒருவகைக் கூத்து.*

***6671. 'ஆழமும் அகலம்தானும் அளப்ப அரிது எனக்கும், ஐய!***
***ஏழ் என அடுக்கி நின்ற உலகுக்கும் எல்லை இல்லை;***
***வாழியாய்! வற்றி நீங்கில், வரம்பு அறு காலம் எல்லாம்***

***தாழும்; நின் சேனை உள்ளம் தளர்வுறும்-தவத்தின் மிக்காய்!***

***தவத்தின் மிக்காய்*** - *மிகுந்த தவம் பொருந்திய பெருமானே;* ***ஆழமும் அகலம் தானும் அளப்பரிது எனக்கும் ஐய*** - *ஐயனே! இந்தக் கடலின் ஆழத்தையும் அகலத்தையும் அளந்தறிவதென்பது கடல் வேந்தனான எனக்கும் அரிய தொன்றாகும்;* ***ஏழ் என அடுக்கி நின்ற உலகுக்கும் எல்லை இல்லை*** - *'ஏழுலகங்கள்' என அடுக்காக உள்ள உலகுக்கும் கடலில்லையேல் எல்லையில்லை;* ***வாழியாய் வற்றி நீங்கில்*** - *வாழ்வுக்குரிய இறைவனே, இந்தக் கடலை வற்றச் செய்து, நீர் முழுவதையும் நீங்கச் செய்ய;* ***வரம்பறு கால மெல்லாம் தாழும்*** - *அளவில்லாத காலம் தாமதமாகும்;* ***நின் சேனை உள்ளம் தளர்வுறும்*** - *உனது வானர சேனை, காலம் நீட்டிப்பதால் மனம்தளர்ந்து போகநேரிடும் (என்றான்).*

*'வழியினைத் தருதி' என்று கேட்ட ராமபிரானுக்கு வருணன் கூறிய மறுமொழி இது. இந்தக் கடலின் ஆழத்தையும் அகலத்தையும் அளந்தறியக் கடல் தெய்வமாகிய என்னாலும் இயலாது என்பான் 'எனக்கும் அளப்பரிது' என்றான். கடல் நீர் வற்றி நீங்குமானால் உலகுக்கு எல்லை இல்லாது போகும் என்பான் 'வற்றி நீங்கில் 'உலகுக்கு எல்லை இல்லை' என்றான். நீர்வற்றி நீங்கினால் உலகுக்கு எல்லை இல்லாது போகும் என்பதைத் தவிர, அப்படி வற்றச் செய்ய அளவற்ற காலம் கடந்து போகும் என்பான் 'வரம்பறு காலமெல்லாம் தாழும்" என்றான். அதனால் நின் வானர சேனை உள்ளம் சோர்ந்து போய் விடும் என்பான் 'நின் சேனை உள்ளம் தளர்வுறும்" என்றான். கடலில் வழி உண்டாக்க, கடல் நீரை வற்றச் செய்வது ஒரு வழி. அதனை இராமபிரான் எண்ணியிருக்கக் கூடும் என்று கருதி, அவ்வாறு செய்தால் நேரும் விளைவுகளை வருணன் விவரிப்பானாயினான். உலகுக்கு எல்லையில்லாது போகும் கடல்நீரை வற்றச் செய்யக் காலம் தாழ்க்கும் என்று கூறி இது ஏற்புடைய தல்ல என விலக்கி, வேறு வழி கூறலானான் என்க.*

***6672. 'கல்லென வலித்து நிற்பின், கணக்கு இலா உயிர்கள் எல்லாம்***
***ஒல்லையின் உலந்து வீயும்; இட்டது ஒன்று ஒழுகாவண்ணம்***
***எல்லை இல் காலம் எல்லாம் ஏந்துவென், இனிதின்; எந்தாய்!***
***செல்லுதி, "சேது" என்று ஒன்று இயற்றி, என் சிரத்தின் மேலாய்.'***

***எந்தாய்*** - *என் தந்தையே;* ***கல் என வலித்து நிற்பின்*** - *கடல் நீரைக் கல்லைப் போலக் கடினமாக்கி நின்றால்;* ***கணக்கிலா உயிர்கள் எல்லாம் ஒல்லையில் உலந்து வீயும்*** - *கடலில் வாழும் கணக்கில்லாத உயிரினங்களெல்லாம் வாழ முடியாதபடி விரைவில் இறந்து படும்;* ***இட்டது ஒன்று ஒழுகா வண்ணம்*** - *என்னிடம் இட்டது எதுவும் கீழே ஒழுகிவிடாதபடி;* ***எல்லையில் காலமெல்லாம் ஏந்துவன்*** - *அளவில்லாத காலமெல்லாம் தாங்கி ஏந்திக் கொண்டிருப்பேன்* ***என் சிரத்தின்***

**மேலாய்** - எனது தலையின் மீதாக; **சேது என்று ஒன்று இயற்றி** - அணை என்ற ஒன்றை இயற்றி; **இனிதின் செல்லுதி** - அதன் வழியாக இனிதே செல்லுவாயாக (என்றான்)

*இராமபிரான் சேதுகட்டப் பணித்தல்*

***6673. 'நன்று, இது புரிதும் அன்றே; நளிர் கடல் பெருமை நம்மால்***
***இன்று இது தீரும் என்னில், எளிவரும் பூதம் எல்லாம்;***
***குன்று கொண்டு அடுக்கி, சேது குயிற்றுதிர்' என்று கூறிச்***
***சென்றனன், இருக்கை நோக்கி; வருணனும் அருளின் சென்றான்.***

**நன்று இது புரிதும்** - நல்லது இதைச் செய்வோம் என்று கூறிய இராமபிரான்; **நம்மால் நளிர்கடல் பெருமை** - கடல்மீது அணைகட்டுவோமானால், நம்மால் இந்தக் குளிர்ந்த கடலுக்குள்ள பெருமை; **இன்று இது தீரும் என்னில்** - நாம் அணைகட்டிக் கடந்து செல்வதால் தீருமாயின்; **பூதமெல்லாம் எளிவரும்** - மற்ற நான்கு பூதங்களும் நமக்கு எளிமைப்படும்; **குன்று கொண்டு அடுக்கிச் சேது குயிற்றுதிர்** - குன்றுகளைக் கொண்டு வந்து அடுக்கிக் கடலின்மீது அணைகட்டுங்கள்; **என்று கூறிச் சென்றனன் இருக்கை** - என்று வானர வீரர்களுக்குப் பணித்து விட்டுத் தனது இருப்பிடம் செல்லலானான்; **வருணனும் அருனின் சென்றான்** - வருணனும் இராமபிரானது அருளுக்கு உரியவனாகி (விடைபெற்றுச்) சென்றான். நளிர்கடல் - குளிர்ந்த கடல். கடலுக்குரிய பெருமை 'ஆழமும் அகலம் தானும் அளப் பரிது' நாம் 'அணை கட்டுவதால் அந்தப் பெருமை நீங்கும் என்பான் 'இன்று இது தீரும்' என்றான். தீரவே மற்றைய பூதங்களான நிலம், தீ, காற்று, விசும்பு ஆகியவையும் பெருமை குறைந்து நமக்கு எளிமைப்படும் என்பான்' எளி வரும் பூத மெல்லாம்' என்றான். கடல் நீரை வற்றச் செய்வதோ, கல்லைப் போல் இறுகும்படி செய்வதோ தவிர்ந்து மலைகளைக் கொண்டு வந்து அடுக்கி அணை கட்டுங்கள் என்பான் 'குன்று கொண்டு அடுக்கிச் சேது குயிற்றுதிர்' என்றான். குயிற்றுதல் - கட்டுதல். 'அன்றோ' அசை.

## சேது பந்தனப் படலம்

*இராமபிரான், வானர சேனையோடு இலங்கை செல்வதற்காகக் கடலில் அணைகட்டியதைக் கூறும் படலமாதலின் இப்பெயர் பெற்றது. சேது - அணை; பந்தனம் - கட்டுதல்.*

*சுக்கிரீவன் இராமபிரான் ஆணைப்படி - அணைகட்டுவதற்காக அறிஞர்களுடனும் வீடணனுடனும் இலக்குவனுடனும் கலந்து ஆலோசித்து, நளனே அணைகட்டத்தகுதியுடையவன் என அவனை அழைத்துப் பணித்தான். நளன் உடன்பட்டு உரியன கொணர்தி என்றான். சாம்பன் கடலை அடைக்க வருமாறு சேனைக்குக் கூறினான் வானர சேனை மலைகளைக் கொண்டு வந்து குவித்தது. நளன் மலைகளை அடுக்கத் தொடங்கினான். வானரங்கள் மலைகளைக் கைகளிலும் தோள்களிலும் தலைகளிலும் தாங்கி வந்து அணைகட்ட உதவின.*

*திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப வள்ளல் அடைக்கலம் என வந்தவர்களை ஆதரித்துத் தாங்குதல் போல, நளன் வானரங்கள் கொண்டு வந்த மலைகளைத் தூக்கினான் என்பார் கம்பர். மூன்று நாட்களில் அணைகட்டி முடிக்கப்பட்டது. வானரங்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தன.*

*ஆதிசேடன் கிடந்தது போலவும், இலங்கையாகிய பெண் கைகளை நீட்டிக் கொண்டிருப்பது போலவும் ஆகாய கங்கையே ஆறாகக் கிடந்ததுபோலவும் இந்திரவில் போலவும் அணை அழகுறக் காட்சியளித்தது. சுக்கிரீவனும் மற்றவர்களும் இராமனை அடைந்து; நூறுயோசனை நீளமும் பத்து யோசனை அகலமும் கொண்டதாக சேதுகட்டப்பட்டுள்ளது எனத் தெரிவிக்கின்றனர் என்பன இப்படலத்துள் கூறப்பட்டுள்ள செய்திகளாகும்.*

*நளனை அழைத்தல்*

**கலிவிருத்தம்**

***6674. அளவு அறும் அறிஞரோடு அரக்கர் கோமகற்கு***
***இளவலும் இனிது உடன் இருக்க, எண்ணினான்,***
***விளைவன விதி முறை முடிக்க வேண்டுவான்,***
***'நளன் வருக!' என்றனன்-கவிக்கு நாயகன்.***

***கவிக்கு நாயகன்*** *- வானரசேனையின் அரசனான சுக்கிரீவன்;* ***அரக்கர் கோமகற்கு இளவலும் இனிது உடன் இருக்க*** *- அரக்கவேந்தனான இராவணனுக்குத் தம்பியான வீடணனும் இனிதே உடனிருக்க;* ***அளவறும் அறிஞரோடு எண்ணினான்*** *- அளவற்ற அறிஞர்களான சாம்பன் அனுமன், அங்கதன் ஆகியவர்களுடன் கலந்து ஆலோசித்தான் பின்னர்;* ***விளைவன விதிமுறை முடிக்க வேண்டுவான்*** *-இனி நிகழ வேண்டியவற்றை முறைப்படி நிறைவேற்ற வேண்டி;* ***நளன் வருக என்றனன்*** *- அதற்கேற்றவன் நளனே என முடிவு செய்து நளனை வருமாறு பணித்தான்.*

*கவிக்கு நாயகன் - சுக்கிரீவன். இதே தொடர் முன்னர் ஊர்தேடு படலத்தில் (4966) அனுமனைக் குறிக்கவந்தது. அங்கே அனுமனுக்குத் தலைமை (நாயகன்)*

*பாகவதத்திறத்தாலும் கைங்கரியத் திறத்தாலும்; இங்கே சுக்கிரீவனுக்குத் தலைமை (மகாராஜா என வைணவ சம்பிரதாயம் குறிக்கும்) ஆட்சி பீடத்தால்" சேது கட்டுதலை நிறைவேற்றுதற்கு உரியவன் நளனே என்பதால் 'நளன் வருக என்றனன். நளன் தெய்வதச்சன் விசுவகர்மாவின் மகன்.*

*சேதுகட்ட நளன் உடன்படுதல்*

***6675. வந்தனன், வானரத் தச்சன்; 'மன்ன! நின்***
***சிந்தனை என்?' என, 'செறி திரைக் கடல்***
***பந்தனை செய்குதல் பணி நமக்கு' என,***
***நிந்தனை இலாதவன் செய்ய நேர்ந்தனன்.***

***வந்தனன் வானரத் தச்சன்*** *- வானரத்தச்சனான நளன் சுக்கிரீவனது ஆணைப்படி அங்கு வந்தான் வந்தவன்;* ***மன்ன! நின் சிந்தனை என் என*** *- சுக்கிரீவனை நோக்கி, அரசே! என்னை அழைத்த உனது கருத்து என்ன என்று கேட்க;* ***செறிதிரைக்கடல்*** *- செறிந்த அலைகளை உடைய இந்தக் கடலுக்கு;* ***பந்தனை செய்குதல் பணி நமக்கு என*** *- அணை கட்டுதல் நமக்குரிய பணியாகும் என்று சுக்கிரீவன் கூற;* ***நிந்தனை இலாதவன்*** *- பிறரால் நிந்திக்கப்படாத தொழில் வல்லவனாகிய நளன்;* ***செய்ய நேர்ந்தனன்*** *- அணை கட்டும் பணியைச் செய்ய உடன்பட்டான்.*

*நளன் வானரச் சிற்பி இவனைப் பற்றி: "வாநரத் தச்சன் மயன் குமரன், இரத்தக் கண்ணனைக் கொன்றவன், விச்வகர்மனாற் பிறந்தவன், சேது கட்டினவன் என அபிதான சிந்தாமணி விவரித்துள்ளது. (பக்.945). கடல் கடந்து செல்ல அரிய அகலமும், ஆழமும் உடைய தென்பதனை 'செறிதிரைக்கடல்' என்பதுணர்த்தும். 'பணி உனக்கு' என சுக்கிரீவன் கூறாது, தன்னையும் உட்படுத்தி 'பணி நமக்கு' என்றது கருதத் தக்கது. நளனும் வானரன் ஆதலால் 'நம்' என்ற உளப்பாட்டுத்தன்மைச் சொல் வந்தது. பிறர் எவரும் குறை கூறிப் பழிப்பதற்கு இயலாத தொழில் திறமை உடையவன் நளன் என்பது தோன்ற 'நிந்தனை இலாதவன்" என்றார். நேர்தல் - உடன்படுதல்.*

***6676. 'காரியம் கடலினை அடைத்துக் கட்டலே;***
***சூரியன் காதல! சொல்லி என் பல;***
***மேருவும் அணுவும் ஓர் வேறு உறாவகை***
***ஏர்வுற இயற்றுவென்; கொணர்தி' என்றனன்.***

***சூரியன் காதல*** *- சூரிய குமாரனே!;* ***காரியம் கடலினை அடைத்துக் கட்டலே*** *- நான் செய்ய வேண்டிய காரியம் இந்தக் கடலை அடைத்து அணை கட்டுவதுதானே;* ***சொல்லி என் பல*** *- பலவும் கூறி என்ன பயன்?;* ***மேருவும் அணுவும் ஓர் வேறுறாவகை*** *- மிகப் பெரிய மேருமலையும் மிகச் சிறிய அணுவும் வேறாகத்*

தோன்றாதபடி; **ஏர்வுற இயற்றுவென்** - அழகு பொருந்த அணையைக் கட்டுவேன்; **கொணர்தி என்றனன்** - அணை கட்டுதற்கு உரியனவான மலை முதலியவைகளைக் கொண்டு வரச் செய் என்றான்.

அணைகட்டுவதை எளிமையான தொரு செயல் என்று தோன்றும்படி 'காரியம் கடலினை அடைத்துக்கட்டலே' என்றான் 'இவ்வளவுதானே செய்து முடிப்பேன்' என்பது குறிப்பு. மேரு மலை மிகப் பெரியது அணு மிகச் சிறியது என்றாலும் இரண்டையும் சேர்த்து ஒன்று போலத் தோன்றும் படி இயற்றுதல் போல அழகு பொருந்த அணையைக் கட்டுவேன் என்பான் 'மேருவும் அணுவுமோர் வேறுறா வகை ஏர்வுற இயற்றுவன்' என்றான். ஏர் - அழகு. வேறு உறாவகை - வேறாகத் தோன்றாதபடி.

*சாம்பன் அணைகட்ட வருமாறு சேனையை அழைத்தல்*

***6677. 'இளவலும், இறைவனும், இலங்கை வேந்தனும்,***
***அளவு அறு நம் குலத்து அரசும், அல்லவர்***
***வளைதரும் கருங் கடல் அடைக்க வம்' எனத்***
***தளம் மலி சேனையைச் சாம்பன் சாற்றினான்.***

**இளவலும் இறைவனும்** - இளவலாகிய இலக்குவனும், இறைவனாகிய இராமபிரானும்; **இலங்கை வேந்தனும்** - இலங்கை வேந்தனாக இராமபிரானால் முடிசூடப் பெற்ற வீடணனும்; **அளவறு நம் குலத்து அரசும்** - அளவற்றவர்களான வானர குலத்தவர்களின் வேந்தனான சுக்கிரீவனும்; **அல்லவர்** - அல்லாத மற்ற எல்லோரும்; **வளைதரு கருங்கடல் அடைக்க வம் என** - இலங்கையைச் சுற்றி வளைத்துக் கொண்டிருக்கும் கரிய கடலை அடைத்து அணை கட்ட வாருங்கள் என்று; **தளம் மலி சேனையை** - நிறைந்த கூட்டத்தினரான வானரப் படையினரை; **சாம்பன் சாற்றினான்** - சாம்பவந்தன் கூறி அழைக்கலானான்.

வம் - வாருங்கள் சாம்பன் சாற்றினான் என்பதால் பறை அறைந்து தெரிவித்தான் என்பது பொருந்தும். தளம் - கூட்டம்.

*வானர சேனை மலைகளைக் கொணர்தல்*

***6678. கரு வரை காதங்கள் கணக்கு இலாதன***
***இரு கையில், தோள்களில், சென்னி, ஏந்தின,***
***ஒரு கடல் அடைக்க மற்று ஒழிந்த வேலைகள்***
***வருவன ஆம் என, வந்த வானரம்.***

***கருவரை காதங்கள் கணக்கு இலாதன*** - *கணக்கில்லாத பல காத தூரம் பரவியுள்ள கரிய மலைகளையெல்லாம்;* ***இரு கையில் தோள்களில் சென்னி ஏந்தின*** - *இரண்டு கைகளிலும், இரண்டு தோள்களிலும், தலையிலும் ஏந்தியனவாக;* ***ஒரு கடல் அடைக்க*** - *ஒரு கடலை அடைத்து அணை கட்டுவதற்காக;* ***மற்று ஒழிந்த வேலைகள் வருவனவாம் என*** - *மற்றுள்ள ஆறு கடல்களும் வருவனபோல்;* ***வானரம் வந்த*** - *வானரப் படைகள் வந்தன.*

*கருவரை - கருமை நிறமான மலைகள். 'ஏந்தின வந்த' என இயையும், வந்த - வந்தன வருவனவாம் என - வருவன போல. மற்று - அசை. ஏந்தின - முற்றெச்சம்.*

***6679. பேர்த்தன மலை சில; பேர்க்கப் பேர்க்க, நின்று***
***ஈர்த்தன சில; சில சென்னி ஏந்தின;***
***தூர்த்தன சில; சில தூர்க்கத் தூர்க்க நின்று***
***ஆர்த்தன; சில சில ஆடிப் பாடின.***

***பேர்த்தன மலை சில*** - *சில வானரங்கள் மலைகளைப் பேர்த்தன;* ***பேர்க்கப் பேர்க்க நின்று ஈர்த்தன சில*** - *சிலவானரங்கள் பேர்க்கப் பேர்க்க அம் மலைகளை இழுக்கலாயின;* ***சில சென்னி ஏந்தின*** - *சில வானரங்கள் மலைகளைத் தலைகளில் தாங்கின;* ***தூர்த்தன சில*** - *சில வானரங்கள் மலைகளைக் கொண்டு கடலைத் தூர்த்தன;* ***சில தூர்க்கத் தூர்க்க நின்று ஆர்த்தன*** - *சில வானரங்கள் மலைகளைக் கடலில் தூர்க்கத் தூர்க்க ஆரவாரம் செய்தன;* ***சில சில ஆடிப் பாடின*** - *சில குரங்குகள் மகிழ்ச்சியால் ஆடின சில குரங்குகள் இராமனது புகழைப் பாடின. (6)*

***6680. காலிடை ஒரு மலை உருட்டி, கைகளின்***
***மேலிடை மலையினை வாங்கி, விண் தொடும்***
***சூலுடை மழை முகில் சூழ்ந்து சுற்றிய,***
***வாலிடை, ஒரு மலை ஈர்த்து, வந்தவால்.***

**காலிடை ஒரு மலை உருட்டி** - *சில வானரங்கள் கால்களால் ஒரு மலையை உருட்டிக் கொண்டும்;* **கைகளின் மேலிடை மலையினை வாங்கி** - *தங்களது கைகளின் இடையிலே ஒரு மலையைத் தாங்கியும்;* **விண் தொடும்** - *வானத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதும்;* **சூலுடை மழை முகில் சூழ்ந்து சுற்றிய** - *கருக் கொண்ட மேகங்கள் சூழ்ந்து சுற்றிக் கொண்டிருப்பதுமான;* **ஒரு மலை வாலிடை ஈர்த்து** - *ஒரு பெரிய மலையை வாலால் கட்டி இழுத்துக் கொண்டும்;* **வந்த** - *வந்தன.*

*ஆல் - அசை. வலிமை மிக்க வானரங்களாதலால், காலால் ஒரு மலையை உருட்டிக் கொண்டும் கைகளால் ஒரு மலையைச் சுமந்து கொண்டும், வாலால் ஒரு மலையைக் கட்டி இழுத்துக் கொண்டும் வந்தன. மலையின் உயரச் சிறப்புத்தோன்ற 'சூலுடை மழை முகில் சூழ்ந்து சுற்றிய மலை' என்றார். ஒவ்வொரு குரங்கும் ஒரே சமயத்தில் மூன்று மலைகளைக் கொண்டு வந்ததென்பது கூறப்பட்டது.*

*நளன் மலைகளை அடுக்குதல்*

***6681. முடுக்கினன், 'தருக' என, மூன்று கோடியர்
எடுக்கினும், அம் மலை ஒரு கை ஏந்தியிட்டு,
அடுக்கினன்; தன் வலி காட்டி, ஆழியை
நடுக்கினன்-நளன் எனும் நவையின் நீங்கினான்.***

***நளன் எனும் நவையின் நீங்கினான்*** - *நளன் என்னும் பெயருடைய குற்றமற்றவனாகிய வானரத்தச்சன்;* ***முடுக்கினன் 'தருக' என*** - *'மலைகளைத் தருக' என்று கூறி வானரங்களை விரட்டினான்;* ***மூன்று கோடிய எடுக்கினும்*** - *மூன்று கோடி வானரங்கள் மலைகளை எடுத்துக் கொடுத்தாலும்;* ***அம்மலை ஒருகை ஏந்தியிட்டு அடுக்கினன்*** - *அந்த மலைகளை எல்லாம் தனது ஒருகையினால் வாங்கி, அடுக்கினான்;* ***தன் வலி காட்டி*** - *தனது வலிமைகாட்டி;* ***ஆழியை நடுக்கினன்*** - *அக்கடலை நடுங்கும்படி செய்தான்.*

*மூன்று கோடி வானரங்கள் மலைகளை எடுத்து வந்து கொடுத்தாலும், அம் மலைகளைத் தனது ஒரு கையால் ஏந்தி அடுக்கிவிட்டு, 'மலைகளைக் கொடுங்கள்' என்று வானரங்களை விரட்டினான். தனது வல்லமையைக் காட்டி, அக்கடலையே நடுங்கும் படி செய்தான். நளனது ஒப்பற்ற ஆற்றலைக் கூறுவதிது. அவனது சிறப்புத் தோன்ற 'நளன் எனும் நவையின் நீங்கினான்" என்றார். நவை - குற்றம். பெரிய மலைகளைக் கடலில் இடும் போது, தண்ணீர் பொங்கி அலைஎழுவது கடல் நடுங்குவது போலிருந்தது என்பதால் 'ஆழியை நடுக்கினன்' என்றார். முடுக்குதல் - விரட்டுதல். கோடிக் கணக்கான வானரங்கள் கொணர்ந்து கொட்டிய மலைகளை நளன் ஒருவனே தச்சனாக அமைந்து விரைவாகக் கட்டியதோடன்றி, மேன்மேலும் கல் கொணர்க என வானரங்களை விரட்டினான் என்பதாம்.*

***6682. மஞ்சினில் திகழ்தரும் மலையை, மாக் குரங்கு,
எஞ்சுறக் கடிது எடுத்து எறியவே, நளன்
விஞ்சையில் தாங்கினன்-சடையன் வெண்ணையில்,
'தஞ்சம்!' என்றோர்களைத் தாங்கும் தன்மைபோல்.***

***மஞ்சினில் திகழ் தரும் மலையை*** - *மேக மண்டலம் வரை உயர்ந்து திகழும் மலைகளை;* ***மாக்குரங்கு எஞ்சுறக் கடிதெடுத்து எறியவே*** - *பெரிய குரங்குகள் விரைந்து எடுத்து வந்து எறிய; (அவைகளை)* ***நளன் விஞ்சையில் தாங்கினன்*** - *நளன் தான் கற்ற விஞ்சையினாலே தான் ஒருவனே தாங்கினான்;* ***சடையன் வெண்ணையில்*** - *திரு வெண்ணய் நல்லூரில் வாழ்ந்த சடையப்ப வள்ளல்;* ***தஞ்சம் என்றோர்களை*** - *அடைக்கலம் என்று தன்னை நாடி வந்தவர்களை;* ***தாங்கும் தன்மை போல்*** - *தாங்கி ஆதரிக்கும் தன்மையைப் போல (நளன் மலைகளைத் தாங்கினான்). 'சடையன் வெண்ணையில் தஞ்சம் என்றோர்களைத் தாங்கும் தன்மை போல் நளன் விஞ்சையில்*

*தாங்கினன்' என இயையும். மஞ்சு - மேகம் மேகமண்டலத்துக்கு மேலே உயர்ந்து திகழும் மலையாதலின் 'மஞ்சினில் திகழ்தரும் மலை' என்றார். விஞ்சை - வித்தை, தான் கற்றிருந்த அற்புத வித்தை வன்மையால் நளன் மலைகளைத் தாங்கினான் என்பதால் 'விஞ்சையில் தாங்கினன்' என்றார் கம்பர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலை இங்குக் கூறியது செய்ந்நன்றி மறவாத பண்பால் என்க. சடையப்ப வள்ளலின் கொடைத்திறம். தஞ்சமென வந்தவரை ஆதரித்தல் இங்கு சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. நளன்பற்றிக் கூறிய உயர்வு நவிற்சிக்குச் சடையப்பர் வள்ளன்மை உவமையாயிற்று. உவமேயம், உவமை இரண்டிலே உவமையே உயர்ந்தது என்பது இலக்கண வழி; அவ் வழியை மனங் கொண்டு சடையப்பரின் பெருமையை உய்த்துணர்க.*

## *சேது கட்டும் போது நிகழ்ந்த நிகழ்ச்சிகள்*

***6683. சயக் கவிப் பெரும் படைத் தலைவர் தாள்களால்,***
***முயல் கறை மதி தவழ் முன்றில் குன்றுகள்***
***அயக்கலின், முகில் குலம் அலறி ஓடின;***
***இயக்கரும் மகளிரும் இரியல்போயினார்.***

***சயக் கவிப் பெரும் படைத்தலைவர்*** *- வெற்றி மிக்க வானரப் பெரும்படையின் தலைவர்கள்;* ***தாள்களால்*** *- தம் கால்களினாலே;* ***முயல் கறை மதி தவழ்முன்றில் குன்றுகள்*** *- முயல் போன்ற களங்கத்தை உடைய சந்திரன் தவழும்படியான மலைகளை;* ***அயக்கலின்*** *- அசைப்பதனால்;* ***முகில் குலம் அலறி ஓடின*** *- மேகக் கூட்டங்கள் அரற்றிக் கொண்டு ஓடின;* ***இயக்கரும் மகளிரும்*** *- அம்மலைகளில் இருந்த இயக்கர்களும் அவர்களது மனைவிமார்களும்;* ***இரியல் போயினார்*** *- மலைகளை விட்டு நீங்கிச் செல்வாராயினர்.*

*வெற்றிமிக்க வானரப் படையை 'சயக் கவிப் பெரும்படை' என்றார். வானரப் படைத் தலைவர்கள் வெற்றியைக் கவிகளாற் பாடிப் புலவர் சிறப்பித்தனர் என்பதாம். (சயக் கவி - வெற்றியைப் போற்றும் கவிதைகள்) மலைகளின் உயர்ச்சி தோன்ற 'மதி தவழ் குன்று' என்றார் அயக்கல் - அசைத்தல் (சகர-யகரப் போலி)*

***6684. வேருடை நெடுங் கிரி தலைவர் வீசின,***
***ஓர் இடத்து ஒன்றின்மேல் ஒன்று சென்றுக,***
***நீரிடை நிமிர் பொறி பிறக்க, 'நீண்ட ஈது***
***ஆருடை நெருப்பு?' என வருணன் அஞ்சினான்.***

***வேருடை நெடுங்கிரி*** *தலைவர் வீசின - வானரப் படையின் தலைவர்கள் பறித்துக் கடலில் எறிந்த அடியோடு பெயர்த்து வீசப்பட்ட மலைகளெல்லாம்;* ***ஓரிடத்து***

**ஒன்றின் மேல் ஒன்று** - ஒரே இடத்தில் ஒன்றின்மீது மற்றொன்றாக; **சென்று உக** - சென்று வீழ்ந்ததால்; **நீரிடை நிமிர் பொறி பிறக்க** - கடல் நீரின் மீது உயர்ந்த தீப்பொறி பிறந்ததால்; **நீண்ட ஈது ஆருடை நெருப்பு என** -கடல் மீது நீண்டெரியுமிந்த நெருப்பு யாருண்டாகச் செய்ததென்று; **வருணன் அஞ்சினான்** - கடலரசனான வருணன் மிகவும் பயந்தான்.

நிமிர் - நீண்ட பொறி - தீப்பொறி. ஏற்கனவே இராமபிரானது அம்புகள் நெருப்பை உமிழ்ந்த துன்பத்தைத் துய்த்தவன் வருணன். இராமனை அடைக்கலம் அடைந்ததால் அவன் சினம் தணிந்து நின்றான். 'இப்போது நீரிடையே நெருப்புத் தோன்றுகிறதே இது வேறுயாருடைய செயலாகும்' என்பான் 'நீண்ட ஈது ஆருடை நெருப்பு' என்று கேட்டு, அஞ்சலாயினான். அடைக்கலம் தந்து ஆதரித்த இராமபிரானது நெருப்பாக இருக்க இயலாது என்பதால் 'ஈது ஆருடை நெருப்பு' என்றான்.

***6685. ஆனிறக்கண்ணன் என்று ஒருவன், அங்கையால்,***
***கான் இற மலை கொணர்ந்து எறிய, கார்க் கடல்***
***தூ நிற முத்துஇனம் துவலையோடும் போய்,***
***வான் நிறை மீனொடு மாறு கொண்டவே.***

**ஆனிறக் கண்ணன் என்று ஒருவன்** - ஆனிறக் கண்ணன் (கவயாட்சன்) என்ற பெயர் கொண்ட ஒருவானரத் தலைவன்; **அங்கையால் கான் இறமலை கொணர்ந்து எறிய** - தனது உள்ளங்கையால் காடுகள் அழியுமாறு மலையைக் கொண்டு வந்து கடலில் எறிய; **கார்க்கடல் தூநிற முத்து இனம்** - கரிய கடலிலுள்ள தூய நிறத்தைஉடைய முத்துக்களெல்லாம்; **துவலையோடு போய்** - கடலில் மலை விழலால் எழுந்த நீர்த்திவலைகளோடு சென்று; **வான் நிறை மீனொடு** - வானத்திலே நிறைந்துள்ள விண்மீன்களோடு; **மாறு கொண்டவே** - மாறுபாடு கொண்டு தோன்றுவனவாயின. 'கவயாட்சன்' என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கமே ஆனிறக் கண்ணன். மலையின் மீதுள்ள காடுகளெல்லாம் மலையைப் பறித்தெடுக்க அழிதலால் 'கான் இற' என்றார். கடலில் மலை விழுதலால் எழுந்த நீர்த்திவலை (துளி)களோடு, முத்துக்களும் வானிலே சென்று பொருந்தின விண்மீன்களும், முத்துக்களும், ஒன்றுடன் ஒன்று 'மாறு கொண்டு தோன்றின 'என்றார். கார்க்கடல் - கருமை நிறமான கடல். தூநிறம் - தூய்மையான நிறம். முத்துக்களும், விண்மீன்களும் ஒளியாலும் தோற்றத்தாலும் ஒத்துக் காணப்படுவதால் 'மாறு கொண்டவே' என்றார்.

***6686. சிந்துரத் தட வரை எறிய, சேணிடை***
***முந்துறத் தெறித்து எழு முத்தம் தொத்தலால்,***
***அந்தரத்து எழு முகில் ஆடையா, அகன்***
***பந்தர் ஒத்தது, நெடும் பருதி வானமே.***

***சிந்துரத் தடவரை எறிய*** - யானைகளை உடைய பெரிய மலைகளை வானர வீரர்கள் கடலில் எறிவதால்; ***சேணிடை முந்துற*** - நீண்ட தொலையுள்ள வானத்திலே முன்பே; ***தெறித்து எழு முத்தம் தொத்தலால்*** - தெறித் தெழுந்த முத்துக்கள் தம்மீது தொத்திக் கொள்வதால்; ***அந்தரத்து ஏழு முகில் ஆடையா*** - ஆகாயத்திலே எழுந்த மேகங்களே ஆடையாக; ***நெடும்பருதி வானம்*** - பெரிய சூரியனை உடைய வானம்; ***அகன் பந்தர் ஒத்தது*** - அகன்ற பந்தலைப் போலக் காணப்பட்டது.

*சிந்துரம் - யானை. வானம் பந்தரையும், முகில் பந்தருக்குக் கட்டும் மேற்கட்டியான விதானத்தையும், மேகத்திலே தொத்திய முத்துக்கள் விதானத்தில் தொங்க விடும் முத்துச் சரத்தையும் போன்று காணப்பட்டன. நீலப்பட்டாடைக்கு மேலே ஒளி விடும் விளக்கை ஒத்துச் சூரியன் விளங்கினான் என்பதை 'நெடும் பருதி வானம்' என்பது குறிக்கும்.*

***6687. வேணுவின் நெடு வரை வீச, மீமிசைச்***
***சேண் உறு திவலையால் நனைந்த செந் துகில்,***
***பூண் உறும் அல்குலில் பொருந்திப் போதலால்,***
***நாணினர், வான நாட்டு உறையும் நங்கைமார்.***

***வேணுவின் நெடுவரை வீச*** - வானர வீரர்கள் மூங்கில் வளர்ந்துள்ள பெரிய மலைகளைக் கடலின் மீது எறிதலால்; ***மீமிசை சேண் உறுதிவலையால்*** - மேலே எழுந்த விண்ணாட்டில் தெறித்த நீர்த் துளிகளால்; ***நனைந்த செந்துகில்*** - நனைந்து போன செம்மை நிறப்பட்டாடை; ***பூண் உறும் அல்குலில்*** - மேகலாபரணம் பொருந்திய தமது அல்குலிலே; ***பொருந்திப் போதலால்*** - சேர்ந்து ஒட்டிக் கொண்டதால்; ***வான நாட்டுறையும் நங்கை மார் நாணினர்*** - வான நாட்டிலே வாழும் மகளிர் மிக்க நாணமுற்றனர்.

*வேணு - மூங்கில், செந்துகில் - செம்பட்டாடை தேவமாதர்கள் செம்பட்டாடை அணிவர். மென்மையான பட்டாடை மீது, நீர்த்துளிகள் விழுவதால் அந்த ஆடை உடம்போடு ஒட்டிக் கொள்வது இயல்பு. பெரிய மலைகளை வானர வீரர் வீசுவதால், மிக உயர மாயுள்ள விண்ணுலகத்திலே அத்துளிகள் வீழ. அதனால் செம்பட்டாடை நனைந்து உடம்போடு ஒட்டிக் கொள்ள, உள்ளுறுப்பு வெளியே தெரியலாயிற்றே என, நாணினர் என்க, இது போன்று (கம்ப. 2358) முன்னும் கூறியதை நினைவு கூர்க.*

***6688. தேன் இவர் தட வரை, திரைக் கருங் கடல்-***
***தான் நிமிர்தர, இடை குவியத் தள்ளும் நீர்-***
***மேல் நிமிர் திவலை மீச் சென்று மீடலால்,***
***வானவர் நாட்டினும் மழை பொழிந்தவால்.***

**தேன் இவர் தடவரை** - தேன் பொருந்திய பெரிய மலைகள்; **திரைக் கருங்கடல்தான் நிமிர்தர** - அலைகளை உடைய கரியகடல் மேலோங்கும்படி; **இடை குவியத் தள்ளும் நீர்** - (வானரங்களால் வீசப்பட்டு) அக்கடலுக்கு இடையே குவிதலால் தள்ளப்பட்ட கடல் நீரிலிருந்து; **மேல் நிமிர் திவலை** - மேலே உயர்ந்து சென்ற நீர்த்திவலைகள்; **மீச்சென்று மீடலால்** - விண்ணுலகத்துக்கும் மேலே சென்று அங்கு வீழ்தலால்; **வானவர் நாட்டினும் மழை பொழிந்தவால்** - தேவருலகத்திலும் மழை பொழிந்தது போலிருந்தது.

மீச் சென்று - மேலே சென்று. மீடலால் - மீள்தலால் நிமிர்தர - மேலோங்கும்படி தடவரை இடைகுவிய என இயையும்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*6689.* **மை உறு மலைகளோடும் மறி கடல் வந்து வீழ்ந்த,**
**வெய்ய வாய் மகரம் பற்ற வெருவின விளிப்ப,-**
**மேல்நாள்,**
**பொய்கையின் இடங்கர் கவ்வ, 'புராதனா! போற்றி'**
**என்று**
**கை எடுத்து அழைத்த யானை போன்றன-களி**
**நல் யானை.**

**மை உறு மலைகளோடும்** - மேகங்கள் தங்கியிருக்கும் மலைகளுடனே; **வந்து வீழ்ந்த களிநல்யானை** - வானரங்கள் எடுத்து வீசுவதால் வந்து கடலில் வீழ்ந்த மதம் கொண்ட யானைகள்; **வெய்யவாய் மகரம் பற்ற வெருவின விளிப்ப** - கொடிய வாயை உடைய முதலைகள் பற்றுவதால் அஞ்சிக் கதறிய செயல்; **மேல் நாள் பொய்கையின் இடங்கர் கவ்வ** - முன்னாளிலே பொய்கையிலிருந்த முதலை காலைக் கவ்வ; **புராதனா போற்றி என்று** - பழமையான தலைவனே காப்பாயாக என்று; **கை எடுத்து அழைத்த யானை போன்றன** - தும்பிக்கையை மேலே உயர்த்தி இறைவனை அழைத்த யானையான கஜேந்திரனைப் போன்றிருந்தது.

மை - கருமை; ஈண்டு மேகங்கள். களி நல்யானை - மதக் களிப்புடைய யானை. மகரம் - மகரமீன் (முதலை எனலுமாம்) இடங்கர் - முதலை. கடலுக்குப் பொய்கையும். யானைக்குக் கஜேந்திரனும் மகரமீனுக்கு முதலையும் உவமையாயின.

*6690.* **அசும்பு பாய் தேனும், பூவும், ஆரமும், அகிலும்,**
**மற்றும்,**
**விசும்பு எலாம் உலவும் தெய்வ வேரியின் மிடைந்து**
**விம்ம,**
**தசும்பெலாம் வாசம் ஊட்டிச் சார்த்திய தண்ணீர்**

***என்ன,***
***பசும் புலால் நாறும் வேலை பரிமளம் கமழ்ந்தது***
***அன்றே.***

***அசும்புபாய் தேனும் பூவும்*** - *கசிந்து பாய்கின்ற தேனும் மணமலர்களும்;* ***ஆரமும் அகிலும் மற்றும்*** - *சந்தனம், அகில் போன்ற மற்றும் பலமணப் பொருள்களும்;* ***விசும்பெலாம் உலவும் தெய்வ வேரியின்*** - *ஆகாயமெல்லாம் பரவும் தெய்விக மணம் போல;* ***மிடைந்து விம்ம*** - *எங்கும் நெருங்கி அதிகரிக்க;* ***பசும் புலால் நாறும் வேலை*** - *பசும் புலால் நாற்றம் வீசும் அக்கடல்;* ***தசும்பெலாம் வாசம் ஊட்டிச் சார்த்திய தண்ணீர் என்ன*** - *மணம் ஊட்டப் பெற்று, குடத்திலே நிறைத்து வைத்த தண்ணீர் போல;* ***பரிமளம் கமழ்ந்தது*** - *நல்ல மணம் கமழ்வதாயிற்று.*

*அசும்பு - கசிதல். ஆரம் - சந்தனம். தசும்பு - குடம். வேரி - மணம். காற்றோடு கலந்து எங்கும் மணம் வீசுவதால் "விசும்பு எலாம் உலவும் தெய்வ வேரி' என்றார்; தெய்வங்களும் விரும்பும் மணம் என்பது கருத்து. விம்மி - மிகுந்து. சார்த்திய - நிறைத்து வைத்த. "தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம் மருண்ட தன்மையை மாற்றுவர்" என்று முன்னும் (820) கூறுவது ஒப்பிடத் தக்கது.*

***6691. தேம் முதல் கனியும் காயும், தேனினோடு ஊனும், தெய்வப்***
***பூ முதலாய எல்லாம், மீன் கொளப் பொலிந்த அன்றே,***
***மா முதல் தருவோடு ஓங்கும் வான் உயர் மானக் குன்றம்-***
***தாம் முதலோடும் கெட்டால் ஒழிவரோ, வண்மை தக்கோர்?***

***தேம் முதல் கனியும் காயும்*** - *இனிய பழங்களும் தின்பதற்குரிய காய்களும்;* ***தேனினோடு ஊனும்*** - *தேனுடன் தின்பதற்கான ஊனும்;* ***தெய்வப் பூ முதலாய எல்லாம்*** - *தெய்வங்களும் விரும்பும் மண மலர்களும் மற்றும் பலவும்;* ***மீன் கொளப் பொலிந்தது*** - *(மலைகளை வானரங்கள் கடலில் வீசுதலால்) மீன்கள் தின்னும்படி பொலிந்தது;* ***மாமுதல் தருவோடு ஓங்கும்*** - *மாமுதலிய நல்ல பழமரங்கள் நிறைந்துள்ள;* ***வான் உயர் மானக் குன்றம்*** - *வானமளவும் உயர்ந்துள்ள அந்த மலைகள்;* ***வண்மை தக்கோர்*** *-வள்ளல் பண்புள்ள மேலோர்கள்;* ***தாம் முதலோடும் கெட்டால் ஒழிவரோ*** - *தாம், தமது செல்வத்தை இழந்தாலும் வள்ளல் பண்பு நீங்குவரோ?.*

*தேம் - இனிமை. தேம்முதல் கனி - இனிமையைத் தம்மிடத்தே கொண்ட பழம். வான் உயர் மானக்குன்றம் - கனியும், காயும் பூமுதலாய எல்லாம் மீன் கொளப் பொலிந்தது' என இயையும். 'வண்மை தக்கோர் தாம் முதலோடு கெட்டால்*

*ஒழிவரோ?' என்ற பொதுப் பொருளை விளக்குவதால் இரு வேற்றுப் பொருள் வைப்பணியாம்.*

***6692.*** ***மண்ணுறச் சேற்றுள் புக்குச் சுரிகின்ற மாலைக் குன்றம்-***
***கள் நிறை போதும், காயும், கனிகளும், பிறவும், கவ்வி***
***வெண் நிற மீன்கள் எல்லாம், வறியவர் என்ன,- மேன்மேல்***
***உள் நிறை செல்வம் நல்காது ஒளிக்கின்ற உலோபர் ஒத்த.***

***மண்ணுறச் சேற்றுள் புக்கு*** *- மண்ணில் பதித்து சேற்றுக்குள் நுழைந்து;* ***சுரிகின்ற மாலைக் குன்றம்*** *- உள்ளே அழுந்திய மலைகளின் வரிசையானது;* ***கள்நிறை போதும் காயும் கனிகளும் பிறவும்*** *- தேன் நிறைந்த மலர்களும், காய்களும் கனிகளும் பிறவற்றையும்;* ***வெண்நிற மீன்கள் எல்லாம் கவ்வி*** *- வெண்மை நிறமான மீன்கள் எல்லாம் கவ்வி உண்ண எண்ணி;* ***வறியவர் என்ன*** *- எதுவும் கிடைக்கப் பெறாத வறியவர்களைப் போல ஏமாற;* ***மேல்மேல் உள் நிறை செல்வம்*** *-மேலும் மேலும் உள்ளே நிறைந்த செல்வத்தை;* ***நல்காது ஒளிக்கின்ற உலோபர் ஒத்த*** *- எவருக்கும் தராமல் ஒளித்து வைத்துள்ள உலோபிகளை ஒத்திருந்தது.*

*சுரிதல் - உள்ளே அழுந்துதல் மாலை - வரிசை கள் - தேன் போது - மலர். இது உவமையணி.*

***6693.*** ***கறங்கு எனத் திரியும் வேகக் கவிக் குலம் கதுவ வாங்கி,***
***பிறங்கு இருங் கடலில் பெய்த போழ்தத்தும், பெரிய பாந்தள்,***
***மறம் கிளர் மான யானை வயிற்றின ஆக, வாய் சோர்ந்து,***
***உறங்கின-கேடு உற்றாலும், உணர்வரோ உணர்வு இலாதார்?***

***கறங்கெனத் திரியும் வேகக் கவிக்குலம்*** *- காற்றாடியை ஒத்து வேகமாகச் சுற்றித் திரியும் வானரக் கூட்டம்;* ***கதுவ வாங்கி பிறங்கிடும் கடலில் பெய்த போழ்தத்தும்*** *- மலைகளைப் பற்றிப் பிடுங்கி அந்தப் பெரிய கடலின் மீது எறிந்த போதும்;* ***பெரிய பாந்தள்*** *- மலையிலே வாழ்ந்த பெரிய மலைப் பாம்புகள்;* ***மறம் கிளர் மான யானை வயிற்றினவாக*** *- தாம் ஏற்கனவே விழுங்கிய வலிமைமிக்க பெரிய யானைகள் தமது வயிற்றிலே இருக்க;* ***வாய் சோர்ந்து உறங்கின*** *- வாயைத் திறந்தபடி உறங்கிக்*

*கொண்டு கிடந்தன;* **உணர்விலாதார் கேடுற்றாலும் உணர்வரோ** *- அறிவில்லாதவர்கள், தமக்குக் கேடு நேர்ந்தாலும் உணர்வரோ? (மாட்டார் என்பது கருத்து)*

*கறங்கு - காற்றாடி, வேகக் கவிக்குலம் - விரைந்து செல்லும் வானர சேனை. கதுவ வாங்கி - பற்றிப் பிடுங்கி. பாந்தள் - பாம்பு. "கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று. பெரிய மாசுணம் வரை எனப் பெயர்தரு பிரிதி எம் பெருமானை" என்ற பெரிய திரு மொழியாலும் (1.2.10) மலைப்பாம்புகள் யானைகளை விழுங்கும் என்பது புலனாகும். யானைகளை விழுங்கிய பாம்புகள் வாய்திறந்தபடி உறங்கிக் கிடந்தன. அவை வசிக்கும் மலைகளை அப் பாம்புகளோடு வானரங்கள் கடலில் வீசியதைச் சிறிதும் அறியாதனவாயிருந்தன என்பதால், அறிவற்றவர் கேடுநேர்ந்தாலும் உணரமாட்டார்கள் என்பது பெறப்படும். இதுவும் வேற்றுப் பொருள் வைப்பணி.*

***6694. இழை எனத் தகைய மின்னின் எயிற்றின, முழக்கம் ஏய்ந்த,***
***புழையுடைத் தடக் கை ஒன்றோடு ஒன்று இடை பொருந்தச் சுற்றி,***
***கழையுடைக் குன்றின் முன்றில், உருமொடு கலந்த கால***
***மழை எனப் பொருத-வேலை மகரமும் மத்த மாவும்.***

**வேலை மகரமும் மத்தமாவும்** *- கடலில் வாழும் மகரமீனகளும், மலைகளில் வாழ்ந்த மதம் கொண்ட யானைகளும்;* **இழை எனத்தகைய மின்னின் எயிற்றின** *- அணிகலம் என்னத் தகுந்த மின்னலைப் போல ஒளி வீசும் பற்களை உடையனவாய்;* **புழை உடைத்தடக்கை** *- துவாரத்தை உடைய துதிக்கைகளை;* **ஒன்றோடு ஒன்று இடை பொருந்தச் சுற்றி** *- ஒன்றுடன் மற்றொன்று இடையே பொருந்தும்படி சுற்றிக் கொண்டு;* **கழை உடைக் குன்றின் முன்றில்** *- மூங்கில்களையுடைய மலைகளின் முன்னே;* **உருமொடு கலந்த காலமழை எனப் பொருத** *- இடியோடு கூடிய யுகாந்த காலத்து மேகங்களைப் போலப் போர் புரிந்தன. இழை - அணிகலம். மின்னின் - மின்னலைப் போல (ஒளியுடைய). மத்தமா - மதம் பொருந்திய யானை. மகரமீன்களுக்கும் தும்பிக்கை உண்டு. ஆதலால் 'புழையுடைத்தடக்கை பொருந்தச் சுற்றி' என்றார். மேகங்கள் இடி முழக்கத்துடன் மழை பொழியும் மகரமும் மத்தமாவும் முழக்கம் செய்து போரிட்டன என்பது கருத்து.*

***6695. பொன்றின, சிறிய ஆய புண்ணியம் புரிந்தோர் போல,-***
***குன்றுகள் குரக்கு வீரர் குவித்தன நெருப்புக் கோப்ப,***
***ஒன்றின் மேல் ஒன்று வீழ, உகைத்து எழுந்து, உம்பர்***

*நாட்டுச்*
*சென்று, மேல் நிலை பெறாது, திரிந்தன-சிகரச்*
*சில்லி.*

**குன்றுகள் குரக்கு வீரர் குவித்தன** - வானர வீரர்கள் கொண்டு வந்து குவித்த மலைகள்; **ஒன்றின் மேல் ஒன்று வீழ** - ஒன்றின் மேல் ஒன்று வீழ்வதால்; **நெருப்புக் கோப்ப** - இடையிலே நெருப்பு உண்டாக; **சிகரச் சில்லி** - மலைச் சிகரங்களின் சிறுதுண்டுகள்; **உகைத்து எழுந்து உம்பர் நாட்டுச் சென்று** - வேகத்தோடு எழுந்து விண்ணுலகுக்குச் சென்று; **மேல் நிலை பெறாது** - மேலே நிலைத்து நிற்க இயலாமல்; **பொன்றின சிறிய புண்ணியம் புரிந்தோர் போல** - இறந்து போய்விட்ட சிறிதளவு புண்ணியம் செய்தவர்கள் தாம் செய்த புண்ணியத்திற்கேற்ப விண்ணுலகம் சேர்ந்து புண்ணியப்பயன் தீர்ந்து மீண்டும் மண்ணுலகு வருவது போல; **திரிந்தன** - கீழே வந்து வீழ்ந்தன.

கோப்ப - உண்டாக (பிறக்க). சிகரச் சில்லி - மலைச் சிகரத்தின் சிறிய துண்டுகள். உகைத்து - விரைந்து உவமையணி. உம்பர் நாடு - தேவருலகம்.

*6696. கூருடை எயிற்றுக் கோள் மாச் சுறவுஇனம் எறிந்து*
*கொல்ல,*
*போருடை அரியும், வெய்ய புலிகளும், யாளிப்*
*போத்தும்,*
*நீரிடைத் தோற்ற அன்றே?-தம் நிலை நீங்கிச்*
*சென்றால்,*
*ஆரிடைத் தோலார் மேலோர், அறிவிடை நோக்கின்*
*அம்மா?*

**கூருடை எயிற்றுக் கோள்மாச் சுறவினம்** - கூர்மையான பற்களை உடைய எவரையும் கொல்லவல்ல பெரிய சுறாமீன்கள்; **எறிந்து கொல்ல** - வெட்டிக் கொல்வதால்; **போருடை அரியும்** -போர் செய்ய வல்ல சிங்கங்களும்; **வெய்ய புலிகளும்** - கொடுமை மிக்க புலிகளும்; **யாளிப் போத்தும்** - ஆண் யாளிகளும்; **நீரிடைத் தோற்ற (அன்றே)** - தண்ணீரிலே தோற்று இறந்தன; **அறிவிடை நோக்கின்** - அறிவால் ஆராய்ந்து பார்த்தால்; **தம் நிலை நீங்கிச் சென்றால்** - தாம் நிலைத்து வாழுமிடத்தை நீங்கிச் செல்வாராயின்; **மேலோர் ஆரிடைத் தோலார்** - வல்லமை மிக்கவர்களும் எவரிடம் தோல்வி அடையமாட்டார்கள்; தோல்வியுறவே செய்வர்.

கூர் உடை எயிறு - கூர்மையானபற்கள். கோள்மா - உயிர்களைக் கொன்று கொள்ள வல்ல விலங்கு. சுறவு இனம் - சுறாமீன்களின் கூட்டம். தோலார் - தோல்வியடையார். அன்றே, அம்மா என்பன அசைச் சொற்கள்.

***6697. ஒள்ளிய உணர்வு கூட, உதவலர் எனினும் ஒன்றோ,***
***வள்ளியர் ஆயோர் செல்வம் மன்னுயிர்க்கு உதவும் அன்றே?-***
***துள்ளின, குதித்த, வானத்து உயர் வரைக் குவட்டில் தூங்கும்***
***கள்ளினை நிறைய மாந்தி, கவி எனக் களித்த, மீன்கள்.***

***வானத்து உயர்வரைக் குவட்டில்*** - (வானரங்களால் கடலில் வீசப்பட்ட வானளவு உயர்ந்த மலைகளின் உச்சியில்; ***தூங்கும் கள்ளினை நிறைய மாந்தி*** - தொங்கிய தேன் கூடுகளிலுள்ள தேனை நிறையக் குடித்து விட்டு; ***கவி என மீன்கள் களித்த துள்ளின குதித்த*** - கடலில் வாழும் மீன்கள் எல்லாம் குரங்குகளைப் போலக் களித்துத் துள்ளிக் குதித்தன வாயின என்பது; ***வள்ளியர் ஆயோர்*** - வள்ளல் பண்பு உடையவர்கள்; ***ஒள்ளிய உணர்வு கூட*** - தெளிவான உணர்வுடனே; ***உதவலர் எனினும் ஒன்றோ*** - பிறருக்கு உதவவில்லை என்றாலும்; ***செல்வம் மன்னுயிர்க்கு உதவும் அன்றே*** - அவர்களது செல்வம் உலகத்து உயிர்களுக்கு உதவுமல்லவா அது போன்றிருந்தது.

*குவடு - சிகரம். தூங்கும் - தொங்கும். கள் - தேன். வள்ளியர் ஆயோர் - வள்ளல் பண்புடையவர்கள். ஒள்ளிய - விளக்கத்தை உடைய. வள்ளியோர் பிறருக்கு உதவ வேண்டும் என்று நினைத்துத் தரவில்லை என்றாலும், அவர்களது நல்ல செல்வம் பயன் மரம் போல, ஊருணி நீர்போல, மருந்தாகித் தப்பா மரம் போலப் பிறருக்கு உதவும் தன்மையுடையது என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.*

***6698. மூசு எரி பிறக்க, மீக்கொண்டு, இறக்கிய முடுக்கம்தன்னால்,***
***கோய் சொரி நறவம் என்னத் தண் புனல் உகுக்கும் குன்றின்***
***வேய் சொரி முத்துக்கு, அம்மா விருந்து செய்திருந்த-.ஈண்ட***
***வாய் சொரி இப்பியோடும் வலம்புரி உமிழ்ந்த முத்தம்.***

***மூசு எரி பிறக்க*** - செறிந்த நெருப்புத் தோன்றுமாறு; ***மீக்கொண்டு இறக்கிய முடுக்கம் தன்னால்*** - (வானரங்கள்) தலையின்மேல் தாங்கிக் கொண்டு வந்து கடலில் வீசிய வேகத்தால்; ***கோய் சொரிநறவம் என்ன*** - கள்முகக்கும் பாத்திரத்திலிருந்து சொரியும் கள்ளைப் போல்; ***தண் புனல் உகுக்கும் குன்றின்*** - குளிர்ந்த தண்ணீரைச் சொரியும் மலையினது; ***வேய் சொரி முத்துக்கு*** - மூங்கில்கள் சொரிகின்ற முத்துக்களுக்கு; ***ஈண்ட வாய் சொரி இப்பியோடும்*** - நெருங்கிய இப்பிமீன்களின் வாயிலிருந்து சொரிந்த முத்துக்களும்; ***வலம்புரி உமிழ்ந்த முத்தம்*** - வலம்புரிச் சங்குகள்

*உமிழ்ந்த முத்துக்களும்;* ***விருந்து செய்திருந்த*** *- விருந்து வைத்தது போல் காணப்பட்டன.*

*மூசுஎரி - செறிந்த நெருப்பு. மீக்கொண்டு - தலையின் மேல்தாங்கிக் கொண்டு வந்து. முடுக்கம் - வேகம். கோய் - கள்முகக்கும் பாத்திரம். அம்மா- வியப்பிடைச் சொல். குன்றுகள் அருவி நீரைச் சொரிவதற்கு, கள் முகக்கும் பாத்திரத்திலிருந்து ஒழுகும் கள் உவமையாகும். வானரங்கள் மலைகளைத் தலையில் தூக்கி வந்து - தீப் பிறக்கும்படி கடலில் போட்ட வேகத்தினால் மலைகளில் இருந்து அருவி நீர் பெருகியது என்றார்.*

**கலிவிருத்தம்**

***6699. விண்தலம் தொடு மால் வரை வேரொடும்***
***கொண்டு, அலம் கொள வீரர் குவித்தலால்,***
***திண் தலம், கடல், ஆனது; நீர் செல,***
***மண்தலம் கடல் ஆகி மறைந்ததே.***

***விண்தலம் தொடும் மால்வரை*** *- விண்ணை முட்டும்படி உயர்ந்துள்ள பெரிய மலைகளை;* ***வேரொடும் கொண்டு*** *- அடியோடு பேர்த்து எடுத்துக்கொண்டு;* ***அலம் கொள வீரர் குவித்தலால்*** *- உடல்வருந்தும்படி வானர வீரர் கடலில் குவிப்பதாலே;* ***கடல் திண்தலம் ஆனது*** *- கடல் வலிய நிலமாக மாறியது;* ***நீர்செல மண்தலம் கடலாகி மறைந்ததே*** *- கடல் செல்லுவதால் தரைகடலாக மாறி மறைந்தது.*

*அலம் - வருத்தம் துன்பம், தம்முடல் வருந்தும்படி மலைகளைக் கடலில் குவித்தன என்பார் 'அலம் கொள வீரர்குவித்தலால்" என்றார். கடல் தரையாகியது, தரை கடலாக மாறியது என்பது கருத்து.*

***6700. அய்யன் வேண்டின், அது இது ஆம் அன்றே-***
***வெய்ய சீயமும், யாளியும், வேங்கையும்,***
***மொய் கொள் குன்றின்முதலின, மொய்த்தலால்,***
***நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்ததால்!***

***வெய்ய சீயமும் யாளியும்*** *- கொடிய சிங்கங்களும் யாளிகளும்;* ***வேங்கையும்*** *- வேங்கைகளும் ஆகியவற்றுடன்;* ***மொய்கொள் குன்றின் முதலின*** *- நெருங்கிய மலைகளில் உள்ள மலைபடு பொருள்கள் முதலியன;* ***மொய்த்தலால்*** *- செறிந்திருத்தலால்;* ***நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்தது*** *- நெய்தல் நிலம் குறிஞ்சியை ஒத்துக் காணப்பட்டது;* ***அய்யன் வேண்டின் அது இது ஆமன்றே*** *- எல்லோருக்கும் தலைவனாகிய இறைவனே விரும்பினால் ஒன்று மற்றொன்று ஆகுமல்லவா?*

*வானர வீரர்கள் மலைகளைக் கொண்டு வந்து கடலில் போடுவதால் மலையில் வாழும் சிங்கம், யாளி, வேங்கை முதலியனவும், மற்றுமுள்ள மலைபடு பொருள்களும் கடலில் நிறைந்திருத்தலால், கடல் நிலம் மலை நிலம் போலக் காணப்பட்டது. நெய்தல் கடலும் கடல் சார்ந்த நிலமும் குறிஞ்சி மலையும் மலைசார்ந்த நிலமுமாம். எனவே, 'நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்தது' என்றார். 'மொய் கொள் குன்றின் முதலின' என்றது மலைநிலத்திலுள்ள மற்றைய மலை படு பொருள்களையாம்.*

***6701. 'யான் உணாதன இங்கு இவை' என்னவே,***
***தீன் உணாதன; என் இது செய்யுமே?***
***மான் உணாத திரைக் கடல் வாழ்தரு***
***மீன் உணாதன இல்லை விலங்குஅரோ.***

***யான் உணாதன இங்கு இவை** - (வானர வீரர்கள் மலைகளைக் கடலில் எறிவதால் அம் மலையின் வாழ்ந்த மான்கள் உணவு தேடி அலைந்து எங்கும் மீன்களே இருப்பதால்) யான் உண்ணத்தகாதன இவை; **என்னவே தீன் உணாதன** - என்று விலக்கி எதையும் தின்னாதன வாயின; **என் இது செய்யும்** - (மலையிலிருந்து வந்த விலங்குகள்) வேறு என்ன செய்யும்; **மான் உணாத திரைக் கடல்** - கடலில் வீழ்ந்த விலங்குகள் உண்ணத்தகாதன வான; **மீன் உணாத விலங்கு இல்லை** - மீன்கள் தின்னாத விலங்குகளே எதுவுமில்லை.*

*தீன் - தீனி. 'என் இது செய்யுமே' கடலில் உள்ள மீன்களைத் தின்னாத மலை விலங்குகள் எதைத் தின்று எப்படி உயிர் வாழப் போகின்றன என்ற இரக்கம் தோன்ற உரைத்தார். 'மான்' இங்கே பொதுவாக விலங்குகளைக் குறித்தது. கடலில் உள்ள மீன்களைத் தின்ன இயலாதிருக்க அம்மீன்களோ மலையிலிருந்து வீழ்ந்த எல்லா விலங்குகளையும் தின்றன என்க. 'யான் உணாதன இங்கு இவை' எனக் கூறி மீன்களை விலக்கிய விலங்குகள். எதையுமே தின்னாதனவாக இருந்தன; அவை வேறு என்னதான் செய்யப் போகின்றன என்பது கருத்து.*

***6702. வவ் விலங்கு வளர்த்தவர்மாட்டு அருள்***
***செவ் விலங்கல் இல் சிந்தையின் தீர்வரோ-***
***'இவ் விலங்கல் விடேம்' இனி என்பபோல்,***
***எவ் விலங்கும் வந்து எய்தின வேலையே!***

***வவ்விலங்கு வளர்த்தவர் மாட்டு** - தம்மை வளர்த்தவர்களைப் பிறர் பற்றிக் கொண்டால் அப்போது வளர்த்தவரிடம்; **செவ்விலங்கல் இல் சிந்தையில்** - செம்மையான நெறியிலிருந்து விலகாத மனத்திலிருந்து; **அருள் தீர்வரோ** - (வளர்த்தவர்பால்) அருள் நீங்கப் பெறுவார்களோ (மாட்டார்); **இனி இவ்விலங்கல் விடேம்** - இனியும் இந்த மலையை விட்டுப் போக மாட்டோம்; **என்ப போல்** - என்று*

*தீர்மானித்தன போல;* ***எவ் விலங்கும்*** *- மலையில் வாழ்ந்த எல்லா விலங்குகளும்;* ***வந்து எய்தின வேலையே*** *- வானரங்கள் மலைகளைக் கடலில் எறிந்த போது அம்மலையோடு கடலை எய்தின.*

*செவ் விலங்கல் இல் - செம்மை நெறியிலிருந்து தீர்வரோ - தீர்வார்களோ ஓகாரம் எதிர் மறைப் பொருளில் வளர்த்தவர்களைப் பிறர் பற்றிக் கொண்டால், வளர்த்த பாசத்தால் அவர்களை விட்டு நீங்காமல் தம்மை வளர்த்தவரோடு வந்து விடும் நல்ல மனம் உள்ளவர் களைப் போல மலை விலங்குகள் மலைகளோடு கடலை அடைந்தன என்பது கருத்து.*

***6703. கனி தரும், நெடுங் காய் தரும், நாள்தொறும்-***
***இனிது அருந் தவம் நொய்தின் இயற்றலால்,-***
***பனி தருங் கிரி தம் மனம் பற்று அறு***
***முனிவரும் முனியார், முடிவு உன்னுவார்.***

***நாள் தொறும்*** *- ஒவ்வொரு நாளிலும்;* ***நெடும் கனி தரும்*** *- உண்பதற்கு இனிய கனிகளைக் கொடுக்கும்;* ***நெடும் காய்தரும்*** *- பெரிதாய் முற்றிய காய்களைக் கொடுக்கும்;* ***இனிது அருந்தவம் நொய்தின் இயற்றலால்*** *- அரியதவத்தை இனிதே எளிதில் செய்வதற்கு இடமாக;* ***பனிதரும் கிரி*** *- குளிர்ச்சியைத் தருகின்ற மலையினை;* ***தம்மனம் பற்றறு முனிவரும்*** *- தமது மனத்தில் பற்றற்ற முனிவர்களும்கூட;* ***முடிவு உன்னுவார்*** *- (பின் விளைவை எண்ணி) அரக்கர்களின் முடிவை நினைப்பவராய்;* ***முனியார்*** *- மலைகளைப் பெயர்த்த வானரங்களை வெகுளாராயினர்.*

*முடிவு உன்னுவார் - மலைகளோடு கடலில் வீழ்ந்து தாம் அழிவதை நினைத்தும் முனிவர் முனியாராயினர் எனினுமாம். காலமல்லாக் காலத்தும் முனிவர்கள் பசிதீரக் கனிதரும் நெடுங்காய்தரும் என்பது கருத்து.*

***6704. புலையின் வாழ்க்கை அரக்கர், பொருப்பு உளார்,***
***தலையின்மேல் வைத்த கையினர், சாற்றுவார்,***
***'மலை இலேம்; மற்று, மாறு இனி வாழ்வது ஓர்***
***நிலை இலேம்' என்று, இலங்கை நெருங்கினார்.***

***பொருப்புளார்*** *- மலைகளிலே வாழ்பவர்களாகிய;* ***புலையின் வாழ்க்கை அரக்கர்*** *- பாவத் தொழில்களையே புரிந்து வாழும் கொடிய அரக்கர்கள்;* ***தலையின் மேல் வைத்த கையினர்*** *- (வானரங்கள் மலைகளைப் பெயர்த்துக் கடலில் வீசியதால்) தலையின் மீது வைத்த கையினராக;* ***மலை இலேம்*** *- நாங்கள் வாழ்ந்த மலைகளை இழந்தவரானோம்;* ***மற்று இனி வாழ்வதோர் நிலைஇலேம்*** *- மற்று இனி நாங்கள்*

*வாழ்வதற்கு நிலையான ஒரு இடம் இல்லாதவரானோம்;* ***என்று சாற்றுவார்*** *- என்று கூறியவராக;* ***இலங்கை நெருங்கினார்*** *- இலங்கையை அடைந்தார்கள். துயரத்தால் வருந்துவோர் தலைமேல் கை வைத்தல் வழக்கம். மலையை இழந்தோம். நிலையான வாழ்வையும் இழந்தோம் என்று அவ்வரக்கர் கூறி வருந்தினர் என்பதால் 'மலை இலேம் மற்றினி வாழ்வதோர் நிலை இலேம்" என்றனர்.*

***6705. முழுக்க நீரில் புகா, முழுகிச் செலா,***
***குழுக்களோடு அணை கோள் அரி, யாளிகள்,***
***இழுக்கு இல் பேர் அணையின் இரு பக்கமும்***
***ஒழுக்கின் மாலை வகுத்தன ஒத்தவே.***

***முழுக்க நீரில் புகா*** *- முழுவதும் கடல் நீருக்குள் மூழ்காதவையும்;* ***முழுகிச் செலா*** *- நீரில் மூழ்கியும் செல்லாதனவாய் நின்றவையுமான;* ***குழுக்களோடு அணை*** *- கூட்டம் கூட்டமாய் நெருங்கியிருக்கும்;* ***கோளரி யாளிகள்*** *- உயிர்களைக் கொல்லவல்ல சிங்கங்களும் யாளிகளும்;* ***இழுக்கு இல் பேரணையின்*** *- குற்றமற்ற அந்தப் பெரிய அணையின்;* ***இருபக்கமும்*** *- இரண்டு பக்கங்களிலும்;* ***ஒழுக்கின் மாலை வகுத்தன ஒத்த*** *- ஒழுங்கு பெற வரிசையாக நிற்க வைத்தவை போன்றன.*

*அணைதல் - நெருங்குதல். கோள்- கொள்ளவல்ல. ஒழுக்கின் - ஒழுங்காக. மாலை - வரிசை.*

***6706. பளிக்கு மால் வரை முந்து படுத்தன***
***ஒளிக்கும் ஆழி கிடந்தன ஓர்கிலார்,***
***'வெளிக்கு மால் வரை வேண்டும்' எனக்***
***கொணர்ந்து,***
***அளிக்கும் வானர வீரர் அநேகரால்.***

***பளிக்குமால் வரை*** *- பெரிய பளிங்கினாலமைந்த மலைகள்;* ***முந்து படுத்தன*** *- முன்பு வானரங்களால் கடலில் வீசப்பட்டவை;* ***ஒளிக்கும் ஆழி கிடந்தன ஓர்கிலார்*** *- கடலுக்குள் கிடப்பதை அறியாதவராய்;* ***வெளிக்கு மால் வரை வேண்டும்*** *- இந்த இடைவெளிக்கு ஒரு பெரிய மலை தேவை;* ***எனக் கொணர்ந்து அளிக்கும்*** *- என்று கூறிப்பெரிய மலைகளைக் கொண்டு வந்து தருகின்ற;* ***வானர வீரர் அநேகரால்*** *- வானரவீரர் அநேகம் பேராவார்.*

*பளிங்கு மலை நீரைத் தடுத்திருந்ததை அறியாத வானரங்களை 'ஓர் கிலார்' என்றார். ஒளிக்கும் ஆழி - ஒளிக்கப்பட வேண்டிய கடல் ஓர்தல் - உணர்தல் வெளி - இடைவெளி.*

***6707. பாரினாள் முதுகும் நெடும் பாழ்பட,***
***மூரி வானரம் வாங்கிய மொய்ம் மலை***
***வேரின் ஆம் என, வெம் முழையின்னுழை***
***சோரும் நாகம் நிலன் உறத் தூங்குமால்.***

*__பாரினாள் முதுகும் நெடும் பாழ்பட__ - நிலமகளுடைய முதுகும் நெடிதே பாழாகும்படி; __மூரிவானரம் வாங்கிய மொய்ம்மலை__ - வலிமை மிக்க வானரங்கள் எடுத்த நெருங்கிய மலை; __வேரின் ஆம் என__ - வேர்களோ என்று தோன்றும் படி; __வெம் முழையின் உழை__ - கொடிய மலைக்குகைகளிலிருந்து; __சோரும் நாகம் நிலனுறத் தூங்குமால்__ - வெளிப்பட்ட பாம்புகள் நிலத்திலேபடும்படி தொங்கிக் கொண்டிருக்கும்.*

*'மலையின் வேரின் ஆம்' - மலைக்கும் வேர் இருக்கிறது என்று கூறும்படி. மலைகளை வானரங்கள் தூக்குவதால், குகைகளிலிருந்து வெளிப்பட்ட பாம்புகள் நிலத்தில் படும்படி தொங்கிக் கொண்டிருப்பது மலையின் வேர்களைப் போலிருந்தது. இது தற்குறிப்பேற்றவணியாகும். முழை - குகை. உழை - இடம்.*

***6708. அருணச் செம் மணிக் குன்று அயலே சில***
***இருள் நற் குன்றம் அடுக்கின, ஏய்ந்தன-***
***கருணைக் கொண்டல், 'வறியன் கழுத்து' என***
***வருணற்கு ஈந்த வருண சரத்தையே.***

*__அருணச் செம்மணிக் குன்று அயலே__ - செம்மை நிறத்தை உடையதான மாணிக்க மலைகளுக்குப் பக்கத்திலே; __சில இருள் நற்குன்றம் அடுக்கின__ - சில இருள் நிறம் வாய்ந்த நீலமலைகள் அடுக்கப்பட்டுக் கிடப்பன; __கருணைக் கொண்டல்__ - கருணை பொழியும் மேகம் போன்றவனாகிய இராமபிரான்; __வறியன் கழுத்து என__ - தனது மாலையை அடியுறையாக எனக்குக் கொடுத்த இவன் வெறும் கழுத்தினனாயிருக்கிறான் என்று; __வருணற்கு ஈந்த வருண சரத்தை ஏய்ந்தன__ - வருணனுக்கு வழங்கிய பலநிறமணி மாலையை ஒத்துக் காணப்பட்டன.*

*அருணம் - செந்நிறம். செம்மணி - மாணிக்கம். நல்குன்றம் - நீல மலை. நல்ல பாம்பு. கருநாகம் என்ற ஆட்சி காண்க. தெலுங்கு மொழியில் நல்ல என்ற சொல் கருமை என்ற பொருளில் வழங்கும். வருணன் தனது மணி மாலையைத் தந்து விட்டமையால், வெறும் கழுத்தை உடையவனாக இருக்கிறானென்று பல நிற மணி மாலையை இராமன் வருணனுக்குத் தந்தது போலக் காணப்பட்டது அடுக்கிய மலைகளின் காட்சி. செம்மணி முதலான பல நிற கொண்ட மலையடுக்கு இவ்வாறு வருணிக்கப்பட்டது.*

***6709. ஏய்ந்த தம் உடம்பு இட்ட உயிர்க்கு இடம்***
***ஆய்ந்து கொள்ளும் அறிஞரின், ஆழ் கடல்***
***பாய்ந்து பண்டு உறையும் மலைப் பாந்தள்கள்,***
***போந்த மா மலையின் முழை, புக்கவே.***

***ஏய்ந்த தம் உடம்பு இட்ட உயிர்க்கு*** *- தமது உயிருக்குப் பொருந்திய உடம்பை விட்டு விட்ட அவ்வுயிருக்கு;* ***இடம் ஆய்ந்து கொள்ளும் அறிஞரின்*** *- பொருந்திய இடமான உடலை ஆய்ந்து மறுபடியும் சென்றடையும் யோகிகளைப் போல;* ***மலைப் பாந்தள்*** *- மலைப் பாம்புகள்;* ***ஆழ்கடல் பாய்ந்து*** *- மலைகளை வானரங்கள் கடலில் வீசியபோது அந்தக் கடலிலே பாய்ந்து;* ***பண்டு உறையும் மலை போந்த*** *- முன்பு தாம் வாழ்ந்த மலையை அடைந்து;* ***மாமலையின் முழை புக்க*** *- அந்த மலைக்குகைகளில் நுழைந்தன.*

*கூடுவிட்டுக் கூடுபாயும் சித்து வல்ல யோகிகள் தம் உடலை விட்டு நீங்கி வேறு உடலில் வாழ்ந்து, பின் தமது உடலைத் தேடியடைந்து சென்றடைவதை ஒத்து மலைப்பாம்புகளின் செயல் இருந்தது என்பதால் இது உவமையணி. அறிஞர் - யோகிகள். பாந்தள் - பாம்பு.*

***6710. சேதுவின் பெருமைக்கு இணை செப்ப, ஓர்***
***ஏது வேண்டும் என்று எண்ணுவது என்கொலோ-***
***தூதன் இட்ட மலையின் துவலையால்,***
***மீது விட்டு-உலகு உற்றது, மீன் குலம்?***

***சேதுவின் பெருமைக்கு இணை செப்ப*** *- சேதுவின் பெருமைக்கு இணையாகச் சொல்ல;* ***ஓர் ஏது வேண்டும் என்று*** *- ஒரு காரணம் வேண்டும் என்று;* ***எண்ணுவர் என் கொலோ*** *- நினைப்பது எதற்காக?;* ***தூதன் இட்ட மலையின் துவலையால்*** *- இராம தூதனாகிய அனுமன் கடலில் எறிந்த மலையால் எழுந்த நீர்த்திவலைகளோடு;* ***மீன் குலம்*** *- அக்கடலில் வாழுகின்ற மீன் கூட்டங்களும்;* ***மீது விட்டு உலகுற்றது*** *- மேலானதாகிய வீட்டுலகை அடைந்தது.*

*சேது - அணை. மீதுவிட்டு உலகு - மேலதாகிய வீட்டுலகம் மீன்கள் நீர்த்துளிகளோடு விண்ணுலகடைந்தன என்பதன் நயம் கருதத் தக்கது. 'துவலையசால்' ஆல் என்ற மூன்றாவதனுருபு 'ஓடு' என்ற பொருளில் வந்தது.*

***6711. நீலன் இட்ட நெடு வரை நீள் நில***
***மூலம் முட்டலின், மொய் புனல் கைம்மிக,***
***கூலம் இட்டிய ஆர்கலி கோத்ததால்,***
***ஓலமிட்டு எழுந்து ஓடி, உலகு எலாம்.***

***நீலன் இட்ட நெடுவரை*** - *அக்கினி தேவனது அம்சமான நீலன் என்ற வானரத் தலைவன் கடலில் இட்ட நீண்ட மலை;* ***நீள் நிலமூலம் முட்டலின்*** - *நீண்ட இந்தப் பூமியின் அடிவரை (பாதாளம்) சென்று முட்டுவதால்;* ***மொய்புனல் கைம்மிக*** - *மிகுந்த தண்ணீர் எல்லைகடந்து செல்வதால்;* ***கூலம் இட்டிய ஆர்கலி*** - *கரை சிறியதாகிய அக்கடல்;* ***ஓலம் இட்டு எழுந்து ஓடி*** - *முழக்கமிட்டுக் கொண்டு மேலெழுந்து ஓடி;* ***உலகு எலாம் கோத்தது*** - *உலகமெல்லாம் சென்று பாய்ந்தது.*

*நீலன் - வானரத் தலைவன் ஒருவன்; அணை கட்டியவன். நிலமூலம் - நிலத்தின் அடிப்பகுதி (பாதாளம்). முட்டுதல் - தாக்குதல். கைம்மிக - எல்லைகடந்து செல்ல கூலம் - கரை இட்டிய - சிறிதான ஆர்கலி - கடல் (ஒலித்துக் கொண்டே இருப்பது)*

***6712. ஒருவன் ஆயிரம் யோசனை ஓங்கிய***
***அருவி மால் வரை விட்டு எறிந்து ஆர்த்தலால்,***
***மருவு வான் கொடி மாடஇலங்கையில்***
***தெரு எலாம் புக்கு உலாய, தெண்ணீர்அரோ.****

***ஒருவன் ஆயிரம் யோசனை ஓங்கிய*** - *வானர வீரன் ஒருவன் ஆயிரம் யோசனை தூரம் உயர்ந்துள்ளதாகிய;* ***அருவி மால்வரை விட்டு எறிந்து ஆர்த்தலால்*** - *அருவிகளையுடைய பெரிய கரியமலையை கடலில் எறிந்து விட்டு, ஆரவாரித்ததால்;* ***மருவுவான் கொடி மாட இலங்கையில்*** - *வானளாவிய கொடிகளை உடைய மாடங்களைக் கொண்ட இலங்கை மாநகரின்;* ***தெருவெலாம் தெண்ணீர் புக்கு உலாய*** - *தெருக்களில் எல்லாம் தெளிந்த கடல்நீர் புகுந்து உலாவியது.*

*மால் - கரிய (பெரிய எனலுமாம்) இராவணன் ஆணைக்கு அஞ்சிக் கரை கடவாதிருந்த கடல் நகருக்குள் புகுந்து அச்சமின்றித் தெருக்களில் உலாவியது என்பது தோன்ற 'உலாய' என்றது ஓர் நயம்.*

***6713. மயிந்தன் இட்ட நெடு வரை வான் உற***
***உயர்ந்து முட்டி விழ, எழுந்து ஓத நீர்***
***தியந்தம் முட்ட, திசை நிலை யானையும்,***
***பெயர்ந்து விட்டவை, யாவும் பிளிறுவ.***

***மயிந்தன் இட்ட நெடு வரை*** - *மயிந்தன் என்ற வானரத் தலைவன் கடலில் விட்டெறிந்த பெரிய மலை;* ***வான் உற உயர்ந்து முட்டி விழ*** - *வானத்திலே சென்று உயர்ந்து தாக்கிப் பின் கீழே விழ அதனால்;* ***எழுந்த ஓத நீர்*** - *மேலே பொங்கி எழுந்த கடல்நீர்;* ***தியந்தம் முட்ட*** - *திசைகளின் எல்லையிலே சென்றுதாக்க;* ***திசைநிலையானையும்*** - *எட்டுத் திசைகளிலும் நிலைத்து நிற்கும் திக்கு*

*யானைகளும் கூட;* ***பெயர்ந்து விட்டு அவை யாவும் பிளிறுவ*** *- தாம் வாழும் திசையிலிருந்து இடம் பெயர்ந்து விட்டு, அச்சத்தால் பிளிறின.*

*தியந்தம் - திக் + அந்தம் (திசையின் எல்லையான இடம்). ஓதநீர் - கடல் நீர். திசை நிலையானை - திக்கு யானை. மயிந்தன் கடலில் எறிந்த பெரிய மலை வானத்திலே மோதிப்பின் கீழே விழுந்தது என்பதை 'வான் உற உயர்ந்து முட்டி விழ' என்றார். திக்குகளில் நிலைத்து நின்ற யானைகளும் இடம் பெயர்ந்து, அஞ்சிப்பிளிறலாயின என்பதை 'பெயர்ந்து விட்டு அவை யாவும் பிளிறுவ' என்றார்.*

***6714. இலக்கு வன் சரம்ஆயினும், ஏன்று எதிர்***
***விலக்கினால், விலங்காத விலங்கலால்,***
***அலக்கண் எய்த,-அமுது எழ ஆழியைக்***
***கலக்கினான் மகன்-மீளக் கலக்கினான்.***

***இலக்குவன் சரம் ஆயினும்*** *- இலக்குவனது அம்பு என்றாலும்;* ***ஏன்று எதிர் விலக்கினால்*** *- போரை ஏற்று எதிர்த்து நின்று விலக்கினால்;* ***விலங்காத விலங்கலால்*** *- சிறிதும் விலகாத மலையினால்;* ***அமுதெழ ஆழியைக் கலக்கினான் மகன்*** *- அமுதம் எழும்படி பாற்கடலைக் கலக்கியவனான வாலியின் மகன் அங்கதன்;* ***அலக்கண் எய்த*** *- கடல் துன்பம் எய்தும்படி;* ***மீளக் கலக்கினான்*** *- மீண்டும் கடலைக் கலக்குவானானான்.*

*'இலக்குவன் சரம்' என்பதற்கு 'இலக்கு வன்சரமாயினும்' என்று பிரித்து குறித்த இலக்கில் சென்று தாக்குவதற்குரிய வலிய அம்பாயினும் என்று பொருள் கூறினும் பொருந்தும். ஏன்று - ஏற்று விலங்காத விலங்கல் - விலகாத மலையாகும் ஆழியை அமுதெழக்கலக்கினான் வாலி. அவன் மகன் அங்கதன் எதனாலும் விலக்கொணாத மலையைக் கொண்டு, கடல் துன்புறும் படி அக்கடலைக் கலங்கச் செய்தான் என்பது கருத்து. அலக்கண் - துன்பம் ஆழி - கடல். இலக்குவனது அம்பின் வலிமையை' முன்னும் பின்னும் (கம்ப. 2416. 7287) இராமனும் இராவணனும் கூறுவதனாலறியலாம்.*

***6715. மருத்தின் மைந்தன் மணி நெடுந் தோள் எனப்***
***பெருத்த குன்றம், கரடிப் பெரும் படை***
***விருத்தன் இட்ட விசையினின், வீசிய***
***திருத்தம், வானவர் சென்னியில் சென்றதால்.***

***கரடிப் பெரும்படை விருத்தன்*** *- கரடிகளின் பெரிய படைக்குத் தலைவனான சாம்பவந்தன் என்னும் முதியோன்;* ***மருத்தின் மைந்தன்*** *- காற்றுத் தேவனாகிய வாயுவின் மகனான அனுமனது;* ***மணி நெடுந்தோள் எனப் பெருத்தகுன்றம்*** *- அழகிய*

*பெரிய தோள்களைப் போன்ற ஒரு பெரிய மலையை;* ***இட்ட விசையினின்*** *- கடலில் எறிந்த வேகத்தினால்;* ***வீசிய திருத்தம்*** *- மேலே தெரித்த தீர்த்தம்;* ***வானவர் சென்னியில் சென்றது*** *- தேவர்களது தலையில் சென்று தெறித்தது.*

*விருத்தன் - வயதானவன். சாம்பவந்தன் நெடுங்காலம் வாழ்ந்த, நீண்ட ஆயுளை உடையவன். கரடிப் படைக்குத் தலைவன் என்பதால் 'கரடியின் பெரும் படை விருத்தன்' என்றார். அனுமனது தோள்களை வியந்து 'மருத்தின் மைந்தன் மணி நெடுந் தோளெனப் பெருத்த குன்றம்' என்றார். மருத்து - காற்றுத்தேவன். விசை - வேகம். சிரத்தில் சென்று தெறித்தமைக்கு ஏற்ப நீர் என்று கூறாது "திருத்தம்" என்றார். தீர்த்தம் என்பதன் திரிபே திருத்தம். தீர்த்தம் - புனித நீர் எதுகை நோக்கி 'திருத்தம்' எனத் திரிந்தது.*

***6716. குமுதன் இட்ட குல வரை கூத்தரின்***
***திமிதம் இட்டுத் திரியும் திரைக் கடல்***
***துமி தம் ஊர் புக, வானவர் துள்ளினார்-***
***அமுதம் இன்னம் எழும் எனும் ஆசையால்.***

***குமுதன் இட்ட குலவரை*** *- குமுதன் என்னும் வானரத் தலைவன் கடலில் எறிந்த சிறந்த தொருமலை;* ***கூத்தரின் திமிதம் இட்டு*** *- கூத்தாடுபவர்களைப் போலக் குதித்து ஆடி;* ***திரியும் திரைக் கடல்*** *- சுழன்று திரியும் அலைகளையுடைய கடலில்;* ***துமிதம் ஊர்புக*** *- நீர்த்துளிகள் தங்கள் ஊரிலே வந்து விழுவதால்;* ***அமுதம் இன்னம் எழும் எனும் ஆசையால்*** *- (முன்பு பாற்கடலை மந்தர மலையைக் கொண்டு கடைந்ததால் எழுந்த அமுதத்தைப் போல) இன்னும் அமுதம் எழக் கூடும் என்ற ஆசையால்;* ***வானவர் துள்ளினார்*** *- தேவர்கள் மகிழ்ந்து துள்ளலாயினர்.*

*குமுதன் - வானரத்தலைவருள் ஒருவன். குலவரை - சிறந்த மலை. திமிதம் - திமிதம் என்று ஒலித்துக் கூத்தாடுதல் துமி - துளி. இச் சொல் இப் பொருளில் உலக வழக்கில் வழங்குவதாகக் கூறிய கம்பருக்கு, கலை மகளே ஆய்ச்சி வடிவில் வந்து தயிர் கடைந்து கொண்டிருக்க, பிள்ளைகள் நெருங்கி வர 'துமி தெறிக்கும் தூரப் போங்கள்" என்று கூறியதாக ஒரு கதை வழங்குகிறது.*

***6717. கன சினத்து உருமின் கடுங் கார் வரை***
***பனசன் இட்டன யாவும் பரிக்கிலன்,***
***மன சினத்த அனந்தனும், வாழ்வு இகந்து,***
***அனசனத்தொழில் மேற்கொள்வது ஆயினான்.***

***கனசினத்து உருமின்*** *- மிகுந்த கோபத்துடன் இடியைப் போல் முழங்கி;* ***கடும் கார் வரை*** *- கடிய பெரிய கரிய மலைகளை;* ***பனசன் இட்டன யாவும்*** *- 'பனசன்' என்ற*

வானரத் தலைவன் கடலில் எறிய அவை அனைத்தையும்; **பரிக்கிலன்** - தாங்க இயலாதவனாய்; **மன சினத்து அனந்தனும்** - மனத்திலே மிக்க சினத்தை உடையவனான ஆதிசேடனும்; **வாழ்வு இகந்து** - பாரத்தைச் சுமந்து வாழ்வதை விட்டு (உயிர்துறக்க); **அனசனத் தொழில்** - உணவு உண்ணாதிருத்தலாகிய தொழிலை; **மேற் கொள்வதாயினான்** - மேற்கொள்ளலானான்.

பனசன் - வானரத் தலைவன் ஒருவன். பரிக்கிலன் - தாங்க இயலாதவனாய் அனந்தன் - ஆதிசேடன் வாழ்விகந்து - வாழ்வை விட்டு அன் + அசனம் = அனசனம்- உண்ணாதிருத்தல் அசனம் - உணவு கோவைப்பகுதியில் கிராமப்புறங்களில் பட்டிப் பொங்கலன்று 'அசனமுண்ணுபட்டியாரே' என்று கூறி மாடுகளுக்கு உணவுண்ணச் செய்தலுண்டு' என்பதால் அசனம் - உணவு என்ற பொருள் கொண்ட சொல்லாக வழங்குவது புலனாகும். ஆதிசேடன் கோபம் மிக்கவன் என்பதால் 'மன சினத்து அனந்தன்' என்றார்; இலக்குவன் சீற்ற முற்ற போது "தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்" என்றது (கம்ப. 1717) நினைவு கூரத்தக்கது.

**6718. எண் இல் எண்குஇனம் இட்ட கிரிக் குலம்,**
**உண்ண உண்ணச் சென்று, ஒன்றினொடு ஒன்று**
**உற,**
**சுண்ண நுண் பொடி ஆகித் தொலைந்தன,**
**புண்ணியம் பொருந்தாத முயற்சிபோல்.**

**எண்இல் எண்கு இனம்** - எண்ண முடியாத கரடிகளின் கூட்டம்; **இட்ட கிரிக் குலம்** - கடலில் இட்ட மலைகளின் கூட்டம்; **உண்ண உண்ணச் சென்று** - கடலில் அழுந்த அழுந்தச் சென்று; **ஒன்றினொடு ஒன்று உற** - ஒன்றுடன் ஒன்று பொருந்துவதால்; **புண்ணியம் பொருந்தாத முயற்சிபோல்** - புண்ணியப்பயன் பொருந்தாத முயற்சிக்குப் பயனில்லாதது போல; **சுண்ண நுண் பொடியாகித் தொலைந்தன** - நுண்ணிய தூளாகி அழிந்தன.

எண்கு - கரடி. கிரிக்குலம் - மலைகளின் கூட்டம். என்றார்.

**6719. ஆர ஆயிர யோசனை ஆழமும்**
**தீர நீண்டு பரந்த திமிங்கிலம்,**
**பார மால் வரை ஏறப் பதைத்து, உடல்**
**பேரவே, குன்றும் வேலையும் பேர்ந்தவால்.**

**ஆர ஆயிரம் யோசனை ஆழமும்** - கடலில் ஆயிரம் யோசனை ஆழமும்; **தீரநீண்டு பரந்த திமிங்கிலம்** - முழுதும் நீண்டு பரந்துள்ள திமிங்கிலங்கள்; **பார மால் வரை ஏற** - பாரமான பெரிய மலை தன் மீது வீழ்தலால்; **பதைத்து உடல் பேரவே** - பதை பதைத்து உடலைப் பெயர்த்தலால்; **குன்றும் வேலையும்** - திமிங்கிலங்களின்மீது

*விழுந்த மலைகளும், கடல்நீரும்;* ***பேர்ந்தவால்*** *- இடம் விட்டுப் பெயர்ந்தனவாயின.*

*கடலில் ஆயிரம் யோசனை தூரம் நீண்டு பரந்துள்ள திமிங்கிலங்களின் மீது பாரமான மலைகள் வீழ்வதால் பதை பதைத்து உடலைப் பெயர்த்தன. அதனால் மலைகளும், கடல் நீரும் இடம் பெயர்ந்தன என்பது கருத்து. யோசனை - நூறு மைல் என்பர். (பத்துக்காதம் ஒரு யோசனை) பாரமால் வரை - பாரமான பெரிய மலை (பாரம் + மால் + வரை) (அசைய)*

### *நளன் சேதுவை அமைத்த வகை*

***6720. குலை கொளக் குறி நோக்கிய கொள்கையான்,***
***சிலைகள் ஒக்க முறித்துச் செறித்து, நேர்***
***மலைகள் ஒக்க அடுக்கி, மணற் படத்***
***தலைகள் ஒக்கத் தடவும், தடக் கையால்.***

***குலைகொளக் குறி நோக்கிய*** *- அணை நன்றாக அமையும் படி சிந்தித்துப் பார்த்த;* ***கொள்கையான்*** *- தன்மையை உடையவனாகிய நளன்;* ***சிலைகள் ஒக்க முறித்துச் செறித்து*** *- கற்களைச் சமமாக உடைத்து நன்கு பொருந்தும்படி சேர்த்து;* ***நேர் மலைகள் ஒக்க அடுக்கி*** *- மலைகளை நேராக, சமமாக இருக்கும்படி அடுக்கி;* ***மணல்பட*** *- இடையிலே மணலைப் பரப்பி; தடக்கையால் - தன் அகன்ற கைகளால்;* ***தலைகள் ஒக்கத் தடவும்*** *- சிகரங்கள் சமமாயிருக்கும்படி தடவுவான்.*

*குலை - அணை. குறிநோக்கிய - குறித்து நோக்கிய. சிந்தித்து நளன் கற்களை வேண்டிய அளவில் சிதைத்து, நெருக்கமாக.*

***6721. தழுவி, ஆயிர கோடியர் தாங்கிய***
***குழுவின் வானரம் தந்த கிரிக் குலம்,***
***எழுவின் நீள் கரத்து ஏற்றிட, இற்று இடை***
***வழுவி வீழ்வன கால்களின் வாங்குவான்.***

***ஆயிரம் கோடியர் குழுவின் வானரம்*** *- ஆயிரம் கோடி பேராகிய வானரக் கூட்டத்தினர்;* ***தழுவித் தாங்கிய*** *- தமது கைகளால் தழுவித் தாங்கிக் கொண்டு வந்து;* ***தந்த கிரிக்குலம்*** *- தந்த மலைக் கூட்டங்களை;* ***எழுவின் நீள் காத்து ஏற்றிய*** *- நளன் தனது தூண் போன்ற கைகளில் ஏற்றுக் கொண்ட போது;* ***இற்று இடை வழுவி வீழ்வன*** *- முறிந்து இடையிலே தவறி வீழ்வனவற்றை;* ***கால்களின் வாங்குவான்*** *- கால்களால் தடுத்து நிறுத்தி எடுத்துக் கொள்வான்.*

*எழு - தூண். வீழ்வன - கீழே விழுகின்ற மலைகளை வானரங்கள் தூக்க முடியாமல் தூக்கின என்பதால் 'தழுவித்தாங்கிய' என்றார். நளனது நீண்ட கைகளை 'எழுவின் நீள் கரம்' என்று சிறப்பித்தார். நழுவிக் கீழே விழும் மலைகளை லாவகமாகக் கால்களால் தடுத்து நிறுத்தி எடுத்த திறத்தை 'கால்களில் வாங்குவான்' என்றார்.*

*மலை சுமந்து வரும் வானரங்கள்*

***6722. மலை சுமந்து வருவன வானரம்,***
***நிலையில் நின்றன, செல்ல நிலம் பெறா -***
***அலை நெடுங் கடல் அன்றியும், ஆண்டுத் தம்***
***தலையின்மேலும் ஓர் சேது தருவ போன்ம்.***

***மலை சுமந்து வருவன வானரம்*** *- அணைகட்டுவதற்காக மலைகளைச் சுமந்து கொண்டு வருவனவாகிய வானரங்கள்;* ***செல்ல நிறம் பெறா*** *- செல்லுதற்கு அங்கு இடமில்லாமையால்;* ***நிலையில் நின்றன*** *- மலைகளைச் சுமந்து கொண்டு அசையாமல் நின்ற தோற்றம்;* ***அலை நெடுங்கடல் அன்றியும்*** *- அலைகளை உடைய பெரிய கடலே அல்லாது;* ***ஆண்டுத் தம் தலையின் மேலும்*** *- அங்கே அந்த வானரங்களின் தலைகளின் மீதும்;* ***ஒரு சேது தருவ போன்ம்*** *- ஒரு அணை அமைந்தது போலக் காணப்பட்டது.*

*போன்ம் - 'ம்' மகரக் குறுக்கம்.*

***6723. பருத்த மால் வரை ஏந்திய பல் படை***
***நிரைத்தலின், சில செல்ல நிலம் பெறா,***
***கரத்தின் ஏந்திய கார் வரை, கண் அகன்***
***சிரத்தின் மேற்கொண்டு, நீந்தின சென்றவால்.***

***பருத்த மால் வரை ஏந்திய*** *- பெரிய கருமை நிறமான மலைகளைக் கரங்களில் ஏந்திய;* ***பல்படை நிரைத்தலின்*** *- பல பேர் கொண்ட வானரப் படைவரிசையாக நிற்பதனால்;* ***சில செல்ல நிலம் பெறா*** *- மலைகளைத் தாங்கி வந்த சில வானரங்கள் செல்லுவதற்கு இடமில்லாததால்;* ***கரத்தின் ஏந்திய கார் வரை*** *- கைகளில் ஏந்திக் கொண்டிருந்த கரிய மலைகளை;* ***கண் அகன் சிரத்தின் மேற்கொண்டு*** *- இடமகன்ற தலையின் மீது சுமந்து கொண்டு;* ***நீந்தின சென்றவால்*** *- நீந்திக் கொண்டு செல்வனவாயின.*

*நிரைத்தல் - வரிசையாக நிற்றல். நிலம் பெறா - இடம் பெறாமையால். கண் அகன்சிரம் - இடமகன்ற சிரம்.*

*6724. ஆய்ந்து நீளம், அரிது சுமந்தன
ஓய்ந்த கால, பசியின் உலர்ந்தன,
ஏந்து மால் வரை வைத்து, அவற்று ஈண்டு தேன்
மாந்தி மாந்தி, மறந்து, துயின்றவால்.*

***அரிது சுமந்தன*** - *மலைகளைக் கடுமையாக முயன்று சுமந்து வந்த வானரங்கள்;* ***நீளம் ஆய்ந்து*** - *போக வேண்டிய தூரத்தை ஆராய்ந்து பார்த்து;* ***ஓய்ந்த கால*** - *கால்கள் ஓய்ந்து போனவையாய்;* ***பசியின் உலர்ந்தன*** - *பசியினால் வாடியனவாய்;* ***ஏந்து மால் வரை வைத்து*** - *கைகளில் ஏந்திய பெரிய மலைகளைக் கீழே வைத்து விட்டு;* ***அவற்று ஈண்டு தேன் மாந்திமாந்தி*** - *அம்மலையிலே உள்ளதேனை மிகுதியாக உண்டு;* ***மறந்து துயின்ற*** - *போக வேண்டிய காரியத்தை மறந்து போய் தூங்கலாயின.*

*உலர்ந்தன - வாடினவாக. அவற்று ஈண்டு தேன் - அவைகளில் நிறைந்துள்ள தேனை. மிளகுக் கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏறப் புகுந்த குரங்கு, பக்கத்துப் பாறையில் இருந்த தேனைக் குடித்து உறங்கி விடுவதாக கபிலர் (அகநா.2) காட்டிய காட்சியைக் கம்பர் நினைந்தார் போலும்.*

*6725. போதல் செய்குநரும், புகுவார்களும்,
மாதிரம்தொறும் வானர வீரர்கள்,
'சேது எத்துணைச் சென்றது?' என்பார் சிலர்;
'பாதி சென்றது' எனப் பகர்வார் சிலர்.*

***போதல் செய்குநரும்*** - *மலைகளை மீண்டும் கொண்டு வரச் செல்பவர்களும்;* ***புகுவார்களும்*** - *அணைகட்ட மலைகளைக் கொண்டு வருபவர்களுமாகிய;* ***மாதிரம் தொறும் வானர வீரர்கள்*** - *எல்லாத் திசைகளிலும் நிறைந்துள்ள வானர வீரர்களுக்குள்;* ***சேது எத்துணை சென்றது என்பார் சிலர்*** - *அணை எத்தனை தூரம் சென்றுள்ளது என்று வினவுவார் சிலர்;* ***பாதி சென்றது எனப் பகர்வார் சிலர்*** - *அவ்வாறு வினவியர்களுக்கு விடையாக பாதி அளவு சென்றுள்ளது என்று கூறுவார் சிலர்.*

*போதல் செய்குநர் - செல்லுபவர். புகுவார் - வருபவர். மாதிரம் - திசை எத்துணை - எந்த அளவு. புகுவார் வினவ, போதச் செய்கின்றார் விடை பகர்ந்தனர் என்க.*

*மலைகளும் மரங்களும் கடலில் மூழ்கும் நிகழ்ச்சிகள்*

*6726. குறைவு இல் குங்குமமும், குகைத் தேன்களும்,*

***நிறை மலர்க் குலமும், நிறைந்து எங்கணும்,***
***துறைதொறும் கிரி தூக்கின தோய்தலால்,***
***நறை நெடுங் கடல் ஒத்தது, நாம நீர்.***

***கிரி தூக்கின தோய்தலால்*** - *வானர வீரர்கள் தூக்கிக் கொண்டு வந்த மலைகள் கடலில் தோய்வதால்;* ***துறைதொறும்*** - *அந்தக் கடலின் எல்லாப் பகுதிகளிலும் (நீளத்துறைகளிலும்);* ***குறைவில் குங்குமமும்*** - *தன்மையில் குறைவில்லாத குங்குமமும்;* ***குகைத் தேன்களும்*** - *மலைக் குகைகளிலிருந்து விழுந்த தேனும்;* ***நிறை மலர்க் குலமும்*** - *நிறைந்த பலவித மணமலர்களின் கூட்டமும்;* ***எங்கணும் நிறைந்து*** - *எங்கும் நிறைந்து கிடப்பதால்;* ***நாம நீர்*** - *அச்சத்தைச் செய்யும் உவர்க் கடல்;* ***நறை நெடுங்கடல் ஒத்தது*** - *தேன் நிறைந்த நெடிய கடலை ஒத்திருந்தது.*

*நாமநீர் - அச்சத்தைத் தரும் உவர்க்கடல். கிரிதூக்கின குங்குமமும் தேன்களும் மலர்க்குலமும் - தோய்தலால் நாமநீர். நறை நெடுங்கடல் ஒத்தது எனஇயையும். கிரிதூக்கின என்பதற்கு மலைகள் சுமந்துள்ள குங்குமம் முதலியவை எனவும் வானரங்கள் தூக்கிய மலை எனவும் பொருள் கூறலாம்.*

***6727. நெடும் பல் மால் வரை தூர்த்து நெருக்கவும்,***
***துடும்பல் வேலை துளங்கியது இல்லையால்-***
***இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும்,***
***குடும்பம் தாங்கும் குடிப் பிறந்தாரினே.***

***இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும்*** - *துன்பங்கள் எத்தனையும் வந்து தடுத்து எய்தினாலும்; (அதனால்) மனம் தளர்ந்து போகாமல்;* ***குடும்பம் தாங்கும்*** - *தமது குடும்பத்தை ஆதரித்துக் காப்பாற்றும்;* ***குடிப் பிறந்தாரின்*** - *உயர் குடியில் பிறந்தவர்களைப் போல;* ***நெடும் பல்மால் வரை*** - *நீண்ட பெரிய பல மலைகள்;* ***தூர்த்து நெருக்கவும்*** - *தூர்த்து நெருக்கிய போதும்;* ***துடும்பல் வேலை*** - *அலைகள் பேரொலி எழுப்பும் பெரிய கடல்;* ***துளங்கியது இல்லையால்*** - *சிறிதும் கலங்க வில்லை.*

*இடும்பை - துன்பம். படுத்து - தடுத்து. தாங்கும் - ஆதரித்துக் காக்கும். இது உவமையணி. குடிப்பிறந்தார் - உவமானம் துடும்பல் வேலை - உவமேயம். இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு (குறள் 1029) எவ்வழி உழந்தக் கடைத்தும் குடிப்பிறந்தார் செய்வர் செயற்பாலவை (நாலடி. 147) என்ற கருத்துகள் இங்கு இணைத்து உணரத் தக்கன.*

***6728. கொழுந்துடைப் பவளக் கொடியின் குலம்***
***அழுந்த உய்த்த அடுக்கல் தகர்ந்து, அயல்***
***விழுந்த பல் மணியின் ஒளி, மீமிசை***

***எழுந்த எங்கணும். இந்திர வில்லினே.***

***கொழுந்துடைப் பவளக் கொடியின் குலம்*** - *கொழுந்துகளை உடைய பவளக் கொடிகளின் கூட்டம்;* ***அழுந்த உய்த்த அடுக்கல்*** - *கடலின் உள்ளே அழுந்தும்படி எறிந்த மலைகள்;* ***தகர்ந்து அயல் விழுந்த பல்மணியின் ஒளி*** - *உடைந்து போய் அதனால் பக்கங்களில் விழுந்த பல மணிகளின் ஒளிக் கதிர்கள்;* ***இந்திரவில்லின்*** - *வானத்திலே காணப்படும் இந்திரவில்லைப் போல;* ***மீமிசை எங்கணும் எழுந்த*** - *மேலே எவ்விடத்தும் காணப்பட்டன.*

*அழுந்த - கடலில் அழுந்தும்படி. உய்த்த - எறிந்த. அடுக்கல்- மலை. இந்திரவில் - வானவில். வானவில்லின் பல நிறங்களைப் போலப் பலமணிகளின் ஒளிக்கற்றைகள் ஒளிர்ந்தன.*

***6729. பழுமரம் பறிக்க, பறவைக் குலம்,***
***தழுவி நின்று ஒருவன் தனித் தாங்குவான்***
***விழுதலும், புகல் வேற்று இடம் இன்மையால்,***
***அழுது அரற்றும் கிளை என ஆனவால்.***

***பழுமரம் பறிக்க*** - *வானர வீரர்கள் அணை கட்ட ஆல் மரங்களை வேரொடு பறித்து விடுவதால்;* ***பறவைக்குலம்*** - *அந்த மரங்களை வாழுமிடமாக உடைய பறவைக்கூட்டம்;* ***தழுவி நின்று ஒருவன்*** - *ஒருவனாகவே கிளைகளைத் தழுவியிருந்து;* ***தனித் தாங்குவான் விழுதலும்*** - *தனியாகத் தாங்கி ஆதரிப்பவன் இறந்துபட;* ***புகல் வேற்றிடம் இன்மையால்*** - *வேறு புகலிடம் இல்லாமையால்;* ***அழுது அரற்றும்கிளை என ஆன*** - *அழுது புலம்பும் கிளைஞரைப் போலாயின.*

*பழுமரம் - ஆலமரம். உவமையணி அழுது அரற்றும்கிளை உவமானம். பறவைக்குலம் - உவமேயம்.*

***6730. 'தர வலோம், மலர்' என்று, உயிர் தாங்கிய***
***மரம் எலாம் கடல் வீழ்தலும், வண்டு எலாம்,***
***கரவு இலாளர் விழ, களைகண் இலா***
***இரவலாளரின், எங்கும் இரிந்தவால்.***

***தரவலோம் மலர் என்று*** - *(வண்டுகளுக்கு) வேண்டிய மலர்களை உங்களுக்கு தரவல்லோம் என்று கூறி;* ***உயிர் தாங்கிய மரம் எல்லாம்*** - *அவற்றின் உயிர்களைக் காத்து ஆதரித்துக் கொண்டிருந்த மரங்களெல்லாம்;* ***கடல் வீழ்தலும்*** - *வானரங்களால் பறிக்கப்பட்டுக் கடலில் வீழ்ந்ததும்;* ***வண்டு எலாம்*** - *(அம்மரங்களின் மலர்களில் நிறைந்திருந்த தேனை உண்டு வாழ்ந்திருந்த) வண்டுகள் எல்லாம்;* ***கரவிலாளர் விழ*** -

*செல்வத்தை ஒளித்து வைக்காது தம்மை நாடி வந்தவர்க்கு உதவிய கொடையாளிகள் இறந்துவிழ;* ***களைகண் இலா*** *- பற்றுக் கோடு எதுவுமற்ற;* ***இரவலாளரின்*** *- இரவலர்களைப் போல;* ***எங்கும் இரிந்த*** *- எங்கும் ஓடலாயின;*

*'வலோம்' வல்லோம் என்பதன் இடைக்குறை - கரவிலாளர் செல்வத்தை ஒளிக்காது பிறர்க்கு உதவுபவர். வண்டுகள் பருக வேண்டிய தேனை வேண்டுமளவு தந்த மரங்களை 'உயிர்தாங்கிய மரம்' என்றார். வரையாது வழங்கும் வள்ளலைப் போல அம்மரங்கள் 'தரவலோம் மலர்' என்று கூறித் தந்தன. கரத்தல் - மறைத்தல். செல்வத்தை மறைத்துவைக்காது நாடி வந்தவர்களுக்கு உதவுபவர் 'கரவிலாளர்' ஆவர் இத்தகையோர் 'கரப்பிலர்' எனவும், கரத்தல் கனவிலும் தேற்றாதார்' எனவும் வள்ளுவரால் போற்றியுரைக்கப்படுவர். களைகண் - பற்றுக் கோடு.*

***6731. தொக்கு அடங்கல ஓடும் துவலைகள்***
***மிக்கு அடங்கலும் போவன-மீன் குலம்,***
***அக் கருங் கடல் தூர, அயற் கடல்***
***புக்கு அடங்கிடப் போவன போன்றவே.***

***தொக்கு அடங்கல ஓடும் துவலைகள்*** *- பலவாகச் சேர்ந்து அடங்காதனவாக ஓடும்நீர்த்துவலைகளோடு;* ***மிக்கு அடங்கலும் போவனமீன்குலம்*** *- முழுவதும் போவனவாகிய மீன் கூட்டங்கள்;* ***அக்கருங்கடல் தூர*** *- அவை வாழ்ந்துவந்த அந்தக் கடல் தூர்ந்து போக;* ***அயற்கடல்புக்கு*** *- தாம் வாழ்வதற்குரிய வேறு ஒரு கடலில் புகுந்து;* ***அடங்கிடப் போவன போன்ற*** *- அடங்குவதற்காகப் போவன போலக் காணப்பட்டன.*

*தொக்கு - பலவாகச் சேர்ந்து. திவலைகள் பலவாகச் சேர்ந்து அடங்காதனவாக விரைந்து ஓடுவதை 'தொக்கு அடங்கல ஓடும் துவலைகள்' என்றார். மிகுதியாக உள்ள மீன் அத்தனையும் அத்திவலைகளோடு மேலே சென்றனவாதலின்' மிக்கு அடங்கலும் போவன மீன்குலம்' என்றார். அயற்கடல் - வேறுகடல்.*

***6732. மூசு வண்டுஇனம், மும் மத மாவின்பின்***
***ஆசை கொண்டனபோல் தொடர்ந்து ஆடிய,***
***ஓசை ஒண் கடல் குன்றொடு அவை புக,***
***வேசை மங்கையர் ஆம் என, மீண்டவே.***

***மூசுவண்டினம்*** *- மொய்த்திருக்கும் வண்டுகளின் கூட்டம்;* ***மும்மதமாவின்பின்*** *- மும்மதம் பொழியும் யானைகளின் பின்னால்;* ***ஆசைகொண்டனபோல்*** *- அந்த யானைகளின் மீது ஆசை கொண்டன போல;* ***தொடர்ந்து ஆடிய*** *- யானைகளைப் பின் தொடர்ந்து ஆடிக் கொண்டு சென்றவை;* ***ஓசை ஒண் கடல்*** *- அலைகளின் ஓசைமிகுந்த*

*ஒள்ளிய கடலிலே;* ***குன்றொடு அவை புக*** *- தாம் வாழ்ந்த மலைகளோடு அந்த யானைகள் விழ;* ***வேசை மங்கையராமென மீண்டவே*** *- வேசையரைப் போல மீண்டு வந்தன.*

*மூசுவண்டு - மொய்த்த வண்டு! மும்மதம் - கன்னமதம் கபோலமதம் பீஜமதம். இது உவமை அணி, "நறுந்தாதுண்டு நயனில் காலை வறும்பூத்துறக்கும் வண்டு போல்குவம்' என்பது மணிமேகலை (18.19.20)*

## *6733. நிலம் அரங்கிய வேரொடு நேர் பறித்து,*
## *அலமரும் துயர் எய்தியஆயினும்,*
## *வல மரங்களை விட்டில, மாசு இலாக்*
## *குல மடந்தையர் என்ன, கொடிகளே.**

***நிலம் அரங்கிய வேரொடு*** *- நிலத்தில் அழுந்தியுள்ள வேரொடு;* ***நேர் பறித்து*** *- மரங்களை வானரங்கள் நேரே பறித்தமையால்;* ***அலமரும் துயர் எய்திய ஆயினும்*** *- கலங்கும்படியான துன்பத்தை அடைந்த போதும்;* ***கொடிகள்*** *- அம்மரங்களைச் சுற்றிக் கொண்டிருந்த கொடிகள்;* ***மாசு இலாக் குலமடந்தையர் என*** *- குற்ற மற்ற குலமகளிரைப் போல;* ***வலமரங்களை விட்டில*** *- தாம் சுற்றிக் கொண்டிருந்த மரங்களை விட்டு நீங்காதனவாய் மரங்களோடு கடலில் வீழ்ந்தன.*

*அரங்கிய - அழுந்திய. அலமருதல் - கலங்குதல். வல் மரங்கள் - வலிவுள்ள மரங்கள் (சுற்றியுள்ள மரங்களுமாம்). கணவன் உயிர்நீங்க, உடனுயிர் துறக்கும் கற்புடைய மகளிர் உவமானம், கொடி - உவமேயம். விலைமகளிரை முன்பாடலாலும் குலமகளிரை இப் பாடலிலும் நிரலாக நிறுத்தி உவமை நயந்தோன்றக் கம்பர் உலகியல் விளக்கம் தந்தார்.*

## *6734. துப்பு உறக் கடல் தூய துவலையால்,*
## *அப் புறக் கடலும் சுவை அற்றன;*
## *எப் புறத்து உரும்ஏறும் குளிர்ந்தன;*
## *உப்பு உறைத்தன, மேகம் உகுத்த நீர்.*

***துப்பு உறக் கடல் தூய துவலையால்*** *- வானரங்கள் பெரிய மலைகளைக் கடலில் வீசுவதால், அந்த வலிமை மிக்க கடல்தூவிய நீர்த்துவலைகளால்;* ***அப்புறக் கடலும் சுவை அற்றன*** *- அண்டத்துக்கு அப்பாலுள்ள கடல்களும் சுவை இழந்தன;* ***எப்புறத்து உரும் ஏறும்*** *- எப்புறத்திலுள்ள வெப்பம் மிகுந்த பேரிடிகளும்;* ***குளிர்ந்தன*** *- வெம்மை நீங்கிக் குளிர்ந்து போயின;* ***மேகம் உகுத்த நீர்*** *- மேகங்கள் சொரிந்த மழைநீரும் கூட;* ***உப்பு உறைத்தன*** *- உவர்ப்புடையதாய் உறைத்தன.*

துப்பு - வலிமை. அப்புறக் கடல்- பெரும் புறக்கடல். உரும் ஏறு - பேரிடி. உகுத்த - சொரிந்த பெரும்புறக்கடல் நன்னீர் உடையது. அதன் நீரும் சுவையற்றதாகியது என்பார் 'அப்புறக்கடலும் சுவை அற்றன" என்றார். எல்லாப் பக்கங்களிலும் உள்ள இடியேறு நீர்த் திவலைகளால் குளிர்ந்தன' என்றார். மேகங்கள் பொழியும் மழைநீர் நன்னீர் அதுவும் கடலின் உப்பு நீர்த்திவலையால் "உப்பு உறைத்தன" என்றார். அப்புறக் கடல் - உரும். மேகம் உகுத்தநீர் இவைகளின் இயல்பை மாற்றும் அளவுக்கு கடல்நீர்த்திவலைகள் மிக்கிருத்தலைக் கூறுவாராய் கடலை, 'துப்புறக் கடல்'

**6735. முதிர் நெடுங் கிரி வீழ, முழங்கு நீர்**
**எதிர் எழுந்து நிரந்தரம் எய்தலால்,**
**மதியவன் கதிரின் குளிர் வாய்ந்தன-**
**கதிரவன் கனல் வெங் கதிர்க் கற்றையே.**

**முதிர் நெடுங்கிரி வீழ** - முதிர்ந்த பெரிய மலைகளை (வானரங்கள் எறிய, கடலில்) அவை வீழ்வதால்; **முழங்குநீர் எதிர் எழுந்து** - முழக்கத்தை உடைய கடல் நீர் எதிர்த்து மேலே எழுந்து; **நிரந்தரம் எய்தலால்** - நிரந்தரமாக மேலே செல்வதால்; **கதிரவன் கனல் வெங்கதிர்க் கற்றை** - சூரியனுடைய கனல் வீசும் வெப்பமான ஒளிக் கதிர்த் தொகுதியாவும்; **மதியவன் கதிரின் -** சந்திரனுடைய கிரணங்களைப் போல; **குளிர் வாய்ந்தன** - குளிர்ந்த தன்மை பொருந்தியனவாயின;

எப்போதும் நீர்த்திவலைகள் வானத் தெய்தினமையின் 'நிரந்தரம் எய்தலால்' என்றார்.

**6736. நன்கு ஒடித்து, நறுங் கிரி சிந்திய**
**பொன் கொடித் துவலைப் பொதிந்து ஓடுவ,**
**வன் கொடிப் பவளங்கள் வயங்கலால்,**
**மின் பொடித்தது போன்றன, விண் எலாம்.**

**நறுங்கிரி நன்கு ஒடித்து** - மணம் மிகுந்த மலைகளை நன்றாகப் பெயர்த்து; **சிந்திய பொன் கொடி** - (கடலில் எறியும் போது சிந்திய மலையிலுள்ள பொன் துகள்களின் வரிசை; **துவலை பொதிந்து ஓடுவ** - கடலின் நீர்த்திவலைகளாலே பொதியப்பட்டு மேலே செல்வன; **வன் கொடிப் பவளங்கள் வயங்கலால்** - வலிய பவளக் கொடிகளோடு விளங்குவதால்; **விண் எலாம் மின்பொடித்தது போன்றன** - ஆகாய மெல்லாம் மின்னலைத் தோன்றச் செய்வது போன்றிருந்தது.

நல்ல மணமுடைய ஏலம், கிராம்பு போன்ற மலைபடு பொருள்களால் மலை நறுமணம் கமழும் தன்மையுடையதாயிருத்தலின் 'நறுங்கிரி' என்றார்.

*ஒடித்து - பெயர்த்து. பொன் கொடி - பொன் துகள்களின் ஒழுங்கு. பொதிந்து - மூடப்பட்டு. பொடித்தல் - தோன்றுதல்.*

### *6737. ஓடும் ஓட்டரின், ஒன்றின் முன் ஒன்று போய், காடும் நாடும், மரங்களும் கற்களும், நாடும்; நாட்டும்; நளிர் கடல் நாட்டில், ஓர் பூடும் ஆட்டல் இலாய, இப் பூமியில்.*

***ஓடும் ஓட்டரின்*** *- விரைந்தோடும் தூதுவர்களைப் போல;* ***ஒன்றின் முன் ஒன்று போய்*** *- வானரங்களை ஒன்றையொன்று முந்திச் சென்று;* ***காடும் நாடும்*** *- காடாகிய முல்லை நிலத்தும், நாடாகிய மருத நிலத்தும்;* ***மரங்களும் கற்களும் நாடும்*** *- மரங்களையும் கற்களையும் தேடும்;* ***நளிர்கடல் நாட்டில் நாட்டும்*** *- (தேடிக் கொண்டு வந்தவைகளை கடல் நிலமான நெய்தல் நிலத்தில் நிலை நிறுத்தும்;* ***இப்பூமியில்*** *- இந்தப் பூமியிலே எங்கும்;* ***ஓர் பூடும் ஆட்டல் இலாய*** *- ஒரு புல் பூடும் ஆடுதல் இல்லை ஆயின.*

*ஓட்டர் - விரைந்தோடும் தூதுவர். காடு - முல்லை நிலம், நாடு, மருதநிலம். நளிர்கடல் - குளிர்ந்த கடல். கடல்நாடு - நெய்தல், வானரங்கள் மரங்களையும் கற்களையும் பூமியெங்கும் தேடிக் கொண்டு வந்து, அணைகட்டக் கடலில் போடுவதால் பூமியில் எங்கும் புல், பூடும் ஆடாதனவாயின என்பது கருத்து. இலாய - இல்லையாயின வானரங்களின் செயலால் முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்கள் மயங்கிக் கலந்தன.*

### *6738. வரைப் பரப்பும், வனப் பரப்பும், உவர் தரைப் பரப்புவது என்ன, தனித் தனி உரைப் பரப்பும் உறு கிரி ஒண் கவி; கரைப் பரப்பும், கடற் பரப்பு ஆனதால்.*

***ஒண்கவி*** *- மிகுதியான வானர வீரர்கள்;* ***வரைப் பரப்பும் வனப் பரப்பும்*** *- மலைநிலத்தையும், காட்டு நிலத்தையும்;* ***உவர் தரைப் பரப்புவ தென்ன*** *- கடலையடுத்த நெய்தல் நிலத்திலே கொண்டு வந்து பரப்புகிறது என்னும்படி;* ***தனித்தனி உரைப் பரப்பும் உறுகிரி*** *- தனித்தனியே மலைகளைக் கொணர்ந்து புகழ்மிகப் பரப்பி வைக்கும் அதனால்;* ***கரைப் பரப்பு*** *- கடலை அடுத்த நிலப்பரப் பெல்லாம்;* ***கடற் பரப்பு ஆனதால்*** *- கடல் தண்ணீர் பொங்கிக் கடலாக மாறியது.*

*ஒண்மை - இங்கு மிகுதி குறித்தது. உவர்த்தரை- கடற்பகுதி. உரை - புகழ். 'ஒண்கவி தனித்தனி உரைபரப்பும்' என இயைத்து வானரம் ஒவ்வொன்றும் தமது செயலால் தனித்தனியே புகழ் பரப்பும் எனலும் பொருந்தும்.*

**6739. உற்றதால் அணை ஓங்கல் இலங்கையை,**
**முற்ற மூன்று பகலிடை; முற்றவும்,**
**பெற்ற ஆர்ப்பு விசும்பு பிளந்ததால்;**
**மற்று இவ் வானம் பிறிது ஒரு வான்கொலோ?**

**ஓங்கல் இலங்கையை முற்ற** - திரிகூட மலையிலிருக்கும் இலங்கையை அடைய; **மூன்று பகலிடை அணை உற்றது** - மூன்று நாட்களிலே அணை தகுந்ததாயிற்று; **முற்றவும்** - அணைகட்டி முற்றுப் பெற்றவுடன்; **பெற்ற ஆர்ப்பு** - வானரங்களின் ஆரவாரமுழக்கத்தால்; **விசும்பு பிளந்தது** - வானமே இரண்டாகப் பிளந்து போயிற்று; **மற்று இவ்வானம்** - இப்போதுள்ள இந்தவானம்; **பிறிது ஒருவான் கொலோ** - புதிதாக உண்டான வேறு ஒருவானம்தானோ.

ஓங்கல் - மலை (இங்கு திரிகூட மலையை உணர்த்தும்). முற்ற - நெருங்க (அடைய), மூன்று பகல் - மூன்று நாட்கள். உற்றது - தகுந்தது, பொருத்தமானது. வானம் பிளந்து போயிற்றென்றால் இப்போதும் வானம் இருக்கிறதே என வினவுவார்க்கு விடை கூறுதல் போல, 'ஒருவேளை இது வேறு ஒரு வானமோ' என்பார் 'பிறிது ஒரு வான் கொலோ' என்றார். வான்மீகி முனிவர் அணை ஐந்து நாட்களில் கட்டி முடிக்கப்பட்டது என்று குறிப்பிட, கம்பர் மூன்று நாட்களில் கட்டி முடிக்கப் பட்டது என்றார்.

*சேதுவின் தோற்றம்*

**6740. நாடுகின்றது என், வேறு ஒன்று?-நாயகன்**
**தோடு சேர் குழலாள் துயர் நீக்குவான்,**
**'ஓடும், என் முதுகிட்டு' என, ஓங்கிய**
**சேடன் என்னப் பொலிந்தது, சேதுவே!**

**நாயகன்** - எல்லாவுயிர்களுக்கும் தலைவனான இராமபிரான்; **தோடு சேர் குழலாள்** - பூவிதழ்களைச் சூடிய கூந்தலை உடைய சீதாபிராட்டியின்; **துயர் நீக்குவான்** - துயரத்தைத் தீர்ப்பதற்கு; **நாடு கின்ற தென் வேறு ஒன்று** - அப்பெருமானுக்கு ஏவல் பூண்டொழுகும் நான் இருக்க வேறு ஒன்றினை ஏன் அவன் நாடவேண்டும்; **ஓடும் என்முதுகு இட்டு என** - எனது முதுகின் மீது அடியிட்டு இராமபிரான் விரைந்து செல்லட்டும் என்று; **ஓங்கிய சேடன் என்ன** - கடலின்மீது உயர்ந்து விளங்கிய ஆதிசேடனைப் போல; **சேது பொலிந்தது** - அந்த அணை பொலிவு பெற்று விளங்கியது.

முதுகு இட்டு - முதுகில் அடியிட்டு. 'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம் நின்றால் மரவடியாம் நீள் கடலுள் என்றும் புணையாம் மணி

*விளக்காம் பூம்பட்டாம்புல்கும் அணையாம் திருமாற்கு அரவு" என்ற முதல் திருவந்தாதி (53) நினைவு கூரத்தக்கது.*

***6741. மெய்யின் ஈட்டத்து இலங்கை ஆம் மென் மகள்,***
***பொய்யன் ஈட்டிய தீமை பொறுக்கலாது,***
***ஐயன் ஈட்டிய சேனை கண்டு, அன்பினால்***
***கையை நீட்டிய தன்மையும் காட்டுமால்.***

**மெய்யின் ஈட்டத்து** - *வாய்மையாகிய செல்வத்தை உடைய;* **இலங்கையாம் மென்மகள்** - *இலங்கையாகிய மெல்லியல்புடைய பெண்;* **பொய்யன் ஈட்டிய தீமை பொறுக்கலாது** - *பொய்மையாளனாகிய இராவணன் சேர்த்து வைத்த தீமையைப் பொறுக்க மாட்டாதவளாய்;* ***ஐயன் ஈட்டிய சேனை கண்டு*** - *இராமன் தொகுத்த வானர சேனையைப் பார்த்து;* ***அன்பினால் கையை நீட்டிய*** - *இராமபிரானிடம் கொண்ட அன்பினாலே இரு கைகளையும் நீட்டி அழைக்கின்ற;* **தன்மையும் காட்டும்** - *தன்மையையும் இந்த அணை காட்டும்.*

*ஈட்டம் - செல்வம் (ஈட்டப்படுவது ஈட்டம்) அயோத்யாகாண்டத்தில் மிதிலையாகிய மகள், "கைகளை நீட்டி, ஐயனை ஒல்லைவாவென்றழைப்பது போன்றது" என்றது (480) ஒப்பு நோக்கத்தக்கது.*

***6742. கான யாறு பரந்த கருங் கடல்,***
***ஞான நாயகன் சேனை நடத்தலால்,***
***'ஏனை யாறு, இனி, யான் அலது ஆர்?' எனா,***
***வான யாறு, இம்பர் வந்தது மானுமால்.***

***கானயாறு பரந்த கருங்கடல்*** - *காட்டாறுகள் பலவும் வந்து பரந்துள்ள கரிய கடலில்;* **ஞான நாயகன் சேனை நடத்தலால்** - *ஞான நாயகனான இராமபிரானது வானர சேனை நடப்பதால்;* ***ஏனையாறு இனி யானலது ஆர் எனா*** - *என்னைத் தவிர வேறு தகுந்த நெறியாவார் யாருளர் என்று;* **வானயாறு** - *விண்ணுலகிலுள்ள ஆகாயகங்கை;* **இம்பர் வந்தது மானும்** - *இவ்வுலகிலே வந்திருப்பதை ஒத்து இவ்வணை காணப்படும்.*

*ஞான நாயகன் - ஞானமே வடிவான் தலைவனான இராமபிரான், "ஞான நாயகன்" என இராமபிரானைப் பின்னும் குறிப்பார் (8642) மானும் - ஒக்கும். இம்பர் - இவ்வுலகம்.*

***6743. கல் கிடந்து ஒளிர் காசுஇனம் காந்தலால்,***
***மற்கடங்கள் வகுத்த வயங்கு அணை,***

**எல் கடந்த இருளிடை, இந்திரன்**
**வில் கிடந்தது என்ன விளங்குமால்.**

***கல்கிடந்து*** - *(வானர வீரர் கடலில் எறிந்த) மலைகளில் கிடந்து;* ***ஒளிர் காசினம் காந்தலால்*** *- ஒளி வீசும் பலவகை மணித்திரள்கள் ஒளியை உமிழ்வதால்;* ***மற்கடங்கள் வகுத்த வயங்கு அணை*** *- வானர வீரர்கள் கட்டியதாய் விளங்குகின்ற அவ்வணை;* ***எல்கடந்த இருளிடை*** *- சூரியன் மறைந்த இரவு நேரத்திலே;* ***இந்திரன் வில் கிடந்தது என்ன*** *- வானத்திலே இந்திரவில் கிடந்தது போல;* ***விளங்கும்*** *- விளங்கலாயிற்று.*

*கல் - மலை. மலைகளிலே கிடந்து ஒளி வீசும் பன் மணித்திரளைக் "கல் கிடந்து ஒளிர் காசினம்" என்றார். மற்கடம் - குரங்கு. எல் - சூரியன் 'எல்கடந்த இருள்' என்பதற்குப் பகலை வென்று விளங்கியஇருள் எனினுமாம்.*

### *சேது அமைந்தபின், சுக்கிரீவன் முதலினோர் இராமபிரானுக்குத் தெரிவித்தல்*

***6744. ஆன பேர் அணை அன்பின் அமைத்தனர்,***
**கான வாழ்க்கைக் கவிக் குல நாதனும்,**
**மான வேற் கை இலங்கையர் மன்னனும்,**
**ஏனையோரும், இராமனை எய்தினார்.**

***ஆனபேரணை*** *- இலங்கை செல்லுதற்கான பெரிய அணை;* ***அன்பின் அமைத்தனர்*** *- வானர வீரர்கள் அன்பாலே கட்டி முடித்தனர்;* ***கான வாழ்க்கை*** *- காடுகளிலே வாழுகின்ற வாழ்க்கையை உடைய;* ***கவிக்குல நாதனும்*** *- வானரக் கூட்டத்தின் தலைவனான சுக்கிரீவனும்;* ***மான வேற்கை*** *- பெருமைமிகுந்த வேலைப்படையாக கையில் தாங்கியுள்ள;* ***இலங்கையர் மன்னனும்*** *- இலங்கையில் வாழ்பவர்களுக்கு அரசனான வீடணனும்;* ***ஏனையோரும்*** *- மற்றுமுள்ள அனுமன், சாம்பவந்தன், அங்கதன் நீலன், முதலான வானரப்படையின் தலைவர்களும்;* ***இராமனை எய்தினர்*** *- இராமபிரானிடம் சென்று அடைந்தனர்.*

*'ஆன்' என்பதற்கு இலங்கை செல்லுதற்கான என்று விரித்துப் பொருள் கொள்ளலாம். வானர வீரர்கள் இராமபிரானிடம் கொண்ட அன்பினால்தான், அணைகட்டும் அரிய செயலைச் செய்து முடித்தார்களே அல்லாது வேறு எவ்விதப் பயனையும் எதிர் பார்த்துச் செய்யவில்லை என்பதால் 'அன்பின் அமைத்தனர்' என்றார். பக்தியால் அன்றிப் பிற வகையால் நிறைவேற்றியிருக்க முடியாத கைங்கரியம் என்பது கவிஞர் குறிப்பு. காடுகளில் சுற்றித் திரிந்து காய் கனிகளை உண்டு வாழும் குரங்குகளாதலின் 'கான வாழ்க்கைக் கவிக்குலம்' வேடராகிய கண்ணப்பரின் சாதனை போன்றது இது. அவர் சாதனை ஆறு நாளில்; வானரரின் பக்திச் சாதனை மூன்று நாளில் என அறிக. மான வேற்கை என்பதற்குப் பதிலாக மான வேலை*

*என்ப தொரு பாடமும் கூறுவர். 'மான வேலை இலங்கை' என்பதற்கு பெரிய கடல் சூழ்ந்த இலங்கை என்பது பொருளாகும்.*

***6745. எய்தி, 'யோசனை ஈண்டு ஒரு நூறு இவை***
***ஐ-இரண்டின் அகலம் அமைந்திடச்***
***செய்ததால் அணை' என்பது செப்பினார்-***
***வைய நாதன் சரணம் வணங்கியே.***

***எய்தி*** *- இராமபிரானை அடைந்து;* ***வைய நாதன்*** *- உலகத்தின் நாயகனாகிய அந்தப் பெருமானது;* ***சரணம் வணங்கி*** *- திருவடிகளைத் தொழுது;* ***யோசனை ஈண்டு ஒரு நூறு*** *- நூறு யோசனை நீளம் உடையதாகவும்;* ***இவை ஐயிரண்டின் அகலம்*** *- பத்து யோசனை அகலம் கொண்டதாகவும்;* ***அமைந்திடச் செய்ததால் அணை*** *- அமைந்ததாக அணை கட்டி முடிக்கப்பட்டது;* ***என்பது செப்பினார்*** *- என்ற செய்தியை இராமபிரானிடம் சொன்னார்கள்.*

## ஒற்றுக் கேள்விப் படலம்

*சேது சமைத்த வானர வீரர்கள் பெருமானிடம் அதனைக் காட்டினர். அதன் வழி இலங்கைக்குக் கடல் கடந்து சென்ற படைகளுடன் சுவேல மலையில் தங்கிய இராமபிரான் படை வீடு அமைக்கப் பணித்தான். நளன் படைவீடுகளைப் பாங்குற அமைத்தான். படை வீட்டில் ஒற்றறிய வந்த இராவணனின் ஒற்றர்கள் வீடணனால் பிடிபட்டனர். இராமன் அபயம் அளித்து உண்மையை உரைக்குமாறு கூற, அவர்கள் உண்மையை ஒப்பினர். 'தேவியை விடுத்தால் இராவணன் ஆவியுண்டு என அறைக எனக் கூறி ஒற்றர்களைப் பெருமான் விடுவித்தருள, அவர்கள் இலங்கை திரும்பினர். இலங்கையில் அப்போது மந்திராலோசனைக் கூட்டம் நிகழ்கிறது. மனிதர் மிக நெருங்கி வந்துவிட்டனர். துணியும் காரியம் பற்றி இராவணன் கேட்க, மாலியவான் அறம் உரைக்கின்றான். அப்போது, ஒற்றர்கள் நுழைந்து, வானரப் படையின் பெருமையையும், இராமபிரானின் ஆற்றலையும் கருணையையும், அவன் உரைத்த சூளுரையினையும் தெளிய உரைத்தனர்.*

*மீண்டும் மாலியவான் இராமன் வந்துள்ள அவதார நோக்கினையும், அறங் காக்க உள்ளதையும் எடுத்துரைத்தான். அத்தனை வார்த்தைகளும் விழலுக்கு நீராய் வீணாகிப் போயின. இச்செய்திகள் இப்படலத்தில் கூறப்படுகின்றன.*

### *இராமன் சேது காணச் செல்லுதல்*

**கலிவிருத்தம்**

***6746. ஆண்தகையும், அன்பினொடு, காதல்அமிழ்து ஊற***
***நீண்ட கையினால் அவரை நெஞ்சினொடு புல்லி,***
***'ஈண்ட எழுக' என்றனன்-இழைத்த படி எல்லாம்***
***காண்டல்அதன்மேல் நெடிய காதல் முதிர்கின்றான்.***

***ஆண்தகையும்*** *- ஆண்மைக்குரிய பண்பெலாம் அமைந்த இராமபிரானும்;* ***காதல் அமிழ்து ஊற*** *- பேரன்பு எனும் பெறலரும் அமிழ்தம் ஊற்றாய்ச் சுரக்க;* ***அவரை*** *- (சேதுவைச் சமைத்து விட்ட நற் செய்தியை வந்து கூறிய) அந்தச் சுக்கிரீவன் முதலானோரை;* ***நெஞ்சினொடு நீண்ட கையினால் அன்பினொடு புல்லி*** *- நெஞ்சாரத் தன்னுடைய நீண்ட (தாள்தோய் தடக்) கைகளால் அன்புமிக ஆரத்தழுவி;* ***இழைத்த படி எல்லாம்*** *- சேதுவைச் சமைத்துள்ள திறனையெல்லாம்;* ***காண்டல் அதன் மேல்*** *- காண்பதின் மேலே;* ***நெடிய காதல் முதிர்கின்றான்*** *- ஆசை மிக உற்றவனாய் (சேதுவைக்காண) எல்லோரும் விரைந்து எழுவீர்களாக;* ***என்றனன்*** *- என்று கூறினான்.*

*ஈண்ட - விரைய. 'இடுக்கண் களைதற்கு ஈண்டெனப் போகி' (சிலப். 13.101) எனச் சிலம்பிலும் காணலாம். அமிழ்து உயிர் தளிர்ப்பச் செய்து, சாவாமைக்குக் காரணம் ஆவது போல், காதல் அன்பும் ஆவதால், "காதல் அமிழ்துஊற" என்றார். மூன்று நாளில் கடலுக்கு அணை கட்டி முடிக்கப்பட்டது (6739) செயற்கருஞ்செயல் ஆதலின் இராமபிரான் பாராட்டுகிறான்.*

***6747. பண்டை உறையுட்கு எதிர் படைக் கடலின் வைகும்
கொண்டல் என வந்து அவ் அணையைக் குறுகி
நின்றான்-
அண்ட முதல்வன் ஒரு தன் ஆவி அனையாளைக்
கண்டனன் எனப் பெரிய காதல் முதிர்கின்றான்.***

***அண்ட முதல்வன்*** - *உலகம் யாவுக்கும் முதல்வனாகிய இராமபிரான்;* ***பண்டை உறையுட்கு எதிர்*** - *(தனது) பழைய வாழிடமான கடலுக்கு எதிராக;* ***படைக்கடலின் வைகும் கொண்டல் என வந்து*** - *தனது வானர சேனையாகிய கடலின்மேல் (வந்து) படியும் மேகம் எனும்படி வந்து;* ***அவ்அணையைக் குறுகி நின்றான்*** - *அந்த அணையைக் கிட்டி நின்று;* ***ஒரு தன் ஆவி அனையாளை*** - *ஒப்பற்ற தன் உயிர் போன்றவளான பிராட்டியை;* ***கண்டனன் என*** - *நேரிற் கண்டுவிட்டவனைப் போன்று;* ***பெரிய காதல் முதிர்கின்றான்*** - *மிகுந்த காதல் முற்றியவன் ஆனான்.*

*அண்ட முதல்வன் - உலகங்கட்கு எல்லாம் முதல்வன். 'ஆதி பகவன் முதற்றே உலகு" (குறள். 1) என்பார் வள்ளுவர்."ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை" (4025) என்று, முன்னரும் சீதையைக் குறித்தது நினைக. மேகம் கடலிடை நீருண்ணக் கவியும் என்பது மரபு. "கருணையம் கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி" (கம்ப. 6593) என்பார் வருணனை வழி வேண்டு படலத்திலும். "கடல் தன்னைப் போர அளவு உடைத்தாக நினைத்திருக்குமாயிற்று; அதற்காக, ஒரு கடல் ஒருகடலோடே பொறாமை கொண்டு கிடந்தாற் போலே இருக்கை; "கருணையம் கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி" என்னும்படி அன்றோ" (திருவாய் ஈடு 6:9:3) எனக் கம்பர் பெருமானின் இக் கருத்தழகில் ஈடுபட்ட ஈட்டுரையாளர் நம்பிள்ளை, கம்பரின் இவ்வடியினையே எடுத்துக் காட்டியுள்ள திறம் ஓர்க. சீதையை விரைவில் அடைய உதவும் வாயில் இது ஆதலின், இதனைக் கண்டதும் சீதையைக் கண்டது போல் ஆயிற்று என்பார், "ஆவியனையாளைக் கண்டனன் என" என்றார்.*

***6748. நின்று, நெடிது உன்னினன், 'நெடுங் கடல் நிரம்பக்
குன்றுகொடு அடைத்து, அணை குயிற்றியது ஓர்
கொள்கை,
அன்று உலகு தந்த முதல் அந்தணன் அமைத்தான்
என்ற பொழுதின்கணும் இது என்று இயலும்?'
என்றான்.***

***நின்று நெடிதுஉன்னினன்*** - *(இராமன்) அணையின் அருகே) நின்று, நெடுநேரம் சிந்தித்தவனாய்;* ***நெடுங்கடல் நிரம்ப*** - *'நீண்ட அக்கடல் நிரம்புமாறு;* ***குன்று கொடு அடைத்து*** - *மலைகளைக் கொண்டு அடைத்து;* ***அணை குயிற்றியது ஓர் கொள்கை*** - *அணையை அமைத்தது (ஆகிய) ஒப்பற்ற (இச்) செயற்பாடு;* ***அன்று*** - *முன்பு;* ***உலகு தந்த முதல் அந்தணன்*** - *உலகினைப் படைத்த முதல்வனாகிய பிரமதேவனே;* ***அமைத்தான் என்ற பொழுதின் கணும்*** - *(இதனைச்) செய்யத் தொடங்கினான்*

*என்றாலும்;* ***இது என்று இயலும் என்றான்*** *- இது எப்போது கை கூடும் என்று வியந்து கூறினான்.*

*குயிற்றுதல் - செய்தல். நான்முகன் சிறப்பக் கலையில் சிறந்தான் என்பதனை. முன்பும் (கம்ப. 4862) கூறியது காண்க.*

**6749. ஊழி முதல் நாயகன் வியப்பினொடு உவந்தான்,**
**'ஆழம் உரைசெய்யும் அளவே! இனி அது ஒன்றோ?**
**ஆழியில் இலங்கை பெரிது அத்திசையது ஆமேல்,**
**ஏழு கடலும் கடிது அடைப்பர், இவர்' என்றான்.**

***ஊழி முதல்வன்*** *- ஊழிக்காலங்களின் தோற்றத்திற்கும் முடிவுக்கும் காரணன் ஆகின்ற பரம் பொருளான இராமபிரான்;* ***வியப்பினொடு உவந்தான்*** *- வியப்பும் உவகையும் ஒருங்கடைந்தவனாகி;* ***ஆழம் உரை செய்யும் அளவே!*** *- (இக்கடலின் ஆழம்) உரைக்கவல்ல அளவினதோ!* ***இனி அது ஒன்றோ?*** *- இவ் வாழம் ஒன்று மட்டுமோ?;* ***ஆழியின் இலங்கை பெரிது*** *- இக்கடலால் சூழப் பெற்ற இலங்கை ஆகிய பெரிய நகரம்;* ***அத் திசையது ஆமேல்*** *- (ஏழுகடலுக்கும்) அப்பாற்பட்டது ஆனாலும்;* ***இவர் ஏழு கடலும் கடிது அடைப்பர் என்றான்*** *- இவ்வானரர்கள், அந்த ஏழு கடல்களையும் விரைவில் அடைத்து அணையமைத்துவிடுவர் என்று (வியப்போடு) கூறினான்.*

*யுகங்கள் முடிவதற்கும் தோன்றுவதற்கும் பரம்பொருளே காரணப் பொருளாதலின், "ஊழி முதல்வன்" என்றார். இராமனை முன்பு 'ஊழியார்' (3789) "ஊழியின் ஒருவனும்" (7585) என்பதும் காண்க. வியப்பு, புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் எனும் நான்கின் அடியாகப் பிறக்கும். (தொல். மெய்ப். 7) இங்கு அணையைக் கண்ட இராமன் அதன் புதுமை, பெருமை, ஆக்கம் எனும் மூன்றாலும் வியப்படைந்தான். அதனைச் சமைத்த வானரங்களின் உருவச் சிறுமையாலும் வியப்படைந்து உவந்தான் என்பார், "வியப்பினோடு உவந்தான்" என்றார்.*

## *இராமன் படையொடு அணைவழிக் கடல் கடந்து போதல்*

**6750. நெற்றியின் அரக்கர்பதி செல்ல, நிறை நல் நூல்**
**கற்று உணரும் மாருதி கடைக் குழை வர, தன்**
**வெற்றி புனை தம்பி ஒரு பின்பு செல, வீரப்**
**பொன் திரள் புயக் கரு நிறக் களிறு போனான்.**

***நெற்றியின் அரக்கர் பதிசெல்ல*** *- (படையின்) முன் முனையில் அரக்கர் மன்னனாகிய வீடணன் செல்லவும்;* ***நிறை நல்நூல் கற்று உணரும் மாருதி*** *- நிறைந்த*

*சிறப்புற்ற நூல்களைக் கற்றுத் தெளிந்து உணர்ந்த அநுமன்;* ***கடைக் குழை வர*** *- சேனையின் பின்முனையிற் செல்லவும்;* ***தன் வெற்றி புனை தம்பி*** *- தனக்கு வரும் வெற்றியையே தன் அணியாகக் கொள்ளும் தம்பியாகிய இலக்குவன்;* ***ஒரு பின்பு செல*** *- தனக்குப் பின்பு ஒரு பக்கமாகச் செல்லவும்;* ***வீரப் பொன் திரள்புயம்*** *- வீரம் மிக்க அழகிய திரண்ட கைகளையுடைய;* ***கருநிறக் களிறு போனான்*** *- கரிய நிறம் பெற்ற ஆண்யானை போன்றவனான இராமபிரான் சென்றான்.*

***6751. இருங் கவி கொள் சேனை, மணி ஆரம் இடறி, தன்***
***மருங்கு வளர் தெண் திரை வயங்கு பொழில் மான,***
***ஒருங்கு நனி போயின-உயர்ந்த கரையூடே***

***கருங் கடல் புகப் பெருகு காவிரி கடுப்ப.***

***இரும் கவிகொள் சேனை*** *- பெருந்திரளான வானரங்களைக் கொண்ட சேனைகள்;* ***மணிஆரம் இடறி*** *- நவமணிகளையும், சந்தனக் கட்டைகளையும் இடறுமாறு;* ***தன் மருங்கு வளர்*** *- தனது பக்கங்களிலே உயர்கின்ற;* ***தெண்டிரை*** *- தெள்ளிய அலைகள்;* ***வயங்கு பொழில் மான*** *- விளங்குகின்ற சோலைகளை ஒத்திருப்ப;* ***கருங்கடல் புக*** *- கரிய கடலிலே சென்று வீழுமாறு;* ***பெருகு காவிரி கடுப்ப*** *- பெருகுகின்ற காவிரியாற்றினைப் போன்று;* ***உயர்ந்த கரை யூடே*** *- உயர்ந்து நின்ற அந்த அணையின் வழியாக;* ***நனி போயின*** *- மிக ஒன்றாக (நெருங்கிச்) சென்றன.*

*இருமருங்கும் கடல் அலைகள் ஓங்கியெழ, நவமணிகளையும் மணப் பொருள்களையும் இடறிக் கொண்டு செல்லும் வானரப் படைக்கு, இருமருங்கும் ஓங்கிய சோலைகளோடு மணிகளையும் ஆரங்களையும் இடறிக் கொண்டு செல்லும் காவிரி உவமையாயிற்று.*

***6752. ஓதிய குறிஞ்சி முதலாய நிலன் உள்ள***
***கோது இல அருந்துவன கொள்ளையின் முகந்துற்று,***
***யாதும் ஒழியா வகை சுமந்து, கடல் எய்தப்***
***போதலினும், அன்ன படை பொன்னி எனல் ஆகும்.***

***ஓதிய*** *- (தொல்காப்பியம் முதலான தொல்நூல்களில் பகுத்து) ஓதப் பெற்ற;* ***குறிஞ்சி முதலாய*** *- குறிஞ்சியை முதலாகக் கொண்ட;* ***நிலன் உள்ள*** *- ஐவகை நிலங்களிலும் உள்ள;* ***கோது இல*** *- குற்றம் இல்லாத;* ***அருந்துவன*** *- உணவாக உட்கொள்ளும் உணவுப் பொருள்களையெல்லாம்;* ***கொள்ளையின் முகந்து*** *- மிகுதியாக அள்ளிக் கொண்டு;* ***யாதும் ஒழியா வகை சுமந்து*** *- மீதியில்லாதவாறு அனைத்தையும் சுமந்து கொண்டு;* ***கடல் எய்தப் போதலினும்*** *- கடலையடையச் செல்லுதலாலும்;அன்ன படை - அந்த வானரப் (பெருஞ்) சேனையை;* ***பொன்னி எனல் ஆகும்*** *- காவிரி என்று கூறுதல் தகும்.*

*சென்ற பாடலில், காவிரியை உவமித்த கவி, இன்னும் மனம் ஆராமையின், இன்னொரு முறையிலும் அச்சேனை காவிரி போன்றது என மேலும் காவிரியை உவமித்து மகிழ்தலால், காவிரியின் மேல், கவிஞர் பெருமான் வைத்துள்ள பேரன்பின் பெருமை புலனாம். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனும் ஐவகை நிலப்பாகுபாடும், அவற்றில் வாழும் மக்களைப் பாடுபொருளாகக் கொண்ட அகப் புறப் பொருளும் தமிழ் நாட்டுக்கே உரியவையென உலக இலக்கியச் சான்றோர் ஒரு முகமாகப் புகழ்தலின் "ஓதிய குறிஞ்சி முதலாய" என்றார் - ஓதுதல் - புகழ்ந்து பாடுதல். அருந்துவன - வினையாலணையும் பெயர் வானர சேனைக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் மிகுதியாகக் கொண்டு செல்லப்பட்டன. என்பதைப் போகிற போக்கில் உவமை வாயிலாக உரைத்தார்.*

***6753. ஆயது நெருங்க, அடி இட்டு, அடி இடாமல்,***
***தேயும் நெறி மாடு, திரை ஊடு, விசை செல்ல,***
***போய சில பொங்குதொறு பொங்குதொறு பூசல்***
***பாய் புரவி விண் படர்வபோல், இனிது பாய்வ.***

**ஆயது** - *அந்த வானர சேனையில்;* **நெருங்க அடிஇட்டு** - *நெருக்கத்தினால், ஓர் அடியைஇட்டு;* **அடி இடாமல்** - *அடுத்த அடியை எடுத்துக் கீழே வைப்பதற்கு இயலாமல் (இன்னொருவரின் அடியிடப்படுதலால்);* **நெறிதேயும்** - *(செல்ல) வழியின்றிப் போகும்;* **மாடுதிரை ஊடு** - *(ஆதலால்) அருகேயுள்ள கடல் அலைகளின் இடையே;* **விசை செல்ல** - *விரைவாகச் செல்ல;* **சில போய** - *சில வானரங்கள் போயின;* **பொங்க தொறு பொங்கு தொறு** - *(அப்படிச் சென்ற வானரங்கள்) (கடல் அலைகள்) பொங்கி எழுந்தோறும் எழுந்தோறும்;* **பூசல் பாய்புரவி** - *போரில் பாய்கின்ற குதிரைகள்;* **விண் படர்வ போல்** - *வானை நோக்கிப் பாய்வது போல;* **இனிது பாய்வன** - *இனிதாகத் தாவிச் செல்வன ஆயின.*

*வானர சேனையின் நெருக்க மிகுதியை உரைத்தவாறு. "அணையிடமில்லாமல், கடலுக்குள்ளே போகின்ற வானரங்கள் திரை பொங்குந்தோறும் குதிரை ராவுத்தர் ஒத்தன" என்பது நயமான ஒரு பழைய உரை. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

***6754. மெய்யிடை நெருங்க, வெளியற்று அயலில் வீழும்***
***பொய் இடம் இலாத, புனலின் புகல் இலாத,***
***உய்விடம் அளிக்கும் அருளாளர் முறை உய்த்தார்***
***கையினிடை சென்று, கரை கண்ட கரை இல்லை.***

**மெய்யிடை நெருங்க** - *(போய வழியெல்லாம்) குரங்குகளின் உடம்பே இடம் முழுதும் நிறைந்திருத்தலால்;* **வெளியற்று** - *செல்லும் வெற்றிடம் அற்று;* **அயலில் வீழும் பொய் இடம் இலாத** - *பக்கத்தில் வீழ்வதற்கும் காலியிடம் பெறாதனவாய்;*

***புனலின் புகல் இலாத*** - *(நெருக்கில் சிக்குண்டு கடல்) நீரிலும் விழ முடியாதனவாய் ஆகிய சில வானரங்களை;* ***உய்விடம் அளிக்கும் அருளாளர்*** *- பிழைக்கும் இடம் காணாது தவிக்கும் அவற்றிற்கு அவ்விடம் காட்டிச் சில அருட் பண்பு வாய்ந்த குரங்குகள், நீட்டிய;* ***கையினிடை முறை உய்த்தார்*** *- கைகளின் மீதே அவற்றைச் செல்லுமாறு செலுத்தினர்;* ***சென்று கரைகண்ட*** *- (இவ்வாறு, அவற்றின் கையின்மேலே) சென்று கரையினையடைந்த வானரங்கட்கு;* ***கரை இல்லை*** *- ஓர் எல்லை இல்லை.*

*எங்கு நோக்கினும் குரங்குகளின் உடல்கள் நெருக்கி நின்றன. இடையிற் சிக்கிய சில குரங்குகள் கீழேயோ, கடலிலேயோ வீழ்வதற்கும் இயலாதவாறு நடுவில் தவித்தன என்பார், "அயலில் வீழும் பொய் இடம் இலாத, புனலின் புக இலாத" என்றார். பொய் இடம் - காலியிடம் குரங்குகள் கை என்பதற்கு ஒழுக்கம் என்பதும் பொருளாதலால், பிறவிக் கடற்பட்டோர். அருளாளர் காட்டும் ஒழுக்க நெறியில் சென்று கரையேறலாம் என்பதும் தோன்ற, "அருளாளர் முறை உய்த்தார் கையிடை கொடுப்ப" எனினுமாம்.*

***6755. இழைத்தனைய வெங் கதிரின் வெஞ் சுடர், இராமன்***
***மழைத்த முகில் அன்ன மணி மேனி வருடாமல்,***
***தழைத்த நிழல் உற்ற குளிர் சந்தனம், உயர்ந்த***
***வழைத் தரு, எடுத்து அருகு வந்தனர், அநேகர்.***

***இழைத்து அனைய*** *- (நவமணிகளை) இழைத்தாற்போன்ற;* ***வெங் கதிரின் வெஞ்சுடர்*** *- சூரியனுடைய கடுமையான வெயில்;* ***இராமன்*** *- இராமனுடைய;* ***மழைத்த முகில் அன்ன*** *- சூல் கொண்ட மேகம் போன்ற;* ***மேனி வருடாமல்*** *- திருமேனியைத் தீண்டாதவாறு;* ***தழைத்த*** *- நன்கு தழைத்துள்ளதனால்;* ***நிழல் உற்ற*** *- நிழல் மிகுந்த;* ***சந்தனம்*** *- சந்தன மரங்களையும்;* ***உயர்ந்த வழைத் தரு*** *- உயர்ந்தோங்கிய சுரபுன்னை மரங்களையும்;* ***எடுத்து*** *- பறித்துக் (கைகளில் ஏந்தியவாறு);* ***அநேகர் அருகுவந்தனர்*** *- வானரங்களிற் பலர் (குடைபிடித்தவாறு) அருகே (சூழ்ந்து) வந்தார்.*

*"அழைத்தவையெடுத்து அருகு சென்றனர்" எனப் பாடங் கொண்டு, "சுவாமி திருமேனியிலே கொம்புகள் படாமல், முன்னே கரங்களினாலே விலக்கிப் போனார்கள்" என்று பழைய உரை கூறுவதும் நயமாக உள்ளது. மரங்களோடு கூடிய மலைகளைச் சேது சமைக்க இட்டதை, "மாமுதல் தருவோடு ஓங்கும் வான் உயர் குன்றம்" (கம்ப. 6691) முதலிய பாடல்களில் சேதுபந்தனப் படலத்துள் குறிப்பிடுவார்.*

***6756. ஓம நெறி வாணர் மறை வாய்மை ஒரு தானே***
***ஆம் அரசன்-மைந்தர் திரு மேனி அலசாமே,***
***பூ மரன் இறுத்து, அவை பொருந்துவ பொருத்தி,***
***சாமரையின் வீசினர், படைத் தலைவர்தாமே.***

***ஓம நெறி வாணர்*** - *வேள்வி நெறியால் வாழ்கின்றவர் ஆகிய அந்தணர்களின்;* ***மறை வாய்மை ஒருதாமே ஆம்*** - *நான் மறைகளில் உரைக்கப்படும் வாய்மையின் வடிவம், தான் ஒருவனேயான;* ***அரசன் மைந்தர்*** - *தயரதமன்னனின் மக்கள் ஆகிய இராம இலக்குவருடைய;* ***திருமேனி அலசாமே*** - *அழகுத் திருவுடல்கள் வருந்தாதவாறு;* ***பூமரன் இறுத்து*** - *பூக்கள் பொதிந்த மரங்களை ஒடித்து;* ***அவை பொருந்துவ பொருத்தி*** - *அவற்றின் பூக்களைச் சாமரைக் கேற்றவாறு இணைத்து;* ***படைத்தலைவர் தாமே*** - *சேனைத் தலைவர்களே;* ***சாமரையின் வீசினர்*** - *சாமரையாக வீசினர்.*

*தயரதனின் வாய்மைத் திறம் முன்னும் (2434, 4018) கூறப்பட்டுள்ளது. அரசர்க்குச் செய்யும் சிறப்புக்களுள், குடைகவித்தலும். சாமரையிரட்டலும் சிறந்தவையாதலின், மேற்பாடலில் குடை கவித்தமை கூறி, இதில், சாமரம் வீசுதல் கூறியவாறு. கவரிமான் கற்றையால் ஆன சாமரத்திலும், வானரர்கள் இயற்றிய நறுமண மலர்ச் சாமரை மணம் மிக்கதாதல் அறிக. பெருமானுக்குச் சாமரம் வீசுதல் பெரும் பேறு ஆதல் உணர்ந்து, பணியாளரிடம் தாராமல், படைத் தலைவர்களே வீசி மகிழ்ந்தனர் என்பார், "சாமரையின் வீசினர் படைத் தலைவர்தாமே" என்றார். ஏகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது.*

***6757. அருங் கடகம் அம் கையில் அகற்றி, அயர்வோடும்***
***மருங்கு அட வளர்ந்த முலை மங்கை மணம் முன்னா,***
***ஒருங்கு அடல் உயர்ந்த படர் தானையொடும் ஓதத்து***
***இருங் கடல் கடந்து, கரை ஏறினன்-இராமன்.***

***அருங்கடகம்*** - *(பெண்மையின் மங்கலப் பொருள்களுள் ஒன்றான) அரிய வளையல்களை;* ***அம் கையில் அகற்றி*** - *அழகிய கைகளிலிருந்தும் அகற்றி;* ***மருங்கு அட வளர்ந்த முலைமங்கை*** - *சிற்றிடை ஒடியும் என்றஞ்சுமாறு வளர்ந்துள்ள மார்பகங்களையுடையவளும் ஆகிய சீதையினுடைய;* ***அயர்வோடும் மனம் முன்னா*** - *கூட்டத்தை பிரிவால் தளர்ந்துள்ள மனத்தால் எண்ணியவாறு;* ***ஒருங்கு அடல் உயர்ந்த படர் தானையொடும்*** - *(உலகையெல்லாம்) ஒருங்கே வென்றுயரச் செல்வது போன்று செல்லும் வானரப் படையோடு;* ***ஓதத்து இருங்கடல் கடந்து*** - *அலைசூழும் அப்பெரிய கடலைச் (சேதுவினால்) கடந்து;* ***இராமன் கரையேறினன்*** - *இராமபிரான் கரையேறினான்.*

*சீதை துயர்க்கடலையெண்ணி அவளைக் கரையேற்ற எண்ணி வந்தவன், கரையேறினான் என்பதாம். முன்னா - முன்னி, நினைத்து. செய்யா எனும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். கண்ணின் நீர் கடல் புகக் கலுழ்வான் ஆயின (5075). அவளை துயரக் கடலிலிருந்து கரையேற்ற முதல் அடி இடுவானாய்த் தென் கடலிலிருந்து தரையில் அடி வைத்தான் இராமன் என்பார், "இருங் கடல் கடந்து கரை ஏறினான் இராமன்" என மொழிந்தார்.*

*இராமன், சுவேல மலையில் தங்குதல்*

***6758.* பெருந் தவம் முயன்று அமரர் பெற்றிடும் வரத்தால்,**
**மருந்து அனைய தம்பியொடும், வன்**
**துணைவரோடும்,**
**அருந்ததியும் வந்தனை செய் அம் சொல் இள வஞ்சி**
**இருந்த நகரின் புறன் ஓர் குன்றிடை இறுத்தான்.**

**பெருந்தவம் முயன்று** - *பெரிய தவங்களை முயற்சியோடு புரிந்து;* **அமரர் பெற்றிடும் வரத்தால்** - *தேவர்கள் பெற்ற வரத்தின் பயனாக;* **மருந்து அனைய தம்பியொடும்** - *அமுது போல் (விரும்பும் நலத்தைத் தருபவனாகிய) தம்பி இலக்குவனோடும்;* **வன்துணைவரோடும்** - *ஆற்றல்மிக்க நண்பர்களுடனும்;* **அருந்ததியும் வந்தனை செய்** - *கற்பில் மிக்க அருந்ததியும் வணங்கிடத் தக்க;* **அஞ்சொல் இள வஞ்சி** - *அழகுமொழி பேசும் இளைய வஞ்சிக் கொடி போன்றாளுமாகிய சீதாதேவி;* **இருந்த நகரின் புறன்** - *சிறையிருந்த இலங்கை மாநகரின் புறத்தே (உள்ள);* **ஓர் குன்றிடையிருந்தான்** - *ஒருகுன்றின் அருகில் சென்று (இராமன்) தங்கினான்.*

*அமரர் பெருந்தவம் முயன்று பெற்றிடும் வரத்தால் தங்கினான் என்க. இறுத்தல் - தங்குதல். சேக்கையின் அரவின் நீங்கிப் பிறந்தது தேவர் செய்த பாக்கியமுடைமையன்றோ? (3293) எனவும், அண்டா! ஐயா? எங்கள் பொருட்டால் அயர்கின்றாய் (8661) எனவும் வருதல் காண்க. இராமன் இறக்க நினைக்கும் அளவு வேதனைமிக்க காலத்தும் உடனிருந்து சோர்வு நீக்கி வாழ்வித்தவன் ஆதலின் இலக்குவன், "மருந்தனைய தம்பி" ஆயினான். "மருந் தனைய தங்கை" (3324) எனவும், "மருந்தனைய தேவி" (5350) என வருமிடங்களையும் நோக்குக. இங்குக் கூறிய குன்று சுவேல மலை. "இடை உவாவினில் சுவேலம் வந்து இறுத்து" (10089) என்ற மீட்சிப் படலப் பாடல்காண்க.*

*இராமன் படைவீடு அமைக்கும்படி பணித்தல்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***6759.* நீலனை இனிது நோக்கி, நேமியோன், 'விரைய, நீ**
**நம்**
**பால் வரு சேனைக்கு எல்லாம் இழைத்தியால் பாடி'**
**என்னா,**
**கால்வரை வணங்கிப் போனான், கல்லினால்**
**கடலைக் கட்டி,**
**நூல் வரை வழி செய்தானுக்கு அந் நிலை நொய்தின்**
**சொன்னான்.**

***நேமியோன்*** - *சக்கரப் படையேந்திய திருமாலின் அவதாரமான இராமபிரான்;* ***நீலனை இனிது நோக்கி*** - *நீலன் எனும் வானரப் படைத் தலைவனை இனிமையுற நோக்கி;* ***நீ நம் பால் வருசேனைக்கு எல்லாம்*** - *'நீ நம்முடன் வந்துள்ள சேனைகட்கு எல்லாம்;* ***பாடி விரைய இழைத்தி என்னா*** - *(தங்குவதற்குப்) பாடிவீடுகளை விரைய அமைப்பாயாக' என்று பணித்திட;* ***கால் வரை வணங்கிப் போனான்*** - *(அவன், பெருமானது) திருவடிகளில் வீழ்ந்து வணங்கிச் சென்று;* ***கல்லினால் கடலைக்கட்டி*** - *மலைகளைக் கொண்டு கடலுக்கு அணையினைக் கட்டி;* ***நூல்வரை வழிசெய்தானுக்கு*** - *சிறப்ப நூல்களின் இலக்கணப் படி நின்று, இலங்கைக்கு வழி செய்து கொடுத்தவனாகிய நளனிடம்;* ***அந்நிலை நொய்தின் சொன்னான்*** - *அப் பணியினை நொடிப் பொழுதில் சொன்னான்.*

*போனான் - முற்றெச்சம். நேமி - சக்கரம். நொய்து - ஆகுபெயராய் நொடியைக் குறித்தது. 'வரை' இரண்டில், முன்னது இடத்தையும் பின்னது முறையையும் குறித்தது.*

*நளன் பாசறை அமைத்தல்*

***6760. பொன்னினும் மணியினானும் நான்முகன் புனைந்த பொற்பின்***
***நல் நலம் ஆக வாங்கி, நால் வகைச் சதுரம் நாட்டி,***
***இன்னர் என்னாத வண்ணம், இறைவர்க்கும் பிறர்க்கும்எல்லாம்***
***நல் நகர் நொய்தின் செய்தான்; தாதையும் நாண் உட்கொண்டான்.***

***நல் நலமாக வாங்கி*** - *மிக நன்மை உண்டாகுமாறு இடத்தைப் பிரித்து;* ***நால்வகைச் சதுரம் நாட்டி*** - *நான்கு வகைச் சதுரமுமாக நிறுவி;* ***இன்னர் என்னாத வண்ணம்*** - *இப்படை வீட்டில் இருத்தற்குரியர் இவர்தாம் என்னாதவாறு;* ***இறைவர்க்கும் பிறர்க்கும் எல்லாம்*** - *சுக்கிரீவன் முதலிய தலைவர்க்கும் மற்றுமுள்ள வானரப் படைகட்கும்;* ***நான்முகன்*** - *சதுர் முகப் பிரமனாலே;* ***பொன்னினும் மணியினானும் புனைந்த பொற்பின்*** - *பொன்னாலும் மணியாலும் படைக்கப்பட்டவை போன்று (நளன்) சிறந்தபாசறையை மிக எளிதில் செய்து முடித்தான்;* ***தாதையும் நாண்உட் கொண்டான்*** - *(அதுகண்டு) (அவனுடைய) தந்தையாகிய விச்சுவ கன்மாவும் (இத்தகு ஆற்றல் நமக்கில்லையே) என்று எண்ணி நாணம் கொண்டான்.*

*கட்டிட அமைதி கொண்டு, இவை இவை யார் யாருக்குரியன என்று ஊகிக்க இயலாவாறு அனைத்துப் பாடி வீடுகளும் அனைத்து வசதிகளும் பொருந்த அமைக்கப் பட்டனவாதலின், "இன்னர் என்னாத வண்ணம்" என்றார். நொய்து - விரைவு இங்கு மகன், தந்தை யறிவினும் விஞ்சி நிற்பதனால், "தாதையும் நாண் உட்கொண்டான்" என்றார். பெருமிதத்தால் வந்த நாணம் இது.*

***6761. வில்லினாற்கு இருக்கை செய்யும் விருப்பினால், பொருப்பின் வீங்கும்***
***கல்லினால் கல்லை ஒக்கக் கடாவினான்; கழைகள் ஆன***
***நெல்லினால் அலக்கும் காலும் நிரப்பினான்; தருப்பை என்னும்***
***புல்லினால் தொடுத்து, வாசப் பூவினால் வேய்ந்துபோனான்.***

***வில்லினாற்கு*** - *கோதண்ட வில்லினை ஏந்திய இராமபிரானுக்கு;* ***இருக்கை செய்யும் விருப்பினால்*** - *இருப்பிடம் அமைக்க எழும் ஆசையினால்;* ***பொருப்பின் வீங்கும் கல்லினால்*** - *மலைகளில் உள்ள பருத்த கற்களால்;* ***கல்லை ஒக்கக் கடாவினான்*** - *கற்களை நொறுக்கிச் சமப்படுத்தி;* ***கழைகள் ஆன நெல்லினால்*** - *கழைகள் எனும் பெயர் கொண்டுவிட்ட நெல் இனத்தைச் சார்ந்த மூங்கில்களால்;* ***அலக்கும் காலும் நிரப்பினான்*** - *வரிச்சலும் காலும் ஆக நிறைத்து;* ***தருப்பை என்னும் புல்லினால் தொடுத்து*** - *தருப்பை என்று கூறப்படும் புற்களால் வரிசையுறக் கட்டி;* ***வாசப் பூவினால் வேய்ந்து போனான்*** - *நறுமணம் மிக்க பூக்களால் மேற்கூரையை வேய்ந்து பர்ண சாலையை முடித்தான் (நளன்).*

*தவவாழ்வுடையார் மலையிலோ, கானகத்திலோ வாழ விரும்புவர் ஆதலின், இராமபிரானுக்கு சுவேல மலை மீதே இருக்கையமைக்க விரும்பி, அங்குள்ள பெருங்கற்களையே கருவியாகக் கொண்டு கற்களைத் தூளாக்கி நிலத்தை முதலிற் சமப்படுத்தியமையை, "பொருப்பின் வீங்கும் கல்லினால் கல்லை ஒக்கக் கடாவினான்" என்றார். பூனையின் பேரினம் புலியானாற் போல, நெல்லின் பேரினம் மூங்கில். அரசப் பொறுப்புடையரான சுக்கிரீவன், வீடணன் முதலியோர்க்கு, பொன்னினும் மணியினும் மாளிகைகள் அமைத்தான் நளன். தவக்கோலம் தாங்கியுள்ள இராமபிரானுக்கு அவ் வாழ்வுக்குரிய. இருக்கையாகப் பன்னக சாலையியற்றி வாழவைத்தான்.*

***6762. வாயினும் மனத்தினாலும் வாழ்த்தி, மன்னுயிர்கட்கு எல்லாம்***
***தாயினும் அன்பினானைத் தாள் உற வணங்கி, தம்தம்***
***ஏயின இருக்கை நோக்கி, எண் திசை மருங்கும் யாரும்***
***போயினர்; பன்னசாலை இராமனும் இனிது புக்கான்.***

***மன் உயிர்கட்கு எல்லாம்*** - *நிலைபெற்ற உயிர் இனங்களுக்கெல்லாம்;* ***தாயினும் அன்பினானை*** - *அன்னையினும் அன்பு சிறக்கும் இராமபிரானை;* ***யாரும்*** - *எல்லோரும்;* ***வாயினும் மனத்தினாலும் வாழ்த்தி*** - *வாயாலும் மனத்தாலும் போற்றி;*

***தாள் உற வணங்கி*** - *(தம்முடி) அவன் அடியில் படுமாறு தாழ்ந்து பணிந்து;* ***எண்திசை மருங்கும்*** - *எட்டுத் திசைகளின் பக்கங்களிலும்;* ***தம்தம் ஏயின இருக்கை நோக்கி போயினர்*** - *தத் தமக்கு என்று அமைக்கப் பெற்ற இருப்பிடங்களை நோக்கிச் சென்றார்கள்;* ***இராமனும்*** - *(தலைவனான) இராமனும்;* ***பன்னசாலை*** - *(தனக்கு என அமைக்கப்பெற்ற) இலைக் குடிலுக்குள்;* ***இனிது புக்கான்*** - *இனிதே சென்றடைந்தான்.*

*திரிகரணங்களிலும் வாயும் மனமும் மட்டுமே வாழ்த்தி, உடல் ஏதும் புரியவில்லையோ என எழும் ஐயம் நீக்குவார், "தாளுற வணங்கி" என்றார். வணங்குதல் உடலின் செயல். "யாரும் எண்டிசை மருங்கும் போயினர்" என்பதனால், பாடி வீட்டில், தலைவனான இராமபிரானின் இருப்பிடம் நடுநாயகமான இடத்தில் இருந்தது என்பது தெளிவாம். பன்ன சாலை - இலைக்குடில்*

## *சூரியன் மறைவும், திங்களின் தோற்றமும்*

***6763. பப்பு நீர் ஆய வீரர், பரு வரை கடலில் பாய்ச்ச,***
***துப்பு நீர் ஆய தூய சுடர்களும் கறுக்க வந்திட்டு,***
***உப்பு நீர் அகத்துத் தோய்ந்த ஒளி நிறம் விளங்க,***
***அப் பால்***
***அப்பு நீராடுவான்போல், அருக்கனும் அத்தம்***
***சேர்ந்தான்.***

***பப்பு நீர் ஆய வீரர்*** - *பரவும் தன்மையுடைய வானரவீரர்கள்;* ***பருவரை கடலில் பாய்ச்ச*** - *பெரிய மலைகளைக் கடலில் பாய்ச்சிய போது;* ***துப்பு நீர் ஆயதூய சுடர்களும்*** - *பவழம் போன்ற தன் (சிவந்த) தூய கிரணங்களும்;* ***கறுக்க வந்திட்டு*** - *கறுத்துப் போகுமாறு, தன் உடலில் வந்து பொருந்திய;* ***உப்பு நீர் அகத்துள் தோய்ந்த ஒளிநிறம் விளங்க*** - *உப்பு நீரினுள் தோய்ந்ததனால் (மங்கிய தனது) ஒளி (மீண்டும் இயல்பான) நிறம் பெற்று விளங்குதற்காக;* ***அப்பால்*** - *அம் மேல் கடலின்;* ***அப்புநீர் ஆடுவான் போல்*** - *அப்பாகிய (தூய) நீரில் ஆடப் போவான் போல;* ***அருக்கனும் அத்தம் சேர்ந்தான்*** - *சூரியனும் அத்தமன மலையை யடைந்தான்.*

*பப்பு - பரப்பு. இடைக்குறை. "ஒளி நிறம் விளங்க, அப்பால் அப்பு நீர் சூரியனை மூழ்கடிக்கும் அளவுக்குக் கடல் நீர் சூழ்ந்தது ஆதலின், "உப்பு நீர் அகத்துள் தோய்ந்த" என்றார். இராவணனால் சூழ்ந்த தீது நீங்கச் சூரியன் கடல் நீராடினான்; அவன் தீமை சூழாத நன்னீரில் மூழ்க அத்தமன கிரியின் சுனைகளைத் தேட, மலையில் மறைந்தான் என்பதற்காக, மேல் கடலில் மூழ்கினான் என்னாது, "அத்தம் சேர்ந்தான்" அத்தம் - அத்தமனகிரி. தீது நீங்கக் கடலாடுவதும், அதன் உவர்ப்பு நீங்க நன்னீராடுவதும் திருச் செந்தூர் முதலிய தெய்வத்தலங்களில் இன்றும் இயல்பு. "தீது நீங்கக் கடலாடியும், மாசு போகப் புனல் "மூழ்கியும்" (பட்டினப் 99-100) என்பதும் காண்க. ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.*

***6764. மால் உறு குடக வானின் வயங்கிய வந்து தோன்றும்
பால் உறு பசு வெண் திங்கள், பங்கய நயனத்து
அண்ணல்
மேல் உறு பகழி தூர்க்க வெகுண்டனன் விரைவின்
வாங்கி,
கால் உற வளைத்த காமன் வில் என, காட்டிற்று
அன்றே.***

***மால் உறு குடக வானின்*** - மயக்கந்தரும் மாலை நேரத்தைக் கொடுக்கும் மேற்கு வானத்தில்; ***வயங்கிய வந்து தோன்றும்*** - (உலக இருளிலிருந்து) விளக்கம் பெற வந்து தோன்றுகின்ற; ***பால் உறு பசுவெண் திங்கள்*** - பால் போன்று (கதிர்களைச் சொரியும்) இளைய வெள்ளைப் பிறைத் திங்கள்; ***பங்கய நயனத்து அண்ணல் மேல்*** - தாமரைப் பூப் போன்ற கண்களையுடைய இராமபிரானின் மீது; ***உறு பகழி தூர்க்க வெகுண்டனன்*** - நிறைய அம்புகளைச் சொரியச் சினந்து; ***விரைவின் வாங்கி*** - விரைவாக எடுத்து; ***கால் உற வளைத்த*** - காலில் ஊன்றி வளைக்கப் பெற்ற; ***காமன் வில் எனக் காட்டிற்று*** - மன்மதனது வில்லைப் போன்று வளைந்து காட்சி தந்தது.

*மால் - மயக்கம். மாலைக் காலம் இரவா பகலா என மயங்குமாறு தோன்றுதலாலும், காதலர்க்கு "மாலை மயங்கும் இந்நோய்" (திருக். 1227) எனப் படுதலாலும் மயக்கம் தரும் மாலையைக் கொடுக்கும் மேற்கு வானம் என்பார், "மால்உறு குடக வான்" என்றார். குடகம் - மேற்கு. அரை வட்டமாய் வளைத்த வில், மேல் வானில் தோன்றும் பிறைத் திங்கட்கு உவமை யாயிற்று. தற்குறிப்பேற்றஅணி.*

***6765. நூற்று இதழ்க் கமலம் தந்த நுண் நறுஞ் சுண்ணம்
உண்ணத்
தீற்றி மென் பனி நீர் தோய்ந்த சீகரத் தென்றல்
என்னும்
காற்றினும், மாலை ஆன கனலினும், காமன் வாளிக்
கூற்றினும், வெம்மை காட்டி கொதித்தது-அக் குளிர்
வெண் திங்கள்.***

***நூறு இதழ்க் கமலம் தந்த*** - நூறு இதழ்களையுடைய தாமரை கொடுத்த; ***நுண் நறும் சுண்ணம் உண்ணத் தீற்றி*** - நுண்ணிய நல்மணம் மிக்க பூந்தாதுக்களை, தன் உடல்உண்ணும்படி அப்பிக் கொண்டு; ***மென்பனி நீர்தோய்ந்த*** - மென்மைமிக்க பனிநீர் படியப்பெற்ற; ***சீகரத் தென்றல் என்னும்*** - நீர்த்துளிகளுடன் கலந்த தென்றற் காற்றினாலும்; ***மாலை ஆன கனலினும்*** - மாலைக்காலம் ஆகிய நெருப்பினாலும்; ***காமன் வாளிக் கூற்றினும்*** - மன்மதன் அம்பு எனப்படுகின்ற கூற்றுவனாலும்; ***வெம்மை காட்டி அக்குளிர் வெண்திங்கள்*** - (தரஇயலாத) வெப்பத்தைத்தந்து, அந்தக் குளிர்ந்த தன்மையது எனப்படுகின்ற வெள்ளைத் திங்கள்; ***கொதித்தது*** - கொதிப்பாய்க் கொதித்தது.

*நூற்றிதழ் - நூறு, எண்ணைக் குறிக்காமல். பலஎனும் பொருள் குறித்தது. விரக நோய் உற்றார்க்குத் தென்றற் காற்றும், மாலைப் போதும், மன்மதன் பூங்கணைகளும் குளிர் திங்களும் மிகுவெப்பம் விளைவிப்பன என்பது கவிமரபு. குளிர் திங்கள் கொதித்தது என்பதில் உள்ள முரணால் தோன்றும் நயம் உவப்பளிப்பது. இயல்பின் இனிமையுடைய தென்றல், திங்கள் முதலியன பிரிந்த காதலர்க்கு வேதனை தரும் என்பதைக் கம்பர் முன்னும் (543, 555, 557, 5159) குறிப்பிட்டுள்ளார்.*

***6766. செயிர்ப்பினும் அழகு செய்யும் திரு முகத்து***
***அணங்கைத் தீர்ந்து.***
***துயிற் சுவை மறந்தான் தோள்மேல் தூ நிலாத்***
***தவழும் தோற்றம்-***
***மயிற் குலம் பிரிந்தது என்ன, மரகத மலைமேல்,***
***வன்னி***
***உயிர்ப்புடை வெள்ளைப் பிள்ளை வாள் அரா ஊர்வ***
***போன்ற.***

**செயிர்ப்பினும் அழகு செய்யும்** *- சினமுற்றாலும் அழகோடு விளங்கும்;* **திருமுகத்து அணங்கைத் தீர்ந்து** *- அழகிய முகங்கொண்ட தெய்வப் பிராட்டியைப் பிரிந்த பின்பு;* **துயில் சுவை மறந்தான்** *- தூக்கத்தால் வரும் இன்பம் (முழுவதையும்) துறந்துவிட்ட இராமபிரானின்;* **தோள் மேல்** *- புயங்களின் மேல்;* **தூநிலாத் தவழும் தோற்றம்** *- தூய வெண்ணிலாவின் கதிர்க் கிரணம் படிந்து ஊர்கின்ற காட்சி;* **குல மயில் பிரிந்தது என்ன** *- குலத்திற்சிறந்த மயில் ஒன்று பிரிந்துள்ள காரணத்தால்;* **மரகதமலை மேல்** *- மரகதக் குன்று ஒன்றின் மேல்;* **வன்னி உயிர்ப்பு உடை** *- நெருப்புப் போன்று மூச்சுவிடும்;* **வெள்ளை வாள் அராப்பிள்ளை** *- வெள்ளை நிறமுடைய (நாகத்தின்) பாம்புக்குட்டி ஒன்று;* **ஊர்வ போன்ற** *- ஊர்வதைப் போன்றிருந்தது.*

*அழகு வெகுண்டால், அதுவும் அழகின் ஒரு காட்சியே ஆகுமாதலின், பிராட்டியின் சினமும் ஓர் அழகுக் காட்சியாயிற்று. செயிர்ப்பு- சினம். தோளில் தவழ வேண்டிய குலமயில் இப்போது இல்லையாதலால், நிலாத்தவழ நேர்ந்ததாம். மரகத மலை - இராமபிரான். "தயரதன் பெற்ற மரகத மணித்தடம்" (திருவாய்: 10:1:8) என்பார் நம்மாழ்வார். மரகதக் குன்றம் ஒக்கும் (திருவாய்:2:5:4); மரகத மலை: (திருவாய்:2:6:4) என்பனவும் அவர் வாக்கு. "மையோ, மரகதமோ" (கம்ப. 1926) என்று இவரும் முன்பு குறிப்பிடுவார். தற்குறிப்பேற்ற அணி.*

***6767. மன் நெடு நகரம் மாடே வரவர, வயிரச் செங் கைப்***
***பொன் நெடுந் திரள் தோள் ஐயன் மெய் உறப்***
***புழுங்கி நைந்தான் ;***
***பல் நெடுங் காதத்தேயும் சுட வல்ல, பவளச் செவ்***

***வாய்,***
***அந் நெடுங் கருங் கண், தீயை அணுகினால்***
***தணிவது உண்டோ?***

***மன் நெடு நகரம் மாடேவரவர*** - *நிலைத்த புகழ் நீளும் இலங்கை மாநகரத்தின் பக்கத்தே நெருங்க நெருங்க;* ***வயிரச் செங்கைப் பொன் நெடுந்திரள் தோள் ஐயன்*** - *வலிமை வாய்ந்த வயிரம் போன்ற சிவந்த கரங்களையும், அழகியநீண்டு திரண்ட தோள்களையும் உடைய இராமபிரான்;* ***மெய் உறப் புழுங்கிநைந்தான்*** - *உடல் மிகவெயர்க்க (பிராட்டியின் பிரிவால்) நைந்து வருந்தினான்;* ***நெடும் பல் காதத்தேயும் சுடவல்ல*** - *நீண்ட பலகாத தூரங்கட்கு அப்பாலிருந்தும் எரிக்கவல்ல;* ***பவளச் செவ்வாய் அம் நெடுங்கருங்கண் தீயை*** - *பவளம் போன்ற சிவந்த வாயினை, அழகுமிகும் நீண்ட கருங்கண்களை உடைய (பிராட்டி எனும்) அந்தத் தீயினை;* ***அணுகினால் தணிவது உண்டோ?*** - *நெருங்கினால், (அது) சுடாமல் தணிவதற்கு (வாய்ப்பேதும்) உண்டோ? (இல்லை என்க).*

*பல நெடுங்காதத்துக்கு அப்பால் தண்டக வனத்தில் உள்ள போதே சுட்டதீ, அது இருக்கும் இடத்திற்கு மிக அருகே நெருங்கிய பிறகு, மிகச் சுடாமல் என் செய்யும் என்பார், "பல் நெடுங்காதத் தேயும் சுட வல்ல கருங்கண்தீ, அணுகினால் தணிவது உண்டோ?" என்றார். பிற நெருப்புப் போலல்லாமல் செவ்வாயும் கருங்கண்ணும் பெற்ற தீ இது என்பார், "பவளச் செவ்வாய், அம் நெடுங் கருங்கண் தீ" என்றார். நீங்கின் தெறூஉம்; குறுகுங்கால் தண் என்னும் தீ (திருக். 1104) என வள்ளுவர் காமத் தீயினைக் குறிப்பார். இங்கு நெருங்குங்கால் சுடுவதேன்? என்பது வியப்புத் தருவது ஒரு நயம். தீ, தொடிற் சுடுவதல்லாது காமநோய் போல விடின் சுடல் ஆற்றுமோ? (திருக்கு: 1159) என்பர் ஆதலால், இவ்விந்தைத் தீ, (பிராட்டியைத்) தொட்டாலே ஆறும் என்பது குறிப்பு. வயிரச் செங்கையும் பொன் நெடுந்திரள் தோளும் இருந்தும் ஐயன் புழுங்கி நைந்தான் என்று, தீயின் பெருமை யுணர்த்தியவாறு. வயிரமும் எரிக்க வல்ல தீ இது என்பதாம்.*

*இராவணன் ஏவிய ஒற்றரை வீடணன் காணல்*

***6768. இற்றிது காலம் ஆக, இலங்கையர் வேந்தன் ஏவ,***
***ஒற்றர் வந்து அளவு நோக்கி, குரங்கு என உழல்கின்றாரைப்***
***பற்றினன் என்ப மன்னோ-பண்டு தான் பல நாள் செய்த***
***நல் தவப் பயன் தந்து உய்ப்ப, முந்துறப் போந்த நம்பி.***

***காலம் இற்று இது ஆக*** - *காலம் இத்தன்மையது ஆக;* ***இலங்கையர் வேந்தன் ஏவ*** - *இலங்கை மக்களின் தலைவனான இராவணனது ஏவலினால்;* ***ஒற்றர் வந்து*** - *(வேவு*

*பார்க்கும்) ஒற்றர்கள் (அங்கு) வந்து;* ***அளவு நோக்கி*** *- (வானரப் படையின் திறம், எண்ணிக்கை முதலிய) அளவுகளைப் பார்த்து;* ***குரங்குஎன உழல்கின்றாரை*** *- குரங்குகள் போல வேடமிட்டுப் (பாடி வீடுகட்கிடையே) திரிகின்றவர்களை;* ***தான் பண்டு பலநாள் செய்த*** *- தான், முன்பு பன்னெடு நாட்கள் (பொறுமைபூண்டு) செய்த;* ***நல்தவப் பயன்*** *- நல்ல தவத்தின் பயன்;* ***தந்து உய்ப்ப*** *- விளைந்து (பின்னின்று) செலுத்த;* ***முந்து உறப் போந்த நம்பி*** *- முன்னதாக இராமன் திருவடிகளைப் பற்றி உய்ய வந்த புருடோத்தமனாகிய வீடணன்;* ***பற்றினன்*** *- (ஒற்றர் எனக் கண்டு) பற்றிக் கொண்டான்.*

*அரக்கர், விரும்பும் வடிவம் பெற்றுக் கொள்ளும் திறமுடையர். விரும்பும் வடிவம் எடுக்கும் திறத்தால் அரக்கர்க்குக் 'காமரூபர்' எனும் பெயர் உண்டு.*

***6769. பேர்வுறு கவியின் சேனைப் பெருங் கடல் வெள்ளம்தன்னுள்,***
***ஓர்வுறும் மனத்தன் ஆகி, ஒற்றரை உணர்ந்து கொண்டான்,***
***சேர்வுறு பாலின் வேலைச் சிறு துளி தெறித்தவேனும்,***
***நீரினை வேறு செய்யும் அன்னத்தின் நீரன் ஆனான்;***

***கவியின் சேனை*** *- வானரச் சேனையாகிய;* ***பேர்வுறு பெருங் கடல் வெள்ளம் தன்னுள்*** *- இடம் பெயர்ந்த (பாற்) கடல் போன்ற படை வெள்ளத்துள்ளே;* ***ஓர்வுறு மனத்தன் ஆகி*** *- ஆராய்ச்சி கொண்ட மனம் உடையவனாகி;* ***ஒற்றரை உணர்ந்து கொண்டான்*** *- ஒற்றிய வந்தோரை உணர்ந்து கொண்ட வீடணன்;* ***சேர்வுறு பாலின்வேலை*** *- (தண்ணீர் கலந்தாலும் தன்னோடு பாலாகவே) சேர்த்துக் கொள்ளும் தன்மை வாய்த்த பாற்கடலில்;* ***சிறு துளி தெறித்தவேனும்*** *- சிறிய நீர்த்துளிகள் தெறித்ததாயினும்;* ***நீரினை வேறு செய்யும்*** *- அந்த நீர்த்துளிகளையும் பிரித்து எடுத்திடவல்ல;* ***அன்னத்தின் நீரன் ஆனான்*** *- அன்னப் பறவையின் தன்மையினன் ஆயினான்.*

*எங்கு இராவணன் சேனையினைச் சார்ந்தோர் இராம சேனையுட் புகுந்து பங்கம் விளைத்து விடுவாரோ? என விழிப் போடேயே இருந்தான் ஆதலின் வீடணனை "ஓர்வுறு மனத்தன்" என்றார். இவ்வாறு, பகைவர் சேனையுட் புகுந்து, ஒற்றறிதலும், பங்கம் விளைத்தலும் அரக்கர் இயல்பு என்பதனை, வீடணன் நன்குணர்ந்தவன் ஆதலும் 'ஓர்வுறு மனத்தன்" என்பதனால் போதரும். பாலோடு சேர்ந்த நீர் போல வேற்றுமை தெரிய இயலாதிருந்தனர் என்பார். "சேர்வுறு பாலின் வேலை சிறுதுளி" என்றார். பாற்கடலில் சிறு நீர்த்துளி தெரித்தாலும் அன்னம் பிரித்தெடுக்க வல்லது என்பார், "சிறுதுளி தெரித்தவேனும் நீரினை வேறு செய்யும் அன்னம்" என்றார். தீமையை வேறு பிரித்து அறியவல்ல அன்னத்தின் குணம் வீடணனுக்கு இருந்தமை குறித்தவாறு.*

***6770. பெருமையும் சிறுமைதானும் முற்றுறு பெற்றி ஆற்ற***
***அருமையின் அகன்று, நீண்ட விஞ்சையுள் அடங்கி,***

***தாமும்***
***உருவமும் தெரியாவண்ணம் ஒளித்தனர், உறையும்***
***மாயத்து***
***இருவரை ஒருங்கு காணும் யோகியும் என்னல்***
***ஆனான்.***

***பெருமையும் சிறுமைதானும்*** *- (பெரியதிற்) பெரியதும் (சிறியதிற்) சிறியதும் ஆகிய இரண்டும்;* ***முற்றுறு பெற்றி*** *- (ஒன்றுக்குள்) முழுவதுமாகப் பொருந்தியுள்ள தன்மை;* ***ஆற்ற அருமையின்*** *- மிகவும் (அறிதற்கு) அரிது ஆதலின்;* ***அகன்று நீண்ட விஞ்சையுள் அடங்கி*** *- பரந்து மிகுந்துள்ள வேதாகமங்களிற் கூறப்படும்) அணிமா முதலிய வித்தைகட்குக் கட்டுப்பட்டு;* ***தாமும் தம் உருவமும் தெரியாவண்ணம்*** *- தாமும் தம் உருவமும் கண்களாம் புலன் உணர்வுக்குத் தட்டுப்படா வண்ணம்;* ***ஒளித்தனர் உறையும் மாயத்து இருவரை*** *- மறைந்தவராய், உடலுக்குள்ளேயே வாழ்கின்ற விசித்திரத் தன்மை வாய்ந்த உயிர் (சீவான்மா) இறைவன் (பரமான்மா) ஆகிய இருவரையும்;* ***ஒருங்கு காணும் யோகியும் என்னல் ஆனான்*** *- ஒரு சேரப் பார்க்க வல்ல யோகியைப் போன்றவனும் ஆனான் வீடணன்.*

*"தகர வித்தையாவது- உடம்பில், இருதயத் தாமரை என்னும் சின்னஞ்சிறிய மாளிகையுள் சிற்றம்பலத்தில் உள்ளது எதுவோ அதனைத் தேடிக் காணுதல்" என்னும் சாந்தோக்கிய உபநிடதம். (சாந்தோ 8:1) தகர என்றால் சிறிய என்று பொருள். தகராகாசம் என்றால் சிறிய வெளி, சிற்றம்பலம். அதனுள் பரமான்மாவும் சீவான்மாவும் அடங்கி உள்ளன என்பது மறை மொழி. அவ்விருவரையும், இருதயத் தாமரையெனும் வீட்டில், கருவி கரணங்களை அடக்கி, வைராக்கியம், பிரம்மசரியம், சத்தியம் முதலிய சாதனங்களுடன் கூடி ஆசாரியன் உபதேசித்த முறையில் தியானம் செய்தால் அறியலாம் என்பது மேற்காணும் உபநிடதச் சூத்திரத்திற்குச் சங்கரர் தந்த பேருரை, சிறிய இடத்தில் சிறிய பொருள்தானே அடங்கும் எனில், அததில் அடங்குவது, கருப் பக்கிரகத்தில் கோயில் முழுவதும் அடங்குவது போன்றது ஆம். எப்படிச் சிறிய கண்ணாடியில், பெரிய வெளியான பிரதி பிம்பத்தைக் காணலாமோ அப்படிச் சிற்றம்பலத்தில் உலகனைத்தும் காணலாம். எதற்கும் அடங்காத ஒன்றை, வெளியென்றோ, ஒளியென்றோ பெரிதென்றோ, சிறிதென்றோ கூறுதல் உண்மையில் ஒவ்வாது. அணுவுக்கும் அணுவாகவும் மகத்துக்கும் மகத்தாகவும் ஆன்மா உளது என்பது கடவல்லி உபநிடதம் (2.20) "பரமான்மா, சீவான்மா என்று கூறப்படும் இருவர், ஞான ரூபமான சிறகுகளையுடையவர்களாய், சரீரமான ஒரே மரத்தினைப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்பது இருக்குவேதம் என்னும் ஈடு (1:1:3) நம் கண்கள் பெரியதிற் பெரியதையும், சிறியதிற் சிறியதையும் காணல் இயலாத குறையுடையவை; யோகி அரிதின் முயன்று ஞானக் கண் கொண்டு, உடலின் உள்ளே பெரிதிற் பெரிதாய பரம் பொருளையும், சிறிதிற்சிறிதாய சீவனையும் ஒருங்கே கண்டுவிடுபவன் ஆதலின் "மாயத்து இருவரை ஒருங்குகாணும் யோகி" என்றார். மாயம்- அட்டாங்கவித்தை. ஆன்மாவைப் போல் அணுவளவாதல் ஆகிய அணிமா; மிகப் பெரும் உருவடைதல் ஆகிய மகிமா;கண்டிப்புள்ளவற்றை ஊடுருவிச் செல்லுதல் ஆகிய கரிமா; இலகு வாதல் ஆகிய இலகிமா; வேண்டுவன அடைதல் ஆகிய பிராத்தி; நிறையுடைய வாதல் ஆகிய பிராகாமியம்; ஆட்சியுளவாதல் ஆகிய ஈசத்துவம் எல்லாம் தன்வசமாக்கல் ஆகிய வசித்துவம் ஆகிய இவை எட்டும்*

*அட்டாங்க சித்தி எனப்படும். இவை எட்டும் வல்லார் யோகியர் ஆவர். பரம் பொருள் யோகிக்குக் காட்சிப் படுவான் என்பதனை, (2056) முன்பும் உரைத்தார்.*

*இராமன் ஒற்றர்களை விடப் பணித்தல்*

***6771. கூட்டிய வில் திண் கையால் குரங்குகள் இரங்கக் குத்தி,***
***மீட்டு ஒரு வினை செயாமல் மாணையின் கொடியால் வீக்கிப்***
***பூட்டிய கையர், வாயால் குருதியே பொழிகின்றாரைக்***
***காட்டினன், 'கள்வர்' என்னா; கருணைஅம் கடலும் கண்டான்.***

***கூட்டிய விரல் திண்கையால்*** *- சேர்த்து மடக்கி (முட்டியாக்கிய) வலிய கைகளால்;* ***இரங்கக் குரங்குகள் குத்தி*** *- (காண்போர்) இரங்குமாறு குரங்குகளால் குத்தப் பெற்று;* ***மீட்டு ஒருவினை செயாமல்*** *- பின்பு, வேறு ஒரு செயல் செய்ய இயலாதவாறு;* ***மாணையின் கொடியால் வீக்கி*** *- மாணையின் கொடியினால் (இறுக்கி);* ***பூட்டிய கையர்*** *- சேர்த்துக்கட்டிய கைகளையுடையவராய்;* ***வாயால் குருதியே பொழிகின்றாரை*** *- வாயினால் இரத்தமே கக்குகின்றவர்களாகிய அந்த ஒற்றர்களை;* ***'கள்வர்' என்னாக் காட்டினன்*** *- 'வஞ்சகர்' இவர் என்று (வீடணன்) காட்டினான்;* ***அம் கருணைக் கடலும் கண்டான்*** *- அழகிய கருணைக் கடலான இராமபிரானும் (திருவிழிகளால்) (அவர்களைப்) பார்த்தான்.*

*மாணை - ஒரு வகைக் கொடி - ஓணான் கொடி என்பர்.*

***6772. பாம்பு இழைப் பள்ளி வள்ளல், பகைஞர் என்று உணரான், 'பல்லோர்***
***நோம் பிழை செய்தகொல்லோ குரங்கு?' என இரங்கி நோக்கி,***
***'தாம் பிழை செய்தாரேனும், "தஞ்சம்!" என்று அடைந்தோர்தம்மை***
***நாம் பிழை செய்யலாமோ? நலியலீர்; விடுதிர்!' என்றான்.***

***பாம்பு இழைப் பள்ளிவள்ளல்*** *- பாம்பினால் இழைக்கப்பட்ட படுக்கையினையுடைய (கருணை) வள்ளலாகிய இராமபிரான்;* ***பகைஞர் என்பது உணரான்*** *- (குரங்கு உருவில் உள்ள ஒற்றர்களை) பகைவர்களாகிய அரக்கர்கள்*

*என்று உணராமல், (குரங்குகளே என்று எண்ணி);* ***பல்லோர் நோம்பிழை செய்த கொல்லோ?*** *- "பலர் மனம் நோகுமாறு இவ்விரு குரங்குகளும் பிழைபுரிந்தனவோ?;* ***குரங்கு என இரங்கி நோக்கி*** *- புரிந்து இருப்பினும் (எளிய) (நமையடைந்த) குரங்குகள் தாமே! என இரக்கமுற்றுப் பார்த்து;* ***தாம் பிழை செய்தாரேனும்*** *- இவ்விருவர் தாமும் பிழையே புரிந்தவராய் இருப்பினும்;* ***'தஞ்சம்' என்று அடைந்தோர் தம்மை*** *- நம்மைப் புகல் என்று சரணம் அடைந்தவர்களை;* ***நாம் பிழை செய்யல் ஆமோ?*** *- (நாம் கருணை காட்டி மகிழ்வித்தல் அன்றி) நாமே அவர்கட்குப் பிழை செய்து துன்புறுத்தல் ஆமோ?;* ***நலியலிர் விடுதிர்!*** *- (அவர்களை) வருத்தாதீர்; (கட்டுக்களை அவிழ்த்து) விடுங்கள்! என்றான்.*

*பிழை புரிந்தாரேயாயினும், அடைக்கலம் என்று வந்தவர்கள் காத்தற்கு உரியவரே எனும் காவியத்தின் பாவிகத்தை இயலும் இடம் எல்லாம் வற்புறுத்தும் கவிஞர் பிரான் இங்கும் அதனை வெளிப்படுத்துவாராய், "தாம்பிழை செய்தாரேனும் தஞ்சமென்றடைந்தோர் தம்மை நாம் பிழை செய்யலாமோ?" என இராமபிரான் வாயிலாய் விளம்புகின்றார். முன்பும் இது (6469, 6470) கூறியுள்ளார்.*

*ஒற்றர் என்று வீடணன் விளக்கல்*

***6773. அகன் உறப் பொலிந்த வள்ளல் கருணையால் அழுத கண்ணன்,***
***'நகம் நிறை கானின் வைகும் நம் இனத்தவரும் அல்லர்;***
***தகை நிறைவு இல்லா உள்ளத்து இராவணன் தந்த ஒற்றர்;***
***சுகன், இவன்; அவனும் சாரன்' என்பது தெரியச் சொன்னான்.***

***அகன் உறப் பொலிந்த வள்ளல் கருணையால்*** *- உள்ளத்தே (இடம் முழுதும்) நிரம்பி, (முகத்திலும் பொங்கிப்) பொலியும் கருணையையுடைய வள்ளலாகிய இராமபிரானின் அருள் (தேக்கத்தைக்) கண்டு;* ***அழுத கண்ணன்*** *- (மனம் உருகி) அழுத கண்களையுடைய வீடணன்;* ***நகம் நிறை கானின்வைகும்*** *- (இவர்கள்) மலைகள் நிறைந்த கானகங்களில் வாழும்;* ***நம் இனத்தவரும் அல்லர்*** *- நம்முடைய இனத்தவராகிய வானரர்களும் அல்லர்;* ***தகை நிறைவு இல்லா உள்ளத்து*** *- நற்பண்புகள் நிறையாத மனத்தினையுடைய;* ***'இராவணன் தந்த ஒற்றர்*** *- இராவணன் (ஒற்றறிய) அனுப்பியுள்ள ஒற்றர்கள்;* ***சுகன் இவன்*** *- இவனோ சுகன் எனும் பெயருடையான்;* ***அவன் சாரன்*** *- அவனோ சாரன் எனும் பெயருடையான்;* ***என்பது தெரியச் சொன்னான்*** *- என்று இராமபிரான் அறியுமாறு எடுத்துரைத்தான்.*

*நகம் நிறை கான் - மலைக்காடு - நகம் - மலை. நிலக்காடுகளும் உளவாதலின் "நகம் நிறைகான்" என்றார். நகம் - மரமுமாம். வீடணன் வானர இனத்தான் அல்லன்; எனினும், சேர்ந்திணைந்த திறத்தால் இராமன்பால் சேர்ந்தவரோடு தன்னையும் உளப்படுத்தி 'நம் இனத்தவர்' எனக் குறித்த நயம் உணர்க.*

*6774.* ***கல்விக்கண் மிக்கோன் சொல்ல, கரு மன நிருதக் கள்வர்,***
***'வல் விற் கை வீர! மற்று இவ் வானரர் வலியை நோக்கி, வெல்விக்கை அரிது என்று எண்ணி, வினையத்தால் எம்மை எல்லாம்***
***கொல்விக்க வந்தான்; மெய்ம்மை; குரங்கு நாம்; கொள்க!' என்றார்.***

***கல்விக் கண் மிக்கோன் சொல்ல*** - *(உண்மைக்) கல்வியில் மேம்பட்டுயர்ந்தவனான வீடணன் (இவ்வாறு) கூறுகையில்;* ***கருமன நிருதக் கள்வர்*** - *இருண்ட மனமுடைய அரக்கராகிய அவ்வொற்றர்கள்;* ***வல்விற்கை வீர*** - *(இராமபிரானை நோக்கி) வலியவில் ஏந்திய கையினையுடைய வீரனே!;* ***இவ் வானரர் வலியைநோக்கி*** - *இந்த வானர வீரர்களின் வலிமையை உணர்ந்து;* ***வெல்விக்கை அரிது என்று எண்ணி*** - *(இவர்களை இராவணன்) வெல்லுமாறு செய்தல் இயலாது என்று கருதி;* ***வினையத்தால் எம்மை எல்லாம்*** - *சூழ்ச்சியினால் எம் போன்ற குரங்குகளை யெல்லாம்;* ***கொல்விக்க வந்தான்*** - *கொலையுண்ணுமாறு செய்ய வந்தவன் (இவ் வீடணன்);* ***மெய்ம்மை; குரங்குநாம்*** - *சத்தியம்; நாங்கள் உண்மையில் குரங்குகளே;* ***கொள்க என்றார்*** - *என்று மனங் கொள்ள வேண்டும் என்றனர்.*

*கல்விக் கண் மிக்கோன் - வீடணன். கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலே (குறள் 2) என அறிந்தவனாதலின்.*

*6775.* ***'கள்ளரே! காண்டி' என்னா மந்திரம் கருத்துள் கொண்டான்;***
***தெள்ளிய தெரிக்கும் தெவ்வர், தீர் வினை சேர்தலோடும்,***
***துள்ளியின் இரதம் தோய்ந்து, தொல் நிறம் கரந்து, வேறு ஆய்***
***வெள்ளி போன்று இருந்த செம்பும் ஆம் என, வேறுபட்டார்.***

***கள்ளரே!*** - *(இதனைக் கேட்ட வீடணன்) (இவர்கள் வானரர் அல்லர்) 'கள்வரே!;* ***காண்டி' என்னா மந்திரம் கருத்துள் கொண்டான் தெவ்வர்*** - *காண்பாயாக என்று (ஒரு) மந்திரத்தை மனத்துக்குள் உருவேற்றினான் அரக்கர் ஆகிய ஒற்றர்கள் (பகைவர் வேடத்தைத்);* ***தெள்ளிய தெரிக்கும்*** - *தெளிவாகத் தெரிவிக்கவல்ல;* ***தீர்வினை சேர்தலோடும்*** - *(குரங்கு வடிவத்தை) மாற்றவல்ல அம்மந்திர ஆற்றல்*

*நெருங்கியவுடன்;* ***இரதம் துள்ளியின் தோய்ந்து*** *- பாதரசத்துளி மேலே படப்பெற்று;* ***தொல்நிறம் கரந்து*** *- பழைய நிறம் மறைந்து;* ***வேறாய்*** *- புதுநிறம் பெற்று;* ***வெள்ளி போன்று இருந்த*** *- வெள்ளி போல இருந்த (செம்பு);* ***செம்பும்ஆம் என*** *- (மீண்டும் புடம் இட்டால்) செம்பு ஆகவே ஆவது போன்று;* ***வேறுபட்டார்*** *- குரங்கு உரு மாறிப்பழைய அரக்கர் வடிவத்தைப் பெற்றார்கள்.*

*தீர்வினை - மந்திர ஆற்றல் தீரும் நிலை குறித்து நின்றது. தூலம், சூக்குமம் எனும் மந்திர வகை இரண்டனுள் வாய்வழி வெளிப்படாமல் மனத்துக்குள் ஓதும் சூக்கும மந்திரம் அது ஆதலால், "கருத்துள் கொண்டான்" என்றார். துளி - துள்ளி என விரிந்தது. இரதம் - இரசம், பாதரசத்தைக் குறித்து நின்றது.*

*அபயம் அருளி, உண்மை கூறப் பணித்தல்*

***6776. மின் குலாம் எயிற்றர் ஆகி, வெருவந்து, வெற்பில் நின்ற***
***வன்கணார்தம்மை நோக்கி, மணி நகை முறுவல் தோன்ற,***
***புன்கணார் புன்கண் நீக்கும் புரவலன், 'போந்த தன்மை***
***என்கொலாம்? தெரிய எல்லாம் இயம்புதிர்; அஞ்சல்!' என்றான்.***

***புன்கணார் புன்கண் நீக்கும் புரவலன்*** *- துன்புற்றோரின் துயரம் போக்குதற்காகத் (தோன்றியுள்ள) காத்தலில் வல்லவனாகிய இராமபிரான்;* ***மின்குலாம் எயிற்றர் ஆகி*** *- மின்னல் போல் ஒளிசிந்தும் பற்களையுடையவர் ஆகி;* ***வெருவந்து*** *- (தம் உண்மையுருவம் வெளிப்பட்டதால்) அச்சமுற்று;* ***வெற்பின் நின்ற வன்கணார் தம்மை நோக்கி*** *- மலையெனநின்ற கொடியோர்களான அந்த ஒற்றர் இருவரையும் நோக்கி;* ***மணிநகை முறுவல் தோன்ற*** *- அழகிய பற்கள் (சிறிதே) தோன்றுமாறு முறுவலித்து;* ***'அஞ்சல், போந்ததன்மை என் கொல்?*** *- "அஞ்ச வேண்டா; (நீங்கள்) வந்த காரணம் என்ன?;* ***எல்லாம் தெரிய இயம்புதிர்' என்றான்*** *- யாவற்றையும் தெளிவுறக் கூறுங்கள்" என்று கூறினான்.*

*புன்கண்- துன்பம். முதல் நாட்போரில், இராவணன் துன்பம் கண்டு, "இன்று போய் நாளை வா" (கம்ப. 7271) என இயம்பியதும் இக் கருணைத் திறத்தால் என்க.*

*ஒற்றர் உண்மையுரைத்தல்*

***6777. 'தாய் தெரிந்து உலகு காத்த தவத்தியை, தன்னைக் கொல்லும்***
***நோய் தெரிந்து உணரான், தேடிக் கொண்டனன் நுவல, யாங்கள்,***

***வாய் தெரிந்து, உணராவண்ணம் கழறுவார்,***
***வணங்கி, மாய***
***வேய் தெரிந்து உரைக்க வந்தோம், வினையினால்-***
***வீர!' என்றார்.***

***வாய் தெரிந்து*** - *(ஒற்றுதலின்) வாயில்களை (நன்கு) அறிந்து;* ***உணராவண்ணம் கழறுவார்*** - *பிறர் அறியாதவண்ணம் (பகைப்புலத்து நிகழ்வுகளை அறிந்துவந்து) கூறுவதாகிய ஒற்றுத் தொழில் வல்லராகிய அவ்விருவரும்;* ***வணங்கி வீர! யாங்கள்*** - *(இராமபிரானை) வணங்கி "வீரனே! நாங்கள்;* ***தாய் தெரிந்து*** - *எவ்வுயிர்க்கும் தாய் என்று (சான்றோரால்) உணரப்பட்டு;* ***உலகுகாக்கும் தவத்தியை*** - *உலகத்து ஆன்மாக்களைக் காக்கும் தவமுடைய பிராட்டியை;* ***தன்னைக் கொல்லும் நோய்*** - *(பிழை புரியும்) தன்னைக் கொல்ல வந்த நோய் என்று;* ***தெரிந்து உணரான்*** - *ஆராய்ந்து உணராமல்;* ***தேடிக் கொண்டனன் நுவல*** - *(தீமையைத்) தேடி விளைவித்துக் கொண்டவனாகிய இராவணன் கூறிய சொற்களைக் கொண்டு;* ***வினையினால் மாய வேய்தெரிந்து உரைக்க வந்தோம்*** - *எங்கள் தீவினையால், வஞ்சனையாக ஒற்றறிந்து போய் (அங்கு) உரைக்க (இங்கு) வந்தோம்" என்றார்.*

*"பிராட்டி, தேவர்கள் (கரங்களில்) பூண்ட விலங்கினை ஒடிக்கத் தான் தன் கரங்களில் விலங்கு பூண்டு பத்துத்திங்கள் தவம் இருந்தாள்" (ஸ்ரீவசன பூஷணம்) என்பவாதலின்" உலகு காத்த தவத்தியை" என்றார். வேய் தெரிதல் - ஒற்றறிதல்.*

### *இராமன் ஒற்றரிடம் கூறுதல்*

***6778. 'எல்லை இல் இலங்கைச் செல்வம் இளையவற்கு***
***ஈந்த தன்மை***
***சொல்லுதிர்; மகர வேலை கவிக் குல வீரர் தூர்த்துக்***
***கல்லினின் கடந்தவாறும் கழறுதிர்; காலம் தாழ்த்த***
***வில்லினர் வந்தார் என்றும் விளம்புதிர்-வினையம்***

***மிக்கீர்!*** ***வினையம் மிக்கீர்!*** - *செய்யும் தொழிலில் திறம் வாய்ந்தோரே!;* ***எல்லை இல் இலங்கைச் செல்வம்*** - *அளவுக்குள் அகப்படாத இலங்கைமாநகரின் செல்வம் முழுவதனையும்;* ***இளையவற்கு*** - *தம்பியாகிய வீடணனுக்கு;* ***ஈந்ததன்மை சொல்லுதிர்*** - *நான் கொடுத்துவிட்ட செய்தியினை (இராவணனுக்குச்) சொல்லுங்கள்;* ***மகர வேலை*** - *மகர மீன்கள் நிறைந்துள்ள கடலை;* ***கவிக்குல வீரர்*** - *வானர குலத்துத் தோன்றிய வீரர்கள்;* ***கல்லினில் தூர்த்துக் கடந்த வாறும்*** - *மலைகளையிட்டு நிரப்பித் தாண்டி வந்துவிட்ட திறத்தையும்;* ***கழறுதிர்*** - *(அவனிடம் போய்) கூறுங்கள்;* ***காலம் தாழ்த்த வில்லினர்*** - *இத்துணைக் காலம் தாமதித்திருந்த வில்லினர் (இருவரும்);* ***வந்தார் என்றும் விளம்புதிர்*** - *(இப்போது) வந்துவிட்டார்கள் என்பதனையும் (அவனிடம் போய்) உரையுங்கள்.*

*அவன் தம்பியன்றி, தனக்கும் தம்பியாதலின் "உன் இளையவற்கு" எனாது பொதுப் படக் கூறிய திறம் காண்க. ஊர் தேடு படலச் செய்யுள்களால், இலங்கைச் செல்வம் உணரலாகும்.*

***6779. 'கொத்துறு தலையான் வைகும் குறும்புடை***
***இலங்கைக் குன்றம்***
***தத்துறு தட நீர் வேலைதனின் ஒரு சிறையிற்று***
***ஆதல்***
***ஒத்து உற உணர்ந்திலாமை, உயிரொடும்***
***உறவினோடும்***
***இத்துணை இருந்தது என்னும் தன்மையும்***
***இயம்புவீரால்.***

***கொத்துறு தலையான் வைகும்*** *- கொத்தாக அமைந்த தலைகளையுடைய இராவணன் வாழும்;* ***குன்றக் குறும்பு உடை இலங்கை*** *- மலை அரண்கள் சூழ்ந்த இலங்கை நகரம்;* ***தத்துறுதட நீர் வேலை தனின் ஒருசிறையிற்று ஆதல்*** *- (அலைகள்) தத்தும் அகன்ற கடற் பரப்பில் ஒரு பக்கத்தில் (ஒளிந்தவாறு) கிடப்பதை;* ***ஒத்துற உணர்ந்திலாமை*** *- மனம் பொருந்த உணராமைதான்;* ***இத்துணை உயிரொடும் உறவினோடும் இருந்தது*** *- இத்தனைகாலம் இராவணன் உயிரோடும் உறவினரோடும் இருந்ததற்குக் காரணம்;* ***என்னும் தன்மையும் இயம்புவீர்*** *- என்னும் செய்தியையும் அறிவியுங்கள்.*

*குறும்பு - அரண்.*

***6780. ' "சண்டம் கொள் வேகமாகத் தனி விடை உவணம்***
***தாங்கும்,***
***துண்டம் கொள் பிறையான், மௌலித்***
***துளவினானோடும், தொல்லை***
***அண்டங்கள் எவையும் தாங்கிக் காப்பினும், அறம்***
***இலாதாற்***
***கண்டங்கள் பலவும் காண்பென்" என்பதும்***
***கழறுவீரால்.***

***மாகம்*** *- வானத்தில்;* ***சண்டங்கள் வேகத்தனிவிடை உவணம் தாங்கும்*** *- மிகக் கடுமையான வேகத்தில் செல்லவல்ல ஒப்பற்ற எருதும் கருடனும் தாங்கும்;* ***துண்டம் கொள் பிறையான்*** *- பிறைத் துண்டம் அணிந்த சிவபிரானோடும்;* ***மௌலித் துளவினானோடும்*** *- மகுடத்தில் துளவம் அணிந்த திருமாலோடும்;* ***தொல்லை அண்டங்கள் எவையும்*** *- தொன்மை வாய்ந்த அண்டங்களில் வாழும் அனைத்துயிர்களும்;* ***தாங்கிக் காப்பினும்*** *- துணையாக வந்து காத்தாலும்;* ***அறம்***

***இலாதான்*** *- அறநெறிச் செல்லாத இராவணனை;* ***கண்டங்கள் பலவும் காண்பென்*** *- பற்பல துண்டங்களாக்கிப் பார்ப்பேன்;* ***என்பதும் கழறுவீர்*** *- என்ற செய்தியையும் (சென்று) உரையுங்கள்.*

*சண்டம் - கொடுமை, கடுமை, உக்கிரம். புயற்காற்றைச் சண்டமாருதம் எனல் காண்க. "சண்டப் பிறைவாள் எயிற்றான்" (கம்ப. 3425) என முன்பும் கூறுவார். "சண்டவேகம்" (4284), "சண்டவெங்கடுங்கணை" (2995) எனவும் வருதல் காண்க. மாகம் - வானம். மாகம் சண்டங் கொள்வேகம் எனக் கூட்டுக. "தனிவிடை தாங்கும் பிறையான்" எனவும், "உவணம் தாங்கும் துளவினான்" எனவும் முறையே நிரல் நிறையாய் இயையும். பிரமன் இராவணன் குலமுதல்வன் ஆதலின் அவன் துணையாதல் கூறாமலே பெறப்படும். எனவே, மும்மூர்த்திகளோடு அனைத்து அண்டங்களிலிருப்போரும் இணைந்து இராவணனைக் காத்து நிற்பினும், அறம் வழுவிய அவனை நான் கண்ட துண்டமாக்குவது தப்பாது எனப் பெருமான் தன் ஆற்றல் உணர்த்தியவாறு. தான் ஆனதன்மையை மறந்து பெருமான் உரையாடும் இடங்களில் இதுவும் ஒன்று.*

***6781. ' "தீட்டுறு மழு வாள் வீரன் தாதையைச் செற்றோன் சுற்றம்***
***மாட்டிய வண்ணம் என்ன, வருக்கமும் மற்றும் முற்றும்***
***வீட்டி, என் தாதைக்காக மெய்ப் பலி விசும்புளோரை***
***ஊட்டுவென் உயிர்கொண்டு" என்னும் வார்த்தையும் உணர்த்துவீரால்.***

***தீட்டுறு மழுவாள் வீரன்*** *- தீட்டப்பெற்ற மழுவையே வாளாகக் கொண்ட வீரனாகிய பரசுராமன்;* ***தாதையைச் செற்றோன் சுற்றம்*** *- தன் தந்தையாகிய சமதக்கினியைக் கொன்ற கார்த்த வீரியனின் சுற்றம் முழுவதனையும்;* ***மாட்டிய வண்ணம் என்ன*** *- அழித்த வகையினைப் போல;* ***வருக்கமும் மற்றும் முற்றும்*** *- அரக்கர் இனத்தையும் மற்றும் அவனுக்குச் சார்பானோர் அனைவரையும்;* ***வீட்டி உயிர் கொண்டு*** *- அழித்து, இராவணன் உயிரையும் கொண்டு;* ***என் தாதைக்காக*** *- என் தந்தை சடாயுவின் உயிர்கொண்ட பழிக்காக;* ***மெய்ப்பலி*** *-அவனது உடல் எனும் பலியினை;* ***விசும்புளோரை ஊட்டுவென்*** *- தேவர்களுக்கு உணவாக ஊட்டுவிப்பேன்;* ***என்னும் வார்த்தையும் உணர்த்துவீர்*** *- என்கின்ற என் சொற்களையும் அவனுக்கு உணர்த்துங்கள்.*

*இராவணன் சடாயுவைக் கொன்றது, பெருமானின் உள்ளத்தே மாறாத வடுவாய்ப் பதிந்து கிடந்தமையும், அந்த வன்மம் தீர்க்கப்பட வேண்டிய ஒரு கணக்காக அவன் உள்ளத்துள்ளே ஊறிப் பதிந்துள்ளமையும் இங்கே வெளிப்பட்டதிறம் காண்க*

*6782. ' "**தாழ்வு இலாத் தவத்து ஓர் தையல் தனித்து ஒரு சிறையில் தங்க,***
***சூழ்வு இலா வஞ்சம் சூழ்ந்த தன்னைத் தன் சுற்றத்தோடும்,***
***வாழ்வு எலாம் தம்பி கொள்ள, வயங்கு எரி நரகம் என்னும்***
***வீழ்வு இலாச் சிறையின் வைப்பென்" என்பதும் விளம்புவீரால்.***

***தாழ்விலாத் தவத்து ஓர் தையல்*** *- "குறைவிலாத தவம் புரிந்து வருபவளாகிய ஒப்பற்ற சீதை;* ***தனித்து ஒரு சிறையில் தங்க*** *- தனிமைச் சிறையில் தங்கியிருந்து (வாடுமாறு);* ***சூழ்வு இலாவஞ்சம் சூழ்ந்த தன்னை*** *- நினைக்கத் தகாத வஞ்சனையை எண்ணிய இராவணனை;* ***வாழ்வெலாம் தம்பிகொள்ள*** *- அவனுடைய வாழ்வின் வளம் முழுவதையும் அவன் தம்பியாகிய வீடணன் அடையச் செய்து;* ***தன் சுற்றத்தோடும்*** *- அவனுடைய சுற்றத்தார் அனைவரையும்; வயங்கு எரி நரகம் என்னும் - ஒளிரும் தீயினையுடைய நரகம் எனப்படுகின்ற; வீழ்வு இலாச் சிறையில் வைப்பென் - தப்ப இயலாத சிறையின் கண்ணே வைத்திடுவேன்; என்பதும் விளம்புவீர் - என்பதனையும் அவனுக்குச் சென்று உரைத்திடுங்கள்.*

*ஒற்றர் திரும்பிச் செல்லுதல்*

*6783. '**நோக்கினிர், தானை எங்கும் நுழைந்தனிர்; இனி, வேறு ஒன்றும்***
***ஆக்குவது இல்லைஆயின் அஞ்சல்' என்று, அஃது உண்டு அன்றே?***
***'வாக்கினின், மனத்தின், கையின், மற்று இனி வலியா வண்ணம்,***
***போக்குமின் விரைவின்' என்றான்; 'உய்ந்தனம்' என்று போனார்.***

***"தானை எங்கும் நுழைந்தனிர் நோக்கினிர்*** *- படையிருக்கும் எல்லா இடங்களிலும் நுழைந்துள்ளீர்கள்; அங்குள்ளாரை யெல்லாம் நோக்கியுள்ளீர்கள்;* ***இனி வேறு என்றும் ஆக்குவது இல்லை ஆயின்*** *- இங்கிருந்து வேறு இனி நீங்கள் ஆற்ற வேண்டிய பணி ஒன்று இல்லை என்றால்;* ***அஞ்சல் என்று அஃது உண்டு அன்றே!*** *- (நீங்கள் போகலாம். இவர்களால் இடையூறு எதுவும் உங்கட்கு முன்போல வாராது) நான் உங்கட்கு அஞ்சற்க என்று அபயம் அளித்த சொல் ஒன்று உண்டு அல்லவா! (அஞ்சாது செல்லுங்கள்.) என்றுரைத்து;* ***மனத்தின் வாக்கினின் கையின்*** *- (இராமபிரான் வீடணன் சுக்கிரீவன் முதலானோரை நோக்கி) மனத்தாலும் மொழியாலும், உடம்பாலும்;* ***மற்று இனி நலியா வண்ணம்*** *- மேலும் இனி இவர்கள்*

*வருந்தாதவாறு;* ***விரைவின் போக்குமின் என்றான்*** *- விரைந்து இவர்களை இலங்கைக்கு அனுப்பி வையுங்கள் என்றான்;* ***உய்ந்தனம் என்று போனார்*** *- (ஒற்றர் இருவரும்) பிழைத்தோம் என்று சொல்லியவாறு அங்கிருந்து போனார்கள்.*

*எங்கும் நுழைந்து தானை(யை) நோக்கினிர் என இயையும். நுழைந்தனிர் - முற்றெச்சம். இனியும் நீங்கள் இங்கிருந்து ஒற்றறிய வேண்டியது இருப்பின் இருக்கலாம்; அப்படி எதுவும் இல்லையாயின் செல்லலாம் என்பான், "இனிவேறு ஒன்றும் ஆக்குவதில்லையாயின்" என்றான் பெருமான். பேராற்றலின் பெருவடிவாய் அவன் இலங்குவதையும், தன்னம்பிக்கையின் முற்றுருவாய் அவன் இயங்குவதையும், பகைவருக்கருளும் பண்புருவாய் அவன் திகழ்வதையும் தெளிவுற உணர்த்தும் திறப் பாடாய் மிளிர்வது காண்க. முன்பு உடலால் நலிந்தீர்கள்; இப்போது, மனத்தாலும், வாயாலும் கூட நலிவு செய்யாமல் அவர்களை அனுப்பி வையுங்கள் எனும் இதனோடு, அனுமன், மீட்சிப் படலத்தில் அரக்கியரை வதைக்க வரங் கேட்கையில், "என்ன தீமை இவர் இழைத்தார்? அவன் சொல்லினது. அல்லது?" (9986) என்றுரைத்த பிராட்டியின் பேரருட் கூற்றினை ஒப்பிட்டு மகிழலாம்.*

## *இரவில் இராவணன் மந்திராலோசனை*

**கலி விருத்தம்**

***6784. அரவ மாக் கடல் அஞ்சிய அச்சமும்,***
***உரவு நல் அணை ஓட்டிய ஊற்றமும்,***
***வரவும் நோக்கி, இலங்கையர் மன்னவன்,***
***இரவின், எண்ணிட, வேறு இருந்தான்அரோ.***

***இலங்கையர் மன்னவன்*** *- (இஃது இவ்வாறாக) இலங்கைவாழ் அரக்கர்கட்கு மன்னவனான இராவணன்;* ***அரவமாக்கடல் அஞ்சிய அச்சமும்*** *- ஒலிக்கின்ற பெருங்கடற்கு இறைவனாகிய. வருணதேவன் (இராமனிடம்) அஞ்சிய அச்சத்தையும்;* ***உரவு நல் அணை ஓட்டிய ஊற்றமும்*** *- (கடலுக்கு) வலிய அணைகட்டி முடித்த வலிமையையும்;* ***வரவும் நோக்கி*** *- அவ்வணை வழியாக இலங்கைக்கு (இராமன்) வந்துள்ள வருகையையும் (மனத்துள்) நோக்கி;* ***இரவின்*** *- அந்த இரவு நேரத்தில்;* ***எண்ணிட வேறு இருந்தான்*** *- சிந்திப்பதற்காகத் தனியே இருந்தான்.*

*வினைவலியும், தன்வலியும் மாற்றான் வலியும் துணை வலியும் தூக்கிச் செயல் (திருக்கு. 471) எனும் அரசியல் கூற்றில், தன் வலியினை மட்டுமே கருதிக் கொண்டிருந்த இராவணன், மாற்றான் வலியும், அவன் வினைவலியும், துணை வலியும் சிந்திக்க வேண்டிய கட்டாயம் நேர்ந்துள்ளது என்பது கருத்து. அக்கால மன்னர்கள் மந்திராலோசனை அவைக் கூட்டத்திற்குச் செல்லுமுன், தனியே இருந்து சிந்தனை செய்து செல்லுதல் மரபு என்பது இதனால் தெரிகிறது. தசரதனும் மந்திராலோசனைக்குச் செல்லுமுன், "சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினான்" (1315) எனக் கூறப் பட்டிருத்தல் காண்க.*

***6785. வார் குலாம் முலை மாதரும், மைந்தரும்,***
***ஆரும் நீங்க, அறிஞரொடு ஏகினான்-***
***'சேர்க' என்னின் அல்லால், இளந் தென்றலும்***
***சார்கிலா நெடு மந்திர சாலையே.***

***'சேர்க' என்னின் அல்லால்*** - *'வருக' என்று ஆணையிட்டால் அல்லாது;* ***இளந்தென்றலும் சார்கிலா*** - *மெல்லியதென்றற் காற்றும் உட்புக இயலாத;* ***நெடு மந்திரசாலை*** - *நீண்ட ஆலோசனை மண்டபத்திற்குள்;* ***வார் குலாம் முலை மாதரும்*** - *கச்சு ஒளிர்கின்ற மார்பினையுடைய பெண்களும்;* ***மைந்தரும்*** - *ஆடவரும்;* ***ஆரும் நீங்க*** - *பிறரும் அந்த இடத்திலிருந்தும் விலகிச் செல்ல;* ***அறிஞரொடு ஏகினான்*** - *(மந்திரச் சுற்றம் சார்ந்த) அறிஞர்களோடு சென்றான் இராவணன்.*

*"இளையார், ஒன்றும் முறைமையுணராதவர், மகளிர் என்னும் இவர் மந்திரத்தின் எய்தப்பெறாதவரே" (வில்லி. கிருட்.தூ.52) என்பராதலின், "வார்குலாம் முலைமாதரும், மைந்தரும், ஆரும் நீங்க" என்றார். முன்பும் (6077, 6088) கம்பர் கூறியது காண்க. வருண தேவன் இராமனுக்கு உடந்தையானது போல், வாயுவும் ஆகக் கூடும் என்றஞ்சி, காற்றையும் வெளி நிறுத்தினான் எனினுமாம்.*

***6786. உணர்வு இல் நெஞ்சினர், ஊமர், உரைப் பொருள்***
***புணரும் கேள்வியர் அல்லர், பொறி இலர்,***
***கொணரும் கூனர், குறளர், கொழுஞ் சுடர்***
***துணரும் நல் விளக்கு ஏந்தினர், சுற்றினார்.***

***உணர்வில் நெஞ்சினர்*** - *உணரும் ஆற்றல் அற்ற மனத்தினரும்;* ***ஊமர்*** - *பேச இயலாதவரும்;* ***உரைப் பொருள் புணரும் கேள்வியர் அல்லர்*** - *உரைத்த பொருள் சென்று சேர்வதற்குரிய கேள்விச் செல்வம் பெறாத செவிடரும்;* ***பொறி இலர்*** - *வேறு பொறிகளாகிய உறுப்புகள் அற்றவரும்;* ***கொணரும் கூனர் குறளர்*** - *வேண்டிய பொருள்களைக் கொண்டுவந்து தரும் கூனரும், குறளரும்;* ***துணரும் கொழுஞ்சுடர் நல்விளக்கு ஏந்தினர் சுற்றினர்*** - *பல முகங்களாக கொழுந்து விட்டெரிகின்ற நல்ல விளக்குகளை ஏந்தினவர்களாய் அங்கு சூழ்ந்து நின்றார்கள். ஏவிய அன்றிப் பிறிது ஒன்றுதாமே செய்ய வல்லவர் அல்லர் ஆதலின் கூர் அறிவு குறைந்தவர்கள், ஊமையர், செவிடர் முதலியோர் மந்திராலோசனையில் ஈடுபட்டிருப்போர்க்குக் குற்றேவல் செய்ய அனுமதிக்கப் பட்டனர்.*

***6787. 'நணியர், வந்து மனிதர்; நமக்கு இனித்***
***துணியும் காரியம் யாது?' எனச் சொல்லினான்-***

***பணியும் தானவர் ஆதியர் பல் முடி***
***மணியினால் விளங்கும் மணித் தாளினான்.****

***பணியும் தானவர் ஆதியர் பல்முடி*** - *(தன்னை) வணங்குகின்ற அசுரர் முதலானோரின் பற்பல மகுடங்களின்;* ***மணியினால் விளங்கும்*** - *மாணிக்கங்களினால் ஒளிவிடுகின்ற;* ***மணித்தாளினான்*** - *அழகிய பாதங்களையுடையவனான இராவணன்;* ***மனிதர் வந்து நணியர்*** - *(நம் பகைவரான) மனிதர்கள் (நம்மை நோக்கி) வந்து அண்மையர் ஆயினர்;* ***நமக்கு இனித் துணியும் காரியம் யாது?*** - *நாம் இனித் துணிந்து ஆற்ற வேண்டிய செயல்கள் யாவை?;* ***எனச் சொல்லினான்*** - *என்று (மந்திரச் சுற்றத்தாரை நோக்கிக்) கேட்டான்.;*

*நணிமை - அண்மை. அசுரரும் தேவரும் வந்து வணங்கும் அடியுடையான் 'மனிதர் நணியர்' என அஞ்சி ஆலோசனை கேட்க நேர்ந்துள்ளது என்பது ஒரு நயம். பகைவர் மிக அருகில் உளர் ஆனதனால் தான், இரவில் மந்திராலோசனை அவை கூட்டப்பட்டுள்ளது. என்பதனை உணர்க என்பது குறிப்பு.*

*மாலியவான் அறிவுரை*

***6788. 'கால வெங் கனல் போலும் கணைகளால்***
***வேலை வெந்து, நடுங்கி, வெயில் புரை***
***மாலை கொண்டு வணங்கினவாறு எலாம்***
***சூலம் என்ன என் நெஞ்சைத் தொளைக்குமால்.***

***கால வெங்கனல் போலும்*** - *(அப்போது பாட்டனாகிய மாலியவான் இராவணனை நோக்கிக் கூறுவான்) ஊழிக் காலத்துக் கடலிடைத் தோன்றும் கடுந்தீயே போன்று;* ***கணைகளால்*** - *(இராமனின்) அம்புகளால்;* ***வேலை வெந்து நடுங்கி*** - *சமுத்திர ராசனாகிய வருணன் தீப்பட்டு நடுங்கி;* ***வெயில் புரை மாலை கொண்டு*** - *வெயிலைப் போல் ஒளிவிடும் நவமணி மாலையைக் கையுறையாக் கொண்டு;* ***வணங்கினவாறு எலாம்*** - *(இராமனைத்) தொழுது நின்ற செய்தி எல்லாம்;* ***சூலம் என்ன*** - *சூலாயுதம் பாய்வது போன்று;* ***என் நெஞ்சம் துளைக்கும்*** - *என் உள்ளத்தைக் குடையும்.*

*மாலியவான் இராவணன் தாயாகிய கேகயியைப் பெற்ற சுமாலியின் உடன்பிறந்தோன் ஆவான். அமயம் வாய்க்கும் போதெல்லாம் இராவண இராசதானியில் அறம் உரைக்கும் நல்லோர்கள் மிகச் சிலருள் ஒருவன்.*

***6789. ' "கிழி படக் கடல் கீண்டதும், மாண்டது,***
***மொழி படைத்த வலி" என, மூண்டது ஓர்***
***பழி படைத்த பெரும் பயத்து, அன்னவன்***

**வழி கொடுத்தது என் உள்ளம் வருத்துமால்.**

***கடல் கிழிபடக் கீண்டதும்*** *- கடலானது இருபிளவாகக் கிழிந்தவுடன்;* ***மொழிபடைத்த வலி மாண்டது என*** *- பாராட்டுதற்குரிய கடலின் வலிமை (இன்றோடு) அழிந்தது எனுமாறு;* ***ஓர் பழி படைத்த பெரும் பயத்து அன்னவன்*** *- ஒப்பற்ற பழியினைப் பெற்றுக் கொண்ட பேரச்சத்தோடு வருணன்;* ***வழி கொடுத்தது*** *- (இராமனின் வேண்டலுக்கிணங்கி) அவனுக்கு (அணைகட்ட) வழிவகுத்துக் கொடுத்தது (எனும் செய்தி);* ***என் உள்ளம் வருத்தும்*** *- என் மனத்தினை வருத்துகின்றது.*

*உலகை அழிக்கும் திறம் வாய்ந்தது கடல் என்றான் சென்ற பாடலில், அக்கடலைக் கிழிக்கும் திறம் வாய்ந்தவன் உன் பகைவன் என அறிவுறுத்துகின்றான். மாலியவான் இப்பாடலில். மொழி படைத்த வலி சான்றோர் மொழி போல் வலிமை படைத்த ஆற்றல் எனினுமாம். இராமனை வெளிப்படையாகப் புகழின், இராவணன் வெகுளக் கூடுமாதலால், வருணன் அச்சத்தை வைத்து, இராமன் பெருமையை உணர்த்தும் திறம் காண்க.*

***6790. 'படைத்த மால் வரை யாவும் பறித்து, வேர்***
***துடைத்த வானர வீரர், தம் தோள்களைப்***
***புடைத்தவாறும், புணரியைப் போக்கு அற***
***அடைத்தவாறும், என் உள்ளத்து அடைத்தவால்.***

***படைத்த மால்வரை*** *- (இறைவன்) படைத்த பெரிய மலைகள்;* ***யாவும் வேர் பறித்து*** *- யாவற்றையும் வேருடன் அகழ்ந்தெடுத்து;* ***துடைத்த வானரவீரர்*** *- (உலகிலேயே பெரிய மலைகள் இனி இல்லை என்னுமாறு) செய்து விட்ட குரங்கு இன வீரர்கள்;* ***தம் தோள்களைப் புடைத்த வாறும்*** *- (வெற்றிக் களிப்பால்) தம் தோள்களைக் கொட்டி மகிழ்ந்த செயலும்;* ***புணரியைப் போக்குஅற அடைத்தவாறும்*** *- அவ்வாறு மலைகளைப் பெயர்த்து வந்து இட்டு, மாகடலை இடம் விட்டு நகராதவாறு அடைத்த செயலும்;* ***என் உள்ளத்து அடைத்த*** *- என் உள்ளத்தினை (வேறு எண்ண இயலாத படி) அடைத்துக் கொண்டுள்ளன.*

*புணர்தல்- கூடுதல். எல்லா நதிகளும் வந்து கூடுமிடமாதலின், கடல் புணரியெனப் பட்டது. ஓயாமல் அலைந்து, நகர்ந்து கொண்டேயிருக்கும் கடலை அப்புறம் இப்புறம் அசையாமல் சேது நிறுத்தி விட்டது என்பான், "புணரியைப் போக்கு அற அடைத்த வாறும்" என்றான்.*

***6791. 'காந்து வெஞ் சின வீரர், கணக்கு இலார்,***
***தாம் தம் ஆற்றலுக்கு ஏற்ற தரத் தர,***

**வேந்த! வெற்பை ஒருவன் விரல்களால்**
**ஏந்தி இட்டது என் உள்ளத்தின் இட்டதால்.**

***வேந்த!*** *- (இலங்கை) வேந்தனே!;* ***காந்து வெஞ்சின வீரர் கணக்கு இலார்*** *- கனலும் கொடுஞ்சினமுடைய எண்ணற்ற வானர வீரர்கள்;* ***தாம் தம் ஆற்றலுக்கு ஏற்ற தர, தர*** *- தங்கள் தங்களுடைய ஆற்றலுக்கு ஏற்றவாறு தக்க மலைகளைக் கொண்டு வந்து கொடுக்க, கொடுக்க;* ***வெற்பை*** *- அந்தப் பெரு மலைகளை (யெல்லாம்);* ***ஒருவன் விரல்களால்*** *- (நளன் என்னும்) ஒப்பற்ற வீரன் தன் கைவிரல்களால்;* ***ஏந்தி இட்டது*** *- தாங்கி (தாங்கிக்) கடலில் இட்டது;* ***என் உள்ளத்தின் இட்டது*** *- என் நெஞ்சிலேயே இட்டது போன்றிருந்து என்னை வருத்துகின்றது.*

*வந்து வீழ்ந்த மலைகள், வானர வீரர்கள் உடல் வடிவத்துக்கு ஏற்றாற் போலவன்றி, அவர் நெஞ்சுரத்துக்கு ஏற்றாற் போல அமைந்தது என்பார், "தாம் தம் ஆற்றலுக்கு ஏற்ற தரத்தர" என்றார். "தரத்தர" எனும் அடுக்கு விரைவும் பன்மையும் குறித்து நின்றது.*

*6792.* ***'சுட்டவா கண்டும், தொல் நகர் வேலையைத்***
***தட்டவா கண்டும், தா அற்ற தெவ்வரைக்***
***கட்டவா கண்டும், கண் எதிரே வந்து***
***விட்டவா கண்டும், மேல் எண்ண வேண்டுமோ?'***

***தொல் நகர் சுட்டவா கண்டும்*** *- நமது தொன்மை வாய்ந்த பழம் பதியான இலங்கையை (அனுமன்) எரித்தவாறு கண்ணாற் கண்டிருந்தும்;* ***வேலையைத் தட்டவா கண்டும்*** *- கடலை (அணையிட்டுத்) தடுத்துள்ளவாறும் கண்டபிறகும்;* ***தா அற்ற தெவ்வரைக் கட்டவா கண்டும்*** *- அழிவற்ற (ஆற்றல் பெற்ற) கரன் முதலிய பகைவர்களை அழித்தவாறு கண்டபின்னும்;* ***கண் எதிரே வந்து விட்டவா கண்டும்*** *- (இத்தனையும் செய்தவர்கள் இப்போது, நம்) கண்ணுக்கெதிரேயே வந்து விட்டதனையும் (கண்ணாரக்) கண்டும்;* ***மேல் எண்ண வேண்டுமோ?*** *- (இவ்வளவும்) கண்டு விட்டபின்) மேலே (இங்குகூடிச்) சிந்தனை செய்வதும் தேவைதானோ? (தேவை இல்லை என்றபடி)*

*தா அற்ற தெவ்வர் - அழிவற்ற ஆற்றல் மிக்க பகைவர்கள். அவர் விராதன், கவந்தன், கரதூடணர், மாரீசன், திரிசிரன் முதலானோர். தா - அழிவு. தெவ்வர் - பகைவர். தட்டல் - தடுத்தல். கட்டல் - களையெடுத்தல். அழித்தல். இனி, தொன்னகர் சூழ்ந்த கடலைச்சுட்டவாறு கண்டும், தடுத்தவாறு கண்டும் எனவும் உரைக்கலாம். அப்போது, "தொல்நகர் வேலை" என்பது, மத்திமதீபமாக நிற்கும்.*

*இராவணன் மாலியவானைச் சினத்தல்*

***6793. என்று தாயைப் பயந்தோன் இயம்பலும்,***
***தின்று வாயை, விழிவழித் தீ உக,***
***'நன்று, நன்று! நம் மந்திரம் நன்று!' எனா,***
***'என்றும் வாழ்தி, இளவலொடு; ஏகு' என்றான்.***

***என்று தாயைப் பயந்தோன் இயம்பலும்*** *- இவ்வாறு இராவணனின் தாயைப் பெற்ற (மாதாமகனே ஆகிய) மாலியவான் இராவணனிடம் உரைத்த போது;* ***வாயைத் தின்று*** *- (இராவணன்) சினத்தால் உதட்டைக் கடித்து;* ***விழிவழித்தீஉக*** *- கண்களின் வழியாகத் தீப்பொறி சிந்த;* ***'நன்று, நன்று*** *- 'நல்லது, நல்லது;* ***நம்மந்திரம் நன்று*** *- நம் மந்திர ஆலோசனை நன்றாக நடக்கிறது?';* ***எனா*** *- என்று வெகுண்டு;* ***இளவலோடு என்றும் வாழ்தி*** *- '(நீயும் என்) தம்பியான வீடணனோடு சேர்ந்து இனிதாக வாழ்வாயாக இப்போதே செல்' என்றான்.*

*தாயைப் பயந்தோன் - பாட்டன். மாலியவான். முன்பு வெளியேற்றப் பட்ட தம்பி வீடணன் நினைவுக்கு வரவே, "இளவலோடு ஏகு" என்றான் வீடணன், "நன்று நன்று நம் மந்திரம் நன்று" என்பது இகழ்ச்சிக் குறிப்பு. பகைவர் அழிவு பேச வேண்டிய நம் மந்திர சபை, பகைவர் பெருமை பேச அமைந்த ஒன்றாக மாறியுள்ளது கண்டு அவன் உள்ளத் தெழுந்த சினத்தால் வந்த இகழ்ச்சி இது.*

*சேனைத் தலைவன் கூறுதல்*

***6794. 'ஈனமேகொல், இதம்?' என எண்ணுறா,***
***மோனம் ஆகி இருந்தனன், முற்றினான்.***
***ஆன காலை, அடியின் இறைஞ்சிய***
***சேனை நாதன் இனையன செப்பினான்:***

***முற்றினான் இதம் ஈனமே கொல்?*** *- (இவ்வாறு இராவணன் வெகுண்டுரைத்ததைக் கேட்ட) ஆண்டும் அநுபவமும் பண்பும் முற்றிய மாலியவான், நல்லது கூறுதல் கூட (இங்கு) இழிவாகுமோ? என்று வருந்தி;* ***மோனமாகி இருந்தனன்*** *- பேசாது ஒடுங்கியிருந்தான்;* ***ஆன காலை*** *- அப்போது;* ***அடியின் இறைஞ்சிய சேனை நாதன்*** *- (இராவணன்) அடிகளை வணங்கியவனான படைத்தலைவன் (பிரகத்தன்);* ***இனையன கூறினான்*** *- பின்வருவனவற்றைக் கூறினான்.*

*கொல் - ஐயப் பொருள் தந்தது. இதம் - நன்மை. இதம் எல்லாம் இராவணனுக்கு ஈனம் என்பதால், ஈனம் எல்லாம் அவனுக்கு இதம் ஆகும் என்பது, அவன் படைத்தலைவன் கூறவிருக்கும் ஈனங்களை அவன் விரும்பிக் கேட்கத் தொடங்குவதால் உணர்த்தினார்.*

*6795. 'கண்மை இந் நகர் வேலை கடந்த அத்*
*திண்மை ஒன்றும் அலால், திசை காவலர்*
*எண்மரும் இவற்கு ஏவல் செய்கின்ற அவ்*
*உண்மை ஒன்றும் உணர்ந்திலைபோல்!' என்றான்.*

***ஐயா!*** *- ஐயனே! ;* ***கண்மை*** *- கண்ணுக்கு நேராக;* ***இந்நகர் வேலை கடந்த*** *- இவ்விலங்கை மாநகரைச் சுற்றியுள்ள கடலைக் கடந்த;* ***அத்திண்மை ஒன்றும் அலால்*** *- அந்த வல்லமைஒன்றே (தம் கண்கட்குப் படுகின்றதே) யன்றி;* ***திசை காவலர் எண்மரும்*** *- எட்டுத் திக்குப் பாலகரும்;* ***இவற்கு*** *- நம் வேந்தனாகிய இவனுக்கு;* ***ஏவல் செய்கின்ற*** *- குற்றேவல் புரிகின்ற;* ***அவ் உண்மை ஒன்றும்*** *- அந்தப் பேருண்மை ஒன்றினையும்;* ***உணர்ந்திலைபோல்*** *- (நீ) உணரவில்லை போலும்; என்றான். ஐயனே என விளித்தது மாலியவானை. கண்மை - கண்ணின் தன்மையாகிய காட்சி. இங்குக் கண்ணுக்கு நேராகக் கண்டதைக் குறித்தது. பகைவன் தீரச் செயல் ஒன்றே ஒன்று மட்டும் உங்கட்குக் கண்ணாரக் கண்ட காட்சியாகத் தெரிகிறதேயன்றி, நம்வேந்தன் புரிந்துள்ள வீரச் செயல்கள் பல புரியாமற் போயுள்ளன; இருக்கட்டும். எட்டுத் திக்குப் பாலகர்களும் நம் வேந்தன் இணையடியினை வந்து இறைஞ்சிய வண்ணம் உள்ளார்களே! அந்த உண்மை ஒன்றையாவது நீங்கள் உணர்ந்திருக்க வேண்டும் என்று படைத்தலைவன் மொழிகின்றான்.*

*6796. ' "கூசி வானரர் குன்று கொடு இக் கடல்*
*வீசினார்" எனும் வீரம் விளம்புவாய்;*
*ஊசி வேரொடும் ஓங்கலை, ஓங்கிய*
*ஈசனோடும், எடுத்ததும் இல்லையோ?*

***கூசி*** *- நீ வானரர்க்கு அஞ்சினவனாய்;* ***குன்று கொடு*** *- மலைகளையெடுத்து;* ***இக்கடல் வீசினார் எனும் வீரம் விளம்புவாய்*** *- (அவ்வானரர்கள்) இக்கடலுள் வீசினர் என்கின்ற (அவர்) வீரச் செயலையே விளம்பிக் கொண்டுள்ளாய்;* ***ஓங்கலை*** *- உயர்ந்தோங்கிய கயிலை மலையை;* ***ஓங்கிய ஈசனோடும்*** *- அதன் உச்சியில் வீற்றிருக்கும் சிவபெருமானோடும்;* ***ஊசி வேரொடும்*** *- அம் மலையின் ஆணிவேரோடும்;* ***எடுத்ததும் இல்லையோ?*** *- (நம் தலைவன்) இராவணன் எடுத்துள்ளதும் உன் நினைவுக்கு வரவில்லையோ? (என்றான் படைத் தலைவன்).*

*ஓங்கல் - மலை. ஊசி - வேர், ஆணிவேர். இராவணன் கயிலை எடுத்தது முன்பும் (2832, 2840, 3360) பல இடங்களில் புகழப்படும். வானரங்கள் எடுத்தவை குன்றுகள்; நம் வேந்தன் எடுத்தது ஈசனோடு சேர்ந்த மலைகட்குத் தலைவனாகிய மலையரசனை!; மறந்ததும் எப்படியோ என வியந்துரைக்கின்றான்.*

*6797. 'அது கொடு என் சில? ஆர் அமர் மேல் இனி,*

***மதி கெடுந் தகையோர், வந்து நாம் உறை***
***பதி புகுந்தனர்; தம்மைப் படுப்பது ஓர்***
***விதி கொடு உந்த விளைந்ததுதான்' என்றான்.***

***அது கொடு என் சில*** - *'பகைவர்கள் குன்றுகளை வீசிக் கடலை யடைத்து இலங்கையையடைந்தனர் எனும்) அச் செய்தியைக் கேட்டு நாம் (அஞ்ச) என்ன உள்ளது?;* ***மதிகெடுந்தகையோர்*** *- புத்தி கெட்டதன்மையினர்;* ***ஆர் அமர்மேல்*** *- பெரும் போர் புரிவதன் பொருட்டு;* ***நாம் உறை பதி வந்து புகுந்தனர்*** *- நாம் வாழும் இலங்கை மாநகர் நோக்கி வந்து புகுந்துள்ளனர்;* ***தம்மைக் கெடுப்பது ஓர் விதி கொடு உந்த*** *- அது, தம்மைக் கெடுப்பதற்குத் தங்கள் ஒப்பற்ற கெடுவிதி பின் நின்று (பிடர்) பிடித்துத்தள்ள;* ***விளைந்தது தான் என்றான்*** *- நிகழ்ந்த செயலே யாகும் வேறென்ன?'*

*வந்த ஒற்றர் வாயிலாக, இராவணன் செய்தியறிதல்*

***6798. முற்றும் மூடிய கஞ்சுகன், மூட்டிய***
***வெற்று அனல் பொறிக் கண்ணினன், வேத்திரம்***
***பற்றும் அங்கையினன், படிகாரன், 'இன்று***
***ஒற்றர் வந்தனர்' என்ன, உணர்த்தினான்.***

***முற்றும் மூடிய கஞ்சுகன்*** *- (இப்போது) (உடல்) முழுவதும் மூடிய சட்டையையுடையவனாய்;* ***வெற்று அனல் மூட்டிய பொறிக் கண்ணினன்*** *- வெறும் (சினத்) தீ மட்டுமே மூட்டப்பட்டதினால் எழும் பொறி பறக்கும் கண்ணினையுடையவனாய்;* ***வேத்திரம் பற்றும் அங்கையினன்*** *- பிரம்பினைப் பற்றிய கைகளை யுடையவனாய்;* ***படிகாரன்*** *- வாயிற் காவலன் ஒருவன் (உட்புகுந்து);* ***'இன்று ஒற்றர் வந்தனர்'*** *- 'இப்பொழுது உளவு அறிபவர் வந்துள்ளனர்';* ***என்று உணர்த்தினான்*** *- என்று இராவணனுக்கு அறிவித்தான்.*

*கஞ்சுகன் - சட்டையணிந்தவன். முன்பு சமுதாயத்தில் மேன்மக்கள் சட்டையணியாமலும், கீழ்மக்கள் சட்டையணிந்தும் இருந்தனர் என்பது இதனாலும் தெளிவாம். (3082) முன்பும் உணர்த்தினார். வேத்திரம் - பிரம்பு. படி - வாயில் படி. அரச மனையின் வாயிற் படியில் காவல் புரிபவன் ஆதலின் "படிகாரன்" என்றார். "படிகாரர்! எம் வரவு சொல்லுதிர் மன்னவற்கே!" (2102) என்று முன்பும் வந்தது. இன்று - இப்பொழுது எனும் பொருளில் வந்தது.*

***6799. வாயில் காவலன் கூற, வயங்கு எரி***
***மேய வெங் கண் விறல் கொள் இராக்கதர்-***

***நாயகன், 'புகுத்து, இங்கு' என, 'நன்று' எனப்
போய், அவன் புகுத்த, புகுந்தார்அரோ.***

***வாயில் காவலன் கூறி வணங்கலும்*** *- வாயில் காப்போன் (இவ்வாறு) கூறி வணங்கியபோது;* ***வயங்கு எரி மேய வெங்கண் விறல்கொள்*** *- ஒளிரும் தீ எரிவது போன்ற கொடிய கண்களையும் வல்லமையையும் கொண்ட;* ***இராக்கதர் நாயகன்*** *- அரக்கர்களின் தலைவனான இராவணன்;* ***'புகுத்து இங்கு' என*** *- (அவ்வொற்றர்களை), 'இங்கு புகுமாறு செய்' என்று கூற;* ***நன்று எனப் போய்*** *- 'நன்று' என உரைத்துச் சென்று;* ***அவன் புகுத்த*** *- வாயிற்காவலன் அவ்வாறே புகவிட;* ***புகுந்தார்*** *- (அவ்வொற்றர்கள்) உட்புகுந்தனர்.*

*வெங்கண் - கொடுமை. விறல் - ஆற்றல். இராவணன் கண்களில் கொடுமையே ஓயாது குடிகொண்டிருத்தலை, "வயங்கு எரி மேய வெங்கண் இராக்ககதர் நாயகன்" என்றார், பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் (குறள் 709) ஆதலின்.*

***6800. மனைக்கண் வந்து, அவன் பாதம் வணங்கினார்-
பனைக் கை வன் குரங்கின் படர் சேனையை
நினைக்கும்தோறும் திடுக்கிடும் நெஞ்சினார்,
கனைக்கும்தோறும் உதிரங்கள் கக்குவார்.***

***பனைக்கை வன்குரங்கின்*** *- பனந்துண்டம் போன்ற கைகளையுடைய வலிய குரங்குகளினுடைய;* ***படர் சேனையை*** *- பரந்த சேனையை;* ***நினைக்கும் தோறும்*** *- எண்ணும்தோறும்;* ***திடுக்கிடும் நெஞ்சினார்*** *- நடுங்கும் மனத்தவராயும்;* ***கனைக்கும் தோறும்*** *- (பேசுதற்குத் தொண்டையினைச் சரிசெய்யச்) செரும் தோறும்;* ***உதிரங்கள் கக்குவார்*** *- (குபுக் கென்று) இரத்தம் கக்குபவராயும் உள்ள அவ்வொற்றர்கள்;* ***மனைக் கண் வந்து*** *- அரண்மனைக்குள் நுழைந்து;* ***அவன் பாதம் வணங்கினார்*** *- இராவணனின் அடிகளை வணங்கினர்.*

*வானரர்கள் மொத்திய ஊமைக் காயங்களால் உள்ளுறுப்புகள் நைந்து, புண்ணாகி, இரத்தம் வயிற்றில் ஊறிக் கொண்டேயிருத்தலால், வாய் திறந்தால் குருதி கொப்பளிக்கும் (மன) ஓவியக் காட்சியைச் சொல்லாற் பிடித்துக் கவிச்சக்கரவர்த்தி, "கனைக்கும் தோறும் உதிரங்கள் கக்குவார்" என ஓதியுள்ள படிமத்தின் அருமையினை ஓதி யுணர்க.*

***6801. 'வெள்ள வாரி விரிவொடு, அவ் வீடணத்
தள்ளவாரி நிலைமையும், தாபதர்
உள்ளவாறும், உரைமின்' என்றான்-உயிர்
கொள்ள வாய் வெருவும் கொடுங் கூற்று அனான்.***

***உயிர் கொள்ள வாய் வெருவும்*** - உயிர்களைக் கொள்ள விரும்பி, வாயைக் கடிக்கும்; ***கொடுங் கூற்று அனான்*** - கொடிய கூற்றுவனைப் போன்ற இராவணன்; ***'வாரி வெள்ள விரிவொடு*** - "கடல் வெள்ளம் போன்று பரந்த வானரச் சேனையின் விரிவோடு; ***அவ்வீடணத் தள்ளவாரி நிலைமையும்*** - அந்த வீடணன் என்னும் (போருக்கஞ்சி ஒளிந்த) சோம்பேறியின் நிலைமையையும்; ***தாபதர் உள்ளவாறும்*** - தவம் செய்வோர் வேடம் தரிந்த இராம இலக்குவர் உள்ள திறனையும்; ***உரைமின்' என்றான்*** - (எனக்குக்) கூறுங்கள்" என்று கூறினான்.

*வீடணன், போர்க்கு அஞ்சி இராமனிடம் ஓடியவன், என்பது இராவணனின் நினைவு ஆதலின், "அவ்வீடணத் தள்ளவாரி" என்றான். தள்ள பாரு - எனுந் தொடர் போருக்கஞ்சுபவன் எனக் கன்னடத்தில் இன்றும் வழங்குகிறது என்பர். போருக்கஞ்சிச் சோம்பலில் ஏறியவன் ஆதலின், தமிழில் தள்ளவாரி என்பது சோம்பேறியைக் குறிப்பதாயிற்று "தூங்கல், அசைதல், அலசுதல், சோம்பே, சடமடி தள்ள வாரமும் தருமே" என்பது பிங்கலந்தை. இன்று "தெல்லவாரி" என்பது நாட்டுவழக்கு.*

***6802. என்னச் சாரர் இசைத்தனர், வேலையைக்***
***கன்னல் ஒன்றில் கடந்து, கவிக் குலம்***
***துன்னு பாசறைச் சூழல்கள் தோறுமே***
***அன்னர் ஆகி, அரிதின் அடைந்தனம்.****

***என்ன*** - இவ்வாறு (இராவணன்) கூற; ***சாரர்*** - சுக சாரணர் எனும் ஒற்றர்களும்; ***வேலையை*** - கடலை; ***கன்னல் ஒன்றில் கடந்து*** - ஒரு நாழிகைப் பொழுதில் கடந்து சென்று; ***கவிக்குலம் துன்னு பாசறைச் சூழல்கள் தோறும்*** - வானரக்கூட்டம் நெருங்கியுள்ள பாசறைச் சுற்றுப் புறங்கள் தோறும்; ***அன்னர் ஆகி*** - (அக்குரங்குகளின் வடிவத்தினையே எடுத்துக்கொண்டு) அவர்களே ஆகி; ***அரிதின் அடைந்தனம்*** - (மிக) அரிதாக அவர்களையடைந்தோம் (என்று); ***இசைத்தனர்*** - கூறினர்.

*கன்னல்-வட்டில். அதனால் அளக்கும் நாழிகைப் பொழுதைக் குறித்து நின்றது.*

*ஒற்றர் உரைத்தல்*

***6803. 'அடியம் அந் நெடுஞ் சேனையை ஆசையால்***
***முடிய நோக்கலுற்றேம்; முது வேலையின்***
***படியை நோக்கி, எப் பாலும் படர்குறும்***
***கடிய வேகக் கலுழனின் கண்டிலம்***

***அடியம்*** - *(உன்) அடியேம் ஆகிய நாங்கள்;* ***அந் நெடுஞ்சேனையை*** - *அந்த நீண்ட (குரங்குச்) சேனையை;* ***ஆசையால்*** - *(மனங்கொண்ட) விருப்பத்தால்;* ***முடிய நோக்கல் உற்றோம்*** - *முழுவதும் நோக்கத் தொடங்கினோம்;* ***முதுவேலையின் படியை நோக்கி*** - *பழமையான கடலின் எல்லையைக் காணுமாறு;* ***எப்பாலும் படர்குறும்*** - *எல்லாப் பக்கங்களிலும் பார்த்தல் பொருந்திய;* ***கடிய வேகக் கலுழனின்*** - *கடுமையான வேகம் பொருந்திய கருடனைப் போன்று;* ***கண்டிலம்*** - *காண இயலாதவர்கள் ஆனோம்.*

## *6804. 'நுவல, யாம் வர வேண்டிய நோக்கதோ?*
## *கவலை-வேலை எனும், கரை காண்கிலாது*
## *அவலம் எய்தி அடைத்துழி, ஆர்த்து எழும்*
## *துவலையே வந்து சொல்லியது இல்லையோ?*

***நுவல யாம் வரவேண்டிய நோக்கதோ ?*** - *பகைப்படையின் அளவு ஆற்றல் முதலியவற்றை நாங்கள் வந்து உமக்கு உணர்த்த வேண்டிய தேவையுமுள்ளதோ?* ***கவலை, வேலை எனும் கரை*** - *; (அவ்வானர வீரர்கள்) கவலைக்கடலின் கரையினைக்* ***காண்கிலாது*** - *காண இயலாது;* ***அவலம் எய்தி*** - *துயரம் முழுவதும் அடைந்து;* ***அடைத்துழி*** - *(இறுதியில் வழி கண்டு) கடலை அடைத்தபோது;* ***ஆர்த்து எழும் துவலையே*** - *(மலைகள் வீழ்ந்ததனால் இலங்கையில்) ஆர்ப்பரித்த துளிகளே;* ***வந்து சொல்லியது இல்லையோ?*** - *(அவர்கள் ஆற்றலை) (உமக்கு) வந்து சொல்லிவிட்டது இல்லையோ?*

## *6805. ' "எல்லை நோக்கவும் எய்திலதாம்" எனும்*
## *சொல்லை நோக்கிய மானுடன், தோள் எனும்*
## *கல்லை நோக்கி, கணைகளை நோக்கி, தன்*
## *வில்லை நோக்கவும், வெந்தது வேலையே.*

***எல்லை நோக்கவும்*** - *(இராமன் தன்) எல்லையிலே வந்து தன்னை நோக்கி வரம் கிடக்கவும்;* ***எய்திலதாம் எனும்*** - *(கடல்) வந்து உதவவில்லை என்கின்ற;* ***சொல்லை நோக்கிய மானுடன்*** - *(பழி) மொழியைக் கருதிய (இராமன் ஆகிய) மானுடன்;* ***தோள் எனும் கல்லை நோக்கி*** - *தனது தோள்கள் என்னும் மலைகளைப் பார்த்து;* ***கணைகளை நோக்கி*** - *(அம்பறாத் தூணியில் உள்ள) அம்புகளைப் பார்த்து;* ***தன் வில்லை நோக்கவும்*** - *தன்னுடைய (தோளிற் கிடந்த) வில்லினை நோக்கிய அளவில்;* ***வேலை வெந்தது*** - *கடல் எரிந்தது.*

*மதியாது கிடந்த கடலின் மேல் வெகுளாது போயின் உலகு பழிக்கும்; அடைக்கல தருமம் ஆபத்தைச் சந்திக்கும், என வெகுண்டான். ஆதலின் "எல்லை நோக்கியும் எய்திலதாம்" எனும் சொல்லை நோக்கிய மானுடன்" என்றார். கல் - மலை. பெருமைக்கும் உயர்வுக்கும் வன்மைக்கும் ஏற்ற உருவகம். இந்தத்*

*தோளும், அம்பும், வில்லும் நோக்கி முடிப்பதற்குள் கடல், வெந்து முடிந்திருந்தது என்பார். "நோக்கவும் வெந்தது வேலையே" என்றார். விரைவுயர்வு நவிற்சியணி யென்பர்.*

***6806. 'தார் உலாம் மணி மார்ப ! நின் தம்பியே,***
***தேர் உலாவு கதிரும், திருந்து தன்***
***பேர் உலாவும் அளவினும், பெற்றனன்,***
***நீர் உலாவும் இலங்கை நெடுந் திரு.***

***தார் உலாம் மணிமார்ப!*** *- மாலைகள் அசையும் மணிமார்பினையுடைய மன்னனே!* ***தேர் உலாவு கதிரும்*** *- தேரிலே உலாவுகின்ற சூரியன் (சஞ்சரிக்கும் அளவும்);* ***திருந்து தன் பேரும் உலாவு அளவினும்*** *- செம்மையான தன் பெயரான இராம நாமம் உலகில் வழங்கும் காலம் வரையும்;* ***நீர் உலாவும் இலங்கை நெடுந் திரு*** *- கடல் நீர் சூழ்ந்த இலங்கை மாநகரத்துப் பெருஞ்செல்வம் முழுவதும்;* ***நின் தம்பியே பெற்றனன்*** *- உன்னுடைய தம்பியாகிய வீடணனே (இராமனால்) கொடுக்கப் பெற்றனன்.*

*பேர் உலாவும் என்ற தொடரில் உம்மையை இடம் மாற்றிப் 'பேரும் உலாவு' எனக் கொள்க, தேர் உலாவு கதிரும் தன் பேரும் என்பன எண்ணும்மைகள். மேலும் வீடணன் அரசுரிமை பெற்றான் என்பதை இராவணனுக்கு அறிவிக்குமாறு இராமபிரான் சொன்னதையும் நினைக.*

***6807. 'சேது பந்தனம் செய்தனன் என்றது இப்***
***போது வந்த புது வலியோ-ஒரு***
***தூது வந்தவன் தோள் வலி சொல்லிய***
***ஏது அந்தம் இலாத இருக்கவே?***

***ஒரு தூது வந்தவன்*** *- தூதாக வந்த ஒருவன் ஆகிய (அனுமனுடைய);* ***தோள்வலி சொல்லிய ஏது*** *- தோள் ஆற்றலைச் சொல்ல வல்ல காரணங்கள்;* ***அந்தம் இலாத இருக்க*** *- எண்ணற்றவை (நாம் தெரிந்து) இருக்க;* ***சேது பந்தனம் செய்தனன் என்றது*** *- இராமன் குரங்குகளைக் கொண்டு, சேதுவுக்கு அணை கட்டிவிட்டான் என்பது;* ***இப்போது வந்த புது வலியோ?*** *- இப்போது தான் புதிதாகச் சேர்ந்த வலிமையாமோ? (முன்பிருந்த வலிமையே என்றவாறு).*

*முன்னே தூதனாக வந்த அனுமன் பலஏதுக்களால் விளக்கித் தெரிவித்த இராமன் தோளாற்றல் இருக்கவும், கடலை அணை கட்டித் தடுத்தான் என்றது கொண்டு, அது அவனுக்கு இப்போது புதிதாக உண்டான வலிமை என்று எண்ணுதல் தகுமோ?" என உரைப்பினுமாம். பந்தனம் -கட்டு. இப்பொருட்கு தூது வந்தவன். அந்தம் இலாத ஏதுக்களால் சொல்லிய தோள் வலி என இயைக்க. ஏது-காரணம்.*

***6808. 'மருந்து தேவர் அருந்திய மாலைவாய்,***
***இருந்த தானவர்தம்மை இரவி முன்***
***பெருந் திண் மாயற்கு உணர்த்திய பெற்றியின்,***
***தெரிந்து காட்டினன், நும்பி சினத்தினான்.***

***தேவர் மருந்து அருந்திய மாலை வாய்*** *- தேவர்கள் அமிழ்தம் உண்ட ஒரு மாலைப்பொழுதில்;* ***இருந்த தானவர் தம்மை*** *-அவர்களிடையே மறைந்திருந்த அசுரர்களை;* ***இரவி முன் பெருந்திண் மாயற்கு*** *- முன்பு, சூரியன் பெருவலிமை வாய்ந்த திருமாலுக்கு;* ***உணர்த்திய பெற்றியின்*** *- (இவர் அசுரர் எனக்) காட்டிக் கொடுத்த தன்மை போல்;* ***நும்பி சினத்தினான்*** *- உன் தம்பியாகிய வீடணன் கோபங் கொண்டவனாய்;* ***தெரிந்து காட்டினான்*** *- குரங்கு வடிவத்திலிருந்த எங்களை வானரர்கட்கு (இவர்கள் அரக்கர் எனக்) காட்டிக்கொடுத்தான்.*

*மருந்து-அமுதம். "சாவா மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று" - (குறள். 82)*

***6809. 'பற்றி, வானர வீரர் பனைக் கையால்,***
***எற்றி எங்களை, ஏண் நெடுந் தோள் இறச்***
***சுற்றி, ஈர்த்து அலைத்து, சுடர்போல் ஒளிர்***
***வெற்றி வீரற்குக் காட்டி, விளம்பினான்.***

***வானர வீரர்*** *- குரங்கின வீரர்கள் உதவியால்;* ***எங்களைப் பனைக்கையால் பற்றி*** *- எங்கள் இருவரையும் பனை மரம் போன்ற கரங்களால் பற்றி;* ***ஏண் நெடுந்தோள் இறச்சுற்றி*** *- பெரிய நீண்ட தோள்கள் முறியுமாறு சுற்றி;* ***ஈர்த்து அலைத்து*** *- இழுத்துச் சுழல விட்டு;* ***சுடர் போல் ஒளிர் வெற்றி வீரற்குக்காட்டி*** *- சூரியன் போல் ஒளிர்கின்ற விசய ராகவனுக்கு எங்களைக் கொண்டு போய்க்காண்பித்து;* ***விளம்பினான்*** *- (நாங்கள் யார் என்று) வீடணன் கூறினான்.*

*பனை - கைகளின் பருமைக்கும் உரத்துக்கும் உவமை.*

***6810. ' "சரங்கள் இங்கு இவற்றால் பண்டு தானுடை***
***வரங்கள் சிந்துவென்" என்றனன்; மற்று எமைக்***
***குரங்கு அலாமை தெரிந்தும், அக் கொற்றவன்***
***இரங்க, உய்ந்தனம்; ஈது எங்கள் ஒற்று' என்றார்.***

***அக்கொற்றவன்*** *- அந்த வெற்றி வீரனாகிய இராமன்;* ***இங்கு சரங்கள் இவற்றால்*** *- இங்குள்ள இந்த அம்புகளினால்;* ***தான் பண்டு உடை வரங்கள் சிந்துவென் என்றனன்*** *- முன்பு இராவணன் பெற்றுள்ள வரங்களையெல்லாம் அழிப்பேன் என்று எம்மிடம்*

*கூறினான்;* ***மற்று*** *- மேலும்;* ***எமை குரங்கு அலாமை தெரிந்தும்*** *- நாங்கள் ஏமாற்றக் குரங்கு வேடம் கொண்டோர் உண்மையில் குரங்குகள் அல்லோம் என்பது தெரிந்தும்;* ***இரங்க உய்ந்தனம்*** *- எங்கள்பால் இராமன் காட்டிய கருணையினால் பிழைத்து வந்தோம்;* ***ஈது எங்கள் ஒற்று என்றார்*** *- இதுவே நாங்கள் ஒற்றறிந்து வந்தது என்று சொன்னார்.*

*தாம் உயிர் பிழைக்கவிட்ட இராமனின் கருணைப் பெருக்கை மறவாமல் அவன் எதிரிமுன் உரைக்கும் மாண்பினைப் போற்றலாம். முன்பு சீதை கூறிய சொற்கள் (5188, 5189) இங்கு நினைக்கத்தகும்.*

***6811. மற்றும் யாவையும், வாய்மைய வானவன்***
***சொற்ற யாவையும் சோர்வு இன்றிச் சொல்லினார்;***
***'குற்றம் யாவையும் கோளொடு நீங்குக !***
***இற்றை நாள் முதல் ஆயு உண்டாக !' என்றார்.***

***மற்றும் யாவையும்*** *- அங்கு நடந்த பிற செய்திகள் யாவற்றையும்;* ***வாய்மைய வானவன்*** *- உண்மையையுடைய தேவனாகிய இராமபிரான்;* ***சொற்ற யாவையும்*** *- (இராவணனிடம் சொல்க எனச்) சொல்லிய யாவற்றையும்;* ***சோர்வின்றிச் சொல்லினார்*** *- மறவாமல் சொன்னார்கள் ஒற்றர்கள்;* ***இற்றை நாள் முதல்*** *- மேலும், இன்றைய நாள் தொடங்கி;* ***கோளொடு குற்றம் யாவையும் நீங்குக*** *- தீமையோடு கூடிய குற்றங்கள் யாவையும் உன்னிடமிருந்து நீங்குவன ஆகுக!* ***ஆயு உண்டாக என்றார்*** *- உன் வாழ்நாள் வளர்வதாகுக என்று வாழ்த்தினர்.*

*சோர்வு -மறதி. தளர்ச்சியுமாம். இராமன் வெகுளும் அளவு தீமை புரிந்துள்ளான் என உணர்ந்த ஒற்றர்கள், இன்று முதல் அக்குற்றங்கள் நீங்குக என்று குறிப்பாக உணர்த்தினர். கோள் - கொள்ளுதல். இராவணன் அழிவனோ என்ற அச்சத்தால் அவனை ஒற்றர் வாழ்த்தியதைப் பாண்டியனின் வாயில் காவலன் பலமுறை வாழ்த்திய சிலப்பதிகாரச் செய்தியோடு ஒப்பிட்டுணர்க.*

*சேனை காவலன் உரை*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***6812. ' "வைதெனக் கொல்லும் விற் கைமானிடர், மகர நீரை***
***நொய்தினின் அடைத்து, மானத் தானையான் நுவன்ற நம் ஊர்***
***எய்தினர்" என்ற போதின் வேறு இனி எண்ண வேண்டும்***

*செய் திறன் உண்டோ?' என்னச் சேனை*
*காப்பாளன் செப்பும்:*

***வைது எனக் கொல்லும்*** *- பெரியோர் இட்ட சாபம் போல் (தப்பாமல் உடனே) கொல்லவல்ல;* ***விற்கை மானிடர்*** *- வில்லைக் கையில் ஏந்திய மனிதர்கள்;* ***மகர நீரை*** *- மகர மீன்கள் உலாவும் கடல் நீரை;* ***நொய்தினின் அடைத்து*** *- எளிதாக அடைத்து;* ***மானத் தானையான்*** *- வீரமிக்க படையோடு;* ***நுவன்ற நம்மூர் எய்தினர்*** *- கூறப்படும் நம் இலங்கை மாநகரை அடைந்து விட்டனர்;* ***என்றபோதின்*** *- என்றாகிவிட்ட இந்தப் பொழுதில்;* ***வேறு இனி எண்ண வேண்டும்*** *- போருக்குப் புறப்படல் அன்றி வேறு இனி நாம் சிந்திக்க வேண்டும்;* ***செய்திறன் உண்டோ*** *- செயல்கள் (எவையேனும்) உள்ளனவோ?* ***என்ன*** *- என்று இராவணன் வினாவ;* ***சேனை காப்பாளன்*** *- சேனைக்குக் காவலன்;* ***செப்பும்*** *- உரைக்கத் தொடங்குவான்.*

*முன்பு (53) சேனை காவலன் உரையாற்றிக் கொண்டிருக்கும்போது இடையே ஒற்றர்கள் வருகை உரைக்கப்பட்டதால் தடைப்பட்ட அவன் உரையைத் தொடர வாய்ப்பளிக்கின்றான் இராவணன் என்க. நாடகபாணியில் கதையினை நடத்திச் செல்லும் கம்பர் பெருமானின் திறத்திற்கு இப்பகுதி மேலும் ஒரு சான்று. அருளில் கூறினும் வெகுளியில் கூறினும் கூறிய பொருளை அப்போதே பயந்துவிடும் (திருக்கு. பரிமே. 28) திறனுடையவை. நிறைமொழி மாந்தர் சொற்கள் ஆதலின், "வைதெனக் கொல்லும் வில்" என்றார். வைதல் - சாபமிடல். "சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்" (388) எனவும், "வைவன முனிவர் சொல் அனைய வாளிகள்" (7841) எனவும், "வைதால் அன வைதாயின வடிவாளி" (7177) எனவும் வில்லின் வேகத்திற்கும், தப்பாமற் சாய்ப்பதற்கும் சான்றோர் சொல்லைக் கவிஞர் உவமையாக்கியிருப்பது காணலாம். "வைதெனக் கொல்லும் விற்கை மானிடர்" என அவனை அறியாமல் உரைத்து விட நேர்ந்தது. ஒற்றர் உரைத்த உரையின் தாக்கம் அவன் உளத்தை நிலை குலையச் செய்ததனால் என்க.*

*6813. 'விட்டனை மாதை என்ற போதினும், "வெருவி, வேந்தன்*
*பட்டது" என்று இகழ்வர் விண்ணோர்; பற்றி, இப் பகையைத் தீர*
*ஒட்டல்ஆம் போரில், ஒன்னார் ஒட்டினும், உம்பி ஒட்டான்;*
*கிட்டிய போது, செய்வது என் இனிக் கிளத்தல் வேண்டும்?*

***மாதை விட்டனை என்றபோதும்*** *- சீதையை விடுதலை செய்தாய் என்றாலும்;* ***வேந்தன் வெருவிப்பட்டது*** *- இலங்கை வேந்தனாகிய இராவணன் பகைவனுக்கு அஞ்சிச் செய்த செயல் (இது)* ***என்று விண்ணோர் இகழ்வர்*** *- என்று கூறி (உன் பகைவர்களான) தேவர்கள் இகழ்ந்து பேசுவர்;* ***பற்றி*** *- அவ்வாறு விடாமல்;*

***இப்பகையைத் தீர*** - *இப்பகைமையைத் தீர்த்துக் கொள்ள;* ***போரின்*** - *போரில்;* ***ஒட்டலாம்*** - *சமாதானமும் செய்து கொள்ளலாம்; (ஆனால்)* ***ஒன்னார் ஒட்டினும்*** - *அதற்குப் பகைவர்கள் உட்பட்டாலும்;* ***உம்பி ஒட்டான்*** - *உன் தம்பியாகிய வீடணன் உடன்படான்;* ***கிட்டிய போது*** - *போர் நெருங்கி வந்துவிட்ட இந்தப் பொழுதில்;* ***செய்வது என்*** - *நாம் செய்யத்தக்கது என்ன (என்று);* ***இனிக் கிளத்தல் வேண்டும்*** - *(வேந்தனாகிய நீயே) எங்கட்கு இனி ஆணையிடல் வேண்டும்.*

***6814. 'ஆண்டுச் சென்று, அரிகளோடும் மனிதரை அமரில் கொன்று,***
***மீண்டு, நம் இருக்கை சேர்தும் என்பது மேற்கொண்டேமேல்,***
***ஈண்டு வந்து இறுத்தார் என்னும் ஈது அலாது, உறுதி, உண்டோ?***
***வேண்டியது எய்தப் பெற்றால், வெற்றியின் விழுமிது அன்றோ?***

***ஆண்டு சென்று*** - *பகைவர் இருக்கும் இடத்திற்கே சென்று;* ***அரிகளோடும் மனிதரை*** - *வானரப்படைகளோடு அம்மானிடர் இருவரையும்;* ***அமரில் கொன்று*** - *போர் செய்து கொன்று;* ***மீண்டு நம் இருக்கை சேர்தும்*** - *மீளவும் நம் இருப்பிடம் சேர்வோம்;* ***என்பது மேற்கொண்டேமேல்*** - *என்று முன்பு முடிவு மேற்கொண்டோமெனின்;* ***ஈண்டு வந்து இறுத்தார்*** - *(இன்று, அப்பகைவர்களே) இங்கு நம்மை நோக்கி வந்தடைந்தார்;* ***என்னும் ஈது அலால் உறுதியுண்டோ?*** - *என்கின்ற இச்செய்தி யல்லால் நமக்கு இப்போது உறுதி தரும் செய்தி உண்டோ?* ***வேண்டியது எய்தப் பெற்றால்*** - *(நாம் வேண்டியது இதுவேயாம்) நாம் விரும்பியதே கிடைக்கப் பெற்றோம். என்றால்; (அது)* ***வெற்றியின் விழுமிது அன்றோ?*** - *நாம் இனிப் பெறவிருக்கும் வெற்றியிலும் சிறந்தது அன்றோ?*

*பகைவர் இருக்குமிடம் நோக்கிச் சென்று தாக்குதல் நடத்திக் கொல்வோம் என்று முன்பு இராவணன் மந்திரப் படலத்தில் (27, 37, 41) பேசப்பட்டது. இப்போது அவர்களே இங்கு வந்துவிட்டார்களென்றால் நமக்கு மிகவும் வசதிதானே? இனிப் போர் செய்து வெல்லவேண்டியது தானே என்பது கருத்து."நெடும் புனலுள் வெல்லும் முதலை, அடும்புனலுள் நீங்கின் அதனைப் பிற" (குறள் 495) என்பவாகலின், நம்மிடம் நோக்கி அவர் வந்துள்ளது நமக்குப் பேருறுதி பயக்கும் என்பான், "ஈண்டு வந்து இறுத்தார் என்னும் ஈது அல்லால் உறுதியுண்டோ?" என்றான். பகைவர்களை நம் எல்லைக்குள் கொண்டுவரல் நமக்கு வெற்றி. அது கிட்டி விட்டது. வெற்றிக்குப் பின் கிட்ட வேண்டிய பயன் இப்போதே கிட்டி விட்டதாதலின் "வெற்றியின் விழுமிது அன்றோ?" என்றான்.*

***6815. 'ஆயிரம் வெள்ளம் ஆன அரக்கர்தம் தானை, ஐய!***

***தேயினும், ஊழி நூறு வேண்டுமால்; சிறுமை என்னோ?***
***நாய்இனம் சீயம் கண்டதாம் என நடப்பது அல்லால்,***
***நீ உருத்து எழுந்த போது, குரங்கு எதிர் நிற்பது உண்டோ?***

***ஐய !*** - *ஐயனே!* ***ஆயிரம் வெள்ளம் ஆன*** - *ஆயிரம் வெள்ளம் என்னும் எண்ணிக்கை கொண்ட;* ***அரக்கர் தம் சேனை*** - *அரக்கர்களுடைய சேனையானது;* **தேயினும் நூறு ஊழிவேண்டும்** - *(பகையால்) அழிவதானாலும் நூற்றுக்கணக்கான ஊழிக் காலங்கள் வேண்டியிருக்கும்;* **சிறுமை என்னே?** - *(அப்படியிருக்கவும்) தாழ்வுணர்ச்சி நமக்கு எதற்காக?* **நீ உருத்து** - *நீ வெகுண்டு;* **எழுந்தபோது** - *(போருக்கு) எழுகின்ற போது;* **நாய் இனம்** - *நாய்களின் கூட்டம்;* ***சீயம் கண்டதாம் என நடப்பது அல்லால்*** - *சிங்கத்தைக் கண்டது என்னுமாறு (திசை கெட்டு) ஓடிச் சிதைவது அன்றி;* ***குரங்கு எதிர் நிற்பது உண்டோ?*** - *இக்குரங்குகள் எதிர் நிற்கும் தரம் உடையனவோ? (இல்லையென்றபடி)*

*வெள்ளம் - படையளவு குறிக்கும் பேரெண். இதன் விளக்கத்தினை 3831 ஆம் பாடல் உரையில் காண்க. அரக்கர் சேனை ஆயிரம் வெள்ளம் கொண்டது என்பது இதனால் புலப்படும். வானரச் சேனை எழுபது வெள்ளம் மட்டுமே கொண்டது என்பது. வெள்ளம் ஏழு பத்து உள (3831) "எழுபது வெள்ளம் சேனை வானரர்" (10235) என்பதனால் அறிக,. அரக்கர் படை அழிந்தது என்று வைத்துக்கொண்டாலும் யுகங்கள் நூற்றுக்கணக்காக ஆகும். இந்த ஆயிரம் வெள்ளமும் அழிய, நூற்றுக்கணக்கான யுகங்கள் ஆகும் எனப் படையின் பெருமையும் வீரமும் ஒருங்கே சுட்டுவான், "தேயினும் ஊழி நூறு வேண்டும்" என்றான். இக்கணக்கை வீடணன் இராம பிரானுக்கு மொழிவதும் காண்க. சிங்கம் நாய் இனத்தோடு போரிடத் தேவையில்லை. சிங்கம் எழுவதே அவை சிதறி ஓடப்போதுமானது என்பான். "நீ உருத்து எழுந்த போது குரங்கு எதிர் நிற்பது உண்டோ?" என்றான்.*

***6816. 'வந்தவர் தானையோடு மறிந்து, மாக் கடலில் வீழ்ந்து,***
***சிந்தினர் இரிந்து போக, சேனையும் யானும் சென்று,***
***வெந் தொழில் புரியுமாறு காணுதி; விடை ஈக!' என்னா,***
***இந்திரன் முதுகு கண்ட இராவணற்கு ஏயச் சொன்னான்.***

**வந்தவர்** - *(நம்மை எதிர்த்துப் போரிட) வந்தவர்களாகிய இராம இலக்குவர்;* **தானையோடு மறிந்து** - *(அவர்களின்) வானரப்படையோடு திரும்பி;* **மாக்கடலில் வீழ்ந்து** - *பெரிய கடலில் விழுந்து;* **சிந்தினர் இரிந்து போக** - *சிதறுண்டு அஞ்சி*

*ஓடும்படி;* ***சேனையும் யானும் சென்று*** *- நம் சேனையும் நானும் ஆகப் போய்;* ***வெந்தொழில் புரியுமாறு காணுதி*** *- கடுமையான போர்ச் செயல்கள் செய்யுமாறு காண்பாயாக;* ***விடை ஈக*** *- விடை தந்தருள்க;* ***என்னா*** *- என்று;* ***இந்திரன் முதுகு கண்ட இராவணற்கு*** *- தேவர் தலைவனாகிய இந்திரனைப் புறமுதுகிட்டு ஓடும்படி களங்கண்ட இராவணனுக்கு;* ***ஏயச் சொன்னான்*** *- பொருந்துமாறு (சேனைத்தலைவன் பிரகத்தன்) கூறினான்.*

*சிந்தினர் - முற்றெச்சம். என்னா - என்று. செய்யா என்னும் எச்சம். இந்திரனைப் புறமுதுகு கண்டவன் இராவணன்: அமரர் கணத்தொடும் அடர்ந்த போர்த்தானை இந்திரனைப் பொருது அவனைப் போர் தொலைத்து வேர்த்தான் (2834) எனவும், "மீளா நிறத்து ஆயிரங் கண்ணவன் விண்ணின் ஓட வாளால் ஒறுத்தான்" (3432) எனவும் வருதல் காண்க. இடிப்பாரை யில்லாத ஏமரா (குறள் 448) மன்னன் இராவணன் ஆதலின், அவனுக்கு இனிப்பானவற்றையே சொல்லுகின்றான் படைத்தலைவன் என்பார். "இராவணற்கு ஏயச் சொன்னான்" என்றார்.*

*மாலியவான் பேச்சு*

***6817. மதி நெறி அறிவு சான்ற மாலியவான், 'நல் வாய்மை***
***பொது நெறி நிலையது ஆகப் புணர்த்துதல்***
***புலமைத்து 'என்னா,***
***'விதி நெறி நிலையது ஆக விளம்புகின்றோரும்,***
***மீண்டு***
***செது நெறி நிலையினாரே' என்பது தெரியச்***
***சொல்லும்:***

***மதி நெறி அறிவு சான்ற மாலியவான்*** *- யாவராலும் மதிக்கத்தக்க அறநெறியிற் செல்லும் அறிவு நிறைந்த மாலியவான்;* ***நல்வாய்மை*** *- சிறந்த சத்திய வாசுங்கள்;* ***பொது நெறி நிலையது*** *- உலகிற்குப் பொதுப்படக் கூறியுள்ளவை;* ***ஆகப் புணர்த்துதல் புலமைத்து*** *- (ஆனாலும்) (அவற்றை) தம் வாழ்விற்கேற்குமாறு கூட்டிப் பயன்கொள்ளுதலே அறிவுடைய வழி;* ***என்னா*** *- என்று எண்ணி;* ***விதி நெறி நிலையது*** *- விதிவழியால் பகைவர்கள் அழிய எதிர் நிற்பது;* ***ஆக விளம்புகின்றோரும்*** *- என்று விளம்புகின்ற பிரகத்தன் முதலியோரும்;* ***ஈண்டுச் செது நெறி நிலையினோரே என்பது தெரியச் சொல்லும்*** *- இங்கு அழியும் நெறியில் (செல்ல) நிற்பவரே என்பதனை (இராவணனுக்கு) விளங்குமாறு சொல்லத் தொடங்குவான்.*

*சேற்றிற் பிறந்த செந்தாமரை போன்று, இலங்கையில் அறம் உரைக்கும் திறம் வாய்ந்தவன் என மதிக்கத்தக்க அறிவு சான்றவன் ஆதலின், "மதி நெறி அறிவு சான்ற மாலியவான்" என்றார். ஆகப் புணர்த்துதல் - நமக்கு' ஆகுமாறு கூட்டிக்*

*கொள்ளுதல். புலமைத்து - அறிவின் பாலது. செதுத்தல் - சிதைவுறல், அழிதல், செத்தை என்பதும் காண்க.*

***6818. ' "பூசற்கு முயன்று நம்பால், பொரு திரைப் புணரி வேலித்***
***தேசத்துக்கு இறைவன் ஆன தெசரதன் சிறுவனாக,***
***மாசு அற்ற சோதி வெள்ளத்து உச்சியின் வரம்பில் தோன்றும்***
***ஈசற்கும் ஈசன் வந்தான்" என்பதோர் வார்த்தை இட்டார்.***

***மாசு அற்ற சோதி வெள்ளத்து*** *- களங்கம் அற்ற தூய ஒளி வெள்ளத்தின்;* ***உச்சியின் வரம்பில் தோன்றும்*** *- பரம பதம் எனும் பெருவெளியின் எல்லையில் காட்சிப் படுபவனாகிய;* ***ஈசற்கும் ஈசன்*** *- தெய்வத்திற்கெல்லாம் தெய்வமாகிய முழுமுதற் கடவுளே;* ***பொருதிரைப் புணரிவேலி*** *- தரையினை ஓயாது தாக்குகின்ற அலைகளையுடைய கடலினை எல்லையாகவுடைய;* ***தேசத்துக்கு இறைவன் ஆன தெசரதன் சிறுவனாக*** *- பூமிக்குத் தலைவனான தசரதன் மைந்தனாக;* ***பூசற்கு முயன்று வந்தான்*** *- நம்முடன் போரிட முயன்று (அவதாரம் எடுத்து) வந்துள்ளான்;* ***என்பது ஓர் வார்த்தை இட்டார்*** *- என்கின்ற ஒரு வார்த்தையை (பலரும்) பேசிக் கொள்கின்றனர்.*

*தசரதன் என்பது மோனையின்பத்திற்காகத் தெசரதன் என வந்தது. பரமபதத்தின் நாயகன் ஒரு சிறுவனாய்ப் பிறந்துள்ளது நம்மைப் போரிட்டு அழிப்பதற்காக என்று பேசிக் கொள்கிறார்கள். சிந்திப்பது உன் கடன் என அறிவுறுத்துகின்றான் மாலியவான். பிரபஞ்ச வெளியில் உன் இலங்கைத் தீவு ஒரு சிறு புள்ளியாம் என்று சொல்லாமற் சொல்லிச் சிந்திக்க வைக்கின்ற திறம் காண்க. கர்ம பூமிபோலே தமியாயிருக்கையன்றிக்கே தெளிவிடும்பாயிருக்கை" (ஸ்ரீ வைகுண்ட கத்யம். சூரணை: 3) யாகையாகிய பரம பதத்தை "மாசற்ற சோதி வெள்ளம்" என்றார். நித்திய விபூதியெனப்படும் பரமபதம், "ஆத்மாவையும் அறிவையும் போலே தானே பிரகாசிப்பது. அதனால், சுயம்பிரகாசம், ஞானமயம், அஜடம்" (யதீந்திர மததீபிகை - காரிகாவளி, நித்யவி, பிர்.) எனப்படுவதால் அதனை, "மாசற்ற சோதி" என்றார் எனினுமாம். அந்த நித்ய விபூதியில் ஸ்ரீ வைகுண்டம் என்னும் பெயருள்ளதொரு பெரிய திவ்யநகரம் பன்னிரண்டு ஆவரணங்களாலே (மதில்கள்) சூழப்பெற்றதாய் விளங்குகின்றது. அதன் உச்சியில் உள்ள திருவோலக்க மண்டபத்தில் இறைவன் கொலுவீற்றுள்ளான் (மேற்படி நூல்: பகச 14) என்பது பற்றி, "சோதி வெள்ளத்து உச்சியின் வரம்பில் வைகும் ஈசற்கும் ஈசன்" என்றார் எனினுமாம். கவந்தன் வாயிலாய் (3686) இப்பரம பதமாட்சியைக் கவிஞர் பிரான் உரைத்துள்ளதும் ஒப்பு நோக்கல் ஆகும். ஈசற்கும் ஈசன் - தேவாதி தேவன்.*

***6819. 'அன்னவற்கு இளவல்தன்னை, "அரு மறை, 'பரம்'***

***என்று ஓதும்***
***நல் நிலை நின்று தீர்ந்து, நவை இலா***
***உயிர்கள்தோறும்***
***தொல் நிலை பிரிந்தான் என்னப் பல வகை நின்ற***
***தூயோன்***
***இன் அணை" என்ன யாரும் இயம்புவர்; ஏது யாதோ?***

***அன்னவற்கு இளவல் தன்னை*** *- அந்தத் தசரத குமாரனாகிய இராமனின் தம்பியாகிய இலக்குவன்;* ***அருமறை*** *- உணர்தற்கரிய வேதங்கள்யாவும்;* ***பரம் என்று ஓதும் நன்னிலை நின்று தீர்ந்து*** *- பரத்துவம் என்று சிறப்பித்துச் சொல்லும் அந்த உயர்கதியிருந்து நீங்கி;* ***நவையிலா உயிர்கள்*** *- குற்றமற்ற உயிர்கள் யாவற்றின் உள்ளும்;* ***தொல் நிலை பிரிந்தான் என்ன*** *- தனது பழமையான பரத்துவ நிலையிலிருந்து மாறுபட்டுவிட்டான் என்று;* ***பலவகை நின்றதூ யோன்*** *- கூறுமாறு பல்வேறு வகையாக அவதரித்து நின்ற தூய்மை மாறாதவன் (ஆகிய பரம்பொருளின்);* ***இன் அணை என்ன*** *- இனிய படுக்கையாகிய (ஆதி சேடன் என்று);* ***யாரும் இயம்புவர்*** *- எல்லோரும் கூறுவர்;* ***ஏது யாதோ?*** *- இதன் காரணம் என்னவோ?*

*இறைவனின் ஐந்து நிலைகளுள் பரம், வியூகம், விபவம் (அவதாரம்), அந்தர்யாமித்துவம், அர்ச்சை என ஓதப்படுமவற்றுள் முதல் நிலை பரத்துவம் ஆதலின், "அருமறை பரம் என்று ஓதும் நன்னிலை" என்றார். வினையின் "நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" (தொல். மரபி. 83) இறைவன் ஆதலின், அவன் எத்தகைய பிறவியெடுப்பினும் அப்பிறவிக்குரிய மாசுகள் அவனைப் பற்றா; ஆனால், உலகினரின் கண்ணுக்கு அவ்வாற்றல் புலப்படாது போய், கன்ம வயப்பட்டவன் போல் தோன்றுவன் என்பது தோன்ற, "தொன்னிலை பிரிந்தான் என்ன உயிர்கள் தோறும் பலவகை நின்ற தூயோன்" என்றார். "தொன்னிலை பிரிந்தான் என்ன நின்ற தூயோன்" என்பதனாலேயே தொல்நிலை பிரியாமை பெறப்பட்டது. ஆத்மாவிற்கு இன்பதுன்பங்கள் இல்லாமல் இருக்கவும், இச்சரீரத்தினுடைய சேர்க்கையால் அவை உண்டாகின்றன. அப்படி இறைவனுக்கும் இச்சரீரச் சேர்க்கையால் இன்பதுன்பங்கள் கூடாவோ எனின் கூடா. அதற்குக் காரணம் உட்புகுவதற்கு உளதாய காரண விசேடம். ஆத்மா கர்மமடியாகப் பிரவேசிக்கின்றது. இறைவன் இவற்றுக்குள் திருவருள் காரணமாகப் பிரவேசிக்கின்றான். சிறைக்கூடத்தில் சிறையனும் கிடந்தான்; அரச குமாரனும் கிடந்தான்;சிறையன் கர்மமடியாகப் பிரவேசிக்கையாலே துக்கத்திற்கு ஏதுவாயிற்று; அரசகுமாரன் இச்சையாலே பிரவேசிக்கையாலே போகரூபமாய் இருந்தது" (திருவாய் ஈடு. 3: 4: 10;) எனும் நம்பிள்ளையின் அரிய உரை இங்கு கருதத்தக்கது.*

***6820. ' "அவ்வவர்க்கு அமைந்த வில்லும், குல வரை***
***அவற்றின் ஆன்ற***
***வெவ் வலி வேறு வாங்கி, விரிஞ்சனே விதித்த,***
***மேல்நாள்;***

***செவ் வழி நாணும், சேடன்; தெரி கணை ஆகச்***
***செய்த***
***கவ்வு அயில், கால நேமிக் கணக்கையும் கடந்தது"***
***என்பார்.***

**அவ்வவர்க்கு** - *அந்த இராம இலக்குவர்க்கு;* **அமைந்த வில்லும்** - *பொருந்திய விற்படைகளும்;* **குலவரை அவற்றின் ஆன்ற** - *சிறந்த மலைகளின் கண் உள்ள;* **வெவ்வலிவேறு வாங்கி** - *கொடிய வன்மையைத் தனியாகப் பிரித்தெடுத்து;* **விரிஞ்சனே மேல் நாள் விதித்த** - *நான்முகனே முன்பு செய்தமைத்தன;* **செவ்வழி நாணும் சேடன்** - *அவ்வில்லில் நேரிய நெறியிற் கட்டப்பட்ட நாண் கயிறும் ஆதிசேடன்;* **தெரிகணை ஆகச் செய்த** - *ஆய்ந்தெடுத்த அம்பாகச் செய்யப்பட்ட;* **கவ்வு அயில்** - *கவ்வும் தன்மையுள்ள கூரிய முனையும்;* **கால நேமிக் கணக்கையும் கடந்தது** - *காலச்சக்கரத்தின் கணிக்கும் தன்மையையும் மீறியது;* **என்பார்** - *என்று மொழிவர்.*

*குலவரை - சிறந்த மலை. குலம் சிறப்புக் குறித்து நின்றது. அவற்றின் வலிமையை மட்டும் பிரித்தெடுத்துச் செய்யப்பட்டன. இருவர் விற்களும் என்பது கருத்து. "துளக்கலாகா நிலையும் தோற்றமும்" (நன். பொதும்) மலைக்குரியன வாதலின், இருவர் வில்லும் அத்தகைய ஆற்றல் உடையனவாயின. அயில் - அம்பின்கூர் முனை. காலநேமி - காலசக்கரம். காலச்சக்கரம் தடையற்று எவ்விடத்தும் ஊடுருவிச் செல்வது போன்று, அவர்தம் அம்பு முனையும் எங்கும் எவர்மாட்டும் தடையின்றிப் பிளந்து செல்லும் என்பான், "காலநேமிக் கணக்கையும் கடந்தது" என்றான். கால நேமி என்பது, எதிர்த்தார்க்கு இறுதியைக் காட்ட வல்ல திருமாலின் சுதர்சனச் சக்கரத்தைக் குறித்தது எனினுமாம்.*

***6821. ' "வாலி மா மகன் வந்தானை, "வானவர்க்கு***
***இறைவன்" என்றார்;***
***நீலனை, "உலகம் உண்ணும் நெருப்பினுக்கு அரசன்"***
***என்றார்;***
***காலனை ஒக்கும் தூதன், "காற்று எனும் கடவுள்"***
***என்றார்;***
***மேலும் ஒன்று உரைத்தார், "அன்னான் விரிஞ்சன்***
***ஆம், இனிமேல்" என்றார்.***

**மா வாலி மகன் வந்தானை** - *பெருமை பொருந்திய வாலிக்கு மகனாகப் பிறந்த அங்கதனை;* **வானவர்க்கு இறைவன் என்றார்** - *வானத்துத் தேவர்கள் தலைவனான இந்திரன் என்றார்கள்;* **நீலனை உலகம் உண்ணும் நெருப்பினுக்கு அரசன் என்றார்** - *நீலனை, ஊழிக்காலத்தே உலகத்தை அழிக்கும் தீக்கடவுளின் மகன் என்றார்கள்;* **காலனை ஒக்கும் தூதன்** - *(எதிர்ப்பார்க்கு) யமனைப் போன்ற தூதனாகிய அநுமனை;* **காற்றெனும் கடவுள் என்றார்** - *காற்றுக் கடவுள் ஆகிய வாயு தேவனே என்றார்கள்;* **மேலும் ஒன்று உரைத்தார்** - *(அவனைக் குறித்து) மேலும் ஒன்று சொன்னார்கள்;*

***அன்னான் இனிமேல் விரிஞ்சன்ஆம் என்றார்*** - *அவ்வனுமன் இனிவரும் பிறப்பில் பிரமதேவன் ஆவான் என்றும் சொன்னார்கள்.*

***6822. ' "அப் பதம் அவனுக்கு ஈந்தான், அரக்கர்***
***வேர் அறுப்பதாக***
***இப் பதி எய்தினான் அவ் இராமன்" என்று எவரும்***
***சொன்னார்;***
***ஒப்பினால் உரைக்கின்றாரோ? உண்மையை***
***உணர்த்தினாரோ?***
***செப்பி என்? "குரங்காய் வந்தார் தனித் தனி***
***தேவர்" என்றார்.***

***அப்பதம்*** - *அந்தப் பிரம பதவியை;* ***அவனுக்கு ஈந்தான் அவ் இராமன்*** - *அந்த அநுமனுக்குத் தந்தவன் ஆகிய இராமபிரான்;* ***ரக்கர் வேர் அறுப்பதாக*** - *அரக்கர்களை வேரொடு அழிப்பதற்காக;* ***இப்பதி எய்தினான்*** - *இந்த இலங்கையை (இப்போது) அடைந்துள்ளான்;* ***என்று எவரும் சொன்னார்*** - *என்று எல்லோரும் இயம்புகின்றனர்;* ***ஒப்பினால் உரைக்கின்றாரோ?*** - *அவ்வாறு அவர்கள், வெறும் ஒப்புக்காக உரைக்கின்றார்களோ?* ***உண்மையே உணர்த்தினாரோ?*** - *அன்றி, உண்மையைத் தான் உணர்த்துகின்றார்களோ?* ***குரங்காய் வந்தார்*** - *வானரங்களாக வடிவெடுத்து வந்தவர்கள்;* ***தனித்தனி தேவர் என்றார்*** - *ஒவ்வொருவரும் ஒவ்வொரு தேவர்கள் என்கின்றார்கள்;* ***செப்பி என்?*** - *(இவற்றையெல்லாம்) (இப்போது) சொல்லி என்ன பயன்?*

*"விரிஞ்சனாம் இனிமேல்" என மேற்பாடலில் குறித்த பிரமபதத்தை, "அப்பதம்" என்று அநுவதித்தார்; பிரமபதம் இராமனால் அளிக்கப்படும் என்பதனை, உத்தர காண்ட அநுமப் படலத்தில் பிரமனும் உரைப்பான்:*

***"வன்னிய சகாய நின்மைந்தன் வையத்தோர்க்கும்***

***வானோர்க்கும்***

***இன்னல் செய்யும் இராவணன்தன் இலங்கை நகரை***

***எரியூட்டி,***

***மன்னன் இராமன் மனம் உவப்ப வயவாள்அரக்கர்***

***குலம் அறுத்துப்***

***பின்னை அவன்தன் பேர்அருளால் பிரமபதமும்***

***பெறும் என்றான்"***

***(உத்தர. அநுமப் : 40)*** *அரக்கர்களை அழிப்பதற்காக, அனுமனுக்குப் பிரமபதம் கொடுத்த பரமபதநாதனே இராமனாகப் பிறந்து இலங்கை நோக்கி வந்துள்ளான் என்பதனை, உன்னையொழிய எல்லோரும் உணர்ந்துள்ளனர் என்பான், "எவரும் சொன்னார்" என்றான்.*

***6823. 'ஆயது தெரிந்தோ? தங்கள் அச்சமோ?***
***அறிவோ?-யார்க்கும்***
***சேயவள்; எளியள் என்னா, சிந்தையின் இகழல்***
***அம்மா!-***
***"தூயவள் அமிர்தினோடும் தோன்றினாள்"என்றும்,***
***"தோன்றாத்***
***தாய் அவள், உலகுக்கு எல்லாம்" என்பதும்***
***சாற்றுகின்றார்.***

***ஆய் அது தெரிந்தோ ?*** *- (இவ்வாறு உலகோர்) ஆராய்ந்து அறிந்து கூறுகின்றார்களோ?* ***தங்கள் அச்சமோ?*** *- அன்றித் தங்கள் அச்சம் காரணமாகக் கூறுகின்றார்களோ?;* ***அறிவோ?*** *- அறிவால் அறிந்து கூறுகின்றார்களோ? (எவ்வாறாயினும்);* ***தூயவள்*** *- இராமனின் மனைவியாகிய அத்தூய சீதை;* ***அமிழ்தினோடும் தோன்றினாள் என்றும்*** *- கடல் கடைகையில் அமுதோடு தோன்றிய திருமகளாவாள்;* ***உலகுக்கு எல்லாம்*** *- உலகங்கள் அனைத்துக்கும்;* ***தோன்றாத் தாய் அவள்*** *- கண்ணுக்குத் தோன்றாத அன்னை ஆவாள் அவளே;* ***யார்க்கும் சேயவள்*** *- உலகோர் யாவருக்கும் எட்டாப் பரமபதத்தில் வாழும் பெரிய பிராட்டி அவள் ஆவாள்;* ***எளியள் என்னா*** *- (நம் கண்ணுக்குப் புலப்பவதால்) எளியவள் என்று;* ***சிந்தையின் இகழல்*** *- மனத்தால் இகழற்க;* ***என்பதும் சாற்றுகின்றார்*** *- என்றும் உரைக்கின்றார்கள்.*

*பிறக்கும் போதே மணத்தோடு தோன்றும் துழாய் என்பது போல, தோன்றும் போதே பிராட்டி அமிழ்தோடு தோன்றினாள் என்பார், "தூயவள் அமிழ்தினோடுந் தோன்றினாள்" என்றார். இப்பாடல், பூட்டுவிற் பொருள் கோளாம். "ஆயது தெரிந்தோ?" என்பதற்கு, முற்பாடலில் குறிப்பிட்டுள்ளபடி, தேவர்கள் யாவரும் வானரர் "ஆயது தெரிந்தோ?" எனவும் உரைக்கலாம்.*

***6824. ' "கானிடை வந்ததேயும் வானவர் கடாவவே ஆம்;***
***மீனுடை அகழி வேலை விலங்கல்மேல் இலங்கை***
***வேந்தன் தானுடை வரத்தை எண்ணி, தருமத்தின்***
***தலைவர்தாமே***

***மானுட வடிவம் கொண்டார்" என்பது ஓர் வார்த்தை இட்டார்.***

***கான் இடை வந்தவாறும்*** - *(அந்த இராமபிரான்) வனத்திற்கு வந்த விதமும்;* ***வானவர் கடாவவே ஆம்*** - *தேவர்களின் உந்துதலினாலே யாம்;* ***மீன் உடை வேலை விலங்கல் மேல் அகழி*** - *மீன்களையுடைய கடலை அகழியாகக் கொண்ட திரிகோண மலையின் மேல் அமைந்த;* ***இலங்கை வேந்தன்*** - *இலங்கை நகரின் வேந்தனாகிய இராவணன்;* ***தான் உடை வரத்தையெண்ணி*** - *தான் அடைந்துள்ள வரத்தினைக் கருதி;* ***தருமத்தின் தலைவர் தாமே*** - *அறத்தின் நாயகனான பரம் பொருளே;* ***மானுட வடிவம் கொண்டார்*** - *மானிட வடிவத்தை ஏற்று (இராமனாக) வந்துள்ளார்;* ***என்பது ஓர் வார்த்தை இட்டார்*** - *என்பதான ஒரு மொழியையும் சொன்னார்கள்.*

*விலங்கல்-மலை.*

***6825. ' "ஆயிரம் உற்பாதங்கள் ஈங்கு வந்து அடுத்த" என்றார்;***
***"தாயினும் உயிர்க்கு நல்லாள் இருந்துழி அறிய, தக்கோன்***
***ஏயின தூதன் எற்ற, பற்று விட்டு, இலங்கைத் தெய்வம்***
***போயினது" என்றும் சொன்னார்; "புகுந்தது, போரும்" என்றார்.***

***ஈங்கு*** - *இவ்விலங்கை நகருக்கு;* ***ஆயிரம் உற்பாதங்கள்*** - *ஆயிரமாயிரம் கெடுகுறிகள்;* ***வந்து அடுத்த என்றார்*** - *வந்து நிகழ்ந்துள்ளன என்றார்கள்;* ***தாயினும் உயிர்க்கு நல்லாள்*** - *அன்னையைக் காட்டிலும் உயிர்க்குலத்துக்கு அன்பு செய்யும் நல்லவளாகிய சீதை;* ***இருந்துழி அறிய*** - *இருக்கும் இடத்தை யறிந்து கொள்ள;* ***தக்கோன்*** - *தகுதியில் சிறந்த இராமபிரான்;* ***ஏயின தூதன்*** - *அனுப்பிய தூதனாம் அனுமன்;* ***எற்ற*** - *தாக்கியதனால்;* ***பற்று விட்டு*** - *காவல் தொழிலை நீத்து;* ***இலங்கைத் தெய்வம் போயினது*** - *இலங்கையின் காவல் தெய்வமாகிய இலங்கிணியும் (இலங்கையை விட்டு) நீங்கி விட்டாள்;* ***என்றும் சொன்னார்*** - *என்பதும் உரைத்தார்கள்;* ***"புகுந்தது போரும் என்றார்"*** - *யுத்தம் (இலங்கைக்குள்) (அனுமன் வடிவில்) நுழைந்து விட்டது என்றும் சொன்னார்கள்.*

*உலகத்தாய் உயிர்கட்கு, ஒரு பிறப்புக்கே அன்பு காட்டுவாள்; பிராட்டி பிறவி தோறும் அன்பு காட்டிப் பேணும் பெருந்தாயாம் உலோகமாதா ஆதலின் "தாயினும் உயிர்க்கு நல்லாள்" எனப்பட்டாள்.*

***6826. ' "அம்பினுக்கு இலக்கம் ஆவார் அரசொடும் அரக்கர் என்ன,***
***நம் பரத்து அடங்கும் மெய்யன், நாவினில் பொய் இலாதான்,***
***உம்பர் மந்திரிக்கும் மேலா ஒரு முழம் உயர்ந்த ஞானத்***
***தம்பியே சாற்றிப் போனான்" என்பதும் சமையச் சொன்னார்.***

***நம் பரத்து அடங்கும் மெய்யன்*** - *உடம்பால் நம் இனத்தைச் சார்ந்தவனும்;* ***நாவினில் பொய் இலாதான்*** - *(ஆனால், நம் நிலைக்கு மாறாக) நாவால் பொய்யே உரையாதவனும்;* ***உம்பர் மந்திரிக்கும் மேலா*** - *தேவர்களின் அமைச்சனான பிருகற்பதியைக் காட்டிலும் மேலாக;* ***ஒரு முழம் உயர்ந்த*** - *ஒரு முழம் உயர்ந்தவனும் ஆன;* ***ஞானத் தம்பியே*** - *(உன்) ஞானத் தம்பியாகிய வீடணனே;* ***அரசொடும் அரக்கர்*** - *அரசாளும் (இராவணனாகிய) உன்னோடும் சேர்ந்து (எல்லா) அரக்கர்களும்;* ***அம்பினுக்கு இலக்கம் ஆவார் என்ன*** - *(இராமபிரானின்) கணைகளுக்கு இலக்காகி அழிவார்கள் என்று;* ***சாற்றிப் போனான்*** - *உரைத்து வெளியேறினான்;* ***என்பதும் சமையச் சொன்னார்*** - *என்னும் செய்தியையும் பொருந்தக் கூறினார்கள்.*

*பரம் - சார்பு, இனம். உடம்பால் நம் இனத்தவன் ஆயினும், நாவிலும் ஞானத்திலும் நமக்கு அப்பாற்பட்டவன் வீடணன் என்பது குறிப்பு. தேவர்க்கு அமைச்சனும் குலகுருவுமான பிருகற்பதி எனப்படும் வியாழபகவான் கல்விக்கும் ஞானத்திற்கும் அதிபதி என்பது சோதிட நூல் துணிபு. அத்தகைய வியாழ பகவானிலும் ஒரு முழம் உயர்ந்த ஞானமுடையவன் வீடணன் என்று வீடணனின் கல்வியும் ஞானமும் கவிஞர் பிரானால் உச்சப்படுத்தப்படும் திறம் ஓர்க. அறவாழியந்தணனைச் சார்ந்த வீடணனின் ஞானம் ஞானத்தின் அதிபதியின் ஞானத்தைக் காட்டிலும் மேல் உயர்ந்தது என்பது கவிஞர் பிரானின் துணிபு. எப்படி யளந்தாலும் வீடணன் ஞானம் ஞானாதிபதியுடையதைக் காட்டிலும் ஒரு முழம் உயர்ந்தே இருக்கும் என்று வழக்காறுபட மொழிந்தார்.*

***6827. 'ஈது எலாம் உணர்ந்தேன் யானும்; என் குலம் இறுதி உற்றது***
***ஆதியின் இவனால் என்றும், உன்தன்மேல் அன்பினாலும்,***
***வேதனை நெஞ்சின் எய்த, வெம்பி, யான் விளைவ சொன்னேன்;***
***சீதையை விடுதிஆயின், தீரும் இத் தீமை' என்றான்.***

***ஈது எலாம் யானும் உணர்ந்தேன்*** - இவ்வாறு பிறர் கூறிய யாவற்றையும் நான் அறிந்தேன் (ஆதலாலும்); ***இவனால்*** - இத்திருமாலால்; ***என் குலம் ஆதியில் இறுதி உற்றது என்றும்*** - என்னுடைய அரக்கர் குலம் அழிவுற்றது என்ற காரணத்தாலும்; ***உன் தன்மேல் அன்பினாலும்*** - உன்மேல் நான் கொண்டுள்ள அன்பின் காரணத்தாலும்; ***நெஞ்சின் வேதனை எய்த*** - என் மனத்தில் எழுந்த துன்பத்தால்; ***வெம்பியான் விளைவ சொன்னேன்*** - (கொதித்து) வெதும்பி இனி விளையவுள்ளவற்றை நான் (உனக்குச்) சொன்னேன்; ***சீதையை விடுதியாயின்*** - பிராட்டியைச் சிறையிலிருந்தும் விட்டு விட்டாயானால்; ***இச்சிறுமை தீரும்*** - உனக்கினி நிகழவுள்ள அத்தனை துன்பங்களும் விலகிவிடும்; ***என்றான்...*** - என்று கூறி முடித்தான் (மாலியவான்).

*சீதையைச் சிறை வைத்திருப்பது, உன் போன்ற மாமன் புரிய உரிய செயல் அன்று; சிறிய செயல் என்பான். "தீரும் இச்சிறுமை" என்றான். சிறிய செயல்கள் துன்பமே நல்குமாதலின் சிறுமை துன்பத்தையும் குறித்து நின்றது.*

*மாலியவான் அறிவுரையை இராவணன் இகழ்தல்*

***6828. 'மற்று எலாம் நிற்க, அந்த மனிதர் வானரங்கள், வானில்***
***இற்றை நாள் அளவும் நின்ற இமையவர் என்னும்***
***தன்மை சொற்றவாறு அன்றியேயும், "தோற்றி நீ" என்றும் சொன்னாய்;***
***கற்றவா நன்று! போ' என்று, இனையன கழறலுற்றான்:***

***மற்று எலாம் நிற்க*** - (நீ உரைத்தவற்றுள்) மற்றைய செய்திகள் எல்லாம் (ஒருபுறம்) இருக்கட்டும்; ***அந்த மனிதர், வானரங்கள்*** - (என்னை நோக்கி) அந்த இராம லக்குவர், குரங்குகள்; ***வானில் இற்றை நாள் அளவும்*** - வானுலகில் இன்று வரையிலும்; ***நின்ற இமையவர்*** - (என்னை எதிர்க்க இயலாது பணிந்து) நின்ற தேவர்கள்; ***என்னும் தன்மை*** - என்னும் (இவர்களின்) இயல்புகளைச்; ***சொற்றவாறு அன்றியேயும்*** - சொன்னதோடு நிற்காமல்; ***"நீ தோற்றி*** - "நீ தோற்பாய்" ***என்றும் சொன்னாய்*** - என்றும் கூறினாய்; ***கற்றவா நன்று போ!*** - நீ கற்றுள்ள அரசியல் நூல்களின் திறம் நன்று போ! ***என்று இனையன கூறல் உற்றான்*** - (மேலும்) இத்தகைய மொழிகளைக் கூறத் தொடங்கினான்.

*தேவர், மானுடர், வானரங்கள் ஆகியோர் தன்மைகளை மாலியவான் கூறியதைக் கேட்டுச் சகித்த இராவணன், "நீ தோற்பாய்" என்று கூறிய சொற்களுக்கு மட்டும் பொறுக்கமுடியாதவன் ஆனான் என்பது கருத்து. "என்னும் தன்மை" என்பதன் இடையே "இவர்கள்" எனும் சொல் பொருட்சிறப்புக் கருதி வருவிக்கப்பட்டது. "கற்றவா நன்று போ!" என்பது கவிஞர் பெருமான் உயிராற்றலோடு உரையாடல்களை அமைக்குத் திறத்திற்கு மேலும் ஒரு சான்றாய் நின்றது.*

*6829.* ***'பேதை மானிடவரோடு குரங்கு அல, பிறவே ஆக,***
***பூதல வரைப்பின் நாகர் புரத்தின் அப் புறத்தது ஆக,***
***காது வெஞ் செரு வேட்டு, என்னைக் காந்தினர்***
***கலந்த போதும்,***
***சீதைதன் திறத்தின்ஆயின், அமரத் தொழில்***
***திறம்புவேனோ?***

**பேதை மானிடவரோடு** - *அறிவற்ற மனிதர்களுடனே;* **குரங்கு அல** - *குரங்கினங்கள் மட்டும் அல்ல;* **பிறவே ஆக** - *வேறு உயிர்கள் எல்லாம் (ஒன்று கூடினும்) கூடட்டும்;* **பூதல வரைப்பின்** - *இம்மண்ணுலக எல்லை;* **நாகர் புரத்தின்** - *(ஆகட்டும்) நாகர் உலகம் (ஆகட்டும்) இவற்றிற்கு;* **அப்புறத்தது ஆக** - *அப்பாற்பட்ட வானுலகமே தான் ஆகட்டும்;* **காது வெம் செருவேட்டு** - *அழிக்கும் கடும்போரினை விரும்பி;* **காந்தினர்** - *மனக்கொதிப்புடையவராய்;* **என்னைக் கலந்தபோதும்** - *என்னை என் பகைவர்கள் நெருங்கின போதும்;* ***சீதை தன் திறத்தின்*** - *(அப்போர்) சீதையைப் பெறும் பொருட்டாக என்றால்;* ***அமரத் தொழில் திறம்புவேனோ?*** - *போர் இடுவதிலிருந்தும் பின் வாங்குவேனோ? (வாங்கேன்!).*

*தன் திறம் உணராது என்னை எதிர்க்க வந்துளர் ஆதலின் இராமலக்குவரைப் "பேதை மானிடவர்" என்றான். திறம்புதல் - பின்னிடுதல். காந்துதல்-நெஞ்சு கொதித்தல்.*

*6830.* ***'ஒன்று அல, பகழி, என் கைக்கு உரியன; உலகம்***
***எல்லாம்***
***வென்றன; ஒருவன் செய்த வினையினும் வலிய;***
***"வெம் போர்***
***முன் தருக" என்ற தேவர் முதுகு புக்கு அமரில்***
***முன்னம்***
***சென்றன; இன்று வந்த குரங்கின்மேல்***
***செல்கலாவோ?***

***என் கைக்கு உரியன*** - *என் கரங்களில் உலவுகின்றனவும்;* ***உலகம் எல்லாம் வென்றன*** - *உலகங்கள் யாவையும் வென்று தீர்த்தனவும்;* ***ஒருவன் செய்த வினையினும் வலிய*** - *(தப்பாமல் தாக்குவதில்) ஒருவன் புரிந்த வினைகளை விட வலிமை வாய்ந்தனவும்;* **முன் வெம்போர் தருக என்ற தேவர்** - *(என்) முன் வந்து போர் தருக என்று எதிர்நின்ற தேவர்கள்;* **முதுகு புக்கு -** *(பின்னிட்டு ஓடுமாறு) முதுகுகளில் ஊடுருவி;* **அமரில் முன்னம் சென்றன** - *போர்க்களத்தில் அவர்களின் முன்னே சென்றனவுமாகிய;* **ஒன்று அல பகழி** - *ஒன்றல்லாத மிகப் பலவான அம்புகள்;* **இன்று**

***வந்த குரங்கின்மேல்*** - *இப்போது வந்துள்ள குரங்குகளின் மேல்;* ***செல்கலாவோ?*** - *செல்லும் வலிமையற்றன ஆகி விடுமோ? (விடா.)*

***6831. 'சூலம் ஏய் தடக் கை அண்ணல்தானும், ஓர் குரங்காய்த் தோன்றி***
***ஏலுமேல், இடைவது அல்லால், என் செய வல்லன் என்னை? வேலை நீர் கடைந்த மேல்நாள், உலகு எலாம் வெருவ வந்த***
***ஆலமோ விழுங்க, என் கை அயில் முகப் பகழி? அம்மா!****

***சூலம் ஏய் தடக்கை அண்ணல் தானும்*** - *சூலம் என்னும் படைக்கருவியை ஏந்தியுள்ள அகன்ற கரமுடைய பெருமைக்குரிய சிவபெருமானும்;* ***ஓர் குரங்காய்த் தோன்றி*** - *ஒரு குரங்காய்த் தோற்றமுற்றும்;* ***ஏலுமேல்*** - *(என்னோடு) போரில் எதிர்த்து நிற்பான் எனில்;* ***இடைவது அல்லால்*** - *(எனக்கு) பின்னிடுவானே அல்லாமல்;* ***என்னை என் செய வல்லான்?*** - *என்னை என்ன செய்துவிட வல்லவன்?* ***என் கையில் அயில் முகப் பகழி விழுங்க*** - *என் கரத்தினில் உள்ள கூர்முகமுடைய அம்புகள் (அச்சிவபிரான் எளிதில்) விழுங்கி விடுவதற்கு;* ***வேலை நீர் கடைந்த மேல்நாள்*** - *கடல் நீரைக் கடைந்த முன்னாளில்;* ***உலகு எலாம் வெருவ வந்த*** - *உலகம் யாவையும் அஞ்சி நடுங்குமாறு அக்கடலில் தோன்றிய;* ***ஆலமோ?*** - *நஞ்சோ? (இல்லை என்றபடி).*

*நஞ்சோ?-ஓகாரம் எதிர்மறை. முத்தலைச் சூலம். அண்ணல் - தலைமைக்குரிய சிறப்பினன். சிவபிரானை அண்ணல் எனச் சுட்டுவதால், கவிஞர் பிரானின் சமய சமரசப்பேருள்ளம் புலனாம். நான் வழிபட்டுயர்ந்த சிவனே குரங்காய் வந்திருந்தாலும், நான் பெற்றுள்ள வரத்தால் யார் என்னை என்ன செய்து விட முடியும்? எனக் கேட்கும் இராவணனின் இக்கூற்றால், அவன் ஆணவத்தின் கொடுமுடியில் ஏறியமர்ந்துள்ளமை கூறப்பட்டது.*

***6832. 'அறிகிலை போலும், ஐய! அமர் எனக்கு அஞ்சிப் போன***
***எறி சுடர் நேமியான் வந்து எதிர்ப்பினும், என் கை வாளி***
***பொறி பட, சுடர்கள் தீயப் போவன; போக்கிலாத***
***மறி கடல் கடைய, வந்த மணிகொலாம், மார்பில் பூண?***

***ஐய!*** - *ஐயனே!* ***அமர் எனக்கு அஞ்சிப்போன*** - *போரில் (என் முன் நிற்க இயலாது) அஞ்சி ஓடிய;* ***சுடர் எறி நேமியான்*** - *ஒளி வீசுகின்ற சக்கரப் படையை ஏந்தியவனான*

*திருமாலே;* **வந்து எதிர்ப்பினும்** *- (எனக்கு எதிர் நின்று) தாக்கினும்;* **என் கை வாளி பொறிபட** *- என் கரங்களில் உள்ள அம்புகள் தீப்பொறிகளைச் சிந்தியவாறு;* **சுடர்கள் தீய** *- (ஞாயிறு, திங்கள், தீ) எனும் முச்சுடர்களும் கரிந்து போகுமாறு;* **போவன** *- ஏகவல்லன; (அவ்வம்புகள்)* **மறிகடல் கடைய** *- அலைகின்ற கடலைக் கடையும்போது;* **போக்கிலாத வந்த மணி கொல் ஆம்?** *- போகும் இடம் அறியாமல் (திருமால்மார்பினை வந்தடைந்த கௌத்துவ) மணியாகுமோ? (ஆகாது);* **அறிகிலை போலும்** *- இதனை நீ அறியாய் போலும்!*

*"நேமியானே வந்து எதிர்ப்பினும்" என வரவேண்டிய தேற்றேகாரம் மறைந்து நின்றதால் விரிக்கப் பெற்றது. "போக்கு அறு பனுவல்" (தொல். பாயிரம்) என்பதில், போக்கு குற்றம் எனும் பொருளில் வந்துள்ளது. நேமி - ஆழிப்படை, சக்கரம். மார்பில் பூணவாளி மணியன்று என்பதனால் அது மார்பைப் பிளக்கும் என்பது குறிப்பு. திருமால், புறமுதுகிட்டதாக இராவணன் முன்பும் (6182, 6186) உரைத்துள்ளான்.*

***6833. 'கொற்றவன், இமையோர் கோமான், குரக்கினது உருவம் கொண்டால்,***
***அற்றை நாள், அவன்தான் விட்ட அயிற்படை அறுத்து மாற்ற,***
***இற்ற வான் சிறைய ஆகி விழுந்து, மேல் எழுந்து வீங்காப்***
***பொற்றை மால் வரைகளோ, என் புய நெடும் பொருப்பும்? அம்மா!'***

**கொற்ற வாள் இமையோர் கோமான்** *- வெற்றியைக் கொண்ட வாள் ஏந்தும் தேவர்தலைவனான இந்திரன்;* **குரக்கினது உருவம் கொண்டால்** *- குரங்கினுடைய வடிவம் கொண்டுள்ளான் என்றால்;* **அற்றை நாள்** *- (மலைகளின் சிறகுகளை அரியத் தொடங்கிய) அக்காலத்தில்;* **அவன் விட்ட** *- அவ் இந்திரன் விடுத்த;* **அயிற் படை** *- கூரிய வச்சிராயுதம்;* **அறுத்து மாற்ற** *- அறுத்து வேறாக்கியதால்;* **வான் இற்ற சிறைய ஆகி** *- வானில் (பறப்பதற்கு இயலாத) ஒடிந்த சிறகுகளையுடையனவாகி;* **விழுந்து** *- கீழே வீழ்ந்து;* **மேல் எழுந்து வீங்கா** *- மேல் கிளம்பிப் பறக்க இயலாத;* **மால் பொற்றை வரைகளோ** *- பெருமைக்குரிய சிறு குன்றுகளோ;* **என்புய நெடும் பொருப்பும்?** *- என்னுடைய தோள்களாகிய பெருமலைகளும்?*
*மலைகளுக்கெல்லாம் இருந்த சிறகுகளை இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அடித்து அழித்தான் என்பது புராணச் செய்தி. பொற்றை - சிறுகுன்றுகள். மால்வரை - பெருமைக்குரிய மலைகள். பெருமை இகழ்ச்சிக் குறிப்பாயிற்று. இந்திரன் வச்சிரத்தால் அடித்து வீழ்த்த என் புயமலைகள் அன்றைய பொற்றைக் கற்கள் அல்ல; பெருமலைகள் என்பான். "புயநெடும் பொருப்பும்" என்றான். மாலியவான் கூறிய கருத்துக்களின் சாரத்தை யெல்லாம் வாங்கி ஒன்று விடாமல் ஆணித்தரமாக, நெற்றியில் அறைந்தாற்போல் ஆணவ உச்சியில் அமைந்துள்ள இராவணனை விடைதர வைத்துள்ள கவிஞர் பிரானின் உரையாட்டுத் திறம் வியக்க வைப்பது.*

*'அடித்தவுடன் வீழ, என் தோள்கள் என்ன பொத்தை மலைகளா?" எனக் கேட்டு, இராவணன் தோள்கள் மலையினும் வலியன என உணர்த்தியவாறு*

*கதிரவன் தோற்றம்*

***6834. உள்ளமே தூது செல்ல, உயிர் அனார் உறையுள் நாடும்***
***கள்ளம் ஆர் மகளிர் சோர, நேமிப்புள் கவற்சி நீங்க,***
***கொள்ளை பூண்டு அமரர் வைகும் குன்றையும் கோட்டில் கொண்ட***
***வெள்ள நீர் வடிந்தது என்ன, வீங்கு இருள் விடிந்தது அன்றே.***

**உள்ளமே தூது செல்ல** - *மனமே தூதுப் பொருளாகச் செல்ல;* **உயிர் அனார் உறையுள் நாடும்** - *(தம்) உயிரை ஒத்த காதலரின் இருப்பிடம் நோக்கிச் செல்கின்ற;* **கள்ளம் ஆர் மகளிர் சோர** - *வஞ்சனை மிக்க (நெறி பிறழும் பெண்டிர் உள்ளம் வருந்தவும்;* **நேமிப்புள் கவற்சி நீங்க** - *(பகலில் அணையும்) சக்கரவாகப் பறவைகள் கவலை நீங்கவும்;* **கொள்ளை பூண்டு** - *மிகுதியாக நிறைந்து;* **அமரர் வைகும்** - *தேவர்கள் வசிக்கின்ற;* **குன்றையும்** - *மேருமலையையும்;* **கோட்டில் கொண்ட** - *உச்சிக்கோடு வரையிலும் மூடி நிற்கின்ற;* **வெள்ள நீர் வடிந்தது என்ன** - *வெள்ளமானது நீர் வடிந்தாற் போன்று;* **விலங்கு இருள் விடிந்தது** - *(உலகில்) பொங்கிப் பருத்திருந்த இருட்டு அகன்றது.*

*மேருமலையினையும் மூடி நின்ற ஒரு கறுப்பு வெள்ளம் மெல்ல வடிந்தது போல இருள் விடிந்தது என அழகுறக் கற்பித்தார். வான் முகடு வரையும் இருள் நிறைவதால், வான் முட்ட நிற்கும் மேருமலையின் உச்சியை மறைத்திருந்த இலங்கையைச் சூழ்ந்துள்ள இராவண ஆட்சியின் இருளும், பிராட்டியின் துயரக் கொடுமுடியாம் சோக இருளும் விடிய இருப்பதைக் குறிப்பால் குறிப்பித்தவாறுமாம்.*

***6835. இன்னது ஓர் தன்மைத்து ஆம் என்று எட்டியும் பார்க்க அஞ்சி,***
***பொன் மதில் புறத்து நாளும் போகின்றான்,-'போர் மேற்கொண்டு***
***மன்னவர்க்கு அரசன் வந்தான்; வலியமால்' என்று, தானும்***
***தொல் நகர் காண்பான் போல,-கதிரவன் தோற்றம் செய்தான்.***

**இன்னது ஓர் தன்மைத்து ஆம்** - *(இலங்கை) இத்தகைய ஒரு தன்மையினை உடையது ஆகும்;* **என்று எட்டியும் பார்க்க அஞ்சி** - *என்று எட்டிப் பார்க்கவும் பயந்து (அதன்);* **பொன் மதில் புறத்து நாளும் போகின்றான் கதிரவன்** - *பொன்மயமான மதிலின் வெளியிலேயே நாள்தோறும் செல்பவனாகிய சூரியன்; - (இப்போது)* **போர் மேல் கொண்டு -** *போரை ஏற்றுக்கொண்டு;* **மன்னவர்க்கு அரசன் வந்தான்** - *அரசர்க்கு அரசனான இராமபிரான் வந்தனன்;* **வலியம் என்று** - *(ஆதலால்) நாம் வலிமை பெற்று விட்டோம் என்று;* **தானும் தொல் நகர் காண்பான் போலத் தோற்றம் செய்தான்** - *தானும் பழைய அந்த இலங்கை மாநகரைக் காண விரும்பியவன் போலக் (கீழ்வானில்) உதித்தான்.*

*தற்குறிப்பேற்ற அணி. புவியியல் அமைப்பால், இலங்கையின் உச்சிமேல் கதிரவன் இயங்காமையுணர்ந்த கவிஞர்பிரான், இராவணன் கொடுங்கோன்மைக்கு அஞ்சி இலங்கை மாநகரின் உட்செல்ல அஞ்சி, மதிற்புறத்தே கதிரவன் உலவ நேர்ந்தது எனத் தற்குறிப்பினை ஏற்றிக் காண்பித்தார். இப்போது, அறத்தின் நாயகனான இராமபிரான் இலங்கையின் தலைவாயிலில் படையோடு நிற்கும் வலிமை கண்டு, தானும் துணிவு பெற்று, இலங்கையின் உள் நுழைந்து எட்டிப் பார்க்கும் துணிச்சலோடு தோன்றுவான் போலத் தோன்றினான். இலங்கையில் கதிரவன் இயங்காமை (4855) முன்பும் (7014) பின்பும் கூறப்படும். "இருசுடர் இயங்காப் பெருமூதிலங்கை" எனப் புறத்திரட்டும் இப்பெருமை புகலும். "பகலவன் மீது இயங்காமைக் காத்த பதி வீரன்" (2. 10. 11) என இராவணன் இலங்கையின் இப்புகழ் தேவாரத்தினும் பேசப்படும்.*

## இலங்கை காண் படலம்

இராமபிரான் தான் தங்கியிருந்த சுவேல மலையின் உச்சி மீது, தன் பரிவாரங்களுடன் ஏறிநின்று, இலங்கை மாநகரைக் கண்ணுறுகின்றான். அம்மாநகரின் அழகும் பொலிவும், வளமும், வாழ்வும் பெருமானின் நெஞ்சை வியக்க வைக்கின்றன. வியப்பில் எழுந்த உரைகள், இலக்குவனுக்குக் கூறுவதாய் அமைந்து அழகிய வர்ணனைக் கவிதைகளாய் இப்படலத்தில் வடிவம் பெற்றுள்ளன.

*இராமன் பரிவாரங்களுடன் சுவேல மலைமேல் ஏறுதல்.*

**6836. அருந்ததி அனைய நங்கை அவ்வழி இருந்தாள்
என்று
பொருந்திய காதல் தூண்ட, பொன் நகர் காண்பான்
போல,
பெருந் துணை வீரர் சுற்ற, தம்பியும் பின்பு செல்ல,
இருந்த மால் மலையின் உச்சி ஏறினன் இராமன்,**

**இப்பால்.**

**அருந்ததி அனைய நங்கை** - அருந்ததி போன்ற கற்புடையாள் ஆகிய சீதா தேவி; **அவ்வழி இருந்தாள் என்று** - அந்த இலங்கையில் உள்ளாள் என்பது பற்றி; **பொருந்திய காதல் தூண்ட** - (உள்ளத்தே) பதிந்துள்ள காதல் தூண்டியதால்; **பொன் நகர் காண்பான் போல** - அழகிய இலங்கை மாநகரினைப் பார்க்க எழுந்தவன் போன்று; **பெருந்துணை வீரர் சுற்ற** - தனக்குப் பெருமைக்குரிய துணைவராய் இலங்கும் சுக்கிரீவன், வீடணன் ஆகிய இருவரும் இருபுறமும் செல்ல; **தம்பியும் பின்பு செல்ல** - தன் (அருமைத்) தம்பியாகிய இலக்குவனும் பின்னே வர; **இருந்த மால் வரையின் உச்சி இராமன் ஏறினன்** - தான் தங்கியிருந்த பெருமலையாகிய சுவேல மலையின் உச்சியை நோக்கி இராமபிரான் ஏறினான். **இப்பால்** - இதன் பின்னர்....

இச்செய்யுள் குளகம் அடுத்து வரும் கவிகளோடு கருத்து முடியும். காதலுக்கு உரியாரைக் காண இயலாக் காலத்து, அவர் இருக்கும் இடமும் காணற்கு உரியதாய் ஆவல் தூண்டுமாதலின், "காதல்தூண்டப் பொன்னகர் காண்பான்" என்றார்.

**6837. செரு மலி வீரர் எல்லாம் சேர்ந்தனர் மருங்கு
செல்ல,
இரு திறல் வேந்தர் தாங்கும் இணை நெடுங் கமலக்
கையான்.
பொரு வலி வய வெஞ் சீயம் யாவையும் புலியும்
சுற்ற,
அரு வரை இவர்வது ஆங்கு ஓர் அரிஅரசு
அனையன் ஆனான்.**

***செருமலிவீரர் எல்லாம்*** - போர்புரியும் தன்மையுடைய வீரர் யாவரும்; ***சேர்ந்தனர் மருங்கு செல்ல*** - திரண்டு பக்கத்தே செல்ல; ***இருதிறல் வேந்தர்*** - இரண்டு திறமை வாய்ந்த சுக்கிரீவன், வீடணன் என்ற அரசர்க்கரசர்; ***தாங்கும்*** - பற்றி தாங்கிச் செல்லும்; ***இணை நெடும் கமலக் கையான்*** - இரண்டான நீண்ட செந்தாமரையனைய கைகளையுடைய இராமபிரான்; ***பொருவலி வயவெஞ்சீயம்*** - போரிடும் வலிமை வாய்ந்த திறல் மிக்க கொடிய சிங்கம் ஒன்று; ***யானையும் புலியும் சுற்ற*** - யானைகளும் புலிகளும் சுற்றிவர; ***ஓர் அரி அரசு*** - ஒப்பற்றதொரு இராச சிங்கம்; ***அருவரை இவர்வது அனையன் ஆனான்*** - அரிய குன்று ஒன்றின் மேல் ஏறுவது போன்றவன் ஆனான்.

*இந்தப் பாடலில் வரும் உவமைக் காட்சியைத் திரிசடை கனவுபற்றிய பாடலொடு (5118) இணைத்துக் காண்க.*

***6838. கதம் மிகுந்து இரைத்துப் பொங்கும் கனை கடல் உலகம் எல்லாம்***
***புதைவு செய் இருளின் பொங்கும் அரக்கர்தம் புரமும்,பொற்பும்,***
***சிதைவு செய் குறியைக் காட்டி, வட திசைச் சிகரக் குன்றின்,***
***உதயம்அது ஒழியத் தோன்றும், ஒரு கரு ஞாயிறு ஒத்தான்.***

***கதம் மிகுந்து*** - சினம் ஏறி; ***இரைத்துப் பொங்கும்*** - அலையொலித்துப் பொங்குகின்ற; ***கனைகடல் உலகம் எல்லாம்*** - ஆர்ப்பொலி மிக்க கடல் சூழ்ந்த உலகம் யாவும்; ***புதைவு செய் இருளின் பொங்கும் அரக்கர்தம்*** - தனதகத்தே அழுந்தி மறையுமாறு செய்யும் இருளைப்போலே (பாவமாகிய இருளால்) பொங்கி (உலகை அழிக்க உள்ள) அரக்கர்களுடைய; ***புரமும் பொற்பும்*** - நகராகிய இலங்கையும் அதன் அழகும்; ***சிதைவு செய்குறியைக் காட்டி*** - அழியப் போகின்ற அடையாளத்தைக் காண்பித்து; ***உதயமது ஒழிய*** - உதயகிரிச் சிகரத்திலே உதிப்பதை நீக்கி; ***வடதிசைச் சிகரத்தின்*** - வடதிசைக்கண் உள்ள ஒரு மலைச்சிகரத்தில்; ***தோன்றும் கரு ஞாயிறு ஒத்தான்*** - உதிக்கின்ற ஒரு கரிய சூரியனைப் போன்றவன் ஆனான் (இராமபிரான்).

*கதிரவன் உதய காலத்தே, சுவேலமலைமேல் நின்ற இராமபிரானை, வடக்கே உதித்த கரு ஞாயிறு என வருணித்தார். கருஞாயிறு இராமனுக்கு உவமை. "கட்டார்சிலைக் கருஞாயிறு புரைவான்" (9406); "கண்தாமரை போல் கருஞாயிறு என" (2610)" செந்தண் கமலக்கண் சிவந்த வாயோர் கருஞாயிறு, அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்தது. ஒக்கும் அம்மானே!" (திருவாய்: 8: 5: 7) என வருவன காண்க. உதயமது அது பகுதிப் பொருள் விகுதி. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

***6839. துமிலத் திண் செருவின் வாளிப் பெரு மழை சொரியத் தோன்றும்***
***விமலத் திண் சிலையன், ஆண்டு ஓர் வெற்பினை மேய வீரன்,***
***அமலத் திண் கரமும் காலும் வதனமும் கண்ணும் ஆன,***
***கமலத் திண்காடு பூத்த காள மா மேகம் ஒத்தான்.***

**துமிலத் திண்செருவின்** - *பேர்ஒலியுடன் எழும் வலிய போரில்;* **வாளிப் பெருமழை** - *அம்புகளாகிய பெரியமழை;* **சொரியத் தோன்றும்** - *பொழியுமாறு தோன்றும்;* **விமலத் திண்சிலையன்** - *மாசற்ற திண்ணிய வில்லை ஏந்தியவனாகி;* **ஆண்டு ஓர் வெற்பினை மேயவீரன்** - *அங்கே ஒரு மலையை யடைந்தவனாகிய இராமபிரான்;* **அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணும் ஆன** - *தூய்மை பொருந்திய திருக்கைகளும், திருவடிகளும், திருமுகமும் திருக்கண்களும் ஆன;* **கமலத் திண்காடு பூத்த** - *வளமான தாமரைக்காடு பூத்துக் கிடக்கிற;* **காளமாமேகம் ஒத்தான்** - *கரிய பெரிய காளமேகம் போன்றவன் ஆனான்.*

*துமிலம் - பேரொலி, ஆரவாரம். தாமரைக்காடு அனையான் இராமன். ஒப்பு: (திருவாய்: 8: 5: 1). நீல மேனியிடை செந்நிற உறுப்புகள் இயைந்து பொலிவதைப் புலப்படுத்தும் இப்பாடல் படிமம். கம்பரைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது; அவர் போற்றிய படிமத்துக்கு மூலம் ஆழ்வார் அருளிச் செயலே.*

***6840. மல் குவடு அனைய திண் தோள் மானவன், வானத்து ஓங்கும்***
***கல் குவடு அடுக்கி வாரிக் கடலினைக் கடந்த, காட்சி***
***நல் குவடு அனைய, வீரர் ஈட்டத்தின் நடுவண் நின்றான்.***
***பொன் குவட்டு இடையே தோன்றும் மரகதக் குன்றம் போன்றான்.***

**வானத்து ஓங்கி கல் குவடு அடுக்கி** - *ஆகாயத்தளவு உயர்ந்த கல்மலைகளை யடுக்கி;* **வாரி கடலினைக் கடந்த** - *நீர் வருகையையுடைய கடலினைக் கடந்த;* **நல்குவடு அனைய காட்சி வீரர்** - *நல்ல மலைகளை ஒத்தவராய்க் காட்சி தரும் வானர வீரர்களின்;* **ஈட்டத்தின் நடுவண் நின்றான்** - *கூட்டத்தில் நின்றவனான;* **மல்குவடு திண்தோள்** - *வலிய சிகரத்தை ஒத்த திண்ணிய தோள்களையுடைய;* **மானவன்** - *மனுக்குலத்தில் தோன்றிய இராமபிரான்;* **பொன்குவடு இடையே தோன்றும்** - *பொன் மலைகளின் நடுவே காணப்படும்;* **மரகதக் குன்றம் போன்றான்** - *மரகத மலையைப் போன்று விளங்கினான்.*

*கற்குவடுகளைச் சுமந்த அவர்கள் தோள்கள் பொற்குவடுகள் ஆயின, அப்பொற்குவடுகளுக்கிடையே மரகதமலையென இராமபிரான் நின்றான் என்பதாம். "எப்பொருளும் தானாய் மரகதக் குன்றம் ஒக்கும்" (திருவாய் : 2: 5: 4); "வள்ளலே! மதுசூதனா! மரகத மலையே! (திருவாய் : 2: 6: 4) என நம்மாழ்வார் மரகத மலை எனப் பரவுதல் இங்கு நினைவு கூரத் தகும்.*

*இராமன், இலங்கையின் சிறப்பை இளவலுக்குக் காட்டிக் கூறுதல்.*

***6841. அணை நெடுங் கடலில் தோன்ற, ஆறிய சீற்றத்து ஐயன்,***
***பிணை நெடுங் கண்ணி என்னும் இன்னுயிர் பிரிந்த பின்னை, துணை பிரிந்து அயரும் அன்றிற் சேவலின் துளங்குகின்றான்,***
***இணை நெடுங் கமலக் கண்ணால் இலங்கையை எய்தக் கண்டான்.***

***பிணை நெடுங்கண்ணி என்னும்** - பெண்மானைப் போன்ற நீண்ட கண்களையுடைய சீதை என்கின்ற; **இன்னுயிர் பிரிந்த பின்னை** - இனிய (தன்) உயிரைப் பிரிந்த பிறகு; **துணை பிரிந்து அயரும் அன்றில் சேவலின் துளங்குகின்றான்** - துணையைப் பிரிந்து வாடும் ஆண் அன்றில் பறவை போல மனம் கலங்கியவனாய்; **நெடுங்கடலில் அணைதோன்ற** - நீண்டகடலில் அணை (கட்டப்பட்டுத்) தோற்றம் தருதலால்; **ஆறிய சீற்றத்து ஐயன்** - தணிந்த கோபத்தை யுடையவனான இராமபிரான்; **நெடு இணைக் கமலக் கண்ணால்** - நீண்ட இரு தாமரைக் கண்களாலும்; **இலங்கையை எய்தக் கண்டான்** - இலங்கை மாநகரை நன்றாக நோக்கினான்.*

*பிராட்டியைப் பெற நெடுங்கடல் குறுக்கே தடையாய்க் கிடப்பதால் எழுந்த சினம், அதற்கு அணை கட்டிய பின், பிராட்டியை அடைய வழி கிட்டிவிட்டதென ஆறத் தொடங்கியதால், "அணை தோன்ற ஆறிய சீற்றத்து ஐயன்" என்றார். கடலுக்கு அணையிட வழி செய்யாததால் வருணன் மேல் எழுந்த சீற்றம், இப்போது வடிந்துள்ளது என்க. பிராட்டி இராமபிரானின் இன்னுயிர் என்று இக்காவியத்தின் பல இடங்களில் வரும். (4020, 5305, 5306, 3474)*

***6842. 'நம் திரு நகரே ஆதி வேறு உள நகர்கட்கு எல்லாம் வந்த பேர் உவமை கூறி வழுத்துவான் அமைந்த காலை,***
***இந்திரன் இருக்கை என்பர்; இலங்கையை எடுத்துக் காட்டார்***

***அந்தரம் உணர்தல் தேற்றார்; அருங் கவிப் புலவர் அம்மா!***

***அருங்கவிப் புலவர்*** - *(இராமபிரான் இலக்குவனை நோக்கி) (தம்பீ!) அரிய கவிதைகளைப் பாடவல்ல புலவர்கள் (எல்லாம்);* ***நம்திரு நகரே ஆதி வேறு உள நகர்கட்கு எல்லாம்*** - *நம் அழகிய அயோத்தி முதலான உலகில் உள்ள பிற நகரங்கள் யாவற்றிற்கும்;* ***வந்த பேர் உவமை கூறி வழுத்துவான் அமைந்த காலை*** - *உள்ளத்தில் எழுந்த உவமைகளைச் சொல்லிப் புகழத் தொடங்கிய பொழுது (எல்லாம்);* ***இந்திரன் இருக்கை என்பார்*** - *(உவமைப்பொருள் ஆக) தேவர் தலைவனாகிய இந்திரனின் இருப்பிடமான அமராவதி நகர் என்பார்கள்;* ***இலங்கையை எடுத்துக்காட்டார்*** - *(அதனினும் உயர்ந்த) (இந்த) இலங்கை மாநகரை உவமைப் பொருளாக எடுத்துக் காட்டமாட்டார்கள்;* ***அந்தரம் உணர்தல் தேற்றார்*** - *(அந்த அமராவதி நகருக்கும் இந்த இலங்கை மாநகருக்கும் உள்ள) வேறுபாட்டை அப்புலவர்கள் உணரும் தெளிவுடையார் அல்லர் (போலும்!).*

*பேர் உவமை - உவமேயத்தைக் காட்டிலும் உயர்ந்த உவமை. "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" (தொல். உவம. 3) அந்தரம் - வேறுபாடு. புலவர் இலங்கைக்கும் அமராவதிக்கும் வேறுபாடு தெரியின், நம்திருநகரே யாதி வேறு உள நகர்கட்கெல்லாம் இந்திர இருக்கையாகிய அமராவதியை உவமிப்பதை விடுத்து, இந்த இலங்கை நகரத்தையோ எடுத்துக்காட்டுவர் என்பது கருத்து.*

***6843. 'பழுது அற விளங்கும் செம் பொன் தலத்திடைப் பரிதி நாண***
***முழுது எரி மணியின் செய்து முடிந்தன, முனைவராலும்***
***எழுத அருந் தகைய ஆய, மாளிகை இசையச் செய்த***
***தொழில் தெரிகிலவால், தங்கண் சுடர் நெடுங்***

***கற்றை சுற்ற.*** ***பழுது அறவிளங்கும் செம்பொன் தலத்திடை*** - *குற்றமின்றி ஒளிரும் சிவந்த பொன்னினால் ஆன நிலத்தில்;* ***பரிதி நாண*** - *சூரியனும் நாணமுறும்படி;* ***முழுது எரிமணியின் செய்து முடிந்தன*** - *முற்றிலும் ஒளிர்கின்ற இரத்தினங்களால் செய்து முடிக்கப் பெற்றனவும்;* ***முனைவராலும் எழுதருந்தகைய மாளிகை*** - *முதிர்ந்த அறிவினராலும் வரைவதற்கு இயலாத மாளிகைகளில்;* ***இசையச் செய்த தொழில்*** - *பொருந்துறச் செய்துள்ள வேலைப்பாடுகள்;* ***தங்கண் சுடர் நெடுங்கற்றை சுற்ற -*** *அவற்றிலுள்ள (எரிமணிகளின்) ஒளிவீச்சு பார்ப்பார் விழிகளைக் கூசச் செய்வதனால்;* ***தெரிகில*** - *கட்புலன் ஆகவில்லை.*

*"பொன் கொண்டிழைத்த? மணியைக் கொடு பொதிந்த? என் கொண்டிழைத்த எனத்தெரிகிலாத" (கம்ப. 4835) என்பார் முன்னும்.*

***6844. 'விரிகின்ற கதிர ஆகி, மிளிர்கின்ற மணிகள் வீச,***
***சொரிகின்ற சுடரின் சும்மை விசும்புறத் தொடரும்***
***தோற்றம்***
***அரி வென்ற வெற்றி ஆற்றல் மாருதி அமைத்த***
***தீயால்***
***எரிகின்றதாயே காண், இக் கொடி நகர் இருந்தது***
***இன்னும்!***

***விரிகின்ற கதிர ஆகி*** - *பரந்து வீசுகின்ற கிரணங்களை யுடையனவாய்;* ***மிளிர்கின்ற மணிகள் வீச*** - *விளங்குகின்ற நவமணிகள் ஒளி வீசுவதனால்;* ***சொரிகின்ற சுடரின் சும்மை*** - *பொழிகின்ற ஒளித்தொகுதி;* ***விசும்புறத் தொடரும் தோற்றம்*** - *வானளாவித் தொடர்ந்து நிற்கின்ற தோற்றமானது;* ***அரிவென்ற வெற்றி ஆற்றல் மாருதி*** - *பகைமையை வென்று தீர்க்கும் வெற்றித் திறனுடைய அநுமான் ஆனவன்;* ***அமைத்த தீயால்*** - *(தன் வாலால்) இட்ட தீயால்;* ***இக்கொடி நகர் இன்னும் எரிகின்றதாயே*** - *இந்தக் கொடிகள் சூழும் இலங்கை மாநகர் இப்போதும் எரிந்து கொண்டிருப்பது போலவே;* ***இருந்தது காண்*** - *இருப்பதைப் பார்ப்பாயாக.*

*மணிகள் சிந்தும் ஒளித்தொகுதி, இலங்கை அனுமன் இட்ட தீயால் இன்னும் எரிந்து கொண்டிருப்பது போன்றே தோற்றம் அளித்ததாகக் கற்பித்தார்.*

***6845. 'மாசு அடை பரந்த மான மரகதத் தலத்து வைத்த***
***காசு அடை சமைந்த மாடம், கதிர் நிறக் கற்றை***
***சுற்ற,***
***ஆசு அறக் குயின்ற வெள்ளி அகல் மனை அன்னம்***
***ஆக,***
***பாசடைப் பொய்கை பூத்த பங்கயம் நிகர்ப்ப,***
***பாராய்!***

***மாசு அடை*** - *அழுக்கு நுழையாமல் அடைக்கப் பெற்ற;* ***பரந்தமான மரகதத்தலத்து வைத்த*** - *விரிந்து சிறந்த மரகதத் தலத்தில் கட்டப்பட்ட;* ***காசு அடை சமைந்தமாடம்*** - *பொன்னால் நெடுக வேயப்பட்ட மாடங்கள்;* ***கதிர் நிறக் கற்றைசுற்ற*** - *சூரியனுடைய மை போன்ற ஒளிக்கற்றைகள் சூழுமாறு அமைய;* ***ஆசு அறக் குயின்ற*** - *குற்றம் நீங்க அமைக்கப்பெற்ற;* ***வெள்ளி அகல்மனை*** - *வெள்ளியால் அமைந்த விரிந்த மனைகள்; அன்னம்* ***ஆக*** - *அன்னம் போன்று ஒளிர;* ***பாசு அடைப் பொய்கை*** - *பசிய இலைகள் பரவிய பொய்கைகளில்;* ***பூத்த பங்கயம் நிகர்ப்ப பாராய்!*** - *பூத்துக் கிடக்கிற தாமரை மலர்களைப் போன்றிலங்குவதைப் பாராய்!*

*காசு-காரிய ஆகுபெயராய் பொன்னைக் குறித்தது. இங்கு அடை - நெருக்கத்தைக் குறித்தது. பாசு அடை-இங்கு அடை இலையைக் குறித்தது.*

*மரகதத்தளம் பொய்கை யாகவும், செம்பொற் கூரைமாடங்கள் செந்தாமரைகளாகவும், அவற்றின் மீதுள்ள வெள்ளி வீடுகள், செந்தாமரை மலர்களின் மேலுள்ள அன்னங்களாகவும் மனக்கண்ணால் கண்டு நமக்கும் காட்டுகின்றார் கவிஞர் பிரான். அடை எனும் சொல் வெவ்வேறு பொருள்களில் அமைய வந்த திரிபு அணியாம்.*

***6846. 'தீச் சிகை சிவணும் சோதிச் செம் மணிச் செய்த தூணின்***
***தூச் சுடர் மாடம் ஈண்டித் துறுதலால், கருமை தோன்றா***
***மீச் செலும் மேகம் எல்லாம், விரி சுடர் இலங்கை வேவ,***
***காய்ச்சிய இரும்பு மானச் சேந்து ஒளி கஞல்வ, காணாய்!***

***தீச் சிகை சிவணும் சோதி*** *- அக்கினிக் கொழுந்து போலும் ஒளியினையுடைய;* ***செம்மணிச் செய்ததூணின்*** *- சிவந்த மாணிக்கங்களைப் பதித்துச் செய்யப் பெற்ற தூண்கள் நாட்டப்பெற்ற;* ***தூச்சுடர் மாடம் ஈண்டித் துறுதலால்*** *- தூய்மையான ஒளிமிக்க மாடங்கள் நெருங்கிச் சுடர் விடுதலால்;* ***கருமை தோன்றா*** *- கருநிறம் தோன்றாமல்;* ***மீச்செலும் மேகம் எல்லாம்*** *- ஆகாயத்தில் பரவிச் செல்லும் மேகங்கள் எல்லாம்;* ***விரிசுடர் இலங்கை வேவ*** *- விரிந்து பரவும் ஒளியுடைய இலங்கை (அநுமனால் தீயிடப்பட்ட அன்று) எரிந்து போகும்போது;* ***காய்ச்சிய இரும்பு மான*** *- (அப்பெருந்,தீயிற்) காய்ச்சப் பட்ட இரும்பினைப் போல;* ***சேந்து ஒளி கஞல்வ காணாய்*** *- செந்நிறம் பெற்று ஒளி மிக விளங்குவதைக் காண்பாயாக.*

*தீச்சிகை - அனற்கொழுந்து. சிவணல் - ஒத்தல். இலங்கை உலைக்கூடமாகவும் மாடங்கள் உலையாகவும், செம்மணிகள் பதித்த தூண்கள் உலையில் எழுந்த அனற்கொழுந்துகளாகவும் சிவந்த வான் மேகங்கள் அனல்கொழுந்துகளால் உலையிற் காய்ச்சப் பெற்ற இரும்புப் பாளங்களாகவும் கொள்க.*

***6847. 'வில் படி திரள் தோள் வீர! நோக்குதி--வெங் கண் யானை***
***அல் படி நிறத்தவேனும், ஆடகத் தலத்தை, ஆழ,***
***கல் படி வயிரத் திண் கால் நகங்களின் கல்லி, கையால்***
***பொற் பொடி என்ன வீசி, பொன்மலை என்னப் போவ!***

***வில்படி திரள் தோள்வீர*** - வில்லின் தழும்புகள் எப்போதும் பதிந்துள்ள அகன்ற தோள்களுக்குரியவனே! ***வெங்கண் யானை*** - கடுஞ்சினம் கொண்ட கண்களையுடைய யானைகள்; ***அல்படி நிறத்தவேனும்*** - இருள் படிந்தாற் போன்ற கருமை நிறம் உடையவாயினும்; ***ஆடகத் தலத்தை ஆழ*** - (இலங்கையின்) பொன்னாலான தரையினை ஆழமாக; ***கல்படி வயிரத்திண் கால்*** - கல்லைப் போன்ற வன்மை வாய்ந்த திண்ணிய கால்களின்; ***நகங்களின் கல்லி*** - நகங்களால் அகழ்ந்தெடுத்து; ***கையால் பொற்பொடி என்ன வீசி*** - (தம்) துதிக்கைகளால் பொன்பொடி போல் (மேலே) வீசி; ***பொன்மலை என்னப் போவ*** - பொன்மலைகள் நகர்ந்தால் போல் போவதை; ***நோக்குதி*** - பார்ப்பாயாக.

*வில்-வில் தழும்பினைக் குறித்து நின்றது. இதுமுதல் இனிவரும் பத்துப் பாடல்களிலும் இலக்குவனின் வீரம் செழுமிய உறுப்புகளையும் பண்பினையும் தொடர்ந்து பெருமான் போற்றிக் கூறி, அவனுக்கு விழிகளாலேயே ஒரு புகழ் மாலை தொடுத்துச் சூட்டுவதனை நோக்குக. உலகத்து யானைகள் தலையில் மண்ணைவாரிப் போட்டுக் கொள்வது இயல்பாக இருக்க இலங்கை மாநகரத்து யானைகள் பொன்னை வாரிப் போட்டுக் கொள்ளும் எனும் சமற்காரம் உணர்க.*

***6848. 'பூசல் விற் குமர ! நோக்காய்--புகர் அற விளங்கும் பொற்பின்***
***காசுடைக் கதிரின் கற்றைக் கால்களால் கதுவுகின்ற வீசு பொன் கொடிகள் எல்லாம், விசும்பினின் விரிந்த மேக-***
***மாசு அறத் துடைத்து, அவ் வானம் விளக்குவ போல்வ மாதோ!***

***பூசல் வில் குமர !*** - போரிடற்குரிய வில் ஏந்தும் குமரனே! ***புகழ் அற விளங்கும் பொற்பின்*** - குற்றம் நீங்குமாறு விளங்கும் அழகினையுடைய; ***காசு உடைக் கதிரின் கற்றை*** - (கொடிக்கம்பங்களில் பதிக்கப் பெற்றுள்ள இரத்தின) மணிகளால் ஆகிய ஒளித் தொகுதிகளையுடையனவாய்; ***கால்களால் கதுவுகின்ற*** - காற்றால் பற்றப்பட்டு; ***வீசுபொன் கொடிகள் எல்லாம்*** - அசைகின்ற அழகிய கொடிகள் யாவும்; ***விசும்பின் விரிந்த*** - விண்ணில் பரவியுள்ள; ***மேக மாசு அறத்துடைத்து*** - மேகங்கள் என்னும் அழுக்கினைத்துடைத்தெடுத்து; ***அவ்வானம் விளக்குவ போல்வ நோக்காய்*** - அவ்விண்ணைத் துலக்குவன போன்றுள்ளமையைக் காண்பாயாக.

*புகர்-குற்றம்.*

***6849. 'நூல் படத் தொடர்ந்த பைம் பொன் சித்திரம் நுனித்த பத்திக்***
***கோல் படு மனைகள் ஆய குல மணி எவையும்***

***கூட்டி,***
***சால்பு அடுத்து, அரக்கன் மாடத் தனி மணி***
***நடுவண் சார்த்தி,***
***மால் கடற்கு இறைவன் பூண்ட மாலை போன்று***
***உளது-இம் மூதூர்.***

***இம் மூதூர்*** *- இத்தொன்மை வாய்ந்த இலங்கை;* ***நூல் படத் தொடர்ந்த*** *- (சிற்பிகளால் கோணல் என்பதேயின்றி) நூல் இட்டு நேர் வரிசையில் உள்ளனவும்;* ***சித்திரம் நுனித்த பத்தி*** *- ஓவியங்கள் நுட்பமாகத் தீட்டப்பட்ட வரிசையானவையும் ஆகிய;* ***கோல் படு மனைகள் ஆய குலமணி எவையும் கூட்டி*** *- அழகமைந்த வீடுகள் என்னும் சிறந்த மணிகள் யாவற்றையும் இணைத்து;* ***சால்பு அடுத்து*** *- (ஒரு கோவையாக) பொருந்தும்படி அமைத்து;* ***அரக்கன் மாடத் தனிமணி நடுவண் சார்த்தி*** *- அரக்கர் கோனாகிய இராவணனது அரண்மனையாகிய நாயகமணியினை நடுவிலே சார வைத்து;* ***மால் மால் கடற்கு இறைவன்*** *- பெருங்கடல்களுக்கு அரசனாகிய வருணதேவன்;* ***பூண்ட மாலை போன்று உளது*** *- அணிந்து கொண்ட மணிமாலை போன்று உள்ளது.*

*கோலம், கோல் என நின்று அழகு எனும் பொருள் தந்தது. சால் படுத்தல்- பொருந்தும் படி வைத்தல். இந்திரனே சாலுங்கரி. (குறள் 25) எனுமிடத்து. சாலுதல் பொருந்துதல் எனும் பொருளில் வருதல் காண்க.*

*சிற்ப சாத்திர வல்லுநர்கள் நூலிட்டு, நேர்பட அமையும் தெருக்களோடும், ஊரின் நடுவே அமையும் அரச மாளிகையோடும் நகர்களை அமைக்கும் திறத்தை நன்குணர்ந்தவர் கவிஞர்பிரான்.*

*"நூல் அறிபுலவர் நுண்ணிதிற் கயிறு இட்டுத்தே எங்கொண்டு தெய்வம் நோக்கிப் பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப மனை வகுத்து" (நெடுதல் 76-79) எனும் சங்கப் பாடற் சான்றால், இந்நிலத்தில் ஊர் அமைப்புக்கலையும் மனையமைப்புக் கலையும் தொன்மைச் சிறப்பொடு திகழும் பாங்கு புலனாம்.*

***6850. 'நல் நெறி அறிஞ ! நோக்காய்--நளி நெடுந்***
***தெருவின் நாப்பண்***
***பல் மணி மாடப் பத்தி நிழல் படப் படர்வ, பண்பால்***
***தம் நிறம் தெரிகிலாத, ஒரு நிறம் சார்கிலாத,***
***இன்னது ஓர் குலத்த என்று புலப்படா, புரவி***
***எல்லாம்.***

***நல் நெறி அறிஞ !*** *- சன்மார்க்கம் இன்னதென உணர்ந்தொழுகும் அறிவு சான்றோனே!* ***நளி நெடுந் தெருவின் நாப்பண்*** *- பெருமை நிறைந்த நீண்ட தெருக்களின் நடுவே;* ***பல்மணி மாடப் பத்தி நிழல் படப்படர்வ*** *- பற்பல மணிகள் இழைத்து கட்டப்பட்டுள்ள மாடமாளிகை வரிசையின் ஒளிகள் (தம்மீது) படச்*

*செல்கின்றவையான;* ***புரவி எல்லாம்*** *- குதிரைகள் யாவும்;* ***பண்பால் தம் நிறம் தெரிகிலாத*** *- இயற்கையாக அமைந்த தமது நிறம் அறிய இயலாமல்;* ***ஒரு நிறம் சார்கிலாத*** *- ஒரு குறிப்பிட்ட நிறத்தையும் கொள்ளாமல்;* ***இன்னதோர் குலத்த என்று புலப்படா நோக்காய்*** *- இன்ன நிறம் உடையவை இவை என்று அறிய இயலாதவை ஆயின (என்பதைப்) பாராய்.*

*இலக்குவன் இந்நெறி மேற் கொண்டு ஒழுகுவான் என்பதனை, "வளையாவரு நன்னெறி நின்னறிவு ஆகும் அன்றே" (1730) என நகர் நீங்கு படலத்திலும் குறித்தமை நினைக. நளி - பெருமை.*

***6851. 'வீர ! நீ பாராய்-மெல்லென் பளிங்கினால் விளங்குகின்ற,***
***மாரனும் மருளச் செய்த மாளிகை, மற்றோர் சோதி***
***சேர்தலும் தெரிவ; அன்றேல், தெரிகில; தெரிந்த காட்சி***
***நீரினால் இயன்ற என்ன நிழல் எழுகின்ற நீர்மை.***

***வீர !*** *- வீரனாகிய இலக்குவனே!* ***மெல் என் பளிங்கினால் விளங்குகின்ற*** *- மெல்லிய பளிங்குக் கற்களினால் ஒளிர்கின்றனவும்;* ***மாரனும் மருளச் செய்த மாளிகை*** *- மன்மதனும் மயங்குமாறு அமைந்துள்ளனவுமான மாளிகைகள்;* ***மற்று ஓர் சோதி சேர்தலும் தெரிவ*** *- வேறு ஓர் ஒளி (தம்மீது) பட்டவுடன் கண்ணுக்குத் தெரிவனவாயும்;* ***அன்றேல் தெரிகில*** *- ஒளிபடாவிடில், கண்ணுக்குத் தெரியாதனவுமாயும்;* ***தெரிந்த காட்சி*** *- விளங்குகின்ற காட்சியானது;* ***நீரினால் இயன்ற என்ன*** *- நீரினால் அமைந்தவை (இவை) என்னுமாறு;* ***நிழல் எழுகின்ற நீர்மை நீ பாராய்*** *- ஒளிதோன்றுகின்ற தன்மையை நீ பார்ப்பாயாக.*

*தனக்கென்று ஒரு தனி நிறமில்லாது, ஆன்மாவைப் போலச் சார்ந்ததன் வண்ணம் ஆவது நீர்க்கு இயல்பு. பம்பையின் நீரினைப் பளிங்குக்கு முன்னும் (3710) உவமிப்பார்.*

***6852. 'கோல் நிறக் குனி வில் செங் கைக் குமரனே! குளிர் வெண் திங்கள்***
***கால் நிறக் கதிரின் கற்றை தெற்றிய ஆய காட்சி***
***வால் நிறத் தரளப் பந்தர், மரகதம் நடுவண் வைத்த,***
***பால் நிறப் பரவை வைகும் பரமனை நிகர்ப்ப, பாராய்!***

***கோல்நிறக் குனிவில் செங்கைக் குமரனே!*** *- அம்பினையும் ஒளியினையும் உடைய வளைந்த வில்லினை ஏந்திய சிவந்த கரங்களையுடைய குமாரனே!* ***குளிர் வெண் திங்கள் கால் நிறக் கதிரின் கற்றை -*** *குளிர்ந்த வெள்ளைச் சந்திரன் உமிழ்கின்ற வெள்ளை நிறக் கதிர்களின் தொகுதிகள்;* ***தெற்றிய அனைய காட்சி*** *- இடை விட்டுவிட்டுப் பின்னியது போன்ற தோற்றம் கொண்ட;* ***வால் நிறத் தரளப் பந்தரர்***

***நடுவண் வைத்த மரகதம்*** - *வெண்ணிற முடைய முத்துப் பந்தலின் நடுவே வைக்கப் பெற்றுள்ள மரகத மணிகளின் தொகுதி;* ***பால் நிறப் பரவை வைகும்*** - *வெள்ளை நிறப்*

*பாற்கடலில் பள்ளி கொள்ளும்;* ***பரமனை நிகர்ப்ப பாராய்*** - *பரந்தாமனை ஒத்திருப்பதைப் பார்ப்பாயாக.*

*கோல் - அம்பு. நிறம் - ஒளி. வெண்ணிறம் உடைய முத்துப் பந்தர். திருப்பாற் கடலுக்கும், பச்சை நிறம் உடைய மரகத மணியின் தொகுதி. பாற்கடலின் இடையுறங்கும் திருமாலுக்கும் உவமைகள் ஆயின.*

***6853. 'கோள் அவாவு அரி ஏறு அன்ன குரிசிலே!***
***கொள்ள நோக்காய்--***
***நாள் அவாம் மின் தோய் மாடத்து உம்பர், ஓர்***
***நாகர் பாவை,***
***காள வார் உறையின் வாங்கும் கண்ணடி, விசும்பில்***
***கவ்வி***
***வாள் அரா விழுங்கிக் காலும் மதியினை நிகர்த்த***
***வண்ணம்.***

***கோள் அவாவு அரிஏறு அன்ன குரிசிலே !*** - *தன்னை எதிர்ப்பாரைக் கைக்கொண்டு வெல்ல விரும்பும் ஆண்சிங்கம் போன்ற இலக்குவனே!* ***நாள் அவாம் மின் தோய் மாடத்தும்பர்*** - *விண்மீன்கள் ஒளியைப் பெற விரும்புமாறு மின்னுகின்ற மாடங்களின் உச்சியில்;* ***ஓர் நாகர் பாவை*** - *ஒரு நாக உலகத்து மங்கை;* ***காளவார் உறையின் வாங்கும் கண்ணடி*** - *கருமை நிறமுள்ள நீண்ட உறையிலிருந்து எடுக்கும் (வட்ட வடிவக்) கண்ணாடியானது;* ***வாள் அரா விழுங்கிக் காலும்*** - *ஒளியுடைய இராகு கேது என்னும் பாம்புகளால் விழுங்கி உமிழப் பெறும்;* ***மதியினை நிகர்த்த வண்ணம் கொள்ள நோக்காய்!*** - *சந்திரனை ஒத்து விளங்கும் தன்மையை நன்கு பார்ப்பாயாக.*

*கோள்-கொள்ளுதல். முதல் நிலைத் தொழிற்பெயர். எதிர்க்கும் உயிர்களைத் தப்பாமல் கொல்லும் தன்மையால், சிங்க ஏற்றுக்கு இலக்குவன் உவமையானான்.*

***6854. 'கொற்ற வான் சிலைக் கை வீர ! கொடி மிடை***
***மாடக் குன்றை***
***உற்ற வான் கழுத்தவான ஒட்டகம், அவற்றது***
***உம்பர்ச்***
***செற்றிய மணிகள் ஈன்ற சுடரினைச் செக்காரத்தின்***
***கற்றை அம் தளிர்கள் என்னக் கவ்விய நிமிர்வ,***

***காணாய்!*** **கொற்றவான் சிலைக்கை வீர !** - வெற்றியையே ஏந்தும் பெருமைக்குரிய வில் ஏந்தும் கைகளையுடைய வீரனே! **கொடிமிடை மாடக் குன்றை உற்ற** - கொடிகள் நிறைந்த குன்றம் போலும் மாடங்களை எட்டுகின்ற; **வான் கழுத்த ஆன ஒட்டகம்** - உயர்ந்து நீண்ட கழுத்துக்களையுடைய ஒட்டகங்கள்; **அவற்றது உம்பர்** - அம்மாடங்களின் மேல்; **செற்றிய மணிகள் ஈன்ற சுடரினை** - பதிக்கப்பெற்ற மணிகள் உமிழ்ந்த ஒளிக்கதிரின் கூட்டத்தை; **செக்காரத்தின் கற்றை அம்தளிர்கள் என்ன** - தேமா மரங்களின் கொத்துக்களான அழகிய தளிர்கள் எனக் கருதி; **கவ்விய நிமிர்வ காணாய்** - கவ்வுவதற்காக நிமிர்கின்றவற்றைக் காண்பாயாக.

செக்காரம்-தேமாமரம்.

***6855. 'வாகை வெஞ் சிலைக் கை வீர ! மலர்க் குழல் புலர்த்த, மாலைத்***
***தோகையர் இட்ட தூமத்து அகிற் புகை முழுதும் சுற்ற,***
***வேக வெங் களிற்றின் வன் தோல் மெய்யுறப் போர்த்த தையல்--***
***பாகனின் பொலிந்து தோன்றும் பவள மாளிகையைப் பாராய்!***

**வாகை வெஞ்சிலைக்கைவீர** - வெற்றியையே ஏந்தும் கொடிய வில்லையேந்தும் கைகட்குரிய வீரனே! **மாலை மலர்க்குழல் புலர்த்த** - மாலைப்பொழுதில் (தங்கள்) மலர் சூடிய கூந்தல்களை உலர்த்துவதற்காக; **தோகையர் இட்ட** - பெண்கள் மூட்டிய; **தூமத்து அகில் புகை முழுதும் சுற்ற** - நறும்புகை வகையைச் சார்ந்த அகிலின் புகை முழுவதும் சூழ்ந்து கொண்டதனால்; **வேக வெங்களிற்றின்** - விரைந்து செல்லும் வன்மையுடைய மதயானையின்; **வன்தோல் மெய்யுறப் போர்த்த** - வலியதோலினை மேனியில் நன்கு போர்த்துக் கொண்ட; **தையல் பாகனின்** - உமையொரு கூறனாகிய சிவபெருமானைப் போல; **பொலியத் தோன்றும்** - அழகுறத் தோன்றுகிற; **பவள மாளிகையைப் பாராய்!** - செம்பவழத்தாலான மாளிகைகளைப் பார்ப்பாயாக.

பவழ மாளிகை செம்மேனி அம்மானாகிய சிவபிரானையும், அம்மாளிகையைச் சூழ்ந்திருந்த அகிலின் கரும்புகை, அப்பெருமான் போர்த்துள்ள யானைத்தோல் போர்வைக்கும் உவமைகள் ஆயின.

***6856. 'காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே ! சுற்ற***
***தேவர்தம் தச்சன் நீலக் காசினால் திருந்தச் செய்தது.***
***ஈவது தெரியா உள்ளத்து இராக்கதர் ஈட்டி வைத்த***
***பாவ பண்டாரம் அன்ன, செய்குன்றம் பலவும்,***

***பாராய் !***

***காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே !*** - *தசரத மன்னன் பெற்ற வீரமிக்க வில் ஏந்தும் யானை போன்றவனே!* ***கற்ற தேவர்தம் தச்சன்*** - *கல்வியிற் சிறந்த தேவர்களின் தச்சனான விசுவகன் மாவினால்;* ***நீலக் கல்லினால் திருந்தச் செய்தது*** - *நீல மணிக்கற்களினால் செப்பமுறச் செய்யப் பெற்றனவும்;* ***ஈவது தெரியா உள்ளத்து இராக்கதர்*** - *ஈகை என்பதனையே அறியாத உள்ளமுடைய அரக்கர்கள்;* ***ஈட்டி வைத்த*** - *திரட்டி வைத்த;* ***பாவ பண்டாரம் அன்ன*** - *பாவத்தின் சேமிப்புக் கிடங்குகளைப் போன்ற;* ***செய்குன்றம் பலவும் பாராய்*** - *செய்குன்றங்கள் பலவற்றையும் காண்பாயாக.*

*கார்முகம் - வில். காவலன் பயந்த வீரக் கார் முகக் களிறு - இல்பொருள் உவமை. ஈகை - மன இரக்கத்தின் அடிப்படையில் எழும் அறம். ஆதலால் "இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்" (கம்ப.) ஆகிய அரக்கர், ஈவது தெரியா உள்ளத்தினர் ஆயினர். ஈயாமல் அரக்கர் ஈட்டிய செல்வம் எல்லாம் அவர் பாவ பண்டாரத்தில் திரள்கின்றன என்று அழகுற மொழிந்தார். பாவத்தின் நிறம் கருமையாதலின், நீலக்கற்களால் ஆன செய்குன்றங்களைப் பாவ பண்டாரம் எனப் பொருத்தமுற மொழிந்தார்.*

***6857. 'பிணை மதர்த்தனைய நோக்கம் பாழ்பட, பிடியுண்டு, அன்பின்***
***துணைவரைப் பிரிந்து போந்து, மருங்கு எனத் துவளும் உள்ளப்***
***பணம் அயிர்ப்பு எய்தும் அல்குல் பாவையர், பருவம் நோக்கும்***
***கண மயில் குழுவின், நம்மைக் காண்கின்றார் தம்மைக் காணாய்!***

***பிணை மதர்த்து அனைய நோக்கம்*** - *களிப்பேறியது போன்ற அழகிய பார்வை;* ***பாழ் பட*** - *பொலிவு கெட; பிடியுண்டு - (அரக்கராற்) சிறையிடப் பெற்றதனால்;* ***அன்பின் துணைவரைப் பிரிந்து போந்து*** - *அன்பிற்குரிய தம் கணவன்மார்களைப் பிரிந்து வந்து;* ***மருங்கு எனத் துவளும் உள்ளம்*** - *இடை போல வருந்தும் மனத்தையும்;* ***பணம் அயிர்ப்பு எய்தும் அல்குல் பாவையர்*** - *பாம்பின் படமோ என்று ஐயுறத்தக்க நிதம்பத்தையுமுடைய (தேவ) மாதர்கள்;* ***பருவம் நோக்கும்*** - *(தம் வாட்டம் போக்கும்) கார் காலத்தினை (விருப்புடன்) எதிர்நோக்கும்;* ***கணமயில் குழுவின்*** - *திரண்ட மயில்களின் கூட்டம் போல;* ***நம்மைக் காண்கின்றார் தம்மை நோக்காய்*** - *நம்மை (விருப்பத்தோடு) எதிர்நோக்குகின்றார்கள்; அவர்களை (நீயும்) காண்பாயாக.*

*மதர்த்தல்-களித்தல்.*

***6858. 'நாள்மலர்த் தெரியல் மார்ப! நம் பலம் காண்பான், மாடத்து***
***யாழ் மொழித் தெரிவைமாரும் மைந்தரும் ஏறுகின்றார்,***
***"வாழ்வு இனிச் சமைந்தது அன்றே" என்று மா நகரை எல்லாம்***
***பாழ்படுத்து இரியல் போவார் ஒக்கின்ற பரிசு பாராய்!'***

***நாள் மலர்த் தெரியல் வீர !*** - *அன்றலர்ந்த மலர்களால் ஆன மாலையணியும் மார்புடையானே!* ***நம் பலம் காண்பான்*** - *நமது வலிமையைக் காணும் பொருட்டு;* ***யாழ் மொழித் தெரிவைமாரும் மைந்தரும்*** - *யாழ் போன்ற மொழி பேசும் (தேவ) மகளிரும் ஆடவரும்;* ***மாடத்து ஏறுகின்றார் வாழ்வு இனிச் சமைந்தது அன்றே!*** - *மாடங்களில் ஏறுகின்றார் "நமக்கு இனி நல்வாழ்வு அமைந்து விட்டதன்றோ";* ***என்று மாநகரையெல்லாம்*** - *எனக்கருதி, இலங்கை மாநகரை எல்லாம்;* ***பாழ் படுத்து*** - *பாழாகப் போட்டுவிட்டு;* ***இரியல் போவார்*** - *ஓடிப் போவாரை* ***ஒக்கின்ற பரிசு பாராய்!*** *-போன்ற தன்மையைக் காண்பாயாக!*

*இலங்கையின் பணிகள் யாவும் தேவர்கள் புரிவதால், இவர்கள் வெளியேறின் இலங்கை பாழ்படும் என்பார். "பாழ்படுத்து இரியல் போவார்" என்றார்.*

*இராவணன் வானர சேனையைக் காணக் கோபுரம் ஏறுதல்*

***6859. இன்னவாறு இலங்கைதன்னை இளையவற்கு இராமன் காட்டி,***
***சொன்னவா சொல்லாவண்ணம் அதிசயம் தோன்றும் காலை,***
***அன்ன மா நகரின் வேந்தன், அரிக் குலப் பெருமை காண்பான்,***
***சென்னி வான் தடவும் செம் பொற் கோபுரத்து உம்பர்ச் சேர்ந்தான்.***

***இன்னவாறு*** - *இவ்விதமாக;* ***இலங்கை தன்னை*** - *இலங்கை மாநகரத்தை;* ***இராமன் இளையவற்குக் காட்டி*** - *இராமபிரான் இலக்குவனுக்குக் காண்பித்து;* ***சொன்னவா சொல்லா வண்ணம்*** - *சொன்னவற்றைத் திரும்பிச் சொல்லாதவாறு (புதிது புதிதாக இலங்கையில்)* ***அதிசயம் தோன்றும் காலை*** - *விந்தைக் காட்சிகளே தோன்றிக் கொண்டிருக்கையில்;* ***அன்ன மாநகரின் வேந்தன்*** - *அத்தகைய பெருநகரின் அரசனான இராவணன்;* ***அரிக்குலப் பெருமை காண்பான்*** - *குரங்குக் கூட்டத்தின் பெருமையினைக் காண்பதற்காக;* ***சென்னி வான் தடவும்*** - *உச்சியானது விண்ணைத்*

*தொடுகின்ற;* **செம்பொன் கோபுரத்து உம்பர் சேர்ந்தான்** - *செம்பொன்னாலாகிய கோபுரம் ஒன்றின் உச்சியை அடைந்தான்.*

## இராவணன் வானரத் தானை காண் படலம்

*இராவணன், இலங்கைக் கோட்டைக் கோபுரத்தின் மீதேறி, தன் பரிவாரங்களுடன் நின்று, இராமனுடைய வானரத்தானையைக் கண்ணுறுவது பற்றிக் கூறும் பகுதி இப்படலம் ஆயிற்று.*

*இராமனைக் கண்ணுற்றதும் இராவணன் அடைந்த மெய்ப்பாடுகளும், மற்றவர்கள் யார்? யார்? என இராவணன் வினாவலும் சாரன், அவனுக்கு இலக்குவன், வானரப்படை வீரர்கள் முதலியோர் பற்றி எடுத்துரைப்பதும் இப்படலத்துள் அமைந்துள்ளன.*

### *கோபுரத்தின் மேல் இராவணன் நின்ற நிலை*

**கலிவிருத்தம்**

***6860. கவடு உகப் பொருத காய் களிறு அன்னான்,***
***அவள் துயக்கின் மலர் அம்பு உற வெம்பும்***
***சுவடுடைப் பொரு இல் தோள்கொடு, அனேகம்***
***குவடுடைத் தனி ஓர் குன்று என, நின்றான்.***

***கவடு உகப் பொருத*** - *(தன்னைக்) கட்டியிருக்கும் கட்டுத்தறி முறியும்படி மோதித் தாக்கும்;* ***காய் களிறு அன்னான்*** - *சினமுடைய ஆண் யானை போன்ற இராவணன்;* ***அவள் துயக்கின்*** - *சீதா தேவியின்பால் கொண்ட மையலால்;* ***அம்புற*** - *மன்மதன் மலர்க்கணைகள் தைத்ததால்;* ***வெம்பும்*** - *வருந்துகின்ற;* ***சுவடு உடை*** - *தழும்புகளைப் பெற்ற;* ***பொருஇல் தோள் கொடு*** - *ஒப்பற்ற தன் தோள்களோடு;* ***அனேகம் குவடுஉடை*** - *பல சிகரங்களையுடைய;* ***தனி ஓர் குன்றென நின்றான்*** - *ஒப்பற்ற ஒரு மலை போல (கோபுரம் ஏறி) நின்றான்.*

*முன்பு ஒழுக்க பலம் இருந்த காலை, திக்குயானைகளின் கொம்பொடிந்தது. இன்று, அது குறைந்த காலை மலர்க்கணைகள் துளைக்க முடிந்தது. அன்றொரு சுவடு, இன்றொரு சுவடு! என அவனை நுட்பமாகப் பரிகசித்த வாறுமாம்.*

***6861. பொலிந்ததாம் இனிது போர் எனலோடும்,***
***நலிந்த நங்கை எழிலால் வலி நாளும்***
***மெலிந்த தோள்கள் வடமேருவின் மேலும்***
***வலிந்து செல்ல, மிசை செல்லும் மனத்தான்.***

***நலிந்த நங்கை எழிலால்*** - *(இராமன் பிரிவால்) வருந்தி மெலிந்துள்ள சீதையின் அழகால்,* ***நாளும் வலி மெலிந்த தோள்கள்*** - *நாளுக்கு நாள் வலிமை தளர்ந்த, (இராவணன்) புயங்கள்;* ***போர் எனலோடும்*** - *போர் (வந்து விட்டது) என்றவுடனே;* ***இனிது பொலிந்தது ஆம்*** - *மகிழ்ச்சியால் மேலும் உயர்ந்து விளங்கியன ஆயின;* ***வடமேருவின் மேலும்*** - *வடக்குத் திசைக்கண் உள்ள மேருமலையின் மேலும்;* ***வலிந்து***

***செல்ல*** - *வலியப் போர்க்குச் செல்ல;* ***மிசை செல்லும் மனத்தான்*** - *உந்துகின்ற உள்ளத்திண்மையுடையவன் ஆனான் அவன்.*

*பொலிதல்-முன்னிலும் மேம்பட்டு விளங்குதல். இராமனுக்காக அந்நங்கை மெலிந்தாள்; அந்நங்கைக்காக இவன் மெலிந்தான் என்பது ஒரு நயம்.*

***6862. செம் பொன் மௌலி சிகரங்கள் தயங்க,***
***அம் பொன் மேரு வரை கோபுரம் ஆக,***
***வெம்பு காலினை விழுங்கிட, மேல்நாள்,***
***உம்பர் மீதில் நிமிர் வாசுகி ஒத்தான்.***

***செம்பொன் மௌலி*** - *செம்பொன்னால் ஆன கலசங்கள், (அக்கோபுரத்தில்);* ***சிகரங்கள் தயங்க*** - *மேருமலையின் சிகரங்களைப் போல் ஒளிர,* ***அம்பொன் மேருவரை கோபுரம் ஆக*** - *அழகிய பொன்னாலான மேருமலையாக அந்தக் கோபுரங்கள் விளங்க;* ***வெம்பு காலினை*** - *(தன்னோடு) சினந்த அந்தக் காற்றுக் கடவுளை;* ***விழுங்கிட*** - *வெல்வதற்காக;* ***மேல் நாள்*** - *முன்பு ஒரு நாள்;* ***உம்பர் மீதில் நிமிர்*** - *(மேருவின்) உச்சியின் மீது நிமிர்ந்து (வளைத்துக் கொண்ட);* ***வாசுகி ஒத்தான்*** - *வாசுகி எனும் பாம்பினைப் போன்று நின்றான் (இராவணன்.)*

*வாசுகியைப் பாம்பென்னும் ஒற்றுமை பற்றி, ஆதிசேடனாகவும் கூறுவர். உபசார வழக்கு. கால்-காற்று. உம்பர் - மேல்.*

***6863. தொக்க பூதம்அவை ஐந்தொடு துன்னிட்டு***
***ஒக்க நின்ற திசை ஒன்பதொடு ஒன்றும்,***
***பக்கமும், நிழல் பரப்பி, வியப்பால்***
***மிக்கு நின்ற குடை மீது விளங்க.***

***தொக்க பூதம் அவை*** - *ஒன்றாக இணைந்துள்ள* ***ஐந்தொடு*** - *மண், நீர், தீ, காற்று, வான் என்னும் பூதங்கள் ஐந்தோடும்;* ***துன்னிட்டு*** - *பின்னிப் பிணைந்து;* ***ஒக்க நின்ற திசை ஒன்பதொடு ஒன்றும்*** - *ஒன்று கூடி நின்ற திசைகள் பத்தும் (சூழ்ந்த இவ்வுலகிலும்);* ***பக்கமும்*** - *இவ்வுலகைச் சுற்றிப் பக்கம் சூழ்ந்துள்ள பிற உலகங்களிலும்;* ***நிழல் பரப்பி*** - *தன் ஆட்சி நிழலைப் பரப்பி,* ***வியப்பால் மிக்குநின்ற*** - *(யாவரும்) வியக்கும் வண்ணம் மேம்பட்டு நின்ற;* ***குடை மீது விளங்க*** - *(இராவணனது) குடை அவன் முடி மீது ஒளிவீசவும்;*

*பூதங்கள் ஒன்றிலிருந்து ஒன்றாகத் தோன்றும்; ஒடுங்கும் ஆதலின் "தொக்க பூதம்" என்றார். வைணவ சித்தாந்த நூல்கள் கூறும் பஞ்சீகரணத் தத்துவப்படி, ஐந்து பூதங்களுள் ஒவ்வொன்றும் செம்பாதியாக்கி, அப்பாதியை நான்கு நான்காக்கி, அவை*

*ஒவ்வொன்றிலும் பாதிவிடுத்து, பாதியை அந்நான்குகளோடும் கூட்ட இப்பிரபஞ்சப் பொருள்கள் யாவும் உண்டாயின எனும் கூற்றையுட்கொண்டு "தொக்க பூதம்" என்றார் எனினுமாம். "ஐந்து பூதமும் பத்தாக்கி, அவை பாதி நந்நான்காக்கி, நந்து தம் பாதிவிட்டு நான்கொடு நான்கும் கூட்ட, வந்தன தூலபூதம்" என்று கைவல்ய நவநீதமும் (குத்துவிளக்கம். 41) புகலும். இராவணன் ஆட்சி பிரபஞ்சம் முழுவதும் வியாபித்து நின்றது என்பதாம். இதுமுதல் 6875ஆம் பாடல் வரை தொடர்ந்து 6876 ஆம் பாடல் இரண்டாவது அடி இறுதியில் உள்ள நின்றான் என்ற முடிபைப் பெறும்.*

***6864. கைத் தரும் கவரி வீசிய காலால்,***
***நெய்த்து இருண்டு உயரும் நீள் வரை மீதில்***
***தத்தி வீழ் அருவியின் திரள் சால,***
***உத்தரீகம் நெடு மார்பின் உலாவ,***

***நெய்த்து இருண்டு உயரும்*** *- பளபளத்துக் கருமை நிறத்தோடு உயர்ந்தோங்கியுள்ள;* ***நீள் வரை மீதில்*** *- மீண்டும் கிடக்கும் மலைமீதில்;* ***தத்தி வீழ் அருவியின் திரள்சால*** *- தவழ்ந்து வீழ்கின்ற அருவியின் தொகுதி போல;* ***கை தரும் கவரி வீசிய காலால்*** *- கைகளால் வீசப்படும் கவரிகளால் எழும் காற்றின் விசையில்;* ***நெடுமார்பில்*** *- இராவணனின் நெடிய மார்பில்;* ***உத்தரீகம் உலாவ*** *- மேலாடை அசைந்து விளங்க... உத்தரீகத்துக்கு அருவி ஒப்பு. 'வேறுபல் துகிலின் நுடங்கி... இழுமென இழிதரும் அருவி." (திருமுரு. 295-316)" அவிர்துகில் புரையும் அவ்வெள் அருவி" (குறிஞ்சிப். 55) "ஓயா அருவித்திரள் உத்தரீயத்தை ஒப்ப" (4780) மலைக்கு இராவணன் மார்பும். அருவிக்கு அவன் மேலாடையும் ஒப்பாம்.*

***6865. வானகத்தினில் உருப்பசி, வாசத்***
***தேன் அகத் திரு திலோத்தமை, செவ் வாய்***
***மேனகைக் குல அரம்பையர், யாரும்***
***சானகிக்கு அழகு தந்து, அயல் சார,***

***வானகத்தினில் உருப்பசி*** *- வானகத்திற்குரிய ஊர்வசியும்;* ***வாசத் தேன் அகத்திரு திலோத்தமை*** *- மணம் மிக்க தேனுடைய தாமரை மலரில் வாழும் திருமகள் போன்ற திலோத்தமையும்;* ***செவ்வாய் மேனகை*** *- சிவந்த வாயினளான மேனகையும்;* ***குல அரம்பையர்*** *- குலத்திற் சிறந்த அரம்பையும்;* ***யாரும்*** *- அவர் போன்ற தேவ மாதர் அனைவரும்;* ***சானகிக்கு*** *- சீதாதேவிக்கு;* ***அழகு தந்து*** *- (மேலும்) அழகு தருவதற்காக;* ***அயல் சார*** *- (இராவணன்) அருகே சார்ந்து நிற்கவும்.*

*தந்து - தர. எச்சத்திரிபு. இராவணனின் புறத்தே நின்ற ஊர்வசி, திலோத்தமை முதலிய தேவமாதர்கள் இராவணன் அகத்தே நின்ற சீதா தேவியின் அழகை*

*உயர்த்திக்காட்ட உதவினர் என்பது கவிஞர் குறிப்பு. "அரம்பையர் குழாம் புடைசுற்ற" எனக் காட்சிப் படலத்தின் பாடலை (5147) இங்கு நினைவு கூர்க.*

***6866. வீழியின் கனி இதழ், பணை மென் தோள்,***
***ஆழி வந்த அர மங்கையர், ஐஞ்ஞூற்று-***
***ஏழ் இரண்டினின் இரண்டு பயின்றோர்,***
***சூழ் இரண்டு புடையும் முறை சுற்ற,***

***வீழி இன் கனி இதழ்*** *- வீழிக்கனியினைப் போன்ற இனிய இதழ்களையும்;* **பணை மென் தோள்** *- மூங்கிலைப் போன்ற தோள்களையும் உடையவராய்;* ***ஆழி வந்த அரமங்கையர்*** *- பாற்கடல் கடையும்போது தோன்றிய தேவ மாதர்கள்;* ***ஐஞ்ஞூற்று ஏழ் இரண்டினில் இரண்டு*** *- பதினாலாயிரவர்;* ***பயின்றோர்*** *- (கலைகள் பல) பயின்றோர்;* ***இரண்டு புடையும் சூழ் முறை சுற்ற*** *- (இராவணன்) இருமருங்கும் முறைப்படி சூழ்ந்து வர... கடல் கடைகையில் தேவமாதர் பலர் எழுந்தனர் என்பது முன் (940) கூறப்பட்டது. ஐஞ்ஞூற்று ஏழ் இரண்டினில் இரண்டு 500x7x2x2 = 14,000. பயின்றோர் (எண்ணிக்கை) அமைந்தோர் எனினுமாம். வீழியின்கனி-சிவப்பு நிறமுடைய ஒருகனிவகை.*

***6867. முழை படிந்த பிறை முள் எயிறு, ஒள் வாள்***
***இழை படிந்த இள வெண் நிலவு ஈன,***
***குழை படிந்தது ஒரு குன்றில், முழங்கா***
***மழை படிந்தனைய தொங்கல் வயங்க,***

***முழை படிந்த பிறை*** *- குகையிற் படிந்துள்ள பிறை நிலாப் போன்று;* ***முள் எயிறு*** *(இராவணன் உதடுகளின் இருமருங்கும்) கோரைப்பற்கள்;* **ஒள்வாள்** *- ஒள்ளிய ஒளியை;* ***இழை படிந்த*** *- அணிகளில் படிந்துள்ள;* ***இளவெண் நிலவுஈன*** *- மெல்லிய வெள்ளைக்கற்றைகளோடு வீசவும்;* ***குழை படிந்தது ஒருகுன்றில்*** *- குண்டலங்களை அணிந்த ஒரு மலையிலே;* ***முழங்கா மழைபடிந்தனைய*** *- முழங்குதல் செய்யாத மேகம் படிந்தாற் போன்று;* **தொங்கல் வயங்க** *- நீல மணி மாலைகள் (தோள்களில்) ஒளி வீசவும்...*

*இராவணன் கோரைப் பற்கள் இதழ்களின் இருமருங்கும் மேல் நோக்கி வளைந்து பிறை போன்று விளங்கின என்பதாம். குண்டலம் அணிந்த மலை - இல்பொருள் உவமை மலை மேல் மேகம் படிந்திருப்பது போன்று, இராவணன் தோள்மேல் நீலமணி மாலைகள் கிடந்தன என்பதாம்.*

***6868. ஓத நூல்கள் செவியின்வழி, உள்ளம்***
***சீதை சீதை என ஆர் உயிர் தேய,***
***நாத வீணை இசை நாரதனார் தம்***
***வேத கீத அமுது அள்ளி விழுங்க,***

***நாத வீணை இசை நாரதனார் தம்*** - *இனிய நாதம் எழுப்பவல்ல வீணையுடைய நாரதமாமுனிவர் தம்முடைய;* ***வேத கீத அமுது*** - *சாம வேதத்தின் இசையெனும் அமுதத்தை (இசைக்க);* ***அள்ளி விழுங்க*** - *அள்ளி அள்ளி (செவிவாயால்) விழுங்கியும்;* ***நூல்கள் ஓத*** - *(அறிஞர்கள்) (உயர்ந்த) நூல்களை ஓத(க்கேட்டும்);* ***செவியின் வழி*** - *(இவை யாவும்) உள்ளத்துள்ளே நுழையாமல் செவி வழியாகவே (சென்று கொண்டிருக்க);* ***உள்ளம் சீதை சீதையென்று*** - *இராவணனது உள்ளமோ சீதை சீதை என்று (ஓயாமல்) செபித்துக் கொண்டிருப்பதால்;* ***ஆருயிர் தேய*** - *அவனது உயிரோ (காம ஆசையால்) தேய்ந்து கொண்டிருக்கவும்...*

*"சீதை, சீதை" எனும் அடுக்கு இராவணன் பிராட்டியிடம் கொண்ட பேராசையின் தவிப்பினை உணர்த்தி நின்றது.*

***6869. வெங் கரத்தர், அயில் வாளினர், வில்லோர்,***
***சங்கரற்கும் வலி சாய்வு இல் வலத்தோர்,***
***அங்கு அரக்கர் சதகோடி அமைந்தோர்,***
***பொங்கு அரத்த விழியோர் புடை சூழ,***

***வெங்கரத்தர்*** - *கொடிய கரங்களை யுடையவர்களும்;* ***அயில் வாளினர்*** - *வேலும் வாளும் ஏந்தியவர்களும்;* ***வில்லோர்*** - *வில்லினைத் தாங்கியவர்களும்;* ***சங்கரற்கும் வலிசாய்வு இல்வலத்தோர்*** - *சிவ பெருமானுக்கும் (எதிர்த்தால்) வலிமை குன்றாத பலமுள்ளவர்களும்;* ***அங்கு அரக்கர்*** - *(ஆகிய) அரக்கர்கள் அங்கே;* ***சதகோடி அமைந்தோர்*** - *நூறு கோடி எண்ணிக்கை யமைந்தவர் (ஆயினர்);* ***பொங்கு அரத்த விழியோர்*** - *குருதி பொங்குகிறது என்னுமாறு, சினத்தால் சிவந்த விழியுடையோர்களுமாகிய அவ்வரக்கர் குழாம்;* ***புடைசூழ*** - *(இராவணன்) இருமருங்கும் சூழ்ந்து நிற்கவும்...*

***6870. கல்லில் அம் கை உலகம் கவர்கிற்போர்,***
***நல் இலங்கை முதலோர், நவை இல்லோர்,***
***சொல்லில் அங்கு ஓர் சதகோடி தொடர்ந்தோர்,***
***வில் இலங்கு படையோர், புடை விம்ம,***

***அம்கை*** *- அழகிய கைகளால்;* ***கல்லில்*** *- அகழ்ந்தெடுப்பது என்றால்;* ***உலகம் கவர்கிற்போர்*** *- உலகங்களையே கவர்ந்தெடுக்க வல்லவரும்;* ***நல் இலங்கை முதலோர்*** *- அழகிய இலங்கைக்கு முதற்குடி மக்களாய் தொன்று தொட்டு வாழ்பவரும்;* ***நவை இல்லோர்*** *- (தம் மன்னனுக்கு) எந்தக் குற்றமும் புரியாதவரும்;* ***சொல்லில்*** *- எண்ணிக் கூறுமிடத்து;* ***அங்கு ஓர்சத கோடி தொடர்ந்தோர்*** *- அங்கே, ஒரு நூறு கோடியர் எனத் தொடர்பவரும்;* ***வில் இலங்கு படையோர்*** *- வில்கள் (தோளில்) மின்ன வருகிற) படை வீரர்கள்;* ***புடை விம்ம*** *- இருமருங்கும் புடை சூழவும்... கல்லில் தோண்டினால்... இலங்கையிலுள்ள படையரக்கர்களின் பெருமை கூறியவாறு "ஒருவரே வல்லவர்; ஓர் உலகத்தினை வெல்ல" (9310) என்பர் மேலும். அரக்கர் உலகுக்குப் பெருங்குற்றங்கள் பல இழைப்பவர் ஆயினும், படைவீரர் என்ற முறையில், தம் தலைவனுக்கு எக்குற்றமும் இழையாமல் போர் புரிபவர் ஆதலின் "நவை இல்லார்" என்றார். நவை-குற்றம்.*

***6871. பார் இயங்குநர், விசும்பு படர்ந்தோர்,***
***வார் இயங்கு மழையின் குரல் மானும்***
***பேரி, அங்கண் முருடு, ஆகுளி, பெட்கும்***
***தூரியம், கடலின் நின்று துவைப்ப,***

***பார் இயங்குநர்*** *- மண்ணில் இயங்குபவர்களும்;* ***விசும்பு படர்ந்தோர்*** *- வானில் சஞ்சரிப்பவர்களும் ஆகிய;* ***வார் இயங்கு மழையின் குரல் மானும்*** *- நீருடன் அரக்கர்கள் உலாவும் மேகத்தின் ஒலியைப் போன்று ஒலிக்கும்;* ***பேரி, அங்கண் முருடு, ஆகுளி, பெட்கும்தூரியம்*** *- பேரிகையும், அழகிய கண்களையுடைய முருடும், சிறு பறையும் ஆகிய யாவரும் விரும்பும் வாத்தியங்களை;* ***கடலின் நின்று துவைப்ப*** *- கடல் போன்று முழக்கவும்...*

*வார - நீர். "வார் ஆயிர முகமா நகர் மஞ்ச" (வி.பா.அருச்.தவநிலை. 159) என்னுமிடத்து வார் நீர் எனும் பொருளில் வந்தது. பேரி - முரசு. ஆகுளி, முருடு - பழைய போர்க்கால இசைக்கருவிகள்.*

***6872. நஞ்சும் அஞ்சும் விழி நாகியர் நாண***
***வஞ்சி அஞ்சும் இடை மங்கையர், வானத்து***
***அம் சொல் இன் சுவை அரம்பையர், ஆடி,***
***பஞ்சமம் சிவணும் இன் இசை பாட,***

***நஞ்சும் அஞ்சும் விழி*** *- விடமும் அஞ்சவல்ல விழிகளையுடைய;* ***நாகியர்*** *- நாக உலக மங்கையர்களும்;* ***நாண*** *- வெட்கமுற்று;* ***வஞ்சி அஞ்சும் இடை மங்கையர்*** *- வஞ்சிக்கொடியும் அஞ்சவல்ல இடையினையுடைய (வித்தியாதரப்) பெண்டிரும்;* ***இன்சுவை அஞ்சொல் வானத்து அரம்பையர்*** *- இனிய சுவையோடு கூடிய அழகிய*

*சொற்களை மொழியும் தேவமாதரும்;* ***பஞ்சமம் சிவணும் இன்இசை*** *- பஞ்சமப் பண் போன்ற இனிய இசையினை;* ***ஆடிப் பாட*** *- ஆடலோடு கூடப் பாடி இசைக்கவும்... நாகியர் - நாக உலகத்துப் பெண்கள். அரம்பையர் - வான் உலகத்து மகளிர். மூவுலகத்து அழகியரும் இராவணன் கால்களைச் சுற்றி ஆடிப்பாடிக் காலங் கழிக்கின்றனர் என்று அவன் ஆட்சியும் மாட்சியும் தெரிவித்தவாறு. ஞ்சமம் - எழுவகைப் பண்களில் ஒன்று. சிவணால்-ஒத்தல்.*

## *6873. நஞ்சு கக்கி எரி கண்ணினர், நாமக்*
## *கஞ்சுகத்தர், கதை பற்றிய கையர்,*
## *மஞ்சு உகக் குமுறு சொல்லினர், வல் வாய்க்*
## *கிஞ்சுகத்த கிரி ஒத்தனர், சுற்ற,*

***நஞ்சு கக்கி எரிகண்ணினர்*** *- விடம் உமிழ்ந்து, எரிகின்ற கண்களையுடையவரும்;* ***கதை பற்றிய கையர்*** *- கதாயுதத்தைப் பற்றியுள்ள கரங்களையுடையவரும்;* ***மஞ்சு உகக் குமுறு சொல்லினர்*** *- மேகமும் அஞ்சி வீழும்படியான குமுறி ஒலிக்கும் சொற்களையுடையவரும்;* ***கிஞ்சுகத்த வல்வாய்*** *- முருக்க மலர் போன்ற பெரிய சிவந்த வாய்களையுடைய;* ***கிரி ஒத்தனர்*** *- மலைகளை ஒத்தவரும் ஆகிய;* ***நாமக் கஞ்சுகத்தர்*** *- அச்சந்தரும் சட்டையணிந்த மெய்க்காவலர்கள்;* ***சுற்ற*** *- சுற்றிக் கொண்டே இருக்கவும்...*

*கஞ்சுகம் - சட்டை., கதை - தண்டு. கிஞ்சுகம்-முருக்கமலர்.. ஊன் உண்பவர் ஆகிய அரக்கருக்கு குருதி தோய்ந்த வண்ணம் உள்ள உதடுகள் உடைமை பற்றி, "வல்வாய்க் கிஞ்சுகத்த" என்றார். சிவந்த வாயையுடைய மலைபோன்றவர் -இல் பொருள் உவமை. நாமம்-அச்சம்.*

## *6874. கூய் உரைப்ப குல மால் வரையேனும்,*
## *சாய் உரைப்ப அரியவாய தடந் தோள்-*
## *வாய் உரைத்த கலவைக் களி வாசம்,*
## *வேய் உரைப்பது என, வந்து விளம்ப,*

***கூய் உரைப்ப*** *- (யாவருக்கும்) தெரியுமாறு உவமை கூறுவதற்கு உரிய;* ***குலமால் வரையேனும்*** *- எட்டுத்திக்கிலும் உள்ள பெரிய மலைகளாயினும்;* ***சாய் உரைப்ப அரிய ஆய தடந்தோள்வாய்*** *- உவமை கூறுவதற்கு இயலாதனவான அகன்ற (இராவணன்) தோள்களில்;* ***உரைத்த கலவைக்களி வாசம் -*** *பூசப் பெற்றுள்ள கலவைச் சாந்துகளின் நறுமணம்;* ***வேய் உரைப்பது என*** *- (இராவணன் வருகின்றான் என) ஒற்றர்கள் வந்து உரைப்பதைப் போன்று;* ***வந்து விளம்ப -*** *காற்றில் கலந்து வந்து உரைக்கவும்... கூய்- கூவி. எல்லோர்க்கும் தெரியுமாறு உரைத்தல். கூவியுரைத்தலாம். சாய்-சாயல்; உவமை.*

*யானையின் வருகையை மணி ஒலி உரைப்பது போல் இராவணன் வருகையை நறுமணம் தூதாக வந்து உரைக்கும் என அழகுற மொழிந்தார். வேய்-தூது; ஒற்றுமாம்.*

***6875. வேத்திரத்தர், எரி வீசி விழிக்கும்***
***நேத்திரத்தர், இறை நின்றுழி நில்லாக்***
***காத்திரத்தர், மனை காவல் விரும்பும்***
***சூத்திரத்தர், பதினாயிரர் சுற்ற,***

***வேத்திரத்தர்*** *- (கைகளிற்) பிரம்பினை ஏந்தியவரும்;* ***எரிவீசி விழிக்கும் நேத்திரத்தர்*** *- தீயுமிழுமாறு பார்க்கும் கண்களையுடையவரும்;* ***இறை நின்றுழி நில்லாக் காத்திரத்தர்*** *- சிறிது நேரம்கூட நின்ற இடத்திலேயே நில்லாமல் (உலவிக் கொண்டேயிருக்கும்) உடம்பினையுடையவரும்;* ***மனை காவல் விரும்பும் சூத்திரத்தர்*** *- அரண்மனைக் காவலுக்கு விரும்பியேற்க வல்ல உபாயங்கள் அறிந்தவரும்;* ***பதினாயிரர் சுற்ற*** *- பத்தாயிரம் பேர் சுற்றிக் காவல் புரியவும்...*

*வேத்திரம்-பிரம்பு. காத்திரம்-உடல். அரண்மனை வாயிற்காவலர்கள் நின்ற இடத்து நில்லாமல் நடந்த வண்ணம் பணிபுரிபவர் ஆதலின், "இறை நின்றுழி நில்லாக் காத்திரத்தர்" என்றார். இறை-சிறிது சூத்திரம்-உபாயம், நுட்பம்.*

*இராவணன், இராமனைக் காணுதல்*

***6876. தோரணத்த மணி வாயில்மிசை, சூல்***
***நீர் அணைத்த முகில் ஆம் என நின்றான்,***
***ஆரணத்தை, அரியை, மறை தேடும்***
***காரணத்தை, நிமிர் கண் கொடு கண்டான்.***

***தோரணத்த மணிவாயில் மிசை*** *- தோரணங்களோடு மணிகள் பதித்துள்ள கோட்டை வாயில் கோபுரத்தின் மேல்;* ***சூல் நீர் அணைத்த முகில் ஆம் என*** *-கருவாக நீரினை உட்கொண்டுள்ள கருமேகம் என்னுமாறு;* ***நின்றான்*** *- நின்றவனாகிய இராவணன்;* ***ஆரணத்தை*** *- நான் மறைகளின் வடிவு கொண்டவனை;* ***அரியை*** *- (அம்மறைகளின் நாயகனான) திருமாலை;* ***மறை தேடும் காரணத்தை*** *- அம்மறைகள் முழுதும் அறிய இன்னும் தேடிக் கொண்டிருக்கும் காரணப்பொருளை (இராமபிரானை)* ***நிமிர் கண்கொடு கண்டான்*** *- (ஆணவம்) ஓங்கிய தன் விழிகளால் பார்த்தான்.*

*இராவணன், இராமபிரானை முதன்முதலாகச் சந்திக்கும் சந்திப்பு ஆதலால், ஆர்வம் குமிழியிட, "ஆரணத்தை, அரியை, மறை தேடும் காரணத்தை" என அடுக்குகின்றார் கவிஞர் பிரான். இராமபிரானை, வீடணன் சந்தித்த போதும், இவ்வாறே உவகை மிகக்கூர்வார். (6493-98) ஆதலின் "நிமிர் கண் கொடு கண்டான்"*

*என்றார், கொடு-கொண்டு என்பதன் விகாரம். கண்டான் எனவே போதுமாயினும் 'கண்கொடு' என்றது அவன் கண் பெற்ற பேற்றினைச் சுட்டியதாம்.*

### *6877.* மடித்த வாயினன்; வழங்கு எரி வந்து
### பொடித்து இழிந்த விழியன்; அதுபோழ்தின்,
### இடித்த வன் திசை; எரிந்தது நெஞ்சம்;
### துடித்த, கண்ணினொடு இடத் திரள் தோள்கள்.

***மடித்த வாயினன்*** *- (இராமபிரானைக். கண்ட இராவணன் எழுந்த வெகுளியால்) உதட்டைக் கடித்த வாயினன் ஆனான்;* ***வயங்கு எரி வந்து*** *- ஒளிர்கின்ற சினத்தீ தோன்றி;* ***பொடித்து இழிந்த விழியன்*** *- சிறுசிறு பொறிகளாய் விழுகின்ற கண்களையுடையவன் ஆனான்;* ***அது போழ்து*** *- அப்பொழுது;* ***வன்திசை இடித்த*** *- வலிய திசைகளில் அவன் சின ஆவேசத்தால் இடி போன்ற ஒலி உண்டாயிற்று;* ***நெஞ்சம் எரிந்தது*** *- (சினத்தால்) அவன் உள்ளம் பற்றி எரிந்தது;* ***கண்ணினோடு*** *- அவன் கண்களோடு சேர்ந்து;* ***இடத்திரள் தோள்கள்*** *- இடப்பக்கத்தே திரண்ட அவன் பத்துத் தோள்களும்;* ***துடித்த*** *- துடித்தன.*

*துடித்த -அன்சாரியை பெறாத பலவின்வினை. வாய் மடித்தல்- உதடு கடித்தல். சினத்தின் மெய்ப்பாடு. "மடித்த பில வாய்கள் தொறும் வந்து புகை முந்த" (3115) சினத்தால் அவன் கண்கள் உலைக்களமாகி, தீப்பொறிகள் சிந்தின என்று அவன் வெகுளியின் உச்சம் விளம்பினார்.*

### *6878.* ஆக, ராகவனை அவ்வழி கண்டான்;
### மாக ராக நிறை வாள் ஒளியோனை
### ஏக ராசியினின் எய்த எதிர்க்கும்
### வேக ராகு என, வெம்பி வெகுண்டான்.

***ஆக*** *- இவ்வாறாக;* ***இராகவனை அவ்வழி கண்டான்*** *- இராமபிரானை அப்போது கண்ட இராவணன்;* ***மாக ராகம் நிறைவாள் ஒளியோனை*** *- ஆகாயத்திலே சிவந்த நிறமுடைய பேர் ஒளியுடையவனான சூரியனை;* ***ஏக ராசியினின்*** *- அமாவாசையில்;* ***எய்த எதிர்க்கும்*** *- நெருங்கிச் சென்று எதிர்க்கின்ற;* ***வேகராகு என*** *- வேகம் மிக்க ராகு என்னும் கிரகத்தைப் போல;* ***வெம்பி வெகுண்டான்*** *- மனம் வெதும்பி சீறினான்.*

*மாகம்-ஆகாயம். ராகம்-சிவப்பு. ஏகராசி - அமாவாசை. சூரியனும் சந்திரனும் ஒன்றாய்க்கூடும் நாள். எதுகை நோக்கி நான்கடியிலும் "ரா" இகரம் பெறாமலேயே வந்தது. இராவணனை இராகு என்றும், இராமபிரானைக் கதிரவன் என்றும் உவமித்தார். இராகு, சூரியனை மறைக்க முயன்று தோல்வியைத் தழுவுவது போல் இராமனை எதிர்க்க முனையும் இராவணன் தோல்வியையே தழுவ உள்ளான் என்பதை உவமையால் பெற வைத்தார்.*

*இராவணன் வினாவும், சாரன் விடையும்*

***6879. 'ஏனையோன் இவன் இராமன் எனத் தன்***
***மேனியே உரைசெய்கின்றது; வேறு இச்***
***சேனை வீரர் படையைத் தெரி' என்று***
***தான் வினாவ, 'எதிர், சாரன் விளம்பும்:***

***ஏனையோன் இவன்*** - *(மற்றவர்களிடமிருந்தும்) வேறுபட்டவனாகத் தோன்றுகிறவனான இவன்;* ***இராமன் எனத்தன் மேனியே உரை செய்கின்றது*** - *இராமன் என்று அவன் உடலின் தோற்றமே பேசுகின்றது;* ***வேறு இச்சேனை வீரர்*** - *(ஆகவே இவனைப் பற்றி உரைப்பதை விட்டு விட்டு) மற்ற படைவீரர்களினுடைய;* ***படையைத் தெரி என்று*** - *படைப் பெருமையைப் பற்றித் தெரிவிப்பாயாக என்று;* ***தான் வினாவ*** - *இராவணன் கேட்க;* ***சாரன் விளம்பும்*** - *சாரன் மறுமொழி கூறுவான்.*

*எம் பெருமான் திருமேனி, அன்பர் ஆவோர்க்கு உள்ளம் உருகவைக்கும்; கண்ணீர் பெருக வைக்கும்; அன்பர் அல்லார்க்கு சீற்றம் பெருக வைக்கும்; உதடு கடிக்கவைக்கும்; நெஞ்சம் எரிய வைக்கும்; பார்க்கக் கூச வைக்கும் என்பதனை மேற்பாடலாலும் இப்பாடலாலும் கவிஞர் பிரான் உணர வைத்தார். பெருமான் திருமேனி அன்பனான அநுமனையும் வீடணனையும் உருக வைத்தமை. "பெருமான் குண அழகாலே அன்பரைக் கூட்டும்; மேனி அழகாலே பகைவரை வாட்டும்" என்பதாம்.*

***6880. 'இங்கு இவன், "படை இலங்கையர் மன்னன்***
***தங்கை" என்றலும், முதிர்ந்த சலத்தால்,***
***அங்கை வாள்கொடு அவள் ஆகம் விளங்கும்***
***கொங்கை, நாசி, செவி, கொய்து குறைத்தான்.***

***இங்கு இவன்*** - *(சாரன் இலக்குவனைச் சுட்டிக்காட்டி) இதோ காணும் இவன்;* ***"படை இலங்கையர் மன்னன் தங்கை" என்றலும்*** - *'படை வலிமை மிக்க இலங்கையர் வேந்தன் இராவணன் தங்கை என்று கேட்டவுடனே;* ***முதிர்ந்த சலத்தால்*** - *முற்றிய கோபத்தால்;* ***அங்கை வாள் கொடு*** - *அழகிய கையில் வாளை ஏந்தி;* ***அவள் ஆகம் விளங்கும் கொங்கை*** - *உன் தங்கை சூர்ப்பனகையின் மார்பில் விளங்கிய தனங்களையும்;* ***நாசி, செவி கொய்து குறைத்தான்*** - *மூக்குடன் காதுகளையும் வெட்டி வீழ்த்திய இலக்குவன் ஆவான் (என்றான்).*

*சலம்-தணியாச் சினம், ஆறாக்கோபம்.*

***6881. 'அறக்கண் அல்லது ஒரு கண் இலன் ஆகி,***
***நிறக் கருங் கடலுண் நேமியின் நின்று,***
***துறக்கம் எய்தியவரும் துறவாத***
***உறக்கம் என்பதனை ஓட முனிந்தான்.***

***அறக்கண் அல்லது ஒரு கண் இலன் ஆகி*** - *(இந்த இலக்குவன்) தரும நெறியை நோக்குவதல்லாமல் வேறொரு நெறியை நோக்காதவன் ஆகி;* ***நிறக் கருங்கடல் உண்*** - *நிறத்தால் கருமையுடைய கடலைத் தன்னுள் கொண்ட;* ***நேமியின் நின்று*** - *சக்கரவாள மலைபோல் அமைந்து;* ***துறக்கம் எய்தியவரும்*** - *சொர்க்கத்தைச் சென்றடைந்தவர்களும்;* ***துறவாத உறக்கம் என்பதனை*** - *நீக்க இயலாத நித்திரை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதனை;* ***ஓட முனிந்தான்*** - *வெருண்டோடுமாறு சினந்தவன் ஆவான்.*

*கடலுக்குக் காவலாக அமைந்து அதனைச் சூழ்ந்துள்ளது சக்கரவாள மலை. அதுபோல், இராமனைக் காத்து அவனுக்குரிய சூழலாக அமைந்தவன் இலக்குவன். அறக்கண்-அறமே கண்ணாகக் கொள்ளல். கண் ஆகு பெயராக நெறியைக் குறித்தது. இச்செய்யுளில் கம்பன் கழகப் பாடம் திருத்தப்பட்டது. முன்னைய பாடம் 'கடலுள் நேமி' என்பதாகும். சக்கரவாளம் கடலைத் தன்னுள் கொண்டதே. அன்றித்தான் கடலுள் இருப்பதன்று ஆதலின் 'கடல் உண் நேமி' என்று பாடம் கொண்டு பொருள் உரைத்தல் சிறந்தது. இச்சிறந்த பாட அமைப்பு டாக்டர். மா.ரா.போ. குருசாமி அவர்கள் தந்ததாகும்.*

***6882. 'கை அவன் தொட அமைந்த கரத்தான்,***
**ஐய ! வாலியொடு இவ் அண்டம் நடுங்கச்**
**செய்த வன் செருவினின் திகழ்கின்றான்**
**வெய்யவன் புதல்வன்; யாரினும் வெய்யான்.**

**ஐய** - *ஐயனே! (இவன்)* **அவன் கைதொட** - *அந்த இராமன் தன் கையினால் பற்றி;* **அமைந்த கரத்தான்** - *(நட்பு கொள்ளும் பெரும் பேறு) பெற்ற கைகளையுடையவன்;* **வாலியொடு இவ் அண்டம் நடுங்க** - *வாலியோடு இந்த உலகம் நடுங்குமாறு;* **வன் செருவினில் திகழ்கின்றான்** - *கொடிய போரிட்ட புகழாளன்;* **வெய்யவன் புதல்வன்** - *சூரியன் புதல்வன் ஆகிய சுக்கிரீவன்;* **யாரினும் வல்லான்** - *(இவன்) யாவரிலும் வலிமை வாய்ந்தவன் ஆவான்.*

*இப்பாடல், சுக்கிரீவனைச் சாரன் சுட்டி உணர்த்தியது குறித்தது.*

***6883. 'தந்தை மற்றையவன் சார்வு இல் வலத்தோர்***
***அந்தரத்தர் அமுது ஆர்கலி காண,***
***மந்தரத்தினொடும் வாசுகியோடும்,***
***சுந்தரப் பெரிய தோள்கள் திரித்தான். ?***

***மற்றையவன் தந்தை*** - *(அந்தச் சுக்கிரீவனுக்கு அருகில் இருக்கும்) மற்றொருவன் ஆகிய அங்கதன் அவனுடைய தந்தையாகிய வாலி;* ***சார்வுஇல் வலத்தோன்*** - *கூட்டு ஒருவரையும் வேண்டாத வலிமையையுடையவன்;* ***அந்தரத்தர் ஆர்கலி அமுது காண*** - *வான் உலகத் தேவர்கள் கடலிலிருந்து அமுது பெறுமாறு;* ***மந்தரத்தினொடும் வாசுகி யோடும்*** - *மந்தர மலையோடும் வாசுகி எனும் பாம்போடும் (சேர்த்து);* ***சுந்தரப் பெரிய தோள்கள் திரித்தான்*** - *அழகுமிக்க பெரிய தோள்களால் (கடலைக்) கடைந்தவன் ஆவான். அங்கதனை, தந்தையின் பேராற்றலால் அறிமுகப்படுத்தியவாறு.*

***6884. 'நடந்து நின்றவன், நகும் கதிர் முன்பு***
***தொடர்ந்தவன்; உலகு, சுற்றும் எயிற்றின்***
***இடந்து எழுந்தவனை ஒத்தவன்; வேலை***
***கடந்தவன் சரிதை கண்டனை அன்றே?***

***நடந்து நின்றவன்*** - *அங்கே நடந்து கொண்டிருப்பவன்;* ***நகும் கதிர் முன்பு தொடர்ந்தவன்*** - *ஒளிர்கின்ற சூரியனை (கனியென்ற கருதிப்) பின் தொடர்ந்தவன்;* ***உலகு சுற்றும் எயிற்றின்*** - *உலகை வளைந்த பற்களால்;* ***இடந்து எழுந்தவனை ஒத்தவன்*** - *அகழ்ந்து எடுத்துக்கொண்டு வந்த வராக மூர்த்தியாகிய திருமாலைப் போன்றவன்;* ***வேலை கடந்தவன்*** - *கடலைக் கடந்து (இலங்கைக்கு) வந்தவன் ஆகிய அநுமன்;* ***சரிதை கண்டனை*** - *அவன் சரிதத்தை நீ கண்ணாரக் கண்டறிந்துள்ளவன் அல்லவா?*

*மேல், (6882) 'இராமன் கைகளால் தொடுமாறு நின்று கொண்டிருப்பவன்' என்று சுக்கிரீவனைச் சுட்டிக் கூறினார். இங்கும் நடந்து கொண்டு காவல் புரிந்த வண்ணம் உள்ள அனுமன் செயலைச் சுட்டினார். நிகழ்வுகளை அறிமுகம் செய்யுந்திறத்தால் கதை மாந்தர்களை மனத்திரை முன் கொண்டு வந்து நிறுத்தும் நாடகப் பாங்கு போற்றுதற்குரியது. பாத்திரங்களின் நிலைகளுக்கேற்ப வருணனையும் பொருந்தி வருகிறது. திருமகளாகிய சீதையை மீட்க அனுமன் செல்வது அன்றைய திருமால் செயலுக்கு ஒப்பாதலால் 'இடந்தெழுந்தவனை ஒத்தவன்" என்பது பொருந்தும் உவமையாதல் உணர்க.*

***6885. 'நீலன், நின்றவன்; நெருப்பின் மகன்; திண்***
***சூலமும் கயிறும் இன்மை துணிந்தும்,***

***ஆலம் உண்டவன் அடுந் திறல் மிக்கான்;***
***"காலன்" என்பர், இவனைக் கருதாதார்.***

***நின்றவன் நீலன்*** - இதோ இங்கு நிற்கிற இவன் நீலன்; ***நெருப்பின் மகன்*** - தீக்கடவுளாகிய அக்கினியின் புத்திரன்; ***திண் சூலமும் கயிறும்*** - திண்ணிய சூலாயுதமும் பாசக் கயிறும்; ***இன்மை துணிந்தும்*** - இவன் கைகளில் இல்லாமையைத் துணிவாக அறிந்திருந்தும்; ***இவனைக் கருதாதார்*** - இவனைப் பற்றி இவன் பகைவர்கள்; ***அடும்திறல் மிக்கான் ஆலம் உண்டவன்*** - சங்காரம் செய்வதில் வல்லோனாகிய நஞ்சுண்ட கண்டனாய் விளங்கும் சங்கார மூர்த்தியாகிய சிவபிரான் (என்றும்); ***காலன் என்பர்*** - இயமன் என்றும் கூறுவர்.

*கயிறு-பாசக் கயிறு. பாசம் என்பதே கயிறாயினும் பாசக்கயிறு என்னும் வழக்கால் இயமனின் படையைக் குறித்தது. சூலம் இன்மை துணிந்தும் ஆலம் உண்டவன் என்றும், கயிறு இன்மை துணிந்தும் காலன் என்றும் இவனை இவன் பகைவர் கருதுவர் என்று நிரல் நிறையாகப் பொருள் கொள்க. இதனால் சூலமும் கயிறும் இன்றியே அவற்றிற்குரியார் புரியும் வீரம் விளைப்பவன் நீலன். என்பது கருத்து.*

**கலித்துறை**

***6886. 'வேறாக நின்றான், நளன் என்னும் விலங்கல் அன்னான்;***
***ஏறா, வருணன் வழி தந்திலன் என்று இராமன்***
***சீறாத உள்ளத்து எழு சீற்றம் உகுத்த செந் தீ***
***ஆறாதமுன்னம், அகன் வேலையை ஆறு செய்தான்.***

***வேறாக நிற்பான்*** - (அதோ அங்கு) தனித்து நிற்பவன்; ***நளன் என்னும் விலங்கல் அன்னான்*** - நளன் என்னும் பெயர் கொண்ட மலையைப் போன்றவன்; ***ஏறா வருணன்*** - (இராமன் வழிவேண்டும் என வேண்டியும்) செவியில் ஏற்காத வருணன்; ***வழி தந்திலன் என்று*** - கடலைக்கடக்க வழிதரவில்லை யென்று; ***இராமன் சீறாத உள்ளத்து எழுசீற்றம்*** - சினவாத மனமுடைய இராமன் மனத்தே எழுந்த சினம்; ***உகுத்த செந்தீ*** - வெளியிட்ட செந்தீ - ***ஆறாத முன்னம்*** - தணிவதற்குள்; ***அகன் வேலையை ஆறு செய்தான்*** - அகன்ற கடலை அணையாக்கி வழி செய்தவன்.

*"குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது" (திருக்கு. 29) ஆதலின் சீறாத உள்ளத்து இராமன் சீற்றச் செந்தீ ஆறாத முன்னம் கடலுக்கு ஆறு செய்தான். என்று நளன் பெருமையும் இராமன் பெருமையும் ஒருங்கு கூறியவாறு. அகன்ற கடலை ஆறு செய்தான் என்பது ஒரு நயம். ஆறு - நதி, வழி சிலேடை, நளன் செயற்கரிய செய்தவன் என்பது தொனி.*

*6887. 'முக் காலமும் மொய்ம் மதியால் முறையின் உணர்வான்,*
*புக்கு ஆலம் எழப் புணரிப் புலவோர் கலக்கும் அக் காலம் உள்ளான், கரடிக்கு அரசு ஆகி நின்றான்,*
*இக் காலம் நின்றும் உலகு ஏழும் எடுக்க வல்லான்.*

***கரடிக்கு அரசு ஆகிநின்றான்*** - *(அதோ) கரடிகளுக்கு எல்லாம் தலைவன் ஆகி நிற்கின்ற அவன் சாம்பன்.* ***முக்காலமும் மொய்ம்மதியால் முறையின் உணர்வான்*** - *(அவன்) (இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும்) முன்று காலங்களையும் நிறைந்த அறிவால் முறையே உணர்ந்து சொல்லவல்லவன்;* ***புக்கு ஆலம் எழ*** *- உட்புகுந்து நஞ்சு எழுமாறு;* ***புணரி புலவோர் கலக்கும் - கடலைத் தேவர்கள் கலக்கிய; அக்காலம் உள்ளான்*** *- அந்தக் காலத்திலேயே (அவன்) இருந்தவன்;* ***இக்காலம் நின்றும்*** *- இவ்வளவு காலம் வாழ்ந்திருந்தும் (இப்போதும்);* ***உலகு ஏழும் எடுக்க வல்லான்*** *- ஏழு உலகங்களையும் பெயர்த்தெடுக்கும் வல்லமை வாய்ந்தவன்.*

*சிலர்க்கு இறந்தகாலம் மறந்து போய் நிகழ்காலமே நினைவில் நிற்கும். பலருக்கும் எதிர்காலம் இப்படி இருக்கும் என முற்றிலும் தெரியாது. சாம்பனுக்கோ முக்காலமும் உணரும் நிறைமதியுண்டு. என அவன் அறிவுத் திறம் உரைத்தது. கடல் கடைந்த அன்றே இருந்தவன். அவனுக்கு யுகம் கடந்தும் பலம் கடவாத உடல் திறமும் உண்டு என சாம்பனின் அறிவு உடல் என இருதிறமும் உரைத்தவாறு. முக்காலம் உணர்தலை அறிவன் வாகை என்பர். மொய்ம்மதி-நிறையறிவு.*

*6888. 'சேனாபதிதன் அயலே, இருள் செய்த குன்றின் ஆனா மருங்கே, இரண்டு ஆடகக் குன்றின் நின்றார்,*
*ஏனோரில் இராமன் இலக்குவன் என்னும் ஈட்டார்;*
*வானோர்தம் மருத்துவர் மைந்தர்; வலிக்கண் மிக்கார்.*

***சேனாபதி தன் அயலே*** *- சேனாதிபதியாகிய நீலன் அருகிலே;* ***இருள் செய்த குன்றின் மருங்கே ஆனா*** *- இருண்ட நிறமுடைய குன்றின் பக்கத்தே நீங்காமல் (நிற்கும்);* ***இரண்டு ஆடகக் குன்றின் நின்றார்*** *- இரண்டு பொற்குன்றுகள் போல நிற்கின்ற அவ்விருவரும்;* ***ஏனோரில்*** *- சேனையிலிருக்கும் பிறருக்குள்ளே;* ***ராமன் இலக்குவன் என்னும் ஈட்டார்*** *- இராமலக்குவர் போன்ற வலிமையுடையவர்கள்;* ***வானோர் தம் மருத்துவர் மைந்தர்*** *- தேவர்களுடைய மருத்துவர்களாகிய அசுவினி தேவர்களின் குமாரர்கள்;* ***வலிக்கண் மிக்கார்*** *- வலிமையில் மிகுந்தவர்கள்.*

*கருநிறமுடைய நீலனின் அருகில் பொன்னிறமுடைய அசுவினி தேவரின் மைந்தர்கள் இருவரும் நிற்பது நீலமலைக்கருகே இரண்டு பொன் மலைகள்*

*நிற்பது போன்றிருந்தது என்பதாம். மேல், நீலனைக் குறிக்கையில் அவன் வானரப்படையின் சேனாதிபதி என்னும் செய்தி விடுபட்டுப் போனமையால் இப்பாட்டில் செய்தியைச் சொல்லி குறையை நிறைவு செய்தார். ஆடகம்- பொன்னினம் நால்வகையுள் ஒன்று. ஈடு-வலிமை. மயிந்தன், துமிந்தன் என்னும் வானர வீரர்களே அசுவினி தேவகுமாரர்கள் அம்சமாய்ப் பிறந்தவர்கள் என்பர்.*

***6889. 'உவன்காண் குமுதன்; குமுதாக்கனும் ஊங்கு***
***அவன்காண்,***
***இவன்காண் கவயன்; கவயாக்கனும் ஈங்கு***
***இவன்காண்;***
***சிவன்காண் அயன்காண் எனும் தூதனைப் பெற்ற***
***செல்வன்***
***அவன்காண், நெடுங் கேசரி என்பவன், ஆற்றல்***
***மிக்கான்.***

***உவன் காண் குமுதன்*** *- அதோ அந்த நடுவிடத்திலேயிருப்பவன் குமுதன்;* ***ஊங்கு அவன் காண் குமுதாக்கன்*** *- அதோ அவனருகில் நிற்பவன்தான் குமுதாக்கன்;* ***இவன் காண் கவயன்*** *- இதோ இப்பக்கம் காண்கிறானே இவன்தான் கவயன்;* ***கவயாக்கனும் ஈங்கு இவன்காண்*** *- கவயாக்கன் எனப்படுபவனும் இதோ இங்கு காணப்படுகிறான்; காண்பாய்!* ***சிவன் காண்; அயன் காண்*** *- இவன் சிவனே; இவன் பிரமனே;* ***எனும் தூதனைப் பெற்ற செல்வன்*** *- என்று சொல்லப்படுகின்ற அனுமனாகிய தூதனைப் பெற்றுத்தந்த (பெருஞ்) செல்வனாகிய;* ***அவன்காண் நெடுங்கேசரி*** *- அவன்தான் அந்த நீண்ட புகழுக்குரிய கேசரி எனப்படுபவன்;* ***ஆற்றல் மிக்கான்*** *- பேராற்றல் படைத்தவன்.*

*குமுதாக்கன் (குமுத + அக்கன்) குமுதம் போன்ற கண்களையுடையவன். கவயாக்கன்-பசுவின் கண்கள் போன்ற கண்களையுடையவன். தம் இதயம் கவர்ந்த தொண்டனாகிய அநுமனைத் தந்த தந்தையாதலின், சிவன் காண்; அயன்காண் எனும் தூதனைப் பெற்ற செல்வன்; நெடுங்கேசரி என்றார். கேசரிக்கும் அஞ்சனைக்கும் பிறந்தவன் ஆஞ்சநேயனாகிய அநுமன் என்க. அநுமன் அமிசத்தால் சிவனும் அறிவால் பிரமனும் ஆதலின் "சிவன் காண்; அயன் காண்" எனப்பட்டான். ஒப்பு, "விரிஞ்சனோ விடை வலானோ" (3768) "காலனை ஒக்கும்தூதன் காலும் கண்ணுதலும் என்பார். " (6821); " புராரிமற்று யானே வாத சேயெனப் புகன்றான்" (206) "ஆதி அயன் தானேயென யாதும் அறைதின் நீர்!" (4725) என்று பல இடங்களில் இச்செய்தி குறித்தமை காண்க.*

***6890. 'முரபன், நகு தோளவன், மூரி மடங்கல் என்னக்***
***கர பல் நகம் அன்னவை மின் உகக்***
***காந்துகின்றான்;***

***வர பல் நகம்தன்னையும் வேரொடு வேண்டின்***
***வாங்கும்***
***சரபன் அவன்; சதவலி ஆய தக்கோன்.***

***நகுகோளவன்*** - *ஒளிர்கின்ற தோளினையுடையவனாய்;* ***மூரி மடங்கல் என்ன*** - *வலிய நரசிங்கம் என்று கூறும்படியாக;* ***கரம், பல், நகம் அன்னவை*** - *கைகளும், பற்களும், நகங்களும் ஆகியவை;* ***மின் உகக் காந்துகின்றான்*** - *மின்னல் போன்று ஒளி சிந்துமாறு விளங்குகின்ற அவன்தான்;* ***முரபன்*** - *முரபன் என்னும் பெயருடையவன்;* ***வரபல் நகம் தன்னையும்*** - *சிறந்த பல மலைகளையும்;* ***வேண்டின் வேரொடு வாங்கும்*** - *விரும்பினால் வேரொடு பெயர்க்கவல்ல ஆற்றலையுடைய;* ***அவன் சரபன்*** - *அவன்தான் சரபன் என்பவன்;* ***இவன்*** - *இதோ இங்கிருப்பவன்;* ***சதவலி ஆய தக்கோன்*** - *சதவலி எனும் பெயருடைய பெரியோன்.*

*மூரி-வலிமை-மடங்கல். திரிபு அணி.*

***6891. 'மூன்று கண் இலன் ஆயினும், மூன்று எயில்***
***எரித்தோன்***
***போன்று நின்றவன் பனசன்; இப் போர்க்கு எலாம்***
***தானே***
***ஏன்று நின்றவன் இடபன்; மற்று இவன்தனக்கு***
***எதிரே***
***தோன்றுகின்றவன் சுடேணன், மூதறிவொடு***
***தொடர்ந்தோன்.***

***மூன்று கண் இலன் ஆயினும்*** - *மூன்று கண்களையுடையவன் அல்லன் ஆயினும்;* ***மூன்று எயில் எரித்தோன்*** - *முப்புரம் எரித்த சிவபிரான் போல் நிற்பவன்;* ***பனசன்*** - *பனசன் எனப்படுவான்;* ***இப்போர்க்கு எலாம் தானே ஏன்று நின்றவன் இடபன்*** - *இந்தப் போர் அனைத்திற்கும் தானே (முதல் வரிசையில்) ஏற்று நிற்பவன் ஆகிய (இவன்) இடபன் ஆவான்;* ***மற்று இவன் தனக்கு*** - *வேறு இவனுக்கு;* ***எதிரே தோன்றுகின்றவன்*** - *எதிர்திசையில் தோன்றுகின்ற அவன்;* ***சுடேணன்*** - *சுடேணன் எனும் பெயரினன்;* ***மூதறிவொடு தொடர்ந்தான்*** - *முற்றிய அறிவோடு கூடியவன்.*

*மூன்று கண்ணில்லாமலும் முப்புரம் எரிக்கவல்ல ஆற்றல் உடையவன் பனசன் என்றவாறு. போர் நடக்கும் போதெல்லாம் இரண்டாம் வரிசையை விரும்பாது முதல் வரிசையைத் தானாகவே விரும்பி வந்து நிற்பவன் இடபன் ஆதலின், "தானே ஏன்று நின்றவன்" என்றார். உடல் வலிவோடு அறிவு வலியும் தொடர்வது வீரர்க்குப் பெருஞ் சிறப்பு நல்குமாதலின், மூதறிவொடு தொடர்ந்தான் சுடேணன் என்றார்.*

***6892. 'வெதிர் கொள் குன்று எலாம் வேரொடும் வாங்கி, மேதினியை***
***முதுகு நொய்து எனச் செய்தவன், கனலையும் முனிவோன்,***
***கதிரவன் மகற்கு இட மருங்கே நின்ற காளை,***
***ததிமுகன்; அவன், சங்கன் என்று உரைக்கின்ற சிங்கம்.***

***கதிரவன் மகற்கு*** - *சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கு;* ***இடமருங்கே நின்ற காளை*** - *இடப்பக்கமாய் நிற்கின்ற காளை போன்ற வீரன்;* ***வெதிர்கொள் குன்று எலாம் வேரொடும் வாங்கி*** - *மூங்கில்களைத் தன்னிடம் கொண்ட மலைகளையெல்லாம் அடியோடே பெயர்த்து;* ***மேதினியை முதுகு*** - *பூமியின் முதுகினை;* ***நொய்தெனச் செய்தவன்*** - *கனஞ்சுமக்காதிருக்கச் செய்தவனும்;* ***கனலையும் முனிவோன்*** - *தீயையும் சீறுகின்ற சினமுடையோனும் ஆகிய;* ***ததிமுகன்*** - *ததிமுகன் எனும் பெயர் உடையோன்;* ***அவன்*** - *அதோ அங்கிருப்பவன்;* ***சங்கன் என்று உரைக்கின்ற சிங்கம்*** - *சங்கன் என்று உரைக்கப்படுகின்ற சிங்கம் போன்றவன்.*

*வெதிர்-மூங்கில். அது குறிஞ்சிக் கருப் பொருள்களுள் ஒன்று ஆதலால் "வெதிர் கொள் குன்று" என்றார். மலைகளைப் பிடுங்கி, பூமியின் முதுகு சுமக்கும் பாரத்தைக் குறைத்தவன் ஆதலின், "மேதினியை முதுகு நொய்தெனச் செய்தவன்" என்று ததிமுகன் பெருமை சாற்றினார்.*

***6893. 'அண்ணல் ! கேள்: இதற்கு அவதியும் அளவும் ஒன்று உளதோ?***
***விண்ணின் மீனினைக் குணிப்பினும், வேலையுள் மீனை***
***எண்ணி நோக்கினும், இக் கடல் மணலினை எல்லாம்***
***கண்ணி நோக்கினும், கணக்கு இலது' என்றனன், காட்டி.***

***அண்ணல்!*** - *பெருமைக்குரியோனே!* ***கேள்*** - *கேட்பாயாக (என்று);* ***காட்டி*** - *(அவ்வானரச் சேனையினைக்) காண்பித்து;* ***இவர்க்கு*** - *இந்த வானர வீரர்கட்கு;* ***உவமையும் அளவும்*** - *ஒப்பும் எண்ணிக்கையும்;* ***ஒன்று உளதோ?*** - *ஏதேனும் உண்டோ?* ***விண்ணின் மீனினைக் குணிப்பினும்*** - *வானத்து மீன்களை எண்ணினாலும்;* ***வேலையுள் மீனை எண்ணி நோக்கினும்*** - *கடலில் உள்ள மீன்களை எண்ணிப் பார்த்தாலும்;* ***இக்கடல் மணலினை எல்லாம் கண்ணி நோக்கினும்*** - *இந்தக் கடலில் உள்ள மணலை எல்லாம் கருதிப் பார்த்தாலும்;* ***கணக்கு இ(ல்)லை*** - *கணக்கிட இயலாது என்றனன்.*

*சேனையினை எண்ண இயலாது என்பதற்கு வானத்து மீன்களையும், கடல் மீன்களையும் ஆழி மணலையும் எண்ண இயலாதது போல் என மூன்று உவமைகள் காட்டினார்.*

*இராவணன் வானரப் படையை இகழ்தல்*

***6894. சினம் கொள் திண் திறல் அரக்கனும், சிறு நகை செய்தான்,***
***'புனம் கொள் புன் தலைக் குரங்கினைப் புகழுதி போலாம்;***
***வனங்களும் படர் வரைதொறும் திரிதரு மானின்***
***இனங்களும் பல என் செயும்; அரியினை?' என்றான்.***

***சினம் கொள் திண்திறல் அரக்கனும்*** *- (சாரன் இவ்வாறு புகழ்ந்ததைக் கேட்டு) சினம் கொண்ட பேர் ஆற்றல் வாய்ந்த இராவணனும்;* ***சிறு நகை செய்தான்*** *- புன்முறுவல் பூத்தவனாய் (அச்சாரனை நோக்கி);* ***புனம் கொள் புன்தலைக் குரங்கினைப் புகழுதி போலாம்*** *- கொல்லைகளில் அலைந்து திரிகின்ற சிறிய தலையினைக் கொண்ட குரங்குகளைப் புகழ்கின்றாய் போலும்!* ***வனங்களும் படர் வரைதொறும்*** *- வனங்களோடு கூடியுள்ள மலைகள் தோறும்;* ***திரிதரும்*** *- திரிகின்ற;* ***மானின் பல இனங்களும்*** *- மான்களின் பற்பல வகைக் கூட்டங்களும் (சேர்ந்து எதிர்த்தால்);* ***அரியினை என் செயும்*** *- ஒரு சிங்கத்தை என்ன செய்துவிட முடியும்?* ***என்றான்...*** *- என்று (ஏளனமாய்க்) கூறினான்.*

*இராவணனுக்கு இப்போதெழுந்த சிறுநகை, எள்ளல் அடியாகப் பிறந்தது. போலாம்-ஒப்பில் போலி.*

*மகுட பங்கப் படலம்*

இராவணன் முதலியோர் வானரப் படைகளைக் கண்ணுற்றபோது, இராமபிரான் வீடணனுடன் சுவேல மலை மீதிருந்து அவர்களைக் காண்கின்றான். இவன்தான் இராவணன் என வீடணன் சொல்லி முடியும் முன், இராவணனை நோக்கிச் சுக்கிரீவன் பாய்ந்து விடுகின்றான். இருவரும் கைகலக்கின்றனர். சுக்கிரீவனைக் காணாது இராமபிரான் சோகப்படுவதும். இராவணன் முடிமணிகளைப் பறித்துக் கொண்டு சுக்கிரீவன் மீண்டு வருவதும், இராமன் மகிழ்ச்சியும், சுக்கிரீவன் பணிவுரையும் வீடணன் பாராட்டுவதும், இராமன் பாராட்டுவதும் இப்படலச் செய்திகள் ஆகும்.

*வீடணனை, இராமன் அரக்கர்களை அறிவிக்கக் கேட்டல்*

***6895. என்னும் வேலையின், இராவணற்கு இளவலை, இராமன்***
***'கன்னி மா மதில் நகர்நின்று நம் வலி காண்பான்***
***முன்னி, வானினும் மூடி நின்றார்களை, முறையால்,***
***இன்ன நாமத்தர், இனையர், என்று இயம்புதி'***
***என்றான்.***

***என்னும் வேலையின்*** - (இராவணன் சாரனிடம் இவ்வாறு) கூறிக் கொண்டிருந்தபோது; ***இராமன்*** - இராமபிரான்; ***இராவணற்கு இளவலை*** - இராவணனுக்குத் தம்பியான வீடணனை நோக்கி; ***நம் வலி கண்பான் முன்னி*** - நம் படை வலிமையைக் காணக் கருதி; ***கன்னி மாமதில் நகர் நின்று*** - அழியாத் தன்மையுடைய உயர்ந்த மதில்கள் சூழ்ந்த இலங்கையிலிருந்து; ***வானினும் மூடி நின்றார்களை*** -ஆகாயத்தின் கண்ணும் மறைத்து நிற்பவர்களாகிய அரக்கர்களை; ***முறையால்*** - முறைப்படி; ***இன்ன நாமத்தர்*** - இன்னின்ன பேர்களையுடையவர்கள்; ***இனையர்*** - இத்தகையவர்கள்; ***என்று இயம்புதி*** - என்று கூறுவாயாக; என்றான்-

*கன்னி மாமதில்-பகைவர் கை தொடாமதில். வேலை-வேளை.*

***6896. 'நாறு தன் குலக் கிளை எலாம் நரகத்து நடுவான்***
***சேறு செய்து வைத்தான், உம்பர் திலோத்தமை***
***முதலாக்***
***கூறும் மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து***
***ஏறி நின்றவன், புன் தொழில் இராவணன்' என்றான்.***

***கோபுரக் குன்றத்து ஏறி*** - மலை போன்ற கோபுரத்தின் மேல் ஏறி; ***உம்பர் திலோத்தமை முதலாக்*** - தேவருலகத்துத் திலோத்தமை முதலாக; ***கூறு மங்கையர் குழாத்திடை*** - புகழப்படுகின்ற மகளிர் கூட்டத்திடையே; ***நின்றவன்*** - நிற்பவன்தான்; ***தன் குலக் கிளை நாறு எலாம்*** -தன்னுடைய குலத்தில் உதித்த சுற்றத்தார்

*என்னும் நாற்றுக்களையெல்லாம்;* ***நரகத்து நடுவான்*** *- நரகத்தில் நடுவதற்காக;* ***சேறு செய்து வைத்தான்*** *- நரகத்தை சேற்றுழவு செய்து வைத்திருப்பவனான;* ***புன் தொழில் இராவணன்*** *- இழிசெயல் புரிகின்ற இராவணன்;* ***என்றான்*** *- என்றான்.*

*கோபுரத்து ஏறி நிற்பவன் புன்தொழில் இராவணன் என்பதில் உள்ள எள்ளற் சுவையை நோக்குக. ஒரு வீரன் வீரர் குழாம் புடைசுழ நிற்றல் இயல்பு. இவன் மகளிர் குழாம் புடை சூழ நிற்கிறான் என அவன் ஒழுக்கத்தின் இழிவை உணர்த்தினார். இதனால், புன்தொழில் இராவணன் எனப்பட்டான். நாற்றங்காலிலிருந்து நாற்றைப் பிடுங்கி வயலில் நடுவது வழக்காதலின். இலங்கை நாற்றங்கால் ஆயிற்று; நரகம் வயல் ஆயிற்றென்க.*

## *சுக்கிரீவன் இராவணன் மேல் பாய்தல்*

***6897. கருதி மற்றொன்று கழறுதல்முனம், விழிக் கனல்கள்***
***பொருது புக்கன முந்துற, சூரியன் புதல்வன்,-***
***சுருதி அன்னவன், 'சிவந்த நல் கனி' என்று சொல்ல,***
***பருதிமேல் பண்டு பாய்ந்தவன் ஆம் என,-***
***பாய்ந்தான்.***

**கருதி மற்று ஒன்று கழறுதல் முனம்** *- (வீடணன் மேலும்) மனத்தால் வேறு எண்ணி, ஒன்று கூறுவதற்கு முன்பே;* **சூரியன் புதல்வன்** *- சுக்கிரீவன்;* **விழிக்கனல்கள் பொருது முந்துறப் புக்கன** *- தனது கண்ணில் சினத்தால் எழுந்த தீப்பொறிகள் இராவணனைத் தாக்க முன்னால் புறப்பட்டவை போலப் புறப்பட;* **சுருதியன்னவன்** *- வேதமே போன்றவனும்;* **சிவந்த நல்கனி என்று சொல்ல** *- உனக்கு உணவு சிவந்த நல்லகனிகள் என்றுதாய் சொல்ல;* **பருதிமேல் பண்டு பாய்ந்தவன் ஆம்** *- சூரியனைக் கனியென்று முன்பு சூரியன் மேல் பாய்ந்தவனும் ஆகிய;* **எனப் பாய்ந்தான்** *- அநுமனைப் போல் (இராவணனை நோக்கிப்) பாய்ந்தான்.*

*சுக்கிரீவன் உடலினும் மனம் முந்த மனத்திலும் மனத்துள் எழுந்த சினம் முந்த, சினத்திலும் அதனால் எழுந்த தீப்பொறிகள் முந்தி இராவணனைத் தாக்கச் சென்றன என்று கூறியுள்ள கற்பனைத் திறன் சுவைக்கத் தக்கது.*

***6898. சுதையத்து ஓங்கிய சுவேலத்தின் உச்சியைத் துறந்து,***
***சிதையத் திண் திறல் இராவணக் குன்றிடைச்***
***சென்றான்,***
***ததையச் செங் கரம் பரப்பிய தன் பெருந் தாதை***
***உதையக் குன்றின்நின்று உகு குன்றில் பாய்ந்தவன்***
***ஒத்தான்.***

***சுதையத்து ஓங்கிய*** - வானத்து மீன் மண்டலம் வரை உயர்ந்தோங்கியுள்ள; ***சுவேலத்தின் உச்சியைத் துறந்து*** - சுவேல மலையின் உச்சியை விட்டு; ***திண்திறல் சிதைய*** - பேர் ஆற்றல் எல்லாம் சிதையுமாறு; ***இராவணக் குன்றிடைச் சென்றான்*** - இராவணன் என்னும் மலைமேல் பாய்ந்த சுக்கிரீவன்; ***செங்கரம் ததையப்பரப்பிய*** - தன் செந்நிறக்கிரணங்களை, அடர்த்தியாகப் பரவச் செய்த; ***தன் பெருந்தாதை*** - தன்னுடைய பெருமைக்கு உரிய தந்தையாகிய சூரியன்; ***உதயக் குன்றின் நின்று*** - தான் உதிக்கும் உதயகிரி எனும் மலையிலிருந்து; ***உகுகுன்றில் பாய்ந்தவன் ஒத்தான்*** -தான் மறையும் அத்தமனகிரிக்குப் பாய்ந்தானைப் போன்றவன் ஆனான்.

*ஒரு மலை மேலிருந்து இன்னொரு மலைமேல் குதித்தான் என்பது ஒரு நயம்.*

***6899. பள்ளம் போய்ப் புகும் புனல் எனப் படியிடைப் படிந்து***
***தள்ளும் பொற் கிரி சலிப்புறக் கோபுரம் சார்ந்தான்,***
***வெள்ளம்போல் கண்ணி அழுதலும், இராவணன்மேல்***
***தன்***
***உள்ளம்போல் செலும் கழுகினுக்கு அரசனும்***
***ஒத்தான்.****

***பள்ளம் போய்ப் புகும் புனல் என*** - பள்ளமான இடத்திற்குப் பாய்ந்தோடும் நீரே போல; ***படியிடைப் படிந்து தள்ளும் பொற்கிரி*** - பூமியிலே சாயுமாறு சாய்த்துத் தள்ளப்பட்ட திரிகூட மலையும்; ***சலிப்புறக் கோபுரம் சார்ந்தான்*** - சலிப்படையுமாறு இராவணனிருந்த கோபுரத்தைச் சார்ந்தவனான சுக்கிரீவன்; ***வெள்ளம் போற் கண்ணி அழுதலும்*** - வெள்ளம் போலக் கண்ணீர் பெருக்கும் கண்களையுடைய சீதை (விம்மி) அழுதவுடன்; ***உள்ளம் போல்*** - தன் மனம் சென்ற வேகத்திலேயே; ***இராவணன் மேல் செலும்*** - இராவணன் மேல் பாய்ந்து சென்ற; ***கழுகினுக்கு அரசனும் ஒத்தான்*** - கழுகின் வேந்தனாகிய சடாயுவையும் ஒத்தவன் ஆனான்.

*சுக்கிரீவன் இராவணன் மேல் பாய்ந்த வேகத்திற்குப் பள்ளம் பாயும் வெள்ளத்தை உவமையாக்கினார். மேருவுக்கும் வாயுவுக்கும் நிகழ்ந்த பலப் போட்டியில் வந்து வீழ்ந்த மேருவின் ஒரு துண்டாதலின் திரிகூடமலை "தள்ளும் பொற்கிரி" எனப்பட்டது.*

***6900. கரிய கொண்டலை, கருணை அம் கடலினை,***
***காணப்***
***பெரிய கண்கள் பெற்று உவக்கின்ற அரம்பையர்,***
***பிறரும்,***
***உரிய குன்றிடை உரும் இடி வீழ்தலும், உலைவுற்று***

***இரியல்போயின மயிற் பெருங் குலம் என இரிந்தார்.***

***கரிய கொண்டலை*** - கருமை நிறம் கொண்ட முகில் போன்றவனும்; ***அம் கருணை கடலினை*** - அழகிய கருணையின் கடல் போன்றவனுமான இராமபிரானை; ***காண*** - (கண்ணாரக்) கண்டு மகிழ்வதற்காக; ***பெரிய கண்கள் பெற்று*** - பெரிய அளவினையுடைய கண்களைப் (பேறாகப்) பெற்று; ***உவக்கின்ற அரம்பையர் பிறரும்*** - மகிழ்வில் திளைக்கின்ற வானமாதர்களும் பிற மாதர்களும்; ***உரியகுன்றிடை*** - தமக்குரிய மலையின் மீது; ***உரும் இடி வீழ்தலும்*** - அச்சம் தரத்தக்க இடி வீழ்ந்தவுடன்; ***உலைவுற்று*** - மனம் நடுங்கி; ***இரியல் போயின*** - (திசைக்கொன்றாக) அஞ்சி ஓடுகின்ற; ***மயில் குலம் ஆம் என*** - மயிற்கூட்டங்கள் என்னுமாறு; ***இரிந்தார்*** - அஞ்சி ஓடினர்.

*இராமனின் பேரழகை மொண்டுண்ணப் பெருங்கண்கள் வேண்டும் என்று அப்பெண்கள் வரங்கேட்டுப் பெற்று வந்தவை என்பாராய். "பெரிய கண்கள் பெற்று" என்றார். இராம மேகம் கருணைக் கடலிலிருந்து இந்த அழகு வெள்ளத்தைப் பெற்று வந்துள்ளது என்பாராய், "கரிய கொண்டலை, கருணை அம் கடலை" எனச் சேர்த்துள்ள திறம் காண்க. உயிர்களைக் கவர்ந்து ஈர்க்கும் அழகு, உள்ளத்தில் கருணை எழுந்த போது எழும் எனும் ஓர் அரிய செய்தியும் இங்குப் புலனாகிறது.*

## *இருவரும் கைகலத்தல்*

**சந்தக் கலிவிருத்தம்**

***6901. கால இருள் சிந்து கதிரோன்-மதலை கண்ணுற்று,***
***ஏல எதிர் சென்று அடல் இராவணனை எய்தி,***
***நீல மலை முன் கயிலை நின்றது என, நின்றான்;***
***ஆலவிடம் அன்று வர, நின்ற சிவன் அன்னான்.***

***கால இருள் சிந்து கதிரோன் மதலை*** - கரிய இருளை ஒழிக்கின்ற சூரியன் புதல்வனான சுக்கிரீவன்; ***அடல் இராவணனைக் கண்ணுற்று*** - ஆற்றல் மிக்க இராவணனைக் கண்டு; ***ஏல எதிர் சென்று எய்தி*** - நெருங்கி எதிரே சென்றடைந்து; ***அன்று ஆலவிடம் வர*** - (பாற்கடல் கடைந்த) அன்று, கடலில் ஆலகால விடம் தோன்ற; ***நின்ற சிவன் அன்னான்*** - (அஞ்சாது) எதிர் நின்ற சிவபெருமானைப் போன்றவனாய்; ***நீல மலை முன் கயிலை*** - நீலகிரியின் முன்னால் கயிலாயகிரி; ***நின்றது என நின்றான்*** - நிற்பது போல நின்றான்.

*கரிய நிறம் கொண்ட இராவணனுக்கு நீல மலையும், வெள்ளை நிறங்கொண்ட சுக்கிரீவனுக்குக் கயிலைமலையும் உவமை.*

*6902.* ***'இத் திசையின் வந்த பொருள் என்?' என, இயம்பான்,***
***தத்தி எதிர் சென்று, திசை வென்று உயர் தடந் தோள்***
***பத்தினொடு பத்துடையவன் உடல் பதைப்ப,***
***குத்தினன் உரத்தில், நிமிர் கைத் துணை குளிப்ப.***

***இத்திசையின் வந்த பொருள்*** *- நான் உள்ள திசை நோக்கி வந்த காரியம்;* ***என் என*** *- என்ன என்று (இராவணன்) கேட்க;* ***இயம்பான்*** *- (வாயால்) விடையொன்றும் கூறாதவனாய்;* ***தத்தி எதிர் சென்று*** *- தாவி, (இராவணனுக்கு) நேராகப் போய்;* ***திசைவென்று உயர் தடந்தோள்*** *- எண் திசைகளையும் வென்று (பெருமிதத்தால்) உயர்ந்த அகன்ற தோள்கள்;* ***பத்தினொடு பத்துடையவன்*** *- இருபதை யுடையவனான இராவணனுடைய;* ***உடல் பதைப்ப*** *- உடல் நடுங்குமாறு;* ***நிமிர் கைத்துணை குளிப்ப*** *- உயர்த்திய தன் இருகைகளும் நன்கு பதியுமாறு;* ***உரத்தில் குத்தினன்*** *- மார்பில் குத்தினான் (சுக்கிரீவன்).*

*6903.* ***திருகிய சினத்தொடு செறுத்து எரி விழித்தான்,***
***ஒருபது திசைக்கணும் ஒலித்த ஒலி ஒப்ப,***
***தரு வனம் எனப் புடை தழைத்து உயர் தடக் கை***
***இருபதும் எடுத்து, உரும் இடித்தென அடித்தான்.***

***திருகிய சினத்தொடு*** *- (அப்போது இராவணன்) நேர்மையற்ற கோபத்தோடும்;* ***செறுத்து எரிவிழித்தான்*** *- பகை உணர்வோடும் தீப்பொறி சிந்தும் விழியோடு பார்த்தான்;* ***தருவனம் என புடை தழைத்து*** *- மரங்கள் அடர்ந்த காடுகள் போல பக்கமெல்லாம் தழைத்து விழித்து;* ***உயர் தடக்கை*** *- உயர்ந்து அகன்ற கைகள்;* ***இருபதும் எடுத்து*** *- இருபதையும் தூக்கி;* ***உரும் இடித்தென ஒலித்த ஒலி ஒப்ப*** *- இடி இடித்ததாக பத்துத்திசைகளிலும் எதிரொலித்த ஒலியினைப்போல;* ***அடித்தான்*** *- (பேரொலி எழ) சுக்கிரீவனைத் தாக்கினான்.*

*மரம் செழித்துக் கிடக்கும் வனம் போல, கரம் செழித்துக் கிடக்கும் உடல் ஆதலின், "தருவனம் எனப் புடை தழைத்து உயர் தடக்கை" என்றார். இதுமுதல் ஆறுகவிதைகள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ள அழகு காண்க.*

*6904.* ***அடித்த விரல் பட்ட உடலத்துழி இரத்தம்***
***பொடித்து எழ, உறுக்கி எதிர் புக்கு, உடல் பொருந்தி,***
***கடுத்த விசையின் கடிது எழுந்து, கதிர் வேலான்***
***முடித் தலைகள் பத்தினும் முகத்தினும் உதைத்தான்.***

***அடித்த விரல் பட்ட உடலத்து உழி*** - *இராவணன் அடித்த விரல் பட்ட (சுக்கிரீவன்) உடம்பிலிருந்து;* ***இரத்தம் பொடித்து எழ*** *- இரத்தம் துளிதுளியாய்ப் பொங்க;* ***உறுக்கி எதிர்புக்கு*** *- சினம் பொங்கி, இராவணன் முன்னே சென்று;* ***உடல் பொருந்தி*** *- (அவனுடன் தன்) உடலைப் பூட்டி;* ***கடுத்த விசையில்*** *- மிக்க வேகத்துடன்;* ***கடிது எழும்பி*** *- விரைந்து மேல் எழுந்து;* ***கதிர் வேலான்*** *- ஒளி மிகு வேல் ஏந்திய இராவணனுடைய;* ***முடித்தலைகள் பத்தினும்*** *- மகுடம் அணிந்த தலைகள் பத்தின் மேலும்;* ***முகத்தினும்*** *- முகத்தின் மேலும்;* ***உதைத்தான்*** *- (சுக்கிரீவன்) உதைத்தான்.*

*முகத்திலும் தலையிலும் உதை விழல்-செய்தவன் உயர்வையும், செய்யப்பட்டவன் இழிவையும் உணர்த்தும் இப்பாடலில் மற்போர் முறை சுட்டப்பட்டுள்ளது.*

***6905. உதைத்தவன் அடித் துணை பிடித்து, ஒரு கணத்தில்,***
***பதைத்து உலைவுறப் பல திறத்து இகல் பரப்பி,***
***மதக் கரியை உற்று அரி நெரித்தென மயக்கி,***
***சுதைத் தலனிடை, கடிது அடிக்கொடு துகைத்தான்.***

***உதைத்தவன் அடித்துணை பிடித்து*** *- தன்னை உதைத்தவனான (சுக்கிரீவனின்) கால்கள் இரண்டினையும் பற்றி;* ***ஒரு கணத்தில்*** *- ஒரு விநாடிப் பொழுதில்;* ***பதைத்து உலைவுற*** *- (சுக்கிரீவன்) துடிதுடித்து வருந்துமாறு;* ***பல திறத்து இகல் பரப்பி*** *- பல்வேறு வகைப்பட்ட (தன்) மற்போரின் வலிமைகளை வெளிப்படுத்தி;* ***அரி மதகரியை உற்று நெரித்து என*** *- சிங்கம் மதயானையை நெருங்கி நெருக்கினாற் போல;* ***மயக்கி*** *- மூர்ச்சையடையச் செய்து;* ***சுதைத் தலனிடை*** *- சுண்ணாம்பு தீற்றிய தரை நிலத்தில் இட்டு;* ***கடிது அடிக்கொடு*** *- விரைவாகக் கால் கொண்டு;* ***துகைத்தான்*** *- தேய்த்தான் (இராவணன்).*

*சுதைத்தலன்-சுண்ணாம்பு தீற்றிய தரை. துகைத்தல்-கால்களால் தேய்த்து உழக்குதல். மதயானையைச் சிங்கம் வதக்குவது போல், இராவணன் சுக்கிரீவனைத் துன்புறுத்தித் தேய்த்தான் என்பதால் இது உவமையணி.*

***6906. துகைத்தவன் உடற் பொறை சுறுக்கொள இறுக்கி,***
***தகைப் பெரு வலத்தொடு தலத்திடை அமுக்கி,***
***வகைப் பிறை நிறத்து எயிறுடைப் பொறி வழக்கின்.***
***குகைப் பொழி புதுக் குருதி கைக்கொடு குடித்தான்.***

***துகைத்தவன் உடற்பொறை*** *- (தன்னை நிலத்தில்) தேய்த்தவனான இராவணனின் உடலை;* ***சுறுக்கொள இறுக்கி*** *- புகை நாற்றம் எழுமாறு இறுக்கிப் பிடித்து;* ***தகைப் பெரு வலத்தொடு*** *- தகுதி நிறைந்த வலிமையோடு;* ***தலத்திடை அமுக்கி*** *- பூமியில் அழுத்தி;* ***வகைப் பிறை நிறத்து*** *- பல்வகையான வடிவங்களைக்*

*கொண்ட பிறைகளைப் போன்ற தன்மையுடைய;* ***எயிறுடைப் பொறி வழக்கின்*** *- (இராவணனுடைய) பற்களைக் கொண்ட உறுப்பாகிய வாயின் வழியே;* ***குகைப் பொழி புதுக்குருதி*** *- குகையிலிருந்து பொங்குகின்ற வெள்ளம் போலப் (பொங்குகின்ற) புதிய இரத்தத்தை;* ***கைக்கொடு குடித்தான்*** *- (சுக்கிரீவன் தன்) கைகளால் அள்ளிக் குடித்தான்.*

*சுறுக்கொளல்- புகை நாற்றம் வீசுதல். "மங்கையர் நறுங் கூந்தலின் சுறு நாறுகின்றது" (கம்ப. 6083) பிறை நிலாப் பல்வேறு வடிவங்களில் தோன்றுவது போல், இராவணனின் பற்களும் பல்வேறு வடிவங்களில் தோன்றுவதால் "வகைப்பிறை நிறத்து எயிறு" என்றார். வழக்கின் - வழியின், பொருட்சிறப்பால் "வழக்கி" எனும் பாடம் தவிர்த்து. "வழக்கின்" எனும் பாடம் கொள்ளப்பட்டது; இராவணன் பெரிய வாய், குகைக்கும் அதில் கொட்டும் இரத்தம் குகையிலிருந்து கொட்டும் வெள்ளத்திற்கும் உவமை.*

***6907. கைக்கொடு குடித்தவன் உடல் கனக வெற்பை,***
***பைக் கொடு விடத்து அரவு எனப் பல கை பற்றி,***
***மைக் கொடு நிறத்தவன் மறத்தொடு, புறத்தில்***
***திக்கொடு, பொருப்பு உற நெருப்பொடு திரித்தான்.***

***மைகொடு நிறத்தவன்*** *- மை போற் கறுத்த நிறமுடைய இராவணன்;* ***கைகொடு குடித்தவன்*** *- கைகளினாலே (தன் உதிரத்தைக்) குடித்தவனான சுக்கிரீவனுடைய;* ***உடல் கனக வெற்பை*** *- உடல் என்னும் மேருகிரியை;* ***பைகொடு விடத்து அரவு எனப்*** *- பையில் கொடிய நஞ்சினையுடைய பாம்பு பற்றியதுபோல;* ***பலகை பற்றி*** *- தன் பற்பலவான கரங்களால் பிடித்து;* ***மறத்தொடு*** *- வீரத்துடன்;* ***புறத்தில் திக்கொடு பொருப்பு உற*** *- புறத்தே உள்ள எட்டுத் திசையிலுமுள்ள மலைகளின் மீது மோதுமாறு;* ***நெருப்பொடு திரித்தான்*** *- தீப்பொறி சிதறச் சுழற்றினான்.*

*விசை மிகுதியுடன் ஒரு பொருள் ஒரு பொருளோடு மோதுகையில் தீ எழும் எனும் அறிவியல் உண்மை. "பொருப்புற நெருப்பொடு திரித்தான்" என்பதனால் உணர்த்தப்பட்டது.*

*அகழியில் போர்*

***6908. திரித்தவன் உரத்தின் உகிர் செற்றும் வகை குத்தி,***
***பெருத்து உயர் தடக் கைகொடு அடுத்து இடை***
***பிடித்து,***
***கருத்து அழிவுற,--திரி திறத்து எயில், கணத்து***
***அன்று***
***எரித்தவனை ஒத்தவன்,--எடுத்து அகழி இட்டான்.***

***எயில் கணத்து எரித்தவனை ஒத்தவன்*** - *(முன்பு) திரிபுர மதில்களை கணப்பொழுதில் எரித்தவனான சிவபெருமானைப் போன்ற சுக்கிரீவன்;* ***திரித்தவன் உரத்தின்*** - *தன்னை (அவ்வாறு) சுழற்றியவனாகிய இராவணனுடைய மார்பில்;* ***உகிர் செற்றும் வகை குத்தி*** - *நகங்கள் பதியுமாறு அழுந்தக் குத்தி;* ***பெருத்து உயர் தடக்கை கொடு*** - *பருத்து நீண்ட தன் தன் பெருங்கைகளைக் கொண்டு;* ***அடுத்து இடை பிடித்து*** - *(இராவணனை) நெருங்கி, அவன் இடுப்பைப் பற்றி;* ***திரி திறந்து*** - *சுழற்றுகின்ற வலிமையால்;* ***கருத்து அழிவுற*** - *(இராவணன்) மூர்ச்சையடைய;* ***எடுத்து அகழி இட்டான்*** *-(அவனைத்) தூக்கி அகழியில் வீசினான்.*

***6909. இட்டவனை இட்ட அகழில் கடிதின் இட்டான்,***
***தட்ட உயரத்தினில் உறும் தசமுகத்தான்;***
***ஒட்ட உடனே அவனும் வந்து, அவனை உற்றான்;***
***விட்டிலர் புரண்டு இருவர், ஓர் அகழின் வீழ்ந்தார்.***

***தட்ட*** - *சுக்கிரீவன் (ஓடிவிடாமல்) தடுக்கும் பொருட்டு;* ***உயரத்தினில் உறும் தசமுகத்தான்*** - *(அகழியிலிருந்து) உயரே ஏறிவந்துவிட்ட இராவணன்;* ***இட்டவனை*** - *தன்னை அகழியில் வீழ்த்திய சுக்கிரீவனை;* ***இட்ட அகழில்*** - *அவன் வீழ்த்திய அதே அகழியில்;* ***கடிதின் இட்டான்*** - *விரைவில் தள்ளினான்;* ***ஒட்ட உடனே அவனும் வந்து*** - *மீண்டும் அவனைத் தாக்கச் சுக்கிரீவனும் மேலே வந்து;* ***அவனை உற்றான்*** - *இராவணனை நெருங்கினான்;* ***இருவர் விட்டிலர்*** - *இருவரும் ஒருவரை ஒருவர் விடாமல்;* ***புரண்டு ஓர் அகழின் வீழ்ந்தார்*** - *(கட்டிப்) புரண்டு, (மீண்டும்) ஓர் அகழியில் வீழ்ந்தனர்.*

*இட்டவன்-சுக்கிரீவன்.*

***6910. விழுந்தனர், சுழன்றனர்; வெகுண்டனர், திரிந்தார்;***
***அழுந்தினர், அழுந்திலர்; அகன்றிலர், அகன்றார்;***
***எழுந்தனர், எழுந்திலர்; எதிர்ந்தனர் முதிர்ந்தார்;***
***ஒழிந்தனர், ஒழிந்திலர்; உணர்ந்திலர்கள், ஒன்றும்.***

***விழுந்தனர்*** - *அகழியில் வீழ்ந்த இருவரும்;* ***வெகுண்டனர்; சுழன்றனர்; திரிந்தார்*** - *சினந்து சுற்றி வலம் இடமாகத் திரிந்து;* ***அழுந்தினர் அழுந்திலர்*** - *ஒருவர் உடலில் ஒருவர் அழுந்தியும் அழுந்தாமலும் வெளிப்பட்டும்;* ***அகன்றிலர் அகன்றார் எழுந்தனர்*** - *ஒருவரை ஒருவர் விடாமல் நெருங்கியும், நெருங்காமல் மேலே உயரக்கிளம்பியும்;* ***எழுந்திலர் எதிர்ந்தனர்*** - *எழுந்திராமலே (கிடந்தவண்ணமே) எதிர்த்தும்;* ***ஒழிந்தனர் ஒழிந்திலர்*** - *சிறு பொழுது போர் நிற்பது போன்று தோன்றினும் நிற்காது;* ***ஒன்றும் உணர்ந்திலர்கள்*** - *புறத்து நிகழ்வது ஒன்றும் அறியாமல் (தம்மை) மறந்து;* ***முதிர்ந்தார்*** - *போரிடுவதில் மும்முரமாக ஈடுபட்டனர்.*

*அகழியுள் வீழ்ந்து நீரிடைப் படர்ந்த பாசி போன்று ஒருவரை ஒருவர் விடாமல் போரிடுவதை, உழிஞைத் திணையில், "நீர்ச்செருவீழ்ந்த பாசி" என்பர். இத்துறையினை விளக்குமிடத்துப் "பாசிபோல் நீங்காமல் நிற்றலின் 'பாசி' என்றார் என விளக்குகிறார் நச்சினார்க்கினியர்.(தொல்.பொருள். புறத் 13)*

***6911. அந்தர அருக்கன் மகன்,--ஆழி அகழ் ஆக,***
***சுந்தரமுடைக் கரம் வலிப்பது ஓர் சுழிப்பட்டு,***
***எந்திரம் எனத் திரி இரக்கம் இல் அரக்கன்***
***மந்தரம் என,--கடையும் வாலியையும் ஒத்தான்.***

***அந்தர அருக்கன் மகன்*** *- வானத்தே சஞ்சரிக்கின்ற சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன்;* ***அகழ் ஆழி ஆக*** *- அகழியே பாற்கடல் போல் ஆக;* ***சுந்தர உடைக்கரம் வலிப்ப*** *- அழகினையுடைய கரங்களால் இழுத்துக்கடைய;* ***சுழிபட்டு*** *- ஒருசுழியில் சிக்கி;* ***எந்திரம் எனத் திரி*** *- (அதனிடையில்) இயந்திரம் போன்று சுழல்கின்ற;* ***இரக்கம் இல் அரக்கன்*** *-இரக்கமில்லாத அரக்கனாகிய இராவணன்;* ***மந்தரம் என*** *- மந்தர கிரி போலாக;* ***கடையும் வாலியையும் ஒத்தான்*** *- கடல் கடைந்த வாலி போல் தோன்றினான்.*

*உருவகத்தை உறுப்பாகக் கொண்ட உவமையணி. அகழி- பாற்கடல் ஆகவும், இராவணன், மந்தர மலையாகவும், சுக்கிரீவன் கடல் கடைந்த வாலியாகவும் கொள்க. இப்பாடலில் இராவணன் சுக்கிரீவனைக் கடைவதாகக் கொள்ளலாமாறும் சொல்லமைப்புள்ளதைக் கண்ட பழைய உரையாளர். "இந்தக் கவிக்குச் சுக்கிரீவன் கர்த்தாவாக அறிக" எனக் குறித்துள்ளமை குறிக்கத்தக்கது.*

***6912. ஊறு படு செம்புனல், உடைத்த கரை உற்ற***
***ஆறு படர்கின்றன எனப் படர, அன்னார்,***
***பாறு, பொருகின்றன பருந்து, இவை எனப் போய்,***
***ஏறினர் விசும்பிடை; இரிந்த, உலகு எல்லாம்.***

***ஊறு படு*** *- புண்பட்ட உடலிலிருந்து;* ***செம்புனல்*** *- கொட்டுகின்ற இரத்தம்;* ***உடைத்த கரை உற்ற*** *- உடைபட்ட கரையாகக் கூடிய;* ***ஆறு படர்கின்றன என*** *-நதிகள் இரண்டு பெருக்கெடுக்கின்றன என்னுமாறு;* ***படர்*** *- அகழியில் சங்கமிக்க;* ***அன்னார்*** *- சுக்கிரீவன், இராவணன் எனும் இருவரும்;* ***பாறு பருந்து இவை பொருகின்றன*** *- கழுகும் கருடனுமாகிய இரண்டும் போரிடுகின்றன;* ***எனப் போய்*** *- எனுமாறு எழுந்து;* ***விசும்பிடை ஏறினர்*** *- ஆகாய வீதியில் உயர்ந்தனர்;* ***உலகெல்லாம்*** *- இந்தக் காட்சியைக் கண்ட உலகினர்; இரிந்த- அஞ்சி ஓடினர்.*

***6913. தூர நெடு வானின் மலையும் சுடரவன் சேய்,***
***காரினொடு மேரு நிகர் காய் சின அரக்கன்***
***தாருடைய தோள்கள் பலவும் தழுவ நின்றான்,***
***ஊரினொடு கோள் கதுவு தாதையையும் ஒத்தான்.***

***தூர நெடுவானின் மலையும் சுடரவன் சேய்*** - *தொலைவிலே நீண்ட ஆகாயத்தே போர் புரியும் சூரியனின் புதல்வனான சுக்கிரீவன்;* ***காரினொடு மேரு நிகர்*** - *நிறத்தால் மேகத்தையும் பலத்தால் மேருவையும் போன்ற;* ***காய்சின அரக்கன்*** - *கொடுங்கோபங்கொள்ளும் இராவணனுடைய;* ***தாருடைய தோள்கள் பலவும்*** - *மாலை சூடிய பலதோள்களாலும்;* ***தழுவ நின்றான்*** - *தழுவப்பட்டவனாய் நின்றான்;* ***ஊரினொடு கோள்கதுவும்*** - *ஊர்கோளால் சுற்றப்பட்ட;* ***தாதையையும் ஒத்தான்*** - *தன் தந்தையாகிய சூரியனைப் போல (அப்போது) தோற்றமளித்தான்.*

***6914. பொங்கு அமர் விசும்பிடை உடன்று பொரு போழ்தில்***
***செங் கதிரவன் சிறுவனை, திரள் புயத்தால்,***
***மங்கல வயங்கு ஒளி மறைத்த வல் அரக்கன்,***
***வெங் கதிர் கரந்தது ஒரு மேகம் எனல் ஆனான்.***

***விசும்பிடை*** - *ஆகாயத்தில்;* ***பொங்கு அமர் உடன்று பொருபோழ்தில்*** - *சினம் பொங்கிக் கொதித்து (இருவரும்) போரிடுங்காலத்தில்;* ***செங்கதிரவன் சிறுவனை*** - *சிவந்த கிரணங்களையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனை;* ***திரள் புயத்தால்*** - *தன் திரண்ட இருபது தோள்களால்;* ***மங்கல வயங்குஒளி*** - *அச்சுக்கிரீவனுடைய தூயமேனியில் விளங்கும் ஒளியை;* ***மறைத்தவல் அரக்கன்*** - *மறைத்து நின்ற வலிய இராவணன்;* ***வெங்கதிர் கரந்தது*** - *வெப்பம் நிறைந்த கதிர்களையுடைய சூரியனை மறைத்து நின்ற;* ***ஒரு மேகம் எனல் ஆனான்*** - *ஒரு மேகம் போல் தோன்றினான்.*

***6915. நூபுர மடந்தையர் கிடந்து அலற, நோனார்***
***மா புரம் அடங்கலும் இரிந்து அயர, வன் தாள்***
***மீ புர மடங்கல் என, வெங் கதிரவன் சேய்,***
***கோபுரம் அடங்க இடிய, தனி குதித்தான்.***

***நூபுர மடந்தையர்*** - *சிலம்புகளை யணிந்த மகளிர்;* ***கிடந்து அலற*** - *வீழ்ந்து புலம்பவும்;* ***நோனார் மாபுரம் அடங்கலும்*** - *பகைவருடைய பெருநகரம் முழுவதும்;* ***இரிந்து அயர*** - *அஞ்சி ஓடித் தளரவும்;* ***வன்தாள் மீபுர மடங்கல் என*** - *வலிய கால்களின் மேற்பகுதி சிங்கமாகத் தோன்றிய திருமால்போல;* ***வெங்கதிரவன் சேய்*** - *வெம்மை கொண்ட சூரியன் புதல்வனான சுக்கிரீவன்;* ***கோபுரம் அடங்க இடிய*** - *கோபுரம் முழுவதும் இடியுமாறு;* ***தனி குதித்தான்*** - *தனியே குதித்தான்.*

***6916. ஒன்றுற விழுந்த உருமைத் தொடர ஓடா,***
***மின் தெரி எயிற்றின் ஒரு மேகம் விழும் என்ன,***
***'தின்றிடுவென்' என்று எழு சினத் திறல் அரக்கன்***
***பின் தொடர வந்து, இரு கரத் துணை பிடித்தான்.***

**ஒன்றுற விழுந்த** - *சிதறாது வீழ்ந்த;* **உருமைத் தொடர ஓடா** - *இடியைப் பின் தொடர்ந்து ஓடி;* **மின் தெரி எயிற்றின்** - *மின்னல் மின்னுவது போன்று தெரிகின்ற பற்களையுடைய;* **ஒரு மேகம் விழும் என்ன** - *ஒரு மேகம் விழுகின்றது என்னுமாறு;* **'தின்றிடுவென்' என்று** - *இவனைத் தின்றிடுவேன் என்று கூறி;* **எழுசினத்திறல் அரக்கன்** - *ஓங்குகின்ற வெகுளியையுடைய வல்லரக்கன் ஆகிய இராவணன்;* **பின் தொடரவந்து** - *சுக்கிரீவனைப் பின்பற்றி வந்து;* **இருகரம் துணை பிடித்தான்** - *அவன் இருகரங்களையும் தன் இருகரங்களாலும் பற்றினான்.*

*மின்னலைத் தொடர்ந்து இடி விழும்; இங்கு மாறி வருதலின் இல்பொருள் உவமை.*

***6917. வந்தவனை நின்றவன் வலிந்து, எதிர் மலைத்தான்,***
***அந்தகனும் அஞ்சிட, நிலத்திடை அரைத்தான்;***
***எந்திரம் எனக் கடிது எடுத்து, அவன் எறிந்தான்;***
***கந்துகம் எனக் கடிது எழுந்து, எதிர் கலந்தான்.***

**நின்றவன்** - *நின்றவனான சுக்கிரீவன்;* **வந்தவனை** - *வந்தவனான இராவணனை;* **வலிந்து எதிர் மலைந்தான்** - *வலிமையுடனே எதிர்த்துப் போரிட்டான்;* **அந்தகனும் அஞ்சிட** - *யமனும் அஞ்சுமாறு;* **நிலத்திடை அரைத்தான்** - *பூமியில் இட்டுத் தேய்த்தான்;* **அவன் எந்திரம் என** - *அப்போது, இராவணன் இயந்திரம் எனுமாறு;* **கடிது எடுத்து எறிந்தான்** - *சுக்கிரீவனை விரைந்து எடுத்து வீசி எறிந்தான்;* **கந்துகம் எனக் கடிது எழுந்து** - *(வீசியெறியப்பட்ட) பந்து விரைவில் திரும்புவது போல விரைவில் எழுந்து வந்து;* **எதிர் கலந்தான்** - *மீண்டும் சுக்கிரீவன் (அரக்கனோடு) கை கலந்தான்;*

***6918. படிந்தனர், பரந்தனர், பரந்தது ஓர் நெருப்பின்***
***கொடுஞ் சினம் முதிர்ந்தனர், உரத்தின்மிசை குத்த,***
***நெடுஞ் சுவர் பிளந்தன; நெரிந்த நிமிர் குன்றம்;***
***இடிந்தன, தகர்ந்தன, இலங்கை மதில் எங்கும்.***

**படிந்தனர்; பரந்தனர்** - *(இருவரும்) நிலத்தில் படிந்து வீழ்ந்து, பல திசைகளிலும் பரவிச் சென்று போரிட்டனர்;* **பரந்தது ஓர் நெருப்பின்** - *எவ்விடத்தும் பரவி எரியும்*

*நெருப்பினைப் போல;* ***கொடுஞ்சினம் முதிர்ந்தனர்*** *- கொடுங் கோபம் முற்றினார்கள்;* ***உரத்தின் மிசை குத்த*** *- (ஒருவர்) மார்பின் மேல் (ஒருவர்) குத்த;* ***நெடுஞ்சுவர் பிளந்தன*** *- அருகிலிருந்த சுவர்கள் (அதிர்ச்சியில்) பிளந்தன;* ***நிமிர் குன்றம் நெரிந்த*** *- ஓங்கி உயர்ந்திருந்த மலைகள் பொடிந்து சரிந்தன;* ***இலங்கைமதில் எங்கும் இடிந்தன; தகர்ந்தன*** *- இலங்கையில் மதில்கள் என்று இருப்பவையெல்லாம் இடிந்து தகர்ந்தன.*

*அதிர்ச்சியால் கட்டிடங்கள் சிதையும் என்பதை அன்றே அறிந்து உணர்த்தும் நுட்பத்தை இக்கவிதை காட்டுகிறது.*

***6919. செறிந்து உழல் கறங்கு அனையர் மேனி நிலை தேரார்,***
***பிறிந்தனர் பொருந்தினர் எனத் தெரிதல் பேணார்,***
***எறிந்தனர்கள், எய்தினர்கள், இன்னர் என, முன் நின்று***
***அறிந்திலர், அரக்கரும்; அமர்த் தொழில் அயர்ந்தார்.***

***செறிந்து உழல் கறங்கு அனையர்*** *- நெருங்கிச் சுழலும் காற்றாடி போன்றவராய் உள்ள அவ்விருவருடைய;* ***மேனி நிலை தேரார்*** *- உடல்கள் எவ்விடத்துள்ளன எனத் தெளிய முடியாதவராயும்;* ***பிறிந்தனர் பொருந்தினர் எனத் தெரிதல் போனார்*** *- (அவர்கள் இப்போது) பிரிந்துள்ளனர் சேர்ந்துள்ளனர் என்பதனையும் அறிய முடியாதவராயும்;* ***இன்னார் எறிந்தனர்கள்*** *- இன்னார் இன்னாரை வீசினார்;* ***இன்னார் எய்தினர்கள்*** *- இன்னார் இன்னாரைக் கிட்டினார்;* ***என முன் நின்று அரக்கரும் அறிந்திலர்*** *- என்பதனையும் முன்னே நின்றும் அரக்கரும் அறிய இயலாதவராயும்;* ***அமர்த்தொழில் அயர்ந்தார்*** *- அரக்கர்கள் அப்போர்த்தொழிலைக் கண்டு மனம் தளர்ந்தார்கள்.*

*மற்போரில் விரைவே மிக முக்கியம் எனக் கருதப்படும் மற்போர் வல்ல அரக்கர்களாலும் இவர்களின் துரித கதியைக் கண்டு உணர முடியவில்லை; ஆதலால் அரக்கரும் மனந்தளர்ந்து போனார்கள் என்றார்.*

### *சுக்கிரீவன் வாராமை கண்டு இராமன் கலக்கம்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***6920. இன்னது ஓர் தன்மை எய்தும் அளவையின், எழிலி வண்ணன்,***
***மன்னுயிர் அனைய காதல் துணைவனை வரவு காணான்,*** ***'உன்னிய கருமம் எல்லாம் உன்னொடு முடிந்த'***

***என்னா,***
***தன் உணர்வு அழிந்து, சிந்தை அலமந்து, தளர்ந்து,***
***சாய்ந்தான்.***

***இன்னது ஓர் தன்மை எய்தும் அளவையின்*** *- இத்தகையதோர் ஒப்பற்ற நிகழ்ச்சி, (இப்படி) நடந்து கொண்டிருக்கையில்;* ***எழிலிவண்ணன்*** *- முகில் வண்ணனாகிய இராமபிரான்;* ***மன் உயிர் அனைய காதல் துணைவனை*** *- (தன்) அழியா உயிர் அனைய அன்புத் துணைவனான சுக்கிரீவனுடைய;* ***வரவு காணான்*** *- வருகையைக் காணாதவனாய்;* ***உன்னிய கருமம் எல்லாம் உன்னொடும் முடிந்தது என்னா*** *- 'நான் புரியக் கருதியிருந்த செயல்கள் யாவும் உன்னோடும் அழிந்தொழிந்தன' என்று கூறி;* ***தன் சிந்தை அலமந்து*** *- தன் உள்ளம் சுழன்று;* ***உணர்வு அழிந்து*** *- அறிவு ஒடுங்கி;* ***தளர்ந்து சாய்ந்தான்*** *- தளர்ச்சியுற்று வீழ்ந்தான்.*

*உன்னிய கருமங்கள்: அறந்தலை நிறுத்துதல்; வேத நெறி நிறுத்துதல்; உலகோர் பூணச் செந்நெறி செலுத்துதல்; தீயோராம் அரக்கர் குழுவை அழித்தல்; தக்கோரின் இடர் துடைத்தல் (கம்ப. 5885).*

***6921. 'ஒன்றிய உணர்வே ஆய ஓர் உயிர்த் துணைவ!***
***உன்னை***
***இன்றியான் உளனாய் நின்று, ஒன்று இயற்றுவது***
***இயைவது அன்றால்;***
***அன்றியும், துயரத்து இட்டாய், அமரரை; அரக்கர்க்கு***
***எல்லாம்***
***வென்றியும் கொடுத்தாய்; என்னைக் கெடுத்தது உன்***
***வெகுளி'என்றான்.***

***ஒன்றிய உணர்வே ஆய ஓர் உயிர்த் துணைவ*** *- என் உணர்வும் உன் உணர்வும் ஒன்றே என்னுமாறு என் உயிரோடு ஒன்றிவிட்ட என் துணைவனே!* ***உன்னை இன்றி*** *- நீயில்லாமல்;* ***யான் உளனாய் நின்று*** *-நான் மட்டும் தனித்து உயிருடன் இருந்து;* ***ஒன்று இயற்றுவது இயைவது அன்று*** *-ஒரு செயல் புரிவதென்பது நடைபெறுவது ஒன்று அன்று;* ***அன்றியும்*** *- அல்லாமலும், (உன் செயலால்);* ***அமரரைத் துயரத்து இட்டாய்*** *- தேவர்களைத் துயரத்தில் நீ தள்ளி விட்டாய்;* ***அரக்கர்க்கு எல்லாம் வென்றியும் கொடுத்தாய்*** *- இராட்சதர்களுக்கெல்லாம் வெற்றிக் (களிப்பை) அள்ளி வழங்கிவிட்டாய்;* ***உன் வெகுளி*** *- (இவ்வாறு) உன்னுடைய சினமானது;* ***என்னைக் கெடுத்தது என்றான்*** *- (உன்பால் உயிரை வைத்திருந்த) என்னை முடித்து விட்டது;*

*"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான் நட்பாங்கிழமை தரும்" (திருக்கு: 7850 என்ற கருத்தினை ஒட்டி, "ஒன்றிய உணர்வே ஆய ஓர் உயிர்த்துணைவ!" என்றார்.*

*6922.* ***'தெய்வ வெம் படையும், தீரா மாயமும், வல்ல தீயோன்***
***கையிடைப் புக்காய்; நீ வேறு எவ்வணம் கடத்தி, காவல்?***
***வையம் ஓர் ஏழும் பெற்றால், வாழ்வெனே? வாராய்ஆகில்,***
***உய்வெனே?--தமியனேனுக்கு உயிர் தந்த உதவியோனே!***

***தமியனேனுக்கு*** - *(தேவியைப் பிரிந்து சிந்தை திகைத்துத் தனியனாய்த் தவித்துக் கிடந்த) எனக்கு;* ***உயிர் தந்த உதவியோனே*** *-(தேவி கிட்டுவாள் எனும் நம்பிக்கை தந்து) என் உயிரைத் தந்த உதவியாளனே!* ***தெய்வ வெம்படையும்*** *- தெய்வங்கள் தந்த கொடிய படைக்கருவிகளையும்;* ***தீரா மாயமும்*** *- நீங்காத மாயங்களையும் உடைய;* ***வல்ல தீயோன்*** *- வலியவனான தீயவன் (இராவணன்);* ***கையிடைப் புக்காய்*** *- கரங்களிலே சிக்கினாய்;* ***நீ வேறு எவ்வணம் காவல் கடத்தி?*** *- நீ (இனி) வேறு எந்த வகையில் அவன் காவலிலிருந்து தப்ப உள்ளாய்?* ***வாராய் ஆகில்*** *- (நீ அவனிடமிருந்து) தப்பி வாராய் ஆனால்;* ***வையம் ஓர் ஏழும் பெற்றால் வாழ்வெனே?*** *- ஓர் ஏழு உலகங்களையும் தந்தாலும் நான் உயிர் வாழ இயலுமோ?;* ***உய்வெனோ?*** *- (நீ வாராயாகில்) நான் உயிர் வாழ்வேனோ? வாழேன்!*

*6923.* ***'ஒன்றாக நினைய, ஒன்றாய் விளைந்தது, என் கருமம்;அந்தோ!***
***என்றானும், யானோ வாழேன்; "நீ இலை" எனவும் கேளேன்;***
***இன்று ஆய பழியும் நிற்க, நெடுஞ் செருக் களத்தின் என்னைக்***
***கொன்றாய் நீ அன்றோ? நின்னைக் கொல்லுமேல், குணங்கள் தீயோன்.***

***குணங்கள் தீயோன்*** *- தீய குணங்களைக் கொண்ட இராவணன்;* ***உன்னைக் கொல்லுமேல்*** *- சுக்கிரீவனாகிய உன்னைக் கொன்று விட்டானேயானால்;* ***என் கருமம்*** *- நான் மேற்கொண்ட செயல்;* ***ஒன்றாக நினைக்க ஒன்றாய் விளைந்தது*** *-நான் ஒருவகையாக நினைக்க அது வேறு வகையாக முடிந்தது ஆகிவிடும்;* ***அந்தோ!*** *- ஐயோ! யானோ என்றானும் வாழேன் - நானோ, (இனி) எந்த வகையிலும் வாழ மாட்டேன்;* ***நீ இலை எனவும் கேளேன்*** *- நீ இல்லை (மறைந்தாய்) என்ற சொற்களைக் கேட்கவும் என்னால் இயலாது;* ***இன்று ஆய பழியும் நிற்க*** *- இன்று; உன்னைப் பகைவனிடத்திலிருந்து மீட்க இயலாத பழியும் எனக்கே சேர;* ***நெடுஞ்***

***செருக்களத்தின்*** *- பெரிய போர்க்களத்தில்;* ***என்னைக் கொன்றாயும்*** *- என்னைக் கொன்றவனும்; நீயே - நீயேயாவாய்!*

*பிராட்டியைப் பெறுவதற்காக எண்ணித் துணிந்த கருமம், நண்பனையிழப்பதில் முடிந்ததே என ஏங்குகின்றான் ஆதலின், "என் கருமம் ஒன்றாக நினைக்க ஒன்றாய் விளைந்தது" என்றான். "ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்" என்பது மூதுரை.*

***6924. 'இறந்தனை என்ற போதும் இருந்து, யான் அரக்கர்என்பார்***
***திறம்தனை உலகின் நீக்கி, பின் உயிர் தீர்வனேனும்,***
***"புறந்தரு பண்பின் ஆய உயிரொடும் பொருந்தினானை***
***மறந்தனன்; வலியன்" என்பார்; ஆதலால், அதுவும் மாட்டேன்.***

***இறந்தனை என்ற போதும்*** *- நீ இறந்து போனாய் என்ற போதிலும்;* ***யான் இருந்து*** *- நான் (உடனே இறவாமல்) உயிர்தாங்கியிருந்து* ***அரக்கர் என்பார் திறம்தனை*** *- அரக்கர் எனப்படுவோரின் இனங்களையெல்லாம்;* ***உலகின் நீக்கி*** *- உலகத்தினின்றும் (அடியோடு) அகற்றி;* ***பின் உயிர் தீர்வென் என்றால்*** *- பிறகு உயிர் விடுவேன் என்றாலும்; புறந்தரு பண்பின்* ***ஆய*** *- (அல்லற்காலத்து) பாதுகாத்தற்குரிய பண்பினனாகி;* ***உயிரொடும் பொருந்தினானை*** *- உயிரோடு ஒன்றாய் இணைந்து விட்ட நண்பனை;* ***மறந்தனன்*** *- மறந்தவனாய்ப் போர்த்தொழிலில் இவனால் ஈடுபடமுடிந்ததே!* ***வலியன்*** *- எத்தகைய வலிய (கல்) மனம் கொண்டவன் இராமன்;* ***என்பார் ஆதலால்*** *- என்று உலகோர் கூறுவர் ஆதலால்;* ***அதுவும் மாட்டேன்*** *- (உயிர் வாழ்ந்து அரக்கரை) அழிக்கவும் மாட்டேன்.*

***6925. 'அழிவது செய்தாய், ஐய! அன்பினால்; அளியத்தேனுக்கு***
***ஒழிவு அரும் உதவி செய்த உன்னை யான் ஒழிய வாழேன்;***
***எழுபது வெள்ளம் தன்னின் ஈண்டு ஓர் பேர் எஞ்சாது ஏகி,***
***செழு நகர் அடையின் அன்றோ, இத் துயர் தீர்வது உண்டோ?***

***ஐய!*** *- ஐயனே!* ***அளியத்தேனுக்கு*** *- இரங்கத்தக்க எனக்கு;* ***அன்பினால் அழிவது செய்தாய்*** *- (உன்) அன்பு காரணமாக (நான்) அழிவதற்குக் காரணமானவற்றைச் செய்தாய்;* ***ஒழிவு அரும் உதவி செய்த*** *- நெஞ்சில் என்றும் நீங்காத அரிய உபகாரம் செய்த;* ***உன்னை நான் ஒழிய வாழேன்*** *- உன்னைப் பிரிந்து நான் உயிர் வாழ மாட்டேன்;* ***எழுபது வெள்ளம் தன்னின்*** *- எழுபது வெள்ளம் சேனையில்;* ***ஈண்டு ஓர் பேர் எஞ்சாது ஏகி*** *- இங்கு ஒருவரும் குறையாமல் (வெற்றியோடு மீண்டு);* ***செழுநகர் அடையின் அன்றோ*** *- வளமை மிகு அயோத்தியை நான் அடைந்தபோதன்றி;* ***இத்துயர் தீர்வது உண்டோ?*** *-(உன்னை இழந்த) இந்தப் பெருந்துயர் என்னைவிட்டு நீங்கும், நீங்குமோ? (நீங்காது)*

*"அடையின் அன்றோ" எனும் பாடத்திலும் "அடைந்த போழ்தும்" என்ற பாடம் பொருட்சிறப்புடையது.*

*சுக்கிரீவன் இராவணன் மகுடத்துடன் வந்தடைதல்*

***6926. என்று அவன் இரங்கும் காலத்து, இருவரும் ஒருவர்தம்மின்***
***வென்றிலர் தோற்றிலாராய், வெஞ் சமம் விளைக்கும் வேலை,***
***வன் திறல் அரக்கன் மௌலி மணிகளை வலியால் வாங்கி,***
***"பொன்றினென் ஆகின், நன்று" என்று அவன் வெள்க, இவனும் போந்தான்.***

**என்று அவன் இரங்கும் காலத்து** *- என்று அந்த இராமபிரான் இரங்கி வருந்தும் போது;* **இருவரும்** *- இராவணன், சுக்கிரீவன் ஆகிய இருவரும்;* **ஒருவர் தம்மின்** *- ஒருவருக்கு ஒருவர்;* **வென்றிலர் தோற்றிலாராய்** *- வெற்றியோ தோல்வியோ அடைய இயலாதவராய்;* **வெஞ்சமம் விளைக்கும் காலை** *- கடும்போர் புரியுங் காலத்தே;* **வன்திறல் அரக்கன் மௌலி** *- வலிய வல்லமை வாய்ந்த இராவணனின் மகுடத்தில் உள்ள;* **மணிகளை வலிய வாங்கி** *- மாணிக்க மணிகளைத் தன் வலிமையினால் பிடுங்கிக் கொண்டு;* **அவன்** *- அந்த இராவணன்;* **'பொன்றினென் ஆயின் நன்று** *- 'நான் இனி இறந்து போதலே நல்லது";* **என்று வெள்க** *- என்று நாணமுறுமாறு;* **இவனும் போந்தான்** *- சுக்கிரீவனும் இராமனை வந்து அடைந்தான்.*

*மணி மகுடத்திலிருந்து, மணிகளை இழத்தல் மானக்கேடு. ஆதலின், 'இறந்து போதலே இனிச் சிறந்தது' என்று இராவணன் வெட்கமுற்றான். "மானம் இழந்தபின் வாழாமை முன் இனிது" (இனி.40) உயிர் நீப்பர் மானம் வரின்" (திருக்கு: 968); "இளிவரின் வாழாத மானம் உடையார்" (குறள். 970) என வருவன காண்க. "பொறிப்புண்டரீகம் போலும் ஒருவனால் புனைந்த மோலி பறிப் புண்டும்" (கம்ப:7008) என்றும் "மணிபறித்தெழுந்த வெந்தை" (கம்ப: 6891) என்றும், "இக்கிரி பத்தின் மௌலி இனமணி இமைப்பில் கொண்ட" (கம்ப. 6960) என்றும் சுக்கிரீவனின்*

*இந்தச் செயற்கருஞ்செயல் மேலும் பல இடங்களில் நினைக்கப்படும். இருவரும் சம பலம் உள்ளவராதலின் "வென்றிலர் தோற்றிலாராய்ப்" போர் நீளுவதறிந்த சுக்கிரீவன், தான் போர் புரிந்ததற்கு அடையாளமாக மணிகளைப் பறித்து வந்து பெருமானிடம் வைத்தான் என்க.*

***6927.** **கொழு மணி முடிகள்தோறும் கொண்ட நல்***
***மணியின் கூட்டம்***
***அழுது அயர்வுறுகின்றான்தன் அடித்தலம் அதனில்***
***சூட்டி,***
***தொழுது, அயல் நாணி நின்றான்; தூயவர்***
***இருவரோடும்***
***எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓர் உயிர் எய்திற்று***
***அன்றே.***

***கொழு மணி முடிகள் தோறும்** - உயர்வான நவமணிகள் பதிக்கப்பெற்ற மகுடங்களிலிருந்து; **கொண்ட நல் மணியின் கூட்டம்** - பறித்துக் கொண்டு வரப்பட்ட நல்ல மாணிக்கங்களின் கூட்டத்தை; **அழுது அயர்வு உறுகின்றான் தன்** - தன்னைக் காணாது அழுது தளர்கின்ற இராமபிரானுடைய; **அடித்தலம் அதனில் சூட்டி** - திருவடிகளில் (அணியாகச்) சூட்டி; **தொழுது அயல் நாணி நின்றான்** - வணங்கி, வெட்கமுற்று அயலே நின்றான் (சுக்கிரீவன்); **தூயவர் இருவரோடும்** - (அப்போது) தூய்மை மிகுகுணத்தவராகிய இராம இலக்குவரோடு கூடிய; **எழுபது வெள்ளம் யாக்கைக்கு** - எழுபது வெள்ளம் தொகை கொண்ட வானர சேனை என்னும் உடலுக்கு; **ஓர் உயிர் எய்திற்று -** ஒப்பற்றதோர் உயிர் வந்தடைந்தது. (எனலாம்).*

*இராவணனைக் கொன்று திரும்ப இயலாமையால் நாணினன் என்பதாம். "கருமத்தால் நாணுதல் நாணு" (திருக்கு. 1011) பையல் தலையை இடப்பெறாத நாம், என் சொல்லி முன்னே நிற்பது என்று பெருமான் அருகே வந்து நின்றார். என்ற பெரியவாச்சான் பிள்ளையின் கூற்று. "அயல் நாணி நின்றான்" எனும் கவிஞர் பிரானின் தொடர்க்கு அரிய விளக்கமாய் அமைவது கருதத் தக்கது.*

*இராமன் சுக்கிரீவனைத் தழுவி தன் அன்பை வெளியிடுதல்*

***6928.** **என்பு உறக் கிழிந்த புண்ணின் இழி பெருங்***
***குருதியோடும்***
***புன் புலத்து அரக்கன்தன்னைத் தீண்டிய தீமை***
***போக;***
***அன்பனை அமரப் புல்லி, மஞ்சனம் ஆட்டி விட்டான்,***
***தன் பெரு நயனம் என்னும் தாமரை சொரியும் நீரால்.***

***அன்பனை அமரப் புல்லி*** - *(தன்) அன்பனாகிய சுக்கிரீவனை நன்கு தழுவிக் கொண்டு;* ***என்பு உறக் கிழிந்த புண்ணின்*** - *எலும்பு வரையில் கிழிபட்ட புண்களிலிருந்து;* ***இழிதரும் குருதியோடும்*** - *கொட்டுகின்ற இரத்தத்துடன் புன்புலத்து* ***அரக்கன் தன்னை*** - *இழிந்த அறிவினன் ஆகிய இராவணனை; தீண்டிய புன்மை போக - மற்போரில் தொட்ட இழிவெல்லாம் தீருமாறு;* ***தன் பெரும் நயனம் என்னும்*** - *தன்னுடைய பெரிய விழிகள் என்கின்ற;* ***தாமரைத் தடத்து நீரால்*** - *தாமரைத் தடாகத்தின் நீரினால்;* ***மஞ்சனம் ஆட்டிவிட்டான்*** - *நீராட்டினான் (இராமபிரான்).*

### *6929. 'ஈர்கின்றது அன்றே, என்றன் உள்ளத்தை; இங்கும் அங்கும்*
### *பேர்கின்றது ஆவி; யாக்கை பெயர்கின்றது இல்லை; பின்னை,*
### *தேர்கின்ற சிந்தை அன்றோ திகைத்தனை?' என்று, தெண் நீர்*
### *சோர்கின்ற அருவிக் கண்ணான் துணைவனை நோக்கிச் சொல்லும்:*

***தெண் நீர் அருவி சோர்கின்ற கண்ணான்*** - *தெளிந்த நீரினையுடைய அருவி போலக் கண்ணீர் பொழிகின்ற கண்ணினையுடையவனான இராமபிரான்;* ***துணைவனை நோக்கி*** - *தன் துணையாய் அமைந்த சுக்கிரீவனைப் பார்த்து;* ***என்றன் உள்ளத்தை ஈர்கின்றது*** - *(நீ என்னைத் திடீரென்று பிரிந்த செயல்) என் உள்ளத்தை இரண்டாகப் பிளந்தது;* ***ஆவி இங்கும் அங்கும் போகின்றது*** - *என் உயிர் (உடலைவிட்டு) (உள்ளும் புறமுமாய்) ஊசலாடத் தொடங்கி அங்கும் இங்குமாக அலைந்து தவித்தது;* ***யாக்கை பெயர்கின்றது இல்லை*** - *என் உடலும் இயக்கத்தைத் தவிர்த்து விட்டது;* ***பின்னை*** - *மேலும்;* ***தேர்கின்ற சிந்தையன்றோ திகைத்தனை?*** - *காலமும் இடமும் தேர்ந்து செயல் புரியும் திறமுள்ளவன் மனத்தையுடையவன் அல்லவா திகைப்பூட்டும் செயல் செய்ய வைத்துவிட்டாய்?* ***என்று சொல்லும்*** - *என்று (மேலும்) சொல்லலானான்.*

*இராமனைத் தேர்வதற்குக் கூட, ஏழு மராமரங்களை எய்யச் சொல்லித் தேர்ந்த சுக்கிரீவன், இத்தகைமய செயல் செய்தது எவ்வாறு என வியந்த பெருமான் தேர்கின்ற சிந்தையன்றோ திகைத்தது என்றான்.*

### *6930. 'கல்லினும் வலிய தோளாய்! நின்னை அக் கருணை இல்லோன்*
### *கொல்லுதல் செய்தான் ஆகின், கொடுமையால்*

***கொற்றம் பேணி, பல் பெரும் பகழி மாரி வேரொடும் பறிய நூறி,***
***வெல்லினும், தோற்றேன் யானே அல்லெனோ,***
***விளிந்திலாதேன்?***

***கல்லினும் வலிய தோளாய்*** - *மலையினையும் விட வலிமை வாய்ந்த தோள்களையுடைய சுக்கிரீவனே!* ***நின்னை*** - *(என் உயிர்த்துணைவனாகிய) உன்னை;* ***அக்கருணை இல்லோன்*** - *அந்தக் கருணையற்றோன் ஆகிய இராவணன்;* ***கொல்லுதல் செய்வான் ஆகின்*** - *கொன்றிருப்பானேயானால்;* ***விளிந்திலாதேன்*** - *உயிர்துறவாத யான்;* ***கொற்றம் கொடுமையால் பேணி*** - *வெற்றியைக் கொடும் போர் செய்து பெற எண்ணி;* ***பல்பெரும் பகழி மாரி*** - *பற்பல பெரிய அம்பு மழையினால்;* ***வேரொடும் பறிய நூறி*** - *இராவணனை சுற்றத்தோடும் பறித்து அழித்து;* ***வெல்லினும்*** - *வென்றேன் ஆயினும்;* ***தோற்றேன் யானே அல்லனோ?*** - *(அப்போதும்) தோற்றவன் நானே ஆவேன் அன்றோ?*

*இராவணனை வேரொடு அழித்தாலும் அச்செயல் சுக்கிரீவன் இழப்பினை ஈடு செய்யாது என்று சுக்கிரீவன் பெருமை உணர்த்தப்பட்டது.*

***6931. 'பெருமையும் வண்மைதானும், பேர் எழில்***
***ஆண்மைதானும்,***
***ஒருமையின் உணர நோக்கின், பொறையினது***
***ஊற்றம் அன்றே!***
***அருமையும், அடர்ந்து நின்ற பழியையும் அயர்ந்தாய்***
***போல***
***இருமையும் கெடுக்கலுற்றாய்; என் நினைந்து, என்***
***செய்தாய் நீ!***

***ஒருமையின் உணர நோக்கின்*** - *மனத்தை ஒருமுகமாக்கி உணர்ந்து பார்த்தால்;* ***பெருமையும் வண்மை தானும்*** - *பெருமைப் பண்பும் வண்மைக் குணமும்;* ***பேர் எழில் ஆண்மை தானும்*** - *பேரழகுடைய வீரப் பண்பும்;* ***பொறையினது ஊற்றம் அன்றே*** - *பொறுமையெனும் (பெரும்) பண்பிலிருந்து சுரப்பனவேயன்றோ?* ***அருமையும்*** - *உன்னுடைய அருமையினையும்;* ***அடர்ந்து நின்ற பழியையும்*** -*(உன் செயலால்) நெருங்கி வந்த பழியினையும்;* ***அயர்ந்தாய் போல*** - *(நீ) மறந்தாய் போலும்!* ***இருமையும் கெடுக்கல் உற்றாய்*** - *இம்மை, மறுமையெனும் இரண்டினையும் கெடுக்க இருந்தாய்;* ***நீ என் நினைந்து என் செய்தாய்*** - *நீ என்ன நினைத்து என்ன செய்துவிட்டாய்?*

*பொறுமை ஒரு மலை. அப்பண்பிலிருந்து பல பண்புகள் மலையூற்றுகள் போலச் சுரக்கின்றன என்பது கருத்து. இம்மை, மறுமை இரண்டிலும் பழி விளையத்தக்க செயல் இராவணன் மேல் சுக்கிரீவன் பாய்ந்த செயல் என்பது பெருமானின் கருத்து.*

***6932. 'இந் நிலை விரைவின் எய்தாது, இத் துணை தாழ்த்திஆயின்,***
***நல் நுதல் சீதையால் என்? ஞாலத்தால் பயன் என்? நம்பீ!***
***உன்னை யான் தொடர்வல்; என்னைத் தொடரும் இவ் உலகம்; என்றால்,***
***பின்னை என், இதனைக் கொண்டு? விளையாடி, பிழைப்ப செய்தாய்!'***

*__இந்நிலை__ - இந்த நிலையில்; __விரைவின் எய்தாது__ - (நீ) விரைந்து இங்கு வாராமல்; __இத்துணை தாழ்த்தி ஆயின்__ - இவ்வளவு நேரம் தாமதித்து இருந்தால்; __உன்னை யான் தொடர்வல்__ - உனக்குத் தீங்கு விளைந்து இறந்திருப்பாய் எனக் கருதி பின்பற்றி நானும் முடிந்திருப்பேன்; __இவ்வுலகம் என்னைத் தொடரும்__ - என்னைப் பின்பற்றி இவ்வுலகத்தினரும் உயிர் நீத்திருப்பர் என்னும் போது, (பின்பு); __நல் நுதல் சீதையால் என்?__ -நல்ல நெற்றியினையுடைய சீதையால் தான் என்ன (பயன்?) __ஞாலத்தால் பயன் என்?__ - இந்த உலகத்தால் தான் என்ன பயன்? __பின்னை இதனைக் கொண்டு என்?__ - பிறகு, இந்தப் படையெடுப் பாலுந்தான் என்ன பயன் உண்டு? __நம்பீ!__ - சிறந்த ஆண்மகனே! __விளையாடிப் பிழைப்ப செய்தாய்?__ - விளையாட்டுச் செயலால் தவறான செயலைச் செய்துவிட்டாய்!.*

*ஆராயாமல், வருவதுணராமல் செய்யும் செயல்களைப் பெருமான் கண்டிப்பதை இப்பாடலில் காணலாம். நீ இல்லாது போன பின்பு கிடைக்கும் "நன்னுதல் சீதையால் என்?." என்று வினவினான். சந்தர்ப்பச் சூழலில் சுக்கிரீவன் துயரமே பெரிதென்பதால் பெருமானின் இந்த வாசகத்தில் நெஞ்சு நெக்குருகிய நம்பிள்ளை, "அன்றீன்ற கன்றிற்காக முன்பு ஈன்ற கன்றுகளை முட்டி மோதும் தாய்ப்பசுப்போலே, சுக்கிரீவனுக்காகப் பிராட்டியைப் புறக்கணித்தான் என்று வியப்பார். (திருவாய்ஈடு). தண்டகாரணியத்தில், "சீதையாகிய உன்னை இழந்தாலும் இழப்பேன்; ஆனால், என்னையடைந்தாரை என்றும் நான் இழவேன் என்று பெருமான் கூறியதாக முதல் நூலாகிய வான்மீகத்தில் உள்ள கருத்தை, இடமறிந்து இங்குப் பயன்படுத்தியுள்ள கவிஞர் பிரானின் திறம் போற்றத்தக்கது. "விளையாடிப் பிழைப்ப செய்தாய்" ஒப்பு "வளை எயிற்று அரக்கரோடு வரும் விளையாட்டென்றாலும் விளைவன தீமையேயாம்" (கம்ப. 2798) "நான் மரித்தது கண்டு, அரக்கர் மீறி உலகை நலிய, உலகத்தவரும் இறந்து என் பின்னே வருவர்" என்பது இத்தொடர்க்கு ஒரு பழைய உரை.*

*சுக்கிரீவன் மறுமொழி*

***6933. 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்;***

***நாட்டிலே குகனார் செய்த நன்மையை***
***நயக்கமாட்டேன்;***
***கேட்டிலேன் இன்று கண்டும், கிளி மொழி***
***மாதராளை***
***மீட்டிலேன்; தலைகள் பத்தும் கொணர்ந்திலேன்,***
***வெறுங் கை வந்தேன்.***

***காட்டிலே*** - *(இவ்வாறு இராமபிரான் கூறக்கேட்ட சுக்கிரீவன்) காட்டின் கண்ணே;* ***கழுகின் வேந்தன்*** - கழுகரசனான சடாயு; ***செய்தன காட்டமாட்டேன்*** - புரிந்தவைபோன்ற வீரச் செயல்களைப் புரிந்து காட்டும் ஆற்றல் பெற்றேனும் அல்லேன்; ***நாட்டிலே குகனார் செய்த நன்மையை*** - நாட்டின் கண்ணே குகப் பெருமான் செய்த நன்மைச் செயல்களைச் செய்யவும்; ***நயக்க மாட்டேன்*** - விருப்பம் காட்டேன்; ***கிளி மொழி மாதராளை*** - கிளியனைய மொழி பேசும் சீதைப்பிராட்டியை; ***கேட்டிலே நின்று கண்டும்*** - (இராவணன் கவர்ந்து செல்லும்) தீங்கினை, (கிட்கிந்தை மலை மேல்) நின்று கண்ணாரக் கண்டும்; ***மீட்டிலேன்*** - மீட்டுத் தந்தவனும் அல்லேன்; ***தலைகள் பத்தும் கொணர்ந்திலேன்*** - (இத்தீங்கினைப் புரிந்த) இராவணனின் பத்து தலைகளையும் கொண்டு வந்தேனும் அல்லேன்; ***வெறுங்கை வந்தேன்*** - வெறுங்கைகளை மட்டும் கொண்டு வந்தேன்.

*இராமன் மீது அன்பு கொண்டு உதவி புரிந்தமையால் சடாயுவும் குகனும் முறையே 'பெரிய உடையார் என்றும் குகப்பெருமாள்' என்றும் வைணவ மரபில் பாராட்டிக் கூறப்படுவார் ஆர் விகுதி சேர்த்து மொழிந்தான் குகனார் என்று. இத்தகு பெருமையாலே தான் "குகப்பெருமாள்" எனப் பெயர் பெற்றதுமாம். கைங்கரியம் புரிவதில் இராமபக்தர் களுக்கிடையே நிலவிய சுமுகப் போட்டியை இப்பாடல் அழகுறத் தருகிறது.*

***6934. 'வன் பகை நிற்க, எங்கள் வானரத் தொழிலுக்கு***
***ஏற்ற***
***புன் பகை காட்டும் யானோ புகழ்ப் பகைக்கு***
***ஒருவன் போலாம்?***
***என் பகை தீர்த்து, என் ஆவி அரசொடும் எனக்குத்***
***தந்த***
***உன் பகை உனக்குத் தந்தேன்; உயிர் சுமந்து***
***உழலாநின்றேன்.***

***என்பகை தீர்த்து*** - என்னுடைய பகைவனான வாலியை அழித்து; ***என் ஆவி*** - எனது உயிரை; ***அரசொடும் எனக்குத்தந்த*** - என் அரசுடனே எனக்குத் தந்தவனான; ***உன் பகை*** - (உனக்கு) உன் பகைவனாகிய இராவணனை; ***உனக்குத் தந்தேன்*** - (நானே ஒழிக்காமல் நீயே அழிக்கும்படி) உனக்கே விட்டுவைத்தேன்; ***உயிர் சுமந்து உழலா நின்றேன்*** - புரிய வேண்டிய உதவியைப் புரியவேண்டியவர்க்குப் புரியாமல் (வீணே)

*உயிரைச் சுமந்து கொண்டு மனம் வருந்தி வாழ்கின்றேன்;* ***வன் பகை நிற்க*** *- (ஆதலால்) வலிய பகை (அழியாமல் அப்படியே) இருக்க;* ***எங்கள் வானரத் தொழிலுக்கு ஏற்ற*** *- எங்களுடைய குரங்குச் செயலுக்குத் தக்க; புன்பகை காட்டும் - அற்பப் பகைச் செயல்களில் (ஈடுபாடு) காட்டுகின்ற; யான் - நானோ;* ***புகழ்ப்பகைக்கு ஒருவன் போலாம்*** *- (உம்முடைய) புகழ்ச் செயல்களுக்கு (ஊறுவிளைக்கப் பிறந்த) ஒருவன் போல்வேன்.*

*வெல்லுதற்கரிய பகைவனை வென்று தனக்கு உயிரையும் அரசவாழ்வையும் கொடுத்த இராமபிரானுக்குக் கைம்மாறாக அவன் பகை அழிக்காது திரும்பிய தன் செயலை நினைத்து வருந்தும் சுக்கிரீவன் மனநிலையை இப்பாடலில் காண்கிறோம்.*

***6935. 'செம்புக்கும் சிவந்த செங் கண் திசை நிலைக்***
***களிற்றின் சீற்றக்***
***கொம்புக்கும் குறைந்த அன்றே, என்னுடைக்***
***குரக்குப் புன் தோள்?***
***"அம்புக்கு முன்னம் சென்று, உன் அரும் பகை***
***முடிப்பல்" என்று***
***வெம்புற்ற மனமும், யானும், தீது இன்றி, மீள***
***வந்தேன்.***

***செம்புக்கும் சிவந்த*** *- செம்பு எனும் உலோகத்தைக் காட்டிலும்;* ***செங்கண் திசை நிலைக் களிற்றின்*** *- சிவந்த கண்களையுடைய திக்குயானைகளின்;* ***சீற்றக் கொம்புக்கும்*** *- சினத்தோடு பாய்ந்த கொம்புகளுக்கும்;* ***என்னுடைய புன்குரங்குத்தோள்*** *- என்னுடைய புல்லிய குரங்குத் தோள்கள்:* ***குறைந்த அன்றே*** *- வலி குறைந்து போயின அல்லவோ?* ***அம்புக்கு முன்னம் சென்று*** *- (உன்னுடைய) அம்புக்கு முன்னாகவே சென்று:* ***உன் அரும் பகை முடிப்பல் என்று*** *- உனது அரிய பகையை முடிப்பேன் என்று (கூறி);* ***வெம்புற்ற மனமும் யானும்*** *- புழுங்கிய உள்ளமும் நானுமாய்:* ***தீங்கின்றி மீள வந்தேன்*** *- எந்த வித இடையூறு மின்றி பத்திரமாக மீண்டு வந்து விட்டேன் (அல்லவோ?)*

***6936. "நூல் வலி காட்டும் சிந்தை நும் பெருந் தூதன்,***
***வெம் போர***
***வேல் வலி காட்டுவார்க்கும், வில் வலி***
***காட்டுவார்க்கும்,***
***வால் வலி காட்டிப் போந்த வள நகர் புக்கு, மற்று***
***என்***
***கால் வலி காட்டிப் போந்தேன்; கை வலிக்கு அவதி***
***உண்டோ?***

***நூல் வலி காட்டும் சிந்தை*** - *(கற்ற) நூல்களின் வலிமையைத் (தன் சொல் வலிமையால் காட்ட வல்ல) மனமுடைய:* ***நும் பெருந்தூதன்*** - *உம்முடைய பெருமைக்குரிய தூதுவனாகிய அனுமன்:* ***வெம்போரில்*** - *(தான் அரக்கருடன் நடத்திய) கொடிய போரில், (தன்னிடம்)* ***வேல் வலி காட்டுவார்க்கும்*** - *தங்கள் வேலின் வலிமையைக் காட்ட வந்தவர்க்கும்:* ***வில் வலி காட்டுவார்க்கும்*** - *வில்லின் வலிமையைக் காட்ட வந்தவர்க்கும்:* ***வால் வலி காட்டிப் போந்த வள நகர்*** - *(மாறாகத் தன்) வாலின் வலிமையைக் காட்டித் திரும்பிய வளம் மிக்க நகராகிய இலங்கையில் புகுந்து:* ***என் கால் வலி காட்டிப் போந்தேன்*** - *(திரும்பி வருவதில்) என்னுடைய கால் வலிமையைக் காண்பித்து வந்தேன்:* ***கை வலிக்கு அவதி உண்டோ?*** - *என் கை வலிமைக்கு எல்லையும் உளதோ?*

*வீடணன் சுக்கிரீவனது வீரத்தைப் பாராட்டுதல்*

***6937. இன்னன பலவும் பன்னி, இறைஞ்சிய முடியன் நாணி,***
***மன்னவர்மன்னன் முன்னர், வானர மன்னன் நிற்ப,***
***அன்னவன்தன்னை நோக்கி, அழகனை நோக்கி, ஆழி***
***மின் என விளங்கும் பைம் பூண் வீடணன் விளம்பலுற்றான்:***

***இன்னன பலவும் பன்னி*** - *இவ்வாறு பல வாசகங்களைச் சொல்லி;* ***இறைஞ்சிய முடியன் நாணி*** - *வணங்கிய தலையினனாய் வெட்கமுற்று;* ***மன்னவர் மன்னன் முன்னர்*** - *அரசர்க்கு அரசனான இராமபிரான் முன்பு:* ***வானர மன்னன் நிற்ப*** - *வானரங்கட்கு அரசனான சுக்கிரீவன் நிற்கும்போது:* ***அன்னவன் தன்னை நோக்கி*** - *அந்தச் சுக்கிரீவனைப் பார்த்து:* ***அழகனை நோக்கி*** - *இராமபிரானைப் பார்த்து:* ***ஆழி மின் என விளங்கும் பைம்பூண்*** - *கடலில் தோன்றிடும் மின்னலைப் போல் ஒளிவிடும் ஆபரணங்களையணிந்த:* ***வீடணன் மொழிவது ஆனான்*** - *வீடணன் மொழியத் தொடங்கினான்.*

*இட்சுவாகு குலத்திற்கு உலக அரசுகள் எல்லாம் கட்டுப்பட்டது என்னும் மரபு பற்றி "மன்னவர் மன்னன்" என இராமபிரானைச் சுட்டினார்.*

***6938. 'வாங்கிய மணிகள், அன்னான் தலைமிசை மௌலி மேலே***
***ஓங்கிய அல்லவோ? மற்று, இனி அப்பால் உயர்ந்தது உண்டோ?***

***தீங்கினன் சிரத்தின் மேலும், உயிரினும், சீரிது***
***அம்மா!***
***வீங்கிய புகழை எல்லாம் வேரொடும் வாங்கி***
***விட்டாய்!***

***வாங்கிய மணிகள்*** - *(வீடணன் சுக்கிரீவனைப் பார்த்து) (நீ) பறித்து வந்த மணிகள்:* ***அன்னான்*** - *அந்த இராவணனுடைய:* ***தலைமிசை மௌலி மேலே*** - *தலையின் மேல் உள்ள மகுடத்தின்* ***மேலே: ஓங்கிய அல்லவோ?*** - *(ஒளிவீசி) உயர்ந்திருந்தன அல்லவோ?* ***இனி அப்பால் உயர்ந்தது ஒன்று உண்டோ?*** - *அவன் தலைமுடி மேல் உயர்ந்திருப்பதிலும் உயர்ந்தது இருக்கிறதா?:* ***தீங்கினன் சிரத்தின் மேலும்*** - *தீமைகள் நிறைந்த அவன் தலைகளை விடவும்:* ***உயிரினும்*** - *உயிரினை விடவும்:* ***சீரிது*** - *சிறப்புடையனவாக கருதியவை அவை:* ***வீங்கிய புகழையெல்லாம்*** - *(அவற்றைப் பறித்து வந்ததன் மூலமாக) அவனுடைய உயர்ந்தோங்கிய புகழ் அனைத்தையும்:* ***வேரொடும் வாங்கி விட்டாய்*** - *வேரொடும் பறித்து வந்து விட்டாய் (அல்லவோ?)*

*'அல்லவோ' என்பது ஈரிடத்தும் கூட்டப்பட்டது. இராவணன் உடம்பில் சிறந்தது தலை, அதில் சிறந்தது மகுடம். அதில் சிறந்தது மணி. அதனைப் பறித்து வந்தவன் நீ, சிறந்ததிற் சிறந்ததைப் பறித்து வந்த நீ, சிறந்ததில் சிறந்த செயல் செய்துள்ளனை என்கின்றான் வீடணன். மகுட மணியைப் பறித்தது புகழை வேரொடு பறித்த செயலாகும் எனப் பாராட்டிய திறம் காண்க.*

***6939. 'பாரகம் சுமந்த பாம்பின் பணாமணி பறிக்க***
***வேண்டின்,***
***வார் கழல் காலினாலே கல்ல வல்லவனை முன்னா,***
***தார் கெழு மௌலி பத்தின் தனி மணி வலிதின்***
***தந்த***
***வீரதை விடைவலோற்கும் முடியுமோ? வேறும்***
***உண்டோ?***

***பாரகம் சுமந்த பாம்பின்*** - *இப்பூமியைச் சுமந்துள்ள பாம்பாகிய ஆதிசேடனுடைய:* ***பணா மணி பறிக்க வேண்டின்*** *படத்தில் உள்ள நாகமாணிக்கங்களைக் கைப்பற்ற விரும்பினால்:* ***வார்கழல் காலினாலே*** - *(தனது) வீரக்கழல் அணிந்த காலினாலேயே:* ***கல்ல வல்லவனை*** - *கல்லி எடுக்கவல்ல (பேராற்றல் மிக்க) இராவணனுடைய:* ***முன்னா*** - *முன்னாக நின்று:* ***தார் கெழு மௌலி பத்தின்*** - *மாலைகள் நிறைந்த மகுடங்கள் பத்திலிருந்த:* ***தனி மணி வாங்கி வந்த வீரதை*** - *ஒப்பற்ற மணிகளைப் பறித்து வந்த வீரத்தை:* ***விடை வலோற்கும்*** - *இடப வாகனம் ஏறும் சிவபெருமானாலும்:* ***முடியுமோ?*** - *புரிய இயலுமோ?* ***வேறும் உண்டோ?*** - *(இதைவிடவும் சிறந்த வீரச்செயல்) வேறு எதுவும் உண்டோ? (இல்லை)*

*"யாதன் உருபின் கூறிற்று ஆயினும் பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்" (தொல், சொல், வேற், மயங். 23) ஆதலின், கல்லவல்லவனை விடை வலோற்கும்" எனும் இடங்களில் உள்ள இரண்டன் உருபும், நான்கன் உருபும் பொருட்சிறப்புக்கேற்ப, ஆறன் உருபாகவும் மூன்றன் உருபாகவும் உருபுமயக்கப் பொருள்கொள்ளப் பெற்றன.*

***6940. 'கரு மணி கண்டத்தான்தன் சென்னியில் கறை வெண் திங்கள்,***
***பரு மணி வண்ணன் மார்பின் செம் மணி, பறித்திட்டாலும்,-***
***தரு மணி இமைக்கும் தோளாய்!--தசமுகன் முடியில் தைத்த***
***திரு மணி பறித்துத் தந்த வென்றியே சீரிது அன்றோ?***

***தருமணி இமைக்கும் தோளாய்*** *- புனைந்துள்ள மணிகள் ஒளிர்கின்ற தோள்களையுடையவனே!* ***கருமணி கண்டத்தான் தன்*** *- நீலமணி போன்ற கழுத்தினனான சிவபிரானுடைய:* ***சென்னியில்*** *- திருமுடியில் (உள்ள)* ***கறைவெண் திங்கள்*** *- களங்கமுள்ள வெள்ளிய சந்திரனையும்:* ***பருமணி வண்ணன் மார்பின் செம்மணி*** *- பெரிய நீல மணி போன்ற நிறமுடைய திருமாலின் மார்பில் உள்ள கவுத்துவ மணியையும்:* ***பறித்திட்டாலும்*** *- கைப்பற்றிக் கொணர்வது இயன்றாலும் (அவற்றையெல்லாம் விட):* ***தசமுகன் முடியில் தைத்த*** *- பத்துத் தலையினனான இராவணன் முடியில் பதித்திருந்த:* ***திருமணி பறித்துத் தந்த*** *- சிறந்த மணியைப் பறித்துக் கொணர்ந்த:* ***வென்றியே சீரிது அன்றோ?*** *- வெற்றியே சிறப்புடையது அல்லவோ?*

***6941. 'தொடி மணி இமைக்கும் தோளாய்;--சொல் இனி வேறும் உண்டோ?***
***வடி மணி வயிர ஒள் வாள் சிவன்வயின் வாங்கிக் கொண்டான்***
***முடி மணி பறித்திட்டாயோ? இவன் இனி முடிக்கும் வென்றிக்கு***
***அடி மணி இட்டாய் அன்றே?--அரிக் குலத்து அரச!' என்றான்.***

***அரிக்குலத்து அரச!*** *- குரங்கினத்தின் தலைவனே!* ***தொடிமணி இமைக்கும் தோளாய்!*** *- தோள்வளையில் பதித்துள்ள மணிகள் ஒளிரும்*

*தோள்களையுடையவனே!* **வடிமணி வயிரத்து ஒள்வாள்** *-தேர்ந்த மணிகளும் வயிரமும் பதிக்கப் பெற்ற 'சந்திரகாசம்' என்னும் வாளினை:* **சிவன் வயின் வாங்கிக் கொண்டான்** *- சிவபிரானிடமிருந்து பெற்றுக் கொண்டவனான இராவணனுடைய:* **முடிமணி பறித்திட்டாயோ?** *- மகுடத்தில் இருந்த மணிகளையா கைப்பற்றினாய் நீ?:* **இவன்** *- (இல்லை. இல்லை) இந்த இராமபிரான்:* **இனி முடிக்கும் வெற்றிக்கு** *- இனி அடைய இருக்கும் வெற்றி மாளிகைக்கு;* **அடி மணி இட்டாய** *`ெ - அடித்தளத்தில் இடும் மணியை யன்றோ இட்டாய்!* **சொல் இதின் வேறும் உண்டோ?** *- புகழ் விளைக்கும் செயல் இதை விடவும் வேறு எதுவும் உண்டோ? (இல்லையென்க);* **என்றான்** *-*

*சிவனிடம் இராவணன் வரத்தால் பெற்ற வாள் "சந்திரகாசம்" முடிமணியைப் பறித்திட வில்லை' இராமன் வெற்றி மாளிகைக்கு அடித்தள மணியிட்டாய் என ஒன்றைச் சமத்காரமாக மறுத்து இன்னொன்றாகக் கூறுவதால் இது அவநுதியணி.*

## *இராமன், சுக்கிரீவன் வெற்றியைப் போற்றுதல்*

***6942. 'வென்றி அன்று என்றும், வென்றி வீரர்க்கு விளம்பத்தக்க***
***நன்றி அன்று என்றும், அன்று; நானிலம் எயிற்றில் கொண்ட***
***பன்றி அன்றுஆகின், ஈது ஆர் இயற்றுவார் பரிவின்?' என்னா,***
***'இன்றுஇது வென்றி' என்று என்று, இராமனும் இரங்கிச் சொன்னான்.***

**வென்றி அன்று என்றும்** *- (வீடணன் புகழுரைகளைக் கேட்டு மகிழ்ந்த இராமன் சுக்கிரீவனை நோக்கி) (உன்னுடைய இச்செயல்) வெற்றியுடையது அன்று என்றும்:* **வென்றி வீரர்க்கு விளம்பத்தக்க** *- வெற்றி வீரர் பால் அமையத்தக்க புகழத்தக்க:* **நன்றி அன்று என்றும் அன்று** *- நன்றியுணர்வினைக் காட்டுவதற்குரியது அன்று என்றும் நான் கருதவில்லை:* **நானிலம் எயிற்றில் கொண்ட** *- பூமியைத் தன் தந்தத்தின் நுனியில் ஏந்தி வந்த:* **பன்றி அன்று ஆகின்** *- வராக மூர்த்தியாகிய திருமாலைத் தவிர:* **பரிவின் ஈது ஆர் இயற்றுவார்?** *-இச்செயலை இவ்வளவு விரைவில் யாரே இயற்ற இயலும்:* **என்னா** *- என்று;* **என்று என்று** *- மீண்டும் மீண்டும்:* **இரங்கிச் சொன்னான்** *- (சுக்கிரீவனை முன்பு வைத்தற்கு) இரங்கிக் கூறினான்.*

*சுக்கிரீவன் தன் இசைவு பெறாமல், ஆர்வ மிகுதியால் சினங்காவாது பகைவன் பிடியில் அகப்பட இருந்த ஆத்திரச் செய்கை பெருமானை வருத்தியதால் முன்னர் கடுஞ்சொற்களைப் பயன்படுத்தினாலும் மணி முடியைப் பறித்த வெற்றியைப் பெரிதும் பாராட்டினான் என்றும் கொள்க...*

*கதிரவன் மறைவு*

***6943.  தன் தனிப் புதல்வன் வென்றித் தசமுகன் முடியில் தைத்த***
***மின் தளிர்த்தனைய பல் மா மணியினை வெளியில் கண்டான்;***
***'ஒன்றுஒழித்துஒன்றுஆம்' என்று, அவ் அரக்கனுக்கு ஒளிப்பான்போல,***
***வன் தனிக் குன்றுக்கு அப்பால், இரவியும் மறையப் போனான்.***

**இரவியும்** - *சூரியனும்;* **தன் தனிப் புதல்வன்** - *தன்னுடைய ஒப்பற்ற மகன்;* **வென்றித் தசமுகன்** - *வெற்றி பொருந்திய இராவணனுடைய;* **முடியில் தைத்த** - *மகுடத்தில் பதித்திருந்த:* **மின் தளிர்த்து அனைய பல்மா மணியினை** - *மின்னல் போன்று (தன் ஒளிக்கதிர்கள் படுதலால்) ஒளிசிந்துகின்ற பலபெருமைக்குரிய மணிகளை;* **வெளியில் கண்டான்** - *உலகிலே கண்டான்:* **'ஒன்று ஒழித்து ஒன்று ஆம்'** - *'ஒன்று கிடக்க ஒன்று ஆகிவிடக்கூடும்' என்று:* **அவ் அரக்கனுக்கு** - *அந்த அரக்கனாகிய இராவணனுக்கு:* **ஒளிப்பான் போல** - *அஞ்சி ஒளிந்து கொள்பவனைப் போல:* **வன்தனிக் குன்றுக்கு அப்பால்** - *வலிய அத்தகிரி எனும் தனக்குரிய மலைக்குப் பின்புறமாக:* **மறையப் போனான்** - *மறைவதற்குச் சென்று விட்டான்.*

*சூரியன் மறைவு-தற்குறிப்பேற்ற அணி. ஒன்று ஒழித்து ஒன்றாதல்-இன்றும் வழங்கும் மரபுத் தொடர். "கோள் இரண்டையும் கொடுஞ்சிறை வைத்த அக்குமரன்" (கம்ப. 6568) என முன்பே சூரிய சந்திரர் சிறைப்பட்டுள்ளதனால் சூரியன் அஞ்சி மறைந்தான்.*

*இராமனும் இராவணனும் தத்தம் இருக்கை சேர்தல்*

***6944.  கங்குல் வந்து இறுத்த காலை, கை விளக்கு எடுப்ப காவல்***
***வெங் கழல் அரக்கன் மௌலிமிசை மணி விளக்கம் செய்ய,***
***செங் கதிர் மைந்தன் செய்த வென்றியை நிறையத் தேக்கிப்***
***பொங்கிய தோளினானும், இழிந்து போய், இருக்கை புக்கான்.***

***கங்குல் வந்து இறுத்த காலை*** -*இரவு வந்து தங்கியபோது:* **கை விளக்கு எடுப்பது என்ன** - *கை விளக்கு எடுப்பது போன்று:* **வெம்கழல் அரக்கன்** - *கடிய வீரக்கழல்களையணிந்த இராவணனுடைய:* **மௌலி மிசை மணி விளக்கம் செய்ய** - *மகுடத்தின் மீது பதித்திருந்த மணிகளே இருள் அகற்றும் விளக்காக ஒளிசெய்ய:* **செங்கதிர் மைந்தன் செய்த வென்றியை** - *சிவந்த கதிர்களையுடைய சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவன் விளைத்த வெற்றியை:* **நிறைய தேக்கி** -*மனத்துக்குள் நிறைத்துக் கொண்டு:* **இழிந்து போய்** - *சுவேல மலையிலிருந்து இறங்கிச் சென்று:* **பொங்கிய தோளினானும்** - *பூரித்த தோள்கள் உடையவனான இராமனும்:* **இருக்கை` புக்கான்** - *தன் பாசறை வீட்டையடைந்தான்.*

*6945.* ***என்றானும் இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன்,***
***நின்றார்கள் தேவர் கண்டார் என்பது ஓர் நாணம் நீள,***
***அன்று ஆய மகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக***
***பொன்றாது பொன்றினான், தன் புகழ் என இழிந்து, போனான்.***

**என்றானும்** - *எந்த நாளிலேயும்:* **இனைய தன்மை** - *இத்தகைய இழிந்த நிலையை:* **எய்தாத இலங்கை வேந்தன்** - *அடைந்தறியாத இராவணன்:* **நின்றார்கள் தேவர் கண்டார்** - *சுக்கிரீவனால் தான் அடைந்த இழிநிலையை வானத்தில் நின்று தேவர்கள் கண்டார்களே!:* **என்பது ஓர் நாணம் நீள** - *என்பதனால் எழுந்த தனித்த வெட்கம் ஓங்க:* **அன்று** - *அப்பொழுது:* **ஆய மகளிர் நோக்கம்** - *சுற்றியிருந்த அரண்மனை மகளிர் கூட்டத்தின் காதல் பார்வையெல்லாம்:* **ஆடவர் நோக்கம் ஆக** - *(காதற்குறிப்பற்ற வெறும்) ஆடவர்கள் பார்வையாகி போக, (மானக்கேட்டால்):* **பொன்றாது பொன்றினான்** - *சாவாமல் செத்துக் கொண்டிருந்த இராவணன்:* **தன் புகழ் என** - *தன் புகழ் இறங்குவது போல:* **இழிந்து போனான்** - *(கோட்டைக்) கோபுரத்திலிருந்து இறங்கிப் போனான்.*

## *அணி வகுப்புப் படலம்*

*மகுட மணிகளை இழந்த இராவணன் சோகத்தால் துயில் பெறாது மஞ்சத்தில் புரண்டான். சார்த்தூலன் என்னும் ஒற்றன் அப்போது நுழைந்தான். வானரப் படைகள் இலங்கையின் வாயில்கள் தோறும் முற்றுகைக்காகப் பகிர்ந்தனுப்பப்பட்டுள்ள செய்தியை உரைத்தான் ஒற்றன். உடனே, இராவணன், அமைச்சர்களோடு ஆய்வு நிகழ்த்தினான். மாலியவான் மீண்டும் அறம் உரைத்தும் வீணாகிறது. இராவணன் தன் சேனைகளை அணிவகுத்து இன்னார் தலைமையில் இத்தனை வெள்ளம் சேனையோடு, இந்த இந்தத் திசையில் நிற்க என்று ஆணையிடுகிறான். இந்நிகழ்ச்சிகளைக் கூறுவது இப்படலம்.*

### *இராவணன் மானத்தால் வருந்தித் துயில முயலுதல்*

***6946. மானத்தான் ஊன்றப்பட்ட மருமத்தான், வதனம் எல்லாம்***
***கூனல் தாமரையின் தோன்ற, வான் தொடும் கோயில் புக்கான்.***
***பானத்தான் அல்லன்; தெய்வப் பாடலான் அல்லன்; ஆடல்***
***தானத்தான் அல்லன்; மெல்லென் சயனத்தான்; உரையும் தாரான்.***

***மானத்தால் ஊன்றப்பட்ட மருமத்தான்*** *- மானம் என்னும் வேலால் ஊன்றித் தாக்கப்பட்ட மார்பினையுடையவனான இராவணன்.* ***வதனம் எல்லாம்*** *- முகங்கள் பத்தும்;* ***கூனல் தாமரையில் தோன்ற*** *- வாடி வதங்கிய தாமரைகள் போல் (தலைகவிழ்ந்த வண்ணம்) தோற்றம் அளிக்க;* ***வான் தொடும் கோயில் புக்கான்*** *- வான அளவும் தன் அரண்மனைக்குள் நுழைந்தான்;* ***பானத்தான் அல்லன்*** *- (அவ்வாறு நுழைந்த அவன்) (மகிழ்ச்சி தரும்) பானங்களைப் பருகவில்லை;* ***தெய்வப் பாடலான் அல்லன்*** *- தெய்வ இசைப்பாடல்களைக் கேட்டு மகிழவில்லை;* ***ஆடல் தானத்தான் அல்லன்*** *- ஆடல் மகளிர் ஆடும் நாட்டிய சாலைக்கும் செல்ல இல்லை;* ***உரையும் தாரான்*** *- யாரோடும் உரைதரவும் இல்லை;* ***மெல்லென் சயனத்தான்*** *- மெத்தென்ற படுக்கையிற் படுத்துக் கிடப்பதானான். "ஊன்றப்பட்ட" என்னும் வினையால், ஊன்றப்பட்டது மானம் என்னும் வேல் என்பது குறித்தார். அது பாய்ந்துள்ள இடம் நெஞ்சில் என்பார். "மருமத்தான்" என்றார். இந்தப்பாடலில் உள்ள அவலச் சுவை இராவணன் பெற்ற இளிவும் இழவும் பற்றி வந்தது.*

***6947. வை எயிற்றாலும், நேரா மணி இழந்து இரங்கலாலும்,***
***பையுயிர்த்து அயரும் பேழ் வாய்ப் பல் தலைப் பரப்பினாலும்,***
***மெய்யனை, திரையின் வேலை மென் மலர்ப் பள்ளி***

**ஆன**
**ஐயனை, பிரிந்து வைகும் அனந்தனே--அரக்கர்**
**வேந்தன்.**

***அரக்கர் வேந்தன்*** - *அரக்கர் கோமானாகிய இராவணன்;* ***வை எயிற்றாலும்*** - *கூரிய பற்கள் கொண்டுள்ளமையாலும்;* ***நேரா மணியிழந்து இரங்கலாலும்*** - *ஒப்பற்ற மணிகளை இழந்து மனம் இரங்குவதாலும்;* ***பை உயிர்த்து அயரும்*** - *படங்களுடன் கூடிப் பெருமூச்சு விட்டுத் தளரும்;* ***பேழ்வாய்ப் பல்தலைப் பரப்பினாலும்*** - *பிளந்த வாயை உடைய பல தலைகளின் பரப்பினையுடைமையாலும்;* ***மெய்யனை*** - *உண்மைப் பொருளாய் உறைபவனும்;* ***ஐயனை*** - *உயிர்க்கூட்டத்தின் தலைவனும் ஆகிய திருமாலை;* ***பிரிந்து வைகும்*** - *பிரிந்து வாழ்பவனும்;* ***திரையில் மென்மலர் பள்ளி ஆன*** - *அலை சூழும் பாற்கடலில் அமைந்துள்ள மெல்லிய மலர்ப் படுக்கையானவனும் ஆன;* ***அனந்தனே*** - *ஆதிசேடனே போன்றவன் ஆனான்.*

*அரக்கர் வேந்தன், வையெயிற்றாலும், மணியிழந்து இரங்கலாலும், பல்தலைப் பரப்பினாலும் அநந்தனே என இயைத்துப் பொருள் கொள்க. மானம் இழந்து மனத்துயர்மிக்கு பெருமூச்சோடு படுத்துக்கிடக்கும் இராவணனுக்குப் பாற்கடலில் திருமாலைப் பிரிந்து வாடும் ஆதிசேடன் உவமையானான். ஏது உவமையணி. "பிரம்ம ஸத் ஜகத் மித்யை" என்பது உபநிடதமாதலின், என்றும் உள்ள இறைவனை "மெய்யன்" என்றார்.*

***6948. தாயினும் பழகினார்க்கும் தன் நிலை தெரிக்கல்***
***ஆகா***
***மாய வல் உருவத்தான் முன் வருதலும், வாயில***
***காப்பான், ' "சேயவர் சேனை நண்ணி, செய் திறம் தெரித்தி***
***நீ" என்று***
***ஏயவன் எய்தினான்' என்று அரசனை இறைஞ்சிச்***
***சொன்னான்.***

***தாயினும் பழகினார்க்கும்*** - *தாயைக்காட்டிலும் நெருங்கிப் பழகினார்க்கும்;* ***தன் நிலை தெரிக்கல் ஆகா*** - *தன்னுடைய (உண்மை) நிலைமையைத் தெரிந்து கூற முடியாத;* ***மாயவல் உருவத்தான்*** - *மாயையில் வல்ல உருவத்தினையுடைய சார்த்தூலன்;* ***முன்வருதலும்*** - *(இராவணனைக்காண அவன் அரண்மனையின்) முன் வந்தான்;* ***வாயில் காப்பான்*** - *அரண்மனை வாயிலைக் காத்து நிற்பான்;* ***சேயவர் சேனை நண்ணி*** - *அந்நியரான பகைவர் படையினை அணுகி;* ***செய்திறம் நீ தெரித்தியென்று*** - *அவர்கள் புரியும்` செயல்களை நீ அறிந்து வந்து தெரிவிப்பாய் என்று;* ***ஏயவன் எய்தினான் என்று*** - *(உன்னால்) ஏவப்பட்டவன் வந்துள்ளான் என்று;* ***அரசனை இறைஞ்சிச் சொன்னான்*** - *இராவணனைப் பணிந்து கூறினான்.*

*"துறந்தார் படிவத்தார் ஆகி இறந்து ஆராய்ந்து என் செயினும் சோர்விலது ஒற்று" (திருக்.: 586) ஆதலின், தாயினை விடவும் பழகினார்க்கும் தன் நிலை தெரிவிக்காத ஒற்றனாயிருந்தான் சார்த்தூலன் என்க. ஒற்றர் வடிவமாற்றம் செய்யும் கலையில் வல்லவராயிருத்தல் வேண்டும். அந்த வடிவமாற்றிக்கலையில், இயல்பாகவே அரக்கர் வல்லார் ஆதலின், "தெரிக்கல் ஆகா மாயவல் உருவத்தான்" சார்த்தூலன் என்றார்.*

*இராவணன் வினாவும் சார்த்தூலன் விடையும்*

***6949. 'அழை' என, எய்தி, பாதம் வணங்கிய அறிஞன்தன்னை,***
***'பிழை அற அறிந்த எல்லாம் உரைத்தி' என்று அரக்கன் பேச,***
***முழை உறு சீயம் அன்னான் முகத்தினால் அகத்தை நோக்கி,***
***குழையுறு மெய்யன், பைய, வரன்முறை கூறலுற்றான்.***

***அழை என எய்தி*** *- '(உள்ளே) அழைத்திடு' என இராவணன் கூற, உள்ளே அடைந்து;* ***பாதம் வணங்கிய*** *- தன் அடிகளில் வணங்கிய,* ***அறிஞன் தன்னை*** *- அறிவு சான்ற (அந்த) ஒற்றனாகிய சார்த்தூலனை (நோக்கி);* ***'பிழை அற அறிந்த எல்லாம் உரைத்தி'*** *- 'நீ பிழையின்றி ஒற்றறிந்தவற்றையெல்லாம் (இப்போது) உரைப்பாயாக';* ***என்று அரக்கன் பேச*** *- என்று இராவணன் உரைக்க;* ***முழை உறுசீயம் அன்னான்*** *- குகையில் அடைந்துள்ள சிங்கம் போன்ற இராவணனுடைய;* ***முகத்தினால் அகத்தை நோக்கி*** *- முகக்குறிப்பினால் (அவன்) மனம் நொந்திருப்பதை யுணர்ந்து;* ***குழையுறு நெஞ்சன்*** *- பணிந்த உள்ளம் உடையவனாய்;* ***பைய வரன்முறை கூறலுற்றான்*** *- மெல்ல, தான் தெரிந்து வந்த முறைப்படி கூறத் தொடங்கினான் (சார்த்தூலன்).*

***6950. 'வீரிய! விதியின் எய்தி, பதினெழு வெள்ளத்தோடும்,***
***மாருதி, மேலை வாயில் உழிஞைமேல் வருவதானான்;***
***ஆரியன், அமைந்த வெள்ளம் அத்தனையோடும், வெற்றிச்***
***சூரியன் மகனைத் தன்னைப் பிரியலன் நிற்கச்***

***சொன்னான்.*** ***வீரிய !*** *- வீரம் செறிந்தவனே!* ***மாருதி*** *- அனுமன்;* ***பதின் எழுவெள்ளத்தோடும்*** *- பதினேழு வெள்ளம் சேனையோடும்;* ***மேலை வாயில்*** *- (கோட்டையின்) மேற்குவாசலில்;* ***உழிஞை மேல் வருவது ஆனான்*** *- மதிலைச் சூழ்ந்து முற்றுகையிட்டுள்ளான்;* ***ஆரியன்*** *- இராமபிரான்;* ***சூரியன் மகனை*** *- சூரியன் மகனாகிய சுக்கிரீவனை;* ***அமைந்த வெள்ளம் அத்தனையோடும்*** *- மேற்கூறியவாறு*

*அதே பதினேழு வெள்ளம் சேனையோடும்;* ***தன்னைப் பிரியலன் நிற்கச் சொன்னான்*** *- தன்னை விட்டு நீங்காமல் (தன்னுடனேயே கூட) நிற்குமாறு பணித்துள்ளான்.*

*இப்பாடல் முதலாக வானர சேனையின் அணிவகுப்பு கூறப் பெறுகிறது. மதிலை வளைத்து முற்றுகையிடுதலை உழிஞைத் திணை ஆதலின், "உழிஞை மேல் வருவது ஆனான்" என்றார். கொடியோனாகிய இராவணனால், அவன் முடி மணி பறித்து வந்த சுக்கிரீவனுக்கு, ஏதாயினும் இடர் வரக்கூடும் என்று, இராமபிரான் தன்னருகேயே வைத்துக் கொண்டு பதினேழு வெள்ளம் சேனையையும் அவனைச் சுற்றி நிற்கப் பணித்தான். இதனால் தன்னை அடைந்தாரைக் காக்கும் அண்ணலின் பேருள்ளமும் பேரருளும் புலனாகின்றன.*

***6951. 'அன்றியும், பதினேழ் வெள்ளத்து அரியொடும்***
***அரசன் மைந்தன்;***
***தென் திசை வாயில் செய்யும் செரு எலாம்***
***செய்வதானான்;***
***ஒன்று பத்து ஆறு வெள்ளத்து அரியொடும்***
***துணைவரோடும்***
***நின்றனன், நீலன் என்பான், குண திசை வாயில்***
***நெற்றி.***

***அன்றியும்*** *- அல்லாமலும்;* ***அரசன் மைந்தன்*** *- கிட்கிந்தைக்கு இளவரசனாகிய அங்கதன்;* ***பதினேழ் வெள்ளத்து அரியொடும்*** *- பதினேழு வெள்ளம் வானரப்படைகளுடனே;* ***தென்திசை வாயில்*** *- இலங்கையின் தெற்குத்திசை வாயிலில்;* ***செய்யும் செரு எலாம் செய்வது ஆனான்*** *- செய்ய வேண்டிய போரையெல்லாம் செய்வதற்கு நியமிக்கப்பட்டுள்ளான்;* ***ஒன்று பத்து ஆறு வெள்ளத்து*** *- (மேலும்) பதினேழு வெள்ளம்;* ***அரியொடும் துணைவரோடும்*** *- குரங்குகளோடும் துணையான நண்பர்களோடும்;* ***நீலன் என்பான்*** *- நீலன் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறவன்;* ***குண திசை வாயில் நெற்றி நின்றனன்*** *- கிழக்குத் திசை வாயிலின் முன்பு நின்றுள்ளான்.*

*ஒன்று பத்து ஆறு-கூட்டுத் தொகையாய்ப் பதினேழைக் குறித்து நின்றது. படைகள் வந்து தண்டு இறங்கியுள்ள இடம் வடக்குக் கோட்டை வாயில் ஆதலின், அதனைத் திசை குறியாமல் கூறியுள்ள திறம் காண்க.*

***6952. 'இம்பரின் இயைந்த காயும் கனியும் கொண்டு,***
***இரண்டு வெள்ளம்***
***வெம்பு வெஞ் சேனைக்கு எல்லாம் உணவு தந்து***
***உழலவிட்டான்;***
***உம்பியை, வாயில்தோறும் நிலை தெரிந்து உணரச்***
***சொன்னான்;***
***தம்பியும் தானும் நிற்பதாயினான்; சமைவு ஈது'***

**என்றான்.**

**இரண்டு வெள்ளம்** - இரண்டு வெள்ளம் சேனையை; **இம்பரின்** - இவ்வுலகிலே; **இயைந்த காயும் கனியும் கொண்டு** - உண்ணத்தக்க காய் கனிகளைக் கொண்டு வந்து; **வெம்பு வெஞ்சேனைக்கு எல்லாம்** - சினந்து போரிடும் கொடிய சேனைகட்கு எல்லாம்; **உணவு தந்து உலவவிட்டான்** - உணவு அளிக்குமாறு திரிய விட்டிருக்கிறான்; **(இராமன்) உம்பியை** - உன்னுடைய தம்பியாகிய வீடணனை; **வாயில் தோறும்** - நான்கு வாயில்களிலும்; **நிலை தெரிந்து உணரச் சொன்னான்** - (அவ்வப்போதுள்ள) நிலவரங்களை அறிந்து தன்னிடம் அறிவிக்கக் கூறியுள்ளான்; **தானும் தம்பியும்** - தானும் தன் தம்பியாகிய இலக்குவனும் ஆக; **நிற்பது ஆயினன்** - (வடக்கு வாயிலில்) நிற்பது ஆனான்; **சமைவு ஈது என்றான்** - (எதிரியின் அணியில் நிகழ்ந்துள்ள) ஏற்பாடுகள் இது என்று முடித்தான் (சார்த்தூலன்).

*"இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன் கண் விடல்" (திருக். 517) என்பதற்கேற்ப உரியவர்களுக்கு உரிய பணிகள் தரப்பட்டன. வெள்ளம்-ஆகு பெயராய்ச் சேனையைக் குறித்தது. "இயைந்த எல்லாம்" என்பதற்கு "கிடைத்தவையெல்லாம்" எனினும் பொருந்தும். இன்றுள்ள படை அமைப்பிலும் இம்முறைகள் உள்ளமை அறிக.*

### *இராவணன், அமைச்சரோடு ஆராய்தல்*

**6953. சார்த்தூலன் இதனைச் சொல்ல, தழல் சொரி**
**தறுகணானும்,**
**பார்த்து, ஊழி வடவை பொங்க, 'படுவது படுமா**
**பார்த்தி;**
**போர்த் தூளி துடைப்பென் நாளை, அவர்**
**உடற்பொறையின்நின்றும்**
**தேர்த்து ஊறு குருதிதன்னால்' என்றனன், எயிறு**

**தின்னா.** **சார்த்தூலன் இதனைச் சொல்ல** - சார்த்தூலன் இவ்வாறு கூறி முடித்தவுடன்; **தழல் சொரி தறு கணானும்** - தீப்பொறி சிதறும் கண்கள் கொண்ட இராவணனும்; **பார்த்து** - (கனல் சொரி கண்ணினனாய்) பார்த்து; **எயிறு தின்னா** - பற்களைக் கடித்த வண்ணம்; **அவர்** - அப்பகைவரின்; **உடல் பொறையின் நின்றும்** - உடல் சுமையிலிருந்தும்; **தேர்த்து ஊறு குருதி தன்னால்** - தேர் சென்ற சுவடு வழியாய் ஓடும் குருதி வெள்ளத்தால்; **போர்த்தூளி நாளை துடைப்பென்** - போரால் எழும் புழுதியை நாளை போக்குவேன்; **ஊழி வடவை பொங்கப்படுவது** - ஊழிக்காலத்தே வடவா முகாக்கினி பொங்கியெழுகையில் உலகோர் அழிவதைப் போன்ற அழிவினை; **படுமா பார்த்தி** - போர்க்களத்தில் நாளை (நீ) பார்ப்பாயே; **என்றனன்...** - என்று கூறினான்.

***6954. மா அணை நீலக் குன்றத்து இள வெயில் வளர்ந்தது என்ன,***
***தூ அணை குருதிச் செக்கர்ச் சுவடு உறப் பொலிந்த தோளான்,***
***ஏ அணை வரி வில் காமன் கணை பட எரியாநின்ற***
***பூ அணை மாறி, வேறு ஓர் புனை மணி இருக்கை புக்கான்.****

***மா அணை நீலக்குன்றத்து*** - *(இவ்வாறு சார்த்தூலனிடம் கூறிய இராவணன்) பெருமை பொருந்திய நீலமலையில்;* ***இளவெயில் ஊர்ந்தது என்ன*** - *இள வெயில் எழுந்தால் போன்று;* ***தூ அணை குருதிச் செக்கர் சுவடு உறப் பொலிந்த தோளான்*** - *தசையோடு பொருந்திய குருதிக்கறை பதிந்த சுவடுகள் அழுந்திய அழகிய தோள்களையுடைய இராவணன்.* ***ஏ அணை வரிவில் காமன் கணைபட*** - *அம்பு எய்யும் தொழிலையுடைய வரிந்து கட்டப்பட்ட வில்லோன் ஆகிய மன்மதனின் கணைகள் பட்டதனால்;* ***எரியா நின்ற*** - *வெப்பம் விளைவித்த; பூ அணை மாறி - மலர் மஞ்சத்திலிருந்து மாறி;* ***வேறு ஓர் புனை மணி இருக்கை புக்கான்*** - *வேறு ஒரு மணிகள் புனையப் பெற்ற அறையைச் சென்றடைந்தான்.*

***6955. செய்வன முறையின் எண்ணி, திறத்திறம் உணர்வின் தேர,***
***மை அறு மரபின் வந்த அமைச்சரை, 'வருக!' என்றான்--***
***பொய் எனப் பளிங்கின் ஆய இருக்கையின் புறத்தைச் சுற்றி,***
***ஐ-இரண்டு ஆய கோடிப் பேய்க் கணம் காப்பது ஆக்கி.***

***பொய் என*** - *(கட்டிடம் இல்லாத) வெற்றிடம் என்று புலப்படும்படி;* ***பளிங்கின் இருக்கையின்*** - *பளிங்கினால் அமைக்கப்பட்ட இருப்பிடத்தினுடைய;* ***புறத்தைச் சுற்றி*** - *வெளிப்புறத்தைச் சுற்றி;* ***ஐயிரண்டாய கோடி பேய்க்கணம் காப்ப ஆக்கி*** - *பத்துக்கோடிப் பேய்க்கூட்டங்களைக் காவல் புரியச் செய்து;* ***செய்வன முறையின் எண்ணி*** - *(பின்பு) செய்யவேண்டுவனவற்றை முறைப்படி சிந்தித்து;* ***திறம் திறம் முறையில் தேரும்*** - *அவ்வவற்றை முறைப்படி தேர்ந்து செயல்பட;* ***மையறு மரபின் வந்த அமைச்சரை*** - *குற்றமற்ற தொல் மரபில் வந்த தனது அமைச்சர்களை;* ***வருக என்றான்*** - *அங்கு 'வருக' என்று பணியாளர்களை ஏவினான்.*

*பளிங்கின் ஒளி ஊடுருவும் தூய தன்மையால் அது பதித்துக் கட்டப்பட்ட இடம் வெற்றிடம் போன்று தோன்றுமாதலின் "பொய் எனப் பளிங்கின் ஆய இருக்கை" என்றார்.*

*இராவணனது வினா*

***6956. அளந்து அறிவு அரியர் ஆய அமைச்சரை அடங்க நோக்கி,***
***'வளைந்தது குரங்கின் சேனை, வாயில்கள்தோறும் வந்து;***
***விளைந்தது பெரும் போர் என்று விட்டது; விடாது, நம்மை;***
***உளைந்தனம்; என்ன எண்ணி, என் செயற்கு உரிய?' என்றான்.***

***அளந்து அறிவு அரியர் ஆய அமைச்சரை*** - *அளந்து அறிவினைக் கணிக்க இயலாத அமைச்சர் கூட்டத்தை;* ***அடங்க நோக்கி*** - *முழுவதும் (அளந்து) நோக்கி;* ***வாயில்கள் தோறும் வந்து குரங்கின் சேனை வளைந்தது*** - *கோட்டை வாயில்கள் தோறும் வானர சேனை வந்து வளைந்து நிற்கிறது;* ***பெரும்போர் விளைந்தது என்ன விட்டது*** - *பெரிய யுத்தம் விளைந்தது என்னுமாறு (நிகழ்ந்து) விட்டது;* ***நம்மை விடாது*** - *இனி போர் நம்மை விடாது;* ***உளைந்தனம்*** - *(நாம்) மனம் நொந்துள்ளோம்;* ***என்ன எண்ணி*** - *(இனி) யாம் யாது நினைந்து;* ***என் செயற்கு உரிய? என்றான்*** - *என்ன செய்ய உள்ளோம் என்றான்.*

*அரியர் என்பதன் விகுதியைப் பிரித்துக்கூட்டி, அளத்தற்கரிய அறிவினையுடைய அறிஞர்கள் ஆகிய அமைச்சர்கள் எனப் பொருள் கொள்க. மிகப் பலராகிய அமைச்சர்கள், சூழ்நிலையின் நெருக்கடி காரணமாக, மந்திராலோசனைக்கு அழைக்கப் பட்டிருந்தனர் என்பார். "அளந்து அறிவு அரியர் ஆய அமைச்சர்" என்றும் கொள்ளலாம். 'உளைந்தனம்' என்னும் சொல்லில் இராவணன் சோகம் உணர்க.*

*நிகும்பன் எதிரியை இகழ்ந்து கூறுதல்*

***6957. 'எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம் எயிலை முற்றும்***
***தழுவின என்று செய்யத் தக்கது சமைதி போலாம்;***
***அழுவ நீர் வேலை அன்னது ஆயிர வெள்ளம் அன்றே?***
***உழிஞையைத் துடைக்க, நொச்சி உச்சியில் கொண்டது, உன் ஊர்.***

***எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம்*** - *(நிகும்பன் இராவணனை நோக்கி) எழுபது வெள்ளம் எனக்கணக்கிடப்பட்ட குரங்குத் தொகுதிகள்;* ***எயிலை முற்றும் தழுவின என்று*** - *(நம் இலங்கையின்) மதில்களை முழுவதும் சுற்றி வளைத்தன என்று;* ***செய்யத் தக்கது சமைதி போலாம்*** - *(இனி) செய்யத்தக்கது என்னவென்று மனம் அழிந்து உள்ளாய் போலும்!* ***உழிஞையை*** - *நமது பகைவர் சூடியுள்ள மதில் முற்றுகைக்குரிய உழிஞைப்பூவை* ***துடைக்க*** - *அடியோடு அழித்தற்கு;* ***அழுவ நீர் வேலை அன்னது*** - *பரந்த நீர் நிறைந்த கடல் போன்றதாகிய;* ***உன் ஊர்*** - *உன் இலங்கைப் படை;* ***நொச்சி உச்சியில் கொண்டது*** - *மதில் காத்தற்குரிய நொச்சிப் பூவை உச்சியில் கொண்டதாய்;* ***ஆயிரம் வெள்ளம் அன்றே?*** - *(உள்ளதன் தொகை) ஆயிர வெள்ளம் அளவினது அன்றோ?*

*வெள்ளம்-ஐம்பத்தேழு தானங்களையுடைய பேரெண் என்பர். உழிஞை-மதிலை முற்றுகையிடுவார் சூடும்பூ; நொச்சி மதில் காப்பார் சூடும் பூ. "எயில் காத்தல் நொச்சி அது வளைத்தல் ஆகும் உழிஞை" என்பது பன்னிரு படலம். "உன் ஊர்" என்பது ஆகுபெயராய் ஊர்ப்படையைக் குறித்து நின்றது. பகைவர் உழிஞைப் படையை அழிக்க இலங்கை நகரமே தன் உச்சியில் நொச்சியைச் சூடிக்கொண்டது என நயமுற மொழிந்தார்.*

***6958. 'எழு, மழு, தண்டு, வேல், வாள், இலை நெடுஞ்***
***சூலம் என்று இம்***
***முழு முதற் படைகள் ஏந்தி, இராக்கதர் முனைந்த***
***போது,***
***தொழுது தம் படைகள் முன் இட்டு, ஓடுவார்***
***சுரர்கள் என்றால்,***
***விழுமிது, குரங்கு வந்து வெறுங் கையால் கொள்ளும்***
***வென்றி!***

***எழு, மழு, தண்டு, வேல், வாள்*** - *கணைய மரமும், எரியீட்டியும், கதையும், வேலும், வாளும்;* ***இலை நெடும் சூலம் ஆதி*** - *இலைத்தொழில் பொருந்திய நீண்ட சூலமும் முதலிய;* ***முழு முதற் படைகள் ஏந்தி*** - *சிறந்த தலையான போர்க்கருவிகளை ஏந்தி;* ***இராக்கதர் முனைந்தபோது*** - *அரக்கர்கள் (போர்க்களத்தில்) போரிட முயலும் போது;* ***சுரர்கள்*** - *தேவர்கள்;* ***தம் படைகள் முன்னிட்டு*** - *தம்முடைய ஆயுதங்களை அரக்கர் முன் போட்டுவிட்டு;* ***தொழுது ஓடுவார் என்றால்*** - *தொழுதவாறு ஓடுவார்கள் என்றால்;* ***குரங்கு வந்து*** - *குரங்குகள் வந்து;* ***வெறும் கையால்*** - *(போர்க்கருவிகள் பிடிக்கத் தெரியாத) வெறுங்கைகளால்;* ***கொள்ளும் வென்றி விழுமிது!*** - *(நம்மிடம்) அடையும் வெற்றி மிகவும் சிறந்ததுதான்!*

*விழுமிது-குறிப்புப் பொருள். குரங்குகளின் கரங்கள் மரம் தாவுதற்கும், காய் கனியுண்பதற்கும் ஆனவை; போரிடற்கோ கொலைக்கருவிகள் தாங்குவதற்கோ ஆகாதவை என்று, இகழ்ந்து "வெறும் கை" என்றான். படைக்கலங்களே வெற்றி தருவன என்ற நம்பிக்கையில் திளைப்பது அரக்கர் இனம். குரங்குகள் படைக்கலம் ஏதும் இல்லாதவை. அறத்தின் நாயகன் சார்பினவாகிய பாடலில் வரும் இச்செய்தி 'வேலன்று வென்றி தருவது மன்னவன் கோல் அதூஉம் கோடாது எனின்' (குறள் 546) என்ற குறட்கருத்துடன் இணைத்து நோக்கத்தக்கது.*

*மாதுலத் தலைவனான மாலி கூறுதல்*

***6959. 'ஈது இவண் நிகழ்ச்சி' என்னா, எரி விழித்து,***
***இடியின் நக்கு,***
***பூதலத்து அடித்த கையன், நிகும்பன் என்று ஒருவன்***
***பொங்க, 'வேதனைக் காமம் அந்தோ வேரொடும் கெடுத்தது'***
***என்னா,***
***மாதுலத் தலைவன் பின்னும் அன்பின் ஓர் மாற்றம்***
***சொன்னான்:***

***இவண் நிகழ்ச்சி ஈது என்னா*** *- இங்கு நிகழும் நிகழ்ச்சிகள் இப்படி (ஆயினவோ) என்று;* ***எரி விழித்து*** *- தீயென விழித்து;* ***இடியின் நக்கு*** *- இடி போன்று சிரித்து;* ***பூதலத்து அடித்தகையன்*** *- தரையிலே அடித்த கைகளையுடையவனாய்;* ***நிகும்பன் என்று ஒருவன் பொங்க*** *- நிகும்பன் என்னும் பேருடைய ஒப்பற்ற வீரன் வெகுண்டு பொங்கிக்கூற;* ***மாதுலத் தலைவன்*** *- (அப்போது) தாய் மாமனாகிய மாலி என்னும் தலைவன்;* ***வேதனைக் காமம்*** *- துயரம் மிகும் காமம் என்னும் நோய்;* ***அந்தோ வேரொடும் கெடுத்தது*** *- ஐயகோ! அடி வேரொடும் வீழ்த்துகிறதே!* ***என்னா*** *- என்று;* ***பின்னும் அன்பின் ஓர் மாற்றம் சொன்னான்*** *- மீண்டும், அன்பினால் ஒரு வார்த்தை கூறினான்.*

***6960. 'புக்கு எரி மடுத்து, இவ் ஊரைப் பொடி செய்து***
***போயினாற்குச்***
***சக்கரம் உண்டோ, கையில்? தசமுகன் தலைகள்***
***ஆன***
***இக் கிரி பத்தின் மௌலி இன மணி இடந்து***
***கொண்ட***
***சுக்கிரீவற்கும் உண்டோ, சூலமும் வேலும் வாளும்?***

***புக்கு எரி மடுத்து*** *- (இவ் இலங்கையுள்) புகுந்த தீயூட்டி;* ***இவ்வூரைப் பொடி செய்து போயினாற்கு*** *- இந்த நகரத்தைத் தூளாக்கிச் சென்ற அநுமானுக்கு;* ***கையில் சக்கரம் உண்டோ?*** *- கையில் சக்கரம் இருந்ததோ?* ***தசமுகன் தலைகள் ஆன இக்கிரி பத்தின்*** *- பத்து முகமுடையவன் ஆன உன் தலைகள் எனும் இந்த மலைகள் மீது;* ***மௌலி இனமணி*** *- (உன் தலைமீதிருந்த) மகுட மணிகள் கூட்டத்தை;* ***இடந்து கொண்ட*** *- பறித்துச் சென்ற; சுக்கிரீவற்கும் - சுக்கிரீவனுக்கும்;* ***சூலமும் வேலும் வாளும் உண்டோ?*** *- சூலப் படையும், வேல் படையும், வாட்படையும் இருந்ததோ? (என்று வினவினான் மாலியவான்).*

***6961. தொடைக் கலத்து இராமன் வாளி தோன்றுதல் முன்னம், தோன்றா***
***இடைக்கு அலமருதல் செய்யும் முலையினாள்தன்னை ஈந்து,***
***படைக்கலம் உடைய நாம், அப் படை இலாப் படையை, ஈண்ட***
***அடைக்கலம் புகுவது அல்லால், இனிப் புகும் அரணும் உண்டோ?'***

***இராமன் வாளி*** *- (ஆகையால்) இராமனது அம்புகள்;* ***தொடைக்கலத்துத் தோன்றுதல் முன்னம்*** *- நாணிலிருந்து புறப்படுவதற்கு முன்பாகவே;* ***தோன்றா இடைக்கு*** *- கட்புலனாகாத (தன்) இடைக்கு,* ***அலமருதல் செய்யும் முலையினாள் தன்னை*** *- வருத்தம் தருகின்ற தனங்களையுடைய சீதையை;* ***ஈந்து*** *- இராமனுக்குத் தந்துவிட்டு;* ***படைக்கலம் உடைய நாம்*** *- போர்க்கருவிகள் பலவற்றை உடைய அரக்கராகிய நாம்;* ***அப்படை இலாப் படையை*** *- அத்தகைய ஆயுதங்கள் எவையும் அற்ற அவ்வானரப்படையை;* ***ஈண்ட அடைக்கலம் புகுவது அல்லால்*** *- விரைவாகச் சரணம் அடைவதைத் தவிர;* ***இனிப் புகும் அரணும் உண்டோ?*** *- இனித் (தீங்குவாராமல்) புகுதற்குரிய பாதுகாப்பு வேறு ஏதும் உண்டோ? (இல்லை).*

*தொடைக்கலம்-நாண் ஆகிய கருவி. அறத்தின் பக்கமே வெற்றி நிற்கும் ஆதலால், பாவத்தின் பக்கம் உள்ள நாம் எத்தனை படைக்கருவிகள் வைத்திருந்தும் பயனில்லை. வெறுங்கைப் படை வெல்லப்போகிறது; வீணாக ஆயுதம் சுமந்த நாம் தோற்கப் போவது உறுதி. சரணம் அடைவதே பாதுகாப்பாகும். வருவதுணரும் ஞானியாகிய மாலியவான் மொழிந்தான். சரணாகதி நெறியை இயலும் இடங்களில் எல்லாம் சாற்றும் காவியமாதலின், "அடைக்கலம் புகுவது அல்லால் வேறு இனிப் புகும் அரணும் உண்டோ?" என வேற்றுப்பொருள் அணியாகக் கொள்ளுமாறும் இறுதியடியை அமைந்துள்ள திறம் காண்க. "வேல் அன்று வென்றி தருவது" (திருக்: 546) என்பதை இப்பாடற்கருத்தோடு ஒப்பிட்டு மகிழ்க.*

*இராவணன் மாலியவானை அடக்குதல்*

***6962. என்புழி மாலிதன்னை எரி எழ நோக்கி, 'என்பால்***
***வன் பழி தருதி போலாம்; வரன்முறை அறியா வார்த்தை, அன்பு அழி சிந்தைதன்னால், அடாதன அறையல்' என்றான்,***
***பின் பழி எய்த நின்றான்; அவன் பின்னைப் பேச்சு விட்டான்.***

***என்புழி*** - *என்று (மாலியவான்) சொன்னபோது;* ***மாலி தன்னை எரி எழ நோக்கி*** - *அவனை (விழிகளில்) தீ எழுமாறு பார்த்து;* ***பின்பழி எய்த நின்றான்*** - *பின்னால் (பெரும்) பழியடைய உள்ளவனான இராவணன்;* ***என்பால் வன்பழி தருதி போலாம்*** - *'எனக்குக்கொடிய வசையை விளைவிப்பது (உன் கருத்துப்) போலும்;* ***அன்பு அழி சிந்தை தன்னால்*** - *என்பால் அன்பற்ற உன் மனத்தினால்;* ***வரன் முறை அறியா அடாதன வார்த்தை*** - *மரபு முறையறியாது கூறத்தகாத வார்த்தைகளைப்;* ***அறையல் என்றான்*** - *பேசாதே! என்று கூறினான்;* ***அவன்*** - *அது கேட்ட மாலியவான்;* ***பின்னைப் பேச்சுவிட்டான்*** - *அதன் பிறகு தன் பேச்சை நிறுத்திக் கொண்டான்.*

*சீதையை விடுத்து, இராமசேனையிடம் சரணடைவது கொடிய பழி என்பான் "வன்பழி" என்றான். "இடிப்பாரையில்லாத ஏமரா மன்னன். கெடுப்பார் இலானும் கெடும்" (திருக்: 448) என்பது உறுதியாதலின், "பின்பழியடைய நின்றான்" என்று இராவணனைக் குறித்தார். "செவி கைப்பச் சொற்பொறுக்கும் பண்பு" (திருக்:389) அற்ற இராவணனுக்கு, மாலியவான் உரைத்த ஞானமொழிகள் "வரன் முறையறியா வார்த்தைகளாகவும் அடாதன அறைதல் ஆகவும்" தோன்றின.*

## *இராவணன், சேனையை அணிவகுக்க ஆணையிடல்*

***6963. 'காட்டிய காலகேயர் கொழு நிணக் கற்றை காலத்***
***தீட்டிய படைக் கை வீரச் சேனையின் தலைவ!***
***தெள்ளி***
***ஈட்டிய அரக்கர் தானை இருநூறு வெள்ளம்***
***கொண்டு,***
***கீட்டிசை வாயில் நிற்றி, நின் பெருங்***
***கிளையினோடும்.***

***காட்டிய*** - *(பிறகு இராவணன் படைத்தலைவன் பிரகத்தனை நோக்கி) (போரில் வீரம்) காட்டிய;* ***கால கேயர்*** - *காலகேயரின்;* ***கொழு நிணக்கற்றை `கால*** - *கொழுமையுடைய நிணத்தொகுதி வெளிப்பட்டுச் சொரியுமாறு;* ***தீட்டிய படைக்கை வீர!*** - *கூர்மை மிக்க ஆயுதங்களைக் கரங்களில் ஏந்திய வீரனே!* ***சேனையின் தலைவ!*** - *அரக்கர் படையின் தலைவனே!* ***தெள்ளி ஈட்டிய*** - *தெளிந்து திரட்டிய;* ***அரக்கர் தானை*** - *இராக்கதப் படையில்;* ***இருநூறு வெள்ளம் கொண்டு*** - *இருநூறு வெள்ளம் சேனையை (உன் பொறுப்பில் எடுத்துக்) கொண்டு;* ***நின் பெருங்கிளைகளோடும்*** - *தலைவர் முதலிய படைச்சுற்றத்தாரோடும் (கோட்டையின்)* ***கீட்டிசை வாயில் நிற்றி*** - *கிழக்குத் திக்கு வாயிலில் நிற்பாயாக (என்று ஆணையிட்டான்)*

*காலகேயர்-இராவணன் பகைவர். 6951ஆம் பாடலில் கீழ்த்திசை வாயிலில் இராமசேனை நீலன் தலைமையில் 17 வெள்ளத்தோடும் நின்றது குறிக்கப்பட்டது. அதற்கெதிராகப் பிரகத்தன் தலைமையில் இராவணன் அரக்கர் படை இருநூறு*

*வெள்ளத்தை அங்கு அனுப்ப ஆணையிட்டான். நாகலோகத்தில் நின்றும் போர்க்காட்டியவர் என்பது பழைய உரை.*

***6964. 'காலன்தன் களிப்புத் தீர்த்த மகோதர! காலையே போய்,***
***மால் ஒன்றும் மனத்து வீரன் மாபெரும்பக்கனோடும்***
***கூலம் கொள் குரங்கை எல்லாம் கொல்லுதி--வெள்ளம் ஆன***
***நால்-ஐம்பதோடும் சென்று, நமன் திசை வாயில் நண்ணி.***

***காலன் தன் களிப்புத் தீர்த்த மகோதர!*** *- இயமனின் செருக்கினை ஒழித்த மகோதரனே!* ***காலையே போய்*** *- காலத்தோடே சென்று;* ***மால் ஒன்றும் மனத்து*** *- யுத்தப் பித்துக் கொண்ட மனமுடைய;* ***வீரன்! மாபெரும் பக்கனோடும்*** *- வீரனாகிய மாபெரும் பக்கனோடும்;* ***வெள்ளம் நால் ஐம்பதோடும் சென்று*** *- இருநூறு வெள்ளம் சேனையோடும் போய்;* ***நமன் திசை வாயில் நண்ணி*** *- நமன் வாழும் திசையாகிய தெற்குத் திசையையடைந்து;* ***கூலம் கொள் குரங்கையெல்லாம்*** *- வால் கொண்ட குரங்குகள் அனைத்தையும்;* ***கொல்லுதி*** *- கொன்று தீர்ப்பாயாக. எல்லா உயிரையும் கொல்லவல்ல செருக்கையும் அழி`த்தவனாதலின் "காலன் தன் களிப்புத் தீர்த்த மகோதரன்" எனப்பட்டான். யுத்தப் பித்துக் கொண்டவன் மாபெரும் பக்கன். மால்-பித்து. வெறி, மகா பாரிசுவன் எனும் வடசொல்லை, மாபெரும் பக்கன் எனத் தமிழ்ப்படுத்தினார் ஆசிரியர். காலை-காலம். "காலையே போய்" இந்தக் காலை நேரத்திலேயே போய் எனினுமாம். மகோதரன் தென்திசை வாயிலில் உள்ள (6952) அங்கதனுக்கெதிராக அனுப்பப்படுகிறான்.*

***6965. 'ஏற்றம் என், சொல்லின் என்பால்? இந்திரன்பகைஞ!--அந் நாள்***
***காற்றினுக்கு அரசன் மைந்தன் கடுமை நீ கண்டது அன்றோ?***
***நூற்று-இரண்டு ஆய வெள்ள நுன் பெரும் படைஞர் சுற்ற,***
***மேல் திசை வாயில் சேர்தி, விடிவதன் முன்னம்--வீர!***

***இந்திரன் பகைஞ !*** *- இந்திரனின் பகைவனாகிய இந்திர சித்தே!* ***என்பால் ஏற்றம் சொல்லின் என்?*** *- (உன்) பெருமையை என்னிடம் சொல்வதால் என்ன பயன்? (எனக்கேதெரியும்)* ***அந்நாள்*** *- இலங்கை எரிந்த அந்த நாளில்;* ***காற்றினுக்கு***

***அரசன் மைந்தன்*** - *காற்றரசனாகிய வாயுவின் மகனான அனுமனுடைய;* ***கடுமை நீ கண்டது அன்றோ?*** *- கடிய ஆற்றலை நீ (கண்ணாரக்) கண்டவன் அன்றோ?* ***வீர!*** *- வீரனே!* **நூற்றிரண்டு ஆய வெள்ளம்** - *இருநூறு வெள்ளம் சேனையை;* **நுன் பெரும் படைஞர் சுற்ற** *-; உனது பெரும் படையினர் சூழ்ந்து நிற்க* **மேல் திசை வாயில்** *-; (இலங்கைக் கோட்டையின்) மேற்குத் திக்கு வாயிலுக்கு;* **விடிவதன் முன்னம் சேர்தி** *- விடிவதற்குள் சென்றடைவாயாக!*

*அனுமன் பதினேழு வெள்ளம் சேனையோடு மேற்கு வாயிலுக்கு அனுப்பப்பட்டான். அனுமன் வலிமை இலங்கை எரியுண்ட போதும், அசோக வனத்தை அழித்த போதும் அறியப்பட்டுள்ளதாதலின், அவனை எதிர்த்து நிற்க, இந்திரனை வென்ற தன் மகன் இந்திரசித்தையே அனுப்புகின்றான் இராவணன்.*

***6966. 'இந் நெடுங் காலம் எல்லாம் இமையவர்க்கு இறுதி கண்டாய்;***
***புன் நெடுங் குரங்கின் சேரல் புல்லிது; புகழும் அன்றால்;***
***அந் நெடு மூலத்தானைஅதனொடும், அமைச்சரோடும்,***
***தொல் நெடு நகரி காக்க--விருபாக்க!' என்னச் சொன்னான்.***

**விருபாக்க !** - *விருபாக்கனே!* **இந்நெடுங்காலம் எல்லாம்** - *இந்த (நீண்ட) நெடுங்காலம் முழுவதும்;* **இமையவர்க்கு இறுதிகண்டாய்** - *தேவர்களோடு போரிட்டு அவர்கள், சாவையே கண்டுவந்தவன் நீ;* **புல் நெடுங்குரங்கின் சேரல் புல்லிது** - *(இன்று இந்தப்) புல்லிய ஆனால் நெடும் தொகையினையுடைய குரங்குகளின் மேல் நீ (போர் புரியப்) போவது இழிந்தது;* **புகழும் அன்று** - *உனக்கு அது புகழையும் தராது; (ஆதலால்)* **அந்நெடும் மூலத்தானை அதனொடும்** - *அந்தப் பெருமைக்குரிய மூலபலத்துடனும்;* **அமைச்சரோடும்** - *மந்திரிமாருடனும்;* **தொல் நெடும் நகரிகாக்க** - *பழமையும் பெருமையும் உடைய இந்த இலங்கை மாநகரைக் காப்பாயாக!* **என்று சொன்னான்** - *என்று கூறினான்.*

*விருபாக்கன்-இராவணன் படைத்தலைவர்களுள் ஒருவன்.*

***6967. 'கட கரி புரவி ஆள் தேர், கமலத்தோன் உலகுக்கு இப்பால்***
***புடை உள பொருது, கொண்டு, போர் பெறாப் பொங்குகின்ற***
***இடை இடை மிடைந்த சேனை இருநூறு வெள்ளம் கொண்டு,***
***வட திசை வாயில் காப்பேன் யான்' என வகுத்து***

**விட்டான்.**

***கமலத்தோன் உலகுக்கு*** - *பிரம லோகத்துக்கு;* ***இப்பால் உள புடை*** - *இப்புறமுள்ள இடங்களில் (எல்லாம்);* ***பொருது கொண்டு*** -*போரிட்டு (அவ்விடங்களை வெற்றி) கொண்டு;* ***போர்பெறாப் பொங்குகின்ற*** - *மேலும் போர் போதாமல் பொங்கியெழுந்தவாறு உள்ள;* ***கடகரி புரவி ஆள் தேர்*** - *மதப் பெருக்குடைய யானை, குதிரை, வாள், தேர்ப்படையும் ஆங்காங்கு நெருங்கியுள்ள சேனை;* ***இருநூறு வெள்ளம் கொண்டு*** - *இருநூறு வெள்ளங்களையும் கொண்டு;* ***யானே வடதிசை காப்பேன்*** - *நானே வடக்குக் கோட்டை வாயிலில் காக்கும் பொறுப்பை மேற்கொள்வேன்;* ***என வகுத்துவிட்டான்*** - *என்று கூறி (இவ்வாறு) ஆயிரம் வெள்ளம் (அரக்க) சேனையையும் பிரித்து விட்டான் (இராவணன்)*

*இராமனும் இலக்குவனும் வடதிசைக் கோட்டை வாயிலின் முன் உள்ளமையால் வடதிசைப் பொறுப்பைத் தானே ஏற்றான் இராவணன். பெரிய பொறுப்பினைப் பிறர்க்குத் தள்ளாமல், தாமே ஏற்கும் அக்காலத் தலைமைப் பண்புகளுள் ஒன்றைக் கவிஞர் சுட்டிச் செல்வது காண்க.*

*கங்குல் நீங்க, கதிரவன் தோன்றல்*

***6968. கலங்கிய கங்குல் ஆகி நீங்கிய கற்பம்-காணும்***
***நலம் கிளர் தேவர்க்கேயோ, நான்மறை முனிவர்க்கேயோ,***
***பொலம் கெழு சீதைக்கேயோ, பொரு வலி இராமற்கேயோ,***
***இலங்கையர் வேந்தற்கேயோ,--எல்லார்க்கும் செய்தது இன்பம்.***

***கலங்கிய கங்குல் ஆகி*** - *(எல்லோரும்) கலங்குவதற்குக் காரணமாய் கங்குல் எனும் பெயர் கொண்டு;* ***நீங்கி கற்பம்*** - *அகன்ற ஊழிக்காலமானது;* ***நலம் கிளர் தேவர்க்கேயோ?*** *- (தீயோராம் அரக்கர் அழிந்து நல்லோர் வாழும்) நலம் காண அவாவியுள்ள தேவர்க்கு மட்டும்தானா?* ***நான் மறை முனிவர்க்கேயோ*** - *நான்கு வேதங்களிலும் வல்ல முனிவர்க்கு மட்டுந்தானா?* ***பொலம் கெழு சீதைக்கேயோ ?*** - *பொலிவு மிக்க சீதைக்கு மட்டும் தானா? இலங்கையர் வேந்தற்கேயோ ? - இலங்கை மக்களின் வேந்தனாகிய இராவணனுக்கு மட்டும் தானா?* ***எல்லார்க்கும் இன்பம் செய்தது*** - *(தனித்தனியாக அல்லாமல்) இவர்கள் எல்லோர்க்கும் ஒரு சேர இன்பம் விளைத்தது.*

*இராவணனின் துன்பம் நீங்கிக் கதிமோட்சம் பிறந்தது என்று தேவர், முனிவர்க்கும், போர் தொடங்கித் தனக்கு விடுதலை வரும் எனப் பிராட்டிக்கும். அரக்கனை ஒழிக்க விடியலை விரும்பி நின்றதனால் இராமனுக்கும், போரில் இராமனை*

*வென்று சீதையை யடைவேன் என்று கருதும் இராவணனுக்கும் அந்த இரவு அவர் நினைவால் இன்பம் விளைத்தது.*

***6969. அளித் தகவு இல்லா ஆற்றல் அமைந்தவன் கொடுமை அஞ்சி,***
***வெளிப்படல் அரிது என்று உன்னி, வேதனை உழக்கும் வேலை,***
***களித்தவற் களிப்பு நீக்கி, காப்பவர்தம்மைக் கண்ணுற்று,***
***ஒளித்தவர் வெளிப்பட்டென்ன,--கதிரவன் உதயம் செய்தான்.***

***அளித்தகவு இல்லா ஆற்றல் அமைந்தவன்*** *- கருணையெனும் பண்பு இன்றி வலிமையெனும் பண்பு மட்டும் அமைந்தவன் ஆகிய இராவணனுடைய;* ***கொடுமையஞ்சி*** *- கொடுங்கோன்மைக்குப் பயந்து;* ***வெளிப்படல் அரிது என்று*** *- நாம் வெளிப்பட்டு உலவுதற்கு இயலாது என்று;* ***உன்னி*** *- நினைத்து (மறைந்து வாழ்ந்து);* ***வேதனை யழக்கும் வேலை*** *- துன்பத்தால் துவளுங்காலத்து;* ***களித்தவன் களிப்பு நீக்கி*** *- செருக்குற்ற அவனின் செருக்கினை அழித்து;* ***காப்பவர் தம்மைக் கண்ணுற்று*** *- பாதுகாக்கும் செங்கோல் வேந்தனைக் கண்டு;* ***ஒளித்தவர் வெளிப்பட்டு என்ன*** *- மறைந்திருந்த குறு நிலமன்னர் வெளியே புறப்பட்டாற் போல,* ***கதிரவன் உதயம் செய்தான்*** *- சூரியவன் (கீழ்வானில்) உதித்தான்.*

*கொடுங்கோலனுக்கு அஞ்சி மறைந்து வாழ்ந்தோர் செங்கோல் வேந்தன் தோன்ற வெளிப்பட்டாற்போல, இராவணன் கொடுமைக்கு அஞ்சி மறைந்திருந்த கதிரவன் இராமன் வருகையில் மறைவிடம் நீங்கி எழுந்தாற்போல் தோன்றினான் எனத் தற்குறிப்பேற்ற அணி திகழ உரைத்தார்.*

*வானர சேனை இலங்கையை வளைத்தல்*

***6970. உளைப்புறும் ஓத வேலை ஓங்கு அலை ஒடுங்கத் தூர்ப்ப,***
***அளப்ப அருந் தூளிச் சுண்ணம் ஆசைகள அலைக்க, பூசல் இளைப்ப அருந் தலைவர், முன்னம் ஏவலின், எயிலை முற்றும்***
***வளைத்தனர், விடிய, தத்தம் வாயில்கள்தோறும் வந்து.***

***விடிய*** - பொழுது விடியும் போது; ***அளப்ப அரும் தூளி சுண்ணம்*** - அளவிட முடியாத புழுதித் தூசுகள்; ***ஆசைகள் அலைக்க*** - திசைகளை மோத; ***உளைப்புறும் ஓதவேலை*** - ஒலிக்கின்ற நீர்ப்பெருக்கினைக் கொண்ட கடலின்; ***ஓங்கு அலை நடுங்க*** - ஓங்குகின்ற அலை ஓசை அடங்குமாறு (அத்தூசுகள்) ***தூர்ப்ப*** - (கடலைத்) தூர்த்து மேபிக்க; ***பூசல் இளைப்ப அருந்தலைவர்*** - போரிடுதற்கு இளையாத வானரப் படைத்தலைவர்கள்; ***முன்னம் ஏவலின்*** -முன்பு ஏவிய ஆணையின் வண்ணம்; ***தத்தம் வாயில்கள் தோறும்*** - அவரவர்க்குரிய இலங்கைக் கோட்டை வாயில் தோறும்; ***வந்து வளைத்தனர்*** - வந்து வளைத்துக் கொண்டனர்.

***6971. தந்திரம் இலங்கை மூதூர் மதிலினைத் தழுவித் தாவி,***
***அந்தரக் குல மீன் சிந்த, அண்டமும் கிழிய ஆர்ப்ப,***
***செந் தனிச் சுடரோன் சேயும் தம்பியும் முன்பு செல்ல,***
***இந்திரன் தொழுது வாழ்த்த, இராமனும் எழுந்து சென்றான்.***

***தந்திரம்*** - வானரப் படையானது; ***இலங்கை மூதூர்*** - இலங்கையாகிய தொல் நகரின்; ***மதிலினைத் தழுவி தாவி*** - மதிலினை நெருங்கிப் பாய்ந்தவாறு: ***அந்தரக் குலமீன் சிந்த*** - வானத்து நட்சத்திரங்கள் மண்ணில் விழுமாறு; ***அண்டமும் கிழிய*** - அண்ட கோளம் கிழிந்து விடுமாறும்; ***ஆர்ப்ப*** - ஆரவார முழக்கம் இட; ***தனிச்செஞ்சுடரோன் சேயும்*** - ஒப்பற்ற சிவந்த கிரணங்களையுடைய கதிரவன் புதல்வனாகிய சுக்கிரீவனும்; ***தம்பியும்*** - இலக்குவனும்; ***முன்பு செல்ல*** - முன்னே செல்ல; ***இந்திரன் தொழுது வாழ்த்த*** - (வானில்) இந்திரன் வணங்கி வாழ்த்தா நிற்க; ***இராமனும் எழுந்து சென்றான்*** - இராமபிரானும் (போர்க்களத்தை நோக்கி) எழுந்து வந்தான். தந்திரம்-படை வடசொல். "தந்திரக்கடலை நீத்தி" (கம்ப. 7340) என்பர் மேலும். கதிரவனே நிலா முதலியவற்றிற்கு ஒளி வழங்குபவன் ஆதலின், "தனிச்செஞ்சுடரோன்" எனப்பட்டான்.

*அரக்கர் சேனையை வளைத்தல்*

***6972. நூற் கடல் புலவராலும் நுனிப்ப அரும் வலத்தது ஆய***
***வேற் கடல்-தானை ஆன விரி கடல் விழுங்கிற்றேனும்,***
***கார்க் கடல் புறத்தது ஆக, கவிக் கடல் வளைந்த காட்சி,***
***பாற்கடல் அழுவத்து உள்ளது ஒத்தது, அப் பதகன் மூதூர்.***

***அப்பதகன் மூதூர்*** - அந்தப் பாதகனான இராவணனின் தொல்நகரமாகிய இலங்கை; ***கடல் நூல் புலவராலும்*** - கடல் போன்ற நூல்களைக் கற்ற புலமை நிறைந்தோராலும்; ***நுனிப்ப*** - நுண்ணிதின் உணர; ***அரும் வலத்தது ஆய*** - இயலாத வலிமை வாய்ந்ததாகிய; ***கடல் வேல் தானை ஆன*** - கடல் போன்று வேல் ஏந்திய படைத்தொகுதியான அரக்கர் சேனை ஆன; ***வரி கடல் விழுங்கிற்றேனும்*** - விரிந்த சமுத்திரத்தால் விழுங்கப் பெற்றிருந்தது ஆனாலும்; ***கார்க்கடல் புறத்தது ஆக*** - கரிய கடல் பக்கத்தே சுற்றி நிற்க; ***கவிக்கடல் வளைந்த காட்சி*** - வானரப் படையெனும் கடல் வளைத்து நிற்கும் காட்சியானது; ***பாற்கடல் அழுவத்து உள்ளது*** - பாற்கடற்பரப்பின் உள்ளே உள்ளது; ***ஒத்தது*** - (ஒரு நகரம்) போன்றிருந்தது.

*குரங்குச் சேனை பாற்கடலாகவும், அது சுற்றியுள்ள பெரிய அரக்கர் சேனை கருங்கடலாகவும் உருவகிக்கப்பட்டன. அழுவம் -பரப்பு, பதகன்-பாதகன்-கொடும்பாவம் புரிந்தவன்.பதகன் துரந்த உரகம் (கம்ப. 8264) "வெய்யன் பதகன் பரதார விருப்பன் வீணன்" (அரிச். 4. இந்திர.35)*

***6973. அலகு இலா அரக்கன் சேனை அகப்பட, அரியின் தானை,***
***வலைகொலாம் என்ன, சுற்றி வளைத்ததற்கு உவமை கூறின்,***
***கலை குலாம் பரவை ஏழும் கால் கிளர்ந்து எழுந்த காலத்து***
***உலகு எலாம் ஒருங்கு கூடி, ஒதுங்கினவேயும் ஒக்கும்.***

***அலகு இலா அரக்கர் சேனை அகப்பட*** - அளவுக்கடங்காத அரக்கர் சேனை தனக்குள் அகப்படுமாறு; ***அரியின் சேனை*** -குரங்குப் படையானது; ***வலை கொல் ஆம் என்னச் சுற்றி*** - ஒரு வலையோ என்னுமாறு சூழ்ந்து கொண்டு; ***வளைத்ததற்கு உவமை கூறின்*** - வளைத்து நின்றதற்கு உவமை கூறுவோமென்றால்; ***கலை குலாம் பரவை ஏழும்*** - ஆடை போன்றதெனப் புகழப்பட்டுப் பல உலகங்களையும் சுற்றியுள்ள ஏழு கடல்களும்; ***கால் கிளர்ந்து எழுந்த காலத்து*** - ஊழிக்காற்றுப் பொங்கியெழுந்த ஊழிக்காலத்தே; ***உலகெலாம் ஒருங்குகூடி*** - உலகம் யாவையும் ஒன்றாகக்கூடி; ***ஒதுங்கினவேயும் ஒக்கும்*** - ஒருபுறமாக ஒதுங்கி நின்றதையும் ஒப்பாகக் கூறலாம்.

*ஊழிக்காலத்தே உயிர்கள் ஓரிடத்தே ஒதுங்கும் கற்பனை, விவிலிய நூலில் கடல் கோளுக்குத் தப்பிய உயிர்கள் "நோவா" (நாவாய்) எனும் கப்பலில் ஒதுங்கிப் பிழைத்து மீண்டும் பெருகியதாக வருவதோடும், ஊழியின் முடிவில் திருமால் ஆலிலையில் பள்ளி கொண்டு உயிர்களைத் தன் வயிற்றில் அடக்குவதோடும் ஒரு சார் ஒப்பு நோக்கத்தக்கதாம்.*

*அங்கதன் தூதுப் படலம்*

*வானர சேனை, இலங்கை மாநகரை வளைத்துக் கொண்டு, இராமன் ஆணைக்குக் காத்து நிற்கிறது. அறத்தின் மூர்த்தியாகிய இராமபிரான் அப்போது நிகழ இருக்கும் அழிவுக்கு அஞ்சி, இராவணனிடம் இன்னும் ஒருமுறை தூதனுப்பி அவன் கருத்தறியத் துணிகிறான். வீடணன் முதலியோர் இசைவும், இலக்குவன் எதிர்ப்பும் தெரிவிக்கின்றனர். தூதுவிடல் அரச குலத்தின் நீதி மரபே என்று அங்கதனைத் தூதாக அனுப்பப் பெருமான் திருவுள்ளம் முடிவெடுக்கிறது. மகிழ்ந்த அங்கதன் இலங்கையுட் புகுந்து, இராவணன் ஓலக்கம் அடைந்து தன்னை அறிவிக்கின்றான் வாலியின் மகன் என அறிந்த இராவணன் தன்பால் அங்கதனை ஈர்க்க முயன்று தோற்கிறான். அவன், தேவியை விடுதற்கு இசையான்; ஆவியை விடுதற்கு ஆயத்தமாகி விட்டான் என்று தூதுரைத்து மீண்ட அங்கதன் இராமபிரானுக்கு அறிவிக்கின்றான். இப்படலத்தில் இராவணன், அங்கதன் உரையாடல் அழகு பட அமைந்துள்ளது.*

*இராமன் தூது விடுத்தல் பற்றி வீடணனிடம் பேசுதல்*

***6974. வள்ளலும் விரைவின் எய்தி, வட திசை வாயில் முற்றி,***
***வெள்ளம் ஓர் ஏழு-பத்துக் கணித்த வெஞ்***
***சேனையோடும்,***
***கள்ளனை வரவு நோக்கி, நின்றனன்,***
***காண்கிலாதான்,***
***'ஒள்ளியது உணர்ந்தேன்' என்ன, வீடணற்கு***

***உரைப்பதானான்:*** **வள்ளலும்** - *வள்ளலாகிய இராமபிரானும்;* **வெள்ளம் ஓர் எழுபத்து** - *எழுபது வெள்ளம் என்று;* **கணித்த வெஞ்சேனையோடும்** - *அளவிடப்பட்டுள்ள வீரம் மிக்க வானரப்படையுடனே;* **விரைவின் எய்தி** - *விரைவாகச் சென்றடைந்து;* **கள்ளனை வரவு நோக்கி** - *(சீதையைக் களவில் கவர்ந்த) திருடனாகிய இராவணனுடைய வருகையினை எதிர்பார்த்து;* **வடதிசை வாயில் முற்றி நின்றனன்** - *வடக்குத் திக்கிலுள்ள கோட்டை வாயிலை முற்றுகையிட்டு நின்றான்; (அங்கு)* **காண்கிலாதான்** *-(இராவணனது வருகையை) காணப் பெறாதவனாய்;* **வீடணற்கு** - *(தன் அருகிருந்த) வீடணனை நோக்கி; 'ஒள்ளியது உணர்ந்தேன்' என்று- (இப்போது செய்யத்தக்க) புகழுக்குரிய செய்கை ஒன்றை (இப்போதுதான்) உணர்ந்தேன் என்று; உரைப்பது ஆனான் - சொல்லத் தொடங்கினான்.*

***6975. 'தூதுவன் ஒருவன்தன்னை இவ் வழி விரைவில்***
***தூண்டி,***
***"மாதினை விடுதியோ?" என்று உணர்த்தவே,***
***மறுக்கும்ஆகின்,***
***காதுதல் கடன் என்று உள்ளம் கருதியது; அறனும்***

***அஃதே;***
***நீதியும் அஃதே' என்றான்--கருணையின் நிலயம்***
***அன்னான்.***

***கருணையின் நிலயம் அன்னான்*** - *உலகத்தில் உள்ள கருணையெல்லாம் நிலைத்திருக்கும் நிலையம் போன்றவனான இராமபிரான், (வீடணனை நோக்கி);* ***இவ்வழி*** *-இவ்விடத்திலிருந்து;* ***தூதுவன் ஒருவன் தன்னை*** *- ஒரு தூதுவனை;* ***விரைவில் தூண்டி*** *- (இராவணனிடம்) விரைவில் அனுப்பி;* ***மாதினை விடுதியோ?*** *- (இப்பொழுதாவது) 'சீதையை விடுதலை செய்கிறாயா?'* ***என்று உணர்த்தவே*** *- என வினவி (நாம் அவனுக்கு) அறிவுறுத்தினால்;* ***மறுக்கும் ஆகின்*** *- (இப்போதும் அவன்) (விடமுடியாது என) மறுப்பான் ஆகில்;* ***காதுதல் கடன் என்று*** *-(அவனை)அழித்தல் நம் கடமையென்று;* ***உள்ளம் கருதியது*** *- என் மனம் எண்ணிற்று;* ***அறனும் அஃதே*** *- (என் உள்ளம் கருதுவதே) அறம் ஆகும்;* ***நீதியும் அஃதே என்றான்*** *- அதுவே நீதியும் ஆகும் என்று கூறினான்.*

*'பன்னீர்க்குவளை பன்னீர் வாசனை தவிர வேறு என்தரக்கூடும்?' என்பது போல இறைவனுக்கு, 'கருணை இயல்பான குணம்; கோபம் வந்தேறி" என்பார் நம்பிள்ளை. கருணையின் நிலையம் அன்னான் - கருத்துடையடைகொளியணி.*

*வீடணன் முதலியோர் வரவேற்க, இலக்குவன் மறுத்தல்*

***6976. அரக்கர் கோன் அதனைக் கேட்டான், 'அழகிற்றே***
***ஆகும்' என்றான்;***
***குரக்கினத்து இறைவன் நின்றான், 'கொற்றவர்க்கு***
***உற்றது' என்றான்;***
***'இரக்கமது இழுக்கம்' என்றான், இளையவன்; 'இனி,***
***நாம் அம்பு***
***துரக்குவது அல்லால், வேறு ஓர் சொல் உண்டோ?***
***என்னச் சொன்னான்.***

***அரக்கர் கோன்*** *- அரக்கர்களின் மன்னனாக ஆக்கப் பெற்றுள்ள வீடணன்;* ***அதனைக் கேட்டான்*** *- இராமபிரான் கூறிய சொற்களைக் கேட்டு;* ***அழகிற்றே ஆகும் என்றான்*** *- நன்றாயுள்ளது என்று பாராட்டினான்;* ***குரக்கினத்து இறைவன்*** *- வானரங்களின் மன்னனாகிய சுக்கிரீவன்;* ***நின்றான்*** *- எழுந்து நின்றவனாய்;* ***கொற்றவற்கு ஏற்றது என்றான்*** *- (அரச தருமம் கடைப்பிடிக்கும்) வேந்தருக்கு ஏற்றதே இது என்றான்;* ***இளையவன்*** *- இளையோன் ஆகிய இலக்குவன்;* ***இரக்கமது இனி இழுக்கு என்றான்*** *- (அரக்கனிடம் இனி) இரக்கம் காட்டுவது இழுக்காகும் என்றான்;* ***நாம் அம்பு துரக்குவது அல்லால்*** *- நாம் இனி (அவ்வரக்கனிடம்) அம்பைச் செலுத்தி அம்பால் சொல்வது அன்றி;* ***வேறு ஓர் சொல் உண்டோ?*** *- (சொல்லால்*

*பேசுவதற்கு) வேறு ஓர் சொல்லும் உண்டோ?* **என்னச் சொன்னான்** *- என்று வெகுண்டு கூறினான்.*

*தனக்கு அரசுரிமை வேண்டும் என்ற நினைவின்றித் தன் தமையனாகிய இராவணன் போரில் மாளாது இராமனால் உய்தி பெறவேண்டும் எனும் நினைவினனாகி, இராவணன் பால் தூதனுப்புவதனை, "அழகிற்றே ஆகும்" என மொழிந்த வீடணன் உள்ளத்தை அவ்விரண்டே சொற்கள் காட்டும்.*

***6977. 'தேசியைச் சிறையில் வைத்தான்; தேவரை இடுக்கண் செய்தான்;***
***பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான்; மன்னுயிர் புடைத்துத் தின்றான்;***
***ஆசையின் அளவும், எல்லா உலகமும் தானே ஆள்வான்,***
***வாசவன் திருவும் கொண்டான்; வழி அலா வழிமேல் செல்வான்.***

**தேசியைச் சிறையில் வைத்தான்** *- (நீ தூது விட நினைக்கும் அவ்வரக்கன் இராவணன்) கற்பின் ஒளி வடிவினளான பிராட்டியைச் சிறையில் (வஞ்சத்தால் கவர்ந்து) வைத்துள்ளான்;* **தேவரை இடுக்கண் செய்தான்** *- தேவர்கட்குச் (சொல்லொணாத்) துன்பங்கள் (பல) செய்தான்;* **பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான்** *- மண்ணுலகத் தேவர்களாகிய (செந்தண்மை பூண்ட) அந்தணர்கட்கு இன்னல் பல செய்தான்;* **மன்னுயிர் புடைத்துத் தின்றான்** *- நிலை பெற்ற உயிர்களைப் பிரித்துக் கொன்று (அவை வாழ்ந்த உடல்களைத்) தின்றான்;* **ஆசையின் அளவும்** *- திக்குகளின் எல்லை வரையிலும்;* **எல்லா உலகமும்** *- (இருக்கின்ற) எல்லா உலகங்களையும்;* **தானே ஆள்வான்** *- (பிறர் ஆள விடாதபடி) அவனே ஆண்டு வருகின்றான்;* **வாசவன் திருவும் கொண்டான்** *- இந்திர உலகத்துச் செல்வங்களையும் கொள்ளை கொண்டான்;* **வழியலா வழி மேற்செல்வான்** *- (இவை யாவற்றையும்விட) நெறியல்லாத நெறியிற் சென்று கொண்டுள்ளான்.*

*"இரக்கமது இழுக்கு" எனக் கூறிய தன் கருத்துக்குச் சான்று. இது முதல் நான்கு பாடல்களில் நிறுவுகின்றான் இலக்குவன். தேசி-கற்பின் ஒளிவடிவாகிய பெருமாட்டி சீதை. தேசு-ஒளி. தேசி என்பதற்கு சூரியன் எனவும் இந்திரன் எனவும் பொருள் உரைப்பர். தேவரை-உருபு மயக்கம். நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்தது.*

***6978. 'வாழியாய்! நின்னை அன்று வரம்பு அறு துயரின் வைக,***
***சூழ்வு இலா மாயம் செய்து, உன் துணைவியைப் பிரிவுசூழ்ந்தான்;***

***ஏழைபால் இரக்கம் நோக்கி, ஒரு தனி இகல்மேல் சென்ற,***
***ஊழி காண்கிற்கும் வாழ்நாள், உந்தையை உயிர் பண்டு உண்டான்.***

***வாழியாய் !*** *- அழியா வாழ்வுடன் என்றும் வாழ்பவனே!* ***அன்று*** *- (இராவணன் சீதையைக் கவர்ந்த) அன்று;* ***நின்னை வரம்பறு துயரின்வைக*** *- எல்லையற்ற துன்பத்துள் நீ அழுந்துமாறு;* ***சூழ்விலா மாயம் செய்து*** *- (பிறரால்) எண்ணற்கும் இயலாத சூழ்ச்சியினைச் செய்து;* ***உன் துணைவியைப் பிரிவு சூழ்ந்தான்*** *- உன் வாழ்வின் துணைவியாகிய பிராட்டியைப் பிரித்தான்;* ***ஏழை பால்*** *- அந்தப் பேதையாகிய பிராட்டியினிடத்தே;* ***இரக்கம் நோக்கி*** *- (எழுந்த)* ***சென்ற*** *- தன்னந்தனியனாய் போர்க்குச் சென்ற;* ***ஊழி காண்கிற்கும் வாழ்நாள்*** *- பிரளயகாலத்தையும் காணவல்ல பேராயுள் (பெற்றிருந்த);* ***உந்தையை*** *- உன் தந்தையாகிய சடாயுவினுடைய;* ***உயிர் பண்டு உண்டான்*** *- உயிரையும் முன்பு கவர்ந்தான். (இவ்விராவணன்)*

*என்றும் அழியாதவன் ஆதலால், "வாழியாய்!" என்றார்.*

***6979. 'அன்னவன்தனக்கு, மாதை விடில், உயிர் அருளுவாயேல்,***
***"என்னுடை நாமம் நிற்கும் அளவு எலாம் இலங்கை மூதூர்***
***மன்னவன் நீயே" என்று, வந்து அடைந்தவற்கு வாயால்***
***சொன்ன சொல் என் ஆம்? முன்னம் சூளுறவு என் ஆம்?--தோன்றால்!***

***தோன்றால்*** *- புகழ் மிக்க தலைவனே!* ***மாதை விடில்*** *- சீதையை விட்டுவிடில்;* ***அன்னவன் தனக்கு*** *- அத்தகு கொடுமைகள் யாவும் புரிந்த இராவணனுக்கு;* ***உயிர் அருளுவாயேல்*** *- உயிர்ப் பிச்சை யளிப்பாய் ஆயின்;* ***என்னுடை நாமம் நிற்கும் நாள் எலாம்*** *- என்னுடைய பெயர் இவ்வுலகில் வழங்கும் காலம் எல்லாம்;* ***இலங்கை மூதூர் மன்னவன் நீயே*** *- இலங்கையென்னும் தொல் நகரின் அரசன் நீயே!* ***என்று வந்து அடைந்தவற்கு*** *- என்று உன்னைச் (சரணாக) வந்தடைந்த வீடணனுக்கு;* ***வாயால்*** *- (உன் சத்தியத்) திருவாயால்;* ***சொன்ன சொல் என் ஆம்?*** *-சொன்ன வாக்குறுதி என் ஆவது?* ***சூளுறவு என் ஆம்?*** *-முன், தண்டகாரண்யத்தில் முனிவர்கட்கு நீ அளித்த சபதம் (தான்) என் ஆவது?*

*உடன்பிறவாத் தம்பியர் மூவருள் குகனும், சுக்கிரீவனும் இராமபிரான் சென்று அடைந்தவர்கள். வீடணன் மட்டும் இராமனிடம் வந்து அடைந்தவன் ஆதலின், அவ்வினைகளையே பெயர் ஆக்கினார். "எம்முழை அன்பின் வந்த அகன் அமர்*

*காதல் ஐய" (கம்ப. 6507) இந்த வேற்றுமையை வீடணனை ஏற்கும் போதே உரைத்துள்ளது நினைவு கூர்க.*

***6980. 'அறம் தரு தவத்தை ஆயும் அறிவினால், அவற்றை முற்றும்***
***மறந்தனைஎனினும், மற்று இவ் இலங்கையின் வளமை நோக்கி, "இறந்து இது போதல் தீது" என்று இரங்கினை எனினும், எண்ணின்,***
***சிறந்தது போரே' என்றான்; சேவகன் முறுவல் செய்தான்.***

***அறந்தரு தவத்தை ஆயும் அறிவினால்*** *- அறத்தை விளைக்கின்ற பொறுமையெனும் நெறியைக் கைக்கொள்ளும் உன் புத்தியால்;* ***அவற்றை முற்றும் மறந்தனை*** *- வீடணனுக்கும் முனிவர்கட்கும் கூறிய உறுதிமொழிகளையும் இராவணன் இழைத்துள்ள தீங்குகளையும் முற்றும் மறந்து போனாய்!* ***எனினும்*** *- என்றாலும்;* ***மற்று*** *- மேலும்;* ***இவ் இலங்கையின் வளமை நோக்கி*** *- இந்த இலங்கை மாநகரத்தின் வளங்களையெல்லாம் பார்த்து;* ***இது இறந்து போதல் தீது என்று இரங்கினை*** *- இந்த (அழகு) நகரம் அழிந்து போவது நலமன்று என்று நினைத்து இரக்கம் கொண்டாய்;* ***எனினும் எண்ணின்*** *- என்றாலும் ஆராய்ந்து நோக்கின்;* ***சிறந்தது போரே என்றான்*** *- (இராவணனிடம் இப்போது புரிதற்குரிய) சிறந்த செயல் யுத்தமே என்றான் (இலக்குவன்)* ***சேவகன் முறுவல் செய்தான்*** *- (அது கேட்டுச்) சிறந்தபெரு வீரனாகிய இராமனும் புன்னகை பூத்தான்.*

*இலக்குவன், பிராட்டியின் நலமும், அவள் கணவனாகிய தன் நலமும் பேணுவதில் எத்தனை வேகமும் விழிப்பும் ஆர்வமும் கொண்டுள்ளான் எனும் நினைவாலும், தூது தோற்கப்போகிறது; நீ விரும்பும் போர்தான் நிகழப்போகிறது; ஆனாலும் உலகுக்காகத்தான் தூது அனுப்பப்போகிறேன்" எனும் நினைவாலும் இராமபிரான் புன்னகை பூத்தான் போலும். சேவகன்-பெருவீரன்.*

*இராமன் தூது விடுப்பது நீதி நூல் முறை*

***6981. 'அயர்த்திலென்; முடிவும் அஃதே; ஆயினும், அறிஞர் ஆய்ந்த***
***நயத் துறை நூலின் நீதி நாம் துறந்து அமைதல் நன்றோ?***
***புயத் துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல்***
***சயத் துறை; அறனும் அஃதே' என்று இவை சமையச்***

**சொன்னான்.** **அயர்த்திலென்** - (இலக்குவனை நோக்கி) இராவ`ணன் தீமைகளையும், முனிவர் வீடணன் ஆகியோர்க்குத் தந்த வாய் மொழிகளையும் நான் மறக்கவில்லை; **முடிவும் அஃதே** -இறுதியில் நடக்கப் போவது போரேயாகும்; **ஆயினும்** - ஆனாலும்; **அறிஞர் ஆய்ந்த** - தேவகுருவான வியாழ பகவானும் அசுர குருவான சுக்கிராச்சாரியாரும் ஆராய்ந்து கூறியுள்ள; **நயத்துறை நூலின்நீதி** - அரசியல்துறை பற்றிய நூல்களின் நீதிகளை; **நாம்** - (போற்றிக்காக்க வேண்டிய) நாமே; **துறந்து உறைதல் நன்றோ?** -அவற்றை நீக்கி வாழ நினைத்தல் நன்றாமோ? **புயத்துறை வலியரேனும்** - தோளிலே உறையும் வலிமை மிக்காரே யானாலும்; **பொறையொடும் பொருந்தி வாழ்தல்** - பொறுமை பூண்டு வாழ்வதே; **சயத்துறை** - வெற்றிக்கு இட்டுச் செல்லும் வழியாகும்; **அறனும் அஃதே** - அரச நீதியும் அவ்வாறே கூறுகிறது; **என்று இவை** - என்று இத்தகைய மொழிகளை; **சமையச் சொன்னான்** - (இலக்குவன் மனத்தில்) பதியுமாறு இராமபிரான் கூறினான்.

"முடிவும் அஃதே" என்பது அரசநீதியின் முடிவாகிய தண்டம் எனும் போரைக்குறித்தது. வியாழபகவான் எழுதிய அரசநீதி நூல் பார்ஹச பத்தியம்; சுக்கிரர் எழுதியது சுக்கிர நீதி. ஆதி மனு வரைந்தது மனுநீதி சாத்திரம். இவையெல்லாம் நயத்துறை - நீதி நூல்கள். நயம் என்பது இங்கு நீதியைக் குறித்து, அதனைச் செயல்படுத்தும் அரச குலத்தைச் சுட்டி நின்றது. "புயத்து உறை வலியர்" என்பது தோள் வலிமை மிக்க பேரரசரைக் குறித்தது. தோள் வலிமையினும் பொறுமையே வலிது என்பது இராமனின் கருத்து.

*அங்கதனைத் தூது செல்லுமாறு இராமன் பணித்தல்*

**6982. மாருதி இன்னம் செல்லின், மற்று இவன் அன்றி வந்து**
**சாருநர் வலியோர் இல்லை என்பது சாரும் அன்றே;**
**ஆர், இனி ஏகத் தக்கார்? அங்கதன் அமையும்; ஒன்னார்**
**வீரமே விளைப்பரேனும், தீது இன்றி மீள வல்லான்.'**

**மாருதி இன்னம் செல்லின்** - முன்பு சென்று வந்த அனுமனே மீண்டும் சென்றால்; **இவன் அன்றி மற்று** - அநுமனாகிய இவனைத் தவிர வேறு (இங்கு); **சாருநர் இல்லை என்பது சாரும் அன்றே?** - வந்து போவார் (நம் படையில்) இல்லை என்ற கருத்து (நம் பகைவரிடத்தில்) எழும் அன்றோ? **"யார் இனி ஏகத்தக்கார்?"** - (இப்போது இராவணனிடம் தூதாகச்) செல்ல வல்லவர் யார்? **அங்கதன் அமையும்** - (என்று இராமன் சிந்தித்து முடிவில்) அங்கதனே பொருத்தமானவன்; **ஒன்னார் வீரமே விளைப்பரேனும்** - பகைவர் வீரங்காட்ட அவனிடம் வந்தாரே யாயினும்; **தீதின்றி மீள வல்லான்** - ஒரு தீங்குமின்றி மீண்டுவர வல்லவன் (என்று இராமன் கூறினான்)

"தீதின்றி மீளவல்லன் அங்கதன் ஆதலின் அங்கதன் அமையும்" என முடிவுக்கு வந்தான். இதனால் தான். இப்பேறு கிட்டியதை எண்ணி மகிழ்ந்த அங்கதன், "மாருதி

*யல்லன் ஆகில் நீயெனும் மாற்றம் பெற்றேன்" (6987) என்று பூரித்தான். தத்திதாந்த நாமம்.*

***6983. 'நன்று' என, அவனைக் கூவி, 'நம்பி! நீ நண்ணலார்பால்***
***சென்று, இரண்டு உரையின் ஒன்றைச் செப்பினை திரிதி' என்றான்;***
***அன்று அவன் அருளப் பெற்ற ஆண்தகை அலங்கல் பொன் தோள்***
***குன்றினும் உயர்ந்ததுஎன்றால், மன நிலை கூறலாமோ?***

***'நன்று' என*** *- சுக்கிரீவன், வீடணன் முதலியோர், 'நல்லது நல்லது' என்று கூற;* ***அவனைக் கூவி*** *- அங்கதனை அழைத்து;* ***நம்பி! நீ*** *- நற்குணங்கள் அமைந்தவனே!* ***நண்ணலார் பால் சென்று*** *- பகைவர் பால் சென்று;* ***இரண்டு உரையின்*** *- நான் கூறும் இரண்டு சொற்களைச்;* ***செப்பினை*** *- சொல்லி;* ***ஒன்றைத் திரிதி*** *- அவற்றுள் அவன் இசைந்த ஒன்றை (அறிந்து) திரும்புவாயாக;* ***என்றான்...*** *- என்றான்;* ***அன்று*** *- அப்போது;* ***அவன் அருளப்பெற்ற*** *- அந்த இராமனால் (பணி செய்ய) அருளப்பெற்ற;* ***ஆண் தகை*** *- (பேராளனாகிய) ஆண்மைப் பண்புகள் அனைத்தும் அமையப் பெற்றவனான அங்கதன்;* ***அலங்கல் பொன்தோள்*** *- மாலை புனைந்த அழகிய தோள்கள்;* ***குன்றினும் உயர்ந்தது என்றால்*** *- குன்றுகளை விட உயர்ந்து ஓங்கின என்றால்;* ***மன நிலை கூறல் ஆமோ?*** *- அவன் உள்ளத்து உவகை நிலையை உரைக்க முடியுமோ?*

*நம்பி-புருடோத்தமன், ஆண்தகை, குணபூரணன் முதலிய சொற்களின் பரியாயச் சொல். இராமபிரான் திருவாயால் 'நம்பி' என்றும், 'நான் சொல்வதில் இரண்டில் ஒன்று தெரிந்து வா' என்றும் அன்பும் கட்டளையும் அமைய அறிவிக்கப்பெற்ற பெருமிதப் பேற்றால், அங்கதன் தோள்கள் குன்று போல் உயர்ந்தன.*

***6984. 'என் அவற்கு உரைப்பது?' என்ன, ' "ஏந்திழையாளை விட்டுத***
***தன் உயிர் பெறுதல் நன்றோ? அன்றுஎனின், தலைகள் பத்தும்***
***சின்னபின்னங்கள் செய்ய, செருக்களம் சேர்தல் நன்றோ?***
***சொன்னவை இரண்டின் ஒன்றே துணிக!" எனச் சொல்லிடு' என்றான்.***

***அவற்கு உரைப்பது என் என*** - *(அங்கதன் இராமபிரானை நோக்கி) (அடியேன் சென்று) அந்த இராவணனுக்கு உரைக்க வேண்டியவை என்ன என்று விண்ணப்பிக்க;* ***ஏந்திழையாளை விட்டு*** - *உயர்ந்த அணிகளையணிந்த சீதா தேவியைச் சிறையிலிருந்து விடுதலை செய்து;* ***தன் உயிர் பெறுதல் நன்றோ?*** - *தன்னுடைய உயிரை (இழக்காமல்) பெறுதல் நல்லதா?* ***அன்று எனில்*** - *அல்லாது போனால்;* ***தலைகள் பத்தும்*** - *உன்னுடைய பத்துத் தலைகளும்;* ***சின்ன பின்னங்கள் செய்ய*** - *(என் அம்புகளினால்) கண்டதுண்டமாக்கப்பட்டு;* ***செருக்களம் சேர்தல் நன்றோ?*** - *போர்க்களத்தில் கிடப்பது நல்லதா?* ***சொன்னவை*** - *நான் கூறியவற்றுள்;* ***இரண்டின் ஒன்றே துணிக*** - *இரண்டில் ஒன்றையே தேர்ந்து சொல்லுக;* ***எனச் சொல்லிடு*** - *என்று இராவணனிடம் கூறிவருக என்றான்.*

***6985. 'அறத் துறை அன்று, வீரர்க்கு அழகும் அன்று,***
***ஆண்மை அன்று,***
***மறத் துறை அன்று, சேமம் மறைந்து உறைந்து***
***ஒதுங்கி வாழ்தல்;***
***நிறத்து உற வாளி கோத்து, நேர் வந்து***
***நிற்கும்ஆகின்,***
***புறத்து உற எதிரே வந்து போர் தரப் புகல்தி'***
***என்றான்.***

***சேமம் மறைந்து உறைந்து ஒதுங்கி வாழ்தல்*** - *பாதுகாவலுக்காக (கோட்டைக்கு) உள்ளே மறைந்து தங்கி, ஒதுங்கி வாழ்வது;* ***அறத்துறை அன்று*** - *தருமமாகாது;* ***வீரர்க்கு அழகும் அன்று*** - *நல்லவீரர்க்கு அழகும் ஆகாது;* ***ஆண்மை அன்று*** - *தைரியத்தின் பாலும் சேராது;* ***மறத்துறை அன்று*** - *வீரத்துறையின் பால் படுவதும் அன்று;* ***நிறத்து உற*** - *மார்பிடத்தே தைக்குமாறு;* ***வாளி கோத்து*** - *அம்புகளைத் தொடுத்துக்கொண்டு;* ***நேர் வந்து நிற்குமாகில்*** - *எதிரே எதிர்த்து வந்து நிற்கும் வன்மையுளதென்றால்;* ***புறத்து உற*** - *இலங்கை நகரின் வெளியே போந்து;* ***எதிரே வந்து*** - *நேருக்கு நேர் நின்று;* ***போர்தரப்புகறி*** - *போர் புரியுமாறு புகல்வாயாக என்றான்.*

*அங்கதன் இராவணன் இருக்கையடைதல்*

***6986. பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப்***
***படர்வதேபோல்,***
***வீரன் வெஞ் சிலையில் கோத்த அம்பு என,***
***விசையின் போனான்,***
***' "மாருதி அல்லன்ஆகின், நீ" எனும் மாற்றம்***
***பெற்றேன்;***
***யார் இனி என்னோடு ஒப்பார்? என்பதோர் இன்பம்***

***உற்றான்.***

***மாருதி அல்லன் ஆகின் நீ*** - *'அநுமன் இல்லாவிட்டால் (அந்த இடத்தை நிரப்புகிறவன்) நீயே'* ***எனும் மாற்றம் பெற்றேன்*** - *என்று உரைக்கும் இராம வாக்கைப் பெற்றுவிட்டேன்;* ***இனி என்னோடு ஒப்பார் யார்?*** - *இனி எனக்கு நிகராவார் உலகில் யாருளர்?* ***என்பதோர்*** *-என்று சொல்லவல்ல ஒப்பற்றதொரு;* ***இன்பம் பெற்றான்*** - *பேரின்பத்தினை யடைந்தவனான அங்கதன்;* ***பார் மிசை வணங்கி*** - *(இராமபிரானை) மண் மேல் (தன் அங்கங்கள் பட) வீழ்ந்து வணங்கி;* ***சீயம் விண்மிசைப் படர்வதே போல்*** - *சிங்கம் (ஒன்று) வான் வழியே பாய்ந்து செல்வது போல்;* ***வீரன் வெஞ்சிலையில் கோத்த அம்பு என*** - *இராமபிரானின் கடிய கோதண்டம் எனும் வில்லில் பூட்டிய அம்புபோல்;* ***விசையிற் போனான்*** - *விரைந்து (இராவணன் இருப்பிடம் நோக்கிச்) சென்றான். அனுமனை விடுத்து அங்கதனைத் தேர்ந்தமைக்கு உரிய விளக்கம் மேல் (6982) கூறப்பட்டது. தூதுரைத்து இராமனிடம் மீளும் அங்கதனுக்கு, குறியைத் தவறாமல் தாக்கி மீண்டும் இராமன் தூணிக்கே திரும்பி வரும் இராமபாணம் அழகிய உவமை. "வீரர்களுள் நான் இராமனாயிருக்கிறேன்" (கீதை) என்பது கீதையில் கண்ணன் கூற்றாதலால், இராமபிரானை, "வீரன் என்றார்." அநுமன் இல்லையேல் அங்கதன்" எனும் பழமொழி, இப்பாடலின் பின்னர்த் தோன்றியிருக்க வேண்டும். ஆண்மைத் தோற்றத்துடன் அஞ்சாமல் செல்வதற்குச் சிங்கமும், தவறாமல் குறியையடைந்துதாக்கி மீளுதற்கு இராமன் அம்பும் உவமைகள். சீயம் விண்மிசை படர்வது-இல்பொருள் உவமை அணி.*

***6987. அயில் கடந்து எரிய நோக்கும் அரக்கரைக் கடக்க, ஆழித்***
***துயில் கடந்து அயோத்தி வந்தான் சொல் கடவாத தூதன்,***
***வெயில் கடந்திலாத காவல், மேருவின் மேலும் நீண்ட,***
***எயில் கடந்து, இலங்கை எய்தி, அரக்கனது இருக்கை புக்கான்.***

***அயில் கடந்து எரிய நோக்கும்*** *-வேற்படையினையும் தம் விழி வெம்மையால் எரித்துவிட வல்ல கொடிய பார்வையினையுடைய;* ***அரக்கரைக் கடக்க*** - *அரக்கர்கள் என்னும் (பாவக்கடலைக்) கடந்து (உலகோர்) கரை சேர;* ***ஆழித்துயில் கடந்து*** - *பாற்கடற் பள்ளியின் தூக்கத்தைத் (துறந்து)* ***அயோத்தி வந்தான்*** - *அயோத்தியில் வந்து அவதரித்தவனாகிய இராமபிரானுடைய;* ***சொற்கடவாத தூதன்*** - *மொழிகளை (எந்நிலையிலும்) மீறாத தூதனாகிய அங்கதன்;* ***வெயில் கடந்திலாத காவல்*** - *சூரியன் தண்டிச் செல்ல இயலாத கட்டுக்காவல் மிக்கதும்;* ***மேருவின் மேலும் நீண்ட*** - *மேரு மலையினும் உயர்வு கொண்டதும் ஆன;* ***எயில் கடந்து*** - *இலங்கையின் கோட்டை மதில்களைத் தாண்டி;* ***இலங்கை எய்தி*** - *இலங்கையை*

*யடைந்து;* ***அரக்கனது*** *- இராவணனுடைய;* ***இருக்கை புக்கான்*** *- இருப்பிடத்தை சென்றடைந்தான்.*

*கடக்க என்னும் வினையால், அரக்கரைக் கடல் எனக் கொள்ள வைத்தார். ஏகதேச உருவகம். அரக்கக்கடலை உலகு கடக்க, தான் ஆழிக்கடலைக் கடந்து வந்தவன் என நயமுற உரைத்தார். கடத்தல் என்ற சொல்லுக்கு அஞ்சாது எதிர்நின்று போர் செய்து வெல்லுதல் என்பது பொருள். தூதர்கள், கூறியது கூறுவார்; தான் வகுத்துக் கூறுவார் என இருபகுப்பினர். இவருள் அங்கதன் கூறியது கூறுவான் எனும் பகுப்பினன் என்பதனையுணர்த்த, "சொற்கடவாத தூதன்" என்றார். கண்ணனும் அநுமனும் தான் வகுத்துக் கூறுவார் எனும் பகுப்புள் அடங்குவர். இங்கு, வள்ளுவனாரின் "தூது" எனும் அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் உரையும் சிந்தை செய்யத்தக்கவை.*

## *இராவணன் ஆற்றலை அங்கதன் வியத்தல்*

***6988. அழுகின்ற கண்ணர் ஆகி, 'அனுமன்கொல்?' என்ன அஞ்சித்***
***தொழுகின்ற சுற்றம் சுற்ற, சொல்லிய துறைகள்தோறும்***
***மொழிகின்ற வீரர் வார்த்தை முகம்தொறும் செவியின் மூழ்க,***
***எழுகின்ற சேனை நோக்கி, இயைந்து இருந்தானைக் கண்டான்.***

***அனுமன் கொல் என்ன அஞ்சி*** *- (அங்கதனைக் கண்ணுற்ற அரக்கர்கள் முன்பு வந்து போன) அனுமனோ (மீண்டு வந்தான்) என்று அஞ்சி;* ***அழுகின்ற கண்ணர் ஆகி*** *- நீர் ஒழுகும் கண்களையுடையவர் ஆகி;* ***தொழுகின்ற சுற்றம் சுற்ற*** *- தங்கட்கு இடையூறு அடையாமல் காத்திடுக எனக் கைதொழுது நிற்கின்ற சுற்றத்தால் தன்னைச் சுற்றிக் கொள்ளவும்;* ***சொல்லிய துறைகள் தோறும்*** *- அரசியலிலும் பொருளியலிலும் கூறப்பட்டுள்ள துறைகள் யாவற்றிற்கும்;* ***மொழிகின்ற வீரர் வார்த்தை*** *- பணியாற்றக் கூறப்பட்டுள்ள வீரர்களின் விண்ணப்பங்கள்;* ***முகம்தொறும் செவியின் மூழ்க*** *- பத்து முகங்களிலும் உள்ள இருபது காதுகளிலும் வீழவும்;* ***எழுகின்ற சேனை நோக்கி*** *- இதற்கிடையில் போருக்குப் புறப்படுகின்ற சேனைகளைப் பார்வையிட்டவாறும்;* ***இயைந்திருந்தானை*** *- அமர்ந்திருந்த இராவணனை;* ***கண்டான்*** *- (அங்கதன்) பார்த்தான்.*

*அவற்றைச் செவியில் வாங்கி, நெஞ்சத்தில் ஆழ்த்தி இராவணன் சிந்திக்கின்றான் என்பது தோன்ற, "வீரர் வார்த்தை முகம் தொறும் செவியின் மூழ்க" என உரைத்த திறனை நோக்குக. "கண்ணிற் சொல்லி செவியில் பார்க்கும் வல்லுநர்" என நாடாளும் மன்னரை குமர குருபரரும் இதனால் உரைப்பர்.*

***6989. 'கல் உண்டு; மரம் உண்டு; ஏழைக் கடல் ஒன்றும்***

***கடந்தேம் என்னும்***
***சொல் உண்டே; இவனை வெல்லத் தோற்றும் ஓர்***
***கூற்றம் உண்டே?***
***எல்லுண்ட படை கைக் கொண்டால் எதிர் உண்டே?***
***இராமன் கையில்***
***வில் உண்டேல், உண்டு' என்று எண்ணி, ஆற்றலை***
***வியந்து நின்றான்.***

***கல் உண்டு, மரம் உண்டு*** - *(இராவணன் ஓலக்கத்தைக் கண்ட அங்கதன் தனக்குள்) கடலைத் தூர்த்து அணைகட்டக் கற்களும் உண்டு, மரங்களும் உண்டு; (ஆதலால்)* ***ஏழைக்கடல் ஒன்று கடந்தோம்*** - *சிறிய இந்தக் கடல் ஒன்றைத் தாண்டி கடந்து வந்து விட்டோம்;* ***என்னும் சொல் உண்டே!*** - *என்ற சொல்லும் (நமக்கு வாய்த்து) விட்டது;* ***இவனை வெல்ல*** - *ஆனால், இந்த இராவணனை வெல்வதற்கு (ஒருவன்)* ***தோற்றும் ஓர் கூற்றம் உண்டே.?*** - *பிறந்துள்ளதாகக் கூறும் ஒரு சொல் எழுந்தது உண்டோ? (இல்லை)* ***எல் உண்ட*** - *ஒளியோடு கூடிய;* ***படை கைக்கொண்டால்*** - *போர்க்கருவிகளை இவன் கைகளில் ஏந்தி (களத்திற்கு வந்தால்);* ***எதிர் உண்டே?*** - *எதிர்த்து நிற்கும் படையும் (உலகில்) உண்டோ?* ***இராமன் கையில் வில் உண்டேல் உண்டு!*** - *(நம் தலைவனான) இராமபிரானின் கரங்களில் ஏந்திய (கோதண்டம் எனும்) வில் உண்டு என்றால் இவனை எதிர்த்து நிற்கும் வாய்ப்பு உண்டு!* ***என்று எண்ணி*** *-என்று எண்ணியவாறு;* ***ஆற்றலை வியந்து நின்றான்*** - *இராவணனது பேராற்றலை வியந்தபடி நின்றான்.*

***6990. 'இன்று இவன் தன்மை எய்த நோக்கினேற்கு***
***எதிர்ந்த போரில்***
***வென்ற என் தாதை மார்பின் வில்லின்மேல் கணை***
***ஒன்று ஏவிக்***
***கொன்றவன்தானே வந்தான் என்று உடன் குறிப்பின்***
***அல்லால்,***
***ஒன்று இவன்தன்னைச் செய்ய வல்லரோ, உயிர்க்கு***
***நல்லார்?***

***இன்று இவன் தன்மை எய்த நோக்கினேற்கு*** - *இப்பொழுது இந்த இராவணனுடைய நிலையை நன்கு ஊன்றிக் கவனித்த எனக்கு;* ***எதிர்ந்த போரில்*** - *விளைந்துள்ள போரில்;* ***என் தந்தை மார்பின்*** - *(இவனை) வென்ற என் தந்தையாகிய வாலியின் மார்பில்;* ***வில்லின் மேல் கணை ஒன்று ஏவி*** - *வில்லில் கணை ஒன்று தொடுத்து;* ***கொன்றவன் தானே*** - *கொன்றவனான இராமபிரான் தானே;* ***வந்தான் என்று*** - *இப்போது இவனைக் கொல்ல வந்துள்ளான் என்று;* ***உடன் குறிப்பின் அல்லால்*** - *இச்செய்தியையும் உடன் சேர்த்து உணர்ந்து கொள்ளலாமே யன்றி;* ***உயிர்க்கு நல்லார்*** - *உயிர்க்கு நலம் செய்யக் கருதுபவர்கள்;* ***இவன் தன்னை*** - *இந்த*

*இராவணனை;* ***ஒன்று செய்யவல்லரோ?*** *- எந்த ஒரு செயலாலும் தீங்கு செய்ய வல்ல இயலுமோ?*

*வாலியை வென்ற இராமனாலன்றிப் பிறரால் இவனுக்கு, எள் முனையளவு சிறுதீங்கும் செய்து விட இயலாது என்று அங்கதன் கருதுகின்றான். இராவணன் திக்கு விசயம் செய்கையில் வாலியோடு எதிர்த்ததனால் அவன் வெகுண்டு வாலிற் கட்டியவாறு, திசைகள்தோறும் பறந்து சிவபூசனை செய்து, கிட்கிந்தை திரும்புகையில், தாரை வேண்டியபடி இராவணனை வாலிலிருந்து விடுவித்தான் என்று உத்தரகாண்டம் வாலி வாலாற் கட்டுண்ட படலத்தில் உரைக்கப்படும். "மெய்க்கொள் வாலினால் மிடல் இராவணன், தொக்கத் தோளுறத் தொடர்படுத்த நாள்" (கம்ப. 3833) எனக் கவிஞர் பிரானாலும் இந்நிகழ்ச்சி குறிக்கப்படும்.*

***6991. 'அணி பறித்து அழகு செய்யும் அணங்கின்மேல் வைத்த ஆசைப்***
***பிணி பறித்து, இவனை யாவர் முடிப்பவர், படிக்கண்? பேழ் வாய்ப்***
***பணி பறித்து எழுந்த மானக் கலுழனின், இவனைப் பற்றி,***
***மணி பறித்து எழுந்த எந்தை யாரினும் வலியன்' என்றான்.***

***அணி பறித்து*** *- ஆபரணங்களைக் களைந்து (அவையின்றியே); அழகு செய்யும் - அழகு மிக விளங்கும்;* ***அணங்கின் மேல் வைத்த ஆசை*** *- பிராட்டியின் மீது கொண்ட இச்சையாகிய;* ***பிணி பறித்து*** *-(காம) நோயை வேரொடும் களைந்து;* ***படிக்கண் இவனை*** *- (இப்) பூமியிலே இவ்வலிய அரக்கனை;* ***யாவர் முடிப்பவர்*** *- யாரே அழிக்க வல்லார்?* ***பேழ்வாய்*** *- பிளந்த வாயினையுடைய;* ***பணி பறித்து எழுந்த*** *- பாம்பின் (மணியினைக்) கவர்ந்து கொண்டெழுந்த;* ***மானக் கலுழனின்*** *- பெருமைக்குரிய கருடனைப் போல;* ***மணி பறித்து எழுந்த*** *- இவனுடைய மகுடத்தின் மணியைப் பறித்துக் கொண்டுவந்த;* ***எந்தை*** *- என்னுடைய தந்தையான சுக்கிரீவன்;* ***யாரினும் வலியன்*** *- எல்லோரிலும் வலியவனே! என்றான் அங்கதன்.*

*"கூடல் மகளிர் கோலம் கொள்ளும் ஆடகப் பைம்பூண் அருவிலை அழிப்பச் செய்யாக் கோலமொடு வந்தீர்" (சிலம்பு. 16.9.11) என அணி அணியாக் கோலத்தோடு வந்த கண்ணகியின் அழகினை இளங்கோவடிகள் போற்றியமையை இங்கு நினைவு கூர்தல் தகும்.*

***6992. நெடுந்தகை விடுத்த தூதன் இனையன நிரம்ப எண்ணி,***
***கடுங் கனல் விடமும் கூற்றும் கலந்து கால் கரமும் காட்டி,***
***விடும் சுடர் மகுடம் மின்ன, விரி கடல் இருந்தது***

***அன்ன***
***கொடுந் தொழில் மடங்கல் அன்னான் எதிர் சென்று,***
***குறுகி நின்றான்.***

***நெடுந்தகை*** - *பெருங்குணங்கள் நிறைந்த இராமபிரான்;* ***விடுத்த தூதன் இனையன*** *- அனுப்பிய தூதனான அங்கதன் இவ்வாறான நினைவுகளை;* ***நிரம்ப எண்ணி*** *- நெஞ்சில் நிறைய எண்ணியவனாய்;* ***விரிகடல்*** *- பரந்து பட்ட கடல் ஆனது;* ***கடுங்கனல்*** *- கொடிய தீயும்;* ***விடமும் கூற்றும்*** *- நஞ்சும் யமனும்;* ***கலந்து*** *- (ஆகிய மூன்றையும்) ஒன்றாகக்கூட்டி;* ***கால் கரமும் காட்டி*** *- கால்களையும் கைகளையும் உண்டாக்கிக்கொண்டு;* ***சுடர் விடும் மகுடம் மின்ன இருந்தது என்ன*** *- ஒளி உமிழ்கின்ற மகுடம் தன் உச்சியில் மின்னுமாறு அமர்ந்திருந்தது என்று கூறுமாறு (அமர்ந்திருந்த);* ***கொடுந்தொழில்*** *- கொடுமைத் தொழிலையே கொண்டுள்ள;* ***மடங்கல் அன்னான்*** *- சிங்கம் போன்றவனான இராவணனுக்கு;* ***எதிர் சென்று*** *- நேர் எதிராகப் போய்;* ***குறுகி நின்றான்*** *- இடைவெளி குறுகுமாறு அருகே நின்றான்.*

*இராவணன் தேற்றம்-இல்பொருள் உவமையணி.*

*இராவணன் அங்கதன் உரையாடல்*

***6993. நின்றவன் தன்னை, அன்னான் நெருப்பு எழ நிமிரப்***
***பார்த்து, 'இங்கு,***
***இன்று, இவண் வந்த நீ யார்? எய்திய கருமம்***
***என்னை?***
***கொன்று இவர் தின்னாமுன்னம் கூறுதி, தெரிய'***
***என்றான்;***
***வன் திறல் வாலி சேயும், வாள் எயிறு இலங்க***
***நக்கான்.***

***நின்றவன் தன்னை*** *- (குறுக வந்து) (தன் முன்) நின்றவனான அங்கதனை;* ***அன்னான்*** *- இராவணன்;* ***நெருப்பு எழ நிமிரப் பார்த்து*** *- விழிகளில் தீப்பொறி சிந்த நிமிர்ந்து நோக்கி;* ***இங்கு இன்று இவண் வந்த நீ யார்?*** *- 'இன்று இவ்விடத்தில் என்முன் வந்துள்ள நீ யார்?* ***எய்திய கருமம் என்னை?*** *- நீ கருதி வந்த காரியம் என்ன?* ***இவர் கொன்று தின்னா முன்னம்*** *- இங்குள்ள பணியாளர்கள் உன்னைக் கொன்று தின்று விடுவதற்கு முன்பாக;* ***தெரியக் கூறுதி என்றான்*** *- விளக்கி உரைப்பாயாக என்று கேட்டான்;* ***வன்திறல் வாலி சேயும்*** *- வலிய ஆற்றல் மிக்க வாலியின் மகனான அங்கதனும்;* ***வாள் எயிறு இலங்க*** *- வெள்ளிய பற்கள் ஒளிருமாறு;* ***நக்கான்*** *- இராவணனைப் பார்த்துச் சிரித்தான்.*

*அழையாமல் அங்கதன் நுழைந்திருப்பதும், மிக அருகில் நெருங்கி நிற்பதும், முன் வந்து சென்ற அனுமனைப் போலக் குரங்குருவில் முன் நிற்பதும் இராவணன் நெருப்பெழ நிமிர்ந்து பார்த்தற்குக் காரணங்கள் ஆயின.*

*அங்கதன் தன்னை யாரென அறிவித்தல்*

***6994. 'பூத நாயகன், நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன், அப்***
***பூமேல்***
***சீதை நாயகன், வேறு உள்ள தெய்வ நாயகன்,***
***நீ செப்பும்***
***வேத நாயகன், மேல் நின்ற விதிக்கு நாயகன்,***
***தான் விட்ட***
***தூதன் யான்; பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன்'***
***என்றான்.***

**பூத நாயகன்** - *(அங்கதன் இராவணனை நோக்கி) (என் தலைவனாகிய இராமபிரான்) ஐம்பூதங்கட்கும் தலைவன்;* **நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன்** - *(அந்த ஐம்பூதங்களுள்ளும்) (நீ வாழ்கிற) கடல் சூழ்ந்த இம் மண்ணுலகிற்கும் (அவன்) தலைவன்;* **அப்பூமேல் சீதை நாயகன்** - *(அதுமட்டுமின்றி)அழகிய தாமரை மலர்மேல் வாழும் சீதைக்கும் அவன் நாயகன்;* **வேறு உள்ள தெய்வ நாயகன்** - *(சீதையேயன்றி) வேறே உள்ள தெய்வங்கட்கும் அவன் நாயகன்)* **நீ செப்பும் வேதநாயகன்** - *நீ தெய்வங்களைப் போற்றப் பயன்படும் அந்த வேதங்கட்கும் அவனே தலைவன்;* **மேல் நின்ற விதிக்கு நாயகன்** *-இனிமேல் நீ பட உள்ள விதியின் விளைவுகட்கும் அவனே தலைவன்;* **தான் விட்ட தூதன் யான்** - *இத்தகைய நாயக மணியானவன் உனக்கு அனுப்பியுள்ள தூதன் நான்;* **பணித்த மாற்றம்** - *அந்நாயகன் உன்பால் உரைக்கச் சொன்ன சொற்களை;* **சொல்லிட வந்தேன் என்றான்** - *கூறிவிட்டுப் போக இங்கே (உன்முன்னே) வந்துள்ளேன் என்றுரைத்தான்.*

*இராவணன் வினாவிய வினாக்களுக்கு உரிய முழுவிடையும், அவன் கேளாத, கேட்கவிரும்பாத தன் தலைவனின் முழுப்புகழையும் ஒரே பாடலில் தொகுத்துச் சுட்டிய அங்கதனின் சொல் ஆற்றல் வியக்க வைப்பது. தன்னையே நாயகன் எனச் செருக்குற்ற இராவணனுக்கு மேல் ஓர் உண்மை நாயகன் இராமனே என்பதை அங்கதன் புலப்படுத்தினான். 'நாயகன்' என்ற சொல்லடுத்தடுத்து வந்தமை குறித்திடுக. என் தலைவன் ஐம்பூதங்கள் ஊறடையாது காக்கும் கடவுள் என்பான், "பூதநாயகன்" என்றான். பணித்த மாற்றம் சொல்லிட வந்தேன் என்பதில் அங்கதன் அடக்கமும் விநயமும் புலனாகின்றன.*

*இராவணன் ஏசல்*

***6995. 'அரன்கொலாம்? அரிகொலாம்? மற்று***
***அயன்கொலாம்? என்பார் அன்றி,***
***குரங்கு எலாம் கூட்டி, வேலைக் குட்டத்தைச் சேது***
***கட்டி,***

***"இரங்குவான்ஆகில், இன்னம் அறிதி" என்று உன்னை ஏவும்***
***நரன்கொலாம், உலக நாதன்' என்றுகொண்டு,***
***அரக்கன் நக்கான்.***

***அரன் கொல் ஆம்?*** - *(அங்கதன் கூறியவை கேட்ட இராவணன்) சிவபெருமானோ?* ***அன்றி அரி கொல் ஆம்?*** - *அல்லாமல் திருமாலோ?* ***மற்று அயன் கொல் ஆம்?*** - *இவர்கள் இருவரும் அல்லாமல் நான்முகனோ?* ***என்பார்*** - *(நீ கூறிய பூத நாயகனாக முதலாய) புகழுக்குரிய தலைவன்;* ***அன்றி*** - *(உன் தலைவன் அவர்களைப் போல்) அல்லாமல்;* ***குரங்கு எலாம் கூட்டி*** - *குரங்குகளையெல்லாம் படையென்று திரட்டிக்கொண்டு;* ***வேலைக் குட்டத்தைச் சேது கட்டி*** - *சிறு குட்டை போன்ற ஒரு கடற்பகுதியில் அணைகட்டி;* ***இரங்குவான் ஆகில் இன்னம் அறிதியென்று*** - *(அதனை ஒரு வீரச் செயலாகவும் அதனால் தன்னை வீரனாகவும் கருதி) இந்த நிலையிலும் இராவணன் செய்ததற்கு இரங்குகின்றானா? என்று அறிந்து வா' என்று;* ***உன்னை ஏவும்*** - *உன்னைத் தூதனாக ஏவியுள்ள;* ***நரன் கொலாம்*** - *அந்த மனிதன் தானோ?;* ***உலக நாதன்*** - *உலகத்திற்கு நாயகன்?* ***என்று கொண்டு*** - *என்று சொல்லிக்கொண்டே;* ***அரக்கன் நக்கான்*** - *இராவணன் எள்ளிச் சிரித்தான்.*

***6996. 'கங்கையும் பிறையும் சூடும் கண்ணுதல், கரத்து நேமி***
***சங்கமும் தரித்த மால், மற்று இந் நகர்தன்னைச் சாரார்;***
***அங்கு அவர் தன்மை நிற்க, மனிசனுக்காக, அஞ்சாது,***
***இங்கு வந்து இதனைச் சொன்ன தூதன் நீ யாவன்?' என்றான்.***

***கங்கையும் பிறையும் சூடும் கண்ணுதல்*** - *கங்கையாற்றையும் பிறை நிலவையும் சடையிற் சூடியுள்ள நெற்றிக் கண்ணனான சிவபெருமான்;* ***கரத்து நேமி சங்கமும் தரித்த மால்*** *-தன் கரங்களில் சக்கரமும் சங்கும் தாங்கிய திருமால்* ***மற்று இந்நகர் தன்னைச் சாரார்*** - *(ஆகிய இருவரும்) இந்த இலங்கை நகருக்குள் (அச்சத்தால்) வரமாட்டார்கள்;* ***அங்கு அவர் நிலமை நிற்க*** - *அவ்வாறு அவர் நிலமையேயிருக்கையில்;* ***மனிசனுக்காக அஞ்சாது*** - *(கேவலம்)*

*மனிதன் ஒருவனுக்காக இவ்விலங்கைக்குள் அச்சமின்றித் துணிந்து;* ***இங்கு வந்து*** - *என் (அத்தாணி) மண்டபத்திற்குள் நுழைந்து;* ***இதனைச் சொன்ன*** - *இந்த வார்த்தைகளைக் கூறிய;* ***தூதன் நீ*** - *தூதனாகிய நீ;* ***யாவன்? என்றான்*** - *யார்? என்று கேட்டான் இராவணன்.*

*அங்கதன் கூறிய விடை*

***6997. 'இந்திரன் செம்மல், பண்டு, ஓர் இராவணன் என்பான்தன்னை***
***சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி,***
***சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன், தேவர் உண்ண***
***மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினான், மைந்தன்' என்றான்.***

***பண்டு ஓர் இராவணன் என்பான்*** - *முன்பு இராவணன் என்று கூறப்படும் ஒருவனை;* ***வாலிடைத் தூங்க*** - *தன் வாலில் தொங்குமாறு;* ***சுந்தரத் தோள்களோடும் சுற்றி*** - *அழகிய தோள்களுடன் பிணித்து;* ***சிந்துரக்கிரிகள் தாவி*** - *யானைகள் வாழ்கின்ற மலைகள் தோறும் தாவிப்பாய்ந்து;* ***திரிந்தனன்*** - *திரிந்தவனும்;* ***தேவர் உண்ண*** - *தேவர்கள் உண்டு மகிழுமாறு;* ***மந்தரப் பொருப்பால்*** - *மந்தர மலையினால்;* ***வேலை கலக்கினான்*** - *கடலைக் கடைந்தவனும்;* ***இந்திரன் செம்மல்*** - *இந்திரனின் புதல்வனும் ஆகிய வாலியின் மகன் (நான்);* ***என்றான்*** - *என்று விடையிறுத்தான் அங்கதன்.*

*தன்னை அதட்டிய இராவணனைப் புறக்கணித்துப் படர்க்கையில் ஓர் இராவணன் என்பான் தன்னை எனக்கூறியது அங்கதனின் அங்கதச் சுவை. வாலில் கட்டப்பட்டுள்ளவன் மலைத்தோளனாகிய இராவணன் அவன் அவ்வாறு கட்டப்பட்டுள்ள நினைவேதுமின்றி வாலி மலைகள் மேல் தாவித் திரிந்தான் என்க. தேவர் உண்ணுமாறு கடலைக் கடைந்து அமுது தந்தவன் வாலி என்பதனை, "கைத்தலத்து உவரி நீரைக் கலக்கினான்" (கம்ப. 4080) எனவும் "அலைகடல் கடைய வேண்டின் ஆர் இனிக்கடைவர்" (4176) எனவும் முன்பு கூறியுள்ளமையால் அறிக. "இந்திரன் செம்மல்" என்பதனால் வாலியின் குலப்பெருமையும், வாலால் இராவணன் தோள் பிணித்தவன் என்பதனால், வாலியின் உடற்பெருமையும், தேவர் அமுதுண்ணக் கடைந்தவன் என்பதனால் வாலியின் உளப் பெருமையும் ஒருசேர உணர வைத்த திறம் காண்க. அவன் மகன் என்னும் பெருமையே தனக்குப் போதும் என்பானாய் வேலை கலக்கினான் மைந்தன் எனக் கூறினான் அங்கதன்.*

***6998. 'உந்தை என் துணைவன் அன்றே? ஓங்கு அறச் சான்றும் உண்டால்;***
***நிந்தனை இதன்மேல் உண்டோ, நீ அவன் தூதன் ஆதல்? தந்தனென் நினக்கு யானே வானரத் தலைமை; தாழா***
***வந்தனை; நன்று செய்தாய், என்னுடை மைந்த!' என்றான்.***

***உந்தை*** - *உன்னுடைய தந்தை;* ***என் துணைவன் அன்றே?*** - *எனக்கு நண்பன் அல்லவா?;* ***ஓங்கு அறச் சான்றும் உண்டு*** - *(இதற்குச் சிறந்த) தரும சாட்சியும் உண்டு;* ***நீ அவன் தூதன் ஆதல்*** - *(இத்தகைய என் நண்பனின் மகனாகிய) நீ அந்த*

*இராமனுக்குத் தூதனாகி வருதல் (வந்துள்ள);* ***இதன்மேல் நிந்தனை உண்டோ?*** *- இச்செயலைவிட  பழிதரும் செயல் வேறு ஏதும் உண்டோ? (இல்லை);* ***என்னுடை மைந்த!*** *-என் அருமை மைந்தனே!* ***நினக்கு*** *-உனக்கு;* ***யானே*** *- நானே;* ***வானரத்தலைமை தந்தனென்*** *- வானரங்களின் தலைமைப் பதவியைத் (இப்போதே)  தருகின்றேன்;* ***தாழா வந்தனை*** *- தாமதமின்றி வந்து சேர்ந்தாய்;* ***நன்று செய்தாய் என்றான்*** *- நல்லது செய்தாய்! என்றான்.*

*"என்று இலங்கேசன் இயம்பிட வாலி எழுந்த பேர் உவகையால் இறுகத் தன்திரள் தோளால்  தழுவி...ஆ இன்று நாள் தொடங்கி என்  பிராதா  நீ  என்று இலங்கேசனை விடுத்தான்" என உத்தர காண்ட வாலி வரலாற்றுப் படலத்துள் வருவது கொண்டு, வாலிக்கும் இராவணனுக்கும்  உள்ள  தொடர்பு புலப்படும்;  வாலியைத் தன் உடன்பிறந்தான்  ஆக்கிக்கொள்ளும் ஒப்பந்தம் பற்றி, அங்கதனை "மைந்த" என்றான் இராவணன்.  இதனால் இராவணனின் பிரித்தாளும் சூழ்ச்சித் திறன்  தெளிவாம். "பிரித்தலும் பேணிக் கொளலும்" (குறள். 633) அரசியல்  உத்திகளுள்  சிலவாம். "உனக்கு யானே வானரத் தலைமை  தந்தனன்"  என்பதனால்,  உலகம் முழுவதும் தன் விருப்பத்தின்  கீழ்  உள்ளது எனும் 'இராவணாகாரம்  தெளிவாம்" "உனக்குரிய அரசை  இராமன் உன் சிறிய தந்தைக்குப் பிடுங்கித் தந்துள்ள அரசினைப் பிடுங்கி நான் உனக்குத்  தருகிறேன்" என்று அங்கதன் மனத்தைப் பேதலிக்க  முயல்கிற  இராவணன் திறம் காணலாம்.*

***6999.  ' "தாதையைக் கொன்றான் பின்னே தலை சுமந்து,***
***இரு கை நாற்றி,***
***பேதையன் என்ன வாழ்ந்தாய்" என்பது ஓர் பிழையும்***
***தீர்ந்தாய்;***
***சீதையைப் பெற்றேன்; உன்னைச் சிறுவனுமாகப்***
***பெற்றேன்;***
***ஏது எனக்கு அரியது?' என்றான்--இறுதியின்***
***எல்லை கண்டான்.***

***இறுதியின்  எல்லை கண்டான்*** *-வாழ்வின் இறுதி எல்லையைக் கண்டு கொண்டிருப்பவனாகிய  இராவணன், (அங்கதனைப் பார்த்து);* ***தாதையைக் கொன்றான்  பின்னே*** *- உன் தந்தை வாலியைக் கொன்ற இராமன் பின்னால்;* ***இருகை தலைசுமந்து நாற்றி*** *- இரு கரங்களையும் தலைமேல் குவித்துக்கொண்டு  (தலை) கவிழ்ந்து;* ***பேதையன் என்ன*** *- (மானமற்ற)  அறிவிலி  என்று (கண்டோர் நகைக்குமாறு);* ***வாழ்ந்தாய் என்பதோர்  பிழையும் தீர்ந்தாய்*** *- வாழ்கின்றாய் என்கின்ற உன் பழி  (என்னிடம்  வந்ததால்)  தீரப் பெறுவாய்;* ***சீதையைப்  பெற்றேன்*** *-  (நீ என்னை அடைந்தால்) சீதையை நான்  அடைந்துவிட்டவனும்  ஆவேன்;* ***உன்னைச் சிறுவனும் ஆகப்  பெற்றேன்*** *- உன்னை என் புதல்வனாகவும் பெற்றுக் கொண்டவன் ஆவேன்;* ***எது எனக்கு அரியது?*** *-எனக்கு இனி அரிய செயல்கள் என்று (உலகில் சில) உண்டோ? என்றான்.*

***7000. 'அந் நரர் இன்று, நாளை, அழிவதற்கு ஐயம் இல்லை;***
***உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி, ஊழி காலம்;***
***பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றி செய்ய,***
***மன்னவன் ஆக, யானே சூட்டுவென், மகுடம்' என்றான்.***

***அந்நரர்*** *- "அந்த மனிதர்கள்"* ***இன்று நாளை*** *- இன்றோ நாளையோ;* ***அழிவதற்கு ஐயம் இல்லை*** *- இறந்தொழிந்து போவதற்குச் (சிறிதும்) ஐயமே இல்லை;* ***உன் அரசு*** *- (பிறனுக்குத் தரப்பட்டுள்ள) உன்னுடைய அரசப் பொறுப்பினை;* ***உனக்குத் தந்தேன்*** *-(நான்) உனக்கு (இன்று) தந்து விட்டேன்;* ***ஊழிக்காலம் ஆளுதி*** *- யுக முடிவுக்காலம் வரையிலும் அதனை ஆளுவாயாக;* ***அரி சுமந்த பொன்பீடத்து*** *- சிங்கங்கள் சுமக்கும் பொன் ஆசனத்து;* ***தேவர்கள் போற்றி செய்ய*** *- தேவர்கள் போற்றிப் புகழ்ந்து வணங்குமாறு;* ***மன்னவன் ஆதி*** *- நீ வானர அரசன் ஆவாயாக;* ***யானே மகுடம் சூட்டுவென்*** *-நானே (என் கரங்களால்) உனக்கு மணிமுடி சூட்டி வைப்பேன் என்றான்.*

*இப்பாடலில் அங்கதனுக்கு ஆசையூட்டும் இராவணனின் திறம் காண்க. யானே- ஏகாரம் பிரிநிலை. தந்தேன்-துணிவு பற்றி வந்த காலவழுவமைதி.*

***7001. அங்கதன் அதனைக் கேளா, அங்கையோடு அங்கை தாக்கி,***
***துங்க வன் தோளும் மார்பும் இலங்கையும் துளங்க, நக்கான்;***
***' "இங்கு நின்றார்கட்கு எல்லாம் இறுதியே" என்பது உன்னி,***
***உங்கள்பால்நின்றும் எம்பால் போந்தனன், உம்பி' என்றான்.***

***அங்கதன் அதனைக்கேளா*** *- அங்கதன் இராவணனின் அந்த வார்த்தைகளைக் கேட்டு;* ***அங்கையொடு அங்கைதாக்கி*** *-அழகிய தன் கையோடு கையை அடித்து;* ***துங்கவன் தோளும் மார்பும்*** *- தன் தூய தோள்களும் மார்பும்;* ***இலங்கையும் துளங்க நக்கான்*** *- இலங்கை மாநகரும் குலுங்குமாறு (பேரொலியிட்டுச்) சிரித்து;* ***இங்கு நின்றார்கட்கு எல்லாம்*** *- இந்த இலங்கை நகரில் வாழும் அனைவர்க்கும்;* ***இறுதியே என்பது உன்னி*** *- இறுதி அழிவு உறுதி என்பதை நினைத்துத்தானே;* ***உங்கள் பால்***

***நின்றும்*** *- உங்களிடத்திலிருந்து விலகி;* ***உம்பி*** *- உன் தம்பி வீடணன்;* ***எம்பால் போந்தனன்*** *- எங்கள் பக்கம் வந்தடைந்தான் என்றான்.*

*அங்கையொடு அங்கை தாக்கல்-எள்ளலின் வெளிப்பாடு. தோளும் மார்பும் குலுங்கச் சிரித்தான் என்பது இயல்பு. ஆயின் இலங்கையும் குலுங்கச் சிரித்தான் என்பது கம்ப முத்திரை. அங்கதன் சிரித்தான்; இலங்கை நடுங்கியது என்பது குறிப்பு.*

***7002. 'வாய் தரத்தக்க சொல்லி, என்னை உன் வசஞ்செய்வாயேல்,***
***ஆய்தரத் தக்கது அன்றோ, தூது வந்து அரசது ஆள்கை? நீ தரக் கொள்வென் யானே? இதற்கு இனி நிகர் வேறு எண்ணின்,***
***நாய் தரக் கொள்ளும் சீயம், நல் அரசு!' என்று நக்கான்.***

***வாய்தரத்தக்க சொல்லி*** *- வாயில் வந்த சொற்களைக் கூறி;* ***என்னை உன் வசம் செய்வாயேல்*** *- என்னை நீ உன் வயப்படுத்துவதற்கு முனைந்தால்;* ***தூது வந்து அரசு அது ஆள்கை*** *- தூதனாக வந்தவன் அரசினை ஆட்சி செய்வது;* ***ஆய்தரத்தக்கது அன்றோ?*** *- (இதுவரை நடந்துள்ளதா என) ஆராயத்தக்கதோர் அரிய செயல் அன்றோ?* ***நீ தர யானே கொள்வேன்?*** *- (வானர ஆட்சியை) நீ தர நானா ஏற்பேன்?* ***இதற்கு*** *- இச்செயலுக்கு;* ***இனி நிகர் வேறு எண்ணில்*** *- இனி வேறோர் ஒப்புக் கூற எண்ணினால்;* ***நாய் தர*** *- (ஒரு) நாயானது கொடுக்க;* ***நல் அரசு*** *சீயம் கொள்ளும் - ஒரு நல்ல அரசைச் சிங்கம் ஏற்றுக் கொள்வதை ஒக்கும்;* ***என்று நக்கான்*** *- என்று சிரித்தான் (அங்கதன்)*

***7003. 'அடுவெனே' என்னப் பொங்கி ஓங்கிய அரக்கன், 'அந்தோ!***
***தொடுவெனே, குரங்கைச் சீறிச் சுடர்ப் படை?' என்று, தோன்றா***
***நடுவனே செய்யத்தக்க நாள் உலந்தார்க்குத் தூத!***
***படுவதே துணிந்தாய்ஆகில், வந்தது பகர்தி' என்றான்.***

***அடுவனே என்னப் பொங்கி*** *- (இவனைக்) கொல்லவே போகிறேன் என்று வெகுண்டு;* ***ஓங்கிய அரக்கன்*** *- எழுந்த இராவணன்;* ***அந்தோ!*** *- ஐயோ!* ***குரங்கைச் சீறி சுடர்ப்படை தொடுவெனே*** *- (ஓர் அற்பக்) குரங்கின் மேல் கோபித்து வாளைத் தீண்டுவேனோ;* ***என்று*** *- என்றெண்ணி;* ***தோன்றா நடுவனே செய்யத்தக்க*** *- கட்புலனாகாத இயமனே இறுதி செய்யக்கூடிய;* ***நாள் உலந்தோர்க்குத் தூத!*** *-*

*வாழ்நாள் முடிவெய்தியவர்கட்குத் தூதனாக வந்தவனே!* ***படுவதே துணிந்தாய் ஆகில்*** *- (அந்த இராம இலக்குவர்களோடு) நீயும் அழிவது என்று முடிவு செய்து விட்டாயாகில்;* ***வந்தது பகர்தி என்றான்*** *- நீ வந்த காரியத்தை உரைப்பாயாக என்றான் (இராவணன்)*

***7004. 'கூவி இன்று என்னை, நீ போய், "தன் குலம் முழுதும் கொல்லும்***
***பாவியை, அமருக்கு அஞ்சி அரண் புக்குப் பதுங்கினானை,***
***தேவியை விடுக! அன்றேல், செருக் களத்து எதிர்ந்து, தன்கண்***
***ஆவியை விடுக!" என்றான், அருள் இனம் விடுகிலாதான்.***

***அருள் இ(ன்)னம் விடுகிலாதான்*** *- (இராவணனை நோக்கி அங்கதன்) இன்னும் உன்னிடம் கருணை நீங்காத இராமபிரான்;* ***இன்று என்னைக் கூவி*** *- இன்று என்னை அழைத்து;* ***நீ போய்*** *- நீ சென்று;* ***தன் குலம் முழுதும் கொல்லும்*** *- தனது (அரக்க) குலம் முழுவதையும் அழிக்கவுள்ள;* ***பாவியை*** *- பாவப்பட்டவனும்;* ***அமருக்கு அஞ்சி*** *- போரிடுதற்குப் பயந்து;* ***அரண்புக்குப் பதுங்கினானை*** *- கோட்டைக்குள் புகுந்து பதுங்கி ஒளிந்திருப்பவனுமாகிய இராவணனைப் (பார்த்து);* ***தேவியை விடுக*** *- சீதையாம் தேவியை (உடனே) விட்டு விடுக;* ***அன்றேல்*** *- அவ்வாறு விட விரும்பவில்லையாயின்;* ***செருக்களத்து எதிர்ந்து*** *- போர்க்களத்தில் எதிர்நின்று;* ***தன் கண்*** *- தன் முன்பாக;* ***ஆவியை விடுக*** *- உயிரை விட்டுவிடுக (என்று கூறுக);* ***என்றான்*** *- என்று (என்னிடம்) கூறினான். (என்றான்)*

*தன் குலத்தை வாழ்விக்காதது பாவச் செயலுள் தலையாய செயலாதலின், இராவணன், "தன் குலம் முழுதும் கொல்லும் பாவி" எனப்பட்டான். வீடணன் இராமன் குலமாகிய இட்சுவாகு குலத்தவன் ஆவதை, "நீ விபூஷணனை, இராவணன், "குலபாம்ஸநம்" (குலத்திற்கு அழுக்கு) என்றான். பெருமாள் இக்ஷுவாகு வம்சியாக நினைத்து வார்த்தையருளிச் செய்தார்" (ஸ்ரீ வசந. சூரணை.231) என்பார் பிள்ளை லோகாசாரியார். "பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின் அவன், பிழைத்த போதே" (கம்ப. 9105) என வீடணன் இந்திரசித்தனிடம் கூறுவதும் காண்க.*

***7005. ' "பருந்து உணப் பாட்டி யாக்கை படுத்த நாள், படைஞரோடும்***
***மருந்தினும் இனிய மாமன் மடிந்த நாள், வனத்துள் வைகி***
***இருந்துழி வந்த நங்கை இருஞ்செவி முலையும் மூக்கும்***
***அரிந்துழி, வந்திலாதான் இனிச் செய்யும் ஆண்மை***

***உண்டோ?***

***பாட்டியாக்கை*** - *பாட்டியாகிய தாடகையின் உடலை;* ***பருந்து உ(ண்)ணப் படுத்தநாள்*** - *பருந்துகள் தின்னும்படி கொன்ற நாளிலும்;* ***மருந்தினும் இனிய மாமன் மடிந்த நாள்*** - *அமிழ்தினும் இனியவனான தன் மாமன் சுபாகு (வீரரோடும்) இறந்து பட்ட நாளிலும்;* ***வனத்துள் வைகி இருந்துழி*** - *காட்டில் (பஞ்ச வடியில்) வாழ்ந்த காலத்தில்;* ***வந்த நங்கை*** - *அங்கு வந்த சூர்ப்பணகையின்;* ***இருஞ்செவி முலையும் மூக்கும்*** - *பெரிய காதுகளையும் மார்புகளையும் மூக்கையும்;* ***அரிந்துழி*** - *(இலக்குவன்) அரிந்து போட்ட நாளிலும்;* ***வந்திலாதான்*** - *போருக்கு வாராதவன்;* ***இனிச் செய்யும் ஆண்மை உண்டோ?*** - *இப்போது போரிட வந்து வீரம் காட்டுவது உண்டோ? (இல்லை)*

*பாட்டி-தாடகை. மாமன்-சுபாகு. தாடகையின் மகன், மாரீசனின் சகோதரன். துயர்க்காலத்தே மருந்து போன்று வந்து தாயுடன் பிறந்த மாமன் உதவுவது இந்நாட்டுப் பண்பாதலால், "மருந்தினும் இனிய மாமன்" என்றான்.*

***7006. ' "கிளையொடும் படைஞரோடும், கேடு இலா உயிர்கட்கு எல்லாம்***
***களை என, தம்பிமாரை வேரொடும் களையக் கண்டும்,***
***இளையவன் பிரிய மாயம் இயற்றி, ஆயிழையை வெளவும்***
***வளை எயிற்று அரக்கன், வெம் போர்க்கு, இனி எதிர் வருவது உண்டோ?***

***கேடு இலா உயிர்கட்கு எல்லாம்*** - *அழிவற்ற உலகத்து உயிர்களாகியவெல்லாம் (அழிப்பதற்கு);* ***களை என*** - *இவர்கள் களையாக உள்ளனர் என்று;* ***தம்பிமாரைக் கிளையொடும் படைஞரோடும்*** - *(கரன் முதலிய) தம்பியரைச் சுற்றத்தாரோடும்; சேனை வீரர்களோடும்;* ***வேரொடும் களையக் கண்டும்*** - *அடி முதலோடு அழித்துவிட்டதை அறிந்திருந்தும்;* ***இளையவன் பிரிய*** - *(நேரே வந்து போரிடும் துணிச்சலின்றி) என்னைவிட்டு இளையவன் பிரியுமாறு;* ***மாயம் இயற்றி*** - *வஞ்சனைச் செயல் புரிந்து, (அவன் அகன்ற சமயத்தில்);* ***ஆயிழையை வெளவும்*** - *சீதா தேவியைக் கவர்ந்து வந்த,* ***வளை எயிற்று அரக்கன்*** - *வளைந்த கோரப் பற்களையுடைய அந்த இராவணன்,* ***வெம்போர்க்கு*** - *கொடிய யுத்தத்திற்கு,* ***இனி எதிர் வருவது உண்டோ?*** - *இனி மேல் எதிர்த்துச் சண்டையிட வருவது ஏது?*

***7007. 'ஏந்திழைதன்னைக் கண்ணுற்று, எதிர்ந்தவர்தம்மை எற்றி,***

***சாந்து எனப் புதல்வன்தன்னைத் தரையிடைத்***
***தேய்த்து, தன் ஊர்***
***காந்து எரி மடுத்து, தானும் காணவே, கடலைத்***
***தாவிப்***
***போந்த பின், வந்திலாதான் இனிப் பொரும் போரும்***
***உண்டோ?***

***ஏந்திழை தன்னைக் கண்ணுற்று*** - *(அனுமன்) சீதா தேவியைச் சந்தித்து;* ***எதிர்ந்தவர்தம்மை எற்றி*** - *அப்போது தன்னை எதிர்த்த (அத்தனை) வீரர்களையும் தாக்கி ஒழித்து;* ***புதல்வன் தன்னை*** - *அட்சய குமாரனை;* ***சாந்து என*** *-(குழைத்த) சாந்து போல் ஆகுமாறு;* ***தரையிடைத் தேய்த்து*** - *மண்ணில் இட்டுத் தேய்த்து;* ***தானும் காணவே*** - *தன் கண் முன்பே;* ***தன் ஊர்*** *-தனது இலங்கை மாநகரை;* ***காந்து எரி மடுத்து*** - *எரியும் நெருப்பிற்கு இரையாக்கி;* ***கடலைத் தாவிப் போந்த பின்*** *-கடலைத் தாண்டி வந்து அடைந்த பின்னரும்;* ***வந்திலாதான்*** - *(போருக்கு) வந்தடையாத இராவணன்;* ***இனிப் பொரும் போரும் உண்டோ?*** - *இனி மேல் செய்யப் போகின்ற போரும் உண்டோ?*

*சந்தனக் குழம்பு போல் தரையில் தேய்க்கப்பட்டவன் இராவணன் மகனான, அக்ககுமாரன். (5705)*

***7008. ' "உடைக் குலத்து ஒற்றர்தம்பால் உயிர் கொடுத்து***
***உள்ளக் கள்ளம்***
***துடைத்துழி, வருணன் வந்து தொழுதுழி, தொழாத***
***கொற்றக் குடைத் தொழில் உம்பி கொள்ளக் கொடுத்துழி,***
***வேலை கோலி***
***அடைத்துழி, வந்திலாதான் இனி வர ஐயம்***
***உண்டோ?***

***தொழாத கொற்றக் குடைத் தொழில்*** - *(தன்னைப் பிறர் தொழுவது அல்லாமல் தான் பிறரைத்) தொழ வேண்டாத இலங்கை ஆட்சியை;* ***உம்பி கொள்ளக் கொடுத்துழி*** *- உன் தம்பி வீடணன் பெறக் கொடுத்த போதும்;* ***வருணன் வந்து தொழுதுழி*** *- விட்ட கணைக்கு ஆற்றாது வருணன் வந்து சரணம் அடைந்த போதும்;* ***வேலை கோலி அடைத்துழி*** *- கடலை வளைத்துச் சேது சமைத்த போதும்;* ***குலத்து உடை ஒற்றர் தம் பால்*** *- அரக்கர் குலத்தில் தோன்றிய ஒற்றர்களுக்கு;* ***உயிர் கொடுத்து*** *-உயிர்ப் பிச்சையளித்து;* ***உள்ளக் கள்ளம் துடைத்துழி*** *- அவர்களின் நெஞ்சத்திலிருந்த வஞ்சனையை அகற்றி அனுப்பிய போதும்;* ***வந்திலாதான்*** *- வாராதிருந்தவன்;* ***இனி வர*** *-இனி மேல் வருவான் என்று நினைக்கும்;* ***ஐயம் உண்டோ?*** *- ஐயப்பாட்டிற்கு இடம் உண்டோ? (இல்லை)*

*ஒற்றர்களுக்கு உயிர்ப் பிச்சையளித்ததும், அவர்கள் தம் உள்ளத்து வஞ்சம் மாறி, இராவணனிடத்தே இராமன் புகழ் உரைத்ததும் ஒற்றுக் கேள்விப்படலத்துள் காண்க.*

***7009. ' "மறிப்புண்ட தேவர் காண, மணி வரைத் தோளின் வைகும்***
***நெறிப் புண்டரீகம் அன்ன முகத்தியர்முன்னே, நென்னல்,***
***பொறிப் புண்டரீகம் போலும் ஒருவனால், புனைந்த மௌலி***
***பறிப்புண்டும், வந்திலாதான் இனிப் பொரும் பான்மை உண்டோ?"***

***மறிப்புண்ட தேவர் காண*** - *(தன்னால் சிறையில்) அடைபட்ட தேவர்கள் எல்லாம் கண்டு கொண்டிருக்க;* ***மணி வரைத்தோளின் வைகும்*** - *அழகிய மலை போன்ற தோள்களில் தங்கும்;* ***நெறிப்புண்டரீகம் அன்ன முகத்தியர் முன்னே*** - *(மலரும்) ஒழுங்கினையுடைய தாமரை மலர் போன்ற முகங்களையுடைய தேவ மங்கையர்க்கு முன்பாக;* ***நென்னல்*** - *நேற்று;* ***பொறிப்புண்டரீகம் போலும் ஒருவனால்*** - *வரிகளையுடைய புலியினைப் போன்ற சுக்கிரீவனால்;* ***புனைந்த மௌலி*** - *தான் அணிந்திருந்த மகுட மணிகள்;* ***பறிப்புண்டும்*** - *பறிக்கப்பட்ட போதும்;* ***வந்திலாதான்*** - *போர் புரிய வாராத இராவணன்;* ***இனிப் பொரும்பான்மை உண்டோ?*** - *(இனி வெளிப்போந்து) போர்புரியும் தன்மை உள்ளவனோ? (இல்லை)*

***7010. ' "என்று இவை இயம்பி வா" என்று ஏவினன் என்னை; எண்ணி***
***ஒன்று உனக்கு உறுவது உன்னித் துணிந்து உரை; உறுதி பார்க்கின்,***
***துன்று இருங் குழலை விட்டு, தொழுது வாழ்; சுற்றத்தோடும்***
***பொன்றுதிஆயின், என் பின், வாயிலில் புறப்படு' என்றான்.***

***என்று இவை இயம்பி வா என்று*** - *என்று மேலே கூறிய இந்தச் சொற்களை(உன்னிடம்) கூறி(உன் உளக்கருத்தினை அறிந்து) வா என்று;* ***என்னை ஏவினன்*** - *எனக்கு ஆணையிட்டான். (என் தலைவன் இராமன்);* ***எண்ணி*** - *மேலே கூறியவற்றை எல்லாம் சிந்தித்து;* ***உனக்கு உறுவது ஒன்று உன்னி*** - *உனக்குத் தக்கது ஒன்றைக் கருதி;* ***துணிந்து உரை*** - *துணிந்து (எனக்கு) உரைப்பாயாக;* ***உறுதி***

***பார்க்கின்*** - *உனக்கு உறுதி பயப்பது எனச் சிந்திப்பாயானால்;* ***துன்று இருங்குழலை விட்டு*** - *நெருங்கியுயர்ந்த கூந்தலைக் கொண்ட சீதா தேவியினைச் சிறையிலிருந்தும் விடுவித்து;* ***தொழுது வாழ்*** - *இராமபிரானை வணங்கி (நீ நீடு) வாழ்வாயாக;* ***சுற்றத்தோடும் பொன்றுதியாகில்*** - *உன் உறவினர் அனைவரோடும் (சேர்ந்து) மடிய விரும்பினாய் ஆகில்;* ***என்பின்*** - *என்னைப் பின் தொடர்ந்து;* ***வாயிலில் புறப்படு*** - *இலங்கையரண்மனை வாசலைவிட்டுப் (போர் புரியப்)புறப்படுவாயாக; என்றான்.*

***7011. 'நீரிலே பட்ட, சூழ்ந்த நெருப்பிலே பட்ட, நீண்ட***
***பாரிலே பட்ட, வானப் பரப்பிலே பட்ட, எல்லாம்***
***போரிலே பட்டு வீழப் பொருத நீ, "ஒளித்துப் புக்கு, உன்***
***ஊரிலே பட்டாய்" என்றால், பழி' என, உளையச் சொன்னான்.***

***நீரிலே பட்ட*** - *தண்ணீரில் தோன்றியவர்களும்;* ***சூழ்ந்த நெருப்பிலே பட்ட*** - *வளைந்து எரிகின்ற நெருப்பிலே தோன்றிய உயிர்களும்;* ***நீண்ட பாரிலே பட்ட*** - *பரந்த பூமியில் தோன்றிய உயிர்களும்;* ***வானப் பரப்பிலே பட்ட*** - *ஆகாய வெளியிலே தோன்றிய உயிர்களும்;* ***எல்லாம்*** - *ஆகிய எல்லா உயிர்களும்;* ***போரிலே பட்டு வீழ*** - *போர்க்களத்திலே மடிந்து வீழுமாறு;* ***பொருத நீ*** - *போரிட்ட நீ; (இப்பொழுது)* ***உன் ஊரிலே ஒளித்துப் புக்குப் பட்டாய் என்றால்*** - *உன்னுடைய ஊராகிய இலங்கைக்குள் புகுந்து கொண்டு ஒளிந்திருக்கையில் மாண்டாய் என்று சொன்னால்;* ***பழி*** - *உனக்கு அது (பெரும்) பழியாய் முடியும்;* ***என*** - *என்று;* ***உளையச் சொன்னான்*** - *இராவணன் மனம் புண்ணாகுமாறு மொழிந்தான் (அங்கதன்)*

*இராவணன் அங்கதனை எற்றப் பணித்தல்*

**கலிவிருத்தம்**

***7012. சொற்ற வார்த்தையைக் கேட்டலும், தொல் உயிர்***
***முற்றும் உண்பது போலும் முனிவினான்,***
***'பற்றுமின், கடிதின்; நெடும் பார்மிசை***
***எற்றுமின்' என, நால்வரை ஏவினான்.***

***சொற்ற வார்த்தையைக் கேட்டலும்*** - *(இவ்வாறு அங்கதன்) கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடனே (இராவணன்);* ***தொல் உயிர் முற்றும்*** - *பழமையான உயிர்களையெல்லாம்;* ***உண்பது போலும் முனிவினான்*** - *விழுங்கி விடுவான் போன்ற சினமுடையவனாய்;* ***கடிதின் பற்றுமின்*** - *(இந்தக் குரங்கினை) விரைந்து*

*பிடியுங்கள்;* ***நெடும்பார் மிசை எற்றுமின்*** *- நீண்டு பரந்த பூமியின் மீது மோதுங்கள்;* ***என நால்வரை ஏவினான்*** *- என்று நான்கு பேர்க்கு ஆணையிட்டான்.*

*அங்கதன் நால்வர் உயிருண்டு கூறுதல்*

***7013. ஏவினார் பிடித்தாரை எடுத்து எழத்***
***தாவினான், அவர்தம் தலை போய் அறக்***
***கூவினான், அவன், கோபுர வாயிலில்***
***தூவினான், துகைத்தான், இவை சொல்லினான்:***

***ஏவினார் பிடித்தாரை*** *- இவ்வாறு இராவணனால் ஏவப்பட்டவர்களாய்த் (தன்னைப்) பிடிக்க வந்த நால்வரையும்;* ***எழ எடுத்து தாவினான்*** *-அந்தரத்தில் தொங்குமாறு அவர்களைப் பற்றிக்கொண்டு உயரப் பாய்ந்து;* ***அவர் தம் தலை போய் அற*** *- அவர்கள் தலைகள் அற்று ஒழியச் செய்து;* ***கூவினான்*** *- முழக்கமிட்டு;* ***அவன் கோபுர வாசலில் தூவினான்*** *- (அவர்களுடல்) இராவணனுடைய அரண்மனைக் கோபுர வாசலில் சிதறிவிட்டு;* ***துகைத்தான்*** *- மிதித்தவனாய்;* ***இவை சொல்லினான்*** *- பின்வரும் சொற்களை மொழிந்தான்.*

*இப்பாடலில் வெகுளியின் மெய்ப்பாடுகள் சொல் வடிவம் பெற்றுள்ளன. ஏவினார்-ஏவப்பட்டவர். செயப்படுபொருள் வினை. செய்வினை போல வந்தது. செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற் படக்கிளத்தலும் வழக்கு இயல் மரபே. (தொல். சொல்: 6. 49).*

***7014. 'ஏமம் சார, எளியவர் யாவரும்,***
***தூமம் கால்வன, வீரன் சுடு சரம்,***
***வேம் மின் போல்வன, வீழ்வதன் முன்னமே,***
***போமின் போமின், புறத்து' என்று போயினான்.***

***தூமம் கால்வன*** *- (பின்பு அங்கிருந்த வீரர்களை நோக்கி) புகை கக்குகின்றனவும்;* ***வேம் மின் போல்வன*** *- கொதிக்கின்ற மின்னல்களைப் போல்வனவும் ஆகிய;* ***வீரன் சுடுசரம்*** *- இராமபிரானுடைய சுட்டெரிக்கின்ற அம்புகள்;* ***வீழ்வதன் முன்னமே*** *-உங்கள் மீது வந்து வீழ்வதன் முன்னமே;* ***எளியவர் யாவரும்*** *- வலிமையற்ற நீங்கள் அனைவரும்;* ***ஏமம் சார*** *- பாதுகாப்பான இடங்களையடையும்படி, (இப்போதே);* ***புறத்துப் போமின் போமின்*** *- அப்பால் செல்லுங்கள்; செல்லுங்கள்;* ***என்று போயினான்*** *- என்று சொல்லியவாறே (இராமபிரான் இருக்குமிடம் சென்றான் அங்கதன்)*

*இராமனிடம் அங்கதன் செய்தியுரைத்தல்*

***7015. அந்தரத்திடை ஆர்த்து எழுந்தான், அவர்***

***சிந்து ரத்தம் துதைந்து எழும் செச்சையான்,***
***இந்து விண்நின்று இழிந்துளதாம் என,***
***வந்து, வீரன் அடியில் வணங்கினான்.***

***சிந்து ரத்தம்*** *- சிந்திய உதிரத்தினால்;* ***துதைந்து எழும் செச்சையான்*** *- நெருங்கித் தோன்றிய செஞ்சந்தனம் போன்ற பூச்சுக்களையுடைய அங்கதன்;* ***அந்தரத்திடை*** *- ஆகாயத்தினில்;* ***ஆர்த்தெழுந்தான்*** *- ஆர்ப்பரித்தவாறு எழுந்தானாகி;* ***விண்ணின்று*** *- ஆகாயத்திலிருந்து;* ***இந்து இழிந்துளது ஆம் என*** *- சந்திரன் (பூமியில்) இறங்கியது என்று(கண்டோர் கருதுமாறு);* ***வந்து வீரன் அடியில் வணங்கினான்*** *- வந்து இராமபிரானின் திருவடிகளை வணங்கி நின்றான்.*

***7016. உற்ற போது, 'அவன் உள்ளக் கருத்து எலாம்,'***
***கொற்ற வீரன், 'உணர்த்து' என்று கூறலும்,***
***'முற்ற ஓதி என்? மூர்க்கன், முடித் தலை***
***அற்றபோது அன்றி, ஆசை அறான்' என்றான்.***

***உற்றபோது*** *- (அங்கதன்) வந்தடைந்த பொழுதில்;* ***கொற்ற வீரன்*** *- வெற்றி வீரனாகிய இராமன்;* ***அவன் உள்ளக் கருத்து எலாம்*** *- அந்த இராவணனுடைய மனக்கருத்தையெல்லாம்;* ***உணர்த்து என்று கூறலும்*** *- (எனக்குத்) தெரிவிப்பாயாக என்று கூறியவுடன்;* ***முற்ற ஓதி என்*** *- (அங்கதன்) (அந்த அரக்கன் நிலையை) முழுவதும் விரித்துக் கூறி என்ன பயன்?* ***மூர்க்கன்*** *- அந்தக் கொடியோன்;* ***முடித்தலை அற்ற போது அன்றி*** *- அவனுடைய மகுடம் சூடிய (பத்துத்) தலைகளுள் அறுபட்டு (மண்ணில் வீழ்ந்தாலன்றி);* ***ஆசையறான்*** *- அவன் ஆசை நீங்கான் என்றான்....*

*சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் அமைய உரையாடுந் திறத்துக்கு, இங்கு இராமனும் அங்கதனும் உரையாடியுள்ள திறத்தைச் சான்றாகக் கொள்ளலாம். "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" ஆதலின், கொண்ட ஆசையைக் குலம் அழியினும் விடாத இராவணனை "மூர்க்கன்" என்றார்.*

## முதற் போர் புரி படலம்

இராமபிரானோடு இராவணன் முதன் முதலாக போர் புரிகின்ற செய்தி கூறுதலால், இப்படலம் இப்பெயர் பெற்றது. நான்கு திசைகளிலும் கோட்டையைச் சுற்றி நிறுத்தியுள்ள அரக்கர் படைகளின் மேல் வானரப்படைகள் மோதுவதும், படைத்தலைவர்கள் மோதுவதும் சொல்லப் பெற்றுள்ளன. நால்திசைப் படைகளும் அழிவெய்தியமையை ஒற்றரால் உரைக்கப்பெற்ற இராவணன் பெருஞ்சினம் மூண்டு தானே களம் எய்துகிறான். சுக்கிரீவனும். இலக்குவனும் இராவணனிடம் போரிட்டுச் சோர்கின்றனர். அனுமனும் இராவணனும் மார்பில் குத்துக் குத்திப் போரை முடித்துக் கொள்கின்றனர். வேல் துளைத்துச் சோர்ந்த இலக்குவனை, இலங்கைக்குள் எடுத்துச் செல்ல முயலும். இராவணன் முயற்சி வெற்றி பெறவில்லை. மலையெடுத்த இராவணனால் தூக்க இயலாத இலக்குவனை, குட்டியைத் தூக்கும் தாய் போல், அனுமன் அப்புறம் எடுத்துச் சென்று விடுகின்றான். இறுதியில் இராமனும் இராவணனும் மோதுகின்றனர். போரில் அனைத்தும் இழந்த இராவணனைக் கொல்ல நினையாது, "போர்க்கு இன்று போய் நாளை வா" எனும் அமர வாக்கியத்தை மொழிந்து அருள் புரிகிறான். கோசல நாடுடைய வள்ளல் இராமபிரான். இச் செய்திகள் இப்படலத்துள் உரைக்கப் பெறுகின்றன.

### *இராமன் வானர சேனைக்கு இட்ட கட்டளை*

***7017. ' "பூசலே; பிறிது இல்லை" என, புறத்து<br>ஆசைதோறும் முரசம் அறைந்து, என<br>பாசறைப் படையின்னிடம் பற்றிய<br>வாசல்தோறும் முறையின் வகுத்திரால்.***

*__பூசலே பிறிதில்லை__ - இனிமேல் போரேயன்றிச் சமாதானம் என்பது இல்லை; __என__ - என்று; __புறத்து__ - வெளியில்; __ஆசை தோறும்__ - திசைகள் தோறும்; __முரசம் அறையுமின்__ - முரசறையுங்கள்; __பாசறைப் படையின் இடம்__ - பாசறையில் உள்ள சேனை வீரர்களிடம்; __பற்றிய வாசல் தோறும்__ - தாம்தாம் பொருந்தியுள்ள கோட்டை வாயில்கள் தோறும்; __முறையின் வகுத்திர்__ - முறைப்படி அணிவகுத்து நிற்பீராக (என்று ஆணையிட்டான் இராமபிரான்) பூசலே-ஏகாரம். தேற்றப் பொருளில் வந்தது. பிரிநிலையுமாம்.*

***7018. 'மற்றும் நின்ற மலையும் மரங்களும்<br>பற்றி,--வீரர்!--பரவையின் மும் முறை,<br>சுற்று கைகளினால், கடி மா நகர்<br>சுற்றும் நின்ற அகழியைத் தூர்த்திரால்.***

***மற்றும்*** - மேலும்; ***கற்ற கைகளினால்*** - முன்பே கடலைத் தூர்த்துப் பழகிய கைகளினால்; ***வீரர்*** - வீரர்கள்; ***நின்ற மலையும் மரங்களும்*** - ஆங்காங்கு நின்றுள்ள மலைகளையும் மரங்களையும்; ***பற்றி*** - கரங்களால் பிடித்து; ***பரவையின்*** - (சேது அணையிட்ட போது) கடலில் இட்டதினும்; ***மும்முறை*** - மூன்று மடங்கு மிகுதியாகக் கொணர்ந்து (வீசி); ***கடிமாநகர் சுற்றும் நின்ற*** - காவல் அமைந்த பெரிய இலங்கை நகரைச் சுற்றிச் சூழ்ந்துள்ள; ***அகழியைத் தூர்த்திர்*** - அகழியைத் தூர்த்திடுங்கள் (எனக் கட்டளையிட்டான் இராமன்)

***7019. 'இடுமின் பல் மரம்; எங்கும் இயக்கு அறத்***
***தடுமின்; "போர்க்கு வருக!" எனச் சாற்றுமின்;***
***கடுமின், இப்பொழுதே கதிர் மீச்செலாக்***
***கொடி மதில் குடுமித்தலைக்கொள்க!' என்றான்.***

***(எங்கும்) பன்மரம் இடுமின்*** - (தெருக்கள்) எங்கும் மரங்கள் பலவற்றைப் போடுங்கள்; ***எங்கும் இயக்கறத்தடுமின்*** - (அவ்வாறு இட்டு) அரக்கர்கள் எங்கும் நடமாட இயலாதபடி தடுத்துவிடுங்கள்; ***போர்க்கு வருக எனச் சாற்றுமின்*** - யுத்தத்திற்கு வாருங்கள் எனக் கூவியழையுங்கள்; ***கடுமின்*** - விரைவோடு; ***இப்பொழுதே*** - இப்போதே; ***கதிர் மீச் செலா*** - சூரியனும் (நேராகச்) செல்ல இயலாத; ***கொடுமதில் குடுமித் தலைக்கொள்க*** - வளைந்து செல்லும் மதில்களின் சிகரத்தைக் கைப்பற்றிக் கொள்ளுங்கள்; என்றான்.

*இராமன்-தோன்றா எழுவாய். எங்கும் என்பது இடைநிலைத் தீபமாய் நின்று முன்னும் இணைந்து பொருள் தர நின்றது. மதில் குடுமியைக் கைக்கொள்ளுதல் என்பது அம்மதிலின் உச்சியில் ஏறி நிலைகொள்ளுதல். இதனை, "குடுமி கொண்ட மண்ணு மங்கலம்" (தொல். புறத். 68) எனத் தொல்காப்பியம் புகலும்.*

*வானரப்படை அகழியைத் தூர்த்தல்.*

***7020. தடங் கொள் குன்றும் மரங்களும் தாங்கியே,***
***மடங்கல் அன்ன அவ் வானர மாப் படை,***
***இடங்கர் மா இரிய, புனல் ஏறிட,***
***தொடங்கி, வேலை அகழியைத் தூர்த்ததால்.***

***தடம் கொள் குன்றும் மரங்களும்*** - பெரிய மலைகளையும், மரங்களையும்; ***தாங்கிய*** - ஏந்திச் சென்று; மடங்கல் அன்ன - சிங்கத்தைப் போன்ற; ***அவ்வானரப்படை*** - அந்தப் பெரிய குரங்குச் சேனை; ***இடங்கர் இரியப் புனல் ஏறிட*** - முதலை போன்ற நீர் வாழ் உயிர்கள் நிலை கெட்டோடவும்; அகழி நீர் தளும்பி வழியவும்' ***தொடங்கி*** - பணியினைத் தொடங்கி; ***வேலை அகழியைத் தூர்த்தது*** - கடல் போன்ற அகழியைத் தூர்த்தது.

*அகழியில் கற்களும் மரங்களும் விழுந்தபொழுது, அகழிநீர் வழிவதனை, "புனல் ஏறிட" என்றார்.*

***7021. ஏய வெள்ளம் எழுபதும், எண் கடல்***
***ஆய வெள்ளத்து அகழியைத் தூர்த்தலும்,***
***தூய வெள்ளம் துணை செய்வது ஆம் என***
***வாயிலூடு புக்கு, ஊரை வளைந்ததே.***

***எண்கடல் ஏய வெள்ளம் எழுபதும்*** *- எட்டாம்கடல் போன்று விரிந்துள்ள எழுபது வெள்ளம் குரங்குப் படையும்;* ***வெள்ளத்து ஆய அகழியை*** *- நீர்ப் பெருக்கைக் கொண்ட அகழியை;* ***தூர்த்தலும்*** *- (மலைகளாலும் மரங்களாலும்) நிரப்பும்போது;* ***தூய வெள்ளம்*** *- தூய்மையான வெண்ணிறம் கொண்ட அந்த வெள்ள நீரானது;* ***துணை செய்வது ஆம் என*** *- (இராமபிரானுக்கு) உதவி புரிவதைப் போன்று;* ***வாயில் ஊடு புக்கு ஊரை வளைத்தது*** *- இலங்கை மாநகரின் வாயில்கள் வழியாக உள்ளே புகுந்து ஊரை வளைத்துக் கொண்டது.*

***7022. விளையும் வென்றி இராவணன் மெய்ப் புகழ்***
***முளையினோடும் களைந்து முடிப்பபோல்,***
***தளை அவிழ்ந்த கொழுந் தடந் தாமரை***

***வளையம், வன் கையில், வாங்கின--வானரம்.*** ***விளையும் வென்றி*** *- இதுகாறும் வெற்றியினையே விளைவித்துக் கொண்டிருந்த;* ***இராவணன் மெய்ப்புகழ்*** *- இராவணனது உண்மையான புகழை;* ***முளையினோடும் களைந்து முடிப்பபோல்*** *- அடியோடு பறித்து முடிப்பவை போலத்;* ***தளை அவிழ்ந்த*** *- கட்டு அவிழ்ந்த;* ***கொழுந்தடந்தாமரை*** *- வளமான தாமரைக் கொடிகளின்;* ***வளையம்*** *- தண்டின் அடிப்பகுதிகளை;* ***வானரம் வன்கையில் வாங்கின*** *- குரங்குகள் தம் வலிய கைகளால் பற்றி எடுத்தன.*

*இலங்கை மூதூரின் அகழியில் குரங்குகள் தாமரைக் கிழங்குகளை தோண்டியுண்ட செயல், இராவணன் புகழின் வீழ்ச்சிக்குத் தொடக்கமாதல் அறிக. தற்குறிப்பேற்ற அணி. தாமரை வளையம்- தாமரைக் கிழங்கு. வட்டமாக இருப்பதுபற்றி கிழங்கு வளையம் எனப்பட்டது. இறுதியடி-முற்று மோனை.*

***7023. இகழும் தன்மையன் ஆய இராவணன்***
***புகழும் மேன்மையும் போயினவாம் என,***
***நிகழும் கள் நெடு நீலம் உகுத்தலால்,***
***அகழிதானும் அழுவது போன்றதே.***

***நிகழும் கள் நெடுநீலம் உகுத்தலால்*** - *பெருகுகின்ற தேனை நீண்ட கருவிளை மலர்கள் சிந்துவதால்;* ***இகழும் தன்மையன் ஆய இராவணன்*** - *பழிக்கத்தக்க பண்புடையவனாகிய இராவணனுடைய;* ***புகழும்*** - *(வலிமை மட்டுமின்றி) புகழும்;* ***இன்றோடு போயினது ஆம் என*** - *இன்றோடு போயிற்று என்று;* ***அகழி தானும்*** - *இலங்கையின் அகழியும்;* ***அழுவது போன்றது*** - *அழுவதைப் போல இருந்தது.*

*அகழியில் உள்ள நீலமலர்கள் அகழியின் கண்கள் போன்றன. அவற்றில் கள் நீர் (தேன்) வடிவது, இராவணன் வாழ்வு முடியப் போவதையறிந்து அவை கண்ணீர் விடுவது போன்றிருந்தது என்றார். தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. "தையலும் கணவனும் தனித்து உறுதுயரம், ஐயமின்றி அறிந்தனபோல, கருமிளையடுத்த அகழியில், கருநெடுங்குவளையும் ஆம்பலும் கமலமும், கண்ணீர் கொண்டு கால் உற நடுங்க" (சிலம்பு. 13. 181-88) எனும் அருமைக்கற்பனையை அடியொற்றினார்.*

***7024. தண்டு இருந்த பைந் தாமரை தாள் அற,***
***பண் திரிந்து சிதைய, படர் சிறை வண்டு இரிந்தன; வாய்தொறும் முட்டையைக்***
***கொண்டு இரிந்தன, அன்னக் குழாம் எலாம்.***

***தண்டு இருந்த பைந்தாமரை*** - *(அகழி தூர்க்கப் படுகையில்) தண்டுகளோடு இருந்த பசிய தாமரைக் கொடிகள்;* ***தாள் அற*** - *வேர் பறிக்கப்பட்டதனால்;* ***படர்சிறை வண்டு*** - *(அங்கிருந்த) விரிந்த சிறகுகளையுடைய வண்டுகள்;* ***பண்திரிந்து சிதைய இரிந்தன*** - *தம்ரீங்கார இன்னிசை நிலைதிரியுமாறு ஓடின;* ***அன்னக் குழாம் எலாம்*** - *அன்னப் பறவைக் கூட்டங்கள் எல்லாம்;* ***வாய்தொறும் முட்டையைக் கொண்டு இரிந்தன*** - *(தம்) வாய்கள் தோறும் முட்டைகளைக் கவ்விக் கொண்டு நிலைகெட்டு ஓடின.*

***7025. ஈளி தாரம் இயம்பிய வண்டுகள்***
***பாளை தாது உகு நீர் நெடும் பண்ணைய;***
***தாள தாமரை அன்னங்கள் தாவிட,***
***வாளை தாவின, வானரம் தாவவே.***

***ஈளிதாரம் இயம்பிய வண்டுகள்*** - *இளி, தாரம் எனும் பண் இசைகளை இசைக்கும் வண்டுகளுடன்;* ***பாலை தாது உகு நெடுநீர்ப் பண்ணைய*** - *(தென்னை, கழுகு முதலியவற்றின்) பாளையினுடைய மகரந்தங்கள் சிந்துகின்ற நீரினையுடைய பெரிய வயல்களில் உள்ள;* ***தாள தாமரை அன்னங்கள்*** - *தாள் உள்ள தாமரை மலர்களில் வாழ்கின்ற அன்னங்கள்;* ***தாவிட*** - *தாண்டிச் செல்லுமாறு;* ***வானரம் தாவ வாளை தாவின*** - *குரங்குகள் தாவுதலால் வாளை மீன்கள் தாவிக் குதித்தன.*

*இளி-ஈளி என நீண்டது-எதுகை நிறைக்க. இளி-மந்த ஓசையுடையது. தாரம்-எடுத்தல் ஓசை. "மந்தரம் மத்திமம். தாரம் இவை மூன்றில்" (கல்லாடம். 21) எனுமிடத்து இவை இப்பொருளில் ஆளப்பட்டுள்ளமை காண்க. பூட்டுவிற் பொருள் கோள்.*

***7026. தூறு மா மரமும், மலையும் தொடர்***
***நீறு, நீர்மிசைச் சென்று நெருக்கலான்,***
***ஏறு பேர் அகழ்நின்றும் எனைப் பல***
***ஆறு சென்றன, ஆர்கலிமீதுஅரோ.***

***தூறு மாமரம்*** *- தூறுகள் போல் அடர்ந்த பெரிய மரங்களும்;* ***குன்றினோடும் தொடர் நீறும்*** *- மலைகளுடன் தொடர்ந்து எடுத்த புழுதியும்;* ***நீர் மிசைச் சென்று நெருக்கலான்*** *- (அகழி) நீர் மேலே சென்று நெருக்குவதால்;* ***ஏறு பேர் அகழ் நின்று*** *- நீர், மேலே பொங்கிய பெரிய அகழியிலிருந்து;* ***எனைப்பல*** *- எத்தனையோ பல;* ***ஆறு*** *- ஆறுகள்;* ***ஆர்கலி மீது சென்றன*** *- கடலை நோக்கிப் பாய்ந்தன.*

***7027. இழுகு மாக் கல் இடும்தொறு இடும்தொறும்,***
***சுழிகள்தோறும் சுரித்து இடை தோன்று தேன்***
***ஒழுகு தாமரை ஒத்தன, ஓங்கு நீர்***
***முழுகி மீது எழு மாதர் முகத்தையே.****

***இழுகு மாக்கல்*** *-(அகழியைத் தூர்ப்பதற்காக வானரங்கள்) வீசுகின்ற பெரிய கற்கள்;* ***இடும் தொறும் இடும்தொறும்*** *- (வீசி) எறியும்தோறும்;* ***சுழிகள் தோறும்*** *- (அப்போது நீரிடையே தோன்றுகின்ற) நீர்ச்சுழிகளின் நடுவிடந்தோறும்;* ***சுரித்து*** *- அழுந்திப் (பின்);* ***இடைதோன்று*** *-அவ்விடத்தே வெளிப்படுகின்ற;* ***தேன் ஒழுகு தாமரை*** *- தேன் ஒழுகப் பெற்ற தாமரை மலர்கள்;* ***ஓங்குநீர் முழுகி*** *- அலைகள் எழுகின்ற நீரிலே முழுகி;* ***மீது எழு மாதர் முகத்தை ஒத்தன*** *- மேலே எழுகின்ற பெண்களின் முகத்தை ஒத்திருந்தன.*

*அகழியில் எழுந்த அலைகளின் அலைக்கழிப்பால், தாமரை மலர்கள் நீருக்குள் மூழ்கி, மீண்டும் எழுவது குளித்து எழும் மாதர் முகங்களைப் போன்றன என அழகுறக் கற்பித்தார். "பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல், இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும், கய மூழ்குமகளிர் கண்ணின் மானும்" (குறந். 9) எனும் குறுந்தொகைப்பாடல் இங்கு ஒப்பு நோக்க உரியதாகும்.*

***7028. தன்மைக்குத் தலையாய தசமுகன்***
***தொன்மைப் பேர் அகழ் வானரம் தூர்த்ததால்;***

***இன்மைக்கும், ஒன்று உடைமைக்கும், யாவர்க்கும்***
***வன்மைக்கும், ஓர் வரம்பும் உண்டாம்கொலோ?****

***தன்மைக்குத் தலையாய தசமுகன்*** - *தான் எனும் ஆணவப் பண்பிற்குத் தலைவனான பத்துத் தலைகளையுடைய இராவணனின்;* ***தொன்மைப் பேர்அகழ்*** *-பழமை வாய்ந்த பெரிய (இலங்கை) அகழியையும்;* ***வானரம் தூர்த்தது*** - *குரங்குகள் தூர்த்து (நிரப்பி) விட்டன; (என்றால்)* ***யாவர்க்கும்*** - *எத்தகையோர்க்கும்;* ***ஒன்று இன்மைக்கும் உடைமைக்கும்*** - *ஒன்றும் இல்லாமையாகிய வறுமைக்கும் எல்லாம் உடைமையாகிய செல்வத்திற்கும்;* ***வன்மைக்கும்*** - *வல்லமைக்கும்;* ***ஓர் வரம்பும் உண்டாம் கொல்?*** - *ஒரு எல்லைகட்ட இயலுமோ?*

*உயிரின் ஆதிப் பண்பு, தான் என்பது ஆதலின், ஆணவம் தன்மை எனப்பட்டது. "இங்கு ஆர் எனக்கு நிகர் எனப் பிரதாபித்து இராவணாகாரமாகி" (தாயு. மௌனகுரு. 9) என்று சான்றோர்கள் கூறுமாறு இராவணன் அகங்காரம் பெயர்பெற்ற ஒன்று ஆதலின், "தன்மைக்குத் தலையாய தசமுகன்" என்றார். இப்பாடல் வேற்றுப்பொருள் வைப்பணியாம்.*

***7029. தூர்த்த வானரம், கள்ளி பறித்து இடை,***
***சீர்த்த பேர் அணைதன்னையும் சிந்தின;***
***வார்த்தது அன்ன மதிலின் வரம்புகொண்டு***
***ஆர்த்த, ஆர்கலி காரொடும் அஞ்சவே.***

***தூர்த்த வானரம்*** - *அகழியைத் தூர்த்த வானரங்கள்;* ***கள்ளி பறித்து*** - *மராமரங்களைப் பிடுங்கி;* ***இடை சீர்த்த பேரணை தன்னையும் சிந்தின*** - *அகழியின் இடையே (போக்குவரவுக்காகச்) சிறந்திருந்த பெரிய பாலங்களையும் அழித்து விட்டன;* ***வார்த்தது அன்ன*** - *உருக்கி வார்த்தாற்போன்ற;* ***மதிலின் வரம்பு கொண்டு*** - *மதிலின் உச்சியை அடைந்து;* ***ஆர்கலி காரொடும் அஞ்ச*** - *கடலும் கார் முகிலும் அச்சம் கொள்ளுமாறு;* ***ஆர்த்த*** - *முழங்கின.*

*வானரம் இட்ட ஆரவாரத்திற்குத்தாம் நிகர் ஆகாமையால் கடலும் மேகமும் அஞ்சும் என்பாராய் "ஆர்கலி காரொடும் அஞ்ச ஆர்த்த" என்றார்.*

***7030. வட்ட மேரு இது என, வான் முகடு***
***எட்ட நீண்ட மதில்மிசை ஏறி, விண்***
***தொட்ட வானரம், தோன்றின-மீத் தொக***
***விட்ட வெண் கொடி வீங்கின என்னவே.***

***வட்ட மேரு இது என*** - வட்ட வடிவம் பெற்ற மேரு மலை இது என்று எண்ணுமாறு; ***வான்முகடு*** - ஆகாய உச்சியை; ***எட்ட*** - தொடுமாறு; ***நீண்ட மதில் மிசை*** - ஏறி- உயர்ந்த மதில்களின் மேல் ஏறி; ***விண் தொட்டவானரம்*** - ஆகாய முகட்டைத் தொட்டு நின்ற வானரங்கள்; ***மீதொக விட்ட*** - மதில் முகட்டில் பலவாகத் தொங்க விடப்பட்ட; ***வெண்கொடி என்ன*** - வெள்ளைக் கொடிகள் என்னுமாறு; ***வீங்கின*** - மிகுந்து தோன்றின.

*மதில் உச்சியில் வெள்ளைக்கொடிகள் பல பறப்பதைப்போல், வெண்ணிறங்கொண்ட வானரங்களின் இயக்கம் மதிலின் மேல் இருந்தன. வானரங்கள் வெண் கொடிகட்கு உவமையாயின. இலங்கையைச் சுற்றியுள்ள மதில்கள் வட்ட மேருவாய் இலங்கின ஆதலின், "வட்ட மேரு இது என" என்றார். இல்பொருள் உவமம்.*

***7031. இறுக்க வேண்டுவது இல்லை; எண் தீர் மணி***
***வெறுக்கை ஓங்கிய மேரு விழுக் கலால்***
***நிறுக்க, நேர்வரும் வீரர் நெருக்கலால்,***
***பொறுக்கலாது, மதிள் தரை புக்கதால்.***

***எண்தீர் மணி வெறுக்கை ஓங்கிய*** - எண்ணில் அடங்காத மாணிக்கங்களாகிய செல்வம் நிறைந்த; ***மேரு விழுக் கல்லால்*** -மேரு மலையென்னும் எடைக்கல்லினால்; ***நிறுக்க*** - எடை போட; ***நேர் வரும்*** - (அதற்கு) எடை சமமாக வரத்தக்க; ***வீரர் நெருக்கலால்*** - வானர வீரர்கள் அழுத்தியமையால்; ***பொறுக்கலாது*** - (அந்தக் கணத்தைத்) தாங்க மாட்டாமல்; ***மதில் தரை புக்கதால்*** - (இலங்கை மாநகரின்) மதில் கீழே அழுந்தியமையால்; ***இறுக்க வேண்டுவது இல்லை*** - (அந்த இலங்கை மதிலை) (வானரவீரர்கள்) உடைத்தெறிய வேண்டிய அவசியம் இல்லாமல் போனது.

*பொன்னும் மணியும் பொதிந்த மேருமலையை ஒரு தட்டிலும்,வானர வீரர்களை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்தால், வானர வீரர்கள் தட்டே தாழும் என வானரங்களின் எடையும் தொகையும் சுட்டி வியந்தவாறு, உயர்வு நவிற்சியணி.*

*அரக்கர் சேனை எழுச்சி*

***7032. அறைந்த மா முரசு; ஆனைப் பதாகையால்***
***மறைந்தவால், நெடு வானகம்; மாதிரம்***
***குறைந்த, தூளி குழுமி; விண்ணூடு புக்கு***

***உறைந்தது, ஆங்கு அவர் போர்க்கு எழும் ஓதையே.***

***மாமுரசு அறைந்த*** - *(வானரச் செயல் இவ்வாறாக) (இலங்கையில்) பெரிய முரசங்கள் முழக்கப்பெற்றன;* ***ஆனைப் பதாகையால்*** - *யானைகளின் மீது விளங்கிய பெரிய கொடிகளால்;* ***நெடுவான் அகம் மறைந்த*** - *நீண்ட விண்ணிடங்கள் மறைந்தன;* ***தூளி குழுமி*** - *தூசுகள் திரண்டு;* ***மாதிரம் குறைந்த*** - *திக்குள் சுருங்கினவாகத் தோன்றின;* ***ஆங்கு*** - *அங்கே;* ***அவர் போர்க்குப் எழும் ஓதை*** - *அந்த அரக்கர்கள் போருக்குப் புறப்படும் ஓசையானது; வி* ***ண்ணூடு புக்கு உறைந்தது*** - *ஆகாயத்தில் சென்று நிலைபெற்றது.*

***7033. கோடு அலம்பின; கோதை அலம்பின;***
***ஆடல் அம் பரித் தாரும் அலம்பின;***
***மாடு அலம்பின, மா மணித் தேர்; மணி***
***பாடு அலம்பின, பாய் மத யானையே.***

***கோடு அலம்பின*** - *சங்கங்கள் முழங்கின;* ***கோதை அலம்பின*** *-(அரக்கர்கள் மார்பில் அணிந்திருந்த) ஆரங்கள் ஒலித்தன;* ***ஆடல் அம்பரித் தாரும் அலம்பின*** - *(போர் முரசு கொம்பு முதலியவற்றின் ஒலிக்கேற்ப) ஆடிச்செல்லும் அழகிய குதிரைகளின் கிண்கிணி மாலைகளும் ஒலித்தன;* ***மாமணித் தேர் மணிமாடு அலம்பின*** - *பெரிய அழகிய தேர்களில் கட்டப்பட்டுள்ள மணிகள் பக்கங்களில் ஒலித்தன;* ***பாய்மத யானை பாடு அலம்பின*** - *பெருகுகின்ற மதத்தினையுடைய யானைகள் (போர் கிடைத்தது என்ற மகிழ்ச்சியால்) பிளிறின.*

*வானர சேனையும் அரக்கர் சேனையும் பொருதல்*

***7034. அரக்கர் தொல் குலம் வேர்அற, அல்லவர்***
***வருக்கம் யாவையும் வாழ்வுற, வந்தது ஓர்***
***கருக் கொள் காலம் விதிகொடு காட்டிட,***
***தருக்கி உற்று, எதிர் தாக்கின-தானையே.***

***அரக்கர் தொல்குலம் வேர் அற*** - *அரக்கர்களின் தொன்மை வாய்ந்த குலம் வேரொடு அழியுமாறும்;* ***அல்லவர்*** - *அரக்கர் அல்லாத தேவர், மானிடர் முதலியோருடைய;* ***வருக்கம் யாவையும் வாழ்வுற*** - *இனம் எல்லாம் வாழ்வு பெறுமாறும்;* ***வந்தது ஓர் கருக்கொள் காலம் கொடு*** - *விதி காட்டி வந்ததாகிய ஒரு காரணத்தைத் தன்னுள்ளே பொதிந்து வந்த காலத்தை;* ***விதி காட்டிட*** - *ஊழ்வினை காட்டியதால்;* ***தானை*** - *வானர சேனை அரக்கர் சேனையும்;* ***தருக்கி உற்று எதிர்தாக்கின*** - *பெருஞ் செருக்கோடு நெருங்கி எதிர் எதிராக (ஒன்றையொன்று) தாக்கிக் கொண்டன.*

*7035.* ***பல் கொடும், நெடும் பாதவம் பற்றியும்,***
***கல் கொடும், சென்றது-அக் கவியின் கடல்.***
***வில் கொடும், நெடு வேல்கொடும், வேறு உள***
***எல் கொடும் படையும் கொண்டது--இக் கடல்.***

***அக்கவியின் கடல்*** - *அந்தக் கடல் போன்ற வானரச் சேனையானது;* ***பல்கொடும்*** - *பற்களைக்கொண்டும்;* ***நெடும் பாதவம் பற்றியும்*** - *பெரிய மரங்களைக் கொண்டும்;* ***கல் கொடும்*** - *கற்களைக் கொண்டும்;* ***சென்றது*** - *(எதிர்க்கச்) சென்றது;* ***இக்கடல்*** - *இந்தக் கடல் போன்ற அரக்கர் சேனையோ;* ***வில் கொடு ம்*** - *விற்களைக் கொண்டும்;* ***நெடுவேல் கொடும்*** - *நீண்ட வேல்களைக் கொண்டும்;* ***வேறு உள எல்கொடும் படையும் கொண்டது*** - *மற்றும் உள்ள ஒளி மிக்க படைக்கருவிகளையும் கொண்டு சென்றது.*

*7036.* ***அம்பு கற்களை அள்ளின; அம்பு எலாம்***
***கொம்புடைப் பணை கூறு உற நூறின;***
***வம்புடைத் தட மா மரம் மாண்டன,***
***செம் புகர்ச் சுடர் வேல்-கணம் செல்லவே.***

***அம்பு கற்களை அள்ளின*** - *அரக்கர் விட்ட அம்புகள் (வானர வீரர்கள் வீசிய) குன்றுகளைத் தூளாக்கின;* ***அம்பு எலாம்*** - *அந்த அம்புகளையெல்லாம்;* ***கொம்புடைப்பணை*** - *(வானரர வீசிய) கொம்புகளோடு கூடிய மரங்களின் கிளைகள்;* ***கூறு உற நூறின*** - *துண்டாகும்படி பொடியாக்கின;* ***செம்புகர்*** - *(உதிரம் தோய்தலால்) செந்நிறப் புள்ளிகள் தோன்றும்படி;* ***சுடர் வேல்கணம் செல்ல*** - *ஒளிர்கின்ற வேலின் தொகைகள் பாய்தலால்;* ***வம்பு உடைத்தட மாமரம்*** - *மணமுடைய மிகர் பெரிய மரங்கள்;* ***மாண்டன*** - *அழிந்து வீழ்ந்தன. அள்ளுதல்-கைப்பற்றுதல்; இங்கு அழித்தலைக் குறித்தது. கொம்பு - சிறுகிளை. பணை - பெருங்கிளை. ஆகுபெயரால் மரத்தைக் குறித்தது எனினுமாம்.*

*7037.* ***மாக் கை வானர வீரர் மலைந்த கல்***
***தாக்கி, வஞ்சர் தலைகள் தகர்த்தலால்,***
***நாக்கினூடும், செவியினும், நாகம் வாழ்***
***மூக்கினூடும், சொரிந்தன, மூளையே.***

***மாக்கை வீரர்*** - *பெரிய கைகளையுடைய வானர வீரர்கள்;* ***மலைந்த கல்*** - *போரில் வீசிய கற்கள்;* ***தாக்கி*** - *மோதி;* ***வஞ்சர் தலைகள் தகர்த்தலால்*** - *வஞ்சகராம் அரக்கர்களின் தலைகளைப் பிளப்பதால்;* ***நாக்கின் ஊடும்*** - *அந்த அரக்கர்களின் வாய் வழியாகவும்;* ***செவியினும்*** - *காது வழியாகவும்;* ***நாகம்வாழ் மூக்கின் ஊடு ம்*** -

*நாகப்பாம்புகள் வசிக்கின்ற மூக்கு வழியாகவும்;* ***மூளை சொரிந்தன*** *- (அவர்கள்) மூளைகள் வெளிப்பட்டன.*

*வானரவீரர்களின் கரங்கள் மலைகளைப் பெயர்க்கவும் ஏந்தவும் வல்ல வலிமை வாய்ந்தனவாதலின் "மாக்கை" என்றார். நாக்கு ஆகுபெயராய் வாயைக் குறித்தது. நாக்கும், மூக்கும், வாயும் தலையில் தொளைகள் உள்ள உறுப்புகளாதலின், அத்தொளைகள் வழியே அழுத்தப் பெற்ற மூளைகள் வெளிவந்தன.*

***7038. அற்கள் ஓடும் நிறத்த அரக்கர்தம்***
***விற்கள் ஓடு சரம் பட, வெம் புணீர்***
***பற்களோடும் சொரிதர, பற்றிய***
***கற்களோடும் உருண்ட, கவிகளே.***

***அற்கள் ஓடும் நிறத்த அரக்கர்தம்*** *- இருளும் (அஞ்சி) ஓடவல்ல (கருமை) நிறம் உடைய அரக்கர்களுடைய;* ***விற்கள்*** *- விற்களிலிருந்து;* ***ஓடுசரம் பட*** *- விரைந்து வருகின்ற அம்புகள் பட்டதனால்;* ***வெம்புண்நீர்*** *- கொதிக்கின்ற புண்களிலிருந்து சொட்டும் உதிரம்;* ***பற்களோடும் சொரிதர*** *- பற்களோடும் வெளியே விழ;* ***பற்றிய கற்களோடும்*** *- (அரக்கர் மேல் வீசக் கொண்டு வந்த கரங்களில்) கற்களைப் பிடித்தவாறு;* ***கவிகள் உருண்ட*** *- குரங்குகள் (களத்தில்) (வீழ்ந்து) உருண்டன.*

***7039. நின்று மேரு நெடு மதில் நெற்றியின்***
***வென்றி வானர வீரர் விசைத்த கல்***
***சென்று, தீயவர் ஆர் உயிர் சிந்தின,***
***குன்றின் வீழும் உருமின் குழுவினே.***

***மேரு நெடுமதில் நெற்றியின்*** *- மேருமலை போன்று உயர்ந்த மதிலின் உச்சியில்;* ***நின்று*** *- நின்று கொண்டு;* ***வென்றி வானர வீரர்*** *- வெற்றி மிகுகின்ற வானர வீரர்கள்;* ***விசைத்தகல்*** *- வேகத்துடன் வீசிய கற்கள்;* ***குன்றின் வீழும் உருமின் குழுவின்*** *- மலை மேல் விழுகின்ற இடியின் கூட்டங்கள் போல;* ***சென்று*** *- போய் ;* ***தீயவர் ஆர் உயிர சிந்தின*** *- கொடியவர்களாகிய அரக்கர்களின் அரிய உயிரைப் பறித்துச் சென்றன.*

***7040. எதிர்த்த வானரம் மாக் கையொடு இற்றன;***
***மதில் புறங் கண்டு, மண்ணில் மறைந்தன;-***
***கதிர்க் கொடுங் கண் அரக்கர் கரங்களால்***
***விதிர்த்து எறிந்த விளங்கு இலை வேலினே.***

***கதிர் கொடு கண் அரக்கர் கரங்களால்*** - *(வெகுளியில்) ஒளியுடைய கண்களைக்கொண்ட அரக்கருடைய கைகளால்;* ***விதிர்த்து எறிந்த விளங்கு இலை வேலின்*** - *அசைத்து வீசிய ஒளிர்கின்ற இலை வடிவான வேல்களால்;* ***எதிர்த்த வானரம்*** - *எதிர்த்துப் போரிட்ட வானரங்கள்;* ***மாக்கையோடு இற்றன*** - *பெரிய கரங்கள் அறுபட்டு மடிந்தனவாகி;* ***மதில்புறம் கண்டு மண்ணில் மறைந்தன*** - *மதிலுக்கு வெளிப்புறத்தில் மண்ணிலே (வீழ்ந்து) மறைந்தன.*

### *7041. கடித்த, குத்தின, கையின் கழுத்து அறப்*
### *பிடித்த, வள் உகிரால் பிளவு ஆக்கின,*
### *இடித்த, எற்றின, எண் இல் அரக்கரை*
### *முடித்த-வானரம், வெஞ் சினம் முற்றின.*

***வானரம்*** - *குரங்குகள்;* ***வெம்சினம் முற்றின*** - *கொடுங்கோபம் மிக்கனவாய்;* ***கடித்த*** - *(பற்களால் அரக்கரைக்) கடித்தன;* ***கையில் குத்தின*** - *கைகளால் குத்தின;* ***கழுத்து அறப்பிடித்த*** - *அரக்கர் கழுத்துகள் துண்டாம்படி இறுக்கின;* ***வள் உதிரால் பிளவு ஆக்கின*** - *கூரிய நகங்களால் இருபிளவாகப் பிளந்தன;* ***இடித்த*** - *முட்டிகளால் தாக்கின;* ***எற்றின*** - *கால்களால் உதைத்தன;* ***எண்ணில் அரக்கரை முடிக்க*** *-எண்ணற்ற அரக்கர்களை (இவ்வாறாக) அழித்தன.*

*வினைகளை அடுக்கும் திறத்தால், கம்பர் களக்காட்சியைக் கண்முன் நிறுத்துகிறார்.*

### *7042. எறிந்தும், எய்தும், எழு முளைத் தண்டு கொண்டு*
### *அறைந்தும், வெவ் அயில் ஆகத்து அழுத்தியும்,*
### *நிறைந்த வெங் கண் அரக்கர் நெருக்கலால்,*
### *குறைந்த--வானர வீரர் குழுக்களே.*

***வெம்கண் நிறைந்த அரக்கர்*** - *கொடுமை நிறைந்த கண்களையுடைய அரக்கர்கள்;* ***எறிந்தும்*** - *(பல படைக்கருவிகளை) வீசியும்;* ***எய்தும்*** - *(அம்புகளை) ஏவியும்;* ***எழு*** - *இரும்புத் தூண் போன்ற;* ***முளை தண்டு கொண்டு அறைந்தும்*** - *மூங்கில் கோல்களைக் கொண்டு அடித்தும்;* ***வெம் அயில் ஆகத்து அழுத்தியும்*** - *கடுமையான வேல்களை உடலில் புதையுமாறு அழுத்தியும்;* ***நெருக்கலால்*** - *நெருக்கியதனால்;* ***வானர வீரர் குழுக்கள் குறைந்த*** - *குரங்கு வீரர்கள் கூட்டம் அளவில் குறைந்து போயிற்று.*

*எழு-இரும்புத்தூண்:முளை-மூங்கில்."முளைவாய் எயிற்ற முள் உகிர் ஞமலி" (குறிஞ்சிப் : 131) எனுமிடத்து, முளை-மூங்கில் எனும் பொருளில் வந்தமை காணலாம். "நிறைந்த வெங்கண் அரக்கர், குறைந்த வானர வீரர்" என்பதில் அடிமுரணும் சொல் நயமும் தோன்றுதல் காண்க.*

***7043. செப்பின் செம் புனல் தோய்ந்த செம் பொன் மதில்,***
***துப்பின் செய்தது, போன்றது, சூழ் வரை;***
***குப்புற்று ஈர் பிணக் குன்று சுமந்துகொண்டு***
***உப்பின் சென்றது, உதிரத்து ஒழுக்கமே.***

**செப்பில் செம்புனல் தோய்ந்த செம்பொன்மதில்** - *செம்பை உருக்கிய ஒழுக்கினைப்போல, இரத்தம் தோய்ந்த செம்பொன்னால் ஆன (இலங்கை) மதிலானது;* **சூழ் வரை** - *சுற்றி நின்ற ஒரு மலை;* **துப்பில் செய்தது போன்றது** - *செம்பவழத்தால் ஆக்கியது போலத் தோற்றம் அளித்தது;* **உதிரத்து ஒழுக்கம்** - *இரத்தப் பெருக்கம்;* **குப்புற்று பிணக்குன்று ஈர்** - *தலைகீழாக வீழ்ந்த பிண மலைகளை இழுத்து;* **சுமந்து கொண்டு** - *தாங்கிக் கொண்டு ;* **உப்பில் சென்றது** - *உப்புக்கடலை நோக்கிப் பாய்ந்து சென்றது.*

*மதில் இரத்தம் தோய்ந்து கிடந்தமையால், செம்பவழத்தால் ஆன மலை போன்று காட்சியளித்தது. பிணங்களைத் தோளில் சுமந்துகொண்டு செல்கையில், தலைகுப்புற வீழ்ந்து கிடப்பது இயல்பு. இரத்த ஆறு, பிணங்களைத் தலைகீழாக்கிக் கடலை நோக்கி இழுத்துச் சென்றது. உப்பு-ஆகு பெயராய் கடலைக் குறித்தது.*

***7044. வந்து இரைத்த பறவை மயங்கின,***
***அந்தரத்தில் நெருங்கலின், அங்கு ஒரு***
***பந்தர் பெற்றது போன்றது--பற்றுதல்***

***இந்திரற்கும் அரிய இலங்கையே.*** **இந்திரற்கும் பற்றுதல் அரிய இலங்கை** - *(தேவர் தலைவனான) இந்திரனாலும் கைப்பற்றிக் கொள்ளுதற்கு அரியதான இலங்கை மாநகரானது;* **வந்து இரைத்த மயங்கின பறவை** - *அங்கு பிணம் தின்ன வந்து கூச்சலிட்ட பறவைகளின் பல்வகைக் கூட்டம்;* **அந்தரத்தின் நெருங்கலின்** - *ஆகாயத்தில் (இடைவெளியின்றி) நெருங்கியதால்;* **அங்கு ஒரு பந்தர் பெற்றது போன்றது** - *அவ்விடத்தின் மேலே பந்தல் (வேய்ந்து) இட்டாற்போன்று காட்சி தந்தது.*

*போர்க்களக்காட்சியைத் தேவர்கள் காண இயலாதவாறு, பறவைகள் பந்தலிட்டு மறைத்தன என்பது ஒரு குறிப்பாம். "மயங்கின பறவை" என்பது, பல்வகையான பறவைக் கூட்டத்தைக் குறித்து நின்றது. தேவரும் வாய்திறக்க அஞ்சும் இலங்கையில் பறவைகளும் கூச்சலிடும் துணிவைப் பெற்றனவே! என வியந்தவாறு.*

***7045. தங்கு வெங் கனல் ஒத்துத் தயங்கிய***
***பொங்கு வெங் குருதிப் புனற் செக்கர்முன்,***

**கங்குல் அன்ன கவந்தமும் கைஎடுத்து,**

**அங்கும் இங்கும் நின்று, ஆடினவாம்அரோ.** **தங்கு வெங்கனல் ஒத்து** - குவிந்து கிடக்கின்ற கொடுந்தணல் போன்று; **தயங்கிய** - ஒளிர்கின்ற; **பொங்கு வெங்குருதிப் புனல்** - பொங்குகின்ற கொடிய உதிர நீராகிய; **செக்கர்முன்** - சிவந்த அந்தி வானத்தின் முன்னால்; **கங்குல் அன்ன கவந்தமும்** - இரவு வந்தாற் போன்ற (அரக்கர்களின்) தலையற்ற உடல்களும்; **கை எடுத்து** - கைகளை உயர்த்தியவாறு; **அங்கும் இங்கும் நின்று ஆடின** - அங்கும் இங்குமாக நின்று ஆடல் நிகழ்த்தின.

*7046.* **கொன் நிறக் குருதிக் குடை புட்களின்**
**தொல் நிறச் சிறையில் துளி தூவலால்,**
**பல் நிறத்த பதாகைப் பரப்பு எலாம்**
**செந் நிறத்தனவாய், நிறம் தீர்ந்தவே.**

**கொன்நிறக் குருதி** - அச்சந் தருகின்ற செந்நிறமுள்ள இரத்தத்திலே; **குடைபுட்களின்** - மூழ்குகின்ற பறவைகளின்; **தொல் நிறச் சிறையில் துளிதூவலால்** - பழைய இறகுகளில் படிந்த (குருதித்) துளிகள் சிந்துவதால்; **பல்நிறத்த பதாகைப் பரப்பு எலாம்** - பல நிறங்களைக் கொண்ட பெருங்கொடிகளின் கூட்டம் எல்லாம்; **செந்நிறத்தனவாய் நிறம் தீர்ந்த** - செந்நிறமாக மாறிப் பழைய நிறம் மாறிவிட்டன.

*வானரங்கள் மதிலிலிருந்து இரங்குதலும் அரக்கர் நிரம்புதலும்*

*7047.* **பொழிந்த சோரிப் புதுப் புனல் பொங்கி மீ**
**வழிந்த மா மதில் கைவிட்டு, வானரம்,**
**ஒழிந்த, மேருவின் உம்பர்விட்டு இம்பரின்**
**இழிந்த மாக் கடல் என்ன, இழிந்ததே.**

**வானரம்** - குரங்குகள்; **ஒழிந்த** - வலிமை குறைந்தனவாய்; **பொழிந்த சோரிப் புதுப்புனல்** - சொரிந்த உதிரம் என்னும் புது வெள்ளம் பொங்கி; **மீவழிந்த மாமதில் கைவிட்டு** - மேலே வழியப் பெற்ற பெரிய மதிலினைக் கைவிட்டு விட்டு; **மேருவின் உம்பர் விட்டு இம்பரின் இழிந்த** -மேருகிரியின் மேலிடத்தை விட்டு அகன்று மற்றொரு பக்கத்தில் இறங்கிய; **மாகடல் என்ன இழிந்த** - பெரிய கடலே போன்று கீழே இறங்கின.

*7048.* **பதனமும், மதிலும், படை நாஞ்சிலும்,**
**கதன வாயிலும், கட்டும் அட்டாலையும்,**

***முதல யாவையும் புக்குற்று முற்றின-***
***விதன வெங் கண் இராக்கதர் வெள்ளமே.***

**விதன வெங்கண் இராக்கதர் வெள்ளம்** - *துயரம் புரியவல்ல கொடிய கண்களையுடைய இராக்கதர் பெருங்கூட்டத் தொகுதிகள்;* **பதனமும்** - *மதிலில் உள்ள மேடைகளிலும்;மதிலும்-மதில்களிலும்;* **படை நான்கிலும்** - *அம்புகள் விடுதற்குரிய (ஏவறை) முடுக்குகளிலும்;* ***கதன வாயிலும்*** - *(பகைவர்) கலங்குதற்குரிய கோபுர வாயிலிலும்;* ***கட்டும் அட்டாலையும்*** - *மதில் மேல் கட்டப்பட்ட மண்டபங்களிலும்;* ***முதலயாவையும்*** - *(இவை) முதலான எல்லா இடங்களிலும்;* ***புக்குற்று முற்றின*** -*புகுந்து நிரம்பின.*

*பதணம் - மதில்களின் உள் உள்ள மேடை "நெடுமதில் நிறைப் பதணத்து" (பதிற்றுப். 22-25) என்பதனால் இச்சொல் பதணம் எனவும் வழங்கும் எனத் தெரிகிறது. நாஞ்சில்- மதில் உறுப்புக்களுள் ஒன்று.. அம்பு ஏவும் துளைகள் உள்ள இடம். ஞாயில் எனவும் வழங்கும். அட்டாலை-கோட்டை மதில் மேல் கட்டப்படும் மண்டபம். அரக்கர் மட்டுமே அன்றிக் கோட்டை வாயிலும் கலக்கம் செய்யும் என்பார். "கதன வாயிலும்" என்றார். "கோட்டைக்கு அரணாகப் போடப்பட்ட உட்படிகள்" என்பது பழைய உரை.*

***7049. பாய்ந்த சோரிப் பரவையில் பற்பல***
***நீந்தி ஏகும், நெருக்கிடைச் செல்வன;***
***சாய்ந்து சாய்ந்து, சரம் படத் தள்ளலுற்று***
***ஓய்ந்து வீழ்ந்த; சில சில ஓடின.***

**நெருக்கிட** - *(அரக்கர்) நெருங்கி வந்தமையால்;* **செல்வன** - *(வேறிடங்கட்குத் தப்பிச்) செல்கின்ற;* **பற்பல** - *பலவாய குரங்குகள்;* **பாய்ந்த சோரிப் பரவையில்** - *பாய்ந்து ஓடிச் செல்கின்ற உதிரக் கடலில்;* ***நீந்தி ஏகும்*** - *நீந்திக் கடப்பதற்கு முயலும்;* **சிலசில** - *சிற்சில குரங்குகள்;* ***சாய்ந்து சாய்ந்து*** - *மிகவும் தளர்ந்து;* ***சரம்பட*** - *(அரக்கர் விட்ட) அம்புகள் தைத்ததனால்;* ***தள்ளல் உற்று ஓய்ந்து வீழ்ந்த*** - *உயிர் தளர்ந்து செயலிழந்து வீழ்ந்தன;* **சி லசில ஓடின** - *சிற்சில (உயிர் தப்பிப் பிழைக்க) ஓட்டம் பிடித்தன.*

*உதிரவெள்ளத்தின் மிகுதி காட்ட "சோரிப்பரவை" என்றார். போரிடும் பொருட்டு மதில்களில் ஏறிய குரங்குகள், அரக்கர்களால் துரத்தப்பட்டமை கூறியவாறு.*

*அரக்கர் சேனையின் ஆரவாரம்*

***7050. தழிய வானர மாக் கடல் சாய்தலும்,***
***பொழியும் வெம் படைப் போர்க் கடல் ஆர்த்தவால்-***
***ஒழியும் காலத்து உலகு ஒரு மூன்றும் ஒத்து***

***அழியும் மாக் கடல் ஆர்ப்பு எடுத்தென்னவே.***

***ஒழியும் காலத்து*** - யாவும் அழியும் ஊழிக் காலத்தில்; ***ஒரு மூன்று உலகும் ஒத்து*** - மூன்று உலகங்களும் ஒன்று சேர்ந்து; ***அழியும்*** - அழிவதற்குக் காரணமான; ***மாகடல்*** - பெருங்கடலானது; ***ஆர்ப்பு எடுத்து அன்ன*** - பேரொலி எழுப்பியது போன்று; ***தழிய மாகடல் வானரம் சாய்தலும்*** - (மதிலைத்) தழுவியிருந்த பெருங்கடல் போன்ற வானரப் படைகள் வலிமை குன்றிய அளவில்; ***பொழியும் வெம்படை*** - மேன்மேலும் எய்கின்ற கொடிய போர்க்கருவிகளையுடைய; ***போர்க்கடல் ஆர்த்த*** - போர் செய்யும் கடல் போன்ற இராக்கத சேனை ஆர்த்தது.

*கடல் ஆர்த்த-ஒருமைப் பன்மை மயக்கம். சுவர்க்கம், மத்திமம், பாதலம் என உலகை மூன்றாகக் கூறுதல் மரபாதலின் "உலகொடு மூன்றும்" என்றார். உலகம் கடலால் அழியும் என்பது முன்னோர் துணிபாதலின், "ஒழியும் காலத்து உலகொரு மூன்றும் ஒத்து அழியும் மாக்கடல்" என்றார்.*

***7051. முரசும், மா முருடும், முரல் சங்கமும்,***
***உரை செய் காளமும், ஆகுளி ஓசையும்,***
***விரைசும் பல் இயம், வில் அரவத்தொடும்,***
***திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்தவே.***

***முரசும்*** - முரசுக் கருவியும்; ***மாமுருடும்*** - பெரிய முருடு என்னும் கருவியும்; ***முரல் சங்கமும்*** - முரலுகின்ற சங்கும்; ***உரை செய் காளமும்*** - புகழ் பெற்ற எக்காளமும்; ***ஆகுளி ஓசையும்*** - ஆகுளி என்னும் சிறு பறையும்; (என) ***விரைசு பல் இயம்*** - பலவகையாய்க் கலந்து ஒலிக்கும் பல்வகைக் கருவிகளின் ஓசையும்; ***வில் அரவத்தொடும்*** - வில்லிலிருந்து சுணை விடுகையில் எழும் ஓசையுடன் கூடி; ***திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்த*** - அலையால் ஆர்ப்பரிக்கும் கடலுக்கும் ஒரு மனக்கலக்கத்தை உண்டாக்கிவிட்டன. தன் ஒலியை விடப் பேர் ஒலி இல்லை என்று, "ஆர்கலி" எனும் பட்டத்தைப் பெற்றுத் தருக்கியிருந்த கடல், தன் ஒலியிலும் பேரொலியுண்டு என்பதையுணர்ந்து மனக்கலக்கம் அடைந்தது என்பதாம். முருடு - பறைப்பொது எனும் பிங்கலந்தை; மத்தளமுமாம். காளம்-எக்காளம். ஊது கொம்பு. ஆகுளி - சிறு பறை. "நுண்ணீர் ஆகுளி இரட்ட" (மதுரைக்காஞ்சி. 606) தமிழகத்திலிருந்த பல்வகைப் போர்க்கருவிகளின் பெயர்கள்.*

*இராவணனது படை வெளி வருதல்*

***7052. ஆய காலை, அனைத்து உலகும் தரும்***
***நாயகன் முகம் நாலும் நடந்தென,***
***மேய சேனை விரி கடல், விண் குலாம்***

***வாயிலூடு புறப்பட்டு வந்ததே.***

***ஆயகாலை*** - *அப்பொழுதில்;* ***உலகு அனைத்தும் தரும்*** - *உலகம் யாவையும் படைக்கும்;* ***நாயகன் முகம் நாலும் நடந்தென*** - *நான்முகப் பிரமனுடைய நான்கு வாய்களிலிருந்தும் புறப்பட்டது போல;* ***மேய சேனை*** - *(இலங்கையில்) பொருந்திய (அரக்கர்) சேனையாகிய;* ***விரிகடல்*** - *பரந்த கடலானது;* ***விண்குலாம் வாயில் ஊடு*** - *ஆகாயம் அளாவும் (இலங்கையின்) நான்கு வாயில்களின் வழியே;* ***புறப்பட்டு வந்தது*** - *வெளிப்பட்டு வந்தது.*

*7053.* ***நெடிய காவதம் எட்டும் நிரம்பிய,***
***படிய வாயில் பருப்பதம் பாய்ந்தென,***
***கொடியொடும் கொடி சுற்றக் கொடுத்த தண்டு***
***ஒடிய ஊன்றின, மும் மத ஓங்கலே.***

***நெடிய காவதம் எட்டும் நிரம்பிய*** - *நீண்ட எட்டுக் காதப் பரப்பும் நிறையுமாறு;* ***மும்மத ஓங்கல்*** - *மூன்று மதங்களையுடைய யானைகள்;* ***படிய வாயில்*** - *படிகளையுடைய கோட்டை வாயில்களில்;* ***பருப்பதம் பாய்ந்தென*** - *மலைகள் பாய்ந்து சென்றாற்போல;* ***கொடியோடும்*** - *(தம்மீதுள்ள) கொடிகளோடும்;* ***கொடி சுற்றத் கொடுத்த தண்டு*** - *பிற யானைகளின் மீதுள்ள கொடிகளோடும் (அக்கொடிகள்) சுற்றிக்கொள்ள, (அவை) கட்டியுள்ள கம்புகள்;* ***ஓடிய ஊன்றின*** - *ஓடியுமாறு நெருங்கி (அவற்றை) ஊன்றிக்கொண்டு வெளிவந்தன.*

*7054.* ***சூழி யானை மதம் படு தொய்யலின்,***
***ஊழி நாள் நெடுங் கால் என ஓடுவ,***
***பாழி ஆள் வயிரப் படி பல் முறை***
***பூழி ஆக்கின, பொன் நெடுந் தேர்களே.***

***பொன் நெடுந்தேர்கள்*** - *பொன்னால் ஆகிய நீண்ட தேர்கள்;* ***சூழி யானை*** - *முகபடாம் அணிந்த யானைகளினுடைய;* ***மதம் படு தொய்யலின்*** - *மதநீர் பெருகுவதனால் ஆகிய சேற்றில்;* ***ஊழி நாள் நெடுங்கால் என*** - *ஊழிக்காலத்திலே வீசும் பெருங்காற்றுப் போல;* ***ஓடும்*** - *விரைந்து ஓடுவனவாய்;* ***பாழி ஆள் வயிரப்படி*** - *வன்மை பொருந்திய வயிரம் போன்ற பூமியை;* ***பன்முறை பூழி ஆக்கின*** - *பலவாறாகத் துகள்படுத்தின.*

*சேறுமாய்த் தேர்கள் ஓடத்துகளுமாய், ஒன்றோடொன்று மாறுமாறாகி, வாளாகிடக்கிலா மறுகிற் சென்றார்" (கம்ப. 485) என்றார். மிதிலைக்காட்சியிலும்.*

***7055. பிடித்த வானரம் பேர் எழில் தோள்களால்***
***இடித்த மா மதில் ஆடை இலங்கையாள்,***
***மடுத்த மாக் கடல் வாவும் திரை எலாம்***
***குடித்துக் கால்வன போன்ற, குதிரையே.***

***பிடித்த வானரம்*** - *இலங்கைக் கோட்டையைக் கைப்பற்றிய வானரங்கள்;* ***பேர் எழில் தோள்களால்*** - *(அவற்றின்) பெருத்த அழகிய தோள்களால்;* ***இடித்த மாமதில்*** - *தகர்க்கப்பட்ட உயர்ந்த மதிலாகிய;* ***ஆடை இலங்கையால்*** - *ஆடையையுடுத்த இலங்கையென்னும் மங்கை;* ***குடித்து மடுத்த மாக்கடல்*** - *(இடிபட்ட மதில்களின் வழியே உட்புகுந்ததால்) பருகி உட்கொண்ட கடல் நீரை;* ***வாவும் திரையெலாம்*** - *தாவிச் செல்லும் அலைகளாக;* ***கால்வன போன்ற குதிரை*** - *கக்குவது போன்றிருந்தன குதிரைகள்.*

***7056. கேள் இல் ஞாலம், கிளத்திய தொல் முறை***
***நாளும் நாளும் நடந்தன நள் இரா,***
***நீளம் எய்தி, ஒரு சிறை நின்றன,***

***மீளும் மாலையும் போன்றனர்--வீரரே.*** ***கேள் இல் ஞாலம்*** - *உவமை கூற இயலாத உலகத்தில்;* ***தொல்முறை கிளத்திய*** - *பழங்காலந்தொட்டு பகர்கின்ற;* ***நாளும் நாளும்*** - *நாள்தோறும்;* ***நடந்தன நள் இரா*** - *சென்றனவாகிய அடர்ந்த இரவுகள்;* ***நீளம் எய்தி ஒரு சிறை நின்றன*** - *(இலங்கையின் பேரொளிக் கூட்டத்திற்கு அஞ்சி) வரிசையாக ஒரு பக்கத்தில் (சிறைப்பட்டு) இருந்தவைகள்;* ***மீளும் மாலையும் போன்றனர் வீரர்*** - *(சிறை வீடு பெற்று) மீண்டு வெளியே புறப்பட்டு வருவது போன்று அரக்க வீரர்களாகிய காலாட்படையினர் வெளி வந்தனர்.*

*கேழ்-ஒப்பு. எதுகை நோக்கி, "கேள்" என வந்தது.*

***7057. பத்தி வன் தலைப் பாம்பின் பரம் கெட,***
***முத்தி நாட்டின் முகட்டினை முற்றுற,***
***பித்தி பிற்பட, வன் திசை பேர்வுற,***
***தொத்தி, மீண்டிலவால்--நெடுந் தூளியே.***

***நெடுந்தூளி*** - *(இவ்வாறு) நால்வகைப் படைகளாலும் எழுப்பப்பட்ட) பெரும் புழுதியானது;* ***பத்தி*** - *வரிசையாக;* ***வன்தலைப் பாம்பின்*** - *வலிய தலைகளைக் கொண்ட ஆதிசேடனுடைய ;* ***பரம்கெட*** - *பாரம் கெடுமாறு;* ***முத்தி நாட்டின் முகட்டினை*** - *வான நாட்டின் முகட்டினை;* ***முற்றுற*** - *முழுவதும் வளைத்துக் கொள்ளுமாறும்;* ***பித்திபின்பட*** - *அண்டச்சுவர் பின் ஆகுமாறும்;* ***வன்திசை பேர்வுற*** - *வலிய திசைகள் பெயருமாறும்;* ***தொத்தி மீண்டில*** - *ஒட்டிக்கொண்டு மீளாதன ஆயின.*

*வானரச் சேனை நிலைகுலைய, சுக்கிரீவன் சினந்து பொருதல்*

***7058. நெருக்கி வந்து நிருதர் நெருங்கலால்,***
***குரக்குஇனப் பெருந் தானை குலைந்து போய்,***
***அருக்கன் மா மகன், ஆர் அமர் ஆசையால்***
***செருக்கி நின்றவன், நின்றுழிச் சென்றவால்.***

***நெருக்கி வந்து*** - *(தம்மை) நெருக்கிக் கொண்டு வந்து;* ***நிருதர் நெருங்கலால்*** - *அரக்கர்கள் நெருங்குவதனால்;* ***குரக்கினப் பெருந்தானை*** - *வானரக் கூட்டத்தின் பெரும் படைகள்;* ***குலைந்து போய்*** - *நிலை குலைந்து போய்;* ***ஆர் அமர் ஆசையால்*** - *போர் செய்யவேண்டும் என்னும் பேராசையுடன்;* ***செருக்கி நின்றவன்*** - *பெருமிதத்தோடு நிற்கின்றவனான;* ***அருக்கன் மாமகன்*** - *சூரியன் புதல்வன் சுக்கிரீவன்;* ***நின்றுழிச் சென்ற*** - *நிற்கும் இடத்தை நோக்கிச் சென்றன.*

***7059. சாய்ந்த தானைத் தளர்வும், சலத்து எதிர்***
***பாய்ந்த தானைப் பெருமையும், பார்த்து, உறக்***
***காய்ந்த நெஞ்சன், கனல் சொரி கண்ணினன்,***
***ஏய்ந்தது அங்கு ஓர் மராமரம் ஏந்தினான்.***

***சாய்ந்த தானைத் தளர்வும்*** - *வலிமை குறைந்த வானரப் படையினுடைய தளர்ச்சியையும்;* ***சலத்து எதிர்பாய்ந்த தானைப் பெருமையும்*** - *வெகுளியோடு எதிரே தாவி வருகிற அரக்கர் படையின் சிறப்பையும்;* ***பார்த்து*** - *கண்டு;* ***உறக்காய்ந்த*** - *மிகவும் கொதிப்புற்ற;* ***நெஞ்சன்*** - *நெஞ்சையுடையவனும்;* ***கனல் சொரி கண்ணினன்*** - *நெருப்புச் சிந்துகின்ற கண்களையுடையவனு மாகி;* ***அங்கு ஏய்ந்தது*** - *அவ்விடத்தில் கிடைத்த;* ***ஓர்*** *மராமரம் ஏந்தினான் - ஒரு மராமரத்தை தூக்கினான் (சுக்கீரிவன்).*

***7060. வாரணத்து எதிர், வாசியின் நேர், வயத்***
***தேர் முகத்தினில், சேவகர்மேல், செறுத்து,***
***ஓர் ஒருத்தர்க்கு ஒருவரின் உற்று, உயர்***
***தோரணத்து ஒருவன் எனத் தோன்றினான்.***

***வாரணத்து*** - *யானை மேலும்;* ***வாசியின்*** - *குதிரை மீதும்;* ***வயத் தேர் முகத்தினில்*** - *வலிமை மிக்க தேரின் முன்பும்;* ***சேவகர்மேல்*** - *அரக்க வீரர் மீதும்;* ***செறுத்து*** - *வெகுண்டு;* ***ஓர் ஒருத்தர்க்கு ஒருவரின்*** - *ஒவ்வொருத்தனுக்கு முன்னாலும்;* ***உற்று*** - *ஒவ்வொரு சுக்கிரீவன் நிற்பதைப்போல;* ***உயர் தோரணத்து*** - *உயர்ந்த தோரண*

*வாயிலிலே;* **எதிர்நேர் ஒருவன் என** - *எதிர் நின்று (அரக்கருடன்) போரிட்ட ஒப்பற்றவனான அனுமனைப் போல;* **தோன்றினான்** - *தோற்றமளித்தான் சுக்கிரீவன்.*

**7061. களிறும், மாவும், நிருதரும், கால் அற,**
**ஒளிறு மா மணித் தேரும் உருட்டி, வெங்**
**குளிறு சோரி ஒழுக, கொதித்து, இடை**

**வெளிறு இலா மரமே கொண்டு, வீசினான்.**

**களிறும் மாவும் நிருதரும் கால் அற** - *யானைகளும் குதிரைகளும் அரக்க வீரர்களும் கால் ஒடிந்து வீழுமாறும்;* **ஒளிறும் மாமணித் தேரும் உருட்டி** - *ஒளிர்கின்ற பெரிய மாணிக்கத் தேர்களைக் கவிழுமாறும்;* **வெம்குளிறு சோரி ஒழுக** - *வெப்பமுடையதாய் ஒலித்துக் கொண்டு உதிரம் ஆறாய்ப் பெருக்கெடுக்குமாறும்;* **கொதித்து** - *மனத்தில் வெம்மையோடு;* **இடை** - *நடுவில்;* **வெளிறு இலா** - *வெண்மையில்லாத (முழுவயிரம் பாய்ந்த);* **மரமே கொண்டு வீசினான்** - *அந்த மராமரத்தைக் கொண்டே எறிந்தான்.*

*பிற போர் ஆயுதங்கள் செய்ய இயலாத அழிவை எளிய மரத்தையே கொண்டு சுக்கிரீவன் செய்து முடித்தலால், "எளிய மரமே கொண்டு வீசினான்" என்றார். ஏகாரம்-பிரிநிலை.*

**7062. அன்ன காலை, அரிக் குல வீரரும்**
**மன்னன் முன் புக, வன்கண் அரக்கரும்**
**முன் உழந்த முழங்கு பெருஞ் செருத்**
**தன்னில் வந்து, தலைமயக்குற்றனர்.**

**அன்ன காலை** - *அப்பொழுது;* **அரிக்குல வீரரும்** - *வானர இனத்தைச் சார்ந்த வீரர்களும்;* **மன்னன் முன்புக** *-அரசனான சுக்கிரீவன் முன்பு செல்ல;* **வன்கண் அரக்கரும்** - *கொடிய இராக்கதரும்;* **முன் உழந்த** - *முன்பு போரிட்டு வருந்திய;* **முழங்கு பெருஞ்செருதன்னில்** - *ஒலிக்கின்ற பெரிய போரில்;* **வந்து தலைமயக்குற்றனர்** - *வந்து கைகலந்தனர்.*

**7063. கல் துரந்த களம் பட, வஞ்சகர்**
**இற்று உலந்து முடிந்தவர் எண் இலர்;**
**வில் துரந்தன வெங் கணையால் உடல்**
**அற்று உலந்த குரங்கும் அனந்தமே.**

***களம் துரந்த கல்பட*** - போர்க்களத்தில் எறிந்த கற்கள் வீழ்ந்ததனால்; ***வஞ்சகர் இற்று உலந்து*** - வஞ்சகராகிய அரக்கர்களில் உயிரற்று ஆயுள் அழிந்து; ***முடந்தவர் எண்ணிலர்*** - இறந்து போனவர்கள் கணக்கற்றவர்கள்; ***வில்துரந்தன*** - அரக்கரின் விற்கள் செலுத்திய; ***வெம்கணையால்*** - கொடிய அம்புகளால்; ***உடல் அற்று உலந்த குரங்கும்*** - உடல் இழந்து இறந்த குரங்குகளும்; ***அனந்தம்*** - எல்லையில்லாதனவாம். கல்லைக் கொண்டு போரிட்ட வானரங்களும், வில்லைக்கொண்டு போரிட்ட அரக்கர்களும் எண்ணற்றோர் களத்தில் இறந்து பட்டனர் என்பதாம்.

***7064. கற்கள் தந்து, நிமிர்ந்து, கடுஞ் செரு***
***மற்கடங்கள் வலிந்து மலைந்திட,***
***தற்கு அடங்கி உலந்தவர்தம் உயிர்***
***தெற்கு அடங்க நிறைந்து செறிந்தவால்.***

***நிமிர்ந்து கடும் செரு*** - உயர்ந்து கடுமையாக நிகழ்ந்த யுத்தத்தில்; ***மற்கடங்கள்*** - குரங்குகள்; ***வலிந்து*** - வலிமையோடு; ***கற்கள் தந்து மலைந்திட*** - கற்களை வீசிப் போரிட; ***தற்கு அடங்கி*** - (தம்) கர்வம் அழிந்து; ***உலந்தவர் தம் உயிர்*** - இறந்தவர்களான அரக்கர்களின் உயிர்கள்; ***தெற்கு அடங்க*** -தென்திசை முழுவதும்; ***நிறைந்து செறிந்த*** - நிறைந்து நெருங்கின.

*மர்க்கடம்-குரங்கு. தற்கு-தருக்கு; செருக்கு. எதுகை நோக்கி மற்கடம் எனவும், தற்கு எனவும் வந்தன. செய்யுளாதலின், தெற்கு-இயமனின் திசை. ஆகுபெயராய் அவன் உலகைக் குறித்தது.*

***7065. பாடுகின்றன, பேய்க் கணம்; பல் விதத்து***
***ஆடுகின்ற, அறு குறை; ஆழ கடற்கு***
***ஓடுகின்ற, உதிரம்; புகுந்து, உடல்***
***நாடுகின்றனர், கற்புடை நங்கைமார்.***

***பேய்க்கணம் பாடுகின்றன*** - பேயின் கூட்டங்கள் (போர்க்களத்தில்) பாடத் தொடங்கின; ***அறுகுறை*** - தலைஅற்ற கவந்தங்கள்; ***பல்விதத்து ஆடுகின்ற*** - பலவகையாக ஆடத் தொடங்கின; ***உதிரம்*** - இரத்தமானது; ***ஆழ்கடற்கு*** - ஆழமிக்க கடலைநோக்கி; ***ஓடுகின்ற*** - ஓடத்தொடங்கின; ***கற்புடை நங்கைமார்*** - கற்புடைய மகளிர்; ***புகுந்து*** - போர்களத்துக்குள் புகுந்து; ***உடல் நாடுகின்றனர்*** - (இறந்துபட்ட) தத்தம் கணவன்மார்களின் உடலைத் தேடத் தொடங்கினர்.

***7066. யானை பட்ட அழி புனல் யாறு எலாம்***

***பானல் பட்ட; பல கணை மாரியின்***
***சோனை பட்டது; சொல்ல அரும் வானரச்***
***சேனை பட்டது; பட்டது, செம் புண்ணீர்.***

***பட்ட யானை*** - வானரங்களால் தாக்கப்பட்டு மாண்ட யானைகளிலிருந்து; ***அழிபுனல் யாறு எலாம்*** - பெருகிய இரத்தத்தால் ஆன ஆறுகள் எல்லாம்; ***பானல்பட்ட*** - கடலிற் சென்று கலந்தன; ***பல்கணை மாரியின் சோனைபட்டது*** - அரக்கரின் பல்வகையான அம்பு மழையால் விடாமழை தோற்றது; ***சொல் அரும்*** - (அதனால் இவ்வளவு என்று) சொல்ல இயலாத; ***வானரச் சேனை பட்டது*** - குரங்குச் சேனை இறந்து பட்டது; ***செம்புண் நீர் பட்டது*** - (அதனால் களம் எங்கும்) சிவந்த இரத்தமே (கண்ணில்) பட்டது.

*"யானை பட்ட வழி" எனக் கொண்டு, யானைகள் மாண்டு கிடந்த வழிகளில் எல்லாம் பெருகி ஓடிய குருதி, ஆறுகளாகி, அருகில் உள்ள கடலில் சங்கமித்தன எனக் கூறினுமாம். பானல்-கடல். யானைகளின் இரத்தமும், வானரங்களின் இரத்தமும் வேறுபாடின்றிக் கடலில் கலந்தன என்றவாறு.*

*அரக்கர் சேனையின் அழிவு கண்டு, வச்சிரமுட்டி வந்து பொருதல்*

***7067. காய்ந்த வானர வீரர் கரத்தினால்***
***தேய்ந்த ஆயுளர் ஆனவர் செம் புண்ணீர்***
***பாய்ந்த தானைப் படு களம் பாழ்படச்***
***சாய்ந்ததால், நிருதக் கடல்-தானையே.***

***காய்ந்த வானர வீரர் கரத்தினால்*** - வெகுண்டெழுந்த வானரப்படை வீரர்களின் கைகளால்; ***தேய்ந்த ஆயுளர் ஆனவர்*** - குறைந்த ஆயுளையுடையவராகிப் போன அரக்கர்களுடைய; ***செம்புண் நீர் பாய்ந்த*** - சிவந்த இரத்தம் (வெள்ளமாகப்) பாய்ந்த; ***தானைப் படுகளம் பாழ்பட*** - சேனைகள் இறந்து கிடந்த போர்க்களம் பாழாகும்படி; ***நிருதக் கடல்தானை*** - அரக்கர்களுடைய படையாகிய கடல்; ***சாய்ந்தது*** - வலி குன்றியது.

*வானரர் காய்வு(சினம்), அரக்கர் தேய்வுக்குக் காரணம் ஆயிற்று. ஆயுள் தேய்ந்தவர் எனவர உரிய தொடரை "தேய்ந்த ஆயுளர்" என்று ஓர் நயம். களத்தில் உள்ளவர் மடிவது கண்டு, மற்றவர் அஞ்சி ஓடினர் ஆதலால், "களம் பட, சாய்ந்தது நிருதக் கடல் தானை" என்றார்.*

***7068. தங்கள் மாப் படை சாய்தலும், தீ எழ***
***வெங் கண் வாள் அரக்கன், விரை தேரினை,***

***கங்க சாலம் தொடரக் கடற் செலூஉம்***
***வங்கம் ஆம் என வந்து, எதிர் தாக்கினான்.***

***தங்கள் மாப்படை சாய்தலும்*** - *தங்களுடைய (அரக்கருடைய) பெரும்படை வலி குன்றிய போது;* **வெங்கண் தீ எழ** - *கண்களில் வெப்பமிக்க தீ (ப்பொறி) எழுமாறு;* **வாள் அரக்கன்** -*கொடிய அரக்கனாகிய வச்சிரமுட்டி;* **விரைதேரினை** - *வேகமாக வரும் தேரினை;* **கங்கசாலம் தொடர** - *பருந்துக் கூட்டங்கள் பின்தொடர்ந்து வர;* **கடல்செலூஉம் வங்கம் ஆம் என** - *கடலிலே செல்லும் கப்பல் போல் (செலுத்தி);* **வந்து எதிர் தாக்கினான்** - *வந்து எதிரே தாக்கத் தொடங்கினான்.*

*இங்குக் கூறப்படும் அரக்கன் வச்சிரமுட்டி என்பது இப்படலத்து 55 ஆம் பாடலால் விளங்கும்.கங்கசாலம்-பருந்துக் கூட்டம். "கங்கமொடு காகம் மிடையக் கடலின் ஓடும் வங்கமெனல் ஆயதொரு தேரின் மிசை வந்தான்" (3034) என்பார் முன்னும் பெருவீரர்கள் போர்க்களம் செல்கையில், தமக்குக் களத்தில் இரை மிகுதிபடக் கிட்டும் என்று பருந்துகள் பின் தொடரும். "கூற்று இனத்து அன்னார்கொடுவில் உடன் ஏந்தி, பாற்றினம் பின்படர முன்படர்ந்து" (பு. வெ.மாலை. 1,5) என்பது காண்க. குருதியை வெள்ளம் என்றதற்கேற்ப, அதனிடை ஓடும் தேரினை வங்கம் என்றார்.*

***7069. வந்து தாக்கி, வடிக் கணை மா மழை***
***சிந்தி, வானரச் சேனை சிதைத்தலும்,***
***இந்திராதியரும் திகைத்து ஏங்கினார்;***
***நொந்து, சூரியன் கான்முளை நோக்கினான்.***

**வந்து தாக்கி** - *(வச்சிரமுட்டி தேரில் விரைந்து) வந்து தாக்கி;* **வடிக்கணை மாமழை சிந்தி** - *கூரிய அம்புகளை மழையாகப் பொழிந்து;* **வானரத் தானை சிதைத்தலும்** - *குரங்குப் படையை அழித்தபோது;* **இந்திராதியரும் திகைத்து ஏங்கினார்** - *இந்திரன் முதலான தேவர்களும் மனம் தடுமாறி (எது நேருமோ என்று) தவித்தார்கள்;* **சூரியன் கான்முளை** - *சூரியன் மகனாகிய சுக்கிரீவன்;* **நொந்து நோக்கினான்** - *மனம் நொந்து (அந்நிலையைக்) கண்ணுற்றான்.*

*வந்து தாக்கி- "வந்து தாக்கினான்" என மேற்பாட்டில் சொன்னதன் அநுவாதம்.*

*வச்சிரமுட்டியைச் சுக்கிரீவன் அழித்தல்*

***7070. நோக்கி, வஞ்சன் நொறில் வய மாப் பரி***
***வீக்கு தேரினின் மீது எழப் பாய்ந்து, தோள்***
***தூக்கு தூணியும் வில்லும் தொலைத்து, அவன்***
***யாக்கையும் சிதைத்திட்டு, எழுந்து ஏகினான்.***

**நோக்கி** - *(அந்நிலை) கண்டு (சுக்கிரீவன்);* **வஞ்சன் நொறில் வயமாப்பரி** - *வஞ்சகன் ஆகிய வச்சிரமுட்டியின் விரைந்து செல்லும் வலிய குதிரைகள்;* **வீக்கு தேரின் மீது** - *பூட்டிய தேரின் மீது;* **எழப் பாய்ந்து** - *எழுந்து பாய்ந்து;* **தோள் தூக்கு தூணியும் வில்லும்** - *தோளில் தொங்க* **விட்டிருந்த அம்பறாத் தூணியையும் வில்லினையும்** *; தொலைத்து - அறுத்து;* **அவன் யாக்கையும்** - *அவனுடைய உடலையும்;* **சிதைத்திட்டு எழுந்து ஏகினான்** - *அழித்துவிட்டு, (அங்கிருந்து) கிளம்பிச்சென்றான்.*

*நொறில்-விரைவு. "நொறில் பரித்தேர் பட நூறி" (3034) என்பார் முன்னும். சிதைத்திட்டு-'இட்டு' துணைவினை. தம் அழிவிற்குக் காரண கருத்தனாகிய வச்சிரமுட்டியை மாய்த்து, படைத்தலைவன் தான் என நிரூபித்தான் சுக்கிரீவன். "தானை படைத்தகையால் பாடுபெறும்" (குறள். 768) எனும் வள்ளுவர் வாய்மொழி உண்மையாதல் காண்க.*

***7071. மலை குலைந்தென, வச்சிரமுட்டி தன்***
***நிலை குலைந்து விழுதலின், நின்றுளார்***
***குலைகுலைந்து கொடி நகர் நோக்கினார்;***
***அலை கிளர்ந்தென, வானரம் ஆர்த்தவே.***

**மலை குலைந்தென** - *மலை நிலை குலைந்தாற்போல;* **வச்சிரமுட்டி** - *வச்சிரமுட்டியானவன்;* **தன் நிலை குலைந்து விழுதலின்** - *தன் நிலைதடுமாறி விழுந்ததனால்;* **நின்றுளார்** - *(அவனைச் சார்ந்து) நின்றிருந்த அரக்கர்கள்;* **குலை குலைந்து** - *நடுநடுங்கி;* **கொடிநகர் நோக்கினர்** - *கொடிகள் உயர்ந்த இலங்கை மாநகரை நோக்கித் திரும்பினர்;* **அலை கிளர்ந்தென வானரம் ஆர்த்த** - *அலைகள் பொங்கி எழுந்தாற்போல வானரங்கள் பேரொலி செய்தன.*

*இப்பாடலின் தொடைப்பொலிவும், நடைநயமும் இன்பந் தருபவை. "மலை குலைந்தென" என வச்சிரமுட்டியைக் குறிப்பதனால், "அவன் அளக்கலாகா அளவும் பெருமையும், துளக்கலாகா நிலையும் தோற்றமும்" (நன். பொதுப்) கற்பார் கண் முன் நிறுத்துகின்றார் கவிஞர்.*

*கீழை வாசலில் நிகழ்ந்த போர்*

***7072. வீழி வெங் கண் இராக்கதர் வெம் படை,***
***ஊழி ஆழி கிளர்ந்தென ஓங்கின,***
***கீழை வாயிலில் கிட்டலும், முட்டினர்,***
***சூழும் வானர வீரர் துவன்றியே.***

***வீழி வெங்கண் இராக்கதர் வெம்படை*** - வீழிக்கனி போன்று சிவந்த கொடுங்கண்களையுடைய அரக்கரின் கொடும்படை; ***ஊழி ஆழி கிளர்ந்தென*** - ஊழிக்காலத்தே கடல் பொங்கியெழுந்தது போல; ***ஓங்கின*** - மேல் எழுந்து வந்தன; ***கீழை வாயிலில் கிட்டலும்*** - வை கிழக்கு வாசலை அடைதலும்; ***சூழும் வானர வீரர் துவன்றி முட்டினர்*** - சுற்றிலும் உள்ள வானரப்படை வீரர்கள் நெருக்கித் தாக்கினர்.

*வீழி-ஒரு கனி; செந்நிறமுடையது. வெகுளியால் எப்போதும் சிவந்திருக்கும். அரக்கர் கண்களுக்கு உவமை. கீழை வாசல் வானரப்படைத் தலைவன் நீலன் ஆவான்.*

***7073. சூலம், வாள், அயில், தோமரம், சக்கரம்,***
***வாலம், வாளி, மழையின் வழங்கியே,***
***ஆலம் அன்ன அரக்கர் அடர்த்தலும்,***
***காலும் வாலும் துமிந்த, கவிக் குலம்.***

***ஆலம் அன்ன அரக்கர்*** - கொடிய நஞ்சு போன்ற அரக்கர்கள்; ***சூலம், வாள், அயில், தோமரம், சக்கரம், வாலம், வாளி*** - சூலம், வாள், மழு, தோமரம், சக்கரம், பிண்டி பாலம், அம்பு (முதலிய) ஆயுதங்களை; ***மழையின் வழங்கி*** - மழை போன்று பொழிந்து; ***அடர்த்தலும்*** - எதிர்த்தபோது; ***கவிக்குலம்*** - வானரக்கூட்டங்கள்; ***காலும் வாலும் துமிந்த*** - கால்களும் வால்களும் துண்டிக்கப்பட்டன ஆயின.

*சூலம் - முத்தலைவேல். தோமரம் - தண்டு; இரும்புலக்கையுமாம். எறியீட்டி என்பாரும் உளர். வாலம்- பிண்டிபாலம். ஆலம்-நஞ்சு. அரக்கர் ஆலத்துக்கு ஒப்பு. "ஆலம் அன்னவர்க்கு" (கம்ப. 5351)*

***7074. வென்றி வானர வீரர் விசைத்து எறி***
***குன்றும் மா மரமும், கொடுங் காலனின்***
***சென்று வீழ, நிருதர்கள் சிந்தினார்;***
***பொன்றி வீழ்ந்த, புரவியும் பூட்கையும்.***

**வென்றி வானர வீரர்** - வெற்றிக்குரிய வானர வீரர்கள்; **விசைத்து எறி** - விசையோடு எறிகின்ற; **குன்றும் மாமரமும்** - மலைகளும் பெரிய மரங்களும்; **கொடும் காலனின்** - கொடிய கூற்றுவனைப் போல; **சென்று வீழ** - (விரைந்து) சென்று வீழ்ந்த போது; **நிருதர்கள் சிந்தினார்** - அரக்கர்கள் சிதறினர்; **புரவியும் பூட்கையும் பொன்றி வீழ்ந்த** - குதிரைகளும் யானைகளும் இறந்து வீழ்ந்தன.

*புழைக்கை - பூட்கை என ஆனையின் பெயராயிற்றுப் போலும். துளையுடைய கையுடையது. என்னும் காரணப்பெயர். சினை ஆகுபெயர்.*

***7075.*** ***தண்டு, வாள், அயில், சக்கரம், சாயகம்,***
***கொண்டு, சீறி, நிருதர் கொதித்து எழ,***
***புண் திறந்து குருதி பொழிந்து உக,***
***மண்டி ஓடினர், வானர வீரரே.***

***நிருதர்*** *- சினம் மிக்க அரக்கர்;* ***தண்டுவாள் அயில் சக்கரம் சாயகம் கொண்டு*** *- கதை, வாள், வேல், சக்கரப்படை, அம்பு முதலியன கைக்கொண்டு;* ***சீறிக் கொதித்து எழ*** *- வெகுண்டு மனம் வெம்பி எழுந்தபோது;* ***வானர வீரர்கள்*** *- குரங்கு வீரர்கள்;* ***புண் திறந்து குருதி பொழிந்து உக*** *-(பகைவர் ஆயுதங்களால் விளைந்த) புண்களின் வாய் திறந்து கொட்டிய உதிரம் சிந்த;* ***மண்டி ஓடினர்*** *- நெருங்கி ஓடினர்.*

*தண்டு-கதை. சாயகம்-அம்பு.*

*நீலன் நிகழ்த்திய போர்*

***7076.*** ***எரியின் மைந்தன், இரு நிலம் கீழுற,***
***விரிய நின்ற மராமரம் வேரொடும்***
***திரிய வாங்கி, நிருதர் வெஞ் சேனை போய்***
***நெரிய, ஊழி நெருப்பு என வீசினான்.***

***எரியின் மைந்தன்*** *- (அப்போது) அக்கினியின் புதல்வனான நீலன்;* ***இருநிலம் கீழ் உற*** *- பெருமைக்குரிய பூமிக்குள் வேரூன்றி;* ***விரிய நின்ற மராமரம்*** *- பரவி நின்ற மராமரம் ஒன்றை;* ***வேரொடும் திரிய வாங்கி*** *- வேரோடு திருகி எடுத்து;* ***நிருதர் சேனைபோய் நெரிய*** *- அரக்கரின் கொடிய படைகள் தூளாகுமாறு;* ***ஊழி நெருப்பு என வீசினான்*** *- ஊழிக்காலத்து எழும் நெருப்பைப் போல வீசி எறிந்தான்.*

*"அரியும் மற்று எனது கூறு நீலன் என்று அறைந்திட்டானால்" (கம்ப. 205) என்றதனால், "எரியின் மைந்தன்" எனப்பட்டான் நீலன். அவன் வீசிய பச்சை மரம், அரக்கர்க்கு எரியும் நெருப்பாயிற்று என்பது ஒரு நயம்.*

***7077.*** ***தேரும், பாகரும், வாசியும், செம் முகக்***
***காரும், யாளியும், சீயமும், காண் தகு***
***பாரின் வீழப் புடைப்ப, பசும் புணின்***
***நீரும் வாரிஅதனை நிறைத்ததே.***

***தேரும் பாகரும்*** *- தேர்களும், அவற்றை ஓட்டுபவர்களும்;* ***வாசியும் செம்முகக் காரும் யாளியும் சீயமும்*** *- அவற்றில் பூட்டப்பட்ட குதிரைகளும், (குருதியால்) சிவந்த முகங்களையுடைய யானைகளும், யாளிகளும், சிங்கங்களும்;* ***காண்தகு பாரின்*** *- காணத்தக்க (அழகிய) நிலத்திடையே;* ***வீழ*** *- (உயிர் நீத்து) விழும்படி;*

***புடைப்ப*** - *(அந்த மராமரம்) தாக்க;* ***பசும் புண்ணின் நீரும்*** *- பச்சைப் புண்ணிலிருந்து வெளியான குருதியும்;* ***வாரி அதனை நிறைத்தது*** *- கடலை நிறைத்தது.*

*செம்முகக் கார்-சிவந்த முகமுடைய மேகம் போன்ற யானை; உவமையாகு பெயர்.*

***7078. அரக்கர் சேனை அடு களம் பாழ்பட***
***வெருக்கொண்டு ஓடிட, வெம் படைக் காவலர்***
***நெருக்க, நேர்ந்து, கும்பானு நெடுஞ் சரம்***
***துருக்க, வானரச் சேனை துணிந்தவே.***

***அடுகளம் பாழ்பட*** *- (அப்போது) போர்க்களம் பாழாகுமாறு;* ***அரக்கர் சேனை வெருக்கொண்டு ஓடிட*** *- அரக்கருடைய படைகள் அஞ்சி ஓடுமாறு;* ***வெம்படைக்காவலர்*** *- கொடிய வானரப் படைத்தலைவர்;* ***நெருக்க*** *- நெருக்கவே;* ***கும்பானு நேர்ந்து*** *- கும்பானு என்னும் அரக்க சேனைத்தலைவன் அங்கு வந்து;* ***நெடும்சரம் துரக்க*** *- மிகத் தூரம் செல்லும் அம்புகளை ஏவ;* ***வானரச் சேனை துணிந்த*** *- குரங்குப் படை துண்டுபட்டன.*

*இது முதல் ஆறு பாடல்கள் கும்பானுவும் இடும்பனும் போரிட்டு மாண்டது கூறும். நீலன் இட்ட மராமரத்துக்கு அஞ்சி, அரக்கர் சேனை ஓடுவதைத் தடுத்து, கும்பானு வானரச்சேனைகள் துண்டுபடுமாறு கணைகள் சொரிந்தான் என்பதாம்.*

***7079. கண்டு நின்ற கரடியின் காவலன்,***
***எண் திசாமுகம் எண்ணும் இடும்பன், ஓர்***
***சண்டமாருதம் என்ன, தட வரை***
***கொண்டு சீறி, அவன் எதிர் குப்புறா,***

***கண்டு நின்ற கரடியின் காவலன்*** *- (இவ்வாறு வானரப்படை துண்டுபடுவதை) நோக்கி நின்ற கரடிகட்குத் தலைவனாகிய;* ***எண்திசாமுகம் எண்ணும்*** *- எட்டுத்திக்கில் இருப்போரும் மதிக்கின்ற;* ***இடும்பன்*** *- (வலியோனாகிய) இடும்பன்;* ***தடவரை*** *கொண்டு - ஒரு பெரிய மலையைக் கையில் கொண்டு;* ***ஓர் சண்ட மாருதம் என்ன*** *- பெரும் புயல் காற்றுப் போல;* ***அவன் எதிர் குப்புறா*** *- அக்கும்பானு என்னும் அரக்கர் படைத்தலைவன் முன் சென்று கவிழ்ந்து குதித்து;* ***சீறி*** *-கோபித்து; (எறிதலும் என்று அடுத்த பாடலொடு தொடரும்).*

*குளகம். குப்புறல்-குதித்தல். கரடியின் காவலன் இடும்பன். எண்திசா முகம் எண்ணும் இடும்பன் எனக்கூட்டுக. திசாமுகம் - ஆகுபெயராய்த் திசாமுகத்தில் உள்ளோரைக் குறித்தது. இடும்பன்-சாம்பவானின் வாயிற்பிரதானி என்பர்.*

***7080. தொடுத்த வாளிகள் வீழும் முன், சூழ்ந்து எதிர்
எடுத்த குன்றை இடும்பன் எறிதலும்,
ஒடித்த வில்லும் இரதமும், ஒல்லெனப்
படுத்த, வாசியும் பதாகையும் பாழ்பட.****

***தொடுத்த வாளிகள்*** - *(கும்பானு என்னும் அரக்கர் படைத்தலைவன்) விடுத்த அம்புகள்;* ***சூழ்ந்து*** - *சுற்றிலும்;* ***விழும்முன்*** -*வீழ்வதற்கு முன்னால்;* ***எதிர் எடுத்த குன்றை*** - *நேராக உயர்த்திப் பிடித்த மலையை;* ***இடும்பன் எறிதலும்*** - *(கரடிகள் தலைவனாகிய) இடும்பன் வீசி எறிந்தவுடன்; (அதனால்) ஒடித்த* ***வில்லும் இரதமும்*** - *ஒடிக்கப்பெற்ற வில்லும் தேரும்;* ***வாசியும் பதாகையும் பாழ்படக்*** - *குதிரையும் கொடியும் அழிந்து படுமாறு;* ***ஒல் எனப் படுத்த*** - *விரைவாக வீழ்த்தப் பெற்றன.*

***7081. தேர் அழிந்து, சிலையும் அழிந்து உக,
கார் இழிந்த உரும் எனக் காய்ந்து, எதிர்
பார் கிழிந்து உகப் பாய்ந்தனன்--வானவர்
போர் கிழிந்து புறம் தர, போர் செய்தான்.***

***வானவர் போர் கிழிந்து புறம்தர*** - *தேவர்கள் போரில் தோற்றுப் புறமுதுகிடும்படியாக;* ***போர் செய்தான்*** - *முன்பு போர் செய்தவனாகிய கும்பானு என்னும் அசுரன்;* ***தேர் அழிந்து*** - *தேர் சிதைந்து;* ***சிலையும் அழிந்து உக*** - *வில்லும் சிதைந்து முறிப்பட்டதனால்;* ***கார் இழிந்த உரும் எனக் காய்ந்து*** - *மேகத்திலிருந்து விழுந்த இடி போலக் கோபித்து;* ***பார் கிழிந்து உக*** - *நிலமே பிளந்து சிதையும்படி;* ***எதிர் பாய்ந்தனன்*** - *இடும்பனுக்கு எதிராகப் பாய்ந்தான்.*

*சிலை - வில். கார் - மேகம். (தேரிலிருந்து) கும்பானு, குதித்தமைக்கு மேகத்திலிருந்து வீழ்ந்த இடி உவமை.*

***7082. தத்தி, மார்பின் வயிரத் தடக் கையால்
குத்தி நின்ற கும்பானுவை, தான் எதிர்
மொத்தி நின்று, முடித் தலை கீழ் உற,
பத்தி வன் தடந் தோள் உறப் பற்றுவான்.***

***தத்தி*** - *(அவ்வாறு) பாய்ந்து;* ***மார்பின் வயிரத் தடக்கையால்*** - *தன் மார்பிலே வயிரம் போன்ற வலிய பெரிய கரங்களால்;* ***குத்தி நின்ற கும்பானுவை*** - *தாக்கி*

*நின்ற கும்பானுவை;* ***தான் எதிர் மொத்தி நின்று*** *- தானும் எதிர்த்து அவனைக் குத்தி நின்று;* ***முடித்தலை கீழ் உற*** *- அவன் மகுடமணிந்த தலை கீழாகுமாறு;* ***பத்திவன்*** *- ஒழுங்குற அமைந்துள்ள அவன் வலிய;* ***தடந்தோள் உறப் பற்றுவான்*** *- பெரிய தோள்களை அழுத்திப் பற்றுவான் ஆனான்.*

*கும்பானுவைத் தலைகீழாகக் கவிழ்த்து, தோள்களை அழுத்திப் பிடித்து, இடும்பன் கொல்ல முயலும் முயற்சி கூறியவாறு.*

***7083. கடித்தலத்து இரு கால் உற, கைகளால்***
***பிடித்துத் தோளை, பிறங்கலின் கோடு நேர்***
***முடித்தலத்தினைக் கவ்வுற மூளைகள்***
***வெடித்து வீழ்தர, வீழ்த்தினனாம்அரோ.***

***கடித்தலத்து இருகால் உற*** *- (கும்பானுவின் உடலின் இடைப்பகுதியாம்) மறைவிடத்தில் இரண்டு கால்களையும் அழுத்தி;* ***கைகளால் தோளைப் பிடித்து*** *- கைகளால் தோள்களைப் பிடித்துப் பற்றி;* ***பிறங்கலின் கோடு நேர்*** *- மலைச்சிகரம் போன்ற;* ***முடித்தலத்தினை கவ்வுற*** *- மகுடத்தலையை வாயால் கல்வி;* ***மூளைகள் வெடித்து வீழ் தர*** *-மூளைப் பகுதிகள் வெடித்துச் சிதறி வீழ;* ***வீழ்த்தினனாம்*** *- (அந்தக் கும்பானுவை இடும்பன்) உயிரிழக்கச் செய்தான்.*

*மற்போரின் வகைகள் சில இப்பாடலில் உள்ளமை காண்க. கரடியின் இயல்புக்கேற்ப அரக்கனின் தலையை வாயால் கல்வி, மூளை சிதறச் செய்து, கும்பானுவைக் கொன்றான் இடும்பன் என்க.*

*பிரகத்தன் போர்*

***7084. தன் படைத்தலைவன் படத் தன் எதிர்,***
***துன்பு அடைத்த மனத்தன், சுமாலி சேய்,***
***முன் படைத்த முகில் அன்ன காட்சியன்,***
***வன்பு அடைத்த வரி சிலை வாங்கினான்.***

***தன் படைத்தலைவன்*** *- (தன் கீழிலிருந்த) சேனைத்தலைவன்;* ***தன் எதிர் பட*** *- தனக்கு முன்பே உயிர்விட;* ***துன்பு அடைத்த மனத்தன்*** *- துன்பம் நிறைந்த மனத்தையடைந்தவனான;* ***சுமாலிசேய்*** *- சுமாலியின் மகனான பிரகத்தன்;* ***முன் படைத்த முகில் அன்ன காட்சியன்*** *- முன்னே வந்து நின்ற மேகம் போன்ற தோற்றம் உடையவனாய்;* ***வன்பு அடைத்த வரிசிலை வாங்கினான்*** *- வலிமை வாய்ந்த தன் கட்டமைந்த வில்லை வளைத்தான்.*

*"இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்" என இப்படலத்து (7095)ப்பாடலில் வருதலால் சுமாலியின் சேய் பிரகத்தன் இவன் என்பது புலனாம். இவன் இராவணனால் கிழக்கு*

*வாசலில் அணி வகுக்குமாறு கட்டளையிடப்பட்டவன். ஒற்றுக் கேள்விப் படலத்தில் சேனைகாவலனாக இவன் இராவணனோடு உரையாடியுள்ளமை காண்க. கரிய மேனியும் வில்லும் உடைய பிரகத்தன், வானர வில்லோடு தோன்றும் மேகத்துக்குச்சமம் ஆனான். முதல் 11 பாக்கள் பிரகத்தன் முடிவுகூறும்.*

***7085. வாங்கி வார் சிலை, வானர மாப் படை***
***ஏங்க நாண் எறிந்திட்டு, இடையீடு இன்றி,***
***தூங்கு மாரி என, சுடர் வாளிகள்,***
***வீங்கு தோளினன், விட்டனனாம்அரோ.***

***வீங்கு தோளினன்*** *- புயங்கள் பூரிக்கப் பெற்ற பிரகத்தன்;* ***வார்சிலை வாங்கி*** *- நீண்ட வில்லை வளைத்து;* ***வானர மாப்படை ஏங்க*** *-குரங்கினப் பெரும்படை வருந்துமாறு;* ***நாண் எறிந்திட்டு*** *- நாண் ஒலியெழுப்பி;* ***தூங்குமாரி என*** *- பொழிகின்ற மழை போல;* ***சுடர்வாளிகள்*** *- ஒளிமிக்க அம்புகளை;* ***இடையீன்றி விட்டனன் ஆம்*** *- இடைவிடாது எய்தனன் ஆம்.*

*போர் எனில் பூரிக்கும் தோளினன், ஆதலால் "வீங்கு தோளினன்" என்றார், பிரகத்தன் நாண் ஒலி கேட்டு, வானரப் படை வருந்திற்று என அவன் ஆற்றல் மிகுதி கூறியவாறு. தூங்குதல் - சொரிதல் "வீழ்பனி தூங்கத் துவண்டு" (திருக்கோவை. 320) என்பது காண்க. ஆம் - உரையசை. அரோ-அசை.*

***7086. நூறும் ஆயிரமும் கணை நொய்தினின்***
***வேறு வேறு படுதலின், வெம்பியே,***
***ஈறு இல் வானர மாப் படை எங்கணும்***
***பாற, நீலன் வெகுண்டு, எதிர் பார்ப்புறா,***

***நொய்தினின்*** *- விரைவோடு;* ***கணை நூறும் ஆயிரமும்*** *- அம்புகள் நூறும் ஆயிரமுமாக;* ***வேறு வேறுபடுதலின்*** *- வெவ்வேறு வகையில் (தம்மீது) படுதலால்;* ***ஈறு இல் வானர மாப்படை*** *- எல்லையில்லாக் குரங்கினத்துப் பெரும்படைகள்;* ***வெம்பி*** *- மனம் கொதித்து;* ***எங்கணும் பாற*** *- எல்லாப் பக்கங்களிலும் சிதறி விட;* ***நீலன் எதிர் பார்ப்புறா*** *- நீலன் என்னும் வானர வீரன் எதிரே பார்த்து வெகுண்டு கோபித்து;*

*குளகம் - அடுத்த பாடலில் வினை கொள்ளும். பார்ப்புறா - பார்த்து. நொய்தினின் - விரைவில். பாற - வீற்று வீற்றாகச் சிதற.*

***7087. குன்றம் நின்றது எடுத்து, எதிர் கூற்று எனச்***
***சென்று எறிந்து, அவன் சேனை சிதைத்தலும்,***

***வென்றி வில்லின் விடு கணை மாரியால்,***
***ஒன்று நூறு உதிர்வுற்றது, அக் குன்றமே.***

***நின்றது குன்றம் எடுத்து*** - *அருகிருந்த ஒரு மலையை எடுத்து;* ***எதிர் கூற்று எனச் சென்று*** - *எதிரே வருகிற கூற்றுவனைப் போலப் போய்;* ***எறிந்து அவன் சேனை சிதைத்தலும்*** *-தாக்கி அந்தப் பிரகத்தனுடைய படையை அழித்த போது;* ***வென்றி வில்லின்*** *-அவ்வரக்கன் தனது வெற்றி ஏந்திய வில்லிலிருந்து;* ***விடுகணை மாரியால்*** *- விடுபட்ட அம்புகள் என்னும் மழையினால்;* ***அக்குன்றம்*** *- அந்த மலையும்;* ***ஒன்று நூறு உதிர்வு உற்றது*** *- ஒன்று நூறாக தூளாகப் (பொடிந்து) விழுந்தது.*

*குன்றம் நின்ற என்பதனை, நின்ற குன்றம் என மாற்றிப் பொருள் கொள்க. தன் சேனையை அம்பினால் சிதைத்த பிரகத்தன் சேனையை மலையால் நீலன் சிதைத்தான். விடுகணை மாரி-உருவகம்.*

***7088. மீட்டும், அங்கு ஓர் மராமரம் வேரொடும்***
***ஈட்டி, வானத்து இடி என எற்றலும்,***
***கோட்டும் வில்லும், கொடியும், வயப் பரி***
***பூட்டும் தேரும், பொடித் துகள் ஆயவே.***

***மீட்டும்*** *- (நீலன்) மீண்டும்;* ***அங்கு ஓர் மராமரம்*** *- அங்கிருந்த மராமரம் ஒன்றை;* ***வேரோடும் ஈட்டி*** *- வேரோடும் பிடுங்கி;* ***வானத்து இடியென எற்றலும்*** *- விண்ணில் எழும் இடி போன்று (முழங்கி) (அம்மரத்தை) வீசியபோது;* ***கோட்டும்*** *வில்லும்- வளைத்த வில்லும்;* ***கொடியும்*** *- தேரின் கொடியும்;* ***வயப்பரி பூட்டும் தேரும்*** *- வலிய குதிரைகள் பூட்டிய தேரும்;* ***துகள் பொடி ஆய*** *- சிறு துகளாய் விட்டன.*

***7089. தேர் இழந்து, சிலையும் இழந்திட,***
***கார் இழிந்த உரும் எனக் காந்துவான்,***
***பார் இழிந்து, பரு வலித் தண்டொடும்,***
***ஊர் இழந்த கதிர் என, ஓடினான்.***

**தேர் இழந்து சிலையும் இழந்திட** *- (பிரகத்தன்) தன் தேரினை இழந்து, வில்லையும் இழந்ததனால்;* ***கார் அழிந்த உரும்என -*** *(தனக்குப் பற்றுக்கோடாகிய) மேகத்தை விட்டுவந்த இடி போன்று;* ***காந்துவான்*** *- கொதித்தவனாகி;* ***பார் இழிந்து*** *- மண்ணில் இறங்கி;* ***பருவலி தண்டொடும்*** *- பருத்த வலிமையுள்ள தண்டு என்னும் ஆயுதத்தோடு;* ***ஊர் இழந்த கதிர் என ஓடினான்*** *- ஊர்தியாகிய தேரினை இழந்த சூரியனைப் போல (நீலனை நோக்கி) ஓடினான்.*

*ஊர்-ஊர்தி தேர், ஊர் இழந்த கதிர், தேர் இழந்த பிரகத்தனுக்கு உவமை. இல்பொருள் உவமை. சூரியன் தேரில் ஊர்ந்து வருவதாக குறிப்பிடல் சங்க காலத்திலிருந்து வரும் மரபாம். "காய் சினத்த கதிர்ச் செல்வன் தேர்பூண்ட மாஅ போல" (பட்டினப். 122. 123) ஊர் என்பது ஊர்கோள்; சூரியனைச் சுற்றி வட்டமாக அமையும் பரிவேடம். இந்த ஊர்கோளை இழந்த சூரியன்போல என்பது சிறந்த உரை.*

***7090. வாய் மடித்து அழல் கண்தொறும் வந்து உக,***
***போய் அடித்தலும், நீலன் புகைந்து, எதிர்***
***தாய் அடுத்து, அவன்தன் கையின் தண்டொடும்***
***மீ எடுத்து விசும்பு உற வீசினான்.***

***வாய் மடித்து** - வாயினை மடித்தவாறு; **அழல்கண் தொறும்வந்து உக** - நெருப்பு இருவிழிகளிலும் புறப்பட்டுச் சிந்த; **போய் அடித்தலும்** - போய் நீலனைத் தாக்கியபோது; **நீலன்** - நீலன் ஆனவன்; **புகைந்து எதிர்தாய்** - வெகுண்டு எதிரே தாவிச் சென்று; **அடுத்து** - நெருங்கிச் சென்று; **அவன்தன் கையில் தண்டொடும்** - அப்பிரகத்தனது கையில் உள்ள தண்டு என்னும் ஆயுதத்தோடும்; **மீ எடுத்து** - உயரத்தூக்கி; **விசும்புற வீசினான்** - விண்ணில் பட வீசினான்.*

*வாய் மடித்தலும் கண் சிவத்தலும் வெகுளியின் மெய்ப்பாடுகள். கண்களில் நெருப்புச் சிந்த வாய் மடித்த வண்ணம் வந்து பிரகத்தனை அவன் தண்டோடு எடுத்து நீலன் விண்ணில் வீசினான் என்க.*

***7091. அம்பரத்து எறிந்து, ஆர்ப்ப, அரக்கனும்,***
***இம்பர் உற்று, எரியின் திரு மைந்தன்மேல்,***
***செம்புனல் பொழியக் கதை சேர்த்தினான்,***
***உம்பர் தத்தமது உள்ளம் நடுங்கவே.***

***அம்பரத்து எறிந்து ஆர்ப்ப** - (இவ்வாறு அந்த அரக்கனை) விண்ணில் வீசி (நீலன்) ஆர்ப்பரிக்கும்போது; **அரக்கனும்** - அந்தப் பிரகத்தனும்; **இம்பர் உற்று** - தரையையடைந்து; உம்பர் தம் தமது **உள்ளம் நடுங்க** - வானுலகத் தேவர்கள் தத்தம் மனம் நடுங்குமாறு; **எரியின் திரு மைந்தன் மேல்** - நெருப்பின் மைந்தனான அந்த நீலன் மேல்; **செம்புனல் பொழிய** - உதிரம் சொரியுமாறு; **கதை சேர்த்தினான்** - தண்டால் தாக்கினான்.*

*அம்பரம் - ஆகாயம். இம்பர் - இங்குத் தரை எனும் பொருளில் வந்தது. உம்பர் - தேவர். அறங்காத்தற்காக தம் பொருட்டுப் போரிடுகின்ற நீலனுக்கு ஏதாயினும் நேர்ந்து விடுமோ என்று தேவர் நடுங்கினர்.*

***7092. அடித்தலோடும், அதற்கு இளையாதவன்,***
***எடுத்த தண்டைப் பறித்து எறியா, 'இகல்***
***முடித்தும்' என்று, ஒரு கைக்கொடு மோதினான்,***
***குடித்து உமிழ்ந்தெனக் கக்கக் குருதியே.***

***அடித்தலோடும்*** *- (பிரகத்தன் தண்டால்) அடித்துத் தாக்கிய போது;* ***அதற்கு இளையாதவன்*** *- (நீலன்) அதற்குச் (சிறிதும்) சளைக்காதவனாய்;* ***எடுத்த தண்டம்*** *- (அவன் கையில்) எடுத்த தண்டாயுதத்தை;* ***பறித்து எறியா*** *- பிடுங்கி எறிந்து;* ***இகல்முடித்தும் என்று*** *- இப்பகையினை (இப்போது) முடிப்பேன் என்று;* ***குடித்து உமிழ்ந்தென*** *-(முன்பு) பருகியுள்ள உதிரத்தைக் கொப்புளிப்பதைப் போல;* ***குருதி கக்க*** *- இரத்தத்தைக் கக்கும்படி;* ***ஒரு கைகொடு தாக்கினான்*** *- ஒரு கையைக் கொண்டு தாக்கினான் (நீலன்).*

*குடித்து உமிழ்ந்தெனக் குருதி கக்கினான் என்றது தற்குறிப்பேற்றம்.*

***7093. குருதி வாய்நின்று ஒழுகவும் கூசலன்,***
***நிருதன், நீலன் நெடு வரை மார்பினில்***
***கருதலாத முன் குத்தலும், கைத்து, அவர்***
***பொருத பூசல் புகல ஒண்ணாததே.***

***குருதி வாய்நின்று ஒழுகவும்*** *- இரத்தமானது வாயிலிருந்து ஒழுகவும்;* ***கூசலன்*** *- அஞ்சாதவனாய்;* ***நிருதன்*** *- அந்தப் பிரகத்தன்;* ***நீலன்நெடு வரை மார்பினில்*** *- நீலனுடைய நீண்ட மலை போன்ற மார்பில்;* ***கருதலாத முன் குத்தலும்*** *- நீலன் நினைப்பதற்கு முன் குத்தியவுடன்;* ***அவர்*** *- அவ்விருவரும்;* ***கைத்துப் பொருதபூசல்*** *- ஒருவருக்கொருவர வெறுப்புடன் புரிந்த போர்;* ***புகல ஒண்ணாதது*** *- (சொல்லால்) சொல்லும் தரம் உடையதன்று. நினைப்பதற்கு முன் பிரகத்தன் அவனைக் குத்தினான் என்பார். "கருதலாத முன் குடுத்தலும்" என்றார். எண்ணத்திலும் விரைந்தது செயல் என்பதாம். கைத்தல்-வெறுத்தல், வெகுளல்.*

***7094. மற்று, நீலன், அரக்கனை மாடு உறச்***
***சுற்றி வால்கொடு, தோளினும், மார்பினும்,***
***நெற்றி மேலும், நெடுங் கரத்து எற்றலும்,***
***இற்று, மால் வரை என்ன, விழுந்தனன்.***

***மற்று*** - மேலும்; ***நீலன்*** - நீலன் ஆனவன்; ***அரக்கனை*** - பிரகத்தனை; ***வால் கொடு மாடு உறச் சுற்றி*** - வாலினால் பக்கமெல்லாம் அழுத்தி சுற்றி; ***தோளினும் மார்பினும் நெற்றி மேலும்*** - தோள்களிலும் மார்பிலும் நெற்றியிலும்; ***நெடுங்கரத்து எற்றலும்*** - நீண்ட கைகளால் குத்தியபோது; ***இற்றமால் வரை என்ன விழுந்தனன்*** -அடியோடு பெயர்ந்த பெரிய மலைபோலப் பிரகத்தன் (மண்மேல்) வீழ்ந்தான்.

*பிரகத்தன் கால் இற்று, வீழ்தற்கு அடியோடு பெயர்ந்து வீழ்ந்த மலை உவமையாயிற்று. பிரகத்தன்- பெரிய மலை போன்றவன். பெயருக்கேற்ப வீழ்ந்தான் என்பார். "மால்வரை என்ன வீழ்ந்தனன்" என்ற நயம் காண்க.*

***7095. 'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' என்று***
***அறிந்து, வானவர் ஆவலம் கொட்டினார்;***
***வெறிந்த செம் மயிர் வெள் எயிற்று ஆடவர்***
***முறிந்து, தம்தம் முது நகர் நோக்கினார்.****

***பிரகத்தன் இறந்து வீழ்ந்தனன் என்று*** - பிரகத்தனும் மடிந்து விழுந்தானே என்று; ***அறிந்து வானவர்*** - (வியப்புடன்) அறிந்து தேவர்கள்; ***ஆவலம் கொட்டினர்*** - (மகிழ்ச்சியால்) ஆரவாரம் செய்தார்கள்; ***வெறிந்த செம்மயிர் வெள் எயிற்று ஆடவர்*** - செறிந்த சிவந்த முடியையும் வெள்ளிய பற்களையுமுடைய அரக்க வீரர்கள்; ***முறிந்து*** - மனம் உடைந்து; ***தத்தம் முதுநகர் நோக்கினர்*** - தங்கள் தங்களுக்குரிய தொன்மை வாய்ந்த நகர்ப் பகுதிகளை நோக்கிச் சென்றனர்; நீலனைப் பிரகத்தன் கதையால் அடித்தபோது "உம்பர் தத்தமது உள்ளம் நடுங்கினர்" (7091) இப்போது அவன் மடிவு, தேவர்களின் ஆரவாரத்திற்கு காரணமாயிற்று. புறமுதுகிட்டு ஓடத்துவங்கினர் என்னாது, "முதுநகர் நோக்கினர்" என நயம்பட மொழிந்த நேர்த்தியை உணர்க.

*தெற்கு வாயிலில் அங்கதன் நிகழ்த்திய போர்*

***7096. தெற்கு வாயிலில் சென்ற நிசாசரர்***
***மல் குலாவு வயப் புயத்து அங்கதன்***
***நிற்கவே, எதிர் நின்றிலர் ஓடினார்,***
***பொன் குலாவு சுபாரிசன் பொன்றவே.***

***தெற்கு வாயிலில் சென்ற நிசாசரர்*** - தெற்குக் கோட்டை வாயிலில் போர்க்குச் சென்ற அரக்கர்கள்; ***மல்குலாவும் வயப்புயத்து அங்கதன்*** - வலிமை விளையாடும் ஆற்றல் மிக்க தோள்களையுடைய அங்கதன்; ***நிற்கவே*** - போரிட்டு நிற்கையில்; ***பொன்குலாவு சுபாரிசன்*** - அழகு விளங்கும் சுபாரிசன் என்ற அணித்தலைவன்; ***பொன்ற*** - இறந்து விழுந்தவுடன்; ***எதிர் நின்றிலர் ஓடினர்*** - எதிரே நிற்க இயலாதவராய் ஓடினார்கள்.

*நிசாசரர் - இரவில் சஞ்சரிப்பவர் அரக்கர். மல் - இங்கு வலிமையைக் குறித்தது. வலிமை எனும் ஆற்றல் விளையாடுகளம் அங்கதன் தோள்கள் என்று அழகுற மொழிந்தார். "அங்கதன் நிற்க அரக்கர் நின்றிலர்" என்றதில் உள்ள முரண் சுவையுணர்க.*

### *மேலை வாயிலில் அனுமன் நிகழ்த்திய போர்*

***7097. நூற்று-இரண்டு எனும் வெள்ளமும், நோன் கழல்***
***ஆற்றல் சால் துன்முகனும், அங்கு ஆர்த்து எழ,***
***மேல் திண் வாயிலில் மேவினர் வீடினார்,--***
***காற்றின் மா மகன் கை எனும் காலனால்.***

***திண்மேல் வாயிலில்*** *- வலிமை மிக்க மேற்குக் (கோட்டை) வாயிலில்;* ***நூற்றிரண்டு எனும் வெள்ளமும்*** *- நூற்றிரண்டு வெள்ளம் அளவுடைய இராக்கதப் படை முழுவதும்;* ***நோன் கழல்*** *- வலிய வீரகண்டையணிந்த;* ***ஆற்றல்சால் துன் முகனும்*** *- வலிமை மிக்க துன்முகன் என்பவனும்;* ***ஆர்த்து எழ*** *- ஆர்ப்பரித்து எழ;* ***மேவினர்*** *- அங்கு வந்தவர்கள்;* ***காற்றின் மாமகன்*** *- வாயு மைந்தனாகிய அனுமானுடைய;* ***கையெனும் காலனால்*** *- கரம் என்னும் கூற்றுவனால்;* ***வீடினர்*** *- இறந்து பட்டனர்.*

*மேற்கு வாயிலில் நூற்றிரண்டு வெள்ளம் வானர சேனையுடன் நிற்குமாறு இந்திரசித்தினை இராவணன் பணித்தமையை, அணிவகுப்புப் படலத்தில் (6965) காண்க. அவன் கீழ் உள்ள படையில் ஓர் அணியின் தலைவன் துன்முகன். நூற்றிருபது வெள்ளமும் மடிந்தது என்பது பொருள் அன்று; நூற்றிருபது வெள்ளத்தில் துன்முகன் உட்பட, அனுமனை எதிர்த்தவர்கள் மடிந்தனர் என்பது கருத்து.*

### *நால்திசைப் போர் பற்றித் தூதுவர் இராவணனுக்குச் சொல்லுதல்*

***7098. அன்ன காலை, அயிந்திர வாய் முதல்***
***துன்னு போர் கண்ட தூதுவர் ஓடினார்,***
***'மன்ன! கேள்' என, வந்து வணங்கினார்;***
***சென்னி தாழ்க்க, செவியிடைச் செப்பினார்;***

***அன்னகாலை*** *- அப்போது;* ***அயிந்திர வாய்முதல்*** *- இந்திர திசையாகிய கிழக்குத் திசை தொடங்கி (நான்கு வாயிலிலும்);* ***துன்னுபோர் கண்ட*** *- நெருங்கிய போரினை (நேரில்) பார்த்த;* ***தூதுவர் ஓடினர்*** *- தூதர்கள் விரைந்து ஓடிச் சென்று;* ***வந்து*** *- (இராமன் முன்பு) வந்து;* ***வணங்கினர்*** *- பணிந்தவராய்;* ***சென்னி தாழ்க்க*** *- இராவணன் தலை வளைத்துக் கேட்க;* ***மன்ன கேள் என*** *- எங்கள் மன்னவனே கேட்பாயாக என்று;* ***செவி இடைச் செப்பினார்*** *- இராவணன் காதுகளில் சொன்னார்கள்.*

*அயிந்திரன் - இந்திரன். அவன் காக்கும் திசை கிழக்கு. போர் நிலையினை அவ்வப்போது மன்னவர்கள் அறிந்து கொள்ளுமாறு படையமைந்திருந்தமையை இப்பாடலால் அறியலாம்.*

***7099. 'வடக்கு வாய்தலில் வச்சிரமுட்டியும்,***
***குடக்கு வாயிலில் துன்முகக் குன்றமும்,***
***அடக்க அரும் வலத்து ஐம்பது வெள்ளமும்,***
***படச் சிதைந்தது, நம் படை' என்றனர்.***

**வடக்கு வாய்தலில் வச்சிரமுட்டியும்** - *வடக்கு வாயிலின் கண் வச்சிரமுட்டி என்னும் படைத்தலைவனும்;* **குடக்கு வாயிலில் துன்முகக் குன்றமும்** - *மேற்கு வாயிலின் கண் துன்முகன் என்னும் மலை எனலாம் படைத்தலைவனும்;* **அடக்க அரும் வலத்து** - *பிறரால் வெல்ல முடியாத வலிமை உடைய;* **ஐம்பது வெள்ளமும்** - *ஐம்பது வெள்ளம் என்னும் எண் அளவான சேனையும்;* **பட** - *அழியும்படி;* **நம் படை சிதைந்தது** - *நமது சேனை கெட்டழிந்தது;* **என்றனர்** - *என்று சொன்னார்கள்.*

*மடிந்த சேனையின் அளவு ஐம்பது வெள்ளம் ஆகும் என்று கொள்க. ஏன் எனில் மேற்கு வாயிலில் மட்டும் நூற்று இரண்டு வெள்ளம் சேனை என்பதனை முன் (7097) கூறியுள்ளமையால் துன்முகக் குன்றம்-உருவகம்.*

***7100. 'வென்றி வேற் கை நிருதர் வெகுண்டு எழ,***
***தென் திசைப் பெரு வாயிலில் சேர்ந்துழி,***
***பொன்றினான், அச் சுபாரிசன்; போயினார்***
***இன்று போன இடம் அறியோம்' என்றார்.****

**வென்றி வேற்கை நிருதர்** - *வெற்றி பொருந்திய வேல்களைக் கரங்களில் ஏந்திய அரக்கர்கள்;* **வெகுண்டு எழ** - *சினந்து எழுந்து;* **தென் திசைப் பெருவாயிலில் சேர்ந்துழி** - *தெற்குக் (கோட்டை) வாசலை அடைந்த அளவில்;* **அச்சுபாரிசன் பொன்றினான்** - *அந்தச் சுபாரிசன் மடிந்தான்;* **போயினார்** - *அவனுடன் போனவர்கள்;* **இன்று போன இடம்** - *இன்று சென்ற இடம் (எதுவென்று);* **அறியோம் என்றார்** - *அறிய இயலவில்லை என்று வருந்தினார்கள்.*

*மகோதரனும் மாபெரும் பக்கனும் தெற்குவாசல் பொறுப்பாளர என்று (6964) அணிவகுப்புப் படலப் பாடல் சுட்டும். தெற்கு வாயிலில் அங்கதனால் சுபாரிசன் கொல்லப்பட்டதை இப்படல 80 ஆம் பாடலில் கூறினார். இவ்வாயிலுக்கு அனுப்பப்பட்ட வீரர்கள் 16 கோடி என்பதனை, "தென்திசை வாயிலின் வைகும் தீயவர் என்றவர் எண்ணிரு கோடி என்பரால்" (6537) என்று முன்பு குறித்தார்.*

***7101. "கீழை வாயில், கிளர் நிருதப் படை,***
***ஊழி நாளினும் வெற்றி கொண்டு உற்ற நின்***
***ஆழி அன்ன அனீகத் தலைமகன்***
***பூழியான்; உயிர் புக்கது விண்' என்றார்.***

***கீழை வாயில்*** *-கிழக்கு வாயிலில்;* ***ஊழி நாளினும் வெற்றி கொண்டுற்ற*** *- யுக முடிவுக் காலத்திலும் வெற்றியே ஈட்டிய;* ***நின் ஆழியன்ன அனிகத்தலைமகன்*** *- உன்னுடைய ஆணைச்சக்கரம் போன்ற சேனைத்தலைவன்;* ***கிளர் நிருதப் படை*** *- எழுச்சி கொண்ட அரக்கர்படை(யுடன் சென்று பொருது);* ***பூழியான்*** *- புழுதியாய் (தூளாய்) ஆனான்;* ***உயிர் விண் புக்கது என்றார்*** *- அவன் உயிர் வானுலகடைந்தது என்றார்கள்.*

*ஊழிக்காலத்தும் வெற்றி கொண்ட பிரகத்தனையும் வென்ற வானரப் படையின் பேராற்றலை விளக்கினார்.*

*இராவணன் பெருஞ்சினம் கொள்ளல்*

***7102. என்ற வார்த்தை, எரி புகு நெய் எனச்***
***சென்று, சிந்தை புகுதலும், சீற்றத் தீ***
***கன்று கண்ணின்வழிச் சுடர் கான்றிட,***
***நின்று நின்று, நெடிது உயிர்த்தான்அரோ.***

***என்ற வார்த்தை*** *- என்று ஒற்றர் கூறிய வார்த்தைகள்;* ***எரிபுகு நெய் என*** *- தீயில் ஊற்றிய நெய் போல;* ***சிந்தை சென்று புகுதலும்*** *- மனத்துட் சென்று சேர்ந்தவுடனேயே;* ***சீற்றத் தீ*** *- சினம் என்னும் தீயானது;* ***கன்று*** *- வெதும்பிய;* ***கண்ணின் வழி*** *- கண்ணின் வழியாக;* ***சுடர்கான்றிட*** *- பொறிகளைச் சிந்த;* ***நின்று நின்று நெடிது உயிர்த்தான்*** *- விட்டு விட்டுப் பெருமூச்செறிந்தான்.*

*வெகுளிச் சுவையின் மெய்ப்பொருளை இப்பாடலால் அறிக. வானரங்களின் வெற்றிச் செய்தி நெருப்பில் ஊற்றிய நெய்.அந்த நெருப்பு கண் வழியாகப் பொறிப் பொறியாய்ச் சிந்தியது என அழகுபட உருவகித்தார். "பெருஞ்சினம் புனற்படு நெருப்பில் பொம்மெனச் சிதற" (பெருங். 1. 47-129) என்பார் கொங்குவேளிரும்.*

***7103. மறித்தும், 'ஆர் அவன் ஆர் உயிர் வவ்வினான்?***
***இறுத்துக் கூறும்' என்றான்; 'இசை எங்கணும்***
***நிறுத்தும் நீலன், நெடும் பெருஞ் சேனையை***

***ஒறுத்து, மற்று அவனோடும் வந்து உற்றனன்;***

***மறித்தும்*** *- மீண்டும் (இராவணன் தூதரைப் பார்த்து);* ***ஆர்அவன் ஆர் உயிர் வவ்வினான்*** *- யார் அந்தப் பிரகத்தனுடைய உயிரைக் கவர்ந்தவன்?;* ***இறுத்துக் கூறும்*** *- விடை சொல்லுங்கள்;* ***என்றான்*** *- என்று கேட்டான்;* ***எங்கணும்*** *- (அதற்குத் தூதர்கள்) எல்லாத் திசைகளிலும்;* ***இசை நிறுத்தும் நீலன்*** *- தன் புகழை நிலை நிறுத்தியுள்ள நீலன் என்பவன்;* ***நெடும் பெருஞ் சேனையை*** *- நீண்ட பெரிய (நம்) படையை;* ***ஒறுத்து*** *- அழித்து;* ***மற்றும் அவனோடும் வந்து உற்றனன்*** *-பிறகு அப் பிரகத்தனோடும் போரிட வந்தடைந்தான்.*

*இச்செய்யுளின் தொடர், அடுத்த செய்யுளின் "வீந்தனன்" என்பதனோடு முடியும். "இசையெங்கணும்" என்பது தொடங்கி, அடுத்த பாடல் "வீந்தனன்" என்பது முடியத் தூதுவர் கூற்று. இறுத்தல்-விடையிறுத்தல்.*

***7104. 'உற்ற போதின் இருவரும், ஒன்று அல,***
***கற்ற போர்கள் எலாம் செய்த காலையில்,***
***நெற்றிமேல், மற்று அந் நீலன் நெடுங் கையால்***
***எற்ற, வீந்தனன்' என்ன இயம்பினார்.***

***உற்ற போதின்*** *- (நீலன், பிரகத்தனோடு) போரிட வந்த போதில்;* ***இருவரும்*** *- அவ்விரு வீரர்களும்;* ***ஒன்றல*** *- ஒரு வகையல்ல;* ***கற்ற போர்கள் எலாம் செய்த காலையில்*** *- (தாங்கள்) பயின்றிருந்த போர் வகைகள் எல்லாம் புரிந்து போரிடும் வேளையில்;* ***அந்நீலன்*** *- அந்த நீலன் என்பவன்;* ***நெற்றி மேல்*** *- பிரகத்தனுடைய நெற்றியின் மீது;* ***நெடுங்கையால் எற்ற*** *- நீண்ட கையினால் தாக்க; வீந்தனன் - மாண்டு வீழ்ந்தனன் (பிரகத்தன்);* ***என்ன இயம்பினார்*** *- என்று விடையிறுத்தனர் (தூதுவர்).*

*போர்க்கல்வியைக் கற்ற தீரர்கள் இருவரும் என்பது தோன்ற, "கற்ற போர்கள்" என்றும், அவை பல திறத்தனவாய், கிளை விரித்தனவாய் இருந்தன என்பது தோன்ற, "கற்ற போர்கள் எலாம்" என்றும் உரைத்தார். கற்ற போர்-விற்போர், மற்போர், யானை ஏற்றம், குதிரை ஏற்றம், தேர் செலுத்துதல் முதலியனவாம்.*

***7105. 'அன்னவன்னொடும் போன அரக்கரில்***
***நல் நகர்க்கு வந்தோம், ஐய! நாங்களே'***
***என்ன என்ன, எயிற்று, இகல் வாய்களைத்***
***தின்னத் தின்ன, எரிந்தன திக்கு எலாம்.***

***ஐய*** *-தலைவனே!* ***அன்னவன்னொடும் போன அரக்கரில்*** *- அப்பிரகத்தனோடு போருக்குப் போன அரக்க வீரர்களில்;* ***நல் நகர்க்கு வந்தோம் நாங்களே*** *- (நம்) அழகிய இலங்கை மாநகர்க்கு (மீண்டு) வந்தவர்கள் நாங்கள் மட்டுமே;* ***என்ன என்ன*** *- என்று தூதுவர் கூறக்கூற;* ***இகல் வாய்களை எயிற்று*** *- (இராவணன்) தனது வினவிய வாய்கள் பத்தினையும் பற்களினால்;* ***தின்னத் தின்ன*** *- பன்முறை கடித்துக் கொண்ட போது;* ***திக்கு எலாம் எரிந்தன*** *- திசைகள் யாவும் தீப்பற்றி எரிந்தன.*

*மற்றவர்கள் போரில் இறந்தார்கள் என்று உரைக்கும் துணிவின்றி, அப்பொருள் தானாகத் தோன்றுமாறு, "நகர்க்கு வந்தோம் நாங்களே" எனக் கூறிய சாதுரியம் பாராட்டற்குரியது.*

## *இராவணன் போருக்குப் புறப்படுதல்*

***7106. மாடு நின்ற நிருதரை, வன்கணான்***
***ஓட நோக்கி, 'உயர் படையான் மற்று அக்***
***கோடு கொண்டு பொருத குரங்கினால்***
***வீடினான்!' என்று, மீட்டும் விளம்பினான்:***

***மாடு நின்ற நிருதரை*** *- அருகில் நின்ற அரக்கர்களை;* ***வன்கணான்*** *- கொடுமை நிறைந்த கண்களால் இராவணன்;* ***ஓட நோக்கி*** *- (அஞ்சி அவர்) ஓடுமாறு உறுத்துப் பார்த்துவிட்டு;* ***உயர் படையான்*** *- சிறந்த ஆயுதங்களையுடைய பிரகத்தன்;* ***அக்கோடு கொண்டு*** *- அந்த மரக்குச்சிகளைக் கொண்டு;* ***பொருத குரங்கினால் வீடினான்*** *- போரிட்ட குரங்கால் மாண்டான்;* ***என்று மீட்டும் விளம்பினான்*** *- என்று திரும்பவும் கூறிக்கொண்டான்.*

*ஒப்புயர்வற்ற ஆயுதங்களை ஏந்திய பிரகத்தன், வெறுங் கிளைகளை ஏந்திய குரங்குக்கா தோறறான் எனும் இராவணனின் நெஞ்சப் பொருமல் வெளிப்பட, "உயர் படையான் மற்று அக்கோடு கொண்டு பொருத குரங்கினால் வீடினான்?" என்றார். மற்று-வினைமாற்றுப் பொருளில் வந்தது.*

***7107. ' "கட்டது, இந்திரன் வாழ்வை; கடைமுறை***
***பட்டது, இங்கு ஓர் குரங்கு படுக்க" என்று***
***இட்ட வெஞ் சொல் எரியினில், என் செவி***
***சுட்டது; என்னுடை நெஞ்சையும் சுட்டதால்;***

***கட்டது இந்திரன் வாழ்வை*** *- (இந்தப் பிரகத்தன்) வேருடன் களைந்தது இந்திரன் வாழ்க்கையை;* ***கடைமுறை*** *- இறுதியில்;* ***இங்குபட்டது*** *- இப்போது அவன் அழிந்ததோ;* ***ஓர் குரங்கு படுக்க*** *- ஒரு வானரம் கொன்றதனால்;* ***என்று இட்ட***

***வெஞ்சொல்*** - *என்று (இத்தூதர்கள்) தந்த கொடுஞ்சொல்லாகிய;* ***எரியினில்*** - *நெருப்பினால்;* ***என் செவி சுட்டது*** - *என் காதுகள் பொசுக்கப்பட்டன;* ***என்னுடைய நெஞ்சையும் சுட்டது*** - *(அவ்வளவோ) என் மனத்தையும் சுட்டுவிட்டது.*

*புரந்தார் கண்ணீர் மல்கச் (குறள். 780) செத்துள்ளான் பிரகத்தன். "என் நெஞ்சையும் சுட்டதால்" என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு உம்மையாம். இல்- அசை.*

### *7108.* ***'கருப்பைபோல் குரங்கு எற்ற, கதிர் சுழல்***
***பொருப்பை ஒப்பவன்தான் இன்று பொன்றினான்;***
***அருப்பம் என்று பகையையும், ஆர் அழல்***
***நெருப்பையும், இகழ்ந்தால், அது நீதியோ?'***

***கருப்பை போல் குரங்கு எற்ற*** *-எலியைப் போன்ற (இழிந்த) குரங்கு தாக்கி;* ***கதிர் சுழல் பொருப்பை ஒப்பவன் தான் இன்று பொன்றினான்*** *- சூரியன் சுற்றும் மலையாகிய மேரு மலை போன்ற பிரகத்தன் இன்று மாண்டான்;* ***பகையையும் ஆர் அழல் நெருப்பையும்*** *- பகையினையும் அரிய நெருப்பையும்;* ***அருப்பம் என்று இகழ்ந்தால்*** *- அற்பமென்று இழிவு செய்தால்;* ***அது நீதியோ?*** *- அது நீதி நெறியாகுமோ? (ஆகாது).*

*பிரகத்தன் என்ற சொல்லுக்குப் பெரிய மலை என்பதே பொருளாதலின், "கதிர்சுழல் பொருப்பையொப்பவன்" என்றார். அற்பம் எதுகை நோக்கி அருப்பம் என வந்தது. தீயையும் பகையையும் சிறிதென இகழ்தல் கூடாது என்பதை "வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால், தீ எச்சம் போலத் தெறும்" (குறள். 674) என வள்ளுவரும் கூறுவர். "அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும், முழையுறை சீயமும் என்றிவை நான்கும், இளைய எளிய என்றெண்ணி, இகழின் இழுக்கம் தரும்" என்பது ஆசாரக்கோவை (84) "எரியும் தீத்திரள் எள்துணைத்து ஆயினும், கரியச் சுட்டிடும் காந்திக் கனலுமேல், தெரியில் தொல் பகை தான் சிறிதாயினும், விரியப் பெற்ற பின் வென்றிடுகிற்குமே" என்பது சூளாமணி. (சீயவதை. 71) வேற்றுப் பொருள் வைப்பணி.*

### *7109.* ***நிற்க அன்னது, நீர் நிறை கண்ணினான்,***
***'வற்கம்' ஆயின மாப் படையோடும் சென்று,***
***ஒற்கம் வந்து உதவாமல் உறுக!' என,***
***விற் கொள் வெம் படை வீரரை ஏவியே,***

***நீர்நிறை கண்ணினான்*** *- (இவ்வாறு எண்ணிய) நீர்நிறைந்த கண்ணினனாய இராவணன்;* ***அன்னது நிற்க*** *- அது கிடக்கட்டும்;* ***வற்கம் ஆயின***

***மாப்படையோடும்சென்று*** - *அணிஅணியாகப் பெரும் படையோடு சென்று;* ***ஒற்கம் வந்து உதவாமல்*** - *தளர்ச்சியால் பின் அடைதலின்றி;* ***உறுக என*** - *சென்று போர் புரியுங்கள் என்று;* ***வில் கொள் வெம்படை வீரரை ஏவி*** - *வில் ஏந்திய கொடிய சேனை வீரர்களைக் (களத்துக்குச்) செல்க என்று ஆணையிட்டு.*

*இராவணன் அவலம் "நீர் நிறை கண்ணினான்" என்ற தொடர் உணர்த்தும் குறிப்பு. படைகளை அணி அணியாகப் பிரித்தல் இன்றும் வழக்கு. ஆதலின், "வற்கம் ஆயின மாப்படை" என்றார். வருக்கம்-இனம். அணி. எதுகை நோக்கி வற்கம் என வந்தது.*

### *7110. மண்டுகின்ற செருவின் வழக்கு எலாம்*
### *கண்டு நின்று, கயிலை இடந்தவன்,*
### *புண் திறந்தன கண்ணினன், பொங்கினான்,*
### *திண் திறல் நெடுந் தேர் தெரிந்து ஏறினான்--*

***கயிலை இடந்தவன்*** - *கயிலை மலையைப் பெயர்த்து எடுத்தவனான இராவணன்;* ***மண்டுகின்ற செருவின்*** - *நிறைந்து (ஒருவரையொருவர்) மிக்குச் செல்கின்ற போரின்;* ***வழக்கு எலாம் கண்டு நின்று*** - *நெறிமுறைகளையெல்லாம் மனத்தால் ஆராய்ந்து;* ***புண் திறந்தன*** - *புண்ணைப் பிளந்தாற்போன்று (மிகச் சிவந்த);* ***கண்ணினன் பொங்கினான்*** - *கண்களையுடையவனாய்ச் சினந்து பொங்கி;* ***திண்திறல் நெடுந்தேர் தெரிந்து ஏறினான்*** - *வலிய உறுதியான நெடுந்தேர் ஒன்றை நன்கு தேர்ந்து (அதில்) ஏறினான்.*

*ஈசன் கயிலையை எளிதாக எடுத்தவனுக்கு அற்பக் குரங்குகள் தரும் தொல்லை பொறுக்க முடியாத சினத்தையாக்கிற்று என்பார். "கயிலையிடந்தவன் புண்திறந்து அன கண்ணினன்" என்றார்.போரில் பகைவர் தாக்குதல், எதிர் தாக்குதல், எயில் காத்தல், எயில் வளைத்தல்; அதிரப் பொருதல் முதலிய போர் முறைகளையெல்லாம் நன்கறிந்தவன் இராவணன். அவற்றையெல்லாம் மனத்துள் நன்கு ஆராய்ந்து தேர் ஏறினான் என்பார். "செருவின் வழக்கு எலாம் கண்டு நின்று நெடுந்தேர் ஏறினான்" என்றார்.*

### *7111. ஆயிரம் பரி பூண்டது; அதிர் குரல்*
### *மா இருங் கடல் போன்றது; வானவர்*
### *தேயம் எங்கும் திரிந்தது; திண் திறல்*
### *சாய, இந்திரனே பண்டு தந்தது.*

***ஆயிரம் பரி பூண்டது*** - *(இராவணன் ஏறிய தேர்) ஆயிரம் குதிரைகள் பூட்டப் பெற்றது;* ***அதிர் குரல்மா இருங்கடல் போன்றது*** - *முழங்கொலியுடைய மிகப் பெரிய கடலைப் போன்றது;* ***வானவர் தேயம் எங்கும் திரிந்தது*** - *தேவர் நாடு முழுவதும்*

*சென்று வந்தது* ***திண்திறல் சாய*** *- (தனது) வலிய திறமை ஒடுங்கியபோது;* ***இந்திரனே பண்டு தந்தது*** *- தேவேந்திரனே முன்பு கொடுத்தது.*

*ஆயிரம் மிகுதி குறித்தது. இந்திரன் தந்தது ஆதலால், மண்ணில் மட்டும் அன்றி, விண்ணிலும் பாயவல்லது அத்தேர். இந்திரனோடு இராவணன் மோதிய போது, நிற்க ஆற்றாது இந்திரன் விட்டுச் சென்ற தேர் இது என்பதாம்.*

***7112. ஏற்றி, எண்ணி இறைஞ்சி, இடக் கையால்***
***ஆற்றினான், தன் அடு சிலை; அன்னதின்***
***மாற்றம் என் நெடு நாண் ஒலி வைத்தலும்,***
***கூற்றினாரையும் ஆர் உயிர் கொண்டதே.***

***ஏற்றி எண்ணி இறைஞ்சி*** *- (தன் வழிபடு கடவுளை) துதித்து மனங்கொண்டு தியானித்து வணங்கி;* ***தன் அடுசிலை*** *- (பின்பு) (பகைவரைக்) கொன்று குவிக்கும் தனது வில்லினை;* ***இடக்கையால் ஆற்றினான்*** *- இடக்கையால் பற்றினவனாகி;* ***அன்னதின் மாற்றம் என் நெடுநாண் ஒலி வைத்தலும்*** *- அவ்வில்லுடைய சொல் என்று சொல்லத்தக்க நீண்டநாணின் ஒலியை எழுப்பியவுடன்;* ***கூற்றினாரையும் ஆருயிர் கொண்டது*** *- இயமனுடைய அரிய உயிரையும் கவர்ந்தது போன்றிருந்தது (அந்த ஒலி).*

*ஏத்தி என்பது எதுகை நோக்கி, "ஏற்றி" என ஆயிற்று. மனத்தால நினைத்து, வாயால் துதித்து, மெய்யால் வணங்கினான் என்பதனால், "ஏற்றி எண்ணி, இறைஞ்சி" என்றார் எண்ணி ஏற்றி இறைஞ்சி என்பது செய்யுளாதலின் பிறழ்ந்து வந்தது என்க. நாணின் ஒலி வில் பேசுவது போன்றதாதலின், "அன்னதின் மாற்றம் என் நெடுநாண் ஒலி" என்றார்.*

***7113. மற்றும், வான் படை, வானவர் மார்பிடை***
***இற்றிலாதன, எண்ணும் இலாதன,***
***பற்றினான்; கவசம் படர் மார்பிடைச்***
***சுற்றினான்; நெடுந் தும்பையும் சூடினான்.***

***மற்றும்*** *- பின்னும்;* ***வானவர் மார்பிடை*** *- தேவர்கள் மார்பில் (பாய்ந்து);* ***இற்றிலாதன*** *- ஒடிந்து விடாதவையும்;* ***எண்ணும் இலாதன*** *- எண்ணுதற்கும் இயலாத அளவினையுடையனவுமாகிய;* ***வான்படை பற்றினான்*** *- உயர்ந்த ஆயுதங்களைக் கைகளில் எடுத்துக் கொண்டான்;* ***படர் மார்பிடைக் கவசம் சுற்றினான்*** *- பரந்த மார்பினிடையே கவசம் அணிந்தான்;* ***நெடும்தும்பையும் சூடினான்*** *- (தான் புரியும் போர்க்கு அடையாள மாலையான) தும்பை மாலையையும் சூடிக்கொண்டான். (இராவணன்)*

*அதிரப் பொருவது தும்பைத் திணையாதலின், அம்மாலையைச் சூடிப் புறப்பட்டான். மைந்து பொருளாக வந்த வேந்தனை, சென்று தலையழிக்கும் சிறப்பிற்று என்ப. (தொல். பொருள். 71) என்று தொல்காப்பியம் தும்பைத்திணையின் இலக்கணம் கூறுவது அறிக.*

***7114. பேரும் கற்றைக் கவரிப் பெருங் கடல்***
***நீரும் நீர் நுரையும் என நின்றவன்,***
***ஊரும் வெண்மை உவா மதிக் கீழ் உயர்***
***காரும் ஒத்தனன், முத்தின் கவிகையான்.***

***பேரும் கற்றைக் கவரி** - (இருமருங்கும்) வீசப்படும் தொகுத்துக் கட்டப்பட்ட வெண்சாமரையால்; **பெருங்கடல் நீரும் நீர்நுரையும்** - என்ன பெரிய கடலின் நீரும், அதன்மீது உள்ள நுரையும் போல நின்றவனாகிய இராவணன்; **முத்தின் கவிகையான்** - முத்தால் ஆகிய குடை பிடிக்கப்பட்டதனால்; **வெண்ணிறம் ஊரும்** - வெள்ளை நிறமுடைய; **உவா மதிக் கீழ் உயர்காரும் ஒத்தனன்** -பௌர்ணமிச் சந்திரன் கீழே ஒளிர்கின்ற மேகத்தையும் போலே விளங்கினான்.*

*மன்னர் சின்னங்களாகிய சாமரையும் முத்துக் குடையும் கூறப்பட்டன. சாமரைக்குக் கடல் நுரையும், இராவணனுக்குக் கடல் நீரும் உவமைகள் ஆயின. முத்துக் குடையின் கீழ் விளங்கிய இராவணனுக்கு முழுமதியும் அதன் கீழ் உள்ள மேகமும் உவமைகள் ஆயின. வெண்மை நிறமும், புரளும் செயலும் பற்றி, சாமரைக்குக் கடல் நுரை உவமை. வட்ட வடிவமும் வெண்மை நிறமும் காரணமாக முழுமதி முத்துக்குடைக்கு உவமையாயிற்று.*

***7115. போர்த்த சங்கப் படகம் புடைத்திட,***
***சீர்த்த சங்கக் கடல் உக, தேவர்கள்***
***வேர்த்து அசங்கிட, அண்டம் வெடித்திட,***
***ஆர்த்த சங்கம், அறைந்த, முரசமே.***

***போர்த்த சங்கம் படகம் புடைத்திட** - தோல் போர்த்தப் பெற்ற கூட்டமான படகம் எனும் தோற்கருவி அடிக்கப்படவும்; **சீர்த்த சங்கக்கடல் உக** - சிறப்புக்குரிய சங்குகளையுடைய கடல் சிதறவும்; **தேவர்கள் வேர்த்து அசங்கவும்** -விண்ணுலகத் தேவர்கள் (அச்சத்தால்) உடல் வியர்த்து வாடவும்; **அண்டம் வெடிபட** - அண்டங்கள் வெடிபடவும்; **சங்கம் ஆர்த்த** - சங்கங்கள் பேரொலி எழுப்பின; **முரசம் அறைந்த** - முரசங்கள் முழங்கப்பட்டன.*

*மண்ணில் நிகழ்ந்த செயலால், வானுலகில் பாதிப்புகள் நிகழ்ந்தன எனக் கூறியது இது. படகம் தோல் போர்த்தப் பெற்ற ஒருவகைப் போர்ப்பறை. திரிபணி.*

***7116. தேரும் மாவும் படைஞரும் தெற்றிட,***
***மூரி வல் நெடுந் தானையில் முற்றினான்;***
***நீர் ஒர் ஏழும் முடிவில் நெருக்கும் நாள்,***
***மேரு மால் வரை என்ன, விளங்கினான்.***

**தேரும் மாவும் படைஞரும் தெற்றிட** - தேர்களும் குதிரைகளும் படை வீரர்களும் நெருங்க; **மூரி வல்நெடுந் தானையில் முற்றினான்** -வலிமை மிக வாய்ந்த பெரிய சேனைகளால் சூழப்பட்ட இராவணன்; **ஓர் எழுநீர்முடிவில் நெருக்கும் நாள்** - ஒப்பற்ற ஏழு கடல்களும் யுகமுடிவில் சூழ்ந்து நெருக்கப் பெற்றபோது; **மேருமால் வரை என்ன விளங்கினான்** - மிகப் பெரிய மேருமலை போல் காணப்பட்டான்.

*தெற்றல் - நெருக்கல். "கற்றவர் தெற்றிவர" (பெரியாழ்.1:5:8) ஊழிக்காலத்தில் மேருகிரியைக் கடல் அலைகள் சூழ்ந்து நெருக்கி மூழ்விக்கும் என்பது புராண மரபு. ஏழுகடல்களால் நெருக்கப்பெறும் மேருகிரிக்கு, இராவணன் நிறத்தாலும் பெருமையாலும் ஒப்பு ஆயினான்.*

**கலிவிருத்தம் (வேறுவகை)**

***7117. ஏழ் இசைக் கருவி வீற்றிருந்தது என்னினும்,***
***சூழ் இருந் திசைகளைத் தொடரும் தொல் கொடி,***
***வாழிய உலகு எலாம் வளைத்து வாய் இடும்***
***ஊழியின் அந்தகன் நாவின், ஓங்கவே;***

**ஏழிசைக்கருவி** - ஏழ் இசையினையும் தருகின்ற வீணையாகிய இசைக்கருவி; **வீற்றிருந்தது என்னினும்** - (உருவம்) பெருமையுறப் பொறிக்கப்பட்டிருந்தது ஆனாலும்; **சூழ்இருந்திசைகளை** - சுற்றியுள்ள பெருந்திசைகளை; **தொடரும் தொல்கொடி** - காற்றினால் அளாவிப் பறக்கின்ற பழமையான (இராவணனது) கொடியானது; **வாழிய உலகு எலாம்** - வாழ்கின்ற உலகையெல்லாம்; **வளைத்து வாயிடும்** - வளைத்துத் தன் வாயில் இட்டு விழுங்கும்; **ஊழியின்** - ஊழிக்காலத்து; **அந்தகன் நாவின் ஓங்க** - இயமனின் நாக்கினைப் போல உயரத்தே தோன்றவும்.

*இகு முதல் ஆறு பாடல்கள் ஒரு தொடர். இராவணன் வீணைக் கொடியுடைய வேந்தன். வீணைக்கொடி திசைகளை அளாவிப் பறப்பது, ஊழிக்காலத்து கிடைத்ததை யெல்லாம் சுழற்றி விழுங்கும் கூற்றுவனின் சுழலும் நாவுக்கு உவமையாயிற்று. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

*7118.  'வேணு உயர் நெடு வரை அரக்கர் வேலைக்கு ஓர்*
*தோணி பெற்றனர்' எனக் கடக்கும் தொல் செருக்*
*காணிய வந்தவர், கலக்கம் கைம்மிக,*
*சேண் உயர் விசும்பிடை அமரர், சிந்தவே;*

***வேணுஉயர் நெடுவரை*** *- மூங்கில்கள் உயர்ந்த பெரிய மலை போன்ற;* ***அரக்கர்*** *- அரக்கர்களாகிய;* ***வேலைக்கு ஓர் தோணி பெற்றனர்*** *- கடலைத் தாண்டுவதற்குக் (கிட்டிய) (இராமனாகிய) ஓர் ஓடம் பெற்றவராய்;* ***என கடக்கும்*** *- என்று அத்தோணி கடந்து செல்லப்போகும்;* ***தொல்செரு*** *- தொன்மை வாய்ந்த இலங்கைக் களத்தை;* ***காணிய வந்தவர் அமரர்*** *- காண வந்தவர்களாகிய தேவர்கள்;* ***கலக்கம் கைம்மிக*** *- (இராவணனைக் கண்டு) கலக்கம் மேலோங்க;* ***சேண் உயிர் விசும்பிடை சிந்த*** *- மிக உயர்ந்த ஆகாயத்தில் சிதறிப் போகவும்;*

*வானோர் துன்பக் கடலிடைத் தோணியாய் வந்தவன் பெருமான். "அரக்கர் என் கடலிடை ஆழ்கின்றார் ஒரு மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினார்" (2636) என முன்பு குறித்தார். கைம்மிகல்-மேல் ஓங்குதல். "கைமீறிப் போயிற்று" எனும் வழக்கும் காண்க.*

*7119.     கண் உறு கடும் புகை கதுவ, கார் நிறத்து*
*அண்ணல் வாள் அரக்கர்தம் அரத்தப் பங்கிகள்*
*வெண் நிறம் கோடலின், உருவின் வேற்றுமை,*
*நண்ணினர் நோக்கவும், அயிர்ப்பு நல்கவே;*

***கண் உறு கடும் புகை கதுவ*** *- (இராவணனுடைய) கண்களில் எழுந்த சினத்தீயால் தோன்றிய கொடிய புகை சூழ்வதனால்;* ***கார் நிறத்து அண்ணல் வாள் அரக்கர் தம் அரத்தப் பங்கிகள்*** *- கரிய நிறமும் தலைமையும் கொண்ட கொடிய அரக்கருடைய செம்பட்ட உரோமங்கள்;* ***வெண்ணிறம் கோடலின்*** *- வெண்மை நிறம் கொண்டு விட்டதனால்;* ***உருவில் வேற்றுமை*** *- உருவத்தில் வேற்றுமையை;* ***நண்ணினர் நோக்கவும்*** *-அவர்களுடைய உறவினர் கண்டபோதும்;* ***அயிர்ப்பு நல்கவும்*** *- ஐயத்தைத் தரவும்;*

*அண்ணல் தேவரையும் சிறை வைத்த அரக்கர் தம் தலைமை குறித்து இராவணன் கண்ணில் எழுந்த செந்தீயால் தோன்றிய வெண்புகை, அரக்கர்தம் செம்பட்டை முடியினை வெண்மை யாக்கி விட்டமையால் அரக்கவீரர்களை போர்களத்துக்கு வழி அனுப்பி விடைபெற வந்த அவர்தம் உறவினர்கள் தம் உறவு வீரர் யார் எனத் தெரியாது திகைத்தனர் என்பதாம். கண்ணில் தீயும் புகையும்-உயர்வு நவிற்சி. அரத்தம்-சிவப்பு. பங்கி-மயிர்.*

*7120.  கால் நெடுந் தேர் உயர் கதலியும், கரத்து*
*ஏனையர் ஏந்திய பதாகை ஈட்டமும்,*

**ஆனையின் கொடிகளும், அளவித் தோய்தலால்,**
**வான யாறொடு மழை ஒற்றி வற்றவே;**

**கால் நெடுந் தேர் உயர் கதலியும்** - சக்கரங்கள் பொருந்திய உயர்ந்த தேர்களில் கட்டியுள்ள கொடிகளும்; **ஏனையர் கரத்து ஏந்திய பதாகை ஈட்டமும்** - மற்றைய வீரர்கள் கைகளில் ஏந்திய கொடிகளின் கூட்டமும்; **ஆனையின் கொடிகளும்** - ஆனைகள் ஏந்திச் சென்ற கொடிகளும்; **அளவித் தோய்தலால்** - ஒன்று கூடித் தோய்வதனால்; **வான ஆறொடு** - வான கங்கையோடு; **மழை ஒற்றி வற்ற** - மேகமும் (நீர் உறிஞ்சப்பட்டு) நீர் வற்றிப் போகவும்;

வான ஆறு-ஆகாய கங்கை. இக்கொடிகளின் கூட்டம் மேக நீரையெல்லாம் உறிஞ்சியும் விடாய் தீராதது போல, வான கங்கையளவும் வளர்ந்து அதனையும் வற்றச் செய்து விட்டது என உயர்வு நவிற்சியால் குறித்தார்.

*7121.* **ஆயிரம் கோடி பேய், அங்கை ஆயுதம்**
**தூயன சுமந்து, பின் தொடர, சுற்று ஒளிர்**
**சேயிரு மணி நெடுஞ் சேமத் தேர் தெரிந்து,**
**ஏயின ஆயிரத்து இரட்டி எய்தவே;**

**ஆயிரம் கோடிபேய்** - ஆயிரம் கோடிப் பேய்க்கணங்கள்; **அங்கை தூயன ஆயுதம் சுமந்து பின்தொடர** - தம் கையகத்தே ஆயுதங்களைச் சுமந்து கொண்டு பின்தொடரவும்; **சுற்று ஒளிர் சேஇருமணி** - சுற்றிலும் ஒளிவீசுகின்ற சிவந்த பெரிய மணிகள் கட்டிய; **தெரிந்து ஏயின** - தெரிந்தெடுத்து உடன்வருமாறு ஆணையிடப்பட்டவையுமான; **நெடுஞ்சேமத்தேர் ஆயிரத்து இரட்டி எய்த** - பெரிய சேமத்தேர்கள் இரண்டாயிரம் பின்தொடரவும்.

இராவணன் கொடுமைக்கேற்ப அவன் மெய்க்காவல் படையாகப் பேய்களைக் கூறினார். போரிடும் தேர் அழியின் அதனிடத்தில் போய் நிற்க இருப்பில் இருக்கும் தேர், "சேமத்தேர்"; போரில் ஆயுதங்கள் அழியின் உடனே அவற்றைப் பெறுவதற்காக ஆயத்த நிலையில் வைத்திருக்கும் படைக்கருவிகள் சேமக்கலங்கள். அவற்றை இரண்டாயிரந் தேர்களில் பேய்கள் எடுத்துச் சென்றன எனினுமாம்.

*7122.* **ஊன்றிய பெரும் படை உலைய, உற்று உடன்**
**ஆன்ற போர் அரக்கர்கள் நெருங்கி ஆர்த்து எழ,**
**தோன்றினன்--உலகு எனத் தொடர்ந்து நின்றன**
**மூன்றையும் கடந்து, ஒரு வெற்றி முற்றினான்.**

**ஊன்றிய பெரும்படை** - போர்புரிய எதிரே நின்ற பெரிய வானரப் படை; **உலைய** - நிலைகுலைய; **உடன்உற்று ஆன்ற போர் அரக்கர்கள்** - தன்னுடன் வந்த

*(ஆற்றல்) நிறைந்த போர் புரியவுள்ள அரக்கர்கள்;* ***ஆர்த்து எழ*** *-(மகிழ்ச்சியால்) ஆர்ப்பரித்து ஓங்க;* ***உலகு எனத் தொடர்ந்து நின்றன*** *- உலகம் என்ற பெயருடன் (ஒன்றின் மேல் ஒன்றாக) தொடர்ந்து உள்ளனவாகிய;* ***மூன்றையும் கடந்து*** *- மூன்றுலகையும் (தடுப்பார் இல்லாமையால்) கடந்து சென்று;* ***ஒரு வெற்றி முற்றினான்*** *- உலகங்களையெல்லாம் வென்று ஒப்பற்ற வெற்றியைத் திரட்டியவனான இராவணேசுவரன்;* ***தோன்றினன்*** *- போர்க்களத்தில் காட்சியளித்தான்.*

*ஊன்றிய படை-இலங்கை மதிலைச் சுற்றி நின்ற வானரப் படையைக் குறித்தது. "எதிர் ஊன்றல் காஞ்சி" (பு.வெ.மாலை) கொடி ஓங்க, அமரர் சிந்த, புகை நோக்கவும் அயிர்ப்பு நல்க, வான ஆறொடு மழை ஒற்றி வற்ற, ஆயிரங்கோடி பேர் தொடர, சேமத்தேர் ஆயிரத்திரட்டி எய்த, ஊன்றிய பெரும்படை உலைய, அரக்கர் நெருங்கி ஆர்த்தெழ, வெற்றி முற்றியவனான இராவணன் தோன்றினன். என முன்பு வந்த ஐந்து செய்யுள்களில் வந்த வினை எச்சங்களையும், இச்செய்யுளில் வந்த வினையெச்சங்களையும் கூட்டி தோன்றினான் என வினை முடிவு செய்க.*

## *இராவணன் வருகையை ஒற்றர் இராமனுக்கு அறிவித்தல்*

***7123. 'ஓதுறு கருங் கடற்கு ஒத்த தானையான்,***
***தீது உறு சிறு தொழில் அரக்கன், சீற்றத்தால்,***
***போது உறு பெருங் களம் புகுந்துளான்' எனத்***
***தூதுவர் நாயகற்கு அறியச் சொல்லினார்.***

***ஓதுறு கருங்கடற்கு ஒத்த தானையான்*** *- ஒலிக்கின்ற கரிய கடலுக்கு ஒப்பான படையையுடையவனும்;* ***தீது உறு சிறு தொழில் அரக்கன்*** *- தீமை மிகுகின்ற இழிந்த செயல்களையுமே புரியும் அரக்கனும் ஆகிய இராவணன்;* ***சீற்றத்தால்*** *- சினத்தோடு;* ***போதுறுபொருகளம் புகுந்துளான் என*** *- (தான்) புகுதற்குரிய போர்க்களத்திலே புகுந்திருக்கின்றான் என்று;* ***தூதுவர்*** *- வானரத் தூதுவர்கள்;* ***நாயகற்கு அறியச் சொல்லினார்*** *- தம் நாயகனாகிய இராமபிரானுக்கு விளக்கமுறச் சொன்னார்கள்.*

*"அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை நின்றாருள் பேதையார் இல்" (குறள். 142) என்பது அறநூல் ஆணையாதலின், சிறு தொழில் அரக்கன்" என்றார்.*

## *இராமன் மகிழ்ந்து போர்க்கோலம் பூண்டு புறப்படல்*

***7124. ஆங்கு, அவன் அமர்த் தொழிற்கு அணுகினான் என,***
***'வாங்கினென், சீதையை' என்னும் வன்மையால்,***
***தீங்குறு பிரிவினால் தேய்ந்த தேய்வு அற***
***வீங்கின, இராகவன் வீரத் தோள்களே.***

***ஆங்கு*** - *அப்பொழுது;* ***அவன்*** - *அந்த இராவணன்;* ***அமர்த்தொழிற்கு அணுகினான் என*** - *போர்ச் செயலுக்கு வந்துள்ளான் என்று சொல்லிய அளவில்;* ***சீதையை வாங்கினன்*** - *சீதையை (மீண்டும்) பெற்று விட்டேன்;* ***என்னும் வன்மையால்*** - *என்னும் உறுதியான நினைவால்;* ***தீங்குறு பிரிவினால்*** - *துயர்மிக்க பிரிவினால்;* ***தேய்ந்த தேய்வு அற*** - *மெலிந்த மெலிவு எல்லாம நீங்குமாறு;* ***இராகவன் வீரத் தோள்கள் வீங்கின*** - *மேலோன் ஆகிய இராமபிரானுடைய வீரம் மிக்க தோள்கள் பருத்தன.;* *போர்புரிய இராவணன் வந்து விட்டான் என்ற செய்தியே, தேய்ந்த தோளைப் பெருக்க வைத்துவிட்டது. இராவணனைக் கொல்வேன் என்பதனிலும் சீதையைப் பெறுவேன் என்பதே இராகவனுக்குப் பூரிப்பு என்பதனால், உகந்தாரைக் காப்பதற்கே உகவாதாரைப் பெருமானால் அழிக்க நேர்கிறது எனும் வைணவ நெறியின் கோட்பாட்டை இப்பாடலில் காணலாம். கொல்லவே மனமின்றி, வேறு வழியில்லாமையால் தான், பகைவர்களை வேதனையோடு பெருமான் அழிக்கின்றான் என்பது நம் பிள்ளை போன்ற சான்றோர் கருத்தாகும்.*

***7125. தொடையுறு வற்கலை ஆடை சுற்றி, மேல்***
***புடை உறு வயிர வாள் பொலிய வீக்கினான்-***
***இடை உறு கருமத்தின் எல்லை கண்டவர்,***
***கடை உறு நோக்கினின், காணும் காட்சியான்.***

***இடையுறு கருமத்தின்*** - *(பக்தியோகம், கருமயோகம், ஞானயோகம் என்பவற்றுள்) இடைப்பட்டதாகிய கருமயோகத்தினுடைய;* ***எல்லை கண்டவர்*** - *முற்றிய நிலையடைந்தவர்கள்;* ***கடையுறு நோக்கினில்*** - *கடைசி யோகமாகிய ஞான யோகத்தில்;* ***காணும் காட்சியான*** - *காணுகின்ற காட்சிப் பொருளாகிய இராமபிரான்;* ***தொடையுறு வற்கலை ஆடை சுற்றி*** - *தொடுத்துக் கட்டப்பெற்ற மரவுரியை இடையிலே சுற்றி (உடுத்து);* ***மேல் புடை உறுவயிரவாள்*** - *அதன் மேல் பக்கத்திலே வயிர வாளினை;* ***பொலிய வீக்கினான்*** - *பொலியுமாறு (இடையில்) கட்டினான்.*

*பக்தி யோகமுடையவராய் கருமயோக நெறியின் எல்லையைக் கண்ட ஞானிகள் காணும் ஞானக்காட்சியாம் பரம்பொருளே இராமன் வடிவில் வந்துள்ளது என்றார். ஞானக்கண்ணாலேயே காண்பதற்குரிய பரம்பொருள், ஓர் எளிய போர் வீரனைப் போல், உடை, வாள், பூண்ட எளிமைக்கு (சௌலப்பியம்) இரங்கியவாறுமாம். வற்கலை-மரவுரி. வற்கலா எனும் வடசொல். "ஆ ஈறு ஐயாம்" எனும் (நன்னூல்) இலக்கணப்படி வற்கலையென வந்தது. ஒப்பு அடக்கும் ஐம்பொறியோடு கரணத்து அப்புறம் கடக்கும் வால் உணர்வினுக்கு அணுகும் காட்சியான்" (கம்ப. 1865) பரமான்மா, சீவான்மா இருவரையும் ஒருங்கே காணும் ஞானக் காட்சி யோகியருக்கும் கிட்டும் என்பதனை "இருவரை ஒருங்கு காணும் யோகியர் என்னல் ஆனான்" (கம்ப. 6772) என்பதனாலும் உணர்க.*

***7126. ஒத்து இரு சிறு குறட் பாதம் உய்த்த நாள்,***

***வித்தக அரு மறை உலகை மிக்கு, மேல்***
***பத்து உள விரல் புடை பரந்த பண்பு என,***
***சித்திரச் சேவடிக் கழலும் சேர்த்தினான்.***

***ஒத்துஇரு சிறு குறள் பாதம் உற்ற நாள்*** - இரண்டும் ஒன்றுக்கொன்று ஒத்தனவாய் உள்ள சிறிய குறள் உருக்கொண்ட வாமனனின் பாதம்; ***உற்றநாள்*** - (மண்உலகையளந்தபின்) வானுலகையளக்க வானிற்கு நிமிர்ந்த காலத்தே; ***வித்தக அருமறை*** - ஞானம் நிறைந்த வேத புருடனாய பிரமன்; ***உலகை மிக்கு*** - வாழ் உலகுக்கு மேல் மிக்குச் சென்று; ***மேல்*** -திருவடியின் மேல்; ***பத்துடை விரல் புடை பரந்த பண்பு என*** - பிரமனது பத்தாகவுள்ள விரல்கள் அத்திருவடிகள் மேல் பரந்த தன்மை போல, ***சேவடி சித்திரக் கழலும் சேர்த்தினான்*** - சிவந்த தன்திருவடிமேல் ஓவிய வேலைப்பாடமைந்த வீரக்கழலையும் கட்டினான் (இராமபிரான்).

*வேதபுருடன்-பிரமன். திருமால் வாமன அவதாரங் கொண்டு அமைந்தபோது அத்திருவடியைப் பிரமன் வானகங்கை நீரால் கழுவிப் பூசித்த போது பத்து விரல்களையும் பதிய வைத்ததுபோல், இராமபிரான் தன் திருவடிகளின் மேல் வீரக் கழல்களைப் பதித்தான் என்பதாம்.*

***7127. பூ உயர் மீன் எலாம் பூத்த வான் நிகர்***
***மேவரும் கவசம் இட்டு இறுக்கி வீக்கினன்--***
***தேவியைத் திரு மறு மார்பின் தீர்ந்தனன்;***
***'நோ இலள்' என்பது நோக்கினான்கொலோ?***

***மீன் எலாம்*** - வீண்மீன்கள் யாவும்; ***பூத்த வான் நிகர்*** - மலர்ந்துள்ள வானத்தைப் போன்ற; ***பூ உயர்*** - பூ வேலைப்பாடுகள் சிறந்து; ***மேவுஅருங்கவசம் இட்டு இறுக்கி வீக்கினன்*** - பொருந்திய அரிய கவசத்தைத் தரித்து இறுக்கிக் கட்டினான் இராமபிரான்; ***திருமறு மார்பில்*** - "ஸ்ரீவத்சம்" என்னும் மறு அமைந்த மார்பிலிருந்து; ***தேவியைத் தீர்ந்தனன்*** - தேவியான திருமகளைத் (தற்போது) பிரிந்துள்ளான் ஆதலின்; ***நோவிலள் என்பது நோக்கினான் கொல்*** - (மார்பை இறுக்குவதனால் அவள்) நோகாள் என்பதனை நினைத்தனன் போலும்.

*பூவேலைத் திறன்கள் பொதிந்த மார்புக் கவசத்திற்கு, பூவெலாம் பூத்த வானத்தை உவமித்தார். திருமகள் மார்பில் உள்ளபோது, மார்புக் கவசம் இறுக்கப்பட்டால் அவள் பூமேனி நோகும். திருமகள் சீதையாகி பெருமானைப் பிரிந்து, அசோக வனத்தில் இப்போது இருப்பதால், அவட்கு நோகாது என்று, பெருமான் கவசத்தை இறுக்கிக் கட்டினான் போலும் என்று கூறியது தற்குறிப்பேற்றமாகும். திருமாலின் மார்பில் திருமகள் தங்குமிடம் "ஸ்ரீவத்சம்" எனும் மறு (மச்சம்) வாகக் குறிக்கப் பெறும்.*

***7128. நல் புறக் கோதை, தன் நளினச் செங்கையின்***

***நிற்புறச் சுற்றிய காட்சி, நேமியான்-***
***கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம***
***பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்.***

***நேமியான்*** - *இராமபிரான்;* ***நற்புறக்கோதை*** - *அழகிய வெளிப்புறம் உள்ள கையுறையை;* ***தன் நளினச் செங்கையின்*** - *தன்னுடைய தாமரைபோலச் சிவந்த கைகளில்;* ***நிற்புற*** - *பொருந்துமாறு;* ***சுற்றிய காட்சி*** - *சுற்றி அணிந்த காட்சி;* ***கற்பகக் கொம்பினை*** - *கற்பகத் தருவின் கிளையை;* ***கரிய மாசுணம்*** *-கரும்பாம்பு;* ***பொற்புறத்தழுவிய தன்மை போன்றது*** - *அழகுபெறச் சுற்றிய தன்மை போன்றிருந்தது.*

*கோதை-உடும்பின் தோலால் ஆன கையுறை.*

*7129.* ***புதை இருட் பொழுதினும் மலரும் பொங்கு ஒளி***
***சிதைவு அரு நாள் வரச் சிவந்த தாமரை***
***இதழ்தொறும் வண்டு வீற்றிருந்ததாம் என,***
***ததைவுறு நிரை விரற் புட்டில் தாங்கினான்.***

***புதை இருட் பொழுதினும்*** - *உலகப் பொருள்களைத் தன்னுள் மறையச் செய்கின்ற இருட்காலத்திலும்;* ***மலரும்*** - *மலரும் இயல்புள்ளதும்;* ***பொங்கு ஒளி*** - *ஒளி பொங்குகின்ற கதிரவன்;* ***சிதைவு அரு நாள் வர*** - *(அவ்விருளைக்) கெடுக்கின்ற பகற்பொழுது வரும்போதும்;* ***சிவந்த தாமரை*** - *சிவந்த நிறமுடைய தாமரையின்;* ***இதழ்தொறும்*** - *இதழ்கள் தோறும்;* ***வண்டு வீற்றிருந்ததாம் என*** - *வண்டுகள் அமர்ந்திருந்தன என்று கூறுமாறு;* ***ததைஉறு நிலை விரல்*** - *நெருங்கிய வரிசையான விரல்களில்;* ***புட்டில் தாங்கினான்*** - *கவசங்களை அணிந்தான் (இராமன்).*

*இரவிலும் பகலிலும் மலர்ந்திருக்கும் தாமரை என்றது இல்பொருள் உவமை. இரவும் பகலும் கூம்பாது. உலகுக்கு ஓவாது உதவும் கரங்கள் எம்பெருமான் திருக்கரங்கள் என்பது குறிப்பு. புட்டில்-விரற்செறி.*

*7130.* ***பல் இயல் உலகு உறு பாடை பாடு அமைந்து,***
***எல்லை இல் நூற் கடல் ஏற நோக்கிய,***
***நல் இயல், நவை அறு, கவிஞர் நா வரும்***
***சொல் எனத் தொலைவு இலாத் தூணி தூக்கினான்.***

***உலகுறு பல்லியல் பாடை*** - *உலகில் வழங்கும் பல தன்மைகளையுடைய மொழிகளில்;* ***பாடு அமைந்து*** - *சிறந்த அறிவு பெற்று;* ***எல்லை இல் நூற்கடல் ஏற***

***நோக்கிய*** - கணக்கற்ற நூல்களாகிய கடலைக்கரை கண்டு ஏறக் கருதியுள்ள; ***நவை அறு*** - குற்றம் நீங்கிய; ***நல் இயல் கவிஞர் நாவரும்*** - நல்ல பண்புகள் நிறைந்த கவிஞர்கள் நாவிலிருந்து (சரம் சரமாகப்) ***புறப்படுகின்ற சொல் என*** - சொற்களைப் போன்று; ***தொலைவிலாத் தூணி தூக்கினான்*** - (அம்புகள்) குறையாது புறப்பட்டுக் கொண்டேயிருக்க வல்ல அம்பறாத்தூணியைத் தொங்கவிட்டுக் கொண்டான்.

*உலக மொழிகள் ஒவ்வொன்றும் தனித்தனி இயல்புடைமையால், "உலகுறு பல்லியல் பாடை" என்றார். ஒவ்வொரு மொழிக்கும் சிறப்பும் பெருமையும் அம்மொழியில் உள்ள கணக்கற்ற நூல்களைச் சார்ந்தவையாதலின், "பாடு அமைந்து எல்லையில் நூல்கடல்" என்றார். "புலவர் சொல் துறை புரிந்தன போன்றன சரங்கள்" (கம்ப. 7494) எனவும், "நல்லியல் கவிஞர் நாவில் பொருள் குறித்து அமர்ந்த நாமச் சொல் எனச் செய்யுள் கொண்ட தொடையென" (கம்ப. 7293) எனவும், "பல் அலங்காரப் பண்பே காகுத்தன் பகழி" (கம்ப. 7293) எனவும் பலமுறை கவிஞர் சொல்லையும் இராமபிரான் அம்புகளையும் ஒப்பாகச் கூறியுள்ளமை காண்க.*

***7131. கிளர் மழைக் குழுவிடைக் கிளர்ந்த மின் என***
***அளவு அறு செஞ் சுடர்ப் பட்டம் ஆர்த்தனன்;***
***இள வரிக் கவட்டிலை ஆரொடு ஏர் பெறத்***
***துளவொடு தும்பையும் சுழியச் சூடினான்.***

***கிளர் மழைக் குழுவிடை*** - கிளர்ந்தெழுகின்ற மேகக் கூட்டத்தினிடையே; ***கிளர்ந்தமின் என*** - விளங்கிய மின்னல் என்று தோன்றுமாறு; ***அளவு அறு செஞ்சுடர் பட்டம் ஆர்த்தனன்*** - (நெற்றியில்) அளவில்லாத செவ்வொளியுடைய வீரப்பட்டம் கட்டிக்கொண்டான்; ***இளவரிக் கவட்டு இலை ஆரொடு*** - முற்றாக வரிகள் அமைந்து இரு பிளவாக இலையுள்ள ஆத்திமாலையோடு; ***ஏர்பெற*** - அழகுபெற; ***துளவொடு தும்பையும்*** - துளப மாலையொடு தும்பை மாலையையும்; ***சுழியச் சூடினான்*** - வட்டமாக அணிந்தான் (இராமன்).

*கரிய மேகத்தில் தோன்றும் மின்னல், பெருமானின் கரிய திருமேனியில் கட்டிய நெற்றிப்பட்டத்திற்கு உவமையாயிற்று. இராமபிரான் தன் குலத்துக்குரிய ஆத்தி மாலையும், வழிபடு கடவுட்கு உரிய துளவ மாலையும், போர்த்திணைக்குரிய தும்பை மாலையும் சூடினான். சுழிய வட்டமாக அணிவது கண்ணி எனப்படும். "சூரிய வங்கிசத்துக்கு ஆத்திமாலையும், பரத்துவத்துக்குத் துழாய் மாலையும் அதிரப்பொருவதற்குத் தும்பை மாலையும் சூடினான் என்க" என்பது பழைய உரை. மூலம் வடமொழி எனினும் பாடுவது தமிழ்க் காப்பிய மாதலின் தமிழின் புறப்பொருள் மரபினைக் கம்பர் பேணியது வரைக.*

***7132. ஓங்கிய உலகமும், உயிரும், உட்புறம்***
***தாங்கிய பொருள்களும், தானும், தான் என***

***நீங்கியது யாவது? நினைக்கிலோம்; அவன்***
***வாங்கிய வரி சிலை மற்றொன்றேகொலாம்?***

***ஓங்கிய உலகமும்*** *- புகழ் உயர்ந்த உலகங்களும்;* ***உயிரும்*** *- (அவ்வுலகில் உள்ள) உயிர்களும்;* ***உட்புறம் தாங்கிய பொருள்களும்*** *- அவ்வுலகிற்கு உள்ளடங்கிய நிலைத்திணைப் பொருள்களும்; தானும் - அப்பரம்பொருளும்;* ***தான் என*** *- இராமனாக வடிவெடுத்துள்ள தானே என்று (முடிவாகி)யிருக்க;* ***நீங்கியது*** *- இவனிலிருந்து விலகியுள்ளது;* ***யாவது?*** *- எந்தப் பொருள்?* ***நினைக்கிலேம்*** *- (அப்படி ஒரு பொருள் உள்ளதாக) நாம் நினைக்கவில்லை; (அப்படியிருக்க) அவன், (இராவணனைக் கொல்லத் தன்னைவிட வலியது எனக்கருதி) வாங்கிய வரிசிலை* ***மற்றொன்றே கொலோ?*** *- அவன் கைக்கொண்ட அழகிய அவ்வில் தன்னிலும் வலியது ஒன்றாகுமோ? (ஆகாது)*

*இராமபிரானது பரத்துவத்தையும் சௌலப்பியத்தையும் ஒரு சேர நினைந்து வியந்தவாறு.. சத்திரிய அவதாரத்திற்கேற்ப வில் ஏந்தினானேயன்றி, வில் தன்னிலும் வலிமை வாய்ந்தது என்று ஏந்தவில்லை என்பது கருத்துப் பொருள். மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லும் ஏந்தி, கால் தலை தோய நின்று கட்புலக்கு உற்றதம்மா" (கம்ப. 4089) என்னும் வாலி கூற்று ஈண்டு நினைத்தற்பாலது. "மாபூதத்தின் வைப்பு எங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் உளன் என்பார்" (கம்ப. 1313) "தானே தனக்கு உவமன் தன்னுருவே எவ்வுருவும்" (மூன். திருவந். 38) "திடவிசும்பு. எரி. வளி. நீர், நிலம் இவைமிசைப் படர்பொருள் முழுதும் ஆய் அவை அவைதொறும் உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் நிறைந்துளன்" (திருவாய். 1:1:7) என்பனவும் இங்கு நினையத்தகும்.*

***7133. நாற் கடல் உலகமும், விசும்பும், நாள்மலர்***
***தூர்க்க, வெஞ் சேனையும் தானும் தோன்றினான்--***
***மால் கடல் வண்ணன், தான் வளரும் மால் இரும்***
***பாற்கடலோடும் வந்து, எதிரும் பான்மைபோல்.***

***மால்கடல் வண்ணன்*** *- கரிய கடல் போலும் நிறத்தன் ஆன திருமால்;* ***தான் வளரும்*** *- தான் (அறிதுயிலாய்க்) கண் வளர்கின்ற;* ***மால் இரும்*** *- மிகப் பெரிய;* ***பாற்கடலோடும் வந்து*** *- திருப்பாற் கடலோடும் வந்து;* ***எதிரும் பான்மை போல்*** *- எதிர்ப்பட்டாற் போலே;* ***நாற்கடல் உலகமும்*** *- நாற்புறமும் கடல் சூழ்ந்த இவ்வுலகத்து மக்களும்;* ***விசும்பும்*** *- விண்ணுலகத் தேவர்களும்;* ***நாண்மலர் தூர்க்க*** *- அன்றலர்ந்த மலர்களைச் சொரிந்து பூமியை நிறைக்க;* ***வெம் சேனையும் தானும் தோன்றினான்*** *- கொடிய வானரச் சேனையும் தானுமாகத் தோன்றினான்.*

*தம் இடர் தீர, பெருமான் வில்லேந்தி விட்டான் என்ற மகிழ்ச்சியில் மக்களும் தேவரும் அவன் மேல் சொரிந்த மலர்மழை பூமியை நிறைத்தது என்பார். "நாண்மலர் தூர்க்க" என்றார். நாள்மலர்-அன்று அலர்ந்த மலர். வெண்ணிறமுடைய வானர*

*சேனைக்குப் பாற்கடல் உவமையாக முன்பும் கூறினார். பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரந்தாமனை அப்பாற்கடலோடும் புறப்பட்டு, இராவணன் முன் நேரில் எதிர்ப்பட்டது போல், வானர சேனையோடு பெருமான் தோன்றினான் என்றவாறு தன்மைத் தற்குறிப்பேற்றவணி.*

*இராமன் பின்னணியில் நின்ற இலக்குவனைச் சார்தல்*

*7134.* ***ஊழியின் உருத்திரன் உருவுகொண்டு, தான்,***
***ஏழ் உயர் உலகமும் எரிக்கின்றான் என,***
***வாழிய வரி சிலைத் தம்பி, மாப் படைக்***
***கூழையின் நெற்றி நின்றானை, கூடினான்.***

***ஊழியின்*** *- யுக முடிவுக் காலத்தில்;* ***தான்*** *- இராமன் வடிவிலுள்ள பரம்பொருளே;* ***உருத்திரன் உருவு கொண்டு*** *- உருத்திரன் வடிவம் எடுத்துக் கொண்டு;* ***உயர் எழ் உலகமும் எரிக்கின்றான் என*** *- சிறந்த ஏழ் உலகங்களையும் எரியால் அழிப்பான் போல;* ***மாப்படையின் கூழையின் நெற்றி நின்றான்*** *- பெரிய குரங்குச் சேனையினுடைய பின்னணியின் முன் நின்றவனான;* ***வாழிய வரிசிலைத் தம்பியை*** *- வாழ்த்தற்குரிய கட்டமைந்த வில்லை ஏந்தி நின்ற தம்பி இலக்குவனை;* ***கூடினான்*** *- அடைந்தான்.*

*இராமனாக வந்துள்ள பரம்பொருளே அயனாகப் படைத்தும், அரியாகக் காத்தும், அரனாக அழித்தும் நிற்கிறது. ஆதலின், "ஊழியின் உருத்திரன் உருவு கொண்டுதான், ஏழ்உயர் உலகமும் எரிக்கின்றான்" என்றார். "உடம்பு உருவின் மூன்று ஒன்றாய் மூர்த்தி வேறாய், உலகு உய்ய நின்றானை" (பெரிய திரு:2:4:3): "மூவருமாய் முதலாய மூர்த்தி" (பெரிய திரு: 4:1:2): "தன்னாலே தன் உருவம் பயந்த தானாய்" (பெரிய திரு: 6:6:6): "தானேயாகி நிறைந்து எல்லா உலகும் உயிரும் தானேயாய்த் தானே யரன் என்பானாகி" (திருவாய்:9:7:2): "தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலை" (திருவாய்: 8:8:4): - இந்த ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் இங்கு நினையத்தக்கவை.*

*அரக்கரும் வானரரும் கைகலத்தல்*

*7135.* ***என்புழி, நிருதராம் ஏழு வேலையும்,***
***மின் பொழி எயிறுடைக் கவியின் வெள்ளமும்,***
***தென் புலக் கிழவனும் செய்கை கீழ்ப்பட,***
***புன் புலக் களத்திடைப் பொருத போலுமால்.***

***என்புழி*** -இவ்வாறு இராவணனும் இராமபிரானும் களத்தில் தோன்றினர் என்னும் போதே; ***தென்புலக் கிழவனும் கீழ்ப்பட*** - தெற்குத் திக்குக்குரியவனான எமனும் (தன் செயலாகிய) கொலைத்தொழில் தாழ்ந்தது என்னுமாறு; ***நிருதராம் ஏழுவேலையும்*** - அரக்கர்களாகிய ஏழுகடல்களும்; ***மின்பொழி எயிறு உடைக்கவியின் வெள்ளமும்*** - ஒளியுமிழும் பற்களையுடைய குரங்குப் படையாகிய வெள்ளமும்; ***புன்பலக் களத்திடைப் பொருத போலும்*** - இகழத்தக்க இலங்கைக் களத்திடையே தம்முட் போரிடலாயின. தென்திசைக்குரிய யமனும் நாண போர்க்களத்தில் கொலைச் செயலும் உயிர் கவர்தலும் தொடங்கின.

***7136. துமிந்தன தலை; குடர் சொரிந்த; தேர்க் குலம்***
***அவிந்தன; புரவியும் ஆளும் அற்றன;***
***குவிந்தன, பிணக் குவை; சுமந்து கோள் நிலம்***
***நிமிர்ந்தது; பரந்தது, குருதி நீத்தமே.***

***தலை துமிந்தன*** - தலைகள் துண்டுபட்டன; ***குடர் சொரிந்த*** - குடல்கள் சரிந்தன; ***தேர்க்குலம் அவிந்தன*** - தேரின் தொகுதிகள் சிதைந்தன; ***புரவியும் ஆளும் அற்றன*** - குதிரைகளும் காலாட்களும் துண்டுபட்டனர்; ***குவிந்தன பிணக்குவை சுமந்து*** - குவிந்த பிணக்குவியல்களைச் சுமந்து; ***கோள்நிலம் நிமிர்ந்தது*** - வலிய நிலம் உயர்ந்து மேடாயிற்று; ***குருதி நீத்தம் பரந்தது*** - இரத்த வெள்ளம் (எங்கும்) பரவிற்று.

*புரவியும் ஆளும் அற்றன அஃறிணை வினை முடிவு கொண்டது. வழுவமைதி.*

***7137. கடுங் குரங்கு இரு கையால் எற்ற, கால் வயக்***
***கொடுங் குரம் துணிந்தன, புரவி; குத்தினால்***
***ஒடுங்கு உரம் துணிந்தனர், நிருதர்; ஓடின,***
***நெடுங் குரம்பு என நிறை குருதி நீத்தமே.***

***கடும் குரங்கு இருகையால் எற்ற*** - கொடிய வானரங்கள் (தமது) இரண்டு கைகளாலும் தாக்கியபோது; ***கால்வயம் கொடும் குரம்*** - கால் வலிமையும் வளைந்த குளம்புகளையும் உடைய; ***புரவி துணிந்தன*** - குதிரைகள் துண்டாயின; ***குத்தினால்*** - கைகள் குத்தியதனால்; ***நிருதர் ஒடுங்கு உரம்*** - அரக்கர் வலிமை குன்றிப் போன மார்பு; ***துணிந்தனர்*** - துண்டு பட்டனர்; ***நெடுங்குரம்பு என*** - பெரிய அணைக்கட்டிலிருந்து நீர் பெருக்கெடுப்பது போன்று; ***நின்ற குருதி நீத்தம் ஓடின*** - (போர்க்களத்தில்) நிறைந்திருந்த இரத்த வெள்ளங்கள் பாய்ந்தோடின.

*கொடுங்குரம்-வளைந்த குளம்பு. குரம்பு-அணை-நீர்த்தேக்கம். அரக்கரும், குதிரையும் இரத்தம் தேங்கிய அணைக்கட்டுப் போன்றிருந்தனர்; வானரங்களின்*

*தாக்குதலால் அணைகளிலிருந்து பெருகிய வெள்ளம் போல, குருதி வெள்ளம் களம் எங்கும் பெருக்கெடுத்து ஓடியது.*

***7138. 'தெற்கு இது; வடக்கு இது' என்னத் தேர்கிலார்,***
***பற் குவை பரந்தன; குரக்குப் பல் பிணம்***
***பொற் குவை நிகர்த்தன; நிருதர் போர்ச் சவம்***
***கற் குவை நிகர்த்தன; மழையும் காட்டின.***

***இது தெற்கு இது வடக்கு என்னத் தேர்கிலார்*** *- இது தென்திசை, இது வடதிசை என்று அறிய இயலாதவாறு;* ***பல்குவை பரந்தன*** *- (பிணக்) குவியல்கள் பல பரவிக் கிடந்தன;* ***குரங்குப் பல் பிணம்*** *- குரங்குகளின் பிணங்கள் பல;* ***பொன் குவை நிகர்த்தன*** *-(வெண்) பொன்னாகிய வெள்ளிக் குவியலைப் போன்று தோன்றின;* ***போர் நிருதர் சவம்*** *- போரிட்ட அரக்கர்களின் பிணங்கள்;* ***கல்குவை நிகர்த்தன*** *- கறகுவியல்களைப் போன்று (குவிந்து) கிடந்தன;* ***மழையும் காட்டின*** *- (மேலும் அவை) மேகக் கூட்டம் போன்றும் காட்சியளித்தன.*

*பொன்-இங்கு வெண் பொன் ஆகிய வெள்ளியைக் குறித்தது. இரு வகைப் பிணக் குவியல்களிலிருந்தும் இரத்தம் பெருகி ஓடுதலால், "மழையும் காட்டின" என்றார். எனலும் பொருந்தும்.*

*இராவணன் வில் நாண் ஒலிகேட்டு, வானரம் இரிதல்*

***7139. அவ்வழி, இராவணன் அமரர் அஞ்ச, தன்***
***வெவ் விழி நெருப்பு உக, வில்லின் நாணினைச்***
***செவ் வழிக் கோதையின் தெறிக்க, சிந்தின,***
***எவ்வழி மருங்கினும் இரிந்த, வானரம்.***

***அவ்வழி*** *- (அவ்வாறு இராக்கதர் பேரழிவு எய்திய) அப்போது;* ***இராவணன் அமரர் அஞ்ச*** *- இராவணன் ஆனவன் தேவர்கள் அஞ்சுமாறு;* ***தன் வெவ்விழி நெருப்புஉக*** *- தன்னுடைய கொடிய கண்களிலிருந்து தீப்பொறி சிந்த;* ***வில்லின் நாணினை*** *- வில்லினுடைய நாண் கயிற்றை;* ***செவ்வழி கோதையில் தெறிக்க*** *- செம்மையான முறையில் கையுறையில் உராயுமாறு தெறித்த போதினில்;* ***இரிந்த வானரம்*** *- அஞ்சி ஓடிய குரங்குகள்;* ***எவ்வழி மருங்கினும் சிந்தின*** *-எல்லாத் திசை வழிகளிலும் சிதறின.*

*நாண் ஓசையால் பகைவரை அச்சுறுத்துதல் வழக்கு. ( 123)*

***7140. உரும் இடித்துழி உலைந்து ஒளிக்கும் நாகம் ஒத்து***
***இரியலுற்றன, சில; இறந்தவால், சில;***
***வெருவலுற்றன, சில; விம்மலுற்றன;***

***பொரு களத்து உயிரொடும் புரண்டு போம் சில.***

**உரும் இடித்துழி** - இடியிடித்த போது; **உலைந்து ஒளிக்கும் நாகம் ஒத்து** - வருந்தி ஒளிந்து கொள்ளும் நாகப் பாம்பினைப் போல; **சில** - சில குரங்குகள்; **இரியல் உற்றன** - (தறிகெட்டு) ஓடின; **சில இறந்தன** - சில குரங்குகள் இறந்து ஒழிந்தன; **சில வெருவல் உற்றன** - சில பேரச்சம் அடைந்தன; **சில விம்மல் உற்றன** - சில குரங்குள் விம்மி அழுதன; **சில பொருகளத்து உயிரொடும் புரண்டுபோம்** - சில குரங்குகள் போர்க்களத்தில் (வீழ்ந்து) உயிருடன் புரண்டு ஓடின.

இடி ஓசைக்குப் பாம்புகள் அஞ்சுதலும் இறத்தலும் உண்டு; "உத்தி அரவின் பைந்தலை துமிய" (அகநா: 202) "விரிகிற நாகம் விடர்உளதேனும் உருமின் கடுஞ்சினம் சேண் நின்றும் உட்கும்" (நாலடி 164).

***7141. பொர, கரு நிற நெடு விசும்பு போழ்பட,***
***இரக்கம் இல் இராவணன் எறிந்த நாணினால்,***
***குரக்கினம் உற்றது என், கூறின்? தன் குலத்து***
***அரக்கரும் அனையது ஓர் அச்சம் எய்தினார்.***

**பொர** - போர்புரியும்படி; **இரக்கமில் இராவணன்** - இரக்கப பண்பு அற்ற அரக்கனாகிய இராவணன்; **கருநிற நெடு விசும்பு போழ்பட** - கருநிறமுடைய நீண்ட ஆகாயமும் பிளவு படும்படி; **எறிந்த நாணினால்** -எழுப்பிய நாண் ஒலியால்; **கூறின்** - கூறுங்கால்; **தன்குலத்து அரக்கரும்** - தன் குலத்தைச் சார்ந்த அரக்கர்களும்; **அனையதோர் அச்சம் எய்தினார்** - (வாயால் கூற இயலாத) அத்தகையதோர் அச்சம் அடைந்தனர் (என்றால்) **குரக்கினம் உற்றது என்?** - குரங்குக் கூட்டம் அடைந்த நிலையைக் கூறுவது எப்படி?

இராவணனிடம் எல்லாமிருந்தும் இல்லாத ஒன்று இரக்கம் ஆதலின், "இரக்கமில் அரக்கன்" என்றார். " இரக்கம் ஒன்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர்" (கம்ப. 2642) என்பார் முன்னும்.

***7142. வீடணன் ஒருவனும், இளைய வீரனும்,***
***கோடு அணை குரங்கினுக்கு அரசும், கொள்கையால்***
***நாடினர் நின்றனர்; நாலு திக்கினும்***
***ஓடினர், அல்லவர்; ஒளித்தது, உம்பரே.***

**வீடணன் ஒருவனும்** - வீடணன் எனும் ஒப்பற்றவனும்; **இளைய வீரனும்** - இளைய வீரனான இலக்குவனும்; **கோடு அணை குரங்கினுக்கு அரசும்** - மரக்கிளைகளில் உலாவும் குரங்குகளின் தலைவனான சுக்கிரீவனும்; **கொள்கையால் நாடினர் நின்றனர்** - வீரக் கொள்கை நெறியை எண்ணி நின்றனர்;

***அல்லவர்*** - இவர்கள் அல்லாதவர்கள்; ***நாலு திக்கிலும் ஓடினர்*** - நான்கு திசைகளிலும் ஓடினர்; ***உம்பர் ஒளித்தது*** - வான் உலகோரும் மறைந்து கொண்டனர்.

உம்பர்-வானம் இட ஆகு பெயராய்த் தேவரைக் குறித்தது. ஒளிந்த இழிவினால் தேவர்க்கு அஃறினை முடிபு தந்தார் எனினுமாம். போர் வீரர் கோட்பாட்டின் படி உறுதியாக நின்றனர். விழித்த கண் வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின் ஒட்டன்றோ வன்கண் அவர்க்கு என்ற குறள் (775) வீரக் கோட்பாட்டினை உணர்த்தும். இம்மூவரின் உறுதி சொல்லவே நாயக இராமன் பற்றிச் சொல்லவேண்டாதாயிற்று.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

***7143. 'எடுக்கின், நானிலத்தை ஏந்தும் இராவணன் எறிந்த நாணால்***
***நடுக்கினான், உலகை' என்பார்; 'நல்கினான்' என்னறற்பாற்றோ?***
***மிடுக்கினால் மிக்க வானோர், மேக்கு உயர் வெள்ளம், மேல்நாள்,***
***கெடுக்கும் நாள், உருமின் ஆர்ப்புக் கேட்டனர் என்னக் கேட்டார்.***

***எடுக்கின்*** - பெயர்த்தெடுக்க (வேண்டும் என விரும்பினால்); ***நானிலத்தை ஏந்தும்*** - இவ்வுலகையே எடுத்து ஏந்தவல்ல; ***இராவணன்*** - இராவணன் ஆனவன்; ***எறிந்த நாணால்*** - தெறித்து எழுப்பிய நாண் ஒலியால்; ***உலகை நடுக்கினான் என்பர்*** - இப்பூவுலகை மட்டும் நடுங்கச் செய்து விட்டான் என்று (சிலர்) சொல்வார்கள்; ***நல்கினான் என்னறற்பாற்றோ*** - (வானுலகுக்கு விலக்களித்து) நலஞ்செய்து விட்டான் என்று கூற இயலுமோ? (இயலாது); (ஏன்எனில்) ***மிடுக்கினால் மிக்க வானோர்*** - வல்லமை மிக்க தேவர்கள்; ***மேல்நாள் மேக்கு உயர்வெள்ளம்*** - முன்னாளில் மேலே உயர்ந்து எழுகின்ற பிரளய வெள்ளம்; ***கெடுக்கும் நாள்*** - அழிக்கும் போது; ***உருமின் ஆர்ப்புக் கேட்டனர் என்ன*** - (ஊழிக்காலத்து மேகத்திடையே) இடியின் ஒலி கேட்டது போல; ***கேட்டார்*** - அந்நாண் ஒலியைக் கேட்டு நடுங்கினர் (ஆதலின்).

*சுக்கிரீவன் இராவணன் போர்*

***7144. ஏந்திய சிகரம் ஒன்று, அங்கு இந்திரன் குலிசம் என்ன,***
***காந்திய உருமின் விட்டான், கவிக் குலத்து அரசன்; அக் கல்***

***நீந்த அரு நெருப்புச் சிந்தி நிமிர்தலும், நிருதர்க்கு எல்லாம்***
***வேந்தனும், பகழி ஒன்றால், வெறுந் துகள் ஆக்கி, வீழ்த்தான்.***

***கவிக்குலத்து அரசன்*** - *குரங்கினத்து மன்னன் ஆகிய சுக்கிரீவன்;* ***அங்கு*** - *அப்பொழுது;* ***காந்திய உருமின்*** - *உக்கிரமானதோர் இடி போன்ற;* ***ஏந்திய சிகரம் ஒன்று*** - *கையில் ஏந்தியுள்ள மலைச்சிகரம் ஒன்றினை;* ***இந்திரன் குலிசம் என்ன*** - *தேவேந்திரனின் வச்சிராயுதத்தைப் போல விட்டான் வீசி எறிந்தான்;* ***அக்கல்*** - *அந்த மலைச்சிகரம்;* ***நீந்த அரு நெருப்புச்சிந்தி*** - *நீந்துதற்கு இயலாத நெருப்பு வெள்ளைத்தைச் சொரிந்தவாறு;* ***நிமிர்தலும்*** - *மேல் வந்தபோது;* ***நிருதர்க்கு எல்லாம் வேந்தனும்*** - *உலகில் உள்ள அரக்கர்க்கு எல்லாம் வேந்தனாகிய இராவணனும்;* ***பகழி ஒன்றால்*** - *அம்பு ஒன்றினால்;* ***வெறுந்துகள் ஆக்கி வீழ்த்தான்*** - *வெற்றுப் பொடியாக ஆக்கித் தள்ளினான்.*

*சுக்கிரீவன் வீசிய மலை ஒன்றினை இராவணன் எளிதாக ஒரம்பினால் பொடியாக்கினான் என்பதாம். சுக்கிரீவனுக்கு மலை; இராவணனுக்குச் சாம்பல் என்று அவன் உரம் விளக்கியவாறு. குலிசம்-வச்சிராயுதம்; இந்திரன் கையில் உள்ளது. நெருப்பு வெள்ளம், நீர் வெள்ளம் போல, நீந்துதற்கு அரியது ஆதலின், "நீந்தரு நெருப்புச் சிந்தி" என்றார்.*

***7145. அண்ணல் வாள் அரக்கன் விட்ட அம்பினால் அழிந்து, சிந்தி,***
***திண் நெடுஞ் சிகரம், நீறாய்த் திசை திசை சிந்தலோடும்,***
***கண் நெடுங் கடுந் தீக் கால, கவிக் குலத்து அரசன், கையால்,***
***மண்மகள் வயிறு கீற, மரம் ஒன்று வாங்கிக் கொண்டான்.***

***அண்ணல் வாள் அரக்கன்*** - *(அரக்கர்களின்) தலைமைக்குரியவனான கொடிய அரக்கன்;* ***விட்ட அம்பினால்*** - *ஏவிய அம்பினால்;* ***திண் நெடும் சிகரம்*** - *திண்ணிய அந்தப் பெரிய மலைச்சிகரம்;* ***அழிந்து*** - *வீழ்ந்து;* ***நீறாய் சிந்தித் திசை திசை சிந்தலோடும்*** - *தூள் தூளாகத் திசைகள் எங்கும் சிதறியபோது;* ***கவிக்குலத்து அரசன்*** - *வானரக் கூட்டத்திற்கு மன்னனான சுக்கிரீவன்;* ***கண் நெடும் கடும் தீகால*** - *கண் விழிகள் மிகுதியாக நெருப்பைக் கக்க;* ***கையால்*** - *தன் கையினால்;* ***மண்மகள் வயிறு கீற*** - *பூமித்தாயின் வயிறு பிளக்கும் படி;* ***மரம் ஒன்று வாங்கிக் கொண்டான்*** - *மரம் ஒன்றைப் பெயர்த்து எடுத்துக் கொண்டான்.*

***7146. கொண்ட மா மரத்தை அம்பின் கூட்டத்தால், காட்டத் தக்க***

***கண்டம் ஆயிரத்தின் மேலும் உள என, கண்டம் கண்டான்;***
***விண்ட வாள் அரக்கன்மீது, விசும்பு எரி பறக்க, விட்டான்,***
***பண்டை மால் வரையின் மிக்கது ஒரு கிரி, பரிதி மைந்தன்.***

***கொண்ட மாமரத்தை*** - *(சுக்கிரீவன்) கைக்கொண்ட அப்பெரிய மரத்தை;* ***அம்பின் கூட்டத்தால் காட்டத்தக்க*** - *அம்புகளின் மிகுதியினால் (மட்டும்) செய்யத்தக்க;* ***கண்டம் ஆயிரத்தின் மேலும் உள*** - *துண்டுகள் ஆயிரத்துக்கு மேலும் உள்ளன; என - என்னும்படி;* ***கண்டம் கண்டான்*** - *துண்டுபடுத்தினான் (இராவணன்);* ***பரிதிமைந்தன்*** - *(அப்போது) சூரியன் மைந்தனான சுக்கிரீவன்;* ***விண்ட வாள் அரக்கன் மீது*** - *அம்மரத்தைப் பிளந்த இராவணன் மேல்;* ***எரிவிசும்பு பறக்க*** - *தீ விண்ணிலே பறக்குமாறு;* ***பண்டை மால்வரையின் மிக்கது ஒருகிரி விட்டான்*** - *முன்னர் எறிந்த பெரிய மலையினும் பெரிதான ஒரு மலையை வீசி எறிந்தான்.*

*7147.* ***அக் கிரிதனையும் ஆங்கு ஓர் அம்பினால் அறுத்து மாற்றி,***
***திக்கு இரிதரப் போர் வென்ற சிலையினை வளைய வாங்கி,***
***சுக்கிரீவன்தன் மார்பில் புங்கமும் தோன்றாவண்ணம***
***உக்கிர வயிர வாளி ஒன்று புக்கு ஒளிக்க, எய்தான்.***

***ஆங்கு*** - *அப்பொழுது; அக்கிரிதனையும் - (இராவணன்) அந்த மலையினையும்;* ***ஓர் அம்பினால் அறுத்து மாற்றி*** - *ஓர் அம்பினால் துண்டித்து அகற்றி;* ***திக்கு இரிதர்*** - *திசை தோறும் (வீரர்கள்) அஞ்சி ஓடுமாறு;* ***போர் வென்ற*** - *போரில் வெற்றி பெற்ற;* ***சிலையினை வளைய வாங்கி*** - *தன் வில்லினை வளையச் செய்து;* ***உக்கிர வயிர வாளி ஒன்று*** - *மிகக் கடுமையும் உறுதியுமுடைய ஓர் அம்பினை;* ***சுக்கிரீவன் தன் மார்பில்*** - *சுக்கிரீவனுடைய மார்பிலே;* ***புங்கமும் தோன்றா வண்ணம்*** - *அம்பின் அடிமுனையும் புகுந்தமை தோன்றா வண்ணம்;* ***புக்கு ஒளிக்க எய்தான்*** - *நுழைந்து மறையும் வண்ணம் எய்தான்.*

*முனையும் தோன்றாதவாறு புங்கம் அம்பின் முனை (வடமொழிச் சொல்) மார்பில் அழுந்த அம்பு பாய்ச்சினான் என்பார். "புங்கமும் தோன்றாவண்ணம் புக்கு ஒளிக்க எய்தான்" என்றார். "தோளினும் ஆகத்துள்ளும் புங்கமும் தோன்றா வண்ணம்" (கம்ப. 7925) என்று அதிகாயன் வதைப்படலத்துள்ளும் இச்சொல்லை ஆண்டுள்ளார்.*

*சுக்கிரீவன் தளர்ந்த நிலையில் அனுமன் வருதல்*

***7148. சுடு கணை படுதலோடும் துளங்கினான்;***
***துளங்காமுன்னம்,***
***குட திசை வாயில் நின்ற மாருதி, புகுந்த கொள்கை***
***உடன் உறைந்து அறிந்தான் என்ன, ஓர் இமை***
***ஒடுங்காமுன்னர்,***
***வட திசை வாயில் வந்து, மன்னவன் முன்னர்***
***ஆனான்.***

***சுடுகணை படுதலோடும்*** *- (அந்த) எரி அம்புபட்டவுடன்;* ***துளங்கினான்*** *- சுக்கிரீவன் உடல் தளர்ந்தான்;* ***துளங்கா முன்னம்*** *- (அவன்) தளர்வதற்கு முன்னமேயே;* ***புகுந்த கொள்கை உடன் உறைந்து அறிந்தான் என்ன*** *- நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூட இருந்து அறிந்தவனைப் போல;* ***குடதிசை வாயில் நின்ற மாருதி*** *- (கோட்டையின்) மேற்கு வாசலிலிருந்த அனுமன்;* ***ஓர் இமை ஒடுங்கா முன்னர்*** *- ஒரு கண் இமைப்பொழுது கழியும் முன்பே;* ***வடதிசை வாயில் வந்து*** *- வடக்குக் கோட்டை வாயிலுக்கு வந்து;* ***மன்னவன் முன்னர் ஆனான்*** *- தன் அரசனாகிய சுக்கிரீவன் முன்பு வந்து நின்றான்.*

*சுக்கிரீவன் தளர்வும் அனுமன் வரவும் ஒரு நிகழ்வு போல உடன் நிகழ்ந்தன. அநுமன் அறிந்துவந்த செய்தி நட்பின் உள்ளுணர்வாகும். கோப்பெருஞ்சோழன் துன்புற்று வடக்கிருந்ததை உள்ளுணர்வால் உணர்ந்து அவன்பால் வந்து சேர்ந்து வடக்கிருந்த பிசிராந்தையார் செயலை ஈண்டு நினைவு கூர்க. உணர்ச்சி தான் நட்பாம் கிழமை தரும், இடுக்கண் களைவதாம் நட்பு என்ற வாசகங்களையும் நினைக.*

***7149. பரிதி சேய் தேறாமுன்னம், 'பரு வலி அரக்க! பல்***
***போர்***
***புரிதியோ என்னோடு?' என்னா, புகை எழ விழித்துப்***
***பொங்கி,***
***'வருதியேல், வா, வா!' என்பான்மேல் மலை ஒன்று***
***வாங்கி,***
***சுருதியே அனைய தோளால் வீசினான், காலின்***
***தோன்றல்.***

***பருவலி அரக்க!*** *- மிக்க வலிமை வாய்ந்த அரக்கனே!* ***பரிதி சேய் தேறா முன்னம்*** *- சூரியன் மகனான சுக்கிரீவன் தெளிவு பெறுவதற்கு முன்னாக;* ***என்னோடு பல்போர் புரிதியோ?*** *- என்னுடன் பல்வகையான போர் வகைகளைப் புரிய உள்ளாயோ?* ***என்ன*** *- என்று (அனுமன் இராவணனைக் கூவியழைக்க);* ***புகை எழ விழித்துப் பொங்கி*** *- (விழிகளில்) புகை எழுமாறு கடுமையோடு விழித்துச் சினம் பொங்கி;* ***வருதியேல் வா வா என்பான் மேல்*** *- வருவதாயின் வருக வருக என்று கூறும்*

*இராவணன் மேல்;* ***காலின் தோன்றல்*** *-வாயு புத்திரனான அனுமன்;* ***மலை ஒன்று வாங்கி*** *- அடியோடு பெயர்த்தெடுத்து;* ***சுருதியே அனைய தோளால் வீசினான்*** *- வேதங்களை ஒத்த தன்னுடைய புயங்களால் வீசி எறிந்தான்.*

***7150. மீ எழு மேகம் எல்லாம் வெந்து, வெங் கரியின் சிந்தித்***
***தீ எழ, விசும்பினூடு செல்கின்ற செயலை நோக்கி,***
***காய் கணை ஐந்தும் ஐந்தும் கடுப்புறத் தொடுத்துக் கண்டித்து,***
***ஆயிரம் கூறு செய்தான், அமரரை அலக்கண் செய்தான்.***

***அமரரை அலக்கண் செய்தான்*** *- தேவர்களுக்குப் பெருந்துயர் செய்தவனாகிய இராவணன்;* ***மீ எழு உலகம் எல்லாம்*** *- (அனுமன் எறிந்த அந்த மலை) மேலே எழுந்து செல்கின்ற மேகம் எல்லாம்;* ***வெந்து வெம் கரியில் சிந்தி*** *- வெந்து வெப்பம் கொண்ட கரித்தணல் போலச் சிதறி;* ***தீ எழ*** *- நெருப்புப் பொறிபறக்க;* ***விசும்பின் ஊடு*** *- வானத்தின் வழியே;* ***செல்கின்ற செயலை நோக்கி*** *- போகும் போக்கினைக் கண்டு;* ***காய் கணை ஐந்தும் ஐந்தும்*** *- கொதிக்கும் பத்து அம்புகளை;* ***கடுப்பு உறத்தொடுத்து*** *- மிக வேகமாக விட்டு;* ***துண்டித்து*** *- மலையைத் துண்டித்து ;* ***ஆயிரம் கூறு செய்தான்*** *- ஆயிரம் துண்டுகளாகச் செய்தான்.*

***7151. மீட்டு ஒரு சிகரம் வாங்கி, வீங்கு தோள் விசையின் வீசி,***
***ஒட்டினான்; ஒட்ட, வானத்து உருமினும் கடுக ஓடி,***
***கோட்டு வெஞ் சிலையின் வாளி முன் சென்று, கொற்றப் பொன்தோள்***
***பூட்டிய வலயத்தோடும், பூழியாய்ப் போயிற்று அன்றே.***

***மீட்டு ஒரு சிகரம் வாங்கி*** *- (அனுமன்) மீண்டும் ஒரு மலையை எடுத்து;* ***வீங்கு தோள் விசையின் வீசி*** *- பருத்த தோள்களின் விசையினால் வீசி;* ***ஒட்டினான்*** *- செலுத்தினான்;* ***ஒட்ட*** *- (அவ்வாறு) செலுத்திய போது;* ***உருமினும் கடுக ஓடி*** *- (அம்மலை) விண்ணிலிருந்து வீழும் இடியை விட வேகமாகச் சென்று;* ***கோட்டுவெம் சிலையின்*** *- வளைந்த கொடிய வில்லிலிருந்து;* ***வாளி முன் சென்று*** *- (அரக்கன் எய்ய இருந்த) அம்புகட்கு முன்பாகச் சென்று;* ***கொற்றப் பொன்தோள்*** *- இராவணனது வெற்றிமிக்க தோளில்;* ***பூட்டிய வலயத்தோடும்*** *- அணிந்திருந்த வாகு வலயத்தோடும்;* ***பூழியாய்ப் போயிற்று*** *- (தானும்) புழுதியாய்ப் (பொடிந்து) போயிற்று.*

*மலையில் பட்டு, தோள்வளை பொடியாயிற்று. தோள் வளை பட்டு, மலை பொடியாயிற்று என்பதனால் இரண்டின் வலிமையும் ஒரு சேரக்குறித்த திறம் காண்க. அன்று, ஏ-அசை.*

***7152. மெய் எரிந்து அழன்று பொங்கி, வெங் கணான் விம்மி, மீட்டு ஓர்***
***மை வரை வாங்குவானை, வரி சிலை வளைய வாங்கி,***
***கையினும் தோளின்மேலும் மார்பினும் கரக்க, வாளி***
***ஐ-இரண்டு அழுந்த எய்தான்; அவன் அவை ஆற்றி நின்றான்.***

***வெங்கணான்*** *- கொடிய கண்களையுடைய இராவணன்;* ***விம்மி*** *- மனம் வெதும்பி;* ***மீட்டு ஓர் மை வரை வாங்குவானை*** *- மறுபடியும் ஒரு கரிய மலையைப் பெயர்க்கத் தொடங்கியுள்ள அனுமனை (நோக்கி);* ***மெய் எரிந்து*** *- உடல் கொதிக்க;* ***அழன்று பொங்கி*** *- வெகுண்டு எழுந்து;* ***வரிசிலை வளைய வாங்கி*** *- கட்டமைந்த வில்லை வளையச் செய்து;* ***கையினும் தோளின் மேலும் மார்பினும் கரக்க*** *- (அநுமனுடைய) கைகளிலும், தோள்களிலும், மார்பிலும் மறையுமாறு;* ***ஐ இரண்டு வாளி அழுந்த எய்தான்*** *- பத்துப் பாணங்களை அழுத்தமாக அடித்தான்;* ***அவன்*** *- அந்த அனுமனோ;* ***அவை*** *- அந்தக் கணைகளை;* ***ஆற்றி நின்றான்*** *- பொறுத்துக் கொண்டு நின்றான்.*

*கை இரண்டு, தோள் இரண்டு, மார்பு ஒன்று ஆகிய ஐந்து உறுப்புகட்கும் ஒவ்வொன்றுக்கு இரண்டாகப் பத்துக் கணைகள் எய்தான் என்க.*

***7153. 'யார் இது செய்யகிற்பார்?' என்று கொண்டு இமையோர் ஏத்த,***
***மாருதி, பின்னும், அங்கு ஓர் மராமரம் கையின் வாங்கி, வேரொடும் சுழற்றி விட்டான்; விடுதலும், இலங்கை வேந்தன்***
***சாரதி தலையைத் தள்ளிச் சென்றது, நிருதர் சாய.***

***யார் இது செய்ய கிற்பார்?*** *- (அனுமன் கணைகளைத் தாங்கி நின்ற அருமையைக் கண்டு) யாரே இத்தகைய செயலைச் செய்ய வல்லார்?;* ***என்று கொண்டு*** *- என்று உரைத்துக்கொண்டே;* ***இமையோர் ஏத்த*** *- தேவர்கள் போற்றிப் புகழ;* ***மாருதி*** *- அனுமன்;* ***பின்னும்*** *- பிறகும்;* ***அங்கு*** *- அவ்விடத்தே (இருந்த);* ***ஓர் மராமரம்*** *- ஒரு மராமரத்தை;* ***வேரொடும் கையின் வாங்கி*** *- வேரொடும் பெயர்த்துத் தன் கைகளில*

*கொண்டு;* ***சுழற்றி விட்டான்*** *- சுழலச் செய்து வீசினான்;* ***விடுதலும்*** *- (அவ்வாறு) சுழற்றி வீசியவுடன்;* ***இலங்கை வேந்தன்*** *- (அது) இலங்கை வேந்தனாகிய இராவணனுடைய;* ***சாரதி தலையைத் தள்ளி*** *- தேர்ப்பாகனின் தலையைத் துண்டித்து;* ***நிருதர் சாயச் சென்றது*** *- அரக்கர்களும் அழியுமாறு சென்று வீழ்ந்தது.*

*சுழற்றி வீசிய பொருள், குறியை மட்டுமன்றி, அருகிருக்கும் பொருள்களையும் வீழ்த்தும், ஆதலின், மாருதி வேரொடு சுழற்றிவிட்ட மராமரம் தேர்ப்பாகனை மட்டுமன்றி, அருகிருந்த அரக்கர் பலரையும் அழித்தது.*

***7154. மாறி ஓர் பாகன் ஏற, மறி திரைப்பரவை பின்னும்***
***சீறியது அனையன் ஆன செறி கழல் அரக்கன்,***
***தெய்வ***
***நூறுகோல் நொய்தின் எய்தான்; அவை உடல்***
***நுழைதலோடும்,***
***ஆறுபோல் சோரி சோர, அனுமனும் அலக்கணுற்றான்.***

***மாறி ஓர் பாகன் ஏற*** *- (இறந்த சாரதிக்கு) மாறாக ஒரு தேர்ப்பாகன் (தேரில்) ஏற;* ***மறிதிரைப்பரவை பின்னும் சீறியது அனையன் ஆன*** *- மீண்டும் மீண்டும் மோதுகின்ற அலைகளையுடைய கடல் மீண்டும் சினந்தெழுந்தாற் போன்றவனான;* ***செறிகழல் அரக்கன்*** *- வீரக்கழல்கள் செறிந்த இராவணன்;* ***தெய்வ நூறுகோல்*** *- தெய்வ அம்புகள் நூற்றினை;* ***நொய்தின் எய்தான்*** *- எளிதில் விடுத்தான்;* ***அவை உடல் நுழைதலோடும்*** *- அந்நூறு அம்புகளும் அனுமன் உடலுக்குள் நுழைந்தபோது;* ***ஆறுபோல் சோரி சோர*** *- நதி வெள்ளம் போல் குருதி பெருக;* ***அனுமனும் அலக்கண் உற்றான்*** *- அனுமனானவனும் துன்பம் அடைந்தான்.*

*தேர்ப்பாகன் இறந்தவுடன் "மாறி ஓர் பாகன் ஏற" என்றதனால், "சேமப்பாகர்" ஆயத்த நிலையில் இருக்கும் போர் மரபு சுட்டினார். முந்தையவை பத்து அம்புகள்; இவை நூறு அம்புகள். முந்தையவை எளிய அம்புகள்; இவை தெய்வங்களிடமிருந்து வரத்தால் பெற்றவை;' ஆதலால், "அனுமனும் அலக்கண் உற்றான்" என்க.*

*இராவணன் வீரவுரை*

***7155. 'கல் கொண்டும், மரங்கள் கொண்டும், கைக்***
***கொண்டும், களித்து, நும வாய்ச்***
***சொல் கொண்டும், மயிரின் புன் தோல் தோள்***
***கொண்டும் தள்ளி, வெள்ளிப்***
***பல் கொண்டும், மலைகின்றாரின் பழி கொண்டு***
***பயந்தது; யான் ஓர்***

***வில் கொண்டு நின்ற போது, விறல் கொண்டு மீள்திர் போலாம்.'***

***நும் வாய்ச் சொல் கொண்டும்*** - *உங்கள் வாய்க்கு வந்தவாறு பிதற்றிக் கொண்டும்;* ***கல் கொண்டும் மரங்கள் கொண்டும்*** - *கற்களைக் கொண்டும் மரங்களைக் கொண்டும்;* ***மயிரின் புன்தோல் தோள் கொண்டும்*** - *மயிர் அடிந்த அற்பமான தோலுடைய தோள்களைக் கொண்டும்;* ***வெள்ளிப் பல் கொண்டும்*** *-வெண்மையான பற்களைக் கொண்டும்;* ***தள்ளி களித்து மலை கின்றாரில்*** - *தடுத்து வெறியேறி போர் செய்கின்ற உங்களிடத்தில்; (நான் வில் முதலிய போர்க்கருவிகளைக் கொண்டு போர் புரிவதால் வரும்)* ***பழி கொண்டு பயந்தது*** - *பழியைக் கொண்டே (இது காறும்) நான் பயந்திருந்தது;* ***யான் ஓர் வில் கொண்டு நின்றபோது*** - *நான் ஒரு வில்லைக் கையில் ஏந்திக்கொண்டு போர் செய்ய நின்றால்;* ***விறல் கொண்டு மீள்திர் போலாம்?*** - *குரங்குகளாகிய நீங்கள் வெற்றி கொண்டு திரும்பிப் போய் விடுவீர்களோ?*

*7156.* ***என்று உரைத்து, எயிற்றுப் பேழ் வாய் எரி உக நகை செய்து, யாணர்ப்***
***பொன் தொடர் வடிம்பின் வாளி கடை உகத்து உருமுப் போல,***
***ஒன்றின் ஒன்று அதிகம் ஆக, ஆயிர கோடி உய்த்தான்;***
***சென்றது குரக்குச் சேனை, கால் எறி கடலின் சிந்தி.***

***என்று உரைத்து*** - *என்று இராவணன் கூறி;* ***எயிற்றுப் பேழவாய் எரிஉக நகை செய்து*** - *(வளைந்த கோரைப்) பறகளையுடைய பிளந்த வாயிலிருந்து நெருப்புச் சிந்துமாறு சிரித்து;* ***கடை உகத்து உருமுப் போல*** - *ஊழிக்காலத்து இடி போன்றவனாய்;* ***யாணர் தொடர் பொன்*** - *புதிய பொன்னினால் (செய்த);* ***வடிம்பின் ஆயிர கோடி வாளி*** - *கூர்மையான ஆயிரங் கோடி அம்புகளை;* ***ஒன்றின் ஒன்று அதிகமாக உய்த்தான்*** - *ஒன்றை விட ஒன்று விஞ்சுமாறு செலுத்தினான்;* ***கால் எறி கடலில்*** - *(அதனால்) (புயல்) காற்றால் மோதுண்ட கடல் போல;* ***குரக்குச் சேனை சிந்திச் சென்றது*** - *வானரப் படை சிதறிப் போயிற்று.*

*எயிற்றுப் பேழ்வாய்-கோரைப்பறகள் இரண்டு வெளியே தெரியுமாறு உள்ள பிளந்த வாய்.*

*இலக்குவன், இராவணனுடன் பொரவந்து நாண் ஒலி செய்தல்*

*7157.* ***கலக்கிய அரக்கன் வில்லின் கல்வியும்,கவிகள் உற்ற***
***அலக்கணும், தலைவர் செய்த தன்மையும், அமையக்***

***கண்டான்,***
***இலக்கவன், 'என் கை வாளிக்கு இலக்கு இவன்;***
***இவனை இன்று***
***விலக்குவென்' என்ன வந்தான், வில்லுடை மேரு***
***என்ன.***

***கலக்கிய அரக்கன்*** - *(தமது படையினை)க் கலக்கம் செய்த இராவணனுடைய;* ***வில்லின் கல்வியும்*** - *வில்வித்தையும்;* ***கவிகள் உற்ற அலக்கணும்*** - *வானரங்கள் அடைந்த துன்பமும்;* ***தலைவர் செய்த தன்மையும்*** - *வானரப் படைத்தலைவர் புரிந்த போரின் தன்மையும்;* ***அமையக் கண்டான்*** - *பொருந்தக் கண்டவனாய்;* ***இலக்குவன்*** - *இலக்குவனானவன்;* ***என் கைவாளிக்கு இலக்கு இவன்*** - *என்னுடைய கை அம்புகட்கு இன்று இலக்காகிறவன் இந்த இராவணன்;* ***இவனை இன்று விலக்குவன்*** - *இவனை இப்போதே தடுப்பேன்;* ***என்ன*** - *என்று கூறியவாறு;* ***வில்லுடை மேரு என்ன*** - *வில்லினை ஏந்திய மேருவே போல்;* ***வந்தனன்*** - *போர் (முனைக்கு) வந்தான்.*

*பொன்னிறம் பொருந்திய இலக்குவன் வில்லேந்தி வருவது, மேருமலை வில்லேந்தி வருவது போன்றிருந்தது என்று அழகுற மொழிந்தார். இல்பொருள் உவமை. "விற்கை வடவரை பாங்கு நிற்ப" (கம்ப. 6493) என முன்பும் கூறினார்.*

***7158. தேயத்தின் தலைவன் மைந்தன் சிலையை நாண்***
***எறிந்தான்; தீய***
***மாயத்தின் இயற்கை வல்லார் நிலை என்னை?***
***'முடிவின் மாரி***
***ஆயத்தின் இடி இது' என்றே அஞ்சின, உலகம்;***
***யானை***
***சீயத்தின் முழக்கம் கேட்டல் போன்றனர், செறுநர்***
***எல்லாம்.***

***தேயத்தின் தலைவன் மைந்தன்*** - *நாட்டிற்கெல்லாம் வேந்தனான தயரதனின் (இளைய) குமாரனான இலக்குவன்;* ***சிலையை நாண் எறிந்தான்*** - *வில்லின் நாணைத் தெறித்து ஒலியெழுப்பினான்;* ***தீய மாயத்தின் இயற்கை வல்லார்*** - *கேடு தரும் வஞ்சனை செய்வதில் இயல்பாகவே வல்லவர்களாகிய அரக்கர்களுடைய;* ***நிலை என்ன?*** - *நிலையை என்னென்று கூறுவது?;* ***முடிவின் மாரி ஆயத்தின் இடி இது என்றே*** - *யுகமுடிவில்,மழை கொட்டும் மேகத்தில் எழுகின்ற பேரிடியே இது என்று கருதி;* ***உலகம் அஞ்சின*** - *அரக்கர் உலகங்கள் பயந்தன;* ***செறுநர் எல்லாம்*** - *பகைவர் எல்லாம்;* ***யானைச் சீயத்தின் முழக்கம் கேட்டல் போன்றனர்*** - *யானையானது சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்டாற்போல ஆயினர்.*

*7159.* ***ஆற்றல் சால் அரக்கன்தானும், அயல் நின்ற வயவர் நெஞ்சம்***
***வீற்று வீற்று ஆகி உற்ற தன்மையும், வீரன் தம்பி***
***கூற்றின் வெம் புருவம் அன்ன சிலை நெடுங் குரலும் கேளா,***
***ஏற்றினன் மகுடம், 'என்னே! இவன் ஒரு மனிசன்' என்னா.***

***ஆற்றல் சால் அரக்கன் தானும்*** - *வல்லமை மிக்க இராவணனும்;* ***அருகில் நின்ற வயவர் நெஞ்சம்*** - *(தனக்கு) அருகில் (களத்தில்) நிற்கின்ற வீரர்களின் உள்ளம்;* ***வீற்று வீற்றாகி உற்ற தன்மையும்*** - *வேறுவேறாகி உடைந்து நிற்கின்ற தன்மையும் (நோக்கி);* ***வீரன் தம்பி*** - *வீரனான இராமனுடைய தம்பி இலக்குவனுடைய;* ***கூற்றின் வெம்புருவம் அன்ன*** - *கூற்றுவனுடைய கொடிய புருவம் போன்ற;* ***சிலை நெடும் குரலும் கேளா*** - *வில் எழுப்பிய பேரோசையும் கேட்டு;* ***என்னே! இவன் ஒரு மனிசன் என்னா*** - *என்னே! இவனும் ஒரு மனிதனா! என்று வியந்து;* ***மகுடம் ஏற்றினன்*** - *(சரிந்த) தன் மகுடத்தை உயர்த்தித் தள்ளிவிட்டுக் கொண்டான்.*

*இலக்குவனுடைய வில் வளைவு எமனின் புருவ வளைவு போன்றது என்பது அரியதொரு கற்பனை. இயமனின் புருவ வளைவு பேர் அழிவு செய்தல் ஒருதலை ஆதல் போல, இலக்குவன் வில் வளைவும் பேரழிவு செய்யும் என்பது குறிப்பு. இலக்குவன் வில் நாண் ஒலியால் அதிர்ந்த இராவணன் மணிமுடிகள் தளர்ந்து கீழ் இறங்கியமையால், அவற்றை உயர்த்திச் சரிசெய்து கொண்டான் என்பார். "ஏற்றினன் மகுடம்" என்றார். வியப்பின் மெய்ப்பாடு மகுடம் ஏற்றுதலாம்.*

## *இலக்குவன்-இராவணன் கடும்போர்*

*7160.* ***கட்டு அமை தேரின்மேலும், களி நெடுங் களிற்றின்மேலும்,***
***விட்டு எழு புரவிமேலும், வெள் எயிற்று அரக்கர்மேலும்,***
***முட்டிய மழையின் துள்ளி முறை இன்றி மொய்க்குமாபோல்***
***பட்டன பகழி; எங்கும் பரந்தது, குருதிப் பவ்வம்.***

***முட்டிய மழையின் துள்ளி*** - *மோதிச் சிதறிய மழைத்துளிகள்;* ***முறையின்றி மொய்க்குமா போல்*** -*ஒருமுறையாக இல்லாமல் பல*

*இடங்களிலும் பரவுவதுபோல்;* ***கட்குஅமை தேரின் மேலும்*** - *நன்கு அமைக்கப்பட்ட தேரின் மேலும்;* ***களிநெடுங்களிற்றின் மேலும்*** - *மத மயக்கம் கொண்ட பெரிய யானைகள் மேலும்;* ***விட்டு எழு புரவி மேலும்*** - *இருக்குமிடத்தை விட்டுத் தாவிப்*

*பாயும் குதிரைகளின் மேலும்;* ***வெள்எயிற்று அரக்கர் மேலும்*** *- வெள்ளைப் பற்களுடைய அரக்கர்கள் மேலும்;* ***பகழி பட்டன*** *- இலக்குவன் அம்புகள் பாய்ந்தன;* ***குருதிப் பவ்வம்*** *- இரத்தமாகிய கடல்;* ***எங்கும் பரந்தது*** *- எல்லா இடங்களிலும் பரவியது.*

*யானை, குதிரை, தேர், காலாட்படை என எங்கு நோக்கினும் இலக்குவன் அம்புகள் பட்ட இடம் ஆயின; அதனால், களம் முழுவதும் இரத்தக் கடல் ஆயிற்று என்பதாம். மழைத்துளிகள் எல்லாவிடத்திலும் தெறிப்பது போல் இலக்குவன் அம்புகள் தெறித்தன என்றார். துள்ளி-துளி.*

### *7161. நகங்களின் பெரிய வேழ நறை மத அருவி காலும்*
### *முகங்களில் புக்க வாளி அபரத்தை முற்றி, மொய்ம்பர்*
### *அகங்களைக் கழன்று, தேரின் அச்சினை உருவி,*
### *அப்பால்*
### *உகங்களின் கடை சென்றாலும், ஓய்வு இல ஓடலுற்ற.*

***நகங்களின் பெரிய வேழம்*** *- மலைகளிலும் பெரிய வடிவமுடைய யானைகளின்;* ***நறைமத அருவி*** *- மணம் உடைய மதப்பெருக்கு; காலும் - ஒழுகுகின்ற;* ***முகங்களில் புக்க வாளி*** *- முகங்களில் தைத்து உருவிச் சென்ற (இலக்குவனின்) அம்புகள்;* ***அபரத்தை முற்றி*** *- (அந்த யானைகளின்) பின் புறங்களில் நிறைந்து;* ***மொய்ம்பர் அகங்களைக் கழன்று*** *- வலிமை நிறைந்த வீரர்களின் நெஞ்சங்களில் பாய்ந்து கழன்று;* ***தேரின் அச்சினையுருவி*** *- தேர்ச்சக்கரங்களின் அச்சினைத் துளைத்து;* ***அப்பால்*** *- அதன் பின்னர்;* ***உகங்களின் கடை சென்றாலும்*** *- யுகங்களின் முடிவு கழிந்தாலும்;* ***உலப்பு இல ஓடல்உற்ற*** *- முடிவு இன்றி ஓடத்தொடங்கின.*

*யானைகளைப் பெரிய மலை என்றமையால், அவற்றின் முகத்திலிருந்து ஒழுகுகின்ற மதநீரை, "நறைமத அருவி" என்றார். இலக்குவன் வில்லாற்றலை "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇப் பன்றி வீழ, அயல தாழற்புற்றத்து உடும்பில் செற்றும் வல்வில் வேட்டம் வலம் படுத்திருந்தோன்" (புறம். 152) "உலை உருவக் கனல் உமிழ் கண் தாடகை தன் உரம் உருவி, மலையுருவி மரம் உருவி மண் உருவிற்று ஒரு வாளி" (கம்ப. 662) என்பவற்றோடு ஒப்பிட்டுக் காணலாம். எய்யப்பட்ட விசை புவியீர்ப்பால் பையப் பையத்தாழுமாதலால் அதற்கேற்ப, யானை, வீரர், தேர்அச்சு என்று முறையே உயரங்குறைந்த பொருள்களை ஊடுருவிற்று எனக்கூறும் கவிஞரின் அறிவுத்திறனை உணர்க. "ஓய்வுஇல ஓடலுற்ற" உயர்வு நவிற்சி அணி.*

### *7162. நூக்கிய களிறும், தேரும், புரவியும்,நூழில்செய்ய,--*
### *ஆக்கிய அரக்கர் தானை, ஐ-இரு கோடி,*
### *கையொத்து*
### *ஊக்கிய படைகள் வீசி உடற்றிய--உலகம் செய்த*

**பாக்கியம் அனைய வீரன் தம்பியைச் சுற்றும் பற்றி.**

**நூக்கிய களிறும் தேரும் புரவியும்** - *(அரக்கர்) செலுத்திய யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும்;* **நூழில் செய்ய** - *(இலக்குவனுடைய) அம்புகள் கொன்று குவிக்க;* **கை ஒத்து ஆக்கிய அரக்கர் ஐயிருகோடி தானை** - *அணி வகுத்தி நின்ற அரக்கருடைய பத்துக் கோடி சேனைகள்;* **ஊக்கிய படைகள் வீசி** - *செலுத்தற்குரிய ஆயுதங்களை எறிந்து;* **உலகம் செய்த பாக்கியம் அனைய வீரன்** - *உலகம் புரிந்த பாக்கியங்கள் எல்லாம் (ஒருங்கு திரண்டு) உருவம் பெற்றது போன்ற வீரனாகிய இராமனுடைய;* **தம்பியை** - *இலக்குவனை;* **சுற்றும் பற்றி** - *தொடர்ந்து சூழ்ந்து கொண்டு;* **உடற்றிய** - *போரிட்டன.*

*நூழில் செய்தல்- கொன்று குவித்தல். "ஒள்வாள் வீசிய நூழிலும்" (தொல். பொருள்: புறத்.17) கையொத்தல்-அணிவகுத்தல். இன்றும்போர்ப் படைகள் கை ஒத்து அணிநடை செல்லுதல் காண்க.*

*7163.* **'உறு பகை மனிதன், இன்று, எம் இறைவனை**
**உறுகிற்பானேல்,**
**வெறுவிது, நம்தம் வீரம்' என்று ஒரு மேன்மை**
**தோன்ற,**
**எறி படை அரக்கர் ஏற்றார்--'ஏற்ற கைம் மாற்றான்'**
**என்னா,**
**வறியவர், ஒருவன், வண்மை பூண்டவன்மேல்**
**சென்றென்ன.**

**எறிபடை அரக்கர்** - *ஆயுதங்களை வீசுகின்ற அரக்கர்* **உறுபகை மனிதன்** - *மிகு பகை கொண்ட ஒரு மானிடன்;* **இன்று எம் இறைவனை உறுகிற்பானேல்** - *இப்போது நம் அரசனாகிய இராவணனை நெருங்க வ ல்லவன் ஆனால்;* **வெறுவிது நந்தம் வீரம்** - *நம் வீரம் வீணானதாகும்;* **என்று** - *என்றெண்ணியதால்;* **ஒரு மேன்மை தோன்ற** - *ஓர் எழுச்சியுண்டாகி;* **ஏற்றார்** - *இலக்குவனை எதிர்த்தார்கள்;* **ஏற்ற கை மாற்றான் என்னா** - *இரந்து ஏற்ற கைக்கு இல்லையென்று சொல்லமாட்டாதவன் என்னுமாறு;* **வண்மை பூண்டான் ஒருவன் மேல்** - *வள்ளல் தன்மை மேற்கொண்ட ஒருவனிடத்தில்;* **வறியவர் சென்று என்ன** - *(பலராய்) ஏழையர் செல்வதுபோல்; (இலக்குவன் பகழி மாரி பொழிந்தான் என அடுத்த பாட்டில் முடியும்.)*

*7164.* ***அறுத்தனன், அரக்கர் எய்த எறிந்தன; அறுத்து,***
***அறாத***
**பொறுத்தனன்; பகழி மாரி பொழிந்தனன்; உயிரின்**
**போகம்**

***வெறுத்தனன், நமனும்; வேலை உதிரத்தின்***
***வெள்ளம் மீள***
***மறித்தன; மறிந்த எங்கும், பிணங்கள் மா மலைகள்***
***மான.***

***பகழி மாரி பொழிந்தனன்*** - *(இலக்குவன்) அம்பு மழை பொழிந்தான்;* ***அரக்கர் எய்த எறிந்தன அறுத்தனன்*** - *இராக்கதர் விடுத்த கணைகளையெல்லாம் (ஒன்றுவிடாது) அறுத்தெறிந்தான்;* ***அறுத்து அறாத பொறுத்தனன்*** - *அறுத்தும் அறாத ஆயுதங்களைத் தன் மேல் ஏற்றுக் கொண்டான்;* ***நமனும் உயிரின் போகம் வெறுத்தனன்*** - *எமனும் உயிர்களை உண்ணும் மகிழ்ச்சி துறந்து வெறுப்பதானான்;* ***மாமலைகள் மான*** - *பெரிய மலைகள் போல;* ***பிணங்கள் எங்கும் மறிந்த*** - *பிணங்கள் போர்க்களம் எங்கும் வழி மறித்துக் கிடந்தன;* ***உதிரத்தின் வெள்ளம் வேலை மீள மறித்தன*** - *இரத்த வெள்ளம் கடலிற் போய்ச் சேராவண்ணம் பிணங்கள் தடுத்து விட்டன.*

*உயிர் உண்ணும் கூற்றுக்கும், உண்ண இயலாமல் திகட்டிப் போய்விட்டது என்பார். "உயிரின் போகம் வெறுத்தனன் நமனும்" என்று அழகுறக் குறித்தார். இங்குப் பெரும் பள்ளமாகிய கடல் அருகிலிருந்தும் பிணமலைகள் தடுத்ததால் கடலில் சென்று சேர இயலவில்லை என்னும் வியப்புச் சுவை தோன்ற வைத்தார்.*

***7165. தலை எலாம் அற்ற; முற்றும் தாள் எலாம் அற்ற;***
***தோளாம்***
***மலை எலாம் அற்ற; பொன்-தார் மார்பு எலாம் அற்ற;***
***சூலத்து***
***இலை எலாம் அற்ற; வீரர் எயிறு எலாம் அற்ற;***
***கொற்றச்***
***சிலை எலாம் அற்ற; கற்ற செரு எலாம் அற்ற, சிந்தி.***

***வீரர் தலை எலாம் அற்ற*** - *(இலக்குவன் அம்புகளால்) அரக்க வீரர்களின் தலையெல்லாம் அற்று வீழ்ந்தன;* ***தாள் எலாம் முற்றும் அற்ற*** - *கால்கள் எல்லாம் முழுவதுமாக அற்று வீழ்ந்தன;* ***தோளாம் மலை எலாம் அற்ற*** - *தோள்கள் என்னும் மலையெல்லாம் அற்று வீழ்ந்தன;* ***பொன்தார் மார்பு எலாம் அற்ற*** - *பொன் மாலைகள் அணிந்த மார்பு எல்லாம் அற்று வீழ்ந்தன;* ***எயிறு எல்லாம் அற்ற*** - *பல் எல்லாம் அற்று வீழ்ந்தன; சூலத்து இலையெல்லாம் அற்ற சூலப்படைகளின் இலை வடிவான நுனியெல்லாம் அற்று வீழ்ந்தன;* ***கொற்றச் சிலை எலாம் அற்ற*** - *முன்பு வெற்றி ஈட்டித் தந்த வில் எல்லாம் அற்று வீழ்ந்தன;* ***சிந்தி*** - *(அரக்கர் இலக்குவனுக்கு ஆற்றாமல் புறமுதுகிட்டுச்) சிதறி ஓடுவதால்;* ***கற்ற செரு எல்லாம் அற்ற*** - *(அவர்) கற்றிருந்த போர்த்திறம் எல்லாம் (அவரிடமிருந்து) அற்று வீழ்ந்தன.*

*சொற்பொருட்பின் வருநிலையணி. வீரர் என்ற சொல் இடைநிலைத் தீபமாய், வீரர் தலையெலாம், வீரர் தோள் எலாம் என எல்லாவற்றோடும் கூட்டுமாறு நின்றது. கற்றபின், கற்றவாறு நிற்பதே கல்விப் பயன் (குறள். 391) ஆதலின், போர்க்கல்விக்கு மாறாய், புறமுதுகிட்டு ஓடி கற்ற கல்வியைப் பாழாக்கினர் என்பார்.*

*"சிந்தி கற்ற, செருவெலாம் அற்ற" என்றார். "அற்ற" என்ற சொல்லால் இப்பாடல் அழகு பெற்றது.*

***7166. தேர் எலாம் துமிந்த; மாவின் திறம் எலாம் துமிந்த; செங் கண்***
***கார் எலாம் துமிந்த; வீரர் கழல் எலாம் துமிந்த; கண்டத்***
***தார் எலாம் துமிந்த; நின்ற தனு எலாம் துமிந்த; தம்தம்***
***போர் எலாம் துமிந்த; கொண்ட புகழ் எலாம் துமிந்து***

***போய.***

***தேர் எலாம் துமிந்த*** *- (அரக்கர் சேனை வீரர்களின்) தேர்கள் எல்லாம் துண்டாயின;* ***மாவின் திறம் எலாம் துமிந்த*** *- குதிரைகளின் வல்லமையெல்லாம் துண்டாயின;* ***செங்கட் கார் எலாம் துமிந்த*** *- சிவந்த கண்களையுடைய மேகம் போன்ற யானைகள் எல்லாம் துண்டாயின;* ***வீரர் கழல் எலாம் துமிந்த*** *- அரக்க வீரர்களின் வீரக்கழல்கள் எல்லாம் துண்டாயின;* ***கண்டம் தார் எலாம் துமிந்த*** *- கழுத்தில் அணிந்திருந்த மாலைகள் எல்லாம் துண்டாயின;* ***நின்ற தனு எலாம் துமிந்த*** *- கைகளில் ஏந்தி நின்ற விற்கள் எல்லாம் துண்டாயின;* ***தம்தம் போர் எலாம் துமிந்த*** *- தங்கள் தங்களுடைய போர் ஆற்றல் எல்லாம் துண்டாயின;* ***கொண்ட புகழ் எல்லாம் துமிந்து போய*** *- (தாம் இது வரையிலும்) ஈட்டி வைத்திருந்த புகழ் எல்லாம் துண்டு துண்டாகச் சிதறிப் போயின.*

*சென்ற பாடலில் "அற்ற" எனும் சொல் கொண்டு அழகுறுத்தினார். இப்பாடலில் "துமிந்த" என்னும் சொல்லால் அணி செய்கிறார். சொற்பொருட் பின்வரு நிலையணி, கார் என்பது-உவம ஆகுபெயராய் யானையைக் குறித்தது.*

***7167. அரவு இயல் தறுகண் வன் தாள் ஆள் விழ, ஆள்மேல் வீழ்ந்த***
***புரவிமேல் பூட்கை வீழ்ந்த; பூட்கைமேல் பொலன் தேர் வீழ்ந்த,***
***நிரவிய தேரின் மேன்மேல் நெடுந் தலை கிடந்த; நெய்த்தோர்***
***விரவிய களத்துள் எங்கும் வெள்ளிடை அரிது, வீழ.***

***அரவு இயல் தறுகண் வன்தாள் ஆள் விழ!*** *-பாம்புகளைப் போன்று எதிர்த்துச் சீறுகின்ற அஞ்சாமையுடைய வலிய முயற்சிகள் கொண்ட காலாள் வீரர்கள் களத்தில்*

*வீழ;* ***ஆள்மேல் வீழ்ந்த புரவி மேல் பூட்கை வீழ்ந்த*** *- அந்தக் காலாட்படைகள் மீது விழுந்த குதிரைகள் மேல் யானைகள் விழுந்தன;* ***பூட்கை மேல் பொலந்தேர் வீழ்ந்த*** *- அந்த யானைகளின் மேல் பொன் தேர்கள் வீழ்ந்தன;* ***நிரவிய தேரின் மேன்மேல் நெடுந்தலை கிடந்த*** *-வரிசையாக வீழ்ந்த தேர்களின் மீது நீண்ட தலைகள் சாய்ந்து கிடந்தன;* ***நெய்த்தோர் விரவிய களத்துள்*** *- உதிரம் கலந்து கிடந்த (அந்த) யுத்த களத்தில்;* ***எங்கும் வீழ வெள்ளிடை அரிது*** *- எவ்விடத்திலும் இனி வேறொன்று வீழ வெற்றிடம் இல்லை. அடித்த கோலுக்கு அஞ்சாது, எதிர்த்துச் சீறும் வீரம் பாம்புக்குள்ளது ஆதலின், "அரவு இயல்தறுகண் வன்தாள் ஆள்" என்றார்.*

***7168. கடுப்பின்கண், அமரரேயும், 'கார்முகத்து அம்பு கையால்***
***தொடுக்கின்றான், துரக்கின்றான்' என்று உணர்ந்திலர்; துரந்த வாளி***
***இடுக்கு ஒன்றும் காணார்; காண்பது, எய்த கோல் நொய்தின் எய்திப்***
***படுக்கின்ற பிணத்தின் பம்மல் குப்பையின் பரப்பே; பல் கால்.***

***கடுப்பின்கண்*** *- (இலக்குவன் கணைகளை விடும்) வேகத்தில்;* ***அமரரேயும்*** *- தேவர்களும்;* ***கார் முகத்து*** *- வில்லிலிருந்து;* ***அம்பு கையால் தொடுக்கின்றான்*** *- அம்புகளைக் கையால் தொடுக்கின்றான் என்பதும்;* ***துரக்கின்றான் என்று*** *- விடுக்கின்றான் என்பதும்;* ***உணர்ந்திலர்*** *- யாரும் கண்டவர் இல்லை;* ***துரந்த வாளி*** *- செலுத்திய அம்பு;* ***இடுக்கு ஒன்றும் காணார்*** *- சென்று பற்றுவதைச் (சிறிதும்) கண்டவர் (எங்கும்) இல்லை;* ***காண்பது*** *- (அந்த வானவர்கள்) காண்பதெல்லாம்;* ***எய்த கோல்*** *- விடுத்த அம்புகள்;* ***பல்கால் நொய்தின் எய்தி*** *- பலமுறை எளிதாகச் சென்று;* ***படுக்கின்ற பிணத்தின்*** *-கீழே வீழ்த்துகின்ற பிணங்களின்;* ***பம்மல் குப்பையின்*** *- அடர்ந்து மூடிய குவியலின்;* ***பரப்பே*** *- பரப்பினையேயாகும்.*

*கடுப்பு-விரைவு. விழிகள் மிக விரைவான செயல்களைத் தொடர்ந்து அவ்விரைவில் பற்றி மனத்துக்குக் காட்டும் திறன் இல்லாதது எனும் அறிவியல் உண்மையைக் கவிஞர் பிரான் இங்குத் தெளிவுறக் காட்டுவது காண்க.*

***7169. கொற்ற வாள், கொலை வேல், சூலம், கொடுஞ் சிலை முதல ஆய***
***வெற்றி வெம் படைகள் யாவும் வெந் தொழில் அரக்கர் மேற்கொண்டு,***
***உற்றன, கூற்றும் அஞ்ச ஒளிர்வன, ஒன்று நூறு ஆய்***

***அற்றன அன்றி, ஒன்றும் அறாதன இல்லை அன்றே.*** **வெந்தொழில் அரக்கர்** - *கொடுஞ்செயல் கூடிய இராக்கதர்கள்;* **மேல்கொண்டு உற்றன** - *கைக்கொண்டு பயன்படுத்தியனவும்;* **கூற்றும் அஞ்ச ஒளிர்வன** - *நமனும் அஞ்சுமாறு ஒளி செய்பவையுமான;* **கொற்றவாள்** - *வெற்றி பொருந்திய வாள்கள்;* **கொலைவேல், சூலம்** - *கொலைத்தன்மை உடைய வேற்படை, சூலப்படை;* **கொடுஞ்சிலை** - *வளைந்த விற்கள்;* *முதலவாய* - *முதலியவான;* **வெற்றி வெம் படைகள் யாவும்** - *இதுவரையிலும் வெற்றியினையே ஈட்டித் தந்த அந்தக் கருவிகள் யாவும்;* **ஒன்று நூறாய் அற்றன அன்றி** - *ஒன்று நூறாகத் துண்டுபட்டு உடைந்தனவே யல்லாமல்;* **அறாதன ஒன்றும் இல்லை** - *உடையாதன என்று ஒன்று இல்லை.*

***7170. குன்று அன யானை, மானக் குரகதம், கொடித்தேர், கோப***
***வன் திறல் ஆளி, சீயம், மற்றைய பிறவும், முற்றும்***
***சென்றன எல்லை இல்லை; திரிந்தில; சிறிது போதும்***
***நின்றன இல்லை; எல்லாம் கிடந்தன, நெளிந்து பார்மேல்.***

**எல்லை இல்லை சென்றன குன்றுஅன யானை** - *எல்லை இல்லாதனவாய் குன்றுகளைப் போன்று (போருக்குச்) சென்ற யானைகளும்;* **மானக்குரகதம்** - *பெருமிதம் கொண்ட குதிரைகளும்;* **கொடித்தேர்** - *கொடிகளையுடைய தேர்களும்;* **கோபவன்திறல் ஆளிசீயம்** - *சினத்தையும் வலிய பலத்தையும் கொண்டயாளிகளும் சிங்கங்களும்;* **மற்றைய பிறவும்** *-மற்றுமுள்ள (போரிடற்கு உரிய) உயிர்களும்;* **முற்றும்** - *முழுவதும்;* **சிறிய போதும்** - *சிறிதுகால அளவிலும்;* **திரிந்தன நின்றன இல்லை** - *இயங்கிக் கொண்டும் நின்று கொண்டுமாக இருப்பன (எவையும் அங்கு) இல்லை;* **எல்லாம் பார்மேல் நெளிந்து கிடந்தன** - *எல்லாம் மண்மேல் உயிரற்றுக் கிடந்தன; இல்லையேல் உயிர்விட நெளிந்து கொண்டிருந்தன.*

***7171. சாய்ந்தது நிருதர் தானை; தமர் தலை இடறித் தள்ளுற்று***
***ஓய்ந்தது; ஒழிந்தது ஓடி உலந்ததும் ஆக, அன்றே***
***வேய்ந்தது வாகை, வீரற்கு இளையவன் வரி வில்; வெம்பிக்***
***காய்ந்தது, அவ் இலங்கை வேந்தன் மனம் எனும் காலச் செந் தீ.***

**நிருதர் தானை** - *(பின்னிட்டு ஓடும்போது) அரக்கர் சேனையானது;* **தமர்தலை இடறித் தள்ளுற்று ஓய்ந்தது** - *தம் உறவினரின் தலைகளை இடறிக்கொண்டு வீழ்ந்து*

*வலிமை குறைந்ததும்;* ***ஒழிந்தது ஓடி உலர்ந்ததும் ஆக*** *- ஒழிந்து மிஞ்சிய சேனைப்பகுதி ஓடிச்சென்று (ஓடஓட) உயிர் இழந்ததும் ஆக; சாய்ந்தது - (அடியோடு) சாய்ந்தது;* ***வீரற்கு இளையவன் வரிவில் அன்றே வாகை வேய்ந்தது*** *- வீரனாகிய இராமனின் தம்பி இலக்குவனின் கட்டமைந்த வில் அப்போதே வெற்றி வாகை சூடியது;* ***அவ்விலங்கை வேந்தன்*** *- அந்த இலங்கை வேந்தனாகிய இராவணனின்;* ***மனமெனும் காலச் செந்தீ*** *- உள்ளம் என்னும் ஊழிக்காலத்துச் செந்நெருப்பானது;* ***வெம்பிக் காய்ந்தது*** *- வெம்பிக் கொதித்தது.*

*இராவணன் மனம் முழுவதும் கனல் பிழம்பாகி விட்டமையால், "மனமெனும் செந்தீ" என உருவகத்தால் கூறினார். ஊழிக்காலச் செந்தீ-உலகை அழிப்பது போல, இவன் சினமும் உலகை அழிக்கவே எழும் என்பது குறிப்பு. உருவக அணி.*

### *இராவணன் இலக்குவனை நெருங்கிப் பொருதல்*

***7172. காற்று உறழ் கலின மான் தேர் கடிதினின் கடாவி, கண்ணுற்று***
***ஏற்றனன், இலங்கை வேந்தன்; எரி விழித்து, இராமன் தம்பி,***
***கூற்று மால் கொண்டது என்னக் கொல்கின்றான், குறுகச் சென்றான்;***
***சீற்றமும் தானும் நின்றான்; பெயர்ந்திலன், சிறிதும் பாதம்.***

***காற்று உறழ் கலினமான் தேர்*** *- காற்றைப் போன்ற வேகமுடைய கடிவாளம் பூண்ட குதிரைகள் பூட்டிய தேரினை;* ***கடிதினில் கடாவி*** *- விரைவாகச் செலுத்தி;* ***இலங்கை வேந்தன்*** *- இராவணன்;* ***கண்ணுற்று*** *- (இலக்குவனை) நேருக்கு நேர் சந்தித்து;* ***ஏற்றனன்*** *- எதிர்த்தான்;* ***இராமன் தம்பி*** *- இலக்குவன்;* ***எரிவிழித்து*** *- தீப்பொறி பறக்க விழித்துப் பார்த்து;* ***கூற்றுமால் கொண்டது அன்ன*** *- (அப்போது) கூற்றுவன் பித்துக் கொண்டவன் ஆனது போல;* ***குறுகச் சென்றான்*** *-இராவணனின் சேனைப்பக்கம் சென்று;* ***கொல்கின்றான்*** *- (அரக்கர் சேனையை) கொலை புரிந்தான்;* ***சீற்றமும் தானும் நின்றான்*** *- சினமும் தானுமாக நின்றான்;* ***பாதம் சிறிதும் பெயர்ந்திலன்*** *- தன் அடியைச் சிறிது கூடப் பின் வைத்தான் இல்லை.*

*குதிரையின் வேகம் காற்றின் வேகத்திற்கு ஒத்தது ஆதலின், "காற்று உறழ் கலின மான்" என்றார். மான்-குதிரை. பிறமான்களிலிருந்து வேறுபடுத்தக் "கலினமான்" என்றார். இலக்குவன் அரக்கர் படையைக் கொன்று குவித்த பாங்கைக் கண்ணுற்றால், எமனுக்குப் பைத்தியம் பிடித்துக் கொண்டதோ என எண்ணுமாறிருந்ததால், "கூற்று மால் கொண்டது என்ன" என்றார்.*

*சந்தக் கலி விருத்தம* ◌ஂ

***7173. 'காக்கின்ற என் நெடுங் காவலின் வலி நீக்கிய கள்வா!***
***போக்கு இன்று உனக்கு அரிதுஆல்' எனப் புகன்றான்; புகை உயிர்ப்பான்,***
***கோக்கின்றன, தொடுக்கின்றன, கொலை அம்புகள், தலையோடு***
***ஈர்க்கின்றன, கனல் ஒப்பன, எய்தான்; இகல் செய்தான்.***

***காக்கின்ற என் நெடுங்காவலின் வலி நீக்கிய கள்வா !*** *- (பிராட்டியைக்) காத்துக் கொண்டிருந்த என் பெருங்காவலின் வலிமையை (வஞ்சத்தால்)* ***நீக்கிவிட்டு (ஏமாற்றிய) கள்வனே! உனக்கு இன்று போக்கு அரிது*** *- நீ இன்று தப்பிப் போவது இயலாது;* ***எனப்புகன்றான்*** *- என்று கூறினான் (இலக்குவன்);* ***புகை உயிர்ப்பான்*** *- சினத்தால் புகை தோன்றுமாறு பெருமூச்சு விட்டான்;* ***கோக்கின்றன தொடுக்கின்றன*** *- வில்லில் கோக்கும் தன்மையனவும் தொடுக்கும் தன்மையுடையனவும்;* ***தலையோடு ஈர்க்கின்றன*** *- தலையினை இழுத்துச் செல்வதற்கு உரியனவும்;* ***கனல் ஒப்பன*** *-தீயைப் போன்றவையும் ஆன;* ***கொலை அம்புகள்*** *- - கொலைத்தொழிலில் வல்ல அம்புகளை;* ***எய்தான் இகல் செய்தான்*** *- எய்தவனாய் போர் புரிந்தான்.*

*இப்பாடல் முதல் 28 பாடல்கள் போர்க்குரிய விரைவும் மிடுக்கும் அமைந்த சந்தக் கலிவிருத்தங்களாம். வீர வார்த்தையாடலுக்கும், வீரச் செயல்புரிகைக்கும், சினம் என்னும் மெய்ப்பாட்டை வெளிப்படுத்தற்கும் இவை ஏற்றனவாய் அமைந்துள்ளன. இராவணன் தன் காவலுக்கு இழுக்கு ஏற்படுமாறு வஞ்சித்துப் பிராட்டியைக் கொணர்ந்ததால் "காக்கின்ற என் நெடுங்காவலின் வலி நீக்கிய கள்வா!" என்று கொதித்துரைத்தான். மானின்பின் தங்களை அனுப்பி வஞ்சித்துக் கொணர்ந்தமை தோன்ற, "கள்வா!" என்றான், கோக்கின்றன; தொடுக்கின்றன; தலையோடு ஈர்க்கின்றன-அம்பின் வகைகள்.*

***7174. 'எய்தான் சரம் எய்தாவகை இற்றீக' என இடையே,***
***வைதாலென ஐதாயின வடி வாளியின் அறுத்தான்;***
***'ஐது ஆதலின் அறுத்தாய்; இனி, அறுப்பாய்!' என அழி கார்***
***பெய்தாலெனச் சர மாரிகள் சொரிந்தான், துயில் பிரிந்தான்.***

***எய்தான் சரம் எய்தா வகை*** *- (இவ்வாறு) எய்தவனாகிய இலக்குவனது அம்புகள் தன் மேற்படாத வகையில்;* ***இடையே இற்றீக என வைதால் என*** *- இடையே இற்று ஒழியட்டும் என்று (அவ்வம்புகளை ஒருவர்) சபித்தாற்போல;* ***ஐதாயின*** *- அவை எளிதாகுமாறு;* ***வடிவாளியின் அறுத்தான்*** *- கூரிய கணைகளால் (இராவணன்)*

*துண்டித்து வீழ்த்தினான்; (அப்போது)* ***துயில் பிரிந்தான்*** *- உறக்கத்தைத் துறந்தவனாகிய இலக்குவன்;* ***ஐது ஆதலின் அறுத்தாய்*** *- அவ்வம்புகள் சிறியவையாதலின் அறுத்து எறிந்து விட்டாய்;* ***இனி அறுப்பாய் என*** *- இனி அறுத்துவிடு (பார்ப்போம்) என்று;* ***அழிகார் பெய்தால் என*** *- உலகத்தையழிக்கும் ஊழி மேகம் மழை பெய்தால் போன்ற;* ***சரமாரிகள் சொரிந்தான்*** *- அம்பு மழை பொழிந்தான்.*

*எய்தான், துயில் துறந்தான்-வினையால் அணையும் பெயர்கள். ஒருவர் சாபமிட்டு அழித்தாற் போல இருந்தது என்பார். சரம் எய்தாவகை இற்றீகென இடையே வைதால் என அறுத்தான்" என்றார். "சொல் ஒக்கும் கடிய வேகச்சுடுசரம்" (கம்ப. 394) என்பதனையும் நோக்குக. தற்குறிப்பேற்றம். துயில் துறந்தான்- இலக்குவன். "மனையின் வாழ்வும் உறக்கமும் மாற்றினான்" (கம்ப. 8154) "கங்குல் எல்லை காண் பளவும் நின்றான்; இமைப்பிலன் நயனம்" (கம்ப. 2344) "உறக்கம் என்பதனை ஓடமுனிந்தான்" (கம்ப; 6881) என் உயிர் காவலில் நின்று இமையாதவன்" (கம்ப. 3616) என்னும் புண்ணியன் கண்ணும், வன்தோள் தம்பி போன்ற அன்றே" (கம்ப. 3545) என நூல் நெடுகிலும் இலக்குவன் துயிலாமையைச் சுட்டிச்செல்லும். கவிஞர் பிரான் இங்கும் "துயில் துறந்தான்" எனும் வினைப்பெயர் ஈந்தார். உறங்காவில்லி என்றொரு பெயரும் உண்டு. "சொரிந்தான் துயில் பிரிந்தான்" என்பதில் கடை எதுகை தரும் சொல்லின்பத்தை ஓதியுணர்க.*

*7175.* ***ஆம் குஞ்சரம் அனையான் விடும் அயில் வாளிகள் அவைதாம்***
***வீங்கும் சரம் பருவத்து இழி மழை போல்வன விலக்கா,***
***தூங்குஞ் சர நெடும் புட்டிலின், சுடர் வேலவற்கு இளையான்,***
***வாங்குஞ் சரம் வாங்காவகை அறுத்தான், அறம் மறுத்தான்.***

***அறம் மறுத்தான்*** *- அறச் செயல்களைத் (தன் வாழ்வில்) மறுத்து எறிந்து விட்டவனான இராவணன்;* ***ஆம் குஞ்சரம் அனையான் விடும்*** *- (வலிமை) கூடிய யானையைப் போன்றவனான இலக்குவன் எய்கின்றவும்;* ***வீங்கும் சரம் பருவத்து*** *- மழை மிகும் சரற்காலத்து;* ***இழிமழை போல்வன*** *- பெய்கின்ற மழை போல்வனவுமாகிய;* ***அயில் வாளிகள் அவைதாம் விலக்கா*** *- கூரிய அம்புகளாகிய அவை அனைத்தையும் தடுத்து;* ***சுடர் வேலவற்கு இளையான்*** *- ஒளிர்கின்ற வேல் வல்ல இராமனின் தம்பியாகிய இலக்குவன்;* ***தூங்கும் சர நெடும் புட்டிலில்*** *- (முதுகில்) தொங்குகின்ற அம்புகளையுடைய நெடிய அம்பறாத் தூணியிலிருந்து;* ***வாங்கும் சரம் வாங்கா வகை*** *- எடுக்கும் அம்புகளையும் மேலும் எடுக்க இயலாதவாறு;* ***அறுத்தான்*** *- அம்பறாத் தூணியை அறுத்து வீழ்த்தினான்.*

"சுடர் வேலவற்கு கிளையான்" எனும் பாடத்திலும் சிறந்ததாக "சுடர் வில்லினாற்கு இளையான்" எனும் பாடம் கொள்வாரும் உளர். ஆயின் ஓசைச் சிறப்புக் குறையும். சரற்காலத்தே இடைவிடாது மழை பொழிவது போல, இடைவிடாது சரமழை பொழிய உதவும் அம்பறாத் தூணி என்பார். "வீங்கும் சரம் பருவத்து இழி மழைபோல்வன விலக்காத் தூங்கும் சர நெடும் புட்டில்"என்றார். இலக்குவன் விடும் சரமழைகளைத் தடுக்க இயலாத இராவணன், அம் மழை தோன்றும் மூதத்தானமாகிய அம்பறாத் தூணியை அறுத்தெரிந்தான் என்பதாம்.

*அயர்வு நீங்கிய அனுமனின் வீரவுரை*

***7176. அப்போதையின் அயர்வு ஆறிய அனுமான், அழல் விழியா,***
***'பொய்ப் போர் சில புரியேல், இனி' என வந்து, இடை புகுந்தான்,***
***கைப் போதகம் என, முந்து, அவன் கடுந் தேர் எதிர் நடந்தான்,***
***'இப் போர் ஒழி; பின் போர் உள; இவை கேள்' என இசைத்தான்;***

**அப்போதையின்** - அந்தப் பொழுதில்; அயர்வு ஆறிய அனுமான் - இளைப்பாறிய அனுமான்; **அழல் விழியா** - தீ எழுமாறு விழித்து; இனிப்பொய்ப் போர் சில புரியேல் - இனி நீ சில பொய்யான போர்களைப் புரிய வேண்டா; **என** - என்று சொல்லிக்கொண்டு; **இடை வந்து புகுந்தான்** - அந்தப் போரின் இடையே புகுந்தவனாய்; **கைப்போதகம் என** - கையினைக் கொண்ட யானையைப் போல; **முந்து** - முற்பட வந்து; **அவன்** - அந்த இராவணனுடைய; **கடுந்தேர் எதிர் நடந்தான்** - விரைந்து செல்கின்ற தேரினுக்கு எதிராகச் சென்று; **"இப்போர் ஒழி** - (இப்போர் செய்யும்) இந்தச் சண்டையைத் தவிர்; **பின்போர் உள** - பின் செய்ய (இன்னும்) போர்கள் உள்ளன; **இவை கேள்" என இசைத்தான்** - (நான் சொல்லும்) இவற்றைக் கேட்பாயாக என்று கூறலானான்.

முன்வந்த 138- ஆம் பாடலில், ஆறுபோல் குருதி சோர அலக்கண் உற்றவனான அனுமன் இப்போது அந்த அயர்ச்சி நீங்கி, மீண்டும் இராவணன் முன்வந்து உரையாடுகிறான் என்க. தன் ஆற்றல் முழுதும் காட்டிச் செய்யாத போர், "பொய்ப் போர்" ஆகும். உன் ஆற்றலும் என் ஆற்றலும் முழுதும் காட்ட வல்ல ஓர் உண்மைப் போர் புரிக வருக என அழைத்தவாறாம்.

***7177. 'வென்றாய் உலகு ஒரு மூன்றையும், மெலியா நெடு வலியால்;***
***தின்றாய் செறி கழல் இந்திரன் இசையை; திசை திரித்தாய்;***
***என்றாலும், இன்று அழிவு உன்வயின் எய்தும்' என***

***இசையா,***
***நின்றான் அவன் எதிரே, உலகு அளந்தான் என***
***நிமிர்ந்தான்.***

***மெலியா நெடுவலியால்*** - *(என்றும்) தளராத பேராற்றல் கொண்டு;* ***உலகு ஒரு மூன்றையும் வென்றாய்*** - *மூன்று உலகங்களையும் வெற்றி கொண்டாய்;* ***திசை திரிந்தாய்*** - *திக்குகளில் எல்லாம் (திக்குவிசயம்) சென்று மதயானைகள் கொம்புகளைத் திருகினாய்;* ***செறிகழல் இந்திரன் இசையைத் தின்றாய்*** - *வீரக் கழல் பொருந்திய இந்திரன் புகழை (உன் வெற்றியால்) விழுங்கினாய்;* ***என்றாலும்*** - *(இவ்வளவு புகழ் மிக்கவன் நீ) என்றாலும்;* ***இன்று*** *-இப்போது;* ***உன் வயின் அழிவு எய்தும்*** *-உனக்கு அழிவு வந்தடையும்;* ***என இசையா நின்றான்*** - *என்று கூறியவனாய்;* ***அவன் எதிரே*** - *இராவணன் எதிரே போய்;* ***உலகு அளந்தான் என நிமிர்ந்தான்*** - *உலகினை யளந்த திருவிக்கிரமனைப் போல நிமிர்ந்தவனாகிய அனுமன் நின்றான்.*

*இந்திரனின் வலி அழிந்ததை அரக்கப் பண்புக்கேற்ப தின்றாய் என்ற சொல்லால் குறித்த சொல் நயம் அறிக. ளுலகளந்த திருமால் என அனுமன் பேருரு (விசுவரூபம்) எடுக்கும் ஆற்றல் உடையவன். ணூ ிட்கிந்தா காண்டத்தும் சுந்தரகாண்டத்தும் அவன் பேருருவம் எடுத்தது அறிந்தது.*

*7178.* ***எடுத்தான் வலத் தடக் கையினை; இது போய்,***
***உலகு எல்லாம்***
***அடுத்தான் குறள் அளந்தான் திருவடியின் வரவு***
***அன்னான்,***
***மடுத்து ஆங்கு உற வளர்ந்தாலென வளர்கின்றவன்***
***உருவம்***
***கடுத்தான் என, கொடியாற்கு எதிர், 'காண்பாய்'***
***எனக் காட்டா,***

***வலத் தடக்கையினை எடுத்தான்*** - *அனுமன் தனது அகன்ற வலக்கரத்தினை உயரத் தூக்கினான்;* ***இது போய் உலகெலாம் அடுத்தான்*** *-இக்கரமே உலகு எல்லாம் பரவுமாறு ஆனான்;* ***குறள் அளந்தான் திருவடியின் வரவு அன்னான்*** - *வாமன அவதாரமாய் உலகளந்தவன் திருவடி வருகை தந்தது போன்றவனாய்;* ***மடுத்து ஆங்கு உற வளர்ந்தால் என*** - *அத்திருவடி மீண்டும் இங்கு வந்து வளரத் தொடங்குவது போல்;* ***உருவம் வளர்க்கின்றவன்*** - *தன் உருவம் ஆனது வளர்கின்றவனாய்;* ***கடு தான் எனக் கொடியாற்கு*** - *(உலகில் உள்ள) நஞ்சு எல்லாம் தானே எனத்தக்க கொடியோன் ஆகிய இராவணனுக்கு;* ***காண்பாய் எனக் காட்டா*** *-என் உருவத்தைப் பார்ப்பாயாக எனக் காட்டி.*

*உலகளந்த திருமாலின் திருவடியே அனுமானாக மீண்டும் வந்துள்ளது என்னுமாறு உலகுக்கு வந்துள்ள அனுமன், அத்திருவடி வளரத் தொடங்கியது போல மேலும் வளர்ந்தான் என்பாராய், "குறள் அளந்தான் திருவடியின் வரவு*

*அன்னான், மடுத்து ஆங்கு உற வளர்ந்தால் என வளர்ந்தான்" என்று மொழிந்தார். அனுமான் பேருருவமெடுக்கையில், உலகளந்த திருவடிக்கு முன்பும் (4736) உவமிப்பார்.*

***7179. 'வில் ஆயுதம் முதல் ஆகிய வய வெம் படை மிடலோடு***
***எல்லாம் இடை பயின்றாய்; புயம் நால்-ஐந்தினொடு இயைந்தாய்;***
***வல்லாய்; செரு வலியாய்; திறல் மறவோய்! இதன் எதிரே***
***நில்லாய்' என நிகழ்த்தா, நெடு நெருப்பு ஆம் என. உயிர்ப்பான்***

***வில் ஆயுதம் முதலாகிய வய வெம்படை எல்லாம்*** *- விற்படை முதலாகிய ஆற்றல் வாய்ந்த கொடிய போர்க்கருவிகளை யெல்லாம்;* ***மிடலோடு இடை பயின்றாய்*** *- வல்லமையோடு இவ்வுலகில் பயின்றுள்ளாய்;* ***புயல் நால் ஐந்தினொடு இயைந்தாய்*** *- இருபது தோள்கள் இணையப் பெற்றாய்;* ***செருவலி வல்லாய்*** *- போரில் வல்லமையுள்ளாய்;* ***ஆய்திறன் மறவோய்! - ஆயுந்திறமையும் கூடிய வீரனே!*** *; இதன் எதிரே நில்லாய் - போர் இடுவதற்கு இப்போது என்கை எதிரே நிற்பாயாக!;* ***என நிகழ்த்தா*** *- என்று கூறி;* ***நெடு நெருப்பாம் என*** *- பெரிய தீயினைப் போன்று;* ***உயிர்ப்பான்*** *- (வெப்பப்) பெருமூச்சு விட்டான். இருபது புயங்களைப் பெற்றுள்ளமையால், போர் செய்தற்கு ஆள் இல்லாமல் போயினாய் எனும் பொருளில் "இல்லாய் செரு" என்றார்.*

***7180. 'நீள் ஆண்மையினுடனே எதிர் நின்றாய்; இஃது ஒன்றோ?***
***வாள் ஆண்மையும், உலகு ஏழினொடு உடனே உடை வலியும்,***
***தாளாண்மையும், நிகர் ஆரும் இல் தனி ஆண்மையும், இனி நின்***
***தோளாண்மையும், இசையோடு உடன் துடைப்பேன், ஒரு புடைப்பால்;***

***நீள் ஆண்மையினுடனே எதிர் நின்றாய்*** *- (அனுமன் இராவணனை நோக்கி) மிக்க வீரத்துடனே என் எதிரே நின்றாய்;* ***இ ஃது ஒன்றோ?*** *- இது ஒரு பொருளோ?;* ***வாள் ஆண்மையும்*** *- (உன்னுடைய) வாள் ஆற்றலும்;* ***உலகு ஏழினோடு உடனே உடை வலியும்*** *- ஏழ் உலகங்களையும் ஒரு சேர அழிக்க வல்ல (உன்) வலிமையும்;* ***தாளாண்மையும்*** *-*

*(உன்) முயற்சியும்;* ***ஆரும் நிகர் இல் தனி ஆண்மையும்*** *- எவரும் நிகர் ஆகாத (உன்) தனிப்பட்ட ஆற்றலும்;* ***நின் தோள் ஆண்மையும்*** *- உன்னுடைய தோளின் ஆற்றலும் (ஆகிய அனைத்தையும்);* ***இசையோடு உடன்*** *- (உன்) புகழோடு சேர்த்து;* ***ஒரு புடைப்பால் இனித் துடைப்பேன்*** *- ஒருகுத்தால் (நான்) இப்போது ஒழித்துக் கட்ட உள்ளேன் (என்றான்).*

*சூரு குத்தால் என்பதால் முன்பாடலில் 'இதன் எதிரே நில்லாய்" என்பது அனுமன் கையைக் குறித்ததாகக் கொள்ளப் பெற்றது.*

***7181. 'பரக்கப் பல உரைத்து என்? படர் கயிலைப் பெரு***
***வரைக்கும்,***
***அரக்குற்று எரி பொறிக் கண் திசைக் கரிக்கும்,***
***சிறிது அனுங்கா***
***உரக் குப்பையின் உயர் தோள் பல உடையாய்!***
***உரன் உடையாய்!***
***குரக்குத் தனிக் கரத்தின் புடைப் பொறை ஆற்றுவை***
***கொல்லாம்?***

***பரக்கப் பல உரைத்து என்?*** *- விரித்துப் பலபட உரைப்பது எதற்கு?;* ***படர் கயிலைப் பெருவரைக்கும்*** *- படர்ந்து விரிந்துள்ள கயிலை மலை என்னும் பெரிய மலைக்கும்;* ***அரக்கு உற்று எரி*** *- (சாதிலிங்கம் போன்று) செந்நிறத்தோடு எரிகின்ற;* ***பொறி கண் திசைக் கரிக்கும்*** *- நெருப்புப் பொறி பறக்கும் கண்களையுடைய திக்கு யானைகளுக்கும்;* ***சிறிது அனுங்கா*** *- சிறிதும் பின்னிடாத;* ***உரக்குப்பையின் உயர்தோள் பல உடையாய்!*** *- வலிமை குவிந்து கிடக்கும் உயர்ந்த தோள்கள் பலவற்றையுடையவனே!;* ***உரன் உடையாய்*** *- ஆற்றல் சிதையாதவனே!;* ***குரக்குத் தனிக்கரத்தில்*** *- (இப்போது) குரங்காகிய என்னுடைய ஒரு கரத்தால்;* ***புடைப்பொறை ஆற்றுவை கொல்?*** *- குத்தும் குத்தின் வலிமையைத் தாங்கிக் கொள்ளும் வலிமை உனக்கு உண்டோ?*

***7182. 'என் தோள் வலிஅதனால் எடுத்து யான் எற்றவும்,***
***இறவா-***
***நின்றாய்எனின், நீ பின் எனை, நின் கைத் தல***
***நிரையால்,-***
***குன்றே புரை தோளாய்!-மிடல்கொடு குத்துதி;***
***குத்தப்***
***பொன்றேன்எனின், நின்னோடு எதிர்***
***பொருகின்றிலென்' என்றான்.***

***குன்றே புரை தோளாய்!*** - மலை போன்ற தோள்களை யுடையவனே!; ***என் தோள் வலி அதனால்*** - என்னுடைய தோள் வலிமையினால்; ***எடுத்து*** - என் கையை உயர்த்தி; ***யான் எற்றவும்*** - நான் குத்தவும்; ***இறவா நின்றாய் எனில்*** - நீ மடியாமல் இருப்பாய் என்றால்; ***எனை நீ பின் நின்கைத்தல நிரையால்*** - என்னை நீ பிறகு உன்னுடைய கைகளின் வரிசையினால்; ***மிடல் கொடு குத்துதி*** - (முழு) ஆற்றலோடு குத்துவாயாக; ***குத்த*** - (அப்படிக்) குத்தியபின்பும்; ***பொன்றேன் எனின்*** - (நான்) மடியாமல் இருந்தேன் ஆகில்; ***நின்னோடு எதிர் பொருகின்றிலேன்*** - உன்னோடு (அதற்குப் பிறகு) போர் இடேன்; ***என்றான்*** - என்று கூறினான்.

*ஒரு குன்றுதான் மற்றொரு குன்றினை அசைக்க முடியும் என்க. "குன்றே" ஏகாரம் பிரிநிலை. யூான் ஒரு கரத்தால் குத்துவதாகவும் அக்குத்துக்கு இராவணன் தப்பினால் அவன் இருபது கரங்களாலும் குத்தலாம் என்பதாகவும் கூறியதில் தன் வலிமை இற்றெனத் தன்னம்பிக்கையோடு அனுமன் கூறும் திறம் குறித்திடுக.*

### *அனுமன் கூறியன கேட்டு இராவணன் மொழிதல்*

***7183. காரின் கரியவன், மாருதி கழற, கடிது உகவா,***
***'வீரற்கு உரியது சொற்றனை;--விறலோய்!--ஒரு தனியேன்***
***நேர் நிற்பவர் உளரோ, பிறர் நீ அல்லவர்? இனி, நின்***
***பேருக்கு உலகு அளவே; இனி உளவோ பிற?' என்றான்.***

***காரில் கரியவன்*** - கரிய மேகத்தை விடக் கரிய நிறத்தனான இராவணன்; ***மாருதி கழற*** - அனுமன் (இவ்வாறு) கூற; ***கடிது உகவா*** - மிகவும் கொண்டாடி; ***விறலோய்!*** - ஆற்றல் மிக்கோனே!; ***வீரற்கு உரியது சொற்றனை*** - வீரனுக்கு உரிய வார்த்தையினை விளம்பினாய்!; ***ஒரு தனியேன்*** -தனிப்பட்ட எனது; ***நேர் நிற்பவர்*** - நேராக நிற்பவர்கள்; ***இனி*** - இனிமேல்; ***நீ அல்லவர் பிறர் உள்ளனரோ?*** - உன்னையன்றி பிறரும் (உலகில்) உள்ளனரோ?; ***நின்பேருக்கு உலகு அளவே*** - உனது புகழின் எல்லைக்கு உலகின் எல்லையே அளவாகும்; ***இனிப் பிற உளவோ?*** - இனி வேறு உவமைகள் உள்ளனவோ? (இல்லை) என்றான்.

*இராவணேசுவரன் என்ற பெயரைக் கொண்டவுடன் மயங்கி வீழ்வாரும் மயங்கி வாழ்வாருமே உலகத்து உள்ளனர் ஆதலின், "ஒரு தனி என் நேர் நிற்பவர் உளரோ?" என்றான்.*

***7184. 'ஒன்று ஆயுதம் உடையாய்அலை; ஒரு நீ எனது உறவும்***

***கொன்றாய்; உயர் தேர்மேல் நிமிர் கொடு வெஞ்
சிலை கோலி,
வன் தானையினுடன் வந்த என் எதிர் வந்து, நின்
வலியால்
நின்றாயொடு நின்றார் இனி நிகரோ? உரை,
நெடியோய்!***

**நெடியோய்** - பேருருவு எடுத்தவனே!; **ஒரு நீ** - தனியாக உள்ள நீ; **ஆயுதம் ஒன்று உடையாய் அ(ல்)லை** - போர் ஆயுதம் எதுவும் உடையாயும் அல்லை; **எனது உறவும் கொன்றாய்** - (அப்படியிருந்தும், வெறுங்கையால்) என்னுடைய சுற்றத்தார் (பலரைக்) கொன்றுள்ளாய்; **நிமிர் கொடுவெம் சிலை கோலி** - உயர்ந்ததும் வளைந்ததும் கொடியதுமான வில்லை வளைத்து; **வன் தானையினுடன்** - வலிமை மிக்க சேனையோடு; **உயர் தேர் மேல் வந்த என் எதிர் வந்து** - உயர்ந்த தேரின் மேல் வந்த என் எதிரே வந்து; **நின் வலியால் நின்றாயொடு** - உன்னுடைய ஆற்றல் ஒன்றையே கொண்டு எதிர் நிற்கின்ற உன்னோடு; **இனி நின்றார் நிகரோ? உரை என்றான்** - இப்போது உலகில் உள்ளவர்களில் ஒப்பாவார் உள்ளனரோ? சொல்! னுன்று கூறினான்.

"வீரனை வீரன் அறிவான்" எனும் மொழிப்படி, வீரனாகிய இராவணன் வீரனாகிய அனுமானை மனந்திறந்து பாராட்டி வியந்தவாறு. இந்த வெறுங்கையாளன் வீரத்தை முன்னமே கண்டுள்ளேன் என்பானாய், "நீ எனது உறவும் கொன்றாய்" என்றான்.

*7185.* ***'முத் தேவர்கள் முதலாயினர்; முழு மூன்று
உலகிடையே
எத் தேவர்கள், எத் தானவர், எதிர்வார் இகல், என்
நேர்,
பித்து ஏறினர் அல்லால்? இடை பேராது, எதிர்,
"மார்பில்
குத்தே" என நின்றாய்; இது கூறும் தரம் அன்றால்.***

**முழு மூன்று உலகிடையே** - முழுமை பெற்ற மூன்று உலகத்திலும் உள்ள; **முத்தேவர்கள் முதலாயினர்** - அயன், அரி, அரன் எனப்படும் மும்மூர்த்திகள் முதலான தேவர்களில்; **பித்து ஏறினர் அல்லால்** - பித்தம் மிகப் பெற்றவர்கள் தவிர; **எத்தேவர்கள் எத்தானவர் என் நேர் இகல் எதிர்வார்?** - எந்தத் தேவர்கள், எந்த அசுரர்கள் எனக்கு நிகராகப் போரில் எதிர்பவர்கள்; **இடை பேராது** - (அப்படியிருக்க) இருந்த இடத்தை விட்டு நகராமல்; **மார்பில் குத்தே என எதிர் நின்றாய்** - (என்) மார்பில் குத்து என்று சொல்லி (என்) எதிரே நிற்கின்றாய்!; **இது கூறும் தரம் அன்று** -இந்தத் தீரச் செயல் (என் நாவால்) எடுத்துக் கூறும் தரத்தது அன்று.

*7186.* ***'பொரு கைத்தலம் இருபத்துள; புகழும் பெரிது***

***உளதால்;***
***வரு கைத்தல மத வெங் கரி வலி கெட்டென***
***வருவாய்!***
***இரு கைத்தலம் உடையாய்; எதிர் இவை***
***சொற்றனை; இனிமேல்,***
***தருகைக்கு உரியது ஒர் கொற்றம் என்? அமர்***
***தக்கதும் அன்றால்.***

***பொருகைத்தலம் இருபத்து உள*** - *போரிடுவதற்கு எனக்கு இருபது கரங்கள் உள்ளன;* ***புகழும் பெரிது உளது*** - *(உலகில் சிறந்த மாவீரன்) என்னும் புகழும் எனக்கு மிகுதியாய் உள்ளது;* ***வருகைத்தல மதவெங்கரி*** - *என் எதிரில் வந்த திசைகளில் உள்ள கொடிய மதயானைகள்;* ***வலி கெட்டன*** - *(என்னால்) கொம்புகள் முறிபட்டுப் போயின (இவையெல்லாம் அறிந்திருந்தும்);* ***இருகைத்தலம் உடையாய்!*** *-இரண்டு கைகளை மட்டும் உடையவனே!* ***எதிர் வருவாய்*** - *என் எதிரில் (துணிந்து) வருகின்றாய்;* ***இவை சொற்றனை*** - *இத்தகைய வீர உரைகளையும் ஆற்றுகின்றாய்;* ***இனிமேல் தருகைக்கு உரியது ஒர் கொற்றம் என்?*** - *(இதுவே பெரு வெற்றி ஆவதால்) இனிமேல் (நான் இனிப் போரிட்டு உனக்குத்) தரஉள்ள வெற்றி என என் உள்ளது?* ***அமர் தக்கதும் அன்று*** - *உன்னுடன் பொருவது தகுதியானதும் ஆகாது.*

*இருபது கையுடையோன் இருகையுடையோன் ஆகிய உன்னோடு பொருவது, ஒத்தாருடன் பொருவது எனும் போர் முறைக்கு உகந்தது ஆகாது என்பான், "அமர் தக்கதும் அன்று" என்றான். "யானை ஒருகையுடையது எறிவலோ யானும் இருகை சுமந்து வாழ்வேன்?" எனும் பழம் பாடல் இங்கு நோக்குக.*

***7187. 'திசை அத்தனையையும் வென்றது சிதைய, புகழ்***
***தெறும் அவ்***
***வசை மற்று இனி உளதே? எனது உயிர்போல்***
***வரும் மகனை***
***அசையத் தரை அரைவித்தனை; அழி செம்***
***புனல்அதுவோ***
***பசையற்றிலது; ஒரு நீ, எனது எதிர் நின்று, இவை***
***பகர்வாய்.***

***அத்தனை திசையையும் வென்றது*** - *எல்லாத்திக்குகளையும் வெற்றி கொண்ட பெருமை;* ***சிதைய*** - *அழிந்து சிதற;* ***புகழ் தெறும் அவ்வசை*** - *புகழை அழிக்கவல்ல அப்பழியை விட;* ***இனி மற்று உளதே?*** - *இனி வேறு பழி ஒன்று உள்ளதோ?; (அப்படியாதெனில்)* ***எனது உயிர் போல் வரு மகனை*** - *எனது உயிரைப் போல் வளர்ந்து வந்த அக்க குமாரனை;* ***அசைய*** - *நிலை கலங்குமாறு;* ***தலை அரைவித்தனை*** - *தரையில் தேய்த்து அரைத்தாய்;* ***அழி செம்புனல் அதுவோ*** - *அப்படி அரைத்ததனால் பெருகி ஓடிய குருதியானதோ;* ***பசை அற்றிலது*** - *இன்னும்*

*ஈரம் உலரவில்லை;* ***ஒரு நீ*** *- ஒப்பற்ற நீ;* ***எனது எதிரே நின்று இவை பகர்வாய்*** *- நீ என் நேர் நின்று (இப்போது) இத்தகைய வார்த்தைகளைக் கூறியவாறு உள்ளாய்!*

*புகழ் நீங்கிப் பழி ஏற்பட தன் மகனைத் தேய்த்தழித்த அனுமன் தன்னுடன் உரையாடும் காலம். "வாய்த்த அக்கனை வரிசிலை மலையொடும் வாங்கித் தேய்த்த அக்குழம்பு உலர்ந்தில இலங்கையின் தெருவில்" (கம்ப. 6579) என்பார் முன்னும்.*

***7188. 'பூணித்து இவை உரைசெய்தனை; அதனால், உரை பொதுவே;***
***பாணித்தது; பிறிது என் சில பகர்கின்றது? பழியால்***
***நாணித் தலை இடுகின்றிலென்; நனி வந்து, உலகு எவையும்***
***காண, கடிது எதிர் குத்துதி' என்றான், வினை கடியான்.***

***வினை கடியான்*** *- கொடுந்தொழிலனான இராவணன்;* ***அதனால் பூணித்து இவை உரை செய்தனை*** *- (இவ்வாறு எனக்குப் பழிசேரும் காலம் ஆதலால்) சூள் உரைத்து (என்னிடம்)* ***இத்தகு சொற்களை உரைத்தாய்; உரை பொதுவே*** *- இவ்வாறு (ஒருவனுக்குப் பழி மிகுகையில்) பிறர் ஏளனம் புரிவது என்பது உலகின் இயல்புதான்;* ***பாணித்தது*** *- காலம் தாழ்ந்து விட்டது;* ***பிறிது சில பகர்கின்றது என்*** *- வேறு சில பேசிப்பயன் என்ன?; பழியால் நாணி - (நான்)* ***வசையினால் வெட்கமுற்று; தலையிடுகின்றிலென்*** *- தலை குனியவில்லை;* ***நனி வந்து*** *- மிக விரைந்து வந்து;* ***உலகு எவையும் காண*** *- உலகினர் யாவரும் காணுமாறு;* ***கடிது எதிர் குத்துதி*** *- விரைந்து (என்) எதிர் நின்று குத்துக; என்றான்.*

*பூணித்தல்-சூளுறவு செய்தல். இதனை வஞ்சினக் காஞ்சி என்பார். "என்னோடே பூணித்து" (ஈடு. 10.8.5) குரங்கோடு பொருவது பழி எனினும் சூளுரைத்து அழைப்பதால் மறுப்பது தோற்றுத்தலை குனிவதற்கு ஒப்பாகும் ஆகவே, "பழியால் நாணித்தலையிடுகின்றிலென்" என்றான்.*

### *அனுமன் இராவணனைக் குத்துதலும் அதன் விளைவும்*

***7189, 'வீரத் திறம் இது நன்று!' என வியவா, மிக விளியா,***
***தேரின் கடிது இவரா, முழு விழியின் பொறி சிதறா,***
***ஆரத்தொடு கவசத்து உடல் பொடி பட்டு உக, அவன் மா***
***மார்பில் கடிது எதிர் குத்தினன், வயிரக் கரம்அதனால்.***

***இது வீரத்திறம்*** - *இந்த வீர மனப்பான்மை;* ***நன்று என வியவா*** - *(மிகவும்) நன்று என்று வியந்து;* ***மிக விளியா*** - *மிகவும் ஆர்ப்பரித்து;* ***தேரில் கடிது இவரா*** - *இராவணன் தேரின் மீது விரைந்து அமர்ந்து;* ***முழு விழியில் பொறி சிதறா*** - *கண் முழுதும் தீப்பொறி சிந்தும்படி;* ***அவன் மாமார்பில்*** - *அந்த இராவணனுடைய அகன்ற மார்பில்;* ***வயிரக் கரம் அதனால்*** - *வயிரம் போன்ற (தனது) (வலிய) கரத்தினால்;* ***ஆரத்தொடு கவசத்து*** - *மாலையோடு கூடிய கவசத்துடனே;* ***உடல் பொடி பட்டு உக*** - *உடம்பு பொடியாகிச் சிதறுமாறு;* ***கடிது எதிர் குத்தினன்*** - *விரைந்து எதிர் நின்று குத்தினான் (அனுமன்).*

*அனுமன் வீரத்தை இராவணன் பாராட்டியது போல இராவணன் வீரத்தை அனுமன் பாராட்டினான். கைவரேயாயினும் மாற்றரின் உயர்பண்புகளைப் பாராட்டும் பண்பாட்டைக் காண்கிறோம்.*

***7190. அயிர் உக்கன, நெடு மால் வரை; அனல் உக்கன விழிகள்;***
***தயிர் உக்கன, முழு மூளைகள்; தலை உக்கன; தரியா***
***உயிர் உக்கன, நிருதக் குலம்; உயர் வானரம் எவையும்,***
***மயிர் உக்கன, எயிறு உக்கன; மழை உக்கன, வானம்.***

***நெடுமால் வரை அயிர் உக்கன*** - *(அனுமனது குத்தினால்) மிக உயர்ந்த பெரிய மணல் துகள் போல் உதிர்ந்தன;* ***விழிகள் அனல் உக்கன*** - *கண்களிலிருந்து தீப்பொறிகள் உதிர்ந்தன;* ***முழு மூளைகள் தயிர் உக்கன*** - *மூளைகள் முழுவதும் தயிர் போலக் (குழைந்து) சிந்தின;* ***தலை தரியா உக்கன*** *-(அரக்கரின்) தலைகள் (அதிர்ச்சியால் கழுத்தில்) தங்காமல் சிதைந்தன;* ***நிருதக்குலம் உயிர் உக்கன*** *-அரக்கர் இனத்தின் உயிர் வாழ்வும் சிதையத் தொடங்கின;* ***உயர் வானரம் எவையும்*** - *உயர்ந்த குரங்குகள் யாவும்;* ***மயிர் உக்கன எயிறு உக்கன*** - *உரோமக்கற்றைகளும் பற்களும் சிந்தின;* ***வானம் மழை உக்கன*** - *வானத்திலிருந்து மேகங்கள் சிதறி வீழ்ந்தன.*

*அனுமன் குத்து ஒன்றால், பலப்பல எதிர் விளைவுகள் நிகழ்ந்தன என்று குத்தின் வலிமையை உணர்த்தியவாறு. அசுரர் வானரர் இருபக்கமும் அதிர்ச்சியின் பாதிப்பு இருந்தது என்பதாம். சொற்பொருட் பின் வருநிலையணி.*

***7191. வில் சிந்தின நெடு நாண்; நிமிர் கரை சிந்தின, விரி நீர்;***
***கல் சிந்தின, குல மால் வரை; கதிர் சிந்தின, சுடரும்;***
***பல் சிந்தின, மத யானைகள்; படை சிந்தினர்,***

***எவரும்;***
***எல் சிந்திய எரி சிந்தின, இகலோன் மணி அகலம்.***

***வில் சிந்தின நெடுநாண்*** - *(வீரர்களின்) வில்லிலிருந்து நீண்ட வில் நாண்கள் அறுந்து வீழ்ந்தன;* ***விரிநீர் நிமிர் கரை சிந்தின*** *- விரிந்த கடல் உயர்ந்த கரைகளை அழித்தன;* ***குலமால் வரை கல் சிந்தின*** *-சிறந்த பெருமலைகளிலிருந்து எல்லாம் (கட்டுக் குலைந்து) கற்கள் சிதைந்து வீழ்ந்தன;* ***சுடரும் கதிர் சிந்தின*** *- சூரிய சந்திரர்களான இரு சுடர்களும் தம் கிரணங்களைச் சிந்தின;* ***மத யானைகள் பல் சிந்தன*** *- மதங்கொண்ட யானைகள் தம் தந்தங்கள் சிந்தப்பெற்றன;* ***எவரும் படை சிந்தினர்*** *-அங்கிருந்தோர் யாவரும் தத்தம் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டனர்;* ***இகலோன் மணி அகலம்*** *-வலியோனாகிய இராவணனது அழகிய மார்பு முழுதும்;* ***எல் சிந்திய எரிசிந்தின*** *-ஒளியுமிழ்ந்து கொண்டு நெருப்பைச் சிந்தின. சிந்தின என்ற சொல் பலமுறை வந்ததனால் சொற்பின வருநிலையணி. ஓரிடத்தில் வீழ்ந்த விசையின் அதிர்வு அருகிருக்கும் இடத்தில் எல்லாம் அதிர்வை நிகழ்விப்பது இயல்பு. இங்கு தாங்குவானும் தாக்குவானும் மிகப் பேராற்றலர் ஆதலின், திசைகள், மலைகள், கடல்கள் எல்லாம் அதிர்வால் பாதிக்கப்பட்டன என்றவாறு.*

***7192. கைக் குத்துஅது படலும், கழல் நிருதர்க்கு இறை***
***கறை நீர்***
***மைக் குப்பையின் எழில் கொண்டு ஒளிர் வயிரத்***
***தடமார்பில்,***
***திக்கில் சின மத யானைகள் வய வெம் பணை***
***செருவில்***
***புக்கு இற்றன, போகாதன, புறம் உக்கன, புகழின்.***

***கைக்குத்து அது படலும்*** *- (அனுமனின்) கைக்குத்துப் பட்டவுடன்;* ***கழல் நிருதர்க்கு இறை*** *- வீர கண்டைகள் அணிந்த அரக்கர்களின் தலைவனாகிய இராவணனுடைய;* ***கறைநீர்*** *- (இரத்தக்கறை நீர்) படிந்த;* ***மைக் குப்பையின் எழில் கொண்டு ஒளிர்*** *- அஞ்சனக் குவியலின் அழகைக் கொண்டு ஒளிர்கின்ற;* ***வயிரத் தட மார்பில்*** *- வயிரம் போன்று (திண்ணிய) அகன்ற மார்பில்;* ***திக்கில் சினமத யானைகள்*** *- எட்டுத் திக்குகளிலும் உள்ள மதங்கொண்ட யானைகளின்;* ***வயவெம் பணை*** *- வலிய கொடிய தந்தங்கள்;* ***செருவில் புக்கு இற்றன*** *- போரில் (தாக்கியபோது) முறிந்து போனவையாய்;* ***போகாதன*** *- (அந்த மார்பிலேயே) அகலாது நின்றவை;* ***புகழின் புறம் உக்கன*** *- அந்த இராவணனது புகழ் போல வெளியேறி வீழ்ந்தன.*

*இராவணன் மார்பில் இத்துணைக் காலம் புதைந்திருந்த எட்டுத்திக்கு யானைகளின் தந்தங்கள் முதுகின் வழியே வெளியேறின என்பதால் அனுமனது குத்தின் விசையை உணர்த்தியவாறு. இந்நிகழ்ச்சி பின்பு, (கம்ப. 9913-14) குறிக்கப் பெறுதல் காண்க. புகழ் வெண்ணிறமுடையது என்பது மரபாதலின் வெண்ணிறக்*

*கொம்புகள் வெளியேறியதை, இராவணன் புகழ் வெளியேறியது போன்றிருந்தது எனப் பொருத்தமுற உவமித்தார்.*

***7193. அள் ஆடிய கவசத்து அவிர் மணி அற்றன, திசை போய்***
***விள்ளா நெடு முழு மீன் என; விழி வெம் பொறி எழ நின்று, உள் ஆடிய நெடுங் கால் பொர ஒடுங்கா, உலகு உலைய,***
***தள்ளாடிய வட மேருவின் சலித்தான், அறம் வலித்தான்.***

***அள் ஆடிய கவசத்து** - சந்து விட்டுப் போன (தனது) கவசத்தில்; **அவிர் மணி** - ஒளிர்கின்ற மணிகள்; **விள்ளா** -விண்டு போய்; **நெடு முழு மீன் என** - நீண்ட முழுமையான நட்சத்திரங்கள் போன்று; **திசை போய் அற்றன** - திசைகளில் தெறித்து வீழ்ந்தன; **அறம் வலித்தான்** -(அப்போது) அறத்திற்குத் துன்பம் கொடுத்தவனான இராவணன்; **விழி வெம் பொறி எழ நின்று** - தன் விழிகளிலிருந்து தீப்பொறி எழுமாறு பார்த்து; **உள் ஆடிய நெடுங்கால் பொர ஒடுங்கா** - (உலகின்) உள்ளே எளிதாக உலாவிக் கொண்டிருக்கும் காற்று, பெருவலி பெற்று சண்ட மாருதமாகித் தாக்கியதனால் வலிகுன்றி; **தள்ளாடிய வடமேருவின் சலித்தான்** - தள்ளாடுகின்ற வடமேரு மலை போலத் தள்ளாடினான்.*

*அள்ளாடுதல் - கட்டுவிடுதல். சந்து பட்டுத் தளர்தல். "அள்ளாடிப் போனான்" வழக்குச் சொல். அனுமன் குத்தினால் மார்புக் கவசம் கட்டவிழ்ந்து மணிகள் சிந்துவது வானத்து மீன்கள் சிதறி வீழ்வது போன்றிருந்தது என்பதாம். நீலவானம் - இராவணன் கரிய மார்புக்கும், கவசத்தில் பதித்திருந்த மணிகள், வானத்திலிருந்த நட்சத்திரங்களுக்கும் உவமை*

***7194. ஆர்த்தார், விசும்பு உறைவோர்; நெடிது அனுமான்மிசை அதிகம்***
***தூர்த்தார், நறு முழு மென் மலர்; இசை ஆசிகள் சொன்னார்;***
***வேர்த்தார் நிருதர்கள்; வானரர் வியந்தார், 'இவன் விசயம்***
***தீர்த்தான்' என உவந்து ஆடினர், முழு மெய்ம்மயிர் சிலிர்த்தார்.***

***விசும்பு உறைவோர்*** - (அது கண்டு) வானத்தே வாழும் தேவர்கள்; ***ஆர்த்தார்*** - மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தார்கள்; ***அனுமன் மிசை*** - அனுமானின் மீது; நறு முழு மென்மலர் அதிகம் நெடிது தூர்த்தார் - முழுதும் நறுமணமுள்ள மெல்லிய மலர்களை மிக நெடுநேரம் பொழிந்தார்கள்; ***இசை ஆசிகள் சொன்னார்*** - (அனுமன்) புகழ் (ஓங்கி) ஆசி மொழிகளைச் சொன்னார்கள்; ***நிருதர்கள் வேர்த்தார்*** - அரக்கர்கள் (அச்சத்தால் உடல்) வியர்த்தார்கள்; ***வானரர் வியந்தார்*** - குரங்குப் படையினர் (அனுமன் ஆற்றலைக் கண்டு) வியந்து போய் நின்றார்கள்; ***இவன்*** - இந்த இராவணனின்; ***விசயம்*** -வெற்றியை; ***தீர்த்தான்*** - ஒழித்தான்; ***என*** - என்று; உவந்து ஆடினர்- மகிழ்ச்சிக் கூத்தாடினர்; ***முழுமெய்ம் மயிர் சிலிர்த்தார்*** - உடல் முழுவதும் மயிர் சிலிர்த்தார்கள்.

மெய் சிலிர்த்தல் மகிழ்ச்சியாலும் வியப்பாலும் நிகழும் மெய்ப்பாடு. இசை ஆசி- இசைக்கு ஆகி. நான்கன் தொகை.

*உணர்வு பெற்ற இராவணன் அனுமனுடன் உரையாடல்*

***7195. கற்று, அங்கியின் நெடு வாயுவின் நிலை கண்டவர், கதியால்***
***மற்று அங்கு ஒரு வடிவு உற்று, அது மாறாடுறு காலை,***
***பற்று அங்கு அருமையின், அன்னது பயில்கின்றது ஒர் செயலால்,***
***உற்று அங்கு அது புறம் போய், உடல் புகுந்தால் என உணர்ந்தான்.***

***அங்கியின் (நிலை)*** - அக்கினியின் நிலையினையும்; ***நெடு வாயுவின் நிலை*** - பெரிய உயிர்க்காற்றின் நிலையினையும்; ***கற்றுக் கண்டவர்;*** - (அநுபவக்) கல்வியால் உணர்ந்த யோகிகள்; ***கதியால்*** - அட்டமாசித்தியால் ஆகும் பரகாயப் பிரவேசத்தால்; ***மற்று அங்கு ஒரு வடிவுற்று*** -பிறிதோர் உடலில் பொருந்தி; ***அது மாறாடுறுகாலை*** - எடுத்த உடம்புக்கேற்ற செயல் புரிய நேருகையில் உயிர் தான் முன்பெடுத்த உடம்பின் செயலுக்கு மாறான செயலை. செய்ய இயலாமல் முரண்பாடு எழுந்தபோது; ***அங்கு*** - புது உடலில்; அருமையின் பற்று - அருமையின் உடற்பற்றின்றி; ***அன்னது பயில்கின்றதொர் செயலால்*** - அந்தப் பழைய உடலிலேயே பழக்கப்பட்ட செயல்களால் (அவற்றையே விரும்பி); ***அங்கு அது புறம்போய் உற்று*** - வெளிச்சென்ற உயிர் (மீண்டும்) வந்து; ***உடல் புகுந்தால் என*** - பழைய உடலிலேயே புகுந்தாற்போன்று; ***உணர்ந்தான்*** - இராவணன் (மயக்கத்தினின்று நீங்கி) உணர்ச்சி பெற்றான். அட்டமாசித்தி பெற்ற யோகிகள் பரகாயப் பிரவேசம் எனும் கூடுவிட்டுக் கூடு பாய்தலிலும் வல்லார் ஆவர். உயிர் அற்றவன் போல உணர்விழந்த இராவணன் மீண்டும் உணர்வு அடைந்ததனை, பரகாயம் செய்த யோகி ஒருவர் மீண்டும் பழைய உடலையே அடைந்ததற்கு உவமித்தார். அங்கி- மூலாக்கினி, குண்டலினியால் எழுவது. நெடுவாயு-இடகலை,

*பிங்கலை, சுழுமுனை எனும் மூன்று நாடிகளிலும் சஞ்சரிக்கும் உயிர்க் (பிராண) காற்று.*

***7196. உணரா, நெடிது உயிரா, உரை உதவா, எரி உமிழா,***
***இணை ஆரும் இல் அவன் நேர் வரவு எய்தா, 'வலி செய்தாய்!***
***அணையாய்; இனி, எனது ஊழ்' என அசரா, எதிர் படரா,***
***பணை ஆர் புயம் உடையானிடை, சில இம் மொழி பகர்வான்:***

***உணரா*** *- உணர்ச்சியுற்று;* ***நெடிது உயிரா*** *- பெருமூச்சு விட்டு; உரை உதவா -* ***பேச்சு வெளிவர இயலாமல்****; எரி உமிழா - நெருப்பு எழும்படி விழித்து;* ***இணை ஆரும் இவ் அவன் நேர் வரவு எய்தா*** *-தன்னை ஒப்பார் எவரும் இல்லாத அனுமன் எதிரே வந்து;* ***வலி செய்தாய்*** *- வலிய போர் செய்தவனே! அணையாய் - என்னை நெருங்கி வருவாயாக;* ***இனி எனது ஊழ்*** *- இனி என்னுடைய முறை; என அடரா - என்று கூறி நெருங்கி;* ***எதிர்படரா*** *- எதிரே சென்று;* ***பணை ஆர் புயம் உடையான் இடை*** *- பருத்து நிறைந்த தோள்களையுடைய அனுமனிடம்;* ***சில இம்மொழி*** *- இவ்வாறு சில மொழிகளை;* ***பகர்வான்*** *- சொல்லலானான் (இராவணன்).*

*செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சங்கள் அடுக்கி வந்து உணர்ச்சிமயமான சூழலைத் தருவது காண்க.*

***7197. 'வலி என்பதும் உளதே? அது நின் பாலது; மறவோய்!***
***அலி என்பவர், புறம் நின்றவர்; உலகு ஏழினும் அடைத்தாய்;***
***'சலி' என்று எதிர் மலரோன் உரைதந்தால், இறை சலியேன்;***
***மெலிவு என்பதும் உணர்ந்தேன்; எனை வென்றாய் இனி, விறலோய்!***

***மறவோய்*** *- வீரனே!* ***வலி என்பதும் உளதே*** *- வல்லமை ஒன்று உண்டே;* ***அது நின் பாலது*** *-அது உன்னிடம் அடக்கம்;* ***புறம் நின்றவர் அலி என்பவர்*** *- (உன்னைத்தவிர) வெளியே உள்ள வீரர்கள் யாவரும் அலி என்று சொல்லத்தக்கவாறு;* ***உலகு ஏழினும் அடைத்தாய்*** *- ஏழுலகையும் நின் புகழால் நிறைத்து விட்டாய்;* ***மலரோன்*** *-பிரம்ம தேவன்;* ***சலி என்று எதிர் உரை தந்தால்*** *- (என் எதிரே வந்து நீ) மனம் தளர்வாயாக என்று உரைத்தாலும்;* ***இறை சலியேன்*** *- சிறிது கூட மனம் தளராதவன் நான்;* ***மெலிவு***

***என்பதும் உணர்ந்தேன்*** -(என் வாழ்வில்) மெலிவு என்பதனையும் (உன்னால்) உணர்ந்தேன்; ***விறலோய்!*** - ஆற்றல் சான்றவனே!; ***இனி எ(ன்)னை வென்றாய்*** - இனி, என்னை வென்றவனே ஆனாய்.

'உலகு ஏழினும் அடைத்தாய் எனை வென்றாய் என்றதால் பிறர் வீரம் பாராட்டும் இராவணனின் பெரும்பண்பு புலனாகிறது. அலி என்பவர்-அலி எனப்படுபவர் செயப்பாட்டுவினை, செய்வினை உருவில் வந்தது.

***7198. 'ஒன்று உண்டு இனி உரை நேர்குவது; உன் மார்பின், என் ஒரு கை,***
***குன்றின்மிசை கடை நாள் விழும் உரும்ஏறு எனக் குத்த,***
***நின்று, உன் நிலை தருவாய்எனின், நின் நேர் பிறர் உளரோ?***
***இன்றும் உளை; என்றும் உளை; இலை, ஓர் பகை' என்றான்.***

***இனி உரை நேர்குவது ஒன்று உண்டு*** - இப்போது, நான் உனக்கு உரைக்க வேண்டுவது ஒன்று உண்டு; ***உன் மார்பின்*** -உனது மார்பில்; குன்றின் மிசை - மலையின் மேல்; ***கடை நாள் விழும் உரும் ஏறு என*** - ஊழியிறுதியில் விழுகின்ற பேரிடி போன்று; ***குத்த*** - (நான்) குத்துகையில்; ***நீ நின்று இந்நிலை தருவாய் எனில்*** - நீ (உயிர் பிரியாமல்) நின்று இந்த நிலையிலேயே இருப்பாய் என்றால்; ***நின் நேர் பிறள் உளரோ?*** - உன்னைத் தவிர உலகில் நிலைத்து நிற்பார் உள்ளாரோ?; ***இன்றும் உளை என்றும் உளை*** - நீ இன்றும் இருப்பாய்; அது போன்றே என்றும் (அழியாது) இருப்பாய்; ***ஓர் பகை இலை என்றான்*** - உனக்குப் பகை ஒன்று என்றும் இராது என்றான் இராவணன். தன் குத்தின் வலிமை, ஊழிக்கடைநாளில் விழும் பேரிடியின் வலிமையை ஒத்திருக்கும் என்றான் இராவணன். என் குத்திற்கு நீ பிழைத்து இருத்தல் இயலாது; இருந்தால் நீ என்றும் இருப்பாய் என்றது அனுமன் திறம் குறித்தது; இராவணனை அறியாமலே அது வாழ்த்தாகவும் அமைகிறது.

*இராவணனைப் புகழ்ந்து அனுமன் தன் மார்பு காட்டுதல்*

***7199. என்றான் எதிர் சென்றான், இகல் அடு மாருதி; 'எனை நீ***
***வென்றாய் அலையோ? உன் உயிர் வீடாது, உரை செய்தாய்;***
***நன்றாக நின் நிலை நன்று' என நல்கா, எதிர் நடவா,***

**குன்று ஆகிய திரள் தோளவன், 'கடன் கொள்க'**
**எனக் கொடுத்தான்.***

**இகல் அடு மாருதி** - *பகைவர்களை அழிப்பதில் வல்ல அனுமன்;* **என்றான் எதிர் சென்றான்** - *என மேற்கண்டவாறு உரைத்த இராவணன் எதிரே போய்;* **உன் உயிர் வீடாது** *-(நான் குத்திய குத்தினால்) உன் உயிரை விடாமல்;* **உரை செய்தாய்** - *(என் எதிர் நின்று) உரையாடுகின்றாய்!;* **எனை நீ வென்றாய் அல்லையோ?** - *(ஆகவே) நீ என்னை வென்று விட்டவன் ஆகவில்லையோ?;* **நன்று** - *நல்லது;* **ஆக நின் நிலை நன்று** - *மிகவும் உன் நிலை நல்லது;* **என** - *என்று;* **நல்கா** - *(புகழ் உரை) நல்கி;* **எதிர் நடவா** - *அவன் எதிரே நடந்து சென்று;* **குன்று ஆகிய திரள் தோளவன்** - *மலைகளே தோள்கள் ஆயின எனுமாறு தோள்களையுடைய இராவணனுக்கு;* **கடன் கொள்க** *என- உன் கடனை ஏற்றுக் கொள்க என்று;* **கொடுத்தான்** - *தன் மார்பினைத் தந்தான்.*

*இராவணன் குத்துதலால் அனுமன் சலித்தல்*

*7200.* **உறுக்கி, தனி எதிர் நின்றவன் உரத்தில், தனது**
**ஒளிர் பல**
**இறுக்கி, பல நெடு வாய் மடித்து, எரி கண்தொறும்**
**இழிய, முறுக்கிப் பொதி நிமிர் பல் விரல் நெரிய, திசை**
**முரியக்**
**குறுக்கிக் கரம், நெடுந் தோள் புறம் நிமிரக் கொடு**
**குத்த,**

**தனது நெடுவாய் பல மடித்து** - *இராவணன் தன்னுடைய பெரிய வாய்களை மடித்துக்கொண்டு;* **ஒளிர் பல் இறுக்கி** - *ஒளிர்கின்ற பற்களை இறுக்கியவாறு;* **கண்தொறும் எரி இழிய** - *விழிகள் தோறும் நெருப்புச் சிந்திக்கொண்டு;* **உறுக்கி** - *வெகுண்டு;* **பொதிநிமிர் பல்விரல் நெரிய முறுக்கி** - *கணம் மிக்க நீண்ட பலவான விரல்கள் ஒன்றாக இணையுமாறு முறுக்கிக்கொண்டு;* **திசை முரிய** - *திக்குகள் நிலை கெடுமாறு;* **கரம் நெடுந்தோள் புறம் குறுக்கி** *-கைகளை நீண்ட தோளிற்கு வெளியே மடக்கிக்கொண்டு;* **தனி எதிர் நின்றவன் உரத்தில்** - *தனித்தவனாய்த் தன் எதிர் நின்றவனான அனுமனுடைய மார்பின் மீது;* **நிரை கை கொடு குத்த** - *வரிசையான தன் கைகளை (ஒன்றாக்கிக்) கொண்டு குத்துகையில்.*

*குளகம் அடுத்த பாடலில் வரும் சலித்தான் எனும் வினையொடு முடியும். மற்போர் செய்பவர்களின் மெய்ப்பாடுகளை நுணுக்கமாகக் கவிஞர் பிரான் இப்பாடலில் உணர்த்தியுள்ளார். உறுக்குதல்-வெகுளல். அதட்டலுமாம்.*

*7201.* **பள்ளக் கடல் கொள்ளப் படர் படி பேரினும் பதையா**

***வள்ளல், பெரு வெள்ளத்து எறுழ் வலியாரினும்***
***வலியான்,***
***கள்ளக் கறை உள்ளத்து அதிர் கழல் வெய்யவன்***
***கரத்தால்***
***தள்ள, தளர் வெள்ளிப் பெருங் கிரி ஆம் எனச்***
***சலித்தான்.***

***பள்ளக் கடல் கொள்ளப்படர்படி*** - *ஆழம் நிறைந்த கடல் கொள்ளுமாறு பரந்துள்ள* ***பூமி; பேரினும்*** - *பெயர்ந்து நிலைகுலையும் காலத்தும்;* ***பதையா வள்ளல்*** - *நிலை குலையாத கருணை வள்ளலும்;* ***பெருவெள்ளத்து*** - *பெரிய வெள்ளத்தின் (வலிமையைப்) போல;* ***எறுழ் வலியாரினும் வலியான்*** - *வலிமை வாய்ந்த வலியவர் யாவரினும் வலியவனுமான அனுமன்;* ***கள்ளக் கறை உள்ளத்து*** - *கள்ளத்தனத்தால் அழுக்குடைய மனத்தையும்;* ***அதிர் கழல் வெய்யவன்*** - *ஒலிக்கின்ற வீரக் கழல்களையும் உடைய கொடியவனான இராவணன்;* ***கரத்தால் தள்ள*** - *கரத்தால் குத்திய போது;* ***தளர் வெள்ளிப் பெருங்கிரியாம் எனச் சலித்தான்*** - *தளர்ச்சியுற்ற வெள்ளிப் பெருமலையான கயிலையங்கிரி போலத் தள்ளாடினான்.*

*அனுமன் செயல்கள் யாவும் பயன் எதிர் பாராமல் செய்யப்பட்ட கொடைகள். ஆதலின் அவனை "வள்ளல்" என்றார். இராவணன் கயிலையைத் தூக்கியபோது அது தள்ளாடியது போல், அனுமன் தள்ளாடினான் என்பதாம்.*

**கலித்துறை**

***7202. சலித்த காலையின், இமையவர் உலகு எலாம்***
***சலித்த;***
***சலித்ததால் அறம்; சலித்தது, மெய்ம் மொழி; தகவும்***
***சலித்தது; அன்றியும், புகழொடு சுருதியும் சலித்த;***
***சலித்த நீதியும்; சலித்தன கருணையும் தவமும்.***

***சலித்த காலையின்*** - *(அனுமன் இராவணனுடைய குத்தினால்) தளர்வுற்ற போது;* ***இமையவர் உலகு எலாம் சலித்த*** - *தேவர்கள் உலகுகள் அனைத்தும் தளர்வெய்தின;* ***அறம் சலித்தது*** - *தருமம் தளர்வு அடைந்தது;* ***மெய்ம்மொழி சலித்த*** *-சத்திய வாசகங்களும் தளர்ந்தன;* ***தகவும் சலித்தது*** - *நற்பண்பும் தளர்ந்தது;* ***அன்றியும்*** - *இவையல்லாமல் மேலும்;* ***புகழொடு சுருதியும் சலித்த*** *-புகழோடு கூடிய வேதங்களும் தளர்வடைந்தன;* ***நீதியும் சலித்த*** *-(அற) நியதியும் சலித்தது;* ***கருணையும் தவமும் சலித்த*** *-அருளும் தவமும் தளர்வுற்றன.*

*தளர்வே அறியாத அனுமன் சலித்தான் என்ற உண்மையை வலியுறுத்துதற்கு தளர்வென்பதே அடைய முடியாதவை யெல்லாம் சலித்தன என்று கூறுகிறார் கவிச் சக்கரவர்த்தி. தம்மை வாழ்விப்பார் தளர்வுறின் அவரைச் சார்ந்திருப்பவை*

*யனைத்தும், தளர்வுறுவது இயல்பு ஆதலின், அனுமன் தளர்வில், அவனோடு தொடர்புடைய அனைத்துப் பண்புகளும் பொருள்களும் தளர்ந்தன என்றவாறு. சொல்பொருள் பின்வருநிலையணி கொண்டது.*

*வானரத் தலைவர் மலைகளை எடுத்து, இராவணனுடன் மோதல்*

***7203. அனைய காலையின், அரிக் குலத் தலைவர், அவ் வழியோர்***
***எனையர் அன்னவர் யாவரும், ஒரு குவடு ஏந்தி,***
***நினைவின் முன் நெடு விசும்பு ஒரு வெளி இன்றி நெருங்க,***
***'வினை இது' என்று அறிந்து, இராவணன்மேல் செல விட்டார்.***

***அனைய காலையின்** -(அனுமன் இவ்வாறு தளர்ந்த) அப்போது; **அவ்வழியோர்** - அங்கு இருந்தவர்களான; **அரிக்குலத்தோர்** - வானர இனத்தலைவர்கள்; **எனையர் அன்னவர் யாவரும்** - எத்தகையோர் ஆயினும் அவர்கள் எல்லோரும்; **வினை இது என்று அறிந்து (தாம்)** - செய்யத்தக்க செயல் இதுவே என்று தெளிந்து; **ஒரு குவடு ஏந்தி** - ஆளுக்கு ஒரு மலையினை ஏந்தி; **நினைவின் முன்** - (இராவணன்) நினைப்பதற்கு முன்னே; **நெடு விசும்பு ஒரு வெளியின்றி நெருங்க** - பரந்த வானத்தில் (சிறிதும்) வெற்றிடமில்லாமல் நெருக்கம் ஆகுமாறு; **இராவணன் மேல் செலவிட்டார்** - (அந்த மலைகளை) இராவணன் மேல் செல்லுமாறு வீசினார்கள்.*

*இராவணனை முடித்து விடவேண்டும் என ஆளுக்கொரு மலையைப் பிடுங்கி எறிந்த வானரர் செயல் அனுமன் மேல் அவர்கள் வைத்திருந்த அன்பின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. மேலே நிமிர்ந்து பார்த்தால், வானத்தைப் பார்க்க முடியவில்லை; மலைகளைத்தான் பார்க்க முடிந்தது என்பார். "நெடு விசும்பு ஒரு வெளி இன்றி நெருங்க" என்றார்.*

***7204. ஒத்த கையினர், ஊழியின் இறுதியின் உலகை***
***மெத்த மீது எழு மேகத்தின் விசும்பு எலாம் மிடைய,***
***பத்து நூறு கோடிக்கு மேல் பனி படு சிகரம்,***
***எத்த, மேல் செல எறிந்தனர்; பிறிந்தனர், இமையோர்.***

***ஒத்த கையினர்** - ஒருநிகராய் (ஓங்கிய) கைகளை உடையோராய்; **ஊழியின் இறுதியின்** - யுகமுடிவுக்காலத்தில்; **உலகை மெத்த மீது எழு** - உலகத்தை மூடி மேலே எழுகின்ற; **மேகத்தின்** - மேகத்தினைப் போல; **விசும்பு எலாம் மிடைய** - வானம் எல்லாம் நிரம்ப; **பத்து நூறு கோடிக்குமேல்** - ஆயிரம் கோடி எண்ணிக்கைக்கும்*

*அதிகமான;* ***பனிபடு சிகரம்*** *- பனி தோய்ந்த சிகரங்களை;* ***எத்திமேல் செல*** *- தாக்கி (இராவணன்) மேலே பாயுமாறு;* ***எறிந்தனர்*** *- வீசினர்;* ***இமையோர் பிறிந்தனர்*** *- தேவர்கள் (அச்சத்தால்) அப்பால் கலைந்து போயினர்.*

*எல்லோருடைய கைகளும் மலையை ஏந்துதல் என்னும் ஒரு செயலைச் செய்து நின்றமையின், "ஒத்த கையினர்" என்றார். ஊழிக்காலத்தில் மேகங்கள் அடுக்கு அடுக்காக மூடி மழையாகக் கொட்டி உலகையழிக்குமாதலின், "உலகை மெத்த மீதெழு மேகத்தின் விசும்பெலாம் மிடைய" என்றார். எறிந்தவை என்ற இணை எதுகை நோக்கி, பிரிந்தனர் எனற்பாலது பிறிந்தனர் என வந்தது. வீசிய மலைகள் விசும்பில் பாய்தலால் தம்மையும் தாக்கி விடுமோ என்று தேவர்கள் இடம் பெயர்ந்தனர் என்க.*

***7205. தருக்கி வீசிட, விசும்பு இடம் இன்மையின், தம்மின்***
***நெருக்குகின்றன, நின்றன, சென்றில், நிறைந்த;***
***அருக்கனும் மறைந்தான்; இருள் விழுங்கியது,***
***அண்டம்;***
***'சுருக்கம் உற்றனர், அரக்கர்' என்று, இமையவர்***
***சூழ்ந்தார்.***

***தருக்கி வீசிட*** *- (அவ்வாறு வானர வீரர்கள்) செருக்கொடு (மலைகளை) வீசியதனால்;* ***விசும்பிடம் இன்மையின்*** *- ஆகாயத்தில் இடம் இல்லாமையால்;* ***தம்மின் நெருக்குகின்றன 'நின்றன*** *- (அம்மலைகள்) ஒன்றுக்கொன்று நெருக்கிக் கொண்டு நின்றன;* ***சென்றில நிறைந்த*** *- மேலே செல்வதற்கு இடமின்மையால் நிறைந்தன;* ***அருக்கனும் மறைந்தான்*** *- (அவற்றால்) சூரியனும் மறைவுபட்டான்;* ***அண்டம் இருள் விழுங்கியது*** *- இவ்வுலகத்தினை இருள் விழுங்கியது;* ***அரக்கர் சுருக்கம் உற்றனர் என்று*** *- அரக்கர்கள் சுருங்கி அழிந்து விட்டார்கள் என்று;* ***இமையவர் சூழ்ந்தார்*** *- (கலைந்து சென்ற தேவர்கள் மீண்டும்) அங்கு சூழத் தொடங்கினர்.*

***7206. ஒன்றின் ஒன்று பட்டு உடைவன, இடித்து உரும்***
***அதிரச்***
***சென்ற வன் பொறி மின் பல செறிந்திட, தெய்வ***
***வென்றி வில் என விழு நிழல் விரிந்திட, மேன்மேல்***
***கன்றி ஓடிட, கல்-மழை நிகர்த்தன-கற்கள்.***

***கற்கள் ஒன்றின் ஒன்றுபட்டு உடைவன*** *- (வானர வீரர் வீசிய) மலைகள் ஒன்றோடு ஒன்று பட்டு உடைவன ஆகி;* ***இடித்து உரும் அதிர*** *- ஒலியெழுப்பி இடி போல் அதிரவும்;* ***சென்றவன் பொறிமின் பல செறிந்திட*** *- தாக்குகையில் பிதிர்ந்த வலிய நெருப்புப் பொறிகள், மின்னல்கள் போல விண்ணில் நெருங்கவும்;*

***தெய்வவென்றி வில் என விழுநிழல் விரிந்திட*** - *அம்மலைகளிலிருந்து வீழ்ந்திடும் பல்நிற ஒளியின் சாயைகள், வெற்றிக்குரிய இந்திர வில் போல விரியவும்;* ***மேன்மேல் கன்றி ஓடிட*** - *மேலும் மேலும் தாக்கி ஓடுவதால்;* ***கல்மழை நிகர்த்தன*** - *(வீழும் கல்துகள்களால்) கல்மழை பொழிகின்ற மேகம் போன்றன. ஏது உவமையணி.*

***7207. இரிந்து நீங்கியது இராக்கதப் பெரும் படை; எங்கும்***
***விரிந்து சிந்தின, வானத்து மீனொடு விமானம்;***
***சொரிந்த வெம் பொறி பட, கடல் சுவறின; தோற்றம்***
***கரிந்த கண்டகர் கண்-மணி; என் பல கழறி?***

***(வானரர் வீசிய மலைகளால்) இராக்கதப் பெரும்படை இரிந்து நீங்கியது*** - *அரக்கர்களின் பெரும் படையானது அஞ்சி ஓடியது;* ***வானத்து மீனொடு விமானம்*** - *வானவெளியில் உள்ள மீன்களோடு விமானங்களும்;* ***விரிந்து சிதறின*** - *(மலைகளின் தாக்குதலால்) பலவேறாகச் சிதைந்து சிதறின;* ***சொரிந்த வெம்பொறிபட*** - *மலைகளின் மோதலால் வீழ்ந்த வெப்பம் மிக்க தீப்பொறிகளால்;* ***கடல் சுவறின*** - *கடல்கள் வற்றின;* ***பல கழறி என்?*** - *பலப்பல சொல்லிப் பயன் என்ன?;* ***கண்டகர் கண்மணி தோற்றம் கரிந்த*** - *அரக்கரின் கண்கள் (ஒளிமிகுதியால்) கரிந்து கண்மணிகள் காணும் தோற்றத்தை இழந்து போயின.*

*வானர வீரர்கள் வீசிய மலைகளால் ஏற்பட்ட அழிவுகள் அடுக்கப்பட்டுள்ளன. கண்டகர் - முள்ளைப் போலத் துன்பஞ்செய்பவர். குரங்குகள் மலைகளாற் போர் செய்தமையைச் செயங்கொண்டாரும் தம் பரணியில் குறிப்பார்: "அணிகொண்ட குரங்கினங்கள் அலை கடலுக்கு அப்பாலை, மணல் ஒன்று காணாமல் மலையெடுத்து மயங்கினவே." (கலிங். பர. பாலை பாடியது.96)*

***7208. இறுத்தது இன்று உலகு என்பது ஓர் திமிலம் வந்து எய்த,***
***கறுத்த சிந்தையன் இராவணன் அனையது கண்டான்;***
***ஒறுத்து, வானவர் புகழுண்ட பார வில், உளைய***
***அறுத்து நீக்கினன், ஆயிர கோடி மேல் அம்பால்.***

***இன்று உலகம் இறுத்தது*** - *இன்றைக்கு உலகம் அழிந்தது;* ***என்பதோர் திமிலம் வந்து எய்த*** - *என்கின்ற பெரிய ஒலி எங்கும் எழ;* ***கறுத்த சிந்தையன்*** - *சினமுற்ற மனங்கொண்ட இராவணன்;* ***அனையது கண்டான்*** - *தன்னை நோக்கிப் பல மலைகள் வருவதைத் தான் பார்த்தான்; (பார்த்தவுடன்)* ***ஒறுத்து வானவர் புகழ்உண்ட*** - *தண்டித்து, தேவர் புகழினையும் அழித்த;* ***பாரவில் உளைய*** - *பெருமை சான்ற தன் வில் வளைந்து நெகிழ (அவ்வில்லிலிருந்து வெளிப்பட்ட);* ***ஆயிரம் கோடி மேல்***

***அம்பால்*** - *மிகப் பல அம்புகளால்;* ***அறுத்து நீக்கினன்*** - *அம்மலைகளைத் தகர்த்து ஒழித்தான்.*

*திமிலம் - பேரொலி. துமிலம் எனவும் வழங்குக. 'திமில நான்மறை சேர் திருப்பெருந்துறை' (திருவாச. 26:4)*

***7209. காம்பு எலாம் கடுந் துகள் பட, களிறு எலாம் துணிய,***
***பாம்பு எலாம் பட, யாளியும் உழுவையும் பாற,***
***கூம்பல் மா மரம் எரிந்து உக, குறுந் துகள் நுறுங்க,***
***சாம்பர் ஆயின, தட வரை--சுடு கணை தடிய.***

***சுடுகணை தடிய*** - *(இராவணன் விட்ட) கொடிய அம்புகள் துணித்ததனால்;* ***காம்பு எலாம் கடும் துகள் பட*** - *(தம்மிடம் உள்ள) மூங்கில்கள் எல்லாம் துண்டு துண்டாக;* ***களிறு எலாம் துணிய*** - *யானைகள் எல்லாம் துண்டுபட;* ***பாம்பு எலாம் பட*** - *பாம்புகள் எல்லாம் மடிந்தொழிய;* ***யாளியும் உழுவையும் பாற*** - *ஆளியும் புலிகளும் அழிய;* ***கூம்பல் மாமரம் எரிந்து உக*** - *குவிந்து திரள்படத் தோன்றிய பெரிய மரங்கள் எல்லாம் அழிந்தொழிய;* ***குறுந்துகள் நுறுங்க*** - *சிறு துண்டுகள் மேலும் துகளாக;* ***தடவரை சாம்பர் ஆயின*** - *வானரங்களின் பெரிய மலைகள் யாவும் சாம்பல் ஆகிப் போயின. இராவணன் அம்புகளால், மலைகளில் உள்ள பொருள்கள் எல்லாம் அழிந்து, மலைகளும் தூளாயின என்றார். சுடு கணை தடிய...தடவரை சாம்பர் ஆயின எனக் கூட்டுக.*

***7210. 'உற்றவாறு!' என்றும், 'ஒன்று நூறு ஆயிரம் உருவா***
***இற்றவாறு!' என்றும், 'இடிப்புண்டு பொடிப் பொடி ஆகி***
***அற்றவாறு!' என்றும், அரக்கனை, 'அடு சிலை கொடியோன்***
***கற்றவாறு!' என்றும்-வானவர் கைத்தலம் குலைந்தார்.***

***உற்றவாறு என்றும்*** - *(இராவணன் அம்புகள்) தாக்கிய விதம் (என்னே!) என்றும்;* ***ஒன்று நூறாயிரம் உருவா*** - *ஒருமலை, பல்லாயிரம் துண்டுகளாக;* ***இற்றவாறு என்றும்*** - *சிதைந்த விதம் (என்னே!) என்றும்;* ***இடிப்புண்டு*** *- (அம்மலைகள்) ஒன்றோடு ஒன்று மோதி;* ***பொடிப் பொடியாகி*** - *தூள் தூளாக மாறி;* ***அற்றவாறு என்றும்*** - *அழிந்தவிதம் (என்னே!) என்றும்; அரக்கனை - இராவணனை (பார்த்து);* ***கொடியோன்*** *- இந்தக் கொடியவன்;* ***அடுசிலை கற்றவாறு என்றும்*** - *பகைவரை அழிக்க வில்*

*வித்தை கற்றிருக்கிற திறம் (என்னே!) என்றும் கூறி;* ***வானவர் கைத்தலம் குலைந்தார்*** *- தேவர்கள் கைநடுக்கம் உற்றனர்.*

*வானவர் எறிந்த மலைகள் இராவணன் அம்பால் அழிவதைக் கண்ட தேவர்கள் வேறு ஒன்றும் செய்ய இயலாமையால் "உற்றவா என்னே! இற்றவா என்னே! அற்றவா என்னே! கற்றவா என்னே! என்று அடுக்கி வியந்தனர்.*

***7211. 'அடல் துடைத்தும்' என்று அரிக் குல வீரர் அன்று எறிந்த***
***திடல் துடைத்தன, தசமுகன் சரம்; அவை திசை சூழ்***
***கடல் துடைத்தன; களத்தின்நின்று உயர்தரும் பூழி***
***உடல் துடைத்தன; உதிரமும் துடைத்தது, ஒண் புடவி.***

***அடல் துடைத்தும் என்று*** *- (இராவணனுடைய) வல்லமையை அழித்து விடுவோம் என்று கூறி;'* ***அரிக்குல வீரர் அன்று எறிந்த திடல்*** *- வானர குல வீரர்கள் அன்று அஞ்சி வீசிய மலைகளை;* ***தசமுகன் சரம் அவை துடைத்தன*** *- இராவணன் அம்புகள் அழித்தொழித்து விட்டன;* ***அவை திசை சூழ்கடல் துடைத்தன*** *- அந்த மலைகளின் துகள்கள் திக்குகளில் சூழ்ந்துள்ள கடல்களைத் தூர்த்தன;* ***களத்தின் நின்று உயர்தரும் பூழி*** *- (அக்காலத்தே) போர்க்களத்தினின்றும் எழுந்த புழுதிகள்;* ***உடல் உதிரமும் துடைத்தன*** *- (படைவீரர்களின்) உடலிலிருந்த வியர்வை, குருதி எல்லாம் துடைத்தன;* ***ஒண் புடவிதுடைத்தது*** *- பூமியையும் அப்புழுதி வெள்ளம் துடைத்தது.*

*துடைத்தல் என்னும் வினை பன்முறை ஒரே பொருளில் வருதலால், சொற்பின் வருநிலையணி.*

## *இராவணன் சரமழை பொழிய, வானரர் நிலைகுலைதல்*

***7212. 'கொல்வென், இக் கணமே மற்று இவ் வானரக் குழுவை;***
***வெல்வென், மானிடர் இருவரை' எனச் சினம் வீங்க,***
***வல் வன் வார் சிலை பத்து உடன் இடக் கையின் வாங்கி,***
***தொல் வன் மாரியின் தொடர்வன சுடு சரம் துரந்தான்.***

***இவ்வானரக் குழுவை இக்கணமே கொல்வென்*** *- இந்த வானரக் கூட்டத்தை இக்கணப் பொழுதிலேயே கொல்லுவேன்;* ***மற்றும் மானிடர் இருவரை வெல்வேன்*** *- மேலும், (இந்த) மனிதர் இருவரையும் (இப்போதே) வெல்லுவேன்;* ***என*** *- என்று நினைத்து;* ***சினம் வீங்க*** *- கோபம் பொங்க;* ***வல்வன் வார்சிலை பத்துடன்***

*(இராவணன்) மிக வலிய நீண்ட பத்துவிற்களை;* ***இடக்கையின் வாங்கி*** *- (தனது) இடக்கை பத்தாலும் எடுத்து;* ***தொல்வன் மாரியின்*** *- பழைய பெரு மழை போல்;* ***தொடர்வன சுடுசரம் துரந்தான்*** *- தொடர்ந்து வெங்கணைகளைச் செலுத்தினான்.*

*இருபது கையன் ஆதலால், ஒரு பக்கத்து பத்து கைகளால் பத்து விற்களைத் தாங்கி வலப் பக்கத்துப் பத்து கைகளால் விற்களை வளைத்து கணைகளை விடமுடிந்தது.*

***7213. அய்-இரண்டு கார்முகத்தினும், ஆயிரம் பகழி,***
***கய்கள் ஈர்-ஐந்தினாலும், வெங் கடுப்பினில்***
***தொடுத்துற்று எய்ய, எஞ்சின, வானமும் இரு நில வரைப்பும்;***
***மொய் கொள் வேலையும் திசைகளும் சரங்களாய்***
***முடிந்த.***

***அய் இரண்டு கார் முகத்தினும்*** *- பத்து விற்களிலும்;* ***ஆயிரம் பகழி*** *- ஆயிரம் அம்புகளை;* ***கைகள் ஈர் ஐந்தினாலும்*** *- பத்துக் கரங்களினாலும்;* ***கடுப்பினில் தொடுத்துற்று எய்ய*** *- கடிய வேகத்துடன் தொடுத்து எய்ததனால்;* ***எஞ்சின வானமும்*** *- பூதங்கள் யாவற்றையும் கடந்து நிற்கும் வானமும்;* ***இருநில வரைப்பும்*** *- பெரிய பூமிப் பரப்பும்;* ***மொய்கொள் வேலையும்*** *- வலிமை கொண்ட கடலும்;* ***திசைகளும்*** *- திக்குகளும்;* ***சரங்களாய் முடிந்த*** *- அம்புகளாகவே ஆயின.*

*அய் இரண்டு-ஐயிரண்டு (பத்து) கய் இரண்டு-கை இரண்டு. எதுகை நோக்கி அய், கய் என வந்தன.*

***7214. அந்தி வானகம் ஒத்தது, அவ் அமர்க் களம்; உதிரம்***
***சிந்தி, வேலையும் திசைகளும் நிறைந்தன; சரத்தால்***
***பந்தி பந்தியாய் மடிந்தது, வானரப் பகுதி;***
***வந்து மேகங்கள் படிந்தன, பிணப் பெரு மலைமேல்.***

***உதிரம் சிந்தி*** *- இரத்தம் சிந்தியதனால்;* ***அவ்அமர்க்களம் அந்தி வானகம் ஒத்தது*** *- அந்தப் போர்க்களம் மாலைச் செவ்வானத்திற்கு ஒப்பானது;* ***வேலையும் திசைகளும் நிறைந்தன*** *- கடலும் திக்குகளும் நிரம்பின;* ***சரத்தால்*** *- (இராவணன்) விட்ட அம்புகளால்;* ***வானரப்பகுதி*** *- குரங்குக் கூட்டம்;* ***பந்தி பந்தியாய் மடிந்தது*** *- வரிசை வரிசையாய் (வந்து) மாண்டது;* ***பிணப் பெருமலை மேல்*** *- (அப்படி மடிந்த) குரங்குகளின் பிணக்குவியலாகிய மலையின் மேல்;* ***வந்து மேகங்கள் படிந்தன*** *- மேகங்கள் வந்து தங்கியிருந்தன.*

*"உதிரம் சிந்தி" என்பது இடைநிலைத் தீபமாய் இருமருங்கும் இணைந்தது. மழைபெய்து குளம் நிறைந்தது" என்பது போல, "சிந்தி" என்னும் செய்தென் எச்சம்*

*காரணப் பொருளில் வந்தது. பிண மலை உயர்ந்தமையால் மேகங்கள் வந்து தங்கின என்றது உயர்வு நவிற்சி.*

**7215. நீலன் அம்பொடு சென்றிலன்; நின்றிலன், அனிலன்;**
**காலனார் வயத்து அடைந்திலன், ஏவுண்ட கவயன்;**
**ஆலம் அன்னது ஓர் சரத்தொடும் அங்கதன்**
**அயர்ந்தான்;**
**சூலம் அன்னது ஓர் வாளியால் சோம்பினன்,**
**சாம்பன்.**

***நீலன் அம்பொடு சென்றிலன்*** *- நீலன் என்னும் வானரத் தலைவன் (தன்மீது பட்ட) அம்பினால் நடக்க இயலாதவன் ஆனான்;* ***அனிலன் நின்றிலன்*** *- அனிலன் என்னும் வானர வீரன் நிற்க இயலாதவன் ஆனான்;* ***ஏ உண்ட கவயன்*** *- அம்பு பட்ட கவயன் என்பவன்;* ***காலனார் வயத்து அடைந்திலன்*** *- (இன்னும்) யமனிடத்தில் சென்று சேரவில்லை;* ***அங்கதன் ஆலம் அன்னதோர் சரத்தொடும் அயர்ந்தான்*** *- அங்கதன் நஞ்சு போன்ற கணை ஒன்றால் சோர்ந்து கிடந்தான்;* ***சாம்பன் சூலம் அன்னதோர் வாளியால் சோம்பினான்*** *- சாம்பன் என்பவன் சூலப் படை போன்ற அம்பு ஒன்றினால் செயலற்றுக் கிடந்தான்.*

*வானரர் நிலைகண்டு இலக்குவன் வெகுண்டு பொருதல்*

**7216. மற்றும் வீரர்தம் மருமத்தின் அயில் அம்பு மடுப்ப,**
**கொற்ற வீரமும் ஆண்தொழில் செய்கையும்**
**குறைந்தார்;**
**சுற்றும் வானரப் பெருங் கடல் தொலைந்தது;**
**தொலையாது**
**உற்று நின்றவர் ஓடினர்; இலக்குவன் உருத்தான்.**

***மற்றும் வீரர்*** *- மற்றைய வீரர்கள்;* ***தம் மருமத்தின் அயில் அம்பு மடுப்ப*** *- தத்தம் உயிர் நிலைகளில் கூர்மையான அம்புகள் தைத்ததனால்;* ***கொற்ற வீரமும்*** *- (தங்கள் பழைய) வெற்றிக்குரிய வீரத்தையும்;* ***ஆண்தொழில் செய்கையும் குறைந்தார்*** *- ஆண்மைச் செயலுக்கேற்ற பெருமையினையும் இழந்தார்கள்;* ***சுற்றும் வானரப் பெரும் கடல் தொலைந்தது*** *- சூழ்ந்து நின்ற குரங்குப் படைக்கடலானது அழிந்தது;* ***தொலையாது உற்று நின்றவர் ஓடினர்*** *- (வானரரில்) இறவாது உயிருடன் நின்றவர்கள் ஓட்டம் பிடித்தனர்;* ***இலக்குவன் உருத்தான்*** *- (இந்நிலை கண்ட) இலக்குவன் வெகுண்டெழுந்தான்.*

*மருமம் - மார்பு. "மருமத்தில் எறிவேல் பாய்ந்த புண்" (கம்ப. 325) "மானத்தால் ஊன்றப்பட்ட மருமத்தான்" (கம்ப. 6946) எனுமிடங்களில் மருமம், மார்பு எனும் பொருளில் வருவது காண்க. அயில் - கூர்மை. மடுத்தல் - படுதல். தொழில் செய்கை - ஒரு பொருட்பன்மொழி.*

***7217.** **நூறு கோடிய, நூறு நூறாயிர கோடி,***
***வேறு வேறு எய்த சரம் எலாம் சரங்களால் விலக்கி,***
***ஏறு சேவகன் தம்பி, அவ் இராவணன் எடுத்த***
***ஆறு நாலு வெஞ் சிலையையும் கணைகளால்***
***அறுத்தான்.***

***நூறு கோடிய** - நூறு கோடி என்னும் எண்ணளவு உடையனவும்; **நூறு நூறாயிர கோடி** - நூறு இலட்சம் கோடி எண்ணளவுடையனவுமாகிய; **வேறு வேறு எய்த சரம் எலாம்** - தனித்தனியாக (அரக்கர்) விட்ட அம்புகள் அனைத்தையும்; **ஏறு சேவகன் தம்பி** - (மேலும் மேலும்) வீரம் மிகுகின்ற இராமபிரானுடைய தம்பியான இலக்குவன்; **சரங்களால் விலக்கி** - தன் அம்புகளால் அகற்றி ஒழித்து; **அவ் இராவணன்** - அந்த இராவணன்; **எடுத்த** - (தன் பத்துக் கைகளாலும்) பிடித்திருந்த; **ஆறு நாலு வெம்சிலையையும் கணைகளால் அறுத்தான்** - பத்துக் கொடிய விற்களையும் (தன்) அம்புகளால் சிதைத்தான்.*

***7218.** **ஆர்த்து, வானவர் ஆவலம் கொட்டினர்; அரக்கர்***
***வேர்த்து, நெஞ்சமும் செதும்பினர்; வினை அறு***
***முனிவர***
***தூர்த்து, நாள்மலர் சொரிந்தனர்; இராவணன்,***
***தோளைப்***
***பார்த்து உவந்தனன்; குனித்தது, வானரம் படியில்.***

***வானவர் ஆர்த்து ஆவலம் கொட்டினர்** - தேவர்கள் ஆர்ப்பரித்து ஆரவாரம் செய்தனர்; **அரக்கர்கள் வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர்** - (இது கண்டு) அரக்கர்கள் உடல்களும் வியர்த்து உள்ளமும் கொதித்தனர்; **வினை அறு முனிவர்** - இருவினைகளையும் வென்ற முனிவர்கள்; **நாள்மலர் சொரிந்து தூர்த்தனர்** - அன்றலர்ந்த மலர்களைத் தூவிப் (போர்க்களத்தை) நிறைத்தார்கள்; **வானரம் படியில் குனித்தது** - வானரச் சேனை தரையின் மேல் குதித்துக் குதித்தாடியது; **இராவணன் தோளைப் பார்த்து உவந்தனன்** - இராவணனோ இலக்குவன் தோள் ஆற்றலைப் பார்த்து உவந்த வண்ணம் நின்றான். ஆவலங்கொட்டல் - வெற்றி கண்டு ஆவென்று வாய்கொட்டி யார்த்தல். "குரங்கு நல்வலம் குலைந்தது என்று ஆவலம் கொட்டி" (கம்ப. 5802) இராவணன் பகைவர் வீரத்தை வியக்கும் பண்பை 'தோளைப் பார்த்து உவந்தனன்" என்ற தொடர் உணர்த்தும். இலக்குவன் வீரச் செயல் கண்டு விண்ணும்*

*மண்ணும் மகிழ்ந்தது போலவே பகைவன் இராவணனும் மகிழ்ந்தான் என்று கூறிய வீர நயப்பினை உணர்க.*

## *இலக்குவனைப் புகழ்ந்து இராவணன் வேல் எறிதல்*

***7219. 'நன்று, போர் வலி; நன்று, போர் ஆள் வலி; வீரம்
நன்று; நோக்கமும் நன்று; கைக் கடுமையும் நன்று;
நன்று, கல்வியும்; நன்று, நின் திண்மையும் நலனும்'
என்று கைம் மறித்து, இராவணன், 'ஒருவன் நீ'
என்றான்.***

***போர்வலி நன்று*** *- உனது போர் ஆற்றல் நன்று;* ***போர் ஆள்வலி வீரம் நன்று*** *- போரிடுங்கால் நீ போரைக் கை யாள்கின்ற வீரச்செயல் திறனும் நன்று;* ***நோக்கமும் நன்று*** *- நீ நோக்கும் வீரமிகு பார்வையும் நன்று;* ***கைக் கடுமையும் நன்று*** *- கை விசையும் நன்று;* ***கல்வியும் நன்று*** *- நீ கற்றுள்ள போர்க்கலக் கல்வித்திறமும் நன்று;* ***நின் திண்மையும் நலனும் நன்று*** *- உனது மன உறுதியும், நீ போர் புரியும் அழகும் நன்று;* ***என்று இராவணன்*** *- என்று இராவணன் கூறி;* ***கைமறித்து*** *- (வியப்பால்) கைகளை மறித்தவாறு;* ***நீ ஒருவன்*** *- நீ ஒப்பற்ற வீரன்;* ***என்றான்*** *- என்று இலக்குவன் வீரத்தை வியந்து (மனந்திறந்து) போற்றினான்.*

*பகைவன் தன்னொடு போரிடுங்கால், என்னென்ன தனிச்சிறப்புகளுடன் போரிடுகின்றான் என்பதனை உன்னிப்பாகக் கவனித்துக் கணித்து அறியும் இயல்பினன் இராவணன் என்பதனை இப்பாடலால் உணர்க. "வீரரை யார் வியவாதார்?" (கம்ப.4009) என்பதற்கேற்ப, இராமன் வீரத்தையும் இராவணன் வியந்து போற்றுவதைக் கும்பகருணன் வதைப்படலத்துள்ளும் (15-31) காணல் ஆகும்.*

***7220. 'கானின் அன்று இகல் கரன் படை படுத்த அக்
கரியோன்-
தானும், இந்திரன்தன்னை ஓர் தனு வலம்தன்னால்
வானில் வென்ற என் மதலையும், வரி சிலை பிடித்த
யானும், அல்லவர் யார் உனக்கு எதிர்?' என்றும்
இசைத்தான்.***

***கானில் அன்று*** *- அன்று ஒருநாள் தண்டகவனத்திலே;* ***இகல்*** *- பகை கொண்டு எழுந்த;* ***கரன்படை படுத்த*** *- அரக்கனின் படையையழித்த;* ***அக்கரியோன் தானும்*** *- அந்தக் கரிய மேனியனான இராமனும்;* ***இந்திரன் தன்னை ஓர் தனுவலம் தன்னால்*** *- இந்திரனை ஒப்பற்ற வில் ஒன்றால்;* ***வானில் வென்ற என் மதலையும்*** *- விண்ணுலகத்தில் வெற்றி கொண்ட என் புதல்வனான இந்திரசித்தும்;* ***வரிசிலை பிடித்த யானும்*** *- கட்டமைந்த வில்லைப் பிடித்த (இராவணனாகிய) நானும்;* ***அல்லர்***

***யார்*** *- அல்லாதவர்கள் வேறுயார்;* ***உனக்கு எதிர்?*** *- உனக்கு (உலகில்) எதிர் நிற்க வல்லார்?;* ***என்றும் இசைத்தான்*** *- என்றும் மொழிந்தான் (இராவணன்).*

*7221.* ***'வில்லினால் இவன் வெலப்படான்' எனச் சினம் வீங்க,***
***'கொல்லும் நாளும் இன்று இது' எனச் சிந்தையில் கொண்டான்,***
***பல்லினால் இதழ் அதுக்கினன்; பரு வலிக் கரத்தால்***
***எல்லின் நான்முகன் கொடுத்தது ஓர் வேல் எடுத்து எறிந்தான்.***

***இவன்*** *- இந்த இலக்குவன்;* ***வில்லினால் வெலப்படான்*** *- வில்லால் வெல்லப்பட இயலாதவன்;* ***எனச் சினம் வீங்க*** *- எனக் கருதியதால் கோபம் பெருக;* ***கொல்லும் நாளும் இன்று*** *- (இவனைக்) கொன்று தீர வேண்டிய நாளும் இன்றேயாம்;* ***இது என*** *- (அதற்கு ஏற்ற நேரமும்) இதுவே என்று;* ***சிந்தையில் கொண்டான்*** *- தன் மனத்தில் கருதியவனாய்;* ***பல்லினால் இதழ் அதுக்கினான்*** *- பற்களால் உதடுகளைக் கடித்தவனாய்;* ***வலிப்பரு கரத்தால்*** *- வலிய பெரிய கரத்தால்;* ***எல்லின்*** *- ஒளியொடு கூடிய நான்முகன் கொடுத்தது - பிரம்மா கொடுத்ததாகிய;* ***ஓர் வேல் எடுத்து எறிந்தான்*** *- ஒப்பற்ற வேல் ஒன்றை எடுத்து இலக்குவன் மீது (இராவணன்) வீசினான். வில் ஆற்றலில் தன்னிலும் உயர்ந்தவன் இலக்குவன் எனத் துணிந்த இராவணன் பிரம்மன் கொடுத்த வேலினால் இன்றே இப்போதே முடிப்பேன் எனக் கருதி, இலக்குவன் மீது அவ்வேலைப் பாய்ச்சினன் என்க. இது என்பதற்கு ஏற்ற நேரமும் இது எனக் கொள்ளாமல் ஏற்ற கருவியும் இது எனக் கொண்டான் எனினுமாம்.*

## *இலக்குவன் அயர, இராவணன் அவனை எடுக்க முயலுதல்*

*7222.* ***எறிந்த கால வேல், எய்த அம்பு யாவையும் எரித்துப்***
***பொறிந்து போய் உக, தீ உக, விசையினின் பொங்கி,***
***செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது; சிந்தை***
***அறிந்த மைந்தனும், அமர் நெடுங் களத்திடை அயர்ந்தான்.***

***எறிந்த காலவேல்*** *- (இராவணன்) வீசிய காலனைப் போன்ற (கொடிய) வேலானது;* ***எய்த அம்பு யாவையும் எரித்து*** *- (இலக்குவன்) எய்த அம்புகள் யாவற்றையும் தீய்த்து;* ***பொறிந்து போய் உக*** *- தீப்பொறியாகிப் போய்ச் சிந்தி விழுமாறும்;* ***தீ உக*** *- நெருப்புச் சிந்துமாறும்;* ***விசையினில் பொங்கி*** *- வேகமுடன் எழுந்து;* ***செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது*** *- மலர்கள் அடர்ந்த மாலையினை ஏந்திய இலக்குவனின் மார்பின் நடுவே (பாய்ந்து) சென்றது;* ***சிந்தை அறிந்த***

***மைந்தனும்*** - *(அவ்வாறு வேல் சென்றதை) உணர்ந்த இலக்குவனும்;* ***நெடு அமர்க்களத்திடை அயர்ந்தான்*** - *பரந்தகன்ற போர்க்களத்தில் சோர்வுற்று வீழ்ந்தான்.*

*பொறிந்து போய் உக, தீயுக என்பதனை, பொறிந்துபோய், யுகத்தீயுக எனக் கொண்டு யுகம் ஈந்த காலத்தீ போல் விழ எனக் கொள்ளினுமாம். நெஞ்சில் பாய்ந்தவுடன் வேலின் உக்கிரத்தை இலக்குவன் அறிந்தான் ஆதலின், "சிந்தை அறிந்த மைந்தனும்" என்றார்.*

***7223. இரியலுற்றது வானரப் பெரும் படை; இமையோர்***
***பரியலுற்றனர், உலைந்தனர்; முனிவரும் பதைத்தார்;***
***விரி திரைக் கடற்கு இரட்டி கொண்டு ஆர்த்தனர்***
***விரவார்;***
***திரிகை ஒத்தது மண்தலம்; கதிர் ஒளி தீர்ந்த.***

***வானரப் பெரும் படை*** - *வானரங்களின் பெரிய சேனையானது;* ***இரியல் உற்றது*** - *(இலக்குவன் சோர்வுற்றதையறிந்து) நிலைகுலைந்து ஓடத் தொடங்கியது;* ***இமையோர் பரியல் உற்றனர்*** - *தேவர்கள் வருந்தத் தொடங்கினர்;* ***முனிவரும் உலைந்தனர் பதைத்தனர்*** - *முனிவர்களும் உளம் குலைந்து பதைத்தனர்;* ***விரவார்*** - *அரக்கர்களோ;* ***விரிதிரைக் கடற்கு*** - *விரிகின்ற அலைகளையுடைய கடல் ஒலிக்கு;* ***இரட்டிகொண்டு ஆர்த்தனர்*** - *இருமடங்காக ஆரவார ஒலியிட்டனர்;* ***மண்தலம் திரிகை ஒத்தது*** - *(அந்தப் பேரதிர்வால்) பூமியும் சக்கரம் போலச் சுழன்றது;* ***கதிர் ஒளி தீர்ந்த*** - *(அசையாத) சூரியனின் ஒளியும் மாறுபட்டது.*

***7224. 'அஞ்சினான்அலன்; அயன் தந்த வேலினும் ஆவி***
***துஞ்சினான் அலன்; துளங்கினான்' என்பது துணியா,***
***'எஞ்சுஇல் யாக்கையை எடுத்துக்கொண்டு***
***அகல்வென்' என்று எண்ணி,***
***நஞ்சினால் செய்த நெஞ்சினான் பார்மிசை நடந்தான்.***

***அயன்தந்த வேலினும்*** - *(இந்த இலக்குவன் நான் எறிந்த) நான்முகன் கொடுத்த வேலினாலும்;* ***அஞ்சினான் அலன்*** - *பயந்து மயங்கியவனும் அல்லன்;* ***ஆவி துஞ்சினான் அலன்*** - *(அந்த அச்சத்தால்) உயிர் விட்டவனும் அல்லன்;* ***துளங்கினான்*** - *சோர்ந்துள்ளான் (அவ்வளவே);* ***என்பது துணியா*** - *என்பதனைத் துணிந்து;* ***எஞ்சு இல் யாக்கையை*** - *(வலி) ஒடுங்காத இந்த இலக்குவன் உடம்பினை;* ***எடுத்துக்கொண்டு அகல்வேன்*** - *(இப்போதே) எடுத்துக்கொண்டு (இலங்கைக்குள்) செல்வேன்;* ***என்று எண்ணி*** - *என்று நினைத்து;* ***நஞ்சினால் செய்த நெஞ்சினான்*** - *நஞ்சாலேயே செய்யப்பெற்ற நெஞ்சினையுடையவனான இராவணன்;* ***பார்மிசை நடந்தான்*** - *(இலக்குவனை நோக்கி) மண்மேல் நடந்து சென்றான்.*

*இராவணன் கொடிய மனத்தன் என்பதால், "நஞ்சினால் செய்த நெஞ்சினன்" என்றார். எதுகை தரும் இன்பத்தையும் ஓதியுணர்க. பிரமன் தந்த படையாதலின், அதற்கு ஒரு மதிப்புத் தரக்கருதிச் சிறிது அடங்கி நின்றான். பிரம்மாத்திரத்துக்குச் சுந்தர காண்டத்துள் அனுமன் மதிப்பளித்தது போல (கம்ப.5800) என்பாருமுளர்.*

***7225. உள்ளி, வெம் பிணத்து உதிர நீர் வெள்ளத்தின் ஓடி,***
***அள்ளி அம் கைகள் இருபதும் பற்றி, பண்டு அரன் மா***
***வெள்ளிஅம் கிரி எடுத்தது வெள்கினான் என்ன.***
***எள் இல் பொான் மலை எடுக்கலுற்றான் என எடுத்தான்.***

***உள்ளி** - (இவ்வாறு) கருதி; வெம்பிணத்து உதிர நீர் **வெள்ளத்தின் ஓடி** - கொடிய பிணங்கள் சிந்தும் இரத்தப் பெருக்கினில் விரைந்து போய்; **அம்கைகள் இருபதும் பற்றி அள்ளி** - (தன்னுடைய) அழகிய கைகள் இருபதினாலும் பற்றி வாரி,; **பண்டு** - முன்பு; **அரன்மா வெள்ளி அம்கிரி எடுத்தனன்** - (பொன்மலையாகிய மேரு இருக்க) சிவபிரான் இருந்த பெரிய வெள்ளிப் பனிமலையாகிய கயிலை மலையினை எடுத்தவனாகிய இராவணன்; **வெள்கினான் என** - அச்செயலுக்கு வெட்கம் உற்றவன் போல; **எள்ளில் பொன்மலை எடுக்கல் உற்றான் என எடுத்தான்** - (அந்த வெட்கம் நீங்க) இகழ்வதற்கே வழியில்லாத (மகாமேருவாகிய) பொன்மலையை எடுக்க முனைந்தான் போல (இலக்குவனின் பொன்மயமான பேருடலை) எடுக்கலுற்றான்.*

*பொன் மலையாகிய மேருமலை மிகப் பெரியதாதலின் அதனை எடுக்காமல் பனிமலையை எடுத்தது இராவணன் உள்ளத்தில் ஒருதாழ்வுணர்வைக் கொடுத்திருந்தது. அதனை நீக்குவான் போல, பொன்னிறத்தனான இலக்குவனின் பொன்மலையொத்த உடலை எடுக்க இராவணன் சென்றான் என்று அழகுறத் தற்குறிப்பேற்றினார். உலோக மதிப்பிலும் பொன்னிலும் வெள்ளி தாழ்வுடையது ஆதல் உணர்க.*

*இலக்குவனை இராவணன் எடுக்க இயலாதவனாய் நிற்றல்*

***7226. அடுத்த நல் உணர்வு ஒழிந்திலன், அம்பரம் செம் பொன்***
***உடுத்த நாயகன் தான் என உணர்தலின்; ஒருங்கே***
***தொடுத்த எண் வகை மூர்த்தியைத் துளக்கி, வெண் பொருப்பை***
***எடுத்த தோள்களுக்கு எழுந்திலன்--இராமனுக்கு இளையான்.***

***இராமனுக்கு இளையோன்*** - *இராமனின் இளையவனான இலக்குவன்;* ***செம்பொன் அம்பரம் உடுத்த நாயகன் தான் என*** - *செம்பொன் ஆடையாகிய பீதாம்பரம் உடுத்த தலைவன ஆகிய திருமால் தானே என்று;* ***ஒருங்கே உணர்தலின்*** - *ஒருமைப்பாட்டுடன் நினைத்திருந்ததனால்;* ***அடுத்த நல் உணர்வழிந்திலன்*** - *பொருந்திய நல்உணர்வு நீங்காமலிருந்தான்; (அப்போது)* ***தொடுத்த எண்வகை மூர்த்தியை*** - *அட்ட மூர்த்தங்களை ஒருசேரக் கொண்ட மூர்த்தியாகிய சிவபெருமானை;* ***துளக்கி*** - *அசைத்து;* ***வெண்பொருப்போடு*** - *வெள்ளிப் பனிமலையோடு;* ***எடுத்த*** - *தூக்கிய;* ***தோள்களுக்கு எழுந்திலன்*** - *(இராவணனுடைய இருபது வலிய) தோள்களுக்கும் அசைக்கமுடியாதவன் ஆனான்.*

*"அம்பரமே தண்ணீரே" (ஆண். திருப்.18) அம்பரம் - ஆடை. செம்பொன் ஆடையாகிய பீதாம்பரம் உடுத்தவன் திருமால். "பீதக வாடைப் பிரானார்" (பெரி. திருப். 9) அவன் ஆடை செம்பொன் நிறத்தது என்பது. "அந்திபோல் நிறத்து ஆடையும்" (திருப். அமல.3) "புலியின் அதள் உடையானும் பொன் ஆசை புனைந்தானும்" (கம்ப.3069) எனுமிடத்து சிவன், திருமால் இருவரின் உடைகளும் ஒருசேரக் குறித்துள்ளது காண்க. எல்லாம் தான் என நினைத்த இராவணனால், எல்லாம் ஈசன் என நினைத்த இலக்குவனை எடுக்க இயலவில்லை என்க. எட்டு வடிவங்களைக் கொண்டவன் சிவபெருமான் ஆதலால், அவனுக்கொரு பெயர் "அட்டமூர்த்தி" என்பது. எட்டுவடிவங்களாவன: இருநிலனாய், தீயாகி, நீருமாகி, இயமானனாய், எறியும் காற்றுமாகி, அருநிலைய திங்களாய், ஞாயிறாகி, ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி" (அப். தேவா. 6.94.1) என்பது காண்க. அட்டமூர்த்தியாத் துலங்கும் சிவபெருமானை அசைத்த இராவணனால் இலக்குவனை அசைக்க இயலவில்லை என்று இலக்குவன் பெருமை இயம்பியவாறு. இலக்குவனும் திருமாலின் கூறே என இதனால் இயம்பியவாறுமாம்.*

***7227. தலைகள் பத்தொடும் தழுவிய தசமுகத் தலைவன்***
***நிலை கொள் மாக் கடல் ஒத்தனன்; கரம் புடை நிமிரும்***
***அலைகள் ஒத்தன; அதில் எழும் இரவியை ஒத்தான்,***
***இலை கொள் தண் துழாய் இலங்கு தோள் இராமனுக்கு இளையான்.***

***தலைகள் பத்தொடும் தழுவிய தசமுகத் தலைவன்*** - *(இலக்குவனைத் தூக்க முயன்ற) பத்துத் தலைகளையுடைய இராவணன்;* ***நிலை கொள் மாக்கடல் ஒத்தனன்*** - *நிலைத்த பெருங்கடல் ஒன்று போன்று தோன்றினன்;* ***கரம்புடை நிமிரும் அலைகள் ஒத்தன*** - *பக்கத்தில் பரந்த அவன் (இருபது) கரங்களும் (கடலின்) அலைகளைப் போன்று தோற்றமளித்தன;* ***இலைகொள் தண்துழாய்*** - *இலைகளைக் கொண்ட குளிர்ந்த துழாய் மாலை;* ***இலங்கு தோள் இராமனுக்கு இளையான்*** - *விளங்குகின்ற தோள்களையுடைய இராமபிரானுக்கு இளையவனாகிய இலக்குவன்;* ***அதில் எழும் இரவியை ஒத்தான்*** - *அந்தக் கடலிடையே தோன்றும் ஞாயிற்றைப் போலத் தோற்றம் அளித்தான்.*

*இலக்குவனை அனுமன் எடுத்துச் செல்லுதல்*

***7228. எடுக்கல் உற்று, அவன் மேனியை ஏந்துதற்கு ஏற்ற***
***மிடுக்கு இலாமையின், இராவணன் வெய்துயிர்ப்பு***
***உற்றான்;***
***இடுக்கில் நின்ற அம் மாருதி புகுந்து எடுத்து ஏந்தி,***
***தடுக்கலாதது ஓர் விசையினின் எழுந்து, அயல்***
***சார்ந்தான்.***

***எடுக்கல் உற்று*** - (இராவணன் இலக்குவனை) எடுக்கத் தொடங்கி; ***அவன் மேனியை*** - இலக்குவனின் உடலை; ***ஏந்துதற்கு உற்ற*** - எடுப்பதற்குத் தக்க; ***மிடுக்கு இலாமையின்*** - வலிமை யில்லாமையாலே; ***வெய்து உயிர்ப்பு உற்றான்*** - வெப்பப் பெருமூச்சு விட்டான்; ***இடுக்கில் நின்ற அம் மாருதி*** - (இச்சமயத்தில்) எங்கோ ஓர் இடுக்கில் நின்று கொண்டிருந்த அனுமன்; ***புகுந்து*** - நுழைந்து; ***ஏந்தி எடுத்து*** - (இலக்குவன் பொன்மேனியை) ஏந்தி எடுத்துக் கொண்டு; ***தடுக்கலாதது ஓர் விசையினின்*** - (யாராலும்) தடுக்க முடியாததொரு வேகத்தோடு; ***எழுந்து அயல் சார்ந்தான்*** - எழுந்து சென்று வேறிடம் சார்ந்தான்.

*மலையெடுத்த இராவணனுக்கு எடுக்க இயலாத பாரங்கொண்ட உடல், அனுமனுக்கு மிக எளியதாய் எடுக்க இயன்றதாயிற்று என்பதாம். இராவணன் உள்ளே நிறைந்திருந்த ஆணவமும், அனுமன் உள்ளே நிறைந்திருந்த அன்பும் இதற்குக் காரணமாயின என்பதாம். இடுக்கு - மூலை. விசையினன் - முற்றெச்சம்.*

***7229. தொக ஒருங்கிய ஞானம் ஒன்று எவரினும் தூயான்,***
***தகவு கொண்டது ஓர் அன்பு எனும் தனித் துணை***
***அதனால்,***
***அகவு காதலால், ஆண்தகை ஆயினும், அனுமன்***
***மகவு கொண்டு போய் மரம் புகும் மந்தியை நிகர்த்தான்.***

***தொக ஒருங்கிய*** - கூடி ஒன்றாகிய; ***ஞானம் ஒன்று எவரினும்*** - ஞானம் நிறைந்த யாவரிலும்; ***தூயோன்*** - தூயவனாகிய அனுமன்; ***ஆண் தகை ஆயினும்*** - இலக்குவன் பரம புருடனாகிய திருமாலேயாயினும்; ***தகவு கொண்டது ஓர்*** - தகுதி பெற்றதொரு; ***அன்பு எனும் தனித்துணையதனால்*** - அன்பு என்னும் ஒப்பற்ற துணையினாலும்; ***அகவு காதலால்*** - (அதனால்) தழைத்த பக்தியினாலும்; ***மகவு கொண்டு போய்*** - (இலக்குவனைத் தாவி எடுத்து); குட்டியைத் தாவி எடுத்துச் சென்று; ***மரம்புகு மந்தியை நிகர்த்தான்*** - மரத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் தாய்க்குரங்கினை ஒத்து விளங்கினான்.

*ஆண்டகை - புருடோத்தமன்; இராமன். இனி, ஆண்டகை என்பதனை அனுமனுக்கு ஆக்கி, ஆண் குரங்காயிருந்தும் இலக்குவனை அணைத்தெடுத்துச் சென்று காத்த நேர்த்தியால் பெண்குரங்கு அனைய அன்பினன் ஆனான் என்பார். "மகவு கொண்டு*

*போய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்" என்றார். பக்தியும் அன்பும் உடையார்க்கு, இறைவன் எளியவன் என்னும் கருத்தை இப்பாடல் உணர்த்துகிறது. "பத்துடை அடியவர்க்கு எளியவன்; பிறர்களுக்குரிய வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்" (திருவாய்: 1:3:1) என்னும் நம்மாழ்வாரின் திருவாய் மொழிப் பாசுரத்திற்கு அரியதோர் விளக்க நிகழ்ச்சியாக இந்நிகழ்ச்சி அமைந்துள்ளது. நம்பிள்ளை தம் திருவாய் மொழியீட்டில் இந்நிகழ்ச்சியைக் காட்டி, இப்பாசுரப் பகுதியை இவ்வாறு விளக்குவார். "ஸ்ரீராமாவதாரத்திலும் இராவணன் படைகளுடன் கூடினவனாய்க் கொண்டு எடுக்கப் புக்க இடத்தில் நெஞ்சிற் புக்க பகையாலே எடுக்க மாட்டிற்றிலன்; திருவடி தனியனாய் இருந்தும் நெஞ்சில் செவ்வையாலே, கருமுகை மாலை போலே எடுத்து ஏறிட்டுக் கொண்டு போனான். இங்ஙன் அன்றாகில், "இராவணனுக்குக் கனக்க வேண்டும்" அன்றே? ஆதலால் பொருள் தன்மை இருக்கும்படி இது. இமயமலை, மந்தரமலை, மேருமலைகளையும் வசிக்கின்ற பொருள்களோடு மூன்று உலகங்களையும் இருகைகளால் பெயர்த்து எடுக்க முடியும், போர்க்களத்தில் இராமனுக்கு இளையவன் பெயர்த்து எடுக்கக் கூடாதவன். "இராவணன் முதலிய பகைவர்களால் பெயர்த்து எடுக்கவும் கூடாதவனாக இருந்த இலக்குவன், தூய்மையான மனமும் பக்தியும் பொருந்திய அனுமான் குரங்காக இருந்தும் எளிதாக எடுக்கத்தக்கவன் ஆனான்" என்பது ஸ்ரீராமாயணம். (திருவாய்., ஈடு. 1:3:1)*

***7230. மையல் கூர் மனத்து இராவணன் படையினால்
மயங்கும்
செய்ய வாள் அரிஏறு அனான் சிறிதினில் தேற,
கையும் கால்களும் நயனமும் கமலமே அனைய
பொய் இலாதவன் நின்ற இடத்து, அனுமனும் போனான்.***

***மையல் கூர்மனத்து இராவணன்*** - *மயக்கம் மிகக் கொண்ட மனத்துக்குரிய இராவணன்;* ***படையினால்*** - *(வீசிய) வேலால்;* ***மயங்கும்*** - *மயங்கிக் கிடந்த;* ***செய்யவாள் அரி ஏறு அனான்*** - *சிவந்த கொடிய சிங்க ஏறு அனைய இலக்குவன்;* ***சிறிதினில் தேற*** - *சிறு பொழுதில் தெளிவு பெற;* ***கையும் கால்களும் நயனமும் கமலமே அனைய*** - *(தன்னுடைய) கைகளும், திருவடிகளும் கண்களும் தாமரை மலரையே போன்றுள்ள;* ***பொய்யிலாதவன் நின்றிடத்து அனுமனும் போனான்*** - *சத்திய வடிவினனான இராமபிரான் நின்றுள்ள இடத்தை நோக்கி அனுமனும் சென்றடைந்தான்.*

*இராமன் போர்க்குப் புகல்*

***7231. போன காலையில், புக்கனன் புங்கவன், போர்
வேட்டு
யானைமேல் செலும் கோள் அரிஏறு இவன் என்ன;***

**வானுளோர் கணம் ஆர்த்தனர்; தூர்த்தனர் மலர்,**
**மேல்;**
**தூ நவின்ற வேல் அரக்கனும், தேரினைத் துரந்தான்.**

**போன காலையில்** - *(அனுமன் அவ்வாறு) சென்றபோது;* **புங்கவன்** - *உயர்ந்தோனான இராமபிரானும்;* **ஆனைமேல் செலும் கோள் அரி ஏறு இவன் என்ன** - *யானையின் மேலே போர்க்குச் செல்லும் ஆற்றல் மிக்க சிங்க ஏறு இவன் என்று (கண்டோர்) உரைக்குமாறு;* **போர்வேட்டு** - *போர்மேல் விருப்புற்று;* **புக்கனன்** - *(இராவணனை நோக்கிப்) புகுந்தான்;* **வானுளோர் கணம் ஆர்த்தனர்** - *(அப்போது அது கண்ட) வானத்திருந்த தேவர் கூட்டமாக (மகிழ்ச்சியால்) ஆர்ப்பொலி எழுப்பினர்;* **மலர்மேல் தூர்த்தனர்** -

*(இராமபிரானின் மேலே) மலர் மாரி பொழிந்தனர்;* **தூ நவின்ற வேல் அரக்கனும்** - *ஊன் வாடை மிகுந்த வேல் தாங்கிய இராவணனும்;* **தேரினைத் துரந்தான்** - *(தனது) தேரினை (இராமபிரானை நோக்கிச்) செலுத்தினான்.*

*இறுதி வெற்றி சிங்க ஏற்றிற்கே உவமையால் உணர்த்தியவாறு இலக்குவன் மார்பில் அப்போது தான் புகுந்து வந்துள்ள வேல் ஆதலின், "தூ நவின்ற வேல்" என்றார். நவில்தல் - அமைதல். இலக்குவனை மயக்கமுறச் செய்த வேல் என்னிடத்திருப்பது எனும் செருக்கோடு தேரைத் திருப்பினான் எனும் குறிப்புத் தோன்ற, "தூ நவின்ற வேல் அரக்கனும் தேரினைத் துரந்தான்" என்றார்.*

### *இராமன், அனுமன் தோள் மேல் ஏறிச் செல்லுதல்*

*7232.* **தேரில் போர் அரக்கன் செல, சேவகன் தனியே**
**பாரில் செல்கின்ற வறுமையை நோக்கினன்,**
**பரிந்தான்,**
**'சீரில் செல்கின்றது இல்லை இச் செரு' எனும்**
**திறத்தால்,**
**வாரின் பெய் கழல் மாருதி கதுமென வந்தான்.**

**போர் அரக்கன்** - *போரிடற்குரிய இராவணன்;* **தேரில் செல** - *தேர் மீது ஏறிவர;* **சேவகன்** - *(தேரின்றி) வீரனான இராமபிரான்;* **தனியே** - *தனியாக;* **பாரில் செல்கின்ற வறுமையை நோக்கினன்** - *மண்ணில் நடந்து செல்கின்ற எளிமையை நோக்கினவனாய்;* **பரிந்தான்** - *அன்பு மேலிட்டவனாய்;* **வாரில் பெய்கழல் மாருதி** - *வாரினால் பின்னப்பட்ட காலணியினையுடைய அனுமன்;* **இச்செரு** - *(தலை மீதும் தேர் மீதுமிருந்து செய்யும்) இப்போர்;* **சீரில் செல்கின்றது இல்லை** - *சமமுடையதாகச் செய்கின்றது இல்லை;* **எனும் திறத்தால்** - *என்ற காரணத்தால்;* **கதுமென வந்தான்** - *(இராமபிரான் உள்ள இடம் நோக்கி) விரைந்து வந்தடைந்தான்.*

*7233.* ***'நூறு பத்துடை நொறில் பரித் தேரின்மேல் நுன்முன்***
***மாறு இல் பேர் அரக்கன் பொர, நிலத்து நீ மலைதல்***
***வேறு காட்டும், ஓர் வெறுமையை; மெல்லிய எனினும்,***
***ஏறு நீ, ஐய! என்னுடைத் தோளின்மேல்' என்றான்.***

***மாறில் போர் அரக்கன்*** *- நிகரற்ற போர் புரிய வல்ல அரக்கன்;* ***நொறில்*** *- விரைந்து செல்ல வல்ல;* ***நூறுபத்துடைத் தேரின் மேல்*** *- ஆயிரம் குதிரைகளைக் கொண்ட தேரின் மேலிருந்து;* ***நுன்முன் பொர*** *- உன் முன்னர்ப் போரிடும் போது;* ***நிலத்து*** *- தரையிலே நின்று;* ***நீ மலைதல்*** *- நீ சண்டையிடுதல்;* ***ஓர் வெறுமையை*** *- ஒப்பற்றதொரு வெறுமைத் தன்மையை;* ***வேறு காட்டும்*** *- தனியாகக் காட்டி நிற்கும்;* ***ஐய*** *- ஐயனே!;* ***மெல்லிய எனினும்*** *- மென்மையானவை என்றாலும்;* ***என்னுடைத் தோளின் மேல் ஏறு*** *- (அதனைப் பொருட்படுத்தாது) என்னுடைய தோளின் மேல் நீ ஏறுவாயாக;* ***என்றான்*** *- என்று வேண்டி நின்றான் (அனுமான்).*

*நூறுபத்து-ஆயிரம்; நொறில் பரி-விரைந்து செல்லும் குதிரைகள்.*

*7234.* ***'நன்று, நன்று!' எனா, நாயகன் ஏறினன், நாமக்***
***குன்றின்மேல் இவர் கோள் அரிஏறு என; கூடி,***
***அன்று வானவர் ஆசிகள் இயம்பினர்; ஈன்ற***
***கன்று தாங்கிய தாய் என மாருதி களித்தான்.***

***நாயகன்*** *- தலைவனாகிய இராமபிரான்;* ***நன்று நன்று எனா*** *- நல்லது நல்லது என்று சொல்லி;* ***ஏறினன்*** *- (அனுமன் வேண்டலையேற்று) ஏறியமர்ந்தனன்;* ***நாமக்குன்றின் மேல் இவர்*** *- புகழ் மிக்க மலையின் மேலே ஏறி நிற்கும்;* ***கோள் அரி ஏறு எனக் கூறி*** *- கொல்லும் வன்மை மிக்க சிங்க ஏறு என்று கூறி;* ***அன்று*** *- அப்போது;* ***வானரர் ஆசிகள் இயம்பினர்*** *- தேவர்கள் வாழ்த்துக் கூறினர்;* ***ஈன்ற கன்று தாங்கிய தாய் என மாருதி களித்தான்*** *- ஈன்ற கன்றினைத் தாங்கிய பசுவைப் போல அனுமன் உளம் களி கூர்ந்தான்.*

*7235.* ***மாணியாய் உலகு அளந்த நாள், அவனுடை வடிவை***
***ஆணியாய் உணர் மாருதி அதிசயம் உற்றான்;***
***காணி ஆகப் பண்டு உடையனாம் ஒரு தனிக்***
***கலுழன்***
***நாணினான்; மற்றை அனந்தனும், தலை***
***நடுக்குற்றான்.***

***மாணியாய்*** *- (மாவலிக்காக) வாமனப் பிரம்மச்சாரியாய்;* ***உலகளந்த நாள்*** *- மூன்று உலகங்களையும் (ஈரடியால்) அளந்த நாளில்;* ***அவனுடை வடிவை*** *- அந்தப் பரம்பொருளின் வடிவத்தை;* ***ஆணியாய் உணர் மாருதி*** *- சிறப்பாக உணர்ந்துள்ள*

*அனுமன்;* ***அதிசயம் உற்றான்*** *- வியப்பினையடைந்தான்;* ***காணியாகப் பண்டு உடையனாம்*** *- (திருமாலின் வடிவினைத் தாங்கும் பேற்றினை) காணியாட்சியாக முன்பே பெற்றிருந்தவனாகிய;* ***ஒரு தனிக்கலுழன்*** *- ஒப்பற்ற கருடன்;* ***நாணினான்*** *- (அப்பெருமை அனுமனால் பங்கிடப்பட்டதறிந்து) வெட்கமுற்றான்;* ***மற்றை அனந்தனும்; தலை நடுக்குற்றான்*** *- (இறைவனைத் தாங்கும் மற்றொருவனாகிய) ஆதிசேடனும் தலை நடுக்கம் கொண்டான்.*

*ஓங்கி உலகளந்த பெருமான் வடிவமதனை, தான் தாங்க நேர்ந்த செயலை எண்ணி அனுமன் வியப்புற்றான். "பத்துடையடியவர்க் கெளியவன்; பிறர்களுக்கரிய வித்தகன் நம் அரும்பெறல் அடிகள்" (திருவாய். 1:3:1) என்னும் இறைவனின் அன்பைச் சிறப்பாக உணர்ந்துள்ள அறிஞன் மாருதியாதலின், "அவனுடை வடிவை ஆணியாய் உணர் மாருதி" என்றார். உலகளந்த நாளில். இவ்வுலகம் முழுதும் அவன் ஒரு திருவடிக்கு உள்ளடங்கினதாக, இன்றோ அவன் திருவடிவம் முழுதும் தன் தோள்களுக்குள் அடங்கி நிற்பது கண்டு, "அதிசயம் உற்றான்" என அழகுறக் கூறினார். பரம்பொருளின் திருவடிவைத் தாங்கும் பேற்றைப் பரத்திலும் வியூகத்திலும் பெற்றுள்ள திருவனந்தாழ்வானும், கருடனும், அவதாரத்தில் அனுமன் தாங்கும் பேறு பெற்றமை குறித்து நிலை குலைந்தனர் என்பார்; "கலுழன் நாணினன்;" "அனந்தன் தலை நடுக்குற்றான்" என்றார். திருவடி தாங்கும் பேற்றால் கருடன் "பெரிய திருவடி" என்றும், அனுமன் "திருவடி" என்றும் வைணவர்களால் போற்றப்படுவது மரபாயிற்று.*

***7236. ஓதம் ஒத்தனன் மாருதி; அதன் அகத்து உறையும்***
***நாதன் ஒத்தனன் என்னினோ, துயில்கிலன் நம்பன்;***
***வேதம் ஒத்தனன் மாருதி; வேதத்தின் சிரத்தின்***
***போதம் ஒத்தனன் இராமன்; வேறு இதின் இலை***
***பொருவே.***

***மாருதி ஓதம் ஒத்தனன்*** *- அனுமன் பாற்கடலை ஒத்தான்;* ***அதன் அகத்து உறையும் நாதன்*** *- அக்கடலிடத்தே அறிதுயில் கொண்டு தங்குகின்ற திருமாலை;* ***ஒத்தனன் என்னினோ*** *- இராமபிரான் போன்றான் என்றால்;* ***நம்பன் துயில்கிலன்*** *- தலைவனாம் அந்த இராமபிரானோ (அனுமன் மேல்) உறங்குகின்றான் இல்லை;* ***மாருதி வேதம் ஒத்தனன்*** *- (பின் எந்தவுவமை கூறலாம் எனில்) அநுமன் நான்கு வேதங்களைப் போன்றவன் ஆனான்;* ***இராமன் வேதத்தின் சிரத்தின் போதம் ஒத்தனன்*** *- இராமபிரானோ வேதத்தின் சிரம் என்று புகழப்படும் வேதாந்த ஞானத்தின் தெளிவைப் போன்றவன் ஆனான் என்று கூறலாம்;* ***இதன் வேறு பொருவே இல்லை*** *- இதனை விடச் சிறந்த உவமையே கூறுவதற்கில்லை.*

*அனுமன் கற்றுள்ள கல்வியின் ஆழமும் பெருமையும் அனுமனுக்கு நான்கு வேதங்களையும் இராமனுக்கு வேதங்களின் சாரமாய்த் திகழும் பரம்பொருளையும் உவமித்தார் கவிஞர் பிரான். வேதங்களின் ஞானத்தைச் சாரமாய்ப் பிழிந்து தன் வாழ்வால் உலகுக்கு வாழ்ந்து காட்டியவன் இராமபிரான். ஆதலின், "வேதத்தின் சிரத்தின் போதம் ஒத்தனன்" என்றார் எனினுமாம். "நின் செய்கை கண்டு*

*நினைந்தனவோ, நீள் மறைகள் உன் செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ?" (கம்ப. 3689)* என்று வேதம் போதிக்கும் செயல்களே இராம வாழ்வு என உரைத்துள்ளமை காண்க. வேத சிரம்-உபநிடதம் என்பர். அனுமனை வேதம் போன்ற அறிவினன் என்பதனை, "இல்லாத உலகத்து எங்கும் ஈங்கு இவன் இசைகள் கூறக் கல்லாத கலையும் வேதக்கடலுமே என்னும் காட்சி" *(கம்ப.3768)* என இராமபிரானே உரைத்துள்ளமை காண்க. இராமன் வேதாந்த போதன் என்பதனை, "இலங்கையிற் பொருதார் அன்றே மறைகளுக்கு இறுதியாவார்" *(கம்ப. 4740)* என்பதனாலும் உணரல் ஆகும்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**7237. தகுதியாய் நின்ற வென்றி மாருதி தனிமை சார்ந்த**
**மிகுதியை வேறு நோக்கின், எவ் வண்ணம் விளம்பும் தன்மை?**
**புகுதி கூர்ந்துள்ளார் வேதம் பொதுவுறப் புலத்து நோக்கும்**
**பகுதியை ஒத்தான்; வீரன், மேலைத் தன் பதமே ஒத்தான்.**

**தகுதியாய் நின்ற வென்றி மாருதி** - இராமபிரானுக்குத் தக்கதொரு ஊர்தியாக நின்ற வெற்றி பொருந்திய அனுமனின்; **தனிமை சார்ந்த மிகுதியை** - தனித்தன்மை மிகுந்த சிறப்பினை; **எவ்வண்ணம் விளம்பும் தன்மை?** - எவ்வண்ணம் விளக்குவது?; **வேறு நோக்கின்** - பிறிதொரு வகையாக (அச்சிறப்பை) நோக்குவோம் ஆயின்; **புகுதி கூர்ந்துள்ளார் வேதம்** - ஞானம் மிக்கோர்க்கு உதவுவதாகிய வேதமானது; **பொதுவுறப் புலத்து நோக்கும்** - பொதுவாகத் தன் அறிவால் நுழைந்து நோக்கிக் கூறுகின்ற; **பகுதியை ஒத்தான்** - மூலப் பகுதியை ஒத்தான் (அனுமன்); **வீரன், மேலைத்தன் பதமே ஒத்தான்** - வீரனாகிய இராமன் அம்மூலப் பகுதிக்கும் மூலமாய் மேலே உள்ள தன் பரம பதத்தினையே ஒத்து விளங்கினான் (எனலாம்).

பகுதி - மூலப்பிரகிருதி. உலகம் மூலப்பிரகிருதியால் 24 தத்துவங்களாய் விரிந்தது. அவை மண்முதற் பூதங்கள் 5; அவை தோன்றற்குரிய நுண் மூலக்கூறுகள் (தன் மாத்திரைகள்) 5; அறிகருவிகள் (ஞானேந்திரியங்கள்) 5: செயற்கருவிகள் (கன்மேந்திரியங்கள்) 5; மனம், அகங்காரம், மகான், அவ்யக்தம் (விளக்கமில் பகுதி என அந்தக் கரணம் 4: ஆகிய இத்தத்துவங்கள் 24ம் அறிவிலாப் பொருள்கள் (அசித்து) ஆகும்; இருபத்தைந்தாவது தத்துவம் உயிர். (ஆத்மா - புருடன்) இது அறிவித்தால் அறிவது இவற்றை உடலாகக் கொண்டு அறிவியாமலேயே அறியும் முழுஞானப் பரம்பொருள், உயிரை மூலப்பகுதியில் சேர்த்துப் படைத்துக் காத்து கரந்தும் பெருமாய விளையாட்டுப் புரிந்து, அறியாமையோடு மிடைந்துள்ள உயிர்களை, தன் போன்றே முழுஞானப் பொருளாக மாற்ற முயல்வதே வாழ்வாகிறது. இப்பரம்பொருள் ஈசன் எனும் 26வது தத்துவமாகிறது. ஆக, வைணவ தத்துவம் 26 ஆம் பரம்பொருள் மூலப்பிரகிருதியோடு தொடர்புடைய அசுத்த மாயா புவனங்கட்கு அப்பாலாய், சுத்த மாயா புவனமாகிய தன் பரம பதத்தில் உறைகிறது

எனும் வைணவ சமயக் கோட்பாட்டை அனுமன், "பகுதியை ஒத்தான் வீரன், மேலைத்தன் பதமே ஒத்தான்" என்று அழகுற விளக்கியவாறு இது. மூலப்பிரகிருதியைக் கடந்து அதற்கு மேல், பரமபதம் விளங்குவது போல், அனுமனுக்கு மேலாக இராமன் விளங்கினான் என்பதாம். "மூலப் பகுதி ஒன்றில் தோன்றியது அன்மையின் அது பகுதியே ஆவது அல்லது விகுதி ஆகாது" எனும் பரிமேலழகர் (குறள் 27) கூற்றையும் உணர்க. புகுதி-ஞானம்.

*7238.* ***மேருவின் சிகரம் போன்றதுஎன்னினும், வெளிறு உண்டாமால்--***
***மூரி நீர் அண்டம் எல்லாம் வயிற்றிடை முன்னம் கொண்ட ஆரியற்கு, அனேக மார்க்கத்தால், இடம் வலமது ஆகச்***
***சாரிகை திரியல் ஆன மாருதி தாமப் பொன்-தோள்.***

***மூரிநீர் அண்டம் எல்லாம்*** - வலிமை மிக்க நீர் சூழ்ந்த அண்டங்களையெல்லாம்; ***முன்னம் வயிற்றிடைக் கொண்ட ஆரியற்கு*** - முன்பு மகாப்பிரளய காலத்தில் (தன் திரு) வயிற்றிலே அடக்கிய மேலோனாகிய இராமபிரானுக்கு; ***அநேக மார்க்கத்தால்*** - பலவழிகளில் (போர்க்களத்தில் தோளில் ஏந்தி); ***இடம் வலமது ஆக*** - இடப்புறமாகவும் வலப்புறமாகவும்; ***சாரிகை திரியலான*** - சாரிகை சுற்றித் திரிந்த; ***மாருதி*** - அனுமனுடைய; ***தாமப் பொன்தோள்*** - மாலை ஏந்திய அழகிய தோள்கள்; ***மேருவின் சிகரம் போன்றது என்னினும்*** - மேருமலையின் சிகரங்கள் போன்றவை எனினும்; ***வெளிறு உண்டாம்*** - குற்றம் உண்டாகும்.

சுற்றித் திரியும் அனுமனின் தோள்களுக்கு ஓரிடத்தில் நிலைத்திருக்கும் மேருவின் சிகரங்களை உவமை கூறல் பொருந்தாது என்பது முதற்குற்றம். அண்டம் முழுதும் உண்டவனைத் தாங்கித்திரியும் தோள்களுக்கு ஓர் அண்டத்தின் ஓரிடத்தில் இருக்கும் மேருவின் சிகரங்கள் உவமையாகா என்பது அடுத்த குற்றமாம்.

**கலித்துறை**

*7239.* ***ஆசி சொல்லினர் அருந் தவர்; அறம் எனும் தெய்வம்***
***காசு இல் நல் நெடுங் கரம் எடுத்து ஆடிட, கயிலை***
***ஈசன், நான்முகன் என்று இவர் முதலிய இமையோர்***
***பூசல் காணிய வந்தனர், அந்தரம் புகுந்தார்.***

***அருந்தவர்*** - *அரிய தவம் புரிந்த முனிவர்கள்;* ***ஆசி சொல்லினர்*** - *வாழ்த்துரைகளை வழங்கினர்;* ***அறம் எனும் தெய்வம்*** - *அறம் என்னும் கடவுள்;* ***காசில் நல்நெடும் கரம் எடுத்து ஆடிட*** - *குற்றமற்ற தன் அழகிய நீண்ட கரங்களை உயர்த்திக் கொண்டு கூத்தாட;* ***கயிலை ஈசன்*** - *சிவபெருமான்;* ***நான்முகன்*** - *பிரமன்;* ***என்று இவர் முதலிய இமையோர்*** - *என்ற இவர்கள் முதலாக உள்ள தேவர்கள்;* ***பூசல் காணிய*** - *(இராம இராவணப்) போரினைக் காண்பதற்காக;* ***வந்தனர் அந்தரம் புகுந்தார்*** - *வந்து ஆகாயத்தில் புகுந்தார்கள்.*

*இராம இராவணப் போர்*

***7240. அண்ணல், அஞ்சன வண்ணனும், அமர் குறித்து அமைந்தான்;***
***எண்ண அரும் பெருந் தனி வலிச் சிலையை நாண் எறிந்தான்;***
***மண்ணும் வானமும், மற்றைய பிறவும், தன் வாய்ப் பெய்து,***
***உண்ணும் காலத்து, அவ் உருத்திரன் ஆர்ப்பு ஒத்தது ஓதை.***

***அண்ணல் அஞ்சன வண்ணனும்*** - *பெருமைக்குரிய மைந்நிறம் கொண்ட இராமபிரானும்;* ***அமர் குறித்து அமர்ந்தான்*** - *போர் புரியும் உள்ளம் பொருந்தியவனாய்;* ***எண் அரும்பெருந்தனி வலிச் சிலையை*** - *நினைத்தற்கும் அரிய பெருமையுடைய ஒப்பற்ற வலி வாய்ந்த (கோதண்டம் எனும்) வில்லை;* ***நாண் எறிந்தான்*** - *நாணைத் தெறித்தான்;* ***ஓதை*** - *அதனால் எழுந்த பேரோசை;* ***மண்ணும் வானமும் மற்றைய பிறவும்*** - *மண்ணையும் விண்ணையும் மற்றும் எல்லாப் பொருள்களையும்;* ***தன் வாய்ப் பெய்து உண்ணும் காலத்து*** - *தன் வாயிலே இட்டு உண்கின்ற பேரூழிக் காலத்து;* ***அவ்வுருத்திரன் ஆர்ப்பு ஒத்தது*** - *அந்த உருத்திர மூர்த்தியிடும் பேரோசையை ஒத்திருந்தது.*

***7241. ஆவி சென்றிலர்; நின்றிலர், அரக்கரோடு இயக்கர்;***
***நா உலர்ந்தனர்; கலங்கினர், விலங்கினர்; நடுங்கி;***
***கோவை நின்ற பேர் அண்டமும் குலைந்தன; குலையாத்***
***தேவதேவனும், விரிஞ்சனும், சிரதலம் குலைந்தார்.***

***அரக்கரோடு இயக்கர்*** - *அரக்கர்களோடு சேர்ந்து இயக்கர்களும்;* ***ஆவி சென்றிலர்*** - *(பெருமானின் வில்நாண் ஒலி கேட்டு அச்சத்தால்) உயிர் நீங்கப் பெற்றிலர் ஆயினும்;* ***நின்றிலர்*** - *இருந்த இடத்தில் நிற்கும் ஆற்றல் அற்றவராய் (நிலை கொள்ளாதவராய்);* ***நா உலர்ந்தனர்*** - *நாக்கு வறண்டு;* ***விலங்கினர்*** - *இடம் விலகி;* ***நடுங்கிக் கலங்கினர்*** - *உடல் நடுங்கி மனம் கலங்கினர்;* ***கோவை நின்ற பேர்***

***அண்டமும்*** - வரிசையில் அமைந்துள்ள பெரிய அண்ட கோளங்களும்; ***குலைந்தன*** - நிலைதடுமாறின; ***குலையா*** - என்றும் நிலைகுலையாத; **தேவதேவனும்** - சிவபெருமானும்; ***விரிஞ்சனும்*** - பிரமனும்; ***சிரதலம் குலைந்தார்*** - தலை நடுக்கம் உற்றனர்.

***7242. ஊழி வெங் கனல் ஒப்பன, துப்பு அன உருவ,
ஆழி நீரையும் குடிப்பன, திசைகளை அளப்ப,
வீழின் மீச்செலின், மண்ணையும் விண்ணையும்
தொளைப்ப,
ஏழு வெஞ் சரம், உடன் தொடுத்து, இராவணன்
எய்தான்.***

***ஊழி வெங்கனல் ஒப்பன*** - (அப்போது) ஊழிக்காலத்துத் தோன்றும் கொடுந்தீயை ஒப்பனவும்; ***துப்பன உருவ*** - பவளம் போன்ற நிறம் உடையனவும்; ***ஆழி நீரையும் குடிப்பன*** - கடல் நீரையும் பருக வல்லனவும்; ***திசைகளை அளப்ப*** - திக்குகள் யாவையும் அளக்க வல்லனவும்; ***வீழின் மண்ணையும்*** - கீழே விழுந்தால் பூமியையும்; ***மீச்செலின் விண்ணையும்*** - மேல் நோக்கிப் பாய்ந்தால் வானத்தையும்; ***தொளைப்ப*** - தொளைக்க வல்லனவும் ஆகிய; ***வெம்சரம் ஏழும்*** - கொடிய கணைகள் ஏழினையும்; ***உடன் தொடுத்து*** - சேரத் தொடுத்து; ***இராவணன் எய்தான்*** - இராவணன் (இராமபிரான் மேல்) விடுத்தான்.

***7243. எய்த வாளியை, ஏழினால், ஏழினோடு ஏழு
செய்து வெஞ் சரம் ஐந்து ஒரு தொடையினில்
சேர்த்தி,
வெய்து கால வெங் கனல்களும் வெள்குற,
பொறிகள்
பெய்து போம் வகை, இராகவன் சிலைநின்று
பெயர்த்தான்.***

***எய்த வாளியை*** - (இராவணன்) விடுத்த அம்புகளை; ***ஏழினால்*** - தன்னுடைய ஏழு அம்புகளால்; ***ஏழினோடு ஏழு எய்து*** - (ஒவ்வொன்றும்) ஏழேழு நாற்பத்தொன்பது துண்டுகள் ஆகுமாறு துண்டித்து; ***ஒரு தொடையினில்*** - ஒருமுறை தொடுக்கையில்; ***வெம்சரம் ஐந்து சேர்த்தி*** - கொடுங்கணைகள் ஐந்தினையும் ஒருசேரப் பொருத்தி; ***வெய்து கால வெங்கனல்களும்*** - வெய்யது ஆகிய ஊழிக்கால நெருப்புகளும்; ***வெள்குற*** - நாணுமாறு; ***பொறிகள் பெய்து*** - தீப்பொறிகள் கக்கியவாறு; ***போம்வகை*** - செல்லும் வண்ணம்; ***இராகவன் சிலை நின்று பெய்தான்*** - இராமபிரான் தன் வில்லினின்று எய்தான்.

*7244.* ***வாளி ஐந்தையும் ஐந்தினால் விசும்பிடை மாற்றி,***
***ஆளி மொய்ம்பின் அவ் அரக்கனும், ஐ-இரண்டு அம்பு***
***தோளில் நாண் உற வாங்கினன், துரந்தனன்; சுருதி***
***ஆளும் நாயகன் அவற்றையும் அவற்றினால் அறுத்தான்.***

***ஆளி மொய்ம்பின் அவ்அரக்கனும்*** - *ஆளியைப் போன்ற வலிய அரக்கனாம் இராவணனும்;* ***வாளி ஐந்தையும்*** - *(இராமபிரான் விடுத்த) ஐந்து அம்புகளையும்;* ***ஐந்தினால்*** - *ஐந்து அம்புகளினால்;* ***விசும்பிடை மாற்றி*** - *ஆகாயத்திலேயே உரு அழித்து;* ***ஐயிரண்டு அம்பு*** - *பத்துப் பாணங்களை;* ***தோளில் நாண் உற வாங்கினன் துரந்தான்*** - *தன் தோளில் நாண் பொருந்துமாறு வளைத்துச் தலைவனான இராமபிரானும்;* ***அவற்றையும்*** - *அந்தப் பத்துக் கணைகளையும்;* ***அவற்றினால் அறுத்தான்*** - *பத்துப் பாணங்களினால் அறுத்துத் தள்ளினான்.*

*7245.* ***அறுத்து, மற்று அவன் அயல் நின்ற அளப்ப அரும் அரக்கர்.***
***செறுத்து விட்டன படை எல்லாம் கணைகளால் சிந்தி,***
***இறுத்து வீசிய கிரிகளை எரி உக நூறி,***
***ஒறுத்து, மற்று அவர் தலைகளால் சில மலை உயர்த்தான்.***

***அறுத்து*** - *(இராமபிரான் அரக்கன் கணைகளை) அறுத்தெறிந்து;* ***மற்று*** - *பின்பு;* ***அவன் அயல் நின்ற அளப்பரும் அரக்கர்*** - *அந்த இராவணனின் அருகே நின்ற அளத்தற்கரிய அரக்கர்;* ***செறுத்து விட்டன படை எலாம்*** - *வெகுண்டு விட்ட படைக்கலங்கள் யாவற்றையும்;* ***கணைகளால் சிந்தி*** - *அம்புகளால் சிதறடித்து;* ***இறுத்து வீசிய கிரிகளை*** - *(அவர்கள்) அகழ்ந்து வீசிய மலைகளை யெல்லாம்;* ***எரி உக நூறி ஒறுத்து*** - *தீப்பொறி சிதறுமாறு பொடி செய்து ஒழித்து;* ***அவர் தலைகளால் சிலமலை உயர்த்தான்*** - *அந்த அரக்கர்களுடைய (அறுபட்ட) தலைகளால் சிலமலைகள் உயர்ந்து தோன்றுமாறு செய்தான்.*

*எல்லோரும் கல்லால் மலை செய்யலாவது இயல, பெருமான் தலையால் மலைசெய்ய வல்லான் என அவனது "அகடிதகடநா சாமர்த்தியம்" கூறியவாறு. தலைமலை ஒன்றல்ல என்பார், "சிலமலை செய்தான்" என்றார்.*

***7246. மீனுடைக் கருங் கடல் புரை இராக்கதர் விட்ட***
***ஊனுடைப் படை, இராவணன் அம்பொடும் ஓடி,***
***வானரக் கடல் படா வகை, வாளியால் மாற்றி,***
***தானுடைச் சரத்தால் அவர் தலைமலை தடிந்தான்.***

***மீன் உடைக் கருங்கடல் புரை இராக்கதர்*** *- மீன்களையுடைய கருங்கடலினைப் போன்ற (பெருந்திரளான) இராக்கதர்;* ***விட்ட ஊனுடைப் படை*** *- செலுத்திய தசை படிந்த படைக்கருவிகள்;* ***இராவணன் அம்பொடும் ஓடி*** *- இராவணனுடைய அம்புகளுடனே ஓடி;* ***வானரக் கடல் படா வகை*** *- வானர சேனை என்னும் கடலின் மீது படாத வண்ணம்;* ***வாளியான் மாற்றி*** *- (தன்னுடைய) அம்புகளால் விலக்கி;* ***தான் உடைச்சரத்தால்*** *- தன்னுடைய வேறு அம்புகளால்;* ***அவர் தலை மலை*** *- அரக்கர்களுடைய தலை எனும் மலைகளை;* ***தடிந்தான்*** *- அழித்துக் குவித்தான் (பெருமகன்).*

***7247. இம்பரான் எனில், விசும்பினன் ஆகும், ஓர் இமைப்பில்;***
***தும்பை சூடிய இராவணன் முகம்தொறும் தோன்றும்;***
***வெம்பு வஞ்சகர் விழிதொறும் திரியும்;--மேல் நின்றான்***
***அம்பின் முன் செலும், மனத்திற்கும் முன் செலும், அனுமன்.***

**மேல் நின்றான்** *- தன் புயத்தின் மீதிருந்த இராமபிரானுடைய;* **அம்பின் முன் செலும்** *- அம்பின் (வேகத்திற்கும்) முந்திச் செல்லுவான்;* **மனத்திற்கும் முன் செலும் அனுமன்** *- மனவேகத்திற்கும் முன் செல்கின்றவனான அனுமன்;* **ஓர் இமைப்பில்** *- ஒரு கணப்பொழுதில்;* **இம்பரான் எனின்** *- இவ்வுலகத்தினன் என நினைவோமாயின்;* **விசும்பினன் ஆகும்** *- ஆகாயத்தில் அடுத்த கணத்தில் இருப்பவன் ஆவான்;* **தும்பை சூடிய இராவணன் முகம் தொறும் தோன்றும்** *- தும்பை மாலையைச் சூடிப் போரிடுகின்ற பத்து தலைகளின் முன்பும் (மறுகணம்) தோன்றுவான்;* **வெம்பு வஞ்சகர் விழிதொறும் திரியும்** *- (அடுத்தகணம்) கொதிக்கின்ற வஞ்சகராம் அரக்கர் விழிகள் தோறும் காட்சிப்படுவான்.*

*ஓர் இமைப்பின்-இடைநிலைத்தீபகம்.*

*போர்க்களக் காட்சிகள்*

***7248. ஆடுகின்றன, கவந்தமும்; அவற்றொடும் ஆடிப்***
***பாடுகின்றன, அலகையும்; நீங்கிய பனைக் கைக்***

***கோடு துன்றிய கரிகளும் பரிகளும் தலைக்கொண்டு***
***ஓடுகின்றன, உலப்பு இல, உதிர ஆறு உவரி.***

***கவந்தமும் ஆடுகின்றன*** - *தலையற்ற உடல்கள் (களத்தில்) கூத்தாடத் தொடங்கின;* ***அலகையும்*** - *பேய்களும்;* ***அவற்றொடும் ஆடி*** - *அந்தக் கவந்தங்களுடனே கூடி ஆடி;* ***பாடுகின்றன*** - *பாடத் தொடங்கின;* ***உலப்பில உதிரம் ஆறு*** - *வற்றுதலில்லாத இரத்தப் பெருக்குகள்;* ***பனைக்கை துன்றிய கோடுநீங்கிய கரிகளும்*** - *பனை போன்ற கரங்களுடன் முன்பு நெருங்கியிருந்த கொம்புகள் நீங்கப் பெற்ற யானைகளையும்;* ***பரிகளும்*** - *குதிரைகளையும்;* ***தலைக்கொண்டு*** - *தம்மிடம் அகப்படுத்திக் கொண்டு;* ***உவரி ஓடுகின்றன*** *-கடலை நோக்கி ஓடிப் பாய்வன ஆயின.*

*7249.* ***அற்ற ஆழிய, அறுப்புண்ட அச்சின அம்போடு***
***இற்ற கொய் உளைப் புரவிய, தேர்க் குலம் எல்லாம்;***
***ஒற்றை வாளியோடு உருண்டன, கருங் களிற்று***
***ஓங்கல்;***
***சுற்றும் வாசியும் துமிந்தன, அமர்க் களம் தொடர்ந்த.***

***அமர்க்களம் தொடர்ந்த*** - *போர்க்களத்தில் தொடர்ந்து வந்த;* ***தேர்க்குலம் எல்லாம்*** - *தேர்க்கூட்டங்கள் யாவும்;* ***அற்ற ஆழிய*** - *துண்டித்த சக்கரங்களை உடையனவும்;* ***அறுப்புண்ட அச்சின*** - *முறிந்து போன அச்சுக்களையுடையனவும்;* ***இற்ற கொய் உளைப் புரவிய*** - *இறந்து போன கொய்து அலங்கரிக்கப் பெற்ற பிடரி மயிர்களையுடைய குதிரைகளையுடையனவும்;* ***கருங்களிற்று ஓங்கல்*** - *கரிய யானைகள் என்னும் மலைகள்;* ***ஒற்றை வாளியோடு உருண்டன*** - *ஒரே அம்புகள் பட்டு (களத்தில்) உருண்டு கிடந்தன;* ***சுற்றும் வாசியும் துமிந்தன*** - *சுற்றித்திரியும் குதிரைகளும் துண்டுபட்டுக் கிடந்தன.*

*"அமர்க்களந்தொடர்ந்த" என்பது கடைநிலைத் தீபகம்."*

*7250.* ***தேர் இழந்து, வெஞ் சிலைகளும் இழந்து, செந்***
***தறுகண்***
***கார் இழந்து, வெங் கலின மாக் கால்களும் இழந்து,***
***சூர் இழந்து, வன் கவசமும் இழந்து, துப்பு இழந்து,***
***தார் இழந்து, பின் இழந்தனர் நிருதர், தம் தலைகள்.***

***நிருதர்*** - *அரக்கர்கள்;* ***தேர் இழந்து*** - *(தாம் ஏறி வந்த) தேர்களையும் இழந்து;* ***வெம்சிலைகளும் இழந்து*** - *தாம் பிடித்திருந்த விற்களையும் இழந்து;* ***செந்தறு கண்*** - *சிவந்த கொடிய கண்களுடன் கூடிய;* ***கார் இழந்து*** - *மேகம் போன்ற யானைகளையும்*

*இழந்து;* ***வெம்கலின மாக்கால்களும் இழந்து*** *- கொடிய கடிவாளமுடைய குதிரைகளின் கால்களையும் இழந்து;* ***சூர் இழந்து*** *- சூரத்தனத்தையும் இழந்து;* ***வன் கவசமும் இழந்து*** *- வலிய கவசங்களையும் இழந்து;* ***துப்பிழந்து*** *- வலிமையையும் இழந்து;* ***தார் இழந்து*** *- மாலைகளையும் இழந்து;* ***பின் தம் தலைகள் இழந்தனர்*** *- பிறகு (இறுதியாக) தம்முடைய தலைகளையும் இழந்தழிந்தனர்.*

***7251. அரவ நுண் இடை அரக்கியர்; கணவர்தம் அற்ற,***
***சிரமும் அன்னவை ஆதலின், வேற்றுமை தெரியா,***
***புரவியின் தலை பூட்கையின் தலை இவை பொருத்தி,***
***கரவு இல் இன் உயிர் துறந்தனர், கவவுறத் தழுவி.***

***அரவ நுண் இடை அரக்கியர்*** *- பாம்பு போன்று நெளியும் நுண்ணிய இடைகளையுடைய அரக்கிமார்கள்;* ***அற்ற தம் கணவர் சிரமும்*** *- உயிரற்று இறந்து போன தம் கணவர்களின் தலையும்;* ***அன்னவை ஆதலின்*** *- குதிரை, யானை போன்ற விலங்குகளின் தலைகளே ஆதலின்;* ***வேற்றுமை தெரியா*** *- தம் கணவர் தலைகட்கும் அவற்றின் தலைகட்குமிடையே வேறுபாடு உணர இயலாமையால்;* ***புரவியின் தலை பூட்கையின் தலை இவை பொருத்தி*** *- குதிரையின் தலைகள், யானையின் தலைகள் முதலியவற்றைத் தம் கணவன் உடலோடு சேர்த்து வைத்து;* ***கரவில்*** *- மறைவான இடத்தில்;* ***கவவு உறத்தழுவி*** *- நன்கு பொருந்த அணைத்து;* ***இன் உயிர் துறந்தனர்*** *- தமது இன்னுயிரினைத் (தழுவியவாறே) இழந்தனர்.*

*அரக்கர் சிலர், யானை, குதிரை ஆளி முதலியவற்றின் தலைகளைக் கொண்டிருந்தமையை வான் மீகமும் புகலும். "கரி, பரி, வேங்கை, மாக்கரடி, யாளி, பேய், அரி, நரி, நாய், என அணிமுகத்தினர்" (கம்ப. 5127) என்று முன்பும் கூறினார். "முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடியும் நிலையொடு தொகைஇ" (தொல். பொருள். 79) "மண்டு அமருள் மாறாமைந்தில் கொண்டான் தலையொடு கோல்வளை முடிந்தன்று" (புறப். வெண். காஞ்.13) (என இந்நிகழ்வினைப் புறப்பொருள் இலக்கண நூல்கள் புகலும்.*

***7252. ஆர்ப்பு அடங்கின, வாய் எலாம்; அழற் கொழுந்து ஒழுகும்***
***பார்ப்பு அடங்கின, கண் எலாம்; பல வகைப் படைகள்***
***தூர்ப்பு அடங்கின, கை எலாம்; தூளியின் படலைப்***
***போர்ப்பு அடங்கின உலகு எலாம்; முரசு எலாம் போன.***

***முரசு எலாம் போன*** - *முரசங்களின் ஒலிகள் எல்லாம் போயின;* ***வாய் எலாம் ஆர்ப்பு அடங்கின*** - *அரக்கரின் வாய்கள் எல்லாம் ஆரவாரம் அடங்கின;* ***கண் எலாம் அழல் கொழுந்து ஒழுகும்*** - *விழிகள் எல்லாம் தீக்கொழுந்து வெளிப்பட;* ***பார்ப்பு அடங்கின*** - *காணும் காட்சியை ஒழிந்தன;* ***கை எலாம் பலவகைப் படைகள் தூர்ப்பு அடங்கின*** - *கைகள் எல்லாம் பலவிதப் படைக்கலங்களைப் பொழிதலை ஒழிந்தன;* ***தூளியின் படலை*** - *தூசிக்கூட்டங்கள்;* ***உலகு எலாம் போர்ப்பு அடங்கின*** - *உலகினையெல்லாம் போர்த்துக் கொள்வதிலிருந்தும் நீக்கம் பெற்றன.*

*இராவணன் தனித்து நின்று, பொருதல்*

*7253.* ***ஒன்று நூற்றினோடு ஆயிரம் கொடுந் தலை உருட்டி,***
***சென்று தீர்வு இல, எனைப் பல கோடியும் சிந்தி,***
***நின்ற தேரொடும் இராவணன் ஒருவனும் நிற்க,***
***கொன்று வீழ்த்தினது--இராகவன் சரம் எனும்***
***கூற்றம்.***

***இராகவன் சரம் எனும் கூற்றம்*** - *இராமபிரானுடைய காலன் போன்ற அம்பு;* ***ஒன்று நூற்றினோடு ஆயிரம் கொடுந்தலை உருட்டி*** - *இலட்சம் அரக்கருடைய கொடிய தலைகளை அறுத்து உருளச் செய்து;* ***சென்று தீர்வில*** - *அதனோடு முடிந்து விடாமல்;* ***எனைப் பல கோடியும் சிந்தி*** - *(மற்றும்) எத்தனையோ பலகோடி வீரர்களையும் அழித்து;* ***நின்ற தேரொடும்*** - *மீந்து நின்ற தேர் ஒன்றோடும்;* ***இராவணன் ஒருவனும் நிற்க*** - *இராவணன் ஒருவனும் நிற்க - இராவணன் ஒருவனே மிஞ்சி நிற்க;* ***கொன்று வீழ்த்தினது*** - *கொன்றழித்தது.*

*7254.* ***தேரும் யானையும் புரவியும் அரக்கரும் தெற்றி,***
***பேரும் ஓர் இடம் இன்று எனத் திசைதொறும்***
***பிறங்கி,***
***காரும் வானமும் தொடுவன பிணக் குவை***
***கண்டான்,--***
***மூரி வெஞ் சிலை இராவணன்--அரா என***
***முனிந்தான்.***

***மூரி வெஞ்சிலை இராவணன்*** - *வலிமை மிக்க கொடிய வில்லையுடைய இராவணன்;* ***தேரும் யானையும் புரவியும் அரக்கரும்*** - *தேர்களும், யானைகளும் குதிரைகளும் இராக்கதரும்;* ***தெற்றி*** - *எங்கும் நெருங்கி (ஒன்றோடு ஒன்று முட்டி);* ***பேரும் ஓர் இடம் இன்றென*** - *நகர்வதற்கு வேறோர் இடம் இல்லை யென்னும்படி;* ***திசைதொறும் பிறங்கி*** - *திக்கெல்லாம் தோன்றுமாறு;* ***காரும் வானமும் தொடுவன பிணக்குவை கண்டான்*** - *மேகத்தையும் வானத்தையும் சென்று தொடுமாறு குவிந்த*

*பிணக்குவியல்களைக் கண்டவனாய்;* ***அரா என முனிந்தான்*** *- பாம்பு போல வெகுண்டான்.*

***7255. முரண் தொகுஞ் சிலை இமைப்பினில் முறையுற வாங்கி,***
***புரண்டு தோள் உறப் பொலன் கொள் நாண் வலம்படப் போக்கி,***
***திரண்ட வாளிகள் சேவகன் மரகதச் சிகரத்து***
***இரண்டு தோளினும் இரண்டு புக்கு அழுந்திட, எய்தான்.***

***பொலன் கொள் நாண்*** *- அழகைக் கொண்ட வில்லின் நாண் ஆனது;* ***புரண்டு தோள் உற*** *- புரண்டு தோளிலே தோயும்படி;* ***முரண் தொகும்சிலை*** *- வலிமையெல்லாம் ஒருங்கு திண்டுள்ள வில்லினை;* ***இமைப்பினில் முறை உறவாங்கி*** *- இமைக்கும் நேரத்திலே முறைப்படி வளைத்து;* ***திரண்ட வாளிகள் இரண்டு*** *- திரண்டெடுத்த உருவினையுடைய இரண்டு அம்புகளை;* ***வலம்படப் போக்கி - வலிமை தோன்ற விடுத்து;*** *சேவகன் - இராமபிரானுடைய;* ***மரகதச் சிகரத்து இரண்டு தோளினும்*** *- மரகத மலைச் சிகரம் போன்ற இரண்டு தோள்களிலும்;* ***புக்கு அழுந்திட எய்தான்*** *- புதையுமாறு எய்தான்.*

***7256. முறுவல் எய்திய முகத்தினன், முளரி அம் கண்ணன்,***
***மறு இலாதது ஓர் வடிக் கணை தொடுத்து, உற வாங்கி,***
***இறுதி எய்தும் நாள், கால் பொர, மந்தரம் இடையிட்டு***
***அறுவது ஆம் என, இராவணன் சிலையினை அறுத்தான்.***

***முறுவல் எய்திய முகத்தினன்*** *- புன்முறுவல் பூத்த முக மலரினையுடையவனாய்;* ***முளரி அம் கண்ணன்*** *- செந்தாமரை மலரையொத்த அழகிய கண்களையுடைய இராமபிரான்;* ***மறு இலாதது ஓர் வடிக்கணை தொடுத்து*** *- குற்றமற்றதோர் கூரிய அம்பினைப் பூட்டி;* ***உறவாங்கி*** *- (வில்லினை) நன்கு வளைத்து;* ***இறுதிநாள் கால்பொர*** *- உகாந்தகாலக் காற்று வீசும்போது;* ***மந்தரம்*** *- மந்தரமலை;* ***இடையிட்டு அறுவது ஆம் என*** *- இடையிலே இற்று ஒடிவது போல;* ***இராவணன் சிலையினை அறுத்தான்*** *- இராவணனுடைய வில்லினை அறுத்து வீழ்த்தினான்.*

*முறுவல் எய்திய முகத்தினனாய் இராமன் நிகழ்த்தியபோர் "அலகிலா விளையாட்டு உடையான் (கம்ப.1) என்பதன் அரும்பொருளை உணர்த்தியது.*

*பிராட்டியின் கூற்றிலும், (5188) இராவணன் மாலியவானிடம் கூறிய கூற்றிலும் (7258) இந்நிலை அறிக.*

***7257. மாற்று வெஞ் சிலை வாங்கினன், வடிம்புடை நெடுநாண்***
***ஏற்றுறா முனம், இடை அறக் கணைகளால் எய்தான்;***
***காற்றினும் கடிது ஆவன, கதிர் மணி நெடுந் தேர்***
***ஆற்று, கொய் உளைப் புரவியின் சிரங்களும் அறுத்தான்.***

***மாற்று வெஞ்சிலை வாங்கினன்*** *- (மாற்றாக) பிறிதொரு கொடிய வில்லினை வளைத்தவனாய்;* ***வடிம்புடை நெடுநாண்*** *- தழும்பினைத் தரவல்ல நீண்ட நாணினை;* ***ஏற்றுறா முன்னம்*** *- (இராவணன்) ஏற்றுவதற்கு முன்பாக;* ***இடையறக் கணைகளால் எய்தான்*** *- (இராமபிரான் இராவணனின் வில்லானது) நடுவிலே முறிந்து போம்படி அம்புகளால் அடித்தான்;* ***காற்றினும் கடிது ஆவன*** *- (மேலும்) காற்றிலும் வேகமாகச் செல்வனவும்; கதிர்மணி நெடுந்தேர் - ஒளிமிக்க மாணிக்கங்கள் பதித்துச் செய்யப் பெற்றவையுமான பெரிய தேரினை;* ***ஆற்று*** *- சுமந்து ஓடுபவையுமான;* ***கொய்உளைப் புரவியின் சிரங்களும் அறுத்தான்*** *- கொய்யப்பெற்ற பிடரிகளையுடைய (தேர்க்) குதிரைகளின் தலைகளையும் அறுத்தெறிந்தான் (பெருமான்).*

***7258. மற்றும் வெம் படை வாங்கினன் வழங்குறாமுன்னம்,***
***இற்று அவிந்துக எரி கணை இடை அற எய்தான்;***
***கொற்ற வெண்குடை கொடியொடும் துணிபடக் குறைத்தான்;***
***கற்றை அம் சுடர்க் கவசமும் கட்டு அறக் கழித்தான்.***

***மற்றும்*** *- மேலும்;* ***வெம்படை வாங்கினன்*** *- (இராவணன்) (வேறொரு) கொடிய ஆயுதம் எடுத்து;* ***வழங்குறா முன்னம்*** *- விடுதற்கு முன்பேயே;* ***இற்று இடையற அவிந்து உக*** *- அது இடையிலேயே முழுதும் சிதைந்து விழுமாறு;* ***எரிகணை எய்தான்*** *- எரிகின்ற அம்பு ஒன்றினை (இராமபிரான்) எய்தான்;* ***கொற்ற வெண்குடை*** *- (மேலும் அம்புகளால்) வெற்றிக் குடை;* ***கொடியொடும் துணிபட*** *- (தன்) கொடியோடு துண்டிக்குமாறு;* ***குறைத்தான்*** *- வெட்டினான்;* ***கற்றை அம் சுடர்க் கவசமும்*** *- அழகிய ஒளிமிக உமிழும் கவசத்தையும்;* ***கட்டு அற அழித்தான்*** *- பூட்டு அற்று விழுமாறு சிதைத்தான்.*

***7259. மாற்றுத் தேர் அவண் வந்தன வந்தன வாரா,***
***வீற்று வீற்று உக, வெயில் உமிழ் கடுங் கணை விட்டான்;***
***சேற்றுச் செம் புனல் படு களப் பரப்பிடைச் செங்***

***கண்***
***கூற்றும் கை எடுத்து ஆடிட, இராவணன்***
***கொதித்தான்.****

**அவண்** - *அவ்விடத்து; மாற்றுத்தேர் வாரா வந்தன வந்தன - (வெவ்வேறு) மாற்றுத் தேர்கள் வாராமல் வருந்தோறும் வருந்தோறும்;* **வீற்று வீற்றுக** - *(அவை) துண்டு துண்டாகச் சிதறி விழ;* **வெயில் உமிழ் கடுங்கணை விட்டான்** - *ஒளிவிடும் கொடுங்கணைகளைச் செலுத்தினான் (பெருமான்);* **சேறு செம்புனல்** - *சேறாகிய குருதிப் புனலைக் கொண்ட;* **படுகளப் பரப்பிடை** - *போர்க்களப் பரப்பின் இடையே;* **செங்கண் கூற்றும்** - *(சினத்தினாலே) சிவந்த கண்களையுடைய யமனும்;* **கை எடுத்து ஆடிட** - *(மகிழ்ச்சியால்) கரங்களை உயர்த்திக் கூத்தாட;* **இராவணன் கொதித்தான்** - *(அது கண்டு பொறாமல்) இராவணன் (சினத்தால்) மனம் கொதித்தான்.*

***7260. மின்னும் பல் மணி மவுலிமேல் ஒரு கணை***
***விட்டான்;***
***அன்ன காய் கதிர் இரவிமேல் பாய்ந்த போர்***
***அனுமன்***
***என்னல் ஆயது ஓர் விசையினின் சென்று, அவன்***
***தலையில்***
***பொன்னின் மா மணி மகுடத்தைப் புணரியில்***
***வீழ்த்த,***

**மின்னும் பன்மணி பவுலிமேல்** - *ஒளிர்கின்ற பலமணிகள் பதித்த மகுடத்தின் மீது;* **ஒருகணை விட்டான்** - *ஓர் அம்பினை விடுத்தான்;* **அன்ன** - *அந்த அம்பு;* **காய்கதிர் இரவி மேல் பாய்ந்த போர் அனுமன் என்னல் ஆயது** - *வெய்யகிரணங்களையுடைய சூரியன் மீது தாவிச் சென்ற போர்த்திறம் மிக்க அனுமன் என்று கூறுமாறு;* **ஓர் விசையினில் சென்று** - *ஒப்பற்ற வேகத்தில் சென்று;* **அவன் தலையில்** - *அவனுடைய தலைமீதிருந்த;* **பொன்னின் மாமணி மகுடத்தை** - *பொன்னில் செய்து பெருமைக்குரிய நவமணிகள் பதிக்கப் பெற்ற கிரீடத்தை;* **புணரியில் வீழ்த்த** - *கடலிடை வீழ்த்தவே. (அடுத்த பாட்டில் தொடரும்).*

***7261. செறிந்த பல் மணிப் பெருவனம் திசை பரந்து எரிய,***
***பொறிந்தவாய், வயக் கடுஞ் சுடர்க் கணை படும்***
***பொழுதின்,***
***எறிந்த கால் பொர, மேருவின் கொடு முடி இடிந்து,***
***மறிந்து வீழ்ந்ததும் ஒத்தது, அவ் அரக்கன்தன்***
***மகுடம்.***

***வயக் கடுஞ் சுடர்க்கணை படும் பொழுதின்*** - வெற்றிக்குரிய கடிய ஒளிவீசும் இராமபிரானுடைய அம்பு பட்டபொழுது; ***செறிந்த பன்மணி*** - (மகுடத்தில்) பதிக்கப் பெற்றிருந்த பல மாணிக்கங்கள்; ***பெருவனம்*** - (என்னும்) பெருந்திரள்; ***பொறிந்த வாய் திசை பரந்து எரிய*** - திசைகள் தோறும் பரவி எரிவது போன்று ஒளிசிந்தி வீழ்ந்தனவாக; ***எறிந்தகால் பொர*** - வீசியடித்த வாயு மோதியபோது; ***மேருவின் கொடுமுடி*** - மேரு மலையின் உயர்ந்த சிகரமானது; ***இடிந்து மறிந்து வீழ்ந்ததும் ஒத்தது*** - உடைந்து மடங்கி (கடலில்) விழுந்ததையும் போன்றது; ***அவ்வரக்கன் தன் மகுடம்*** - அந்த இராவணனுடைய மகுடம்.

*வாயுவுக்கும் மேருமலைக்கும் இடையே நிகழ்ந்த பலப் போட்டியில், வாயு, மேருவின் ஒரு சிகரத்தைப் பிய்த்துக் கடலில் எறிந்தது. அதுவே இலங்கையாயிற்று என்பது புராண மரபு. ஆதலின், இராவணன் மகுடம் கடலில் வீழ்ந்ததற்கு, மேருவின் சிகரம் கடலில் வீழ்ந்ததனை உவமையாக்கினார். இதனை (கம்ப. 4763) கடல் தாவு படலத்தும் குறித்தார்.*

***7262. அண்டர் நாயகன் அடு சிலை உதைத்த பேர் அம்பு***
***கொண்டு போகப் போய்க் குரை கடல் குளித்த அக்***
***கொள்கை,***
***மண்டலம் தொடர் வயங்கு வெங் கதிரவன், தன்னை***
***உண்ட கோளொடும், ஒலி கடல் வீழ்ந்ததும் ஒக்கும்.***

***அண்டர் நாயகன்*** - தேவர் கோனாகிய இராமபிரானுடைய; ***அடுசிலை உதைத்த பேர் அம்பு*** - கொல்லும் வில்லானது விடுத்த பெருமைக்குரிய இராம பாணம்; ***கொண்டு போகப் போய்*** - உந்திச் சென்றதனால் சென்று; ***குரை கடல் குளித்த அக்கொள்கை*** - (அம்மகுடம்) ஒலிக்கும் கடலில் அழுந்திய அத்தன்மை; ***மண்டலம் தொடர்*** - வட்ட வடிவம் பொருந்திய; ***வயங்கு வெங்கதிரவன்*** - ஒளிமிகும் வெய்ய கதிர்களையுடைய சூரியன்; ***தன்னை உண்ட*** - தன்னை விழுங்கிய; ***கோளொடும் ஒலிகடல் வீழ்ந்ததும் ஒக்கும்*** - கேது என்னும் கோளோடு ஒலி கடலில் வீழ்ந்ததையும் ஒக்கும்.

*சூரியன் கிரகணம் பற்றிய நிலையில் கடலிடை மறைவதும் உண்டாதலின், இராமபாணம் தூக்கிச் சென்ற இராவணன் மகுடம் கடலில் வீழ்ந்து மறைவது அதற்கு உவமையாயிற்று. இராவணன் மகுடம் சூரியனுக்கும், இராம சரம் கேது எனும் செம்பாம்பிற்கும் உவமைகள் ஆயின. தற்குறிப்பேற்ற அணி.*

*இராவணன் மகுடம் இழந்து நாணி நிற்றல்*

***7263. சொல்லும் அத்தனை அளவையில் மணி முடி***

**துறந்தான்;**
**எல் இமைத்து எழு மதியமும் ஞாயிறும் இழந்த**
**அல்லும் ஒத்தனன்; பகலும் ஒத்தனன்; அமர்**
**பொருமேல்,**
**வெல்லும் அத்தனை அல்லது, தோற்றிலா விறலோன்.**

**அமர் பொருமேல்** - *போரிட்டான் என்றால்;* **வெல்லும் அத்தனை அல்லது** - *வெல்லுமளவே அன்றி;* **தோற்றிலா விறலோன்** - *தோல்வியையே யறியாத வலியோனாகிய இராவணன்;* **சொல்லும் அத்தனை அளவையின்** - *சொல்லும் பொழுதிற்குள்;* **மணி முடி துறந்தான்** - *(தன்) மணி மகுடங்களை (இராமசரத்தால்) இழந்து போனான்;* **எல் இமைத்து எழு மதியமும்** - *ஒளி உமிழ்ந்து எழுகின்ற சந்திரனையும்;* **ஞாயிறும்** - *சூரியனையும்;* **இழந்த** - *முறையே இழக்கப் பெற்ற;* **அல்லும் ஒத்தனன் பகலும் ஒத்தனன்** - *இரவினையும் பகலினையும் நிகர்த்து விளங்கினான்.*

***7264. மாற்ற அருந் தட மணி முடி இழந்த வாள்***
***அரக்கன்,--***
***ஏற்றம் எவ் உலகத்தினும் உயர்ந்துளன்எனினும்,***
***ஆற்றல் நல் நெடுங் கவிஞன் ஓர் அங்கதம் உரைப்ப,***
***போற்ற அரும் புகழ் இழந்த பேர் ஒருவனும்--***

**போன்றான்.** **மாற்றருந் தடமணிமுடி** - *ஒப்பு உரைக்க இயலாத பெரிய மணிகள் பதித்த மகுடத்தை;* **இழந்த வாள் அரக்கன்** - *(இராமன் அம்பால் இமைப்பொழுதில்) இழந்து விட்ட இராவணன்;* **ஏற்றம் எவ்வுலகத்தினும் உயர்ந்துளன் எனினும்** - *பெருமையால் எல்லா உலகங்களிலும் மேம்பட்டுள்ளான் என்றாலும்;* **ஆற்றல் நல் நெடுங்கவிஞன்** - *(வாழ்வுறவும் தாழ்வுறவும் செய்விக்க வல்ல) ஆற்றல் சான்ற நற்பெருங் கவிஞன் ஒருவன்;* **ஓர் அங்கதம் உரைப்ப** - *ஓர் அங்கதச் செய்யுளை உரைத்தவுடன்;* **போற்ற அரும் புகழ் இழந்த** - *போற்றுதற்கு அரிய போர்க்குரிய புகழ் அனைத்தையும் இழந்துவிட்ட;* **ஒருவனும் போன்றான்** - *ஒருவனைப் போலவும் ஆனான்.*

*அங்கதம் - வசைப் பாட்டு. அதில் வல்லவர்களை ஆற்றல் நெடுங்கவிஞன் என்றார். "அங்கதந்தானே அரில்தவத் தெரியின் செம்பொருள் பழிகரப்பு என இருவகைத்தே" (தொல். செய்: 124) "செம்பொருளாயின வசையெனப்படுமே" (தொல். செய்.125); மொழி கரந்து சொல்லின் அது பழிகரப்பாகும் (தொல். சொல்.126) என வரும் தொல்காப்பிய நூற்பாக்களாலும் அவற்றின் உரைகளாலும் அங்கதம் பற்றிய விளக்கம் அறியலாம். "ஏந்திய கொள்கையார் சீறின் இடை முறிந்து வேந்தனும் வெந்து கெடும்" (குறள். 899) எனும் வள்ளுவர் வாய் மொழியினையும் அதற்குப் பரிமேலழகர் உரையினையும் உணர்க. "நந்திகலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்" (தனிப்பாடல்) என்பதும் இங்கு உணர்தற்பாலது. மணி மகுடம் பறி*

*போன இராவணன் அங்கதப் பாடலால் புகழ் அழிந்த ஒருவனை ஒத்திருந்தான். உவமை அணி.*

***7265. 'அறம் கடந்தவர் செயல் இது' என்று, உலகு எலாம் ஆர்ப்ப,***
***நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட, நின்றான்--***
***இறங்கு கண்ணினன், எல் அழி முகத்தினன், தலையன்,***
***வெறுங் கை நாற்றினன், விழுதுடை ஆல் அன்ன மெய்யன்.***

***இறங்கு கண்ணினன் தலையன்*** - *(மணிமுடியோடு செருக்கனைத்தும் இழந்ததனால்) கீழ்நோக்கிய பார்வையினையும் தலையினையும் உடையவனும்;* ***எல் அழி முகத்தினன்*** - *ஒளியிழந்த முகத்தினையுடையவனும்;* ***வெறுங்கை நாற்றினன்*** - *(கருவிகள் இழந்த) கைகளைத் தொங்க விட்டவனும்;* ***விழுதுடை ஆல் அன்ன மெய்யன்*** - *(அதனால்) விழுது தொங்குகின்ற ஆலமரம் போன்ற மேனியினையுடையவனுமான இராவணன்;* ***'அறம் கடந்தவர் செயல் இது' என்று உலகு எலாம் ஆர்ப்ப*** - *அறத்தினை மீறிய தீயோர்களின் செயல்கள் இப்படித்தான் முடியும் என்று உலகில் உள்ளோர் எல்லோரும் ஆரவாரமிட்டுக்கூற;* ***நிறம் கரிந்திட*** - *தன் நிறம் (பொலிவிழந்து) கரிந்து போக;* ***விரல் நிலம் கிளைத்திட நின்றான்*** - *கால் விரல்களால் நிலத்தைக் கிளறிய வண்ணம் நின்றான்.*

*தோற்று நாணி நிற்கும் ஒரு பெருவீரனின் தோற்றத்தை அவ்வந்நிலைகட்கேற்ற மெய்ப்பாடுகளுடன் இப்பாடல் காட்டுகிறது. பத்து முகங்களிலும் ஒளி இழந்ததால் 'எல் அழி முகத்தினன்' என்றும் ஆயுதங்கள் இழந்ததால் வெறுங்கை நாற்றினன்' என்றும் உரைத்தார். ஆயுதமின்றிக் கைகள் இருபதும் தொங்கிக் கிடக்கும் தோற்றம் 'விழுதுடை ஆல் அன்ன மெய்யன்' ஆயிற்று. அறங்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை நின்றாருள் பேதையார் இல் (குறள். 142) என்பது அறநூல் கூற்றாதலின் முன்னர் இதனைக் கூற அஞ்சிய உலகம் இப்போது துணிந்து கூறியதால், 'அறங்கடந்தவன் செயல் இது' என்று உலகெலாம் ஆர்ப்ப என்றார்.*

### *இராமன் அறிவுரை கூறி, 'இன்று போய், நாளை வா' எனல்*

***7266. நின்றவன் நிலை நோக்கிய நெடுந்தகை, இவனைக்***
***கொன்றல் உன்னிலன், 'வெறுங் கை நின்றான்' எனக் கொள்ளா;***
***'இன்று அவிந்தது போலும், உன் தீமை' என்று, இசையோடு***
***ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான்:***

***நின்றவன் நிலை நோக்கிய நெடுந்தகை*** - *(நிலம் கிளைத்து நின்றவனாகிய) இராவணனது (அவல) நிலையினைக் கண்ணுற்ற பெரும்பண்பினனாகிய இராமபிரான்;* ***வெறுங்கை நின்றான்*** - *(கருவி ஏதுமின்றி) வெறுங்கையோடு நிற்கின்றான்;* ***எனக் கொள்ளா*** - *என்று மனத்துட்கொண்டு;* ***இவனைக் கொன்றல் உன்னிலன்*** - *இவனைக் கொல்ல நினையாதவனாய்;* ***இன்று உன் தீமை அவிந்தது போலும்*** - *இன்றோடு உன் தீய செயல்கள் அழிந்துவிட்டன போலும்;* ***என்று இசையோடு*** - *என்று (உலகு உள்ளளவும் நிற்கும்) புகழோடு;* ***ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான்*** - *பொருந்த வந்தவையான இவ்வாசகங்களை உரைப்பான் ஆயினான்.*

*கொல்லல் என்பது செய்யுள் ஆதலின் எதுகை நோக்கிக் கொன்றல் என வந்தது. நிராயுதனாய் நிற்பவன் பகைவனே யாயினும் இரக்கத்திற்குரியவன் என நினைந்ததால் இராமனை "நெடுந்தகை" என்றழைத்து மகிழ்கிறார். தாடகை பெண் எனக் கண்டு, கொல்லத் தயங்கிய போது, "பெண் என மனத்திடைப் பெருந்தகை நினைத்தான்' (கம்ப. 374) என்றதும் காண்க. இராவணன் உள்ளத்தில் பாவத்தீயாகிய காமத்தீ ஆணவத்தீ முதலிய தீக்கள் எரிந்து கொண்டிருந்தனவாதலின், "இன்று அவிந்தது போலும் உன் தீமை?" என்று பெருமான் அழகுறக் கேட்டான்.*

***7267. 'அறத்தினால் அன்றி, அமரர்க்கும் அருஞ் சமம் கடத்தல்***
***மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி;***
***பறத்தி, நின் நெடும் பதி புகக் கிளையொடும்; பாவி!***
***இறத்தி; யான் அது நினைக்கிலென், தனிமை கண்டு இரங்கி.***

***அறத்தினால் அன்றி*** - *(இராமபிரான் இராவணனை நோக்கி) அறநெறியினால் அல்லாமல்;* ***மறத்தினால்*** - *பாவ நெறியினால்;* ***அருஞ்சமர் கடத்தல்*** - *அரிய போர்களில் வெல்லுதல்;* ***அமரர்க்கும் அரிது*** - *தேவர்களுக்கும் இயலாததாகும்;* ***என்பது*** - *என்பதனை;* ***மனத்திடை வலித்தி*** - *உள்ளத்திலே உறுதியாகப் பதித்துக் கொள்க;* ***பாவி!*** - *பாவச் செயல்கள் புரிந்தவனே!;* ***கிளையொடும் நின் நெடும் பதிபுக*** - *உன் சுற்றத்தாரொடும் பெரிய ஊருக்குட் செல்ல;* ***பறத்தி*** - *விரைகிறாய்;* ***இறத்தி*** - *நீ இப்போது இறப்பாய்;* ***தனிமை கண்டிரங்கி யான் அது நினைக்கிலென்*** - *நிராயுதபாணியாக நிற்கும் அவலம் கண்டு இரங்கி உன்னைக் கொல்வதனை நான் நினைக்க வில்லை.*

*எதிரிக்கு ஒரு துன்பம் வந்தவிடத்து, தக்க சமயம் வந்தது என்று அவனைக் கொல்லாது உபகாரம் செய்து உயிருடன் அனுப்புதல் பேராண்மை என்பதாகும். "பேராண்மை என்பதறுகண் ஒன்று உற்றக்கால், ஊராண்மை மற்றதன் எஃகு" என்ற குறளும் (773) அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையும் இங்கும் பின்னும் (7271) நினைக.*

*7268. 'உடைப் பெருங் குலத்தினரொடும், உறவொடும், உதவும்*
***படைக்கலங்களும், மற்றும் நீ தேடிய பலவும்,***
***அடைத்து வைத்தன திறந்துகொண்டு ஆற்றுதிஆயின்,***
***கிடைத்தி; அல்லையேல், ஒளித்தியால்; சிறு தொழில் கீழோய்!***

***சிறுதொழில் கீழோய்*** - *இழிசெயல்கள் புரியும் கீழ்மகனே!;* ***உடைப் பெருங் குலத்தினரொடும்*** - *உன்னுடைய பேரினத்தவ ரோடும்;* ***உறவொடும்*** - *சுற்றத்தாரோடும்;* ***உதவும் படைக்கலங்களும்*** - *(உனக்கு இனி) உதவவல்ல படைக்கருவிகளையும்;* ***மற்றும் நீ தேடிய பலவும்*** - *மற்றும் நீ தேடிப் பல இடங்களில் வைத்துள்ள சேனைகளையும்;* ***அடைத்து வைத்தன திறந்து கொண்டு*** - *நகரின் உள்ளே அடக்கி வைத்துள்ள உன் பலப்பொருள்கள் யாவற்றையும் திறந்து கூட்டிக்கொண்டு;* ***ஆற்றுதியாயின்*** - *போர் புரியும் ஆற்றல் உடையவன் நீயானால்;* ***கிடைத்தி*** - *(போர்க்கு வந்து) கிட்டுவாயாக;* ***அல்லையேல் ஒளித்தி*** - *உனக்கு அந்த ஆற்றல் இல்லையாயின் கோட்டைக்குள் ஒளிந்து கொள்; (என்றான் இராமபிரான்).*

*பிறர் மனை நயத்தல் முதலிய புன் செயல் புரிந்தமையால் இராவணனை, சிறு தொழிற் கீழோய்! என்றார். "ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி" (குறள். 137) என்பர் வள்ளுவப் பெருந்தகை. "அறவையாயின் நினது எனத்திறத்தல்; மறவையாயின் போரொடு திறத்தல்" (புறம். 44) என்னும் புறப்பாடல் அடிகள் கவிஞர்க்கு இங்கு நினைவு வந்திருத்தல் வேண்டும் குலத்தினர்- அரக்க இனத்தினர். உறவு-தம்பி, மக்கள் முதலியோர்; படைக்கலங்கள் - வில், வேல், ஈட்டி, தோமரம் முதலியவை. மற்றும் நீ தேடிய பலவும் என்றது - தேர் முதலிய நால்வகைப் படைகளையும் மூலபலப் படை முதலியவற்றையும், "ஆற்றுதியாயின் கிடைத்தி; அல்லையேல் ஒளித்தி" - சந்த நயம் சுவைத்து மகிழ்க. தறுகண்மை, இசைமை அடியாகப் பிறந்த பெருமிதத்தைச் சார்ந்தன இராமனது உரைகள்.*

*7269. 'சிறையில் வைத்தவள்தன்னை விட்டு, உலகினில் தேவர்*
***முறையில் வைத்து, நின் தம்பியை இராக்கதர் முதல் பேர் இறையில் வைத்து, அவற்கு ஏவல் செய்து இருத்தியேல், இன்னும்,***
***தறையில் வைக்கிலென், நின் தலை வாளியின் தடிந்து.***

***சிறையில் வைத்தவள் தன்னை விட்டு*** - *உன்னால் சிறை வைக்கப்பட்டுள்ள சீதாதேவியினை விடுதலை செய்து;* ***நின் தம்பியை*** - *உனக்குப் பின் பிறந்தவனான தம்பி வீடணனை;* ***உலகினில் தேவர் முறையில் வைத்து*** - *உலகின் கண் தேவராகிய*

*அந்தணர் தகுதியில் வைத்து;* **இராக்கதர் முதல் பேர் இறையில் வைத்து** *- இராக்கதர்க்கு முதல்வனாகும் பேரரசப் பதவியில் வைத்து;* **அவற்கு ஏவல் செய்து இருத்தியேல்** *- அவ்வீடணனுக்கு ஏவல் பணிபுரிந்து இருப்பாயானால்;* **இன்னும்** *- (இப்போது மட்டுமன்றி) இனிமேலும்;* **நின்தலை வாளியின் தடிந்து** *- உன்னுடைய தலையை (என்) அம்பால் துண்டித்து;* **தரையில் வைக்கிலென்** *- தரையின் மேல் வைக்க மாட்டேன்.*

*இதுவும் தறுகண்மையால் வந்த பெருமிதம். உலகினில் தேவர் - பூசுரர் எனப்படும் அந்தணர்.*

***7270. 'அல்லையாம்எனின், ஆர் அமர் ஏற்று நின்று ஆற்ற***
***வல்லையாம்எனின், உனக்கு உள வலி எலாம்***
***கொண்டு,***
***"நில், ஐயா!" என நேர் நின்று பொன்றுதிஎனினும்,***
***நல்லை ஆகுதி; "பிழைப்பு இனி உண்டு" என***
***நயவேல்.***

**அல்லையாம் எனின்** *- (நான் மேலே கூறிய வண்ணம் செய்ய) விரும்பவில்லையெனில்;* **ஆர் அமர் ஏற்று நின்று** *- அரிய போரை மேற்கொண்டு;* **ஆற்றவல்லையாம் எனில்** *- போர்புரிய வல்லமையுடையாய் என்றால்;* **உனக்கு உள வலி எலாம் கொண்டு** *- உனக்கு உள்ள ஆற்றல் அனைத்தையும் மேற்கொண்டு;* **நில் ஐயா என** *- 'எதிர்த்து நில் ஐயா' என்று (என்னிடம்) கூறி;* **நேர்நின்று பொன்றுதி** *- என் எதிரே நின்று போரிட்டு ஒழிவாயாக;* **எனினும்** *- அவ்வாறு போரிட்டு ஒழிந்தாய் ஆயினும்;* **நல்லை ஆகுதி** *- நல்லவன் ஆவாய்;* **இனிப் பிழைப்பு உண்டு என நயவேல்** *- (ஆனால்) இனி, (போர்புரிந்து) பிழைத்துக் கொள்ளலாம் என்று மட்டும் விரும்பி நில்லாதே. தன் எதிரே நின்று பொருது அழிந்தாலும் வீரருக்குரிய துறக்கமும், வீரன் என்ற பொன்றாப் புகழும் கிடைக்குமாதலின் "பொன்றுதி எனினும் நல்லை ஆகுதி" என்றான். வெற்றியும் தோல்வியும் வீரர்க்கு மாறி மாறி வரும் இயல்பினவாதலின், இப்பொழுது தோற்ற நான் இலங்கைக்குட் சென்று, மீண்டும் படையொடு வந்து வெல்வேன் என்பதை மட்டும் மனத்தில் நயக்காதே; நீ மாள்வது உறுதி எனப் பெருமான் தெளிவுறுத்தியவாறு.*

***7271. 'ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த***
***பூளை ஆயின கண்டனை; இன்று போய், போர்க்கு***
***நாளை வா' என நல்கினன்--நாகு இளங் கமுகின்***
***வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.***

***ஆள் ஐயா*** - *அரக்கரை ஆள்கின்ற ஐயா;* ***உனக்கு அமைந்தன*** - *உனக்குத் துணையாக அமைந்திருந்த படைகள் அனைத்தும்;* ***மாருதம் அறைந்த பூளை ஆயின கண்டனை*** - *பெருங்காற்றினால் தாக்கப்பட்ட பூளைப் பூக்களைப் போல சிதைந்து போயினமையைக் கண்டாய்;* ***இன்று போய் நாளை போர்க்கு வா*** - *இன்று உன் இலங்கையரண்மனைக்குச் சென்று, (மேலும் போர்புரிய விரும்பினால்) போர்க்கு நாளைக்கு வருவாயாக;* ***என*** - *என்று;* ***நல்கினன்*** *-(இராவணனுக்கு) அருள் புரிந்து விடுத்தான்; (யார் என்னில்)* ***நாகு இளங்கமுகின்*** - *மிகவும் இளைய கமுக மரத்தின்மீது;* ***வாளை தாவுறும் கோசல நாடுடை வள்ளல்*** - *வாளை மீன்கள் தாவிப் பாயும் (நிலம், நீர்வளம் மிக்க) கோசல நாட்டுக்கு உரிய வள்ளலாகிய இராமபிரான்.*

*இராவணன் நால்வகைப் படைகளின் அழிவிற்குப் பூளைப் பூவை உவமையாக்கினார். "காற்றிடைப் பூளை கரந்தென அரந்தையுறக் கடல் அரக்கர் சேனை, கூற்றிடைச் செல்லக் கொடுங்கணை துரந்த கோலவில் இராமன் தன் கோவில்" (பெரிய திரு. 4:10:6) எனத் திருமங்கையாழ்வார் மொழிந்துள்ள உவமை தம் சிந்தை கவர்ந்தமையால், அவர் மொழியைப் பொன்னே போல் போற்றி, "மாருதம் அமைந்த பூளையாயின்" என்று மொழிந்தார். "பொங்குகோபம் சுடப்பூளை வீ என்ன' (கம்ப. 339); "பூளை வீந்தெனப் போயின" (கம்ப. 5973) என மேலும் கூறுவார். தன் மனையாட்டியை வஞ்சித்து இன்னும் சிறை வைத்துள்ள மாபாதகன் நிராயுதனாகக் கண்முன் நிற்பது அறிந்தும், அவனைக் கொல்லாது, "இன்று போய்ப் போர்க்கு நாளை வா" என நவின்ற அருள் மனம் சான்றோர் பலரின் உள்ளங் கவர்ந்ததாம். இதுவே தழிஞ்சி எனும் புறப்பொருள் துறையாயிற்று. "அழியுநர் புறக்கொடை அயில்வாள் ஓச்சாக் கழிதறுகண்மை காதலித்து உரைத்தன்று" (புறப், வெண்.72) என இதனை ஐயன் ஆரிதனார் போற்றுவார். பேராண்மை என்ப தறுகண்; ஒன்று உற்றக்கால் ஊராண்மை மற்று அதன் எஃகு" (குறள் 773) என வள்ளுவரும் போற்றுவார். இதற்கு, உரை வரைந்த பரிமேலழகர், "ஊராண்மை - உபகாரியாம் தன்மை. அஃதாவது இலங்கையர் வேந்தன், போரிடைத் தன் தானை முழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை, மேற்செல்லாது, "இன்று போய் நாளை நின் தானையொடு வா" என விட்டாற்போல்வது" என்று, இந்த நிகழ்ச்சியைச் சுட்டி விளக்கந்தருவார். திருவாய் மொழிஈட்டில் இந்நிகழ்ச்சி நம்பிள்ளையின் உள்ளங்கவர்ந்துள்ளமையை கீழ்வரும் பகுதி காட்டுகிறது. இறைவன் உயிர்களை அழிக்க நினைப்பதில்லை; வாழ்விக்கவே விரும்புகின்றான்; அழித்தே தீருவேன் என்று பிடிவாதம் பிடிக்கும் உயிரை, வேறு வழியின்றிக் கண்ணும் கண்ணநீருமாய் அழிக்கின்றான் என நம்பிள்ளை கூறும் பகுதி இது. "சிலரை அழியச் செய்ய" என்றால் ஆற்றல் இல்லாதவனாக இருக்கையைத் தெரிவித்தபடி, "இராவணன் தானே ஆகிலும் இவனை அழைத்து கொண்டுவாரும்" என்னுமவன் அன்றோ, கடலை அணை செய்து, ஊரை முற்றுகை இட்டு, பின்னை அங்கதப் பெருமாளையும் புகவிட்டு, கையிலே வந்து அகப்பட்டவனை, "இராட்சசேஸ்வரனான இராவணனே! போரில் அடிபட்ட நீ போ என்று அனுமதி தருகிறேன். இலங்கைக்குள் சென்று சிரமத்தைப் போக்கிக்கொண்டு, வில்லோடும் தேரோடும் கூடினவனாய் மீண்டும் வா; அப்போது தேரில் இருக்கிற நீ என் வலிமையைப் பார்ப்பாய்" என்று தப்பவிட்டது, இன்னம் ஒருகால் அவன் மனம் திருந்தி, தவறு உணர்வானோ என்ற ஆசையால், அவன் அதர்மத்தில் முற்றி நின்று அழிந்தே தீருவேன் என்று மறுநாளும் வந்தபோது கண்ணும் கண்ணநீருமாய் அன்றோ கொன்றது" (திருவாய்: (ஈடு. 9:2:10) வீடணனேயாயினும் இராவணனே ஆயினும் அழைத்துக் கொண்டு வா என்று*

*கருணை அலையெறியக் காத்திருக்கிறான் அவன். "நான் இரண்டு துண்டாக வெட்டுப் படக் கடவேன்; அப்பொழுதும் வணங்கமாட்டேன்" என்னும் உறுதியோடு நிற்கில், முடித்து விடுவான்" (திருவாய். ஈடு 1:7:10) என்பது நம்பிள்ளையின் திருவாக்கு. எல்லாத்தானத்திலும் சிறந்தது உயிரைக் கொடுத்தலாம். அப்பெறற்கரும் உயிரைக் கொல்லக் காரணம் பல இருந்தும் அவனுக்குத் தானமாகத் தந்தான் ஆதலின், "வள்ளல்" என்றார். எளிய வாளை, உயர்ந்த கமுகின் மேல் அஞ்சாது தாவி மோதும் எனக் கோசல நாட்டில் நில நீர்வளம் குறிப்பினும், அந்நாட்டு அஃறிணைப் பொருள்களே அத்தன்மையினை யுடையவையாயின், அந்நாட்டுத் தலைவன் அஞ்சுவனோ! என்னும் குறிப்புப் பொருளையும் கொண்டு நின்றது "நாகிளங்கமுகின் வாளை தாவுறும் கோசல நாடுடை வள்ளல்" என்னும் தொடர். இராவணன் ஒருகால் நல்லுணர்வுற்று சீதையைத் தந்து சரண்புகுவான் எனில், இலங்கையரசினைப் பெருமான் முன்பே வீடணனுக்குத் தந்து விட்ட நிலையில், அயோத்தி நகரத்தை இராவணனுக்குத் தருங் கருத்தை இராமபிரான் கொண்டிருந்தான் எனுங்கருத்தில், "கோசல நாடுடை வள்ளல்" எனக் குறித்தார். நல்கினன் வள்ளல் எனும் சொல்லாட்சியினையும் உணர்க.*

## கும்பகருணன் வதைப் படலம்

*முதல் நாட்போரில் தோற்று மெலிந்த இராவணன் இராமனின் அறக்கருணையால் இலங்கை திரும்பினான். பின் நாற்றிசைகளிலுள்ள அரக்கர் சேனையைத் திரட்டத் தூதுவரை அனுப்பினான். பின்பு குலமுதல்வனான மாலியவானிடம் மனம் திறந்து பேசினான். இடையில் புகுந்த மகோதரன் கும்பகருணனின் வலிமையை நினைவூட்டிப் போரினைத் தொடர்ந்து நடத்துமாறு கூறினான். இராவணன் கும்பகருணனைத் துயிலெழுப்பி மானிடர் இருவர் கோநகர்ப்புறம் முற்றிப்பெற்ற வெற்றியை அழிக்குமாறு கூறினான். பாசம் அறத்தினும் பெரிதென எண்ணிய கும்பகருணன் போர்க்களம் புக்கான். ஆக்கிய செருவெலா மாக்கித் தமயனையும் தம்பியையும் காப்பாற்ற முனைந்து இராம பாணத்தால் விழுந்தான். உயிரொடுங்கினும் புகழொடுங்காமான வீரனின் செயல்கள் இப்பகுதியில் விளக்கம் பெறுகின்றன. மனித உறவுகளையும் மனித மனவாழங்களையும் இப்பகுதியில் கல்வியிற்பெரிய கம்பர் பாசமும், அறமும், சோகமும் கலந்து விவரித்துள்ளார்.*

### *இராவணன் இலங்கை மீளுதல்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

*7272.* ***வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும்,***
***நாரத முனிவற்கு ஏற்ப நயம் பட உரைத்த நாவும்,***
***தார் அணி மவுலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும்,***
***வீரமும், களத்தே போட்டு, வெறுங் கையே மீண்டு போனான்.***

**வாரணம் பொருதமார்பும்** - *திசையானைகளின் எதிர் சென்று போரிட்டுத் தந்தங்கள் துளைத்த மார்பும்;* **வரையினை எடுத்த தோளும்** - *கைலாயமலையை அள்ளி எடுத்த வலிமிகு தோளும்;* **நாரத முனிவற்கேற்ப நயம்பட உரைத்த நாவும்** - *நாரத முனிவன் நன்று நன்று என்று ஏற்குமாறு சாமவேதத்தை இசைநயத்தோடு* **பாடிய நாவும்;** *தாரணி மௌலி பத்தும் - பத்துத் தலைகளிலணிந்திருந்த மாலையணிந்த அரசச் சின்னமான மணிமுடி பத்தும்;* **சங்கரன் கொடுத்த வாளும்** - *சிவபிரான் தவஆற்றல் கண்டு கொடுத்த வாளும்;* **வீரமும் களத்தே போட்டு** - *தன்னிடம் என்றும் நீங்காமல் இருந்த வீரப் பண்பினையும் போர்க்களத்திலே போட்டு விட்டு;* **வெறுங்கையே மீண்டு போனான்** - *தன்னிடமிருந்த பிறிதின் கிழமைப் பொருள்களையும் தற்கிழமையாய உறுப்பு, குணம் ஆகியவற்றையும் இழந்து வெறுங்கையனாய் இலங்கை நகருக்கு மீண்டும் போனான்.*

*மார்பும் தோளும் நாவும் வீரமும் இராவணனிடம் இருந்த தற்கிழமைப் பொருள்கள். இப்பொருள்களை எந்நிலையிலும் எங்கும் போட்டு விடமுடியாது. இங்குக்கவிஞர் வீரமிழந்த இராவணன் பெற்ற முதல் தோல்வியின் பாதிப்பு அவனை எந்த அளவு பாதித்துள்ளது என்ற நுண் பொருளை விளக்குவதற்காக*

*நுண்பொருளாகிய வீரம், பருப்பொருள்களான மார்பு தோள் நா ஆகியவற்றின் துணைகொண்டு கவிதையை அமைத்துள்ளார்.*

*7273.* ***கிடந்த போர் வலியார்மாட்டே கெடாத வானவரை எல்லாம்***
***கடந்து போய், உலகம் மூன்றும் காக்கின்ற காவலாளன்,***
***தொடர்ந்து போம் பழியினோடும், தூக்கிய கரங்களோடும்,***
***நடந்துபோய், நகரம் புக்கான்; அருக்கனும் நாகம் சேர்ந்தான்.***

***கிடந்தபோர் வலியார் மாட்டே*** *- போர் செய்யும் வலிமை பொருந்திய பெருவலியுடையவர்களிடம்;* ***கெடாத வானவரை யெல்லாம்*** *- தோல்வியடையாத தேவர்களை எல்லாம்;* ***கடந்து போய்*** *- வென்று மேல் சிறந்து;* ***உலக மூன்றும் காக்கின்ற காவலாளன்*** *- மூவுலகங்களையும் காக்கும் காவல் தொழிலுடைய மால்போல் விளங்கும் இராவணன்;* ***தொடர்ந்து போம் பழியினோடும்*** *- என்றும் அழியாது பின்பற்றி வருகின்ற பழியுடனும்;* ***தூக்கிய கரங்களோடும்*** *- எதிரியை வெல்ல முடியாது வீணாகத்தொங்கும் இருபது கரங்களோடும்;* ***நடந்து போய் நகரம் புக்கான்*** *- நாணத்தோடு நடந்து போய் இலங்கை நகர் புக்கான்;* ***அருக்கனும் நாகம் சேர்ந்தான்*** *- சூரியன் அத்தகிரியை அடைந்தான்.*

*இங்கு சூரியன் மறைதல் என்ற காலம் சார் நிகழ்ச்சியின் மூலம் கவிஞர் இராவணனின் வீரமும் புகழும் மறைதல் என்ற கருத்தை வெளிப்படுத்தி உள்ளார்.*

*7274.* ***மாதிரம் எவையும் நோக்கான், வள நகர் நோக்கான், வந்த***
***காதலர்தம்மை நோக்கான், கடல் பெருஞ் சேனை நோக்கான்,***
***தாது அவிழ் கூந்தல் மாதர் தனித் தனி நோக்க, தான் அப்***
***பூதலம் என்னும் நங்கைதன்னையே நோக்கிப்***

***புக்கான். மாதிரம் எவையும் நோக்கான்*** *- தோற்று நாணி நகர் திரும்பும் இராவணன் தான் வென்ற திசைகளை நோக்கானாய்;* ***வளநகர் நோக்கான்*** *- களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவருமில்லாத வளநகரை நோக்கானாய்;* ***வந்த காதலர் தம்மை நோக்கான்*** *- வெற்றி பெற்று வந்தபோது வரவேற்றது போல் இப்போதும் வரவேற்க வந்த மக்களையும், மனைவியரையும் நோக்கானாய்;*

***கடல் பெருஞ்சேனை நோக்கான்*** - *புக்க போர் எல்லாம் வெல்ல உதவிய கடல் போல் பரந்த பெருஞ்சேனையை நோக்கானாய்;* ***தாது அவிழ் கூந்தல் மாதர்*** - *விரிந்த மலரணிந்த கூந்தலையுடைய மண்டோதரி முதலிய மனைவியர்;* ***தனித்தனி நோக்க*** - *இராவணனின் நிலை கண்டு தனித்தனியாகப் பார்க்க;* ***தான்*** - *இராவணன்;* ***அப்பூதலம் என்னும் நங்கை தன்னையே*** - *பூமி தேவி என்ற பெண்ணையே;* ***நோக்கிப் புக்கான்*** - *பார்த்த வண்ணம் நகரிலுள்ள அரண்மனை முற்றத்தில் புகுந்தான்.*

*தோல்வியால் ஏற்பட்ட நாணத்தால் தலை குனிந்து புக்க இராவணன் பூமிதேவி என்ற பெண்ணையே நோக்கி முகங்கவிழ்த்து வந்தான். உழுகின்ற கொழு முகத்தில் உதிக்கின்ற கதிரொளி போல் தொழுந்தகைய நன்னலத்துப் பெண்ணரசியாம் சீதை மீது கொண்ட காதல் நோயால் தோற்ற இராவணன் சீதை தோன்றிய பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிய நயம் காண்க. பிறவற்றை நோக்காது ஒன்றையே நோக்கினான் இராவணன் என்ற கருத்து அவன் மனக்குழப்பத்தையும் தோல்வியால் அடைந்த நாணத்தையும் விளக்கி நிற்கிறது. யாரையும் நோக்காது குனிந்து செல்லும் இராவணன் அங்கும் பூமகள் என்ற பெண்ணைப் பார்க்க நேர்ந்தது என்பது ஓர் நயம்.*

***7275. நாள் ஒத்த நளினம் அன்ன முகத்தியர் நயனம் எல்லாம்***
***வாள் ஒத்த; மைந்தர் வார்த்தை இராகவன் வாளி ஒத்த;--***
***கோள் ஒத்த சிறை வைத்து ஆண்ட கொற்றவற்கு, அற்றைநாள், தன்***
***தோள் ஒத்த துணை மென் கொங்கை நோக்கு அங்குத் தொடர்கிலாமை.***

***கோள் ஒத்த சிறை வைத்து ஆண்ட கொற்றவற்கு*** - *ஒன்பது கோள்களையும் ஒருங்கே சிறைவைத்து அடிமைப்படுத்தி ஆண்ட வெற்றி வீரனான இராவணனுக்கு;* ***அற்றை நாள்*** - *தோற்றுத் திரும்பிய அந்த நாளில்;* ***நாள் ஒத்த நளினம் அன்ன முகத்தியர்*** - *பகலில் ஒருசேர மலர்ந்த தாமரை மலர் போன்ற முகத்தினையுடைய மகளிரது;* ***நயனம் எல்லாம் வாள் ஒத்த*** - *கண்கள் எல்லாம் வாட்படை போல் துன்பத்தை மிகுவித்தன;* ***மைந்தர் வார்த்தை*** - *மக்களுடைய சொற்கள்;* ***இராகவன் வாளி ஒத்த*** - *இரகுகுல நாயகனின் அம்பு போல் துன்பம் தந்தன; இதற்கு காரணம் என்னையோ எனின்.* ***தோள் ஒத்த துணை மென் கொங்கை*** - *தோள் வலிக்குச் சார்ந்த மார்பில் அமைந்த இரட்டை மென் கொங்கைகளையுடைய வெற்றித் தெய்வமாகிய கொற்றவையின்;* ***நோக்கு அங்குத் தொடர்கிலாமை*** - *வெற்றி நோக்கு அவனிடத்தில் இதுவரை தொடர்ந்து இப்போது தொடர்கிலாமையேயாகும்.*

*கொற்றவையின் வெற்றி நோக்கால் இதுவரை முக்கணான் முதலினோரைப் புக்க போரெல்லாம் வென்று நின்ற இராவணன் தாயினும் தொழத்தக்காள் மேல் தங்கிய*

*காதல் நோயாலும், இராகவன் முனிவாலும் அவ்வெற்றி நோக்கை இழந்ததை ஆசிரியர் இப்பாடலில் குறிப்பிடுகிறார்.*

***7276. மந்திரச் சுற்றத்தாரும், வாணுதல் சுற்றத்தாரும்,***
***தந்திரச் சுற்றத்தாரும், தன் கிளைச் சுற்றத்தாரும்,***
***எந்திரப் பொறியின் நிற்ப, யாவரும் இன்றி, தான் ஓர்***
***சிந்துரக் களிறு கூடம் புக்கென, கோயில் சேர்ந்தான்.***

***மந்திரச் சுற்றத்தாரும்*** *- அடுக்கு மீது அடாதது என உரைக்கும் மந்திரத் துணையானவர்களும்;* ***வாணுதல் சுற்றத்தாரும்*** *- ஒளிபொருந்திய நெற்றியையுடைய மனைவியரும்;* ***தந்திரச் சுற்றத்தாரும்*** *- சேனைத்தலைவர்களாகிய துணைவரும்;* ***தன் கிளைச் சுற்றத்தாரும்*** *- உறவு முறையானவர்களும்;* ***எந்திரப் பொறியின் நிற்ப*** *- இதுவரை இராவணனிடம் காணாத தன்மை கண்டதால் இயந்திரத்தின் வன்மையால் இயங்கும் பொறி அவ் இயந்திர வன்மை தீர்ந்தவுடன் செயல் படாது நிற்றல் போல் நிற்க;* ***யாவரும் இன்றி*** *- ஒருவரும் பின் தொடரும் வலிமையின்றி அசையாது நிற்றலால் தனியாக;* ***தான் ஓர்*** *- இராவணன் ஒரு;* ***சிந்துரக் களிறு*** *- செம்பொடியை உடல் முழுதும் அணிந்த ஆண்யானை;* ***கூடம்புக்கென*** *- கொட்டாரம் சென்று சேர்வது போல்;* ***கோயில் சேர்ந்தான்*** *- அரண்மனையின் உட்புறம் சேர்ந்தான்.*

### *இராவணன் தூதரை அழைத்து வரக் கஞ்சுகியை ஏவல்*

***7277. ஆண்டு ஒரு செம் பொன் பீடத்து, இருந்து, தன்***
***வருத்தம் ஆறி,***
***நீண்டு உயர் நினைப்பன் ஆகி, கஞ்சுகி அயல்***
***நின்றானை,***
***'ஈண்டு, நம் தூதர்தம்மை இவ்வழித் தருதி'***
***என்றான்.***
***பூண்டது ஓர் பணியன், வல்லை, நால்வரைக்***
***கொண்டு புக்கான்.***

***ஆண்டு*** *- அவ்வரண்மனையிடத்தில்;* ***ஒரு செம்பொன் பீடத்து இருந்து*** *- செம்பொன்னால் செய்யப்பட்ட ஒப்பற்ற பீடத்தில் அமர்ந்து;* ***தன் வருத்தம் ஆறி*** *- போரில் ஏற்பட்ட உடல் வருத்தமும் தோல்வியால் ஏற்பட்ட மனவருத்தமும் ஓரளவு தணிந்தவுடனே;* ***நீண்டு உயிர் நினைப்பன் ஆகி*** *- இனிமேல் செய்ய வேண்டியதைப் பற்றி மிகப்பெருஞ் சிந்தனையுடையவன் ஆகி;* ***கஞ்சுகி அயல் நின்றானை*** *- அருகில் நின்றவனாகிய மெய்ப்பை புக்கவனாகிய மெய்க்காப்பாளனைப் பார்த்து;* ***ஈண்டு*** *- இப்போதே;* ***நம் தூதர் தம்மை*** *- நம் தூதுவர்களை;* ***இவ்வழித் தருதி என்றான்*** *- இந்த இடத்திற்கு அழைத்து வா என்று கட்டளையிட்டான்;* ***பூண்டதோர் பணியன் வல்லை*** *-*

*அப்பணி தலை மேற்கொண்ட கஞ்சுகி மேற்கொண்ட பணியினை முடித்து விரைவில்;* ***நால்வரைக் கொண்டு புக்கான்*** *- நான்கு தூதரை அழைத்து வந்தான்.*

*இப்பாடலில் உள்ள "நீண்டு உயர் நினைப்பன் ஆகி" என்ற தொடர் கவனத்தைக் கவருவது; இங்குப் பிறரிடம் கலந்து பேசுதல் இராவணனைப் பொறுத்த அளவு தன் முடிவைப் பிறர் ஏற்கச் செய்தல் என்பதற்கான சடங்காகவே அமைவதை யுணர்த்தவே கவிஞர் மேற்கண்ட தொடரைக் கையாண்டுள்ளார் போலும்.*

*தூதரிடம் எண்டிசைச் சேனைகளைக் கொணரப் பணித்தல்*

*7278.* ***மனகதி, வாயுவேகன், மருத்தன், மாமேகன் என்று இவ்***
***வினை அறி தொழிலர் முன்னா, ஆயிரர் விரவினாரை,***
***'நினைவதன் முன்னம், நீர் போய் நெடுந் திசை எட்டும் நீந்தி,***
***கனை கழல் அரக்கர் தானை கொணருதிர், கடிதின்' என்றான்.***

***வினை அறி தொழிலர்*** *- செய்யவேண்டிய செயலைச் செய்யவேண்டியவாறு செய்யும் செயல் அறிந்தவராய,* ***மனகதி, வாயு வேகன், மருத்தன், மாமேகன் என்று இவ்*** *- என்ற பெயருடைய இவர்கள்;* ***முன்னை ஆயிரர் விரவினாரை*** *- முதலாக வந்து சேர்ந்த ஆயிரக்கணக்காக வந்த தூதரை (நோக்கிய இராவணன்);* ***நினைவதன் முன்னம்*** *- நினைப்பு எழும் காலஅளவுக்குள்;* ***நீர் போய்*** *- நீங்கள் போய்;* ***நெடுந்திசை எட்டும் நீந்தி*** *- பெரிய எட்டுத் திசைகளையும் கடந்து;* ***கனைகழல் அரக்கர் தானை*** *- ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த அரக்கச் சேனைகளையெல்லாம்;* ***கடிதின் கொணருதிர் என்றான்*** *- விரைவில் அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று கட்டளையிட்டான்.*

*7279.* ***'ஏழ் பெருங் கடலும், சூழ்ந்த ஏழ் பெருந் தீவும், எண் இல்***
***பாழி அம் பொருப்பும், கீழ்பால் அடுத்த பாதாளத்துள்ளும், ஆழி அம் கிரியின் மேலும், அரக்கர் ஆனவரை எல்லாம்,***
***தாழ்வு இலிர் கொணர்திர்' என்றான்; அவர் அது தலைமேல் கொண்டார்.***

**ஏழ்பெருங்கடலும் சூழ்ந்த ஏழ் பெருந்தீவும்** - ஏழு பெருங்கடல்களால் சூழப்பட்ட ஏழு பெரிய தீவுகளிலும்; **எண் இல் பாழி அம் பொருப்பும்** - எண்ணி அளவிடமுடியாத அழகிய வலிய மலைகளிலும்; **கீழ் பால் அடுத்த பாதாளத்துள்ளும்** - கீழே உள்ள பாதாள உலகத்திலும்; **ஆழியம் கிரியின் மேலும்** - சக்கரவாளம் என்ற மலையின் மீதும் உள்ள; **அரக்கர் ஆனவரை எல்லாம்** - எல்லா அரக்கர்களையும்; **தாழ்வு இலிர் கொணர்திர் என்றான்** - காலம் தாழ்த்தாது அழைத்து வாருங்கள் என்று இராவணன் கூறினான்; **அவர் அது தலைமேல் கொண்டார்** - அத்தூதுவர், தலைவன் கட்டளையைத் தலை மேல் கொண்டனர்.

*அமளியில் இராவணன் வருந்தி இருத்தல்*

*7280.* ***மூவகை உலகுளோரும் முறையில் நின்று ஏவல்***
***செய்வார்,***
***பாவகம் இன்னது என்று தெரிகிலர், பதைத்து விம்ம,***
***தூ அகலாத வை வாய் எஃகு உறத் தொளைக்***
***கை யானை***
***சேவகம் அமைந்தது என்ன, செறி மலர் அமளி***
***சேர்ந்தான்.***

**முறையில் நின்று ஏவல் செய்வார்** - தங்களுக்கு உரிய முறைப்படி இட்ட ஏவலைச் செய்பவர்களாகிய; **மூவகை உலகுளோரும்** - விண், மண், பாதலம் என்ற மூன்று உலகத்தில் உள்ளவர்களும்; **பாவகம் இன்னது என்று தெரிகிலர்** - இராவணனுடைய மனக்கருத்து இதுவென அறியாதவர்களாகிப்; **பதைத்து விம்ம** - மனம் வருந்தி அழுது விம்ம; **தூ அகலாதவைவாய் எஃகு உறத்** - தசை நீங்காத கூரிய வேல் உடலில் ஆழமாகப் பாய்தலால்; **தொளைக்கையானை** - உட்புழை உடைய கையினையுடைய யானை; **சேவகம் அமைந்தது என்ன** - யானைக் கூடத்திற்குச் சென்று சேர்ந்ததுபோல; **செறிமலர் அமளி சேர்ந்தான்** - மலர் நிறைந்த மலர்ப் படுக்கையில் சேர்ந்தான்.

பாவகம் - மனக்கருத்து. தூ - தசை. சேவகம் - யானைக் கொட்டாரம்.

*7281.* ***பண் நிறை பவளச் செவ் வாய், பைந் தொடி, சீதை***
***என்னும்***
***பெண் இறைகொண்ட நெஞ்சில் நாண்***
***நிறைகொண்ட பின்னர்,***
***கண் இறை கோடல் செய்யான், கையறு கவலை***
***சுற்ற,***
***உள் நிறை மானம்தன்னை உமிழ்ந்து, எரி***

***உயிர்ப்பதானான்.***

***பண்நிறை பவளச் செவ்வாய்*** - *இனிய இசை போன்று பேசும் பவளம் போன்ற சிவந்த வாயினையும்;* ***பைந்தொடி சீதை*** - *பைம்பொன்னால் ஆன வளையல்களையும் அணிந்த சீதை;* ***என்னும் பெண் இறை கொண்ட நெஞ்சில்*** - *என்கின்ற பெண் தங்கி இடம் முழுதும் கொண்ட நெஞ்சத்தில்;* ***நாண் நிறை கொண்ட பின்னர்*** - *முதல் நாள் ஏற்பட்ட தோல்வி காரணமாகத் தோன்றிய நாணம் முழுதும் நிரம்பிய பின்னர்;* ***கண் இறை கோடல் செய்யான்*** - *சிறிதும் கண் துயிலாதவனாய்;* ***கையறு கவலை சுற்ற*** - *செயலறவும் கவலையும் சூழ;* ***உள்நிறை மானம் தன்னை*** - *தன் நெஞ்சில் சீதையிருந்த இடத்தில் நிரம்பிய மான உணர்வை;* ***உமிழ்ந்து எரி உயிர்ப்பதானான்*** - *வெளிப்படுத்த விரும்புபவன் போல் நெருப்பென பெருமூச்சு விட்டான்.*

*கண் இறை கோடல்-கண் சிறிதும் துயிலாமை.*

*7282.* ***வான் நகும்; மண்ணும் எல்லாம் நகும்;--நெடு***
***வயிரத் தோளான்--***
***நான் நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று, அதற்கு***
***நாணான்;***
***வேல் நகு நெடுங் கண், செவ் வாய், மெல் இயல்,***
***மிதிலை வந்த,***
***சானகி நகுவள்--என்றே நாணத்தால்***
***சாம்புகின்றான்.***

***நெடுவயிரத் தோளான்*** - *வயிரம் போல் உறுதி உள்ள நீண்ட திரள் தோள் இராவணன்;* ***வான் நகும்*** - *தான் வென்று நகைத்த வானவர் சிரிப்பர்;* ***மண்ணும் எல்லாம் நகும்*** - *மண்ணுலக மாந்தரும் பிறரும் சிரிப்பர்;* ***நான்நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று*** - *தான் வென்று சிரித்தற்குரிய பகைவர்களாகிய சிறுதொழில் மனிதர்கள் சிரிப்பர் என்று;* ***அதற்கு நாணான்*** - *எண்ணி அதற்கு நாணப்படாதவனாய்;* ***வேல் நகு நெடுங்கண்*** - *வேலை வென்றிட்ட நீண்ட கண்களையும்;* ***செவ்வாய்*** - *சிவந்த வாயினையும்;* ***மெல் இயல்*** - *மெத்தென்ற சாயலினையும் உடைய;* ***மிதிலை வந்த சானகி நகுவள்*** - *மிதிலையில் தோன்றிய சனகன் மகளாகிய சானகி எள்ளிச் சிரிப்பாள்;* ***என்றே நாணத்தால் சாம்புகின்றான்*** - *என்று எண்ணி எண்ணியே நாணத்தால் வாடினான்.*

*வான், மண் - இடவாகுபெயர்கள். இராவணனின் நினைவில் சீதையின் கண்ணும் வாயும் சாயலும் தோன்றுவதாகக் கவிஞர் குறிப்பிட்டுள்ளது ஆழ்பொருள் கொண்டதாகும். தன் தோல்வியைக் கண்ணால் பார்த்து வாயால் சிரித்து மெத்தென்ற உடல் சாயல் குலுங்கச் சீதை நகைப்பாளே என்ற எண்ணம் இராவணனது மனதில் தோன்றியதை இக்குறிப்பு உணர்த்தி நிற்கிறது.*

*மாலியவான் இராவணனிடம் வினவல்*

***7283. ஆங்கு, அவன்தன் மூதாதை ஆகிய, மூப்பின் யாக்கை***
***வாங்கிய வரி வில் அன்ன, மாலியவான் என்று ஓதும்***
***பூங் கழல் அரக்கன் வந்து, பொலங் கழல் இலங்கை வேந்தைத்***
***தாங்கிய அமளிமாட்டு, ஓர் தவிசுடைப் பீடம் சார்ந்தான்.***

***ஆங்கு*** - *அப்போது; வாங்கிய வரிவில் அன்ன - வளைந்த கட்டமைந்த வில்லைப் போன்ற;* ***மூப்பின் யாக்கை*** - *முதுமையால் வளைந்த உடம்பினையுடைய;* ***மாலியவான் என்று ஓதும்*** - *மாலியவான் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற;* ***அவன் தன் மூதாதை ஆகிய*** - *இராவணனுக்குப் பாட்டன் முறை உடைய;* ***பூங்கழல் அரக்கன் வந்து*** - *அழகிய வீரக்கழலணிந்த அரக்கன் வந்து;* ***பொலங்கழல் இலங்கை வேந்தை*** - *பொன்னால் ஆகிய வீரக்கழலணிந்த இலங்கை வேந்தனாம் இராவணனைத்;* ***தாங்கிய அமளி மாட்டு*** - *தாங்கிக் கொண்டுள்ள படுக்கையின் பக்கத்தில் இருந்த;* ***ஓர் தவிசுடைப்பீடம் சேர்ந்தான்*** - *மெத்தை இட்ட அமரும் ஆசனத்தில் அமர்ந்தான்.*

*இங்கு மாலியவான் இராவணன் அழைக்காமல் அவனைச் சந்திக்க வருகிறான்.*

***7284. இருந்தவன், இலங்கை வேந்தன் இயற்கையை எய்த நோக்கி,***
***பொருந்த வந்துற்ற போரில் தோற்றனன் போலும் என்னா,***
***'வருந்தினை, மனமும்; தோளும் வாடினை;--நாளும் வாடாப்***
***பெருந் தவம் உடைய ஐயா!-என், உற்ற பெற்றி?' என்றான்.***

***இருந்தவன்*** - *தவிசுடைப் பீடத்தில் இருந்தவன் ஆகிய மாலியவான்;* ***இலங்கை வேந்தன்*** - *இராவணனுடைய;* ***இயற்கையை எய்த நோக்கி*** - *நிலைமையை உற்றுப் பார்த்து;* ***பொருந்த வந்துற்ற போரில் தோற்றனன் போலும் என்னா*** - *அண்மையில் நெருங்கி வந்த போரில் இவன் தோற்றுவிட்டான் போலும் என்று மனத்தில் எண்ணி;* ***நாளும் வாடாப் பெருந்தவம் உடைய ஐயா*** - *எந்நாளும் கெடாத பெருந்தவ ஆற்றல் பெற்ற ஐயனே!;* ***மனமும் வருந்தினை*** - *மனம் வருத்தமுற்றுள்ளாய்;* ***தோளும் வாடினை*** - *யார்க்கும் தோலாத தோள்களும் வாடியுள்ளன;* ***என் உற்ற பெற்றி என்றான்*** - *உற்ற செயல் யாது என வாய்விட்டு வினவினான்.*

*இராவணன் நிகழ்ந்தவை கூறல்*

***7285. கவை உறு நெஞ்சன், காந்திக் கனல்கின்ற கண்ணன், பத்துச்***
***சிவையின் வாய் என்னச் செந் தீ உயிர்ப்பு உறத் திறந்த மூக்கன்,***
***நவை அறு பாகை அன்றி அமுதினை நக்கினாலும்***
***சுவை அறப் புலர்ந்த நாவான், இனையன சொல்லலுற்றான்;***

***கவை உறு நெஞ்சன்*** *- துன்பம் மிகப் பொருந்திய மனத்தையும்;* ***காந்திக் கனல்கின்ற கண்ணன்*** *- நெருப்புப் போல் எரிகின்ற கண்ணினையும்;* ***பத்துச் சிவையின் வாய் என்ன*** *- பத்துத் துருத்திகளின் வாய் போன்று;* ***செந்தீ உயிர்ப்பு உறத் திறந்த மூக்கன்*** *- செந்தீயுடன் பெருமூச்சுக் காற்று வெளிப்படும் விடைத்த பத்து மூக்குகளையும்;* ***நவை அறு பாகை அன்றி*** *- குற்றமில்லாத வெல்லப்பாகையன்றி;* ***அமுதினை நக்கினாலும்*** *- அமுதத்தையே நக்கி உண்டாலும்;* ***சுவை அறப் புலர்ந்த நாவான்*** *- சுவை முழுதும் உறைக்காதவாறு உலர்ந்த நாவினையும் உடையவனான இராவணன்;* ***இனையன சொல்லலுற்றான்*** *- (கீழ்வரும்) இத்தகைய சொற்களைக் கூறத் தொடங்கினான்.*

*கவை-கவ்வை. இடைக்குறை. சிவை - துருத்தி. இராவணனின் சினமும் சோகமும் கலந்து வெளிப்படுமாறு இப்பாடல் அமைந்துள்ளது.*

***7286. 'சங்கம் வந்து உற்ற கொற்றத் தாபதர்தம்மோடு எம்மோடு***
***அங்கம் வந்து உற்றது ஆக, அமரர் வந்து உற்றார் அன்றே;***
***கங்கம் வந்து உற்ற செய்ய களத்து, நம் குலத்துக்கு ஒவ்வாப்***
***பங்கம் வந்துற்றது அன்றி, பழியும் வந்துற்றது' அன்றே?***

***சங்கம் வந்து உற்ற*** *- தொகுதியாக வானரச் சேனையோடு வந்து சேர்ந்த;* ***கொற்றத் தாபதர்*** *- வெற்றியுடைய தவ வேடத்தையுடைய இராம இலக்குவர்;* ***தம்மோடு எம்மோடு*** *- தமக்கும் எமக்கும்;* ***அங்கம் வந்து உற்றது ஆக*** *- போர் வந்து மூண்டபோது;* ***அமரர் வந்து உற்றார் அன்றே*** *- அப்போரினைக் காணத் தேவர்கள் வந்தார்கள் அல்லவா;* ***கங்கம் வந்து உற்ற செய்ய களத்து*** *- கழுகுகள் பறந்து வந்து நெருங்கிய குருதியால் சிவந்த அப்போர்க்களத்தில்;* ***நம் குலத்துக்கு ஒவ்வாப் பங்கம் வந்து உற்றது***

***அன்றி*** - *நம் அரக்கர் குலத்துக்குப் பொருந்தாத தோல்வி வந்து பொருந்தியது அல்லாமல்;* ***பழியும் வந்து உற்றது*** - *தீராத பழியும் வந்து பொருந்தி விட்டது என்று இராவணன் கூறினான். அமரர் வந்து உற்றார் அன்றே - என்ற தொடர் இருவர் போரில் தேவர் ஏன் வந்தனர் என்று நடந்ததை நுண்ணறிவுடன் எண்ணிப் பார்க்கும் இராவணனின் அறிவுத் திறத்தை வெளிப்படுத்துகிறது. எந்நிலையிலும் நுணுக்கமாக நடந்ததை எண்ணிப் பார்க்கும் மனத்திறம் உடையவன் இராவணன். சங்கம்-கூட்டம் கங்கம்-பருந்து அன்று, ஏ-அசைகள்.*

*7287.* ***'முளை அமை திங்கள் சூடும் முக்கணான் முதல்வர்***
***ஆக,***
***கிளை அமை புவனம் மூன்றும் வந்து உடன்***
***கிடைத்தவேனும்,***
***வளை அமை வரி வில் வாளி மெய் உற***
***வழங்கும்ஆயின்,***
***இளையவன்தனக்கும் ஆற்றாது, என் பெருஞ்***
***சேனை--நம்ப!***

***நம்ப*** - *குல முதல்வ; முளை அமை திங்கள் சூடும் முக்கணான் - பிறைச் சந்திரனைத் தலையில் சூடிய மூன்று கண்களையுடைய சிவபெருமானை;* ***முதல்வர் ஆக*** - *முதலாகக் கொண்டு;* ***கிளை அமை புவனம் மூன்றும்*** - *மேலும் மேலும் வளருந்தன்மை கொண்ட மூன்று உலகத்திலுள்ள மக்களும்;* ***வந்து உடன் கிடைத்த வேனும்*** - *ஒரு சேர வந்து பக்கத் துணையாய் நின்றாலும்;* ***என் பெருஞ்சேனை*** - *என்னுடைய பெரிய படை;* ***வளை அமை வரிவில் வாளி*** - *வளைதல் பொருந்திய கட்டமைந்த வில்லிலிருந்து அம்புகளை;* ***மெய் உற வழங்கும் ஆயின்*** - *உடலில் உறப் பொருந்துமாறு வெளிப்படுத்தினால்;* ***இளையவன் தனக்கும் ஆற்றாது*** - *இளையவனாகிய இலக்குவனின் ஆற்றலுக்கு முன் நிற்க மாட்டாது.*

*கிளை - மென்மேல் வளர்தல். கிடைத்தவேனும் - பக்கத் துணையாயினும். சங்கரன் கொடுத்த வரமும் வாளும் பெற்றவனாதலால் முக்கணானை ஈண்டு இராவணன் நினைவு கூர்கிறான்.*

*7288.* ***'எறித்த போர் அரக்கர் ஆவி எண் இலா வெள்ளம்***
***எஞ்சப்***
***பறித்த போது, என்னை அந்தப் பரிபவம் முதுகில்***
***பற்றப் பொறித்த போது, அன்னான் அந்தக் கூனி கூன்***
***போக உண்டை***
***தெறித்த போது ஒத்தது அன்றி, சினம் உண்மை***
***தெரிந்தது இல்லை.***

***எறித்த போர் அரக்கர் ஆவி*** - *தன் மேல் படைக் கலங்களை எறிந்த போரில் வல்ல அரக்கரது உயிரினை;* ***எண் இலா வெள்ளம் எஞ்சப் பறித்த போது*** - *எண்ணிக்கையில் அடங்காத வெள்ளத்தவரில் ஒருவரும் எஞ்சி நிற்காமல் கவர்ந்த போதும்;* ***என்னை அந்தப் பரிபவம் முதுகில் பற்றப் பொறித்த போது*** - *எனக்கு இப்படிப்பட்ட அவமானம் முதுகில் தங்கும்படி அம்புகளைப் பதித்த போது;* ***அன்னான்*** - *அந்த இராமனிடம்;* ***அந்தக் கூனி கூன் போக உண்டை தெறித்த போது*** - *சிறு வயதில் கூனியின் கூன் போக வேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு மண்ணுருண்டைகளை அடித்தபோது;* ***ஒத்ததன்றி*** - *இருந்த விளையாட்டு மனநிலையை ஒத்த மனநிலை அன்றி;* ***சினம் உண்மை தெரிந்தது இல்லை*** - *சினம் இருத்த நிலை தெரியவில்லை.*

*இத்தோல்வித் துன்பத்தை என் முதுகில் தங்கும்படி இராமன் செய்தான் என்பது பொருள்.*

***7289. 'மலை உறப் பெரியர் ஆய வாள் எயிற்று அரக்கர் தானை***
***நிலையுறச் செறிந்த வெள்ளம் நூற்று-இரண்டு எனினும், நேரே***
***குலை உறக் குளித்த வாளி, குதிரையைக் களிற்றை ஆளைத் தலை உறப் பட்டதுஅல்லால், உடல்களில் தங்கிற்று உண்டோ?***

***மலை உறப் பெரியர் ஆய*** - *மலையை மாறுபட்டுப் பெரிய உடலினை உடைய;* ***வாள் எயிற்று அரக்கர் தானை*** - *கூர்மையான பற்களை உடைய அரக்கரது சேனை;* ***நிலை உறச் செறிந்த வெள்ளம் நூற்று இரண்டு எனினும்*** - *இராமனை நிலையாக நெருங்கி நின்றவை நூற்று இரண்டு வெள்ளம் எனினும்;* ***நேரே குலை உறக்குளித்த வாளி*** - *அவனால் நேராகக் குறி தவறாமல் செலுத்தப்பட்ட அம்புகளின் தொகுதி;* ***குதிரையைக் களிற்றை ஆளை*** - *குதிரைப் படையினையும், யானைப்படையினையும், காலாட்படையினையும்;* ***தலை உறப்பட்டது அல்லால்*** - *தலைகீழ் உறச் செய்ததன்றி;* ***உடல்களில் தங்கிற்று உண்டோ*** - *எந்த உடலிலும் தடைப்பட்டு நின்றதுண்டோ, இல்லை.*

*இராமன் அம்பை முன்னும் (3880, 3881, 4000) வியந்து பேசுவர்.*

***7290. 'போய பின், அவன் கை வாளி உலகு எலாம் புகுவது அல்லால்,***
***ஓயும் என்று உரைக்கலாமோ, ஊழி சென்றாலும்?***

***ஊழித்***
***தீயையும் தீய்க்கும்; செல்லும் திசையையும் தீய்க்கும்;***
***சொல்லும்,***
***வாயையும் தீய்க்கும்; முன்னின், மனத்தையும்***
***தீய்க்கும் மன்னோ.***

***அவன் கை வாளி போய பின்*** - *அந்த இராமன் கையிலுள்ள வில்லிலிருந்து அம்பு வெளிப்படத் தொடங்கினால் அது;* ***உலகு எலாம் புகுவது அல்லால்*** - *உலகமெல்லாம் புகுந்து எய்த இலக்கைத் தேடிச் செல்வதல்லாமல்;* ***ஓயும் என்று உரைக்கலாமோ*** - *ஓய்ந்து விடும் என்று சொல்லலாமா? சொல்ல இயலாது;* ***ஊழி சென்றாலும்*** - *ஊழிக்காலம் ஆனாலும்;* ***ஊழித் தீயையும் தீய்க்கும்*** - *அவ்வூழிக்காலத்தில் தோன்றும் ஊழித்தீயையும் தீய்க்கும்;* ***செல்லும் திசையையும் தீய்க்கும்*** - *அவ்வம்பு செல்லுகின்ற திசைகளையெல்லாம் தீய்க்கும்;* ***சொல்லும் வாயையும் தீய்க்கும்*** - *மாறுபடப் பேசுவோர் வாயையும் தீய்க்கும்;* ***முன்னின் மனத்தையும் தீய்க்கும்*** - *மாறுபட எண்ணுவோர் மனத்தையும் தீய்க்கும்.*

*இராமனது அம்பின் கொடுமையை இப்பாடல் விளக்குகிறது. ஊழித்தீ, செல்லும் திசை, மாறுபடப் பேசும் வாய், எண்ணும் மனம் ஆகியவற்றைத் தீய்க்கும் என்றது ஊழிக்காலம் என்னும் கால தத்துவத்தையும், திசைகள் என்ற இடஞ்சார் தத்துவத்தையும், வாய் என்ற உடல் உறுப்பையும் மனம் என்ற உருவமற்ற பொருளையும் கடந்து அழிக்கும் ஆற்றல் இங்கு விளக்கப்படுகிறது. மன், ஓ-அசை.*

***7291. 'மேருவைப் பிளக்கும் என்றால், விண் கடந்து ஏகும்***
***என்றால்,***
***பாரினை உருவும் என்றால், கடல்களைப் பருகும்***
***என்றால், ஆருமே அவற்றின் ஆற்றல்; ஆற்றுமேல்,***
***அனந்தகோடி,***
***மேருவும், விண்ணும், மண்ணும், கடல்களும்***
***வேண்டும் அன்றே?***

***மேருவைப் பிளக்கும் என்றால்*** - *மேரு மலையைப் பிளக்கும்படி சொன்னாலும்;* ***விண் கடந்து ஏகும் என்றால்*** - *ஆகாயத்தைக் கடந்து அப்பால் ஏகுக என்று சொன்னாலும்;* ***பாரினை உருவும் என்றால்*** - *நிலவுலகை ஊடுருவுக என்று சொன்னாலும்;* ***கடல்களைப் பருகும் என்றால்*** - *கடல்களைப் பருகுக என்று சொன்னாலும்;* ***அவற்றின் ஆற்றல் ஆருமே*** - *அவ்வம்புக்கு ஆற்றல் நிரம்பி இருக்கும்; ஆற்றுமேல் - அவ்வம்பின் விரைவைத் தாங்குவதற்கு;* ***அனந்த கோடி மேருவும் விண்ணும் மண்ணும் கடல்களும் வேண்டும் அன்றே*** - *கோடிக்கணக்கான மேரு மலையும் விண்ணும் மண்ணும் கடல்களும் வேண்டும்.*

*நிலம், நீர், தீ, வளி, வான் என்ற ஐம்பூதங்களில் நிலம், நீர், விண் ஆகிய பூதங்களை வெற்றி கொள்ளும் ஆற்றல் உடையது இராமனின் அம்பு என்பதை இப்பாடலிலும், தீ எனும் பூதத்தை முந்தைய பாடலிலும் சுட்டிய ஆசிரியர் வளி போல் வேகமுடையது அவனது அம்பு என்பதைக் குறிக்க வாளியை விலக்கி ஏனைய பூதங்களின் ஆற்றலை வெல்லும் தன்மையை விளக்கிக் காட்டியுள்ளார். ஆறுமே - அடங்குமோ (அடங்காது என்றபடி) எதுகை நோக்கி ஆருமே என்று நின்றது எனக் கொள்ளல் நேரிது. இத்துடன் 3878, 5185, ஆகிய எண்ணுள்ள பாடல்களை ஒப்பிட்டுச் சுவைத்துக் காண்க.*

***7292. 'வரி சிலை நாணில் கோத்து வாங்குதல் விடுதல் ஒன்றும்***
***தெரிகிலர், அமரரேயும்; ஆர் அவன் செய்கை தேர்வார்?***
***"பொரு சினத்து அரக்கர் ஆவி போகிய போக" என்று***
***கருதவே, உலகம் எங்கும் சரங்களாய்க் காட்டும் அன்றே.***

**வரிசிலை நாணில் கோத்து** - *இராமன் கட்டமைந்த வில்லில் நாணைப் பூட்டி;* **வாங்குதல் விடுதல் ஒன்றும்** - *வளைத்தலையும் அம்பை விடுதலையும் ஆகிய ஒன்றையும்;* **அமரரேயும் தெரிகிலர்-** *இமையா நாட்டத்துத் தேவர்களும் தெரிந்து கொள்ள முடியாதென்றால்;* **ஆர் அவன் செய்கை தேர்வார்** - *அவனுடைய அம்பு விடுந்திறனாகிய செய்கையை ஆய்ந்து அறியக் கூடியவர் யார் உளர்;* **பொருசினத்து அரக்கர் ஆவி** - *போரினைச் சினந்து செய்யும் அரக்கர்களுடைய உயிரை;* **போகிய போக என்று கருதவே** - *போக்குவதற்காகச் செய்க என்று சங்கற்பித்த அளவிலே;* **உலகம் எங்கும் சரங்களாய்க் காட்டும் அன்றே** - *உலகம் முழுவதும் அம்பு மயமாய் ஆகிவிடும்.*

*வாங்குதல், விடுதல்-தொழிற்பெயர்கள், போகிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.*

***7293. 'நல் இயல் கவிஞர் நாவில் பொருள் குறித்து அமர்ந்த நாமச்***
***சொல் என, செய்யுள் கொண்ட தொடை என, தொடையை நீக்கி***
***எல்லையில் சென்றும் தீரா இசை என, பழுது இலாத***
***பல் அலங்காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ.***

***காகுத்தன் பகழி*** *- இராமனுடைய அம்புகள்;* ***நல் இயல் கவிஞர்*** *- கருவில் திருவுடைக் கவிஞர்களின்;* ***நாவில் பொருள் குறித்து அமர்ந்த*** *- நாவில் பொருளுக்குத் தக வெளிப்பட்ட;* ***நாமச் சொல் என*** *- சிறப்புடைய சொற்கள் போலவும்;* ***செய்யுள் கொண்ட தொடை என*** *- செய்யுளில் அமைந்துள்ள தொடை போலவும்;* ***தொடையை நீக்கி*** *- தொடையைத் தாண்டி;* ***எல்லையில் சென்றும் தீரா இசை என*** *- அளவிட்டுச் சொல்ல முடியாத நீங்காத இசை போலவும்;* ***பழுதிலாத பல் அலங்காரப் பண்பே*** *- குற்றமற்ற பலவகைப்பட்ட அலங்காரப் பண்பு கொண்டவை ஆகும்.*

*நல்இயல் கவிஞர் நாவிலிருந்து வரும் சொற்கள் பொருத்தமான இடத்தில் வந்து செய்யுளில் வேகம் குன்றாமல் விழுவது போல், இராமன் பகழியும் சரியான இலக்கைச் சரியான வேகத்தோடு சென்றடையும். இதனையே கம்பர் பிறிதோரிடத்தில் "சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்" (388) என்கிறார். கவிஞர் நாவரும் சொல் எனத் தொலைவிலாத் தூணி" (7130) என்பதை இதனுடன் ஒப்பிடுக. செய்யுளில் தொடை என்னும் ஒழுங்கு முறை இருப்பது போல் இராமன் பகழியும் ஒழுங்கும் பரந்து விரியும் தன்மையும் பெற்றது. செய்யுளின் அடி நாதமாக யாப்பிசை இருப்பது போல இராமன் பகழியின் வேகம் இசைவாக அமைந்துள்ளது. பல் அலங்காரப் பண்பு போல பகழியில் பல செயல்கள் ஒன்றுபட்டுள்ளன என்கிறார் கவிஞர்.*

***7294. 'இந்திரன் குலிச வேலும், ஈசன் கை இலை மூன்று என்னும்***
***மந்திர அயிலும், மாயோன் வளை எஃகின் வரவும் கண்டேன்;***
***அந்தரம் நீளிது, அம்மா! தாபதன் அம்புக்கு ஆற்றா***
***நொந்தனென் யான் அலாதார் யார் அவை நோற்ககிற்பார்?***

***இந்திரன் குலிச வேலும்*** *- இந்திரனுடைய வச்சிராயுதமும்;* ***ஈசன் கை இலை மூன்று என்னும் மந்திர அயிலும்*** *- சிவபிரானின் கைகளில் உள்ள மூன்று இலை வடிவத்தைக் கொண்ட மந்திர ஆற்றல் பொருந்திய முத்தலைச் சூலமும்;* ***மாயோன் வளை எஃகின் வரவும் கண்டேன்*** *- திருமாலின் வளைந்த சக்கரப் படையின் வருகையையும் பல போர்களில் கண்டுள்ளேன்;* ***அந்தரம் நீளிது அம்மா*** *- அப்படைகளுக்கும் இராமனுடைய அம்புக்கும் வேற்றுமை மிகுதி;* ***யான் தாபதன் அம்புக்கு ஆற்றா நொந்தனன்*** *- இந்திரன் படை, ஈசன் கை மந்திர அயில், மாயோன் வளை எஃகின் வரவு ஆகியவற்றை எளிமையாகப் பொறுத்த யான் தவவேடம் பூண்ட இராமன் அம்புக்குப் பொறுக்க மாட்டாது நொந்தனன்;* ***அலாதார் யார் அவை நோற்ககிற்பார்*** *- யானல்லாத மற்றையோர் யார் அவ்வம்பின் ஆற்றலை எதிர்த்துத் தாங்க வல்லார்.*

*அந்தரம்-வேற்றுமை, நோற்ககிற்பார்-பொறுக்க வல்லவர்.*

*7295. **'பேய் இருங் கணங்களோடு சுடு களத்து உறையும் பெற்றி
ஏயவன் தோள்கள் எட்டும், இந்திரன் இரண்டு தோளும்,
மா இரு ஞாலம் முற்றும் வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரம் தோளும், அன்னான் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்றா.***

**பேய் இருங்கணங்களோடு** - *பெரிய கரிய பேய்க் கூட்டத்தோடு;* **சுடுகளத்து உறையும்** - *சுடுகாட்டிலே வாழ்கின்ற;* **பெற்றி ஏயவன்** - *தன்மை பொருந்தியவனான இராமபிரானின்;* **தோள்கள் எட்டும்** - *எட்டுத் தோள்களும்;* **இந்திரன் இரண்டு தோளும்** - *இந்திரனுடைய இரண்டு தோள்களும்;* **மா இரு ஞால முற்றும்** - *மிகப் பெரிய உலகம் முழுவதையும்;* **வயிற்றிடை வைத்த மாயன்** - *தன் திருவயிற்றடக்கிய திருமாலின்;* **ஆயிரம் தோளும்** - *ஆயிரந்தோள்களும்;* **அன்னான் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்றா** - *அந்த இராமனுடைய ஒரு விரலின் ஆற்றலுக்குத் தாங்க மாட்டாது.*

*7296. **'சீர்த்த வீரியராய் உள்ளார், செங் கண் மால் எனினும், யான் அக்
கார்த்தவீரியனை நேர்வார் உளர் எனக் கருதல் ஆற்றேன்;
பார்த்த போது, அவனும், மற்று அத் தாபதன் தம்பி பாதத்து
ஆர்த்தது ஓர் துகளுக்கு ஒவ்வான்; ஆர் அவற்கு ஆற்றகிற்பார்?***

**சீர்த்த வீரியராய் உள்ளார்** - *மிகு புகழ் பொருந்திய வீரர்கள் எனப்படுபவர்களில்;* **செங்கண் மால் எனினும்** - *சிவந்த கண்களையுடைய திருமாலே என்றாலும்;* **அக்கார்த்த வீரியனை நேர்வார் உளர் என** - *அவர்கள் அந்தக் கார்த்த வீரியனுடைய ஆற்றலுக்கு ஒப்பாக உளர் என;* **யான் கருதல் ஆற்றேன்** - *நான் கருதுதலைச் செய்யேன்;* **பார்த்தபோது** - *எண்ணிப் பார்க்கும் இடத்து;* **அவனும்** - *அக்கார்த்த வீரியனும்;* **அத்தாபதன் தம்பி** - *அந்தத் தவக்கோலத்தையுடைய இராமனின் தம்பியாகிய இலக்குவனது;* **பாதத்து ஆர்த்தது ஓர் துகளுக்கு** - *பாதத்திலே ஒட்டிக்கொண்டுள்ள ஒரு தூசிக்கு;* **ஒவ்வான்** - *ஒப்பாக மாட்டான்;* **ஆர் அவற்கு ஆற்றகிற்பார்** - *(என்றால்) அந்த இராமனுக்கு முன் எதிர் நிற்க வல்லார் யார் எவருமில்லை என்றவாறு.*

*இராவணன் கார்த்த வீர்யாச்சுனனிடத்தில் தோற்றவன் ஆதலின் இங்கு அவனைப் பாராட்டிக் கூறினான். இதனை முன்வந்துள்ள 5203ம் பாடலோடு ஒப்பிட்டுக் காண்க.*

*7297.* ***'முப்புரம் ஒருங்கச் சுட்ட மூரி வெஞ் சிலையும், வீரன்***
***அற்புத வில்லுக்கு, ஐய! அம்பு எனக் கொளலும்***
***ஆகா;***
***ஒப்பு வேறு உரைக்கல் ஆவது ஒரு பொருள்***
***இல்லை; வேதம்***
***தப்பின போதும், அன்னான் தனு உமிழ் சரங்கள்***
***தப்பா.***

***ஐய*** - *ஐயனே;* ***முப்புரம் ஒருங்கச் சுட்ட*** - *முப்புரங்களையும் ஒருங்கே அழித்த;* ***மூரி வெஞ்சிலையும்*** - *வலிமை பொருந்திய சிவபிரானது வில்;* ***வீரன்*** - *இராமனது;* ***அற்புத வில்லுக்கு*** - *கோதண்டமாகிய அற்புத ஆற்றல் நிறைந்த வில்லுக்கு;* ***அம்பு எனக் கொளலும் ஆகா*** - *அம்பு என்று கொள்ளுவதற்கும் அதற்கு ஒப்பு என்று சொல்ல வேறு ஒரு பொருளும் இல்லை;* ***வேதம் தப்பின போதும்*** - *வேதம் ஓதுவதால் வரும் பயன்கள் ஓதியவரைச் சென்றடையாமல் தப்பினாலும்;* ***அன்னான்*** - *அந்த இராமனது;* ***தனு உமிழ் சரங்கள் தப்பா*** - *வில்லிலிருந்து வெளிப்படுகின்ற அம்புகள் இலக்குத் தவற மாட்டா.*

*7298.* ***'உற்பத்தி அயனே ஒக்கும்; ஓடும்போது அரியே***
***ஒக்கும்;***
***கற்பத்தின் அரனே ஒக்கும், பகைஞரைக் கலந்த***
***காலை;***
***சிற்பத்தின் நம்மால் பேசச் சிறியவோ? என்னைத்***
***தீராத்***
***தற்பத்தைத் துடைத்த என்றால், பிறிது ஒரு சான்றும்***
***உண்டோ?***

***உற்பத்தி அயனே ஒக்கும்*** - *இராமனது அம்புகள் தோன்றும் போது பிரம தேவனை ஒக்கும்;* ***ஓடும் போது அரியே ஒக்கும்*** - *பகைவர் மேல் செல்லும் போது ஆயிரமுகம் உடைய திருமாலை ஒக்கும்;* ***பகைஞரைக் கலந்த காலை*** - *பகைவரை அழிக்கச் சேரும்போது;* ***கற்பத்தின் அரனே ஒக்கும்*** - *யுக முடிவுக் காலத்துச் சங்கார மூர்த்தியை ஒக்கும்;* சி ***றப்பத்தின் நம்மால் பேசச் சிறியவோ*** - *அவ்வம்புகளின் தொழில் திறமை நம் போன்றோரால் பேசப்படும் சிறுமையுடையதன்று;* ***என்னை*** - *என் இடமிருந்து;* ***தீராத் தற்பத்தைத் துடைத்த*** - *என்றும் நீங்காத செருக்கையே முழுதும் நீக்கியது என்றால்;* ***பிறிது ஒரு சான்றும் உண்டோ*** - *அதன் ஆற்றற்கு வேறு கரி வேண்டுமோ? வேண்டா என்றவாறு.*

*காத்தற் கடவுளாகிய அரியைப் போல அம்புகள் தம்மைப் பாதுகாத்து இலக்கை நோக்கிச் செல்லும் என்பது ஓர் பொருள். சிற்பம் - பேச்சாற்றல் எனினும் ஆம். தற்பம் - செருக்கு.*

*7299.* ***'குடக்கதோ? குணக்கதேயோ? கோணத்தின்***
***பாலதேயோ?***
***தடத்த பேர் உலகத்தேயோ? விசும்பதோ?***
***எங்கும்தானோ?***
***வடக்கதோ? தெற்கதோ? என்று உணர்ந்திலன்;--***
***மனிதன் வல்வில்--***
***இடத்ததோ? வலத்ததோ? என்று உணர்ந்திலேன்***
***யானும் இன்னும்.***

***மனிதன் வல்வில்*** *- மனிதனாகிய இராமன் கைக்கொண்டுள்ள வலிமையான வில்;* ***குடக்கதோ*** *- மேற்குப் பகுதியில் உள்ளதா?;* ***குணக்கதோ*** *- மேற்குப் பகுதியில் உள்ளதா?;* ***கோணத்தின் பாலதேயோ*** *- திசை மூலைப் பகுதியில் உள்ளதா?;* ***வடக்கதோ*** *- வடக்குப் பகுதியில் உள்ளதா?* ***தெற்கதோ*** *- தெற்குப் பகுதியில் உள்ளதா?* ***தடத்த பேர் உலகத்தேயோ*** *- அகன்ற பெரிய உலகத்திலுள்ளதா?* ***விசும்பதோ*** *- ஆகாயத்தில் உள்ளதா?* ***எங்கும் தானோ*** *- எல்லா இடங்களிலும் உள்ளதா?* ***என்று உணர்ந்திலன்*** *- என்று அவனுடன் போரிட்ட யான் உணர்ந்தேன் இல்லை;* ***யானும் இன்னும்*** *- இன்னும் கூட யான் அது;* ***இடத்ததோ*** *- இடப்புறத்தில் உள்ளதா?* ***வலத்ததோ*** *- வலப்புறத்தில் உள்ளதா என்று உணர்ந்திலேன் - என்று உணர முடியாதவனாய் உள்ளேன்.*

*எங்கிருந்து அம்பு எய்யப்படுகிறது என்று நின்று நிதானித்துப் பார்த்து அறிந்து கொள்ள முடியாதவாறு இராமன் அம்பு மழை பொழிந்ததால், எத்திசையில் இருந்து (அல்) எப்புறத்தில் இருந்து வில் அம்பு பொழிகிறது என்பதை அறியமுடியவில்லை என்று இராமனின் வில்லாற்றலை இராவணன் இப்பகுதியில் குறிப்பிடுகிறான். தடத்த - அகன்ற.*

*7300.* ***'ஏற்றம் ஒன்று இல்லை என்பது ஏழைமைப் பாலது***
***அன்றே?***
***ஆற்றல் சால் கலுழனேதான் ஆற்றுமே, அமரின்***
***ஆற்றல்!--***
***காற்றையே மேற்கொண்டானோ? கனலையே***
***கடாவினானோ?***
***கூற்றையே ஊர்கின்றானோ?--குரங்கின்மேல்***
***கொண்டு நின்றான்.***

***குரங்கின் மேல் கொண்டு நின்றான்*** *- அனுமனை வாகனமாகக் கொண்டு போரில் எதிர் நின்ற இராமன்;* ***காற்றையே மேற்கொண்டானோ*** *- காற்றை வாகனமாகக் கொண்டுள்ளானோ?;* ***கனலையே கடாவினானோ*** *- தீயை வாகனமாகக் கொண்டுள்ளானோ;* ***கூற்றையே ஊர்கின்றானோ*** *- இயமனை வாகனமாகக்*

*கொண்டுள்ளானோ?;* **ஏற்றம் ஒன்று இல்லை என்பது** - *(எனவே) அவனது வாகனத்துக்குப் பெருமை ஒன்றும் இல்லை என்பது;* **ஏழைமைப் பாலது அன்றே** - *அறியாமையின் பாற்பட்டது அல்லவா?* **அமரின் ஆற்றல்** - *வாகனமாகிய அனுமன் போரில் செய்யும் செயலை;* **ஆற்றல் சால் கலுழனே தான் ஆற்றுமே** - *வலிமை பொருந்திய திருமாலின் வாகனமாகிய கருடன்தான் செய்யுமோ என்றவாறு.*

*இதில் இராமனின் வாகனமாகிய அனுமனின் வேகம், சினம், அழிக்கும் தொழில் ஆகியவை விளக்கிக் கூறப்பட்டுள்ளன. திருவடியின் சிறப்பை இதனால் உணர்க.*

***7301. 'போய் இனித் தெரிவது என்னே? பொறையினால் உலகம் போலும்***
***வேய் எனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கி,***
***தீ எனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்,***
***நாய் எனத் தகுதும் அன்றே, காமனும் நாமும் எல்லாம்.***

**பொறையினால் உலகம் போலும்** - *அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல் பொறுமையுடைய;* **வேய் எனத் தகைய தோளி** - *மூங்கில் எனத் தகுந்த தோளினையுடைய சீதை;* **இராகவன் மேனி நோக்கி** - *இராமனின் திருமேனி அழகையும்; தீ எனக் கொடிய* **வீரச் சேவகச் செய்கை கண்டால்** - *தீயினை ஒத்த பெரும் போர் வீரத்தையும் முன்பே கண்டிருத்தலால்;* **காமனும் நாமும்** - *மன்மதனும் யாமும்;* **எல்லாம்** - *மற்றையோரும்;* **நாய் எனத் தகுதும் அன்றே** - *அவளுக்கு நாய் என்று சொல்வதற்குத் தகுவோம் அல்லவா?;* **போய் இனித் தெரிவது என்னே** - *இனிமேல் போய் அவளது மனத்தைத் தெரிய என்ன உள்ளது என்றவாறு.*

*இராமனின் திருமேனியழகையும் பெரும் போர் வீரத்தையும் சீதை கண்டிருத்தலால் போய் இனித் தெரிவது என்னே என்றான் என்க. சேவகம் - வீரம். (மிக்கவீரம்) "தோளி இராகவன்" என்ற இசைவு அவளுக்கேற்றவன் அவனே என்ற இராவணன் உள்ளுணர்வை வெளிப்படுத்தியது.*

***7302. 'வாசவன், மாயன், மற்றை மலருளோன், மழு வாள் அங்கை***
***ஈசன் என்று இனைய தன்மை இளிவரும் இவரால் அன்றி,***
***நாசம் வந்து உற்ற போதும், நல்லது ஓர் பகையைப் பெற்றேன்;--***
***பூசல் வண்டு உறையும் தாராய்!--இது இங்குப்***

***புகுந்தது' என்றான்.***

***பூசல் வண்டு உறையும் தாராய்*** - ஒலிக்கும் வண்டுகள் தங்குகின்ற மாலை அணிந்த மார்பினனே; ***வாசவன்*** - இந்திரன்; மாயன் - திருமால்; ***மற்றை மலருளோன்*** - மற்றும் உள்ள தாமரை மலரில் உறையும் நான்முகன்; ***மழுவாள் அங்கை ஈசன்*** - மழுப்படையைக் கையில் கொண்ட சிவன்; ***என்று இனைய தன்மை*** - என்று இப்படிப்பட்ட தன்மை கொண்ட; ***இளிவரும் இவரால் அன்றி*** - இகழ்ச்சிக்குரிய தன்மை கொண்ட இவர்களன்றி; ***நாசம் வந்து உற்றபோதும்*** - அழிவுக்காலம் வந்து நெருங்கி விட்ட போதும்; ***நல்லது ஓர் பகையைப் பெற்றேன்*** - சிறந்தது ஓர் பகையை அடைந்தேன்; ***இது இங்குப் புகுந்தது என்றான்*** - இதுவே இங்கு நிகழ்ந்தது என இராவணன் மாலியவானிடம் கூறினான்.

*பகைவனைப் பற்றிப் புரிந்து கொண்டுள்ள இராவணன் நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன் என்கிறான், பிறிதோரிடத்தில் 'என்னையே நோக்கி யான் இந்நெடும் பகை தேடிக்கொண்டேன்' (9123) என்பதை இணைத்து நோக்குக. இளிவரும் - இகழ்ச்சிக்கு ஆளான இவர். பகைவனை மனம் திறந்து பாராட்டும் இயல்பு இராவணன் பால் முன்னைய படலத்தும் கண்டதே ஆகும்.*

*மாலியவான் இராவணனுக்குக் கூறுதல்*

***7303. "முன் உரைத்தேனை வாளா முனிந்தனை; முனியா உம்பி***
***இன் உரைப் பொருளும் கேளாய்; ஏது உண்டுஎனினும், ஓராய்;***
***நின் உரைக்கு உரை வேறு உண்டோ?--நெருப்பு உரைத்தாலும், நீண்ட***
***மின் உரைத்தாலும், ஒவ்வா விளங்கு ஒளி அலங்கல் வேலோய்!***

***நெருப்பு உரைத்தாலும்*** - நெருப்பை உவமை என உரைத்தாலும்; ***நீண்ட மின் உரைத்தாலும்*** - வானத்தில் தோன்றும் நீண்ட மின்னலை உவமை என உரைத்தாலும்; ***ஒவ்வா விளங்கு ஒளி*** - ஒப்பாகாது விளங்குகின்ற ஒளியுடைய; ***அலங்கல் வேலோய்*** - வெற்றி மாலை சூடிய வேற்படையை உடைய தலைவனே; ***முன் உரைத்தேனை வாளா முனிந்தனை*** - முன்பு இராமனின் ஆற்றலைக் கூறிய என்னை வீணே கோபித்தாய்; ***முனியா உம்பி*** - சினமென்னும் குணம் இல்லாத உன்னை ஒரு பொழுதும் வெறுக்காத வீடணன் கூறிய; ***இன் உரைப் பொருளும் கேளாய்*** - இனிய சொற்களில் பொதிந்துள்ள உட்பொருளையும் காதால் கேட்காமல் விட்டாய்; ***ஏது உண்டு எனினும் ஓராய்*** - நீ தோல்வியடையப் போவதற்குக் காரணம் உண்டு என்றாலும் அதை ஆராய்ந்து அறியாது விட்டு விட்டாய்; ***நின் உரைக்கு உரை***

**வேறு உண்டோ** - எனினும் உன் சொல்லுக்கு மறுசொல் உண்டா என்கிறான் மாலியவான்.

*முன் உரைத்தேனை வாளா முனிந்தனை என்ற வரி ஒற்றுக் கேள்விப் படலத்தில் மாலியவான் கூற்றை மறுத்தது. (6792, 6793) முனியா உம்பி இன் உரைப் பொருளும் கேளாய் என்பதை மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையனாகிய வீடணன் அறவுரை கூறிய போது (6371) இராவணன் மறு மொழி கொண்டு அறிக. ஏது உண்டு எனினும் ஓராய்-என்பதை (6148, 6150, 6151) பாடல்களில் காண்க.*

*7304.* **'உளைவன எனினும், மெய்ம்மை உற்றவர், முற்றும் ஓர்ந்தார்,**
**விளைவன சொன்னபோதும், கொள்கிலை; விடுதி கண்டாய்;**
**கிளைதரு சுற்றம், வெற்றி, கேண்மை, நம் கல்வி, செல்வம்,**
**களைவு அருந் தானையோடும் கழிவது காண்டி' என்றான்.**

**உளைவன எனினும்** - மனத்திற்கு வருத்தம் தருவன என்றாலும்; **மெய்ம்மை உற்றவர்** - மெய்ம்மையான உறவினர்களும்; **முற்றும் ஓர்ந்தார்** - மேல் வருவனவற்றை முழுவதும் ஆய்ந்தவர்களும்; **விளைவன சொன்ன போதும்** - விளையப் போகிற செயல்களைச் சொன்னபோதும்; **கொள்கிலை** - நீ அவற்றை ஏற்றுக் கொள்ளாது; **விடுதி கண்டாய்** - விட்டிடுதலைச் செய்தாய் காண்; **கிளை தரு சுற்றம்** - தொகுதியாக உள்ள சுற்றத்தாரும்; **வெற்றி** - வெற்றியும்; **கேண்மை** - நட்பும்; **நம் கல்வி** - நமது கல்வியும்; **செல்வம்** - உறுபொருளும் உல்குபொருளும் ஒன்னார்த் தெறு பொருளுமாகிய செல்வமும்; **களைவு அருந்தானையோடு** - பிறரால் அழித்தற்கரிய அரக்கர் படையும்; **கழிவது காண்டி என்றான்** - அழிந்து படுவதை நீ காண்பாய்.

*இராவணனிடம் வந்து மகோதரன் கூறுதல்*

*7305.* **ஆயவன் உரைத்தலோடும், அப் புறத்து இருந்தான், ஆன்ற**
**மாயைகள் பலவும் வல்ல மகோதரன் கடிதின் வந்து,**
**தீ எழ நோக்கி, 'என் இச் சிறுமை நீ செப்பிற்று? என்னா,**
**ஓய்வுறு சிந்தையானுக்கு உறாத பேர் உறுதி சொன்னான்;**

***ஆயவன் உரைத்தலோடும்*** - *அந்த மாலியவான் அவ்வாறு சொன்ன உடனே;* ***அப்புறத்து இருந்தான்*** - *அப்புறத்திலே இருந்தானாகிய;* ***ஆன்ற மாயைகள் பலவும் வல்ல மகோதரன்*** - *மிக்க மாயைத் தொழில்கள் பலவற்றிலும் வல்லவனாகிய மகோதரன்;* ***கடிதின் வந்து*** - *விரைவாக வந்து;* ***தீ எழ நோக்கி*** - *தீ எழுமாறு சினந்து மாலியவானைப் பார்த்து;* ***என் இச்சிறுமை நீ செப்பிற்று என்னா*** - *நீ இப்படி நம் தலைவனைப் பார்த்துச் சிறுமையாகச் சொல்லியது என்னே என அதட்டிக் கேட்டு;* ***ஓய்வுறு சிந்தையானுக்கு*** - *தோல்வியால் துவண்டுள்ள மனத்தை உடைய இராவணனுக்கு;* ***உறாத பேர் உறுதி சொன்னான்*** - *நன்மை தராத பெரிய உறுதி மொழிகளைச் சொன்னான்.*

*உற்ற பேர் உறுதி சொல்லிய மாலியவானும் உறாத பேர் உறுதி சொன்ன மகோதரனும் இராவணனின் மனத்தை மாற்ற முயன்றனர். ஆனால் தன் மனதறிந்து சொல்லுவான் சொல்லையே ஏற்கும் இராவணன் மாலியவான் சொல்லை ஏற்காது மகோதரன் சொல்லை ஏற்றான். இது கருதியே நாட்டுப் புற வழக்கில் "இராவணனுக்கு மகோதரன் தோணியது போல" என்ற பழமொழி வழக்கில் உள்ளது.*

***7306. ' "நன்றி ஈது" என்று கொண்டால், நயத்தினை***
***நயந்து, வேறு***
***வென்றியே ஆக, மற்றுத் தோற்று உயிர் விடுதல்***
***ஆக,***
***ஒன்றிலே நிற்றல் போலாம், உத்தமர்க்கு உரியது;***
***ஒல்கிப்***
***பின்றுமேல், அவனுக்கு அன்றோ, பழியொடு நரகம்***
***பின்னை?***

***நயத்தினை நயந்து*** - *இனியதைப் பெற விரும்பி;* ***நன்றி ஈது என்று கொண்டால்*** - *இது நல்லது என்று ஒரு செயலை மேற்கொண்டால்;* ***வேறு வென்றியே ஆக*** - *தோல்விக்கு வேறுபட்ட வெற்றியே விளையட்டும்;* ***மற்று தோற்று உயிர் விடுதல் ஆக*** - *அல்லது தோற்று உயிர் விடும் நிலையே விளையட்டும்;* ***உத்தமர்க்கு உரியது*** - *சிறப்பானவர்களுக்கு உரிய செயல்;* ***ஒன்றிலே நிற்றல் போலாம்*** - *மேற்கொண்ட அந்தச் செயல் ஒன்றில் மட்டும் ஊன்றி நிற்றலாம்;* ***ஒல்கிப் பின்று மேல்*** - *மனந்தளர்ந்து பின் வாங்குமேல்;* ***அவனுக்கு அன்றோ*** - *அவ்வாறு பின்வாங்குபவனுக்கலல்வா;* ***பழியொடு நரகம் பின்னை*** - *பிறகு இம்மைப் பழியும் மறுமை நரகமும் ஏற்படும்.*

*இங்குச் செயலின் தராதரத்தைக் கொண்டு வெற்றி தோல்வி பழி பாவம் நரகம் ஆகியவற்றை நோக்காது தன்மனக் கருத்துக்கு ஏற்பக்கூறும் மகோதரனின் மனநிலை இப்பாடலில் வெளிப்படுகிறது.*

***7307. 'திரிபுரம் எரிய, ஆங்கு ஓர் தனிச் சரம் துரந்த***
***செல்வன்,***

***ஒருவன் இப் புவனம் மூன்றும் ஓர் அடி ஒடுக்கிக் கொண்டோன்,***
***பொருது, உனக்கு உடைந்து போனார்; மானிடர் பொருத போர்க்கு***
***வெருவுதி போலும்; மன்ன! கயிலையை வெருவல் கண்டாய்!***

***மன்ன*** - *மன்னனே;* ***கயிலையை வெருவல் கண்டாய்*** - *கயிலை மலையை அஞ்ச அசைத்தவனே;* ***திரிபுரம் எரிய*** - *முப்புரங்களும் எரியும்படி;* ***ஆங்கு ஓர்*** - *அங்கே ஒப்பற்ற;* ***தனிச்சரம்*** - *சிறப்பான அம்பைச்;* ***துரந்த செல்வன்*** - *செலுத்திய சிவபிரானும்;* ***ஒருவன்*** - *தான் ஒருவனே;* ***இப்புவனம் மூன்றும்*** - *இந்த உலகங்கள் மூன்றையும்;* ***ஓர் அடி ஒடுக்கிக் கொண்டோன்*** - *ஓரடியிலே அடக்கிக் கொண்ட திருமாலும்;* ***பொருது உனக்கு உடைந்து போனார்*** - *போர் செய்து உனக்குத் தோற்றுப் போனார்கள்;* ***மானிடர் பொருத போர்க்கு வெருவுதி போலும்*** - *அப்படி இருக்க மனிதர் புரியும் போருக்கு நீ அஞ்சுகிறாய் போலும் என்றான்.*

*கயிலையை அசைத்துச் சிவனையும் திருமாலையும் வென்ற இராவணனின் பழைய வெற்றிகளை நினைவூட்டி அண்மையில் ஏற்பட்ட தோல்வியை மறக்கச் செய்ய முயல்கிறான் மகோதரன். மானிடர் போருக்கு அஞ்சுகிறாய் போலும் என இராவணனின் மான உணர்ச்சியைத் தூண்டித் தோல்வியை மறக்கச் செய்ய முயல்கிறான்.*

***7308. ' "வென்றவர் தோற்பர்; தோற்றோர் வெல்குவர்; எவர்க்கும் மேலாய***
***நின்றவர் தாழ்வர்; தாழ்ந்தோர் உயர்குவர்; நெறியும் அஃதே"***
***என்றனர் அறிஞர் அன்றே! ஆற்றலுக்கு எல்லை உண்டோ?***
***புன் தவர் இருவர் போரைப் புகழ்தியோ?-புகழ்க்கு மேலோய்!***

***புகழ்க்கு மேலோய்*** - *உரைப்பார் உரையாம் புகழ் கடந்து நின்ற மேம்பட்டவனே;* ***வென்றவர் தோற்பர்*** - *வெற்றி பெற்றவர்கள் தோல்வியடைவர்;* ***தோற்றோர் வெல்வர்*** - *தோல்வி அடைந்தவர் வெற்றி பெறுவர்;* ***எவர்க்கும் மேலாய் நின்றவர் தாழ்வர்*** - *பிறருக்கு மேலாக உயர்ந்து நின்றவர் தாழ்ச்சியடைவார்கள்;* ***தாழ்ந்தோர் உயர்குவர்*** - *தாழ்ந்து நின்றவர்கள் உயர்ச்சியடைவர்;* ***நெறியும் அஃதே*** - *உலகத்து முறை அதுதான்;* ***என்றனர் அறிஞர் அன்றே*** - *என்று உலகியல் அறிந்த அறிஞர்கள் கூறியுள்ளனர்;* ***ஆற்றலுக்கு எல்லை உண்டோ*** - *வல்லமைக்கு எல்லை இது எனக் கூற முடியுமா?* ***புன்தவர் இருவர் போரைப் புகழ்தியோ*** - *அதனால் புல்லிய தவவேடத்தை உடைய இருவர் செய்த போரை நீ புகழ்வது என்? என்றவாறு.*

*வெற்றி தோல்வி உயர்வு தாழ்வு வாழ்வில் ஏற்படுதல் இயற்கை நெறி, எனவே தோல்வியால் துவளற்க என இராவணனுக்குக் கூறியவாறு. அரசறிய வீற்றிருந்த வாழ்வு விழும் 'குடைநிழல் இருந்து குஞ்சரம் ஊர்ந்தோர் நடைமெலிந்து ஓரூர் நண்ணல் இயல்பு. அவற்றை இயல்பாக ஏற்றுச் செயல்பட வேண்டும் எனக் கூறியவாறு காண்க. புன்தவர்-என்ற சொல்லாட்சி எதிரியின் வலிமையைச் சரியாக மதிப்பிட முடியாதவன் மகோதரன் என்பதை விளக்க வந்தது.*

***7309. 'தேவியை விடுதிஆயின், திறல்அது தீரும் அன்றே;***
***ஆவியை விடுதல் அன்றி, அல்லது ஒன்று ஆவது உண்டோ?***
***தா அரும் பெருமை அம்மா நீ இனித் தாழ்த்தது என்னே?***
***காவல! விடுதி, இன்று இக் கையறு கவலை, நொய்தின்.***

***தேவியை விடுதி ஆயின்*** *- சீதையை விட்டு விடுவாய் ஆனால்;* ***திறல் அது தீரும் அன்றே*** *- உன் வலிமையால் வந்து புகழ் நீங்கும் அல்லவா?* ***அல்லது*** *- அவ்வாறு விடாமல் போனால்;* ***ஆவியை விடுதல் அன்றி*** *- உயிரை விடுதல் அல்லது;* ***ஒன்று ஆவது உண்டோ*** *- வேறு ஒன்று நடப்பது உண்டோ?* ***தா அரும் பெருமை அம்மா*** *- இதுவரை அழிவில்லாத உன் பெருமையை;* ***நீ இனித் தாழ்த்தது என்னே*** *- இப்போது நீயே தாழ்த்திக் கொள்வது எதற்கு?* ***இன்று இக்கையறு கவலை*** *- இப்போது செயலற்றுப் போவதற்குக் காரணமான கவலையைக்;* ***காவல நொய்தின் விடுதி*** *- காவலனே விரைவாக விடுக. அம்மா-வியப்பிடைச் சொல். எதற்கும் கலங்கா இராவணன் கலங்கியமை குறித்த வியப்பைக் காட்ட வந்தது.*

***7310. 'இனி இறை தாழ்த்தி ஆயின், இலங்கையும் யாமும் எல்லாம்***
***கனியுடை மரங்கள் ஆக, கவிக் குலம் கடக்கும் காண்டி;***
***பனியுடை வேலைச் சில் நீர் பருகினன் பரிதி என்னத்***
***துனி உழந்து அயர்வது என்னே? துறத்தியால் துன்பம்' என்றான்.***

***இனி இறை தாழ்த்தி ஆயின்*** *- இனி நொடிப் பொழுதேனும் நீ போர் செய்யாது தாமதித்தால்;* ***இலங்கையும்*** *- இலங்கை மாநகரமும்;* ***யாமும் எல்லாம்*** *- அரக்கர்களாகிய நாமும் பிறவும்;* ***கனியுடை மரங்கள் ஆக*** *- பழங்களைக் கொண்ட மரங்கள் போல்*

*ஆகுமாறு; **கவிக்குலம் கடக்கும்** - வானரர் கூட்டம் வென்று விடும்; **காண்டி** - இதனைக் காண்; **பனியுடை வேலைச் சில்நீர்** - குளிர்ச்சி பொருந்திய கடலில் உள்ள மிகுதியான நீரில் சிறிதளவு நீரைப்; **பருகினன் பருதி** - சூரியன் பருகினான்; **என்னத்** - என்பதற்காகத்; **துனி உழந்து** - மனவெறுப்புக் கொண்டு; **அயர்வது என்னே** - வருந்துவது எதற்காக? **துறத்தியால் துன்பம் என்றான்** - துன்பத்தை விட்டு விடுவாய் என்றான் மகோதரன்.*

*கடல்நீர் முழுவதையும் பருதி பருக முடியாதது போல இராவணனது பெரும்படை முழுவதையும் சீரை சுற்றிய இருவர் அழிக்க முடியாது என்ற குறிப்பும் காண்க. இறை - நொடிப் பொழுது. மன்னோ ஈற்றசை.*

***7311.** '**முன், உனக்கு இறைவர் ஆன மூவரும் தோற்றார்; தேவர்***
***பின், உனக்கு ஏவல் செய்ய, உலகு ஒரு மூன்றும் பெற்றாய்;***
***புல் நுனைப் பனி நீர் அன்ன மனிசரைப் பொருள் என்று உன்னி,***
***என், உனக்கு இளைய கும்பகருணனை இகழ்ந்தது?-எந்தாய்!***

*__எந்தாய்__ - என் தந்தையே!; **முன் உனக்கு** - முன்பு உனக்கு; **இறைவர் ஆன மூவரும் தோற்றார்** - தலைமையுடைய அரி அரன் அயன் ஆகிய மூவரும் தோற்றனர்; **தேவர்பின்** - அதற்குப் பிறகு தேவர்கள் தோற்றார்கள்; **உலகு ஒரு மூன்றும்** - உலகு மூன்றையும்; **உனக்கு ஏவல் செய்யப் பெற்றாய்** - உனக்கு ஏவல் செய்யும்படி வென்று பெற்றுள்ளாய்; அப்படிப்பட்ட வரமும் வலிமையும் உடைய நீ; **புல் நுனைப் பனிநீர் அன்ன** - புல்லின் நுனியில் ஒட்டியுள்ள பனிநீரைப் போன்று உள்ள; **மனிசரைப் பொருள் என்று உன்னி** - மனிதர்களை ஒரு பொருளாக மதித்து எண்ணி; **என் உனக்கு இளைய கும்பகருணனை இகழ்ந்தது** - உனக்கு இளைய கும்பகருணனின் ஆற்றலை மதியாது இகழ்ந்தது என்ன காரணமோ? என்றவாறு.*

*மனிசரை-இழிவு குறித்து வந்த சொல் புல்நுனைப் பனிநீர் அன்ன மனிசர் - சில் வாழ்நாள், பல்பிணிச் சிற்றறிவுடைய வரவலிவில்லாத மானிடர். கும்பகருணனின் வலியை நினைப்பூட்டி, அவனைப் போருக்கு அனுப்புக என இராவணனை மகோதரன் தூண்டுகிறான்.*

***7312.** '**ஆங்கு அவன்தன்னைக் கூவி, ஏவுதிஎன்னின், ஐய!***
***ஓங்கலே போல்வான் மேனி காணவே ஒளிப்பர் அன்றே;***
***தாங்குவர் செரு முன் என்னின், தாபதர் உயிரைத் தானே***

***வாங்கும்' என்று இனைய சொன்னான்; அவன் அது***
***மனத்துக் கொண்டான்.***

***ஐய*** - *தலைவனே;* ***ஆங்கு அவன் தன்னைக் கூவி*** *- அந்தக் கும்பகருணனை அழைத்து;* ***ஏவுதி என்னின்*** *- போர் செய்யக் கட்டளையிடுவாயாயின்;* ***ஓங்கலே போல்வான்*** *- மலை போன்ற அவனது;* ***மேனி காணவே ஒளிப்பர் அன்றே*** *- உடலின் தன்மையைக் காணவே அஞ்சி ஒளிந்து கொள்வார்களன்றோ?* ***தாங்குவர் செரு முன் என்னில்*** *- அவ்வாறு அஞ்சி ஒளிந்து கொள்ளாமல் எதிர் வந்து போர் செய்வர் எனில்;* ***தாபதர் உயிரைத்*** *- அந்தத் தவவேடம் கொண்ட இராம இலக்குவரது உயிரைத்;* ***தானே வாங்கும் என்று*** *- கும்பகருணனே போக்குவான் என்று;* ***இனைய சொன்னன்*** *- இத்தன்மையான வார்த்தைகளை மகோதரன் சொன்னான்;* ***அவன் அது*** *- அந்த இராவணன் அந்த சொல்லை;* ***மனத்துக் கொண்டான்*** *- மனத்திலே ஏற்றுக் கொண்டான்.*

*மகோதரன் சொல்லை இராவணன் புகழ்தல்*

***7313. 'பெறுதியே, எவையும் சொல்லி;--பேர்***
***அறிவாள!-சீரிற்று***
***அறிதியே; என்பால் வைத்த அன்பினுக்கு அவதி***
***உண்டோ?***
***உறுதியே சொன்னாய்' என்னா, உள்ளமும்***
***வேறுபட்டான்;--***
***இறுதியே இயைவது ஆனால், இடை, ஒன்றால் தடை***
***உண்டாமோ?***

***பேர் அறிவாள*** *- பேர் அறிவு உடையவனே;* ***பெறுதியே யெவையும் சொல்லி*** *- எல்லாவற்றையும் சொல்லால் பெறுவாய்;* ***சீரிற்று அறிதியே*** *- நீ சிறந்த செயலை அறிந்துள்ளாய்;* ***என்பால் வைத்த*** *- என்னிடத்தில் கொண்ட;* ***அன்பினுக்கு அவதி உண்டோ*** *- அன்பினுக்கு ஓர் எல்லை உண்டோ;* ***உறுதியே சொன்னாய்*** *- எனக்கு உறுதி தரும் செயலையே சொன்னாய்;* ***என்னா*** *- என்று புகழ்ந்து;* ***உள்ளமும் வேறுபட்டான்*** *- மனம் மாறுபட்டவன் ஆனான் இராவணன்;* ***இறுதியே இயைவது ஆனால்*** *- ஒருவனுக்கு இறுதி வந்து நேரும்போது;* ***இடை யொன்றால் தடை உண்டாமோ*** *- இடையில் வேறு ஒன்றினால் தடை உண்டாகுமோ? (உண்டாகாது என்றவாறு).*

*முதற்போரில் தோல்வியுற்றதால் இராமலக்குவரது வன்மை உணர்ந்து மனம் மாறி மாலியவானிடம் பேசிய இராவணன் மகோதரனால் மீண்டும் பழைய அழிவு நிலைக்கே தள்ளப்பட்டான் என்பதை விளக்க 'இறுதி ஒருவனுக்கு வருவது என்று விதி இருக்குமானால் வேறொன்றால் அது தடைப்படாது; இறுதி வந்தே தீரும்' என்ற பொதுப்பொருளைப் பின்வைத்தமை யான் இது வேற்றுப் பொருள் வைப்பணி.*

*இராவணன் ஏவலால் வீரர்கள் கும்பகருணனைத் துயில் எழுப்புதல்*

***7314. 'நன்று இது கருமம்' என்னா, 'நம்பியை நணுக ஓடிச்***
***சென்று இவண் தருதிர்' என்றான்; என்றலும்***
***நால்வர் சென்றார்; தென் திசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவர் என்ன,***
***குன்றினும் உயர்ந்த தோளான் கொற்ற மாக்***
***கோயில் புக்கார்.***

***நன்று இது கருமம் என்னா*** - *கும்பகருணனைப் போருக்கு அனுப்பும் இச்செயல் செயத் தக்கதே என்று சொல்லி;* ***நம்பியை நணுக ஓடிச் சென்று இவண் திருதிர் என்றான்*** - *(தூதரை அழைத்த இராவணன் அவர்களிடம்) நீங்கள் ஓடிப்போய் ஆடவர் திலகனாய கும்பகருணனை இங்கே அழைத்து வாருங்கள் என்றான்;* ***என்றலும்*** - *என்று இராவணன் கூறிய அளவிலே;* ***தென்திசைக் கிழவன் தூதர்*** - *தெற்குத்திசைத் தலைவனாகிய இயமனது தூதர்;* ***தேடினர் திரிவர் என்ன*** - *தேடித்திரிவது போல;* ***நால்வர் சென்றார்*** - *நான்கு பேர் சென்றார்கள்;* ***குன்றினும் உயர்ந்த தோளான்*** - *அவர்கள் குன்றைக் காட்டிலும் உயர்ந்த தோள்களை உடைய கும்பகருணனது;* ***கொற்ற மாக்கோயில் புக்கார்*** - *வெற்றி பொருந்திய பெரிய அரண்மனைக்குள் சென்று புகுந்தார்கள்.*

*இறுதிக்காலத்து நால்வர் தூக்கச் செல்லல் மரபு என்ற குறிப்பைக் காட்டியது போல் நால்வர் சென்றார் என்றது நயம். தேடினர் - முற்றெச்சம்.*

***7315. கிங்கரர் நால்வர் சென்று, அக் கிரி அனான் கிடந்த கோயில்***
***மங்குல் தோய் வாயில் சார்ந்து, 'மன்ன! நீ உணர்தி' என்ன,***
***தம் கையின் எழுவினாலே தலை செவி தாக்க, பின்னும்***
***வெங்கணான் துயில்கின்றானை வெகுளியால் இனைய சொன்னார்:***

***கிங்கரர்*** - *பணியாளர்;* ***நல்வர் சென்று*** - *நல்வர் போய்:* ***அக்கிரி அனான்*** - *மலையை ஒத்தவனான கும்பகருணன்;* ***கிடந்த கோயில்*** - *படுத்துறங்கும் அரண்மனையின்;* ***மங்குல் தோய்*** - *மேகம் படிந்துள்ள;* ***வாயில் சார்ந்து*** - *வாயிலை அடைந்து;* ***மன்ன*** -

அரசனே; **நீ உணர்தி என்ன** - நீ துயில் விட்டு எழுதி என்று சொல்லி; **தம் கையின் எழுவினாலே** - தங்கள் கையில் உள்ள இரும்புத் தூண்களால்; **தலை செவி தாக்க** - தலையிலும் செவியிலும் தாக்க; **பின்னும்** - அவ்வாறு செய்த பின்னும்; **வெங்கணான் துயில்கின்றானை** - கொடிய கண்களையுடைய தூங்குகின்ற கும்பகருணனைப் பார்த்து; **வெகுளியால்** - சினத்தினால்; **இனைய சொன்னார்** - இச்சொற்களைச் சொல்லலானார்.

கும்பகர்ணனை இவ்வாறு அன்றி வேறு வகையில் எழுப்பலாகாமை உணர்ந்தவர் ஆதலின், 'எழுவினால் தலைசெவி தாக்க என்றார். இராவணன் தோற்றதை உணர்ந்தபின் எழுப்புகின்றனர். ஆதலின் வெகுளியாற் சொல்லும் பின்வரும் சொற்களும் இயல்பானதே என்று உய்த்துணரலாம்.

### *கிங்கரர் கூற்றும் இராவணன் செயலும்*

**எழுசீர் சந்த விருத்தம்**

*7316.* ***'உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய***
***வாழ்வு எலாம்***
***இறங்குகின்றது! இன்று காண்; எழுந்திராய்!***
***எழுந்திராய்!***
***கறங்கு போல வில்பிடித்த கால தூதர் கையிலே,***
***உறங்குவாய், உறங்குவாய்! இனிக் கிடந்து***
***உறங்குவாய்'!***

**உறங்குகின்ற கும்பகன்ன** - உறங்குகின்ற கும்பகர்ணனே; **உங்கள்** - உங்களுடைய; **மாய வாழ்வு எலாம்** - பொய்யான வாழ்வு எல்லாம்; **இன்று இறங்குகின்றது** - இன்றில் இருந்து இறங்குவதற்குத் தொடங்கிவிட்டது; **எழுந்திராய் எழுந்திராய்** - அதனைக் காண்பதற்காக எழுந்திருப்பாய் எழுந்திருப்பாய்; **கறங்கு போல** - காற்றாடி போல் எல்லா இடத்திலும் திரிகின்ற; **வில்பிடித்த** - வில்லைப் பிடித்த; **காலதூதர்** - காலனுக்குத் தூதரானவர்; **கையிலே இனிக் கிடந்து** - கையில் இனிப் படுத்து; **உறங்குவாய் உறங்குவாய்** - தூங்குவாயாக.

இப்பாடலில் வெகுளிக்குரிய வலிய சந்தம் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. அடுக்கு சந்தம் தழுவி வந்தது. எலாம் - இடைக்குறை. காலதூதர்-நான்காம் வேற்றுமைத் தொகை.

### *துயிலெழுப்பல்*

*7317.* ***என்று சொல்ல, அன்னவன் எழுந்திராமை கண்டு***
***போய்,***
***'மன்றல் தங்கு மாலை மார்ப! வன் துயில்***

***எழுப்பலம்.'***
***அன்று, 'கொள்கை கேண்மின்' என்று மாவொடு***
***ஆளி ஏவினான்,***
***'ஒன்றன்மேல் ஓர் ஆயிரம் உழக்கிவிட்டு எழுப்புவீர்.'***

***என்று சொல்ல*** - என்று பலவாறு சொல்லி எழுப்பவும்; ***அன்னவன்*** - அந்தக் கும்பகருணன்; ***எழுந்திராமை*** - உறக்கத்தில் இருந்து எழுந்திராமையைக்; ***கண்டு போய்*** - கண்டு இராவணனிடம் திரும்பிப் போய்; ***மன்றல் தங்கு மாலை மார்ப*** - மணம் நிறைந்த மாலை அணிந்த மார்பை உடையவனே; ***வன்துயில் எழுப்பலம்*** - கும்பகருணனை வலிய உறக்கத்தில் இருந்து எழுப்ப வல்லோம் அல்லோம்; ***என்று சொல்ல*** - என்று கூற; ***அன்று*** - அப்போது (இராவணன்); ***கொள்கை கேண்மின் என்று*** - செய்யத்தக்க செயலைக் கேண்மின் என்று கூறி; ***ஒன்றன் மேல்*** - ஒன்றன் மேல் ஒன்றாக; ***மாவொடு ஆளி ஓர் ஆயிரம்*** - ஓராயிரக்கணக்கான குதிரைகளையும் யாளிகளையும்; ***உழக்கி விட்டு எழுப்புவீர்*** - மிதிக்கச் செய்து எழுப்புவீர்; ***என்று ஏவினான்*** - என்று அவர்களுக்குக் கட்டளையிட்டான்.

***7318. 'அனைய தானை அன்று செல்ல, ஆண்டு நின்று***
***பேர்ந்திலன்;***
***இனைய சேனை மீண்டது' என்று இராவணற்கு***
***இயம்பலும்***
***'வினையும் வல்ல நீங்கள் உங்கள் தானையோடு***
***சென்மின்' என்று,***
***இனைய மல்லர் ஆயிராரை ஏவி நின்று***
***இயம்பினான்.***

***அனையதானை*** - இராவணனால் அனுப்பப்பட்ட ஆயிரம் மாவோடாளியான அந்தச் சேனை; ***அன்று செல்ல*** - அப்போது கும்பகருணனை மிதித்துச் செல்லவும்; ***ஆண்டு*** - உறங்கிய இடத்தில்; ***நின்று*** - இருந்து; ***பேர்த்திலன்*** - அசையவில்லை; ***இனையசேனை*** - இந்தச் சேனை; ***மீண்டது என்று*** - எழுப்ப முடியாமல் திரும்பியது என்று; ***இராவணற்கு இயம்பலும்*** - கிங்கரர் நால்வரும் இராவணனுக்குச் சொல்ல; ***மல்லர் ஆயிராரை*** - ஆயிரம் மல்லர்களை; ***இனைய வினையும் வல்ல நீங்கள்*** - இப்படிப்பட்ட தொழில் செய்வதில் வல்லமை உடைய நீங்கள்; ***உங்கள் தானையோடு சென்மின்*** - உங்கள் படையுடன் செல்லுங்கள்; ***என்று ஏவி நின்று இயம்பினான்*** - என்று அவர்களுக்கு ஆணையிட்டு நின்று கூறினான்.

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***7319. சென்றனர் பத்து நூற்றுச் சீரிய வீரர் ஓடி***

***மன்றல் அம் தொங்கலான்தன் மனம்தனில்***
***வருத்தம் மாற***
***இன்றுஇவன் முடிக்கும்' என்னா, எண்ணினர்;***
***எண்ணி, ஈண்ட,***
***குன்று என உயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில்***
***புக்கார்.***

***பத்து நூற்றுச் சீரிய வீரர்*** - *ஆயிரம் சிறந்த வீரர்கள்;* ***மன்றல் அம் தொங்கலான் தன்*** - *மணம்மிக்க அழகிய மலர் மாலையணிந்த இராவணன் தன்;* ***வருத்தம் மாற*** - *மனவருத்தம் தீரும்படி;* ***இன்று இவன் முடிக்கும் என்னா*** - *இன்றே இக்கும்பகருணன் பகையை முடிப்பான் என;* ***எண்ணினர் எண்ணி ஈண்ட*** - *மனத்தில் பலவாறு எண்ணியவர்களாய் நெருங்கச் சூழ்ந்து;* ***குன்று என உயர்ந்த தோளான்*** - *குன்றைவிட உயர்ந்த தோள்களையுடைய கும்பகருணனது;* ***கொற்றமாக்கோயில்*** - *வெற்றி தங்கிய பெரிய அரண்மனைக்கண்;* ***ஓடிச் சென்றனர் புக்கார்*** - *ஓடிச் சென்று புகுந்தார்கள்.*

*சென்றனர்-முற்றெச்சம். பத்துநூறு-பண்புத்தொகை.*

***7320. திண் திறல் வீரன் வாயில் திறத்தலும், சுவாத வாதம்***
***மண்டுற, வீரர் எல்லாம் வருவது போவதாக,***
***கொண்டுறு தடக் கை பற்றி, குலமுடை வலியினாலே***
***கண் துயில் எழுப்ப எண்ணி, கடிது ஒரு வாயில்***
***புக்கார்.***

***கண்துயில் எழுப்ப எண்ணி*** - *கொற்றமாக்கோயில் புக்க பத்து நூற்றுச் சீரியவீரர் கும்பகருணனைத் துயில் எழுப்பக் கருதிச் சென்று;* ***திண்திறல் வீரன்*** - *வலிமை மிக்க கும்பகருணனது;* ***வாயில் திறத்தலும்*** - *அரண்மனை வாயிலைத் திறந்தவுடன்;* ***சுவாதவாதம்*** - *மூச்சுக்காற்றானது;* ***மண்டுற*** - *மிகுதியாக வீசியதால் அதன் வேகத்திலிருந்து தப்பித் துயிலெழுப்புவதற்காக;* ***வீரர் எல்லாம் வருவது போவதாக*** - *அவ்வீரர்கள் தாங்கள் அலைக்கழிக்கப் படுவதைக் கண்டு;* ***கொண்டுறு தடக்கை பற்றி*** - *வலிமை கொண்டுள்ள தங்கள் கைகளை ஒருவருக்கொருவர் பிடித்துக் கொண்டு;* ***குலமுடை வலியினாலே*** - *ஒன்றாகத் திரண்ட தங்கள் வலிமையால்;* ***கடிது ஒருவாயில் புக்கார்*** - *விரைவாக வேறொரு வாயில் வழியாக புகுந்தார்கள்.*

*ஒரு வாயில் என்றது - பக்க வாயில் ஆகும். நேராக உள்ள வாயிலிற் புகுந்து மூச்சுக்காற்றால் தாக்கப்பட்டவர் பக்கவாயிலிற் புகுந்து எழுப்பலாயினர் என்க.*

***7321. ஓதநீர் விரிந்ததென்ன உறங்குவான் நாசிக் காற்றால***

***கோது இலா மலைகள் கூடி, வருவது போவதாக,***
***ஈது எலாம் கண்ட வீரர் ஏங்கினர், துணுக்கமுற்றார்;***
***போதுவான் அருகு செல்லப் பயந்தனர், பொறி***
***கொள் கண்ணார்.***

***பொறிகொள் கண்ணார்*** - தீப்பொறி வெளிப்படும் கண்ணையுடைய அவ்வீரர்கள்; ***ஓதநீர் விரிந்த தென்ன உறங்குவான்*** - கடல்நீரின் விரிந்த பரப்பு உறங்குவது போல் உறங்குகின்றவனான கும்பகருணனது; ***நாசிக் காற்றால்*** - மூச்சுக் காற்றினது வேகத்தால்; ***கோது இலா மலைகள் கூடி*** - குற்றம் இல்லாத மலைக்கூட்டங்கள் ஒன்று சேர்ந்து; ***வருவது போவதாக*** - வந்து செல்வதாக; ***ஈதுஎலாம் கண்ட வீரர்*** - இத்தன்மையைக் கண்ட வீரர்கள்; ***ஏங்கினர்*** - என்ன செய்வது என்று தெரியாது ஏக்கங்கொண்டு; ***துணுக்கமுற்றார்*** - மனநடுக்கங்கொண்டார்கள்; ***போதுவான் அருகு செல்லப் பயந்தனர்*** - அக்கும்பகருணனது அருகில் செல்ல அஞ்சினார்கள்.

*மூச்சுக்காற்றின் நேர் வாயிலை இவர்கள் திறந்துவிட்டு மூடாமல் ஓடி வந்துவிட்ட படியால் அவ்வழியே மலைகள் கூடி வருவது போவதாயின. அக்காட்சியைப் பக்கவாயில் திறந்து உள்ளே நின்ற அவர்கள் கண்டு பயந்தனர்.*

*7322.* ***'இங்கு இவன் தன்னை யாம் இன்று எழுப்பல் ஆம்***
***வகை ஏது?' என்று,***
***துங்க வெவ் வாயும் மூக்கும் கண்டு, மெய்***
***துணுக்கமுற்றார்;***
***அங்கைகள் தீண்ட அஞ்சி, ஆழ் செவி அதனினூடு,***
***சங்கொடு தாரை, சின்னம், சமைவுறச் சாற்றலுற்றார்.***

***துங்கவெவ்வாயும் மூக்குங்கண்டு*** - கும்பகருணனது வலிய வாயினையும் மூக்கினையும் கண்டு; ***மெய் துணுக்கமுற்றார்*** - உடல் நடுங்கிய அவ்வீரர்கள்; ***அங்கைகள் தீண்ட அஞ்சி*** - தங்கள் கைகளினால் அவனைத் தொட்டு எழுப்பப் பயந்து; ***இங்கு இவன் தன்னை*** - இன்று இப்போது இவனை; ***யாம் இன்று எழுப்பலாம் வகை ஏது என்று*** - வேறு வகையில் யாம் இவனை இன்று எழுப்புவது எவ்வாறு என எண்ணி; ***ஆழ் செவி அதனினூடு*** - ஆழமான காதுகளின் உள்ளே; ***சங்கொடு, தாரை, சின்னம்*** - சங்கு அடிக்கும் தாரை, ஊதுகொம்பு ஆகிய கருவிகளின் மூலம், *சமைவுறச் சாற்றலுற்றார்* - பெருத்த பேரொலி செய்யத் தொடங்கினார்கள்.

*7323.* ***கோடு, இகல் தண்டு கூடம், குந்தம், வல்லோர்கள்***
***கூடி,***
***தாடைகள், சந்து, மார்பு, தலை எனும் இவற்றில்***

***தாக்கி,***
***வாடிய கையர் ஆகி, மன்னவற்கு உரைப்ப, 'பின்னும்***
***நீடிய பரிகள் எல்லாம் நிரைத்திடும், விரைவின்'***
***என்றான்.***

***கோடு இகல் தண்டு*** *- மலையோடு மாறுபட்ட தண்டாயுதமும்;* ***கூடம்*** *- சம்மட்டியும்;* ***குந்தம்*** *- ஈட்டி;* ***வல்லோர்கள் கூடி*** *- என்னும் இப்படைக்கலங்களைக் கையாள்வதில் பயிற்சி வலிமையுடையவர்கள் ஒருங்கு கூடித்;* ***தாடைகள்*** *- கும்பகருணனது கன்னத்தாடைகள்;* ***சந்து*** *- உடல் பொருத்துக்கள்;* ***மார்பு*** *- மார்பு;* ***தலை*** *- தலை;* ***எனும் இவற்றில் தாக்கி*** *- என்னும் உடலின் மெல்லிய பகுதிகளில் எல்லாம் தாக்கி;* ***வாடிய கையர் ஆகி*** *- துயிலெழுப்ப முடியாது கை ஓய்ந்தவர்களாய்;* ***மன்னவற்கு உரைப்ப*** *- இராவணனிடம் சென்று அதனைத் தெரிவிக்க;* ***பின்னும் நீடிய பரிகள் எல்லாம் விரைவின் நிரைத்திடும்*** *- அதற்கு அவன் இதற்கு மேல் நீண்ட குதிரைகளை எல்லாம் சீக்கிரம் வரிசையாக நிரம்பச் செலுத்துங்கள்; என்றான்.*

*7324.* ***கட்டுறு கவன மா ஓர் ஆயிரம் கடிதின் வந்து,***
***மட்டு அற உறங்குவான்தன் மார்பிடை, மாலை மான***
***விட்டு உற நடத்தி, ஓட்டி, விரைவு உள சாரி***
***வந்தார்;***
***தட்டுறு குறங்கு போலத் தடந் துயில்***
***கொள்வதானான்.***

***மட்டுஅற உறங்குவான் தன்*** *- (இராவணன் ஆணை பெற்ற வீரர்கள்) அளவு மீறி அதிகமாக உறங்குபவனான கும்பகருணனது;* ***மார்பிடை*** *- மார்பில்;* ***ஓர் ஆயிரம்*** *- ஓராயிரம்;* ***கட்டுறு கவனமா*** *- கடிவாளம் பூட்டப்பெற்ற விரைவாகச் செல்லும் குதிரைகளுடன்;* ***கடிதின் வந்து*** *- விரைந்து வந்து;* ***விட்டு உற நடத்தி ஓட்டி*** *- அவற்றை மார்பில் நடத்தி ஓட்டி;* ***மார்பிடை மாலைமான*** *- அவனுடைய மார்புக்கு மாலை போல;* ***விரைவுளசாரி வந்தார்*** *- விரைவாகச் சுற்றி வந்தார்கள்; (அவ்வாறு அவர்கள் செய்த செயலால்)* ***குறங்கு தட்டுறு போல*** *- துடையைத் தட்டுவது போலத்;* ***தடந்துயில் கொள்வதானான்*** *- அவன் பெருந்துயில் கொள்ளலானான்.*

*முன்பே அளவு மீறிய தூக்கம் குதிரைகளை நடத்தியதால் உடம்பு பிடித்துவிட்டது போல் ஆகி பெருந்தூக்கமாய் விட்டது.*

*7325.* ***கொய்ம் மலர்த் தொங்கலான்தன் குரை கழல்***
***வணங்கி, 'ஐய!***
***உய்யலாம் வகைகள் என்று, அங்கு எழுப்பல் ஆம்***

***வகையே செய்தும்;***
***கய் எலாம் வலியும் ஓய்ந்த; கவன மா காலும்***
***ஓய்ந்த;***
***செய்யலாம் வகை வேறு உண்டோ? செப்புதி,***
***தெரிய' என்றார்.***

***கொய்ம்மலர்த் தொங்கலான் தன்*** - *(குதிரைகளை விட்டு உழக்கி எழுப்ப முடியாத வீரர்கள்) கொய்த மலர்களால் தொடுக்கப் பெற்ற இராவணனது;* ***குரைகழல் வணங்கி*** - *ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த பாதங்களை வணங்கி;* ***ஐய*** - *ஐயனே;* ***உய்யலாம் வகைகள் என்று*** - *அக்கும்பகருணனை எழுப்பினால் போரில் வென்று உய்யலாம் என எண்ணி;* ***அங்கு எழுப்பல் ஆம் வகையே செய்தும்*** - *அவனை எழுப்பக்கூடிய எல்லா வழிகளையும் செய்தோம் அவ்வாறு செய்ததால்;* ***கய் எலாம் வலியும் ஓய்ந்த*** - *எங்கள் கை வலிமை எல்லாம் போய்விட்டது;* ***கவனமா காலும் ஓய்ந்த*** - *விரைந்து செல்லும் குதிரைகளின் காலும் அவன் மார்பை மிதித்து ஓய்ந்தன;* ***செய்யலாம் வகை வேறு உண்டோ?*** - *இனி அக்கும்பகருணனைத் துயிலெழுப்பச் செய்யக்கூடிய வழி வேறு ஏதாவது உண்டோ;* ***செப்புதி தெரிய என்றார்*** - *உண்டெனின் யாங்கள் அறியும்படி சொல்லுவாயாக என்றார்கள்.*

### கொச்சகக்கலிப்பா

*7326.* ***'இடை பேரா இளையானை, இணை ஆழி மணி***
***நெடுந் தேர்***
***படை பேரா வரும்போதும், பதையாத உடம்பானை,***
***மடை பேராச் சூலத்தால், மழு வாள் கொண்டு***
***எறிந்தானும்,***
***தொடை பேராத் துயிலானை, துயில் எழுப்பிக்***
***கொணர்க!' என்றான்.***

***இடை பேரா இளையானை*** - *எக்காலத்திலும் என்னை விட்டு நீங்காத தம்பியும்;* ***இணை ஆழி மணி நெடுந்தேர்*** - *இரண்டாக இணைந்த சக்கரங்களையுடைய மணிகளால் அழகுபடுத்தப்பட்ட பெரிய தேர்ப்;* ***படை பேரா வரும் போதும்*** - *படை முதலிய படைகள் தன் மீது எதிர்த்து வந்தாலும்;* ***பதையாத உடம்பானை*** - *சிறிதும் மனம் மற்றும் உடல் வருத்தப்படுதலில்லாதவனும்;* ***தொடை பேராத்துயிலானை*** - *இடைவிடாது உறங்குகின்றவனும் ஆகிய கும்பகருணனை;* ***மடை பேராச்சூலத்தால்*** - *மூட்டுவாய் நீங்காத சூலப்படையாலும்;* ***மழுவாள் கொண்டு*** - *மற்றும் நீங்காத சூலப்படையாலும்;* ***மழுவாய் கொண்டு*** - *மற்றும் மழுப்படை வாட்படையாலும்;* ***எறிந்தானும்*** - *தாக்கியாயினும்;* ***துயில் எழும்பிக் கொணர்க என்றான்*** - *துயில் எழுப்பி அழைத்து வருக என்று இராவணன் கூறினான்.*

*தொடை-மாலை போல் இடைவிடாது இருத்தல். மடை-மூட்டு. இடை பேரா இளையானை-என்ற தொடர் தன்னை விட்டு நீங்கிய வீடணன் போல்*

*இக்கும்பகருணன் தன் வாழ்விலும் தாழ்விலும் உடன்நிற்பவன் என்று இராவணன் கொண்டுள்ள நம்பிக்கையைச் சுட்டி நிற்கிறது. "தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்" என்று பின்னால் கும்பகருணன் கூறுவதும், "ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்குரிய தம்ம" (7429, 7428) என அவன் கூறுவதும் சேர்த்து எண்ணத் தக்கன.*

***7327. என்றலுமே அடி இறைஞ்சி, ஈர்-ஐஞ்ஞூற்று இராக்கதர்கள்,***
***வன் தொழிலால் துயில்கின்ற மன்னவன்தன் மாடு அணுகி,***
***நின்று இரண்டு கதுப்பும் உற, நெடு முசலம் கொண்டு அடிப்ப,***
***பொன்றினவன் எழுந்தாற்போல், புடைபெயர்ந்து அங்கு எழுந்திருந்தான்.***

**என்றலுமே** - *என்று இராவணன் கூறியவுடனே;* **அடி இறைஞ்சி** - *அவனது அடியை வணங்கிவிட்டு;* **ஈர்-ஐஞ்ஞூற்று** - *ஆயிரம்;* **இராக்கதர்கள்** - *அரக்கர்கள்;* **துயில்கின்ற மன்னவன் தன் மாடு அணுகி நின்று** - *உறங்குகின்ற கும்பகருணனது பக்கத்தில் நெருங்கி நின்று;* **வன்தொழிலால்** - *தங்களது வலிய தொழில் திறத்தால்;* **இரண்டு கதுப்பும் உற** - *இரண்டு கன்னத்திலும் பொருந்துமாறு;* **நெடு முசலம் கொண்டு அடிப்ப** - *நீண்ட உலக்கைகளைக் கொண்டு அடிக்கப்;* **பொன்றினவன் எழுந்தாற்போல்** - *இறந்தவன் எழுந்தது போல;* **புடை பெயர்ந்து** - *படுத்த இடத்தை விட்டு அசைந்து;* **அங்கு எழுந்திருந்தான்** - *அப்போது எழுந்தான்.*

*பொனறினவன் எழுந்தாற்போல் - என்ற பாடல் வரி துயிலெழுப்பல் நிகழ்ச்சியோடும் தீமையின் அழிவு என்ற பாவிக நோக்கத்தோடும் கவிஞனால் அமைக்கப்பட்டுள்ள வரியாகும். மேலும் இது கவிக்கூற்று பின் வருவது காட்டும் முன்னோடியாக விளங்குவதையும் உணர்த்துகிறது.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***7328. மூவகை உலகும் உட்க, முரண் திசைப் பணைக் கை யானை***
***தாவரும் திசையின்நின்று சலித்திட, கதிரும் உட்க,***
***பூவுளான், புணரி மேலான், பொருப்பினான், முதல்வர் ஆய***
***யாவரும் துணுக்குற்று ஏங்க, எளிதினின் எழுந்தான், வீரன்.***

***வீரன்*** - *வீரனாகிய கும்பகருணன்;* ***மூவகை உலகும் உட்க*** - *மூன்று உலகங்களும் அஞ்சி நடுங்கவும்;* ***முரண் திசைப் பணைக்கையானை*** - *ஒன்றோடு ஒன்று முரண்பட்டு எதிர் எதிர் நிற்கும் திசைகளில் உள்ள வலிய பருத்த கைகளைக் கொண்ட திசையானைகள்;* ***தாவரும் திசையின் நின்று சலித்திட*** - *தங்களுக்கு உரிய திசைகளில் இருந்து நிலை பெயரவும்;* ***கதிரும் உட்க*** - *சூரியனும் அஞ்சி நடுங்கவும்;* ***பூவுளான்*** - *பிரமனும்;* ***புணரி மேலான்*** - *பாற்கடலிற் பள்ளி கொண்டுள்ள திருமாலும்:* ***பொருப்பினான்*** - *வெள்ளிப் பொருப்பில் தங்கியுள்ள சிவனும் -* ***முதல்வர் ஆய யாவரும்*** - *ஆகிய மூவரை முதலாகக் கொண்ட பிற தேவர்களும் பிறரும்;* ***துணுக்குற்று ஏங்க*** - *நடுக்கம் உற்று ஏக்கங்கொள்ளுமாறு;* ***எளிதினின் எழுந்தான்*** - *எளிமையாக எழுந்தான்.*

*7329.* ***விண்ணினை இடறும் மோலி; விசும்பினை***
***நிறைக்கும் மேனி;***
***கண்ணெனும் அவை இரண்டும் கடல்களின் பெரிய***
***ஆகும்;***
***எண்ணினும் பெரியன் ஆன இலங்கையர் வேந்தன்***
***பின்னோன்,***
***மண்ணினை அளந்து நின்ற மால் என வளர்ந்து***
***நின்றான்.***

***எண்ணினும் பெரியன் ஆன*** - *எண்ணும் எண்ணத்தில் அடங்காத வலிமையும் வர ஆற்றலும் பெற்ற பெரியவன் ஆன;* ***இலங்கையர் வேந்தன்*** - *இலங்கையர்க்கு அரசனான இராவணனது;* ***பின்னோன்*** - *பின்பிறந்தவனான கும்பகருணன்;* ***விண்ணினை இடறும் மோலி*** - *ஆகாயத்தை முட்டும் மோலியுடனும்;* ***விசும்பினை நிறைக்கும் மேனி*** - *ஆகாயத்தை மறைக்கும் மேனியுடனும்;* ***கடல்களின் பெரிய ஆகும்*** - *கடலை விடப் பெரியவை என்று சொல்லும் படியான;* ***கண்ணெனும் இவை இரண்டும்*** - *கண்கள் இரண்டு உடனும் தோன்றினான்; (அத்தோற்றம்)* ***மண்ணினை அளந்து நின்றமால்*** - *மாபலியிடம் மூவடி மண் கேட்ட குறளனாக வந்த திருமால்;* ***என வளர்ந்து நின்றான்*** - *வளர்ந்து நின்றது போல் இருந்தது என்றவாறு.*

*கும்பகருணன் உணவு அருந்தல்*

**கலிவிருத்தம்**

*7330.* ***உறக்கம் அவ் வழி நீங்கி, உணத் தகும்***
***வறைக்கு அமைந்தன ஊனொடு, வாக்கிய***
***நறைக் குடங்கள் பெறான், கடை நக்குவான்,***
***இறக்க நின்ற முகத்தினை எய்துவான்;***

***அவ்வழி உறக்கம் நீங்கி*** - *அப்போது முற்றும் உறக்கம் கலைந்து;* ***உணத்தகும்*** - *உடனே உண்ணுதற்குத் தகுந்த;* ***வறைக்கு அமைந்தன ஊனொடு*** - *வறுத்தல் செய்யப்பட்ட;* ***வாக்கிய நறைக் குடங்கள் பெறான்*** - *நிரப்பிய கட்குடங்களும் குடித்தற்குக் கிடைக்காமையாலே;* ***இறக்க நின்ற முகத்தினை எய்துவான்*** - *சோர்ந்து தாழ்ந்த முகத்தினையுடையவனாய்க்;* ***கடை தக்குவான்*** - *தன் கடை வாயை நக்கினான்.*

*பசியின் மிகுதியால் முகஞ்சோர்தலும், கடை வாயை நக்குதலும் செய்யவேண்டிய நிலை கும்பகருணனுக்கு ஏற்பட்டது என்பது குறிப்பு. வறை-வறுத்தல். வாக்குதல்-நிரம்ப வார்த்தல். இறக்க-சோர்ந்து தாழ, இறங்க என்பதன் வலித்தல் விகாரம் தொடை பற்றி வந்தது.*

***7331. ஆறு நூறு சகடத்து அடிசிலும்,***
***நூறு நூறு குடம் களும், நுங்கினான்;***
***ஏறுகின்ற பசியை எழுப்பினான்--***
***சீறுகின்ற முகத்து இரு செங்கணான்.***

***சீறுகின்ற முகத்து*** - *சினம் மிக்குத் தோன்றுகின்ற முகத்தில்;* ***இரு செங்கணான்*** - *அச்சினம் மேலும் மிக்குத் தோன்றுவதற்கு அமைந்த சிவந்த இரு கண்களையுடைய கும்பகருணன்;* ***ஆறுநூறு சகடத்து அடிசிலும்*** - *அறுநூறு வண்டிச் சோற்றையும்;* ***நூறு நூறு குடங்களும்*** - *பல நூறு குடம் கள்ளையும்;* ***நுங்கினான்*** - *விரைந்து உண்டான்;* ***ஏறுகின்ற பசியை எழுப்பினான்*** - *அதனால் அவன் மிகுகின்ற பசியை மேலும் அதிகமாக எழுப்பியவன் ஆனான்.*

*கள்ளும்-களும்; தொக்கது. கும்பகருணன் பேருண்டி உண்பவன் என்பதை இப்பாடல் விளக்குகிறது. பேருண்டி தாமச குணச் செயல்பாடு கொண்டது. இவ்வளவு உணவும் பசியை எழுப்பிற்றே விர, பசியைத் தீர்க்கவில்லை என்றார்.*

***7332. எருமை ஏற்றை ஓர் ஈர்-அறுநூற்றையும்***
***அருமை இன்றியே தின்று, இறை ஆறினான்,***
***பெருமை ஏற்றது கோடும் என்றே-பிறங்கு***
***உருமைஏற்றைப் பிசைந்து, எரி ஊதுவான்.***

***பிறங்கு உருமை ஏற்றை*** - *விளங்குகின்ற ஆண் இடியைப்;* ***பிசைந்து எரி ஊதுவான்*** - *கையினால் பிசைந்து நெருப்புப் பொறியாக ஊதவல்ல வலிமையுடைய கும்பகருணன்;* ***பெருமை ஏற்றது*** - *பெருமை பெற்றதாகிய பேருண்டியைக்;* ***கோடும் என்றே*** - *உட்கொள்வோம் என்று கருதி;* ***எருமை ஏற்றை ஓர் ஈர் அறு நூற்றையும்*** - *எருமைக்கடாக்கள் ஆயிரத்திருநூற்றையும் அருமை இன்றியே;* ***தின்று*** - *வருத்தமில்லாமல் தின்று, இறை ஆறினான்-ஓரளவு பசி தணித்தான்.*

*மிகுதியான உணவும் மிகுதியான உறக்கமும் மிகப் பரந்த பேருடம்பும் மிகுதியான சினமும், மிகுதியான வலிமையும் உடையவன் கும்பகருணன் என அவனது பாத்திரத்தன்மையை மிகுத்துக் கூறியது காண்க.*

*கும்பகருணன் தோற்றம்*

***7333. இருந்த போதும், இராவணன் நின்றெனத்***
***தெரிந்த மேனியன், திண் கடலின் திரை***
***நெரிந்தது அன்ன புருவத்து நெற்றியான்,***
***சொரிந்த சோரி தன் வாய் வர, தூங்குவான்;***

***திண் கடலின் திரை தெரிந்தது அன்ன*** *- வலிய கடலின் அலைகள் வளைந்து, தோன்றுவதைப் போன்ற;* ***புருவத்து நெற்றியான்*** *- புருவத்தைக் கொண்ட நெற்றியை உடையவனும்;* ***சொரிந்த சோரி தன் வாய் வர தூங்குவான்*** *- தான் உண்ட ஊனில் இருந்து வெளிவரும் குருதி தன் வாயில் இருந்து வெளிப்படுமாறு உறங்குபவனும் ஆன கும்பகருணன்;* ***இருந்த போதும்*** *- உட்கார்ந்திருந்த போதும்;* ***இராவணன் நின்றெனத் தெரிந்த மேனியன்*** *- இராவணன் எழுந்து நின்றது போன்றுள்ள ஓங்கிய உடம்பினையுடையவன் ஆக விளங்கினான்.*

***7334. உதிர வாரியொடு ஊனொடு எலும்பு தோல்***
***உதிர, வாரி நுகர்வது ஓர் ஊணினான்;***
***கதிர வாள் வயிரக் பணைக் கையினான்;***
***கதிர வாள் வயிரக் கழற் காலினான்;***

***உதிர வாரியொடு*** *- குருதி பெருக்கெடுக்கும்;* ***ஊனொடு எலும்பு தோல் உதிர*** *- ஊனும் எலும்பும் தோலும் சிதறி விழுமாறு;* ***வாரி நுகர்வது ஓர் ஊணினான்*** *- வாரி எடுத்து உட்கொள்ளும் உண்ணுதல் தொழில் உடையவன்;* ***கதிர வாள்*** *- ஒளியையுடைய வாளேந்திய;* ***வயிரப் பணைக்கையினான்*** *- வலிமையுடைய பருத்த கைகளை உடையவன்;* ***கதிரவாள்*** *- கதிரின் ஒளி போல் ஒளி விடுகிற;* ***வயிரக் கழற் காலினான்*** *- வயிரங்கள் பதிக்கப்பட்ட வீரக்கழல் அணிந்த கால்களை உடையவன்.*

*கதிர-பெயரெச்சம். உதிர-செய என்னும் வாய்பாட்டு வினை எச்சம்.*

***7335. இரும் பசிக்கு மருந்து என, எஃகினோடு***
***இரும்பு அசிக்கும் அருந்தும் எயிற்றினான்;***
***வரும் களிற்றினைத் தின்றனன்; மால் அறா***

***அருங் களில் திரிகின்றது ஓர் ஆசையான்;***

***எஃகினோடு இரும்பு அசிக்கும்*** - எஃகு, இரும்பு முதலியவற்றை அவமதிக்கின்ற; ***அருந்தும் எயிற்றினன்*** - உண்ணும் பற்களை உடையவன்; ***இரும்பசிக்கு மருந்து என*** - தன் மிக்க பசியைத் தணிப்பதற்கு மருந்து என்று; ***வரும் களிற்றினைத் தின்றனன்*** - தன்மேல் வரும் களிறுகளைத் தின்றான்; ***மால் அறா அரும்களில்*** - மயக்கம் தருவதில் இருந்து நீங்காத அருமையான கள்ளில்; ***திரிகின்றது ஓர் ஆசையான்*** - செல்லுகின்ற மனவிருப்பம் உடையவன். அசித்தல்-அவமதித்துச் சிரித்தல். களில்-இடைக்குறை.

***7336. சூலம் ஏகம் திருத்திய தோளினான்;
சூல மேகம் எனப் பொலி தோற்றத்தான்;
காலன்மேல் நிமிர் மத்தன்; கழல் பொரு
காலன்; மேல் நிமிர் செம் மயிர்க் கற்றையான்;***

***ஏகம் சூலம்*** - ஒப்பற்ற சூலப்படையைத்; ***திருத்திய தோளினான்*** - தீட்டி வைத்துள்ள தோளினையுடையவன்; ***சூலமேகம் எனப் பொலி தோற்றத்தான்*** - கருக்கொண்ட கருமேகம் போல் விளங்குகின்ற தோற்றம் உள்ளவன்; ***காலன் மேல் நிமிர்மத்தன்*** - இயமன் மேல் போருக்குச் செல்லும் அளவு உடற்செருக்குடையவன்; ***கழற்பொருகாலன்*** - வீரக் கழல் அணிந்த கால்களை உடையவன்; ***மேல்நிமிர் செம்மயிர்க் கற்றையான்*** - மேல் நோக்கி வளர்ந்த சிவந்த மயிர்த் தொகுதியை உடையவன்.

***7337. எயில் தலைத் தகர, தலத்து இந்திரன்
எயிறு அலைத்த கரதலத்து, எற்றினான்;
அயில் தலைத் தொடர் அங்கையன்; சிங்க ஊன்
அயிறலைத் தொடர் அங்கு அகல் வாயினான்.***

***இந்திரன் எயிறு அலைத்த கரதலத்து*** - இந்திரனது பற்களை உதிரச் செய்தகையினால்; ***தலத்து எயில் தலைத் தகர எற்றினான்*** - அவனது இந்திரலோகத்தில் உள்ள மதில் தலையுடைந்திடும்படி மோதியவன்; ***அயில் தலைத் தொடர் அங்கையன்*** - வேற்படை தலைமையாக உடைய அகங்கைகளை உடையவன்; ***சிங்க ஊன் அயிறலைத் தொடர் அங்கு அகல் வாயினான்*** - சிங்க ஊனை உண்ணுவதை மேற்கொண்டு அகன்ற வாயினை உடையவன்.

***7338. உடல் கிடந்துழி, உம்பர்க்கும் உற்று, உயிர்***

***குடல் கிடந்து அடங்கா நெடுங் கோளினான்;***
***கடல் கிடந்தது நின்றதன்மேல் கதழ்***
***வட கடுங் கனல்போல் மயிர்ப் பங்கியான்;***

***உடல் கிடந்துழி*** - *தன் உடல் படுத்துக் கிடக்கும்போதே;* ***உம்பர்க்கும்*** - *தேவர்களுக்கும்;* ***உயிர்க்குடல் கிடந்து உற்று அடங்கா*** - *உயிர் வாழத் தேவையான குடல் இருக்கவேண்டிய இடத்துக் கிடந்து அடங்காதே;* ***நெடுங்கோளினான்*** - *மிக்க வலிமை உடையவன்;* ***கடல் கிடந்தது*** - *கடல் ஒன்று படுத்திருப்ப;* ***அதன் மேல் நின்ற*** - *அந்தக் கடலின் மீது நின்ற;* ***கதழ் வட நெடுங்கனல் போல்*** - *ஒளி விடும் கோபமிக்க கொடிய வடவைக் கனல் போல் அமைந்த;* ***மயிர்ப் பங்கியான்*** - *செம்மயிர்க் கற்றையை உடையவன்.*

*இவன் படுத்திருக்கும் போதே தேவர் குடல் கலங்கி நடுங்குவர்.*

***7339. திக்கு அடங்கலும் வென்றவன் சீறிட,***
***மிக்கு அடங்கிய வெங் கதிர் அங்கிகள்***
***புக்கு அடங்கிய மேருப் புழை என,***
***தொக்கு அடங்கித் துயில்தரு கண்ணினான்;***

***திக்கு அடங்கலும் வென்றவன்*** - *திக்குகள் முழுவதையும் வென்றவனான இராவணன்;* ***சீறிட*** - *சினந்து சீறிடும்போது;* ***மிக்கு அடங்கிய*** - *அச்சீற்றத்துக்கு முன் மிகவும் அடங்கிய;* ***வெங்கதிர்*** - *சூரியனும்,;* ***அங்கிகள்*** - *நெருப்பும்;* ***புக்கு அடங்கிய*** - *அஞ்சிப் புகுந்து பதுங்குவதற்குரிய;* ***மேருப்புழை என*** - *மேரு மலையில் உள்ள குகை போல் தோன்றுகிற;* ***தொக்கு அடங்கித்*** - *தோல் சுருங்கித்;* ***துயில் தரு கண்ணினான்*** - *உறக்கக் குறிப்பை வெளிக்காட்டும் கண்களை உடையவன்.*

*தொக்கு-தோல். தொக்கடங்கி-மிகச் சுருங்கி. ஒரு பொருட்பன்மொழி. இப்பாடலில் கும்பகருணனின் கண்ணின் வருணனை கூறப்பட்டுள்ளது.*

***7340. காம்பு இறங்கும் கன வரைக் கைம்மலை***
***தூம்பு உறங்கும் முகத்தின் துய்த்து, உடல்***
***ஓம்புறும் முழை என்று உயர் மூக்கினான்;***
***பாம்பு உறங்கும் படர் செவிப் பாழியான்;***

***தூம்பு உறங்கும் முகத்தின் கைம்மலை*** - *துளை உடைய துதிக்கை பொருந்திய முகத்தினையுடைய யானைகள்;* ***துய்த்து உடல் ஓம்புறும்*** - *உண்டு உடலைப் பேணுவதற்குரிய;* ***காம்பு இறங்கும் கனவரை முழை என்று*** - *மூங்கில் தாழ வளர்ந்த*

*பெரிய மலையில் உள்ள குகை எனுமாறு;* ***உயர் மூக்கினான்*** *- பெரிய மூக்கினையுடையவன்;* ***பாம்பு உறங்கும்*** *- பாம்பு உறங்குமாறு அமைந்த;* ***படர் செவிப் பாழியான்*** *- பரந்து நீண்ட காதாகிப் படுக்கையிடத்தை உடையவன்.*

*கும்பகருணன் என்ற பெயரே அவனது படர் செவிப்பாழியால் வந்தது.*

*கும்பகருணன் இராவணன் சந்திப்பு*

***7341. 'கூயினன் நும் முன்' என்று அவர் கூறலும்,***
***போயினன், நகர் பொம்மென்று இரைத்து எழ;***
***வாயில் வல்லை நுழைந்து, மதி தொடும்***
***கோயில் எய்தினன், குன்று அன கொள்கையான்.***

***நும்முன் கூயினன்*** *- உன் தமையன் உன்னை அழைத்தான்;* ***என்று அவர் கூறலும்*** *- என்று துயில் எழுப்பிய அரக்கர் கூறிய உடன்;* ***குன்று அன கொள்கையான்*** *- மலையை ஒத்த தோற்றமும் கொள்கை உறுதியும் உள்ள கும்பகருணன்;* ***நகர் பொம்மென்று இரைத்து எழப்போயினன்*** *- இலங்கை மாநகர மக்கள் பொம்மென்று அவனைக் கண்டு மகிழ்ச்சி ஒலி எழுப்பப் போய்;* ***மதி தொடும் கோயில் வாயில் வல்லை நுழைந்து எய்தினன்*** *- சந்திரனைத் தொடும் அளவு ஓங்கி உயர்ந்துள்ள இராவணனது அரண்மனை வாயிலில் விரைவாக நுழைந்து சேர்ந்தான்.*

***7342. நிலை கிடந்த நெடு மதிள் கோபுரத்து***
***அலை கிடந்த இலங்கையர் அண்ணலைக்***
***கொலை கிடந்த வேல் கும்பகருணன், ஓர்***
***மலை கிடந்தது போல, வணங்கினான்.***

***நெடுமதிள் நிலை கிடந்த கோபுரத்து*** *- நீண்ட மதிலையும் பலநிலைகளாகக் கிடந்த கோபுரத்தையும் உடைய;* ***அலை கிடந்த இலங்கையர் அண்ணலைக்*** *- கடலால் சூழப்பெற்ற இலங்கை மக்களுக்குத் தலைவனான இராவணனைக்;* ***கொலை கிடந்த வேல் கும்பகருணன்*** *- கொலைத்தொழிலில் பயின்ற வேல் ஏந்திய கும்பகருணன்;* ***ஓர் மலை கிடந்தது போல வணங்கினான்*** *- ஒரு மலை படுத்துக் கிடப்பதைப் போன்று நிலத்தில் விழுந்து வணங்கினான்.*

***7343. வன் துணைப் பெருந் தம்பி வணங்கலும்,***
***தன் திரண்ட தோள் ஆரத் தழுவினான்--***
***நின்ற குன்று ஒன்று, நீள் நெடுங் காலொடும்***

**சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான். வன் துணைப் பெருந்தம்பி வணங்கலும்** - *தனக்கு வலிமையான துணைவனான பெருமை பெற்ற தம்பியாகிய கும்பகருணன் கிடந்து தன்னை வணங்கிய உடனே;* **நின்ற குன்று ஒன்று** - *அசையாது நிலை பெற்று நின்ற குன்று ஒன்று;* **நீள் நெடுங்காலொடும்** - *மிக நீண்ட காலோடு;* **சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்** - *தன்னை நோக்கி வந்த மலையைத் தழுவிக் கொண்டது போன்ற தன்மையனாய்;* **தன் திரண்ட தோள் ஆரத் தழுவினான்** - *தன் திரண்ட தோளினால் ஆரத் தழுவிக் கொண்டான்.*

*நின்ற குன்று-இராவணன். சென்ற குன்று-கும்பகருணன். ஆர-நன்றாக.*

*7344.* **உடன் இருத்தி, உதிரத்தொடு ஒள் நறைக்**
**குடன் நிரைத்தவை ஊட்டி, தசைக் கொளீஇ,**
**கடல் நுரைத் துகில் சுற்றி, கதிர்க் குழாம்**
**புடை நிரைத்து ஒளிர் பல் கலன் பூட்டினான்.***

**உடன் இருத்தி** - *இராவணன் கும்பகருணனைத் தன்னுடன் அமர்த்தி;* **உதிரத்தொடு** - *இரத்தத்துடன்;* **ஒள்நறைக்குடன் நிரைத்தவை ஊட்டி** - *சிறந்த கட்குடங்களை வரிசையாக வைத்து உண்பித்து;* **தசைக்கொளீஇ** - *ஊனையும் உண்ணக் கொடுத்து;* **கடல் நுரைத் துகில் சுற்றி** - *கடல் நுரை போன்ற வெண்பட்டாடையை அரையில் சுற்றி உடுத்து;* **கதிர்க்குழாம் புடை நிரைத்து ஒளிர் பல்கலன் பூட்டினான்** - *ஒளித்தொகுதிகளைப் பக்கங்களில் வரிசையாக வெளியிடுகின்ற பல மணிகள் பதித்த அணிகளைப் பூட்டினான்.*

*7345.* **பேர விட்ட பெரு வலி இந்திரன்**
**ஊர விட்ட களிற்றொடும் ஓடு நாள்,**
**சோர விட்ட சுடர் மணி ஓடையை**
**வீரபட்டம் என, நுதல் வீக்கினான்.**

**பெருவலி பேரவிட்ட இந்திரன்** - *தன் பெருவலிமை நிலை பெயர விட்ட இந்திரன்;* **ஊர் விட்ட களிற்றொடும் ஓடுநாள்** - *தான் செலுத்தி வந்த ஐராவதம் என்னும் யானையுடன் தோற்று ஓடும் நாளில்;* **சோரவிட்ட** - *தவறவிட்ட;* **சுடர்மணி ஓடையை** - *மிக்க ஒளியை வெளிப்படுத்துகின்ற முகபடாத்தை;* **வீரபட்டம் என நுதல் வீக்கினான்** - *வீரபட்டம் என்று கும்பகருணனது நெற்றியில் கட்டினான்.*

*7346.* **மெய் எலாம் மிளிர் மின் வெயில் வீசிட,**
**தொய்யில் வாசத் துவர் துதைந்து ஆடிய**
**கையின் நாகம் என, கடல் மேனியில்,**
**தெய்வம் நாறு செஞ் சாந்தமும் சேர்த்தினான்.**

***மெய் எலாம் மிளிர் மின் வெயில் வீசிட*** - உடம்பு எல்லாம் விளங்குகின்ற மின்னல் போல் அணிகலங்கள் ஒளிவீச; ***வாசத் தொய்யில் துவர் துதைந்து ஆடிய*** - மணமுள்ள சந்தனக் குழம்பின் செந்நிறத்தில் மிகுதியும் தோய்ந்த; ***கையின் நாகம் என*** - கை உடைய யானையைப் போல் கும்பகருணன் தோன்றுமாறு; ***கடல் மேனியில்*** - அவனது கடல் போன்ற மேனியில்; ***தெய்வம் நாறு செஞ்சாந்தமும் சேர்த்தினான்*** - தெய்வத்தன்மையுடைய இயற்கை மணம் வீசுகின்ற செஞ்சந்தனக் குழம்பைப் பூசினான்.

*7347.* **விடம் எழுந்ததுபோல், நெடு விண்ணினைத்**
**தொட உயர்ந்தவன் மார்பிடைச் சுற்றினான்,**
**இடபம் உந்தும், எழில் இரு-நான்கு தோள்,**
**கடவுள் ஈந்த கவசமும் கட்டினான்.**

***நெடுவிண்ணினைத் தொட*** - நீண்ட ஆகாயத்தைத் தீண்டுதற்காக; ***விடம் எழுந்தது போல் உயர்ந்தவன்*** - நஞ்சானது எழுந்து நின்றாற்போல உயர்ந்து நின்றவனாகிய கும்பகருணனது; ***மார்பிடை*** - மார்பில்; ***இடபம் உந்தும் எழில் இரு நான்கு தோள் கடவுள் ஈந்த*** - இடபவாகனத்தைச் செலுத்தும் அழகிய எண்தோள்களையுடைய சிவபிரான் தந்த; ***கவசமும் சுற்றினான் கட்டினான்*** - கவசத்தைச் சுற்றி வந்து கட்டினான்.

*சுற்றினான்-முற்றெச்சம். கும்பகருணனைச் சுற்றி வந்து இராவணன் கவசத்தைக் கட்டினான் என்க. எழில் இரு நான்கு தோள்கடவுள்-சிவபிரான், எண்தோள் முக்கண் எம்மான், இதனையே "போர்க்கோலம் செய்துவிட்டான்" என்று கும்பகருணன் கூறுவது (7426) காண்க.*

*கும்பகருணன் - இராவணன் உரையாடல்*

*7348.* **அன்ன காலையின், 'ஆயத்தம் யாவையும்**
**என்ன காரணத்தால்?' என்று இயம்பினான்--**
**மின்னின் அன்ன புருவமும், விண்ணினைத்**
**துன்னு தோளும், இடம் துடியாநின்றான்.**

***மின்னின் அன்ன புருவமும்*** - மின்னலைப் போன்ற வடிவமும் நிறமும் உடைய புருவமும்; ***விண்ணினைத் துன்னுதோளும்*** - வானத்தை நெருங்குமளவு உயர்ந்த தோளும்; ***இடந்துடியா நின்றான்*** - இடப்பக்கத்திலேயே துடிக்கப் பெற்றவனான கும்பகருணன்; ***அன்ன காலையில்*** - அப்போது; ***ஆயத்தம் யாவையும் என்ன***

***காரணத்தால்*** - *இப்போர் ஆயத்தங்கள் செய்யப்படுவது என்ன காரணத்தால்;* ***என்று இயம்பினான்*** - *என்று வினவினான்.*

*மந்திரப்படலத்து அறிவுரை கூறிய கும்பகருணன் பின்பு உறங்கச் சென்றுவிட்டதால் நடந்த நிகழ்ச்சிகளை அறியாது இவ்வாறு வினவினான் என்க. ஆயத்தம்-போருக்குரிய ஏற்பாடுகள், துடியா-செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். ஆண்களுக்கு இடப்புறத்துப் புருவமும் தோளும் துடித்தல் தீ நிமித்தம் என்க.*

***7349. 'வானரப் பெருந் தானையர், மானிடர்,***
***கோ நகரப் புறம் சுற்றினர்; கொற்றமும்***
***ஏனை உற்றனர்; நீ அவர் இன் உயிர்***
***போனகத் தொழில் முற்றுதி, போய்' என்றான்.***

***மானிடர்*** - *மானிடர் இருவர்;* ***வானரப்பெருந் தானையர்*** - *வானரப் பெருஞ் சேனையுடையவர்களாய்க்;* ***கோநகரப் புறம் சுற்றினர்*** - *நம் நகரப்புறத்தைச் சுற்றி வளைத்தனர்;* ***ஏனை கொற்றமும் உற்றனர்*** - *ஏனையவர் யாரும் பெறாத வெற்றியையும் அடைந்துள்ளார்கள்;* ***நீ அவர் இன் உயிர் போனகத் தொழில் முற்றுதி போய் என்றான்*** - *நீ போய் அவர்களுடைய உயிரை உண்ணுகின்ற தொழிலைச் செய்து முடிப்பாய் என்று இராவணன் கூறினான்.*

*தான் தோற்றதாகக் கூறாமல் அவர் வெற்றி உற்றதாகக் கூறிய நயம் காண்க. போனகத் தொழில் முற்றுதி-என்ற தொடர்க்கு, நீ அவருடைய இனிய உயிரை உண்பாய் என்றும், உன்னுயிரைக் கொண்டு அவர் போனகத் தொழில் முற்றுவிப்பாய் என்றும் இருபொருள் உரைத்துக் கொள்க.*

### *கும்பகருணன் அறிவுரை*

**கலி விருத்தம் (வேறு வகை)**

***7350. 'ஆனதோ வெஞ் சமம்? அலகில் கற்புடைச்***
***சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?***
***வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்***
***போனதோ? புகுந்ததோ, பொன்றும் காலமே?***

***வெஞ்சமம் ஆனதோ*** - *கொடிய போர் தொடங்கி விட்டதோ?;* ***அலகில் கற்புடைச் சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ*** - *உவமை கூறமுடியாத கற்பையுடைய சானகியின் சிறைத்துயரம் நீங்கிய பாடு இல்லையா?;* ***வானமும் வையமும் வளர்ந்த*** -

*விண்ணுலகிலும் மண்ணுலகிலும் ஒப்புக் கூற முடியாதபடி வளர்ந்த;* ***வான் புகழ் போனதோ?*** *- உன் மிகுபுகழ் அழிந்து போய் விட்டதோ?;* ***பொன்றும் காலமே புகுந்ததோ*** *- அழிவு காலம் வந்து புகுந்து விட்டதோ?*

*கும்பகருணன் மந்திரப் படலத்துக் கூறிய அறிவுரைகளை இங்கு (6121) நினைக.*

***7351. 'கிட்டியதோ, செரு? கிளர் பொன் சீதையைச்***
***சுட்டியதோ? முனம், சொன்ன சொற்களால்,***
***திட்டியின்விடம் அன்ன கற்பின் செல்வியை***
***விட்டிலையோ? இது விதியின் வண்ணமே!***

***செருக்கிட்டியதோ*** *- போர் கிட்டி விட்டதோ?;* ***கிளர் பொன் சீதையைச் சுட்டியதோ*** *- அப்பேர் அழகு விளங்குகின்ற சீதையைக் காரணமாகக் கொண்டதோ?* ***திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை*** *- கண்ணில் நஞ்சுடைய திட்டி விடம் என்ற பாம்பு போன்ற கற்புக்கரசியை;* ***முனம் சொன்ன சொற்களால்*** *- முன்பு நான் சொல்லிய சொற்களைக் கருதிப் பார்த்து;* ***விட்டிலையோ*** *- நீ விடவில்லையோ? இது* ***விதியின் வண்ணமே*** *- அவ்வாறு விடாமல் இருந்த இது விதியின் கொடுஞ்செயல் ஆகும்.*

*திட்டியின் விடம்-கண்ணில் நஞ்சுள்ள பாம்பு. முனம்-இடைக்குறை. முனம் சொன்ன சொற்கள்-இராவணன் மந்திரப் படலத்தில் கும்பகருணன், வீடணன் ஆகியோர் கூறிய சொற்களை உள்ளடக்கிக் கூறியது.*

***7352. 'கல்லலாம் உலகினை; வரம்பு கட்டவும்***
***சொல்லலாம்; பெரு வலி இராமன் தோள்களை***
***வெல்லலாம் என்பது, சீதை மேனியைப்***
***புல்லலாம் என்பது போலுமால்--ஐயா!***

***ஐயா*** *- ஐயனே;* ***உலகினைக் கல்லலாம்*** *- உலகினைப் பெயர்த்தெடுக்கலாம்;* ***வரம்பு கட்டவும் சொல்லலாம்*** *- அது மட்டுமல்லாமல் அவ்வுலகம் முழுவதற்கும் வேலி கட்டவும் சொல்லலாம்;* ***பெருவலி இராமன் தோள்களை*** *- பெருவலிமை படைத்த இராமனது தோள் ஆற்றலை;* ***வெல்லலாம் என்பது*** *- வென்றுவிடலாம் என்று கருதுவது;* ***சீதை மேனியைப் புல்லலாம் என்பது போலுமால்*** *- சீதையின் மேனியைத் தழுவலாம் என்பது போலும்.*

*உலகைக் கல்லும் வலிமையுடையவர்களும் உலகுக்கு வேலி அமைக்கும் பெருவலி படைத்தோரும் இராமனை வென்று சீதை மேனியைப் புல்ல முடியாது என்று கூறியவாறு. ஆல்-அசை. உலகினை என்ற சொல்லைக் கல்லலாம், வரம்பு கட்டவும் சொல்லலாம் என்ற ஈரிடத்தும் இணைக்க.*

*7353.* ***'புலத்தியன் வழிமுதல் வந்த பொய் அறு***
***குலத்து இயல்பு அழிந்தது; கொற்றம் முற்றுமோ?***
***வலத்து இயல் அழிவதற்கு ஏது; மை அறு***
***நிலத்து இயல் நீர் இயல் என்னும் நீரதால்.***

***புலத்தியன் வழிமுதல் வந்த*** *- புலத்தியனுடைய மரபிலே வந்த;* ***பொய்யறு குலத்து இயல்பு அழிந்தது*** *- தருமவழி நீங்காத குலத்தின் தன்மை உன் செயலால் அழிந்துவிட்டது;* ***வலத்து இயல் அழிவதற்கு ஏது*** *- அதுவே வெற்றித் தன்மை அழிவதற்குக் காரணமாகும்;* ***கொற்றம் முற்றுமோ*** *- அதனால் உனக்கு வெற்றி கிட்டுமோ?;* ***மையறு நிலத்து இயல் நீர்இயல் என்னும் நீரதால்*** *- இது குற்றமற்ற நிலத்தின் இயல்பே நீரின் இயல்பு என்ற முறைமைக்கு ஏற்றுள்ளது.*

*நிலத்தின் இயல்புக்கேற்ப நீரின் இயல்பு அமைதல் போலச் செயலின் இயல்புக்கேற்றவாறு விளைவின் இயல்பு என்றவாறு., இனி அரக்கியாகிய நின் தாயின் இயல்புக்கேற்ப இத்தன்மை அமைந்தது போலும் என்ற குறிப்பும் உண்டு.*

***நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு***

***இனத்தியல்ப தாகு மறிவு***

*என்ற குறட்பாக் கருத்து அமைந்துள்ளது. ஆல்-அசை*

*7354.* ***கொடுத்தனை, இந்திரற்கு உலகும் கொற்றமும்;***
***கெடுத்தனை, நின் பெருங் கிளையும்; நின்னையும்***
***படுத்தனை; பல வகை அமரர்தங்களை***
***விடுத்தனை; வேறு இனி வீடும் இல்லையால்.***

*இந்திரற்கு உலகும்* ***கொற்றமும் கொடுத்தனை*** *- சீதையை விட்டிடாத இச்செயலால் உனக்குத் தோற்ற இந்திரனுக்கு அவனுடைய உலகத்தையும் வெற்றியையும் கொடுத்து விட்டாய்;* ***நின் பெருங் கிளையும் கெடுத்தனை*** *- உன்னுடைய பெரிய சுற்றத்தாராகிய அரக்கர்களையும் கெடுத்து விட்டாய்;* ***நின்னையும் படுத்தனை*** *- உன்னையும் நீயே அழித்துக் கொண்டாய்;* ***பலவகை அமரர் தங்களை விடுத்தனை*** *- பலவகையான தேவர்களையும் சிறையில் இருந்து விட வேண்டியவனாய் விட்டாய்;* ***வேறு இனி வீடும் இல்லையால்*** *- இதிலிருந்து நீங்குவதற்கு வேறு வழியும் இல்லை.*

*வீடு-விடுதலை வழி. "வேறு இனி வீடும் இல்லை" என்றது இராவணன் இயல்பினை நோக்கிக் கூறியது.*

*7355. 'அறம் உனக்கு அஞ்சி, இன்று ஒளித்ததால்; அதன்*
*திறம் முனம் உழத்தலின், வலியும் செல்வமும்*
*நிறம் உனக்கு அளித்தது; அங்கு அதனை நீக்கி, நீ*
*இற, முன் அங்கு, யார் உனை எடுத்து நாட்டுவார்?*

***இன்று அறம் உனக்கு அஞ்சி ஒளித்ததால்*** - *இப்போது உன் செயல் கண்டு அறம் அஞ்சி ஒளித்துக் கொண்டது;* ***முனம் அதன் திறன் உழத்தலின்*** - *முன்பு நீ அறத்தின் கூறுபாட்டை வருந்திச் செய்தலால்;* ***உனக்கு வலியும் செல்வமும் நிறம் அளித்தது*** - *அவ்வறம் உனக்கு வலிமை செல்வம் ஆகிய மேன்மையைக் கொடுத்தது;* ***அங்கு அதனை நீக்கி நீ இற*** - *அத்தருமத்தை நீக்கி நீ அழிகையில்;* ***யார் உனை எடுத்து அங்கு முன் நாட்டுவார்*** - *பிறர் யார் வந்து உன்னை எடுத்து மீட்க வல்லார்.*

*அறம்பல செய்து தவமும் செல்வமும் வலிமையும் பெற்ற நீ அறம் அலசெய்து அழிகிறாய் என்பது குறிப்பு. முனம், உனை-இடைக்குறைகள்.*

*7356. 'தஞ்சமும் தருமமும் தகவுமே, அவர்*
*நெஞ்சமும் கருமமும் உரையுமே; நெடு*
*வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம்*
*உஞ்சுமோ? அதற்கு ஒரு குறை உண்டாகுமோ?*

***அவர் நெஞ்சமும் கருமமும் உரையுமே*** - *அந்த மனிதர்களுடைய நெஞ்சமும் செயலும் பேச்சும்;* ***தஞ்சமும் தருமமும் தகவுமே*** - *பிறருக்கு அபயமளித்தலும், அறச்செயல் செய்வதும், நடுநிலை நின்று உண்மை கூறுவதுமாகும்;* ***நெடு வஞ்சமும் பொய்யும் வல்ல நாம்*** - *அவ்வாறன்றி நெஞ்சில் வஞ்சனையும், செயலில் பாவமும், பேச்சில் பொய்யும் வல்ல அரக்கர்களாகிய நாம்;* ***உஞ்சுமோ அதற்கு ஒரு குறையுண்டாகுமோ*** - *உய்யமுடியுமா? அவர்களின் தருமத்திற்குக் குறை ஏதாவது உண்டாகுமா என்றவாறு.*

*இச்செய்யுள் நிரனிறைப் பொருள்கோளாகும்.*

*7357. 'காலினின் கருங் கடல் கடந்த காற்றது*
*போல்வன குரங்கு உள; சீதை போகிலள்;*
*வாலியை உரம் கிழித்து ஏக வல்லன*
*கோல் உள; யாம் உளேம்; குறை உண்டாகுமோ?*

***காலினின் கருங்கடல் கடந்த*** - *தன் கால்களால் பெரிய கடலைக் கடந்த;* ***காற்றது போல்வன குரங்கு உள*** - *காற்றுப் போல் விரைந்து இயங்கும் அனுமன் போன்ற குரங்குகள் உள்ளன;* ***சீதை போகிலள்*** - *சீதை சிறையை விட்டு இன்னும் போகவில்லை;* ***வாலியை உரம் கிழித்து ஏக வல்லன கோல் உள*** - *வாலியைக் கூட மார்பைக் கிழித்துச் செல்ல வல்ல வன்மையுடைய அம்புகள் நம் பகைவர்களிடம் உள்ளன;* ***யாம் உளேம்*** - *அவற்றை ஏற்க நாம் இருக்கிறோம்;* ***குறை உண்டாகுமோ*** - *இனி நமக்கு என்ன குறையிருக்கிறது.*

### *7358. என்று கொண்டு இனையன இயம்பி, 'யான் உனக்கு*
### *ஒன்று உளது உணர்த்துவது; உணர்ந்து கோடியேல்,*
### *நன்று அது; நாயக! நயக்கிலாய்எனின்,*
### *பொன்றினை ஆகவே கோடி; போக்கு இலாய்!*

***நாயக*** - *தலைவனே;* ***என்று கொண்டு இனையன இயம்பி*** - *என்று இவ்வாறான பல சொற்களைச் சொல்லி;* ***யான் உனக்கு ஒன்று உளது உணர்த்துவது*** - *யான் உனக்கு உணர்த்த வேண்டியது மேலும் ஒன்றுள்ளது;* ***உணர்ந்து கோடியேல் நன்றது*** - *அதன் பொருள் தன்மை தெளிந்து ஏற்றுக் கொள்வாய் ஆனால் நல்லது;* ***நயக்கிலாய் எனின்*** - *அதனை விரும்பி ஏற்காமல் போவாய் ஆனால்;* ***போக்கிலாய்*** - *நல்வழியில் செல்ல வழி இல்லாதவனாவாய்;* ***பொன்றினை ஆகவே கோடி*** *இப்போதே நீ இறந்து விட்டதாகவே கருதிக் கொள் என்றவாறு.*

### *7359. 'தையலை விட்டு, அவன் சரணம் தாழ்ந்து, நின்*
### *ஐயறு தம்பியோடு அளவளாவுதல்*
### *உய் திறம்; அன்று எனின், உளது, வேறும் ஓர்*
### *செய் திறம்; அன்னது தெரியக் கேட்டியால்:*

***தையலை விட்டு*** - *சீதையைச் சிறையில் இருந்து விட்டுவிட்டு;* ***அவன் சரணம் தாழ்ந்து*** - *அந்த இராமனுடைய பாதங்களை வணங்கி;* ***நின் ஐயறு தம்பியொடு அளவளாவுதல்*** - *உனது ஐயப்படத்தகாத தம்பியாகிய வீடணனுடன் நட்புப் பூணுதல்;* ***உய்திறம்*** - *நாம் உயிர் பிழைத்திருக்க ஒரு வழியாகும்;* ***அன்று எனின் வேறும் ஓர் செய்திறம் உளது*** - *அவ்வாறு செய்வது நன்றன்று எனின் செய்ய வேண்டிய வேறு ஒரு செயலும் உள்ளது;* ***அன்னது தெரியக் கேட்டியால்*** - *அச்செயலைத் தெளிவாகக் கேட்பாயாக.*

*ஐயறுதம்பி-உன்னால் ஐயப்படத்தகாத தம்பியாகிய வீடணன், அளவளாவுதல்-நட்புப் பூணுதல். ஐயம் அறுதம்பி-இராமனைப் பரம்பொருளாக உணர்வதில் சிறிதும் ஐயப்பாடு இல்லாத வீடணன் எனினும் ஆம்.*

***7360. 'பந்தியில் பந்தியில் படையை விட்டு, அவை***
***சிந்துதல் கண்டு, நீ இருந்து தேம்புதல்***
***மந்திரம் அன்று; நம் வலி எலாம் உடன்***
***உந்துதல் கருமம்' என்று உணரக் கூறினான்.***

***நீ இருந்து*** - நீ இங்கிருந்து கொண்டு; ***பந்தியில் பந்தியில் படையை விட்டு*** - பகுதி பகுதியாகப் படைகளைப் போருக்குவிட்டு; ***அவை*** - அப்படைகள்; ***சிந்துதல் கண்டு*** - உயிர் விட்டு அழிதல் கண்டு; ***தேம்புதல்*** - எண்ணி எண்ணி வருந்துதல்; ***மந்திரம் அன்று*** - உரிய ஆலோசனையான செயலன்று; ***நம் வலி எலாம் உடன் உந்துதல்*** - நமது படை வலிமை முழுமையையும் பகைவர் மேல் செலுத்துதல்; ***கருமம்*** - செயத்தகுசெயல்; ***என்று உணரக் கூறினான்*** - என்று இராவணன் உணருமாறு கும்பகருணன் கூறினான்.

*இராவணனின் சினமொழி*

***7361. 'உறுவது தெரிய அன்று, உன்னைக் கூயது;***
***சிறு தொழில் மனிதரைக் கோறி, சென்று; எனக்கு***
***அறிவுடை அமைச்சன் நீ அல்லை, அஞ்சினை;***
***வெறுவிது, உன் வீரம்' என்று இவை விளம்பினான்;***

***உன்னைக் கூயது*** - உன்னை இங்கு அழைத்தது; ***உறுவது தெரிய அன்று*** - இனிமேல் நடக்கப் போவதைத் தெரிந்து கொள்வதற்கல்ல; ***சென்று*** - போருக்குச் சென்று; ***சிறுதொழில் மனிதரைக் கோறி*** - சிறுதொழிலுடைய மானிடரைக் கொல்வாய்; ***எனக்கு அறிவுடை அமைச்சன் நீ அல்லை*** - எனக்கு அறிவுரை கூறுவதற்கு நீ அறிவு படைத்த அமைச்சன் அன்று; ***அஞ்சினை*** - நீ போருக்கு அஞ்சுகிறாய்; ***உன் வீரம் வெறுவிது*** - உன் வீரம் வீணானது; ***என்று இவை விளம்பினான்*** - என்று கூறி மேலும் இவைகளைக் கூறினான்.

*பகைவர் வலியறியாமை, தன் வலிவியத்தல், அறிவுரை கூறுவதை ஏற்காமை ஆகிய இராவணனது மனப்பண்புகள் அவன் அழிவுக்குரிய காரணங்களாகக் காணப்படுகின்றன.*

***7362. 'மறம் கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை;***
***பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை;***
***இறங்கிய கண் முகிழ்த்து, இரவும் எல்லியும்***
***உறங்குதி, போய்' என, உளையக் கூறினான்.***

***மறம் கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை*** - வீரம் விளங்க வேண்டிய போர்க்களத்துக்குத் தகுதியில்லாதவனாயினாய்; ***பிறங்கிய தசையொடு*** - உண்ண மிகுதியான ஊனொடு; ***நறவும் பெற்றனை*** - குடிக்கக் கள்ளையும் பெற்றாய்; ***இறங்கிய கண் முகிழ்த்து*** - குழி விழுந்துள்ள கண்களை மூடிக்கொண்டு; ***இரவும் எல்லியும்*** - இரவும் பகலும்; ***போய் உறங்குதி என*** - போய்த் தூங்குவாய் என்று; ***உளையக் கூறினான்*** - கும்பகருணனது மனம் வருந்துமாறு இராவணன் கூறினான்.

***7363. 'மானிடர் இருவரை வணங்கி, மற்றும் அக்***
***கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய் தொழில்***
***ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்;***
***யான் அது புரிகிலேன்; எழுக போக!' என்றான்.***

***மானிடர் இருவரை வணங்கி*** - வலிவற்ற மானிடர் இருவரை வணங்கி; ***மற்றும் அக்கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு*** - அதோடு அமையாமல் மேலும் அந்தக் கூனல் முதுகுடைய குரங்கையும் கும்பிட்டுக்கொண்டு; ***உய்தொழில்*** - உயிர் வாழ்ந்திருக்கும் தொழில்; - ***ஊனுடை உம்பிக்கும்*** - ஊனுடலோடு உயிர் வாழ்தலை விரும்பும், உன் தம்பியாகிய வீடணனுக்கும்; ***உனக்குமே கடன்*** - உனக்குமே முறைமையான செயலாகும்; ***அது யான் புரிகிலேன்*** - அச்செயலை நான் செய்யேன்; ***போக எழுக என்றான்*** - போவதற்கு எழுக என்று இராவணன் கூறினான்.

*அக்கூறுடைக் குரங்கு-அனுமன். மந்திரப் படலத்தில் வரும் "சுட்டது குரங்கு எரி சூறையாடிக் கெட்டது கொடி நகர்" என்ற (6082) வரியை இணைத்து நோக்குக. கடன்-சிறையான செயல் நீயும் உம்பியும் ஊனுடலோடு உயிர் வாழ விரும்புகிறீர்கள். புகழை விரும்பவில்லை என்பது கருத்தாகக் கொள்க.*

***7364. 'தருக, என் தேர், படை; சாற்று, என் கூற்றையும்;***
***வருக, முன் வானமும் மண்ணும் மற்றவும்;***
***இரு கை வன் சிறுவரோடு ஒன்றி என்னொடும்***
***பொருக, வெம் போர்' எனப் போதல்மேயினான்.***

***என் தேர் படை தருக*** -(மேற்கண்டவாறு) கூறிய இராவணன்) என்னுடைய தேரையும், படைக்கலங்களையும் கொண்டு வருக; ***என் கூற்றையும் சாற்று*** - என் கட்டளைக் கூற்றை யாவருக்கும் சொல்லுவாய்; ***வானமும் மண்ணும் மற்றவும்*** - விண்ணகத் தோரும், மண்ணகத் தோரும் பாதாள உலகத்தோரும்; ***இருகைவன் சிறுவரோடு ஒன்றி முன் வருக*** - இருகையுடைய வலிய சிறுவர்களான இராம இலக்குவருடன் கூடி என் முன் வந்து; ***என்னொடும் வெம்போர் பொருக*** - என்னுடன் கொடிய போரைச் செய்யட்டும்; ***எனப் போதல் மேயினான்*** - என்று பணியாளரிடம் கூறிப் போருக்குச் செல்லத் தொடங்கினான்.

*கும்பகருணன் போருக்கு எழுதல்*

***7365. அன்னது கண்டு, அவன் தம்பியானவன்***
***பொன் அடி வணங்கி, 'நீ பொறுத்தியால்' என,***
***வல் நெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான்,***
***'இன்னம் ஒன்று உரை உளது' என்னக் கூறினான்;***

***அவன் தம்பியானவன்*** *- அவன் தம்பியான கும்பகருணன்;* ***அன்னது கண்டு*** *- அச்செயலைக் கண்டு;* ***நீ பொறுத்தியால் என*** *- யான் கூறியதை நீ பொறுத்தி எனக் கூறிப்;* ***பொன் அடி வணங்கி*** *- இராவணனுடைய பொன்னால் ஆகிய வீரக்கழல் அணிந்த அடியை வணங்கி;* ***வல்நெடுஞ் சூலத்தை*** *- போருக்குச் செல்ல வலிய நெடிய சூலத்தை;* ***வலத்து வாங்கினான்*** *- வலப்பக்கத் தோளிலே கொண்டவனாய்;* ***உரை ஒன்று இன்னம் உளது*** *-சொல்லவேண்டிய சொல் ஒன்று உள்ளது;* ***என்னக் கூறினான்*** *- என்று கூறினான்.*

***7366. 'வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்;***
***விதி***
***நின்றது; பிடர் பிடித்து உந்த நின்றது;***
***பொன்றுவென்; பொன்றினால், பொலன் கொள்***
***தோளியை,***
***"நன்று" என, நாயக விடுதி; நன்றுஅரோ.***

***நாயக*** *- தலைவனே;* ***இவண் வென்று வருவென் என்று உரைக்கிலேன்*** *- இங்கு மீண்டும் வெற்றி பெற்று வருவேன் என்று சொல்ல இயலாமல் உள்ளேன் என்று;* ***விதி நின்றது*** *- வெல்லுதற்கரிதாய் நின்றதாகிய விதி;* ***பிடர் பிடித்து உந்த நின்றது*** *- கழுத்தின் புறத்தைப் பிடித்துத் தள்ளும்படி நின்றது;* ***பொன்றுவென்*** *- அதனால் யான் போரில் இறந்து விடுவேன்;* ***பொன்றினால்*** *-அவ்வாறு யான் அழிந்தால்;* ***பொலன் கொள் தோளியை*** *-அழகு கொண்ட தோளையுடைய சீதையை;* ***நன்று என விடுதி*** *- உனக்கு நன்மை என்று கருதி விட்டிடுவாய்;* ***நன்று*** *- அவ்வாறு விட்டிடுதலே உனக்கு நன்மை பயக்கும்.*

*அரோ-அசை.*

***7367. 'இந்திரன் பகைஞனும், இராமன் தம்பி கை***
***மந்திர அம்பினால் மடிதல் வாய்மையால்;***
***தந்திரம் காற்றுறு சாம்பல்; பின்னரும்***

***அந்தரம் உணர்ந்து, உனக்கு உறுவது ஆற்றுவாய்.***

***இந்திரன் பகைஞனும்*** - *இந்திரசித்தனும்;* ***இராமன் தம்பி கை*** *-இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனுடைய கையில் உள்ள;* ***மந்திர அம்பினால்*** - *மந்திர ஆற்றல் கொண்ட அம்பினால்;* ***மடிதல் வாய்மையால்*** - *இறந்து படுதல் திண்ணம்;* ***தந்திரம் காற்றுறு சாம்பல்*** - *அரக்கருடைய பிறபடைகள் மிக்க காற்றின் முன் சாம்பல் போல் ஆகும்;* ***பின்னரும்*** - *இவற்றையெல்லாம் கேட்ட பின்னர்;* ***அந்தரம் உணர்ந்து*** - *வரும் கேட்டை உணர்ந்து;* ***உனக்கு உறுவது ஆற்றுவாய்*** - *உனக்குத் தக்க செயலைச் செய்வாய்.*

*தந்திரம்-படைகள். ஆல்-அசை.*

***7368. 'என்னை வென்றுளர்எனில், இலங்கை காவல!***
***உன்னை வென்று உயருதல் உண்மை; ஆதலால்,***
***பின்னை நின்று எண்ணுதல் பிழை; அப் பெய்வளை-***
***தன்னை நன்கு அளிப்பது தவத்தின் பாலதே.***

***இலங்கை காவல*** - *இலங்கைக்குக் காவலனே;* ***என்னை வென்றுளர் எனில்*** - *அப்பகைவர்களாகிய இருவர் என்னை வென்றார்களானால்;* ***உன்னை வென்று உயருதல் உண்மை*** - *உன்னையும் வென்று மேம்படுதல் திண்ணம்;* ***ஆதலால்*** - *அதனால்;* ***பின்னை*** - *மேலும்;* ***நின்று எண்ணுதல் பிழை*** - *அவர்களை வெல்ல வேறு உபாயங்களை எண்ணுதல் தவறான செயல்; அ* ***ப்பெய்வளை தன்னை*** - *அந்த வளையல் அணிந்த சீதை தன்னை;* ***அளிப்பது*** - *விட்டு விடுவது;* ***நன்கு தவத்தின் பாலதே*** - *சிறந்த தவப்பயன் அளிக்க வல்லதாம்.*

***7369. 'இற்றைநாள் வரை, முதல், யான் முன் செய்தன***
***குற்றமும் உள எனின் பொறுத்தி; கொற்றவ!***
***அற்றதால் முகத்தினில் விழித்தல்; ஆரிய!***
***பெற்றனென் விடை' என, பெயர்ந்து போயினான்.***

***கொற்றவ*** - *வெற்றித் தலைவனே;* ***முன் முதல் இற்றை நாள் வரை*** - *முன்னாள் முதல் இன்றைய நாள் வரை;* ***யான் செய்தன*** - *நான் செய்தனவாகிய;* ***குற்றமும் உள எனின் பொறுத்தி*** - *குற்றங்கள் ஏதாவது இருக்குமானால் அவற்றை நீ பொறுத்தருள்க;* ***ஆரிய*** - *ஆரியனே;* ***முகத்தினில் விழித்தல் அற்றதால்*** - *இனி உன் முகத்தில் நான் விழித்தல் இல்லாமல் போய்விட்டது;* ***விடை பெற்றனன்*** - *விடை பெற்றுக் கொண்டேன்;* ***என பெயர்ந்து போயினான்*** - *என்று கூறிப் புறப்பட்டுச் சென்றான்.*

*இற்றை-இன்று +ஐ = இற்றை வலித்தல். ஆல்-அசை. கொற்றவ, ஆரிய-என வந்துள்ள இரு விளிகள் கும்பகருணனது பாசத்தைச் சுட்டி நின்றது. பெற்றனென் விடை-விரைவுக் குறிப்பை நோக்குக. இப்பாடலைப் பாசத்தின் கொடுமுடியில் நின்று இறக்க இருப்பவனின் இறுதி விடைப்பாடலாகக் கருதிக் கொள்க. உருக்க உணர்ச்சி ததும்பும் பாடல்.*

*இராவணன் படைகளை உடன் செல்லப் பணித்தல்*

***7370. அவ் வழி இராவணன் அனைத்து நாட்டமும்***
***செவ் வழி நீரொடும் குருதி தேக்கினான்;***
***எவ் வழியோர்களும் இரங்கி ஏங்கினார்;***
***இவ் வழி அவனும் போய், வாயில் எய்தினான்.***

***அவ்வழி*** *- அப்போது;* ***இராவணன் அனைத்து நாட்டமும்*** *- தன் இருபது கண்களிலும்;* ***செவ்வழி நீரொடும்*** *- நேரே வழிகின்ற கண்ணீருடன்;* ***குருதி தேக்கினான்*** *- குருதியையும் வெளிவிடாது தடுத்துத் தேக்கினான்;* ***எவ்வழியோர்களும்*** *- பிற எல்லா உறவின் வழி வந்தவர்களும்;* ***இரங்கி ஏங்கினார்*** *- இரக்கம் மிகக்கொண்டு ஏக்கம் உற்றனர்;* ***இவ்வழி*** *- இவ்வாறு நிகழும் பொழுதே;* ***அவனும் போய்*** *- அக்கும்பகருணனும் போய்;* ***வாயில் எய்தினான்*** *- நகர் வாயிலை அடைந்தான்.*

*இராவணன் அனைத்து நாட்டமும் நீரும் குருதியும் தேக்கப் பிற உறவினர் இரங்கி ஏங்கக் கும்பகருணன் வாயில் எய்தினான் என்க. போர்க்களத்துக்கு வீர வழி அனுப்பு அமையாது சோக வழியனுப்பு இங்கு அமைவது பின்வருவது காட்டும் குறிப்பினதாம். இப்பாடலில் வரும்* ***தேக்கினான்*** *என்ற கவிதைச் சொல், ஆழ்ந்து நோக்கத்தக்கது. குருதி தேக்கினான், செவ்வழி நீர் தேக்கினான் என இணைக்க. உறவினர் இரங்கி ஏங்க இராவணன் கண் சிவந்து கண்ணீர் சில தெறியா நின்ற நிலை அவனது பாசமும் மன உறுதியும் நடத்தும் போராட்டத்தில் மன உறுதி வெற்றி பெற்றதையும், காமம் கைமிகுந்த நிலையிலும் பாசமும் மன உறுதியும் குலையாத தன்மையையும் இக்கவிதைச் சொல்லின் வழி உணரலாம். எவ்வழியோர்கள்-எல்லாப் பக்கங்களிலும் உள்ளவர்கள் எனலுமாம்.*

***7371. 'இரும் படை கடிப்பு எடுத்து எற்றி ஏகுக!***
***பெரும் படை இளவலோடு' என்ற பேச்சினால்,***
***வரும் படை வந்தது, வானுளோர்கள்தம்***
***சுரும்பு அடை மலர் முடி தூளி தூர்க்கவே.***

***இளவலொடு*** *- கும்பகருணனுடன்;* ***இரும்படை ஏகுக என்ற பேச்சினால்*** *- பெரும்படை செல்லட்டும் என்ற இராவணனது கட்டளையினால்;* ***வானுளோர்கள் தம்*** *- தேவர்களுடைய;* ***சுரும்பு அடை*** *- வண்டுகள் மொய்க்கின்ற;* ***மலர் முடி*** *- மலர்*

*அணிந்த தலைகளில்;* ***தூளி தூர்க்கவே*** *- தூசிகள் சென்று நிரம்புமாறு;* ***கடிப்பு எடுத்து வெற்றி*** *- குறுந்தடியை எடுத்துப் போர்ப்பறை அறைந்து கொண்டு;* ***பெரும்படை வரும்படை வந்தது*** *- பெரிய படையாகிய வருதற்கு உரிய படை வந்தது.*

*தேவர் தலையில் தூசி படியுமாறு கடிப்பு எடுத்து எற்றிப் பெரும்படை வந்ததென்க. கடிப்பு-குறுந்தடி வானவர் மாலையில் சுரும்பு அடையா எனினும் வானுளோர்கள் தம் சுரும்படை மலர்முடி என்பது கவிமரபு பற்றி வந்தது என்க.*

*படைகளின் பெருக்கம்*

***7372. தேர்க் கொடி, யானையின் பதாகை, சேண் உறு***
***தார்க் கொடி என்று இவை ததைந்து வீங்குவ--***
***போர்க் கொடுந் தூளி போய்த் துறக்கம் பண்புற,***
***ஆர்ப்பன துடைப்பன போன்ற ஆடுவ.***

***தேர்க்கொடி*** *- தேரின் கண் கட்டப்பட்டுள்ள கொடிகளும்;* ***யானையின் பதாகை*** *- யானை மேல் உயர்த்திப் பிடித்த கொடிகளும்;* ***சேண் உறு தார்க்கொடி*** *- முன்னணித் தூசிப் படையினர் பிடித்த உயர்ந்த கொடிகளும்;* ***என்று இவை*** *- என்று இவ்வகைப்பட்ட கொடிகளுமாக;* ***ததைந்து வீங்குவ*** *- நெருங்கி மிக்கிருப்பவை;* ***போர்க் கொடுந் தூளி*** *- போர்க்களத்தில் இருந்து புறப்பட்ட தூசுகள்;* ***போய்த் துறக்கம் பண்பற*** *- போய்ச் சுவர்க்கத்தின் பண்பு கெட;* ***ஆர்ப்பன*** *- நிறைந்திருப்பனவற்றைத்;* ***துடைப்பன போன்ற ஆடுவ*** *- துடைப்பன போன்றவாய் ஆடலாயின.*

*கொடிகள் வானத்தில் ஆடுவதை படையால் எழுப்பப்படும் சுவர்க்கத்திற் படும் தூசிகளைத் துடைப்பன போன்று ஆடுவதாகக் கூறுவது தற்குறிப்பேற்றம்.*

***7373. எண்ணுறு படைக்கலம் இழுக எற்றிட***
***நண்ணுறு பொறிகளும், படைக்கு நாயகர்***
***கண்ணுறு பொறிகளும், கதுவ, கண் அகல்***
***விண்ணுறு மழை எலாம் கரிந்து, வீழ்ந்தவால்.***

***எண்ணுறு படைக்கலம்*** *- மதிக்கப்படுகின்ற படைக்கலங்கள்;* ***இழுக எற்றிட*** *- உராய்ந்து மோதுவதனால்;* ***நண்ணுறு பொறிகளும்*** *- தோன்றிய நெருப்புப் பொறிகளும்;* ***படைக்கு நாயகர்*** *- படைத்தலைவர்களின்;* ***கண்ணுறு பொறிகளும்*** *- கண்களில் மிக்குத் தோன்றுகின்ற தீப்பொறிகளும்;* ***கதுவ*** *- ஒன்றோடொன்று கலந்ததனால்;* ***கண் அகல்*** *- இடம் அகன்ற;* ***விண்ணுறு*** *- ஆகாயத்தில் பொருந்திய;*

***மழை எலாம்*** - மேகங்கள் எல்லாம்; ***கரிந்து வீழ்ந்தவால்*** - கரிந்து வீழ்ந்தன. இழுக-உராய. ஆல்-அசை. கதுவ-பற்ற. இங்கு கலத்தல், எலாம்-இடைக்குறை. ஆல்-அசை.

*7374.* ***தேர் செல, கரி செல, நெருக்கிச் செம் முகக்***
***கார் செல, தேர் செல, புரவிக் கால் செல,***
***தார் செல, கடை செல, சென்ற தானையும்,***
***'பார் செலற்கு அரிது' என, விசும்பில் பாய்ந்ததால்.***

***தேர்செல*** - முன்னால் தேர் செல்வதனாலும்; ***கரி செல*** - யானைகள் செல்வதனாலும்; ***நெருக்கி*** - அவற்றை மேலும் நெருக்கிக் கொண்டு; ***செம்முகக்கார் செல*** - புகர் அமைந்த முகத்தினையுடைய யானைகள் செல்வதனாலும்; ***தேர் செல*** - மேலும் தேர்கள் செல்ல; ***கால் புரவி செல*** - காற்றுப் போல் குதிரைகள் விரைந்து செல்வதனாலும்; ***தார் செல*** - இவ்வாறாக முன்னணிப் படை செல்லவும்; ***கடை செல*** - பின்னணிப் படையும் நெருக்கமாகச் செல்வதால்; ***சென்ற தானையும்*** - இடையில் சென்ற இடையணிச் சேனையும்; ***பார் செலற்கு அரிது என*** - நிலத்தில் செல்லுவது அரியது என எண்ணி; ***விசும்பில் பாய்ந்ததால்*** - ஆகாயத்தில் பாய்ந்து செல்லல் ஆயிற்று.

*முன்னணிப் படையும், பின்னணிப் படையும் நெருக்குவதால் இடையணிப்படை பார் செலற்கு அரிது என விசும்பில் பாய்ந்ததென்க. ஆல்-அசை. தார்-முன்னணிப் படை தூசிப் படை கடை-பின்னணிப் படை, கூழைப் படை;தானை-இடையணிப் படை. கார்-உவமையாகுபெயர்.*

*கும்பகருணன் புறப்பாடு*

*7375.* ***ஆயிரம் கோள் அரி, ஆளி ஆயிரம்,***
***ஆயிரம் மத கரி, பூதம் ஆயிரம்,***
***மா இரு ஞாலத்தைச் சுமப்ப வாங்குவது***
***ஏய் இருஞ் சுடர் மணித் தேர் ஒன்று ஏறினான்.***

***மாஇரு ஞாலத்தைச் சுமப்ப*** - மிகப்பெரிய பூமியைச் சுமப்பனவாகி; ***வாங்குவது*** - மேற்கொள்ளும் வன்மையுடைய; ***ஆயிரம் கோள் அரி*** - ஆயிரம் சிங்கங்களும்; ***ஆயிரம் ஆளி*** - ஆயிரம் ஆளிகளும்; ***ஆயிரம் மதகரி*** - ஆயிரம் மதம் மிக்க யானைகளும்; ***ஆயிரம் பூதம்*** - ஆயிரம் பூதங்களும் பூட்டப் பெற்றதுமான; ***ஏய்*** - ஒப்பில்லாத; இருஞ்சுடர் மணித்தேர் ஒன்று- மிக்க ஒளியுள்ள மணிகள் அழுத்திப் பதிக்கப் பெற்ற தேர் ஒன்றில்; ***ஏறினான்*** - கும்பகருணன் ஏறினான்.

***7376. தோமரம், சக்கரம், சூலம், கோல், மழு,***
***நாம வேல், உலக்கை, வாள், நாஞ்சில், தண்டு, எழு,***
***வாம வில், வல்லையம், கணையம், மற்று உள***
***சேம வெம் படை எலாம் சுமந்து, சென்றவால்.***

*__தோமரம்__ - பெரிய மரங்களையும்; __சக்கரம்__ - சக்கர வடிவில் அமைந்த வீசு படைகளையும்; __சூலம்__ - முத்தலைச் சூலங்களையும்; __கோள்__ - அம்புகளையும்; __மழு__ - கோடரிப் படையினையும்; __நாமவேல்__ - பகைவருக்கு அச்சம் உண்டாக்கும் வேல் படைகளையும்; __உலக்கை__ -உலக்கைகளையும்; __வாள்__ - வாள் படைகளையும்; __நாஞ்சில்__ - கலப்பை வடிவில் அமைந்த படைக்கலங்களையும்; __தண்டு__ -பெரிய தண்டாயுதங்களையும்; __எழு__ - இரும்பு உலக்கைகளையும்; __வாமவில்__ - வளைந்த பெரிய வில்களையும்; __வல்லையம்__ -எறி ஈட்டிகளையும்; __கணையம்__ -வளை தடிகளையும்; __மற்று உள__ - மற்றுமுள்ள பிற; __சேம வெம்படை__ -கையில் உள்ள படைக்கலங்கள் தீர்ந்தபோது பயன்படுத்தப்படும் சேமிப்புப் படைக்கலங்கள்; __எலாம்__ - எல்லாவற்றையும்; __சுமந்து சென்றவால்__ - கும்பகருணனுடன் சென்ற சேனைகள் சுமந்து சென்றன.*

***7377. நறையுடைத் தசும்பொடு நறிதின் வெந்த ஊன்***
***குறைவு இல் நல் சகடம் ஓர் ஆயிரம் கொடு,***
***பிறையுடை எயிற்றவன் பின்பு சென்றனர்,***
***முறை முறை கைக்கொடு முடுகி நீட்டுவார்.***

*__முறை முறை__ - முறை முறையாக (தரவேண்டிய உணவுகளைத் தருவதில் முறைகொண்டு); __கைக்கொடு__ - கையிலே உணவுகளைக் கொண்டு; __முடுகி நீட்டுவார்__ - விரைந்து நீட்டுபவர்களாகிய அரக்கர் பலர்; __பிறை உடை எயிற்றவன் பின்பு__ - பிறை போன்ற பற்களை உடைய கும்பகருணனுக்குப் பின்னால்; __நறையுடைத் தசும்பொடு__ - கள்ளைக் கொண்டுள்ள குடங்களையும்; __நறிதின் வெந்த ஊன்__ - நன்றாக வெந்த ஊனினையும்; __குறைவு இல் நல்சகடம்__ - குறைவில்லாது நிரப்பிய வலிய வண்டிகள்; __ஓர் ஆயிரம் கொடு__ - ஓராயிரத்தைப் பின் கொண்டு; __சென்றனர்__ - கும்பகருணனுடன் சென்றனர்.*

*கொடு-கொண்டு. இடைக்குறை. முறை முறை-அடுக்குத் தொடர். நீட்டுவார்-முற்றெச்சம்.*

***7378. ஒன்று அல பற்பலர் உதவும் ஊன் நறை***
***பின்ற அரும் பிலனிடைப் பெய்யுமாறு போல்,***
***வன் திறல் இரு கரம் வாங்கி மாந்தியே,***
***சென்றனன், யாவரும் திடுக்கம் எய்தவே.****

***பற்பலர்*** - *பற்பல அரக்கர்;* ***உதவும்*** - *முறை முறை தந்து உதவுகின்ற;* ***ஒன்று அல ஊன், நறை*** - *ஒன்றல்லாத பலவாகிய ஊனையும் கள்ளையும்;* ***பின்ற அரும்*** - *மீளுதலுக்கு அருமையான;* ***பிலனிடைப் பெய்யுமாறு போல்*** - *குகைக்குள் பெய்யும் தன்மை போல்;* ***வன்திறல்*** - *மிக்க வலிமை கொண்ட;* ***இருகரம் வாங்கி*** - *இரண்டு கைகளிலும் வாங்கி;* ***மாந்தியே*** - *மிகுதியாக உண்டு கொண்டே;* ***யாவரும்*** - *கண்டவர் யாவரும்;* ***திடுக்கம் எய்தவே*** - *திகைப்பு அடையும்படி;* ***சென்றனன்*** - *கும்பகருணன் போர்க்களம் நோக்கிச் சென்றான்.*

*பின்ற அரும்-திரும்பி வர அருமையான, திடுக்கம்-திகைப்பு. ஊன் நறை-உம்மைத் தொகை.*

***7379. 'கணம் தரு குரங்கொடு கழிவதுஅன்று, இது;***
***நிணம் தரு நெடுந் தடிக்கு உலகு நேருமோ?***
***பிணம் தலைப்பட்டது; பெயர்வது, எங்கு இனி;***
***உணர்ந்தது கூற்றம்' என்று, உம்பர் ஓடினார்.***

***இது*** - *கும்பகருணனது உண்ணும் தொழில்;* ***கணம் தரு*** - *கூட்டமாகப் பொருந்திய;* ***குரங்கொடு கழிவது அன்று*** - *வானரக் கூட்டத்தோடு நீங்குவது அன்று;* ***நிணம் தரு நெடுந்தடிக்கு*** - *இவன் உண்ணும் கொழுப்போடு கூடிய மிக்க மாமிசத்துக்கு;* ***உலகு நேருமோ*** - *இவ்வுலகத்து உயிர்கள் எல்லாம் போதுமானதாய் ஆகுமா?;* ***பிணம் தலைப்பட்டது*** - *எங்கும் பிண மயமாய் ஆகிவிட்டது;* ***கூற்றம் உணர்ந்தது*** - *இதைக் கொலைத் தொழிற்குரிய யமனும் உணர்ந்து விட்டான்;* ***எங்கு இனி பெயர்வது*** - *இனித் தப்பி நாம் எங்கே ஓடிச் செல்வது;* ***என்று உம்பர் ஓடினார்*** - *என்று எண்ணிய வண்ணம் தேவர்கள் ஓடினார்கள். உலகு-இடவாகு பெயர். கும்பகருணனால் உயிர்க்குலம் அழியும் எனக் கூறியவாறு.*

*கும்பகருணனை, இவன் யார்? என வீடணனிடம் இராமன் வினவல்*

***7380. பாந்தளின் நெடுந் தலை வழுவி, பாரொடும்***
***வேந்து என விளங்கிய மேரு மால் வரை***
***போந்ததுபோல் பொலந் தேரில் பொங்கிய***
***ஏந்தலை, ஏந்து எழில் இராமன் நோக்கினான்.***

***பாந்தளின்*** - *ஆதிசேடனுடைய;* ***நெடுந்தலை வழுவி*** - *பெரிய தலையில் இருந்து நழுவி;* ***பாரொடும்*** - *நிலவுலகத்துடன்;* ***வேந்து என விளங்கிய மேரு மால் வரை*** - *பிற மலைகளின் வேந்து போன்ற மேரு என்னும் பெருமலை;* ***போந்தது போல்*** - *வந்தது*

*போல;* **பொலந்தேரில் பொங்கிய** - *பொன்னால் ஆன தேரில் விளங்கித் தோன்றுகின்ற;* **ஏந்தலை** -*கும்பகருணனை;* **எழில் ஏந்து இராமன்** -*அழகு மிகத் தங்கிய இராமன்;* **நோக்கினான்** -*கண்டான்.*

*பார்-கும்பகருணன் தேர், மேருமலை-கும்பகருணன். பாரொடும் மேரு மால் வரை வந்தது போலத் தேரொடும் கும்பகருணன் வந்தான் என்க.*

***7381. 'வீணை என்று உணரின், அஃது அன்று; விண் தொடும்***
***சேண் உயர் கொடியது, வய வெஞ் சீயமால்;***
***காணினும், காலின் மேல் அரிய காட்சியன்;***
***பூண் ஒளிர் மார்பினன்; யாவன் போலுமால்?***

**விண் தொடும் சேண் உயர் கொடியது** - *விண்ணைத் தொடுகின்ற மிக உயர்ந்த கொடியில் இருப்பது;* **வீணை என்று உணரின்** - *வீணை என்று எண்ணினால்;* **அஃது அன்று** - *அது இல்லை;* **வய வெஞ்சீயமால்** - *வெற்றி பொருந்திய கொடிய சிங்கமாகும்;* **காணினும்** - *மிக்க வேகத்துடன் கண்டாலும்;* **காலின் மேல் அரிய காட்சியன்** - *காற்பகுதிக்கு மேல் முழுதும் பார்த்தற்கரிய பெருந்தோற்றமுடையவனாய் இருக்கிறான்;* **பூண் ஒளிர் மார்பினன்** - *அணிகலன் ஒளி விடுகின்ற மார்பை உடையவனாய் இருக்கிறான்;* **யாவன் போலுமால்** - *இவன் யாவனோ? வீணை- இராவணன் கொடியில் உள்ள சின்னம். சிங்கம்- கும்பகருணன் கொடியில் உள்ள சின்னம். வீணையன்று என்றமையால் இராவணன் அல்லன் என்று தெளிந்தவாறு. ஆல்- அசை.*

***7382. 'தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின்,***
***நாள் பல கழியுமால்; நடுவண் நின்றது ஓர்***
***தாளுடை மலைகொலாம்; சமரம் வேட்டது ஓர்***
***ஆள் என உணர்கிலேன்; ஆர்கொலாம் இவன்?***

**தோளொடு தோள் செலத் தொடர்ந்து** - *இவனுடைய ஒரு தோளோடு மற்றொரு தோள் வரை முழுவதும்;* **தொடர்ந்து** - *தொடர்ச்சியாக;* **நோக்குறின்** - *பார்க்க முயலின்;* **பலநாள் கழியுமால்** - *பலநாள் கழிந்துவிடும்;* **நடுவண் நின்றது ஓர் தாளுடை மலை கொலாம்** - *உலகுக்கு நடுவில் உள்ள ஒப்பற்ற கால் முளைத்த மேருமலை இவ்வாறு வந்தது கொல்லோ?;* **சமரம் வேட்டது ஓர் ஆளென உணர்கிலேன்** - *இவனைப் போரை விரும்பி வந்த ஒரு வீரனென்று நினைக்க முடியவில்லை;* **ஆர்கொலாம் இவன்** - *இவன் யாரோ.*

*வீரர்களில் இப்படி இருப்பவரைக் கண்டதில்லையாகையால் இராமன் வியந்து, "சமரம் வேட்டது ஓர் ஆளென உணர்கிலேன்" என்றான் என்க. தாளுடை மலை*

*என்பதைத் தாளுடை மலையோ என மாற்றி உரைக்க. ஆல் ஆம்-அசைகள். கொல்-ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். சமரம்-போர்.*

***7383.** 'எழும் கதிரவன் ஒளி மறைய, எங்கணும்*
***விழுங்கியது இருள், இவன் மெய்யினால்; வெரீஇ,***
***புழுங்கும் நம் பெரும் படை இரியல்போகின்றது;***
***அழுங்கல் இல் சிந்தையாய்! ஆர் கொலாம்***
***இவன்?'****

**இவன் மெய்யினால்** - *இக்கும்பகருணனது பேருடம்பினால்;* **எழும் கதிரவன் ஒளி மறைய** - *உதயகிரியில் எழும் சூரியனது ஒளியானது மறைய;* **எங்கணும் இருள் விழுங்கியது** - *எல்லா இடமும் இருளால் நிரம்பியது;* **புழுங்கும் நம் பெரும்படை** - *பேருடம்பு கண்டு மனம் வேர்க்கின்ற நமது பெரிய படை;* **வெரீஇ இரியல் போகின்றது** *-அஞ்சி நிலை கெட்டு ஓடுகின்றது;* **அழுங்கல் இல் சிந்தையாய்** - *வருந்துதல் இல்லாத மனமுடைய வீடணனே;* **ஆர் கொலாம் இவன்** - *இவன் யாவனோ*

*புழுங்கும்-மனம் வேர்க்கும்.*

***7384.** 'அரக்கன் அவ் உரு ஒழித்து, அரியின் சேனையை*
***வெருக் கொளத் தோன்றுவான், கொண்ட***
***வேடமோ?***
***தெரிக்கிலேன் இவ் உரு; தெரியும் வண்ணம், நீ***
***பொருக்கென, வீடண! புகறியால்' என்றான்.***

**அரக்கன்** *-இராவணன்;* **அவ் உரு ஒழித்து** *-தன்னுடைய அந்த வடிவத்தை விட்டுவிட்டு;* **அரியின் சேனையை** - *குரங்குச் சேனை;* **வெருக் கொளத் தோன்றுவான்** - *அஞ்சும்படி தோன்றுவதற்காக;* **கொண்ட வேடமோ** - *மேற்கொண்ட மாயவேடமோ;* **இவ் உரு தெரிக்கிலேன்** - *இந்த உரு எது என்று எனக்குத் தெரியவில்லை;* **தெரியும் வண்ணம்** - *தெரிந்து கொள்ளும் படி;* **நீ புகறியால் என்றான்** - *நீ சொல்லுவாய் என்றான் இராமன்.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம ்**

*வீடணன் கும்பகருணனது தன்மையை எடுத்துரைத்தல்*

***7385.** ஆரியன் அனைய கூற, அடி இணை இறைஞ்சி,*

***'ஐய!***
***பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்; எனக்கு முன்னோன்;***
***கார் இயல் காலன் அன்ன கழல் கும்பகருணன் என்னும்***
***கூரிய சூலத்தான்' என்று, அவன் நிலை கூறலுற்றான்;***

***ஆரியன்*** - இராமன்; ***அனைய கூற*** - இவ்வாறு கேட்க; ***இணையடி இறைஞ்சி*** - அவனது திருப்பாத மிரண்டையும் வணங்கி; ***ஐய!*** - ஐயனே; ***பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்*** - இவன் வரச்சிறப்புடைய இலங்கைத் தலைவனாகிய இராவணனுக்குப் பின்பிறந்தவன்; ***எனக்கு முன்னோன்*** - எனக்கு முன் பிறந்தவன்; ***கார் இயல் காலன் அன்ன*** - கருமை நிறம் பொருந்திய இயமனை ஒத்த; ***கழல் கும்பகருணன் என்னும்*** - வீரக்கழல் அணிந்த கும்பகருணன் என்னும் பெயர் கொண்ட; ***கூரிய சூலத்தான் என்று*** - கூர்மையான சூலத்தைக் கையிலே கொண்டவன் என்று; ***அவன் நிலை கூறலுற்றான்*** - அவனது தன்மையைக் கூறத் தொடங்கினான்.

*7386.* ***'தவன் நுணங்கியரும் வேதத் தலைவரும் உணரும் தன்மைச்***
***சிவன் உணர்ந்து, அலரின் மேலைத் திசைமுகன் உணரும் தேவன்-***
***அவன் உணர்ந்து எழுந்த காலத்து, அசுரர்கள் படுவது எல்லாம்,***
***இவன் உணர்ந்து எழுந்த காலத்து இமையவர் படுவர், எந்தாய்!***

***எந்தாய்!*** - எந்தாய்; ***தவன் நுணங்கியரும்*** - தவத்தால் உடல் சுருங்கி அறிவுக் கூர்மை பெற்ற தவத்தரும்; ***வேதத் தலைவரும்*** - வேதத் தலைவர்களான அந்தணரும்; ***உணருந்தன்மைச் சிவன்*** - உணர்வைப் பெறுவதற்காக உபாசனை செய்கின்ற சிவபிரானால் ***உணர்ந்து*** - தியானிக்கப்பட்டு; ***அலரின் மேலைத் திசைமுகன் உணரும்*** - தாமரை மலரிலே வாழ்கிற பிரமனாலும் தியானிக்கப்படுகிற; ***தேவன் அவன்*** - தேவனாகிய அந்தத் திருமால்; ***உணர்ந்து எழுந்த காலத்து*** - அரிதுயில் நீங்கிப் பக்தர்களைக் காக்க எழுந்த காலத்தில்; ***அசுரர்கள் படுவது எல்லாம்*** - அசுரர்கள் எல்லாம் இறப்பர்; ***இவன் உணர்ந்து எழுந்த காலத்து*** - இக்கும்பகருணன் துயில் நீங்கி எழுந்த காலத்தில்; ***இமையவர் படுவர்*** - தேவர்கள் இறப்பர்.

*மூவர்க்கும் முதல்வனின் பரத்துவம் கூறியவாறு. அன்பர்க்காகத் தீமையை அழிக்கும் அவன் செயலையும், நன்மையை அழிக்கும் இவன் செயலையும் ஒப்பிட்டுக் கூறிக் கும்பகருணன் திருமாலை ஒத்த வலியுடையவன் என்று கூறியவாறு.*

**வஞ்சி விருத்தம்**

***7387. ஆழியாய்! இவன் ஆகுவான்,***
***ஏழை வாழ்வுடை எம்முனோன்***
***தாழ்வு இலா ஒரு தம்பியோன்;***
***ஊழி நாளும் உறங்குவான்,***

*__ஆழியாய்__ - பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் மாலின் அம்சமானவனே; __இவன் ஆகுவான்__ - இவனானவன்; __ஏழை வாழ்வுடை__ - அறத்திற்காக வாழாத எளிமைப்பட்ட உலக வாழ்வையுடைய; __எம்முனோன்__ - எமக்கு முன்னோனான இராவணனுடைய; __தாழ்வு இலா__ - அறமனத்தாழ்வில்லாத; __ஒரு தம்பியோன்__ - ஒப்பற்ற தம்பியானவன்; __ஊழி நாளும் உறங்குவான்__ - ஒருழிக்காலம் உறங்கும் தன்மையன் என்றவாறு.*

*மந்திரப்படலத்தில் உறங்கச் சென்ற கும்பகருணனை இராவணன் ஒன்பதாம் நாள் துயிலெழுப்பினான் என மூலநூல் கூறும் என்பர். பொருக்கென வீடண புகறியால் என்று 113 ஆம் பாடலில் இராமன் கேட்டதை மனதில் கொண்டு, விரைவாகக் கூறற்குப் பொருத்தமான வஞ்சி விருத்தத்தின் மூலம் கவிஞர் வீடணன் பேச்சை அமைத்துள்ளார் என்க.*

***7388. 'காலனார் உயிர்க் காலனால்;***
***காலின் மேல் நிமிர் காலினான்;***
***மாலினார் கெட, வாகையே,***
***சூலமே கொடு, சூடினான்;***

*__காலனார் உயிர்க் காலனால்__ - இயமனது உயிர்க்கு எமன் போன்றவன்; __காலின் மேல் நிமிர் காலினான்__ - காற்றை விட விரைவாகச் செல்லும் கால்களையுடையவன்; __மா லினார் கெட வாகையே__ - கருநிறமுள்ள இந்திரன் தோற்றோட வெற்றியைக் குறிக்கும் வாகை மாலையைத்; __சூலமே கொடு சூடினான்__ - தன் சூலப் படை கொண்டு சூடியவன்.*

*ஆல்-ஈற்றசை. இயமனையும் இந்திரனையும் வென்ற வெற்றிச் சிறப்பைக் கூறியவாறு.*

***7389. 'தாங்கு கொம்பு ஒரு நான்கு கால்***
***ஓங்கல் ஒன்றினை, உம்பர்கோன்***

***வீங்கு நெஞ்சன் விழுந்திலான்***

***தூங்க, நின்று சுழற்றினான்;***

***உம்பர் கோன்*** - தேவர்க்குத் தலைவனாகிய இந்திரன்; ***வீங்கு நெஞ்சன்*** - அச்சம் மிக்க நெஞ்சுடையவனாய்; ***விழுந்திலான் தூங்க*** - கீழே விழுந்திலனாய்த் தொங்க; ***தாங்கு கொம்பு ஒரு நான்கு கால்*** - தாங்குகின்ற நான்கு கொம்புகளையும் நான்கு கால்களையும் உடைய; ***ஓங்கல் ஒன்றினை*** - மலை போன்ற ஐராவதமென்னும் வெள்ளை யானையினை; ***நின்று சுழற்றினான்*** - தான் ஒருவனாய் நின்று போர்க்களத்தில் சுழற்றினான்.

*முன்பாடலில் இந்திரனை வென்றவன் என்று கூறி இப்பாடலில் வென்ற முறை கூறியவாறு. தாங்கு கொம்பு நான்கு, கால் ஒரு நான்கு என்று கூட்டுக. விழுந்திலான்-முற்றெச்சம். தூங்க-தொங்க.*

***7390. 'கழிந்த தீயொடு காலையும்***
***பிழிந்து சாறு கொள் பெற்றியான்;***
***அழிந்து மீன் உக, ஆழி நீர்***
***இழிந்து, காலினின் எற்றுவான்;***

***கழிந்த தீயொடு காலையும்*** - மிகுதியான தீயுடன் காற்றையும்; ***பிழிந்து சாறு கொள் பெற்றியான்*** - பிழிந்து சாறு எடுக்கவல்ல வலிமையுடையவன்; ***மீன் அழிந்து உக*** - மீன்கள் எல்லாம் அழிந்து உயிர் சிந்துமாறு; ***ஆழிநீர் இழந்து காலினின் எற்றுவான்*** - கடல் நீரில் இறங்கிக் காலால் எற்றிக் கடலைக் கடக்கும் பேருருவத்தினன்.

***7391. 'ஊன் உயர்ந்த உரத்தினான்,***
***மேல் நிமிர்ந்த மிடுக்கினான்;***
***தான் உயர்ந்த தவத்தினான்,***
***வான் உயர்ந்த வரத்தினான்;***

***ஊன் உயர்ந்த உரத்தினான்*** - உடம்பில் மிக்க வலிமை படைத்திருப்பதால்; ***மேல் நிமிர்ந்த மிடுக்கினான்*** - மிகுதியும் மேம்பட்ட மன உறுதியுடையவன்; ***தான் உயர்ந்த தவத்தினால்*** -தான் செய்த பெருந்தவத்தினால்; ***வான் உயர்ந்த வரத்தினான்*** - வானம் போல் உயர்ந்த மிக்க வரத்தினை உடையவன்.

***7392. 'திறம் கொள் சாரி திரிந்த நாள்,***

***கறங்கு அலாது கணக்கு இலான்;***
***இறங்கு தாரவன் இன்றுகாறு***
***உறங்கலால், உலகு உய்ந்ததால்;***

***இறங்குதாரவன்*** *-தொங்குகின்ற மாலையை அணிந்தவனாகிய இக்கும்பகருணன்;* ***திறம் கொள் சாரி திரிந்த நாள்*** *- போரில் பலவகையில் வேகமாகச் சுழன்று சாரி திரியும் காலத்தில்;* ***கறங்கு அலாது*** *- காற்றாடி அல்லாது;* ***கணக்கு இலான்*** *- பிறிதொன்றின் தன்மையில்லாதவன்;* ***இன்று காறு உறங்கலால்*** *- இப்படிப்பட்டவன் இன்று வரை தூங்கியதால்;* ***உலகு உய்ந்ததால்*** *- உலகம் அழியாமல் பிழைத்துள்ளது.*

*7393.* ***'சூலம் உண்டு; அது சூர் உளோர்***
***காலம் உண்டது; கைக் கொள்வான்;***
***ஆலம் உண்டவன் ஆழிவாய்,***
***ஞாலம் உண்டவ! நல்கினான்;***

***ஞாலமுண்டவ*** *- மண்ணுண்டு உலகையெல்லாம் திருவாயில் காட்டியவனே;* ***ஆழிவாய் ஆலம் உண்டவன்*** *-திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சை உண்டவனாகிய சிவபிரான்;* ***நல்கினான்*** *-கொடுத்ததாகிய;* ***சூலம் உண்டு*** *- சூலப்படை ஒன்று உள்ளது;* ***அது சூர் உளோர்*** *- அச்சூலப்படை வீரம் உடையவர்களுடைய;* ***காலம் உண்டது*** *- வாழ்நாளையெல்லாம் உண்ணும் தன்மையது;* ***கைக்கொள்வான்*** *- அப்படையை இவன் கையில் கொண்டவன்.*

*7394.* ***'மின்னின் ஒன்றிய விண்ணுளோர்,***
***'முன் நில்' என்று, அமர் முற்றினார்-***
***என்னின், என்றும் அவ் எண்ணிலார்***
***வென்னில் அன்றி, விழித்திலான்;***

***மின்னின் ஒன்றிய*** *- மின்னல் போல் ஒளி பொருந்திய;* ***விண்ணுளோர்*** *- தேவர்கள்;* ***முன்நில் என்று*** *- எங்கள் முன்னே நில் என்று;* ***அமர் முற்றினார்*** *- பெரும் போரைத் தொடங்குவாராயின்;* ***என்னின்*** *- எப்போதும்;* ***அவ் எண்ணிலார்*** *- அந்த எண்ணிக்கையில் அடங்காத தேவர்களின்;* ***வென்னில் அன்றி*** *- முதுகுப் புறத்தில் அன்றி;* ***விழித்திலான்*** *- இக்கும்பகருணன் விழித்தில்லாதவன்.*

*7395.* ***"தருமம் அன்று இதுதான்; இதால்***
***வரும், நமக்கு உயிர் மாய்வு" எனா,***
***உருமின் வெய்யவனுக்கு உரை***

**இருமை மேலும் இயம்பினான்.**

**உருமின் வெய்யவனுக்கு** - இடிபோல் கொடிய இராவணனுக்கு; **இது** - பிறிதொருவன் இல்லுறை தவத்தியை மறை துறந்து வவ்விய செயல்; **தருமம் அன்று** - அறச்செயலன்று; **இதால்** - இச்செயலால்; **நமக்கு உயிர் மாய்வு வரும்** - நமக்கு உயிர் மாய்தல் நேரும்; **எனா** - என்று; **இருமை மேலும் உரை** - இருமுறைக்கு மேல் பல முறை நல் வார்த்தையை; **இயம்பினான்** - சொன்னான்.

*7396.* **'மறுத்த தம்முனை, வாய்மையால்**
**ஒறுத்தும், ஆவது உணர்த்தினான்;**
**வெறுத்தும், 'மாள்வது மெய்' எனா**
**இறுத்து, நின் எதிர் எய்தினான்.**

**மறுத்த தம்முனை** - தையலை விட மறுத்த தன் முன்னவனாகிய இராவணனை; **வாய்மையால்** - தன் வாய்மைப் பற்றின் காரணமாக; **ஒறுத்தும்** - வன் சொற்களால் கடிந்து கூறியும்; **ஆவது உணர்த்தினான்** - நடக்க இருப்பது பற்றி அறிவு கொளுத்தினான்; **வெறுத்தும்** - பலவாறு கூறியும் இராவணன் கேளாமையால் வெறுப்புக் கொண்டு; **மாள்வது மெய்** - இறப்பது உண்மை; **எனா இறுத்து** - என்று முடிவாகக் கூறிவிட்டு; **நின் எதிர் எய்தினான்** - இவன் உன் எதிரே வந்து சேர்ந்தான்.

எத்தகையோர் ஆட்சியிலும் ஒற்றர் ஊடுருவி அறிந்து செல்வர் ஆதலின் கும்பகருணன் புறப்பாட்டின் போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை வீடணன் அறிதல் இயல்பானதே.

*7397.* **' "நன்று இது அன்று நமக்கு" எனா,**
**ஒன்று நீதி உணர்த்தினான்;**
**இன்று காலன் முன் எய்தினான்'**
**என்று சொல்லி, இறைஞ்சினான்.**

**இது** - பிறர்மனை கவர்ந்து சிறை வைத்த செயல்; **நமக்கு நன்று அன்று** - நமக்கு நன்மையைத் தருவது அன்று; **எனா** - என்று; **ஒன்று நீதி** - பொருத்தமான அறச்சொற்களை; **உணர்த்தினான்** - இராவணனுக்கு எடுத்துச் சொன்னான்; **இன்று காலன் முன் எய்தினான்** -அவன் அதைக் கேளாமையால் ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரியது என்று யமனுக்கு முன்னே வந்து சேர்ந்தான்; **என்று சொல்லி** - என்று கூறி; **இறைஞ்சினான்** - இராமனை வணங்கி நின்றான் வீடணன்.

*சுக்கிரீவன், கும்பகருணனை உடன் சேர்த்துக் கொள்ளுதல் நலம் எனல்*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*7398.* ***என்று அவன் உரைத்தலோடும், இரவி சேய்,***
***'இவனை இன்று***
***கொன்று ஒரு பயனும் இல்லை; கூடுமேல்,***
***கூட்டிக்கொண்டு***
***நின்றது புரிதும்; மற்று இந் நிருதர்கோன் இடரும்***
***நீங்கும்;***
***"நன்று"என நினைந்தேன்' என்றான்; நாதனும்***
***'நயன் இது' என்றான்.***

**என்று அவன் உரைத்தலோடும்** - என்று அந்த வீடணன் கூறிய உடனே; **இரவி சேய்** - சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; **இவனை இன்று** - இக்கும்பகருணனை இப்போரில்; **கொன்று ஒரு பயனும் இல்லை** - கொன்று பயன் ஒன்றும் இல்லை; **கூடு மேல் கூட்டிக்கொண்டு** - இவன் நம்மொடு சேர்வான் ஆனால் சேர்த்துக்கொண்டு; **நின்றது புரிதும்** - மேல் நிகழ வேண்டிய செயல்களைச் செய்வோம்; **இந்நிருதர் கோன் இடரும் நீங்கும்** - இந்த அரக்கர் தலைவனான வீடணனது துன்பமும் நீங்கும்; **நன்று என்று நினைந்தேன் என்றான்** - இதுவே நல்லது என நான் நினைத்தேன் என்றான்; **நாதனும்** - இராமனும்; **இது நயன் என்றான்** - இச்செயல் அரசநீதிக்கு ஏற்றது என்று கூறினான்.

தானே வராத கும்பகருணனை இராமன் பக்கமே சேர்த்தல் நலம் எனச் சுக்கிரீவன் கூறலும் இராமன் அதற்கு உடன்படலும் சந்தி விக்கிரகம் என்ற போர் சார் உத்திகளில் விக்கிரக உத்தியென்க. துணை வலி தூக்கி அத்துணையைப் பிரிக்கும் முயற்சியே சுக்கிரீவனின் இக்கூற்று.

*கும்பகருணனை அழைத்து வர வீடணன் செல்லுதல்*

*7399.* ***'ஏகுதற்கு உரியார் யாரே?' என்றலும், இலங்கை***
***வேந்தன்,***
***'ஆகின், மற்று அடியனே சென்று, அறிவினால்,***
***அவனை உள்ளம்***
***சேகு அறத் தெருட்டி, ஈண்டுச் சேருமேல்,***
***சேர்ப்பென்' என்றான்;***
***மேகம் ஒப்பானும், 'நன்று, போக!' என்று விடையும்***
***ஈந்தான்.***

***ஏகுதற்கு உரியார் யாரே?*** - கும்பகருணனிடத்தில் செல்லுவதற்கு உரியவர் யாவர்; ***என்றலும்*** - என்று இராமன் வினவுதலும்; ***இலங்கை வேந்தன்*** - இலங்கைக்கு அரசனாகிய வீடணன்; ***ஆகின்*** - அப்படியானால்; ***அடியனே சென்று*** - அடியனாகிய யானே போய்; ***அறிவினால்*** - அறிவின் வல்லமையால்; ***அவனை உள்ளம்*** - அவனது உள்ளத்தில் உள்ள; ***சேகு அறத்தெருட்டி*** - ஐயம் நீங்கத் தெளிவித்து; ***ஈண்டுச் சேருமேல்*** - இங்கு வந்து சேர்வானேயானால்; ***சேர்ப்பென் என்றான்*** -சேரச் செய்வேன் என்று கூறினான்; ***மேகம் ஒப்பானும்*** - மேகத்தை ஒத்த நிறமும் பயனும் உடைய இராமனும்; ***நன்று போக*** - நல்லது போய் வருக; ***என்று விடையும் ஈந்தான்*** - என்று அவனுக்கு விடை தந்தான்.

*மற்று-அசை. அவனை உள்ளம்-உருபு மயக்கம். சேகு-ஐயம். கும்பகருணனுக்குப் பாசம் அறம் இரண்டுக்கும் இடையில் ஏற்பட்ட இரண்டாட்டம்.*

***7400. தந்திரக் கடலை நீந்தி, தன் பெரும் படையைச் சார்ந்தான்;***
***வெந் திறலவனுக்கு, 'ஐய! வீடணன் விரைவில் உன்பால்***
***வந்தனன்' என்னச் சொன்னார்; வரம்பு இலா உவகை கூர்ந்து,***
***சிந்தையால் களிக்கின்றான்தன் செறிகழல் சென்னி சேர்த்தான்.***

***தந்திரக் கடலை நீந்தி*** - குரக்குச் சேனையாகிய பெருங்கடலை அரிதில் கடந்து; ***தன்பெரும் படையைச் சார்ந்தான்*** - தனது பெரிய அரக்கர் சேனையை வீடணன் சென்று சேர்ந்தான்; ***வெந்திறலவனுக்கு*** - அவனது வரவு கண்ட அரக்கப்படையினர் கொடும் வலிமையுடைய அந்தக்கும்ப கருணனுக்கு; ***ஐய!*** - தலைவனே; ***வீடணன் விரைவில் உன்பால் வந்தனன்*** - வீடணன் விரைவாக உன்னிடத்து வருகிறான்; ***என்னச் சொன்னார்*** - என்று சொன்னார்கள்; ***வரம்பு இலா உவகை கூர்ந்து*** - அது கேட்டு எல்லை இல்லாத மகிழ்ச்சி மிக்கு; ***சிந்தையால் களிக்கின்றான் தன்*** - மனமகிழ்பவனாகிய கும்பகருணனது; ***செறிகழல் சென்னி சேர்த்தான்*** - வீரக்கழல் அணிந்த கால்கள் தன் தலைமேல் படும்படி வீடணன் நிலத்தில் விழுந்து வணங்கினான்.

*தந்திரக்கடல்-உருவகம். ஐய-அண்மை விளி.*

*கும்பகருணன் 'வந்தது தகுதி அன்று' என வீடணனுக்குக் கூறுதல்*

***7401. முந்தி வந்து இறைஞ்சினானை, முகந்து, உயிர் மூழ்கப் புல்லி,***

***'உய்ந்தனை, ஒருவன் போனாய்' என மனம் உவக்கின்றேன் தன்***
***சிந்தனை முழுதும் சிந்த, தெளிவு இலார் போல மீள வந்தது என், தனியே?' என்றான், மழையின் நீர் வழங்கு கண்ணான்.***

***மழையின் நீர் வழங்கு கண்ணான்*** - *மழை போல கண்ணீர் சொரியும் கண்களையுடையவனான கும்பகருணன்;* ***முந்தி வந்து இறைஞ்சினானை*** - *தன் முன்னே வந்து வணங்கியவனாகிய வீடணனை;* ***மோந்து*** - *உச்சி மோந்து;* ***உயிர் மூழ்கப் புல்லி*** - *ஈருடலும் ஒருயிரும் ஆகுமாறு இறுகத் தழுவி;* ***ஒருவன் உய்ந்தனை போனாய் என*** - *நீ ஒருவனாவது விலகிச் சென்று உய்ந்து விட்டாய் என்று எண்ணி;* ***மனம் உவக்கின்றேன்*** - *மனம் பெருங்களிப்புக் கொள்ளுகிற;* ***தன்*** - *என்னுடைய;* ***சிந்தனை முழுதும் சிந்த*** - *மன எண்ணம் முழுவதும் சிதறிக் கெடுமாறு;* ***தெளிவு இலார் போல*** - *அறம் இது மறம் இது என மனத் தெளிவில்லாதவர் போல;* ***மீள*** - *மீண்டும்;* ***தனியே வந்தது என் என்றான்*** - *தனியாக வந்தது என்ன காரணம் கருதியோ என வினாவினான். நீ இராமபிரானுடன் வரவேண்டியவன் அல்லவா? அப்படி இருக்கத் தனியே வந்ததற்கு என்ன காரணம் என ஐயத்தோடு வினவியவாறு. மழையின் நீர் வழங்குகண்-அவலக்குறிப்பு. உயிர் மூழ்கப் புல்லல் பாசத்தின் மிகுதியைக் காட்ட வந்தது. இங்கு மற வழிப் பட்ட அண்ணனும் வாழவேண்டும், அறவழிப்பட்ட தம்பியும் வாழவேண்டும் எனத் துடிக்கும் பாசப் பெருந்திறலைக் கும்பகருணன் வழியே காணலாம். அன்புடையர் என்பும் உரியர் பிறர்க்கு என்ற தமிழ் மறைக்கேற்ற பேரிலக்கிய வாழ்வல்லவா கும்பகருணனின் வாழ்வு.*

***7402. 'அவயம் நீ பெற்றவாறும், அமரரும் பெறுதல் ஆற்றா, உவய லோகத்தினுள்ள சிறப்பும், கேட்டு உவந்தேன், உள்ளம்;***
***கவிஞரின் அறிவு மிக்காய்! காலன் வாய்க் களிக்கின்றேம்பால்***
***நவை உற வந்தது என், நீ? அமுது உண்பாய் நஞ்சு உண்பாயோ?***

***கவிஞரின் அறிவு மிக்காய்*** - *கவிஞர்களைக் காட்டிலும் அறிவு மிகுந்தவனே!* ***நீ அவயம் பெற்றவாறும்*** - *நீ இராமனிடம் அடைக்கலம் பெற்ற தன்மையையும்;* ***அமரரும் பெறுதல் ஆற்றா*** - *அதனால் தேவர்களும் பெறுதற்கு இயலாத;* ***உவய லோகத்திலுள்ள சிறப்பும் கேட்டு*** - *இம்மை மறுமை ஆகிய இருவேறு உலகங்களில் உள்ள சிறப்புக்கள் பெற்றதையும் ஒற்றர் சொல்லக் கேட்டு;* ***உள்ளம் உவந்தேன்*** - *யான் மனம் மகிழ்ந்தேன்;* ***நீ காலன் வாய்க் களிக்கின்றேம் பால்*** - *(அப்படிப்பட்ட) நீ காலன் வாயில் இருந்துகொண்டு எங்களிடம்;* ***நவை உற வந்தது என்*** - *குற்றம் உண்டாகுமாறு வந்த காரணம் என்னையோ?;* ***அமுது உண்பாய் நஞ்சு உண்பாயோ?*** -

*வாழ வைக்கும் அமுதத்தை உண்டு கொண்டு இருக்கிற நீ அழிவுதரும் நஞ்சை உண்ண எண்ணுவையோ?*

*அமுது-இராமனையடைந்து பெறும் அறவழிப்பட்ட அழியா வாழ்வு. நஞ்சு-இராவணனையடைந்து பாவத்திற்குத் துணை போகும் அழிவு வாழ்வு. தம்பியின் அற உள்ளத்தை உணர்ந்த தமையனின் பாச உணர்வுச் சுழிகளின் களி பொங்கிய கும்மாளியை இப்பாடலில் காண்க.*

***7403. ' "குலத்து இயல்பு அழிந்ததேனும், குமர! மற்று உன்னைக் கொண்டே***
***புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற்று" என்னா,***
***வலத்து இயல் தோளை நோக்கி மகிழ்கின்றேன்; மன்ன! வாயை***
***உலத்தினை, திரிய வந்தாய்; உளைகின்றது உள்ளம், அந்தோ!***

***குமர** - குமரனே; **மன்ன** - மன்னவனே; **குலத்து இயல்பு அழிந்ததேனும்** - புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு குலத்தின் தன்மை வேறு ஒருவன் இல்லுறை தவத்தியை மறை துறந்து சிறை வைத்ததால் அழிந்து விட்டதாயினும்; **உன்னைக் கொண்டு** - உன்னை முதலாகக் கொண்டு; **புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற்று** - அப்புலத்தியன் கால்வழி அழிந்திடாத புண்ணியத்தைப் பெற்றது; **என்னா** - என்று; **வலத்து இயல் தோளை நோக்கி மகிழ்கின்றேன்** - நான் என் வெற்றி பொருந்திய தோளைப் பார்த்து மகிழ்ச்சி கொள்ளுகின்றேன்; **வாயை உலத்தினை திரிய வந்தாய்** - ஆனால் நீ என் வாய் ஈரம் உலருமாறு திரும்பி வந்தாய்; **அந்தோ உள்ளம் உளைகின்றது** - அதுகண்டு ஐயோ என் உள்ளம் வருந்துகின்றது என்றவாறு.*

*தோள்கள் சோதரர்கள் ஆதலின் கும்பகருணனது ஒரு தோளாகிய இராவணன் பாழானாலும் ஒரு தோளாகிய வீடணன் ஏற்றம் பெற்றதால் "தோளை நோக்கி மகிழ்கின்றேன்" என்றான். குமர-உறவுக் குறிப்பு. அண்மை விளி மன்ன-வீடணன் அடைந்த அடைக்கலம் சார் அண்மை விளி. இருமுறை வந்துள்ள விளிச் சொற்கள் கும்பகருணனின் மனக்குழப்பத்தைக் காட்டும் வகையில் அமைந்துள்ளன. புலத்தியன், விச்சிராவசு, இராவணன் எனக் குலமரபு காண்க. கேகசி இராவணனின் தாய். வலம்-வெற்றி. உலத்தினை-வாய் ஈரம் உலரச் செய்தனை.*

***7404. 'அறப் பெருந் துணைவர், தம்மை அபயம் என்று அடைந்த நின்னைத்***
***துறப்பது துணியார், தங்கள் ஆர் உயிர் துறந்த போதும்; இறப்பு எனும் பதத்தை விட்டாய்; இராமன் என்பளவும் மற்று இப்***

***பிறப்பு எனும் புன்மை இல்லை; நினைந்து, என்கொல்***
***பெயர்ந்த வண்ணம்?***

***அறப் பெருந்துணைவர் தம்மை*** - *தர்மத்தின் தனிமை தீர்ப்பானாகி அறத்திற்குப் பெருந்துணைவரான இராமனை;* ***அபயம் என்று அடைந்த நின்னை*** - *சரணம் என்று அடைந்த உன்னை;* ***தங்கள் ஆர் உயிர் துறந்த போதும்*** - *தங்களுடைய அருமையான உயிர் நீங்கப் போகிற நிலை வந்தாலும்;* ***துறப்பது துணியார்*** - *கை விடுவதற்குத் துணியமாட்டார்கள்;* ***இறப்பு எனும் பதத்தை விட்டாய்*** - *நீ இராமனையடைக்கலமாக அடைந்ததால் இறப்பு என்னும் நிலையைக் கடந்துவிட்டாய்;* ***இராமன் என்பளவும் மற்று இப்பிறப்பு எனும் புன்மை இல்லை*** - *இராமனது திருநாமத்தைக் கூறிக் கூறி வரும் உனக்குப் பிறப்பு என்னும் இழிவும் இல்லை;* ***நினைந்து பெயர்ந்த வண்ணம் என்*** - *அப்படியிருக்கும் போது நீ நினைத்து இங்கு மீண்டு வந்தது எதனால் என்றவாறு.*

*கொல்-ஐயப் பொருளில் வந்தது வந்த இடைச்சொல்.*

***7405. 'அறம் என நின்ற நம்பற்கு அடிமை பெற்று,***
***அவன்தனாலே***
***மறம் என நின்ற மூன்றும் மருங்கு அற மாற்றி,***
***மற்றும்,***
***திறம் என நின்ற தீமை இம்மையே தீர்ந்த செல்வ!***
***பிறர் மனை நோக்குவேமை உறவு எனப் பெறுதி***
***போலாம்?***

***அறம் என நின்ற நம்பற்கு*** - *அறத்தின் மூர்த்தி எனச் சொல்லுமாறு நின்ற தலைவனுக்கு;* ***அடிமை பெற்று*** - *அடிமையாகப் பெற்று;* ***அவன் தனாலே*** - *அவனது கருணை வள்ளல் தன்மையாலே;* ***மறம் என நின்ற மூன்றும்*** - *பாவத்துக்குக் காரணம் என்னுமாறு நின்ற காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றினையும்;* ***மருங்கு அற மாற்றி*** - *முழுதும் இல்லாமல் போக்கி;* ***மற்றும்*** - *மேலும்;* ***திறம் என நின்ற தீமை*** - *வலிமையுடையதாக இருந்த பிற தீய பண்புகளையும்;* ***இம்மையே தீர்ந்த செல்வ*** - *இப்பிறவியிலேயே போக்கிய செல்வனே;* ***பிறர் மனை நோக்கு வேமை*** - *அயலவரது மனைவியைஅறந்துறந்து நோக்கும் எங்களை;* ***உறவு எனப் பெறுதி போலாம்*** - *உறவு என இனிமேலும் கொள்வாய் போலும் என்றவாறு.*

*மறம் என நின்ற மூன்றும்-அறியாமை, திரிபு உணர்ச்சி, ஐய உணர்வு எனினும் ஆம். இப்பிறவியில் பெறவரும் பதம் பெற்ற நீ அதை விட்டு இங்கு மீண்டு வந்தது என்னையோ என்றவாறு. பிறர் மனை நோக்குவேமை-என்றது இராவணனுக்குத் துணையாய் நின்று போருக்கு வந்தமையால் உளப்படுத்திக் கூறியதாம்.*

***7406. 'நீதியும், தருமம் நின்ற நிலைமையும், புலமைதானும்,***
***ஆதி அம் கடவுளாலே அருந் தவம் ஆற்றிப்***
***பெற்றாய்;***
***வேதியர் தேவன் சொல்லால், விளிவு இலா ஆயுப்***
***பெற்றாய்;***
***சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும்,--***
***தக்கோய்!***

***தக்கோய்*** - *நற்பண்புகள் உடையவனே;* ***நீதியும்*** - *நீதியையும்;* ***தருமம் நின்ற நிலைமையும்*** - *அறத்தில் ஊன்றி இருக்கின்ற தன்மையையும்;* ***புலமை தானும்*** - *நல்லறிவையும்;* ***ஆதி அம் கடவுளாலே*** - *முழுமுதற் கடவுள் பால்;* ***அருந்தவம் ஆற்றிப் பெற்றாய்*** - *மிக்க தவம் செய்து அடைந்தாய்;* ***வேதியர் தேவன் சொல்லால்*** - *அந்தணர்க்குத் தலைவனாகிய பிரமன் கொடுத்த வரத்தால்;* ***விளிவு இலா ஆயுள் பெற்றாய்*** - *அழிவற்ற ஆயுளை அடைந்தாய்;* ***சாதியின் புன்மை*** - *இவ்வாறிருக்கவும் சாதியினது இழிவை;* ***இன்னும் தவிர்ந்திலை போலும்*** - *இன்னும் விட்டு விடவில்லை போலும்.*

***7407. ஏற்றிய வில்லோன், யார்க்கும் இறையவன், இராமன்***
***நின்றான்;***
***மாற்ற அருந் தம்பி நின்றான்; மற்றையோர் முற்றும்***
***நின்றார்;***
***கூற்றமும் நின்றது, எம்மைக் கொல்லிய; விதியும்***
***நின்ற;***
***தோற்ற எம் பக்கல், ஐய! வெவ் வலி தொலைய***

***வந்தாய்.*** ***ஐய*** - *ஐயனே;* ***யார்க்கும் இறையவன் இராமன்*** - *யாவருக்கும் தலைவனாகிய இராமன்;* ***ஏற்றிய வில்லோன் நின்றான்*** - *நாண் ஏற்றிய வில்லையுடையவனாய்க் காத்து நின்று கொண்டிருக்கிறான்;* ***மாற்ற அருந்தம்பி நின்றான்*** - *விலக்குதற்கு அரிய பெருவலி படைத்த தம்பியும் நின்று கொண்டிருக்கிறான்;* ***மற்றையோர் முற்றும் நின்றார்*** - *பிற படை வீரர்களாகிய வானரரும் மிகுதியும் இருக்கின்றார்கள்;* ***எம்மைக் கொல்லிய கூற்றமும் நின்ற*** - *எங்களைக் கொல்லுவதற்காக யமனும் காத்திருக்கிறான்;* ***விதியும் நின்ற*** - *அதற்கு ஏற்பவே விதியும் அமைந்துள்ளது;* ***வெவ்வலி தொலைய*** - *உனது தவவலியும் அறவலியும் கெட;* ***தோற்ற எம் பக்கல் வந்தாய்*** - *தோற்க இருக்கிற எங்கள் பக்கம் ஏன் வந்தாய்.*

*தோற்ற- தோற்கப்போகிறோம் என்ற தோற்றத்தால் எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்ட கால வழுவமைதி.*

***7408. 'ஐய! நீ அயோத்தி வேந்தற்கு அடைக்கலம் ஆகி, ஆங்கே
உய்கிலைஎன்னின், மற்று இவ் அரக்கராய் உள்ளோர் எல்லாம்
எய் கணை மாரியாலே இறந்து, பாழ் முழுதும் பட்டால்,
கையினால் எள் நீர் நல்கி, கடன் கழிப்பாரைக் காட்டாய்.***

***ஐய*** - ஐயனே; ***அயோத்தி வேந்தற்கு*** - அயோத்திக்கு வேந்தன் ஆகிய இராமனுக்கு; ***அடைக்கலம் ஆகி*** - அடைக்கலப் பொருள் ஆகி; ***நீ ஆங்கே*** - நீ அங்கு; ***உய்கிலை என்னின்*** -உயிர் உய்ந்து வாழாய் ஆயின்; ***மற்று இவ் அரக்கராய் உள்ளோர் எல்லாம்*** - இந்த அரக்கர்களாய் உள்ள நாங்கள் எல்லாம்; ***எய்கணை மாரியாலே*** - இராமன் எய்யும் அம்பு மழையாலே; ***முழுதும் இறந்து பாழ்பட்டால்*** - முற்றிலும் இறந்து பாழாகிப் போனால்; ***கையினால் எள்நீர் நல்கி*** - கையினால் எள்ளொடு கூறிய நீரை இறந்தவர் பொருட்டுக் கொடுத்து; ***கடன் கழிப்பாரைக் காட்டாய்*** - நீர்க் கடன் நிறைவேற்றுவர் யாவர் உளர் எனக் காட்டாய் என்றவாறு.

*நீ இராமனுடன் இருந்து எங்கட்கு நீர்க்கடன் செய்க என்றவாறு. நீ இராமனிடம் இருப்பது எங்களுக்கும் நன்மையென்று கும்பகருணன் கூறுகிறான். இறந்தார்க்கு நீர்க்கடன் செய்தல் மிகமிக இன்றியமையாதது என்ற குறிப்பும் காண்க.*

***7409. 'வருவதும், இலங்கை மூதூர்ப் புலை எலாம் மாண்ட பின்னை;
திருவுறை மார்பனோடும் புகுந்து, பின் என்றும் தீராப்
பொருவ அருஞ் செல்வம் துய்க்கப் போதுதி, விரைவின்' என்றான்.
'கருமம் உண்டு உரைப்பது' என்றான்; 'உரை'என, கழறலுற்றான்;***

***இலங்கை மூதூர் வருவதும்*** -நீ இலங்கை மூதூர்க்கு(வரத்தக்க காலம் இப்போது அன்று வரும் காலம்; ***புலை எலாம் மாண்ட பின்னை*** - இழிதொழில் உடைய அரக்கர் கூட்டம் எல்லாம் அழிந்தபிறகு; ***திருவுறை மார்பனோடும் புகுந்து*** - திருமகள் வாழும் மார்பினை உடைய இராமனோடு புகுந்து; ***பின் என்றும் தீராப்*** - பிறகு என்றும் அழியாத; ***பொருவ அருஞ்செல்வம்*** - ஒப்பற்ற இலங்கையரசச் செல்வத்தையும் மற்றும் வீட்டு உலகச் செல்வத்தையும்; ***துய்க்கப் போதுதி விரைவின்*** - அனுபவிப்பதற்காக விரைவில் திரும்பிப் போய்விடுக; ***என்றான்*** - என்று

*கும்பகருணன் கூறினான்; **கருமம் உண்டு உரைப்பது என்றான்** - (அதற்கு வீடணன் உன்னிடம்) சொல்லவேண்டிய காரியம் ஒன்று உள்ளது என்றான்; **உரை என** - அதைச் சொல் என்று கும்பகருணன் கேட்க; **கழறலுற்றான்** - வீடணன் கூறத் தொடங்கினான்.*

### *இராமனைச் சரண் புகுமாறு வீடணன் கும்பகருணனுக்கு உரைத்தல்*

***7410. 'இருள் உறு சிந்தையேற்கும் இன் அருள் சுரந்த வீரன்
அருளும், நீ சேரின்; ஒன்றோ, அவயமும் அளிக்கும்; அன்றி,
மருள் உறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம்; மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து, வீடு அளிக்கும் அன்றே.***

**இருள் உறு சிந்தையேற்கும்** *- அறியாமை நிரம்பிய மனத்தையுடையவனான எனக்கும்;* **இன் அருள் சுரந்த வீரன்** *- இனிய அருளைச் சுரந்து அடைக்கலம் தந்த வீரனாகிய இராமன்;* **நீ சேரின் அருளும்** *- நீ அடைக்கலமாக வந்து சேரினும் அருள் புரிவான்;* **ஒன்றோ** *-அது மட்டுமா?;* **அவயமும் அளிக்கும்** *-உனக்கு எவராலும் துன்பம் நேராமல் அபயக் கருணையும் செய்வான்;* **அன்றி** *- அதோடு;* **மருள் உறு பிறவி நோய்க்கு** *- மயக்கம் தருகிற பிறவிப் பிணிக்கு;* **மருந்தும் ஆம்** *- மருந்தும் ஆவான்;* **மாறிச் செல்லும்** *- இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும் தன்மையுடைய;* **உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து** *- உருண்டு வரும் வண்டிச் சக்கரம் போன்ற இந்த உலக வாழ்வை நீக்கி;* **வீடு அளிக்கும் அன்றே** *- வீட்டுலகை அளிப்பான் அன்றோ?.*

*வீடணன் கும்பகருணனை அழைப்பதே கும்பகருணன் வினாவையத்துக்கு விடையாய் நின்றது.*

***7411. 'எனக்கு அவன் தந்த செல்வத்து இலங்கையும் அரசும் எல்லாம்
நினக்கு நான் தருவென்; தந்து, உன் ஏவலின் நெடிது நிற்பென்;
உனக்கு இதின் உறுதி இல்லை; உத்தம! உன் பின் வந்தேன்
மனக்கு நோய் துடைத்து, வந்த மரபையும் விளக்கு வாழி!***

***உத்தம!*** *- உத்தமனே;* ***எனக்கு அவன் தந்த*** *- எனக்கு அந்த இராமன் கொடுத்த;* ***செல்வத்து இலங்கையும்*** *- செல்வத்தையுடைய இலங்கையையும்;* ***அரசும்*** *- அதனை ஆளும் உரிமையினையும்;* ***எல்லாம் நினக்கு நான் தருவென்*** *- பிற எல்லாவற்றையும் உனக்கு நான் கொடுப்பேன்;* ***தந்து*** *- அவ்வாறு கொடுத்து;* ***உன் ஏவலின் நெடிது நிற்பென்*** *- உன் ஏவலின் வழியே என்றும் நடப்பேன்;* ***உனக்கு இதின் உறுதி இல்லை*** *- உனக்கு இதைக் காட்டிலும் உறுதி தருவது வேறு ஒன்றும் இல்லை;* ***உன் பின் வந்தேன்*** *- உன் பின் பிறந்தோனாகிய எனது;* ***மனக்கு நோய் துடைத்து*** *- மனத்தில் உள்ள வருத்தத்தைப் போக்கி;* ***வந்த மரபையும் விளக்கு*** *- பிறந்த குலமரபையும் விளங்கச் செய்வாய்.*

*வாழி-அசை.*

***7412. 'போதலோ அரிது; போனால், புகலிடம் இல்லை; வல்லே,***<br>***சாதலோ சரதம்; நீதி அறத்தொடும் தழுவி நின்றாய்***<br>***ஆதலால், உளதாம் ஆவி அநாயமே உகுத்து என்? ஐய!***<br>***வேத நூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமே பிடிக்க வேண்டும்.***

***ஐய!*** *- ஐயனே;* ***நீதி அறத்தொடும் தழுவி நின்றாய்*** *- நீதியையும் அறத்தையும் பற்றி நிற்பவனே!;* ***போதலோ அரிது*** *- போரில் உயிர் தப்பிப் போதல் மிக அரிதாகும்;* ***போனால் புகலிடம் இல்லை*** *- அவ்வாறு தப்பிப் போனாலும் புகலாக அடைவதற்கு உரிய வேறு இடமும் இல்லை;* ***வல்லே சாதலோ சரதம்*** *- விரைவாகச் சாவதோ உறுதி;* ***ஆதலால்*** *- ஆதலால்;* ***உளதாம் ஆவி*** *- உள்ள உயிரினை;* ***அநாயமே உகுத்து என்*** *- வீணாகப் போக்கி என்ன பயன்?;* ***வேத நூல் மரபுக்கு ஏற்ற*** *- வேதநூல்களில் கூறிய முறைமைக்குத் தக்க;* ***ஒழுக்கமே பிடிக்கவேண்டும்*** *- நல்லொழுக்கத்தையே உறுதியாகக் கடைப்பிடிக்கவேண்டும்.*

*பற்று விட்டுப் பற்றற்றான் பற்றினைப் பற்றுக என்றான். கும்பகருணனின் அற நெஞ்சுணர்ந்து கூறி அவனை இராமன் பக்கம் சேர்க என்கிறான் வீடணன். வல்லே- விரைவாக. அநாயம்-வீண்.*

***7413. 'தீயவை செய்வர் ஆகின், சிறந்தவர், பிறந்த உற்றார்,***<br>***தாய்அவை, தந்தைமார் என்று உணர்வரோ, தருமம் பார்ப்பார்?***<br>***நீ அவை அறிதி அன்றே? நினக்கு நான் உரைப்பது என்னோ?***<br>***தூயவை துணிந்து போது, பழி வந்து தொடர்வது உண்டோ?***

***தருமம் பார்ப்பார்*** - *தருமத்தையே சிறப்பாகப் பார்ப்பவர்கள்;* ***தீயவை செய்வர் ஆகின்*** - *தீய செயல்களைச் செய்வார்களாயின்;* ***சிறந்தவர்*** - *அன்பிற் சிறந்தவர்;* ***பிறந்த உற்றார்*** - *உடன் பிறந்த உறவு முறையினர்;* ***தாய் அவை*** - *தாயாகிய அவ்வை;* ***தந்தைமார்*** - *தந்தைமார்;* ***என்று உணர்வரோ*** - *என்று எண்ணிப் பார்ப்பார்களா?;* ***நீ அவை அறிதி அன்றே*** - *நீ அவற்றை அறிவாய் அல்லவா?;* ***நினக்கு நான் உரைப்பது என்னோ*** - *உனக்கு நான் சொல்ல வேண்டுவது என்ன உள்ளது;* ***தூயவை துணிந்த போது*** - *தூய்மையான செயல்களைச் செய்யத் துணியும் போது;* ***பழி வந்து தொடர்வது உண்டோ?*** - *பழிச் செயல் வந்து தொடர்வது உண்டாகுமா?*

*அறம் நோக்குவார் நண்பர், உறவினர், தாய் தந்தை என்ற அன்பு நோக்கிலும் பாச நோக்கிலும் நோக்காது அவர்கள் தவறு செய்யின் அறநோக்கம் கருதி அவர்களைக் கை விடுவர் என்றும் அவ்வாறு செய்யும் போது பழி வந்து தொடராது என்றும் கூறியவாறு. இப்பாடல் வீடணனின் வாழ்க்கை நோக்கு நிலையை விளக்குகிறது. வீடணன் பாசம் என்ற சிறிய வட்டத்தை அறம் என்ற பெரிய வட்டத்தில் அடங்கியவன் என்பதை இதனால் உணர்க. தாய் அவை-இருபெயரொட்டுப் பண்புத்தொகை; அவை - அவ்வை என்பதன் இடைக்குறை.*

***7414. 'மக்களை, குரவர்தம்மை, மாதரை, மற்றுளோரை,***
***ஒக்கும் இன் உயிர் அன்னாரை, உதவி செய்தாரோடு ஒன்ற,***
***"துக்கம், இத் தொடர்ச்சி" என்று, துறப்பரால், துணிவு பூண்டோர்;***
***மிக்கது நலனே ஆக, வீடுபேறு அளிக்கும் அன்றே!***

***துணிவு பூண்டோர்*** - *உறுதியான துறவு எண்ண வலிமை உள்ளவர்கள்;* ***மக்களை*** - *பெற்ற மக்களையும்;* ***குரவர் தம்மை*** - *இருமுது குரவரையும்;* ***மாதரை*** - *மனைவியரையும்;* ***மற்றுளோரை*** - *மற்றுமுள்ள உறவினர்களையும்;* ***இன் உயிர் ஒக்கும் அன்னாரை*** - *இனிய உயிரை ஒத்த நண்பர்களையும்;* ***உதவி செய்தாரோடு*** - *உதவி செய்தவர்களையும்* ***ஒன்ற*** - *முழுமையாக; இத்தொடர்ச்சி* ***துக்கம் என்று*** - *இந்த உலகியல் பந்தத் தொடர்ச்சி துன்பம் விளைவிக்கும் என்று எண்ணித்;* ***துறப்பாரால்*** - *துறந்து விடுவார்கள்;* ***மிக்கது*** - *சிறந்ததாகிய அத்துறவு;* ***நலனே ஆக*** - *நற்செயலாக ஆகி;* ***வீடு பேறு அளிக்கும் அன்றே*** - *வீட்டுலகத்தைத் தருமல்லவா?*

*தவறு செய்த தமையனைத் துறத்தலும் அறமே என்பதையும் இங்கு வீடணன் கூறுகிறான். துறவிகளின் ஒழுக்கம் அறத்தைக் கைவிடாதது என்று கூறி இல்லறத்தவனாகிய நீயும் அவ்வற வழி நிற்க என்றவாறு காண்க, தொடர்ச்சி-பந்தம். நலன்-அறம், ஆல்-அசை.*

***7415. 'தீவினை ஒருவன் செய்ய, அவனொடும் தீங்கு இலாதோர்***
***வீவினை உறுதல், ஐய! மேன்மையோ?***

***கீழ்மைதானோ?***
***ஆய் வினை உடையை அன்றே? அறத்தினை***
***நோக்கி, ஈன்ற***
***தாய் வினை செய்ய அன்றோ, கொன்றனன்,***
***தவத்தின் மிக்கான்?***

***ஐய!*** *-ஐயனே;* ***தீவினை ஒருவன் செய்ய*** *-தீய செயலை ஒருவன் செய்ய;* ***அவனொடும் தீங்கு இலாதோர்*** *- அதற்காக அவனொடு தீமை செய்யாதவர்களும்;* ***வீவினை உறுதல்*** *- உயிர் விடுதலை அடைதல்;* ***மேன்மையோ*** *- மேன்மை விளைவிப்பதா?;* ***கீழ்மை தானோ*** *- தாழ்வினை விளைவிப்பதா?;* ***ஆய்வினை உடையை அன்றே*** *- நீ ஆய்வு செய்யும் திறமை படைத்துள்ளாய் அல்லவா?* ***அறத்தினை நோக்கி*** *- அறத்துக்காகப் பார்த்து;* ***ஈன்ற தாய்*** *- தன்னைப் பெற்ற தாய்;* ***வினை செய்ய அன்றோ*** *- தீய செயலைச் செய்ததனாலன்றோ;* ***தவத்தின் மிக்கான் கொன்றனன்*** *- தவத்தில் மிகுந்த பரசுராமன் அத்தாயையே கொன்றான் என்றவாறு.*

*ஒருவன் செய்த தீயசெயலுக்குத் தீங்கு செய்யாதவரும் அழிதல் என்ன நியாயம் என வினவியவாறு. இப்பகுதியில் வீடணன் தனி மனித அறம் பேசுகிறான். அரசியல் அறம் பேசவில்லை. மன்னன் தவறே செய்யான் என்ற எண்ணம் நிலைபெற்றிருந்த காலத்தில் தவறு செய்தவன் பெருமன்னன் ஆயினும் அவனை விட்டு விலகுக என்று வீடணன் வாயிலாக விளக்கப்படுகிறது. தவறு செய்தவர் தண்டனை பெற்றே தீரவேண்டும். அவ்வாறு தண்டிப்பதும் அறமே எனத் தாயைக் கொன்ற பரசுராமன் கதை வழி வீடணன் விளக்குகிறான். சமதக்கினி முனியின் மனைவியாகிய ரேணுகை கங்கையில் நீராடிப் புனல் கொண்டு வரப் போன போது, சித்திரரதன் என்ற கந்தருவன் தன் துணைவியரோடு புனலாடுவது கண்டு மனம் நெகிழ்ந்து காலம் தாழ்த்தித் தன் கணவனது ஓமத்துக்கு நீர் கொண்டு வந்தாள். நடந்ததை அறிந்த முனிவன் தன் மக்களான உருமன்வான், சுசேணன், விசு, விசுவாவசு ஆகியோரை அழைத்து அவளை மனத்தில் கவலையில்லாமல் கொல்லுமாறு சொன்னான். அவர்கள் தயங்கிப் பின் வாங்கியபோது கடைசி மகனாகிய பரசுராமன் தாயைக் கொன்று தந்தையின் கட்டளையை நிறைவேற்றினான் என்பது கதை. வீவினை உறுதல்-இறத்தல், ஆய்வினை-ஆராய்ச்சி செய்யும் திறமை.*

***7416. 'கண்ணுதல், தீமை செய்ய, கமலத்து முளைத்த***
***தாதை***
***அண்ணல்தன் தலையின்ஒன்றை அறுக்க அன்று***
***அமைந்தான் அன்றே?***
***புண் உறு புலவு வேலோய்! பழியொடும் பொருந்தி,***
***பின்னை,***
***எண்ணுறு நரகின் வீழ்வது அறிஞரும்***
***இயற்றுவாரோ?***

***புண் உறு புலவு வேலோய் !*** - *பகைவர் உடல் புண்ணிலிருந்து பொருந்திய ஊன் நாற்றம் படிந்த வேற்படையை உடையவனே;* ***கமலத்து முளைத்த தாதை அண்ணல்*** - *தாமரையில் தோன்றிய பெருமை மிகு பிரமன்;* ***தீமை செய்ய*** - *ஒரு தீய தொழிலைச் செய்தபோது;* ***கண்ணுதல்*** - *நெற்றியில் கண்ணுடைய சிவபிரான்;* ***தன் தலையின் ஒன்றை அறுக்க*** - *அவனது தலையில் ஒரு தலையை அறுத்துவிட;* ***அன்று அமைந்தான் அன்றோ*** *-அப்போது அவன் அதற்கு உடன்பட்டான் அல்லவா?;* ***பழியொடும் பொருந்தி*** - *இம்மையில் பழியைப் பொருந்தி;* ***பின்னை*** - *மறுமையில்;* ***எண்ணுறு நரகின் வீழ்வது*** - *கொடிய நரகத்தில் வீழ்வதற்குக் காரணமான செயலை;* ***அறிஞரும் இயற்றுவாரோ*** - *அறிஞரும் செய்வார்களோ.*

*தீங்கு செய்தார் உயர்ந்தாராயினும் அழிப்பதே அறம் என்பதை விளக்கச் சிவபிரான் பிரமனது தலையில் ஒன்றை அறுத்த நிகழ்ச்சியைச் சான்று காட்டுகிறான் வீடணன். கமலத் தண்ணல் செய்த தீத்தொழில் பிரமன் தனக்கு உரிய நான்கு தலைகளோடு ஐந்தாவதாக ஒரு தலையினைப் படைத்துக் கொண்டு சிவனோடு ஒப்பத் தன்னையும் எண்ணிச் செருக்கு உற்றான். சிவன் அவன் தலைகளுள் ஒன்றைக் கிள்ளி ஆணவத்தை அடக்கினன் என்பது புராணச் செய்தி. அறம் தவறின் இம்மையில் பழியும் மறுமையில் நரகும் கிடைக்கும் என அறிவு கொளுத்தியவாறு.*

***7417. 'உடலிடைத் தோன்றிற்று ஒன்றை அறுத்து, அதன் உதிரம் ஊற்றி,***
***சுடல் உறச் சுட்டு, வேறு ஓர் மருந்தினால், துயரம் தீர்வர்;***
***கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கருமம் அன்றால்***
***மடலுடை அலங்கல் மார்ப! மதி உடையவர்க்கு மன்னோ!***

***மடலுடை அலங்கல் மார்ப!*** - *இதழ்களையுடைய மலர்களால் ஆன மார்பை உடையவனே!;* ***உடலிடைத் தோன்றிற்று ஒன்றை*** - *உடலில் தோன்றிய ஒரு கழற்புண்ணை;* ***அறுத்து*** - *கத்தியால் அறுத்து;* ***அதன் உதிரம் ஊற்றி*** - *அதில் உள்ள தீய உதிரத்தையும் சீழ் நீரையும் வெளியேற்றி;* ***சுடல் உறச் சுட்டு*** - *கார மருந்துகளை அல்லது தீச்சுடலைப் பொருத்தமாக வைத்துச் சுட்டு;* ***வேறு ஓர் மருந்தினால்*** - *புண்ணை ஆற்றுவதற்குரிய வேறு ஒரு மருந்தினால்;* ***துயரம் தீர்வர்*** - *உலகத்தவர் துயரம் நீங்குவார்கள்;* ***மதி உடையவர்க்கு மன்னோ*** - *அறிவுடையவர்களுக்கு;* ***கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது*** - *கடலின் கண் நறுமணப் பொருள்களைத் தேய்த்துக் கழிய விடுவது;* ***கருமம் அன்றால்*** - *செயத்தகு செயலாகாது.*

*கடலில் கோட்டம் தேய்க்கும் செயல் கடல் நீரின் தன்மையை எவ்வகையிலும் மாற்றாதது போல அரக்கராகிய பாவக் கடலில் அறவழிப்பட்ட உன் உயிராகிய கோட்டத்தைக் கரைப்பது பயனற்ற செயல் என்று கூறுகிறான் வீடணன். இப்பாடலில் உடலில் தோன்றிய கட்டியாக இராவணனைக் கருதிப் பேசுதல் காண்க.*

*கோட்டம்-ஒரு வகை நறுமணப் பொருள். 'கடலிற் பெருங்காயம் கரைத்தாற் போல' என்னும் உலக வழக்கும் உணர்க. கோட்டம்-பெருங்காயம் என்பாரும் உளர்.*

***7418. 'காக்கலாம் நும்முன் தன்னை எனின், அது கண்டது இல்லை;***
***ஆக்கலாம் அறத்தை வேறே என்னினும், ஆவது இல்லை;***
***தீக் கலாம் கொண்ட தேவர் சிரிக்கலாம்; செருவில் ஆவி***
***போக்கலாம்; புகலாம், பின்னை நரகு; அன்றிப் பொருந்திற்று உண்டோ?***

***நும்முன் தன்னைக் காக்கலாம் எனின்*** *- உன் தமையனான இராவணனைக் காக்கலாம் என்றாலோ;* ***அது கண்டது இல்லை*** *- அதற்கு உபாயம் ஏதும் ஏற்பட்டிலது;* ***அறத்தை வேறே ஆக்கலாம் என்னினும்*** *-அவனுடன் இருந்து தருமத்தை வேறாகச் செய்யலாம் என்றாலும்;* ***ஆவது இல்லை*** *- அச்செயல் ஆவது அன்று;* ***தீக்கலாம் கொண்ட தேவர்*** *- நம்மோடு கொடிய மாறுபாடு கொண்ட தேவர்கள்;* ***சிரிக்கலாம் செருவில்*** *- சிரிக்கும் படி நடக்க உள்ள போரில்;* ***ஆவி போக்கலாம்*** *-உயிரை விடலாம்;* ***பின்னை நரகு புகலாம்*** *- பின்பு நரகத்திலும் புகலாம்;* ***அன்றிப் பொருந்திற்று உண்டோ*** *- இதுவல்லாது வேறு பொருந்திய செயல் உண்டோ என்றவாறு.*

*'நம்முன்' என்னாது 'நும்முன்' என்றது வீடணன், தன்னைப் பிரித்துக் கூறிய கூற்று. "பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின் அவன் பிழைத்த போதே" என்ற (9105) வீடணன் உரையை இங்கு நினைக. கலாம்-கலகம்.*

***7419. 'மறம் கிளர் செருவில் வென்று வாழ்ந்திலை; மண்ணின் மேலா***
***இறங்கினை; இன்றுகாறும் இளமையும் வறிதே ஏக,***
***உறங்கினை என்பது அல்லால், உற்றது ஒன்று உளதோ? என், நீ***
***அறம் கெட உயிரை நீத்து மேற்கொள்வான் அமைந்தது?--ஐயா!***

***ஐயா*** *- ஐயனே;* ***இன்று காறும்*** *- இன்று வரையிலும்;* ***இளமையும் வறிதே ஏக*** *- இளமைப் பருவமும் வீணாகக் கழியுமாறு;* ***உறங்கினை என்பது அல்லால்*** *- ஆறு மாதம் உறங்குவதும் ஒருநாள் விழிப்பதுமாக இருக்கின்றாய் என்பதல்லது;* ***மறம் கிளர் செருவில் வென்று வாழ்ந்திலை*** *-பெரு வீரனாய் இருந்தும் வீரம் விளங்குகின்ற*

*போரில் வென்று வாழ்வு பெறவில்லை;* ***மண்ணின் மேலா இறங்கினை*** *-நில உலகில் மதிப்பு இழந்து தாழ்வு அடைந்து விட்டாய்;* ***உற்றது ஒன்று உளதோ*** *- பெற்ற நற்பயன் வேறு ஒன்று உள்ளதோ?;* ***நீ அறங்கெட உயிரை நீத்து*** *- நீ இப்போது அறம் கெடுமாறு உயிரை இராவணனுக்காக விட்டு;* ***மேற் கொள்வான் அமைந்தது என்*** *- பெற இருப்பது என்னவோ?*

*வாழும் போது வாழ்நாளை வீணாய் உறங்கிக் கழித்து இப்போது அறம் கெட உயிரை இராவணனுக்காகப் போக்கி நீ பெற இருப்பது என்னவோ என்றவாறு.*

***7420. திரு மறு மார்பன் நல்க, அனந்தரும் தீர்ந்து, செல்வப்***
***பெருமையும் எய்தி, வாழ்தி; ஈறு இலா நாளும் பெற்றாய்;***
***ஒருமையே அரசு செய்வாய்; உரிமையே உனதே; ஒன்றும்***
***அருமையும் இவற்றின் இல்லை; காலமும் அடுத்தது, ஐயா!***

***ஐயா !*** *- ஐயனே;* ***திருமறு மார்பன் நல்க*** *- திருமகளையும், ஸ்ரீவத்சமென்னும் மச்சத்தையும் திருமார்பில் கொண்ட மாலின் திருவவதாரமாகிய இராமபிரான் கருணை செய்தலால்;* ***அனந்தரும் தீர்ந்து*** *-உன் உறக்க சாபம் நீங்கப் பெற்று;* ***செல்வப் பெருமையும் எய்தி*** *- செல்வச் செழிப்பையும் பெற்று;* ***ஈறு இலா நாளும் பெற்றாய் வாழ்தி*** *- அழிவில்லாத வாழ்நாளும் பெற்று வாழ்வாயாக;* ***ஒருமையே அரசு செய்வாய்*** *- நீ இணையின்றி அரசு செய்வாய்;* ***உரிமையே உனதே*** *- அதற்கு உனக்கு உரிமையும் உன்னதே;* ***இவற்றின் ஒன்றும் அருமையும் இல்லை*** *- இவ்வாறு எல்லாம் செய்வதில் சிறிதும் அருமையும் இல்லை;* ***காலமும் அடுத்தது*** *- அதற்குரிய காலமும் வந்துவிட்டது.*

*இப்பாடலில் இராமனையடைந்தால் கும்பகருணன் பெறப் போகும் இம்மைப் பேறுகள் விளக்கப்பட்டுள்ளன. வீடணனின் வாதம் அறம் பாவம், நன்மை, தீமை பேறு, இழிவு, வாழ்வு சிறப்பு இம்மை மறுமை என்ற இரட்டைகளாக அமைவதை அவனது கூற்றுக்கொண்டு உணரமுடிகிறது. ஒருமையே - இணையின்றியே. அனந்தர் - உறக்கமும் விழிப்பும் அற்ற நிலை. மயக்கநிலை எனலாம். பெற்றாய்-பெறுவாய் என்பது துணிவு காரணமாக எதிர்காலம் இறந்தகாலமாக வந்த கால வழுவமைதி; முற்றெச்சமும் ஆம்.*

***7421. 'தேவர்க்கும் தேவன் நல்க, இலங்கையில் செல்வம் பெற்றால்,***
***ஏவர்க்கும் சிறியை அல்லை; யார், உனை நலியும் ஈட்டார்?--***
***மூவர்க்கும் தலைவர் ஆன மூர்த்தியார், அறத்தை***

*முற்றும்*
*காவற்குப் புகுந்து நின்றார், காகுத்த வேடம் காட்டி!*

**மூவர்க்கும் தலைவர் ஆன மூர்த்தியார்** - அரி அரன் அயன் என்னும் மூவர்க்கும் தலைவரான பரம்பொருள்; **அறத்தை முற்றும் காவற்கு** - அறத்தை முழுதும் காக்கும் பொருட்டுக்; **காகுத்த வேடம் காட்டி புகுந்து நின்றார்** - காகுத்த வேடங்கொண்டு நில உலகில் புகுந்துள்ளார்; **தேவர்க்கும் தேவன் நல்க** - அத்தகைய தேவர்க்குத் தேவன் ஆகிய இராமன் தந்தருள; **இலங்கையில் செல்வம் பெற்றால்** - இலங்கையை ஆளும் செல்வத்தைப் பெற்றால்; **ஏவர்க்கும் சிறியை அல்லை** -எவருக்கும் சிறுமையுடையவன் ஆகாய்; **உனை யார் நலியும் ஈட்டார்** - உன்னை எதிர்த்து வருத்தக் கூடியவர் யாவர்?

*7422. 'உன் மக்கள் ஆகி உள்ளார், உன்னொடும் ஒருங்கு*
*தோன்றும்*
*என் மக்கள் ஆகி உள்ளார், இக் குடிக்கு இறுதி*
*சூழ்ந்தான்--*
*தன் மக்கள் ஆகி உள்ளார், தலையொடும் திரிவர்*
*அன்றே--*
*புன்மக்கள் தருமம் பூணாப் புல மக்கள் தருமம்*
*பூண்டால்?*

**புன் மக்கள் தருமம் பூணாப்** - நீ புல்லிய தன்மையுடைய அரக்கர்களின் தருமத்தை மேற்கொள்ளாமல்; **புலமக்கள் தருமம் பூண்டால்** - அறிவுடை மக்களது தருமத்தைக் கைக்கொண்டால்; **உன் மக்கள் ஆகி உள்ளார்** - உன் மக்களாய் இருப்பவர்களும்; **உன்னொடும் ஒருங்கு தோன்றும் என் மக்கள் ஆகி உள்ளார்** - உன்னோடு உடன் பிறந்த எனக்கு மக்களாய் இருப்பவர்களும்; **இக்குடிக்கு இறுதி சூழ்ந்தான்** - இந்த அரக்கர் குலத்துக்கு அழிவைத் தேடியவனான இராவணன்; **தன் மக்கள் ஆகி உள்ளார்** - தனக்கு மக்களாய் இருப்பவர்களும்; **தலையொடும் திரிவர் அன்றே** - இராமபாணத்தால் தலையை இழக்காது திரிவர் அன்றோ.

அரக்கராய் உள்ளோர் எல்லாம் இறந்து பாழ்படுவோம் பட்டால் கையினால் எள்நீர் நல்கிக் கடன் கழிப்பார் யார் எனக் கேட்ட கும்பகருணனுக்கு நீ இராமனைச் சேர்ந்தால் அரக்கர் குலம் அழியாமல் காக்கலாம் என்று கூறியவாறு.

*7423. 'முனிவரும் கருணை வைப்பர்; மூன்று உலகத்தும்*
*தோன்றி*
*இனி வரும் பகையும் இல்லை; "ஈறு உண்டு" என்று*
*இரங்க வேண்டா;*
*துனி வரும் செறுநர் ஆன தேவரே துணைவர்*
*ஆவர்;--*
*கனி வரும் காலத்து, ஐய! பூக் கொய்யக்*

*கருதலாமோ?*

***ஐய*** - *ஐயனே!;* ***முனிவரும் கருணை வைப்பர்*** - *நீ இராமனைச் சேர்ந்தால் உன் மீது பகைமை வைத்துள்ள முனிவர்களும் கருணை கொள்வார்கள்;* ***மூன்று உலகத்தும் தோன்றி இனி வரும் பகையும் இல்லை*** - *மூன்று உலகங்களிலும் பகையாகத் தோன்றி வருபவரும் எவருமிலர்;* ***ஈறு உண்டு என்று இரங்க வேண்டா*** - *மரணம் உண்டு என்று இரக்கப்படத் தேவையில்லை;* ***துணிவரும் செறுநர் ஆன தேவரே துணைவர் ஆவர்*** - *வெறுப்பால் வரும் மிகு பகை கொண்ட தேவர்களே நமக்குத் துணைவராக மாறுவர்;* ***கனி வரும் காலத்து பூக்கொய்யக் கருதலாமோ*** - *கனி தோன்றும் காலத்தில் பூக்களைக் கொய்துவிட நினைக்கலாமோ?*

*கனி வருங்காலத்து ஐய பூக்கொய்யக் கருதலாமோ பிறிது மொழிதல் அணி. கனிகள் தோன்றும் காலத்தில் பூக்களைப் பறிக்க நினைத்தல் அறிவுடைமையாகாதது போல இலங்கை அரசாகிய கனி பெற்று இனிது வாழ்வதற்குரிய காலம் கனிந்துள்ள போது, இவ்வினிய வாழ்வுக்குரிய உடலாகிய பூவைக் கொய்தழித்தல் அறிவுடைய செயல் ஆகாது என்று கூறியவாறு காண்க. துனி-வெறுப்பு. செறுநர்-பகைவர். துனிவரும் செறுநர் ஆன தேவர்-வானர வடிவில் வந்த தேவர் எனலுமாம்.*

***7424. 'வேத நாயகனே உன்னைக் கருணையால் வேண்டி, விட்டான்;***
***காதலால், என்மேல் வைத்த கருணையால், கருமம் ஈதே;***
***ஆதலால், அவனைக் காண, அறத்தொடும் திறம்பாது, ஐய!***
***போதுவாய் நீயே' என்னப் பொன் அடி இரண்டும் பூண்டான்***

***ஐய!*** - *ஐயனே;* **வேதநாயகனே** - *வேதங்கள் துதிக்கும் தலைவனாகிய இராமனே;* ***கருணையால்*** - *உன்மீது கொண்டுள்ள அருளால்;* **உன்னைவேண்டி** - *உன்னை வேண்டி அழைத்து வருமாறு;* **விட்டான்** - *என்னை அனுப்பினான்;* ***காதலால் என்மேல் வைத்த கருணையால்*** - *அதற்குக் காரணம் அவன் என் மேல் சிறப்பாகக் கொண்டுள்ள காதலாகிய திருவருளாகும்;* ***கருமம் ஈதே*** - *செய்யத்தக்க காரியமும் அதுவேயாகும்;* ***ஆதலால்*** - *ஆகவே;* ***அறத்தொடும் திறம்பாது*** - *அறத்தில் இருந்து மாறுபடாமல்;* ***நீயே அவனைக் காணப் போதுவாய்*** - *நீயே அவ்விராமனைக் காண்பதற்காக வருவாய்;* ***என்ன*** - *என்று கூறிப்;* ***பொன்அடி இரண்டும் பூண்டான்*** - *அக்கும்பகருணனது அழகிய திருவடி இரண்டும் தலைமேல் பூண்டான்.*

*கருணை-இயல்பாய் உயிர்கள் எல்லாவற்றின் மேலும் தோன்றும் அருள், காதல்-தொடர்பு உடையார் மாட்டு ஏற்படும் உள்ள நெகிழ்ச்சி. வேதநாயகனே காதலாலும் என்மேல் கொண்ட கருணையாலும் வேண்டி விட்டதால் அவன்*

*ஏற்பானா? மாட்டானா? என்று ஐயங்கொள்ளாது அறத்தொடு திறம்பாது போதுவாய் என்றான்.*

*கும்பகருணன் மறுப்புரை*

***7425. 'தும்பி அம் தொடையல் மாலைச் சுடர் முடி படியில் தோய,***
***பம்பு பொற் கழல்கள் கையால் பற்றினன் புலம்பும் பொன் தோள்***
***தம்பியை எடுத்து, மார்பில் தழுவி, தன் தறுகணூடு***
***வெம் புணீர் சொரிய நின்றான், இனையன விளம்பலுற்றான்;***

***தும்பி அம் தொடையல் மாலைச் சுடர்முடி*** *- வண்டுகள் மொய்க்கிற அழகிய தொடுத்தல் அமைந்த மலர் மாலையைச் சூடிய ஒளி பொருந்திய முடி;* ***படியில் தோய*** *- நிலத்தில் படிய விழுந்து வணங்கிப்;* ***பம்பு பொற்கழல்கள்*** *- பரவியுள்ள பொன்னால் ஆகிய வீரக்கழல்கள் அணிந்த கால்களை;* ***கையால் பற்றினன் புலம்பும்*** *- கையால் பற்றிப் புலம்புகிற;* ***பொன் தோள் தம்பியை*** *- அழகிய தோள்களையுடைய தம்பியாகிய வீடணனை;* ***எடுத்து மார்பில் தழுவி*** *- எடுத்து மார்பில் தழுவிக் கொண்டு;* ***தன் தறுகணூடு*** *- தன் வீரம் வெளிப்படும் கண்களின் வழியாக;* ***வெம்புணீர் சொரிய நின்றான்*** *- வெப்பத்துடன் கூடிய குருதி வெளிப்பட நின்றவனாகிய கும்பகருணன்;* ***இனையன விளம்பலுற்றான்*** *- இத்தகைய சொற்களைச் சொல்லல் ஆனான்.*

***7426. 'நீர்க் கோல வாழ்வை நச்சி, நெடிது நாள் வளர்த்துப் பின்னைப்***
***போர்க் கோலம் செய்து விட்டாற்கு உயிர் கொடாது, அங்குப் போகேன்;***
***தார்க் கோல மேனி மைந்த! என் துயர் தவிர்த்தி ஆகின்,***
***கார்க் கோல மேனியானைக் கூடுதி, கடிதின் ஏகி,***

***தார்க்கோல மேனி மைந்த*** *- மார்பில் மாலையணிந்த அழகிய உடம்பினை உடைய மைந்தனே;* ***நெடிது நாள் வளர்த்து*** *- என்னை நீண்ட நாள் அருமையாக வளர்த்துப்;* ***பின்னை*** *- இன்று;* ***போர்க்கோலம் செய்து விட்டாற்கு*** *- தன் கையாலேயே போர்க்கோலம் பூணுவித்துப் போர்க்குச் சென்று வா என விட்ட இராவணனுக்காக;* ***உயிர் கொடாது*** *- போரில் என்னுயிரைக் கொடுக்காமல்;* ***நீர்க்கோல வாழ்வை நச்சி*** *-*

*நீரில் எழுதிய கோலத்தைப் போல் விரைந்து அழியும் செல்வ வாழ்க்கையை விரும்பி; **அங்குப் போகேன்** - அந்த இராமனிடம் போய்ச் சேரமாட்டேன்; **என் துயர் தவிர்த்தி ஆகின்** - என் துன்பத்தைப் போக்க விரும்பினால்; **கார்க்கோல மேனியானை** - காளமேகம் போல் கரிய அழகிய திருமேனியுடைய இராமனை; **கடிதின் ஏகி கூடுதி** - விரைவில் சென்றடைவாய்.*

*'நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்து' என்பதனை ஆற்றொழுக்காக உள்ளவாறே கொண்டு இராவணன் செயலாகவே ஆக்குதல் ஓர் உரையாகும். போர்க்கோலம் செய்துவிட்டமையை முன்னர்க் காண்க. செய்நன்றி அறிதலிற் சிறந்தவன் கும்பகர்ணன் என்பது இதனால் புலப்படும்.*

***7427. 'மலரின்மேல் இருந்த வள்ளல் வழு இலா வரத்தினால், நீ***
***உலைவு இலாத் தருமம் பூண்டாய்; உலகு உளதனையும் உள்ளாய்;***
***தலைவன் நீ, உலகுக்கு எல்லாம்; உனக்கு அது தக்கதேயால்;***
***புலை உறு மரணம் எய்தல் எனக்கு இது புகழதேயால்.***

*__நீ மலரின் மேல் இருந்த வள்ளல்__ - தாமரை மலரின் மேல் இருக்கும் வள்ளலாகிய பிரமதேவனது; **வழு இலா வரத்தினால்** - குற்றம் இல்லாத வரத்தினால்; **உலைவு இலாத் தருமம் பூண்டாய்** - என்றும் அழிவு இல்லாத தருமத்தைக் கைக்கொண்டாய்; **உலகு உளதனையும் உள்ளாய்** - உலகம் உள்ளவரை அழியாமல் வாழ உள்ளாய்; **நீ உலகுக்கு எல்லாம் தலைவன்** - நீ உலகுக்கெல்லாம் தலைவனாய் உள்ளவன்; **உனக்கு அது தக்கதேயால்** - அப்படிப்பட்ட உனக்கு இராமனைச் சேர்தல் என்னும் அது தகுதியானது; **புலை உறு மரணம் எய்தல்** - இழிவு பொருந்திய மரணத்தை அடைதல்; **எனக்கு இது புகழதேயால்** - எனக்குப் புகழை விளைவிக்கக் கூடியது.*

*பிறப்புத் தொட்டு தருமத்தை மேற்கொண்டவன் வீடணன். முன்னர்ப் புலையும் கொலையும் தவிராது வாழ்ந்து போர் தொடங்கிய போது அறத்தைக் காதலித்து இராமன்பால் சென்றால் உலகு குறைகூறும் என்றான் கும்பகருணன். விசேடதர்மத்தை மேற்கொள்வார் பண்பு நலம் தொடக்க முதலே இருந்திருத்தல் வேண்டும் என்றது காண்க.*

***7428. 'கருத்து இலா இறைவன் தீமை கருதினால், அதனைக் காத்துத்***
***திருத்தலாம்ஆகின் அன்றோ திருத்தலாம்? தீராது ஆயின்,***

**பொருத்து உறு பொருள் உண்டாமோ? பொரு**
**தொழிற்கு உரியர் ஆகி,**
**ஒருத்தரின் முன்னம் சாதல், உண்டவர்க்கு உரியது**
**அம்மா.**

***கருத்து இலா இறைவன்*** - *மந்திரம் கேட்கும் சூழ்தல் இல்லாத தலைவன்;* ***தீமை கருதினால்*** - *தீத்தொழில் செய்ய எண்ணினால்;* ***அதனைக் காத்துத்*** - *அவன் அவ்வாறு செய்யாமல் தடுத்து;* ***திருத்தலாம் ஆகின் அன்றோ திருத்தலாம்*** - *திருத்துதல் கூடுமாயின் அன்றோ திருத்தலாம்;* ***தீராது ஆயின்*** - *அவ்வாறு திருத்த முடியாது போனால்;* ***பொருத்துறு பொருள் உண்டாமோ*** - *அவனுக்கு எதிர் சென்று நின்று அடையத் தக்க பெரும் பொருள் உண்டோ?;* ***உண்டவர்க்கு உரியது*** - *ஒருவனுடைய உணவை உண்டு வளர்ந்தவர் செய்ய உரிய செயல்;* ***பொருதொழிற்கு உரியர் ஆகி*** - *அவனுக்காகப் போர் செய்யும் தொழிலுக்கு உரிமையுடையவர் ஆகி;* ***ஒருத்தரின் முன்னம் சாதல்*** - *ஒப்பற்ற தலைவனுக்கு முன்னர்ச் சாதலே;* ***அம்மா*** - *கேட்பாயாக.*

*தலைவன் தவறு செய்தால் திருத்த முயலலாம் அவ்வாறு திருத்த முடியாதபோது செய்யத்தக்கது அவனுடைய மாற்றாரைச் சேர்தல் அன்று. அவனது மாற்றாருடன் பொருது இறத்தலே தக்கது என்றவாறு. தலைவனுக்காகச் சாதலே செய்யத்தக்கது என்று கும்பகருணன் கூறுவது அறத்தை விடப் பாசமும் தலைவன் என்ற பற்றும் தான் முக்கியமானவை என அவன் கருதுவதால் என்க.*

*புரந்தார்கண் நிர்மல்கச் சாகிற்பின் சாக்காடு*

*இரத்துகோட் டக்க துடைத்து. என்ற திருக்குறளை (780) இப்பாடலோடு சேர்த்து எண்ணுக. சாமானிய தருமத்தை மேற்கொள்வார் இயல்பு உணர்த்தியவாறு.*

*7429.* ***'தும்பி அம் தொடையல் வீரன் சுடு கணை துரப்ப,***
***சுற்றும்***
**வெம்பு வெஞ் சேனையோடும், வேறு உள**
**கிளைஞரோடும்,**
**உம்பரும் பிறரும் போற்ற, ஒருவன் மூவுலகை**
**ஆண்டு,**
**தம்பியை இன்றி மாண்டு கிடப்பனோ, தமையன்**
***மண்மேல்?***

***உம்பரும் பிறரும் போற்ற*** - *தேவர்களும் மற்றுள்ளோரும் போற்றி வணங்குமாறு;* ***மூவுலகை தமையன் ஒருவன் ஆண்டு*** - *மூன்று உலகங்களையும் ஒப்பற்றவனாய் ஆண்டவனாகிய அண்ணன்;* ***தும்பி அம் தொடையல் வீரன்*** -

*வண்டுகள் மொய்க்கின்ற அழகிய மலர் மாலையை அணிந்த வீரனாகிய இராமன்;* ***சுடுகணை துரப்ப*** *- சுடுகின்ற அம்புகளைச் செலுத்துவதால்;* ***வெம்பு வெஞ்சேனையோடும்*** *- வாடுகின்ற சினம் மிக்க படைகளுடனும்;* ***வேறு உள கிளைஞரோடும்*** *- பிற உறவினர்களுடனும்;* ***தம்பியை இன்றி*** *- தனக்காக இறக்கத் தம்பியும் இன்றி;* ***மண் மேல் மாண்டு கிடப்பனோ*** *- மண் மேல் இறந்து கிடப்பதற்கு உரியவனா? எதிர்காலக் காட்சியை மனக்கண்ணில் கண்டு கும்பகருணன் கூறியது. அவனுக்காகப் படைவீரர்களும் உறவினர்களும் இறந்து கிடக்கும் களத்தில் இரு தம்பியர் இருந்தும் தம்பியர் இன்றி மாள இராவணன் விட்டு விடுதல் தகுதியானது அன்று என்று கூறினான்.*

***7430. 'அணை இன்றி உயர்ந்த வென்றி அஞ்சினார்***
***நகையது ஆக,***
***பிணை ஒன்று கண்ணாள் பங்கன் பெருங் கிரி***
***நெருங்கப் பேர்த்த***
***பணை ஒன்று திரள் தோள் காலபாசத்தால் பிணிப்ப,***
***கூசி,***
***துணை இன்றிச் சேரல் நன்றோ, தோற்றுள கூற்றின்***
***சூழல்?***

***பிணை ஒன்று கண்ணாள் பங்கன்*** *-பெண் மானின் கண்ணை ஒத்த கண் உடைய உமையம்மையை இடப்பக்கத்தில் கொண்ட சிவபிரானது;* ***பெருங்கிரி நெருங்கப் பேர்த்த*** *- பெரிய மலையாகிய கைலாயத்தை நெருங்கிப் பெயர்த்தெடுத்த;* ***பணை ஒன்று திரள்தோள்*** *- பெருமை பொருந்திய திரண்ட தோள்கள்;* ***கால பாசத்தால் பிணிப்ப*** *- இயமனது கால பாசத்தால் பிணிக்கப்படுவது கண்டு;* ***அணை இன்றி உயர்ந்த வென்றி அஞ்சினார்*** *- முன்பு தடையில்லாமல் பெற்ற வெற்றி கண்டு அச்சங்கொண்ட மாற்றார்;* ***நகையது ஆக கூசி*** *- நகைத்துப் பேரொலி செய்ய அதற்கு நாணி;* ***தோற்றுள கூற்றின் குழல்*** *-முன்பு தனக்குத் தோற்றவனாகிய இயமன் இடத்தில்;* ***துணை இன்றிச் சேரல் நன்றோ*** *- துணையாகத் தம்பியும் இல்லாமல் செல்லுவது நன்றாக உள்ளதோ.*

*தோற்ற இயமனிடம் இராவணன் தம்பியர் இன்றித் தோற்றுச் செல்லுதல் நன்றாக உள்ளதோ என்று கும்பகருணன் வினவுவதால் அவனுக்காகத் தம்பியர் இறப்பதே குலத்து மானம் காக்கும் செயல் என்று கூறியவாறு காண்க.*

***7431. 'செம்பு இட்டுச் செய்த இஞ்சித் திரு நகர்ச் செல்வம்***
***தேறி,***
***வம்பு இட்ட தெரியல் எம்முன் உயிர் கொண்ட***
***பகையை வாழ்த்தி,***
***அம்பு இட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை***

***நெஞ்சோடு, ஐய!***
***கும்பிட்டு வாழ்கிலேன் யான்-கூற்றையும், ஆடல்***
***கொண்டேன்!***

*__ஐய!__ - ஐயனே; __கூற்றையும் ஆடல் கொண்டேன்__ - கூற்றுவனையும் வெற்றி கொண்டவனாகிய; __யான்__ - நான்; __செம்பு இட்டுச் செய்த இஞ்சித் திருநகர்__ - செம்பை உருக்கி வலிமையும் அழகும் படச் செய்த மதிலால் சூழப்பட்ட அழகிய இலங்கை நகரின்; __செல்வம் தேறி__ - அரசுச் செல்வத்தை நிலையானது என்று கருதி; __வம்பு இட்ட தெரியல் எம்முன்__ - மணம் பொருந்திய மலர் மாலையணிந்த என் அண்ணனுடைய; __உயிர் கொண்ட பகையை வாழ்த்தி__ - உயிரைக் கொண்ட பகைவனாகிய இராமனை வாழ்த்திக் கொண்டு; __அம்பு இட்டுத் துன்னம் கொண்ட__ - அம்பு பட்டுத் துளைபட்ட; __புண்ணுடை நெஞ்சோடு__ -புண்பட்ட நெஞ்சத்துடன்; __கும்பிட்டு வாழ்கிலேன்__ - கும்பிட்டு வாழ மாட்டேன்.*

*இராவணன் இறந்து விட்டாலும் யான் இராமனைச் சேரேன் என்பதை எம்முன் உயிர் கொண்ட பகையை வாழ்த்தி என்ற தொடரால் கும்பகருணன் குறிப்பிடுகிறான். மனத்தில் அண்ணனைக் கொன்றவன் என்ற எண்ணத்தையும் உடம்பில் அம்பிட்டுத் துன்னம் கொண்ட மார்பையும் கொண்டு வெளிக்கு இராமனை வாழ்த்த என்னால் முடியாது என்றதாம். இப்பகுதியில் கும்பகருணனின் குலத்துக்குரியமான உணர்வும் உடன்பிறப்புப் பாசமும் விளக்கப்பட்டமை காண்க.*

*7432.* ***'அனுமனை, வாலி சேயை, அருக்கன் சேய்தன்னை,***
***அம் பொன்***
***தனு உடையவரை, வேறு ஓர் நீலனை, சாம்பன்***
***தன்னை,***
***கனி தொடர் குரங்கின் சேனைக் கடலையும், கடந்து***
***மூடும்***
***பனி துடைத்து உலகம் சுற்றும் பரிதியின் திரிவென்;***
***பார்த்தி!***

*__அனுமனை__ - அனுமனையும்; __வாலி சேயை__ - வாலி மகனாகிய அங்கதனையும்; __அருக்கன் சேய் தன்னை__ - சூரியன் மகனாகிய சுக்கிரீவனையும்; __அம்பொன்தனு உடையவரை__ - அழகிய பொன் போன்ற வில்லையுடைய இராம இலக்குவர்களையும்; __வேறு ஓர் நீலனை__ - வேறுபட்ட தன்மையுடைய நீலனையும்; __சாம்பன் தன்னை__ - சாம்பவான் தன்னையும்; __கனி தொடர் குரங்கின் சேனைக் கடலையும்__ - கனியைக் கைப்பற்றத் தொடர்ந்து செல்லும் குரங்குகளின் சேனையாகிய கடலையும்; __கடந்து__ - வஞ்சியாது எதிர் நின்று வென்று; __உலகம் மூடும் பனி துடைத்து__ - உலகத்தை மூடுகின்ற பனியைப் போக்கி; __சுற்றும் பரிதியின் திரிவென்__ - வலமாகச் சுற்றுகின்ற கதிரவன் போல் திரிவேன்; __பார்த்தி__ - காண்பாய்.*

இப்பாடல் முதல் கும்பகருணன் தான் போர்க் களத்தில் காட்ட இருக்கின்ற போர்த்திறனை வீடணனுக்குக் கூறுகிறான். பாடலில் வரும் பாத்திரப் பெயர் அடுக்கு வரிசை முறையில் அனுமனை முன் கூறினான் இலங்கையைச் சுட்டதை நினைவில் கொண்டு என்க.

***7433. 'ஆலம் கண்டு அஞ்சி ஓடும் அமரர்போல் அரிகள் ஓட,
சூலம் கொண்டு ஓடி, வேலை தொடர்வது ஓர் தோற்றம் தோன்ற,
நீலம் கொள் கடலும் ஓட, நெருப்பொடு காலும் ஓட,
காலம் கொள் உலகும் ஓட, கறங்கு எனத் திரிவென்; காண்டி!***

**ஆலம் கண்டு அஞ்சி ஓடும்** - ஆல கால நஞ்சைக் கண்டு அஞ்சி ஓடிய; **அமரர் போல் அரிகள் ஓட** -தேவர்களைப் போல் வானரப் படைகள் ஓட; **வேலை சூலம் கொண்டு ஓடி** - ஒரு கடல் ஆனது சூலத்தைக் கையில் கொண்டு ஓடி; **தொடர்வது ஓர் தோற்றம் தோன்ற** - மற்றொரு கடலைத் தொடர்ந்து செல்வது போல் ஒரு தோற்றத்தை உண்டாக்கி; **நீலம் கொள் கடலும் ஓட** - நீல நிறங்கொண்ட கடல் தன் இடம் விட்டுப் புடை பெயர்ந்து செல்லவும்; **நெருப்பொடு காலும் ஓட** - நெருப்பும் காற்றும் நிலை கெட்டு ஓடவும்; **காலம் கொள் உலகும் ஓட** - அழிவுக் காலத்தை நோக்கி உலகமும் ஓடவும்; **கறங்கு எனத் திரிவென் காண்டி** - (போர்க்களத்தில் நான்) காற்றாடி போலத் திரிவேன் அதனைக் காண்பாய்.

கும்பகருணன் குரங்குச் சேனையைத் துரத்தி ஓடுவது ஒரு கடல் மற்றொரு கடலையோடித் தொடர்வது போன்ற தோற்றம் தந்தது என்க. தன் போரிடும் திறத்தால் பஞ்சபூதங்களில் ஆகாயம் தவிர கடல், நெருப்பு, காற்று, நிலம் ஆகிய நான்கு பூதங்களும் நிலை பெயர்ந்து ஓடும் என்கிறான்.

***7434. 'செருவிடை அஞ்சார் வந்து, என் கண் எதிர் சேர்வர் ஆகின்,
கரு வரை, கனகக் குன்றம், என்னல் ஆம் காட்சி தந்த
இருவரும் நிற்க, மற்று அங்கு யார் உளர், அவரை எல்லாம்,
ஒருவரும் திரிய ஒட்டேன், உயிர் சுமந்து உலகில்' என்றான்.***

***செருவிடை அஞ்சார் வந்து*** - *போர்க்களத்தில் அஞ்சாதவராய் வந்து;* ***என்கண் எதிர் சேர்வர் ஆகின்*** - *என் கண்ணுக்கு எதிரில் சேர்வார்கள் ஆனால்;* ***கருவரை*** - *கரிய மலையும்;* ***கனகக்குன்றம்*** - *பொன் குன்றமும்;* ***என்னல் ஆம் காட்சி தந்த*** - *என்று கூறுமாறு தோற்றம் பொருந்திய;* ***இருவரும் நிற்க*** - *இராம இலக்குவர் நிற்க;* ***மற்று அங்கு யார் உளர்*** - *வேறு அங்கு உள்ளவர் எவரோ;?* ***அவரை எல்லாம்*** - *அவர்களை எல்லாம்;* ***உலகில் உயிர் சுமந்து*** - *உலகத்தில் உயிர் சுமந்து கொண்டு;* ***ஒருவரும் திரிய ஒட்டேன்*** - *ஒருவரையும் நடமாட ஒருப்படேன்;* ***என்றான்.***

*அம்பொன் தனு உடையவரை (161) என முன்பு போர் ஆவேசத்தால் கூறியவன், 'கருவரை கனகக்குன்றம் என்னல் ஆம் காட்சி தந்த இருவரும் நிற்க' என்று பகை வலி உணர்ந்து இங்குக் கூறினான் என்க. இராம லக்குவரைக் கொல்லல் தன்னால் இயலாது என்பதை உணர்ந்து கூறினான்.*

***7435. 'தாழ்க்கிற்பாய் அல்லை; என் சொல் தலைக்கொளத் தக்கது என்று***
***கேட்கிற்பாய் ஆகின், எய்தி, அவரொடும் கெழீஇய நட்பை***
***வேட்கிற்பாய்; "இனி, ஓர் மாற்றம் விளம்பினால் விளைவு உண்டு" என்று,***
***சூழ்க்கிற்பாய்அல்லை; யாரும் தொழ நிற்பாய்!" என்னச் சொன்னான்.***

***யாரும் தொழ நிற்பாய்!*** - *பிறர் தொழத்தக்க மேன்மை பெற்றவனே;* ***என் சொல் தலைக் கொளத்தக்கது*** - *என் சொல் ஆனது தலையில் ஏற்கத்தக்கது;* ***என்று கேட்கிற்பாய் ஆகின்*** - *என்று கருதிக் கேட்பாய் ஆனால்;* ***தாழ்க்கிற்பாய் அல்லை*** - *காலந்தாழ்த்தாமல்;* ***எய்தி*** - *திரும்பிப் போய்;* ***அவரொடும் கெழீஇய நட்பை வேட்கிற்பாய்*** - *அந்த இராம இலக்குவரோடு பொருந்திய நட்பை மேலும் விரும்புவாய்;* ***இனி ஓர் மாற்றம் விளம்பினால்*** - *இனிமேலும் ஒரு பேச்சுப் பேசினால்;* ***விளைவு உண்டு என்று*** - *அதனால் நன்மை உண்டு என்று;* ***சூழ்க்கிற்பாய் அல்லை*** - *எண்ணி ஆலோசிப்பதற்கு உரியவனல்லை;* ***என்னச் சொன்னான்*** - *என்று கூறினான்.*

*விளைவு உண்டு-அதனால் நான் மனம் மாறி வரும் விளைவு உண்டு என்று நினைத்து.*

***7436. 'போதி நீ, ஐய! பின்னைப் பொன்றினார்க்கு எல்லாம் நின்ற***
***வேதியர் தேவன்தன்னை வேண்டினை பெற்று, மெய்ம்மை***
***ஆதி நூல் மரபினாலே, கடன்களும் ஆற்றி, ஏற்றி,***
***மா துயர் நரகம் நண்ணாவண்ணமும் காத்தி***

**மன்னோ.**

***ஐய!*** *- ஐயனே;* ***நீ போதி*** *- நீ இராமனிடம் திரும்பிச் செல்;* ***பின்னை*** *- பிறகு;* ***எல்லாம் நின்ற*** *- சரஅசரப் பொருள்கள் எல்லாமுமாய் நின்ற;* ***வேதியர் தேவன் தன்னை*** *- வேதியர் தலைவனான இராமன் தன்னை;* ***வேண்டினை பெற்று*** *- அனுமதி வேண்டிப் பெற்று;* ***மெய்ம்மை ஆதி நூல் மரபினாலே*** *- மெய்ம்மையாகப் பழ நூலில் கூறிய முறைப்படி;* ***பொன்றினார்க்கு*** *- இறந்துபட்டவர்களுக்கு எல்லாம்;* ***கடன்களும் ஆற்றி*** *- அந்திமச் சடங்குகளைச் செய்து;* ***ஏற்றி*** *- உடம்புடன் கிடந்து அல்லல்படும் நிலையில் இருந்து ஏற்றி;* ***மாதுயர் நரகம் நண்ணா வண்ணமும் காத்தி*** *- மிக்க துயரத்தைத் தரும் நரகத்தை அடையாதவாறும் காப்பாய்;*

*ஈமக்கடன் செய்யப் பெறாதவர் உடம்புடன் கிடந்து அல்லல்படுவர் என்ற நூல் கொள்கை சார்ந்து இவ்வாறு கூறினான் என்க.*

***7437. 'ஆகுவது ஆகும், காலத்து; அழிவதும், அழிந்து சிந்திப்***
***போகுவது; அயலே நின்று போற்றினும், போதல் திண்ணம்;***
***சேகு அறத் தெளிந்தோர் நின்னில் யார் உளர்? வருத்தம் செய்யாது,***
***ஏகுதி; எம்மை நோக்கி இரங்கலை; என்றும் உள்ளாய்!'***

***என்றும் உள்ளாய்!*** *- எக்காலத்தும் அழியாது வாழ்பவனே!;* ***ஆகுவது ஆகும் காலத்து*** *- உரிய காலத்தில் ஆக வேண்டியது ஆகியே தீரும்;* ***அழிவதும் அழிந்து சிந்திப் போகுவது*** *- அழியவேண்டியது அழிந்து சிதறிப் போகும்;* ***அயலே நின்று போற்றினும் போதல் திண்ணம்*** *- அவ்வாறு அழிந்து போவதைப் பக்கத்தில் நின்று பாதுகாத்தாலும் அது அழிந்து போயே தீரும்;* ***சேகு அறத் தெளிந்தோர்*** *- குற்றமற அதை உணர்ந்து தெளிந்தவர்கள்;* ***நின்னின் யார் உளர்*** *- உன்னைக் காட்டிலும் யாவர் உலகில் உளர்;* ***வருத்தம் செய்யாது*** *- துன்பப்படாமல்;* ***எம்மை நோக்கி இரங்கலை*** *- எம்மைக் குறித்து இரங்கலையாய்;* ***ஏகுதி*** *- செல்வாய்.*

*நடப்பதை ஏற்கும் பக்குவம் பெற்ற மனிதனாக கும்பகருணன் விளங்குகிறான். நடைமுறை உலகில் வாழ்பவர்க்கு இத்தகைய மனநிலை துன்ப நீக்கத்துக்கு உறுதுணையாக அமையும் என்பது குறிக்கத்தக்கது. தான் இறப்பது சரதம் என்ற உண்மை தெரிந்த பின்னர் கூட உயிர் வாழ்வதற்காகப் பாசத்தை விடாத மான வீரனின் வாழ்க்கைக் கண்ணோட்டம் இங்கு விளக்கப்படுகிறது. சேகு-குற்றம்.*

*வீடணன் விடை பெறுதல்*

***7438. என்று, அவன்தன்னை மீட்டும் எடுத்து, மார்பு இறுகப் புல்லி,***
***நின்று நின்று, இரங்கி ஏங்கி, நிறை கணால் நெடிது நோக்கி,***
***'இன்றொடும் தவிர்ந்தது அன்றே, உடன்பிறப்பு' என்று விட்டான்;***
***வென்றி வெந் திறலினாலும், அவன் அடித்தலத்து வீழ்ந்தான்.***

***என்று*** - *என்று கூறி;* ***அவன் தன்னை*** - *அந்த வீடணன் தன்னை;* ***மீட்டும் எடுத்து*** - *மறுமுறை மீண்டும் எடுத்து;* ***மார்பு இறுகப் புல்லி*** - *மார்பில் அழுத்தமாகத் தழுவி;* ***நின்று நின்று*** - *மீக நீண்ட நேரம்;* ***இரங்கி ஏங்கி*** - *அழுது ஏக்கம் கொண்டு;* ***நிறை கணால் நெடிது நோக்கி*** - *நீர்நிறை கண்ணால் நீண்ட நேரம் பார்த்து;* ***உடன்பிறப்பு*** - *உனக்கும் எனக்கும் உள்ள உடன்பிறப்பு என்னும் தொடர்பு;* ***இன்றொடும் தவிர்ந்தது அன்றே*** *-இன்றோடு போய் விட்டதல்லவா?;* ***என்று விட்டான்*** - *என்று கூறித் தழுவியதை விட்டான்;* ***வென்றி வெந்திறலினானும்*** - *வெற்றியும் வலிய வலிமையும் உள்ள வீடணனும்;* ***அவன் அடித்தலத்து வீழ்ந்தான்*** - *அந்தக் கும்பகருணனது அடித்தலத்து வீழ்ந்து வணங்கினான்.*

*இப்பாடலில் பாசத்தைப் பெரிதென மதித்தவன் அதைக் களைந்தெறியப் பட்ட மனத்துன்பங்கள் பேசப்படுகின்றன. மார்பு இறுகப் புல்லல், நின்று நின்று இரங்கி ஏங்கல், நிறை கணால் நெடிது நோக்கல் போன்ற மெய்ப்பாடுகள் வழி அவனது மனத்துன்பம் விளக்கப்படுகிறது.*

***7439. வணங்கினான்; வணங்கி, கண்ணும் வதனமும் மனமும் வாயும்***
***உணங்கினான்; உயிரோடு யாக்கை ஒடுங்கினான்; 'உரைசெய்து இன்னும்***
***பிணங்கினால் ஆவது இல்லை; பெயர்வது; என்று உணர்ந்து போந்தான்.***
***குணங்களால் உயர்ந்தான், சேனைக் கடல் எலாம் கரங்கள் கூப்ப.***

***வணங்கினான்*** - *வணங்கினனாகிய வீடணன்;* ***வணங்கிக் கண்ணும், வதனமும், மனமும், வாயும் உணங்கினான்*** - *வணங்கிக் கண்ணும், முகமும், மனமும் வாயும் உலர்ந்தான்;* ***உயிரோடு யாக்கை ஒடுங்கினான்*** - *உயிரும் உடம்பும் ஒடுங்கிச் சோ்ந்தான்;* ***இன்னும் உரை செய்து*** - *இக்கும்பகருணனுடன் இன்னும் பேசி;* ***பிணங்கினால் ஆவது இல்லை*** - *மனமாறுபாடு கொள்வதால் ஆகக்கூடிய பயன் எதுவும் இல்லை;* ***பெயர்வது என்று உணர்ந்து*** - *திரும்பிச் செல்வதே தக்கது என்று;* ***குணங்களாலுயர்ந்தான்*** - *பண்புகளால் இமயம் என உயர்ந்து நிற்கும்*

*கும்பகருணனது,* ***சேனைக் கடல் எலாம்*** *- அரக்கர் சேனையாகிய கடல் எல்லாம்;* ***கரங்கள் கூப்ப*** *- கைகூப்பித் தொழ;* ***போந்தான்*** *- திரும்பினான்.*

*குணங்களாலுயர்ந்தான் - கும்பகருணன். வீடணன் எனக் கொள்வாருமுளர். எண்ணரும் குணங்கொடன்றோ இராமன் மேல் நிமிர்ந்த காதல் என்று பாடிய கவிஞர் உயர் பண்பை எப்பாத்திரத்தில் கண்டாலும் அதைப் போற்றுவதைக் கவிதை அறமாகக் கொண்டவர். ஆகவே இருவரும் குணங்களால் உயர்ந்தவர் ஆதலின் யாரைக் கூறினும் பொருந்தும்.*

***7440. 'கள்ள நீர் வாழ்க்கையேமைக் கைவிட்டு, காலும் விட்டான்;***
***பிள்ளைமை துறந்தான்' என்னாப் பேதுறும் நிலையன் ஆகி,***
***வெள்ள நீர் வேலைதன்னில் வீழ்ந்த நீர் வீழ, வெங் கண்***
***உள்ள நீர் எல்லாம் மாறி, உதிர நீர் ஒழுக, நின்றான்.***

***கள்ளநீர் வாழ்க்கை யேமை*** *- கள்ளத்தன்மை பொருந்திய வாழ்க்கை உள்ள எங்களைக்;* ***கைவிட்டு*** *- விட்டுவிட்டு;* ***காலும் விட்டான்*** *- தொடர்பையும் அறுத்துக்கொண்டு விட்டான்;* ***பிள்ளைமை துறந்தான்*** *- இளம் பிள்ளைத் தன்மையைத் துறந்துவிட்டான்;* ***என்னா*** *- என்று கருதி;* ***பேதுறும் நிலையன் ஆகி*** *- கலங்கிய மனத்தை உடைய நிலையனாய்;* ***வெள்ள நீர் வேலை தன்னில்*** *- வெள்ள நீர் நிரம்பிய கடல் தன்னில்;* ***வீழ்ந்த நீர் வீழ*** *- விழும் தன்மையுள்ள ஆற்று நீர் பின்னிடுமாறு;* ***வெங்கண் உள்ள நீர் எல்லாம் மாறி*** *- தன் கொடிய கண்களில் உள்ள கண்ணீர் எல்லாம் மாறி;* ***உதிரநீர் ஒழுக நின்றான்*** *- குருதி நீராகப் பெருக நின்றான்.*

*கும்பகருணனைப் போருக்கு அனுப்பிய இராவணன்,*

***"அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்***

***செவ்வழி நீரொடும் குருதி தேக்கினான்"***

*ஆகி நின்றமைமையயும், வீடணனை இன்றொடும் தவிர்ந்ததன்றே உடன்பிறப்பு என்று விட்ட நிலையில், "வெங்கண் உள்ள நீரெல்லாம் மாறி உதிர நீர் ஒழுக நின்றான்." ஆகி நின்றமையையும் நோக்கின், தம்பியர் மீது தமையர் கொண்டிருந்த பாசப்பிணைப்பினை உணரலாம்.*

*வீடணன் உரையைக் கேட்ட இராமன் கூற்று*

***7441.** **எய்திய நிருதர் கோனும், இராமனை இறைஞ்சி, 'எந்தாய்!***
***உய் திறம் உடையார்க்கு அன்றோ, அறன் வழி ஒழுகும் உள்ளம்?***
***பெய் திறன் எல்லாம் பெய்து பேசினென்; பெயருந் தன்மை***
***செய்திலன்; குலத்து மானம் தீர்ந்திலன், சிறிதும்' என்றான்.***

***எய்திய நிருதர் கோனும்*** - *இராமனை வந்து அடைந்த அரக்கர் தலைவன் ஆகிய வீடணனும்;* ***இராமனை இறைஞ்சி*** - *இராமனை வணங்கி;* ***எந்தாய்!*** - *எந்தையே;* ***உய்திறம் உடையார்க்கு அன்றோ*** - *தீமையில் இருந்து தப்புகிற மனக்கூறுபாடு உடையவர்களுக்கல்லவா?;* ***அறன் வழி ஒழுகும் உள்ளம்*** - *அற வழியில் செல்லும் மனம் அமையும்;* ***பெய்திறன் எல்லாம் பெய்து பேசினென்*** - *செலுத்த வல்ல விரகு எல்லாம் செலுத்திப் பேசினேன்;* ***பெயருந்தன்மை செய்திலன்*** - *மனம் மாறும் தன்மையை அவன் மேற்கொள்ளவில்லை;* ***குலத்து மானம் சிறிதும் தீர்ந்திலன் என்றான்*** - *குலப்பற்று சிறிது கூட தீரப் பெற்றானில்லை என்றான்.*

*'பெய்திறன் எல்லாம் பெய்து பேசுதல்' என்பது காரண காரியங்களோடு வீடணன் கும்பகருணனுக்கு விளக்கிக் கூறியதை நினைவு கூர்ந்து வந்தது.*

***7442.** **கொய் திறச் சடையின் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல்***
***நொய்தினில் துளக்கி, 'ஐய! "நுன் எதிர், நும்முனோனை எய்து இறத் துணித்து வீழ்த்தல்இனிது அன்று"***
***என்று இனைய சொன்னேன்;***
***செய் திறன் இனி வேறு உண்டோ? விதியை யார் தீர்க்ககிற்பார்?"***

***(இராமன்) கொய்திறச் சடையின் கற்றைக் கொந்தளக்*** - *கொய்து விடுதற்கு உரிய சடைத் தொகுதியினைக் கொண்ட மயிர் முடியாகிய;* ***கோலக்கொண்டல்*** - *அழகிய மேகத்தை;* ***நொய்தினில் துளக்கி*** - *மெல்ல அசைத்து;* ***ஐய!*** - *ஐயனே;* ***நுன் எதிர்*** - *உனக்கு எதிரே;* ***நும் முனோனை*** - *உன் முன்னவனாகிய தமையனை;* ***எய்து*** - *அம்பால் எய்து;* ***இறத் துணித்து வீழ்த்தல்*** *-உடல் துண்டுபடும்படி துண்டித்து வீழ்த்தல்;* ***இனிது அன்று என்று*** *-இனிமையானது அல்ல என்று கருதி;* ***இனைய சொன்னேன்*** - *இவ்வாறான சொற்களைச் சொன்னேன்;* ***செய்திறன் இனி வேறு உண்டோ*** - *இனி நாம் செய்யக்*

*கூடிய செயல் வேறு உள்ளதா?;* ***விதியை யார் தீர்க்க கிற்பார்*** *- விதியை யாரால் தவிர்க்க முடியும்; (என இனிது உரைக்கும் வேலை என்று தொடரும் குளகம்)*

*கொய்திறச் சடையின் கற்றை-கொய்து விடுதற்கு உரிய சடைத்தொகுதி. கொந்தளம்-குந்தலம். தலையை அசைத்தல், தலைமுடியை அசைத்தலாயிற்று.*

*அரக்கர் சேனை வானர சேனையை வளைத்தல்*

***7443. என இனிது உரைக்கும் வேலை, இராக்கதர் சேனை என்னும்***
***கனை கடல், கவியின் தானைக் கடலினை வளைந்து கட்டி,***
***முனை தொழில் முயன்றதாக, மூவகை உலகும் முற்றத்***
***தனி நெடுந் தூளி ஆர்த்தது; ஆர்த்தில, பரவை தள்ளி,***

***என இனிது உரைக்கும் வேலை*** *- என்று இராமன் இனிதாகச் சொல்லும் பொழுது;* ***இராக்கதர் சேனையென்னும்*** *- அரக்கர் சேனையெனப் படுகின்ற;* ***கனை கடல்*** *- ஒலிக்கின்ற கடல்;* ***கவியின் தானைக் கடலினை*** *- குரங்குச் சேனையாகிய கடலினை;* ***வளைந்து கட்டி*** *- வளைத்து நெருக்கி;* ***முனை தொழில் முயன்றதாக*** *-போர்த் தொழில் செய்ய முயன்றதாக;* ***மூவகை உலகும் முற்ற*** *- மூவகை உலகங்களையும் முற்றுகையிடுமாறு;* ***தனி நெடுந்தூளி ஆர்த்தது*** *- ஒப்பற்ற மிக்க தூசு மிகுந்தது;* ***பரவை தள்ளி ஆர்த்தில*** *- கடல் அத்தூசியைத் தள்ளி ஒலித்தில*

***7444. ஓடின புரவி; வேழம் ஓடின; உருளைத் திண் தேர்***
***ஓடின; மலைகள் ஓட, ஓடின உதிரப் பேர் ஆறு;***
***ஆடின கவந்த பந்தம்; ஆடின அலகை; மேல்மேல்***
***ஆடின பதாகை; ஓங்கி ஆடின, பறவை அம்மா!***

***புரவி ஓடின*** *- போர்க்களத்தில் குதிரைகள் ஓடின;* ***வேழம் ஓடின*** *- யானைகள் ஓடின;* ***உருளைத் திண் தேர் ஓடின*** *- சக்கரங்கள் பூட்டப்பெற்ற வலிய தேர்கள் ஓடின;* ***மலைகள் ஓட*** *- மலைகள் ஓடும்படி;* ***உதிரப் பேர் ஆறு ஓடின*** *- வீரர்கள் தம்முன் பொருதமையால் குருதியாறு ஓடின;* ***கவந்த பந்தம் ஆடின*** *-கவந்த தொகுதிகள் ஆடின;* ***அலகை ஆடின*** *- பேய்கள் களக்கூத்து ஆடின;* ***மேல் மேல் பதாகை ஆடின*** *- மேல் மேல் உயர்ந்து கொடிகள் ஆடின;* ***பறவை ஓங்கி ஆடின*** *- பருந்து முதலிய பறவைகள் வானில் உயர்ந்து ஆடின;*

*சொற்பொருள் பின்வரு நிலையணி. அம்மா-வியப்பு இடைச்சொல்.*

***7445. மூளையும், தசையும், என்பும், குருதியும், நிணமும், மூரி***
***வாளொடும் குழம்பு பட்டார், வாள் எயிற்று அரக்கர்; மற்றுஅவ்***
***ஆள் ஆழி குருதி வெள்ளத்து அழுந்தின கவிகள்;- அம்பொன்***
***தோளொடு மரனும் கல்லும் சூலமும் வேலும் தாக்க.***

***வாள் எயிற்று அரக்கர்*** *- ஒளி பொருந்திய பற்களை உடைய அரக்கர்கள்;* ***அம்பொன் தோளொடு*** *- அழகிய பொன் போன்ற நிறமுடைய தோளும்;* ***மரனும் கல்லும் தாக்க*** *- மரமும் கல்லும் தாக்கியதால்;* ***மூளையும், தசையும் என்பும் குருதியும், நிணமும், மூரி வாளொடும் குழம்பு பட்டார்*** *- மூளையும்,தசையும், எலும்பும், குருதியும், கொழுப்பும், கையில் ஏந்திய வலிய வாள் படையுடனே குழம்பாகி அழிந்தார்கள்;* ***கவிகள்*** *- குரங்குகள்;* ***சூலமும் வேலும் தாக்க*** *- முத்தலைச் சூலமும் வேலும் தாக்கியதால்;* ***மற்று அவ்*** *- மற்று அந்த;* ***ஆள் அழி குருதி வெள்ளத்து அழுந்தின*** *- ஆளை அழிக்கக்கூடிய அரக்கரின் குழம்பு பட்ட குருதி வெள்ளத்தில் அழுந்தின.*

***7446. எய்தனர், நிருதர்; கல்லால் எறிந்தனர், கவிகள்; ஏந்திப்***
***பெய்தனர், அரக்கர்; பற்றிப் பிசைந்தனர் அரிகள்; பின்றா***
***வைதனர், யாதுதானர்; வலித்தனர்; வானரேசர்;***
***செய்தனர், பிறவும் வெம் போர்; திகைத்தனர், தேவர் எல்லாம்.***

***நிருதர் எய்தனர்*** *-அரக்கர்கள் அம்புகளைக் கொண்டு எய்தனர்;* ***கவிகள் கல்லால் எறிந்தனர்*** *- குரங்குகள் அவர்கள் மீது கற்களால் எறிந்தனர்;* ***அரக்கர் ஏந்திப் பெய்தனர்*** *- அரக்கர்கள் அக்கற்களைத் தம் கைகளால் ஏந்தி மீண்டும் வானரர் மீது எறிந்தனர்;* ***அரிகள் பின்றா பற்றிப் பிசைந்தனர்*** *- அரக்கர்கள் அவற்றைப் பின்வாங்காமல் கைகளால் பற்றிப் பிசைந்தார்கள்;* ***யாது தானர் வைதனர்*** *- அரக்கர்கள் திட்டலானார்கள்;* ***வானரேசர் வலித்தனர்*** *- வானரர்கள் பற்றி இழுக்கல் ஆனார்கள்;* ***பிறவும் வெம்போர் செய்தனர்*** *- இவ்வாறு மற்றுமுள்ள போர்ச் செயலையும் செய்தார்கள்;* ***தேவர் எல்லாம் திகைத்தனர்*** *- அதுகண்டு அனைத்துத் தேவர்களும் திகைத்தார்கள்.*

*கும்பகருணன் போர்*

*7447.* ***நீரினை ஓட்டும் காற்றும், காற்று எதிர் நிற்கும் நீரும்,***
***போர் இணை ஆக ஏன்று பொருகின்ற பூசல்***
***நோக்கி,***
***தேரினை ஓட்டி வந்தான்-திருவினைத் தேவர்***
***தங்கள்***
***ஊரினை நோக்காவண்ணம், உதிர வேல்***
***நோக்கியுள்ளான்.***

**நீரினை ஓட்டும் காற்றும்** - மழை நீரை விழாமல் ஓட்டுகின்ற காற்றும்; **காற்று எதிர் நிற்கும் நீரும்** - காற்றை எதிர்த்து நிற்கின்ற மழை நீரும்; **போர் இணை ஆக** - போருக்கு இணை என்று சொல்லும்படி; **ஏன்று** - எதிர்த்துப்; **பொருகின்ற பூசல் நோக்கி** -போர் செய்கிற போரைப் பார்த்து; **திருவினைத் தேவர் தங்கள் ஊரினை நோக்கா வண்ணம்** - திருமகள் தேவர்களின் ஊரை நோக்காதபடி; **உதிர வேல் நோக்கி உள்ளான்** - உதிரம் படிந்த வேலைப் பார்த்துக் கொண்டு இருப்பவன் ஆகிய கும்பகருணன்; **தேரினை ஓட்டி வந்தான்** - தன் தேரினை ஓட்டி வந்தான்.

*7448.* ***ஊழியில் பட்ட காலின் உலகங்கள் பட்டால் ஒப்ப,***
***பூழியில் பட்டு, செந்நீர்ப் புணரியில் பட்டு, பொங்கும்***
***சூழியின் பட்ட நெற்றிக் களிற்றொடும், துரந்த தேரின்***
***ஆழியில் பட்ட அன்றே--அவனியில் பட்ட எல்லாம்.***

**அவனியில் பட்ட எல்லாம்** - பூமியில் பொருந்திய வானரங்கள் எல்லாம்; **ஊழியில் பட்ட காலின்** - உக முடிவுக் காலத்தில் வீசுகின்ற காற்றில்; **உலகங்கள் பட்டால் ஒப்ப** - உலகங்கள் அகப்பட்டதைப் போல; **பூழியில் பட்டு** - புழுதியில் அகப்பட்டும்; **நெந்நீர்ப் புணரியில் பட்டு** - குருதிக் கடலில் பட்டும்; **பொங்கும் சூழியின் பட்ட நெற்றிக் களிற்றொடும்** - விளங்குகிற முகபடாத்தொடு பட்டமும் கட்டிய நெற்றியையுடைய களிறுகளிலும்; **துரந்ததேரின் ஆழியில் பட்ட அன்றே** - செலுத்துகிற தேர்ச்சக்கரங்களிலும் பட்டு இறந்து போயின.

*7449.* ***குன்று கொண்டு எறியும்; பாரில் குதிக்கும்; வெங்***
***கூலம் பற்றி***
***ஒன்று கொண்டு ஒன்றை எற்றும்; உதைக்கும்; விட்டு***
***உழக்கும்; வாரித்***
***தின்று தின்று உமிழும்; பற்றிச் சிரங்களைத் திருகும்;***
***தேய்க்கும்;***

***மென்று மென்று இழிச்சும்; விண்ணில் வீசும்; மேல்
பிசைந்து பூசும்.***

**குன்று கொண்டு எறியும்** - கும்பகருணன் வானரப் படை மீது குன்றை வீசி எறிவான்; **பாரில் குதிக்கும்** - நிலத்தில் குதிப்பான்; **வெங்கூலம் பற்றி** - கொடிய வாலினைப் பிடித்து; **ஒன்று கொண்டு ஒன்றை எற்றும்** - ஒன்றைக் கொண்டு பிறிது ஒன்றின் மீது மோதுவான்; **உதைக்கும்** - உதைப்பான்; **விட்டு உழக்கும்** - போக விட்டுக் காலினால் துகைப்பான்; **வாரித் தின்று தின்று உமிழும்** - வாரித் தின்று தின்று உமிழ்வான்; **சிரங்களைப் பற்றித் திருகும்** - தலைகளைப் பிடித்துத் திருகுவான்; **தேய்க்கும்** - பூமியில் தேய்ப்பான்; **மென்று மென்று இழிச்சும்** -வாயில் போட்டு மென்று துப்புவான்; **விண்ணில் வீசும்** - வானத்தில் எறிவான்; **பிசைந்து மேல் பூசும்** - பிசைந்து உடம்பின் மேல் பூசிக்கொள்வான்.

*எறியும், குதிக்கும், எற்றும், உதைக்கும், உமிழும், திருகும், இழிச்சும், வீசும், பூசும் என்ற சொற்களின் மூலம் கும்பகருணன் குரங்குப் படையை அழித்த முறையினைக் கவிஞர் விளக்குகிறார்.*

***7450. வாரியின் அமுக்கும்; கையால் மண்ணிடைத்
தேய்க்கும்; வாரி
நீரிடைக் குவிக்கும்; அப்பால், நெருப்பிடை நிமிர
வீசும்;
தேரிடை எற்றும்; எட்டுத் திசையினும் செல்லச்
சிந்தும்;
தூரிடை மரத்து மோதும்; மலைகளில் புடைக்கும்,
சுற்றி.***

**வாரியின் அமுக்கும்** - கடலில் அமுக்குவான்; **கையால் மண்ணிடைத் தேய்க்கும்** - கையினால் வாரி எடுத்து நிலத்தில் தேய்ப்பான்; **வாரி நீரிடைக் குவிக்கும்** - எடுத்து நீரில் மூழ்கச் செய்வான்; **அப்பால் நெருப்பிடை நிமிர வீசும்** - மேலும் நெருப்பில் நேராக உயர்ந்து நிற்கும்படி வீசுவான்; **தேரிடை எற்றும்** - தேரில் அடித்து அழிப்பான்; **எட்டுத் திசையினும் செல்லச் சிந்தும்** - எட்டுத் திசைகளிலும் சிதறிக் கிடக்கும்படி இறைக்கும்; **மரத்தூரிடை மோதும்** - மரத்தின் அடிப்பகுதியில் மோதி அழிப்பான்; **சுற்றி மலைகளில் புடைக்கும்** - சுழற்றி மலைகளில் மோதி அழிப்பான்.

*அமுக்கும், தேய்க்கும், குவிக்கும், வீசும், எற்றும், சிந்தும், மோதும், புடைக்கும் என்ற சொற்கள் வழி இப்பாடல் குரங்குப் படையைக் கும்பகருணன் அழித்த முறை விளக்கப்பட்டுள்ளது. தூர்-மரத்தின் அடிப்பகுதி.*

***7451. பறைந்தனர், அமரர் அஞ்சி; பல் பெரும் பிணத்தின்
பம்மல்***

***நிறைந்தன, பறவை எல்லாம்; நெடுந் திசை நான்கும் நான்கும்***
***மறைந்தன; பெருமை தீர்ந்த, மலைக் குலம்; வற்றி வற்றிக்***
***குறைந்தன, குரக்கு வெள்ளம்; கொன்றனன், கூற்றும் கூச.***

***அமரர் அஞ்சி பறைந்தனர்*** - *தேவர்கள் அஞ்சிப் பறந்து ஓடினார்கள்;* ***பல்பெரும் பிணத்தின் பம்மல் நிறைந்தன*** - *எங்கும் பிணக்கூட்டங்கள் தொகுதியாய் நிறைந்தன;* ***நெடுந்திசை நான்கும் நான்கும் பறவை எல்லாம் மறைந்தன*** *-நெடுந்திசை நான்கு, கோணத்திசை நான்கு ஆகிய எட்டுத்திசைகளையும் பறவைக் கூட்டங்கள் மறைத்தன;* ***மலைக்குலம் பெருமை தீர்ந்த*** - *மலைக்கூட்டங்கள் பெருமையை இழந்தன;* ***குரக்கு வெள்ளம் வற்றி வற்றிக் குறைந்தன*** - *எழுபது வெள்ளங்கொண்ட குரங்குப் படை சிறிது சிறிதாகக் குறைந்தன;* ***கூற்றும் கூச கொன்றனன்*** - *கும்பகருணன் இவ்வாறு யமனும் அஞ்சும்படி குரங்குச் சேனையைக் கொன்றான்.*

*பறைந்தனர்-பறந்தனர். பம்மல்-தொகுதி, மிகுதியெனினுமாம். பெருமை தீர்ந்த மலைக்குலம்-பிறவற்றை விட உயர்ந்து இருக்கின்ற பெருமை நீங்கியது என்றவாறு. கும்பகருணன் கொன்ற குரங்குப் படையின் குவியல் மலையின் பெருமை தீர்த்ததென்க.*

*7452.* ***'மற்று இனி ஒருவர்மேல் ஓர் மரனொடும் கற்கள் வீசப்***
***பெற்றிலம் ஆதும் அன்றே; இன்றொடும் பெறுவது ஆமே;***
***அற்றன, தீங்கும்' என்னா, அரிக் குலத் தலைவர் பற்றி,***
***எற்றின, எறிந்த, எல்லாம் இணை நெடுந் தோளின் ஏற்றான்.***

***மற்று இனி*** - *இனி;* ***ஒருவர் மேல் வீச*** - *வேறு ஒருவர் மேல் எறிவதற்கு;* ***ஓர் மரனொடும் கற்கள் பெற்றிலம் ஆதும்*** - *ஒரு மரமாவது கற்கள் ஆவது பெறாதவர் ஆவோம்;* ***இன்றொடும் பெறுவது ஆமே*** - *எல்லாவற்றையும் இன்றே எடுத்து இவன் மீது எறிவோம்;* ***தீங்கும் அன்றே அற்றன என்னா*** - *இவனால் விளையும் அழிவும் முழுதும் நீங்கிவிடும் என்று;* ***அரிக்குலத்தலைவர்*** - *குரங்குப் படைத்தலைவர்கள்;* ***எற்றின எறிந்த எல்லாம்*** *-காலால் எற்றினவும் கையால் எறிந்தனவுமாகிய எல்லாவற்றையும்;* ***இணை நெடுந்தோளின் ஏற்றான்*** *-தனது இரு பெருந்தோள்களில் தாங்கிக் கொண்டான்.*

*பிறர் மீது எறிவதற்கு மரமும் கற்களும் இல்லாது எல்லாவற்றையும் இவன் மீது எறிந்து இவனை அழித்துப் பகை முடிப்போம் என்று எண்ணி அரிக்குலத்தலைவர் எற்றின எறிந்த எல்லாம் இணை நெடும் தோளில் ஏற்றான் என்க.*

***7453. கல்லொடு மரனும், வேரும், கட்டையும், காலில் தீண்டும்***
***புல்லொடு பிறவும், எல்லாம், பொடிப் பொடி ஆகிப் போன;***
***'இல்லை, மற்று எறியத் தக்க, எற்றுவ, சுற்றும்' என்ன,***
***பல்லொடு பல்லு மென்று பட்டன, குரங்கும் உட்கி.***

***காலில் தீண்டும்*** *- காற்றுப் போல் விரைவாகத் தீண்டுகிற;* ***கல்லொடு மரனும் வேரும் கட்டையும் புல்லொடு பிறவும்*** *- கற்கள், மரங்கள், வேர்கள், கட்டைகள், புற்கள் மற்றயாவும் குரங்குப் படையால் எறியப்பட்டு;* ***எல்லாம்*** *- முழுதும்;* ***பொடிப் பொடி ஆகிப் போன*** *-கும்பகருணன் உடம்பில் பட்டுப் பொடிப் பொடியாய்ப் போயின;* ***சுற்றும் எற்றுவ எறியத்தக்க மற்று இல்லை என்ன*** *- சுற்றிலும் காலால் எற்றவும் கையால் எறியவும் எப்பொருளும் இல்லை என்று எண்ணி;* ***குரங்கும் உட்கி பல்லொடு பல்லு மென்று பட்டன*** *- குரங்குப் படைகள் அஞ்சிப் பல்லைக் கடித்துக் கொண்டு இறந்தன.*

*எற்றுவ எறிவ இல்லாமையால் பல்லொடு பல்லுமென்று உட்கிக் குரங்குகள் பட்டன என்க. உட்கி-அஞ்சி. காலில் தீண்டும்-காற்றைப் போல் கும்பகருணனைத் தீண்ட வீசப்பட்டவை. புல்-புறக்காழ் உடைய மூங்கில், தென்னை, பனை முதலியவை, வெறும் புல் எனின் பொருந்தாமை உணர்க.*

***7454. குன்றின வீழ் குரீஇக் குழாத்தின் குழாம் கொடு குதித்துக் கூடி,***
***சென்று மேல் எழுந்து பற்றி, கைத்தலம் தேயக் குத்தி,***
***வன் திறல் எயிற்றால் கவ்வி, வள் உகிர் மடியக் கீளா,***
***'ஒன்றும் ஆகின்றது இல்லை' என்று, இரிந்து ஓடிப் போன.***

***குழாம் கொடு குதித்துக் கூடி*** *- குரங்குகள் கூட்டமாகக் குதித்துக் கூடிக்கொண்டு;* ***குன்றின் வீழ் குரீஇக் குழாத்தின்*** *- மலையின் மீது விழுகின்ற குருவிக் கூட்டம் போல;* ***சென்று*** *- கும்பகருணனை நோக்கிச் சென்று;* ***மேல் எழுந்து பற்றி*** *- உடம்பின் மேல் ஏறிப் பற்றி;* ***கைத்தலம் தேயக் குத்தி*** *- கை வருந்தும்படி குத்தியும்;* ***வன்திறல் எயிற்றால்***

***கவ்வி*** - *மிக்க வலிமை உடைய பற்களால் கவ்வியும்;* ***வள் உகிர் மடியக்கீளா*** - *கூரிய நகங்கள் நுனி மடங்கும்படி கிழித்தும்;* ***ஒன்றும் ஆகின்றது இல்லை என்று*** - *நம்மால் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை என்று தெரிந்து;* ***இரிந்து ஓடிப் போன*** - *இறங்கி ஓடிப் போயின.*

*குரங்குக் குழாம் குதித்துக் கூடிப் பற்றியும் குத்தியும், கவ்வியும் கீண்டும் ஒன்றும் ஆகின்றது இல்லை என்று இரிந்து ஓடிப் போயின என்க. கீளா-கிழித்து.*

*நீலன் பொருது தோற்றல்*

***7455. மூலமே மண்ணில் மூழ்கிக் கிடந்தது ஓர் பொருப்பை, முற்றும்***
***காலம் மேல் எழுந்த கால்போல், கையினால் கடிதின் வாங்கி,***
***நீலன், மேல் நிமிர்ந்தது ஆங்கு ஓர் நெருப்பு எனத் திரித்து விட்டான்;***
***சூலமே கொண்டு நூறி, முறுவலும் தோன்ற நின்றான்.***

***நீலன்*** - *நீலன்;* ***மூலமே*** - *அடிப்பகுதி முழுமையும்;* ***மண்ணில் மூழ்கிக் கிடந்து ஓர் பொருப்பை*** - *நிலத்தில் முழ்கிக் கிடந்த ஒப்பற்ற மலையை;* ***முற்றும்*** *-முழுவதும்;* ***காலம் மேல் எழுந்தகால் போல்*** - *உக முடிவுக் காலத்தில் தோன்றிய பெருங்காற்றுப் போல்;* ***கடிதின் கையினால் வாங்கி*** - *விரைவாகக் கையினால் பெயர்த்து எடுத்து;* ***மேல் நிமிர்ந்தது ஆங்கு ஓர் நெருப்பு என*** - *வானத்தின் மேல் ஓங்கியதாகிய ஒரு நெருப்புப் போல;* ***திரித்து விட்டான்*** *-சுழற்றி விட்டான்;* ***சூலமே கொண்டு நூறி*** - *(அதனைக் கும்பகருணன்) தன் முத்தலைச் சூலத்தைக் கொண்டு பொடியாக்கி விட்டு;* ***முறுவலும் தோன்ற நின்றான்*** - *புன்சிரிப்புத் தோன்ற நின்றான்.*

***7456. 'பெயர்ந்து ஒரு சிகரம் தேடின், அச்சம் ஆம் பிறர்க்கும்' என்னா,***
***புயங்களே படைகள் ஆகத் தேர் எதிர் ஓடிப் புக்கான்,***
***இயங்களும் கடலும் மேகத்து இடிகளும் ஒழிய, யாரும்***
***பயம் கொள, கரங்கள் ஓச்சிக் குத்தினான், உதைத்தான், பல் கால்.***

**பெயர்ந்து** -பின் வாங்கி மீண்டும்; **ஒரு சிகரம் தேடின்** -ஒரு மலையைத் தேடித் திரிந்தால்; **பிறர்க்கும் அச்சம் ஆம் என்னா** - பிற படை வீரர்களுக்கு அச்சம் தோன்றும் என்று கருதி; **புயங்களே படைகள் ஆக** - தன் தோள்களையே படைக்கலமாகக் கொண்டு; **தேர் எதிர் ஓடிப் புக்கான்** -அவனது தேருக்கு எதிரில் ஓடிப் புகுந்து; **இயங்களும்** - பல்வகை வாச்சியங்களும்; **கடலும்** - கடலும்; **மேகத்து இடிகளும்** - மேகத்தின் கண் தோன்றும் இடிகளும்; **ஒழிய** - ஓசையால் பின்னடையுமாறு; **யாரும் பயங்கொள** - யாவரும் அஞ்சும்படி; **கரங்கள் ஓச்சிக் குத்தினான்** - கைகளால் ஓங்கிக் குத்தினான்; **பல்கால் உதைத்தான்** - காலால் பலமுறை உதைத்தான்.

*7457.* **கைத்தலம் சலித்து, காலும் குலைந்து, தன் கருத்து முற்றான்.**
**நெய்த்தலை அழலின் காந்தி எரிகின்ற நீலன்தன்னை,**
**எய்த்து உயிர் குடிப்பல் என்னா எற்றினான், இடது கையால்;**
**மெய்த்தலை, சூலம் ஓச்சான், வெறுங் கையான் என்று வெள்கி.**

**கைத்தலம் சலித்து** - குத்திய கை சலித்து; **காலும் குலைந்து** - உதைத்த காலும் வருந்தித்; **தன் கருத்து முற்றான்** - தன் எண்ணமும் நிறைவேறாமல்; **நெய்த்தலை அழலின் காந்தி எரிகின்ற நீலன் தன்னை** - நெய் பெய் தீப்போல் சினம் கொண்டு எரிகின்ற நீலனை; **வெறும் கையான் என்று வெள்கி** - இவன் போர்க்கருவி இல்லாத வெறும் கையன் என்று வெட்கம் கொண்டு; **மெய்த்தலை சூலம் ஓச்சான்** - கூரிய நுனியை உடைய சூலப்படையை ஓங்கி எறியாது; **எய்த்து உயிர் குடிப்பல் என்னா** - இளைத்துத் தளருமாறு இவனுயிர் குடிப்பேன் என்று எண்ணி; **இடது கையால் எற்றினான்** - இடது கையினால் ஓங்கித் தட்டினான்.

*நீலன் தளர்ந்தது கண்டு, அங்கதன் வந்து பொருதல்*

*7458.* **ஆண்டு, அது நோக்கி நின்ற அங்கதன், ஆண்டுச் சால**
**நீண்டது ஓர் நெடுந் திண் குன்றம் நில முதுகு ஆற்ற வாங்கி,**
**'மாண்டனன் அரக்கன் தம்பி' என்று உலகு ஏழும் வாழ்த்தத்**
**தூண்டினன்; அதனை அன்னான் ஒரு தனித்**

**தோளின் ஏற்றான்.** **ஆண்டு** - அப்பொழுது; **அது நோக்கி நின்ற அங்கதன்** - நீலன் நிலையைப் பார்த்து நின்ற அங்கதன்; **ஆண்டு** - அங்கே இருந்த; **சால நீண்டது**

***ஓர் நெடுந் திண் குன்றம்*** - *மிக நீண்டதாகிய ஒரு பெரிய மலையினை;* ***நில முதுகு ஆற்ற வாங்கி*** - *நிலமகள் தன் முதுகை ஆற்றிக் கொள்ளும்படி பெயர்த்து;* ***அரக்கன் தம்பி மாண்டனன்*** - *இராவணன் தம்பி மாண்டான்;* ***என்று உலகு ஏழும் வாழ்த்த*** - *என்று ஏழுலகத்தவரும் வாழ்த்தத்;* ***தூண்டினன்*** - *எறிந்தான்;* ***அதனை அன்னான்*** - *அம்மலையை அந்தக் கும்பகருணன்;* ***ஒரு தனித் தோளின் ஏற்றான்*** - *தன் ஒப்பற்ற ஒரு தோளில் தாங்கிக் கொண்டான்.*

***7459. ஏற்ற போது, அனைய குன்றம் எண்ண அருந் துகளது ஆகி,***
***வீற்று வீற்று ஆகி, ஓடி விழுதலும், கவியின் வெள்ளம், 'ஊற்றம் ஏது, எமக்கு!' என்று எண்ணி, உடைந்தது; குமரன் உற்ற***
***சீற்றமும் தானும் நின்றான்; பெயர்ந்திலன், சென்று பாதம்.***

***ஏற்ற போது*** - *அங்கதன் எறிந்த குன்றத்தைக் கும்பகருணன் தன் ஒரு தனித் தோளில் ஏற்றபோது;* ***அனைய குன்றம்*** - *அந்தக் குன்றானது;* ***எண்ண அருந்துகளது ஆகி*** - *எண்ணற்கு அருமையான தூளாகி;* ***வீற்று வீற்று ஆகி*** - *சின்ன பின்னப் பட்டு;* ***ஓடி விழுதலும்*** - *சிதறுண்டு விழுதலும்;* ***கவியின் வெள்ளம்*** - *குரங்குப் படையின் தொகுதி;* ***எமக்கு ஊற்றம் ஏது என்று எண்ணி*** - *எமக்கு வலிமையாவது யாது என்று எண்ணி;* ***உடைந்தது*** - *சிதறி ஓடியது;* ***குமரன்*** - *அங்கதன்;* ***பாதம் பெயர்ந்திலன்*** - *முன் வைத்த காலைப் பின் வைக்காது;* ***உற்ற சீற்றமும் தானும் சென்று நின்றான்*** - *பொருந்திய சினமும் தானுமாக முன் சென்று நின்றான்.*

***7460. இடக் கையால் அரக்கன் ஆங்கு ஓர் எழு முனை வயிரத் தண்டு,***
***தடுக்கல் ஆம் தரத்தது அல்லா வலியது, தருக்கின் வாங்கி,***
***'மடக்குவாய் உயிரை' என்னா, வீசினன்; அதனை மைந்தன்***
***தடக் கையால் பிடித்துக் கொண்டான், வானவர் தன்னை வாழ்த்த.***

***ஆங்கு*** -*அப்பொழுது;* ***அரக்கன்*** - *கும்பகருணன்;* ***தடுக்கல் ஆம் தரத்தது அல்லா வலியது*** - *தடுக்கக் கூடிய தன்மையுடையது அல்லாத வலிமையுடையதும்;* ***ஓர் எழு முனை வயிரத் தண்டு*** -*ஒப்பற்ற ஏ ழுமுனைகளையுடையதும் ஆன வலிய தண்டாயுதத்தை;* ***இடக்கையால்*** -*தன் இடது கையினால்;* ***தருக்கின் வாங்கி*** -

*செருக்கோடு எடுத்து;* ***மடக்குவாய் உயிரை என்னா*** *- இந்த அங்கதனுடைய உயிரை நீக்குவாய் என்று;* ***வீசினன்*** *- வீசினான்;* ***அதனை மைந்தன்*** *- அத்தண்டினை வலியுடைய அங்கதன்;* ***வானவர் தன்னை வாழ்த்த*** *- வானவர் தன்னை வாழ்த்தும்படி;* ***தடக்கையால் பிடித்துக் கொண்டான்*** *- தன் பெரிய கைகளினால் பிடித்துக் கொண்டான்.*

***7461. பிடித்தது சுழற்றி, 'மற்று அப் பெரு வலி அரக்கன் தன்னை,***
***இடித்து, உரும்ஏறு, குன்றத்து எரி மடுத்து, இயங்குமா போல்,***
***அடித்து, உயிர் குடிப்பென்' என்னா, அனல் விழித்து, ஆர்த்து, மண்டி,***
***கொடித் தடந் தேரின் முன்னர்க் குதித்து, எதிர் குறுகி, நின்றான்.***

***பிடித்தது சுழற்றி*** *- பிடித்ததாகிய தண்டைச் சுழற்றிக் கொண்டு;* ***அப் பெருவலி அரக்கன் தன்னை*** *- பெருவலி படைத்த அரக்கனான கும்பகருணனை;* ***அடித்து உயிர் குடிப்பேன் என்னா*** *- இத்தண்டினால் அடித்து உயிரைக் குடிப்பேன் என்று சொல்லி;* ***ஆர்த்து*** *- பேரொலி செய்து;* ***அனல் விழித்து மண்டி*** *- தீப்பொறி பறக்குமாறு விழித்து மூண்டு;* ***உரும் ஏறு இடித்து*** *- பேரிடி இடித்து;* ***குன்றத்து எரிமடுத்து இயங்குமா போல்*** *- மலையில் நெருப்பைப் பரப்பிக் கொண்டு இயங்குமாறு போல;* ***கொடித் தேரின் முன்னர்க் குதித்து*** *- கொடி கட்டிய பெரிய தேரின் முன்னால் குதித்து;* ***எதிர் குறுகி நின்றான்*** *- அக்கும்பகருணன் எதிரே சென்று நின்றான்.*

*உரும் ஏறு-ஆண் இடி பிடித்தது-வினையாலணையும் பெயர். மற்று-அசை.*

*கும்பகருணன் அங்கதன் உரையாடல்*

***7462. நின்றவன்தன்னை அன்னான் நெருப்பு எழ நிமிர நோக்கி,***
***'பொன்ற வந்து அடைந்த தானைப் புரவலன் ஒருவன்தானோ?***
***அன்று, அவன் மகனோ? எம் ஊர் அனல் மடுத்து அரக்கர்தம்மை***
***வென்றவன்தானோ? யாரோ? விளம்புதி, விரைவின்' என்றான்.***

***நின்றவன் தன்னை*** *- தன் எதிர் வந்து நின்றவனாகிய அங்கதனை;* ***அன்னான்*** *- அந்தக் கும்பகருணன்;* ***நெருப்பு எழ நிமிர நோக்கி*** *- நெருப்புப் பொறி புறப்பட நிமிர்ந்து*

*பார்த்து;* ***பொன்ற வந்து அடைந்த*** *- இறப்பதற்காக என்னிடம் வந்து சேர்ந்த;* ***தானைப் புரவலன் ஒருவன் தானோ*** *- குரக்குச் சேனைத் தலைவனாகிய சுக்கிரீவனோ?;* ***அன்று அவன் மகனோ?*** *- அல்லது அவனது மகனாகிய அங்கதனோ?;* ***எம் ஊர்*** *- எம்முடைய ஊரில்;* ***அனல் மடுத்து*** *- நெருப்பை இட்டு;* ***அரக்கர் தம்மை வென்றவன் தானோ*** *-அரக்கர்களை வென்றவன் ஆகிய அனுமனோ?;* ***யாரோ*** *-அன்றெனின் யாரோ?;* ***விரைவின் விளம்புதி என்றான்*** *- விரைவாகச் சொல்லுவாய் என்றான்.*

***7463. 'நும்முனை வாலின் சுற்றி, நோன் திசை நான்கும் தாவி,***
***மும் முனை நெடு வேல் அண்ணல் முளரி அம் சரணம் தாழ்ந்த***
***வெம் முனை வீரன் மைந்தன்; நின்னை என் வாலின் வீக்கி,***
***தெம் முனை இராமன் பாதம் வணங்கிட, செல்வென்' என்றான்.***

***நும்முனை*** *- உனக்கு அண்ணனாகிய இராவணனை;* ***வாலின் சுற்றி*** *- வாலினால் சுற்றி;* ***நோன் திசை நான்கும் தாவி*** *- வலிய திசை நான்கிலும் தாவிச் சென்று;* ***மும்முனை நெடுவேல் அண்ணல்*** *- மூன்று முனையைக் கொண்ட முத்தலை வேல் ஏந்திய பெருமை உடைய சிவபிரானது;* ***முளரி அம்சரணம் தாழ்ந்த*** *- தாமரை மலர் போன்ற அழகிய திருவடிகளை வணங்கிய;* ***வெம்முனை வீரன் மைந்தன்*** *- கொடிய போர்த்திறம் மிக்க வீர வாலியின் மகன்;* ***நின்னை என் வாலின் வீக்கி*** *- யான் உன்னை என் தந்தை போல் வாலில் கட்டி;* ***தெம்முனை இராமன் பாதம்*** *- பகைப் புலத்துள்ள இராமனது திருப்பாதத்தை;* ***வணங்கிடச் செல்வென் என்றான்*** *- வணங்குவதற்காகச் செல்லுவேன் என்று கூறினான்.*

***7464. 'உந்தையை, மறைந்து, ஓர் அம்பால் உயிருண்ட உதவியோற்குப்***
***பந்தனைப் பகையைச் செற்றுக் காட்டலை என்னின், பாரோர்***
***நிந்தனை நின்னைச் செய்வர்; நல்லது நினைந்தாய்; நேரே***
***வந்தனை புரிவர் அன்றே, வீரராய் வசையின் தீர்ந்தார்?***

***உந்தையை*** *- உன் தந்தையை;* ***ஓர் அம்பால் மறைந்து உயிருண்ட*** *- ஓரம்பினால் மறைந்திருந்து உயிரைப் போக்கி;* ***உதவியோற்கு*** *- உதவி செய்தவனாகிய*

*இராமனுக்கு;* ***பந்தனைப் பகையைச் செற்றுக் காட்டலை என்னின்*** *- கட்டாக உள்ள பகையை அழித்துக் கொடுக்காமல் போவாய் என்றால்;* ***நின்னைப் பாரோர் நிந்தனை செய்வர்*** *- உன்னை உலகில் உள்ளவர்கள் நிந்தனை செய்வார்கள்;* ***நல்லது நினைந்தாய்*** *- நல்ல செயலையே செய்யக் கருதினாய்;* ***வீரராய் வசையின் தீர்ந்தார்*** *- வீரராய்க் குற்றம் அற்றவர்;* ***நேரே வந்தனை புரிவர் அன்றே*** *- உனக்கு நேராக வந்து வணக்கம் செய்வார்கள் அல்லவா.*

*உன் தந்தையைக் கொன்று உனக்குத் துன்பம் தந்தவனுக்காகப் பந்தனைப் பகையைச் செற்றுக் காட்டினால் வீரராய் உள்ளோர் உன்னை அவமதிப்பர். பாரோர் நிந்திப்பர். அதனால் உன் செயல் நன்றன்று என்றவாறு. வஞ்சப் புகழ்ச்சி அணி. உந்தை-மரூஉ பந்தனைப் பகை-கட்டாக உள்ள பகை. நிந்தனை-பழிச்சொல்.*

***7465. 'இத்தலை வந்தது, என்னை இராமன்பால், வாலின்***
***ஈர்த்து***
***வைத்தலைக் கருதி அன்று; வானவர் மார்பின்***
***தைத்த***
***முத் தலை அயிலின் உச்சி முதுகு உற, மூரி***
***வால்போல்***
***கைத்தலம் காலும் தூங்க, கிடத்தலைக் கருதி'***
***என்றான்.***

***இத்தலை வந்தது*** *- நீ இந்த இடத்திற்கு வந்தது;* ***என்னை*** *- என்னை;* ***இராமன் பால்*** *- இராமனிடம்;* ***வாலின் ஈர்த்து வைத்தலைக் கருதி அன்று*** *- வாலால் கட்டி இழுத்துக் கொண்டு போய் வைத்தலைக் கருதி அன்று;* ***வானவர் மார்பின் தைத்த*** *- தேவர்களின் மார்பில் தைத்த;* ***முத்தலை அயிலின் உச்சி*** *- முத்தலைச் சூலத்தின் முனை;* ***முதுகு உற*** *- மார்பில் பாய்ந்து முதுகின் வழி வெளிப்பட, அதனால் உயிர் இழந்து;* ***மூரி வால் போல்*** *- வலிய வாலைப் போலவே;* ***கைத்தலம் காலும்*** *- கையும் காலும்;* ***தூங்க*** *- துவண்டு தொங்க;* ***கிடத்தலைக் கருதி என்றான்*** *- இறந்து கிடத்தலைக் கருதியே என்று கூறினான்.*

*அங்கதன் எறிந்த தண்டு பல துண்டமாதல்*

***7466. அற்று அவன் உரைத்தலோடும், அனல் விழித்து,***
***அசனி குன்றத்து***
***உற்றது போலும் என்னும் ஒலிபட, உலகம் உட்க,***
***பொன் தடந் தோளின் வீசிப் புடைத்தனன்;***
***பொறியின் சிந்தி,***
***இற்றது நூறு கூறாய், எழு முனை வயிரத் தண்டு.***

***அற்று*** - அவ்வாறாக; ***அவன்*** - அந்தக் கும்பகருணன்; ***உரைத்தலோடும்*** - சொன்ன உடனே; ***அனல் விழித்து*** - நெருப்பப் பொறி வெளிப்பட விழித்து; ***அசனி*** - இடி; ***குன்றத்து உற்றது போலும் என்னும் ஒலிபட*** - மலையில் விழுந்தது என்னுமாறு ஒலி தோன்ற; ***உலகம் உட்க*** - உலகத்தவர் அச்சம் கொள்ள; ***பொன் தடந்தோளின்*** - கும்பகருணனது அழகிய பெரிய தோளில்; ***வீசிப் புடைத்தனன்*** -வீசி அவனை அடித்தான்; ***எழு முனை வயிரத் தண்டு*** - அந்த ஏழுமுனைகளை உடைய வலிய தண்டாயுதம்; ***பொறியின் சிந்தி*** - தீப்பொறி போல் சிதறி; ***நூறு கூறாய் இற்றது*** - நூறு துண்டுகளாய் முறிந்து விட்டது.

*அனுமன் போரிடுதல்*

***7467. தண்டு இற, தடக் கை ஓச்சி, 'தழுவி அத்***
***தறுகணானைக்***
***கொண்டு இறப்புறுவென்' என்னா, தலையுறக்***
***குனிக்குங் காலை,***
***புண் திறப்புற வலாளன் கையினால் புகைந்து குத்த,***
***மண் திறப்பு எய்த வீழ்ந்தான்; மாருதி இமைப்பின்***
***வந்தான்.***

***தண்டு இற*** - தண்டாயுதம் முறிந்தவுடன்; ***தடக்கை ஓச்சி*** - தன் பெரிய கைகளைச் செலுத்தி; ***அத்தறுகணானை*** - அந்த வலிய கும்பகருணனை; ***தழுவிக்கொண்டு இறப்புறுவென்*** - பற்றிக் கொண்டு இறப்பு உறச் செய்வேன்; ***என்னா*** - என்று எண்ணி; ***தலையுறக் குனிக்குங் காலை*** - தலைப்பகுதி கீழ் உறக் குனிந்தபோது; ***வலாளன்*** - வலிமையுடைய கும்பகருணன்; ***புண்திறப்புற*** - அங்கதன் உடம்பில் புண் பல பிளந்து தோன்றுமாறு; ***கையினால் புகைந்து குத்த*** - கையினால் சினந்து குத்த; ***மண் திறப்பு எய்த வீழ்ந்தான்*** - அவன் நிலம் பிளவு படும்படி வீழ்ந்தான்; ***மாருதி இமைப்பின் வந்தான்*** - அனுமன் நெடிப் பொழுதுக்குள் அங்கு வந்தான்.

*தண்டு இற, ஓச்சி கொண்டு இறப்புறுவன் என்னா குனிக்குங்காலை வலாளன் புகைந்து குத்த வீழ்ந்தான் என்க. தறுகணான்-வினையால் அணையும் பெயர். கணான்-இடைக்குறை. இறப்புறுவான் - இறப்பு உறச் செய்வேன், வலாளன்-வல்லவன் ஆகிய கும்பகருணன், மண்திறப்பு எய்தல்-பூமி பிளத்தல்.*

***7468. மறித்து அவன் அவனைத் தன் கை வயிர வான்***
***சூலம் மார்பில்***
***குறித்துற எறியலுற்ற காலையில், குன்றம் ஒன்று***
***பறித்து, அவன் நெற்றி முற்றப் பரப்பிடை, பாகம்***

***உள்ளே***
***செறித்தெனச் சுரிக்க வீசி, தீர்த்தனை வாழ்த்தி***
***ஆர்த்தான்.***

***அவன் மறித்து*** - *அக்கும்பகருணன் மீண்டும்;* ***அவனை*** - *அங்கதனை;* ***தன் கை*** - *தனது கையில் உள்ள;* ***வயிர வான்சூலம்*** - *உறுதி பொருந்திய கூரிய சூலத்தை;* ***மார்பில்*** - *மார்பில்;* ***குறித்துற எறியலுற்ற காலையில்*** - *குறியாகப் பொருந்த எறியத் தொடங்கிய பொழுது;* ***குன்றம் ஒன்று பறித்து*** - *அனுமன் குறுக்கிட்டு மலையொன்றைப் பரித்து;* ***அவன் நெற்றி முற்றப் பரப்பிடை*** - *அவன் நெற்றியாகிய விசாலமான இடத்தில்;* ***பாகம் உள்ளே செறித்தென*** - *பாதி உள்ளே பொத்தி உள்ளது என்னுமாறு;* ***சுரிக்க வீசி*** - *உள்ளே பதியுமாறு வீசி;* ***தீர்த்தனை*** -*தூய்மை உள்ளவனான இராமனை;* ***வாழ்த்தி ஆர்த்தான்*** -*வாழ்த்திப் பேரொலி செய்தான்.*

***7469. தலையினில் தைத்து வேறு ஓர் தலை என***
***நின்றதன்ன***
***மலையினைக் கையின் வாங்கி, மாருதி வயிர***
***மார்பின்,***
***உலை உற வெந்த பொன் செய் கம்மியர் கூடம்***
***ஒப்ப,***
***குலை உறு பொறிகள் சிந்த, வீசி, தோள் கொட்டி***
***ஆர்த்தான்.***

***தலையினில் தைத்து*** - *கும்பகருணனது தலையில் பொருந்தி;* ***வேறு ஓர் தலை என நின்ற தன்ன*** -*வேறு ஒரு தலை தோன்றி உள்ளது என்னுமாறு நின்ற;* ***மலையினைக் கையின் வாங்கி*** - *மலையினைத் தன் கையினால் எடுத்து;* ***மாருதி வயிர மார்பின்*** - *அனுமனது உறுதியான மார்பில்;* ***பொன் செய் கம்மியர்*** - *இரும்புத் தொழில் செய் கம்மியரது;* ***உலையுற வெந்த*** - *உலையில் வெந்த இரும்பின் மீது;* ***கூடம் ஒப்ப*** - *சம்மட்டியை ஒப்பக்;* ***குலையுறு பொறிகள் சிந்த*** - *தொகுதியாகப் பொருந்திய தீப்பொறிகள் சிதறும்படி;* ***வீசித்தோள் கொட்டி ஆர்த்தான்*** - *எறிந்து தோளைத் தட்டி ஆரவாரம் செய்தான்.*

***7470. அவ்வழி வாலி சேயை அரிகுல வீரர் அஞ்சார்***
***வவ்வினர் கொண்டு போனார்; மாருதி வானை***
***முற்றும்***
***கவ்வியது அனையது ஆங்கு ஓர் நெடு வரை***
***கடிதின் வாங்கி,***
***எவ்வம் இல் ஆற்றலானை நோக்கி நின்று, இனைய***
***சொன்னான்.***

***அவ்வழி*** - *அவ்விடத்து;* *அரிகுல வீரர்* - *குரங்குக் குல வீரர்கள்;* ***வாலி சேயை*** - *வாலியின் மகனாகிய அங்கதனை;* ***அஞ்சார் வவ்வினர் கொண்டு போனார்*** - *அஞ்சாதவராய்த் தூக்கிக் கொண்டு போனார்கள்;* ***மாருதி*** - *அனுமன்;* ***வானை முற்றும் கவ்வியது அனையது*** - *வானம் முழுவதும் மறைத்ததை ஒத்ததாகிய;* ***ஆங்கு ஓர் நெடுவரை.*** - *அங்குள்ள ஒரு பெரிய மலையை;* ***கடிதின் வாங்கி*** - *விரைவாகக் கையில் எடுத்து;* ***எவ்வம் இல் ஆற்றலானை*** - *குற்றம் அற்ற வலிமையுடைய ஆற்றல் உடைய கும்பகருணனை;* ***நோக்கி நின்று*** - *பார்த்து நின்று;* ***இனைய சொன்னான்*** - *இச்சொற்களைச் சொல்லலானான்.*

***7471. 'எறிகுவென் இதனை நின்மேல்; இமைப்புறும் அளவில் ஆற்றல்***
***மறிகுவது அன்றி, வல்லை மாற்றினைஎன்னின், வன்மை***
***அறிகுவர் எவரும்; பின்னை யான் உன்னோடு அமரும் செய்யேன்;***
***பிறிகுவென்; உலகில், வல்லோய்! பெரும் புகழ் பெறுதி' என்றான்.***

***வல்லோய்*** - *மிகு வலியுடைய கும்பகருணனே;* ***இதனை நின் மேல் எறிகுவென்*** - *இம்மலையினை உன்மேல் எறியப் போகிறேன்;* ***இமைப்புறும் அளவில்*** - *இதனால் இமைப்பொழுதில்;* ***ஆற்றல் மறிகுவது அன்றி*** - *உன் வலிமை மாய்ந்து போவது அல்லாமல்;* ***வல்லை மாற்றினை என்னின்*** - *விரைவாக இதனைத் தள்ளி மாற்றிவிட்டாய் என்றால்;* ***வன்மை அறிகுவர் எவரும்*** - *உன் வல்லமையை எல்லோரும் அறிவர்;* ***யான் பின்னை உன்னோடு அமரும் செய்யேன்*** - *நான் பிறகு உன்னோடு போர் செய்யாமல்;* ***பிறிகுவென்*** - *அப்பால் சென்று விடுவேன்;* ***உலகில்*** - *உலகத்தில்;* ***பெரும் புகழ் பெறுதி*** - *நீ உலகத்தில் பெரும் புகழ் பெறுவாய் என்றான்.*

***7472. மாற்றம் அஃது உரைப்பக் கேளா, மலை முழை திறந்தது என்னக்***
***கூற்று உறழ் பகுவாய் விள்ள நகைத்து, 'நீ கொணர்ந்த குன்றை***
***ஏற்றனென்; ஏற்ற காலத்து, இறை அதற்கு ஒற்கம் எய்தின்,***
***தோற்றனென், உனக்கு; என் வன்மை சுருங்கும்' என்று அரக்கன் சொன்னான்.***

***மாற்றம் அஃது உரைப்பக் கேளா*** - *அனுமன் கூறிய அச்சொற்களைக் கேட்டு;* ***மலை முழை திறந்தது என்ன*** - *மலைக் குகையைத் திறந்தது போல;* ***கூற்று உறழ்பகுவாய் விள்ள நகைத்து*** - *கூற்றுவனோடு மாறுபட்ட பெரியவாயைத் திறந்து சிரித்து;* ***நீ கொணர்ந்த குன்றை*** - *நீ கொண்டு வந்து பெருமலையை;* ***ஏற்றனென்*** - *ஏற்றவனாய்;* ***ஏற்ற காலத்து*** - *அவ்வாறு ஏற்ற காலத்தில்;* ***இறை அதற்கு ஒற்கம் எய்தின்*** - *சிறிதளவாவது அதற்குத் தளர்ச்சி அடைந்தால்;* ***உனக்கு தோற்றனென்*** - *உனக்குத் தோற்றவன் ஆவேன்;* ***என் வன்மை சுருங்கும்*** - *என் வலிமை உன் வலிமைக்குத் தாழ்ந்தது ஆகும்;* ***என்று அரக்கன் சொன்னான்*** - *என்று கும்பகருணன் கூறினான்.*

### *7473. மாருதி, 'வல்லைஆகின், நில், அடா! மாட்டாய் ஆகின்,*
### *பேருதி, உயிர்கொண்டு' என்று, பெருங் கையால் நெருங்க விட்ட*
### *கார் உதிர் வயிரக் குன்றைக் காத்திலன், தோள்மேல் ஏற்றான்;*
### *ஓர் உதிர் நூறு கூறாய் உக்கது, எவ் உலகும் உட்க.*

***மாருதி*** - *அனுமன்;* ***அடா!*** - *அடா!;* ***வல்லை ஆகின் நில்*** - *வல்லமை உடையவனாயின் நில்;* ***மாட்டாய் ஆகின்*** - *மாட்டாய் ஆகின்;* ***உயிர் கொண்டு பேருதி*** - *உயிரைக் கொண்டு அப்பால் போ;* *என்று* - ***என்று சொல்லி;*** *பெருங்கையால் நெருங்க விட்ட - தன் பெரிய கைகளினால் அவனை நெருங்குமாறு வீசிய;* ***கார் உதிர் வயிரக் குன்றை*** - *மேகங்கள் உதிர்வதற்குக் காரணம் ஆன வலிய மலையை;* ***காத்திலன்*** - *தடுத்துக் காத்திலனாய்த்;* ***தோள் மேல் ஏற்றான்*** - *தன் தோளின் மீது ஏற்றுக் கொண்டான்;* ***எவ் உலகும் உட்க*** - *எல்லா உலகமும் அஞ்சுமாறு;* ***ஓர் உதிர் நூறு கூறாய் உக்கது*** - *அது ஒருமுறை உதிர்கையிலே நூறு பகுதியாகச் சிந்திச் சிதறி விட்டது.*

### *7474. இளக்கம் ஒன்று இன்றி நின்ற இயற்கை பார்த்து, 'இவனது ஆற்றல்*
### *அளக்குறற்பாலும் ஆகா; குலவரை அமரின் ஆற்றா;*
### *துளக்குறும் நிலையன் அல்லன்; சுந்தர்த தோளன் வாளி*
### *பிளக்குமேல், பிளக்கும்' என்னா, மாருதி பெயர்ந்து போனான்.*

***இளக்கம் ஒன்று இன்றி நின்ற இயற்கை பார்த்து*** - *வலிய மலை தாக்கியும் தளர்ச்சி எதுவும் இல்லாமல் கும்பகருணன் நின்ற தன்மையைப் பார்த்து;* ***இவனது ஆற்றல் அளக்குறற்பாலும் ஆகா*** - *இவனுடைய வலிமை இவ்வளவு என்று அளவிட்டுச் சொல்லக் கூடியதல்ல;* ***குலவரை அமரின் ஆற்றா*** - *கூட்டமாக உள்ள மலைகளும்*

*போரில் இவன் வலிமைக்குத் தாங்க மாட்டா;* ***துளக்குறும் நிலையன் அல்லன்*** *- எவராலும் தளர்ச்சி அடையச் செய்யும் தன்மை உடையவன் அல்லன்;* ***சுந்தரத் தோளன் வாளி*** *- அழகிய தோள்களையுடைய இராமபிரானது அம்பு;* ***பிளக்கு மேல் பிளக்கும்*** *- பிளக்கக் கூடுமானால் கூடும்;* ***என்னா*** *- என்று கூறி;* ***மாருதி பெயர்ந்து போனான்*** *-அனுமன் அப்பால் போயினன்.*

*குரக்குச் சேனையின் அழிவு*

***7475. 'எழுபது வெள்ளத்துள்ளார் இறந்தவர் ஒழிய, யாரும்***
***முழுவதும் மாள்வர், இன்றே இவன் வலத்து அமைந்த***
***முச் சூல்***
***கழுவினில்' என்று வானோர் கலங்கினார்,***
***நடுங்கினாரால்--***
***'பொழுதினின் உலகம் மூன்றும் திரியும்' என்று***
***உள்ளம் பொங்கி.***

***எழுபது வெள்ளத்துள்ளார்*** *- எழுபது வெள்ள அளவுடைய குரங்குப் படை வீரர்களில்;* ***இறந்தவர் ஒழிய*** *- போரில் இறந்தவர் தவிர;* ***யாரும்*** *- எஞ்சியுள்ள யாவரும்;* ***முழுவதும் மாள்வர்*** *- அனைவரும் இறந்து படுவார்கள்;* ***இன்றே*** *- இப்பொழுதே;* ***இவன் வலத்து அமைந்த முச்சூல் கழுவினில்*** *- இவனது வெற்றியுடன் அமைந்த முச்சூலமாகிய கழுவினில்;* ***என்று*** *- என்று எண்ணியும்;* ***பொழுதினில் உலகம் மூன்றும் திரியும் என்று உள்ளம்*** *பொங்கி இமைப் பொழுதில் மூன்று உலகங்களும் நிலைமாறும் என்று மனம் கொதித்தும்;* ***வானோர் கலங்கினார் நடுங்கினாரால்*** *- தேவர்கள் கலங்கி நடுங்கினார்கள்.*

***7476. தாக்கினார்; தாக்கினார்தம் கைத்தலம் சலித்தது***
***அன்றி,***
***நூக்கினார் இல்லை; ஒன்றும் நோவு செய்தாரும்***
***இல்லை-***
***ஆக்கினான்; களத்தின் ஆங்கு ஓர் குரங்கினது***
***அடியும் இன்றிப்***
***போக்கினான்; ஆண்மையாலே புதுக்கினான், புகழை***
***அம்மா!***

***தாக்கினார்*** *- கும்பகருணனைக் குரங்குப் படைவீரர் தாக்கினார்;* ***தாக்கினார் தம்*** *- அவ்வாறு தாக்கியவர்களுடைய;* ***கைத்தலம் சலித்தது அன்றி*** *-கைத்தலம் சலித்ததே அல்லாமல்;* ***நூக்கினார் இல்லை*** *- அவனை அசைத்துத் தள்ளியவர் எவரும் இல்லை;* ***ஒன்றும் நோவு செய்தாரும் இல்லை*** *- எந்த வகையிலும் நோவு செய்தவர்களும் இல்லை;* ***களத்தின் ஆங்கு ஓர் குரங்கினது அடியும் இன்றி*** *- போர்க் களத்தில் ஒரு*

*குரங்கினது அடிச்சுவடும் இன்றி;* ***ஆக்கினான் போக்கினான்*** *- போரைச் செய்தவன் ஆன கும்பகருணன் அழித்தான்;* ***ஆண்மையாலே புதுக்கினான் புகழை*** *- தன்னுடைய ஆண்மையால் புகழைப் புதுப்பித்தான்.*

*புதுக்கினான்-புதுப்பித்தான். அம்மா-வியப்பிடைச் சொல்.*

***7477. 'சங்கத்து ஆர் குரங்கு சாய, தாபதர் என்னத் தக்கார்***
***இங்கு உற்றார் அல்லரோதான்? வேறும்ஓர் இலங்கை உண்டோ?***
***எங்குற்றார் எங்குற்றார்?' என்று எடுத்து அழைத்து, இமையோர் அஞ்ச,***
***துங்கத் தோள் கொட்டி, ஆர்த்தான்--கூற்றையும் துணுக்கம் கொண்டான்.***

***கூற்றையும் நுணுக்கம் கொண்டான்*** *- யமனையும் அச்சம் கொள்ளச் செய்திட்ட கும்பகருணன்;* ***சங்கத்து ஆர் குரங்கு சாய*** *- கூட்டமாகப் பொருந்திய குரங்கு வீரர் அழிய;* ***தாபதர் என்னத் தக்கார்*** *- தவத்தவர் என்று சொல்லத் தக்கவர் ஆன இராமலக்குவர்;* ***இங்கு உற்றார் அல்லரோ தான்*** *- இங்கு வந்துற்றார் அல்லரோ;* ***வேறும் ஓர் இலங்கை உண்டோ*** *- அல்லது அவர்கள் முற்றுகை இட வேறு ஒரு இலங்கையும் இருக்கின்றதோ?;* ***எங்குற்றார் எங்குற்றார் என்று எடுத்து அழைத்து*** *- எங்கே போனார், எங்கே போனார் என்று பெரும் குரல் எடுத்து அழைத்து;* ***இமையோர் அஞ்ச*** *- தேவர்கள் அஞ்சும்படி;* ***துங்கத் தோள் கொட்டி ஆர்த்தான்*** *- வலிய தோளைத் தட்டிப் பேரொலி செய்தான்.*

***7478. பறந்தலைஅதனின் வந்த பல் பெருங் கவியின் பண்ணை***
***இறந்தது கிடக்க, நின்ற இரிதலின், யாரும் இன்றி***
***வறந்தது; சோரி பாய வளர்ந்தது, மகர வேலை--***
***குறைந்துளது, உவாவுற்று ஓதம் கிளர்ந்து மீக்கொண்டது என்ன.***

***பறந்தலை அதனின் வந்த*** *- போர்க்களமாகிய அதன் இடத்து வந்த;* ***பல்பெருங் கவியின் பண்ணை*** *- பலவாகிய பெரிய குரங்கினது கூட்டம்;* ***இறந்தது கிடக்க*** *- இறந்தது போக;* ***நின்ற இரிதலின்*** *- நின்ற குரங்குகள் நிலைகெட்டு ஓடியதால்;* ***யாரும் இன்றி வறந்தது*** *- எவரும் இல்லாமல் வறியது ஆயிற்று;* ***குறைந்துளது மகர வேலை*** *- குறைந்துள்ளதான மகர மீன்களை உடைய கடல்;* ***உவாவுற்று ஓதம் கிளர்ந்து***

***மீக்கொண்டது என்ன*** - முழுமதி நாளில் வெள்ளப் பெருக்கு மேல் பொங்குவது ஒப்ப; ***சோரி பாய வளர்ந்தது*** - இரத்தம் பாய்ந்ததனால் மிக்கு வளர்ந்தது.

## *இலக்குவன் கும்பகருணனுடன் போரிடுதல்*

**கலித்துறை**

***7479. குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன; குரங்கின்
வென்றி அம் பெருஞ் சேனை ஓர் பாதியின் மேலும்
அன்று தேய்ந்தது' என்று உரைத்தலும், அமரர்
கண்டு உவப்பச்
சென்று தாக்கினன், ஒரு தனிச் சுமித்திரை சிங்கம்.***

***குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன*** - போர் செய்ய உதவிய மலைகளும் கற்களும் மரங்களும் குறைந்து விட்டன; ***குரங்கின் வென்றி அம் பெருஞ்சேனை*** - குரங்கினது வெற்றி பொருந்திய பெரிய படையானது; ***ஓர் பாதியின் மேலும் அன்று தேய்ந்தது*** - ஒரு பாதி அளவுக்கு மேல் தேய்ந்து அழிந்து விட்டது; ***என்று உரைத்தலும்*** - என்று படை வீரர் உரைத்தலும்; ***ஒரு தனிச் சுமித்திரை சிங்கம்*** - ஒப்பற்ற சுமித்திரை மகனான சிங்கம் போன்ற இலக்குவன்; ***அமரர் கண்டு உவப்ப*** -தேவர்கள் கண்டு மகிழும்படி; ***சென்று தாக்கினன்*** - சென்று கும்பகருணனைத் தாக்கலானான்.

***7480. நாண் எறிந்தனன், சிலையினை; அரக்கியர் நகு
பொன்
பூண் எறிந்தனர்; படியிடை இடி பொடித்தென்னச்
சேண் எறிந்து எழு திசை செவிடு எறிந்தன;
அலகை,
தூண் எறிந்தன கையெடுத்து ஆடின துணங்கை.***

***சிலையினை நாண் எறிந்தனன்*** - இலக்குவன் தன் வில்லின் நாணைத் தெறித்தான்; ***அரக்கியர் நகுபொன் பூண் எறிந்தனர்*** -அவ்வொலி கேட்டு அரக்கர் இறந்தமையால் இறந்தவர்களுடைய மனைவியர் பொற்றாலியைக் கழற்றி எறிந்தனர்; ***படியினை இடி பொடித்தென்ன*** - நிலத்தில் இடி உண்டானாற் போல; ***சேண் எறிந்து எழுதிசை செவிடு எறிந்தன*** - வெகுதூரம் வரை தோன்றும் திக்குகள் ஓசையால் செவிடு பட்டன; ***அலகை தூண் எறிந்தன கை எடுத்து*** - பேய்கள் தூண்களை அடித்து வைத்தாற் போன்ற கைகளை உயரத் தூக்கி; ***துணங்கை ஆடின*** -துணங்கைக் கூத்தாடின.

*துணங்கை-முடக்கிய இரு கைகளையும் விலாப்புறத்தில் ஒற்றியடித்துக்கொண்டு அசைந்தாடும் ஒரு வகைக்கூத்து. "பழுப்புடை இருகை முடக்கி அடிக்கத் துடக்கிய நடையது துணங்கை ஆகும்" என்னும் நூற்பாவால் அறிக.*

***7481. இலக்குவன் கடிது ஏவின, இரை பெறாது இரைப்ப,***
***சிலைக் கடுங் கணை நெடுங் கணம் சிறையுடன் செல்வ,***
***உலைக் கொடுங் கனல் வெதும்பிட வாய் எரிந்து ஓடி,***
***குலக் கயங்களில் குளித்தன; குடித்தன, குருதி.***

***இலக்குவன் கடிது ஏவின** - இலக்குவன் விரைவாகச் செலுத்தியனவும்; **இரை பெறாது இரைப்ப** - இரை பெறாமையால் ஒலிப்பனவுமாகிய; **சிலைக் கருங்கணை** - சிலை வடிவு உடைய கொடிய அம்புகளின்; **நெடுங்கணம்** - பெருங்கூட்டங்கள்; **சிறையுடன் செல்வ** - சிறகுகளுடன் சென்றதனால்; **உலைக் கொடுங்கனல் வெதும்பிட** - உலைக்களத்தில் உள்ள கொடிய தீயும் வெதும்பும்படி; **வாய் எரிந்து ஓடி** - நெருப்பை வாயில் வெளியிட்டுக் கொண்டு ஓடிக்; **குலக்கயங்களில் குளித்தன** - கூட்டமாக உள்ள திசையானைகளின் உடம்பில் மூழ்கி; **குருதி குடித்தன** - அவற்றின் குருதியைப் பருகின.*

***7482. அலை புடைத்த வாள் அரக்கரைச் சில கழுத்து அரிவ;***
***சில, சிரத்தினைத் துணித்து, அவை திசைகொண்டு செல்வ;***
***கொலை படைத்த வெங் களத்திடை விழா, கொடு போவ;***
***தலை படைத்தன போன்றனவால், நெடுஞ் சரங்கள்.***

***சில** - சில அம்புகள்; **அலை புடைத்த வாள் அரக்கரை** - கடல் அலையை அடித்து வென்ற பெருமையுடைய கொடிய அரக்கர்களைக்; **கழுத்து அரிவ** - கழுத்தை அரிவனவாயின; **சில நெடுஞ்சரங்கள்** -சில நீண்ட அம்புகள்; **சிரத்தினைத் துணித்து** - கழுத்தினைத் துண்டித்து; **அவை கொலை படைத்த வெங்களத்திடை விழா** - அக்கழுத்துக்கள் கொலைத் தொழில் படைத்த கொடிய போர்க்களத்தில் வீழாதவாறு; **கொடு போவ** - கொண்டு போகின்றவைகளாகித்; **திசை கொண்டு செல்வ** - திசைகளின் எல்லைக்குக் கொண்டு செல்வதனால்; **தலை படைத்தன போன்றனவால்** - தலை பெற்றவை போன்று விளங்கின.*

***7483. உருப் பதங்களை ஒப்பன சில கணை, ஓடைப்***
***பொருப்பதங்களை உருவி, மற்று அப்புறம் போவ,***
***செருப் பதம் பெறா அரக்கர்தம் தலை பல சிந்தி,***
***பருப்பதங்கள் புக்கு ஒளிப்பன, முழை புகு பாம்பின்.***

***உரு பதங்களை ஒப்பன*** - *வடிவம் சூரியனை ஒப்பனவாகிய;* ***சில கணை*** - *சில அம்புகள்;* ***ஓடைப் பொருப் பதங்களை உருவி*** - *முகபடாம் அணிந்த மலை போன்ற யானைகளை ஊடுருவி;* ***மற்று அப்புறம் போவ*** - *பின் அப்புறம் போனவையாய்;* ***செருப்பதம் பெறா அரக்கர் தம் தலை பல சிந்தி*** -*போர்க்களத்தில் காலடி வைத்திருக்காத அரக்கர்களின் பல தலைகளை உருட்டி;* ***முழை புகு பாம்பின்*** - *குகையில் புகும் பாம்புகள் போல;* ***பருப் பதங்கள் புக்கு ஒளிப்பன*** - *மலைகளில் புகுந்து ஒளிப்பனவாயின.*

***7484. மின் புகுந்தன பல் குழுவாம் என மிளிர்வ,***
***பொன் புகுந்து ஒளிர் வடிம்பின கடுங் கணை போவ,***
***முன்பு நின்றவர் முகத்திற்கும், கடைக் குழை***
***முதுகின்***
***பின்பு நின்றவர் பிடர்க்கும், இவ் விசை ஒக்கும்,***
***பிறழா.***

***பல் குழுவாம் மின் புகுந்தன என*** - *பல கூட்டங்களாக மின்னல்கள் புகுந்தன போன்று;* ***மிளிர்வ*** - *கருதும்படி விளங்குவனவும்;* ***பொன் புகுந்து ஒளிர் வடிம்பின*** - *பொன் போல் விளங்கி ஒளிர்கின்ற விளிம்புகளையுடையவையும் ஆன;* ***கருங்கணை போவ*** - *கொடிய கணைகள் விரைந்து போவனவாய்;* ***முன்பு நின்றவர் முகத்திற்கும்*** - *தார்ப் படையில் நின்றவர் உடைய முகத்துக்கும்;* ***கடைக்குழை முதுகின் பின்பு நின்றவர் பிடர்க்கும்*** - *கடைப்படையான கூழையின் பின்புறமான இடத்து நிற்பவர் பிடரியிலும்;* ***இவ்விசை பிறழா ஒக்கும்*** - *இந்த வேகத்தில் மாறுபடாமல் ஒத்து அமையும்.*

*செல்லச் செல்ல வேகம் குறையாது ஒரு படித்தான வேகம் இறுதி வரை உடையது இலக்குவன் அம்பு.*

***7485. போர்த்த பேரியின் கண்ணன, காளத்தின் பொகுட்ட,***
***ஆர்த்த வாயன, கையன, ஆனையின் கழுத்த,***
***ஈர்த்த தேரன, இவுளியின் தலையன, எவர்க்கும்***
***பார்த்த நோக்கன, கலந்தன--இலக்குவன் பகழி.***

***இலக்குவன் பகழி*** *- இலக்குவனுடைய அம்புகள்;* ***போர்த்த பேரியின் கண்ணன*** *- தோலால் போர்த்தப்பட்ட பேரிகையின் கண்ணிடத்துப் பாய்வனவும்;* ***காளத்தின் பொகுட்ட*** *- காளம் என்ற ஊது கொம்பின் ஊதுகின்ற முனையில் பாய்வனவும்;* ***ஆர்த்த வாயின கையின*** *- பிற கருவிகளை ஊதும் வாயிலும் பிடித்த கையிலும் பாய்வனவும்;* ***ஆனையின் கழுத்த*** *- யானைகளின் கழுத்தில் பாய்வனவும்;* ***ஆனையின் கழுத்த*** *- யானைகளின் கழுத்தில் பாய்வனவும்;* ***ஈர்த்த தேரன*** *- குதிரைகள் பூட்டி இழுக்கப்பட்ட தேரில் பாய்வனவும்;* ***இவுளியின் தலையன*** *- குதிரைகளின் தலையில் பாய்வனவும்;* ***எவர்க்கும் பார்த்த நோக்கன*** *- பார்க்கும் எவராயினும் பார்த்த கண்களில் பாய்வனவுமாகி;* ***கலந்தன*** *- எங்கும் பரவின.*

***7486. மருப்பு இழந்தன;--களிறு எலாம்--வால் செவி இழந்த,***
***நெருப்பு உகும் கண்கள் இழந்தன; நெடுங் கரம் இழந்த;***
***செருப் புகும் கடுங் காத்திரம் இழந்தன; சிகரம்***
***பொருப்பு உருண்டனவாம் எனத் தலத்திடைப் புரண்ட.***

***களிறு எலாம் மருப்பு இழந்தன*** *- இலக்குவன் பகழியால் யானைகள் எல்லாம் கொம்புகளை இழந்தன;* ***வால் செவி இழந்த*** *- வாலையும் செவிகளையும் இழந்தன;* ***நெருப்பு உகும் கண்கள் இழந்தன*** *- நெருப்பை வெளிப்படுத்தும் கண்களையிழந்தன;* ***நெடுங்கரம் இழந்த*** *- நீண்ட துதிக்கைகளை இழந்தன;* ***செருப்புகும் கடுங்காத்திரம் இழந்தன*** *- போரில் புக்கு விரைந்து செல்லும் முன்னங்கால்களை இழந்தன;* ***சிகரப் பொருப்பு உருண்டனவாம் எனத் தலத்திடைப் புரண்ட*** *- அவ்வாறு இழந்து சிகரத்தை உடைய மலைகள் நிலத்தில் உருள்கின்றன என்னுமாறு உருண்டன.*

***7487. நிரந்தரம் தொடை நெகிழ்த்தலின், திசை எங்கும் நிறைந்த***
***சரம் தலைத்தலை படப் பட, மயங்கின சாய்ந்த;***
***உரம் தலத்துற உழைத்தவால்; பிழைத்தது ஒன்று இல்லை--***
***குரம் தலத்தினும் விசும்பினும் மிதித்திலாக் குதிரை.***

***குரம் தலத்தினும்*** *- குளம்புகள் நிலத்திலும்; விசும்பினும் - ஆகாயத்திலும்;* ***மிதித்திலாக் குதிரை*** *- மிதித்துச் செல்லாத குதிரைகள்;* ***நிரந்தரம் தொடை நெகிழ்த்தலின்*** *- இலக்குவன் இடைவிடாமல் அம்புகளை விடுவதனால்;* ***திசை எங்கும் நிறைந்த*** *- திக்குகள் எங்கும் நிறைந்த;* ***சரம் தலைத்தலை படப்பட*** *- அம்புகள் மேலும் மேலும்*

*மிகுதியாகப் படுவதனால்;* ***மயங்கின சாய்ந்த*** *- மயங்கிச் சாய்ந்தன;* ***உரம் தலத்துற உழைத்தவால்*** *- மார்பு பூமியில் படுமாறு விழுந்து வருந்தின;* ***ஒன்று பிழைத்தது இல்லை*** *- ஒன்று கூட உயிர் பிழைத்து இல்லை.*

***7488. பல்லவக் கணை பட, படு புரவிய, பல் கால்***
***வில்லுடைத் தலையாளொடு சூதரை வீழ்த்த,***
***எல்லை அற்ற செங் குருதியின் ஈர்ப்புண்ட அல்லால்,***
***செல்லகிற்றில, நின்றில--கொடி நெடுந் தேர்கள்.***

**கொடி நெடுந்தேர்கள்** *- கொடி கட்டப்பட்ட பெரிய தேர்கள்;* **பல்லவக் கணைபட** *- இலக்குவன் விடுத்த இளந்தளிர் போன்ற சிவப்பு நிறமான அம்புகள் பாய்ந்ததனால்;* **படு புரவிய** *- இறந்த குதிரைகளையுடையனவாயின;* **பல்கால் வில்லுடைத் தலையாளொடு** *-பல இடங்களில் தேரில் இருந்து போர் செய்யும் தேர் வீரரோடு;* **சூதரை வீழ்த்த** *- அவை தேர்ப்பாகரையும் கொன்றழித்தன;* **செல்லகிற்றில** *- அதனால் அத்தேர்கள் ஓடிச் செல்ல மாட்டா ஆயின;* **எல்லை அற்ற செங்குருதியின் ஈர்ப்புண்ட அல்லால்** *- ஆயினும் தேர்கள் போர்க்களத்து ஓடிய குருதி வெள்ளத்தில் இழுத்துச் செல்லப் பட்டன அல்லாமல்;* **நின்றில** *- ஓர் இடத்து நிற்க மாட்டா ஆயின.*

***7489. பேழை ஒத்து அகல் வாயன பேய்க் கணம் முகக்கும்***
***மூழை ஒத்தன--கழுத்து அற வீழ்ந்தன முறை சால்***
***ஊழை ஒத்தன ஒரு கணை தைத்தன, உதிரத்***
***தாழி ஒத்த வெங் குருதியில் மிதப்பன, தலைகள்.***

**முறை சால்** *- முறைமையின் படி பயன்தரும்;* **ஊழை ஒத்தன ஒரு கணை தைத்தன** *- ஊழ்வினையை ஒத்தனவாகிய ஒப்பற்ற இலக்குவனின் கணைகள் தைத்ததனால்;* **தலைகள் கழுத்து அற வீழ்ந்தன** *- வீரர்களின் தலைகள் கழுத்து அறுபட்டு வீழ்ந்தன;* **பேழை ஒத்து அகல்வாயின** *- அவை பெட்டியைப் போன்று அகன்ற வாயையுடையனவாயும்;* **பேய்க்கணம் முகக்கும் மூழை ஒத்தன** *- பேய்க்கணங்கள் களக்கூழ் துழாவுவதற்கு உதவும் அகப்பையை ஒத்தனவாயும்;* **உதிரத்தாழி ஒத்த வெங்குருதியில் மிதப்பன** *-குருதித் தாழியாகிய கடலில் உள்ள குருதியில் மிதக்கும் தோணி போன்றும் இருந்தன.*

***7490. ஒட்டி நாயகன் வென்றி நாள் குறித்து ஒளிர் முளைகள்***
***அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன--அழிந்து***
***நட்டவாம் என வீழ்ந்தன, துடிகளின் நவை தீர்***
***வட்ட வான்கணில், வதிந்தன வருண சாமரைகள்.***

***அழிந்து நட்டவாம் என வீழ்ந்தன துடிகளின்*** - *அழிந்து குத்திட்டாற்போல் வீழ்ந்தனவாகிய துடிகளின்;* ***நவை தீர் வட்ட வான்கணில்*** - *துடிப்பறையின் குற்றமற்ற நடுவில் வட்டமாக உள்ள வாய்களில் (அடிக்கப்படும் இடங்களில்);* ***வதிந்தன*** - *பொத்துக் கொண்டு விளங்குகிற;* ***வருண சாமரைகள்*** - *நன்னிறம் கொண்ட சாமரைகள்;* ***ஒட்டி நாயகன் வென்றி நாள்*** - *அண்மையில் வர இருக்கிற இராமனுடைய வென்றி நாள் கொண்டாட;* ***குறித்து ஒளிர் முளைகள் அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன*** - *எண்ணி வெண்மையாக ஒளிரும் முளைகளைக் கொண்ட பாலிகைகள் வரிசையாக வைக்கப்பட்டதை நிகர்த்தன.*

***7491. எரிந்த வெங் கணை நெற்றியில் படுதொறும், யானை,***
***அரிந்த அங்குசத்து அங்கையின் கல்வியின் அமைவால்,***
***திரிந்த வேகத்த, பாகர்கள் தீர்ந்தன, செருவில்***
***புரிந்த வானரத் தானையில் புக்கன, புயலின்,***

***எரிந்த வெங்கணை நெற்றியில் படுதொறும்*** - *இலக்குவனது எரியும் தன்மையுள்ள கொடிய கணைகள் நெற்றியில் படுந்தோறும்; யானை யானைகள்;* ***அரிந்த அங்குசத்து*** - *கூர்மையாக அரியப்பட்ட அங்குசத்தை;* ***அங்கையின்*** - *கொண்ட அழகிய கைகளோடு;* ***கல்வியின் அமைவால்*** - *பாகன் கற்றுத் தந்த போர்க் கல்வியின் தன்மையால்;* ***திரிந்த வேகத்த*** - *திரிந்த வேகத்தையுடையனவாய்;* ***பாகர்கள் தீர்ந்தன*** - *செலுத்துகின்ற பாகர்களையும் இழந்தனவாய்;* ***புயலின்*** - *புயல் போல;* ***செருவில் புரிந்த வானரத் தானையில் புக்கன*** - *போர்க்களத்தில் விருப்பம் கொண்ட வானரப் படையின் இடையில் புகுந்தன.*

*இலக்குவன் அம்புகள் நெற்றியில் பட்ட யானைகள் பாகரையிழந்தும் அவர்கள் கற்பித்த போர்த் தொழிற் கல்வியால் வானரப் படையின் இடையில் புயல் போலப் புக்கன. பாகர்கள் அங்குசத்தால் குத்திச் செலுத்துவர். பாகர் இல்லாத யானைகள் இலக்குவன் அம்பு பட்டவுடன் அங்குசத்தால் குத்தப்படுவதாக நினைத்துத் தாமே போர்ச் செயலில் ஈடுபட்டன.*

***7492. வேனிலான் அன்ன இலக்குவன் கடுங் கணை விலக்க,***
***மான வெள் எயிற்று அரக்கர்தம் படைக்கல வாரி***
***போன போன வன் திசைதொறும் பொறிக் குலம் பொடிப்ப,***
***மீன் எலாம் உடன் விசும்பின்நின்று உதிர்ந்தென வீழ்ந்த.***

**வேனிலான் அன்ன இலக்குவன்** - *மன்மதனை ஒத்த இலக்குவனுடைய;* **கடுங்கணை விலக்க** - *கொடிய அம்புகள் விலக்கியதனால்;* **மான வெள் எயிற்று அரக்கர்தம்** -*மானமிகு வெள்ளிய பற்களையுடைய அரக்கர்கள் வீசிய;* **படைக்கல வாரி** -*படைக்கலங்களாகிய கடல்கள்;* **போன போன வன்திசை தொறும்** - *சென்ற சென்ற வலிமையான திசைகளில் எல்லாம்;* **பொறிக்குலம் பொடிப்ப** - *தீப்பொறித் திரள் தோன்ற;* **மீன் எலாம் உடன்** - *விண்மீன்கள் எல்லாம் ஒருசேர;* **விசும்பின் நின்று** - *ஆகாயத்தில் இருந்து;* **உதிர்ந்தென வீழ்ந்த** -*உதிர்ந்தாற் போன்று வீழ்ந்தன.*

*7493.* ***கரம் குடைந்தன, தொடர்ந்து போய்க் கொய்***
***உளைக் கடு மாக்***
***குரம் குடைந்தன, வெரிநுறக் கொடி நெடுங்***
***கொற்றத்***
***தரம் குடைந்தன, அணி நெடுந் தேர்க் குலம்***
***குடைந்த,__***
***அரம் குடைந்தன அயில் நெடு வாளிகள் அம்மா!***

**அரம் குடைந்தன அயில் நெடு வாளிகள்** - *அரத்தில் அராவப் பட்ட வாய்க் கூர்மையுள்ள நீண்ட அம்புகள்;* **கரம் குடைந்தன** - *இலக்குவன் கைகளால் வில்லில் பூட்டப் பெற்று;* **தொடர்ந்து போய்** - *வரிசையாகப் போய்;* **கொய் உளைக் கடுமாக்குரம் குடைந்தன வெரி நுற** - *கொய்யப்பட்ட பிடரிமயிரை உடைய விரைந்து செல்லும் குதிரைகளின் குளம்பினையும் முதுகினையும் துளைத்தனவாய்;* **கொடி நெடுங் கொற்றத் தரம் குடைந்தன** - *அக்குதிரை வீரர் கைக்கொண்டுள்ள கொடிகளின் வெற்றிச் சிறப்பையும் ஒழித்தன;* **அணி நெடுந் தேர்க்குலம் குடைந்த** - *அழகிய நீண்ட தேர்க்கூட்டங்களையும் ஒழித்திட்டன.*

*7494.* ***'துரக்கம், மெய்யுணர்வு இரு வினைகளை எனும்***
***சொல்லின்,***
***கரக்கும் வீரதை தீமையை' எனும் இது கண்டோம்;***
***இரக்கம் நீங்கினர், அறத்தொடும் திறம்பினர்எனினும்,***
***அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர்,***
***விரும்பி.***

**இரக்கம் நீங்கினர்** -*அரக்கர்கள் இரக்கம் நீங்கியவர்களாய்;* **அறத்தொடும் திறம்பினர் எனினும்** - *அறநெறி தவறியவர்கள் என்றாலும்;* **அரக்கர் ஆக்கையை** - *அரக்கர்களின் உடம்பினை;* **அரம்பையர் விரும்பித் தழுவினர்** - *அமர மகளிர் விரும்பித் தழுவினார்கள் இதனால்;* **மெய்யுணர்வு இருவினைகளைத் துரக்கும் எனும் சொல்லின்** - *தத்துவ ஞானம் இருவினைகளையும் நீக்கும் என்னும் சொல்லைப் பிரமாணத்தால் கண்டது*

*போல;* ***வீரதை தீமையைக் கரக்கும் எனும் இது கண்டோம்*** *- வீரப் பண்பானது பாவத்தைப் போக்கும் என்பதையும் கண்டோம்.*

*ஞானம் இருவினைகளை நீக்குதல் போல வீரம் பாவத்தை நீக்கியதை இரக்கமில் அரக்கர் உடம்பை அரம்பையர் தழுவியது கொண்டு உணர்க. வீரதை, வீரம் மெய்யுணர்வு இருவினைகளை ஒழித்தல் உரை அளவை (ஆப்தவாக்கியப் பிரமாணம்) வீரப் பண்பு பாவத்தைப் போக்கும் என்பது காட்சி அளவை (பிரத்தியட்சப் பிரமாணம்) என்க.*

***7495. மறக் கொடுந் தொழில் அரக்கர்கள், மறுக்கிலா மழைபோல்***
***நிறக் கொடுங் கணை நெருப்பொடு நிகர்வன நிமிர,***
***இறக்கம் எய்தினர் யாவரும், எய்தினர் எனின், அத்***
***துறக்கம் என்பதின் பெரியது ஒன்று உளது எனச் சொல்லேம்.***

***மறக் கொடுந்தொழில் அரக்கர்கள்*** *- பாவத்தோடு சேர்ந்த கொடுமையான தொழிலைச் செய்யும் அரக்கர்கள்;* ***மறுக்கிலா மழை போல்*** *- விலக்க முடியாத மழையைப் போல;* ***நெருப்பொடு நிகர்வன*** *- நெருப்பைப் போன்ற;* ***நிறக்கொடுங்கணை*** *- இலக்குவனுடைய கொடிய அம்புகள்;* ***நிமிர*** *- உயர்ந்து ஓங்கிப் பட்டதனால்;* ***இறக்கம் எய்தினர் யாவரும்*** *- இறந்தவர்கள் யாவரும்;* ***துறக்கம் எய்தினர் எனின்*** *- வீர சுவர்க்கம் அடைந்தார்கள் என்றால்;* ***அத்துறக்கம் என்பதின் பெரியது ஒன்று உளது எனச் சொல்லேம்*** *- அச்சுவர்க்கத்தைக் காட்டிலும் பெரிய உலகம் வேறு ஒன்று உண்டு என்று சொல்லத்துணியோம்.*

*துறக்கம் ஈரிடத்தும் கூட்டுக. பாவம் செய்தவர்களுக்கும் வீர சுவர்க்க இன்பத்தைத் தருதலால் அச்சுவர்க்கத்திலும் பெருமை பெற்றது வேறு உண்டு என்று கூற முடியாது என்றார். இவ்வளவு அரக்கர்களும் வீரசுவர்க்கம் பெற்றார்கள். எனின் அந்த சுவர்க்கம் பெரிய உலகமாக இருக்க வேண்டும்.*

***7496. ஒருவரைக் கரம், ஒருவரைச் சிரம், மற்று அங்கு ஒருவர்***
***குரை கழல் துணை, தோள் இணை, பிற மற்றும் கொளலால்,***
***விரவலர்ப் பெறா வெறுமைய ஆயின; வெவ்வேறு***
***இரவு கற்றன போன்றன--இலக்குவன் பகழி.***

***வெவ்வேறு இரவு கற்றன போன்றன*** *- வெவ்வேறு வகையாகப் பொருளை இரத்தல் தொழிலைக் கற்றன போன்றவாகிய;* ***இலக்குவன் பகழி*** *- இலக்குவன்*

*அம்புகள்; **ஒருவரைக் கரம்** - ஒருவரது கையையும்; **ஒருவரைச் சிரம்** - ஒருவரது தலையையும்; **மற்று அங்கு ஒருவர்** -பின்னும் ஒருவரது; **குரை கழல் துணை** -வீரக்கழல் அணிந்த இரு பாதங்கள்; **தோள் இணை** - ஒருவரது இரு தோள்கள்; **மற்றும் பிற கொளலால்** - மற்றுக் கிடைக்கும் பிறவற்றையும்; **கொளலால்** - கொண்டு விட்டதால்; **விரவலர் பெறா வெறுமைய ஆயின** - பகைவர் இல்லாமல் வறுமை அடைந்தனவாயின.*

*இலக்குவன் அம்புகள் அரக்கர்களின் உறுப்புகளை அறுத்து அழிப்பது பல்வேறு வகையில் இரத்தல் தொழிலைக் கற்பது போன்று இருந்தது. அவை பகைவரை முற்றும் அழித்துத் திரிந்தது. அம்புகளுக்கு அழிந்து பட அரக்கர் இல்லை. இரப்பார்க்கு ஈவார் இல்லாத தன்மையை ஒத்து இருந்தது போர்க்களம்.*

***7497. சிலவரைக் கரம், சிலவரைச் செவி, சிலர் நாசி,***
***சிலவரைக் கழல், சிலவரைக் கண், கொளும்***
***செயலால்,***
***நில வரைத் தரு பொருள்வழித் தண் தமிழ் நிரப்பும்***
***புலவர் சொல் துறை புரிந்தவும் போன்றன--சரங்கள்.***

*   **சரங்கள்** - இலக்குவன் அம்புகள்; **சிலவரைக் கரம்** - சிலரது கைகளையும்; **சிலவரைச் செவி** - சிலரது காதுகளையும்; **சிலர்நாசி** - சிலரது மூக்கையும்; **சிலவரைக் கண்** - சிலரது கண்; **கொளும் செயலால்** - கொள்ளுகின்ற தன்மையால்; **நிலவரை** - நிலத்தில்; **தரு பொருள் வழி** - கொடுக்கின்ற பொருளுக்கேற்ப; **தண் தமிழ் நிரப்பும்** - தண் தமிழ்ச் செய்யுளைப் பாடுகின்ற; **புலவர் சொல் துறை புரிந்தவும் போன்றன** - புலவர்களின் சொல் துறையை விரும்பியவற்றை ஒத்திருந்தன.*

*செல்வர் இடத்துப் பொன் பெற்றுத் தமிழ் பாடும் புலவர் அவர் தந்த பொருளுக்கு ஏற்பப் பாடி நிரப்பும் தன்மை போல இலக்குவன் அம்புகள் கிடைத்த அளவுக்கு ஏற்பத் தமக்குரிய அறுத்தல் தொழிலைச் செய்தன என்க.*

***7498. அறத்தின் இன் உயிர் அனையவன் கணை பட,***
***அரக்கர்,***
***'இறத்தும், இங்கு இறை நிற்பின்' என்று இரியலின்***
***மயங்கி,***
***திறத்திறம் படத் திசைதொறும் திசைதொறும் சிந்திப்***
***புறத்தின் ஓடினர், ஓடின குருதியே போல.***

***அறத்தின் இன் உயிர் அனையவன்** - அறத்திற்கு இனிய உயிரை ஒத்தவனாகிய இலக்குவனது; **கணைபட** - அம்புகள் படுவதால்; **அரக்கர்** - அரக்கர்கள்; **இங்கு இறை***

***நிற்பின் இறத்தும் என்று*** *-இங்கு ஒரு நொடிப்பொழுது நிற்பினும் இறந்து விடுவோம் என்று;* ***மயங்கி*** *- நிலை கெட்டு;* ***ஓடின குருதியே போல*** *- களத்தில் ஓடிய இரத்த வெள்ளம் போல;* ***திறத்திறம் பட*** *- கூட்டம் கூட்டமாக;* ***திசை தொறும் திசை தொறும்*** *- நாலா திசைகளிலும்;* ***இரியலின் சிந்திப் புறத்தின் ஓடினர்*** *- ஓடிச் சிதறுண்டு வெளியே ஓடலாயினர்.*

*இலக்குவன் வில் ஆண்மையைக் கும்பகருணன் வியத்தல்*

***7499. செருவில் மாண்டவர் பெருமையும். இலக்குவன் செய்த***
***வரி வில் ஆண்மையும், நோக்கிய புலத்தியன் மருமான்,***
***'திரிபுரஞ் செற்ற தேவனும் இவனுமே செருவின்***
***ஒரு விலாளர்' என்று ஆயிரம் கால் எடுத்து உரைத்தான்.***

***செருவில் மாண்டவர் பெருமையும்*** *- போர்க் களத்தில் இறந்தவர்களது மிகுதியையும்;* ***இலக்குவன் செய்த வரிவில் ஆண்மையும்*** *- இலக்குவன் போரில் செய்த கட்டமைந்த வில்லாண்மையையும்;* ***நோக்கிய*** *- கண்ணால் கண்ட;* ***புலத்தியன் மருமான்*** *- புலத்தியனது வழித் தோன்றலாகிய கும்பகருணன்;* ***திரிபுரஞ் செற்ற தேவனும்*** *- முப்புரங்களையும் அழித்த சிவபிரானும்;* ***இவனுமே செருவின் ஒருவிலாளர் என்று*** *- போரில் ஒப்பற்ற வில்லாளர் என்று;* ***ஆயிரம் கால் எடுத்து உரைத்தான்*** *- பலமுறை எடுத்துக் கூறினான்.*

*இதனால் கும்பகருணனின் மாற்றான் வலியறிந்து பாராட்டும் இயல்பு கூறியவாறு.*

***7500. படர் நெடுந் தடந் தட்டிடைத் திசைதொறும் பாகர்***
***கடவுகின்றது, காற்றினும் மனத்தினும் கடியது,***
***அடல் வயங் கொள் வெஞ் சீயம் நின்று ஆர்க்கின்றது, அம் பொன்***
***வட பெருங் கிரி பொருவு தேர் ஓட்டினன் வந்தான்.***

***படர் நெடுந் தடந்தட்டிடைப் பாகர்*** *- பரவி ஓங்கி அகன்ற தேர்த் தட்டில் அமர்ந்துள்ள பாகரால்;* ***திசை தொறும் கடவுகின்றது*** *- திசையெல்லாம் செலுத்தப்படுவதும்;* ***காற்றினும் மனத்தினும் கடியது*** *- காற்று மனம் ஆகியவற்றைக் காட்டிலும் வேகமானதும்;* ***அடல் வயம் கொள் வெஞ்சீயம் நின்று ஆர்க்கின்றது*** *-வலிய வெற்றி பொருந்திய தேரில் பூட்டப்பெற்ற சிங்கங்கள் இடைவிடாமல் ஒலிக்கப்பெற்றதும்; அம்பொன் வடபெருங்கிரி பொருவு தேர்- அழகிய பொன்மயமான*

*வடமேருமலையை ஒத்த தேரினை;* ***ஓட்டினன் வந்தான்*** *- கும்பகருணன் ஓட்டியவனாய் வந்தான்.*

*அனுமன் தோள் மீது இலக்குவன் ஏறிச் சென்று பொருதல்*

***7501. தொளை கொள் வான் நுகச் சுடர் நெடுந் தேர் மிசைத் தோன்றி,***
***வளை கொள் வெள் எயிற்று அரக்கன் வெஞ் செருத் தொழில் மலைய,***
***'கிளை கொளாது, இகல்' என்று எண்ணி, மாருதி கிடைத்தான்,***
***'இளைய வள்ளலே! ஏறுதி தோள்மிசை' என்றான்.***

***வளை கொள் வெள் எயிற்று அரக்கன்*** *- வளைதலைக் கொண்ட வெள்ளிய பற்களை உடைய கும்பகருணன்;* ***தொளை கொள்வான் நுகச் சுடர் நெடுந்தேர் மிசைத் தோன்றி*** *- தொளையில் பூட்டப்பட்ட பெரிய நுகத்தடியை உடைய ஒளி பொருந்திய பெரிய தேரில் ஏறி;* ***வெஞ்செருத் தொழில் மலைய*** *- கொடிய போர்த்தொழில் செய்கையில்;* ***இகல்கிளை கொளாது*** *- தரையில் இருந்து இலக்குவன் செய்யும் போர் மேம்பாடு அடையாது;* ***என்று எண்ணி*** *- என்று கருதி;* ***மாருதி கிடைத்தான்*** *- அனுமன் இலக்குவனை நெருங்கி;* ***இளைய வள்ளலே*** *- இளைய பெருமானே;* ***தோள் மிசை ஏறுதி என்றான்*** *- என் தோள் மீது ஏறிக் கொள்க என்றான்.*

*முதற்போர் புரி படலத்தில் இராவணன் தேரில் வர இராமனை அனுமன் தன் தோள் மேல் ஏறும்படிக் கேட்டுக் கொள்ளும் சமயத்தில் "சீரில் செல்கின்றது இல்லை இச்செரு (7232) என்பதை இதனுடன் ஒப்பிடுக.*

***7502. ஏறினான், இளங் கோளரி; இமையவர் ஆசி***
***கூறினார்; எடுத்து ஆர்த்தது, வானரக் குழுவும்;***
***நூறு பத்துடைப் பத்தியின் நொறில் பரி பூண்ட***
***ஆறு தேரினும் அகன்றது, அவ் அனுமன்தன் தடந்***
***தோள்.***

***இளங்கோளரி ஏறினான்*** *- அனுமன் தோளில் இளஞ்சிங்கம் போன்ற இலக்குவன் ஏறினான்;* ***இமையவர் ஆசி கூறினார்*** *- இமையவர்கள் ஆசி கூறினார்கள்;* ***வானரக் குழுவும் எடுத்து ஆர்த்தது*** *- குரங்குக் கூட்டங்களும் பெருங் குரல் எடுத்து ஆரவாரம் செய்தன;* ***நூறு பத்துடை*** *- ஆயிரம்;* ***பத்தியின் நொறில் பரிபூண்ட*** *- வரிசையாக விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டப்பெற்ற;* ***ஆறு தேரினும்*** *- கும்பகருணனது ஆறு தேர்களைக் காட்டிலும்;* ***அவ் அனுமன் தன் தடந்தோள் அகன்றது*** *- அந்த அனுமனது பெரிய தோள்கள் அகன்றன.*

*7503.* ***தன்னின் நேர் பிறர் தான் அலாது இல்லவன் தோள்மேல்,***
***துன்னு பேர் ஒளி இலக்குவன் தோன்றிய தோற்றம்,***
***பொன்னின் மால் வரை வெள்ளி மால் வரை மிசைப் பொலிந்தது***
***என்னுமாறு அன்றி, பிறிது எடுத்து இயம்புவது யாதோ?***

***தன்னின் நேர் பிறர் தான் அலாது இல்லவன்*** - *தனக்கு ஒப்புத் தானேயன்றிப் பிறர் இல்லாதவனாகிய அனுமன்;* ***தோள் மீது*** -*தோளின் மீது;* ***துன்னு பேர் ஒளி இலக்குவன்*** - *நெருங்கிய பேரொளி உடைய இலக்குவன்;* ***தோன்றிய தோற்றம்*** -*தோன்றிய தோற்றமானது;* ***பொன்னின் மால்வரை*** - *பொன் மயமான மேரு மலை;* ***வெள்ளி மால் வரை*** - *வெள்ளி மயமான பெரிய கைலாய மலையின்;* ***மிசைப் பொலிந்தது*** - *மேல் விளங்கிற்று;* ***என்னுமாறு அன்றி*** - *என்று கூறுமாறு அன்றி;* ***பிறிது எடுத்து இயம்புவது யாதோ*** - *வேறு ஒன்றை உவமையாக எடுத்துச் சொல்ல யாது உளது.*

*7504.* ***ஆங்கு, வீரனோடு அமர் செய்வான் அமைந்த வாள் அரக்கன்,***
***தாங்கு பல் கணைப் புட்டிலும் தகை பெறக் கட்டி,***
***வீங்கு தோள் வலிக்கு ஏயது, விசம்பில் வில் வெள்க,***
***வாங்கினான், நெடு வடவரை புரைவது ஓர் வரி***

***வில்.*** ***ஆங்கு*** - *அப்போது;* ***வீரனோடு*** - *வீரன் ஆகிய இலக்குவனுடன்;* ***அமர் செய்வான் அமைந்த*** - *போர் செய்வான் பொருட்டு;* ***வாள் அரக்கன்*** - *கொடிய கும்பகருணன்;* ***பல்கணைத் தாங்கு புட்டிலும்*** - *பலகணைகளைத் தாங்கின அம்பு அறாத்தூணியையும்;* ***தகை பெறக்கட்டி*** - *அழகு பெறக் கட்டி;* ***வீங்கு தோள் வலிக்கு ஏயது*** - *பருத்த தன் தோள் வலிமைக்கு ஏற்றதும்;* ***நெடுவட வரை புரைவது*** - *பெரிய மேரு மலையை ஒத்ததும் ஆன;* ***ஓர் வரிவில்*** - *ஒப்பற்ற கட்டமைந்த வில்லினை;* ***விசும்பில் வில் வெள்க வாங்கினான்*** - *ஆகாயத்தில் உள்ள வானவில்லும் வெட்கம் கொள்ளும் படி வளைத்தான்.*

*கும்பகருணன் வீரவார்த்தையும் இலக்குவன் மறுமொழியும்*

*7505.* ***'இராமன் தம்பி நீ; இராவணன் தம்பி நான்; இருவேம்***
***பொராநின்றேம்; இது காணிய வந்தனர், புலவோர்;***

***பராவும் தொல் செரு முறை வலிக்கு உரியன***
***பகர்ந்து,***
***விராவு நல் அமர் விளைக்குதும், யாம்' என***
***விளம்பா,***

***நீ இராமன் தம்பி*** - நீ இராமனுக்குத் தம்பி; ***நான் இராவணன் தம்பி*** - நான் இராவணனுக்குத் தம்பி; ***இருவேம் பொரா நின்றேம்*** - இருவரும் இப்பொழுது போர் செய்ய நின்றோம்; ***இது காணிய வந்தனர் புலவோர்*** - இப்போர்த் தொழிலைக் காண்பதற்காகத் தேவர்கள் வந்துள்ளனர்; ***பராவும், தொல் செருமுறை வலிக்கு*** - வழிபடுவதற்கு உரிய பழைமையான போர் முறை வலிக்கு; ***உரியன*** - உரியவற்றை; ***பகர்ந்து*** - சொல்லி; ***விராவு நல் அமர் விளைக்குதும்*** - பொருந்திய சிறந்த போரைச் செய்வோம்; ***யாம் என விளம்பா*** - நாம் என்று சொல்லி.

*புலவோர்-தேவர்கள், தொல் செருமுறை வலிக்கு உரியன- வஞ்சினம். மாயப் போரல்லாத போர் நல்அமர் என்க.*

***7506. 'பெய் தவத்தினோர் பெண்கொடி, எம்முடன்***
***பிறந்தாள்,***
***செய்த குற்றம் ஒன்று இல்லவள், நாசி வெஞ்***
***சினத்தால் கொய்த கொற்றவ! மற்று அவள் கூந்தல் தொட்டு***
***ஈர்த்த***
***கை தலத்திடைக் கிடத்துவென்; காக்குதி' என்றான்.***

***பெய்தவத்தினோர் பெண் கொடி*** - எங்களிடம் தங்கிய நல்வினைத் தவத்தால் ஒப்பற்ற கொடி போன்ற பெண் ஒருத்தி; ***எம்முடன் பிறந்தாள்*** - எங்களுடன் பிறந்தாள்; ***செய்த குற்றம் ஒன்று இல்*** - அவள் செய்த குற்றம் ஒன்றும் இல்லை; ***அவள் நாசி வெஞ்சினத்தால் கொய்த கொற்றவ*** - அவ்வாறு இருப்பினும் அவளது மூக்கைக் கொடிய சீற்றத்தால் அரிந்த வெற்றிக்குரியவனே; ***மற்று அவள் கூந்தல் தொட்டு ஈர்த்த*** - அவளது கூந்தலைத் தொட்டு இழுத்த; ***கை தலத்திடைக் கிடத்துவென்*** - கையை நிலத்தில் விழச் செய்யப் போகிறேன்; ***காக்குதி என்றான்*** - காத்துக்கொள் என்றான் கும்பகருணன்.

*இலக்குவனைப் பார்த்தவுடன் அவன் தன் தங்கைக்குச் செய்த கொடுமை நினைவுக்கு வரலால் அதையே கூறினான் என்க. உரிமையற்ற ஆடவர் பெண்டிர் கூந்தல் பற்றி இழுத்தமை இழிசெயல் என்றவாறு. கொற்றவ-இகழ்ச்சிக் குறிப்பு. சூர்ப்பனகையின் காமம் அரக்கர்க்கு இயல்பு ஆதலின் 'செய்த குற்றம் ஒன்று இல்' என்றானாம்.*

*7507.* ***அல்லினால் செய்த நிறத்தவன் அனையது பகர,***
***மல்லினால் செய்த புயத்தவன், 'மாற்றங்கள் நும்பால்***
***வில்லினால் சொல்லின் அல்லது, வெந் திறல்***
***வெள்கச்***
***சொல்லினால் சொலக் கற்றிலம், யாம்' எனச்***
***சொன்னான்.***

***அல்லினால் செய்த நிறத்தவன்*** - *இருட்டினால் செய்தது போன்ற கருநிறத்தை உடைய கும்பகருணன்;* ***அனையது பகர*** - *அவ்வாறாகச் சொற்களைச் சொல்ல;* ***மல்லினால் செய்த புயத்தவன்*** - *வலிமைப் பண்பால் செய்யப்பட்ட தோளை உடைய இலக்குவன்;* ***நும்பால் மாற்றங்கள்*** - *நும்மிடம் மறுமொழிகளை;* ***வில்லினால் சொல்லின் அல்லது*** - *வில்லினால் சொல்வது அல்லது;* ***வெந்திறல் வெள்க*** *-கொடிய வலிமைக்கு நாணம் உண்டாக;* ***யாம் சொல்லினால் சொலக் கற்றிலம்*** *- யாம் சொல்லினால் சொல்வதற்குக் கற்கவில்லை;* ***எனச் சொன்னான்*** *- என்று கூறினான்.*

*இருவரும் செய்த பெரும் போர்*

*7508.* ***'விண் இரண்டு கூறு ஆயது; பிளந்தது வெற்பு;***
***மண் இரண்டு உறக் கிழிந்தது' என்று இமையவர்***
***மறுக,***
***கண் இரண்டினும் தீ உக, கதிர் முகப் பகழி***
***எண்-இரண்டினோடு இரண்டு ஒரு தொடை***

***தொடுத்து எய்தான்.***

***கண் இரண்டினும் தீ உக*** *- கும்பகருணன் தன் கண்ணிரண்டில் இருந்து தீ வெளிப்பட;* ***விண் இரண்டு கூறு ஆயது*** *- ஆகாயம் இரண்டு பகுதியாகப் பிளவுபட்டது;* ***வெற்பு பிளந்தது*** *-மலை பிளந்தது;* ***மண் இரண்டு உறக் கிழிந்தது*** *- மண் இரண்டாகக் கிழிந்தது;* ***என்று இமையவர் மறுக*** *- என்று கருதித் தேவர்கள் கலங்கும்படி;* ***கதிர் முகப்பகழி*** *- ஒளி விடுகின்ற முனையையுடைய அம்புகள்;* ***எண் இரண்டினோடு இரண்டு*** *- பதினெட்டினை,* ***ஒரு தொடை தொடுத்து எய்தான்*** *- ஒரு தொடுப்பில் தொடுத்து விட்டான்.*

*7509.* ***கொம்பு நாலுடைக் குலக் கரிக் கும்பத்தில் குளித்த,***
***உம்பர் ஆற்றலை ஒதுக்கிய, உரும் எனச் செல்வ,***
***வெம்பு வெஞ் சினத்து இராவணற்கு இளையவன்***
***விட்ட***

***அம்பு பத்தினோடு எட்டையும் நான்கினால்***

***அறுத்தான்.*** **வெம்பு வெஞ்சினத்து இராவணற்கு இளையவன்** *-வெம்புகிற கொடிய சினத்தை உடைய இராவணனது தம்பி;* **விட்ட** *- செலுத்திய;* **கொம்பு நாலுடைக் குலக் கரிக்கும்பத்தில் குளித்த** *- நான்கு தந்தங்களை உடைய ஐராவதம் என்னும் யானையின் மத்தகத்தில் பாய்ந்தனவும்;* **உம்பர் ஆற்றலை ஒதுக்கிய** *- தேவர்களின் வலிமையைப் போக்கியனவும்;* **உரும் எனச் செல்வ** *- இடிபோல் செல்வனவும் ஆகிய;* **அம்பு பத்தினோடு எட்டையும்** *- பதினெட்டு அம்புகளையும்;* **நான்கினால் அறுத்தான்** *- இலக்குவன் நான்கு அம்புகளினால் தடுத்து அறுத்திட்டான். கும்பகருணன் விடுத்த பதினெட்டு அம்புகளை இலக்குவன் நான்கு அம்புகளால் அழித்தான் என்க.*

***7510. அறுத்த காலையின், அரக்கனும் அமரரை நெடு நாள்***
***ஒறுத்தது, ஆயிரம் உருவது, திசைமுகன் உதவப்***
***பொறுத்தது, ஆங்கு ஒரு புகர் முகக் கடுங் கணைப் புத்தேள்,***
***'இறுத்து மாற்று, இது வல்லையேல்' என்று, கோத்து, எய்தான்.***

**அறுத்த காலையின்** *- இலக்குவன் தன் அம்புகளை அறுத்த பொழுது;* **அரக்கனும்** *- கும்பகருணனும்;* **அமரரை நெடுநாள் ஒறுத்தது** *- தேவர்களை நெடுநாள் அடக்கித் தண்டித்ததும்;* **ஆயிரம் உருவது** *- ஆயிரம் உருவத்தை உடையதும்;* **திசைமுகன் உதவப் பொறுத்தது** *- நான்முகன் உதவப் பெற்று வைத்துக் கொண்டிருப்பதுமான;* **ஆங்கு ஒரு புகர் முகக் கடுங்கணை** *- அப்போது ஒளிவிடும் முகத்தை உடைய அம்பில்;* **புத்தேள் இறுத்து** *- தெய்வத்தைத் தங்கச் செய்து;* **இது வல்லையேல் மாற்று என்று** *- இதனை வலிமை உடையையாயின் மாற்றுவாய் என்று;* **கோத்து எய்தான்** *- அம்பில் கோய்த்து எய்தான்.*

*இவ்விரு பாடலும் அந்தாதித் தொடை புத்தேள் இறுத்து- மந்திரம் கூறி அம்பில் தெய்வத்தை நிறுத்துதல். பொறுத்தல்- தாங்கப் பெற்றது. புத்தேள்-தெய்வம்.*

***7511. புரிந்து நோக்கிய திசைதொறும், பகழியின் புயலால்,***
***எரிந்து செல்வதை நோக்கிய இராமனுக்கு இளையான்,***
***தெரிந்து, மற்ற அதுதன்னை ஓர் தெய்வ வெங் கணையால்***
***அரிந்து வீழ்த்தலும், ஆயிரம் உருச் சரம் அற்ற.****

***புரிந்து நோக்கிய திசைதொறும்*** - *கண்ணால் விரும்பிப் பார்க்கும் திசையெங்கும்;* ***பகழியின் புயலால்*** - *அம்புகளின் வேகத்தால்;* ***எரிந்து செல்வதை நோக்கிய*** -*எரிந்து போவதைக் கண்ட;* ***இராமனுக்கு இளையான்*** - *இராமன் தம்பியாகிய இலக்குவன்;* ***மற்ற அது தன்னை*** - *அதனை;* ***தெரிந்து ஓர் தெய்வ வெங்கணையால்*** - *ஆராய்ந்து ஒப்பற்ற தெய்வக் கணை ஒன்றால்;* ***அரிந்து வீழ்த்தலும்*** - *அறுத்து வீழ்த்திய அளவில்;* ***ஆயிரம் உருச்சரம் அற்ற*** - *ஆயிரம் உருவம் கொண்ட அக்கணை அழிந்தது.*

*அது ஆயிர உருவக் கணை என்பது இதனால் புலனாகிறது.*

***7512. ஆறு-இரண்டு வெங் கடுங் கணை அனுமன்மேல் அழுத்தி,***
***ஏறு வெஞ் சரம் இரண்டு இளங் குமரன்மேல் ஏற்றி,***
***நூறும் ஐம்பதும் ஒரு தொடை தொடுத்து, ஒரு நொடியில்,***
***கூறு திக்கையும் விசும்பையும் மறைத்தனன், கொடியோன்.***

***வெங்கடுங்கணை*** - *கொடிய வேகமான அம்புகள்;* ***ஆறு இரண்டு*** - *பன்னிரண்டினை;* ***அனுமன் மேல் அழுத்தி*** - *அனுமன் மேல் பதியுமாறு செலுத்தி;* ***ஏறு வெஞ்சரம் இரண்டு*** - *பாய்கிற கொடிய அம்புகள் இரண்டினை;* ***இளங்குமரன் மேல் ஏற்றி*** - *இலக்குவன் மீது செலுத்தி;* ***ஒரு தொடை நூறும் ஐம்பதும் தொடுத்து*** - *ஒரு தொடுப்பினில் நூறும் ஐம்பதுமாக அம்புகளைத் தொடுத்து;* ***கொடியோன்*** - *கொடிய கும்பகருணன்;* ***ஒரு நொடியில்*** - *ஒரு நொடிப் பொழுதில்;* ***கூறுதிக்கையும்*** - *கூறாகப்பட்டுள்ள திசைகளையும்;* ***விசும்பையும் மறைத்தனன்*** - *ஆகாயத்தையும் மறைத்தான்.*

*நூறும் ஐம்பதுமாகக் கணை செலுத்தி திக்கையும் விசும்பையும் மறைத்தனன் கும்பகருணன் என்க. ஏறு- பாய்கிற.*

***7513. மறைத்த வாளிகள் எவற்றையும், அவற்றினால் மாற்றி,***
***துறைத் தலம்தொறும் தலம்தொறும் நின்று தேர் சுமக்கும்***
***பொறைக்கு அமைந்த வெங் கரி, பரி, யாளி, மாப் பூதம்,***
***திறத் திறம் படத் துணித்து, அவன் தேரையும்

***சிதைத்தான்.***

***மறைத்த வாளிகள் எவற்றையும்*** - *இலக்குவன் திசை, மற்றும் விசும்பு ஆகியவற்றை மறைத்த அம்புகள் எல்லாவற்றையும்;* ***அவற்றினால் மாற்றி*** - *அவ்வவற்றை அழிக்கும் திறனுள்ள அம்புகளால் போக்கி;* ***துறைத்தலந் தொறும் தலந்தொறும் நின்று*** - *பூட்டுவதற்கு உரிய இடங்கள் தோறும் இடங்கள் தோறும் நின்று;* ***தேர் சுமக்கும் பொறைக்கு அமைந்த*** - *தேரைச் சுமக்கிற சுமத்தல் தொழிலுக்கு உரிய;* ***வெங்கரி*** - *கொடிய யானை;* ***பரி*** - *குதிரை;* ***யாளி*** - *யாளி;* ***மாப்பூதம்*** - *பெரிய பூதம்;* ***திறத்திறம் படத் துணிந்து*** - *ஆகியவற்றை திரள் திரளாக அழித்து;* ***அவன் தேரையும் சிதைத்தான்*** - *அக்கும்பகருணனது தேரையும் அழித்தான்.*

***7514. தேர் அழிந்தது, செங் கதிர்ச் செல்வனைச் சூழ்ந்த***
***ஊர் அழிந்ததுபோல்; துரந்து ஊர்பவர் உலந்தார்;***
***நீர் அழிந்திடா நெடு மழைக் குழாத்திடை நிமிர்ந்த***
***பார வெஞ் சிலை அழிந்தெனத் துமிந்தது,***
***அப் பரு வில்***

***செங்கதிர்ச் செல்வனைச்*** - *சிவந்த கிரணங்களை உடைய சூரியனைச்;* ***சூழ்ந்த ஊர் அழிந்தது போல்*** - *சூழ்ந்திருந்த பரிவேடம் அழிந்ததுபோல;* ***தேர் அழிந்தது*** - *கும்பகருணனது தேர் அழிந்தது;* ***துரந்து ஊர்பவர் உலந்தார்*** - *தேரைச் செலுத்தி நடத்தும் பாகர் அழிந்தனர்;* ***நீர் அழிந்திடா நெடு மழைக் குழாத்திடை*** - *நீர் நீங்கப் பெறாத மிகுதியான மேகக் கூட்டத்தின் இடையே;* ***நிமிர்ந்த பார வெஞ்சிலை அழிந்தென*** - *உயர்ந்து தோன்றிய பெருமை மிக்க விரும்பத்தகு வானவில் அழிந்தது போல;* ***அப்பருவில் துமிந்தது*** - *கும்பகருணனுடைய அந்தப் பெரிய வில் துண்டுபட்டது.*

***7515. செய்த போரினை நோக்கி, இத் தேரிடைச் சேர்ந்த***
***கொய் உளைக் கடுங் கோள் அரி முதலிய குழுவை***
***எய்து கொன்றனனோ?' நெடு மந்திரம் இயம்பி,***
***வைது கொன்றனனோ?' என, வானவர் மயர்ந்தார்.***

***செய்த போரினை நோக்கி*** - *இலக்குவன் செய்த போரினைப் பார்த்து;* ***இத்தேரிடைச் சேர்ந்த*** - *க்கும்பகருணனது தேரில் பூட்டப் பெற்ற;* ***கொய் உளை*** - *வெட்டப்பட்ட பிடரி மயிரை உடைய குதிரை;* ***கடுங்கோள் அரி*** - *மற்றும் கொடிய சிங்கம்;* ***முதலிய குழுவை*** - *முதலியவற்றின் கூட்டத்தை;* ***எய்து கொன்றனனோ*** - *அம்பு எய்து கொன்றானோ;* ***நெடு மந்திரம் இயம்பி*** - *சிறந்த மந்திரத்தைச்*

*சொல்லி;* ***வைது கொன்றனனோ*** *- சாபமிட்டுக் கொன்றனனோ;* ***என*** *- என்று;* ***வானவர் மயர்ந்தார்*** *- தேவர்கள் மயங்கி நின்றார்கள்.*

*கும்பகருணனும் இலக்குவனும் தரையில் நின்று பொருதல்*

***7516. ஊன்று தேரொடு சிலை இலன், கடல் கிளர்ந்து ஒப்பான்,***
***'ஏன்று, மற்று இவன் இன் உயிர் குடிப்பென்' என்று, உலகம்***
***மூன்றும் வென்றமைக்கு இடு குறி என்ன முச் சிகைத்தாய்த்***
***தோன்றும் வெஞ் சுடர்ச் சூல வெங் கூற்றினைத் தொட்டான்.***

***ஊன்று தேரொடு சிலை இலன்*** *- ஏறிய தேரையும் வில்லையும் இழந்தவனான கும்பகருணன்;* ***கடல் கிளர்ந்து ஒப்பான்*** *- கடல் பொங்கினாற்போலச் சினந்து;* ***அவன் இன்னுயிர் குடிப்பென் என்று மற்று என்று*** *- அந்த இலக்குவன் உடைய இனிய உயிரைக் குடிப்பேன் எதிர்த்து நின்று என்று எண்ணி;* ***உலகம் மூன்றும் வென்றமைக்கு*** *- மூன்று உலகங்களையும் வென்றதற்கு;* ***இடுகுறி என்ன*** *- இட்ட அடையாளம் என்னுமாறு அமைந்த;* ***முச்சிகைத்தாய்த் தோன்றும்*** *- மூன்று கிளையை உடையதாய்த் தோன்றும்;* ***வெஞ்சுடர்ச் சூல வெங்கூற்றினைத் தொட்டான்*** *- கொடிய ஒளியுடைய சூலப் படையாகிய கொடிய கூற்றுவனைக் கையில் கொண்டான்.*

***7517. இழியப் பாய்ந்தனன், இரு நிலம் பிளந்து இரு கூறா,--***
***கிழியப் பாய் புனல் கிளர்ந்தெனக் கிளர் சினத்து அரக்கன்;***
***'பழி, அப்பால்; இவன் பதாதி' என்று, அனுமன்தன் படர் தோள்***
***ஒழியப் பார்மிசை இழிந்து சென்று, இளவலும் உற்றான்.***

***கிளர் சினத்து அரக்கன்*** *- பொங்கி எழுகின்ற சினத்தை உடைய கும்பகருணன்;* ***இருநிலம் பிளந்து இரு கூறா கிழியப் பாய்புனல் கிளர்ந்தென*** *- பெரிய நிலம் பிளந்து இரு பகுதியாகும்படி பாயுந்தன்மையுள்ள கடல் பொங்கியெழுந்தது போல்;* ***இழியப் பாய்ந்தனன்*** *- நிலத்தில் குதித்தான்;* ***இவன் பதாதி*** *- இவன் ஊர்தியின்றித் தரையில் நிற்பவன்;* ***அப்பால் பழி என்று*** *- ஆகையால் பின்பு பழி வரும் என்று;*

**இளவலும்** - இலக்குவனும்; **அனுமன் தன் படர் தோள் ஒழிய** - அனுமனுடைய பரவிய தோளைவிட்டு; **பார்மிசை இழந்து சென்று உற்றான்** - நிலத்தின் மீது இறங்கிப் போய்ப் போர் செய்யப் பொருந்தினான்.

*பதாதி-ஊர்தியின்றித் தரையில் நின்று போர் செய்பவன், இழிந்து-இறங்கி.*

***7518. உற்ற காலையின், இராவணன், தம்பி மாடு உதவ,***
***இற்ற தானையின் இரு மடி இகல் படை ஏவ,***
***முற்றி அன்னது, முழங்கு முந்நீர் என முடுகிச்***
***சுற்றி ஆர்த்தது, சுமித்திரை சிங்கத்தைத்***
***தொடர்ந்து.****

**உற்ற காலையின்** - இலக்குவன் கும்பகருணனுடன் தரையில் போரிடப் பொருந்திய பொழுது; **இராவணன் தம்பி மாடு உதவ** - இராவணன், தன் தம்பி பக்கம் உதவுவதற்காக; **இற்றதானையின் இருமடி** - அழிந்த சேனையினும் இருமடங்கு; **இகல்படை ஏவ** - போரிடும் படையை ஏவ; **அன்னது** - அந்தப் படை; **முழங்கு முந்நீர் என முடுகி** - ஒலிக்கின்ற கடல் போல் ஒலித்து; **சுமித்திரை சிங்கத்தைத் தொடர்ந்து** - சுமித்திரை பெற்ற சிங்கம் போன்ற இலக்குவனைத் தொடர்ந்து சென்று; **முற்றி சுற்றி ஆர்த்தது** - முற்றுகை இட்டுச் சுற்றி பேரொலி செய்தது.

***7519. இரிந்து வானவர் இரியலின், மயங்கினர் எவரும்;***
***சொரிந்த வெம் படை துணிந்திட, தடுப்ப அருந்***
***தொழிலால்***
***பரிந்த அண்ணலும், பரிவிலன் ஒரு புடை படர,***
***புரிந்த அந் நெடுஞ் சேனை அம் கருங் கடல்***
***புக்கான்.****

**இரிந்து** - நிலை கெட்டு; **வானவர் இரியலின்** - தேவர்கள் ஓடுதலினால்; **எவரும் மயங்கினர்** - எல்லோரும் தடுமாறினார்கள்; **சொரிந்த வெம்படை துணிந்திட** - மேலும் மேலும் வந்த படைகள் அற்று விழும்படி; **தடுப்ப அருந்தொழிலால்** - தடுப்பதற்கு அரிய போர்த் தொழிலால்; **பரிந்த அண்ணலும்** - விரைந்து சென்ற பெருமைக்கு உரிய இலக்குவனும்; **பரிவிலன்** - மன இரக்கம் இல்லாதவனாய்; **ஒரு புடை படர** - ஒரு பக்கமாய்ச் செல்ல; **புரிந்த** - போர் செய்ய விரும்பிய; **அந்நெடுஞ்சேனை** -அந்த பெரிய படையாகிய; **அம் கருங்கடல் புக்கான்** - அழகிய கருங்கடலுட் புகுந்தான்.

***7520. முருக்கின் நாள்மலர் முகை விரிந்தாலன முரண்***

***கண்***
***அரக்கர் செம் மயிர்க் கருந் தலை அடுக்கலின்***
***அணைகள்***
***பெருக்கினான்--பெருங் கனலிடைப் பெய்து பெய்து,***
***எருவை***
***உருக்கினால் அன்ன குருதி நீர் ஆறுகள் ஓட.****

***முருக்கின் நாள் மலர்*** - *முள் முருங்கையின் அன்று விரியும் தன்மை கொண்ட மலர்;* ***முகை விரிந்தாலன*** - *மொட்டு விரிந்தாற் போன்று;* ***முரண் கண் அரக்கர்*** - *மாறுபாடு கொண்ட கண்களை உடைய அரக்கரது;* ***செம்மயிர்க் கருந்தலை*** - *சிவந்த மயிரைக் கொண்ட கருந்தலையால் கட்டப்பட்ட;* ***அடுக்கலின் அணைகள்*** - *மலைகள் ஆகிய அணைகள் மூலமாக;* ***பெருக்கினான்*** - *வெள்ளப் பெருக்கினால்;* ***எருவை*** - *செம்பினைப்;* ***பெருங் கனலிடைப் பெய்து பெய்து*** - *மிகுதியான நெருப்பு இடையே பெய்து;* ***உருக்கினால் அன்ன*** -*உருக்கியது போன்ற;* ***குருதி நீர் ஆறுகள் ஓட*** - *இரத்த நீராலாகிய ஆறுகள் ஓட.*

*அரக்கர் தலையால் கட்டப்பட்ட அணைகள் மூலமாகச் செம்பை உருக்கினால் போன்ற குருதி நீரால் ஆகிய ஆறுகள் ஓட, தொடர் அடுத்த பாடலில் முடியும், முருக்கு-பலாசு. எருவை-செம்பு.*

*7521.* ***கரியின் கைகளும், புரவியின் கால்களும், காலின்***
***திரியும் தேர்களின் சில்லியும், அரக்கர்தம் சிரமும்,***
***சொரியும் சோரியின் துறைதொறும் துறைதொறும்***
***சுழிப்ப,***
***நெரியும் பல் பிணப் பெருங் கரை கடந்தில, நீத்தம்.****

***கரியின் கைகளும்*** - *யானைகளின் கைகளும்;* ***புரவியின் கால்களும்*** - *குதிரைகளின் கால்களும்;* ***காலின் திரியும் தேர்களின் சில்லியும்*** - *காற்றுப் போல் இயங்கும் தேர்களின் சக்கரங்களும்;* ***அரக்கர்தம் சிரமும்*** - *அரக்கர்களின் தலைகளும்;* ***சொரியும் சோரியின்*** - *அறுபட்ட உறுப்புக்களில் இருந்து பெருகுகின்ற குருதிகளும்;* ***துறைதொறும் துறைதொறும் சுழிப்ப*** - *இடந்தோறும் இடந்தோறும் சுழித்துக் கொண்டிருக்க;* ***நெரியும் பல்பிணப் பெருங்கரை*** - *நெருங்கிக் கிடக்கிற பல்பிணங்களால் ஆகிய பெருங்கரையைக்;* ***கடந்தில நீத்தம்*** - *கடந்து அப்பால் செல்லவில்லை வெள்ளம்.*

*7522.* ***கொற்ற வாள், எழு, தண்டு, வேல், மழு,***
***குலிசம்,***
***மற்றும் வேறு உள படைக்கலம், இலக்குவன் வாளி***

***சுற்றும் ஓடுவ தொடர்ந்து இடை துணித்திட,***
***தொகையாய்***
***அற்ற துண்டங்கள் படப் பட, துணிந்தன அனந்தம்.****

**கொற்றவாள்** - வெற்றி பொருந்திய வாள்; **எழு** - இரும்புலக்கை; **தண்டு** - கதை; **வேல்** - வேல்; **கோல்** - அம்பு; **மழு** - கோடரி; **குலிசம்** - வச்சிரப் படை; **மற்றும் வேறு உள படைக்கலம்** - மற்றும் வேறு உள்ள படைக்கருவிகளும் ஆயவற்றை; **இலக்குவன் வாளி** - இலக்குவனது அம்புகள்; **சுற்றும் ஓடுவ தொடர்ந்து** - சுற்றி ஓடிச் சென்று தொடர்ந்து; **இடை துணித்திட** - இடையே துண்டித்ததனால்; **தொகையாய் அற்ற துண்டங்கள்** - பெருந்தொகையாக முறிந்த துண்டுகள்; **படப்பட துணிந்தன அனந்தம்** - மேலே படுந்தோறும் துண்டமானவை மிகப்பல.

இலக்குவன் அம்பினால் துண்டாக்கப் பட்ட படைக்கலங்கள் பட்டதால் சேனைகளும் பிற படைக்கலங்களும் துண்டாயின என்றவாறு. அனந்தம்-மிகப்பல.

*7523.* ***குண்டலங்களும், மவுலியும், ஆரமும், கோவை,***
***தண்டை, தோள்வளை, கடகம் என்று இனையன,***
***தறுகண்***
***கண்ட கண்டங்களொடும் கணை துரந்தன, கதிர்***
***சூழ்***
***மண்டலங்களை மாறுகொண்டு இமைத்தன,***
***வானில்.****

**குண்டலங்களும்** - குண்டலங்களும்; **மவுலியும்** - திருமுடியும்; **ஆரமும்** - முத்தாரங்களும்; **கோவை** -மணிச்சரங்களும்; **தண்டை** - தண்டைகளும்; **தோள் வளை** - தோள் வளைகளும்; **கடகம்** - கடகங்களும்; **என்று இனையன** - என்ற இவ்வாறான அணிகலன்களை; **தறுகண் கணை** - இலக்குவன் எய்த வலிய அம்புகள்; **கண்ட கண்டங்களோடும் துரந்தன** - துண்டு துண்டுகள் ஆக்கி வேகமாகச் செலுத்தின அவை; **கதிர்சூழ்** - ஒளி சூழ்ந்த; **மண்டலங்களை** - சூரிய சந்திர நட்சத்திர மண்டலங்களோடு; **மாறு கொண்டு இமைந்தன வானில்** - மாறுபாடு கொண்டு ஒளியோடு வானில் விளங்கின.

*7524.* ***பரந்த வெண்குடை, சாமரை, நெடுங் கொடி,***
***பதாகை,***
***சரம் தரும் சிலை, கேடகம், பிச்சம், மொய் சரங்கள்***
***துரந்து செல்வன, குருதி நீர் ஆறுகள்தோறும்***
***நிரந்த பேய்க்கணம் கரைதொறும் குவித்தன. நீந்தி.****

***பரந்த வெண்குடை*** - *பெரிய வெள்ளிய குடையும்;* ***சாமரை*** - *வெண் சாமரையும்;* ***நெடுங்கொடி*** - *நீண்ட கொடியும்;* ***பதாகை*** - *பெருங்கொடியும்;* ***சரம்தரும் சிலை*** - *அம்புகளைச் செலுத்தும் வில்லும்;* ***கேடகம்*** - *கேடயமும்;* ***பிச்சம்*** - *பீலிக்குடையும்;* ***மொய்சரங்கள்*** - *நெருங்கிய அம்புகளும்;* ***குருதிநீர் ஆறுகள் தோறும்*** - *இரத்த ஆறுகள் தோறும்;* ***துரந்து செல்வன*** - *செலுத்தப்பட்டுச் செல்பவற்றை;* ***நிரந்த பேய்க்கணம்*** - *திரளான பேய்க் கூட்டங்கள்;* ***நீந்தி கரை தொறும் குவித்தன*** - *நீந்திக் கரையெங்கும் குவித்தன.*

*இரத்த ஆற்றில் இழுத்துச் செல்லப்படும் பொருள்களைப் பேய்க்கணங்கள் நீந்திக் கரையெங்கும் குவித்தன என்க. பிச்சம்-மயிற்பீலியால் ஆன குடை.*

*கும்பகருணன் சுக்கிரீவனோடு போர் செய்தல்*

***7525. ஈண்டு வெஞ் செரு இனையன நிகழ்வுழி எவர்க்கும்,***
***நீண்ட வெள் எயிற்று அரக்கன், மற்றொரு திசை நின்றான்.***
***பூண்ட வெஞ் செரு இரவி கான்முளையொடு பொருதான்;***
***'காண்தகும்' என, இமையவர் குழுக்கொண்டு, கண்டார்.****

***ஈண்டு வெஞ்செரு எவர்க்கும் இனையன நிகழ்வுழி*** - *இவ்வாறு இங்குக் கொடிய போர் யாவருக்கும் இத்தன்மைத்தாக நிகழுமிடத்து;* ***நீண்ட வெள் எயிற்று அரக்கன்*** - *நீண்ட வெள்ளிய பற்களை உடைய அரக்கனான கும்பகருணன்;* ***மற்றொரு திசை நின்றான்*** - *வேறு ஒரு திக்கில் போய் நின்று;* ***இரவி கான் முளையொடு*** - *சூரியன் மகனாகிய சுக்கிரீவனோடு;* ***பூண்ட வெஞ்செரு பொருதான்*** - *கொடிய போரைச் செய்தான்;* ***காண்தகும் என*** - *இப்போர் காணத்தக்கதாகும் என்று கருதி;* ***இமையவர் குழுக்கொண்டு கண்டார்*** - *தேவர்கள் கூட்டமாகக் கூடிக் கண்டார்கள்.*

*கும்பகருணனுக்கு உதவியாக வந்த படையை இலக்குவன் அழித்த போது கும்பகருணன் வேறு ஒரு திசையில் போய் நின்று சுக்கிரீவனோடு பொருதான் என்க.*

**கலிவிருத்தம்**

***7526. பொறிந்து எழு கண்ணினன், புகையும் வாயினன்,--***
***செறிந்து எழு கதிரவன் சிறுவன்-சீறினான்,***
***'முறிந்தன அரக்கன் மா முரண் திண் தோள்' என,***
***எறிந்தனன், விசும்பில், மா மலை ஒன்று ஏந்தியே.****

***செறிந்து எழுகதிரவன் சிறுவன்*** - நெருங்கி எழுகின்ற கதிர்களையுடைய சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; ***பொறிந்து எழு கண்ணினன்*** - தீப்பொறி வெளிப்படுகின்ற கண்களையும்; ***புகையும் வாயினன்*** - புகை வெளிவருகிற வாயினையும் உடையவனாய்ச்; ***சீறினான்*** - சினந்து; ***அரக்கன்*** -கும்பகருணனது; ***மாமுரண் திண் தோள்*** - பெரிய மாறுபடுகிற வலிய தோள்கள்; ***முறிந்தன என*** - முறிந்தன என்று கண்டோர் எண்ணும்படி; ***மாமலை ஒன்று ஏந்தியே*** - பெரிய மலை ஒன்றை எடுத்து; ***விசும்பில்*** - வானத்தில் இருந்து; ***எறிந்தனன்*** - எறிந்தான்.

***7527. அம் மலைநின்று வந்து அவனி எய்திய***
***செம் மலை அனைய வெங் களிறும், சேனையின்***
***வெம் மலை வேழமும், பொருத; வேறு இனி***
***எம் மலை உள, அவற்கு எடுக்க ஒணாதன?****

***அம்மலை நின்று வந்து*** - அந்த மலையினின்று வந்து; ***அவனி எய்திய*** - நிலத்தை அடைந்த; ***செம்மலை அனைய வெங்களிறும்*** - சிவந்த மலை போன்ற கொடிய யானையும்; ***சேனையின்*** - அரக்கர் சேனையில் இருந்த; ***வெம்மலை வேழமும் பொருத*** - கொடிய மலை போன்ற வேழமும் போர் செய்யலாயின; ***வேறு இனி எம்மலை உள*** - இனி வேறு எந்த மலையுள்ளது; ***அவற்கு எடுக்க ஒணாதன*** - அந்தச் சுக்கிரீவனுக்கு எடுக்க முடியாதன.

***7528. இவ்வகை நெடு மலை இழிந்த மாசுணம்***
***கவ்விய, நிருதர்தம் களிறும் கட்டு அற;***
***அவ் வகை மலையினை ஏற்று, ஓர் அங்கையால்***
***வவ்வினன், அரக்கன், வாள் அவுணர் வாழ்த்தினார்.***

***இவ்வகை*** - சுக்கிரீவன் இந்த வகையாக எறிந்த; ***நெடுமலை இழிந்த மாசுணம்*** - பெரிய மலையில் இருந்த வெளிவந்த மலைப் பாம்புகள்; ***நிருதர் தம் களிறும்*** - அரக்கர் தம் யானைகளும்; ***கட்டு அற கவ்விய*** - வலிமை நீங்கும்படி கவ்வின; ***ஓர் அங்கையால்*** - ஒப்பற்ற தன் உள்ளங் கையால்; ***அவ்வகை மலையினை ஏற்று*** - அந்த வகைப்பட்ட மலையினை ஏற்று; ***அரக்கன் வவ்வினான்*** - கும்பகருணன் பற்றினான்; ***வாள் அவுணர் வாழ்த்தினார்*** -கொடிய அவுணர்கள் வாழ்த்தினார்கள்.

***7529. ஏற்று ஒரு கையினால், 'இதுகொல், நீ அடா!***
***ஆற்றிய குன்றம்?' என்று, அளவு இல் ஆற்றலான்,***
***நீற்று இயல் நுணுகுறப் பிசைந்து, 'நீங்கு' எனா,***

*தூற்றினான்; இமையவர் துணுக்கம் எய்தினார்.*

***அளவு இல் ஆற்றலான்*** *- அளவற்ற வலிமை உடைய கும்பகருணன்;* ***ஒரு கையினால் ஏற்று*** *- சுக்கிரீவன் வீசிய மலையினை ஒரு* ***கையால் ஏற்று; அடா நீ*** *-அடா நீ;* ***ஆற்றிய குன்றம் இது கொல்*** *-வலிமை கொண்டு வீசிய மலை இதுதானா?;* ***என்று*** *- என்று சொல்லி;* ***நீற்று இயல் நுணுகுறப் பிசைந்து*** *- நீற்றின் தன்மையதாய் ஆகுமாறு பொடியாகப் பிசைந்து;* ***நீங்கு எனா தூற்றினன்*** *- போ என்று சொல்லித் தூற்றி விட்டான்;* ***இமையவர் துணுக்கம் எய்தினார்*** *- அப்பேராற்றல் கண்ட தேவர்கள் அச்சம் கொண்டனர்.*

*சுக்கிரீவன் மேல் கும்பகருணன் எறிந்த சூலத்தை அனுமன் முறித்தல்.*

*7530. 'செல்வெனோ, நெடுங் கிரி இன்னும் தேர்ந்து?' எனா,*
*எல்லவன் கான்முளை உணரும் ஏல்வையில்,*
*'கொல்!' என எறிந்தனன், குறைவு இல் நோன்பினோர்*
*சொல் எனப் பிழைப்பு இலாச் சூலம், சோர்வு இலான்.*

***எல்லவன் கான்முனை*** *- சூரியன் மகனாகிய சுக்கிரீவன்;* ***நெடுங்கிரி இன்னும் தேர்ந்து*** *- பெரிய மலையை இன்னும் தேடிச்;* ***செல்வனோ எனா*** *- செல்வேனோ என்று;* ***உணரும் எல்வையில்*** *- எண்ணம் கொண்ட அளவில்;* ***சோர்வு இலான்*** *- சோர்வு அற்றவனாகிய கும்பகருணன்;* ***கொல் என*** *- கொல் என்று சொல்லிக்;* ***குறைவு இல் நோன்பினோர்*** *- குறைவு இல்லாத தவத்தவரது;* ***சொல் எனப் பிழைப்பு இலாச்*** *- சாபச் சொல் போல் தவறுதல் இல்லாத;* ***சூலம் எறிந்தனன்*** *- சூலத்தை எறிந்தான்.*

*7531. 'பட்டனன் பட்டனன்' என்று, பார்த்தவர்*
*விட்டு உலம்பிட, நெடு விசும்பில் சேறலும்,*
*எட்டினன் அது பிடித்து, இறுத்து நீக்கினான்;*
*ஒட்டுமோ, மாருதி, அறத்தை ஓம்புவான்?*

***பார்த்தவர்*** *- சூலம் வருதலைப் பார்த்தவர்கள்;* ***பட்டனன் பட்டனன் என்று*** *- சுக்கிரீவன் இறந்தான் இறந்தான் என்று;* *விட்டு* ***உலம்பிட*** *- வாய்விட்டுக் கதறுமாறு;* ***நெடு விசும்பில் சேறலும்*** *- பரந்த ஆகாயத்தில் அச்சூலம் வருதலும்:* ***அது எட்டினன் பிடித்து*** *- அனுமன் அச்சூலத்தை எட்டிப் பிடித்து;* ***இறுத்து நீக்கினான்*** *- முறித்து அழித்தான்;*

***அறத்தை ஓம்புவான் மாருதி*** - *அறத்தைப் பாதுகாப்பவனாகிய மாருதி;* ***ஒட்டுமோ*** - *இச்செயல் நடக்க விடுவானோ என்றவாறு.*

*அறத்தைக் காக்க அவதரித்த மாருதி இச்செயல் (சுக்கிரீவன் அழியும் செயல்) நடக்க ஒட்டான் என்றார்.*

***7532. சித்திர வன முலைச் சீதை செவ்வியால்***
***முத்தனார், மிதிலை ஊர், அறிவு முற்றிய***
***பித்தன் வெஞ் சிலையினை இறுத்த பேர் ஒலி***
***ஒத்தது, சூலம் அன்று இற்ற ஓசையே.***

***அன்று சூலம் இற்ற ஓசையே*** - *என்று சூலப்படை அனுமனால் முறிக்கப்பட்ட போது தோன்றிய ஓசை;* ***சித்திர வனமுலைச் சீதை*** - *தொய்யிற் கோலம் எழுதிய அழகிய முலைகளையுடைய சீதையினது;* ***செவ்வியால்*** - *அழகால்;* ***மிதிலை ஊர்*** - *மிதிலையில்;* ***முத்தனார்*** - *முத்தி உலகுக்கு உரிய மாலின் திருவவதாரமான இராமபிரான்;* ***அறிவு முற்றிய பித்தன்*** - *அறிவு நிரம்பிய பித்தனென்ற பேர் கொண்ட சிவபிரானது;* ***வெஞ்சிலையினை இறுத்த பேர் ஒலி ஒத்தது*** - *கொடிய வில்லினை முறித்தபோது தோன்றிய பேரோசையை ஒத்து இருந்தது.*

### *கும்பகருணன் அனுமனைப் போருக்கு அறைகூவ அனுமன் மறுத்தல்*

***7533. நிருதனும் அனையவன் நிலைமை நோக்கியே,***
***'கருதவும் இயம்பவும் அரிது, உன் கை வலி;***
***அரியன முடிப்பதற்கு அனைத்து நாட்டினும்***
***ஒரு தனி உளை; இதற்கு உவமை யாது?' என்றான்.***

***நிருதனும்*** - *அரக்கனாகிய கும்பகருணனும்;* ***அனையவன்*** - *அந்த அனுமனது;* ***நிலைமை நோக்கியே*** *-தன்மையைப் பார்த்து;* ***உன் கை வலி கருதவும் இயம்பவும் அரிது*** - *உன் கை வலிமை எண்ணுதற்கும்சொல்லுதற்கும் அருமையானது;* ***அரியன முடிப்பதற்கு*** - *அருஞ்செயல்களைச் செய்து முடிப்பதற்கு;* ***அனைத்து நாட்டினும்*** - *எல்லா நாட்டினுள்ளும்;* ***ஒரு தனி உளை*** - *ஒரு தனிப்பட்டவனாக இருக்கிறாய்;* ***இதற்கு உவமை யாது*** - *உன் திறமைத் தன்மைக்கு ஒப்புக் கூற உரியது யாது?;* ***என்றான்*** - *என்று கூறினான்.*

*அனுமன் கை வலி கண்டு கும்பகருணன் வியந்து கூறியது. அரியன-குறிப்பு வினையாலணையும் பெயர்.*

*7534. **'என்னொடு பொருதியேல், இன்னும், யான் அமர்
சொன்னன புரிவல்' என்று, அரக்கன் சொல்லலும்,
'முன், "இனி எதிர்க்கிலேன்" என்று முற்றிய
பின், இகல் பழுது' என, பெயர்ந்து போயினான்.***

*__இன்னும்__ - இடையில் நிறுத்திய போரை மேலும்; __என்னொடு பொருதியேல்__ - தொடர்ந்து என்னோடு செய்வாய் ஆனால்; __யான் அமர் சொன்னன புரிவெல்__ - யான் போரை நீ சொன்ன முறைப்படியே புரிவேன்; __என்று__ - என்று; __அரக்கன் சொல்லலும்__ - கும்பகருணன் சொன்ன அளவிலே; __முன் இனி எதிர்க்கிலேன் என்று__ - முன்பு இனி உன்னோடு எதிர்க்க மாட்டேன் என்று; __முற்றிய பின்__ - போரை முடித்த பிறகு; __இகல் பழுது__ - மீண்டும் போரிடுவது சொன்ன சொல் தவறுவது ஆகும்; __என பெயர்ந்து போயினான்__ - என்று கூறிய இடத்தை விட்டு அப்பால் போயினன்.*

*நீ என்னோடு மீண்டும் போரிட வந்தால் நீ சொன்ன முறைப்படியே போரிடலாம் என்று கும்பகருணன் கூற, முன்பு உன்னோடு போரிடேன் என்று கூறிவிட்டு இப்பொழுது போரிடல் சொன்ன சொல் தவறுவது ஆகும் என்று கூறி மறுத்து அனுமன் அப்பால் போயினன்.*

*மீண்டும் சுக்கிரீவனும் கும்பகருணனும் பொருதல்*

*7535. **அற்றது காலையில், அரக்கன், ஆயுதம்
பெற்றிலன், பெயர்ந்திலன்; அனைய பெற்றியில்,
பற்றினன், பாய்ந்து எதிர், பருதி கான்முளை
எற்றினன், குத்தினன், எறுழ் வெங் கைகளால்.***

*__அற்றது காலையில்__ - அந்தச் சூலப்படை அழிந்த காலத்தில்; __அரக்கன்__ - கும்பகருணன்; __ஆயுதம் பெற்றிலன்__ - வேறு ஆயுதத்தைப் பெறாதவனாய் இருந்தும்; __பெயர்ந்திலன்__ - இடத்தை விட்டு நிலை பெயராது இருந்தான்; __அனைய பெற்றியில்__ - அந்த வேளையில்; __பருதி கான்முளை__ - கதிரவன் மகனாகிய சுக்கிரீவன்; __எதிர் பாய்ந்து__ - கும்பகருணனுக்கு எதிரே பாய்ந்து; __பற்றினன்__ - பற்றி; __எறுழ் வெங்கைகளால்__ - தன் வலிய கொடிய கைகளால்; __எற்றினன் குத்தினன்__ - மோதிக் குத்தினான்.*

*7536. **அரக்கனும்',---'நன்று, நின் ஆண்மை; ஆயினும்,
தருக்கு இனி இன்றொடும் சமையும்தான்' எனா,
நெருக்கினன், பற்றினன், நீங்கொணாவகை;--***

***உருக்கிய செம்பு அன உதிரக் கண்ணினான்.***

***உருக்கிய செம்பு அன உதிரக் கண்ணினான்*** - *சினத்தால் உருக்கிய செம்பு போன்று குருதி குழம்பிய கண்களை உடைய;* ***அரக்கனும்*** *- கும்பகருணனும்;* ***நின் ஆண்மை நன்று*** *- நினது வீரம் நன்று;* ***ஆயினும்*** *- ஆனாலும்;* ***இனி இன்றொடும் தருக்கு சமையும் தான்*** *- இனிமேல் இன்றுடன் உன் செருக்கு அடங்கிவிடும் தான்;* ***எனா*** *- என்று சொல்லி;* ***நீங்கொணா வகை*** *- தப்பமுடியாதவாறு;* ***நெருக்கினன் பற்றினன்*** *- நெருக்கிப் பற்றினன்;*

***7537. திரிந்தனர் சாரிகை; தேவர் கண்டிலர்;***
***புரிந்தனர், நெடுஞ் செரு; புகையும் போர்த்து எழ***
***எரிந்தன, உரும் எலாம்; இருவர் வாய்களும்***
***சொரிந்தன, குருதி; தாம் இறையும் சோர்ந்திலார்.***

***சாரிகை திரிந்தனர்*** *- சுக்கிரீவன் கும்பகருணனைப் பற்றிய அளவிலே இருவரும் சாரிகை திரிந்தனர்;* ***தேவர் கண்டிலர்*** *- அப்போது இன்னார் இங்கு உள்ளார் என்று தேவர்களும் காண முடியாதவர் ஆயினர்;* ***நெடுஞ் செரு புரிந்தனர்*** *- இருவரும் பெரும் போரைத் தொடங்கினர்;* ***உரும் எலாம் எரிந்தன*** *- போரின் வேகத்தால் இடிகள் எல்லாம் எரிந்தன;* ***புகையும் போர்த்து எழ*** *- அதனால் புகை திசைகளை மூடிக்கொண்டு மேல் எழுந்தன;* ***இருவர் வாய்களும் சொரிந்தன குருதி*** *- இருவர் வாய்களில் இருந்தும் குருதி வெளிப்பட்டன;* ***தாம் இறையும் சோர்ந்திலார்*** *- தாங்கள் ஒரு சிறிதும் சோர்வு அடைந்திலர்.*

***7538. உறுக்கினர், ஒருவரை ஒருவர்; உற்று இகல்***
***முறுக்கினர், முறை முறை; அரக்கன் மொய்ம்பினால்***
***பொறுக்கிலாவகை நெடும் புயங்களால் பிணித்து***
***இறுக்கினான்; இவன் சிறிது உணர்வும் எஞ்சினான்.***

***ஒருவரை ஒருவர் உறுக்கினர்*** *- அவ்விருவரும் ஒருவரை ஒருவர் பொருந்தி நின்று அதட்டினார்கள்;* ***முறை முறை உற்று இகல் முறுக்கினர்*** *- முறை முறையாகப் பொருந்திப் போரைச் சினத்துடன் செய்தனர்;* ***அரக்கன்*** *- கும்பகருணன்;* ***மொய்ம்பினால்*** *- வலிமையால்;* ***பொறுக்கிலா வகை*** *- பொறுக்க முடியாதபடி;* ***நெடும் புயங்களால் பிணித்து*** *- தன் பெரிய கைகளினால் சுக்கிரீவனைப் பிடித்து;* ***இறுக்கினான்*** *- அழுத்தினான்;* ***இவன் சிறிது உணர்வும் எஞ்சினான்*** *- இந்தச் சுக்கிரீவன் சிறிது உணர்வு குறையப் பெற்றான் (மூர்ச்சை அடைந்தான்)*

*உணர்வு இழந்த சுக்கிரீவனைக் கும்பகருணன் எடுத்துச் செல்லுதல்*

***7539. 'மண்டு அமர் இன்றொடு மடங்கும்; மன் இலாத்***
***தண்டல் இல் பெரும் படை சிந்தும்; தக்கது ஓர்***
***எண்தரு கருமம் மற்று இதனின் இல்' என,***
***கொண்டனன் போயினன், நிருதர்கோ நகர்.***

***நிருதர் கோ*** - அரக்கர் தலைவனாகிய கும்பகருணன்; ***மண்டு அமர் இன்றொடு மடங்கும்*** - இவனைத் தூக்கிப் போய்விட்டால், நெருங்கிய போர் இன்றோடு முற்றுப் பெறும்; ***மன் இலாத் தண்டல் இல் பெரும்படை சிந்தும்*** - அரசன் இல்லாத கெடுதலில்லாத பெரிய வானரப் பெரும்படை சிதறிவிடும்; ***இதனின் தக்கது ஓர்*** - இதனைக் காட்டிலும் தக்கதாகிய; ***எண் தரு கருமம் மற்று இல்*** - எண்ணிச் செய்யத்தக்க தொழில் இல்லை; ***என*** - என்று எண்ணி; ***நகர் கொண்டனன் போயினன்*** - நகருக்குச் சுக்கிரீவனைத் தூக்கிக் கொண்டு போனான்.

***7540. உரற்றின பறவையை ஊறு கொண்டு எழ,***
***சிரற்றின பார்ப்பினின் சிந்தை சிந்திட,***
***விரல் துறு கைத்தலத்து அடித்து, வெய்துயிர்த்து,***
***அரற்றின, கவிக் குலம்; அரக்கர் ஆர்த்தனர்,***

***உரற்றின பறவையை*** - கூவிக் கொண்டிருந்த தாய்ப் பறவையை; ***ஊறு கொண்டு எழ*** - வல்லூறு பற்றிக் கொண்டு போக; ***சிரற்றின பார்ப்பினின்*** - துன்பத்தால் அரற்றிய குஞ்சுகள் போல; ***சிந்தை சிந்திட*** - (சுக்கிரீவனைக் கும்பகருணன் தூக்கிச் சென்ற போது) மனம் முறிந்திட; ***விரல் துறு கைத்தலத்து அடித்து*** - விரல்கள் நெருங்கிய கையினால் அடித்துக்கொண்டு; ***வெய்துயிர்த்து*** - பெருமூச்சு விட்டுக்கொண்டு; ***கவிக்குலம் அரற்றின*** - வானரக் கூட்டங்கள் வாய் விட்டுக் கதறின; ***அரக்கர் ஆர்த்தனர்*** - அரக்கர்கள் மகிழ்ச்சிப் பேரொலி செய்தனர்.

*சுக்கிரீவனைக் கும்பகருணன் தூக்கிச் சென்ற பொழுது குரங்குப் படை கைத்தலத்து அடித்து அரற்றிய செயல் தாய்ப்பறவையை வல்லூறு கொண்டுபோக வருந்தும் பார்ப்பின் செயலை ஒத்தது. ஊறு - வல்லூறு. சிரற்றுதல் - துன்பத்தால் அரற்றுதல். பார்ப்பு-குஞ்சு, ஊறு-நெருக்கம்.*

***7541. நடுங்கினர் அமரரும்; நா உலர்ந்து வேர்த்து***
***ஒடுங்கினர், வானரத் தலைவர்--உள் முகிழ்த்து,***
***இடுங்கின கண்ணினர், எரிந்த நெஞ்சினர்,***
***'மடங்கினவாம் உயிர்ப்பு' என்னும் அன்பினார்.***

***அமரரும் நடுங்கினர்*** - தேவர்களும் நடுங்கினார்கள்; ***வானரத் தலைவர்கள்*** - வானரத் தலைவர்கள்; ***உள் முகிழ்த்து இடுங்கிய கண்ணினர்*** - உள் அடங்கி இடுங்கிய கண்களைக் கொண்டு; ***எரிந்த நெஞ்சினர்*** - எரிந்த நெஞ்சத்தை உடையவராகி; ***உயிர்ப்பு மடங்கினவாம் என்னும்*** - அவர்களது உயிர்ப்பும் நின்றிட்டதோ என்று கண்டோர் கருதுமாறு; ***அன்பினார்*** - தம்மரசன் பால் அன்பு சிறந்தவராய்; ***நா உலர்ந்து*** - நாவுலர்ந்து; ***வேர்த்து*** - உடல் வியர்த்து; ***ஒடுங்கினர்*** - மனமகிழ்வு குன்றினர்.

***7542. புழுங்கிய வெஞ் சினத்து அரக்கன் போகுவான்,***
***அழுங்கல் இல் கோள் முகத்து அரவம் ஆயினான்;***
***எழும் கதிர் இரவிதன் புதல்வன், எண்ணுற***
***விழுங்கிய மதி என, மெலிந்து தோன்றினான்.***

***புழுங்கிய*** - மனம் புழுங்குவதற்குக் காரணமான; ***வெஞ்சினத்து அரக்கன்*** - கொடிய சினத்தை உடைய கும்பகருணன்; ***போகுவான்*** - சுக்கிரீவனைத் தூக்கிப் போபவன்; ***அழுங்கலில்*** - வருந்துதல் இல்லாத; ***கோள் முகத்து அரவம் ஆயினான்*** - கிரகத் தன்மை உடைய இராகு என்னும் பாம்பு போல் ஆயினான்; ***கதிர் எழும் இரவிதன் புதல்வன்*** -கதிர் விடுகின்ற சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; ***எண்ணுற*** - கண்டார் எண்ணுமாறு; ***விழுங்கிய மதி என*** - இராகுவால் விழுங்கப்பட்ட மதிபோல; ***மெலிந்து தோன்றினான்*** - மெலிவுற்றுத் தோன்றினான்.

*வெண்மையான சுக்கிரீவனை எடுத்துச்செல்லும் கரிய கும்பகருணனை இராகு என்னும் கரிய பாம்பாகவும் எடுத்துச் செல்லப்படும் குரக்கினத்தலைவனை வெண்மதியாகவும் குறிப்பிட்டார் என்க. அழுங்கல்- வருந்துதல். கோள்முகத்து அரவம்-கோளாகிய முகம் மட்டுமாக உள்ள இராகு என்னும் கரும் பாம்பு. பற்றும் தன்மை கொண்ட முகத்தைக் கொண்ட இராகு என்னும் பாம்பு எனினுமாம்.*

***7543. திக்கு உற விளக்குவான் சிறுவன், தீயவன்***
***மைக் கரு நிறத்திடை மறைந்த தன் உரு***
***மிக்கதும் குறைந்ததும் ஆக, மேகத்துப்***
***புக்கதும் புறத்தும் ஆம் மதியும் போன்றனன்.***

***திக்கு உற விளங்குவான் சிறுவன்*** - திக்கெல்லாம் மிக்கு ஒளி விளங்கும் கதிரவன் சிறுவனாகிய சுக்கிரீவன்; தீயவன் - கும்பகருணனது; ***மைக்கரு நிறத்திடை மறைந்த தன் உரு*** - மேகம் போன்ற கரிய நிறத்தில் மறைந்த தன்னுடைய நிறம்; ***மிக்கதும் குறைந்ததும் ஆக*** - ஒரு கால் மிக்கும், ஒருகால் குறைந்தும் தோன்றுவது; ***மேகத்துப்***

**புக்கதும் புறத்தும் ஆம்** - மேகத்தின் இடையில் புக்கதும் வெளிப்பட்டதும் ஆகிற; **மதியும் போன்றனன்** - சந்திரனையும் போன்றனன்.

சுக்கிரீவன் கும்பகருணனது கையில் இருப்பது மேகத்திடை மதிபுக்கும் வெளிப்பட்டும் தோன்றுவது போன்றதாகும். கும்பகருணன்-கருநிறம். சுக்கிரீவன்-வெண்மை நிறம்.

*அனுமன் கை பிசைந்து கும்பகருணன் பின்போதல்*

***7544. 'ஒருங்கு அமர் புரிகிலேன், உன்னொடு யான்' என,***
***நெருங்கிய உரையினை நினைந்து, நேர்கிலன்,***
***கருங் கடல் கடந்த அக் காலன், காலன் வாழ்***
***பெருங் கரம் பிசைந்து, அவன் பின்பு சென்றனன்.***

**கருங்கடல் கடந்த அக்காலன்** - கரிய கடலைக் கடந்த அக்காலை உடையவனாகிய அனுமன்; **உன்னொடு யான் ஒருங்கு அமர் புரிகிலேன்** - யான் உன்னோடு பொருந்த இனிப் போர் புரிய மாட்டேன்; **என** - என்று; **நெருங்கிய உரையினை நேர்ந்து நேர்கிலன்** - அண்மையில் கூறிய உரையினை நினைத்து எதிர்க்காதவனாய்; **காலன் வாழ் பெருங்கரம் பிசைந்து** - யமன் வாழ்கின்ற தன் பெருங்கையைப் பிசைந்து கொண்டு; **அவன் பின்பு சென்றனன்** - அக்கும்பகருணனுக்குப் பின்பு சென்றான்.

எந்நிலையிலும் போரில் சொன்ன சொல் தவறாமை கடைப்பிடிக்கப் படுதல் காண்க. இதனையே அறப்போர் என்பர்.

***7545. ஆயிரம் பெயரவன் அடியில் வீழ்ந்தனர்,***
***'நாயகர் எமக்கு இனி யாவர்' நாட்டினில்?***
***காய் கதிர்ப் புதல்வனைப் பிணித்த கையினன்,***
***போயினன், அரக்கன்' என்று இசைத்த பூசலார்.***

வானரர்கள் இராமனிடம் ஓடிச் சென்று, **காய் கதிர்ப் புதல்வனைப் பிணித்தகையினன்** - எரிக்கின்ற கதிர்களை உடைய சூரியன் மகனைக் கையினால் கட்டி எடுத்துக்கொண்டு; **அரக்கன் போயினன் என்று** - கும்பகருணன் போயினான்; **நாட்டினில் நாயகர் எமக்கு இனி யாவர் என்று** - நாட்டில் எமக்குத் தலைவர் யாவர் என்று; **இசைத்த பூசலார்** - பேரொலி செய்தவர்களாய்; **ஆயிரம் பெயரவன்** -ஆயிரம் திருநாமங்களை உடைய இராமனது; **அடியில் வீழ்ந்தனர்** - திருவடியில் விழுந்தனர்.

*இராமன் கும்பகருணன் செல்லும் வாயிலை அடைத்தல்-*
*தலைமைப் போர்*

***7546.** **தீயினும் முதிர்வுறச் சிவந்த கண்ணினான்,***
***காய் கணை சிலையொடும் கவர்ந்த கையினான்,***
***'ஏ' எனும் அளவினில், இலங்கை மா நகர்***
***வாயில் சென்று எய்தினான்--மழையின் மேனியான்.***

**மழையின் மேனியான்** - மேகம் போன்ற மேனியை உடைய இராமன்; **தீயினும் முதிர்வுறச் சிவந்த கண்ணினான்** - தீயைக்காட்டிலும் முற்றிச் சிவந்த கண்ணினை உடையவன் ஆகவும்; **காய்கணை சிலையொடும் கவர்ந்த கையினான்** - எரிக்கக் கூடிய அம்புகளை வில்லுடன் கொண்ட கையினன் ஆகவும்; **ஏ எனும் அளவினில்** - ஏ எனும் ஒரு நொடிப் பொழுதில்; **இலங்கை மாநகர் வாயில் சென்று எய்தினான்** - இலங்கையாகிய பெரிய நகரின் வாயிலுக்குச் சென்று சேர்ந்தான்.

அடைக்கலப் பொருளைக் காத்தலில் இராமனுக்குச் சீற்றம் சிறந்தது.

***7547.** **'உடைப் பெருந் துணைவனை உயிரின் கொண்டு போய்,***
***கிடைப்ப அருங் கொடி நகர் அடையின், கேடு' என,***
***'தொடைப் பெரும் பகழியின் மாரி தூர்த்து, உற***
***அடைப்பென்' என்று, அடைத்தனன், விசும்பின் ஆறு எலாம்.***

**உடைப் பெருந் துணைவனை** - என்னுடைய பெருந்துணைவன் ஆகிய சுக்கிரீவனை; **உயிரின் கொண்டு போய்** - என் உயிரைக் கொண்டு போவது போல் கொண்டு போய்; **கிடைப்ப அருங் கொடிநகர்** - நெருங்குவதற்கு அரிய கொடியோடு விளங்குகின்ற இலங்கை மாநகரை; **அடையின் கேடு என** - அடைந்தால் கேடு என்று சொல்லி; **தொடைப் பெரும் பகழியின்** - தொடுத்தல் பொருந்திய பெரிய அம்புகளின்; **மாரி தூர்த்து** - மழையினால் நிரப்பி; **உற அடைப்பென்** - முழுதுமாக அடைப்பேன் என்று; **விசும்பின் ஆறு எலாம்** - ஆகாய வழியை எல்லாம்; **அடைத்தனன்** - அடைத்தான்.

தன்னுடைப் பெருந்துணைவனைக் கொடு போய் கிடைப்பரு நகர் அடையின் கேடென பகழியின் மாரி தூர்த்து விசும்பின் ஆறு எலாம் உற அடைத்தனன் என்க. கிடைப்ப-நெருங்க. தூர்த்து-நிரப்பி. உற-முழுதும். ஆறு - வழி - பகழியின். மாரி - உருவகம். எலாம்- இடைக்குறை. கொடிநகர் - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

***7548. மாதிரம் மறைந்தன; வயங்கு வெய்யவன்***
***சோதியின் கிளர் நிலை தொடர்தல் ஓவின;***
***யாதும் விண் படர்கில; இயங்கு கார் மழை***
***மீது நின்று அகன்றன--விசும்பு தூர்த்தலால்.***

***விசும்பு தூர்த்தலால் மாதிரம் மறைந்தன*** - *இராமன் அம்புகள் ஆகாயம் எங்கும் நிரம்பியதால் திசைகள் எல்லாம் மறைந்தன;* ***வயங்கு வெய்யவன்*** - *ஒளி விளங்குகின்ற சூரியனது;* ***சோதியின் கிளர்நிலை*** - *ஒளிக்கதிர்களின் விளங்கும் நிலையும்;* ***தொடர்தல் ஓவின*** - *தொடர்ந்து நிலத்தில் படுதலை நீங்கின;* ***யாதும் விண் படர்கில*** - *எதுவும் வானத்தில் செல்ல மாட்டாது ஒழிந்தன;* ***இயங்கு கார் மழை மீது நின்று அகன்றன*** - *அசைகிற கருநிற மேகங்கள் மேல் பகுதியில் இருந்து அகன்றன.*

*இராமனது அம்புகள் ஆகாயத்தை நிரப்பித் திசைகளை மறைத்து சூரிய ஒளி நிலத்தில் படாமல் நீக்கி, எவற்றையும் வானத்தில் செல்ல மாட்டாது. தடுத்து கருமேகங்களை அகற்றின.*

*கும்பகருணன் இராமனைக் காணுதல்*

***7549. மனத்தினும் கடியது ஓர் விசையின் வான் செல்வான்,***
***இனக் கொடும் பகழியின் மதிலை எய்தினான்;***
***'நினைத்து அவை நீக்குதல் அருமை, இன்று' என,***
***சினக் கொடுந் திறலவன் திரிந்து நோக்கினான்.***

***மனத்தினும் கடியது ஓர் விசையின்*** - *மனத்தைக் காட்டிலும் விரைவான வேகத்தில்;* ***வான் செல்வான்*** - *வானத்து வழியாகச் செல்பவன் ஆன;* ***சினக் கொடுந்திறலவன்*** - *சினத்தொடு கொடிய வலிமை உள்ள கும்பகருணன்;* ***இனக்கொடும் பகழியின் மதிலை எய்தினான்*** - *திரளாக உள்ள இராமனது கொடிய பகழியால் ஆன மதிலை அடைந்து;* ***நினைத்து*** - *ஆய்ந்து;* ***அவை இன்று நீக்குதல் அருமை என*** - *அவற்றை இப்போது போக்குதல் இயலாது என்று கருதி;* ***திரிந்து நோக்கினான்*** - *திரும்பிப் பார்த்தான்.*

***7550. கண்டனன்--வதனம், வாய், கண், கை, கால் எனப்***
***புண்டரீகத் தடம் பூத்து, பொன் சிலை***
***மண்டலம் தொடர்ந்து, மண் வயங்க வந்தது ஓர்***
***கொண்டலின் பொலிதரு கோலத்தான்தனை.***

***பொன்சிலை மண்டலம் தொடர்ந்து*** - *அழகிய வில் வட்டம் தொடர்ந்து;* ***மண் வயங்க வந்தது*** - *நிலத்தில் விளங்க வந்த;* ***ஓர் கொண்டலின்*** - *ஒப்பற்ற*

*கருமேகம்; **புண்டரீகத்தடம்** - தாமரைத் தடாகம் போல்; **வதனம், வாய், கண், கை, கால், எனப் பூத்து** - முகம், வாய், கண், கை, கால் எனத் தாமரை மலர்கள் பூக்கப் பெற்று; **பொலிதரு கோலத்தான் தனை கண்டனன்** - அழகாக விளங்குகிற திருமேனிக் கோலமுடைய இராமனைக் கண்டனன்.*

*மண்டலம்-வட்டம்.*

## *கும்பகருணன் இராமனை இடித்துரைத்தல்*

***7551. மடித்த வாய் கொழும் புகை வழங்க, மாறு இதழ்***
**துடித்தன; புருவங்கள் சுறுக்கொண்டு ஏறிட,**
**பொடித்த தீ, நயனங்கள்; பொறுக்கலாமையால்,**
**இடித்த வான் தெழிப்பினால், இடிந்த, குன்று எலாம்.**

*__மடித்த வாய் கொழும்புகை வழங்க__ - கும்பகருணனது மடித்த வாய் மிகுதியான புகையை வெளிப்படுத்த; **மாறு இதழ் துடித்தன** - ஒன்றற்கொன்று மாறுபட்டுடன் வாய் இதழ்கள் துடித்தன; **புருவங்கள் சுறுக் கொண்டு ஏறிட** - புருவங்கள் கோபக் குறியாக நெரித்து ஏற; **நயனங்கள் தீ பொடித்த** - கண்கள் சினத் தீப்பொறியைக் கக்கின; **வான் தெழிப்பினால் இடித்த** - வானம் அவனது பேரொலியால் இடிந்தது; **குன்று எலாம் இடிந்த** - அதுபோலவே குன்றுகளும் ஒலியால் இடிந்தன.*

*தன் குறிக்கோளாகிய சுக்கிரீவனைக் கொண்டு செல்ல இயலாமல் பெருந்தடை செய்ததால் இராமனைக் கண்டு பெருஞ் சீற்றம் கொண்டான் கும்பகருணன். சீற்றக்காரணம் 7553 ஆம் பாடல் மூலம் கும்பகருணன் கூற்றாக வெளிப்படுகிறது.*

***7552. ' "மாக் கவந்தனும், வலி தொலைந்த வாலி ஆம்***
***பூக் கவர்ந்து உண்ணியும், போலும்" என்று, எனைத்***
***தாக்க வந்தனை; இவன் தன்னை இன் உயிர்***
***காக்க வந்தனை; இது காணத் தக்கதால்.***

*__மாக்கவந்தனும்__ - வயிறே வாயாகக் கொண்ட பெரிய கவந்தனும்; **வலி தொலைந்த வாலி ஆம் பூக்கவர்ந்து உண்ணியும் போலும்** - வலி நீங்கிய வாலியாகிய பூவைப் பறித்து உண்ணும் குரங்கும் போல என்று கருதி; **எனைத் தாக்க வந்தனை** - என்னைத் தாக்குவதற்காக வந்தாய்; **இவன் தன்னை இன் உயிர் காக்க வந்தனை** - இந்தச் சுக்கிரீவனுடைய, இனிய உயிரைக் காக்க வந்தாய்; **இது காணத்தக்கதால்** - இச்செயலைக் காண்போம். உனக்கு வல்லமை இருந்தால் மீட்பாயாக என்றான். பூக்கவர்ந்து உண்ணி-பூவைக் கவர்ந்து உண்ணும் இயல்புள்ள குரங்கு.*

*7553.* ***'உம்பியை முனிந்திலேன், அவனுக்கு ஊர்தியாம்***
***தும்பியை முனிந்திலேன், தொடர்ந்த வாலிதன்***
***தம்பியை முனிந்திலேன், சமரம் தன்னில் யான்--***
***அம்பு இயல் சிலையினாய்!--புகழ் அன்று ஆதலால்.****

***அம்பு இயல் சிலையினாய்*** - *அம்பு தொடுக்கப் பட்ட வில்லினை உடையவனே;* ***யான் சமரம் தன்னில்*** - *நான் போர் தன்னில்;* ***உம்பியை முனிந்திலேன்*** - *உன் தம்பியைச் சினந்தேன் இல்லை;* ***அவனுக்கு ஊர்தியாம் தும்பியை முனிந்திலேன்*** - *அவனுக்கு ஊர்தியாக அமைந்த யானை போன்றவனான அனுமனைச் சினந்தேனில்லை;.* ***தொடர்ந்த வாலி த ன் தம்பியை முனிந்திலேன்*** - *என்னைத் தொடர்ந்து வந்த வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனைச் சினந்தேனில்லை;* ***புகழ் அன்று ஆதலால்*** - *(எனக்குச் சமம் ஆனவர்கள் அல்ல) அவர்களை வெல்வது எனக்குப் புகழ் தருவதன்று ஆகையால்.*

*உம்பி, தும்பி என்று அவர்களைக் கேலி செய்வது போல் கூறியது ஓர் நயம்.*

*7554.* ***'தேடினென் திரிந்தனென் நின்னை; திக்கு இறந்து***
***ஓடியது உன் படை; உம்பி ஓய்ந்து, ஒரு***
***பாடு உற நடந்தனன்; அனுமன் பாறினன்;***
***ஈடுறும் இவனைக் கொண்டு, எளிதின் எய்தினேன்.***

***நின்னைத் தேடினென் திரிந்தனென்*** - *உன்னைத் தேடித் திரிந்தேன்;* ***உன் படை திக்கு இறந்து ஓடியது*** - *உனது படை திக்கைக் கடந்து ஓடியது;* ***உம்பி ஓய்ந்து ஒருபாடு உற நடந்தனன்*** - *உன் தம்பி வலி ஓய்ந்து ஒரு பக்கம் பொருந்த நடந்தான்;* ***அனுமன் பாறினான்*** - *அனுமன் வலி கெட்டு ஓடிவிட்டான்;* ***ஈடுறும்*** - *போர் செய்ய வந்த;* ***இவனை*** - *இச்சுக்கிரீவனை;* ***கொண்டு எளிதின் எய்தினேன்*** - *எடுத்துக் கொண்டு எளிதாக அடைந்தேன்.*

*7555.* ***'காக்கிய வந்தனைஎன்னின், கண்ட என்***
***பாக்கியம் தந்தது, நின்னை; பல் முறை***
***ஆக்கிய செரு எலாம் ஆக்கி, எம்முனைப்***
***போக்குவென், மனத்துறு காதல் புன்கண் நோய்.***

***காக்கிய வந்தனை என்னின்*** - *இச்சுக்கிரீவனைக் காப்பாற்றுவதற்காக வந்தாய் என்னின்;* ***நின்னைக் கண்ட என் பாக்கியம் தந்தது*** - *நின்னை, என்னிடம் விளைந்த என் பாக்கியம் தந்துள்ளது;* ***பல்முறை ஆக்கிய செரு எலாம் ஆக்கி*** - *முன்பு பலமுறை செய்துள்ள வீரப்போரை எல்லாம் இன்று இப்பொழுது செய்து;* ***எம்முனை*** - *என்*

அண்ணனுடைய; **மனத்துறு காதல் புன்கண் நோய் போக்குவென** - மனத்தில் பொருந்திய காதல் ஆகிய வருத்தம் தரும் நோயைப் போக்குவேன்.

என் பாக்கியம் தந்தது நின்னை-நான் செய்த புண்ணியமே உன்னை என்னிடம் அனுப்பியது என்றவாறு.

**7556. 'ஏதி வெந் திறலினோய்! இமைப்பிலோர் எதிர்,**
**பேது உறு குரங்கை யான் பிணித்த கைப் பிணி,**
**கோதை வெஞ் சிலையினால், கோடி வீடுஎனின்,**
**சீதையும் பெயர்ந்தனள், சிறை நின்றாம்' என்றான்.**

**ஏதி வெந்திறலினோய்** - படைக்கலத்தால் செய்யும் போரில கொடிய திறமை வாய்ந்தவனே; **இமைப்பிலோர் எதிர்** - தேவர்கள் முன்னிலையில்; **பேது உறு குரங்கை** - மனங்கலங்கிய குரங்காகிய சுக்கிரீவனை; **யான் பிணித்த கைப்பிணி** - யான் கட்டிய கைப்பிணிப்பை; **கோதை வெஞ் சிலையினால்** - கட்டமைந்த கொடிய வில்லினால்; **வீடு கோடி எனின்** - விடுவித்து விட்டாய் ஆனால்; **சீதையும் சிறை நின்று பெயர்ந்தனள் ஆம்** - சீதையும் சிறையில் இருந்து விடுபட்டவள் ஆவாள்; **என்றான்** - என்று கும்பகருணன் கூறினான்.

தேவர்கள் முன்பு மனங்கலங்கிய குரங்கை நீ என் கைப்பிடியில் இருந்து மீட்டு விட்டால் சீதை சிறையில் இருந்து விடுபட்டவள் ஆவாள். ஆம், பிரித்துக் கூட்டுக. இதைச் செய்தால் அதையும் செய்யலாம் என்கிறான் கும்பகருணன்.

*இராமன் வஞ்சினம்*

**7557. என்றலும், முறுவலித்து, இராமன், 'யானுடை**
**இன் துணை ஒருவனை எடுத்த தோள் எனும்,**
**குன்றினை அரிந்து யான் குறைக்கிலேன்எனின்,**
**பின்றினென் உனக்கு; வில் பிடிக்கிலேன்' என்றான்.**

**என்றலும்** - என்று கும்பகருணன் கூறியவுடன்; **இராமன் முறுவலித்து** - இராமன் புன்சிரிப்புச் சிரித்து; **யானுடை** - என்னுடைய; **இன்துணை ஒருவனை** - இனிய துணையாகிய சுக்கிரீவனை; **எடுத்த தோள் எனும் குன்றினை** - தூக்கிச் சென்ற தோள் என்கிற குன்றை; **யான் அரிந்து குறைக்கிலேன் எனின்** - நான் வெட்டி வீழ்த்திலேன் எனின்; **உனக்குப் பின்றினென்** - உனக்குத் தோற்றவன் ஆவேன்; **வில் பிடிக்கிலேன் என்றான்** - வில்லைப் பிடிப்பதில்லை என்று சபதம் இட்டான்.

**7558. மீட்டு அவன், சரங்களால் விலங்கலானையே**

**மூட்டு அற நீக்குவான் முயலும் வேலையில்,**
**வாள் தலை பிடர்த்தலை வயங்க, வாளிகள்,**
**சேட்டு அகல் நெற்றியின், இரண்டு சேர்த்தினான்.**

**அவன் மீட்டு** - *இராமன் மீண்டும்;* **சரங்களால் விலங்கலானையே** - *அம்புகளால் மலை போலும் சுக்கிரீவனை;* **மூட்டு அற நீக்குவான் முயலும் வேலையில்** - *தடையில்லாமல் நீக்குவதற்கு முயல்கின்ற காலத்தில்;* **பிடர்த்தலை வயங்க வாள் தலை வாளிகள்** - *பிடர்த் தலையருகிலிருந்த அம்பறாத் தூணியில் இருந்து விளங்குகின்ற வாளின் தலை போன்ற கூரிய அம்புகள்;* **இரண்டு** - *இரண்டை;* **சேட்டு அகல் நெற்றியின் சேர்த்தினான்** - *கும்பகருணனது உயர்ந்து அகன்ற நெற்றியில் பாய்ச்சினான்.*

*கும்பகருணன் குருதியால் சுக்கிரீவன் மயக்கம் தெளிதல்*

*7559.* **சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்து எழ,**
**நெற்றியின் நெடுங் கணை ஒளிர நின்றவன்,**
**முற்றிய கதிரவன் முளைக்கும் முந்து வந்து,**

**உற்று எழும் அருணனது உதயம் போன்றனன்.** **சுற்றிய குருதியின்** - *அம்பு பட்டதனால் எழுந்து சூழ்ந்த குருதியால்;* **செக்கர் சூழ்ந்து எழ** - *செவ்வானம் சுற்றிலும் தோன்ற;* **நெற்றியின் நெடுங்கணை ஒளிர நின்றவன்** - *நெற்றியில் நீண்ட இரண்டு கணைகள் விளங்க நின்ற கும்பகருணன்;* **முற்றிய கதிரவன் முளைக்கும் முந்து** - *பல கதிர்களை உடைய சூரியன் தோன்றுவதற்கு முன்பு;* **வந்து உற்று எழும்** - *வந்து பொருந்தித் தோன்றுகின்ற;* **அருணனது உதயம் போன்றனன்** - *அருணனது உதயத்தையொத்தான்.*

*குருதி படிந்த கும்பகருணனது நெற்றியில் பாய்ந்து குத்திட்டு நின்ற அம்புகள் பல கதிர்களை உடைய சூரியன் தோன்றுவதற்கு முன் அருணனது உதயத்தை ஒத்தது. அருணோதயம் சிவப்பாக இருக்கும்.*

*7560.* **குன்றின் வீழ் அருவியின் குதித்துக் கோத்து இழி**
**புன் தலைக் குருதி நீர் முகத்தைப் போர்த்தலும்,**
**இன் துயில் உணர்ந்தென, உணர்ச்சி எய்தினான்;**
**வன் திறல் தோற்றிலான் மயக்கம் எய்தினான்,**

**குன்றின் வீழ் அருவியின்** - *மலையில் இருந்து விழுகின்ற அருவி போல;* **குதித்துக் கோத்து இழி** - *கும்பகருணனது நெற்றியில் இருந்து குதித்துக் கொண்டு ஒன்று சேர்ந்து விழுகின்ற;* **குருதி நீர்** - *இரத்தமாகிய நீர்;* **புன்தலை முகத்தைப்**

***போர்த்தலும்*** - *புல்லிய நிலையோடு கூடிய சுக்கிரீவனது முகத்தை நிறைத்தலும்;* ***இன்துயில் உணர்ந்து என*** - *இனிய தூக்கத்தில் இருந்து எழுந்தமை ஒப்ப;* ***உணர்ச்சி எய்தினான்*** - *நினைவு உணர்ச்சியை அடைந்தான்;* ***வன்திறல் தோற்றிலான்*** - *(அப்போது) இதுவரை யாரிடத்தும் வலிய திறல் தோலாதவனாகிய கும்பகருணன்;* ***மயக்கம் எய்தினான்*** - *மயக்கம் அடைந்தான்.*

*கும்பகருணனது நெற்றியில் இருந்து பெருகிய குருதி முகத்தில் பட்டுச் சுக்கிரீவன் மயக்கம் தெளிந்தான் என்றவாறு. ஒருவன் நினைவு பெறப் பிறிதொருவன் மயக்கம் அடைந்தான் என்றமையால் உலகியலில் இன்ப துன்பங்கள் மாறி வரும் இயல்புடையன என உணர்த்தியவாறு. சுக்கிரீவனை விடுவித்தலே நோக்கம்; அன்றியும் தோளை அரிந்து விடுவிக்க வேண்டியில்லாமல் இரண்டு அம்புகளை நெற்றியின் பால் சேர்த்து விடுவித்தலே போதுமானது ஆயின் கும்பகருணனை இகழ்ந்ததாம். அதனால் இராமனுக்குக் குறைவில்லை.*

### *சுக்கிரீவன், கும்பகருணன் மூக்கையும் காதையும் கடித்துச் செல்லுதல்*

***7561. நெற்றியில் நின்று ஒளி நெடிது இமைப்பன***
***கொற்றவன் சரம் எனக் குறிப்பின் உன்னினான்;***
***சுற்றுற நோக்கினன், தொழுது வாழ்த்தினான்--***
***முற்றிய பொருட்கு எலாம் முடிவுளான்தனை.***

***நெற்றியில் நின்று*** - *கும்பகருணனது நெற்றியில் ஊன்றி நின்று;* ***ஒளி நெடிது இமைப்பன*** - *ஒளி கொண்டு விளங்குவன;* ***கொற்றவன் சரம் என*** - *வெற்றிக்குரிய இராமனது அம்பு என்று;* ***குறிப்பின் உன்னினான்*** - *குறிப்பால் உணர்ந்தான்;* ***சுற்றுற நோக்கினான்*** - *சுற்றுறப் பார்த்து;* ***முற்றிய பொருட்கு எலாம் முடிவுளான் தனை*** - *உலகத்தில் நிரம்பிய பொருள்கள் எல்லாம் முடிவாக அடைதற்கு உரிய அவதார அம்சமான இராமனை;* ***தொழுது வாழ்த்தினான்*** - *கையால் தொழுது வாழ்த்தினான்.*

***7562. கண்டனன் நாயகன்தன்னை, கண்ணுறா,***
***தண்டல் இல் மானமும் நாணும் தாங்கினான்,***
***விண்டவன் நாசியும் செவியும் வேரொடும்***
***கொண்டனன், எழுந்து போய்த் தமரைக் கூடினான்,***

***நாயகன் தன்னைக் கண்டனன்*** - *(சுக்கிரீவன்) தலைவனாகிய இராமனைக் கண்டான்;* ***கண்ணுறா*** - *பார்த்து;* ***தண்டல் இயல் மானமும்*** - *குறைதல் இல்லாத மானத்தையும்;* ***நாணும் தாங்கினான்*** - *நாணத்தையும் தாங்கினவன் ஆகி;* ***விண்டவன்*** - *பகைவனான கும்பகர்ணனது;* ***நாசியும் செவியும்*** - *மூக்கையும் காதையும்;*

**வேரொடும் கொண்டனன்** - வேரோடு கொண்டு; **எழுந்து போய் தமரைக் கூடினான்** - புறப்பட்டுச் சென்று தம்மவருடன் கூடினான்.

*சுக்கிரீவனைக் கண்டு யாவரும் மகிழ்தல்*

***7563. வானரம் ஆர்த்தன; மறையும் ஆர்த்தன;***
***தான் அர மகளிரும் தமரும் ஆர்த்தனர்;***
***மீன் நரல் வேலையும் வெற்பும் ஆர்த்தன;***
***வானவரோடு நின்று அறமும் ஆர்த்ததே.***

**வானரம் ஆர்த்தன** - சுக்கிரீவன் திரும்பி வந்தது கண்டு குரங்குகள் ஆரவாரித்தன; **மறையும் ஆர்த்தன** - வேதங்களும் ஆரவாரித்தன; **தான் அர மகளிரும்** - தேவ மகளிரும்; **தமரும் ஆர்த்தனர்** - உறவினர்களும் பேரொலி செய்தனர்; **மீன் நரல் வேலையும்** - மீன்கள் ஒலிக்கும் கடலும்; **வெற்பும் ஆர்த்தன** - மலையும் ஒலி செய்தன; **வானவரோடு நின்று அறமும் ஆர்த்ததே** - தேவர்களுடன் சேர்ந்து நின்று அறக்கடவுளும் ஆரவாரம் செய்தது.

***7564. காந்து இகல் அரக்கன் வெங் கரத்துள் நீங்கிய***
***ஏந்தலை அகம் மகிழ்ந்து, எய்த நோக்கிய***
***வேந்தனும், சானகி இலங்கை வெஞ் சிறைப்***
***போந்தனளாம் என, பொருமல் நீங்கினான்.***

**காந்து இகல் அரக்கன்** - சினங்கொள்ளும் தன்மை உள்ள வலிமை பெற்ற கும்பகருணனுடைய; **வெங்கரத்துள் நீங்கிய ஏந்தலை** - கொடிய கைகளில் இருந்து தப்பி வெளிப்பட்ட சுக்கிரீவனை; **அகம் மகிழ்ந்து** - மனம் மகிழ்வுற்று; **எய்த நோக்கிய வேந்தனும்** - முழுமையாகப் பார்த்த இராமனும்; **சானகி இலங்கை வெஞ்சிறைப் போந்தனளாம் என** - சானகி இலங்கையின் கொடிய சிறையில் இருந்து மீண்டும் திரும்பி வந்து சேர்ந்தனளாம் என; **பொருமல் நீங்கினான்** - துன்பம் நீங்கி மகிழ்ச்சி அடைந்தான்.

கும்பகருணனின் வெங்கரத்தில் இருந்து சுக்கிரீவன் வெளிப்பட்டு வந்தது, சானகி இலங்கைச் சிறை வீடு பெற்றது போல இராமனுக்கு மனமகிழ்ச்சி தந்ததென்க. "யான் பிணித்த கைப்பிணி, கோதை வெஞ்சிலையினால் கோடி வீடு எனின், சீதையும் பெயர்ந்தனள் சிறை நின்றாம்" என்று (7556) கும்பகருணன் கூறிய வஞ்சினத்தை உடன்கொண்டு கூறியவாறு.

***7565. மத்தகம் பிளந்து பாய் உதிரம் வார்ந்து எழ,***

***வித்தகன் சரம் தொட, மெலிவு தோன்றிய***
***சித்திரம் பெறுதலின், செவியும் மூக்கும் கொண்டு***
***அத் திசைப் போயினன் அல்லது, ஒண்ணுமோ?***

***மத்தகம் பிளந்து*** *- நெற்றி பிளந்து;* ***பாய் உதிரம் வார்ந்து எழ*** *- பாய்கின்ற குருதி மிகுதியாக வெளிப்பட; வித்தகன் சரம் தொட - இராமன் அம்புகளைத் தொடுத்து விட்டதனால்;* ***மெலிவு தோன்றிய*** *- மெலிவை அடைந்த;* ***சித்திரம் பெறுதலின்*** *- தக்க சமயம் கிடைத்ததனால்;* ***செவியும் மூக்கும் கொண்டு*** *- காதையும் மூக்கையும் கடித்துக்கொண்டு;* ***அத்திசைப் போயினன்*** *- தமர் இருந்த அந்த இடத்தைப் போய்ச் சேர்ந்தான்;* ***அல்லது ஒண்ணுமோ*** *- அவ்வாறில்லா விட்டால் முடியுமோ?*

*மயங்கிய நிலையில் சுக்கிரீவனைத் தூக்கிச் சென்றது நியாயமானால் கும்பகருணன் மயங்கிய நிலையில் அவன் காதையும் மூக்கையும் குரங்கு இயல்பிற்கேற்பக் கடித்து எடுத்துச் சென்ற சுக்கிரீவன் செயலும் நியாயப்படுத்தப் படவேண்டியதே. 'அல்லது ஒண்ணுமோ' என்றது கும்பகருணனது பேர் ஆற்றலைப் பாராட்டியதே அன்றி சுக்கிரீவனை இகழ்ந்தது அன்று எனலாம்.*

### *உணர்வு பெற்ற கும்பகருணன் வாட்போர் புரிதல்*

***7566. அக் கணத்து அறிவு வந்து அணுக, அங்கைநின்று***
***உக்கனன் கவி அரசு என்னும் உண்மையும்,***
***மிக்கு உயர் நாசியும் செவியும் வேறு இடம்***
***புக்கதும், உணர்ந்தனன்--உதிரப் போர்வையான்.***

***உதிரப் போர்வையான்*** *- குருதியே போர்வையாகப் போர்க்கப்பட்ட கும்பகருணன்;* ***அக்கணத்து*** *- மூக்கும் செவியும் பறிக்கப்பட்ட அந்தக் கணத்தில்;* ***அறிவு வந்து அணுக*** *- மயக்க நிலை நீங்கி அறிவு வந்து விளங்க;* ***கவி அரசு*** *- குரங்குகளுக்குத் தலைவனாகிய சுக்கிரீவன்;* ***அங்கை நின்று உக்கனன் என்னும் உண்மையும்*** *- தன் அகங்கையில் இருந்து அப்பால் சென்று விட்டான் என்ற உண்மையையும்;* ***மிக்கு உயர் நாசியும்*** *- மிக உயர்ந்து தோன்றுகிற மூக்கும்;* ***செவியும்*** *- காதுகளும்;* ***வேறு இடம் புக்கதும் உணர்ந்தனன்*** *- வேறு இடத்திற்குப் போய் விட்டதையும் உணர்ந்தான்.*

*'நாசியும் செவியும் அறுபட்டதாக உணராமல் ஞானிகளைப் போல் 'வேறிடம் புக்கதாக' கும்பகருணன் உணர்ந்தான் என்றது ஓர் நயம்.*

***7567. தாது ராகத் தடங் குன்றம், தாரை சால்***
***கூதிர் கால் நெடு மழை சொரிய, கோத்து இழி***

***ஊதையோடு அருவிகள் உமிழ்வது ஒத்தனன்--***
***மீது உறு குருதி யாறு ஒழுகும் மேனியான்.***

***மீது உறு குருதியாறு ஒழுகும் மேனியான்*** - *நெற்றி மேல் பெருகிய ஆறு போன்ற இரத்தம் ஒழுகப் பெற்ற உடம்பினை உடையவனான கும்பகருணன்;* ***தாதுராகத் தடங் குன்றம்*** - *காவிக்கல்லால் ஆகிய சிவந்த நிறத்தைக் கொண்ட பெரிய மலையானது;* ***தாரை சால் கூதிர் கால் நெடுமழை சொரிய*** - *தாரையாக மிகுதியும் குளிர்ச்சியை வெளியிடுகின்ற கூதிர்ப்பருவ பெருமழை பொழிய;* ***கோத்து இழி அருவிகள்*** - *வெள்ளம் ஒன்று சேர்ந்து ஓடிவருகிற அருவிகளை;* ***ஊதையோடு*** - *வாடைக் காற்றோடு;* ***உமிழ்வது ஒத்தனன்*** - *வெளியிடுவதை ஒத்தனன்.*

***7568. எண்ணுடைத் தம்மையன், இனைய எண் இலாப்***
***பெண்ணுடைத் தன்மையன் ஆய பீடையால்,***
***புண்ணுடைச் செவியொடு மூக்கும் பொன்றலால்,***
***கண்ணுடைச் சுழிகளும் குருதி கால்வன.***

***எண்ணுடைத் தன்மையன்*** - *ஆராய்தல் தன்மை உடைய இராவணன்;* ***இனைய*** - *இவ்வாறான நிலையினை எண்ணாது;* ***எண் இலாப் பெண்ணுடைத் தன்மையன்*** - *ஆய்தல் இல்லாத சூர்ப்பனகையின் சொல் கேட்ட தன்மையன் ஆனதால்;* ***ஆய பீடையால்*** - *ஏற்பட்ட போரில்;* ***புண்ணுடைச் செவியொடு மூக்கும் பொன்றலால்*** - *கும்பகருணனுடைய புண்ணையுடைய காதுகளுடன் மூக்கும் அழிதலால்;* ***கண்ணுடைச் சுழிகளும் குருதி கால்வன*** - *அவனுடைய கண்ணுடைய வட்டங்களும் குருதியை வெளிப்படுத்துவனவாயின.*

*இராவணன் சூர்ப்பனகை சொல் கேட்டு ஆராய்ச்சி யின்றி, சீதையைக் கவர்ந்ததால் ஏற்பட்ட போரில் கும்பகருணன் செவியும் மூக்கும் இழந்து சினத்தால் கண்களில் குருதி வெளிப்பட நின்றான். அறுபட்ட உறுப்புகள் மட்டுமன்றி அறுபடாத உறுப்பும் குருதி வெளிப்படுத்தியமை கூறினார்,*

***7569. ஏசியுற்று எழும் விசும்பினரைப் பார்க்கும்; தன்***
***நாசியைப் பார்க்கும்; முன் நடந்த நாளுடை***
***வாசியைப் பார்க்கும்; இம் மண்ணைப் பார்க்குமால்--***
***'சீ சீ உற்றது!' எனத் தீயும் நெஞ்சினான்.***

***உற்றது*** - *தனக்கு நேர்ந்தது;* ***சீசீ எனத் தீயும் நெஞ்சினான்*** - *சீசீ என்று சொல்லி வேகின்ற நெஞ்சை உடைய கும்பகருணன்;* ***ஏசியுற்று எழும் விசும்பினரைப் பார்க்கும்*** - *தன்னை ஏசிக்கொண்டு எழுகின்ற தேவர்களைப் பார்ப்பான்;* ***தன் நாசியைப்***

***பார்க்கும்*** - *தன் மூக்கைப் பார்ப்பான்;* ***முன் நடந்த நாளுடை வாசியைப் பார்க்கும்*** - *முன் வெற்றி பெற்று நடந்த நாளுக்கும் இதற்கும் உள்ள வேறுபாட்டை எண்ணிப் பார்ப்பான்;* ***இம்மண்ணைப் பார்க்குமால்*** - *இந்த நிலத்தைப் பார்ப்பான்.*

*7570.* ***'என்முகம் காண்பதன் முன்னம், யான் அவன்-***
***தன் முகம் காண்பது சரதம்தான்' என,***
***பொன் முகம் காண்பது ஓர் தோலும், போரிடை***
***வல் முகம் காண்பது ஓர் வாளும், வாங்கினான்.***

***என்முகம் காண்பதன் முன்னம்*** - *என்னுடைய முகத்தைக் காண்பதற்கு முன்பு;* ***யான் அவன் தன் முகம் காண்பது சரதம் தான் என*** - *யான் அந்த இராமன் தன் முகத்தைப் பார்ப்பது நல்லது என்று கருதி;* ***பொன்முகம் காண்பது ஓர் தோலும்*** - *ஒளி பொருந்திய முகப் பகுதியைக் கொண்ட ஒரு கேடயத்தையும்;* ***போரிடை வல்முகம் காண்பது ஓர்வாளும்*** - *போரில் வலிய வாய் கொண்டு பொருவதான ஒப்பற்ற வாளையும்;* ***வாங்கினான்*** - *எடுத்தான்.*

*7571.* ***விதிர்த்தனன், வீசினன், விசும்பின் மீன் எலாம்***
***உதிர்த்தனன்; உலகினை அனந்தன் உச்சியோடு***
***அதிர்த்தனன்; ஆர்த்தனன்--ஆயிரம் பெருங்***
***கதிர்த் தலம் சூழ் வடவரையின் காட்சியான்.***

***ஆயிரம் பெருங் கதிர்த்தலம் சூழ்*** - *ஆயிரத்தினும் மிக்க கதிர்களைக் கொண்ட சூரிய மண்டலம் சுற்றி வருகின்ற;* ***வடவரையின் காட்சியான்*** - *வடமேரு என்று கூறத்தக்க தோற்றத்தை உடையவனான கும்பகருணன்;* ***விதிர்த்தனன் வீசினன்*** - *கேடயத்தை அசைத்து வீசி;* ***விசும்பின் மீன் எலாம் உதிர்த்தனன்*** - *வானத்தில் உள்ள மீன்கள் எல்லாம் உதிர்த்தான்;* ***உலகினை அனந்தன் உச்சியோடு அதிர்த்தனன் ஆர்த்தனன்*** - *ஆதிசேடனுடைய உச்சியில் உள்ள உலகினை அதிரச் செய்து பேரொலி செய்தான்.*

*7572.* ***வீசினன் கேடகம்; முகத்து வீங்கு கால்,***
***கூசின குரக்கு வெங் குழுவைக் கொண்டு எழுந்து,***
***ஆசைகள்தோறும் விட்டு எறிய, ஆர்த்து எழும்***
***ஓசை ஒண் கடலையும் திடர் செய்து ஓடுமால்.***

***வீசினன்*** - கும்பகருணன் வீசி எறிந்த; ***கேடகம் முகத்து வீங்குகால்*** - கேடயத்தின் முகத்தில் இருந்து மிகுதியாகத் தோன்றிய காற்றானது; ***கூசின குரங்கு வெங்குழுவைக் கொண்டு*** - அச்சம் கொண்ட குரங்குகளின் கொடிய கூட்டத்தைக் கொண்டு; ***எழுந்து ஆசைகள் தோறும் விட்டு எறிய*** - சென்று திக்குகள் தோறும் விட்டு எறிய; ***ஆர்த்து எழும் ஓசை ஒண்கடலையும் திடர் செய்தது*** - அக்குரங்குக் கூட்டங்கள் ஆர்த்து எழுகின்ற ஓசையைக் கொண்ட ஒள்ளிய கடலையும்; ***திடர் செய்து ஓடுமால்*** - மேடாகச் செய்த வண்ணம் ஓடிற்று என்க.

***7573. தோல் இடைத் துரக்கவும், துகைக்கவும், சுடர்***
***வேலுடைக் கூற்றினால் துணிய வீசவும்,***
***காலிடைக் கடல் எனச் சிந்தி, கை கெட,***
***வாலுடை நெடும் படை இரிந்து மாய்ந்ததால்.***

***தோல் இடைத் துரக்கவும்*** - கும்பகருணன் கேடயத்தை இடைய விரையச் செலுத்துவதாலும்; ***துகைக்கவும்*** - தன் காலினால் துகைத்தலாலும்; ***சுடர் வேலுடைக் கூற்றினால் துணிய வீசவும்*** - ஒளி பொருந்திய வேலாகிய யமனால் துண்டுபட வீசுவதாலும்; ***காலிடைக் கடல் என*** - பெருங்காற்று வீசுவதனால் உடைதலைக் கொண்ட கடலைப் போல; ***சிந்தி*** - சிதற; ***கைகெட*** - செயலறவு கெட்டு; ***வாலுடை நெடும்படை*** - வாலையுடைய பெரிய குரங்குப் படை; ***இரிந்து மாய்ந்ததால்*** - நிலை கெட்டு அழிந்தது.

***7574. ஏறுபட்டதும், இடை எதிர்ந்துளோர் எலாம்***
***கூறுபட்டதும், கொழுங் குருதி கோத்து இழிந்து***
***ஆறு பட்டதும், நிலம் அனந்தன் உச்சியும்***
***சேறு பட்டதும், ஒரு கணத்தில் தீர்ந்தவால்.***

***இடை எதிர்ந்துளோர் எலாம்*** - கும்பகருணனைப் போர்க்களத்தில் எதிர்த்தவர் எல்லாம் (படைக்கலங்களால்); ***ஏறுபட்டதும்*** - வடுப்பட்டதும்; ***கூறுபட்டதும்*** - துண்டம் துண்டமாகியதும்; ***கொழுங் குருதி கோத்து இழிந்து ஆறுபட்டதும்*** - மிகுதியாக குருதி வெள்ளமாகக் கோத்துத் திரண்டு பெருகி ஆறாக ஓடியதும்; ***நிலம் அனந்தன் உச்சியும் சேறுபட்டதும்*** - நிலமும் அதனைத் தாங்கியுள்ள ஆதிசேடனது உச்சியும் சேறாக ஆனதும்; ***ஒரு கணத்தில் தீர்ந்தவால்*** - ஆகிய செயல்கள் ஒரு கணத்தில் நடந்து முடிந்தன.

*இராமன்-கும்பகருணன் போர்*

***7575. 'இடுக்கு இலை; எதிர் இனி இவனை இவ் வழித்***
***தடுக்கிலையாம்எனின், குரங்கின் தானையை***

***ஒடுக்கினை, அரக்கரை உயர்த்தினாய்' எனா***
***முடுக்கினன், இராமனைச் சாம்பன் முன்னியே.***

***இடுக்கு இலை*** - இனிமேல் இப்படிப்பட்ட நெருக்கடியான நேரம் ஏற்படப் போவதில்லை; ***எதிர் இனி இவனை இவ்வழித் தடுக்கிலையாம் எனின்*** - எதிர் நின்று இப்போது இவனை இவ்விடத்தில் தடுக்காமல் போவாய் ஆனால்; ***குரங்கின் தானையை ஒடுக்கினை*** - குரங்குப் படையை ஒடுக்கி; ***அரக்கரை உயர்த்தினாய் என*** - அரக்கர் வலிமை கொள்ள உயர்த்தியவன் ஆவாய் என்று; ***இராமனைச் சாம்பன் முன்னியே முடுக்கினன்*** - இராமனைச் சாம்பவான் நெருங்கிப் போரிடத் தூண்டினான்.

*இது நெருக்கடியான தருணம். நீ இப்போது அவனைத் தடுத்துப் போரிடா விட்டால் குரங்குப் படையை ஒடுக்கி அரக்கர் படையை உயர்த்தியவன் ஆவாய் எனவே போரிடுக எனச் சாம்பவான் இராமனைத் தூண்டினான் என்க. இடுக்கு - நெருக்கடியான நிலை. முடுக்குதல்-தூண்டுதல்.*

*7576.* ***அண்ணலும் தானையின் அழிவும், ஆங்கு அவன்***
***திண் நெடுங் கொற்றமும், வலியும், சிந்தியா,***
***நண்ணினன்--நடந்து எதிர், 'நமனை இன்று இவன்***
***கண்ணிடை நிறுத்துவென்' என்னும் கற்பினான்.***

***அண்ணலும்*** - தலைமைத் தன்மை உள்ள இராமனும்; ***தானையின் அழிவும்*** - குரங்குச் சேனையின் அழிவையும்; ***ஆங்கு அவன் திண் நெடுங் கொற்றமும்*** - அப்போது அக்கும்பகருணனுடைய உறுதியான பெரிய வெற்றியையும்; ***வலியும் சிந்தியா*** - வலிமையையும் சிந்தித்து; ***நமனை இன்று இவன் கண்ணிடை நிறுத்துவென்*** - யமனை இப்போது இவன் கண்ணுக்கு எதிர் நிறுத்துவேன்; ***என்னும் கற்பினான்*** - என்னும் மனத்திண்மையோடு; ***நடந்து எதிர் நண்ணினன்*** - கும்பகருணனுக்கு எதிராக நடந்து நெருங்கினான்.

*7577.* ***ஆறினோடு ஏழு கோல், அசனி ஏறு என,***
***ஈறு இலா விசையன இராமன் எய்தனன்;***
***பாறு உகு சிறை என விசும்பில் பாறிட***
***நூறினான் வாளினால், நுணங்கு கல்வியான்.***

***ஆறினோடு ஏழுகோல்*** - பதின்மூன்று அம்புகளை; ***அசனி ஏறு என*** - இடியேறு போல; ***ஈறு இலா விசையன*** - எல்லை இல்லா விரைவுடையனவாய்; ***இராமன் எய்தனன்*** - இராமன் கும்பகருணன் மேல் எய்தான் (அவற்றை); ***நுணங்கு கல்வியான்*** - நுட்பமான போர்க்கல்வி அறிந்த கும்பகருணன்; ***விசும்பில்*** - ஆகாயத்தில்; ***பாறு உகு சிறை என பாறிட*** - பருந்து உகுக்கின்ற இறகுகள் போல சிதறி விழும்படி; ***வாளியால் நூறினான்*** - தன் அம்புகளால் பொடியாக்கி அழித்தான்.

***7578. ஆடவர்க்கு அரசனும், தொடர, அவ் வழி,***
***கோடையின் கதிர் எனக் கொடிய கூர்ங் கணை***
***ஈடு உறத் துரந்தனன்; அவையும் இற்று உக,***
***கேடகப் புறத்தினால் கிழிய வீசினான்.***

***ஆடவர்க்கு அரசனும்*** - *ஆடவர்க்குத் தலைவன் ஆகிய இராமனும்;* ***தொடர*** - *தொடர்ச்சியாக;* ***அவ்வழி*** - *அப்போது;* ***கோடையின் கதிர் எனக்*** - *கோடைக்காலத்துக் கதிரவனின் கதிர்கள் போல உள்ள;* ***கொடிய கூர்ங்கணை*** - *கொடுமையுள்ள கூர்மையான அம்புகளை;* ***ஈடு உறத் துரந்தனன்*** - *வலிமை பொருந்தச் செலுத்தினான்;* ***அவையும் இற்று உக கிழிய*** - *அவ்வம்புகள் முறிந்து விழவும், கிழியவும்;* ***கேடகப் புறத்தினால் வீசினான்*** - *கும்பகருணன் கேடயத்தின் பின்புறத்தால் வீசினான்.*

***7579. சிறுத்தது ஓர் முறுவலும் தெரிய, செங் கணான்,***
***மறித்து ஒரு வடிக் கணை தொடுக்க, மற்று அவன்***
***ஒறுத்து ஒளிர் வாள் எனும் உரவு நாகத்தை***
***அறுத்தது கலுழனின், அமரர் ஆர்க்கவே.***

***சிறுத்தது ஓர் முறுவலும் தெரிய*** - *சிறிதாகிய ஒப்பற்ற புன்முறுவல் தோன்ற;* ***செங்கணான்*** - *சிவந்த தாமரைக் கண்ணனாகிய இராமன்;* ***மறித்து ஒரு வடிக்கணை தொடுக்க*** - *மீண்டும் ஒரு கூர்மையான அம்பைச் செலுத்த;* ***மற்று அவன்*** - *(அது) அவனுடைய;* ***ஒறுத்து ஒளிர் வாள் எனும் உரவு நாகத்தை*** - *பகைவரை வெட்டி ஒளிவிடுகின்ற வாள் என்னும் வலிய நாகத்தை;* ***அமரர் ஆர்க்கவே*** - *தேவர்கள் பேரொலி செய்ய;* ***கலுழனின் அறுத்தது*** - *கருடனைப் போல் அறுத்து வீழ்த்தியது.*

***7580. 'அற்றது தடக் கை வாள் அற்றது இல்' என,***
***மற்று ஒரு வயிர வாள் கடிதின் வாங்கினான்,***
***'முற்றினென் முற்றினென்' என்று, முன்பு வந்து,***
***உற்றனன்--ஊழித் தீ அவிய ஊதுவான்.***

***ஊழித்தீ அவிய ஊதுவான்*** - *ஊழிக்காலத்துத் தீயும் அவியும்படி பெருமூச்சு விடுபவனாகிய அக்கும்பக்கருணன்;* ***தடக்கை வாள் அற்றது*** - *பெரிய கையில் உள்ள வாள் அழிந்தது;* ***அற்றது இல் என*** - *அழிய வில்லை என்று கண்டோர் எண்ணும்படி;* ***மற்று ஒரு வயிர வாள் கடிதின் வாங்கினான்*** - *வேறு ஒரு வலிமையான வாளை விரைவாகக் கையில் எடுத்துக்கொண்டு;* ***முற்றினென் முற்றினென் என்று*** - *யாவரையும் முடித்து விட்டேன்; முடித்து விட்டேன் என்று சொல்லிக் கொண்டு;*

***முன்பு வந்து உற்றனன்*** - *இராமன் முன்னே வந்து நின்றான். கும்பகருணன் அழிந்த வாளுக்குப் பதிலாக அது அழியவில்லையோ என்று கண்டோர் கருத விரைவாக வேறு ஒரு வாள் கைக்கொண்டு யாவரையும் முடித்துவிட்டேன் முடித்துவிட்டேன் என்று சொல்லிக்கொண்டு முன்பு வந்து உற்றனன் என்க. தடக்கை-உரிச் சொல் தொடர். முற்றினென்- தன்மை ஒருமை வினைமுற்று. முற்றினென் முற்றினென்-அடுக்குத் தொடர்.*

***7581. அந் நெடு வாளையும் துணித்த ஆண்தகை,***
***பொன் நெடுங் கேடகம் புரட்டி, போர்த்தது ஓர்***
***நல் நெடுங் கவசத்து, நாம வெங் கணை***
***மின்னொடு நிகர்ப்பன, பலவும் வீசினான்.***

***அந்நெடு வாளையும்*** - *அந்தப் பெரிய வாளையும்;* ***துணித்த*** - *அம்புகளால் துண்டித்த;* ***ஆண்தகை*** - *ஆண்மைப் பண்புள்ள இராமன்;* ***பொன் நெடுங் கேடகம் புரட்டி*** - *அக்கும்பகருணனுடைய அழகிய நெடிய கேடயத்தை வீழ்த்தி;* ***போர்த்தது ஓர் நல் நெடுங் கவசத்து*** - *அவன் உடலைப் போர்த்துக் கொண்டிருந்த நல்ல நெடிய கவசத்தில்;* ***மின்னொடு நிகர்ப்பன*** - *மின்னலை ஒப்பவையான;* ***நாம வெங்கணை*** - *அச்சத்தைத் தரும் கொடிய கணைகள்;* ***பலவும் வீசினான்*** - *பலவற்றைப் பாய்ச்சினான்.*

*இராவணன் அனுப்பிய பெரும் படை உதவிக்கு வருதல்*

***7582. அந்தரம் அன்னது நிகழும் அவ் வழி,***
***இந்திரன் தமரொடும் இரியல் எய்திட,***
***சிந்துவும் தன் நிலை குலைய, சேண் உற***
***வந்தது, தசமுகன் விடுத்த மாப் படை..***

***அந்தரம் அன்னது நிகழும் அவ்வழி*** - *அப்படிப்பட்ட கேடு நிகழ்கின்ற அந்த நேரத்தில்;* ***இந்திரன் தமரொடும் இரியல் எய்திட*** - *தேவர் தலைவன் தன் உறவினர்களோடு நிலை கெட்டு ஓட;* ***சிந்துவும் தன் நிலை குலைய*** - *கடல்கள் தம் நிலை குலைந்து போக;* ***தசமுகன் விடுத்த மாப்படை*** - *இராவணன் அனுப்பிய பெரிய படை;* ***சேண் உற வந்தது*** - *வெகு தொலைவில் இருந்து நெருங்கி வந்தது.*

***7583. வில் வினை ஒருவனும், 'இவனை வீட்டுதற்கு***
***ஒல் வினை இது' எனக் கருதி, ஊன்றினான்;***
***பல் வினை தீயன பரந்த போது ஒரு***

***நல்வினை ஒத்தது, நடந்த தானையே.****

***வில்வினை ஒருவனும்*** - *வில் தொழிலில் ஒப்பற்ற இராமனும்;* ***இவனை வீட்டுதற்கு*** - *இக்கும்பகருணனை அழிப்பதற்கு;* ***ஒல்வினை இது*** - *ஏற்ற போர்த்தொழில் செய்யத்தக்க காலம் இது;* ***எனக் கருதி*** - *என்று எண்ணி;* ***ஊன்றினான்*** *- அவன் எதிர் ஊன்றினான்;* ***தீயன பல்வினை பரந்தபோது*** - *தீயவினைகள் பலவாக வந்தபோது;* ***ஒரு நல்வினை ஒத்தது நடந்த தானையே*** - *அவற்றைத் தடுக்கத் தக்க ஒப்பற்ற நல்வினையை ஒத்தது நடந்து வந்து சேர்ந்த படைகள் என்றவாறு;*

*இப்பாடலில் வரும் இறுதி இரண்டு அடிகள் ஊன்றி நோக்குதற்குரியன. நடந்ததானை - இராவணன் அனுப்பிய படைகளைக் குறிப்பதாகக் கொண்டால், பல்வினை தீயன பரந்த என்பது குறிக்கும் பொருள் என்ன என்ற குழப்பம் தோன்றும், பல்வினை தீயன பரந்து போது - கும்பகருணனுக்கு உதவியாக இராவணன் அனுப்பிய தீய பல்படை போர்க்களத்தில் பரந்த போது ஊன்றினான் ஆகிய இராமன் பின் சென்ற படை நல்வினையை ஒத்தது எனக் கோடலே பொருந்தும். பல்வினை தீயன பரந்தபோது கும்பகருணனுக்குத் துணையாய் இராவணன் அனுப்பிய படை. நல்வினை ஒத்தது நடந்த தானையே- இராமனுக்குப் பின் நடந்த படை எனக் கோடலே பொருந்தும். (இராவணன் அனுப்பிய உதவிப் படைகள் வந்து சேர்ந்தவுடன்) வில் வினையில் ஒருவனாகிய கும்பகருணனும் இராமனை அழிப்பதற்குத் தக்க சமயம் இது என்று கருதி போரில் கருத்தூன்றினான். பல தீய வினைகள் மேலும் மேலும் பரந்தபோது ஒரே ஒரு நல்வினை வந்தது போல உதவிப்படை இருந்தது எனச் சொல்லி போர்க்களத்தில் தோல்விகளைச் சந்தித்துத் துன்புறும் வேளையில் அண்ணன் அனுப்பிய படை நல்வினை போல வந்தது என்று தம்பி மகிழ்வதாகவே கூறுதலில் தவறில்லை. அப்போதைக்கு அவன் நிலைக்கு அவ் உதவிப்படை ஆறுதலை தருவது ஆதலின் என்பது மகாவித்துவான் மயிலம். வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து. இக்கருத்துக்கு வில்வினை ஒருவன் கும்பகருணன் என்றும் இவனை-இராமனை என்றும் பொருள் மாற்றினால் போதும்.*

*<u>வந்த சேனையை இராமன் எதிர்த்தலும் கும்பகருணன் பொருது தனித்து நிற்றலும்</u>*

*7584.* **கோத்தது புடைதொறும் குதிரை தேரொடு ஆள்**
**பூத்து இழி மதமலை மிடைந்த போர்ப் படை**
**காத்தது கருணனை; கண்டு, மாய மாக்**
**கூத்தனும், 'வருக!' எனக் கடிது கூவினான்.**

***குதிரை தேரொடு ஆள்*** - *குதிரையும் தேரும் காலாட்படையும்;* ***பூத்து இழி மதமலை*** *- தோன்றிப் பெருகுகின்ற மதநீரைக் கொண்ட யானையும்;* ***மிடைந்த போர்ப்படை*** *- நெருங்கிய போர் செய்ய வல்ல படைகள்;* ***புடை தொறும் கோத்தது*** *- பக்கங்களில் சூழ்ந்து;* ***கருணனைக் காத்தது கண்டு*** - *கும்பகருணனைக் காக்கத் தொடங்கியது கண்டு;* ***மாயமாக் கூத்தனும்*** *- மாயக் கூத்தனாகிய அவதார இராமனும்;* ***கடிது வருக எனக் கூவினான்*** *- விரைவாக வருக என அப்படையை அழைத்தான்.*

***7585. சூழி வெங் கட கரி, புரவி தூண்டு தேர்,***
***ஆழி வெம் பெரும் படை, மிடைந்த ஆர்கலி***
***ஏழ்-இரு கோடி வந்து எய்திற்று என்பரால்;***
***ஊழியின் ஒருவனும், எதிர் சென்று, ஊன்றினான்.***

**சூழி வெங்கடகரி** - முகபடாம் அணிந்த கொடிய மதநீர் ஒழுகும் யானையும்; **புரவி** - குதிரையும்; **தூண்டு ஆழி தேர்** - செலுத்தப்படுகிற பெரிய சக்கரங்களை உடைய தேரும்; **வெம்பெரும் படை** - கொடிய பெரிய காலாட்படையும்; மிடைந்த - நெருங்கிய; **ஏழ் இரு கோடி ஆர்கலி வந்து எய்திற்று** - பதினான்கு கோடி பெரும் படைக்கடல் வந்து சேர்ந்தது; **ஊழியின் ஒருவனும்** - ஊழிக்காலத்திலும் அழியாது நிற்பவனாகிய திருமாலின் அவதாரமாகிய இராமனும்; **எதிர்சென்று ஊன்றினான் என்பரால்** - எதிரே போய் தடுத்து நின்றான் என்பர்.

நால்வகைப் படையும் ஏழ் இரு கோடி வந்தது. ஊழியின் ஒருவனும் எதிர் சென்று ஊன்றினான் என்க. குழி-முகபடாம். ஆழி-சக்கரம். ஆர்கலி-கடல். ஆல்-அசை.

***7586. காலமும், காலனும், கணக்கு இல் தீமையும்,***
***மூலம் மூன்று இலை என வகுத்து முற்றிய,***
***ஞாலமும் நாகமும் விசும்பும் நக்குறும்,***
***சூலம் ஒன்று அரக்கனும் வாங்கித் தோன்றினான்.***

**காலமும்** - ஆயுள் கால எல்லையும்; **காலனும்** - யமனும்; **கணக்கு இல் தீமையும்** - கணக்கற்ற தீமையும்; **மூலம்** - என்ற மூலகாரணம் மூன்றும்; **மூன்று இணை என வகுத்து முற்றிய** - மூன்று இலையாக அமைக்கப் பெற்றுப் படையுருவம் முற்றுப்பெற்ற; **ஞாலமும்** - மண்ணுலகும்; நரகமும் - பாதாள உலகும்; **விசும்பும்** - ஆகாயமும்; **நக்குறும்** - என்ற மூன்றையும் அழிக்கும் வல்லமை பொருந்திய; **சூலம் ஒன்று** - சூலம் ஒன்றை; **அரக்கனும் வாங்கித் தோன்றினான்** - கும்பகருணன் கையில் கொண்டு தோன்றினான்.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***7587. 'அரங்கு இடந்தன, அறு குறை நடிப்பன***
***அல்ல' என்று இமையோரும்,***
***'மரம் கிடந்தன, மலைக் குவை கிடந்தன***
***வாம்' என மாறாடி,***
***கரம் கிடந்தன காத்திரம் கிடந்தன,***
***கறை படும்படி கவ்விச்***
***சிரம் கிடந்தன, கண்டனர்; கண்டிலர்,***

**உயிர்கொடு திரிவாரை.**

***இமையோரும்*** - *தேவர்களும்;* ***அரங்கு இடந்தன*** - *போர்க்களத்தில் (இராமனது அம்பால்) அறுத்து வீழ்த்தப்பட்ட;* ***அறுகுறை நடிப்பன அல்ல என்று*** - *தலையற்ற உடற்குறைகள் நடிப்பன அல்ல என்றும்;* ***மரங்கிடந்தன*** - *மரத்துண்டங்கள் கிடக்கின்றன;* ***மலைக்குவை கிடந்தவாம்*** - *மலைக் குவியல்கள் கிடக்கின்றனவாம்;* ***என மாறாடி*** - *என்று மாறுபட்டுக் கூறுமாறு;* ***கரம் கிடந்தன காத்திரம் கிடந்தன*** - *கைகளோடு கூடியனவாய வீரர்களின் உடல்கள் கிடந்தன;* ***கறை படும்படி கவ்வி சிரம் கிடந்தன*** *-குருதிக் கறை படும்படி மண்ணைக் கவ்விக் கொண்டு வீரர்களின் தலைகள் கிடந்தன;* ***கண்டனர்*** - *ஆகியவற்றைக் கண்டனர்;* ***உயிர் கொடு திரிவாரைக் கண்டிலர்*** - *உயிர் கொண்டு உலவுபவர்களைக் கண்டிலராயினர்.*

*இராமனது அம்பால், மரங்கள் கிடந்தன போலக் கையொடு கூடிய வீரர்களின் உடலங்களும், மலைக்குவை கிடந்தன போல், கறைபடும்படி கவ்விச் சிரம் கிடத்தலையும் கண்டனர் அன்றி உயிரோடு உள்ளவர்களைத் தேவர்கள் கண்டிலர். அரங்கு-போர்க்களம். இடத்தல்- அறுத்து வீழ்த்தப்படுதல். அறுகுறை- கவந்தம். மாறாடி-மாறுபட்டு மயங்கி. காத்திரம்-உடல்.*

***7588.*** **இற்ற அல்லவும், ஈர்ப்புண்ட அல்லவும்,**
**இடை இடை முறிந்து எங்கும்**
**துற்ற அல்லவும், துணிபட்ட அல்லவும்,**
**சுடு பொறித் தொகை தூவி**
**வெற்ற வெம் பொடி ஆயின அல்லவும்,**
**வேறு ஒன்று நூறு ஆகி**
**அற்ற அல்லவும், கண்டிலர் படைக்கலம்--**
**அடு களம் திடர் ஆக.**

***அடுகளம் திடர் ஆக*** - *போர்க்களம் மேடாகுமாறு;* ***இற்ற அல்லவும்*** - *முறிந்து போனவையல்லனவும்;* ***ஈர்ப்புண்ட அல்லவும்*** - *குருதிப் பெருக்கால் இழுத்துக்கொண்டு போகப்பட்டவை யல்லனவும்;* ***இடை இடை முறிந்து எங்கும் துற்ற அல்லவும்*** - *இடை இடையே முறிந்து எல்லாவிடங்களையும் தூர்த்தன அல்லாதனவும்;* ***துணிபட்ட அல்லவும்*** - *துண்டு பட்டவை யல்லனவும்;* ***சுடு பொறித் தொகை தூவி*** - *சுடுகின்ற தீப்பொறிச் சுடர்களைச் சிந்தி;* ***வெற்ற வெம்பொடி ஆயின அல்லவும்*** - *வீணாக வெவ்விய பொடியாகிப் போயின வல்லவும்;* ***வேறு ஒன்று நூறு ஆகி அற்ற அல்லவும்*** - *வெவ்வேறாக நூறு துண்டாகி இல்லாமல் போயின அல்லவும்;* ***படைக்கலம் கண்டிலர்*** - *(ஆகியவற்றைக் கண்டனரல்லது) செவ்வனே உள்ள படைக்கலங்களைக் காண மாட்டாதாராயினர் பிறர்.*

*அடுகளத்தில் அரக்கரது படைக்கலங்கள் முழுவதும் அழிந்து கிடந்தனவன்றிச் செவ்விய படைக்கலம் எதுவுமில்லை.*

***7589. படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன பகழிகள்***
***பாகரைப் பறிந்து ஓடி,***
***குடைந்து, வையகம் புக்குறத் தேக்கிய***
***குருதியால் குடர் சோரத்***
***தொடர்ந்து, நோயொடும் துணை மருப்பு இழந்து, தம்***
***காத்திரம் துணி ஆகிக்***
***கிடந்த அல்லது, நடந்தன கண்டிலர்--***
***கிளர் மதகிரி எங்கும்.***

***கிளர் மதகிரி*** - *மிக்க மதநீர் ஒழுகும் மலை போன்ற யானைகள்;* ***படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன பகழிகள்*** - *பரந்த தலைமீது பாய்ந்தனவாகிய அம்புகள்;* ***குடைந்து*** - *குடைவதனால்;* ***பாகரைப் பறிந்து ஓடி*** - *பாகர்களின் சொல்லைக் கடந்து ஓடி;* ***வையகம் புக்குறத்தேக்கிய குருதியால்*** - *பூமியில் மிகுதியாகப் புகுந்து தேங்கும் அளவு பெருகிய இரத்தத்தால்;* ***குடர சோர நோயொடும் தொடர்ந்து*** - *குடல் வெளிப்பட மரண நோயோடு தொடர்ந்து சென்று;* ***துணை மருப்பு இழந்து*** - *இரு தந்தங்களையும் இழந்து;* ***தம் காத்திரம் துணி ஆகி*** - *தங்கள் உடல்களும் துணிபட்டுக்;* ***கிடந்த அல்லது*** - *கிடந்தவை அல்லது;* ***எங்கும் நடந்தன கண்டிலர்*** - *உயிருடன் நடப்பனவற்றை எங்கும் எவரும் கண்டிலர்.*

***7590. வீழ்ந்த வாளன, விளிவுற்ற பதாகைய,***
***வெயில் உமிழ் அயில் அம்பு***
***போழ்ந்த பல் நெடும் புரவிய, முறை முறை***
***அச்சொடும் பொறி அற்று,***
***தாழ்ந்த வெண் நிணம் தயங்கு வெங் குழம்பிடைத்***
***தலைத்தலை மாறாடி,***
***ஆழ்ந்த அல்லது, பெயர்ந்தன கண்டிலர்--***
***அதிர் குரல் மணித் தேர்கள்.***

***அதிர் குரல் மணித் தேர்கள்*** - *ஒலிக்கின்ற குரலை உடைய மணிகள் கட்டப்பெற்ற தேர்கள்;* ***வீழ்ந்த வாளன*** - *வீழ்ந்த ஒளியினையுடையனவும்;* ***விளிவுற்ற பதாகைய*** - *அழிவுற்ற கொடிகளையுடையனவும்;* ***வெயில் உமிழ் அயில் அம்பு*** - *ஒளி விடுகிற கூர்மையான அம்புகள்;* ***போழ்ந்த பல்நெடும் புரவிய*** - *பிளந்த பலவாகிய பெரிய குதிரைகளை உடையனவுமாய்;* ***முறை முறை*** - *முறை முறையே;* ***அச்சொடும் பொறி அற்று*** - *அச்சுடன் இயந்திரமும் அழிந்து;* ***தாழ்ந்த வெண் நிணம்*** - *இழிவான வெள்ளிய கொழுப்புடன்;* ***தயங்கு வெங்குழம்பிடை*** - *விளங்குகிற குருதிக் குழம்பின் இடையில்;* ***தலைத்தலை மாறாடி*** - *இடந்தோறும் இடந்தோறும் மாறுபட்டு;* ***ஆழ்ந்த அல்லது*** - *ஆழ்ந்துவிட்டன அல்லது;* ***பெயர்ந்தன கண்டிலர்*** - *நல்லநிலையில் ஓடுவன கண்டிலர்.*

***7591. ஆடல் தீர்ந்தன, வளை கழுத்து அற்றன,***
***அதிர் பெருங் குரல் நீத்த,***
***தாள் துணிந்தன, தறுகண் வெங் கரி நிரை***
***தாங்கிய பிணத்து ஓங்கல்***
***கோடு அமைந்த வெங் குருதி நீர் ஆறுகள்***
***சுழிதொறும் கொணர்ந்து உந்தி,***
***ஓடல் அன்றி, நின்று உகள்வன கண்டிலர்--***
***உரு கெழு பரி எல்லாம்.***

***உருகெழு பரி எல்லாம்*** - *நிறம் விளங்குகின்ற குதிரைகள் எல்லாம்; ஆடல் தீர்ந்தன - வலிமை குறைந்தனவாய்;* ***வளை கழுத்து அற்றன*** *- வளைந்த கழுத்து இல்லாதனவாய்;* ***அதிர் பெருங்குரல் நீத்த*** *- ஒலிக்கின்ற பெருங்குரலை விட்டனவுமாய்;* ***தாள் துணிந்தன*** *- தாள் துண்டுபட்டனவுமாய்;* ***தறுகண் வெங்கரி நிரை*** *- அஞ்சாமை உடைய கொடிய யானைக் கூட்டங்களால்;* ***தாங்கிய பிணத்து ஓங்கல்*** *- தோன்றிய பிணமலையின்;* ***கோடு அமைந்த*** *- கரை அமைந்த;* ***வெங்குருதி நீர் ஆறுகள்*** *- வெப்பமான குருதிநீர் ஆறுகளின்;* ***சுழி தொறும் கொணர்ந்து உந்தி ஓடல் அன்றி*** *- சுழிகள் தோறும் கொண்டு தள்ளப் பெற்று ஓடுவன அன்றி;* ***நின்று உகள்வன கண்டிலர்*** *- உயிரோடு நின்று நடப்பனவற்றைக் கண்டிலர்.*

*பரிகள் உறுப்பும் உயிரும் இழந்து யானைகளின் பிண மலையைக் கரையாகக் கொண்டு ஓடிய குருதி ஆற்றில் இழுத்துச் செல்லப்பட்டன.*

*(320)*

***7592. வேதநாயகன் வெங் கணை வழக்கத்தின்***
***மிகுதியை வெவ்வேறு இட்டு***
***ஓதுகின்றது என்? உம்பரும், அரக்கர் வெங்***
***களத்து வந்து உற்றாரைக்***
***காதல் விண்ணிடைக் கண்டனர்; அல்லது,***
***கணவர்தம் உடல் நாடும்***
***மாதர் வெள்ளமே கண்டனர்; கண்டிலர்,***
***மலையினும் பெரியாரை.***

***வேதநாயகன்*** *- வேதங்களுக்கெல்லாம் தலைவனான இராமன்;* ***வெங்கணை வழக்கத்தின் மிகுதியை*** *- கொடிய அம்புகளை எய்த முறையின் மிகுதியை;* ***வெவ்வேறு இட்டு ஓதுகின்றது என்?*** *- வெவ்வேறாக வகுத்துப் பிரித்துச் சொல்ல வேண்டுவது எதற்கு?;* ***உம்பரும்*** *- தேவர்களும்;* ***வெங்களத்து வந்து உற்றாரை அரக்கர்*** *- கொடிய போர்க் களத்திற்குப் போரிட வந்து உற்றவர்களான அரக்கர்களை;* ***காதல் விண்ணிடைக் கண்டனர் அல்லது*** *- விரும்பும் தன்மை உடைய வானுலகத்தில் கண்டனரே அல்லாமல்;* ***மலையினும் பெரியாரை*** *- மலையினும் மாணப் பெருந்தோற்றம் உடைய அந்த அரக்கர்களை;* ***கண்டிலர்*** *- (உயிரோடு போர்க்களத்தில்*

*கண்டிலர்); **கணவர் தம் உடல் நாடும்** - போர்க்களத்தில் கணவரது உடலைத் தேடிப் பார்க்கின்ற; **மாதர் வெள்ளமே கண்டனர்** - அரக்க மாதர்களுடைய வெள்ளத்தையே கண்டனர்.*

*இராமனின் வில்லாற்றல் பெருமையை வெவ்வேறாக வகுத்துக் கூற வேண்டியது எற்றுக்கு, போருக்கு வந்தவர்களைத் தேவர்கள் விண்ணிடைக் கண்டனர். போர்க்களத்தில் கணவர் உடலைத் தேடி ஓடும் மகளிர் வெள்ளமே கண்டனர்.*

***7593. பனிப் பட்டாலெனக் கதிர் வரப் படுவது***
***பட்டது, அப் படை; பற்றார்***
***துனிப்பட்டார் எனத் துளங்கினர் இமையவர்;***
***'யாவர்க்கும் தோலாதான்***
***இனிப் பட்டான்' என, வீங்கின அரக்கரும்***
***ஏங்கினர்; 'இவன், அந்தோ,***
***தனிப்பட்டான்!' என, அவன் முகம் நோக்கி ஒன்று***
***உரைத்தனன், தனி நாதன்:***

***கதிர்வரப் பனிப்பட்டாலென** - கதிரவன் வருகையால் பனி இல்லாமல் ஒழிந்தது போல; **அப்படை படுவது பட்டது** - அந்த அரக்கர் பெரும்படை இல்லாமல் பட்டு அழிந்தது; **இமையவர்** - தேவர்கள்; **பற்றார் துனிப்பட்டார் எனத் துளங்கினர்** - பகைவர்கள் வெறுப்படைந்தார்கள் என மகிழ்ச்சியால் விளக்கம் பெற்றார்கள்; **யாவர்க்கும் தோலாதான்** - எவருக்கும் தோலாதவனான கும்பகருணன்; **இனிப் பட்டான் என** - இனி இறந்து படுவான் என; **வீங்கின அரக்கரும் ஏங்கினர்** - மகிழ்ந்த அரக்கர்களும் ஏக்கமுற்றார்கள்; **தனிநாதன்** - ஒப்பற்ற தலைவனாகிய இராமன்; **இவன் அந்தோ தனிப்பட்டான் என** - இந்தக் கும்பகருணன் ஐயோ தனிமையாக ஆகிவிட்டான் என்ற இரக்கத்தால்; **அவன் முகம் நோக்கி ஒன்று உரைத்தனன்** - அவனுடைய முகத்தைப் பார்த்து ஒன்று கூறத் தொடங்கினான்.*

*இராமன் கும்பகருணன் உரையாடல்*

***7594. 'ஏதியோடு எதிர் பெருந் துணை இழந்தனை;***
***எதிர் ஒரு தனி நின்றாய்;***
***நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்,***
***நின் உயிர் நினக்கு ஈவென்;***
***போதியோ? பின்றை வருதியோ? அன்று எனின்,***
***போர் புரிந்து இப்போதே***
***சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி,***
***சமைவுறத் தெரிந்து, அம்மா!***

***ஏதியோடு எதிர் பெருந்துணை இழந்தனை*** - *படைக்கலங்களுடன் எதிர்க்க வல்ல பெருந்துணையான படைகளை இழந்தாய்;* ***ஒரு தனி எதிர்நின்றாய்*** - *தன்னந் தனியனாய் எதிரே நின்றாய்;* ***நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்*** - *நீதிநெறி தவறாத வீடணனுடன் பிறந்தனை ஆதலின்;* ***நின் உயிர் நினக்கு ஈவென்*** - *உன் உயிரை உனக்குத் தருவேன்;* ***போதியோ*** - *இப்போது இலங்கைக்குத் திரும்பிப் போய் விடுகிறாயா?;* ***பின்றை வருதியோ*** - *பின்பு மீண்டும் வருகிறாயா?;* ***அன்று எனின் போர் புரிந்து இப்போதே சாதியோ?*** - *அல்ல எனின் போர் செய்து இப்போதே இறந்து படுகிறாயோ?;* ***உனக்கு உறுவது சமைவுறத் தெரிந்து சொல்லுதி*** - *உனக்குப் பொருந்தியதை அமைவுடன் ஆய்ந்து சொல்லுக.*

***7595. 'இழைத்த தீவினை இற்றிலது ஆகலின்,***
***யான் உனை இளையோனால்***
***அழைத்த போதினும் வந்திலை, அந்தகன்***
***ஆணையின் வழி நின்றாய்;***
***பிழைத்ததால் உனக்கு அருந் திரு, நாளொடு;***
***பெருந் துயில் நெடுங் காலம்***
***உழைத்து வீடுவது ஆயினை; என் உனக்கு***
***உறுவது ஒன்று? உரை' என்றான்.***

***இழைத்த தீவினை இற்றிலது ஆகலின்*** - *நீ முன்பு செய்துள்ள தீவினை நீங்கவில்லை ஆதலால்;* ***யான் உனை இளையோனால் அழைத்த போதினும் வந்திலை*** - *நான் உன்னை இளையவனாகிய வீடணன் மூலம் அழைத்த போதும் வந்திடாமல்;* ***அந்தகன் ஆணையின் வழி நின்றாய்*** - *யமனது ஆணைக்கு உட்பட்டு நின்றாய்;* ***உனக்கு அருந்திரு நாளொடு பிழைத்ததால்*** - *நீ யான் அழைத்து வாராமையால் பெருஞ்செல்வத்தையும்வாழ்நாளையும் தவற விட்டனை;* ***பெருந்துயில் நெடுங்காலம் உழைத்து வீடுவது ஆயினை*** - *பெருந்துயிலை நெடுங்காலம் செய்து இறப்பதற்கு ஒருப்பட்டு நின்றாய்;* ***என் உனக்கு உறுவது ஒன்று உரை என்றான்*** - *உன் மனத்தில் உறுவது எதுவோ அதனைச் சொல் என்றான் இராமன்.*

***7596. 'மற்று எலாம் நிற்க; வாசியும், மானமும்***
***மறத்துறை வழுவாத***
***கொற்ற நீதியும், குலமுதல் தருமமும்***
***என்று இவை குடியாகப்***
***பெற்ற நுங்களால், எங்களைப் பிரிந்து, தன்***
***பெருஞ் செவி மூக்கோடும்***
***அற்ற எங்கைபோல், என் முகம் காட்டி நின்று***
***ஆற்றலென் உயிர் அம்மா!***

*(அது கேட்ட கும்பகருணன்)* ***மற்று எலாம் நிற்க*** *- நீ கூறிய மற்றவைகள் எல்லாம் இருக்கட்டும்;* ***வாசியும்*** *- மிக்குத் தோன்றுகின்ற சிறப்பும்;* ***மானமும்*** *- மானமும்;* ***மறத்துறை வழுவாத கொற்ற நீதியும்*** *- வீரத்துறையில் இருந்து தவறாத வெற்றியோடு பொருந்திய நீதியும்;* ***குலமுதல் தருமமும்*** *- குலத்துக்கு முதன்மையாக உள்ள அறங்களும்;* ***என்று இவை குடியாகப் பெற்ற நுங்களால்*** *- என்னும் இவை குடியிருக்கும் இடமாக உள்ள உங்களால்;* ***எங்களைப் பிரிந்து*** *- எங்களை விட்டுப் பிரிந்து போய்;* ***தன் பெருஞ்செவி மூக்கோடும் அற்ற எங்கை போல்*** *- தன்னுடைய பெரிய காதுகளையும் மூக்கையும் இழந்த எமது தங்கையைப் போல;* ***என் முகம் காட்டி நின்று ஆற்றலென் உயிர்*** *- என் முகத்தைக் காட்டிக்கொண்டு உயிரோடு இருக்கப் பொறுக்கேன்.*

*வாசியும், மானமும், கொற்றமும், மறமும் உள்ள உங்களால் எங்கை காதும் மூக்கும் இழந்து உயிர் வாழ்வது போல நான் காதும் மூக்கும் இழந்து உயிர் வாழப் பொறேன். தான் உறுப்பிழந்து உயிர் வாழக் கூடாது என்ற மான உணர்வு மிகுதியால் கும்பகருணன், "மற்று எலாம் நிற்க" என்கிறான். நீங்கள் சிறப்பும் மானமும், மறத்துறை வழுவாத கொற்றநீதியும் உடையவர்கள். ஆனால் உங்களால்தான் எங்கை பெருஞ்செவியும் மூக்கும் இழந்தாள் என்று கூறும் பகுதியில் எள்ளல் குறிப்புக் காண்க. வாசி-மிகுந்து தோன்றுகிற சிறப்பு. அம்மா- கேட்பிக்கும் சொல், அசை எனினுமாம்.*

***7597. 'நோக்கு இழந்தனர் வானவர், எங்களால்;***
***அவ் வகை நிலை நோக்கி,***
***"தாக்கு அணங்கு அனையவள், பிறர் மனை" எனத்***
***தடுத்தனென்; "தக்கோர் முன்***
***வாக்கு இழந்தது" என்று இயர்வுறுவேன் செவி-***
***தன்னொடு மாற்றாரால்***
***மூக்கு இழந்தபின் மீளல் என்றால், அது***
***முடியுமோ?-முடியாதாய்!***

***முடியாதாய்*** *- அழிவு இல்லாதவனே;* ***எங்களால் வானவர் நோக்கு இழந்தனர்*** *- எங்களால் தேவர்கள் பெருமை இழந்தார்கள்;* ***அவ்வகை நிலை நோக்கி*** *- அந்த வகையான நிலைமையினைப் பார்த்ததால்;* ***தாக்கு அணங்கு அனையவள் பிறர் மனை எனத் தடுத்தனென்*** *- தீண்டி வருத்தும் அணங்கை ஒத்த சீதை பிறர் மனைவி ஆகவே கைப்பற்றலாகாது எனத் தடுத்தேன்;* ***தக்கோர் முன் வாக்கு இழந்தது என்று அயர்வுறுவேன்*** *- அது ஏற்றுக் கொள்ளப் படாமையால் தக்கவர்களுக்கு முன் பேசுவதற்கு உரிய வாக்குப் போய்விட்டது என்று வருந்துகிறேன்;* ***மாற்றாரால்*** *- அப்படிப்பட்ட நான் பகைவரால்;* ***செவி தன்னோடு மூக்கு இழந்தபின்*** *- காதுகளையும் மூக்கையும் இழந்தபிறகு;* ***மீளல் என்றால் அது முடியுமோ*** *- திரும்பி நகருக்குத் திரும்புவதென்றால் அது முடியுமோ என்றவாறு.*

*முன் வாக்கிழந்த நான் இப்போது மூக்கும் செவியும் இழந்தேன் என்று கும்பகருணன் கூறுகிறான், நோக்கு - பெருமை.*

***7598. 'உங்கள் தோள் தலை வாள்கொடு துணித்து, உயிர்***
***குடித்து, எம்முன் உவந்து எய்த***
***நங்கை நல் நலம் கொடுக்கிய வந்த நான்,***
***வானவர் நகை செய்ய, செங்கை தாங்கிய சிரத்தொடும் கண்ணின் நீர்***
***குருதியினொடு தேக்கி,***
***எங்கைபோல் எடுத்து அழைத்து, நான் வீழ்வெனோ,***
***இராவணன் எதிர் அம்மா?***

***உங்கள் தோள் தலை வாள் கொடு துணித்து*** *- உங்களது தோளையும் தலையையும் வாளைக் கொண்டு துணித்து* ***உயிர் குடித்து*** *- உயிரைக் குடித்து;* ***எம்முன் உவந்து எய்த*** *- எமக்கு முன்னவனாகிய இராவணன் மகிழ்ந்து அடையுமாறு;* ***நங்கை நல்நலம் கொடுக்கிய வந்த நான்*** *- சீதையின் அழகு நலத்தை அவனுக்குக் கொடுப்பதற்காகப் போருக்கு வந்த நான்;* ***வானவர் நகை செய்ய*** *- தேவர்கள் சிரிக்குமாறு;* ***செங்கை தாங்கிய சிரத்தொடும்*** *- குருதிபட்டுச் சிவந்த கையால் தலையைத் தாங்கிக்கொண்டு;* ***கண்ணின் நீர் குருதியினொடு தேக்கி*** *- கண்ணீரைக் குருதியுடன் கலந்து தேங்கச் செய்து;* ***எங்கை போல் எடுத்து அழைத்து*** *- எனது தங்கையைப் போல் குரலெடுத்து அழைத்துக் கொண்டு;* ***நான் இராவணன் எதிர் வீழ்வெனோ*** *- நான் இராவணன் எதிரில் சென்று வீழ்வதற்கு உரியனோ (அல்லன்).*

*உங்களை அழித்து என் அண்ணனுக்கு நங்கை நல்நலம் கொடுக்கிய வந்த நான் வானவர் நகைக்க, கைதலை மேற்கொண்டு கண்ணீரும் குருதியும் வடிய இராவணன் எதிர் செல்வேனோ செல்லேன் என்கிறான் கும்பகருணன். மேல்கண்ட மூன்று பாடல்களில் கும்பகருணன் தான் மூக்கும் செவியும் இழந்ததைக் குறித்தே பேசுகிறான். இப்பேச்சின் மூலம் அவனது அளத்தற்கரிய தன்மான உணர்வை நாம் உணரலாம். அம்மா - அசை.*

***7599. 'ஒருத்தன், நீ தனி உலகு ஒரு மூன்றிற்கும்***
***ஆயினும், பழி ஒரும்***
***கருத்தினால் வரும் சேவகன் அல்லையோ?***
***சேவகர் கடன் ஓராய்?***
***செருத் திண் வாளினால் திறத் திறன் உங்களை***
***அமர்த் துறைச் சிரம் கொய்து***
***பொருத்தினால், அது பொருந்துமோ? தக்கது***
***புகன்றிலைபோல்' என்றான்.***

**நீ ஒரு தனி உலகு மூன்றிற்கும்** - நீ ஒப்பற்ற சிறந்த மூன்று உலகிற்கும்; **ஒருத்தன்** - ஒப்பற்ற தனி முதல்வன்; **ஆயினும்** - ஆனாலும்; **பழி ஒரும் கருத்தினால் வரும் சேவகன் அல்லையோ** - பிறர்க்கு வரும் பழியை ஆராய்ந்து அறியும் மனக்கருத்து உள்ள வீரனல்லையோ?; **சேவகர் கடன் ஓராய்** - எனினும் வீரர் தம் கடமையை எண்ணிப் பாராதவனாய் உள்ளாயே; **உங்களை செருத்திண் வாளினால்** - உங்களைப் போர்க்களத்தில் வலிய வாளினால்; **திறத்திறன் அமர்த்துறை சிரம் கொய்து** - துண்டம் துண்டமாகப் போரில் தலையை அறுத்து; **பொருத்தினால் அது பொருந்துமோ** - பொருத்தினால் அது பொருந்துமோ?; **தக்கது புகன்றிலை போல் என்றான்** - நீ தகுதியானதைச் சொல்லவில்லை என்றான் கும்பகருணன்.

மூவுலகுக்கும் ஒப்பற்ற தனி முதல்வனும் பழி ஒருங்கருத்தினால் வரு சேவகனும் ஆன நீ அறுத்த தலையை மீண்டும் பொருத்துதல் போல பேசுகிறாய். தகுதியானதைச் சொல்லவில்லை. என்னை நீ ஊருக்குத் திரும்பிச் செல்லுகிறாயா? என்று கேட்பது உன் பெருமைக்குத் தகுதியன்று என்றவாறு. கொய்ததலை மீண்டும் தலையில் பொருந்தாதது போல் நான் இழந்த மானத்தை இனிப் பெறமுடியாது என்கிறான். ஆவியை விட்டாயினும் மானங்காப்பேன் என்ற கருத்தினன் கும்பகருணன் என்க.

## *கும்பகருணன் இராமன் - பெரும்போர்*

***7600.** **என்று, தன் நெடுஞ் சூலத்தை இடக்கையின்***
***மாற்றினன்; வலக் கையால்***
***குன்று நின்றது பேர்த்து எடுத்து, இரு நிலக்***
***குடர் கவர்ந்தெனக் கொண்டான்,***
***சென்று விண்ணொடும் பொறியொடும் தீச்செல,***
***சேவகன் செனி நேரே,***
***'வென்று தீர்க!' என விட்டனன்; அது வந்து***
***பட்டது மேல் என்ன,***

**என்று** - என்று சொல்லித்; **தன் நெடுஞ்சூலத்தை இடக்கையின் மாற்றினன்** - தனது வலக்கையில் இருந்த நெடுஞ்சூலத்தை இடக்கைக்கு மாற்றிக் கொண்டு; **வலக்கையால்** - வலது கையினால்; **இருநிலக் குடர் கவர்ந்தென** - பெரிய நிலத்தின் குடலைக் கவர்ந்தாற்போல்; **குன்று நின்றது பேர்த்து எடுத்து** - அருகில் இருந்த குன்றினைப் பெயர்த்து எடுத்து; **கொண்டான்** - கையில் கொண்டவனாய்; **விண்ணொடும் பொறியொடும் தீச்செல சென்று** - வானத்தில் சென்று தீப்பொறியும் தீயும் வெளிப்பட; **சேவகன் செனி நேரே வென்று தீர்க என விட்டனன்** - வீரனாகிய இராமனுடைய தலைக்கு நேராக வெற்றி கொண்டு தீர்க என்று வீசி விட்டான்; **அது வந்து பட்டது மேல் என்ன** -அது வந்து இராமன் மேல் பட்டது என்று எண்ணுமாறு நெருங்க; (தொடரும். குளகம்).

நேரே வென்று தீர்க என விட்டனன். அது வந்து பட்டது மேல் என்ன. அந்த மலை இராமன் மேல் பட்டுவிட்டது. என்று கண்டோர் எண்ணுமாறு நெருங்க, குடர்-கடைப்போலி. செனி - இடைக்குறை (சென்னி-தலை)

*7601.* ***அனைய குன்று எனும் அசனியை, யாவர்க்கும்***
***அறிவு அரும் தனி மேனி***
***புனையும் நல் நெடு நீறு என நூறிய***
***புரவலன் பொர வென்று***
***நினையும் மாத்திரத்து ஒரு கைநின்று ஒரு கையின்***
***நிமிர்கின்ற நெடு வேலை,***
***தினையின் மாத்திரை துணிபட, முறை முறை***
***சிந்தினன், சரம் சிந்தி.***

***அனைய குன்று எனும் அசனியை*** - *அந்தக் குன்று என்ற பேரிடியை;* ***யாவர்க்கும் அறிவு அரும் தனிமேனி*** - *எவர்க்கும் அறிதற்கு அரிய ஒப்பற்ற சிவனது திருமேனியை;* ***புனையும் நல்நெடு நீறு என நூறிய*** - *அழகுபடுத்தும் நல்ல சிறந்த திருநீற்றுத்தூளி என்று கூறுமாறு பொடி செய்த;* ***புரவலன்*** - *இராமன்;* ***பொரவென்று*** - *போர் செய்ய வென்று;* ***நினையும் மாத்திரத்து ஒருகை நின்று ஒரு கையின் நிமிர்கின்ற நெடுவேலை*** - *எண்ணும் அளவில் ஒரு கையில் இருந்து மற்றொரு கையில் நிமிர்ந்து தோன்றுகிற நெடிய சூலத்தை;* ***தினையின் மாத்திரை*** - *தினைப் பொழுதில்;* ***துணிபட*** - *துண்டுபடுமாறு;* ***முறை முறை*** - *போரிட வேண்டிய முறைப்படி;* ***சரம் சிந்தி சிந்தினன்*** - *அம்புகளைச் சிந்திச் சிதறினான்.*

*கும்பகருணன் வீசிய மலையைத் தூளாக்கினான் இராமன். அடுத்த கணத்தில் கும்பகருணன் இடக்கையில் மாற்றிய சூலத்தை வலக்கையில் இராமன் மேல் விட மாற்ற உடனே இராமன் அச்சூலத்தைத் தினையளவு நேரத்தில் துண்டுபடச் செய்தான். அனைத்தும் விரைந்து நிகழ்ந்தது.*

*7602.* ***அண்ணல் வில் கொடுங் கால் விசைத்து***
***உகைத்தன,***
***அலை கடல் வறளாக***
***உண்ணகிற்பன, உருமையும் சுடுவன,***
***மேருவை உருவிப் போய்***
***விண்ணகத்தையும் கடப்பன, பிழைப்பு இலா***
***மெய்யன, மேல் சேர்ந்த***
***கண்ணுதல் பெருங் கடவுள்தன் கவசத்தைக்***
***கடந்தில கதிர் வாளி.***

***அண்ணல்*** - பெருமையில் சிறந்த இராமனுடைய; ***வில் கொடுங்கால் விசைத்து உகைத்தன*** - வில்லினது வளைந்த காலிடத்தில் இருந்து வேகமாகச் செல்லுமாறு விடுத்த; ***கதிர் வாளி*** - ஒளி பொருந்திய அம்புகள்; ***அலை கடல் வறளாக உண்ணகிற்பன*** - அலையையுடைய கடல் வறண்டு போகுமாறு நீரைப் பருகும் தன்மை பெற்றனவும்; ***உருமையும் சுடுவன*** - இடியையும் சுட வல்லனவும்; ***மேருவை உருவிப் போய் விண்ணகத்தையும் கடப்பன*** - மேரு மலையை ஊடுருவிச் சென்று வானிடத்தையும் கடப்பனவும்; ***பிழைப்பு இலா மெய்யன*** - தவறில்லாமல் பயனை உண்மையில் விளைவிப்பனவும்; ***மேல் சேர்ந்த*** - ஆக இருப்பினும் கும்பகருணனது உடல்மீது பொருந்தியுள்ள; ***கண்ணுதல் பெருங் கடவுள் தன் கவசத்தைக் கடந்தில*** - நெற்றிக் கண்ணனாகிய சிவபிரான் ஈந்த கவசத்தைத் துளைக்க மாட்டாவாயின.

*மிக வலிய இராமன் அம்புகள் கும்பகருணன் அணிந்திருந்த கண்ணுதற் பெருங்கடவுள் தன் கவசத்தைத் துளைக்க முடியவில்லை. 330 ஆவது பாடலில் அறிவு அருந்தனிமேனியனாய் குறிக்கப்பட்ட சிவபிரான் இப்பாடலில் கண்ணுதல் பெருங் கடவுள் என்று குறிக்கப்பட்டமை காண்க. தொடர்ந்து வரும் பாடல்களில் (330, 331, 331) சிவபிரான் குறிக்கப்பட்டமை கொண்டு அறிவு அருந்திருமேனி என்ற தொடர் சிவபிரானுக்கு உரியது போல் தோன்றுவதை எண்ணுக.*

***7603. தாக்குகின்றன நுழைகில; தலையது,***
***தாமரைத் தடங் கண்ணான்***
***நோக்கி, 'இங்கு இது சங்கரன் கவசம்' என்று***
***உணர்வுற நுனித்து உன்னி,***
***ஆக்கி அங்கு அவன் அடு படை தொடுத்து விட்டு***
***அறுத்தனன்; அது சிந்தி வீக்கு இழந்தது வீழ்ந்தது, வரை சுழல்***
***விரி சுடர் வீழ்ந்தென்ன.***

***தாக்குகின்றன*** - தான் விடுத்த அம்புகள் கவசத்தின் மீது மோதுகின்றன எனினும்; ***தலையது நுழைகில*** - நுனிகள் கவசத்தினுள் நுழைய மாட்டாதனவான தன்மையை; ***தாமரைத் தடங்கண்ணான் நோக்கி*** - தாமரைத் தடங்கண்ணன் ஆன இராமன் பார்த்து; ***இங்கு இது சங்கரன் கவசம் என்று*** - இக்கவசம் சிவன் அளித்தது என்று; ***உணர்வுற நுனித்து உன்னி*** - உணர்வு தோன்ற அதை நுணுகி எண்ணிப் பார்த்து; ***அங்கு அவன் அடு படை ஆக்கி*** - அப்போது சிவனது கொல்லும் தன்மையுள்ள அம்பினை வில்லில் பூட்டி; ***தொடுத்து விட்டு அறுத்தனன்*** - தொடுத்துவிட்டு அழித்தனன்; ***அது சிந்தி வீக்கு இழந்தது*** - அச்சிவ கவசம் கட்டுக் குலைந்ததாகி; ***வரைசூழ் விரிசுடர் வீழ்ந்தென்ன வீழ்ந்தது*** - மேருமலையை வலமாக வரும் கதிரவன் வீழ்ந்தது போல் ஒளியுடன் பூமியில் விழுந்தது.

*சிவனது கணை பாசுபதக்கணை எனப்படும். சிவகவசத்தை சிவனது கணையால் இராமன் அறுத்தனன்.*

***7604. காந்து வெஞ் சுடர்க் கவசம் அற்று உகுதலும்,***
***கண்தொறும் கனல் சிந்தி,***
***ஏந்து வல் நெடுந் தோள் புடைத்து ஆர்த்து, அங்கு***
***ஓர்***
***எழு முனை வயிரப் போர்***
***வாய்ந்த வல் நெடுந் தண்டு கைப்பற்றினன்;***
***'வானரப் படை முற்றும்***
***சாந்து செய்குவனாம்' என முறை முறை***
***அரைத்தனன். தரையோடும்.***

**வெஞ்சுடர் காந்து கவசம்** - *வெப்பமான ஒளியை வெளியிடுகிற கவசம்;* **அற்று உகுதலும்** - *அறுபட்டுச் சிந்திய அளவில்;* **கண் தொறும் கனல் சிந்தி** - *தன் இரு கண்களிலும் நெருப்புப் பொறியைச் சிந்தி;* **ஏந்து வல்நெடுந் தோள் புடைத்து ஆர்த்து** - *ஓங்கிய வலிய நெடிய தோளைத தட்டிப் பேரொலி செய்து;* **அங்கு** - *அப்போது;* **எழுமுனை வயிரப் போர் வாய்ந்த ஓர் வல்நெடுந் தண்டு கைப்பற்றினன்** - *இரும்பு முனை உடையதும் உறுதியுடையதும், போர்க்கு வாய்த்ததும் ஒப்பற்றதுமான வலிய நெடிய தண்டாயுதத்தைக் கையில் கொண்டவனாய்;* **வானரர் படை முற்றும் சாந்து செய்குவனாம் என** - *குரங்குப்படை முழுவதையும் சாந்து போல் ஆக்கி விடுவான் என்று கண்டோர் கருதுமாறு;* **முறை முறை தரையோடும் அரைத்தனன்** - *முறை முறையாகத் தரையோடும் அரைக்கலானான்.*

***7605. பறப்ப ஆயிரம், படுவன ஆயிரம்,***
***பகட்டு எழில் அகல் மார்பம்***
***திறப்ப ஆயிரம், திரிவன ஆயிரம்,***
***சென்று புக்கு உருவாது***
***மறைப்ப ஆயிரம், வருவன ஆயிரம்,***
***வடிக் கணை என்றாலும்,***
***பிறப்ப ஆயிடைத் தெழித்துறத் திரிந்தனன்,***
***கறங்கு எனப் பெருஞ் சாரி.***

**பறப்ப ஆயிரம்** - *வானத்தில் பறப்பவை ஆயிரம்;* **படுவன ஆயிரம்** - *பகைவர் மேல் படுவன ஆயிரம்;* **பகட்டு எழில் அகல் மார்பம் திறப்ப ஆயிரம்** - *பெருமையும் அழகும் பெற்று அகன்ற மார்பைப் பிளப்பன ஆயிரம்;* **திரிவன ஆயிரம்** - *பறந்து திரிவன ஆயிரம்;* **சென்று புக்கு உருவாது மறைப்ப ஆயிரம்** - *பகைவர் உடம்பில் போய் உள் புகுந்து தொளைத்திடாமல் மறைந்தன ஆயிரம்;* **வருவன ஆயிரம்** - *இராமன் வில்லில் இருந்து வெளிப்பட்டு வருவன ஆயிரம்;* **வடிக்கணை என்றாலும்** - *கூரிய அம்புகள் என்றாலும்;* **பிறப்ப** - *வாயிடைப் பேரொலி தோன்ற;* **ஆயிடை** - *அங்கே;* **தெழித்து** - *அதட்டிக்கொண்டு;* **கறங்கு எனப் பெருஞ்சாரி உறத் திரிந்தனன்** - *காற்றாடி போல் பெருஞ்சாரி மிகத் திரிந்தனன் என்க.*

இராமன் வடிக்கணை பல்வேறு அழிவுகளைச் செய்தாலும் அதற்கு அஞ்சாது கும்பகருணன் பெருஞ்சாரி திரிந்தனன்.

*7606.* ***'தண்டு கைத்தலத்து உளதுஎனின், உளதன்று***
***தானை' என்று, அது சாயக்***
***கொண்டல் ஒத்தவன், கொடுங் கணை பத்து ஒரு***
***தொடையினில் கோத்து எய்தான்;***
***கண்டம் உற்றது மற்று அது; கருங் கழல்***
***அரக்கனும், கனன்று, ஆங்கு ஓர் மண்டலச் சுடராம் எனக் கேடகம்***
***வாங்கினன், வாளோடும்.***

***தண்டு கைத்தலத்து உனது எனின்*** - *தண்டாயுதம் இவனது கையில் உள்ளதானால்;* ***தானை உளதன்று என்று*** - *குரங்குச் சேனை உயிரோடு இருத்தல் முடியாது என்று எண்ணி;* ***அது சாய*** - *அந்தத் தண்டு அ ழியுமாறு;* ***கொண்டல் ஒத்தவன்*** - *கருமேகத்தை ஒத்த நிறத்தவன் ஆகிய இராமன்;* ***ஒரு தொடையினில்*** - *ஒரு தொடுப்பினில்;* ***கொடுங்கணை பத்துக் கோத்து எய்தான்*** - *கொடிய அம்புகள் பத்தினை வில்லில் கோத்து எய்தான்;* ***மற்று அது கண்டம் உற்றது*** - *அதனால் அந்தத் தண்டாயுதம் துண்டாகி விட்டது;* ***கருங்கழல் அரக்கனும்*** - *அதனால் கரிய கழலை அணிந்த அரக்கன் ஆகிய கும்பகருணனும்;* ***கனன்று*** - *சினம் கொண்டு;* ***ஆங்கு*** - *அப்போது;* ***ஓர் மண்டலச் சுடராம் என வாளோடும் கேடகம் வாங்கினன்*** - *ஒப்பற்ற பூமியில் விளங்கும் கதிரவன் என்னுமாறு ஒளியுடை வாளும் கேடகமும் கைக்கொண்டான்.*

*7607.* ***வாள் எடுத்தலும், வானர வீரர்கள்***
***மறுகினர், வழிதோறும்***
***தாள் எடுத்தனர், சமழ்த்தனர்; வானவர்***
***தலை எடுத்திலர், தாழ்ந்தார்;***
***'கோள் எடுத்தது, மீள' என்று உரைத்தலும்,***
***கொற்றவன், 'குன்று ஒத்த***
***தோள் எடுத்தது துணித்தி' என்று, ஒரு சரம்***
***துரந்தனன், சுரர் வாழ்த்த.***

***வாள் எடுத்தலும்*** - *கும்பகருணன் வாள் படையை எடுத்த உடனே;* ***வானர வீரர்கள் மறுகினர்*** - *குரங்குப் படை வீரர்கள் மனம் கலங்கி;* ***வழி தோறும் தாள் எடுத்தனர்*** - *வழி தோறும் கால் விசைத்து ஓடினர்;* ***வானவர் சமழ்த்தனர் தலை எடுத்திலர் தாழ்ந்தார்*** - *தேவர்கள் போர்க்களத்தினராய்த் தலை தூக்க முடியாது தலையைத் தொங்கவிட்டனர்;* ***கோள் எடுத்தது மீள*** - *உயிர்க் கொள்ளை தொடங்கியது மீளவும்;*

**என்று உரைத்தலும்** - என்று துணைவர்கள் சொல்லலும்; **கொற்றவன்** - வெற்றி பொருந்திய இராமன்; **எடுத்தது** - வாளை எடுத்ததான; **குன்று ஒத்த தோள் துணித்தி என்று** - குன்று ஒத்த தோளைத் துணிப்பாயாக என்று சொல்லி; **ஒருசரம் சுரர் வாழ்த்த துரந்தனன்** - ஒப்பற்ற அம்பினைத் தேவர்கள் வாழ்த்தச் செலுத்தினான்.

*கும்பகருணன் கை அறுபடல்*

*7608.* ***அலக்கணுற்றது தீவினை; நல்வினை***
***ஆர்த்து எழுந்தது; வேர்த்துக***
***கலக்கமுற்றனர், இராக்கதர்--'கால வெங்***
***கருங் கடல் திரை போலும்***
***வலக் கை அற்றது, வாளொடும்; கோளுடை***
***வான மா மதி போலும்;***
***இலக்கை அற்றது, அவ் இலங்கைக்கும் இராவணன்***
***தனக்கும்' என்று எழுந்து ஓடி.***

**தீவினை அலக்க ணுற்றது** - தனக்கு உதவும் கும்பகருணன் கை அறப் போவதால் தீவினை துன்பமடைந்தது; **நல்வினை ஆர்த்து எழுந்தது** - நல்வினை மகிழ்ச்சியால் பேரொலி யெழுப்பியது; **கால வெங்கருங்கடல் திரை போலும்** - உகமுடிவுக்காலத்தில் பொங்கி எழுகின்ற கருங்கடலின் அலையைப் போன்ற; **வலக்கை** - வலக்கையானது; **கோளுடை வானமாமதி போலும் வாளொடும் அற்றது** - இராகுவினால் பற்றப்பட்டுக் குறைபடுதலை உடைய வானத்து நில போன்ற வாளோடு அறுபட்டு வீழ்ந்தது; **அவ் இலங்கைக்கும் இராவணன் தனக்கும்** - அதனால் இலங்கைப் பெருநகருக்கும் இராவணனுக்கும்; **இலக்கை அற்றது** - பாதுகாவல் நீங்கியது; **என்று எழுந்து ஓடி** - என்று சொல்லிக்கொண்டு எழுந்து ஓடி; **இராக்கதர் வேர்த்துக் கலக்கமுற்றனர்** - அரக்கர்கள் உடல் வியர்த்து மனம் கலங்கினர்.

தீவினை நல்வினை என்பன "வினைத்தெய்வம்" என்று தொல்காப்பியம் கிளவியாக்கம் கூறும்.

*7609.* ***மற்றும், வீரர்கள் உளர் எனற்கு எளிதுஅரோ,***
***மறத்தொழில் இவன் மாடு***
***பெற்று நீங்கினர் ஆம் எனின் அல்லது--***
***பேர் எழில் தோளோடும்***
***அற்று வீழ்ந்த கை அறாத வெங் கையினால்***
***எடுத்து, அவன் ஆர்த்து ஓடி***
***எற்ற, வீழ்ந்தன, எயிறு இளித்து ஓடின***
***வானரக் குலம் எல்லாம்?***

**பேர் எழில் தோளோடும்** - மிக்கு எழுந்து வளர்ந்த அழகிய தோளுடன்; **அற்று வீழ்ந்த கை** - அறுபட்ட வீழ்ந்த வலக்கையை; **அறாத வெங்கையினால் எடுத்து** - அறுபடாது உள்ள கொடுமையான இடக்கையினால் எடுத்துக்கொண்டு; **அவன் ஆர்த்து ஓடி** - அக்கும்பகருணன் பேரொலி எழுப்பிக் கொண்டு ஓடி; **எற்ற எயிறு இளித்து ஓடின** - அடித்ததனால் பல்லை இளித்துக் கொண்டு ஓடின; **வானரக் குலமெல்லாம்** - **குரங்குக் கூட்டங்கள் எல்லாம்; வீழ்ந்தன** - உயிரொழிந்து வீழ்ந்தன; **மறத்தொழில் இவன் மாடு பெற்று நீங்கினர் ஆம்** - இவ்வாறு வீரப் போரிட்ட இவனிடத்து வீரத்தை இரந்து பெற்றவர்கள் ஆம்; **எனின் அல்லது** - தவிரப் பிறர்; **மற்றும் வீரர்கள் உளர் எனற்கு எளிதரோ** - வீரர்களாக வேறு பிறந்தவர் உளர் என்று சொல்லுதல் எளிமையானதோ அன்று.

வலக்கையை இடக்கையால் எடுத்துக் கும்பகருணன் விளைவித்த வீரச் செயலின் சிறப்பை இப்பாடலின் பின்னிரு வரிகள் விளக்குகின்றன. இவனிடம் வீரத்தை இரந்து பெற்றவர்கள் வேண்டுமானால் வீரர்களாக இருக்கலாமே அன்றிப் பிறர் இவனைக் காட்டிலும் சிறந்த வீரர் என்றுரைத்தல் எளிமையான செயலன்று என்றவாறு.

***7610. வள்ளல் காத்து உடன் நிற்கவும், வானரத்***
***தானையை மறக் கூற்றம்***
***கொள்ளை கொண்டிட, பண்டையின் மும்மடி***
***குமைக்கின்ற படி நோக்கி,***
***'வெள்ளம் இன்றொடும் வீந்துறும்' என்பதோர்***
***விம்மலுற்று உயிர் வெம்ப,***
***உள்ள கையினும் அற்ற வெங் கரத்தையே***
***அஞ்சின, உலகு எல்லாம்.***

**வள்ளல் காத்து உடன் நிற்கவும்** - வள்ளல் தன்மை உள்ள இராமன் சேனையைக் காத்து உடன் இருக்கவும்; **வானரத் தானையை** - குரங்குச் சேனையை; **மறக்கூற்றம் கொள்ளை கொண்டிட** - வலிமை உடைய யமன் கொள்ளை கொள்ளும்படி; **பண்டையின் மும்மடி குமைக்கின்ற படி நோக்கி** - முன்பு அழித்ததை விட மூன்று மடங்கு அழிக்கின்ற தன்மையைப் பார்த்து; **உலகு எல்லாம்** - உலகோர் எல்லாம்; **வெள்ளம் இன்றொடும் வீந்துறும் என்பதோர் விம்மலுற்று** - குரங்கு வெள்ளமானது இன்றே அழிந்து போய்விடும் என்று கருதுவதால் துன்பத்தைக் கொண்டு; **உயிர் வெம்ப** - உயிர் துடிக்க; **உள்ள கையிலும் அற்ற வெங்கரத்தையே அஞ்சின** - அற்றுப் போகாமல் உள்ள கையினும், அற்றுப் போன கொடிய கரத்தைக் கண்டே பயந்தனர்.

இடக்கையால் அற்ற வலக்கையை எடுத்து மோதி அடித்து அழிப்பதால அற்றகைக்கு உலகு அஞ்சின என்ற நயம் காண்க.

***7611. மாறு வானரப் பெருங் கடல் ஓட, தன்***
***தோள்நின்று வார் சோரி***
***ஆறு விண் தொடும் பிணம் சுமந்து ஓட, மேல்***
***அமரரும் இரிந்து ஓட,***
***கூறு கூறு பட்டு இலங்கையும் விலங்கலும்***
***பறவையும் குலைந்து ஓட,***
***ஏறு சேவகன்மேல் எழுந்து ஓடினன்,***
***மழைக் குலம் இரிந்து ஓட.***

***மாறு வானரப் பெருங்கடல் ஓட*** - *பகையாக உள்ள வானரப் பெரும் படையாகிய கடல் நிலை கெட்டு ஓட;* ***தன் தோள் நின்று வார் சோரி ஆறு*** - *தன் தோளில் இருந்து வடிகின்ற குருதியாகிய ஆறு;* ***விண்தொடும் பிணம் சுமந்து ஓட*** - *விண்ணைத் தொடுமளவு போர்க்களத்தில் குவிந்துள்ள பிணங்களைச் சுமந்து கொண்டு ஓட;* ***மேல் அமரரும் இரிந்து ஓட*** - *வானத்தில் உள்ள தேவர்களும் நிலை கெட்டு ஓட;* ***இலங்கையும் விலங்கலும் பறவையும் கூறு கூறுபட்டு குலைந்து ஓட*** - *இலங்கை நகரும் அங்குள்ள மலைகளும் பறவை முதலிய உயிரினங்களும் குருதி ஆற்றின் வேகத்தால் பலவகையாகப் பிரிந்து நிலைகுலைந்து ஓட;* ***மழைக்குலம் இரிந்தோட*** - *மேகக் கூட்டம் நிலை கெட்டு ஓட;* ***ஏறு சேவகன் மேல் எழுந்து ஓடினன்*** - *சிங்கவேறு போன்ற இராமன் மேல் எழுந்தோடினன் கும்பகருணன் என்க.*

***7612. 'ஈற்றுக் கையையும் இக் கணத்து அரிதி' என்று***
***இமையவர் தொழுது ஏத்த,***
***தோற்றுக் கையகன்று ஒழிந்தவன் நாள்அவை***
***தொலையவும், தோன்றாத***
***கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெட, நெடுங்***
***கொற்றவன் கொலை அம்பால்***
***வேற்றுக் கையையும் வேலையில் இட்டனன்,***
***வேறும் ஓர் அணை மான.***

***ஈற்றுக் கையையும் இக்கணத்து அரிதி என்று*** - *மற்றொரு கையையும் இப்பொழுதே அரிந்திடுவாய் என்று;* ***இமையவர் தொழுது ஏத்த*** - *தேவர்கள் கைதொழுது துதிக்க;* ***தோற்றுக் கையகன்று ஒழிந்தவன்*** - *இராமனுக்கு முன் வலி தோற்று வலக்கை நீங்கி ஒழிந்தவனாகிய கும்பகருணனுடைய;* ***நாள் அவை தொலையவும்*** - *வாழ்நாள்கள் கெடுமாறும்;* ***தோன்றாத கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெட*** - *இதுவரை அரக்கர் கண்முன் தோன்றியிராத யமனுக்கு ஐயமும் அதனால் வரும் அச்சமும் நீங்குமாறும்;* ***நெடுங்கொற்றவன்*** - *மிக்க வெற்றிக்குரிய இராமன்;* ***கொலை அம்பால்*** - *கொல்லும் தன்மை உள்ள தன் அம்பால்;* ***வேற்றுக்***

**கையையும்** - மற்றொரு கையையும்; **வேறும் ஓர் அணை மான வேலையில் இட்டனன்** - வேறு அணையென்று தோன்றுமாறு கடலில் இட்டனன்.

ஈற்றுக்கை-மற்றொருகை (இடக்கை) கையகன்று செயலற்று எனினுமாம். வேறும் ஓர் அணை மான-முன்பு கட்டிய சேது அணை இப்போது இட்ட கும்பகருணனின் இடக்கை வேறு ஓரணை என்றார்.

***7613. சந்திரப் பெருந் தூணொடுஞ் சார்த்தியது,<br>அதில் ஒன்றும் தவறு ஆகாது,<br>அந்தரத்தவர் அலை கடல் அமுது எழக்<br>கடைவுறும் அந் நாளில்,<br>சுந்தரத் தடந் தோள் வளை மாசுணம்<br>சுற்றிய தொழில் காட்ட,<br>மந்தரத்தையும் கடுத்தது,--மற்று அவன்<br>மணி அணி வயிரத் தோள்.***

**சுந்தரத் தடந் தோள்வளை** - அழகிய பெரிய தோளில் அணிந்த வளையானது; **மாசுணம் சுற்றிய தொழில் காட்ட** - பாம்பு சுற்றிய தன்மையைத் தோற்றுவிக்க; **மற்று அவன் மணி அணி வயிரத் தோள்** - அந்தக் கும்பகருணனுடைய மணி பதித்த அணிகலன்களை அணிந்த வயிரத் தோள்கள்; **சந்திரப் பெருந் தூணொடுஞ் சார்த்தியது** - சந்திரனாகிய பெரிய தூணோடு சார்த்தியதாய்; **அதில் ஒன்றும் தவறு ஆகாது** - கடைகின்ற அந்த மத்தின் தன்மையில் குறைவு படாததாய்; **அந்தரத்தவர் அலைகடல் அமுது எழக்** - தேவர்கள் அலைகளை உடைய பாற்கடலில் அமுது தோன்றுமாறு; **கடைவுறும் அந்நாளில்** - கிடைகின்ற அந்நாளில்; **மந்தரத்தையும் கடுத்தது** - மந்தர மலையையும் ஒத்தது.

தோள்வளையுடன் கடலில் வீழ்ந்த கும்பகருணனது கை பாற்கடலில் நடப்பட்டு வாசுகி என்ற பாம்பு சுற்றிய மந்தரமலை போல் தோன்றியது. சந்திரப் பெருந்தூணோடு சேர்த்தியது. மந்தரத்தையும் கடுத்தது என்று இயையும். சந்திரப் பெருந்தூணோடு சார்த்தியது என்பது கடல் கடைந்த காலத்து மந்தரத்துக்கு இயற்கை அடைமொழி. மாசுணம்-பாம்பு.

***7614. சிவண வண்ண வான் கருங் கடல் கொடு வந்த<br>செயலினும், செறி தாரை<br>சுவண வண்ண வெஞ் சிறையுடைக் கடு விசை<br>முடுகிய தொழிலானும்,<br>அவண அண்ணலது ஏவலின் இயற்றிய<br>அமைவினும், அயில் வாளி***

***உவண அண்ணலை ஒத்தது; மந்தரம்***
***ஒத்தது, அவ் உயர் பொன் தோள்.***

*சிவண வண்ண வான் கருங்கடல் கொடு வந்த செயலினும் - தனக்குத்தானே ஒத்த நிறமுடைய அழகிய பெரிய கடலில் கொண்டு சேர்த்த செயலாலும்;* ***செறி தாரை சுவண வண்ண வெஞ்சிறை உடைக் கடுவிசை முடுகிய தொழிலானும்*** *- நெருங்கிய ஒளித்தொகுதியாகிய பொன்னிறத்தைக் கொண்ட விரும்பத்தக்க சிறகுடன் மிக்க விரைவுடன் விரைந்து சென்ற செயலாலும்;* ***அவண அண்ணலது ஏவலின் இயற்றிய அமைவினும்*** *- அவ்விடத்து இராமபிரானது கட்டளைப்படி தொழில் செய்த தன்மையினாலும்;* ***அயில்வாளி உவண அண்ணலை ஒத்தது*** *- இராமபிரானது கூர்மையான அம்பு கருடனை ஒத்தது;* ***அவ் உயர் பொன் தோள் மந்தரம் ஒத்தது*** *- அக்கும்பகருணனுடைய உயர்ந்த அழகிய தோள் மந்தர மலையை ஒத்தது.*

*கடலில் சேர்த்த செயலாலும், பொன்னிறம் கொண்ட சிறகுடன் விரைந்து சென்ற தன்மையாலும், இராமனது கட்டளைப்படி தொழில் பட்ட தன்மையாலும் வாளி கருடனை ஒத்தது கும்பகருணன் தோள் மந்தரம் ஒத்தது என்க. உவண அண்ணல்- கருடன். திருமால் பாற்கடலைக் கடைதற் பொருட்டு கருடனை அனுப்பி மந்தர மலையைக் கொணரச் செய்ததாக ஒரு வரலாறு உண்டு. என்பது இச்செய்யுளால் புலனாகிறது, மகாபாரதத்தில் திருமாலின் கட்டளையால் அநந்தன் என்னும் நாகராசன் மந்தர மலையைப் பெயர்த்துத் தந்ததால் தேவர்கள் பாற்கடலைக் கடைந்தனர் என்ற செய்தி காணப்படுகிறது. சுவண வண்ணம் - பொன் வண்ணம்.*

## *கும்பகருணன் கால்களை இழத்தல்*

***7615. பழக்க நாள் வரும் மேருவை உள்ளுறத்***
***தொளைத்து, ஒரு பணை ஆக்கி,***
***வழக்கினால் உலகு அளந்தவன் அமைத்தது ஓர்***
***வான் குணில் வலத்து ஏந்தி,***
***முழக்கினாலென, முழங்கு பேர் ஆர்ப்பினான்,***
***வானர முந்நீரை***
***உழக்கினான், தசை தோல் எலும்பு எனும் இவை***
***குருதியொடு ஒன்றாக.***

***பழக்க நாள் வரும் மேருவை*** *- வழக்கமாகச் சூரியன் வலமாக வரும் மேருமலையை;* ***உள்ளுறத் தொளைத்து ஒரு பணை ஆக்கி*** *- உள்ளே பொருத்தமாக துளைத்து ஒருமுரசம் செய்து;* ***வழக்கினால் உலகு அளந்தவன்*** *- முறைமையினால் உலகை அளந்தவனான திரிவிக்கிரம அவதாரமாகிய கடவுள்;* ***அமைத்தது ஓர்வான் குணில் வலத்து ஏந்தி*** *- அமைத்ததாகிய பெரிய குறுந்தடி ஒன்றை வலக்கையில் ஏந்தி;* ***முழக்கினாலென முழங்கு பேர் ஆர்ப்பினான்*** *- அடித்து முழக்கியதை ஒத்த பேர் ஒலியைச் செய்தவன் ஆகிய கும்பகருணன்;* ***தசை, தோல், எலும்பு எனும் இவை***

***குருதியொடு ஒன்றாக*** - *தசை, தோல் எலும்பு என்னும் இவை குருதியோடு சேர்ந்து ஒன்றுபடும்படி;* ***வானர முந்நீரை உழக்கினான்*** - *வானரப் படையாகிய கடலைக் கலக்கினான்.*

*இப்பாடலில் முதல் மூன்று அடிகளில் கும்பகருணன் செய்த பேரொலியை மேருமலையை உள் துளைத்துச் செய்த முரசத்தைத் திரிவிக்கிரமக் கடவுள் அமைத்த குணிலால் அடித்தால் ஏற்படும் ஒலிக்கு உவமை கூறினார்.*

***7616. நிலத்த கால், கனல், புனல், விசும்பு, இவை முற்றும்***
***நிருதனது உரு ஆகி,***
***கொலத் தகாதது ஓர் வடிவு கொண்டாலென***
***உயிர்களைக் குடிப்பானை,***
***சலத்த காலனை, தறுகணர்க்கு அரசனை,***
***தருக்கினின் பெரியானை,***
***வலத்த காலையும், வடித்த வெங் கணையினால்***
***தடிந்தனன்--தனு வல்லான்.***

***நிலத்த கால், கனல், புனல் விசும்பு இவை முற்றும்*** - *நிலத்தொடு காற்று, நெருப்பு, நீர் ஆகாயம் என்கிற இவை முழுவதும்;* ***நிருதனது உரு ஆகி*** - *அரக்கனது வடிவம் பெற்று;* ***கொலத் தகாதது ஓர் வடிவு கொண்டாலென*** - *கொல்ல முடியாத ஒரு உருவைக் கொண்டது போலத் தோன்றி;* ***உயிர்களைக் குடிப்பானை*** - *உயிர்களை அழிப்பவனும்;* ***சலத்த காலனை*** - *சினம் கொண்ட யமன் போன்றவனும்;* ***தறுகணர்க்கு அரசனை*** - *அஞ்சாமையுடையோர்க்கு அரசன் போன்றவனும்;* ***தருக்கினில் பெரியானை*** - *செருக்கினில் மிக்கவனும் ஆகிய கும்பகருணனது,* ***வலத்த காலையும்*** *-வலது காலையும்;* ***வடித்த வெங்கணையினால்*** - *கூரிய கொடிய அம்பினால்;* ***தனுவல்லான் தடிந்தனன்*** - *வில்லாளியான இராமன் அறுத்து வீழ்த்தினான்.*

*நிலம் நீர் தீ வளி வான் என்னும் ஐந்தும் கலந்து மயக்கம் இவ்வுலகமும் உலகில் வாழும் உயிரினங்களின் உடலும் என்பது நூலோர் கருத்து. கும்பகருணனுடைய உடல் இவ்வுலகில் உள்ள பஞ்சபூதங்கள் அனைத்தையும் ஒன்றாகத் திரட்டிச் செய்தது போல் உள்ளதென்று முதலடியில் கூறுகிறார். பெரியானை - வலத்தகாலை தடிந்தனன் பெரியானது காலை வெட்டினான் என்றோ பெரியானைக் காலின் கண் வெட்டினான் என்றோ மாற்றிப் பொருள் கொள்க.*

***7617. பந்தி பந்தியின் பற் குலம் மீன் குலம்***
***பாகுபாடு உற, பாகத்து***
***இந்து வெள் எயிறு இமைத்திட, குருதி யாறு***
***ஒழுக்கல் கொண்டு எழு செக்கர்***
***அந்தி வந்தென, அகல் நெடு வாய் விரித்து,***
***அடி ஒன்று கடிது ஒட்டி, குந்தி வந்தனன், நெடு நிலம் குழி பட,***

***குரை கடல் கோத்து ஏற.***

***பந்தி பந்தியின் பற்குலம் மீன்குலம் பாகுபாடு உற*** - வரிசை வரிசையாக உள்ள பற்களின் கூட்டம் நட்சத்திரக் கூட்டம் போல் பாகுபாடு உற்று விளங்க; ***பாகத்து இந்து வெள் எயிறு இமைத்திட*** - அதனிடையே பிறைச் சந்திரன் போல் நீண்ட கோரைப் பல் விளங்கித் தோன்ற; ***குருதியாறு ஒழுக்கல் கொண்டு எழு செக்கர் அந்தி வந்தென*** - குருதியாற்று ஒழுக்கினால் எழுகின்ற செம்மை செவ்வானத்தை உடைய அந்திப் பொழுது வந்தது போல் தோன்ற ***அகல் நெடு வாய் விரித்து*** - தன் அகன்ற பெரிய வாயை விரித்துக்கொண்டு; ***நெடுநிலம் குழிபட*** - நெடிய நிலம் குழிபட; ***குரை கடல் கோத்து ஏற*** - அதனால் ஒலிக்கின்ற கடல் நீர் நிலத்தின் மீது பரவ; ***அடி ஒன்று கடிது ஒட்டி குந்தி வந்தனன்*** - ஒற்றைக் காலடி மேல் எழுந்து வலிமையாகப் பூமியில் பொருந்துமாறு நொண்டிக் கொண்டு போரிட வந்தான்.

***7618. மாறு கால் இன்றி வானுற நிமிர்ந்து, மாடு***
***உள எலாம் வளைத்து ஏந்தி,***
***சூறை மாருதம் ஆம் எனச் சுழித்து, மேல்***
***தொடர்கின்ற தொழிலானை,***
***ஏறு சேவகன், எரி முகப் பகழியால்,***
***இரு நிலம் பொறை நீங்க,***
***வேறு காலையும் துணித்தனன், அறத்தொடு***
***வேதங்கள் கூத்தாட.***

***மாறுகால் இன்றி*** - மற்றொரு கால் இல்லாமல்; ***வானுற நிமிர்ந்து*** - வானத்தைப் பொருந்துமாறு ஓங்கி; ***மாடு உள எலாம்*** - பக்கத்தில் உள்ளவைகளை எல்லாம்; ***வளைத்து ஏந்தி*** - நாவால் வளைத்துக் கடித்து ஏந்திய வண்ணம்; ***சூறை மாருதம் ஆம் என*** - கடுங்காற்று ஆகும் என்று கண்டோர் கூறுமாறு; ***சுழித்து மேல்*** - வட்டமிட்டு மேல்; ***தொடர்கின்ற தொழிலானை*** - கொல்லும் தொழிலைத் தொடர்கின்ற கும்பகருணனை; ***ஏறு சேவகன்*** - ஆண் சிங்கம் போன்றவனாகிய இராமன்; ***எரிமுகப் பகழியால்*** - நெருப்பை நுனியில் கொண்ட அம்பால்; ***இருநிலம் பொறை நீங்க*** - பெரிய நிலத்தின் பாரம் குறையும்படி; ***அறத்தொடு வேதங்கள் கூத்தாட*** - அறக்கடவுளும் வேதங்களும் கூத்தாட; ***வேறு காலையும் துணித்தனன்*** - மற்றொரு காலையும் துணித்தனன்.

***7619. கை இரண்டொடு கால்களும் துணிந்தன;***
***கரு வரை பொருவும் தன்***
***மெய் இரண்டு நூறாயிரம் பகழியால்***
***வெரிந் உறத் தொளை போய;***
***செய்ய கண் பொழி தீச் சிகை இரு மடி***

***சிறந்தன; தெழிப்போடும்,***
***வய்யம் வானிடை மழையினும் பெருத்தது,***
***வளர்ந்தது, பெருஞ் சீற்றம்.***

***கை இரண்டொடு கால்களும் துணிந்தன*** - கை இரண்டுடனே கால்கள் இரண்டும் துண்டுபட்டன; ***கருவரை பொருவும் தன் மெய்*** - தன்னுடைய பெரிய மலையை ஒத்த உடல்; - ***இரண்டு நூறாயிரம் பகழியால்*** - இருநூறு ஆயிரம் அம்புகளால்; ***வெரிந் உறத் தொளை போய*** - முதுகுவரை மிகுதியாகத் துளையாக்கியது; ***செய்ய கண்பொழி தீச்சிகை*** - சிவந்த கண்களில் இருந்து நெருப்பு அனல்; ***இருமடி சிறந்தன*** - இரண்டு மடங்கு மிக்கது; பெருஞ் சீற்றம் - மிக்க சினம்; ***தெழிப்போடும்*** - பேரொலியோடு; ***வய்யம் வானிடை மழையினும் பெருத்தது வளர்ந்தது*** - நில உலகில் வானத்திடையில் தோன்றும் இடியொலி போல் மிக்கு வளர்ந்தது.

*வையம்-வய்யம்-போலி.*

*கும்பகருணன் மலைகளைக் கவ்வி வானரங்களை அழித்தல்*

***7620. பாதம் கைகளோடு இழந்தனன், படியிடை***
***இருந்து, தன் பகு வாயால்,***
***காதம் நீளிய மலைகளைக் கடித்து இறுத்து***
***எடுத்து, வெங் கனல் பொங்கி,***
***மீது மீது தன் அகத்து எழு காற்றினால்***
***விசைகொடு திசை செல்ல***
***ஊத ஊதப்பட்டு, உலந்தன வானரம்,***

***உருமின் வீழ் உயிர் என்ன,*** ***பாதம் கைகளோடு இழந்தனன்*** - கால்களையும் கைகளையும் இழந்தவனாகிய கும்பகருணன்; ***வெங்கனல் பொங்கி*** - கொடுஞ் சீற்றம் மிக்கு; ***படியிடை இருந்து*** - நிலத்திடத்திருந்து; ***தன் பகுவாயால்*** - தன் பிளந்த பெரிய வாயினால்; ***காதம் நீளிய மலைகளை*** - காதத்தளவு நீண்டு கிடக்கும் மலைகளை; ***கடித்து இறுத்து எடுத்து*** - கடித்து ஒடித்து எடுத்து; ***மீது மீது தன் அகத்து எழு காற்றினால்*** - மேலும் மேலும் தன் உள்ளிருந்து எழும் பெருமூச்சாகிய காற்றினால்; ***விசை கொடு திசை செல்ல*** - விரைவு கொண்டு திசைகளில் செல்லுமாறு; ***ஊத ஊதப்பட்டு*** - ஊதுந்தொறும் ஊதுந்தொறும் அக்காற்றினால்; ***வானரம் உருமின் வீழ் உயிர் என்ன உலந்தன*** - குரங்குப்படை இடியினால் உயிரொழியும் உயிரினம் போல உயிரொழிந்தன.

***7621. தீயினால் செய்த கண்ணுடையான், நெடும்***
***சிகையினால் திசை தீய***

***வேயினால் திணி வெற்பு ஒன்று நாவினால்***
***விசும்புற வளைத்து ஏந்தி,***
***பேயின் ஆர்ப்புடைப் பெருங் களம் எரிந்து எழ,***
***பிலம் திறந்தது போலும்***
***வாயினால் செல, வீசினன்; வள்ளலும்***
***மலர்க் கரம் விதிர்ப்புற்றான்.***

***தீயினால் செய்த கண்ணுடையான்*** - *தீயினால் செய்யப்பட்டாற் போன்ற சினத்தால் சிவந்த கண்களை உடையவனான கும்பகருணன்;* ***நெடுஞ் சிகையினால் திசை தீய*** - *தன்னிடம் இருந்து எவும் நெடிய நெருப்பு அனலால் திசைகள் எல்லாம் கருக;* ***வேயினால் திணி வெற்பு ஒன்று*** - *மூங்கில்களால் நெருங்கிய மலை ஒன்றினை;* ***நாவினால் விசும்புற வளைத்து ஏந்தி*** - *நாவினால் வானத்தைப் பொருந்த வளைத்து எடுத்து;* ***பேயின் ஆர்ப்புடை பெருங்களம் எரிந்து எழ*** - *பேய்களின் பேரொலி கொண்ட பெரிய போர்க்களம் எரிந்து விழுமாறு;* ***பிலம் திறந்தது போலும் வாயினால்*** - *குகை திறந்தது போல் உள்ள வாயினால்;* ***செல வீசினான்*** - *பெருந்தொலைவு வீசி எறிந்தான்;* ***வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றான்*** - *அதுகண்ட வள்ளலாம் இராமனும் தாமரை மலர் போன்ற கை வியப்பால் அசையப் பெற்றான்.*

*உள் உணர்வு தோன்றிய கும்பகருணன் உரை*

*7622.* ***'அய்யன் வில் தொழிற்கு ஆயிரம் இராவணர்***
***அமைவிலர்; அந்தோ! யான்***
***கய்யும் கால்களும் இழந்தனென்; வேறு இனி***
***உதவல் ஆம் துணை காணேன்;***
***மய்யல் நோய்கொடு முடிந்தவன் நாள் என்று,***
***வரம்பு இன்றி வாழ்ந்தானுக்கு***
***உய்யுமாறு அரிது' என்று, தன் உள்ளத்தின்***
***உணர்ந்து, ஒரு துயருற்றான்.***

***அய்யன் வில் தொழிற்கு*** - *பெருமையில் சிறந்த இராமனது வில் தொழில் ஆற்றலுக்கு;* ***ஆயிரம் இராவணர் அமைவிலர்*** - *ஆயிரம் இராவணர் இருந்தாலும் எதிர்க்கும் வலிமை அமையாதவர் ஆவர்;* ***அந்தோ யான் கய்யும் கால்களும் இழந்தனென்*** - *ஐயோ நான் கையையும் காலையும் இழந்து விட்டேன்;* ***வேறு இனி உதவ லாம் துணை காணேன்*** - *இனி வேறு உதவக்கூடிய வகையையும் காண்கிலேன்;* ***மய்யல் நோய் கொடு முடிந்தவன்*** - *ஆசையாகிய நோயினால் இராவணன் முடிந்தனன்;* ***நாள் என்று வரம்பு இன்றி வாழ்ந்தானுக்கு*** - *வாழ்நாள் என்று எல்லையில்லாமல் வாழ்ந்த அவன்;* ***உய்யுமாறு அரிது*** - *இனிமேல் உயிர் பிழைத்து இருத்தல் இல்லை;* ***என்று தன் உள்ளத்தின் உணர்ந்து*** - *என்று தன் உள்ளத்தில் அறிந்து;* ***ஒரு துயருற்றான்*** - *ஒப்பற்ற மனத்துன்பம் அடைந்தான்.*

இப்பாடல் தன் கையும் காலும் இழந்த கும்பகருணனின் மனச் செம்மையையும் பாசப் பெருஞ் சிறப்பையும் காட்டுகிறது. தன் துன்பத்துக்கு வருந்தாது தமையனுக்கு உதவும் வழி எதுவும் இல்லையே என்றும், அவன் உய்யுமாறு அரிது என்றும் எண்ணி வருந்துகிற கும்பகருணன் 'அன்புடையர் என்பும் உரியர் பிறர்க்கு' என்ற குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்தவன். பொன்றுவன் என்று சொல்லி வந்த செம்மல் சாவின் விளிம்பிலே நின்ற போதும் பாசப் பெருங்கடலில் தத்தளித்த பெருஞ்செம்மலாய் உயர்ந்து ஓங்கி நிற்பதை ஓர்க. வீர விளிம்பின் விளிம்பில் இராமனைப் பாராட்டி பாசப்பிணைப்பில் அண்ணனை நினைத்து அவலிக்கிறான்.

கொச்சகக் கலிப்பா

*7623.* ***சிந்துரச் செம் பசுங் குருதி திசைகள்தொறும் திரை ஆறா,***
***எந்திரத் தேர், கரி, பரி, ஆள், ஈர்த்து ஓடப் பார்த்திருந்த***
***கந்தரப் பொன்-கிரி ஆண்மைக் களிறு அனையான், கண் நின்ற***
***சுந்தரப் பொன்-தோளானை முகம் நோக்கி, இவை சொன்னான்;***

**சிந்துரச் செம் பசுங்குருதி** - சிந்துரப் பொடி போன்ற புதிய பசிய குருதி; **திசைகள் தொறும் திரை ஆறா** - திசைகள் தோறும் அலைகளை உடைய ஆறாக ஓடி; **எந்திரத் தேர் கரி பரி ஆள்** - பொறிகள் அமைந்த தேர்களையும் யானைகளையும், குதிரைகளையும் வீரர்களையும்; **ஈர்த்து ஓடப் பார்த்திருந்த** - இழுத்துக் கொண்டு செல்வதைப் பார்த்துக் கொண்டு இருந்த; **கந்தரம் பொன்கிரி** - தலையை உடைய பொன்கிரியையும்; **ஆண்மைக் களிறு அனையான்** - வீரம் பொருந்திய களிற்றையும் ஒத்தவனான கும்பகருணன்; **கண் நின்ற** - தன் கண் எதிரில் நின்ற; **சுந்தரப் பொன் தோளானை** - மிக அழகிய தோளினை உடைய இராமனது; **முகம் நோக்கி இவை சொன்னான்** - முகத்தைப் பார்த்து இச்சொற்களைக் கூறினான்.

*7624.* ***'புக்கு அடைந்த புறவு ஒன்றின் பொருட்டாகத் துலை புக்க***
***மைக் கடங் கார் மத யானை வாள் வேந்தன் வழி வந்தீர்!***
***இக் கடன்கள் உடையீர்! நீர் எம் வினை தீர்த்து, உம்முடைய***
***கைக்கு அடைந்தான் உயிர் காக்கக் கடவீர், என் கடைக்கூட்டால்.***

***புக்கு அடைந்த புறவு ஒன்றின் பொருட்டாக*** - *தன்னைச் சரணாகதி அடைந்த புறா ஒன்றின் பொருட்டாக;* ***துலை புக்க*** - *தராசுத் தட்டில் ஏறிய;* ***மைக்கடங்கார் மதயானை வாள் வேந்தன் வழிவந்தீர்*** - *கருமையான மதநீரை மேகம் போல் பொழிகின்ற வாள் படையுடைய சிபி மன்னனது கால்வழி வந்தவரே!;* ***இக்கடன்கள் உடையீர்*** - *நீங்கள் அச்சிபி போல் அன்புக் கடன்களும் உடையீர்;* ***நீர் எம்வினை தீர்த்து*** - *நீர் எங்களது உறவினால் உண்டான தீவினைகளைத் தீர்த்து;* ***உம்முடைய கைக்கு அடைந்தான்*** - *உம்முடைய கையில் அடைக்கலம் அடைந்தவனாகிய வீடணனது;* ***உயிர் காக்கக் கடவீர்*** - *உயிரைப் பாதுகாக்கக் கடவீர்;* ***என் கடைக்கூட்டால்*** - *இது என் கடைசி விருப்பமாகும்.*

*அண்ணனுக்கு உதவலாம் வழிவகை இல்லை என்றும் இனி அவன் உய்யுமாறு அரிது என்னும் உணர்ந்த கும்பகருணனின உடன்பிறப்புப் பாசம் தம்பியைக் காப்பாற்ற முற்படுகிறது. தன் குலம் தழைக்கவும், கையினால் எள்நீர் நல்கவும் தம்பியாவது உயிர் வாழ வேண்டும் என்று எண்ணிய கும்பகருணன் தன் இறுதி விருப்பமாக அதை வெளியிடுகிறான். தனக்கு என வாழப் பிறர்க்கு உரிய வாழ்வினன் அல்லவா அவன்?*

*7625.* ***'நீதியால் வந்தது ஒரு நெடுந் தரும நெறி அல்லால்,***
***சாதியால் வந்த சிறு நெறி அறியான், என் தம்பி;***
***ஆதியாய்! உனை அடைந்தான்; அரசர்***
***உருக்கொண்டு அமைந்த***
***வேதியா! இன்னம் உனக்கு அடைக்கலம் யான்***
***வேண்டினேன்.***

**ஆதியாய்** - *முழுமுதலே!;* **அரசர் உருக்கொண்டு அமைந்த வேதியா** - *உலகில் அரசர் வடிவு கொண்டு வந்து வேதங்களால் புகழப்படுகின்றவனே;* **நீதியால் வந்தது ஒரு நெடுந்தரும நெறி அல்லால்** - *நீதிமுறைப்படி அமைந்து வந்த சிறந்த அற நெறி அல்லாது;* **சாதியால் வந்த சிறுநெறி அறியான்** - *சாதிப் பிறப்பினால் உண்டான அறமற்ற நெறியை அறியாதவனாகிய;* **என் தம்பி** - *எனக்குத் தம்பியாகிய வீடணன்;* **உனை அடைந்தான்** - *உன்னை அடைக்கலமாக அடைந்தான்;* **இன்னம் உனக்கு அடைக்கலம் யான் வேண்டினேன்** - *மீண்டும் அவனை உனக்கு அடைக்கலப் பொருளாகக் கொண்டு காத்தலை யான் வேண்டினேன்.*

*7626.* ***'வெல்லுமா நினைக்கின்ற வேல் அரக்கன்,***
***வேரோடும்***
***கல்லுமா முயல்கின்றான், இவன்" என்னும்***
***கறுவுடையான்;***
***ஒல்லுமாறு இயலுமேல், உடன்பிறப்பின் பயன் ஓரான்;***
***கொல்லுமால், அவன் இவனை; குறிக்கோடி,***
***கோடாதாய்!***

***கோடாதாய்*** - நீதிநெறி தவறாதவனே; ***வெல்லுமா நினைக்கின்ற வேல் அரக்கன்*** - வெல்லுமாறு எண்ணுகின்ற வேல் படையை உடையவனாகிய இராவணன்; ***இவன் வேரோடும் கல்லுமா முயல்கின்றான் என்னும்*** - இவ்வீடணன் தன்னை அடியோடு அழிக்க முயல்கின்றான் என்னும்; ***கறுவுடையான்*** - உள்ளடங்கிய வஞ்சம் உடையான்; ***ஒல்லுமாறு இயலுமேல்*** - வாய்ப்பு நேருமானால்; ***அவன் இவனை*** - அந்த இராவணன் இந்த வீடணனை; ***உடன் பிறப்பின் பயன் ஓரான் கொல்லுமால்*** - உடன் பிறப்புப் பாசத்தின் பயனை உணராதவனாய்க் கொல்லுவான்; ***குறிக்கோடி*** - இதனை மனதில் கொள்.

*உடன்பிறப்பின் பயன் ஓரான் என்ற தொடர் கும்பகருணன் உடன்பிறப்பின் தன்மையை உணர்ந்தவன் என்பதைக் காட்டுகிறது. இப்பிறவியில் உடன்பிறந்தவர் அடுத்த பிறவியில் உடன்பிறந்தவர் ஆகப் பிறக்க வேண்டிய நியதியில்லை ஆகையால் இவ்வாறு குறிப்பிட்டான் என்க. கல்லுதல் - அழித்தல். கறு - உள்ளடக்கிய வஞ்சம். செயிர்ப்பு என்றார் பிறரும். ஒல்லுமாறு இயலுமேல்-வாய்ப்பு நேருமானால்.*

***7627. 'தம்பி என நினைந்து, இரங்கித் தவிரான், அத்***
***தகவு இல்லான்;***
***நம்பி! இவன்தனைக் காணின் கொல்லும்; இறை***
***நல்கானால்;***
***உம்பியைத்தான், உன்னைத்தான், அனுமனைத்தான்,***
***ஒரு பொழுதும்***
***எம்பி பிரியானாக அருளுதி; யான் வேண்டினேன்.***

***நம்பி*** - ஆடவரில் சிறந்தவனே!; ***அத்தகவு இல்லான்*** - அந்த நற்குணமில்லாதவனாகிய இராவணன்; ***தம்பி என நினைந்து இரங்கித் தவிரான்*** - வீடணன் தம்பி ஆயிற்றே என்று எண்ணி இரக்கம் கொண்டு உயிரோடு விட்டிடான்; ***இவன்தனைக் காணின் கொல்லும்*** - இவனைக் கண் எதிரே கண்டால் கொல்லுவான்; ***இறை நல்கானால்*** - சிறிது கூட அருள் செய்ய மாட்டான்; ***உம்பியைத்தான்*** - ஆகவே உன் தம்பியையும்; ***உன்னைத்தான்*** - உன்னையும்; ***அனுமனைத்தான்*** - அனுமனையும்; ***ஒரு பொழுதும்*** - ஒரு கணப் பொழுதும்; ***எம்பி பிரியானாக அருளுதி*** - என் தம்பி பிரியாதிருக்குமாறு திருவருள் செய்க; ***யான் வேண்டினேன்*** - இதனை யான் வேண்டிக் கொள்ளுகிறேன்.

*வீடணனை இன்னபடி காத்தல் வேண்டும் என்று பின்னிரண்டு அடிகளில் கும்பகருணன் குறிப்பிடுகின்றான். உன்னைத்தான் உம்பியைத்தான் அனுமனைத்தான் என அமைய வேண்டிய மூன்றாமடி உம்பியைத்தான் உன்னைத்தான் அனுமனைத்தான் என எதுகைத் தொடை பற்றி அமைந்தது. உண்ணாது உறங்காது இராமனையே எப்பொழுதும் பாதுகாப்பவன் இலக்குவன் என்பது கருதி இலக்குவனை முதற்கண் குறித்தான் எனலும் ஆம்.*

*தலையைக் கடலில் இடுமாறு வேண்ட, இராமனும் உடன்படல்*

*7628.* ***' "மூக்கு இலா முகம்" என்று முனிவர்களும் அமரர்களும்***
***நோக்குவார் நோக்காமை, நுன் கணையால் என் கழுத்தை***
***நீக்குவாய்; நீக்கியபின், நெடுந் தலையைக் கருங் கடலுள்***
***போக்குவாய்; இது நின்னை வேண்டுகின்ற பொருள்' என்றான்.***

***முனிவர்களும் அமரர்களும்*** *- முனிவர்களும் தேவர்களும்; மூக்கு* ***இலாமுகம் என்று நோக்குவார்*** *- என் முகத்தை மூக்கு இல்லாத முகம் என்று சொல்லிக் காண்பார்கள்;* ***நோக்காமை*** *- அவர்கள் அவ்வாறு நோக்காமல்;* ***நுன் கணையால்*** *- உன அம்பினால்;* ***என் கழுத்தை நீக்குவாய்*** *- என் கழுத்தை அறுத்து நீக்குவாய்;* ***நீக்கிய பின்*** *- அறுத்து நீக்கிய பிறகு* ***நெடுந்தலையைக் கருங்கடலுள் போக்குவாய்*** *-என் கழுத்தோடு கூடிய நெடிய தலையை கரிய கடலுக்குள்ளே மூழ்கச் செய்வாய்;* ***இது நின்னை வேண்டுகின்ற பொருள் என்றான்*** *-இதுவும் நான் உன்னை வேண்டிக் கொள்ளுகின்ற பொருள் என்றான் கும்பகருணன். தம்பியின் உயிருக்காக வேண்டியவன் தன் மானத்துக்காக இதனை வேண்டுகிறான். எதிர்மறைத் தொழிற்பெயர்.*

*7629.* ***'வரம் கொண்டான்; இனி மறுத்தல் வழக்கு அன்று' என்று, ஒரு வாளி***
***உரம் கொண்ட தடஞ் சிலையின் உயர் நெடு நாண் உள் கொளுவா,***
***சிரம் கொண்டான்; கொண்டதனைத் திண் காற்றின் கடும் படையால்,***
***அரம் கொண்ட கருங் கடலின் அழுவத்துள் அழுத்தினான்.***

***வரம் கொண்டான்*** *- கும்பகருணன் வரமாகக் கேட்டுக் கொண்டான்;* ***இனி மறுத்தல் வழக்கு அன்று*** *- ஆகையால் இனி மறுத்தல் முறைமையன்று;* ***என்று ஒருவாளி*** *- என்று கருதி ஓரம்பினை;* ***உரம் கொண்ட தடஞ்சிலையின் உயர் நெடுநாண் உல் கொளுவா*** *- வலிமை கொண்ட பெரிய வில்லின் சிறந்த நெடிய நாணைப் பூட்டி உள்ளே வைத்து;* ***சிரம் கொண்டான்*** *- எய்து கும்பகருணனது தலையை அறுத்தான்;* ***கொண்டதனை*** *- அறுத்த அந்தத் தலையை;* ***திண் காற்றின் கடும் படையால்*** *- வலிய*

*காற்றின் கடிய அம்பினால்;* ***அரம் கொண்ட கருங்கடலின அழுவத்துள் அழுத்தினான்*** *- ஒலி கொண்ட கரிய கடலின் நடுவில் உள்ளே விழச் செய்தான்.*

*கும்பகருணன் தலை கடலில் மூழ்குதல்*

***7630. மாக் கூடு படர் வேலை மறி மகரத் திரை வாங்கி,***
***மேக்கூடு, கிழக்கூடு, மிக்கு இரண்டு திக்கூடு,***
***போக்கூடு கவித்து, இரு கண் செவியூடும் புகை உயிர்க்கும்***
***மூக்கூடும் புகப் புக்கு மூழ்கியது, அம் முகக் குன்றம்.***

***மாக்கூடு படர்வேலை*** *- கருமை நிறம் மிகக் கூடியுள்ள பரந்த கடலில்;* ***மறி மகரத்திரை வாங்கி*** *- மடங்குகின்ற அலைகளை அப்பால் தள்ளி;* ***மேக்கூடு, கிழக்கூடு மிக்கு இரண்டு திக்கூடு*** *- மேற்கிலும், கிழக்கிலும் மிக்குள்ள இரண்டு திசைகளிலும்;* ***போக்கூடு கவித்து*** *- இடையே போதல் தவிர்த்து;* ***இருகண் செவியூடும்*** *- இரு கண்களிலும்;* ***புகை உயிர்க்கும்*** *- புகையை வெளிப்படுத்தும்;* ***அம்முகக் குன்றம்*** *- அந்த முகமாகிய சிறுமலை;* ***மூக்கூடும் புகப் புக்கு மூழ்கியது*** *- மூக்கு வழியாகவும் நீர் உள்புகுதலால் மூழ்கியது.*

*கடலில் மலை போன்ற முகம் விழவே கடல் நீர் முதலில் நான்கு பக்கங்களிலும் விலகியது. அந்த முகம் அறுபட்ட மூக்கின் வழி கடல் நீர் புகுந்ததால் மூழ்கி விட்டது.*

***7631. ஆடினார் வானவர்கள்; அரமகளிர் அமுத இசை***
***பாடினார்; மா தவரும் வேதியரும் பயம் தீர்ந்தார்;***
***கூடினார் படைத்தலைவர், கொற்றவனை; குடர் கலங்கி***
***ஓடினார், அடல் அரக்கர், இராவணனுக்கு உணர்த்துவான்.***

***வானவர்கள் ஆடினார்*** *- வானவர்கள் ஆடினார்;* ***அரமகளிர் அமுத இசை பாடினார்*** *- தேவமகளிர் அமுதம் போன்ற இசைப் பாடலைப் பாடினார்;* ***மாதவரும் வேதியரும் பயம் தீர்ந்தார்*** *- தவமுனிவர்களும் அந்தணர்களும் அச்சம் நீங்கினார்கள்;* ***கொற்றவனைப் படைத்தலைவர் கூடினார்*** *- வானரப் படைத் தலைவர் வெற்றி பெற்ற இராமனைக் கூடினார்;* ***அடல் அரக்கர் குடர் கலங்கி*** *- கொல்லும் தன்மையுள்ள அரக்கர்கள் குடர் கலங்கி;* ***இராவணனுக்கு உணர்த்துவான் ஓடினார்*** *- இராவணனுக்கு உணர்த்துவதற்காக ஓடினார்கள்.*

வானவர் ஆட, அரமகளிர் பாட, மாதவரும் வேதியரும் பயம் தீர, படைத்தலைவர் கொற்றவனைக் கூட, அடல் அரக்கர் குடர் கலங்கி இராவணனுக்கு உணர்த்துவான் ஓடக் கும்பகருணன் இறந்தனன் என்க.

### மிகைப் பாடல்கள்

#### 1. கடல் காண் படலம்

*530. மூன்றரைக் கோடியின் உகத்து ஓர் மூர்த்தியாய்த்*
*தான் திகழ் தசமுகத்து அவுணன், சாலவும்*
*ஆன்ற தன் கருத்திடை, அயனோடே மயன்*
*தோன்றுற நினைதலும், அவரும் துன்னினார். (11-1) 531. வந்திடும் அவர் முகம் நோக்கி, மன்னவன்,*
*'செந் தழல் படு நகர் அனைத்தும் சீர் பெறத்*
*தந்திடும், கணத்திடை' என்று சாற்றலும்*
*புந்தி கொண்டு அவர்களும் புனைதல் மேயினார். (11-2)* **2. இராவணன் மந்திரப் படலம்** *532. மின் அவிர் குழைகளும் கலனும் வில் இட,*
*சென்னியின் மணி முடி இருளைச் சீறிட,*
*அன்னபேர் அவையின் ஆண்டு இருந்த ஆண்டகை*
*முன்னியது உணர்த்துவான், முறையின் நோக்கினான். (6-1) 533.*
*மோதரன் முதலிய அமைச்சர் தம் கணக்கு*
*ஓதும் நூறாயிர கோடியோரொடும்,*
*காது வெஞ் சேனையின் காவலோர் கணக்கு*
*ஓதிய வெள்ள நூறவர்கள்தம்மொடும். (10-1) 534. கும்பகம் மேவியோன், குறித்த வீடணத்*
*தம்பியர் தம்மொடும், தருக்கும் வாசவன்*
*வெம் புயம் பிணித்த போர் வீரன் ஆதியாம்,*
*உம்பரும் போற்றுதற்கு உரிய, மைந்தரும், (10-2) 535. மாலியவான் முதல் வரம்பு இல் முந்தையோர்*
*மேலவர் தம்மொடும், விளங்கு சுற்றமாம்*
*சால்வுறு கிளையொடும், தழுவி, மந்திரத்து*
*ஏலுறும் இராவணன் இசைத்தல் மேயினான்: (10-3)*

*536. பின்னும் ஒன்று உரைத்தனன்: 'பிணங்கு மானிடர்*
*அன்னவர் அல்லர்; மற்று அரக்கர் என்பதற்கு*
*இந் நிலை பிடித்தனை; இறைவ! நீ' எனா,*
*முன் இருபக்கன் ஈது உரைத்து முற்றினான். (21-1)*

*537. 'எரி விழி நுதலினன், இசையும் நின் தவத்து*
*அருமை கண்டு, அளித்தனன் அழிவு இலாதது ஓர்*
*பெரு வரம் என்றிடின், பேதை மானிடர்*
*இருவரும் குரங்கும் என் செய்யல் ஆவதே?' (26-1)*

*538. 'கறை மிடற்று இறை அன்று; கமலத் தேவு அன்று;*
*நிறை கடல் துயில் பரன் அன்று; நின்று வாழ்*
*சிறு தொழில் குரங்கொடு சிறிய மானிடர்*

*உறு திறத்து உணர்ச்சியின் உறுதி யாவதோ?' (40-1)*

*539. 'ஓது பல் அருந் தவம் உஞற்றல் இலதேனும்,
கோதுறு குலச் சிறுமை கொண்டுடையதேனும்,
வாதுறு பகைத் திறம் மலிந்துடையதேனும்,
நீதியதில் நின்றிடின் நிலைக்கு அழிவும் உண்டோ? (52-1)*

*540. 'உந்து தமரோடு உலகினூடு பல காலம்
நந்துதல் இலாது இறைவன் ஆயிட நயந்தோ,
சிந்தையில் விரும்புதல் மங்கையர் திறத்தோ,
புந்திகொடு நீ தவம் முயன்ற பொறை மேனாள்? (52-2)*

*541. 'ஆசைகொடு வெய்தில் இரு மானிடரை அஞ்சி,
காசு இல் ஒரு மங்கையவளைத் தனி கவர்ந்தும்,
கூசியதனால் விளையவும் பெறுதல் கூடாய்,
வீசு புகழ் வாழ்வு வெறிதே அழிவது ஆமோ? (52-3) 542. 'நிரம்பிடுகில் ஒன்றுஅதை நெடும் பகல் கழித்தும்,
விரும்பி முயல்வுற்று இடைவிடாது பெறல் மேன்மை;
வரும்படி வருந்தினும் வராத பொருள் ஒன்றை
நிரம்பும் எனவே நினைதல் நீசர் கடன், ஐயா! (52-4)*

*543. 'ஆசு இல் பல அண்டம் உனதே அரசுஅது ஆக
ஈசன் முன் அளித்தது, உன் இருந் தவ வியப்பால்;
நீசர் தொழில் செய்து அதனை நீங்கியிடலாமோ?--
வாச மலரோன் மரபில் வந்த குல மன்னா! (52-5)*

*544. ' "ஆலம் அயில்கின்றவன் அருஞ் சிலை முறித்து,
வாலியை வதைத்து, எழு மராமரமும் உட்க,
கோல வரி வில் பகழி கொண்டுடையன்" என்றார்;
சீலம் உறு மானிடன் எனத் தெளியலாமோ? (52-6)*

*545. 'ஆதிபரனாம் அவன் அடித் துணை வணங்கி,
சீதையை விடுத்து, "எளியர் செய் பிழை பொறுக்க" என்று
ஓதல் கடனாம்' என ஒருப்பட உரைத்தான்;
மூதுரை கொள்வோனும், 'அதுவே முறைமை' என்றான். (52-7)*

*546. என்று அவன் உரைத்திட, இராவணனும், நெஞ்சம்
கன்றி, நயனத்திடை பிறந்தன கடைத் தீ;
'இன்று முடிவுற்றது உலகு' என்று எவரும் அஞ்ச,
குன்று உறழ் புயக் குவை குலுங்கிட நகைத்தான். (52-8)*

*547. நகைத்து, இளவலைக் கடிது நோக்கி, நவில்கின்றான்;
'பகைத்துடைய மானுடர் வலிச் செயல் பகர்ந்தாய்;
திகைத்தனைகொலாம்; எனது சேவகம் அறிந்தும்,
வகைத்திறம் உரைத்திலை; மதித்திலை;*

*என்?--எம்பி! (52-10)*

*548. 'புரங்கள் ஒரு மூன்றையும் முருக்கு புனிதன்தன்*
*வரங்களும் அழிந்திடுவதோ? மதியிலாதாய்! தரம்கொடு இமையோர் எனது தாள் பரவ, யான்*
*என்*
*சிரம்கொடு வணங்குவதும், மானுடன் திறத்தோ? (52-10)*

*549. 'பகுத்த புவனத் தொகை எனப் பகர் பரப்பும்,*
*மிகுத்த திறல் வானவரும், வேத முதல் யாவும்,*
*வகுத்து, அரிய முத்தொழில் செய் மூவரும் மடிந்தே*
*உகுத்த பொழுதத்தினும், எனக்கு அழிவும்*
*உண்டோ? (52-11)*

*550. 'நிறம்தனில் மறம் தொலைய, நீ துயில் விரும்பி,*
*துறந்தனை, அருஞ் சமரம்; ஆதல், இவை*
*சொன்னாய்;*
*இறந்துபட வந்திடினும், இப் பிறவிதன்னில்*
*மறந்தும் உளதோ, சனகன் மங்கையை விடுத்தல்?' (52-12)*

*551. எனக் கதம் எழுந்து அவன் உரைக்க, இளையோனும்,*
*நினைத்தனன், மனத்திடை நிறுத்து உறுதி சொல்ல;*
*'சினத்தொடும் மறுத்த இகழ்வு செய்தனன்; இது*
*ஊழின்*
*வினைத் திறம்; எவர்க்கும் அது செல்வது அரிது*
*அன்றே!' (52-13)*

*552. கறுத்து அவன் உரைத்திடு கருத்தின் நிலைகண்டே,*
*'பொறுத்தருள் புகன்ற பிழை' என்று அடி வணங்கி,*
*உறுத்தல் செய் கும்பகருணத் திறலினோனும்,*
*'மறுத்தும் ஒரு வாய்மை இது கேள்' என*
*உரைத்தான்: (52-14)*

*553. 'ஏது இல் கருமச் செயல் துணிந்திடுதல் எண்ணி,*
*தீதொடு துணிந்து, பினும் எண்ணுதல் சிறப்போ?*
*யாதும் இனி எண்ணியதில் என்ன பயன்? ஐயா!*
*போதியது நம் அரசு, பொன்ற வரு காலம். (52-15) 554. என, அவன் அடித் துணை இறைஞ்சி, வாய்*
*புதைத்து,*
*இனிய சித்திரம் என ஏங்கி நின்று, தான்*
*நனை மலர்க் கண்கள் நீர் சொரிய, நல் நெறி*
*வினை பயில் வீடணன் விளம்பல் மேயினான்: (74-1)*

*555. 'சானகி, உலகு உயிர் எவைக்கும் தாய் எனல்*
*ஆனவள், கற்பினால் எரிந்தது அல்லது,*

கோ நகர் முழுவதும் நினது கொற்றமும்,
வானரம் சுட்டது என்று உணர்தல் மாட்சியோ?' (74-2)

556. 'ஈசன்தன்வயின் வரம் கொளும்முன்னம், யான் அவனை
வீசும் வான் சுடர் வரையொடும் விசும்பு உற எடுத்தேன்;
ஆசு இல் அங்கது கண்டு அவன் அரும் பதத்து ஊன்றக்
கூசி, என் வலி குறைந்திலென், பாதலத்து அமர்ந்தேன்; (116-1)

557. 'அமர்ந்து, நீங்குதற்கு அருமை கண்டு, "அவன் பதம் அகத்தே
சுமந்து, நீ தவம் புரிக!" எனச் சுக்கிரன் உரைப்ப,
தமம் திரண்டு உறும் புலப் பகை சிமிழ்திதிடத் தருக்கி
நிமிர்ந்து நின்றனென், நெடும் பகல் அருந் தவ நிலையின் (116-2)

558. நின்று பல் பகல் கழிந்திட, நிமலன் நெஞ்சு உருகி,
"நன்று, நன்று!" என நயந்து, எனை வரும்படி அழைத்து,
"ஒன்றினாலும் நீ அழிவு இலாது உகம் பல கழியச்
சென்று வாழுதி எனத் தந்த வரம் சிதைந்திடுமோ? (116-3)

559. 'கார்த்தவீரியன், வாலி என்று அவர் வலி கடக்கும்
மூர்த்தம் என்னிடத்து இல் எனக் கோடலை; முதல் நாள்
சீர்த்த நண்பினர் ஆயபின், சிவன் படை உவர்மேல்
கோத்து, வெஞ் சமம் புரிந்திலென், எனது உளம் கூசி. (116-4)

560. 'இந்த மெய்ம்மை நிற்கு உரைப்பது என்? இவ் வரம் எனக்குத்
தந்த தேவனுக்குஆயினும் என் வலி தவிர்த்துச்
சிந்த ஒண்ணுமோ? மானிடர்திறத்து எனக்கு அழிவு
வந்தது என்று உரைத்தாய்; இது வாய்மையோ?--மறவோய்! (116-5)

561. 'ஆயது ஆக, மற்று அந்த மானுடவரோடு அணுகும்
தீய வான் குரங்கு அனைத்தையுஞ் செறுத்து, அற நூறி,
தூய வானவர் யாரையும் சிறையிடைத் தொடுத்துக்
காய்வென்' என்று தன் கண் சிவந்து இனையன கழறும். (116-6)

### *3. இரணியன் வதைப் படலம்*

*562. 'ஓதும் ஆயிர கோடியின் உகத்து ஒரு முதல் ஆய்,*
*தாது உலாவிய தொடைப் புயத்து இரணியன் தமரோடு*
*ஆதி நாள் அவன் வாழ்ந்தனன்; அவன் அருந் தவத்துக்கு*
*ஏது வேறு இல்லை; யார் அவன்போல் தவம் இழைத்தார்?*

*(இப் படலத்தின் தொடக்கச் செய்யுளாக, 'வேதம் கண்ணிய' எனத் தொடங்கும் பாடலின் முன்னர் அமைந்துள்ளது)*

*563. 'இந்த இந்திரன் இமையவர் அவனுக்கு ஓர் பொருளோ?*
*உந்தும் அண்டங்கள் அனைத்தினும் உள்ள இந்திரரும் அந்த நான்முகர் உருத்திரர் அமரர் மற்று எவரும்,*
*வந்து, இவன் பதம் முறை முறை வணங்கிட வாழ்ந்தான். (2-1)*

*564. 'திருமகட்கு இறை உலகினும், சேண்படு புரம் மூன்று*
*எரிபடுத்திய ஈசன்தன் பொருப்பினும், ஏகி,*
*சுரர் எனப்படும் தூயவர் யாவரும் தொழுது, ஆங்கு*
*"இரணியாய நம!" என்று கொண்டு ஏத்தல் கேட்டிருக்கும். (5-1)*

*565. ' "ஓம் அரியாய நம!" என ஒழிவுறாது ஓதும்*
*நாம நான் மறை விடுத்து அவன்தனக்கு உள்ள நாமம்,*
*காமமே முதல் குறும்பு எறி கடவுளர் முனிவர்-*
*ஆம் அது ஓதுகில், அவன் தனக்கு ஒப்பவர் யாரோ? (9-1)*

*566. ஆலும் வெவ் வலி அவுணர் கோன் அருந் தவப் பெருமை*
*ஏலுமோ, எமக்கு இயம்பிட? இறைவ! மற்று அவன் பேர்*
*மூல மா மறை இது என, மூஉலகு உள்ளோர்*
*தாலமே மொழிந்திட்டது சான்று எனத் தகுமால். (10-1)*

*567. 'குனிப்பு இலாத பல் ஆயிர கோடி அண்டத்தின்*
*நுனிக்கும் வானவர் முதலிய உயிர்த் தொகை நோக்கில்,*
*அனைத்தும் அன்னவன் ஏவலைத் தலைக்கொண்டு, அங்கு அவன் பேர்*

*நினைத்து வாழ்த்திட, மூவர்போல் ஒரு தனி*
*நின்றான்.      (18-1)*

*568.    'அன்னவன், புகழ், சீலம், நல் அறம், தனி மெய்ம்மை,*
*உன்னும் நான் மறையோடு அருள் நீதியும்*
*பொறையும்            இன்ன யாவும் மற்று உருவு கொண்டுளது என*
*உவந்தே,*
*மன்னுயிர்த் தொகை மகிழ்ந்திட, ஒரு தனி*
*வாழ்ந்தான்   (19-1)*

*569.    'நடுங்கி அந்தணன், நாப் புலர்ந்து அரும் புலன்*
*ஐந்தும்*
*ஒடுங்கி, உள்ளுயிர் சோர்ந்து, உடல் பதைத்து, உளம்*
*வெருவி,*
*"அடங்கும், இன்று நம் வாழ்வு" என அயர்ந்து*
*ஒருபடியாய்ப்*
*பிடுங்கும் மெல் உரை, புதல்வனுக்கு இனையன*
*பேசும்.         (23-1)*

*570.    'என்று, அவ் வேதியன் இவை இவை இயம்பலும்,*
*இது கேட்டு,*
*ஒன்று மெய்ப்பொருள் உணர்ந்துள சிறுவனும்,*
*"உரவோய்!*
*நன்று நீ எனக்கு உரைத்தது?" என்று, இன் நகை*
*புரிந்து, ஆங்கு,*
*"இன்று கேள் இதின் உறுதி" என்று எடுத்து இவை*
*உரைப்பான்:           (24-1)*

*571.    'என்னும் வாசகம் கேட்டலும், எழுந்து நின்று,*
*இறைவன்*
*பொன்னின் வார் கழல் பணிந்து, வாய் புதைத்து,*
*அரும் புதல்வன்,*
*"மன்னர் மன்ன! யான் பழுது ஒன்றும்*
*உரைத்திலென்; மரபால்*
*உன்னும் உண்மையை உரைத்தனென்;கேள்"*
*என உரைப்பான்.    (39-1)*

*572.    'அழிவு இல் வச்சிர யாக்கை என் அருந் தவத்து*
*அடைந்தேன்;*
*ஒழிவு இல் ஆயிர கோடி கொள் உகம் பல கழியத்                    தெளிவு பெற்று,*
*இறை பூண்டுளேன்; யான் அலால் தெய்வம்,*
*மொழி இல் மூடரும், வேறு உளது ஆம் என்று*
*மொழியார்.  (55-1)*

*573.    'உயிர்க்கு உயிர் ஆகி நின்று உதவும் பான்மை, பார்*

அயிர்க்குறும் நேயர் தம் செயலில் காண்டல்போல்,
பயிர்ப்பு உறும் அதனிலே பாசம் நீக்கி, வேறு
அயிர்ப்பு அறும் அறிவினில் அறிவர், சீரியோர். (67-1)

574. 'நான்முகத்து ஒருவனும், நாரி பாகனும்,
தான் அகத்து உணர்வதற்கு அரிய தத்துவத்-
தோன் இகத்தொடு பரம் இரண்டும் எங்குமாய்,
ஊனகத்து உயிரகத்து உலவும் மூர்த்தியான். (67-2)

575. 'வையமேல் இனி வரும் பகை உள எனின்,
வருவது ஒன்று என்றாலும்,
"உய்ய உள்ளுளே ஒருவனை உணர்ந்தனென்"
என்று என் முன் உரைசெய்தாய்;
செய்ய வேண்டுவது என் இனி? நின் உயிர்
செகுக்குவென்; சிறப்பு இல்லாப்
பொய்யிலாளனைப் பொருந்திய பெரும் பகை
போய பின், புகழ் ஐயா! (79-1)

576. ' "இவனை ஏழ் நிலை மாளிகை உம்பர்மேல் ஏற்றிப்
புவனம் தன்னிலே நூக்கும்" என்று அவுணர் கோன்
புகல,
புவனம் உண்டவன் கழல் இணைப் புண்ணியன்
தன்னைப்
பவனன்தன்னிலும் வெய்யவர் பற்றியே எடுத்தார். (98-1)

577. 'உற்று எழுந்தனர், மாளிகை உம்பர்மேல் கொண்டு,
கற்று அறிந்தவர்க்கு அரசனைக் கடுந் திறல்
அவுணர் பற்றி நூக்கலும், பார் மகள் பரிவுடன், நார் ஆர்
நல் தவற்கு ஒரு தீங்கு இலை என அவண்
நயந்தாள். (98-2)

578. 'ஓதத்தில் மிதந்து ஓடிய கலமேல்
தீது அற்றே தெளிவோடு திகழ்ந்தான்;
வேதத்து உச்சியின் மெய்ப் பொருள் நாமம்
ஓதிப் பின்னும் உரைப்பதை உற்றான்: (103-1)

579. 'கயம் மேவும் இடங்கர் கழற் கதுவ,
பயம் மேவி அழைத்தது பன்முறை உன்
நயம் மேவிய நாமம்; மதக் கரி அன்று
உயுமாறு உதவுற்றிட, வந்திலையோ? (112-1)

580. 'வேதன் சிரம் ஒன்றை வெறுத்தமையால்,
காதும் பிரமக் கொலை காய, உலைந்து,
ஓது உன் திரு நாமம் உரைத்த சிவன்
ஏதம் கெட வந்து, இரவு ஓட்டிலையோ? (112-2)

581. 'அது கண்டு, அடல் வஞ்சகர், அப் பொழுதில்,
கதம் மிஞ்சிய மன்னன் முனே கடுகி,
"புதல்வன் இறவாது பொருப்பு முநீர்
மிதவைப்பட மேவினன்" என்றனரால். (113-1)

582. 'மிடல் கொண்டு அவர் வீசு கரம் பொடிபட்டு
உடல் சிந்திட, உட்கினர்; "மற்று அவனுக்கு
ஒடிவு ஒன்று இலது" என்று அவர் ஓதும் முனம்,
விடம் அஞ்ச எழுந்தனன், வெய்யவனே. (116-1)

583. 'நாணி நின் எதிரே ஆண்டு நடுவதாயினது ஓர்
செம் பொன்
தூணில் நின்றனனே அன்றி, தோன்றியது இலது'
என்று ஒன்ற,
வேணுதண்டு உடையோன் வெய்ய வெள்ளியே
விளம்ப, வெள்ளி
காண வந்து அனைய சீயம் கணத்திடைக் கதிர்த்தது
அம்மா! (128-1) 584. 'ஈது அவன் மகிழ்தலோடும், இரணியன் எரியின்
பொங்கி,
"சாதலை இல்லா என் முன் தருக்குறு மாயம்
எல்லாம்
போதும்; ஓர் கணத்தில் இன்னே போக்குவேன்
போக்குவேன்" என்று
ஓதினன், அண்ட கோளம் உடைந்திட உருத்துச்
சொல்வான். (128-2)

585. அப் புறத்து அளவுஇல் கோடி அண்டங்கள்
அனைத்து உள்ளாக,
வெப்புறும் அனந்த கோடி வெள்ளம் என்று உரைப்பர்,
மேலாம்
துப்புடைக் கனகன் சேனைத் தொகை; அவை
அனைத்தும் செந் தீ
ஒப்புற நகைத்து, நீறாய் எரித்தது, ஓர் கடவுள் சீயம். (142-1)

586. 'இத் திறம் அமரின் ஏற்று, ஆங்கு இருவரும்
பொலிந்தகாலை,
பொய்த்திறற் கனகன் வேண்டும் போர் பல இயற்றி,
பின்னும்,
எத்தனை கோடி கோடி மாயங்கள் இயற்ற, நோக்கி,
முத்தனும் முறுவல்கொண்டு, ஆங்கு அவை எலாம்
முடித்து நின்றான். (149-1)

587. நெருப்பு எனக் கனகன் சீறி, நிலம் முதல் புவனம்
அஞ்ச,

பொருப்பு இனம் எவையும் சிந்திப் பொடிபடக்
குதித்து, போர் வாள்
தரிப்புறச் சுழற்றித் தாக்க வருதலும், தரும மூர்த்தி
பருப்பதம் கடந்த தோளான் பதம் இரண்டு ஒரு கை
பற்றா, *(149-2)*

588. 'அழிவு இலான் வயிர மார்பத்து, அமலன் மானுடம்
ஆம் சீய
எழில் உலாம் உருவு கொண்டு, ஆங்குஇரு கையின்
உகிர் வாள் ஓச்சி, கழியவே, பிளத்தலோடும், கனக மா மேரு விண்டு
கிழியவே, குருதி ஓதம் கிளர்ந்தபோல் கிளர்ந்தது
அம்மா! *(153-1)*

589. 'இரணியன் வயிர மார்பும் இரு பிளவாகக் கீறிக்
கரை அறும் அவுண வெள்ளப் படை எலாம் கடிதின்
மாய்த்து,
தரை முதல் ஆன அண்டப் பரப்பு எலாம் தானே
ஆகி,
கருணை கொள் அமலன் பல்வேறு உயிர் எலாம்
காத்து நின்றான். *(153-2)*

590. 'மங்கை ஒரு பாகன் முதல் அமரர், மா மலர்மேல்
நங்கைதனை ஏவுதலும், நாராயணக் கடவுள்
சிங்கல் இலா மானுடம் ஆம் சீய உருவம் போக்கி,
பொங்கு பரஞ் சுடராய் எங்கும் பொலிய நின்றான். *(164-1)*

591. 'ஈது ஆங்கு அமலன் இயம்ப, எழிற் புதல்வன்
நாதாங்கு அரு மறையும் நாடற்கு அரிய செழும்
பாதாம்புய மலரில் பல் முறையும் தான் பணிந்து,
'வேதாந்த மெய்ப்பொருளே!' என்று விளம்பலுற்றான். *(168-1)*

592. ' "சீலம் உறுவோய்!' உனக்குச் செப்பும் திருநாமம்
மேலோர் புகழ் பிரகலாதன்" என, விரும்பி,
நால் வேத வாய்மை நனி மா தவத்தோரும்,
மேலாம் அமரர்களும், யாரும், விளம்ப' என்றான். *(173-1)*

### 4. வீடணன் அடைக்கலப் படலம்

593. சிரத்தொகை அனைத்தையும் துளக்கி, தீ எழக்
கரத்தொடு கரம் பல புடைத்து, 'காளை! நீ
உரைத்திடும் உறுதிகள் நன்று, நன்று!' எனாச்
சிரித்தனன், கதம் எழுந்து இனைய செப்புவான்: *(1-1)* 594. 'அன்று
வானரம் வந்து, நம் சோலையை அழிப்ப,
"கொன்று தின்றிடுமின்" என, "தூதரைக் கோறல்
வென்றி அன்று" என விலக்கினை; மேல் விளைவு
எண்ணித்

*துன்று தாரவன்-துணை எனக் கோடலே துணிந்தாய். (6-1)*

*595. 'நேர் வரும் உறுதியின் நிலை உரைத்தனென்;*
*சீரிது என்று உணர்கிலை; சீறிப் பொங்கினாய்;*
*ஓர்தரும் அறிவு இலார்க்கு உரைக்கும் புந்தியார்,*
*தேர்வுறின், அவர்களின் சிறந்த பேதையோர்.' (11-1)*

*596. 'மற்று ஒரு பொருள் உளது என்? நின் மாறு இலாக்*
*கொற்றவ! சரண்' எனக் கூயது ஓர் உரை*
*உற்றது, செவித்தலத்து; ஐயன் ஒல்லென*
*நல் துணைவரை முகம் நயந்து நோக்குறா, (33-1)*

*597. ' "எந்தையே இராகவ! சரணம்" என்ற சொல்*
*தந்தவர் எனைவரோ? சாற்றுமின்!' என,*
*மந்தணம் உற்றுழீஇ, வய வெஞ் சேனையின்*
*முந்தினர்க்கு உற்றதை மொழிகுவாம்அரோ: (33-2)*

*598. 'மேலைநாள், அமுதமும் விடமும் வெண்கடல்*
*மூலமாய் உதித்தன; முறையின் முற்றுதல்*
*சாலுமோ, ஒன்று எனக் கருதல் தக்கதோ--*
*ஞால நாயக!--தெரிந்து எண்ணி நாடிலே? (86-1)*

*599. 'ஒருவயிறு உதித்தனர், அதிதி, ஒண் திதி,*
*இருவர்; மற்று அவரிடத்து எண்ணில், எம்பிரான்!*
*சுரரொடு சுடு சினத்து அவுணர் தோன்றினார்;*
*கருதின் மற்று ஒன்று எனக் கழறலாகுமோ? (86-2)*

*600. 'எப்பொருள்? ஏவரே? உலகின் ஓர் முறை*
*ஒப்பினும், குணத்து இயல் உணரின், பேதமாம்*
*அப் பொருள் நலன் இழிவு இரண்டும் ஆய்ந்து,*
*அகம்*
*மெய்ப் பொருள் கோடலே விழுமிது' என்பரால். (86-3) 601. 'ஆவலின்*
*அடைக்கலம் புகுந்துளான் கருத்து*
*ஓவலின் இவர் தமக்கு உணர ஒண்ணுமோ?*
*தேவர்கள் தேவன் நீ; தெளியின், அன்னவர்க்*
*கூவி, இங்கு அறிவது கொள்கை ஆகுமால். (91-1)*

*602. மோதி வந்து அடரும் சீய முனிவினுக்கு உடைந்து,*
*வேடன்*
*மீது ஒரு மரத்தில் சேர, வேண்டு உரை அரிக்குச்*
*சொல்லி,*
*பேதம் அற்று இருந்தும், அன்னான் பிரிந்த*
*வஞ்சத்தை ஓர்ந்தும்,*
*காதலின் கனி காய் நல்கிக் காத்ததும் கவியது*
*அன்றோ? (116-1)*

*603.* *என்ன முன் பருதிமைந்தன் எழுந்து அடி வணங்கி, 'எந்தாய்*
*சொன்னதே துணிவது அல்லால், மறுத்து ஒரு துணிவும் உண்டோ?*
*உன் உளத்து உணராது ஏது? உனக்கு அரிது யாதோ?' என்னாப்*
*பன்னி, மற்று அவரை எல்லாம் பார்த்திருந்து உரைக்கலுற்றான்.* *(117-1)*

*604.* *வானவர் இதனைக் கூற, வலங்கொடு தானை வைப்பை,*
*தானை அம் தலைவரோடும் சார்ந்த வீடணனும், 'தாழாது*
*ஊனுடைப் பிறவி தீர்ந்தேன்' என மனத்து உவந்து, ஆங்கு அண்ணல்*
*தேன் உகு கமல பாதம் சென்னியால் தொழுது நின்றான்.* *(151-1)*

## 5. இலங்கை கேள்விப் படலம்

*605.* *திரு மறு மார்பனை இறைஞ்ச, செல்வனும்,*
*அருள் சுரந்து, அரக்கனை அருகு இருத்தியே,* *'அரு வரை அனைய தோள் அறிஞ! நீ புகல்*
*பொருள் உளது எமக்கு; அது புகலக் கேட்டியால்.* *(14-1)*

*606.* *மருக் கிளர் தாமரை வாச நாள்மலர்*
*நெருக்கிடு தடம் என இருந்த நீதியான்.*
*திருக் கிளர் தாமரை பணிந்த செம்மலை,*
*'இருக்க, ஈண்டு எழுந்து' என இருந்தகாலையில்.* *(14-2)*

*607.* *'வலம் பெறு தசமுகன் தவத்தின் மாட்சி கண்டு,*
*இலங்குறு மலர் அயன் எண் இல் யோசனைத்*
*தலம் கொடு சமைத்து, நல் நகரும் தந்து, இதற்கு*
*"இலங்கை" என்று ஒரு பெயர் ஈந்த மேலைநாள்.* *(18-1)*

*608.* *'ஆய இந் நகரிடை, அரக்கர் ஆகிய*
*தீயவர் தொகையினைத் தெரிக்கின், எண் இல் நாள்*
*போயிடத் துணிந்து, அவை புந்தி ஓரினும்*
*ஒயுமோ? அறிந்தவை உரைப்பென், ஆழியாய்!* *(19-1)*

*609.* *'பேயர்கள் என்ன யான் பிதற்ற, பேர்கிலா*
*மா இரும் புற மதில் வகுத்த மாப் படை*
*ஏயின நாள் எலாம் எண்ணும் பித்தர்கள்*
*ஆயிர வெள்ளமே அறிந்தது, ஆழியாய்!* *(28-1)*

610. 'ஈங்கு இவை அன்றியும், ஏழு தீவினும்,
ஓங்கு பாதலத்தினும், உயர்ந்த வானத்தும்,
தாங்கிய சக்கர வாளச் சார்பினும்,
ஆங்கு அவன் படைதனக்கு அளவை இல்லையால். (30-1)

611. 'ஆயவர் அளவிலர், அறத்தை நுங்கிய
தீயவர், தேவரைச் செறுத்து, தேவர் ஊர்
காய் எரி படுத்திய கடுமையார்களில்,
நாயக! அறிந்தமை நவிலக் கேட்டியால். (32-1) 612. 'இன்னும்
மைந்தர்கள் இயம்பின், மூவாயிர கோடி
என்ன உண்டு; அவர் இரதமும், கரிகளும், பரியும்,
துன்னும் ஆள் வகைத் தொகுதியும், செறிந்திட,
மேல்நாள்
பன்னகாதிபன் உலகினைப் பரிபவப் படுத்தோர். (51-1)

613. கோ...ன் குடைப்பரா கடு களிற்றை மீக்கொள்ளா
வாடலிந்திர......ளடைவர வமரிற்
கோடி வெங்கரி கோள் அரி கண்டெனக் குலையா
ஓடினான் தரு முதலியர் பிற விழுந் துருகி. (56-1)

614. 'பண்டு அவன் தவத்து உமை ஒரு பாகன் முன்
கொடுக்கும்
திண் திறல் பெறும் வானகத் தேர் ஒன்றின்
இவர்ந்தே,
அண்ட கோடிகள் எவற்றினும் புகுந்து, அரசுரிமை
கொண்டு மீளுவான் ஒரு கணத்து இலங்கையில்,
கொடியோன். (58-1)

615. 'சுற்று தன் கிளைப் பரப்பொடும் தொலைவு இன்றி
வாழ்தற்கு
உற்ற மூன்றரைக் கோடியின் உகம் அவன் தவத்தின்
பெற்றனன், சிவன் கொடுத்திடப் பெரு வரம்;
பெரியோய்!
இற்று அவன் செயல்' என்று கொண்டு இனையன
உரைப்பான்: (58-2)

616. "ஈது நிற்க, மற்று எந்தை! நீ ஏவிய தூதன்
மோது வாரிதி கடந்து, ஒரு கணத்தினில் முடுகி,
ஆதி நாயகிதன்னைக் கண்டு, அணி நகர் அரணும்,
காது வெஞ் சினத்து அரக்கர்தம் வலிமையும்,
கடந்தான். (59-1)

617. மழுவும் ஈட்டியும் தோட்டியும் முசலமும் மலையும்
தழுவு மாப் படை முடிவு இலாது அதனொடும் தாமும், எழுவர்
சூட்சியின் தலைவர்கள், கிளர் ஒளி இரவிக்

குழுவின் வாய்ப்படு புழு என, வழுவுறக் குறைந்தார். (63-1)

618. 'இலங்கை வெந்தது; வேறு இனி இயம்புவது
எவனோ?
அலங்கலோடு செஞ் சாந்தமும், அன்று தான்
அணிந்த
கலன்களோடும் அச் சாத்திய துகிலொடும், கதிர்
வாள்
இலங்கை வேந்தனும் விசும்பிடை ஏழு நாள்
இருந்தான். (65-1)

### 6. வருணனை வழி வேண்டு படலம்

619. என்று உரைத்து, இன்னும் சொல்வான்; 'இறைவ!
கேள்; எனக்கு வெய்யோர்
என்றும் மெய்ப் பகைவர் ஆகி, ஏழு பாதலத்தின்
ஈறாய்
நின்றுள தீவின் வாழ்வார், நிமல! நின் கணையால்,
ஆவி
கொன்று எமைக் காத்தி!' என்றான்; குரிசிலும்
கோறலுற்றான். (78-1)

### 7. சேது பந்தனப் படலம்

620. சாற்று மா முரசு ஒலி கேட்டு, தானையின்
ஏற்றமோடு எழுந்தனர், 'எறி திரைக் கடல்
ஊற்றமீது ஒளித்து, ஒரு கணத்தில் உற்று, அணை
ஏற்றதும்' எனப் படைத் தலைவர் யாருமே. (4-1)

621. வல் விலங்கு வழாத் தவர் மாட்டு அருள்
செல் வலம் பெறுஞ் சிந்தையின் தீர்வரோ?
'இவ் விலங்கல் விடோம் இனி' என்பபோல்,
எல் வயங்கும் இரவி வந்து எய்தினான். (25-1) 622. தம் இனத்து ஒருவற்கு ஒரு
சார்வு உற,
விம்மல் உற்று, விடாது உறைவோர்கள்போல்,
செம்மை மிக்க குரக்கினம் சேர்க்கையால்,
எம் மலைக் குலமும் கடல் எய்துமே, (29-1)

623. இன்னவாறு அங்கு எழுபது வெள்ளமும்,
அன்ன சேனைத் தலைவரும், ஆழியைத்
துன்னி நின்று, விடாது இடை தூர்த்தலால்,
பொன் இலங்கை தொடுத்து அணை புக்கதே. (65-1)

### 8. ஒற்றுக் கேள்விப் படலம்

624. என்று, நளனைக் கருணையின் தழுவி, அன்பாய்
அன்று வருணன் உதவும் ஆரமும் அளித்து
துன்று கதிர் பொற்கலனும் மற்றுள தொகுத்தே,

*'வென்றி, இனி' என்று, படையோடு உடன்
விரைந்தான். (4-1)*

*625. இறுத்தனன்--ஏழு-பத்து வெள்ளமாம் சேனையோடும்,
குறித்திடும், அறுபத்தேழு கோடியாம் வீரரோடும்,
பொறுத்த மூ-ஏழு தானைத் தலைவர்களோடும்,
பொய் தீர்
அலத்தினுக்கு உயிராய் என்றும் அழிவு இலா
அமலன் அம்மா! (13-1)*

*(நளனுக்கு முடி சூட்டு படலம்)*

*626. என்று மகிழ் கொண்டு, இரவி மைந்தனை இராமன்,
'வன் திறலினான் நளன் வகுத்த அணை, மானக்
குன்றம் நெடுநீரின்மிசை நின்று இலகு கொள்கை
நன்று என முயன்ற தவம் என்கொல்? நவில்க!' என்றான். (13-2)*

*627. நவிற்றுதிர் எனக் கருணை வள்ளல் எதிர் நாமக்
கவிக்கு இறைவன் எய்தி, இரு கை மலர் குவித்தே,
'புவிக்கு இறைவ! போதின் அமர் புங்கவனிடத்தே
உவப்புடன் உதித்தவர்கள் ஓர் பதின்மர் என்பார். (13-3) 628.
'மலரவனிடத்தில் வரு காசிபன், மரீசி,
புலகனுடன் அத்திரி, புலத்தியன், வசிட்டன்,
இலகு விசுவன், பிருகு, தக்கன், இயல்பு ஆகும்
நலம் மருவு அங்கிரவு எனப் புகல்வர் நல்லோர். (13-4)*

*629. 'மக்கள்தனில் ஒன்பதின்மர் வானம் முதலாக
மிக்க உலகைத் தர விதித்து, விசுவப் பேர்
தொக்க பிரமற்கு ஒரு தொழில்தனை விதித்தான்
அக் கணம் நினைத்தபடி அண்டம் முதல் ஆக. (13-5)*

*630. 'அன்ன தொழிலால் விசுவகன்மன் எனல் ஆனான்,
பொன்னுலகை ஆதிய வகுத்திடுதல் போல,
நென்னல் இகல் மாருதி நெருப்பினில் அழிந்த
நன் நகரம் முன்னையினும் நன்கு உற அளித்தான். (13-6)*

*631. 'மூ-உலகின் எவ் எவர்கள் முன்னு மணி மாடம்
ஆவது புரிந்து, மயன் ஆகவும் இருந்தான்;
தேவர் இகல் மா அசுரர் சொற்ற முறை செய்தற்கு
ஆவளவில் வானவர்கள் தச்சன் எனல் ஆனான். (13-7)*

*632. 'அன்னவன் இயற்கை அறிதற்கு அரிய; மேல்நாள்
பன்னு மறை அந்தணன் விதித்தபடி, பார்மேல்
மன்னும் இறையோர் எவரும் வந்தபடி தானே
உன்னும் அவன் மைந்தன் நளன் என்றிட (13-8)
உதித்தான்.*

